உ
சிவமயம்.

ஓம் மகாகணபதயேநம:

# ஸ்ரீ பெரிய ஞானவாசிட்டம்

## பாயிரம்.

### மங்கலம்.

முத்தியைத்தரு முறையினை மொழியும் வாசிட்டச்
சத்தியத்திரு நூலினைச் சாற்றவே துணைதான்
புத்தியைத்தரு முகந்ததே சிகன்றினம் போற்றும்
சித்தியைத்தரு மாமுகன் சிவந்ததாண் மலரையே. (1)

சீர்பூத்த வன்னிநிழ லமர்ந்ததிருத் தேவைத்
திருநெல்லை நாயகியைத் தேவசேனை பதியைக்
கார்பூத்த மிடற்றிறையைச் சானகி காதலனைக்
கவுசிகனை வசிட்டவான் மீகிமுனி வரரை
நீர்பூத்த பரத்வாச வகத்தியமா தவரை
நிகரில்சுதீ க்ஷணனையிந்த நூலினிறைபவரை
யேர்பூத்த வேனதிதயகமலமதி னினைந்தே
யிடைவிடா தனுதினமு மிறைஞ்சிவணங் குவனே. (2)

சங்கரமா முனிவரனைச் சனந்தனு சானைச்
சரையில்லா ரீசனைநற் றேடகா சானை
யங்கைநெல்லிக் கனிமுனியை யருங்கழனி நகர்வாழ்
அமலமுத்தி ராமலிங்க வருள்பொழிமா முகிலைத்
துங்கமுறு துறவிறையைக் கருணைமகா நிதியைத்
துகளறுக்கும் வீரமதைச் சேகரித்த முனியைச்
சங்கையறச் சமிவனம்வா ழருந்தவரை யுளத்தே
சந்ததமுஞ் சிந்தனைசெய் தவித்தை மயல் தணர்வாம். (3)

### அவை யடக்கம்.

சிறப்புறு வராகந்தன் சிருங்கமேவுல
குறப்படவெடுத்ததை யுணர்ந்த சூகரந்
திறப்படச் செயவெணல் செறியுமாவிதை
யிறப்பறவெளி செயவெண்ண லென்னினும். (4)

மெய்த்தவர்கள் பற்பலரும் பலநாளு மெனை யான்
மிளிரறி வென்றறிந் திடவே மேலாமிந்நூலைச்
சுத்த தமிழ்க்கத்தியமாய்ச் சொல்கவெனச் சொலலாற்
சொல்லதனை யுபதேச மொழியென வென்சிரங்கொண்
டேத்தவமுமிலனெனினும் வீரசேகரமா
வேந்தைபதஞ் சிந்தனையி லிலங்குபலமதனு
லித்தகையபெருநூலை யெழில்செய் யுரையுடனே
யின்பினொடு மன்பினொடு மியம்புவ னின்புறவே. (5)

பாயிரம் முற்றும்.

# வைராக்கியப் பிரகரணம்.



## 1-வது ஆரம்ப பீடிகை வருணனம்.

**ஓம்** பிரஹ்மத்திற்கும், பிரஹ்மத்தையுணர்ந்த பிரஹ்மவித்யா சம்பிர
தாய கர்த்தாக்களாகிய ஸ்ரீவசிஷ்ட விசுவாமித்திர வியாசவான்மீகி சுககௌடபாத
கோவிந்தபாத ஸ்ரீ சங்கரபகவற்பாத மகரிஷிகளின் பொருட்டும், ஸ்ரீ ராமபத்தி
ரர் பொருட்டும் நமஸ்காரம் நமஸ்காரம் நமஸ்காரம். ஓம் இனி யிடைவிடாது
கொடூரகனுமயற் பரம்பரையாற் கற்பிக்கப்பட்டதும், ஜன்மம், ஜரை, பயம், மர
ணம், மகிழ்ச்சி, பொறாமை, சோகம் முதலிய அநர்த்த சங்கடமாயிரங்கோடி
குழுமியதும், பொறி புலன்களாகிய புலிப்பயமிகுந்ததும், முத்தாபமாகிய் பெருங்
காட்டுத்தீயின் சுவாலைமாலைகளால் ஆதுலமுதிர்ந்ததும், ஷடூர்மிவலைமிகுந்த
தும், பகையறுவர்க்கங்களாகிய வேடர்களால் கட்டுப்படுத்திக் கொல்லப்படும்
பிராணிக்குழுக்கள் பெரிது நிறைந்ததும் ஆகிய சமுசாரப் பெருங்காட்டில் மிக
வும் மோகத்தையடைந்து, அநாதி மகாமோகவிரவில் துயிலும் விவேகமின்றிய
இவ்வுலகம், பிரபோத முறுமுபாயங் கிட்டாமையானே பெரிதும் வருந்தியிருந்
ததை யினிது கண்ணுற்றுச் சாத்திரமார்த்தாண்ட உதயத்தானே அது பிரபோத
மடையும்பொருட்டு ஸ்ரீ பகவானுகிய பங்கயனது திருவாணையானே தாமே பிர
வர்த்தித்த பரமகாருண்ய மூர்த்தியாகிய ஸ்ரீ வான்மீகி பகவான்தொடங்க விரும்
பிய அரும்பெருநூல் இடையூறின்றி யினிது முடிந்துயாண்டுஞ் சிஷ்யப்பிரசிஷ்ய
வாயிலாய்ப் பரவுவான்வேண்டிப் புகலப்புகும் சுருதிமிருதி ஆன்றோ ரொழுக்கத்
தானே அடையப்பெற்ற, எல்லாவிடையூறுகளையும் வேரோடுகளைவதிலாற்ற
லுற்ற, சச்சிதானந்தாத்வயப்பிரத்தியக்கான்ம பரப்பிரஹ்மநமஸ்காரஇலக்
கணமங்கலத்தை யாற்றிப்பொருளால் நூலின்விடயப் பிரயோஜனங்களைத்தடத்த
சொரூப இலக்கணங்களால் தொகுத்துக்கனிந்து காட்டக்காதலைக் கதுவியராய்
முதலில் 'எதனினின்றும் இப்பூதங்களுண்டாகின்றனவோ, உண்டாயினவெத
னல் வாழ்கின்றனவோ, எதனையுற்று இலயத்தையடைகின்றனவோ, அதைப்
பிரஹ்மமென்றறிவா' யென்னுஞ் சுருதிகூறிய தடத்தஇலக்கணத்தானே துணி
யப்பெற்ற சதத்வய இயற்கை வாய்ந்ததற் பதப்பொருளை நமஸ்கரிக்கின்றார்:—

திருவுறுமேதனினிச் சேகங்கள் யாவையு
முருவமதுறப் பிறந்துலவி வாழ்ந்துபின்
மருவுறுஞ்சாந்தியை யேதன்றன் மாட்டதாம்
பொருவறுஞ் சத்தியான்மாவைப் போற்றுவாம்.

(பொ-ள்.) பிரகிருதி பூதமாய எப்பரமார்த்த சதத்விதீய ஆன்மவத்துவினின்
றும், ஆகாசாதி மகா பூதங்களியாவும், பௌதிகங்களும், சிருஷ்டியினுதி காலத்

தில், எதன்சத்தையினுனே சத்தையைநன்கடைந்து எழுகின்றனவோ, திதிகாலத்திலும், எதன் சத்தையினுனே இலங்குகின்றனவோ, பிரளயகாலத்திலும், எதன்கண்ணே எதன்சத்தை மாத்திரமாயெஞ்சுவனவாய் மறைதலை யடைகின்றனவோ; அச்சத்தியான்மாவைப் போற்றுவாம் = தன்பாலாரோபிக்கப்பட்ட சர்வபாவங்களின் பாரமார்த்திக சொரூபபூதமும், சர்வப்பிராணிகட்கும் உண்மையாய் ஆன்மவடிவமும் ஆகிய பரப்பிரஹ்மத்தைப் போற்றுவாம். அந்நமஸ்காரத்திலும், 'யாண்டுத் தேவர்களியாவரும் ஒருங்கு கூடுகின்றனர்களோ' என்னுஞ் சுருதியினுனே நமஸ்கரியாத வேறு தேவதைகளும் எஞ்சாமையின் சர்வநமஸ்காரஞ் சித்தித்தலின் இம்மங்கலத்திற்கு யாவினும்மேன்மை யுண்மையினுனும், எல்லா இடையூறுகளையும் இரித்தன் முதலியபலசித்தியாம். ஆண்டு எதனின், செகங்கள் என்னுமிரண்டு பதங்களானே "எதனினின்றும் இப்பூதங்களுண்டாகின்றனவோ, இதற்கெதனுற் பிறப்பாதி" என அவை யுள்ளடங்கிய சுருதிசூத்திரங்கள்கூறிய இலக்கணப்பிரத்தியபிஞ்ஞானத்தால் இதற்கு அம்மூலகத்தன்மையாமெனச் சாங்கியாதிகளானே கற்பிக்கப்பட்ட மகதாதி காரணங்களிலேனும், யாஸ்கர் காண்பித்த அவாந்தர காரணங்களிலேனும், அதிவியாப்தியாம். ஈண்டுப் பிரகிருதி ஐந்தாம் வேற்றுமையானே உபாதானத்தன்மை கிடைத்தலின் மூன்றைக்கவர்தல் மூன்றிலக்கணங்களைக் காண்பிக்கும்பொருட்டென்பர்சிலர். நிமித்தத்தின் கண்ணும் ஐந்தாம்வேற்றுமை காணப்படுதலின் இலய ஆதாரத்தன்மைக்கூற்று, உபாதானத்தன்மை கிடைக்கும் பொருட்டாம். திதியேதுத் தன்மைக்கூற்ரே சேதனங்கட்கே காக்குந்தன்மை காணப்பெறுதலின் சேதனத்தன்மை கிடைத்தலின் வேறு கருத்தாவை நீக்கும்பொருட்டு என்பதாக மூன்றினுலுங்கிடைக்கப்பெற்ற அபின்னநிமித்த உபாதானத்தன்மையாகிய ஒரேயிலக்கணம் என்பர் மற்றையர். உண்மையாயோ "சத்தியம் ஞானமநந்தம் பிரஹ்மம், சௌமிய! இதுமுன்சத்தாகவேயிருந்தது" என்னும்சுருதிகளில் ஞேயத்தன்மையானேதொடங்கிய அத்விதீய சன்மாத்திரவஸ்துபரிசயப்பொருட்டு "அவ்விவ்வான்மாவினின்றும் ஆகாசமுண்டாயது, அதுதேயுவைச் சிருட்டித்தது," என்பதாதியால் தடத்த இலக்கணமவதரித்தலின், "இவ்வியாவுமூரனுகப் பிரஹ்மமேயாம், அதிலுண்டாய் வாழ்ந்தடங்குமெனச் சாந்தனுபாசிக்குக"வெனச்சுருதி காண்பித்தநெறியாயுற்பத்தியாதிமுக்காலத்திலும்சத்துப்பிறழ்ச்சியடையாமையினுனும் காரியத்திற்குக் காரணத்தினும் அயலாகச்சத்தை புலப்படாமையினுனும், பரசத்தையுபஜீவித்தன்மை யுண்மையின் ஆரோபிதகாரியக்குழூ அவித்தையாலாயதும் பொய்யும்ஆம்; காரணதத்துவமேயாய பிரஹ்மவத்துசத்தியம் என அத்தியாரோப அபவாதங்களானே நிட்பிரபஞ்சவிடயப்பிரயோஜன சித்திப்பிரதிபாதனப்பொருட்டு மூன்றுமடங்கிய இலக்கணேபாதானமாம். ஒவ்வொன்றைக் கோடினே காரியத்திற்கு விவர்த்தத்தன்மையின் சித்தியாம். இதனுனே மறையின் கண்ணுண்டாகின்றன புகுகின்றனவென்னும் பதங்கள் புலப்படல் புலப்படாமை வடிவத்தோற்றன் மறைதல் பரங்களாம், விகாரபரங்களன்றாம். என்பதைக் குறிப்பிக்கும்பொருட்டுப் பிறந்து சாந்தியை மருவுறுமெனப்பட்டதாம். விருத்தி விபரிணமங்கட்கு ஆவிர்ப்பாவத்திலும், அபக்ஷயத்திற்கோ திரோபாவத்திலும் உள்ளடக்கங்கூடலின், திதிக்கும் அதிஷ்டான

சத்தையைப்பற்றன் மாத்திரைவடிவத்தன்மையான் அத்தியாரோபத்திற்கயலாக விகாரந்துணியப் பெறுவதின்றும். உற்பத்திப் பிரகரணத்திலிவ்வாறே விரிவாக உலக விசித்திரசிருஷ்டி விளம்பவும் பெறும். (1)

பிறந்தெனச் சாமானியமாகக் குறிப்பிக்கப்பட்டது. அதற்குச் சிதேகரசத் தன்மையைச் சர்வானுபவசித்தத் தன்மையினுனே பிரதிபாதித்துக்கொண்டுதுவம் பதார்த்த தத்துவபூதமாய அதனையே மீண்டும் நமஸ்கரிக்கின்றார்:—

ஞாதுருஞானமு ஞேயமாந்திருட்
டாதரிசனதிரு சியங்கர்த்தாவொடு
மேதுவுங்கிரியையு மேதனினின்றுறும்
போதவான்மாவினைப் போற்றுவாமரோ.

(போ-ள்.) "இந்த ஜீவவடிவமாய்ப்புகுந்து நாமரூபங்களை விளங்கச்செய்வேன்" என்னுஞ் சுருதியினுனே எதனினின்று—பிரபபூதமாகிய கூடஸ்த சிதேகரசமாகிய தன்னினின்றும் தானே பிரதிபிம்பபாவத்தானே சமஷ்டி வியஷ்டி விஞ்ஞான மனோமயகோசமிரண்டன்வடிவ அந்தக்கரணவுபாதியனுப்பிரவேசத்தான் காய்ந்த இரும்புப்பிண்டத்திற்புகுந்தவன்னியைப்போல அத்தியஸ்தஜக்கியத்தான் அதன்ஜாட்டியத்தைமறைத்து அதையொளிர்வித்து ஞாதாவாம். பொறிகளைப் போல அதன்விருத்திகளையொளிர்வித்து ஞானமாம். விருத்தி விடயாகாரத்தையடைந்தபோது தானுமதன்வாயிலாக அதனுகாரமாயப்பாலத்தையடைந்தது போன்றமிதேஞேயமாம். பரோக்ஷப்பொதுமையானே கூறியபொருளையே சாக்ஷியாய்வெளிப்படுத்தத்திருட்டாவென்றனர்; அதுவே ஞானேந்திரியங்களைப்பற்றித் திருட்டாவாம். அதன் சம்பந்தத்தாலுண்டாயவிருத்தியைப்பற்றித்தரிசனமாம். அதன்பயன்வடிவமாய் விடயங்களைவியாபித்து அவ்வடிவமாயிலங்கலான்தானும் திருசியம்போலவாகின்றதெனத் திருசியமென்றார். அதுவே கருமேந்திரியபிராண சரீரங்களைப்பற்றிக்கர்த்தாவாம். பலபோக்தாத்தன்மையாற்கிரியையுண்டாக்கும் நிமித்தத்தன்மையானேஹேதுவாம். கிரியைநிறைவுகுறைவுகளில் யானேசகலன் விகலன் எனக் கிரியையின் அபிமானத்தானேகிரியையாம். "இவனே திருஷ்டா, சுரோதா, மந்தா, கர்த்தா, போக்தா, விஞ்ஞானன்மா, புருடன் உயிர்ப்பித்தேஉயிரெனவாம், வழங்கிவாக்காம், கண்டுகேண்ணும்," என்பதாதி சுருதியினுனேயென்க. இவ்வாறெல்லாவிவகாரங்களினும் பிரத்தியக்கிற்குத்தன்னையுமயலையுமிலக்குளிர்வாகங்கூடலின், அறிவுவடிவமாகச்சர்வானுபவசித்தமாயினும் விசித்திரஉபாதிவிரித்த வியாமோகத்தாற்சித்திரவத்திரத்தில் ஒளிவெண்மைகள்போலப் பிரித்தறியப் பெறவில்லையெனத் தனிப்படுத்தற்பொருட்டு எதனினின்றுமென்றுநிமித்தஐந்தாம் வேற்றுமையானே காட்டப்பட்டது. எதன்சந்நிதானநிமித்தகமேகர்த்தாமுதலிய விளக்கம் ஆமோ, எதனியற்கைவடிவமல்லவாமோ, என்னை, பிறழ்தலின், திருக்கிற்குத் திருசியஇயற்கைபொருந்தாமையினுனுமென்பதுகருத்தாம். ஆதலின் ஞாதா முதலியவற்றின் சான்றும், உண்மையாக அறிவுவடிவமும், சின்மாத்திரத் தன்மையானேஎஞ்சியதும் ஆகியபிரத்தியக்கான்மாவின்பொருட்டுநமஸ்காரமென்பது பொருள். (2)

இவ்வாறு பதார்த்தங்களைப் பரிசோதித்துத்தடத்தவிலக்கணபரியவசானத்தானமும், "ஆனந்தம்பிரஹ்மமென்றறியவேண்டும்" என்னுஞ்சுருதி காண்பித்த நிரதிசயஆனந்தரூபமும், பரமபுருடார்த்தரூபமும், ஆகிய அகண்டவாக்கியார்த்தத்தை நமஸ்கரிக்கின்றார்:—

எச்சுகக்கடலெழு மின்பசீகரம்
விச்சுவவிண்ணுறு விதிமுன்யாவர்க்கு
மெச்சுசீவனமென மிளிருமேலதாம்
புச்சமென்பிரமவின் பான்மற்போற்றுவாம்.

(பொ-ள்.) எப்பிரத்தியக்கான்மாவாகிய, அவித்தையாவரணகாமாதிவிக்ஷேபதிரஸ்கிருத நிரதிசயானந்தசமுத்திரத்தினின்றும், பிரஹ்மலோகத்திலும் சுவர்க்கத்திலும் உள்ளதேவதைகளிடத்தும், அவனியிலுள்ள மனுடர்முதல் தம்பமீறுயவற்றிலும் அவ்வம்மேற்கீழ்விஷயேந்திரிய சம்யோகத்தாலாய அந்தக்கரணவிருத்தித்தெளிவின் ஏற்றத்தாழ்வானே, ஆவரணத்தடையின் தாரதம்மியத்தாற்றடாகம் கண்ணாடியரதனமுதலியவற்றில் கிரிப்பதிவிம்பங்கள்போல ஔபாதிகபேததாரதம்மியத்தான் எண்ணப்படுகின்றமையின், இன்பசீகரம்=கணங்களைப் போலுந்திவலைகள், எழும். யாவரானும், மயலான் அநான்மத்தன்மையானும், ஆன்மசேடத்தன்மையானும் பரிச்சேதபேத விசித்திரதுக்கக் கலப்பழிவு முதலியவற்றானே அனுபவிக்கப்படுகின்றன. பரமார்த்தமாகவோ அவ்வாறன்றாம்; மற்றோ, அதுவே உபாதியானே பேதமுற்றதென நிண்ணயிக்கப்படும். யாவர்க்கும்=பிரஹ்மாமுதற்றம்பமீறுயவைக்கும். ஜீவிக்கப்படுகின்றதிதனானேயெனஜீவனமாம், சாரபூதமாகிய ஆன்மதத்துவமாம்." பிராணனானேனும் அபானனானேனும் எம்மனுடனுஞ் சீவியான், இதரத்தானேயோ ஜீவிப்பர் எதன்கண்ணிவைபற்றிநிற்குமோ, இவ்வாநந்தத்தினது மாத்திரையையேகொண்டு அன்னிய பூதங்கள் ஜீவிக்கின்றன, இவ்வாநந்த ஆகாசமிலதேயாயின் யாவன்றான் ஜீவிப்பன் யாவன்றான் உயிர்ப்பன் என்னுஞ் சுருதியினானே யென்பதாம். இதனானே பேதகமின்மையினானும் சொரூபலக்ஷண ஐக்கியத்தானும், அதுவே "எதனினின்றுவாக்கு அடையப்பெறாமல் மனத்தோடுந்திரும்புகின்றதோ ஆனந்தமாகியபிரஹ்மத்தையறிந்தவன் யாண்டும் எதற்குமஞ்சான்" என்னுஞ்சுருதிப்பிரசித்த அபரிச்சின்னப்பிரஹ்மாநந்த ஆன்மாவுமாம். "அயலாயான்மாவென்பதொன்றில்லை, இதனினும் அயலாயதிருஷ்டாவில்லை, இதனினும்அயலாயவிஞ்ஞாதாவில்லை"யென்பதாதி சுருதியினானேயென்க. பிரமவின்பான்மனை=பரமபுருடார்த்தரூபனை, போற்றுவாமென்பதுபொருள். இம்மங்கலாசரணம், நூற்செய்யத்தொடங்கும் பொருட்டாம். உத்தரசர்க்கத்திலோ சீடர்கட்கு அதனுபதேசத்தொடக்கப் பொருட்டாமெனக் கூறியதுகூறலில்லையாம். (3)

ஈண்டுச் சம்பிரதாயத்தூய்மையின்பொருட்டு இருடிதேவசம்வாதமும் இராம அஞ்ஞானநிமித்தமும் உபோற்காதத்தின்பொருட்டுவருணிக்கப்படும்:—

இவ்வாறு மங்கலவிடயாதிகளைக் காண்பிக்கும் வாயிலாய்ச் சாஸ்திரார்த்தத்தையினிதுணரற்பொருட்டுத்தொகுத்துக்காண்பித்துச் சாதனசகித ஊகமுதலிய

வற்றோடு விரிவாக அப்பொருளையே விளக்கியுரைப்பான் நூலைத்தொடங்குபவராய தன்கண், கேட்பவர்கட்குவிசுவாசத்திரத்தின்பொருட்டு எல்லாப்பிரஹ்மவித்துக்களினும் தலைமைவாய்ந்த அநேகமகரிஷிகளோடு சூழ்ந்திருக்கும் பிரஹ்மாதிசம்பிரதாயத்தாலடையப்பெற்ற ஜீவன்முக்தியைப்பலமாகவுடைய பிரஹ்மவித்தை நிறைவுற்றிலங்குந்தன்மையைக்காண்பிப்பான், ஸ்ரீவசிஷ்ட இராமசம்வாத அவதார உபோற்காதபூதமாய ஆக்கியாயிகையைத் தொடங்குகின்றார்.

சுதீக்ஷ்ணரென்றொரு பிராஹ்மணரிருந்தார்; அவர், தவதரும உபாசனைகளானே சோதிக்கப்பட்டதாற்சோபிதமாய, ஊகித்தற்குமுடியாதபொருளைக்கவருமாற்றலுடைமையால் தீக்ஷ்ணமாகிய மதியாவருக்கோ அவர் சுதீக்ஷ்ணர் என்பதாகக் காரணவிடுகுறிப்பொருட்டொடர்ப்பெயரையுடையர். ஈண்டுப் பிராஹ்மணரென்றது பிராஹ்மணர்கட்கே பிரஹ்மவித்தையின்கண்முக்கிய அதிகாரமென்பதையறிவிக்கும்பொருட்டாம். அவர் ஐயமென்னும் அறியும் வேட்கையுடைய மனத்தராகி ஸ்ரீ அகஸ்தியருடைய ஆசிரமத்தையடைந்து விதிப்படி சமித்துப்பத்திரபுஷ்பபலாதிகளைக் கரங்கொண்டினிதுநமஸ்கரித்தன் முதலிய ஆதரவோடும் வினவுவாராயினர்:—

ஹே பகவன்! தருமத்தையும் தத்துவத்தையு முணர்ந்தவரே! சர்வசாஸ்திரங்களினும் விசேட நிச்சயமுடையவரே! பரஸ்பரவிரோதப் பொருள்களையுடைய அநேகசுருதிமிருதிவாதி யையப்பின்னல்களிருத்தலின் விரைவிற்கெடுக்க முடியாதபெரிய ஐயமொன்றுளது, அவ்வையத்தைநீக்கும் தத்துவத்தைத் தேவரீர் கிருபையாற் கூறவேண்டும். மோக்ஷத்திற்னுற்பாதகம் கருமமா? வியஞ்சகம் ஞானமா? இரண்டுமோ? ஈண்டுமோக்ஷமென்பது பரமபுருடார்த்த வடிவமாய்ப் பிரசித்தமாதலின் நித்திய நிரதிசய ஆனந்தரூபமெனக்கூறத்தக்கது அது சுவர்க்கமேயாம்.'' யாது துக்கத்தோடு கூடாதோ, பின்னரும் பீடிக்கப்படாதோ, அவாவிற்கு விடயீபூதமாமோ அவ்வின்பம் சுவர்க்கபத ஆஸ்பதமாம்; என்னுஞ் சுருதியானும், அது துறக்கமாம் யாவின்பொருட்டும் ஒப்பாதலின் என்னும் ஜைமினிசூத்திரத்தினும், அதற்கவ்வாறுந்தன்மை சித்திதிருத்தலின். உண்டாந் தன்மையிருத்தலின் நாசஅனுமானமாமெனச்சங்கியாதொழிக; சுருதிவிருத்தப் பொருளிலனுமானம் உதியாமையின்; அதற்குண்டாகாத்தன்மையேல் சாதன உபதேசமனர்த்தமுடையதாமென்னும வழக்காதலின் என்னுங்கருமமீமாம்சகமதானுசாரமாகக்காரணம் கருமமென்பது முதற்கற்பமாம். "கருமத்தினுனுமில்லை, பிரஜையினுனுமில்லை, இம்மகவடிவ ஒடங்கள் திடமல்லனவாம்'' என்பதாதி சுருதிகளானே கருமபலம் அநித்தியமெனக் கேட்கப்படுதலின், "அதையறிந்து மிருத்தியுவைக்கடப்பன், விமுக்தியின்பொருட்டு அயனெறியில்லை'' என்பதாதி சுருதியானே முத்தியில் ஞானத்தினும் வேறாகியசாதனம் நிடேதிக்கப்படுதலின், பிரமாணஜன்னியமாகிய ஞானத்திற்கு வஸ்துவையிலக்குவதினும்வேறாயபலம்அப்பிரசித்தமாதலின் என்னும் உபநிடதமதத்தைப்பற்றி இரண்டாங்கற்பமாம். ஈசாவாசியோபநிடதத்தில் "ஈண்டுக்கருமங்களையியற்றிக்கொண்டே சதவருடகாலம் வாழவிழைக'' எனவாழுந்துணையும் கருமமனுட்டிக்கவேண்டுமென்பதாகவும், "அசுரர்கட்குரியதென்னுமவ்வுலகங்கள் கொடிய இருளான்மூடப்பட்டவை'' என்பதாதியானே

அஞ்ஞானியிகழும் வாயிலாகப் பிரஹ்மவித்தையையும் புகழ்ந்து அவற்றுள் ஒவ்வொன்றிற்கும் மோக்ஷசாதனத்தன்மையை "அந்தந்தமத்தையடைகின்றனர் யாவர்வித்தையையுபாசிக்கின்றனரோ, அதனினும் அதிகமாக அவர் இருள்வர் யாவர் அவித்தையிற் பிரியமுடையவராவரோ" என விகழ்ந்து; வித்தை அவித்தையென்னு மிரண்டையுமுடன் யாவரறிவரோ அவித்தையினாற் காலனைக் கடந்து வித்தையினான் மோக்ஷாமிருதத்தை யயில்கின்றார்" எனக் கூடியவற்றிற்கே சருவ அநர்த்தநிவிருத்தி நிரதிசயானந்தப்பிராப்தி வடிவ மோக்ஷஹேதுத் தன்மையை யியம்பலின் மூன்றாங்கற்பமாம்; எனக் கோடிமூன்றுடையையம் காண்பிக்கப்பட்டது. அவற்றுள் ஒன்றை நிச்சயித்து நிண்ணயகாரணத்தைத் தேவரீர் அருளல் வேண்டும். "யாது துன்பத்தோடுகலவாதோ" என்னுஞ்சுருதியானது அநேகஞ்சுருதிகளோடு முரணலின் ஆபேக்ஷிக நித்தியத்வபரமாதலின் அவற்றுண் முதற்கற்பம் அசம்பவமாம். மற்றிரண்டு கற்பங்கட்குக் கருமங்கண் மனத்தூய்மை வாயிலாக ஞானங்கத்தன்மையிருப்பினும் சுருதிதாற்பரிய அவிரோதமின்மையின் அபேதத்தையு மெண்ணுபவராய ஸ்ரீ அகத்தியர் உத்தரங்கூறுவதாவது:—ஹே குழந்தாய்! எங்ஙனம் ஆகாயத்தில் பறவைகட்கு இருசிறகுகளானே செல்கையாகிய விரும்பியதேய அடைவும் ஆமோ, ஒவ்வொன்றாலாகாதோ, அங்ஙனமே, "அது விஷ்ணுவின் பரமபதம்" என்னும் சுருதிப்பிரசித்தமாய சமுசாரநெறியின் கரையாயகைவல்யம் அதிகாரிகளினான்மாவில் ஞானகருமங்களானே யுண்டாம், ஒவ்வொன்றாலாகாதாம். கருமங்கட்கு முன்னிருக்கையோ பிரவிருத்தி நிவிருத்திகள் ஒரேகாலத்தில் அசம்பவமாதலினானும் விருத்தாதிகாரி விசேஷணமுடைமையானும் பொருளாற்றுணியப்பட்டதாமென ஒருகாலுளதாமங்கிசத்திற் றிருட்டாந்தமாகாதாம். கண்ணாடியிற் பிரதிவிம்பித்தவழி துலக்கல் நோக்கல் என்னுமிரண்டும் இன்றியமையாதனவாம்; அதுபோற்கருமமாற்றிய உளத்தூய்மையும் அளவையாலாகிய விருத்தியும் அவித்தையி னீக்கத்திலின்றியமையாதனவேயாம். மனமாசுடையரான் நூறுறு கேட்பினும் ஞானபலங்காணாமையின் என்பது கருத்தாம். அதனையே திடஞ்செய்து மீண்டு மறைகின்றார். கேவலங் கருமத்தினாதல் ஞானத்தினாதல் மோக்ஷமுண்டாகாதாம்; மற்றோ, இரண்டானும் மோக்ஷமுண்டாம், இரண்டும் வியஞ்சகமெனப் பிரஹ்மவித்துக்களறிவர். ஆகவே அறிஞரனுபவசித்தமாய அதன்கண் யாதொரு ஐயப்பாடுஞ்செய்யத் தேவையில்லை யென்பதுகருத்தாம். வித்தையும் அவித்தையு மென்னுஞ்சுருதியோ உபாசனை கரும சமுச்சய பரமாமன்றிப் பிரஹ்மவித்தைக்குக் கரும சமுச்சய பரமல்லவாம். அதனங்கமாகத் தொடங்குழி "அந்தத் தியாகத்தால் காப்பாற்று" என்னுஞ் சந்யாச விதிவிரோதத்தானேயென வித்தரிக்கப்பட்டது ஸ்ரீமத்பாடியக்காரரான் என்பதாக யாதொருகோதுமின்றாம். ஈண்டுக் கேட்டபடி ஆராயாது கவர்ந்து ஞான கரும சமுச்சயபக்கமே இந்நூலின் கருத்தென மயங்கற்க; ஞானதிருஷ்டியை நண்ணாதார்க்குக் கிரியை மாத்திரம் பராயணம், பட்டுவத்திர மெவனுக்கின்றோ அவனென்கம்பளம்விடுவனோ, என்பதாதியாக மணிகாசோபாக்கியானத்தான் இனிமேல்கேவலம் ஞானத்தானே முக்தியென விவத்தை செய்யப்போதலான் முற்கூற்றுக்குப்பிற்கூற்றுமுரணுறுதலின்.

இப்பொருளின் கண்ணே முன்னடந்ததாகிய இதிகாசத்தை யுனக்குச்சொல்கின்றேன், காருண்யரெனப் பெயர் பெற்றவரும், அக்கினிவேஸ்ய முனிவரின் மைந்தரும், வேதாத்தியயனஞ் செய்து முடிந்தவரும், வேதவேதாங்க பாரகரும், ஆகிய ஒரு பிராஹ்மண சிரேஷ்டர் முன்பிருந்தார். அவர் குருவினிடத்திற் சகல வித்தைகளையுங்கற்றுத்தமதுகிருகத்தைநோக்கிச்சென்றனர்; சென்றவர் யாதொரு கருமத்தையுஞ் செய்யாமற் சம்சயத்தோடுகூடினவராய் நொதுமலுற்றுக் கிரகத்திலிருந்தனர். அக்காற் கர்மத்தைவிட்டிருப்பவனும், விதியின்றிக் கருமத்தைவிடலாலிகழ்ச்சிக் கிடமாயவனும் ஆகியதமதுபுத்திரனைப் பிதாவாய அக்கினிவேஸ்யரானவர் நோக்கி இதமாக ஹே மைந்த! இஃதென்? உன்னது கருமத்தின் பாலனத்தை நீ யேன் செய்கின்றாயில்லை, கருமமியற்றாதவனு மெங்ஙனஞ் சுவர்க்காபவர்க்கங்களையேனும் பிரத்தியவாய பரிகாரத்தையேனும் அடைவாய்? அதனைக் கூறுதி? இக்கருமத்தினின்றும் நிவிர்த்தியடைந்ததற்கு யாதுகாரணம் அதனை நீ நிவேதிப்பாயாக! என மைந்தன், ஹே தந்தையே! "வாழுந்துணையு மக்கினிஹோத்திரம் புரிக, நித்தியம் சந்தியை யுபாசிக்குகவென இப்பிரவிருத்திரூப தருமமானது சுருதியிலும் மிருதியிலும் விதிக்கப்பட்டுளது; "தனத்தாலும் கருமத்தாலும் மைந்தனாலும் முத்தி யுண்டாகாது பின்னர்த் தியாகமாத்திரத்தினாலே முக்கியமாய துறவிகள் அமிருதத்தையும் அநர்த்த நிவிருத்தியையு மடைகின்றனர்" என்னும் இருமூரணுபமறைகளுள் யாது என்னாற் செய்யற்பாலது எனவையுற்றுக் கருமத்தின் கண்யான் உபேக்ஷைபடைந்திருந்தேன் என்றனன்.

இவ்வண்ணம் பிராஹ்மண சிரேஷ்டராகிய காருண்யர்கூறி மௌனமாகவிருப்ப அவ்வாறாய மைந்தனை நோக்கி மீண்டும் பிதாவானவர், ஹே மைந்த! அதன்பொருட்டுச் சர்வசந்தேகமூலாஞ்ஞானத்தைக் கெடுத்தலின் முக்கியமாய புகலும் மகாராமாயணவடிவக்கதையைக் கழறுகின்றேன் கேட்பாயாக! இதன் முக்கியத்தன்மையானது ஆதித்திய புராணம் 15-வதத்தியாயத்திற் பிரசித்தமாம், அஃதாமாறு:—"ஞானம் ஆன்மாவின் றருமமேனுங் குணமேனுமன்றாமெவ்வாறும், ஞானவடிவமேயாய ஆன்மா நித்தியம் சர்வகதம்சிவம், யாம் பூதங்கள் யாவற்றிற்கு மான்மாவாவேம், பரமேசுரராகிய யாமொருவரேயுளேம், பொருள்கள் எமதிடத்திற் கற்பிதங்களாம், ஹேஷண்முகக்குழந்தாய்! இவ்வியாவும் அறிவுமயமேயாம், ஆகியும் உலகவடிவமாய் மூடர்காண்பர்; அறிஞரோ இவ்வுலகையொரேயான்மவடிவமாய்க்காண்பர்; இஃதறிதற்கெளிதல்ல, முன்னர் வசிட்டனாலிராமனுக்குக்கூறப்பட்டது" என ஸ்ரீஷண்முகப்பெருமானுக்குஸ்ரீபரமசிவனால் அவித்தையின்வடிவமும்பிரஹ்மதத்துவமும்வித்தாரமாகவுபதேசிக்கப்பட்டுத்தமதுதிருவாக்கில்நம்பிக்கைதிடமாயுண்டாகும்பொருட்டு விசுவசிக்கத்தக்கதில் மேன்மையுற்றதும்பிரசித்தமாயதும்பிரஹ்மவித்தைத்தலைமைபூண்டதும் ஆகிய இந்நூல், சம்மதியாக உதாகரணங்காட்டப்பட்டிருத்தலின் என்பதாம். என்பாலவை முழுதையுங்கேட்டு உனதுளத்தில்நிச்சயித்துப்பின்னீயெவ்வாறவாவுகின்றனையோ மைந்த! அவ்வாறு ஆற்றுதி என்றனர்மீண்டும்மைந்தனென்றது, கதைப்பொருளிலக்கணத்தந்தைதனத்தைக்கவரத்தக்கமையைவிளக்கற்பொருட்டாம்,

அப்சரசின்கணங்களிலுத்தமியும்; அதாவது, பிரஹ்மவித்தையினதிகாரிக்குரியசிறப்புயாவற்றையும் அடைதலின்மேன்மைமிக்கவளும், சுருசியென்னும்பெயர் பெற்றவளும் ஆகிய ஒருஸ்திரீயானவள்சிகிகளான்நன்குசூழப்பெற்றதும்காமசந்தப்தர்களாயகின்னரமடந்தையர்கின்னரர்களோடு இரமிக்கப்பெற்றதும், மகாபாப சமூகவிநாசினியென்னுந்தேவநதியின்பிரவாகத்தோடுகூடியதுமாய இமவான்சிகரத்திலுட்கார்ந்திருந்தனள். ஞானவுபதேசபலமனுபவிப்பவளாதலின்மகாபாக்கியவதியும், கேவலம்பெயரான்மாத்திரமல்லாமற்சோபனமாயபிரஹ்மவித்தையில்ருசியுண்டானவள் என்னும்பொருளானும்சுருசியெனப்படுபவளும், திவ்யதிருஷ்டியானேதூதனதுபிரஹ்மவித்தன்மையின்பரிஞான ஆற்றலுடைமையின்மற்றைய அப்சரசுகளுள்மேன்மையளும் ஆகிய அவள் அந்தரிக்ஷத்திற்செல்கின்றதேவதூதனை நோக்கியெழுந்து எதிர்கொண்டுநமஸ்கரித்துத்தக்கபடிபூஜித்துத்துதித்துஹேமகாபாக்கியத்தையுடையதேவதூதரே! யானிச்சித்தபிரஹ்மவித்தையையுடையவரே! நீரெங்கேயிருந்துவருகின்றீர் இப்பொழுது எங்கேசெல்கின்றீர் அவையாவற்றையும்கிருபையாற்றிருவாய்மலர்ந்தருளுவீராகவென்றனள். இவையாவுமேயீண்டு பயோகமிரவனவாம்:—"இங்நீ அக்கால் எங்கிருந்தனை, எதினின்றுவந்தனை, விடுபட்டவனுய்நீயெங்கேசெல்வாய்" என்னும்சுருதியின்கேள்வியையொப்பாதலின் ஈண்டு பாதியையுடையஜீவபாவத்தால்நீர் எங்கிருந்துவருகின்றீர், உபாதிநீங்கியபின்பு எவ்வடிவத்திற்செல்வீர்எனச்சர்வாதிஷ்டானப்பிரஹ்மதத்வவிடயமாகவேவினவக்கருதியதாம்; ஏனெனின், அவையாவற்றையும்கிருபையாற்றிருவாய்மலர்ந்தருளுவீராகஎன்றபதசுவாரசியம் இக்கேள்விகளையேபுலப்படுத்துகின்றனவாதலினென்பதாம்.

ஹேவிலாசம்பொருந்திய இமைகளையுடையநங்காய்! எனவிளித்து இரகசியக்கருத்தோடுகூடியபெருங்கேள்வியின்பொருள் இமைவிலாசத்தானேகுறிப்பிட்டனை அது என்னாலறிந்துகொள்ளப்பட்டது எனத்தன்கருத்தைத்தெரிவித்துத் தேவதூதன், உன்னால்நன்குவினவப்பட்டது, ஆதலின், உள்ளவாறுநடந்தவிருத்தாந்தத்தையும் உண்மையாய ஆன்மதத்துவத்தையும் உனக்குரைக்கின்றேன்கேட்குதி. தர்மாத்மாவும்வைராக்கியசீலனுமாய அரிஷ்டநேமியென்னும் இராஜ இருடியானவின்தன்புத்திரனுக்கு இராஜ்ஜியத்தைக்கொடுத்து, தவத்தைச்செய்யும் பொருட்டுக்கந்தமாதனபர்வதத்தையடைந்துமகாதவத்தைப்புரிந்தனன். அவசியம் சம்பாதிக்கத்தக்கதாகிய ஆன்மஞானத்தாலுண்டாங்கிருதகிருத்தியத்தன்மையை அவனுக்கும் எனக்கும் ஆண்டுச்சம்பாதித்து இப்போதங்கிருந்துயான்வருகின்றேன், சமுசாரத்தின் எல்லையையடைந்த அவன்விருத்தாந்தத்தை இந்திரன்சந்நிதியிற்றெரியப்படுத்தும்பொருட்டுச்செல்கின்றேன் என்றனன்; எனவே, அதனையவ்வாறேபறியும்வேட்கையளாகியசுருசி, ஹேபிரபுவே! சமுசாரத்தின் எல்லையையடைந்த அவ்வரசன் எத்தகையவடிவினனுயிருந்தனன்? அங்குநடந்தயாவற்றையும் எனக்குக்கூறவேண்டும். வியத்துடன்கேட்குமிச்சையுடையவளாயிருத்தலின் தேவரீர்விரைதல்கூடாது; ஈண்டுவிரித்துரைக்கவேண்டும், சிறிதுகூறியமாத்திரையானே அதன் அசம்பாவனைமுதலியதோடங்கள்நீங்காவாம், ஆகலின்விரையலாகாதெனப்பிரார்த்திக்கின்றேன் என்றனள். எனக்கேட்டதேவதூதன்கூறுகின்றான்:-

ஹேகல்யாணியேகேட்டி! உள்ளவாறுனக்குவிஸ்தாரமாய்விளம்புகின்றேன். அக்கந்தமாதனபர்வதத்திலுள்ளவனத்தில் அவ்வரசன் உக்கிரமாகியபெருந்தவத்தைப் புரிந்தனன். அக்காற்றேவராஜனுல்மேற்கூறும்வண்ணம் ஆஞ்ஞாபிக்கப்பட்டவனுனேன்; அதாவது, ஹேதூதனே! நீகந்தர்வசித்தயக்ஷகின்னராதியர்களாற்சோபிக்கப்பட்டதும்நானுவிதவாத்தியங்களாற்பூஷிக்கப்பெற்றதும், தேவதாசிக்கூட்டங்களாலழகுவாய்ந்ததும், தவம்புரிவோன்விரக்தனுயின் அவன்கண்ணுக்கற்பமாயதும் அவனுனுபேக்ஷிக்கத்தக்கதும் ஆகிய இவ்விமானத்தைப்பாகியதாளவேணுமிருதங்காதிகளோடுகிரகித்துக்கொண்டுசீக்கிரம் அக்கந்தமாதனபர்வதத்திற்குச்சென்றுநானுவிருக்ஷங்களால்நன்குசூழப்பெற்றதும்மங்கலந்தங்கியதும் ஆகிய அவ்வசலத்திற்றவஞ்செய்யும் அரிஷ்டநேமியென்னுமவ்வரசனை இவ்விமானத்திலேற்றிச்சுவர்க்கபோகந்துய்க்கும்பொருட்டுநமது அமராவதிநகர்க்குக்கொண்டுவருதி. என்னுமிந்திரனது ஆணையைச்சிரமேற்கொண்டயான்குணமான எல்லாப் போகசாதனங்களோடுங்கூடிய அவ்விமானத்தைக்கவர்ந்துகந்தமாதனபர்வதத்திற்குச்சென்று அவ்வரசனதாச்சிரமத்தையடைந்துமகேந்திரனதுசர்வாஞ்ஞையை அவ்வரிஷ்டநேமிமகாராஜாவிற்குணர்த்தினேன். இயம்பிய என்வசனத்தைக்கேட்டு ஐயமுடையவனுய் அவ்வரசன்கூறுவதாவது:—

ஹேதேவதூதரே! உம்மைச்சிலவினவ இச்சிக்கின்றேன் அவற்றைநீர்கூறவேண்டும்; அதாவது, அச்சுவர்க்கத்தின்குணதோஷங்கள்யாவை! அவற்றையெனக்குமுன்புகூறுவீராயின் அச்சுவர்க்கத்துள்ளகுணதோடவுயர்வுதாழ்வுவடிவநிலையைத்தெரிந்துகொண்டு எனக்கெவ்வண்ணமிச்சையோ அவ்வண்ணம்செய்கின்றேன்; என்றரசன்கூறயான், ஹேஅரசனே! சுவர்க்கத்திற்புண்ணியத்தின்சம்பூர்ணசாமக்கிரியைகளால்பரமசுகமானதுபுசிக்கப்படும். சிறியபுண்ணியங்கட்குமிகுதியாகவேபயனனுபவிக்கலாம்; பரமமென்றதுவும் அற்பபுண்ணியங்களினின்றுமதிகமென்பதாம். உத்தமமானபுண்ணியத்தானே உத்தமசுவர்க்கத்தினடைவாம்; ஒவ்வொருமேன்மையினும்மேன்மைவாய்ந்தபுண்ணியத்தானும் அஃதழியும்வரைமேன்மையாய ஆநந்தமடையலாம். அவ்வாறே, மத்திமத்தால்மத்திமசுவர்க்கம் பவிக்கும், இதன்கண்ணும்மிகுதிமேன்மைகளையனுசரித்துமுன்போலவேயாம், வேறுவிதமாகவோசம்பவிப்பதில்லை, தாழ்ந்தபுண்ணியத்தானே அத்தகையசுவர்க்கமேகிடைக்கும், மிகவுமுத்தமமாகியபுண்ணியபலன்களில்வேறுதோடங்களுமுள்ளன; அவையாவன:—எதுவரைபுண்ணியமழியவில்லையோ அதுவரைமற்றையருயர்ந்திருத்தலைச்சகியாமையும், உயர்ந்தாரோடுஞ்சமமாயினுரோடும்குரோதமாச்சரியாதிவிரோதமும் அதனைச்சகிக்கமுடியாததுக்கமுங்கனிஷ்டர்களிடத்திற்சந்தோஷமும்சர்வசாதாரணமாயுண்டாகிக்கொண்டேயிருக்கும். புண்ணியம்க்ஷீணமாம்போது இப்பூவுலகத்தைநோக்கியவர்களாற்றள்ளப்பட்டுமனுடர்களாகப்பிறக்கின்றனர் ஆனலதுவும்கிடைத்தற்கருமையேயாகும். என்பனமுதலியகுணதோஷங்கள்சுவர்க்கத்தில்நிலைபெற்றிருக்கின்றனவெனக்கேட்டமன்னவன், ஹேதேவதூதரே! இத்தகையபிரயோஜனவடிவசுவர்க்கத்தையான்வாஞ்சியேன். இனியான் மகாவுக்கிரமாகியதவத்தைப்புரிந்து இவ்வசுத்தமாயசரீரத்தைச்சீரணமாயசட்டையைச்சர்ப்பந்தியாகிப்பதுபோற்றியாகிப்பேன். தவத்தால் எல்லாப்பாவங்களும்

தியும், புண்ணியபலத்தில்விருப்பமோகிடையாமையின்பிறப்பிற்கேதுவொன்றுமில்லாததால்வைராக்கியவானாகிய எனக்குத்தேகம்நீங்கலானேமோக்ஷம்கிடைக்குமென்பது அரசனதுகருத்தாம். யான்வராததால்வருத்தமுறும்ஹேதேவதூதரே! எந்தமகேந்திரராதுசந்நிதியிலிருந்துவந்தீரோ அவர்சந்நிதியைநோக்கியிவ்விமானத்தைக்கவர்ந்துநீர்செல்லுதிர்! பொறுத்தருளுதிர்! உமக்குநமஸ்காரம் என்றனன். என்றவ்வேந்தனியம்பயான் இந்திரனதுசந்நிதியில் இதைநிவேதிக்கும்பொருட்டுச்சென்றுநடந்தவண்ணம்நிவேதித்தேன் அதைக்கேட்ட அச்சபையிலிருந்த இந்திரன்முதலியபெரியோர்யாவரும்விஸ்மயகாரணமாகிய ஆச்சரியத்தையடைந்தனர். மீண்டும்மகேந்திரன், அற்பனாகிய என்னைநோக்கிக்காரியமில்லாமல் ஏவியதால்யான்நொந்திருப்பேனென்றெண்ணி யெனக்கு மகிழ்வுண்டாம்பொருட்டுமதுரமாகியவாணியானே, ஹேதூதனே! மறுபடியும்நீ அவ்விடத்திற்போய்வைராக்கியவானாயிராநின்ற அந்த அரசனைத்தனதுமெய்வடிவையுணர்ந்துகொள்ளும்பொருட்டும் அவ்வாயிலாகநீயுன்னையுணர்ந்துகொள்ளும்பொருட்டும், மெய்த்தத்துவஞானியாகவிளங்கும்ஸ்ரீவான்மீகருடைய ஆசிரமத்திற்சேர்த்து என்னுடைய இத்தூதுமொழியை அம்மகரிஷியாகியஸ்ரீவான்மீகருக்குநீசொல்வாயாக; அதாவதுஹேமகரிஷியே' ஹேமகாமுனியே! வணக்கமும், இராகத்தை மூலமாக உடையனவுமாகியகாமியப்பிரவிருத்திகளையெல்லாம் இச்சையைவிடும்வாயிலாய்விட்டவனும், சுவர்க்கத்தைவாஞ்சியாதவனும் ஆகிய இம்மன்னவனுக்குநீர்தத்துவத்தையுபதேசித்தருள்வீராக. அத்தத்துவஞானத்தானே, உபதேசித்தபொருளைமனத்திற்கொள்ளும்முறையினாலேனும்மநோநாசமுடிபாயசாந்தமனாதிமுறையினாலேனும், சம்சாரதுக்கமீடிதனாகிய இவ்வரசன்மோக்ஷத்தையடைவன் என்றனன். என்றிவ்வண்ணந்தேவராஜனால் ஆஞ்ஞாபிக்கப்பட்டு அவ்வரசனதுசமீபத்திற்போமாறுபிரேரிப்பிக்கப்பட்டயான்மறுபடியும் அவ்விடத்தில்வந்து அரசனையழைத்துக்கொண்டுசென்றுவன்மீகத்திற்றிருவவதாரஞ்செய்தமகரிஷிக்கு என்னால்மகேந்திரன்தூதுமொழியோடும் அவ்வரசன்நிவேதிக்கப்பட்டனன்; அரசனாலோதனக்குமோக்ஷத்தின்சாதனமாகியதனதுவாஞ்சிதபதார்த்தம்வேண்டுமெனவேண்டிக்கொள்ளப்பட்டது. பின்னர்ஸ்ரீவான்மீகி இருடியானவர், அவ்வரசனைநோக்கி அதிப்பிரியமாகத்தேசநிதிபுத்திரதவமுதலியவற்றின்குசலப்பிரசினவார்த்தைகளானேக்ஷேமத்தை நன்குவினாவினர். அரசன்கூறல்:—கருமகாண்ட இரகசியதர்மதத்துவத்தையுணர்ந்தவராயும், பிரஹ்மதத்துவத்தையுணர்ந்தவராயும், லோகதத்வஞ்ஞராயும் இராநின்றவர்களிற்சிரேஷ்டரே! ஹேபகவன்! தேவரீரதுதரிசனத்தாலும், தேவரீரதுகிருபாதிருஷ்டியாலும்நாயினேன்கிருதார்த்தனாயினேன்; அக்கிருதார்த்தத்தன்மையேஅடியேனுக்குக்குசலமாம். அடியேன்சிறிதுவினவ இச்சிக்கின்றேன், அதைவிக்கினமில்லாமல் அடியேனுக்குத்தேவரீர்திருவாய்மலர்ந்தருளல்வேண்டும். ஈண்டு:—தேவதூதனதுதூதுமொழியானேவினாவிடயத்தையறிந்திருந்தபோதினும், "வினவாதவனெவனாயினும்விளம்பேல்" என்பதனால் ஒருகாலுபேக்ஷைவரக்கூடும், அவ்வாறுபேக்ஷியாமலிருக்கவேண்டுமென்றுகருதியேசிறிதுவினவ இச்சிக்கின்றேன் என்றதாம். மேன்மைமிக்க அதன்கண்ணே "மேலாயவையெலாமிகுவிக்கினத்தன" என்னும் ஆன்றோர்முறையில் இடையூறுகள்வருமெனநினைந்துகூறியதாம். விக்கின

மில்லாமல் என்பது, "ஆதலிற்றேவர்க்கஃதப்பிரியம், யாதிம்மானுடரறிவறி
வாரோ" என்னுஞ்சுருதியினானேதேவர்கட்குப்பிரதிகூலமாயினன்றோவிக்கினம்
வருமெனக்கூறலாம், அதுவோயில்லை, ஏனெனின், தேவராஜாவின் ஆணையினானே
யான்கேட்கின்றேனாதலினென்பதுகருத்தாம். சமுசாரபந்தத்தாலாகிய துக்கங்க
ளாற்பீடிக்கப்பட்டு அடிக்கடியழிகின்றேன், அதனினின்றும் எவ்வாறுவிடுபடு
வேன், அதைத்தேவரீர்திருவாய்மலர்ந்தருளல்வேண்டும். முதலதுமோக்ஷசொரூ
பத்தினதுவினாவாம், இரண்டாவதுமோக்ஷசாதனத்தினதுவினாவாமெனவுணர்க.
ஸ்ரீவான்மீகிமுனிவர்; ஹே அரசனே! அகண்டிதமாயிலங்காநின்ற இராமாயணத்தை
நன்றாகக்கூறக்கேட்குதி! கைகேயியின்வரத்தைமுன்னிட்டுத்தமதிடத்தினின்றுஞ்
சென்றஸ்ரீராமருக்கு அரக்கரைவென்றுமீண்டுந்தமதிடத்தையடைந்துமேன்மை
மேவியதுபோலச்சாபத்தைமுன்னிட்டுச்சொரூபத்தினின்றும்நழுவிய அவருக்கு
ஸ்ரீவசிஷ்டருபதேசத்தால் அஞ்ஞானமுதலிய அரக்கரைவென்றுமீண்டும்சொரூ
பத்தையடைதலாகிய முத்தியைப்பிரதிபாதிக்கின்றமையானே பொருளைத்தொடர்
ந்துபெயர்பெற்றநூலாகிய இராமாயணத்தைக்கேட்டு, கேள்வியினானேபிரமாண
அசம்பாவனையையும்; மனனத்தானேநிச்சயித்துப்பிரமேய அசம்பாவனையையும்;
முயல்வாகியநிதித்தியாசனத்தானேவிபரீதபாவனையையும்விலக்கி; சாக்ஷாத்காரத்
தானேஜீவன்முக்தனாவாயாக. ஹேவிவேகியாகியமன்னர்மன்னனே! ஸ்ரீவசிட்ட
ராமசம்வாதரூபமாயமோக்ஷோபயங்களின்கதையை, தத்துவத்தையுணர்ந்த இயல்
பையுடையயாம்கூறக்கேட்பாயாக என்றனர். "அறியப்படாதவனானே அநுக்கிர
கிக்கப்பட்ட இது அறியத்தக்கதாகாதாம், பலவானாய்ச்சிந்திக்கத்தக்கதாம்" என்
னுஞ்சுருதியினானேதத்துவத்தையறியாதவனுபதேசத்தானே சீடனுக்குக்கிருத
கிருத்தியத்தகைமையுண்டாகாதாமென்பதுகருத்தாம். ஸ்ரீவசிஷ்டராமசம்வாத
மென்பதன்கண்ஸ்ரீராமருக்குச்சீடத்தன்மைகுறிப்பிக்கப்பட்டது, அஃதஞ்ஞானுக்
கன்றோ சம்பவிக்கும், ஈசுரருக்காகாதாம், ஸ்ரீராமரோபகவதவதாரமாதலினானே
சர்வஞ்ஞரெனத்தக்கவரேயாவரன்றோவெனவையமுற்றரசன்; ஹேதத்துவவித்
துக்களிற்சிரேட்டரே! இராமரென்பவர்யாவர்? இராமரெனப்பெயரியவேறெவ
ரேனுமொருவரா? அல்லது, பிரசித்தமாகியநித்தியமுக்தவிஷ்ணுவா? அவர் எத்
தகையர்? யாவருடையகுமாரர்? பந்தமுடையவரா? முத்தரேயா? இவற்றின்நிச்சய
காரணத்தைத்திருவாய்மலர்ந்தருளல்வேண்டுமென்றனன். எனவேஸ்ரீவான்மீகிபக
வான், பிரபுவாகியஸ்ரீவிஷ்ணுவானவர்சாபமறைவினாலேதமதுபக்தவாக்கியத்திற்
குண்மையையடைவிப்பான்தமதிச்சையாற்கவர்ந்த அஞ்ஞானத்தானே அஞ்ஞான
மிகவுடையராய், அரசவேடத்தைத்தரித்தவராய், சிற்றறிவுடையராய், இவ்விராம
ராயவதரித்தனர் எனவே; மகரிஷிகள் அபராதிகளையன்றோசபிப்பர்கள், அபராத
மும்வேட்கைநிரம்பாத அஞ்ஞனுக்கன்றோவாம்; மறைபடாதசிதானந்தரூபத்தன்
மையுண்மையின் அவ்வாறல்லாதஸ்ரீராமருக்கு அதுசம்பவியாதாம், சாபத்தினானே
அதனைக்கூறினோ, அன்னியோன்னிய ஆசிரயமாம் எனக்கருதி அரசன் உண்மை
யில்சிதானந்தவடிவமாகியும், விவகாரத்திலும், சைதன்யமேபக்தர்களிடத்தில்
வைத்தகருணையினானேவிக்கிரகவடிவமாய்ப்பரிணமித்தும்விளங்கும்ஸ்ரீராமபிரானி
டத்தில்வந்தசாபத்தின்காரணத்தையும்சபித்தவரின்னாரென்பதையும் கூறவேண்டு

மென்றனன். எனக்கேட்ட ஸ்ரீவான்மீகிபகவான் கூறுகின்றார் :—நிட்காமமாய்நிக ழாநின்றபிரஹ்மாவினதுவீட்டில், நிட்காமராகியசனற்குமாரர் வசித்துக்கொண் டிருக்குங்காலத்தில்மூவுலகுக்கும் அதிபதியாய்ப்பிரபுவாயிராநின்றஸ்ரீவிஷ்ணுவான வர்ஸ்ரீவைகுண்டத்தினின்றும் அங்கெழுந்தருளினர். அப்பொழுதுசனற்குமா ரரையொழிந்தமற்றையசத்தியலோகவாசிகளாலும்பிரஹ்மாவாலும்பூஜிக்கப்பட்ட அந்தப்பிரபுவானஈசுரரானவர் அச்சனற்குமாரரைநோக்கி, ஹேசனற்குமார! நிஷ் காமகர்வசேஷ்டையாலன்றோ அசைவற்றிருந்தனே? ஆதலின்நீ "சரஜன்மாவென் னும்பெயரோடுகூடியவனய்ப்பிறந்துகாமபீடிதனுவாயாக" வென்றனர். ஹேவிஷ் ணுவே! உமக்கெச்சர்வஞ்ஞத்தன்மையுண்டோ அதுசிறிதுகாலம்நீங்கப்பெற்று அஞ்ஞானி ஆகக்கடவீர். எனச்சனற்குமாரராலும்ஸ்ரீவிஷ்ணுவானவர்சபிக்கப்பட் டார். மேலும், பிருகுவானவர்ஸ்ரீவிஷ்ணுவாற்கொல்லப்பட்டதமதுமனைவியைப் பார்த்துக்குரோதமூர்ச்சிதராகியெழுந்துஹேவிஷ்ணுவே! "உமக்குமனைவியிழந்து போகக்கடவது" எனச்சபித்தார். அன்றியும், ஹேவிஷ்ணுவே! எதனாலும்மால் பதிவேடத்தான்மயக்கிப்பதிவிரதத்தகைமையைக்கெடுத்தவஞ்சகஞ்செய்யப்பட்ட தோ அதனல் "நீர் என்சாபத்தினால்மனைவியின்வியோகத்தையடையக்கடவீர்" எனஜலந்தரன்மனைவியாகியவிருந்தையால்ஸ்ரீவிஷ்ணுசபிக்கப்பட்டார். மேலும், பயோஷ்ணிநதிதீரத்திலிருந்ததேவதத்தரதுமனைவியானவள்நரசிம்மவேஷதாரியா கியவிஷ்ணுவைப்பார்த்துப்பயந்து பிராணனைவிட்டாள். மனைவியின்வியோகத் தோடுகூடிய அந்தத்தேவதத்தரானே "உமக்கும்மனைவியோடுவியோகமுண்டா குக" வென அருந்தவத்தாற்றரிசிக்கப்பெற்றஸ்ரீநரசிம்மமூர்த்தியாகியஸ்ரீவிஷ்ணு சபிக்கப்பட்டார். முதற்சாபத்தால்நேராக, மற்றவற்றால் ஆக்ஷேபமாக அஞ்ஞான அடைவாம். அதனனே, ஸ்ரீராமருக்கு, இராவணன்கொண்டுசென்றமையானும், பொய்யபவாதத்தானும், பூதலப்பிரவேசத்தானும்சீதையம்மனதுமுப்பிரிவு ஏற் பட்டதாம். "நீணுளுன்னிடத்தினிலையுற்றுவாழாள்" என்னும்தாரையின்மொழி புலப்பமாத்திரமேயாகும், சாபமாகாதாம்; அவள்வாலிஜீவிக்குங்காலத்துஞ்சுக்கிரீவ னோடு அனுபவித்தது, "தருமத்தாற்றுயையாவன்சுவீகரிக்கின்றானேநிந்திதன்" என்னும் அங்கதவாக்கியத்தானேபிரசித்தமாதலின்பதிவிரதாபங்கத்தானும், கீழ் யோனிப்பிறப்பானும்மேன்மைதங்கிய ஸ்ரீராமருக்குச்சாபங்கொடுப்பதிற் சமர்த் துடையவளாகாள். இவ்வாறுபிருகுவாலும், சனற்குமாரராலும், தேவசர்மரா லும், விருந்தையாலும், சபிக்கப்பட்டவிஷ்ணுவானவர் அக்காரணத்தான்மனுஷி யத்தன்மையையடைந்தார். இச்சாபமறைவின்காரணம்யாவும் உனக்குச்சொன் னேம், இப்பொழுதுமுன்கேட்டமோக்ஷசாதனமாகிய அவ்வியாவற்றையும் அனு பந்தத்தோடும்மகாராமாயண 32000 கிரந்தத்தையும்சொல்கின்றோம்; சாவதான மதியுடையவனுகக்கேட்பாயாக.

1-வது ஆரம்ப பீடிகை வருணனம் முற்றும்.

---

## 2-வது ஆரம்ப பீடிகை வருணனம்.

இனி, தொடங்க அவாவியபெரியநூல் இடையூறிலாமல் இனிதுமுடிபவும், எங்குமினிதுலவவும்வேண்டி "மங்களத்தைமுதலிலும் இடையிலும் ஈற்றிலும் உடையசாஸ்திரங்கள்வீரபுருடர்களையுடையனவாகியும் ஆயுளோடுகூடியவர்களை யுடையனவாகியும்விளங்கும்" எனமகாபாடியத்திற்கூறியதும், சுருதியிற்செய்யற் பாலதென உணர்த்தப்பட்டதும், யாவற்றையும்விளக்கும் அறிவுரசம்வாய்ந்தசர்வ பிரத்தியக்கபின்னபரப்பிரஹ்மநமஸ்கார இலக்கணம்வாய்ந்ததும் ஆகியமங்களத் தைச்செய்துகொண்டுபொருளானேசாஸ்திரத்தினது விஷயப்பிரயோஜனங்களைக் காண்பிக்கின்றார் :—

பொன்னுல கத்தினிற் புவியி லந்தரத்
தென்னுடை யுட்புறத் திலங்கு கின்றது
மன்னுசிற் சோதியே வடிவ மியாவுமாய்த்
துன்னுவ தப்பொரு டொழுதி றைஞ்சுவாம்.

(பொ-ள்.) சுவர்க்கத்தில், பூவுலகில், அந்தரிக்ஷலோகத்தில், அதிபூதத்தில், அத்தியாத்மத்தில், அதிதைவத்தில், எவ்விபுவானவர்நானுவடிவமாக எனதறியா மையால் எனக்கிலங்குகின்றாரோ. உண்மையாயோ இலங்கும்வடிவதாய்நிர்விகார சின்மாத்ர இயற்கையதாய எல்லாவற்றின்வடிவாய அதன்பொருட்டுநமஸ்காரம். அல்லது, பிருதிவிபூர்வரூபம், துறக்கம் உத்தரரூபம் என்னுஞ் சுருதியிற்போல, ஈண்டும்பொன்னுலகத்தினில்=பிரஹ்மாண்டத்தினதுமேற்கபாலமாகியசுவர்ணமய வத்துவில், புவியில் = கீழ்க்கபாலமாகியவெள்ளிமயவத்துவில், அந்தரத்து = அவ் விரண்டன்சந்தியாகியசூக்ஷ்ம ஆகாசத்தில், பிரஹ்மாண்டத்தின்வெளியிலும் உள் ளிலும்யாதுவிசேடமாக=சூரியசந்திர அக்கினிவாக்குமுதலியவற்றினும் அதிசய மாக, சுவப்பிரகாச அபரிச்சின்ன இயற்கையானேயாதிலங்காநிற்குமோ! அஃதெங் ஙனமெனின், இவ்விலங்காநின்ற ஆன்மாவானதுசூரியாதிகளையும்விளக்குவதும் அவற்றின்வடிவமும் ஆகுமாதலின் "எதனுல்சூரியன்தபிக்கின்றானோதேயுவொளிர் கின்றதோ, ஆன்மாவேயிதனதுஜோதியாம், ஜோதிகளுக்கும் அதுஜோதியாகும்." என்பதாதிசுருதிமிருதிகளானேயெனவுணர்க. எல்லாவஸ்துக்களினது பாரமார்த் திகசொரூபபூதத்தின்பொருட்டு நமஸ்காரம். அல்லது, பொன்னுலகத்தினில்= இலக்குவிக்கும் ஏகரசம்வாய்ந்தபூமானந்தவடிவதுரியவடிவத்தில், இரண்டவஸ்தை களினுற்பத்திபூமியில், அவ்யாகிருத ஆகாசத்தில், வெளிப்பிரஞ்ஞைப்போக்கியமா கியஜாகரத்தில், உட்பிரஞ்ஞைப்போக்கியமாகியசுவப்பனத்தில், அவற்றின்சந்தி களாகியமரணமூர்ச்சைமுதலிய அவத்தைகளினும்யாதுநானாவிதமாக இலங்குகின் றதோ, தூலசூக்குமகாரண அபிமானியாகவும், அவற்றின்போக்தாவாகவும், அவற் றின்சாக்ஷியாகவும், நிஷ்பிரபஞ்சபூரணானந்தசின்மாத்ர இயற்கையதாகவுட், விளங்குகின்றதோ என்பதாம். ஆயினென், நானு இரசமேயின்றுவெனக்கடாவிக் கூறுகின்றார் :—இலங்கும்வடிவது அறிவுமாத்திர இயற்கையது. திருசியமானது திருக்கினும்வேறாக இராமையின் அவித்தையோடுகூடியதும் அவித்தை அற்றதும் ஆகிய எல்லாவடிவத்தின்பொருட்டுநமஸ்காரம். அல்லது, பொன்னுலகத்தி

னில்=சர்வஞ்ஞத்தன்மை முதலியவற்றின் சம்பத்துண்மையின் இலங்காநின்ற காரண உபாதியின்கண்ணே, புவியில்=கருமபீஜமுண்டாகும்பூமியாகியகாரிய உபாதியின்கண்ணே, அந்தரத்து=எங்குமிலங்காநின்றசொரூபமிகப்பிரகாசத்தில், ஜீவன்முக்திதசையில், வெளியில்=நிருபாதிசொரூபத்தில், உள்ளில்=காரியகாரண உபாதியுள்ளடங்கியமாயாந்தக்கரணவிருத்திபேதங்களிலும், எவ்விளங்குமியற்கையுடையதுவிளங்குமோசருவ உபாதிசாரமாய அவ்வான்மாவின்பொருட்டுநமஸ்காரம். அல்லது, விளக்கும்வடிவதேஜசில், பிருதிவியில், விண்ணில், உள்ளடங்கிய நீர்காற்றுக்களில், பகிர்ப்பூதமாகிய அவ்வியாகிருதத்தில், நிருபாதிகத்தன்மையானேசப்தாதிகட்குத்தகுதியல்லாதபாரமார்த்திகவடிவத்திலும் யாதுதொடர்ந்துநின்றுசன்மாத்திரவியல்பதாயிலங்குமோ அதுவே இலங்கும்பிரத்தியக்கான்மாவாம். அச்சர்வவடிவமாகியபூரணானந்தசொரூப என்பொருட்டு நமஸ்காரம். அல்லது, தேவலோகத்தில், வெளியேதடஸ்தமாகபூஜ்பதேவதா ஈசுராதிவடிவமாக, புவியில், உள்ளே, உடம்பிலிருப்பதாய்ப்பூஜகவடிவமாக, ஆகாயத்தில்=இரண்டனிடையில்கிரியாபலசாதனாதிவடிவமாக, என்னுடையவடிவம், விளங்காதகாலத்தில்பரிச்சேதமாகிவேறாகவிளங்கினும்யாது இப்போது தத்துவதிருஷ்டியுதயத்தானே வெளிப்படையாய்விளங்கும்வடிவதாய, மூவிதபரிச்சேதசூனியவிபு, வெளிப்படையாய்விளங்கும். அத்தகையபூரணானந்தவடிவின்பொருட்டுநமஸ்காரம்.

அல்லது, மேல்கீழ் இடையில்கிழக்குமுதலியதிசைகளில், உடம்பினுள், பூர்வோத்தரகாலங்களில் எவ்விலங்குமான்மாவாகியஏகதேசமாயதுதத்துவவித்தாகிய எனக்குவிளங்குமோ, "ஆன்மாவேகீழும் ஆன்மாவேமேலும்" என்பதாதி சுருதியினானேயென்க. ஆன்மாவே இவ்வியாவுமென்னும்சர்வப்பிரபஞ்சபாதத்தால் எஞ்சிநிற்பதாயபரமான்மாவின்பொருட்டு நமஸ்காரம். இவ்வாறுவேறுபொருள்களும், மதிவைபவப்படி ஊகித்துக்கொள்க. ஈண்டுப்பொருளால் அவ்வகையாய அறியப்படாதபிரஹ்மமேசாஸ்திரத்தின்விடயமாம். ஞானத்தால் அவ்வடிவமாய்நிலைபெறுதல்பரமநிர்வாணரூபமாகிய பிரயோஜனமாம் எனக்குறிப்பிக்கப்பட்டது. மேலும்மேலும் இதுவேவெளிப்படையாய்க்காட்டப்படும். இனியதிகாரியும், கதையினுபாயசம்பந்தமும், பிரஹ்மாவினாணையினானே இந்நூலுண்டாதலும், முக்தனதுநடையும், கூறப்படும்:—இனியிந்நூலின்கண்ணே அதிகாரியாவன்? அறியானா? அறிவுடையவனா? ஆதியனல்லன், அவனுக்குத்தேகாதிகளிடத்தில் ஆன்மமதிதிடமாயிருத்தலினானும், ஆசையதிகரித்திருத்தலினானும், முமுக்ஷுத்தன்மையில்லாமையின். விடயங்களிடத்திற்றோடதரிசனத்தாலும், ஜனனமரணாதிதுக்கதரிசனத்தாலும் அவனுக்கேவைராக்கிய உதய இச்சையால், முமுக்ஷுத்தன்மையுண்டாகி அதிகாரமாமென்னற்க; இராகமுடையவர்கள்மிகவும்விடயங்களை இரக்ஷிப்பதாகக்காணப்படுதலின்விடயங்களிருக்கும்போதே அவற்றினுள்ளதோடத்தைநீக்குமுபாயத்தைமுயல்வதுடன்நல்ல நல்லவிடயங்களையுந்தேடுதலின் இகலோகசம்பந்தி, பரலோகசம்பந்தியுபாய இச்சையோடுமுயலுதலின் என்க. அறிஞனுமாகான், அவனுக்குக்கிருதகிருத்தியத்தன்மையுண்மையினானே கிரந்தத்தாற் சாதிக்கப்பட்ட பிரயோஜன ஆசையின்மையினானே கிரந்தத்திற்பிரவிருத்திகூடாமையின் எனவினவிவிசிஷ்ட அதிகாரியைக்காண்பிக்கின்றார்:—உண்

மையே! அத்தியந்தம் அஞ்ஞனும், அறிஞனும் இந்நூலின்கண்ணே அதிகாரிக
ளல்லர்; மற்றோ, யான்பத்தன்=இச்சம்சாரத்தில் அநாதிகாலந்தொடங்கிச்சிறையிற்
கட்டுண்டுகிடப்பவனைப்போலப்பரிச்சேதபரவசஜன்மஜராமரணாதி துக்கமனுபவித்
துக்கொண்டுசோகிக்கின்றேன். முற்றினும்சோகத்தைக்கடக்கவேண்டுமானாலோ
ஆன்மஞானமே உபாயமாம், "ஆன்மவித்தானவன்சோகத்தைக்கடக்கின்றான்"
என்னுஞ்சுருதியினானென்க. அவ்வான்மஞானத்தானேயான்முக்தனாவேன் என்
னும்முதிர்ச்சியாய அறியும்வேட்கையோடுகூடியநிச்சயமானது எவனுக்குளதோ
அவன்விஷயஉபாயமுதலியவற்றானேகுருவைச்சரணாகதியாக அடைவன் இந்நூற்
கதிகாரியுமாவன் சாஸ்திரசிரவணாதிபலத்தைச்சேவிப்பவனாவனென்பதாம். என
வே, அளவிறந்தபுண்ணியங்களானே இராகாதிதோடங்களற்றவனும், விவேக உத
யத்தானே அறியும்வேட்கையனும் ஆகிய அஞ்ஞனுக்கே அதிகாரம் என்பதுகருத்
தாம். அற்றேல், இராகாதிதோடமற்றவன்மூவருணத்தினனாயின்சந்யாசவாயிலாக
வேதாந்தசிரவணத்தின்கண்ணேயதிகாரியாவன்; முற்காண்ட அர்த்த அனுஷ்டா
னத்திற்குமனத்தூய்மைவாயிலாகப்பிற்காண்ட அதிகாரத்தையடைவிக்குந்தன்மை
"அவ்விதனைவேதவசனத்தானே" என்பதாதிசுருதியினானே துணியப்பட்டிருத்த
லின்மூவருணத்தினனல்லாதவனுக்கீண்டதிகாரமில்லையாம்; "அம்மகத்தாயதை
வேதமுணராதவன்மனனியான்" என அதிகாரநிஷேதங்காணப்படுதலின். ஆகை
யாலதிகாரிசுலபனல்லன் எனின்? அற்றன்றும், ஸ்மார்த்தகருமம்போற் கூடலின்;
மூவர்ணமுடையவனுக்குமூன்றக்கினியிற்சாதிக்கத்தக்ககருமத்தின் கண்ணதிகார
மிருந்தபோதினும் அக்கினியாதானஞ்செய்யாதவனாகியசாதாரணன்ஸ்மார்த்தகரு
மாதிகாரத்தையடைவதேபோலும்; சிரௌதஞானாதிகாரியிருந்தபோதினும் அசந்
யாசியாகியமுமுக்ஷுசாதாரணன் இந்நூலின்கண்ணதிகாரியாவான்; அஞ்ஞான
மிருக்கும்வரையாம். இந்நூற்கும்மிருதியைப்போலும்வேதவியாக்கியானத்தன்மை
யுண்மையின், அங்ஙனமேகூறவும்பட்டுளது:—வேதம்விளம்பாநின்றபரபுருடன்
தசரதர்மதலையாயுண்டாம்போது, வேதமும்ஸ்ரீவான்மீகிபகவானுடையவாக்கினின்
றும்சாக்ஷாத்திராமாயணவடிவமாகியது. ஆண்டுப்பூர்வகாண்டத்திற்கு, ஸ்ரீஇராம
சரிதகதைமுன்னிலையாகவியாக்கியானமாகிய ஆறுகாண்டபூர்வராமாயணம்சமான
மாம். உத்தரகாண்டத்திற்கு இவ்வாறுபிரகரணமும்சமானமாம். சிலஸ்மார்த்த
கருமங்களில்ஸ்திரீசூத்திரப்பொதுவாக அதிகாரமுண்டாவதேபோல இதனதுசிர
வணத்திலும்புராணம்போலுமாம். "மறையவனைமுதன்மையாகக்கொண்டுநான்கு
வருணங்களையுங்கேட்பிக்க" "சூத்திரரும்மகத்துவத்தையடைகுக" என்பதாதி
வசனலிங்கங்களாலும். "அப்பெருப்பொருளைவேதமுணராதவன்மனனியான்,
அவ்வுபநிடதப்பிரதிபாத்தியபுருடனை வினவுகின்றேன்" என்பதாதிவசனமோ
அவேதவித்திற்குச்சிரௌதஞான அநதிகாரபரமாமென்பர்சிலர்; அபரோக்ஷஞான
முடிவுபேறிலதாம்பரமென்பர்மற்றையர்; வேதவாயிலாந்தன்மைத்துதிபரமாமென்
பர்சிலர். எல்லாவாற்றானுமேமற்றையருக்கும் புராணசம்பந்தசாதாரணமாகிய
ஞானத்தின்கண்ணே அதிகாரமுளதேயாம் "எல்லாவருண ஆசிரமங்களானுமே
அவ்வான்மா அறியத்தக்கதாம்" என்பதாதிவசனங்களானுமறிக. ஆண்டுச்சிரௌ
தஞானத்தில் பூர்வகாண்டத்திற்கூறிய தருமானுஷ்டான ஜன்னியமனத்தூய்மை

யைப்போல, ஈண்டும், பூர்வ இராமாயணத்திற் காட்டப்பட்டதத்தம் வருணாசிர மத்திற்குத்தகுதியாய நிஷ்காமதருமானுஷ்டானஜன்னியமனத்தூய்மை அறியும் வேட்கையையுண்டாக்கும் வாயிலாகக்காரணமெனப் பூர்வோத்தர இராமாயணங் கட்குஹேதுஹேதுவுடைமைச்சம்பந்தத்தைக்காண்பித்துக்கொண்டு சர்வானர்த்த நிவிருத்திவடிவவேறுபிரயோஜனத்தைக்கூறுகின்றார்:-தருமதத்துவஞான அனுஷ்டானங்களாகிய, ஞானாதிகாரங்களையடைவிக்கும் ஈசுர ஆராதனைகளில்கதையே யுபாயம் என்நூலின்கண்ணே அந்தப்பூர்வ இராமாயணக்கிரந்தம்கதையுபாயமாம். அநேககாண்டங்களோடுகூடிய அவற்றை ஆதியில்விசாரித்து அதனர்த்தானுஷ்டானத்தி லதிகாரத்தையடைந்து எவ்வதிகாரியானவன் இவ்வியம்பும் ஆறுபிர கரணரூபமோக்ஷோபாயங்களை ஆராய்கின்றனனோ, பிரஞ்ஞையால் காமகரும வாசனை அஞ்ஞானபீஜங்களையெரித்த அவன், மறுபடியும்ஜன்மாதிதுக்கத்தை யடைவதில்லை; முக்தனேயாகின்றான். இந்த 56,000ங்கிரந்தவடிவ இராமாயணத் தில், அநாதிகாலந்தொடங்கிப்பயின்ற இராகாதிதோஷத்தைக் கெடுக்குமாற்றலு டைமையின் மகாபலம்பொருந்திய இராமகதைவடிவமாகிய 24,000ங் கிரந்தவடிவ 6-காண்டங்களைமுதலியற்றி, வணக்கமுடையவனும், மதிமானும், திருவருள்பெற விரும்பியவனும், சீடனும் ஆகியபரத்வாஜன்பொருட்டு, ஒரேகொண்டுநிறுவிவிளக் கும் ஆற்றலுடையமுக்கியசிடனையுடையயாம்திருவருள்புரிவதில்மிகவும் ஒருமை யுடையவராய்க்கடலானது யாசகனுக்கு இரத்தினத்தைக் கொடுப்பதேபோலக் கொடுத்தேம். பின்பொருகாலத்தில் அறிவின்மிக்கவனாகியபரத்வாஜனால், எம் மிடத்தினின்றுமடைந்த இப்பூர்வராமாயணமானதுமேருகிரியின்பாலுள்ள ஒரு ஆரண்யத்தில்வீற்றருளியிருந்த ஸ்ரீபிரஹ்மாவின் சந்நிதியிற்கீர்த்திக்கப்பட்டது. அதைக்கேட்டுச்சந்தோஷித்தபகவானாகிய உலகபிதாமகரென்னும் ஸ்ரீபிரஹ்மா வானவர், வரமுன்னிலையால்உலகைக்காக்குஞ்சாதனமாகியமோக்ஷசாஸ்திரத்தைச் செய்விக்கவேண்டுமென்னும்பெருங்கருத்துடையராகி அந்தப்பரத்வாஜனைப்பார்த்துஹேமைந்த! நீவரம்வேண்டிக்கொள்ளென்றனர். நமதுபரத்வாஜனும், ஹே பகவன்! வந்தவைகட்கும், வருபவைகட்கும் ஈசுரரே! பூர்வ இராமாயண அர்த்தா னுஷ்டானஜன்னிய சித்தநற்றாய்மையையடைந்த இப்போது, எதனாலிம்முமு க்ஷுக்கள்சமுசாரதுக்கத்தினின்றும்விடுபடுவார்களோ அதைத் திருவாய்மலர்ந் தருளுவீராக என்னும் வரத்தைத்தான், அடியேனுக்குத் தேவரீரைவேண்டிக் கொள்ள இச்சையாயிருக்கின்றதென்றனன். எனக்கேட்ட ஸ்ரீபிரஹ்மதேவர் :— நீவினவிய இப்பொருளில் உனதாசிரியராகியவான்மீகரையேமிகமுயல்வுடன்விரை வில்பிரார்த்தித்துக்கொள்ளுவாயாக. எக்காரணத்தால் அவரானே இப்புகழ்ச்சி பொருந்திய இராமாயணம்தொடங்கப்பட்டதோ, இன்னும்முடிவுபெறுத்தப்பட வில்லையோ, முற்றினும்முடிந்தபின்னர் அதனைக்கேட்பில் "திரைகடற்சேதுவைத் திகழ்கணாற்கண்டு, பிரமஹத்தியினின்றுபெரிதுநீங்குவனே" என்பதாதிஸ்மிருதி களில்வெளிப்படையாய அநந்தகுணசாலியாகியசேதுவினாற்கடலினக்கரையடை வதேபோலநரர்கள்சகலமோகத்தையும்தாண்டிவிடுவார்கள் என்பதாகப் பரத்து வாஜனைப்பார்த்துக்கூறிச்சகலத்தையும்சிருட்டித்தவராகிய அந்தப்பரமேஷ்டியான வர் நமதுபரத்வாஜனோடு எமதாசிரமத்தை வந்தடைந்தனர். உடனே அந்தப்

பிரஹ்மதேவரானவர் விரைவில் எம்மால் அருக்கியபாத்தியாதிகளானே இனிது பூஜிக்கப்பட்டனர். பின், சிருஷ்டியில் இரஜோகுணப்பிரதானராயினும் உலகைக் காக்கவேண்டுமென்றுண்டாய தயையோடுகூடியிருத்தலின் மகாசத்துவகுண சம்பன்னரும் தயையினுனே சர்வப்பிராணிகட்குமிதத்தைவிரும்பியவரும் ஆகிய பிறப்பில்லாத அவர் எம்மைநோக்கி, ஹேமேன்மைதங்கியமுனிவரே ! நீர் ஸ்ரீஇராம சுபாவத்தையினிதுதுதித்து, விரிவாகியநூலைச்செய்து மிகக்கிலேசமடைந்திருக்கின்றமையானே அந்தப்புகழ்பெற்றநூலைமுடிவுவரைபரித்தியாகிக்கலாகாது அவசியம்முழுவதையுமேசெய்துமுடிக்கவேண்டும். இந்நூலினுலே இவ்வுலகமானது இச்சமுசாரசங்கடத்தினின்றும், கடத்திவைக்கும் ஓடத்தால்விரைவில்கடலினின்றுங்கடப்பதேபோலும் ஞானேதயசமகாலத்திலேயேசமுசாரப்பற்றேயில்லாமல் இனிதுகடக்கும். அற்றேல் ஓடத்தால்கடல்கடத்தலேவெளிப்படையின்றும் இலதாகவேதிருட்டாந்தமெங்ஙனம்மணம்பெறுமெனின், அற்றுயின், கடலில்வீழ்ந்தவனை ஓடத்தால்காத்தலையே ஈண்டுக்கடத்தல் எனக்கொள்க, விரைவில் என்னும் பதச்சுவையாலிதுபொருத்தமுடைத்தாம். ஆகையால்பரத்வாஜன்வாயிலாய் ஆணையிடுதலும்தூதுசொல்வித்தலும்கூடுமாயினும் இப்பொருளைக் கூறும்பொருட்டே உலகம்புகழும்யாமேவந்தோம்; நீர் உலக இதத்தின்பொருட்டுச் சாஸ்திரத்தைச் செய்வீராக எனக்கூறி, ஸ்ரீபிரஹ்மதேவரதுதிருவடிப்பரிசத்தானேபுண்ணியதமத்தையடைந்த எமது ஆசிரமத்தினின்றும் ஒருகணத்தில்மறைந்துசென்றனர். அவர் சென்றது முகூர்த்தமெழுந்தபேரலையானது கடலின்மறைந்ததுபோலுமிருந்தது. அப்பகவான்சென்றபின்புயாம் ஆச்சரியத்தை யடைந்திருந்து மீண்டும் ஆண்டுப் பரத்வாஜனை இளைப்பாறியமதியானேகேட்டேம். இளைப்பாறியமதியானே என்றமையால், பிரஹ்மாவின் வரவாலுண்டாய மகிழ்ச்சி ஆச்சரியத்தாற் சலனமுற்ற மனத்தை யுடைத்தாயிருந்தமையின், பிரஹ்மாவினது வாக்கைப் பொருளால்நிச்சயிக்கவில்லைபோலும் அதனானேகேட்டேமென்றனர்.

ஹேபரத்வாஜ ! ஸ்ரீபிரஹ்மதேவரானே இஃதென்னே யுரைக்கப்பட்டது. விரைவில் எமக்குக்கூறுதியெனக்கேட்ப மீண்டும்பரத்வாஜனுல் இஃதியம்பப்பட்டது:—முன்னர்க்கதையுபாயமாய இராமாயணஞ்செய்ததேபோலக்குடும்பக்கடல் கடத்திவைக்கும் மோக்ஷ உபாய இராமாயணத்தையும் எல்லாவுலகத்தாருக்கும் இதத்தின்பொருட்டுச்செய்யவேண்டுமென்று பிரஹ்மதேவரானே கூறப்பட்டது என்பதாம். ஹேபகவன்! இச்சம்சாரசங்கடத்தில் ஸ்ரீராமரும், மகாமனத்தையுடையபரதரும், சத்ருக்நரும், இலக்குமணரும், புகழ்பெற்றசீதையம்மனும், ஸ்ரீராமரைப்பின்றெடர்ந்திருந்தமந்திரிமைந்தர்களாகியமகாமதிமான்களும், தசரதரும், அவர்பரிவாரமும் எங்ஙனம்விவகரித்துக்கொண்டிருந்தனர் ? அஞ்ஞானிகளாய்மற்றையரைப்போற்சோகித்துக்கொண்டா ? அல்லது ஜீவன்முக்தரைப் போலவா? என்பதையருளவேண்டும். அவர்கள்துக்கமடையாமற்சுகிகளாயிருந்தவிதத்தை அடியேனுக்கு என்மதியிற்படும்படிவெளிப்படையாயருள்செய்யின், அவ்வாறே அடியேனும்தங்களுபதேசசிரவணத்தானே கிருதகிருத்தியத்தன்மையை யடைந்ததிருக்கூட்டங்களுடனேசுகியாயுலவித்திரிவேன் எனப்பரத்வாஜனுல்ஹே அரசர்க்கிந்திரரே ! உபதேசிக்கவேண்டுமெனவிதிப்படிபத்திரபுஷ்பபலாதிகளால்

பூசித்துத்துதித்துப்பிரார்த்தித்துக்கொள்ளப்பட்டோம். பின்விபுவாகியபிரஹ்ம தேவராணையை அவ்வாறேசெய்யமுயன்றுகூறத்தொடங்கினேம். குழந்தையாகிய பரத்வாசனே! கேட்பாயாக! நீகேட்டபடிகூறுகின்றேன், அதைச்சிரவணித்தமாத் திரையானே ஆன்மதத்துவத்தையறியாதமலமானது அத்தியந்தந்தூரத்தில் ஓடு மாறுசெய்துவிடலாம். யாவற்றினும்பொய்யென்னும்புந்தியானேபற்றின்றிச்செந் தாமரைக்கண்ணராகியஸ்ரீராமபிரான்சுகியாயிருந்துவிவகரித்ததுபோலவே, பிராஞ் ஞனுகிய நீயும்விவகரிப்பாயாக. அபரிச்சின்னவஸ்துமனதிற்புகுதலானே பெரு மனத்தையுடையவராகிய இலக்குமணர், பரதர், சத்ருக்நர், கௌசலை, சுமித்திரை சீதை, தசரதர் அவர்தம்பரிவாரம், இராமசகாயர்களாகியகிருதாஸ்திரன், அவி ரோதனென்போர்யாவரும் எதன்பின்னறியவேண்டியதயலொன்றெஞ்சாதோ அத் தகையமுடிவானமெய்ஞ்ஞானத்தையடைந்தனர். ஸ்ரீவசிஷ்டரும், வாமதேவரும், மந்திரிமாரெண்மரும், அயலரும் அவ்வாறேயடைந்தனர். திருஷ்டி, ஜயந்தன், பாசன், உண்மையுரைக்கும்விஜயன், விபீஷணன், சுஷேணன், அனுமான், இந்திர ஜித்து, என்பவர் எட்டுமந்திரிமாரென எண்ணப்படுவர். இந்திரஜித்தென்பவன் வேறேயாயசுக்கிரீவனுடையமந்திரியெனப்படுவன். இவர்யாவரும் உள்ளேசாந்த ராகி இராகமற்றமனத்தராய் வெளியில்பிராரப்தப்படிகிடைத்தவற்றின்கண்மகிழ் வுடையராய், மகான்மாக்களாய்ச்சீவன்முக்தராய்வாழ்ந்தனர். இவர்கள், ஹோம முதலியசிரௌதகருமங்களையும், தானமுதலியஸ்மார்த்தகருமங்களையும்கொள்ளல் தள்ளன்முதலிய அவ்வக்காலத்திற்குத்தக்க இலௌகிகவிவகாரங்களையும், நினை தலையும் மேற்கூறிய இரண்டன் ஆலோசனையையும், செய்ததேபோலச்செய்து கொண்டுநீவாழ்வையாயின்மைந்த! இச்சங்கடத்தினின்றும் முக்தனே ஆவாய். கரையற்றதுடும்பக்கடலில்விழுந்தவன் இவ்வுயர்வாகிய ஊகத்தையடைவனுயின், மிகுந்தசத்வகுணமுடையவனுய், சோகத்தையுமடையான், தைன்னியத்தையு மடையான்யாதொருவிதமானதாபமுமில்லாதவனுகிநித்தியதிருப்தனுய்நிலைப்பன்.

2-வது ஆரம்பபீடிகை வருணனம் முற்றும்.

---

## 3-வது தீர்த்தயாத்திரை வருணனம்.

இப்போது, திருசியநீக்க உபாயமும், வாசனையின் பேதஇலக்கணமும், ஸ்ரீராமரது தீர்த்தயாத்திரையும் விஸ்தாரமாக இச்சருக்கத்தில் வருணிக்கப் படும்:—ஸ்ரீ இராமர் முதலியோர் ஜீவன்முக்தராய் விவகரித்ததுபோலவே நீயும் விவகரிப்பாயாக எனக்கூறப்பட்டது; ஜீவன் முக்தஸ்திதி யடைவினுபாயத்தை, ஸ்ரீராமருக்கு அதுகிடைத்தமுறை கூறுவதைக்கேட்கும் வாயிலாகவே, அறியும் வேட்கையராகிய பரத்வாஜர் வினவுகின்றார்:— ஸ்ரீ இராகவரை வருணிப்பதற் சாக முன்னிலையாய் முக்கியமாக்கி ஜீவன்முக்தஸ்திதியை முறையாக ஹே பிரஹ்மத்தையுணர்ந்த பெருமையரே! கூறுவீராக, அதைக்கேட்டுப்பின் அடி யேன் நித்தியம் சுகியாயுலவுவேன். அல்லது, ஸ்ரீ இராகவருக்கு முறையாக ஜீவன் முக்தாவஸ்தையைக் கற்பித்து அடியேனுக்கு முதலினின்றும் மொழிவீ

ராக; அம்முறையானே யான் நித்தியம்சுகியாய் வாழ்வேன். அல்லது, ஸ்ரீ இராகவரை இச்சம்வாதகதையில் வினவுபவராகவும், ஸ்ரீ வசிஷ்டரை யுபதேசிப்பவராகவும் ஆக்கிக்கூறுவீராக. ஆகவே ஜனக யாஞ்ஞவற்கியரைக் கற்பித்துச் சுருதிதானுகவே சம்வாதகதையினுனே தத்துவத்தை யுணர்த்தியதே போல, தேவரீரும் உணர்த்தி யருளுவீராக. இவ்வாருகவே ஈண்டுத்தத்துவஞானிகளாகக் கற்பிக்கப்பட்ட தசரதர் முதலியோர்கட்குப் பூர்வராமாயணத்தில் மூடசரியை, முக்தியின்மை காணப்படுவதிலும், நித்தியமுக்தராகிய ஸ்ரீ இராமருக்கும், சுருதி விருத்தமாகிய சாபநிமித்தமாய அறியாமை முதலியவற்றை வருணிப்பதிலும், குற்றமின்ரும். அநாதியாயஜீவனுக்குப் பிரஹ்மத்தின் அபேதத்தையுணர்த்தும் பொருட்டுச் சுருதியிற் பிரஹ்மத்திற்கே காரியவுபாதியிற்புகுதலானே இடையில் வந்த ஜீவபாவகற்பனையைப்போல விரோதமில்லாமை பொருந்துதலின். இவ்வாறு வினவப்பட்ட ஸ்ரீ வான்மீகி பகவான் இலக்கணம், சொரூபம், சாதனம், பலம் என்பவற்ருனே ஜீவன்முக்தியின்நிலைமையை விரிவாகக்கூற இச்சித்தவராகி முதலில் எளிதாகத் தெரிந்துகொள்ளும்பொருட்டுச் சுருக்கி முக்தியிலக்கண சொரூபங்களைக் காண்பிக்கின்ருர்:—ஹே நல்லமைந்த! ஆகாயத்தில் நீலம்போல முற்றினும் அசம்பவமாயதும், கற்பனையானுண்டாகியதும் ஆகிய உலகசம்பந்தியத்தியாசவடிவ இம்மயலை, இதன்மூலமாகிய அவித்தைவாசனை யழிவானே மீண்டுமெண்ணுமை யுண்டாகுமாறு மறத்தலே யாவற்றினும் மேலாகிய முக்தியிலக்கணமும், சொரூபமுமாம் எனப் பிரமாண அனுபவங்களானே துணிந்திருக்கின்றேன். பரோக்ஷஞானிகட்கும் துயிலிலும் நிருவிகற்பசமாதியிலும் திருசியத்தின் மறப்பிருந்தபோதினும் அது மீட்டுமெண்ணமில்லாமையாகாதாம். அல்லது மீண்டும் நினைத்தல் எம்மனத்தால் அது மீட்டுமெண்ணமாம், அது எதன் கண்ணின்ரே அது மீட்டுமெண்ணமில்லாமையாம். மறப்பு என்பது நினைப்பின்மையாம்; துவைதத்தோற்றமாத்திரமுமில்லாதிருத்தலென்பதாம். அல்லது மறந்திருத்தலேபோல மறந்திருத்தலாம், அனுபவிப்பவன்பால் மறந்தவிடயமிருந்தபோதினும் தோற்ருததேபோலச் சைதன்யத்தின்கண்ணே திருசியமிருந்தபோதினும் தோற்ருதிருக்கும்; ஆயினென்பரமார்த்த சத்தியமாகிய திருசியத்திற்கே சாங்கியர்கொண்ட முத்தியைப்போலத் தோற்ருமைமாத்திரமாயிருத்தலா முத்தியெனின்? அல்லவாம், அத்தியஸ்தமாகிய அதுதோற்ருமையே முத்தியாமென்க. சமஸ்காரத்தா லஃது துண்டாகாமையின் யாங்ஙனம் அதற்கு மயலாந்தன்மையெனின்? பூர்வபூர்வ ஜகத்துவிவகாரத்தா லுண்டாய சமஸ்காரத்தால் நிலைபெறல் கூடுமென்றுணர்க. அற்றேலாயின், தோடத்தா லுண்டாகாமையானும், அதிஷ்டான மின்மையானும் மயற்றன்மைகூடாதெனின்? ஆகாயத்தில் வர்ணம்போலுண்டாயதென்க. தூரஆராய்ச்சியின்மைத்தோடத்தானே ஆகாசவர்ணமயலுண்டாவதேபோல அவித்தைத்தோடத்தால் பிரஹ்மத்தின்கண்ணே உலகமயற்கூடுமென்க. எனவே, முற்றினுந்திருசியத்தைமாற்றுவதாம்மொழிந்த இவ்விலக்கணம், அதனுற் குறிப்பிக்கப்பட்ட சின்மாத்திரநிலைபேறு சொரூபமாம். துணிந்திருக்கின்றேன் என்பதனுனே அவைதமதனுபூதியினுனே துணியப்பெற்றனவெனக் காண்பிக்கப்பட்டன, அவ்வாருயின் நம்மனோரால் அவையேனனுப

விக்கப்படவில்லையெனின் கூறப்படுகின்றது.—திருசியத்தினது அத்தியந்தாபாவ போதமாகிய பாதமில்லாமல், கூறிய இலக்கணமுஞ்சொரூபமும் எப்போதுமெங்கும் அனுபவிக்கமுடியாவாம். அனுபவமில்லாமை காலத்தினும் தேயத்தினும் வியாபகமாமெனக் காட்டும்பொருட்டு எப்போதுமெங்கு மென்றதாம். ஆயின் திருசியபாதமானது எவ்வேதுவிலாமென் றுசங்கையுண்டாக அதைக்கூறுகின்றார்:—சர்வஜகத்திற்கும் அதிஷ்டான பிரத்தியக்கபின்ன ஆன்மதத்துவசாக்ஷாத்காரத்தானே அஃதாம் என்பதனானே அச்சாக்ஷாத்காரத்தைத் தேடவேண்டும்; உபாயத்தாலதைச் சாதிக்கவேண்டு மென்பதாம். ஆயினதற்கென்ன உபாயமெனின் கூறுகின்றார்:—அது இச்சாஸ்திரத்தையுணரின் அவசியம் சம்பவிக்கும் அதன்பொருட்டே இஃதுண்டாயதாம், தத்துவத்துணிபுண்டாகும்வரை சாஸ்திரத்தைச் சிரவணஞ்செய்குவாயாயின் தத்துவத்தையடைவாய் வேறுவிதமாய் முடியாதாம். கூறியபொருளையே மிகவெளிப்படையாகக் கூறுகின்றார்:—ஹே பாவமற்ற குழந்தாய்! உலகமயலாகிப இது காணப்பட்டபோதினும், இந்நூலிற்காண்பித்தபடி யாராய்தலினானே யாதொருதுயரமுமில்லாமல் ஆகாயத்தில் வருணத்தைப்போலும் இல்லவேயில்லையென அனுபவிக்கலாம். அனுபவிக்கலாமெனப்பட்டதே, அனுபவம் ஆன்மசைதன்யமேயா அல்லது அயலா, அயலென்பது கூடாது, ஏனெனின், அறிவிற்கு வேறாயது ஜடமாய் விடயமாதலின் அனுபவமென்பது பொருந்தாதாம். ஆன்மாவேயெனின், அது முன்னரேயிருக்கின்றதாதலின் சாஸ்திரத்தாலாகவேண்டியதென்னுளது? என வினவக் கூறுகின்றார்:—உண்மையே, ஆன்மாவேயனுபவமாயினும் இது திருசியத்தோடு கூடியிருத்தலின் அவ்வனுபவமாகாதாம்; மற்றோ, விருத்திரூபமாகிய ஆன்மதத்துவ சாக்ஷாத்காரபோதத்தானே அவித்தையினழிவால், அதனானுண்டாய திருசிய நீக்கமானது, திருசியம் முக்காலத்திலும் இல்லையென்பதாக மனத்திற்குக்கிடைப்பின் நித்தியசித்த ஆன்மவடிவமாக இருப்பினும் மேலாகிய மோக்ஷஆனந்தமானது தத்துவஞானத்தாலுண்டாயதேபோல ஆகின்றதாமெனக்கேவலம் அதன் வாயிலாகச் சொரூபபூதமாயினும் அனுபவம் சாஸ்திரபலமாம். அற்றேல், வேறு சாஸ்திரந் தெரிவித்த உபாயங்களானே முக்தியேனுண்டாகமாட்டாது எனின் கூறுகின்றார்:—கூறிய உபாயத்தைக் கவராவிடின் பிறப்பிலாத அநாதியஞ்ஞானத்தையுடையவரும், வெவ்வேறுவகையாய அனன்ம சாஸ்திரக்குழிகளிற் புரளுபவரும், இச்சையையுடைய குருகெள் விழுவதற்கேதுவாதலின் குழியெனப்படும் அவ்வச்சாத்திரமுணர்த்திய உபாயங்களானே இகபரலோகவிடயவிருப்பத்தானே முயல்பவரும், அதனானே, அதனை யனுபவிக்கும்பொருட்டு, மீண்டுமீண்டு இச்சம்சாரத்தில் பிறப்பெடுப்பவரும், ஆகிய கீழ்மக்கட்கு அளவில்லாத பிரஹ்ம கற்பங்களானும், இளைப்பாறுஞ் சுகமானதுண்டாகாதாம். அநாதியஞ்ஞானமானது, ஞானத்தினும் வேறாகிய ஆயிரஞ் சாதனத்தானும் நீங்கமாட்டாதென்பது கருத்தாம். அற்றேல், உபாசனைமுதலியவேறுபாயங்களானே சாதிக்கப்படுவனவாகிய சாலோக்கியமுதலிய அன்னியமோக்ஷங்களும் பிரசித்தங்களாம் அவற்றாலவர்கட்கு எங்ஙனம் ஆநந்தமுண்டாகாமற்போகும் எனின் கூறுகின்றார்:—ஹே பிராஹ்மணபுத்திர! பிறப்பிற்குவிரையாய வாசனைகளின் சேடமின்றியயாதொரு

பரித்தியாகமுளதோ ; அதாவது, மூலத்தைக் கெடுத்தலானே முற்றினுங்கெடுத்தல்யாதோ, அது முக்கிய மோக்ஷமாம். மோக்ஷசப்தத்திலிருக்கும் முச என்னும் பகுதிக்குப் பந்தநீக்கத்தில் இடுகுறித்தன்மையுண்மையின் வாசனைகளே முக்கியபந்தமாதலின், சாலோக்கியாதிகளில் அவ்வாசனை நீக்கமில்லாமையின், மோக்ஷசப்தங் கௌணமாம். அந்த முக்கியமே அவித்தை முதலிய மலம் நீங்கியோரா லடையப்படும், மற்றைபரான் முடியாதாம் ; கருமங்களானும், உபாசனைகளானும், சிரவணாதிகளானும், நாடோறும் மனநற்றாய்மையே, சர்வவாசனைகளும் அழியும்வரை, சாதனமுறையாமெனவுணர்க. அல்லேல், வாசனைநீங்கிய போதினும் அதனேதுவாகிய மனமிருத்தலின் மீண்டும் வாசனையுண்டாம், உண்டாகவே பந்தமுமாமெனின்? கூறுகின்றார் :—சிதசந்ததியானது சென்றொழியவே பனிக்கணம்பட்டழிவதேபோல, வாசனையானது கழிந்தொழியவே, வாசனையின் கூட்டமே மனமாதலின், விரைவாகவே மனங்கெடும். மனம் நஷ்டமாயினும், தூலதேகமே பந்தமாக நிலைபெறுமேயெனின் ? கூறுகின்றார் :—பூதக்கூட்டத்தாலாகிய பிராணிகளாகிய பறவைகட்குக், கூண்டுபோன்ற இத்தேகமும் வாசனையால், மெல்லியதாகி யுட்பிரவேசித்த நூலினாலே, முத்துக்கூட்டம் நிலைப்பதே போல நிலைக்கும் ; ஆதலின், வாசனையழியவே அத்தேகமும் நீங்கிவிடும். இவ்வாறு, உபோற்காதத்தானே பரமுக்தியை வருணித்து, பிரகரணத்திற்றுதிக்கப்பட்ட ஜீவன் முக்தியை விளம்பும் வேட்கையராகி அதன்பொருட்டு வாசனையின் இருவகையை வழங்குகின்றார் :—சுத்தம் மலினம் என வாசனை இருவகையாக இயம்பப்படும், மலினமானது பிறப்பிற்குக் காரணமாம், சுத்தமானது பிறப்பை யறுப்பதாம். அவற்றுள் மலினவாசனையானது, அஞ்ஞானத்தி னன்குபெருத்த ஆகாரத்தையுடையதாம், கன அகங்காரவியற்கையதாம், மீண்டும் மீண்டும் பிறப்பையுண்டாக்குவதாம் என்றுபெரியோராற் கூறப்படும். வாசனைவிரைகள் இனிதுமுளைப்பதற்கு அஞ்ஞானம்நல்லநிலமாம், அதன்கண்ணேவிடயத்தைச்சந்ததம்சிந்தித்தல்வடிவ அப்பியாசத்தால் விருத்தியடைந்த நல்லகனாகாரத்தையுடைய வாசனைவிரையாம். இராகத்வேடாதிகளானேவளர்தலால்நெருங்கிய அகங்காரம் நீர்தெளிக்கும் நிலமுடையவனாவன், அவனாலேயே அது விருத்தியடைவதாகி விரிந்துவிளங்குகின்றது. சுத்தவாசனையானது, மறுபிறப்பையுண்டாக்குமங்குரத்தைவிடுத்துவறுத்த விதைபோலிருப்பதும், அறியத்தக்கதை யறிந்ததாயும், தேகமிருக்கும்பொருட்டுத்தாங்கப்படுவதாயும் இருக்குமென இயம்புவர். விதையினுள்ளே சூக்குமமாகிய அங்குரங்களிருந்தே காலஞ்சலமுதலியவற்றின் சம்பந்தத்தால்முளைக்கின்றன, அதுபோல வாசனையின்கண்ணுள்ளடங்கிய ஜன்மபரம்பரைகளிருந்தேகாமகருமாதிநிமித்தவசத்தால்கிளம்புகின்றன. முற்றினுமில்லாததற்குச்சன்மஞ்சம்பவியாமையின் ஆண்டுத்தத்துவஞானத்தானே அவித்தைநிலஞ்சுடப்படுதலின்அதனுள்ளடங்கியபிறப்பங்குரங்கெடினும்தனதுபிறரதுபிராரப்தத்தானேதடைப்பட்ட, வறுத்தவிதைபோலும்தேகத்தைத்தாங்குவதின்மாத்திரம் பயனுடையதாயவாசனை எஞ்சும் அதுவேசுத்தமாம். கூறியபொருளையே வெளிப்படுத்தல்.—ஜீவன்முக்தர்களாகியதேகிகளிடத்தில் தேகமிருக்கும்வரை மீண்டும் பிறப்பைத் தாராததாகிய சுத்தவாசனையானது, சுழன்றசக்கரத்திற் சுழற்சியிருப்ப

தேபோலவிருக்கும். தேகத்தைத்தாங்குங்காரியத்தானே அவர்களிடத்தும்வாசனை யின் இருப்பு அனுமிக்கப்படுமென்பதுகருத்தாம். பலத்தோடுகூடிவியந்தஜீவன் முக்தியை ஆசிரயத்தோடுமறைதல்:—மிருதியாகச் சுத்தவாதனையுடையவர்கள் மீண்டும்பிறப்பாகிய அநர்த்தத்தையடைவதில்லை, அவர்களே, மகாமதியுடையவர் கள், ஜீவன்முக்தர்கள், அறியவேண்டியதையறிந்தவர்கள், எனக்கூறப்படுவார் கள், படவே, தத்துவஞானத்தால்தகிக்கப்பட்ட பிறப்பின்மூலையாற்றலையுடைய வாசனைமாத்திரத்தானே தரித்தசரீரத்தன்மை, ஜீவன்முக்த இலக்கணமென்பது துணிபாம். அதன்சாதனநிரூபணத்தைப் பிரதிஞ்ஞைசெய்கின்றார்:—அத்தகைய ஜீவன்முக்திபதத்தைமகாமதியையுடைய ஸ்ரீராமர் எச்சாதனமுறையானேசாதித் தாரோ அதனைநினக்குக்கூறுகின்றேன்கேட்குதி, கேட்பின், ஜனனமரணமேமுத லாகவுள்ள எல்லா அநர்த்தங்களும்நீங்குவதாகியபயன்கிடைக்கும். கூறியபொரு ளையே வெளிப்படுத்திக்கொண்டு வேறுபயனைக் கூறுகின்றார்:—ஹே பரத்வாஜ! ஹேமகாமதியுடையோய்! இச்சுயமாகிய ஸ்ரீராமர்முறையைக்கூறுகின்றேன்கேட் குதி, கேட்பின், அதனானேயே எப்போதும்யாவற்றையுமேயுணர்வாய், இதனானே ஒன்றனுணர்வானே எல்லாவற்றினுணர்வுமாமென்பதும் அதன்பயனுயதாம். எங் கும்பயமின்றிய செந்தாமரைக்கண்ணராகிய ஸ்ரீராமர்பாடசாலையினின்றும்கிளம்பி வீடுவந்துசேர்ந்துநாட்களைவிளையாட்டாற்கழித்துவந்தனர். பிரஹ்மசரிய ஆசிர மத்திற்குத்தக்க குருகுலவாசத்தினின்றும் கிளம்பியென்றதனானே சர்வவித்தைக ளின்தானங்களையும் கவர்ந்ததன்பின்னெனத் தெரிகின்றது. சுரமுதலியவற்றுச் சோகமின்றியவராய்ப் பிரஜைகளிருக்கும்படியாகத் தசரதர் பூமியைக்காத்துக் கொண்டிருக்குங்காலத்தில் ஈண்டு இராஜ்யத்தின் இனிமையானே பிரஜைகட்குச் சுரமுதலியபீடையுமில்லையாயின் அன்னியபீடைகளில்லாமலிருந்தனவென இயம் பவுமாவேண்டுமென்பதைவிளக்கற்கே, சுரமுதலியவற்று என்றதாம். ஸ்ரீராம ருடையமனமானது, தீர்த்தங்கள்புண்ணிய ஆசிரமங்கள்முதலியவற்றைக்காண வேண்டுமென்னும்பேரவாவைப்பெரிதுமடைந்தது. அற்றேல், இவ்வத்தியாத்ம சாஸ்திரத்தில் தீர்த்தயாத்திரையை வருணித்தற்கும், இனிக்கூறப்படும் வேட்டை யைவருணித்தற்கும், யாதுசம்பந்தம்? ஸ்ரீ இராமசரித்திரமாதலினானே ஈண்டுவரு ணிக்கப்பட்டதென்பதுகூடாது; ஏனெனின், ஸ்ரீ இராமரது அவதாரத்தைவரு ணிக்கநேர்தலினானும், பூர்வ இராமாயணம்விளக்கப்போதலினானும் எனவினவின், ஈண்டுக்கூறப்படுகின்றதாவது, கதையினுபாயத்தை விசாரித்து என்பதன்கண் ணேதத்தம்வருணத்திற்குத்தக்க யாகாதிகருமத்தாலுண்டாய மனத்தூய்மையா னது பிரஹ்மவித்தையினதிகாரத்திலினிதுபொருந்துகின்றது என இயம்பப்பட் டது வயதுவித்தைமுதலியவைகிடையாமையின்யாவன்யாகாதியை அனுஷ்டிக்கச் சாமர்த்தியமில்லாதவனுவனோ அவனுக்குத் தீர்த்தயாத்திரை முதலியவற்றானும் யாகாதிபலமாகிய மனத்தூய்மையதிகாரம் ‘பூமிசம்பந்தமாய இந்நீர்மயயாகங்கள் தீர்த்தரூபங்களாக உண்டாக்கப்பட்டன.’ என்னும்வசனத்தானேசித்தமாம்; என் பதைக்குறிப்பிக்கும்பொருட்டுத்தீர்த்தயாத்திரையைவருணித்ததாம். இதனானே ஸ்ரீராமரைக்கிழவயதுடையவராக இனிதுகற்பித்து ஆன்மஜிஞ்ஞாசையைவருணி க்கவில்லை; கூறியபொருள்குறிப்பிக்கப்படாமற்போதலின். வேட்டையைவருணிப்

பதோ, கண்ட உற்சாகதரிசன அவாவும் ஆன்மஜிஞ்ஞாசைக்குத்தடையாதலின் அவ்வுற்சாகத்தையனுபவியாமல் அவ்விச்சையகலாவிடின் அதையனுபவித்தேனும் அஃதசாரமென்னுந்துணிபானே அவ்வாசையையகற்றித்தடையில்லாமல் சிரவணாதிகளில் நிலைபெற்றுநிற்றல்வேண்டும் என விசேடமாகத் தெரிந்துகொள்ளும்பொருட்டாமெனயாவுமேமணமுடைத்தாம். ஆண்டு ஒருகால் நற்குணங்கட்கிடமாகிய ஸ்ரீராகவர் இவ்வாறுகூறியபொருளைச் சிந்தித்துத்தந்தையினது நகமாகிய தாதுக்கள் நிறைந்தநவீனசரணகமலங்களை அன்னப்பக்ஷியைப்போலணைந்துவணங்கிக் கூறுவதாவது. தந்தையின்பால்வாழ்பவனுக்குத்தந்தையின்சந்நிதியில்தந்தையின் ஆணைவாயிலாகவேதரும அதிகாரமிருத்தலின் என்பதுகருத்தாம். ஹேநாதனே! ஹேதந்தையே! தீர்த்தங்களையும், தேவாலயங்களையும், முனிவர்வாழும்வனங்களையும், அவரதுபன்னகசாலைகளையும், காணும்பொருட்டு எனதுமனம்மிகவும்விரும்பியது. ஈண்டுநாதனே யென்றதுதமது பாதந்திரத்தைக் குறிப்பிக்கும்பொருட்டாம். உம்மால் எந்தயாசகனுவது இப்புவனத்தில் இச்சித்தவற்றையடைதலாற் சன்மானிக்கப்படாமற்போனனென்பதாக இல்லையாதலின், முதலதாகிய இவ்வெனதுபிரார்த்தனையைப்பலனுடையதாகச்செய்யவேண்டும். இவ்வாறுவேண்டிக்கொள்ளப்பட்ட அரசரானவர் ஸ்ரீவசிஷ்டபகவானோடும் ஆலோசனைசெய்து, முதல்முதல் வேண்டிக்கொண்ட ஸ்ரீராமரைப்போகுமாறே ஆஞ்ஞைதந்தனர், மைந்தன்பிரியும்துயரால் அங்கீகரித்திலரென்பதாகவில்லை. நல்லநக்ஷத்திரத்தோடுகூடியநாளில் ஸ்ரீ இராகவர்தம்பிமார்களோடும், மங்கள அலங்காரத்தோடுகூடிய திருமேனியையுடையவராகி, மறைபவர்களாலாசீர்வாதம் பண்ணப்பட்டமார்க்கமுடையவராகி, ஸ்ரீவசிஷ்டராலனுப்பப்பட்ட சாஸ்திரமுணர்ந்த பிராஹ்மணர்களோடுகூடியவராகி, மிகநேயத்தோடுகூடிய மேன்மைதங்கிய இராஜபுத்திரர்சிலரோடுகூடியவராகி, தாய்மார்களால் பன்முறைதழுவித்தழுவிச்செய்யப்பட்ட ஆசீர்வாதங்களோடு அலங்கரிக்கப்பட்டவராகி, தீர்த்தயாத்திரைசெய்யவேண்டுமென்னுமுயற்சியுடையவராகித்தமது அரண்மனையினின்றும்வெளிப்போந்தனர். போம்போழ்து, புரவாசிகளானேமுழக்கப்பட்ட அநேகவிதவாத்தியகோஷங்களோடுகூடியவராகியும், மலரிற்போலநகரமங்கையர்களது நேத்திரங்களாகிய சஞ்சலவண்டுக்கூட்டங்களான்மாந்தப்பட்டவராகியும், புரத்தருணியரதுதுவளுங்கரகமலங்கள்தூவியபொரிமாரிகளால், பனிக்கணங்களாற்பனிமலைபோலநிறைந்ததிருமேனியுடையவராகியும், விளங்கிக்கொண்டேபோனர். மறையவர்கூட்டத்தைத்தானமானாதிகளால் வயஞ்செய்துகொண்டும், பிரஜைகளினாசீர்வாதத்தை நலமுறச்செவிகொண்டும், திக்கின்முடிவுகளையும், ஜீரண ஆரண்யங்களையும்நோக்கிச்சுற்றிச்சுற்றிவந்தனர். தமது கோசலமண்டலத்தினின்றும்முறையாகத்தொடங்கிஸ்நான தானதவத்தியானவாயிலாக, நதிதீரங்கள், புண்ணியவனங்கள் புண்ணியஆசிரமங்கள் தேவாலயங்கள்பாலைவனங்கள், கிராமமுடிபுகளிலிருக்கும் கடற்கரைகள், மலைத்தோற்றங்கள், இந்துவிற்குச்சமானமாகியமந்தாகினி, நின்மலநீலோற்பலம்போன்ற யமுனை, சரசுவதி, சதத்துரு, சந்திரபாகை, ஐராவதி, வேணி, கிருஷ்ணையோடுகூடும் கிருஷ்ணவேணி, நிர்விந்தை, சரயு, சர்மண்வதி, விதஸ்தை, விபாசை, பாகுதை. பிரயாகை, நைமிஷம், தருமாரண்யம், கயை, ஸ்ரீ வாராணசி, ஸ்ரீசைலம், கேதாரம்,

புஷ்கரம், மானசம், முறையாயடைந்ததடாகங்கள், உத்தரமானசம், அயக்கிரீவ தீர்த்தம், மற்றுமநேகதீர்த்தங்கள், அக்கினிதீர்த்தம், மஹாதீர்த்தமாகிய இந்திரத்தியும்நசரசு, மற்றுமநேகந்தடாகங்கள், நதிகள், நதங்கள், மடுக்களின்கூட்டங்கள், ஸ்ரீகார்த்திகேயசுவாமி, சாளக்கிராமம், ஸ்ரீமகாவிஷ்ணு, 64 சிவாலயங்கள், 64 விஷ்ணுவாலயங்கள், நானாவித ஆச்சரியவிசித்திரநாற்கடற்கரைகள், விந்தியம், மந்திரம், இமாசலத்தலங்கள், கொடிவீடுகள், இராஜ இருடிகள், மகத்துக்களாகிய பிரஹ்ம இருடிகள், தேவர்கள், பிராஹ்மணர்கள், புனிதமாயும் மங்களமாயும்விளங்கும் ஆசிரமங்கள், முதலியயாவற்றையும்மிகவும் ஆதரவோடும் இனிதுநோக்கினர். முன்கண்டவைகளாயிருந்தபோதினும்திரும்புகையில்எதிர்ப்பட்டவைகளிடத்தில் உற்சாகத்தாலேனும், அவற்றின்மகிமையதிசயங்களை வெளிப்படுத்தும்பொருட்டேனும், மீண்டுமீண்டுஞ்சென்றுசென்றுதம்பிமார்களோடும் ஸ்ரீராகவர், 4 திக்குமுடிபுகளிலுள்ள பூமியின்கரையாவற்றிலும் சுற்றிச்சுற்றியுலவினர். ஆண்டாண்டுச்சந்தித்த அமரர், கின்னரர், மனுடர், முதலியோரானே பூஜிக்கப்பெற்றவராகி, ஜம்புத்தீவுவடிவமாய இச்சர்வபூமியையும் இனிதுகண்ணுற்றுதமது அயோத்திமாநகரை ஸ்ரீரகுநந்தனர், திசைகளில்விலாசமாகச்சென்ற பரமேசுரர் தமதுசிவலோகத்தையடைந்ததுபோல அடைந்தனர்.

3-வது தீர்த்தயாத்திரை வருணனம் முற்றிற்று.

---

## 4-வது தினவியவகார நிரூபணம்.

இப்போது தீர்த்தயாத்திரைசெய்துவந்த ஸ்ரீராமர்வீட்டில் நேயர்களோடு ஆநந்திப்பதும் வேட்டைமுதலியவிவகாரமும், வருணிக்கப்படும்:— ஸ்ரீராமர்புரவாசிகளால்புஷ்பாஞ்சலிமாரியால்நிறைக்கப்பட்டவராகி, ஸ்ரீமான்ஜயந்தனுகிய இந்திரன்மைந்தன்றனதுசுவர்க்கத்தையடைந்ததேபோலத்தமதரண்மனையையடைந்தனர். பின்னர்ப்பிதாவையும் ஸ்ரீவசிஷ்டரையும்மூத்தவர்களையும்பந்துக்களையும் பிராஹ்மணர்களையும்குலவிருத்தர்களையும்முதலில்யாத்திரைசெய்துவந்த ஸ்ரீராகவர்நமஸ்கரித்து, நேயர்களானும் தாயர்களானும்தந்தையானும் மறையவர்கூட்டத்தானும் அடிக்கடிதழுவப்பட்டுமெதிக்கத்தக்கநமஸ்காரம்பிரியவார்த்தைமுதலியவற்றை அவர்பாலொழுங்கிற்செலுத்தி ஸ்ரீராகவர் அடக்கமுடியாத அகமகிழ்வால் தேகப்பூரிப்பையும்மயிர்க்கூச்செறிதலையும் அடைந்தனர். அத்தசரதரது அரண்மனையில்தசரதர்மைந்தராகிய ஸ்ரீராமரதுமாதுர்யமாகியபிரியவாக்கியங்களானே பரஸ்பரம்ஜனங்கள்மகிழ்ந்து மிருதுவாகியவேணுகானத்தாற்போலும் திசைதிசைகளிற்சுழன்றுதிரிந்தனர், மகிழ்ச்சியாலுண்டாகியமாமோகத்தால்திக்குப்பிரமத்தையடைந்தனர், திசையிலுள்ளஜனங்கள் ஸ்ரீராமர்கூறும்பிரியமாகியகதைகளானே மகிழ்வுற்றவராய்ப் பரஸ்பரம்கூடி மகோற்சவத்தில்மிருதுவாகிய வேணுகானத்தால்விளையாடுபவர்போலச்சுழன்றுதிரிந்தனர். ஸ்ரீராமரது விஜயமகோற்சவமானது ஆனந்தமாகஎட்டுத்தினங்கொண்டாடப்பட்டது. சந்தோஷத்தாலுன்மத்தராகிய ஜனங்களால் மிகமேன்மையாகச்செய்யப்பட்ட கம்பீரமாகியகோலாகல ஆகுலமான்து எங்கும்நிறைந்தது இங்குமங்குங்கண்ட நானாவகையாய தேசாசாரங்களை பின்

குமங்கும்வருணித்துக்கொண்டுவீட்டிலேயே அதுமுதற்சுகமாக ஸ்ரீராகவர்வசித்து வந்தனர். அதிகாலையில்தினந்தினமெழுந்துவிதிப்படிசந்தியைச்செய்துகொலு மண்டபத்தில்வீற்றிருக்கும்இந்திரசமமாகியதமதுதந்தையைத்தரிசித்து,ஸ்ரீவசிஷ்டர் முதலியவரோடுமிருந்து மிகவும் விசித்திரத்தோடுகூடிய அத்தியாத்மஞானக் கதைகளானேமகிழ்ந்துதினத்தின் நான்காவதுபாகத்தில் தந்தையினதுகட்டளைப் படிபெருஞ்சேனையோடுகூடியவராகி வேட்டையின்விருப்பத்தால் காட்டுப்பன்றி காட்டெருமைமுதலியவற்றானேகலக்கமித்தகாட்டையடைந்து வேட்டையாடி வீட்டிற்குத்திரும்பிவந்துமுறையாகஸ்நாநாதிகளைச்செய்து மித்திரர்பந்துக்களோடும் அமுதுசெய்துநேயர்களோடும்பசியைநீக்குவர். ஸ்ரீராகவர் இலக்குமண சத்ருக்னர்களோடும் தீர்த்தயாத்திரையினின்றும் வந்தது முதற்கொண்டு, இவ்வாறு பெரும்பாலும்திருசாரமுடையவராய்த் தந்தையினது அரண்மனையில்பெருமகிழ்வோடும்வாழ்ந்துவந்தனர். பெரும்பாலுமென்றதுவேட்டைமுதலியவற்றிற்குச் செல்லுதல்செல்லாமைபற்றியாம். ஹே பாவமற்றவனே ! அரசர்கட்குத்தக்கவிவகாரத்தால்மனோகரமும், நல்லோருடைய உள்ளத்தில் சந்திரிகையைப்போலும் மகிழ்வைத்தருவதும், அதனானேயேபுகழத்தக்கதும், அமுதரசம்போல ஆற்றலுற்றதும், கோமளமும் ஒழுகாநின்ற அமுதரசம்போலுமாதுர்யமும், ஆகிய ஒழுக்கத்தானே ஸ்ரீராமர்தினங்களைநன்குகழித்துவந்தனர்.

4-வது தினவியவகார நிருபணம் முற்றிற்று.

---

## 5-வது இளைப்பை யியம்பல்.

இப்போது ஸ்ரீராமரது திருமேனியிலிருக்கும் இளைப்புமுதலியவற்றைத் தெரியப்படுத்தலும், அதன்காரணத்தையறியவேண்டுமென்னுமிச்சை அரசர்க்குண்டாதலும், ஸ்ரீவசிஷ்டர்கூறத்தொடங்கலும் கூறப்படும் ; இவ்வாறு ஸ்ரீராமருக்கு மனத்தூய்மையினுபாய அனுஷ்டான ஒழுக்கத்தைவருணித்து, அதன்பயனாகியவைராக்கியாதிசாதனசம்பத்தியைவிளம்பும் வேட்கையராய்த்தொடங்குகின்றார் :— ஸ்ரீரகுகுலதிலகராகிய சத்ருக்னரும் இலக்குமணரும் ஸ்ரீராமரைப்பின்றொடர்ந்திருப்ப, பரதரானவர்நித்தியம்பாட்டனார்வீட்டில்சுகமாகவசித்துக்கொண்டிருப்ப, இதனானேபூர்வராமாயணத்திற்கூறுவிடினும், சத்ருக்னரைவிட்டுப்பரதருக்குப்பாட்டனார்வீட்டிற்குச்செல்கையும், விவாகத்திற்குமுன்னர்வருகையும், கற்பிக்கப்படும் ; நித்தியமென்றதனாலும்முன்னரும் அநேகமுறை ஆண்டுப்பரதரது செல்கையும் இருப்பும் இருந்ததெனத்தெரிகின்றது. இவ்வெல்லாவுலகங்களையும் உள்ளவாறே அரசன்காப்பாற்றிக்கொண்டிருப்ப, மைந்தர்கட்குமணமகளையலங்கரிக்கும் விவாகப்பொருட்டுநாடோறும் மந்திரிமாரோடும் மகாப்பிரஞ்ஞையையுடையவரும் அறியவேண்டியதையறிந்தவரும் ஆகிய தசரதமகாராஜாவானவர் ஆலோசனைசெய்துகொண்டிருப்ப, தீர்த்தயாத்திரையை முடித்துவந்து தமதுவீட்டில்வசித்துக்கொண்டிருக்கும் ஸ்ரீராமர்தமக்குப்பதினேழுவயதுமுக்கால்வயதுநிகழ்ந்துகொண்டிருக்கும்போதுநாடோறும் சரத்காலத்தில் நின்மலமாகியதடாகமானது

குறைவதேபோல இளைத்துக்கொண்டேவந்தார். இளைத்தன்முதலியவை, வைராக்கிய சிந்தாதுக்கத்தைவெளிப்படுத்துவனவாம், குமாரருடையவிசாலநேத்திரத்தோடுகூடியவதனமானது, பக்குவமாகிமலர்ந்தவிதழோடுகூடிய வண்டுமாலைகள் சூழ்ந்த வெண்டாமரையைப்போலும் வெளுப்புற்றது. விசாலநேத்திரவிசிட்ட உவமானப்பொருட்டே வண்டின்மாலைகள்சூழ்ந்த என்றதாம். கபோலதலத்தைக்கரத்தாற்றாங்கிப்பத்மாசனத்தில் வீற்றிருந்துசிந்தைபரவசராகிமௌனியாகிச்சேட்டையற்றிருந்தனர். இளைத்தயாக்கையராய், சிந்தையோடுகூடியவராய், துக்கிதராய், மிகவுந்துன்புறுமுளத்தராய், எவரோடும் எதனையும் இயம்பாதவராய், சித்திரத்திலெழுதியபதுமைபோலும் ஆயினர். தாதர்களால்மீண்டும் மீண்டும் வேண்டிக்கொள்ளப்பட்டபின்னவசியம் செய்யத்தக்கதினுசாரத்தை மிகவும்மலினமுற்றமுககமலத்தையுடைய அவர் கஷ்டத்தோடுஞ்செய்தனர். குணகணங்களுக்கிடமாகிய அந்த ஸ்ரீராமரை, முற்கூறியசிந்தைமுதலிய குணவிசேஷணவிசிஷ்டமாகக் கண்டு அவரதுதம்பிமார்களும் அத்தசையையே யடைந்தனர். துக்கத்தோடும் இளைத்துவரும் அம்மைந்தரைநோக்கிப் பத்தினிமாரோடும்மகிபாலராகிய தசரதர் மிகவும்சிந்தாவசராகி, ஹே மைந்த ! நினக்குப்பெருஞ்சிந்தையுண்டானதென்னேயென அடிக்கடிமிகவும் அன்போடுகூடியமொழியினுனேகேட்டும் அவர்யாதொன்றுஞ்சொல்லவேயில்லை; சொல்லியும்பயனில்லையேயென்னும் நிச்சயமிருத்தலின் என்பதுகருத்தாம். தந்தையின்மடிமீதிருந்த தாமரை இதழ்போன்ற நேத்திரமுடைய ஸ்ரீராமர் ஹே தந்தையே! எனக்குயாதொரு துக்கமுமில்லையெனக்கூறி மௌனமாகவேயிருந்தனர். துக்கம்தங்களாற்பரிகரிக்கமுடியாதென்பதுகருத்தாதலின்பொய்ம்மையின்றும்என்க. அதன்பின்பு தசரதர், சர்வகாரியங்களையுமுணர்ந்தவரும் வாகீசராயுமிராநின்ற ஸ்ரீவசிஷ்டபகவானை இராமன் என்றுக்கிதனுகியிருக்கின்றான் அதற்கென்னநிமித்தம், எனக்கேட்டனர். ஸ்ரீவசிஷ்டர்தியானித்து அரசரைநோக்கி, ஹே ஸ்ரீமந் மகாராஜாவே! இதன்கண்ணேகாரணமிருக்கின்றது நீர் துயரப்படவேண்டாம் என்றனர். ஸ்ரீராமரதுசிந்தைக்கு வருஞ்சுபத்தைக்குறிப்பிக்கும்பொருட்டு ஸ்ரீமந்னெனவிளித்ததாம். சற்புருடர் அற்பகாரணவசத்தாலதிகக்கோபத்தையும், துக்கத்தில்மூழ்குதலையும், மிகமகிழ்வையும், அடையார், ஜகத்தின்கண்ணே ஹே பூமிபாலகரே! சிருஷ்டிபலவயத்தானும் பிரளயவேகத்தானும் அல்லாமல் மகாபூதங்களாகிய பிருதிவிமுதலானவைவிருத்தி இலயவிகாரத்தையடையமாட்டாவன்றே.

5-வது இளைப்பையியம்பல் முற்றிற்று.

---

## 6-வது ஸ்ரீவிசுவாமித்திரரது வருகை.

இப்போது ஸ்ரீவிசுவாமித்திரரதுவருகையும், அரசர்விதிப்படி அவரைப் பூசித்துமிகவும்மகிழ்வானே காரியப்பிரதிஞ்ஞைசெய்தலும் வருணிக்கப்படும் :— முனிநாதராகியஸ்ரீவசிஷ்டபகவானால் இவ்வாறுபொதுவாய்க்கூறப்படவே, விசேஷசந்தேகத்தோடுங்கூடி அதைநீக்கச் சிறிதுகாலமாலோசனையோடும் துக்கிதராய்

மௌனியாயரசரிருந்தனர். எல்லாராஜக்கிருகங்களிலுமுள்ள இராணிமார்களனை
வரும் மிகவுந்துக்கமுடையவராகி எங்கும் ஸ்ரீராமரது சேஷ்டைவிசேடக்குறிக
ளானேவைராக்கியகாரணத்தைநன்குணரும்பொருட்டுநோக்கிக்கொண்டிருந்தனர்
இங்ஙனிகழுங்காலத்தில் ஸ்ரீவிசுவாமித்திரரெனப்பெயரிய எங்கும்புகழ்ப்பெற்ற
மகரிஷியானவர் அந்த அயோத்தியாநராதிபரைக்காணும்பொருட்டுஆங்குவந்தனர்.
மாயாவீரியபலத்தால் உன்மத்தராகிய அரக்கர்களானே, தருமமே அவசியஞ்செய்
யத்தக்ககாரியமெனக்கொண்டுநடத்தும்மகாமதியையுடைய அவரது தருமயாகமா
னது சிதைவுற்றது, அதைக்காக்கும்பொருட்டு அரசரைப்பார்க்கவேண்டுமென்னு
மிச்சையானதவருக்குண்டாயது. அம்முனிவர்தடையின்றி அந்தயாகத்தை
முடிக்கச்சமர்த்துடையரல்லராயினர். ஆகையால், அவ்வரக்கரையழிக்கும்பொ
ருட்டுத்தவங்கட்குநிதியும் மகாதேஜசுடையவரும் ஆகிய ஸ்ரீ விசுவாமித்திரர்
முயன்றவராகி அயோத்தியாபுரியைநோக்கி வந்தடைந்தனர். அரசரைத்தரி
சிக்கவேண்டுமென்னும் அவாவினராகித்துவாரபாலகரைவிளித்து, காதிமைந்த
ராகியவிசுவாமித்திரர்வந்திருக்கின்றாரென்று விரைவிற்சென்று அரசரிடத்திற்
றெரிவிப்பாயாகவென்றனர். அவரது அம்மொழியைக்கேட்டு எல்லாத்துவார
பாலகர்களும்தாமதிக்கிற் சாபங்கொடுப்பரெனப்பயந்து மருண்டமனத்தராகி
அவர் வாக்கியத்தாலேவப்பட்டவராகி அரண்மனைக்குள்ளோடிச் சபையையடை
ந்து ஸ்ரீ விசுவாமித்திர இருடிவந்திருப்பதைத்தங்கள் எஜமானன்பாலறிவித்தனர்.
அதனைக்கேட்ட அவன் அதிவேகமாகக்கொலுமண்டபத்தில் அரசமண்டலங்
களாலலங்கரிக்கப்பெற்றமகாராஜாவிடத்தில் ஓடிவந்து, ஹேதேவரே! மகா
மகிமைவாய்ந்தவரும், பாலசூரியனைப்போற் பிரகாசிப்பவரும், செஞ்சுடர்ச்சடா
சூடரும், தவஇலக்குமியையுடையவரும், புருடோத்தமரும், அரண்மனைவாயிலே,
மேலேபிரகாசத்தோடுகூடிய பதாகைவரையும், நாற்புறத்துமோகுதிரையானை
காலாள் ஆயுதமுதலியவற்றோடும், தமதொளியினாலேபொன்னைப்பரப்பியதே
போல் மஞ்சட்டன்மையை ஒளிர்விப்பவரும், ஆகிய ஸ்ரீ விசுவாமித்திரமுனீசுரர்
வாயிலில்வந்துளார் எனவணக்கமாகியவாக்கியத்தாற்றெரிவித்துக்கொண்ட அவ
னைக்கண்டம்மொழியைக்கேட்டவுடனே இராஜாதிராஜர்மந்திரிமாரோடும் சிறிய
தேசாதிபரோடும், பொற்சிம்மாசனத்தினின்றுமெழுந்து அரசர்கூட்டஞ்சூழவிரை
வில் பாதசாரியாய் ஸ்ரீ வசிஷ்டவாமதேவரோடும் சாமந்தர்போற்ற ஸ்ரீவிசுவாமித்
திரமகாமுனிவரிருக்குமிடத்தைநோக்கிச்சென்றனர். அரண்மனைவாயிலில் எழுந்
தருளியிருந்த மகாமுனிவரைக்கண்டனர். யாதோ ஒருகாரணம்பற்றிப்பூமியை
யடைவுற்ற சூரியனைப்போலத்தவத்தாலும் பராக்கிரமத்தாலும்பிராஹ்மதேஜசை
யும் க்ஷாத்ரமகாதேஜசையும் உடையவராயும், வயதின்மிகுதியால் வெளுத்ததும்,
நித்தியஞ்செய்யுந்தவத்தின்மிகுதியாற் காய்ந்ததும், ஆகிய ஜடைக்கொடியானே,
மாலைக்காலமேகத்தோடுகூடிய மலைபோலும் அலங்கரிக்கப்பட்டகழுத்தையும் சிர
சையுமுடையவராயும்; தேஜசின்மிகுதியானேபார்க்கமுடியாததும், உபசாந்தமும்,
சௌமியமும், இடர்ப்படுத்த இயலாததும், பிரியதரிசனமும், மிகவிநயமுடைய
தும், சூரியனைப்போலக்காந்தியையுடையதும், ஆகிய உன்னதமான அவயவங்க
ளோடுகூடியதிருமேனியையுடையவராயும், திருஷ்டியையும் மனத்தையுமடக்கித்

திருப்தியோடுகூடியதும், மிகவும்பயங்கரத்தோற்றமுடையதும், பிரசன்னமும், சிறப்பாற்சலியாநின்ற ஆகுலமுற்றதும், அவாவற்ற கம்பீரமுற்றதும், மிகவும் நிறைந்ததும் ஆகிய உள்ளொளியினலலங்கரிக்கப்பட்ட வெளிப்போந்த பிரபை யோடுகூடியவரும்; நெடுங்காலஜீவிததசையின்சகியாகிய, அதாவது நெடுநாட் சுவர்ந்திராநின்ற, அழகுவாய்ந்துபுகழ்ப்பெற்ற ஒருகமண்டலத்தைக்கரத்திற்றரித் தவரும், மகிழ்ச்சியோடுகூடிய மனத்தையுடையவரும், கருணையோடுகூடியமனத் தையுடைத்தாயிருத்தலின் பிரசன்னமதுராக்ஷரத்தானும், கிருபாதிருஷ்டியானும் அமிருதத்தைப்போல இப்பிரஜைகளை அனுக்கிரகிப்பவரும்; வயதுமிகுந்ததிற்குத் தக்கமகநூலுடைய திருமேனியையுடையவரும், வெண்மையாயும் உயர்ந்ததாயு மிருக்கும் இமைகளையுடையவரும், காண்பவருடைய உள்ளத்தில் அநந்தவிஸ் மயத்தையடைவிப்பவர்போன்றவரும், ஆகிவிளங்காநின்ற அம்முனிவரைப்பூபாலர் அாரத்திலேயே கண்டுவணங்கிய ஆகிருதியுடையவராகி, மவுலிமணிகழன்று பூமியையலங்கரிக்குமாறு நமஸ்கரித்தனர். அம்முனிவரும், அவனிகாவலரை, சூரியன் இந்திரருக்காசீர்வதிப்பதேபோலும், மதுரகம்பீர உதாரவாணியாலாய விஸ்தாரமாகிய ஆசீர்வாதங்களால் மிகவுமாசீர்வதித்தனர். பின்ஸ்ரீவசிஷ்டரே முதலாயமறையவர்கூட்டமியாவுமே, சுகமாகவந்தீர்களா என்பதுமுதலியமுறை யானே அவரை ஆதரவோடும் புகழ்ந்தனர். நீனியாமலிருப்பக்கிடைத்ததங்க ளதுவரவினுனும் ஒளிவாய்ந்த தரிசனத்தானும், ஆசீர்வசனத்தானும் ஹேமகா முனிவரே! கதிரவனைக்கண்டகமலாகரங்கள்போலுமுவந்தோம். தங்களுடைய அனுக்கிரகமே எங்களுக்கினிவரும்பாக்கியமன்றோ; காரணமற்றதாயும், உண் டாதல்வளர்தல் அயலொன்றாய்மாறல்க ளற்றதாகியும், குறைவழிவுகளற்றதாயும், ஔபாதிகதனது அங்கிசலேசத்தானேயாவரையும் ஆநந்திக்குமாறு செய்விப்பது மாகிய அந்தப்பிரசித்த பரமபுருடார்த்த சுகத்தையே தங்களுடைய தரிசனத்தால் நாங்களடைந்தோம். தங்களுடையவரவுக்குரியராகியயாங்கள் இன்றுதன்னியர் களாகியகிருதகிருத்தியருக்குள் முதன்மைத்தானத்தையடைந்தோம். என்றிவ் வாறு தசரதரும் அரசருமகரிஷிகளும் மிகவும்புகழ்ந்துகொண்டேகொலுமண்ட பத்தையடைந்து ஆசனங்களில் வீற்றிருந்தனர். தவஇலக்குமியாலலங்கரிக்கப் பட்ட அவரைக்கண்டஞ்சி அந்த உத்தமோத்தமமாகியமகரிஷிக்குமகிழ்ச்சியோடு கூடியவதனராயரசர்தாமே அர்க்கியத்தை நிவேதித்தனர்; அதாவது, அர்க்கியத் திற்குவேண்டிய நீரைப்பிறரைக் கொண்டுவரச்செய்யின் அபராதம் வருமென நினைந்துதாமேகொணர்ந்து அருக்கியங்கொடுத்தனர். அம்முனிவரும்அரசரிடத் தினின்றும் நூல்விதிப்படியாய கருமத்தால் அருக்கியத்தைக்கவர்ந்துவலம்வந்து போற்றும் அரசரைப்புகழ்ந்தனர். அரசராற்பூசிக்கப்பெற்ற அம்முனிவர்மகிழ்ச்சி யோடுங்கூடியதிருமுகத்தையுடையவராகிநராதிபரைநோக்கித்தேகம்மந்திரிதாதர் சுகமாவெனவும், தனக்களஞ்சியம்குறையாமலிருக்கின்றதாவெனவும், வினவினர். ஸ்ரீவசிஷ்டரோடும்வந்து ஸ்ரீவிசுவாமித்திரமகாமுனிவர், மிகவுஞ்சந்தோடத்தோ டுந்தக்கபடி அருச்சித்துச்சீடமிருகபக்ஷியாதிகளின் க்ஷேமம்விசாரித்தனர். கண நேரம்தக்கபடி ஒருவரையொருவரடைந்துபூசித்து மகிழ்வோடுகூடியமனத்தராகி மகாராஜாவினது அரண்மனையில் தக்கதக்க ஆசனத்திலமர்ந்துகலந்துவளருமொளி

யோடுகூடிய அவர்யாவரும் பரஸ்பரம்மிகவுமாதரவோடும் க்ஷேமம்விசாரித்தனர். ஆசனத்திலெழுந்தருளிய மகாமதியையுடைய ஸ்ரீவிசுவாமித்திரமகாமுனிவருக்கு பாத்தியம் அர்க்கியம்சந்தனம் புஷ்பம்வஸ்திரம் தக்ஷிணைபழந்தாம்பூலம்கோக்கள் முதலியவற்றை அளவிறந்தனவாகச்சமர்ப்பித்து, விதிப்படி அருச்சனைபுரிந்து அம்முனிவரை நோக்கித்தசரதரானவர் இருகரஞ்சிரங்குவித்து அன்போடும் புனிதமாகிய இவ்வாக்கியத்தைக் கூறத்தொடங்கினர்:—மனுடனுக்கு அமுதங் கிடைத்ததுபோலும், மேழிச்செல்வனுக்கு மழையிலாநாளில் மழையுற்றதுபோலும், அந்தகனுக்கு அழகியவிழிகிடைத்ததேபோலும், மைந்தனில்லாதவனுக்கு அன்போடுங்கூடியமனைவியின் சம்பந்தத்தால் மைந்தனுண்டானதேபோலும், தரித்திரனுக்குக்கனவிற்கண்டபொருள்குவியல் கிடைத்ததுபோலவும், நெடுநாள் விரும்பிய மணிமந்திர பராக்கிரமாதிகள் கிடைத்தனபோலவும், அதிகப்பிரியமாயமைந்தன் சகோதரர்முதலியோர் தூரதேசத்திலிருந்து வந்ததுபோலவும், இழந்தபொருளெய்தியதுபோலவும் தங்களுடைய நல்வரவாகின்றது. ஆகாசகமனத்தாலுண்டாயமகிழ்ச்சியைப்போலவும், இறந்தவன் மீண்டெழுந்த சந்தோடத்தைப்போலவும் ஹேபிரஹ்மசொரூபமாகியமகாமுனிவரே! தங்களுடையவரவால் அடங்காமகிழ்ச்சியையடைந்தேன். பிரஹ்மலோகத்தின் வாழ்வானது யாருக்குத்தான்பிரீதியையுண்டாக்காது அதுபோலத் தங்கள்நல்வருகையென்றுண்மையாகவேகூறுகின்றேன். தேவரீருக்கு அடியேன்கொடுக்கத்தக்க எப்பொருளிலதிகப்பிரியம்? அடியேன் செய்யத்தக்க சேவையாது? ஹேபரமதருமமூர்த்தியாகியவிப்பிரசிரேஷ்டரே! நீர்நற்பாத்திரமாக அடியேனுக்குக்கிடைத்தீர். முன்னர் இராஜஇருடிசப்தத்தானேவிளங்கிய ஒளியுடையவரானீர், தவத்தானே பிரஹ்ம இருடித்தன்மையைப்பின்னெய்தினீர், ஹேபகவன்! அடியேனாற்பூஜிக்கத்தக்கவராயுள்ளீர், ஆகலின்பூஜாபாத்திரமாயுள்ளீர். ஸ்ரீகங்காஜலாபிடேகத்தானே எனக்கெவ்வாறு பிரீதியுண்டாமோ அவ்வாறுதேவரீரது தரிசனத்தானேயுண்டான உட்பிரீதியானது எனதுதாபங்களைப்போக்கிச் சுகத்தையுண்டாக்கியது. ஹேபிரஹ்மசொரூபரே! இச்சை பயம் குரோதம் விடயநேய அதிசயத்தால்விடயாகாரமாகச்சித்தம்இரமிக்கும்இராகம் நோய் முதலியவையற்றவராக இருந்துந் தாங்கள் என்பால்வந்த இவ்வருகைமிகவும் அற்புதமாகவிருக்கிறது; இச்சையாதிகளிருப்பினன்றோ பிறன்பாற்செல்லவேண்டும். ஹேவேதத்தையுணர்ந்தவர்களுக்குள்மேன்மைமிக்கவரே! தேவர் இருடியர் உலவும் இடங்களே க்ஷேத்திரமெனப்படுதலின் தேவரீரிங்கெழுந்தருளலால் எனது இல்லமும் சுபக்ஷேத்திரமாயது, அதனானே பாவங்களெல்லாமற்றவனாயினேன், அதனானேபுண்ணியமிகுதியால் அமுதமயமாகிய சந்திரமண்டலத்தையடைந்து அதின்மூழ்கினவன்போலாயினேன். ஹேமகாமுனிவரே! நேரேபிரஹ்மதேவரே எழுந்தருளியதற்கொப்பாகியதேவரீரது வருகையானேயுண்டாயதருமத்தாற் பவித்திரனும், புகழ்மேன்மைகளாலனுக்கிரகிக்கப்பட்டவனுமாயினேன். ஹேசாதுக்களுக்குட் சாதுவே! தேவரீரதுவருகையினாலுண்டாயபுண்ணியத்தானே அலங்கரிக்கப்பட்ட எனது வாழ்க்கையே நல்வாழ்க்கை, இன்றே என்பிறப்புப்பயனுடையதாயது. இவ்விடத்தில்விஜயஞ்செய்ததைத்தரிசித்துப்பூசித்து நமஸ்கரித்து, இந்துவைக்கண்ட

சிந்துவைப்போலப்புண்ணியமகிழ்ச்சிகள் மிகுந்து தேகத்திலேயேபெருமளவைக் கருவி சிறு அளவைக்கருவியுள்ளடங்காததேபோல உள்ளடங்காமற்பொங்குகின்றன. ஹேமுனிபுங்கவரே! எக்காரியத்தையெண்ணிவந்தீரோ அதுசெய்யப்பட்டதாகவே எண்ணுவீராக, எப்பொருளைவேண்டிவந்தீரோ, நிரந்தரமென்றுற்பூசிக்கப்பட்டவராயிருத்தலின், அதையடைந்ததாகவே எண்ணுவீராக. ஹேகவுசிக முனிவரே ! உங்களுடையகாரியத்தில் ஆலோசனையாதொன்றும் செய்யவேண்டியதேயில்லை, மற்றையரால் செய்யமுடியாததையும் அவசியம் செய்கின்றேன்; கொடுக்கமுடியாததையும் அவசியம்கொடுக்கின்றேன்; ஹேபகவன்! தேவரீருக்குக்கொடுக்ககூடாததொன்றும் அடியேனுக்கில்லை, எவ்வஸ்துவானது என்றற் கொடுக்கப்பட்டதாகித்தங்களையொத்தசற்பாத்திரத்திற்சேருகின்றதோ அச்சேர்க்கையாலளவிறந்த பிரயோஜனம் எனக்குக்கிடைக்கும். காரியத்தினதுவிசாரத்தைத் தாங்கள் செய்யவேவேண்டாம். இதைமீண்டுங்கூறியது உற்சாகமிகுதியாலாம். மற்றொருலாபத்தையுமுத்தேசியாமல் தருமத்தானே யாவற்றையும் யான் செய்கின்றேன், தாங்களே யெனக்குப் பரமதேவதைஎனத் துதித்தனர். தமது தவமகிமையை யுணர்ந்தவரும், பிரசித்தமாகிய குணங்கீர்த்திகளோடுகூடியவரும், ஆகிய அரசரானேவணக்கத்தோடும் கூறப்பட்ட இவ்வதிமதுரமும் குணங்களோடு கூடியதும், செவிக்கினிமையும் ஆகியவாக்கியத்தையுட்கொண்டு உத்தமோத்தம முனிவர் பெருமகிழ்வைமருவினர்.

6-வது ஸ்ரீ விசுவாமித்திரர் வருகை முற்றிற்று.

---

## 7-வது ஸ்ரீ விசுவாமித்திரவாக்கிய வருணனம்.

இப்போது அரசரைப்புகழ்தலும், யாகஇடையூற்றின் நிவேதனமும், அரக்கரைக்கொல்வான் ஸ்ரீராமரை இரத்தலும், வருணிக்கப்படும்; அரசசிங்கம்முழக்கிய ஆச்சரியஅருத்தத்தோடுற்ற அதிவிஸ்தாரமாகிய அவ்வாக்கியத்தை, மகாதேஜசையுடைய ஸ்ரீ விசுவாமித்திரமகரிஷியானவர்கேட்டு மெய்புளகெறிந்துவிளம்பலுற்றார்:—ஹே மன்னவர்மன்னரே ! மகாவம்மிசத்திற்பிறந்து குலகுருவாகிய ஸ்ரீ வசிஷ்டபகவானது ஆணையைச்சிரமேல்வகித்துவளரும் உமக்கேதகுமிப்பூமண்டலத்தில்; எனதுமனத்திற்சொல்லவேண்டுமென்றுள்ள வாக்கியத்தின் காரியநிண்ணயத்தை; அதாவது, அதன்சம்பந்தியாகச்செய்யத்தக்க பொருணிச்சயத்தை; நீர் முதலிற்செய்வீராக; அஃததருமமாயின் செய்யத்தகாததுதான், ஆனாலதுதருமமாதலின் அதை இனிதுகாக்கவேண்டும். ஹே புருடசிரேஷ்டரே! சித்தியடையும்பொருட்டு யான்யாகத்தையாரம்பித்தேன் அதற்கிடையூறுசெய்யக்கோரமாகிய அரக்கர்அங்குவந்துசேர்ந்தனர். யான் யாகத்தாற் றேவர்குழாங்களைப்போற்றும்போதெல்லாம், அம்மகத்தை அங்கிசாசரர் அழிக்கின்றனர். என்னான்மிகவும் அனுட்டிக்கப்பட்ட அந்தயாகபூமியைத் தசையாலும் இரத்தத்தாலும் பேரரக்கர்கெடுக்கின்றனர். இடையூற்றின்மிகுதியாற்கெடுக்கப்பட்ட அத்தகைய அம்மகக்கூட்டத்தில் அளவிறந்த கஷ்டப்பட்டு உற்சாகமற்று அங்கிருந்திங்குவந்துசேர்

தேன். சாபத்தினாலேயே இடையூறுகளைநீக்கிக்கொள்ளலாமெனினோ, ஆண்டென்மதிகோபத்தைச்செய்யமுயற்சிக்கவில்லை, அக்கருமம் அத்தகையதாகவிருக்கின்றது, அதன்கண்ணே சாபம்புகலாகாது. அந்தமகாயாகத்தில் எனது யாகதீக்ஷைபானது இத்தகையகோபசாபமற்றதாயிருக்கின்றது; அதன்கண் மகாபலத்தைத்தங்களுடைய அருளால் இடையூறில்லாமல் அடையலாமென்றெண்ணுகின்றேன். துக்கிதனாய்த்தஞ்சமென்றுவந்தடைந்த என்னைக்காத்தல் உமதுகடனாகும், வேண்டிக்கொண்டவர் வேண்டியதுபெறுமற்போவது, மேன்மைதங்கியவரிடத்தில் பெருமிகழ்ச்சியையேகொடுக்கும். ஆகலின், மதத்தவெம்புலிபோலவிக்கிரமத்தையும், மகேந்திரருக்குச் சமானமாகிய வீரியத்தையுமுடையவனும், அரக்கர்குலகாலனும், சத்தியத்தையும் அமோகபராக்கிரமத்தையுமுடையவனும்; காகபக்கத்தைப்போற் சிகைமுடியனும், சூரனும், மூத்தவனும் ஆகிய உமது மைந்தனான ஸ்ரீமாந் இராமச்சந்திரமூர்த்தியை எனக்குத்தரவேண்டும். காகபக்கமென்னுங்காதடிச்சிகைக்ஷத்திரிய ஆசாரசித்தமாம். அஸ்திரப்பயில்விலாதபாலகனாகிய இவன் எங்ஙனமாற்றலுடையவனாவனெனின்? என்றால் காக்கப்பட்ட இவன் தன்னுடைய திவ்யதேஜசினானேயாகத்திற்கும் உலகிற்கும் அபகாரஞ்செய்யப்பட்ட அரக்கர்களுடைய சிரச்சேதஞ்செய்வதன்கண்ணே வல்லமையுடையவன்; அவனுக்கு, அஸ்திரவேற்றுமையானே பலவேறுவகைப்பட்டதும், எல்லையில்லாத அழிவற்றமகிமையோடுகூடியதும் ஆகிய அஸ்திரவித்தையை யினிதுகொடுத்தல் வடிவமேன்மையைச்செய்வேன், அதனால் மூன்றுலகங்களும் பூஜிக்குமாறு ஆய்விடுவேன். கோபத்தோடுகூடிய சிங்கத்தைக்கண்டுவனத்திலுண்டாய அற்பத்தன்மையானே மானைக்காக்குமாற்றலற்ற ஈரணப்புல்லில்மான்களானவை நில்லாததேபோலப்போரில் இராமன்முன்னடைந்து நிற்பதற்கு அங்கிசாசரர்சமர்த்துடையராகார். ஆனால் என்சேவகர்களாலேனும், என்னாலேனும் அவர்கள் ஒட்டப்படமாட்டார்களாவென அரசர் கருதக்கூடுமென்றறைகின்றார், காகுத்தனாகிய இராமனினும் வேறாய எவனும் அவர்களோடு போர்செய்யமுடியாது; மதம்பிடித்தயானைகளோடு கோபத்தோடுகூடிய சிங்கமன்றி யொன்றெதிர்ப்பதைக் கண்டதுண்டா! வீரியகருவமுடையவரும், பாவியரும், கரதூஷணரின் றாதரும் ஆகிய அவர்தம்பலத்தாலும் சுவாமி பலத்தாலும் போரில்காலகூடவிடம்போலும், கோபமுடையயமன்போலும் எதிர்ப்பர். ஆனால் இராமன்றான் எங்ஙனம் அவர்களையோட்டுதல்கூடுமெனின், விழியைமறைப்பான் ஆற்றலுடையனவாயினும், மழையைமறைப்பான் ஆற்றலற்றதூளிகள் இடைவிடாது பொழியாநின்ற மழைத்தாரையைச் சகியாதனபோல ஹே மன்னவர்மன்ன! இராமனுடைய அம்புகளை அவர்கள் சகியார்கள். ஆயினும் தந்தைமார் மைந்தரைவிடல் எளிதல்லவேயெனின், மைந்தன்மேல்வைத்த என்மைந்தனிவனென்னும் நேயத்தை மிகுதிப்படுத்திக்கொள்ளுதல்நலனன்றாம், இவ்வுலகத்தில் மகாத்மாக்கட்குக்கொடுக்கக்கூடாத பொருளொன்றுண்டோ! சிபி ததீசி அலர்க்கன் முதலியோர் தமது தேகம்விழி முதலியவற்றையும் கொடுத்தனரென்ப துமக்குத்தெரியாததல்லவே. இவ்விடயத்தில் அபாயம்வருமென நினைத்தலும் கூடாது, வெற்றியும் மேன்மையுமேயுண்டாம். அற்புதம்! அந்த அரக்கர்களை மடிந்தவர்களாகவே என்றவத்

தால் யானிச்சயமாயறிகின்றேன் என்வாக்கியத்தால் நீரும் அதை நிச்சயமாகவுணருதிர். என்போலிய அறிஞர் ஐயப்பட்டகாரியத்தில் மெய்ம் முயற்சியைச்செய்யார்கள். செந்தாமரைக்கண்கள்வாய்ந்து, மகாமகிமையோடிலங்கும், இராமனை ஜீவோபாதியாற் பரிச்சின்னப்படாத பூரணவடிவ ஈசுரனென்று, யானும், மகா தேஜஸையுடைய ஸ்ரீ வசிஷ்டபகவானும், யோகசித்தியினுனே எல்லாவிடங்களி லிருக்கும் பொருள்களையும் அறியுந்தன்மைவாய்ந்த மற்றைய இருடிகளுமறிவோம். அறத்தையும் மேன்மையையும் புகழையும் காக்கவேண்டுமென்னும் எண்ணம் உமதுள்ளத்திருப்பின் அதிகப்பிரியமைந்தனுன இராமனை நன்னிச்சயத்தோடு கொடுக்கவேண்டும். எனது யாகவைரிகளாக விக்கினங்களையேசெய்யும் அரக்கர்கள் இராமனுற் கொல்லப்படுபவர்களாய் நடக்கும் எனது யாகம்பத்து நாளிரவும்பகலும் செய்யத்தக்கதாம். இவ்விடயத்திலும், ஹே காகுத்தரே! ஸ்ரீ வசிஷ்டர் முதலியோரும், உமது எல்லா மந்திரிமார்களும், தொடர்ந்தே சம்மதி தருவார்கள், அச்சமதியானே இராமனையவசியம் கொடுப்பீராக. ஹே காலமுணர்ந்தவரே! இந்த இராகவன் என்னுடையவனுக யாக அங்கமாய வசந்தாதிகாலங்கழிந்துபோகுமுன் செய்யவேண்டும். உமக்குக்கல்யாணம் உண்டாகுக, மனத்திற் சோகத்தையடையாதீர். காரியமணுவாயிருந்தபோதினும் தக்கசமயத்திற் செய்யின்விரும்பிய சாதனத்தை அனுக்கிரகிக்குந் தன்மையையடையும், தகாத சமயத்தில்பெருந்தனங் கொடுத்தாயாசத்துடன் சாதித்தபோதினும் அக்காரியம் பலங்கிடைக்கக்கூடியதாக உபகரித்தபோதினும் பிரீதியற்றதாக முடியும். இவ்வாறு மகாதேஜஸையுடையவரும் முனீசுரரும் தருமவடிவரும் ஆகிய ஸ்ரீ விசுவாமித்திரர், தரும அர்த்தசகித வாக்கியத்தைக்கூறி மவுனமுற்றனர். மகாமுனிவருடைய இம்மொழியைக்கேட்டு அந்தமகானுபாவராகிய தசரதர், ஊகத்தோடு கூடியவார்த்தைகளைக் கூறவேண்டுமென்று பேசாமலிருந்தனர். முடிந்ததைமொழியலாமே ஊகத்தையெண்ணுத லெதற்காகவெனின், உலகர் மனம்விரும்பியகாரியம் முடியாவிடின் சந்தோஷத்தையடைவதில்லை, மதிமான்களோ, யுக்தியோடு கூடியவார்த்தைகளாலன்றி, மகிழ்ச்சியைமருவார்கள். உலகர்மனோரதம் பூர்த்தியானபோதினும் மகிழ்வெய்துவர், மதிமான்களோ, அதுபூர்த்தியாயினும் யுக்தியோடு கூடியவார்த்தைகளாலன்றிச் சந்தோஷியார்கள் என்பதாக ஊகத்தையெண்ணியது பொருத்தமாமென்பது கருத்தாம்.

7-வது, ஸ்ரீ விசுவாமித்திரரது வாக்கியவருணனம் முற்றிற்று.

## 8-வது, தசரதரது வாக்கியவருணனம்.

இப்போது, நேயத்தால் அரசர் ஸ்ரீ ராமருக்குப் போரின்றகுதியின்மையை வருணித்தலும், இராவணனதிபலத்தை யெண்ணி வருந்துதலும் வருணிக்கப்படும். ஸ்ரீ விசுவாமித்திரர் கூறியதைக்கேட்டு அரசர்க்கரசராகிய தசரதர் விடையில்லா

மையின் செயலற்று, முன்மொழிந்த இராமனது தசையின் அநுசந்தானத்தான்
பிரதிஞ்ஞைசெய்த பொருளிற் சாமர்த்தியமின்மையினாலும், முனிவரது வசனத்
தைத்தாண்டமுடியாமையினாலும், தைனியத்தோடுகூடிய இவ்வசனத்தைக்கூறத்
தொடங்கினார்:—தாமரை விழியையுடைய இவ்விராமனுக்குப் பதினைந்தேமுக்கால்
வயதுதானாகின்றது. போர்செய்யத்தகுதியே இல்லாதபோது அரக்கரோடுபோர்
செய்வானென்று நினைக்கவே முடியாது. ஆனால் கேட்டது வீண்தானோ எனின்?
ஹே பிரபுவே! பூரணமாகிய அக்ஷௌஹிணிக்குக் கருத்தாவாகிய யான், அச்சே
னையோடு கூடிச்சென்று தசைதினனும் அரக்கரோடு போர்புரிவேன். அக்ஷௌ
கிணியின் இலக்கணம்:—ஆனை 1, தேர் 1, குதிரை 3, காலாள் 5, இதுபத்தியெனப்
படும், இத்தொகை மூன்று மூன்றுகொண்டன முறையே, சேனைமுகம், குல்மம்,
கணம், வாகினி, பிருதனை, சமூ, அநீகினீ, யெனவாம்; 10 அநீகினீ சேர்ந்து அ
க்ஷௌஹிணி. அதாவது, ஆனைகள்21870, தேர்கள் 21870, குதிரைகள்65610,
காலாள்கள் 109350 என்பதாம். இஃது அமர சிங்கரானே ஸ்ரீமத் மகாபாரதாதி
யில் வெளியாயிருப்பது தொகுத்துக் கூறப்பட்டிருக்கின்றது. இச்சேவகர் சூரர்
வெற்றி நிறைந்தோர் மந்திரத்தெளிஞராவர், வில்விளங்குங்கையனாகிய யான் இ
வர்களைப் போர்முனையில் காப்பேன். இவர்களோடு கூடவேசென்று சிங்கமானது
மதம்பொழியும் யானைகளோடு போரிடுவதேபோல மகேந்திரரினும் வலுமைவா
ய்ந்த போர்வீரரோடும் போரிடுவேன். பாலகனாகிய இராமனோ பகையாளிகளின்
பலாபலத்தை யறிந்துகொள்ளமாட்டான். நகரத்துள் அம்புபயிலுமிடத்தில் விளை
யாட்டின்பொருட்டுக் கற்பிக்கப்பட்ட போர்க்களத்தினும் வேறாகிய போர்க்களத்
தை யவன் கண்டதேயில்லை. மேலான சஸ்திரமாகிய விடாப்படைகளோடுகூடிய
வனுமல்லன், போர்விடயம்முற்றுந்தெரிந்தவனுமல்லன். விடும்படைகளோடுகூடி
யவனுமல்லன், சூரகோடிகள் நிறைந்த போர்க்களத்திற் போருணர்வு மவனுக்
கில்லை, போர்ஞானமு மில்லையாயின் போரின் முற்று முணர்ச்சி அதி தூரத்ததன்
றோ. அவன்கேவலம் புஷ்பகண்டங்களிலும், கொடிவீடுகளிலும், பூங்காவனங்க
ளிலும் நந்தனவனங்களிலும் எப்போதுமே மிகவும் பழக்கமுள்ளவன். உதிர்ந்த
மலர்களா லலங்கரிக்கப்பட்ட தனது வெளி முற்றங்களில், அரசகுமாரர்களோடு
விளையாடுவதைத்தானறிவன். ஹே பிரஹ்மசொரூபரே! அல்லாமலும் இப்போது
எனது பாக்கியக்குறைவால், பனியினாலே பத்மாகரம்போல மிக மிகவும் வெளுத்
திளைத்து வருகின்றான். அன்னமுண்ணவும் ஆற்றலில்லை, வீட்டினுட் சஞ்சரிப்
பதுமில்லை, உள்ளேநிரம்பிய துயரோடுகூடிய வடிவினனாகிக்கேவலம் சும்மாகவே
யிருக்கின்றனன். ஹே முனிநாயகரே! அந்நிமித்தத்தானே, மனைவிமார்களோ
டும் தாதர்களோடும் யான் சரற்காலத்து மேகம்போல அத்தியந்தம், உற்சாகம்
சுகம் பல முதலியவைவயற்றிருக்கின்றேன். இங்ஙன்றேக மிளைத்துப்பாலியவயதை
யுடைய மனோ பீடையால் வயப்பட்ட இராமன் அசக்தனாகியும் அனுப்ப முடியா
தவனாகியுமிருத்தலின் அரக்கரோடு போர்புரியும் பொருட்டு எங்ஙனங்கொடுப்
பேன்? அனுப்புதற்கே தகுதியற்ற அவனைப்போர்க்கனுப்புதல் எங்ஙன்? அதனி
னும் அரக்கரோடு போர்க்கென்பது அத்தியந்தம் தகுதியற்ற காரியமன்றோ!

அறத்திலன்புடைய உமக்கு அதன் விரோதியாகிய புத்திரவாஞ்சையினு லாகவேண்டியதென்னேயெனின், இளங்குமரியைக் கூடுவதினும், அமிர்தரசத்தினும், இராஜ்யசம்பத்தினும் ஹேமகாமதியையுடைய தவசிரேஷ்டரே! புத்திரவாஞ்சையானது அதிக சுகத்தையே தருகின்றது. புண்ணிய பலன்களாகக்கூறிய சுகங்கள் புத்திர சுகத்தைத் தாண்டமாட்டா. அறம்பயிலறிஞரும், சம்சயமில்லாமல் மூவுலகங்களிலும் பெருந்தொடக்கத்தானே பெருந்துயரைத் தருவனவும் நெடுநாட்கொண்டு சாதிக்கத்தக்கனவுமாகிய தவக்கிலேசங்களைச் செய்வர். பிராணனையும் பொருளையும், மனைவியையும், சுகத்தையும் மனுடர் விடுவர், ஹேமுனிவர் முதல்வரே! புத்திரனை விடார்; உயிர்கட்கிது இயல்பேயாம். கொடுந் தொழிலும், வஞ்சகமாகப் போர்செய்வதிற் சமர்த்தும், உடைய அரக்கர்களோடு, கூறிய இத்தன்மையிலிருக்கும் இராமன், போர்புரிகவெனக்கூறும் தங்கள் யுக்தியே மிகவும் சகிக்கமுடியாததாக விருக்கின்றது. இராமனைப் பிரிந்து ஒரு முகூர்த்தமேனும் வாழவிரும்பிய யான் வாழச்சகியேன், ஆகையால் இராமனையழைத்துச் செல்லுதல் தகுதி யன்று; இராமனையழைத்துச் செல்வீராயின் அரக்கர்வதமோ உண்டாகப் போவதில்லை, மாறுகவோ மைந்தரோடுகூடிய வெனக்கே உம்மால் அவ்வதமேற்படும், படவே யாக தருமத்தைக் குறித்து உமக்கு மகா அதருமமன்றோ ஏற்படும் ஒன்பதினுயிர வருடங்கள் புத்திர இச்சையால் வருந்திக்கழிந்த எனக்கு மிகவும் கஷ்டப்பட்டுச் சாதித்த அசுவமேத புத்திரஇஷ்டியாதிகளானே இந் நான்கு மைந்தர் உண்டாயினர். பூர்வ இராமாயணத்தில் "ஹேகௌசிகரே! அறுபதினுயிரம் வருடங்கழிந்த எனக்கு" என்றது, தனக்குக்கடந்த வயதைக்காட்டலின் ஈண்டொன்பதினுயிர வருடம் புத்திர வாஞ்சையாற் கழிந்ததோடு விரோதியாதாம். அந்நால்வருள்ளும் கமலலோசனனுகிய இராமனே முக்கியனுவான், தேகத்துட் பிராணனேபோலும் முக்கியமாய அவன் அதிகப்பிரீதிக்கு விடயனுயிருக்கின்றுன்; ஆகலின், ஈண்டு அவனில்லாமல் மற்றையம்மூவரும் உயிர்தரிக்க மாட்டார்கள். எவனையழைத்துச் செல்வதால் மற்றைய மூவரும் மரணத்தை மருவுவரோ, அத்தகைய இராமனே, யமன் வடிவமாய அரக்கர்பொருட்டுத் தங்களாலழைத்துக்கொண்டு போகப்படுவனேல் நான்கு மைந்தர்களையு மிழந்த யான் இறந்ததாகவே நீரறிந்துகொள்ளவேண்டியது. நால்வர் மரணத்தாலென நான் சொல்லவேண்டியதென்னே, இராமன் ஒருவனை யழைத்துச்செல்லன் மாத்திரையானும் நானிறப்பேன்; ஏனெனின், இந்நால்வருள்ளும் இவனிடத்திலேயே எனக்குப் பரமப்பிரீதியானதிருக்கின்றது. ஆகையால், மூத்த தருமமயமாகிய இராமனையழைத்துச் செல்லுதல் தங்கட்குத் தகுதியன்றும். நல்லது இராமனையழைத்துச் செல்லாமற்போவனுயின் எனது காரிய சித்தி எப்படியாகுமெனின்? ஹேமகாமுனிவரே? நிசாசரர்களுடைய சேனையைக்கொல்லத் தங்கட்கு விருப்பமிருக்குமாயின் என்னேடுகூடச் சதுரங்க சேனையை யழைத்துச் செல்லுங்கள். பகைவர் பலமறியாமல் எதிர்க்கலாகாதன்றோ, அவ்வரக்கர் எவ்வளவு வீரிய முடையவர், எவர் மைந்தர், எங்ஙன மிருக்கின்றனர், எவ்வளவு பேரிருக்கின்றனர், அவர்கள் பெயர்கள்தானென்னே, என்பதை நன்றாய்த் தாங்கள் கூற

வேண்டும். அவ்வரக்கரோடு இராமனுற் போர்புரிய எங்ஙன் முடியும்? என்னு
லேனும் எனது பாலகர்களாலேனும் பெரும்போரில் அத்துஷ்ட பாக்கியமுடைய
வஞ்சகப்போர்செய்யும் அவரோடெவ்வாறு எதிர்த்துநிற்க முடியும்? இவை
யாவும் தாங்களேகூறவேண்டும்; வீரியமிகுத்துவலுத்தவான்ரூே அவ்வரக்கர்.
ஹேமகாமுனிவரே! நேரே குபேரனுடைய சகோதரனும், விசிரவசுவின் மைந்த
னும் ஆகிய மகாவீரியத்தையுடைய இராவணனென்னும் அரக்கன் ஒருவனிருக்
கின்ருனென்று கேள்விப்பட்டுளேன். தங்களுடைய யாகத்தில் அந்தத்துன்மதி
யானவன் ஒருவேளையிடர்செய்ய வருவானுயின் அத்துராத்மாவோடு போரிலெ
திர்த்து நிற்க எங்களான் முடியவேமாட்டாது; ஏனெனின் ஒவ்வொரு பிராணி
களிடத்தில் ஒவ்வொருகாலத்தில் தனித்தனியாக மிகுந்தவீரியங்களும் விபூதி
களும் உண்டாகின்றன, ஒவ்வொருகாலத்தில் ஒடுங்குகின்றன. ஆகையால், இக்
காலத்தில், அதனினுமிப்போது நாங்கள் இராவணுதி சத்துருக்கள் முன்னின்று
போர்புரிய ஆற்றலுடையவர்களல்லேம்; இஃதீசுரர்நியதியென்பது நிச்சயமாகும்.
ஆகலின் ஹேதருமத்தை யுணர்ந்த மஹாமுனிவரே! என்னுடைய மைந்தன்
மீது திருவருள்புரியவேண்டும், யாசகரதுஎண்ணத்தைப் பூர்த்திசெய்யுமாற்றலற்ற
அற்பபாக்கியமுடைய அடியேனுக்குத்தாங்களே மேலாயதெய்வமாயிருக்கின்றீர்
கள். ஏனிவ்வளவு அதைரியமென்ருல், தேவர், தானவர், கந்தருவர், இயக்கர்,
பதகர், பன்னகர், என்பவருங்கூட இராவணனேடு போர்புரியச்சமர்த்தராகார்,
ஆயின்மனுடராகிய யாங்கள் அவன் முன்னென்செய்வோம். போரின்கண்ணே,
மிகவும் பூசித்தற்கு யோக்கியமாகிய வீரியவான்களென்னும் இந்திராதிகளின் வீரி
யத்தையும் அந்த இராவணன் கவர்கின்றனன், அத்தகையனேடு போரிற்போர்
புரிய எங்களான்முடியாது, ஆகவே அவனேடுபாலகரால் எங்ஙனம்போர்செய்ய
முடியும் அந்த இராவணனுடைய பாலகர்களாகிய இந்திரஜித்து முதலியவர்க
ளோடும் போர்புரிய எங்களான் முடியாது. பலமற்றவர்களாக நல்ல மேலோர்
களும் வாழும் இஃதொரு விபரீத காலமாயிருக்கின்றது; யானே கிழத்தன்மை
யானே தளர்ந்திருக்கின்றேன். இராமனே கிழவனைப் போல எளிமையையுந்
தளர்வையுமடைந்துளான். அல்லது, ஹேபிரஹ்மத்தை யுணர்ந்த பெரியவரே!
தங்களுடைய யாகத்தைக்கெடுப்பான். மதுவின் சுதனுகிய இலவணன் வருவா
னுயின் என்செய்வது தாங்களேகூறுங்கள்! அவன் தைத்தியனுக்கு அரக்கியிடத்
திற்பிறந்தவனுதலின் தைத்தியனுக்கொப்பானவனன்ரூே; சைவசூல பலத்தால்
அவனைஜெயிக்க முடியாமையினுனும், மாந்தாதாமரித்தலினுனும், என்மகனைக்
கொடுக்கவேமாட்டேன். அல்லது, சுந்தோபசுந்தர்களின் மைந்தர்களாகிய நமனுக்
குச் சமானமான மாரீசனும் சுபாகுவும் தங்களுடைய யாகத்தைக்கெடுக்கவரின்
என்செய்வது தாங்களே கூறுங்கள்; ஆகையால் என்மைந்தனைக் கொடுக்கவே
முடியாது. இராமனை யான் கொடாமலிருந்துந் தாங்கள் தவ மகிமையாற்
கொண்டுசெல்வீர்களேயாயின் உங்களால்யானே கொல்லப்பட்டவனுவேன், இற
வாமல் நிச்சயமாகிய ஜெயத்தை எனக்குக் கண்டிலேன் இவ்வாறு, அந்த இரகுகுல
திலகராகிய தசரதரென்னும் மேன்மைமிக்க அரசர்மெதுவாசக்கூறி,மஹாமுனி

வருக்கிஷ்டமாகிய ஸ்ரீ இராமரை யனுப்புதலிலும், அரக்கர்வதத்திலும், செய்யத்தக்கதா, தகாததா, அனுப்பலாமா, வேண்டாமா, என்பதாதிவடிவச்சம்சயமாகிய பேரலைக்கூட்டத்தில், உயர்ந்தெழாநின்ற அலைமிகுத்தகடலில் மூழ்கி மோகமுற்ற வனைப்போல மூழ்கினவராகித் தன்னின்பத்தையும் நிச்சயத்தையுமறியாதவரானர்

8 வது தசரதரது வாக்கிய வருணனம் முற்றிற்று.

## 9 வது ஸ்ரீ வசிஷ்டர் சமாதானித்தல்.

இப்போது, ஸ்ரீ விசுவாமித்திரரது கோபமும், அவரது தவ அஸ்திர பலங்களைக் கூறும் வாயிலாக ஸ்ரீ வசிஷ்ட பகவானல் மெதுவாக அரசரைச் சமாதானித்தலும் சாற்றப்படும்:— நேயத்தால் வியாகூலமுற்ற விழிகளோடுகூடிய அவரது அவ்வாக்கியத்தைக் கேட்டுக் கோபத்தோடுகூடிய ஸ்ரீ கௌசிக முனிவரானவர் மகிபதியைநோக்கி, செய்கிறேன் என அங்கீகரித்த பிரதிஞ்ஞையைக் கெடுக்க நினைத்தல் தகுங்கொல்! மகா மகிமைவாய்ந்த நீர்சிங்கமாக விருந்து மான்றன்மையைமருவ வாஞ்சித்தலென்னே! இராகவர்குலத்தில் இப்பொய்பேசும் விபரீதமானது பொருந்தாத தேயன்றே! ஒருகாலத்திலுஞ் சந்திரனிடத்தில் உஷ்ண கிரணங்களுண்டாகாவாம். நீர் சாமர்த்தியமுடையரல்லராயின் நாம்வந்தவாறேசெல்கின்றேம், பிரதிஞ்ஞையற்றவராகி ஹேகாகுத்தரே! பந்துக்களோடும் சுகமாகவாழ்ந்து கொண்டிருப்பீராகஎன்றனர். தவமகாத்மியசாலியாகிய ஸ்ரீ விசுவாமித்திரர் இவ்வாறுகோபத்தினல் வியாபிக்கப்பட்டபோது, நமதுபதியின் அபராதத்தாலேனும், அபராதியைத்தாங்கிக்கொண்டிருக்கும் அபராதத்தினலேனும் என்னையே எங்குசபிக்கப்போகின்றரோ வென்னும்பயத்தானே பூமி முழுதும் நடுநடுங்கியது. தவத்தால்வேறகவே இராவணதிகளைக்கொல்லுமொருவனையெங்கு சிருஷ்டித்துவிடுகின்றரோ அவன் நம்மனேரையும் எங்கு துன்புறுத்தப்போகின்றனே வெனத்தேவதைகளும் நடுநடுங்கினர். உலகிற்கு நேயராகியமகாமுனிவர் சினத்தால் வியாபிக்கப்பட்டதையுணர்ந்து, தைரியமுடையவராதலின் ஸ்ரீவிசுவாமித்திரரது கோபத்தைத் தமது கோபத்தானேதடுக்காமல், பேரறிவாளியும் நல்ல விரதமுமுடையவராகிய ஸ்ரீவசிஷ்டபகவான் கூறுவாராயினர்:- ஹே அரசரே! இக்ஷ்வாகுகுலத்திற் பிறந்தும், சாக்ஷாத்தருமமே வேற்றுருவங்கொண்டுவந்ததே போல இருந்தும், ஸ்ரீமான்றசரதர் எனப் பெயரும் பெற்றும், மூவுலகிலுமுள்ள குணவான்களினுடைய குணங்களை யெல்லாம் ஒருங்கே யலங்காரமாக அடைந்தும், தைரியமுடையவராகி நல்ல விரத முடையவராகி யிருந்தும், தருமத்தைக் கெடுக்க நினைப்பது தகுதியன்றும். இதுகாலம்வரை பிரதிஞ்ஞாபாலனமாகியவிரத அலங்காரம்பெற்றும் இப்போது மாறுதல் தகுதியாமோ ! தருமத்தோடும் கீர்த்தியோடும் கூடியுள்ளது மூன்றுலகினுமன்றே விளங்குகின்றது உங்களுடைய குல தருமமாகிய பிரதிஞ்ஞாபாலன தருமத்தைக் காப்பாற்றவேண்டும், தருமத்தைக்கெடுப்பது தகுதியல்லவாம் மூவுலகினும் விரும்பி யதைச் சம்பாதிப்பதில் ஆற்றன்மிக்க மூவுலகேசராகிய மூனிவருடைய வாக்கியப்படி செய்வதே தகுதியாம். செய்கின்றேனென அங்கீகரித்துப் பின்னதைச் செய்யாமலிருப்பது உமது இஷ்டபூர்த்தங்களாகிய யாகாதி தடாகாதி தருமத்தை யழிக்குமாதலின் இராமனை

அவசியம் அனுப்பவேண்டும். எந்நெறியோடு மன்னர்கள் வாழ்கின்றனரோ அந்
நெறியே குடிகளென்னும் நியாயமிருத்தலின், குடிகள் மரியாதையைக்காக்கும்
பொருட்டேனும் பிரதிஞ்ஞா வாக்கியத்தைக் காப்பாற்றுவாயாக இக்ஷுவாகு
குலத்திற் பிறந்தும் சுயம் தசரதரெனப் புகழ்பெற்றும் முனிவருக்குரையைக்காப்பா
ற்றுமல் பொய்யாக்குவையாயின் வேறு யார் காப்பாற்றுவர். நும்மனோரால் நியமித்த
விவகாரப்படி நீதியாக அஞ்ஞானிகளாகிய பிராணிகளும் மரியாதையைக் கடவா
வாயின் நீர் கடத்தல் நீர்மையாமோ இந்திராது கிருகத்தில் வைத்திருக்கும் அமிரு
தமானது நாற்புறமும் வளர்ந்திருக்கும் அக்கினியால் பிரசித்தமாகக் காக்கப்படு
வதேபோலப் புருடசிங்கமாகிய இம்முனிவரானே இராமன் அஸ்திரவித்தை பயின்
றவனாயினும் பயிலாதவனாயினும் அவனை அரக்கர் தீண்டவும் வல்லரல்லர். கூறியது
உமது மனதில் தெளியுமாறு அவர்பெருமையை விஸ்தாரமாகக் கேட்பாயாக,
இவர் தரும விக்கிரகமாக விளங்குபவர், வீரியவான்களுக்குள் உயர்ந்தவர், இவ்வுல
கில் மதியினுமுயர்ந்தவர், தவத்திற்குமேலாய இடமாயுள்ளவர், பலவேறு வகைப்
பட்ட அஸ்திரங்களையு முணர்ந்தவர் என்பது சராசரமாயுள்ள மூவுலகங்களிலும்
பிரசித்தமேயாம் இம்மூவுலகில் இவரினும் அயலாய எவனும் இவ்வண்ணமறிந்
திலன் அறியவு மாட்டான். எத்தேவர்களேனும், எவ்விருடிகளேனும், எவ்
வசுரர்களேனும், எவ்வரக்கர்களேனும், எந்நாகரேனும், எவ்வியக்க கந்தர்வ
ரேனும், இவர் யாவருமொருங்கு சேர்ந்தேனும், இம்முனிவருக்கு மகிமையால்
சமானமாகார் பிருகு அங்கிரா அகஸ்தியர் முதலிய மகரிஷிகட்கும், பிரஹ்மா
முதலிய தேவதைகட்கும் தனித்தனியும் குறைந்த மகிமையாதல் கூடாமை
யின் கூறியதெவ்வாறு பொருந்துமெனின்? அவ்வாறாயின் தத்துவ திருஷ்
டியினானே இவருக்குப் பிரஹ்மத் தன்மையையும், மற்றையர்க்கு அபிமானத்
தாலாய பரிச்சின்னத்தன்மையையும் கருதியிது கூறப்பட்டதாம்; எனத்தோடமின்
றாம். பிரஹ்மத்தன்மையினானும் அவர்கட்கு இவரொப்புமை கூடுமேயெனின்? ஆண்
டுப்பேதமின்மையினானே பேதத்தாலாகும் ஒப்புமைகூடாமையின்; அவ்வாறே "
அவனுக்கிடர் செயவமரரும்வல்ல, ரல்லரான்மா விவர்கட்கவனாம்" என்னுஞ் சுரு
தியுமுளது (இம்மறையை முன் 20-வது பக்கம், 7-வது வரியிலுள்ள சுருதியென்
னும் சப்தத்தானுமுணர்க) பகைவராற் சயிக்கமுடியாத கிருசாசுவனால் உண்டாக்
கப்பட்ட அஸ்திரம் முன் இராஜ்ஜிய பரிபாலனம் செய்து கொண்டிருந்தபோது
இக்கௌசிகர்பொருட்டு இவர்தவத்தான் மகிழ்ந்த ஸ்ரீமன் மகாதேவரானே கொ
டுத்தருளப்பட்டது இது பூர்வராமாயணத்திற் பிரசித்தமாம், சங்காரஞ் செய்
வதில் உருத்திர சமானரும், வெற்றியோடுகூடிய வீரரும், மிகுந்த தேஜசை
யுடையவரும் பகைவரைச் சயிப்பதில் அபரிமித ஆற்றலுற்றவரும் ஆகிய கிருசாசு
வமைந்தரான அஸ்திரதேவர், தவமகிமையானே வயப்படுத்தப்பட்டிருத்தலின்
இவ்விசுவாமித்திரரைத் தாசரைப்போலச் சேவிக்கின்றனர். அவர்களுள் முக்கி
யர்கள் யாவரென்னின்? தக்கன் மக்களாகிய தருணியர்கள் ஜயையெனவும்
சுப்பிரபையெனவுமிருந்தனர்கள், அவர்கட்கு ஒருவரானும் வெற்றிகொள்ள முடி
யாத நூற்றுக்கணக்கான மைந்தர்களுண்டாயினர். ஜயையானவள் பதியின் பணி
விடையாற் பெற்ற வரத்தையுடையவளாய் முன்னர் 500 குமாரர்களைத் தந்த

னள், அவர்கள் தேவசேனைகளாற் கொல்லத்தக்கனவாய அசுரரைக்கொல்லும் ஆற்றலுடையவர்களாகி இஷ்டப்படி சஞ்சரிப்பவர்களாயிருந்தார்கள். சுப்பிரபை யானவள், பகைவரஸ்திரங்களையடக்கும் ஆற்றலுடைமையின் சங்கர்ஷர் எனப் பெயரியவரும், ஒருவரானும் எதிர்க்கமுடியாதவரும், பார்க்கப் பயங்கரமான வடிவரும், மிக்க வலுவுடையவரும் உயர்ந்தவரும் ஆகிய 500 மைந்தரை யீன்ற னள் இவ்வாறு, இவ்விசுவாமித்திர முனிவர், வீரியத்தையும் பெருந்தேஜசையும், யோக பலத்தால் உலக முழுவதையும், நேரே காணும் ஆற்றலுடையவருமாவர். அத னுனே, இராமனது எதிர்கால விஜயத்தையும் தெரிந்தே வந்திருக்கின்றாராதலின் இராமனது செல்கையில்மதியைச் சஞ்சலப்படுத்திக்கொள்ளுதல் தகுதியல்ல வாம். இந்த மகா மகிமை வாய்ந்த முனீந்திரரது அருகிலிருக்கும் சாதாரணமா கிய புருடனும் மரணத்தை யடைந்தபோதினும் அமரத்தன்மையை யடைவான் அதாவது புருட சகிதனுவன்; ஆகவே சாதாரண புருடனுக்கும் இவரது சந்நிதி மாத்திரத்தானேயும், அதாவது இவர்பாலடைவுற்றபோதினும், மரணபய மானது உண்டாகமாட்டாதாம், மாறாகவோ அமரத்தன்மையின்டைவாம், ஆம் போது மகாப்பிரபாவமுடைய இராமனைத் துச்சராய அரக்கரினின்றுங் காப்பாற் றுவதில் நீர் பயமுறல் முற்றினும் பொருந்தாததே யாமாதலின் மூடரைப்போல மோகத்தை யடையாதீர்.

9-வது ஸ்ரீவசிஷ்டர் சமாதான வர்ணனம் முற்றிற்று.

## 10-வது ஸ்ரீராகவர் துயரின் வர்ணனம்.

இப்போது அரசரால் ஏவபபட்ட சேவகன் சென்று ஸ்ரீ இராமரது விவகா ரத்தை யுணர்ந்து மீண்டும் வந்து அரசர்பால் முழுவதையும் மொழிதல் வருணிக் கப்படும். இவ்வாறு ஸ்ரீ வசிஷ்டபகவான் கூற அரசர் மிக மகிழ்வுற்ற மனத் தராய் அருமை மைந்தராகிய ஸ்ரீ ராமரை இலக்குமணரோடும் அழைத்து வரு மாறு, சேவகனை விளித்து, ஹேசேவக! பெருந் தோளையும் பராக்கிரமத்தையும் உடைய இராமனை இலக்குமணனோடும் விரைவில், இடையூறின்றி முனிவரது யாகஞ் சித்தித்தற்பொருட்டும், உண்மை மொழியைக் காக்கும் வடிவ மகா புண்ணி யததில் முன்னுண்டாய பொய்ச் சோகம்போலக் காலதாமதத்தால் வேறேதே னும் விக்கினம் உண்டாகாம விருத்தற்பொருட்டும், அழைத்து வருவாயாக வென்றனர். இவ்வரசரால் ஏவப்பட்ட அவன் சென்று அந்தப்புரத்திலிருக்கும் ஸ்ரீ இராமமந்திரத்தினின்றும் முகூர்த்த மாத்திரத்தில் வந்து அரசரை நோக்கி, ஹேதேவரீர்! சகல சத்துருக்களையும் சயித்தவரே! ஸ்ரீ இராமர், தமது மந்திரத் தில், இரவிற் றாமரையில் வண்டிருப்பதே போலத் துக்கமனத்தரா யிருக்கின்றனர், ஒருபோது கணத்தில் வருகின்றேனென்கின்றார், ஒருபோது தியானத்திலிருக்கின் றார்'கூறுதல் வாக்கு மாத்திரத் தானே யிருக்கின்றதேயன்றி மனப்பூர்வகமாகவில்லை முக்கியமாகத்தியானமே செய்கின்றார் (கணம் கடிகையினுறிலோர் பாகம்) சமீபத்தி லொருவருமிருக்க இச்சிக்கின்றாரில்லை, மதி வாடியுள்ளார்; என்றனன். என்றபோது அரசர் அச்சேவகனோடு ஸ்ரீராமரது சமாசாரத்தைத் தெரியப்படுத்த வந்திருக்கும்

அவரது சேவகரை, அதட்டிக் கேட்பின் அனைத்தையும் சரியாய்ச் சொல்லாரென்றெண்ணி அவர்பால் மிகப் பிரீதி காட்டி முறையாக யாவற்றையும் கூற வேண்டுமெனக் கேட்டனர். இராமன் எவ்வாறொழுகுகின்றனன், இளைத்தல் துயருறல் முதலிய வற்றின் நிலைமை யெங்ஙனிருக்கின்றது என அரசராற் கேட்கப்பட்ட ஸ்ரீ இராமரது சேவகர் அரசரை நோக்கித் துக்கிதரா யிவ்வாறு கூறத் தொடங்கினர்:—ஹே தேவரே தங்களுடைய மைந்தராகிய ஸ்ரீ இராமர் இளைத்த யாக்கை யோடுந் துயருற்றிருத்தலைக் கண்டு மெலிந்த இந்த யாங்களும் துக்கிதராயித் தேகக்குச்சியைத் தாங்கிக் கொண்டிருக்கின்றோம். காணப்பட்ட எங்கட்கும் இத்தகைய துக்க இளைப்புகள் உண்டாயிருப்பின் அவருக்கிவைகளைப் பற்றி யாங்கள் கூறவுமா வேண்டும், கமலபத்திர நேத்திரமுடைய ஸ்ரீ இராமர் மறையவரோடுந் தீர்த்தயாத்திரைக்குச் சென்று வந்த நாள் முதலாக மனோவியாகூலத்தோடு கூடியவராகவே யிருக்கின்றனர். எங்களுடைய முயற்சியினாலும், வேண்டுகோளினாலும் நாடோறுஞ் செய்யும் தமது போஜனாதிவியாபாரத்தை வாடிய வதனத்தராய்ச் செய்தாலுஞ் செய்வர், செய்யாமலுமிருப்பர், அதில் விருப்பமே கிடையாது ஸ்நானம், தேவார்ச்சனை, தானம், ஆதானம், போஜனம், முதலியவற்றில் மனமேயில்லை. வேண்டிக்கொண்ட போதினும் திருப்தி யுண்டாம் வண்ணம் உண்ணுவதேயில்லை. விளையாடும் வீட்டில் ஊஞ்சற் போட்டாடாநின்ற சஞ்சல லீலைசெய்யும் அந்தப்புர மங்கைமாரோடு, மழைத்தாரைகளோடு அவற்றை யுண்ணும் சாதகப்புள் விளையாடுவதே போல விளையாடுவதில்லை. முகுள் போன்ற மாணிக்கங்கள் பதித்த கேயூரம் கடகம் மாலை முதலியவை யவரைச் சுவர்க்கத்தினின்றும் விழப்போகின்றவனுக் காங்குள்ள விடயம் போலும் மகிழ்விப்பதே கிடையாது. கிரீடைப் பெண்களாற் பார்க்கப்பட்டவைகளிடத்தும், அவர்தம்பார்வையின் கண்ணும், அவர்களுடைய பார்வையே யாயபாணங்கள் போலும் விசாலமடையும் புட்பக்காற்றுகளினும், கொடிகள் சுற்றிச் சுற்றி யிலங்கும் லதாமண்டபங்களினும் மிகுந்த துயர முடையவராகின்றார். எப்பொருள், புசிப்பதில் உலக சாஸ்திர விரோத மற்றதாமோ, இரசமுடையதாமோ, கோமளமாமோ, மனோகரமாமோ, அதனானே கண்ணீர் நிறைந்த கண்களுடையவர்போலப் பெருந்துயருறுகின்றனர். நடனவிலாசங்களில், அலுக்குக்குலுக்குமெலுக்கு அழகுவிலாச முதலியவற்றாற்சோபித்து ஆடும்காமினிகளாகிய புரமாதரைநோக்கி என்னே இவர் துயரை யீயுகின்றனர், என இகழ்வர் போஜனம், சயனம், வாகனம், விலாசம், ஸ்நானம், ஆசனம், என்னும், தோடமற்ற இவைகளில் உன்மத்தன் விவகரிப்பதேபோல மகிழ்வதே கிடையாது. சம்பத்தாலென்னே! விபத்தாலென்னே! மனையாலென்னே! மனோரதங்களாலென்னே! யாவுமே சாரமற்றனவாம். எனக்கூறி மவுனமாகத் தனியேயிருப்பர். பரிகாசங்களில் மகிழ்வதில்லை, போகங்களில் மூழ்குவதில்லை, தொடங்குங் காரியங்களில் அவாவுமில்லை, மவுனியாகவே யிருக்கின்றார். புட்பரத்தினப் பூங்கொத்துக்கள் அசைந்தாடும் கூந்தலையும், சிருங்காரக் கருத்தாலுதித்த சேட்டையோடுகூடிய விழிகளையும் உடைய மங்கைமார்கள், அளகபாரம்போன்ற மலர்க்கொத்துக்களையும், கூறிய

சேட்டையைப்போன்ற சஞ்சல நேத்திரங்களையும் உடைய பெண்மான்கள்
வனதருவை மகிழ்வியாததேபோல அவரை மகிழ்விக்க முடியாமலிருக்கின்றார்
கள். ஆரண்யங்களிலிருக்கும் ஜந்துக்கட்கொப்பாகிய பாமரர்களிடத்தில் தெய்
வீகமாக விற்கப்பட்ட மனுடன் ஏகாந்தமான தலங்களிலேயே மகிழ்வதேபோல
ஏகாந்தங்களிலும், திக்கந்தங்களிலும், தீரங்களிலும், ஆரண்யங்களிலுமே
அவர் மகிழ்கின்றனர். உடுத்தல் குடித்தல் உண்ணல் நண்ணல்களில் வெளிப்
படையாக உபேக்ஷையாயிருத்தலின் தவமுடைய எதையுமேலாத சந்யாசியர்
போலவே யொழுகுகின்றார். ஜனசூனியமாகிய தேயத்தில் ஒருவராகவே
யிருந்துகொண்டு முக்கியமாகிய மதியினானே நகையாடுவதுமில்லை, பாடுவது
மில்லை, அழுவதுமில்லை; ஆனாலாண்டென்னே செய்கின்றாரெனின்? பதுமா
சனத்திலிருந்து பரமார்த்தப் பற்றுதலானே, இடதுகைத்தலத்திற்கபோல தலத்
தைத்தாங்கிக்கேவலம் தியானத்திலேயே யிருக்கின்றார். அபிமானத்தையுமடை
வதில்லை, மன்னவனாந் தன்மையையும் வாஞ்சிப்பதில்லை. இஷ்ட அநிஷ்ட வஸ்
துக்கள் கிடைக்கும்போதுண்டாம் சுகதுக்கங்களில் மகிழ்ச்சி வாட்டங்களையும்
அடைவதில்லை. இவர் செல்கின்றதென்? செய்வதென்? விழைகின்றதென்?
தியானிக்கின்றதென்? வருகின்றதென்? எங்ஙன மென்னனுசரிக்கின்றாரென்
பதை யாங்கள் அறியமுடியவில்லை. தினந்தினம் இளைத்தேவருகின்றனர், தினந்
தினம் வெளுத்தேவருகின்றனர். சரற்காலமுடிவிலுள்ள காயுந்தருவைப்போ
லத் தினந்தினம் வைராக்கியத்தையே யடைகின்றனர். ஸ்ரீ ராமரை நேயத்தா
லனுசரித்த சத்துருக்கினர் இலக்குமணர் என்பவர்களும் அவ்வாறே அத்தகை
யினர்களேயாகி அவருடைய பிரதிபிம்பம்போலவே நிகழ்கின்றனர். தாசர்களா
லும், அரசர்களாலும், தாய்மார்களாலும், மீண்டுமீண்டுந் தழுவிக்கொள்ளப்
பட்டவராயினும், அவர்களாற் பரிகரிக்க முடிவது யாதொன்று மில்லையெனக்
கருதி ஒன்றுமில்லையெனச் சொல்லித்தமது கருத்தைக் காண்பிக்கும் சேட்டை
யற்றுச் சும்மாகவே யிருக்கின்றனர். இந்திரியங்களாலனுபவிக்க ஆரம்பிக்கும்
போதுமாத்திரம் மனோரம்மியமாகிப் பின்பு விடம்போலாம் போகங்களில் மன
த்தை யழுத்தாதீர்கள் எனச் சமீபத்திலிருக்கும் இனிய நேயர்களாகிய விவேகி
களை நோக்கிச் சிக்ஷிப்பர். பல வைபவங்களோடு கூடி இரம்மியமா யிராநின்ற
விலாசஸ்தானத்தை யடைந்துள்ள மங்கையர்பால் புறத்திருப்பவரேபோல நேய
மேகிடையாது, அழிவையேகாண்கின்றனர். ஆயாசமில்லாமல் அடையத்
தக்க மோக்ஷபதத்தை யடையாமற்போம் புருடரானே பாகியப் பிரவிருத்தி
களால் ஆயுள் வீணே கழிக்கப்பட்டதென்றும், அநாயாசமாக அடையத்தக்க
பதத்தை யடையாமற் போம்படியான தொழில்களால் என்னால் ஆயுள் வீணே
கழிக்கப் பட்டதென்றும், மாதுரியமும், வெளிப்படாததுமாகிய வாக்கி
னானே அடிக்கடி பாடாநிற்பர். இராஜசூய யாகஞ்செய்து மண்டலேசுராயிரு
ந்து தமதாணையால் உலகைப் பாலிக்கும்படியான சம்ராட்டாக நீராகக்கடவீர்
என்று புகன்று அருகாமையிலிருந்து தொடர்ந்து வாழுபவனைப் பிதற்றுகின்ற
பித்தனைப்போல நோக்கிச் சுவப்பிரகாசமாக விளங்கலின் சம்ராட்டெனப்படும்
பரமாத்மாவாகிய வேறுபொருளில் மனத்தைவைத்தவராகி, யஃதுணராப் பெரு

மையின் முனிவராகி, அதாவது, அதனையாலோசிப்பதிற்றற்பரராகி, தாங்கருதி யதைக் கூறுமலும், அசாரத்தைக்கூறுதலுங்கண்டு உபேக்ஷையையும் நகைப் பையுமெய்துகின்றனர். என்னசொல்லினுங் கேட்பதேயில்லை, முன்னிருப்ப தையும் நோக்குவதில்லை, குணத்தானும் பலத்தானும் அழகியனவாகித்தமக்கு மிட்டமாகிய பொருள்கள் கிடைத்தபோதினும் அவ்வியாவற்றையும் இகழ்கின்ற னர். குணுதிகளின் மேன்மையானே ஆச்சரியப்படத் தகுதியாய பொருளில் ஆச்சரியப்படலே தகுதியாக அதன் கண்ணிகழ்ச்சியுண்டாகக் காரணமென் னெனின்? எம்மனத்தின் கண்ணே பாகியவஸ்து கோசர ஆச்சரியம் ஆமோ அம்மனமே இத்தகைய ஆச்சரிய இடமாகும். எங்ஙனமெனின்? ஆகாசரூபத் திலேனும், ஆகாசத்திலிருக்கும் பெருவனத்திலேனும் அத்தகைய தாமரைக் கொப்பாதலின். (உம்மையிரண்டும் அசம்பாவனை யிரண்டை யிலக்குவனவாம்.) ஆகாயத்தில் ஆரண்யமும், ஆரண்யத்தில் தாமரையும் முற்றினும் சம்பவியாத தேபோல ஆன்மாவின்கண்ணே மனமும், மனத்தின் கண்ணே ஆச்சரியமும் ஆமென்னும் துணிபானே இவருக்கு வெளிவத்துவில் விஸ்மயமுண்டாவதே கிடையாது. மங்கைமார் மத்தியிலிருந்தபோதிலும் இவர் மனதை மன்மத பாணங்கள் பிளப்பதில்லை, பெரும்பாறையை மழைத்தாரை பிளவாதன்றோ. ஆபத்துக்கட்கு முக்கிய வாசஸ்தானமாகிய தனத்தையா விரும்புகின்றீர்களெ னக்கூறி எல்லாத்தனத்தையும் யாசகர்பொருட்டு அள்ளி அள்ளிக்கொடுக்கின் றார். இஃதாபத்திதுசம்பத்தென்னுங் கற்பனைப் பெருக்கான மோகம் மனத்தி னின்றும் உண்டாயதென்னும் கவிகளைப்பாடுகின்றார். தங்களுக்கிட்டமானவை நழுவிவிடின், யான்கொல்லப்பட்டேன், யான் நாதனற்றவனாயினேன் எனப் பெருந்துயரடைந்தபோதினும், அதாவது, உடன் பாடெதிர்மறைகளானே இராக முதலியவை துயரமெனக் கண்டபோதிலும், இவ்வுயிர்கள் வைராக்கியமடைவ தேகிடையாது; அகோ ஆச்சரியம்! எனக்கூறுகின்றார். இரகுவம்சமாகிய கானனத்திலுள்ள சால (ஆச்சா) மரமாகிய பகைவரைக்கொல்லும் ஸ்ரீ ராமர் நிரந்தரமிவ்வாறு இருத்தலினானே, யாங்கள் துயரத்தையடைந்துள்ளோம். அத் தகையமனத்தையுடைய அவருக்கு என்ன செய்வதென எங்களுக்குத்தெரிய வில்லை இவ்விடயத்தில் நீர்தானெங்கட்குக்கதி. ஆனால் நீதியறிந்தவர்களைக்கொ ண்டு நல்வியவகார உபதேசத்தானே அவனுடைய மோகத்தைக் கெடுக்கலாமே யெனின், இராஜ நீதி வியவகாரங்களை யுபதேசிக்கும் அரசர்களையும் மறையவர் களையும் அஞ்ஞர்களைப்போல நகைக்கின்றதுமன்றி வியாகூலமிலாது இகழ்கின் றனர். எவ்வுலகமானதுதித்து இஃதிஃதென விஸ்தாரமாகப் பலவகையாய் வெளிமுகவிருத்திக்கு விடயமாய்த் தோற்றியழிந்தேபோமோ அது சன்மாத் திரமாகவேயிலங்கும் வஸ்துவாகமாட்டாது. யானென்னும் ஞான விடயமும் அஃதல்லவாம்; மற்றோ, அயலான தன்மையதே யென நிச்சயித்து அஃதை யறியவேண்டுமென்னும் அவாவினராயிருந்து கொண்டிருக்கின்றனர். சத்துரு வின்பாலும் மித்திரன் பாலும் தம்பாலும் தாயிடத்தும் இராச்சியத்தின்கண் ணும் பிறவற்றிலும் சம்பத்து வந்தாலும், விபத்து வந்தாலும் பற்றுதலே யவ ருக்குக்கிடையாது. தமததீனமான பற்றுதலும், பராதீனமான அவாவும், விசே

டமின்மையினுனே இச்சையும், கிடையா வெளிவிடயத்திலிங்ஙனுயின் உள்ளே அக்ககாரணமில்லாமையின் எவ்வாறு துக்கியாதல் கூடுமெனின்? இவரான்ம இளைப்பாறுதலடையாமையே காரணமாகும். விவேகியாயிருத்தலினிவர் மூடருமல்லர், விசிராந்தியெய்தாமையின் முத்தருமல்லர், அதனுலியாங்கள் நிரந்தரம் தாபத்தையடைகிருேம், தனத்தாலென்னே, தாயராலென்னே, இராச்சியத்தாலென்னே, தொழிலாலென்னேயென்னும் உள் நிச்சயமுடையவராய், இராகாதி தோடங்களே பிறப்பிற்குவித்தாதலின் அஃதற்ற எனக்குப்பிராணனை விடுதலானேமுத்தியாம் என்னுங்கருத்தால் பிராணனை விடத்துணிந்திருக்கின்ருர். போகத்திலும், ஆயுளிலும், இராஜ்யத்திலும், மித்திரரிடத்தும், தாய்தந்தையரிடத்தும், மழையிலாதபோது சாதகப்பக்ஷியானது வாடுவதேபோல மிகவும் வாடியிருக்கின்ருர். இவ்வாறு மைந்தனிடத்தில் வந்திராநின்ற மனவாட்டம் இளைப்பு முதலிய சாகைகளின் பரவுதலானே அதிவிஸ்தாரத்தையடைந்த ஆபத்தாகிய கொடியை வேரோடுங் கெடுக்கத்தயையோடுகூடிய நீங்கள் மிகவும் முயல்வீர்களாக. மேற்கூறிய இயற்கையோடு கூடியிருக்கும் ஸ்ரீ ராமருக்குச் சம்பூர்ண ஐசுவர்யத்தோடுகூடி வஞ்சகவேடம்புனைந்த இச்சம்சார ஜாலமானது பிரதிகூலமாகிய விடம்போலிருக்கின்றது. இத்தகைய அவரை உலக விவகாரத்தில் புகுத்திவைக்கும் ஆற்றலுடைய மகானுபாவர் இவ்வுலகில் எங்கேயிருக்கப்போகின்ருர், இரார் இரார், உங்களையன்றி வேறு யாரிருக்கின்ருர், உங்களைப்போன்ருவது யாவரேனுமிருப்பின் இது முடியக்கூடியதேயாகும். எங்ஙனம் இருளையகற்றும் சூரியர் பூமியின்கண்ணே தமது ஒளியைப் பயனுடையதாகச் செய்கின்றனரோ; அங்ஙனம், விவேகத்தைத்தடுக்கும், துயரமாகிய இருளை யுண்டாக்கும் சகல மோகத்தையும் ஸ்ரீ இராமருடைய மனத்தினின்று மகற்றி இவர் விடயத்தில், தமது சாதுத்தன்மையை யுபதேசிக்குமாற்றலைப்பயனுடைய தாக்குகின்ற மேன்மைவாய்ந்த மனத்தினரெங்குளார்?

10-வது ஸ்ரீ ராகவரது துயரின் வர்ணனம் முற்றிற்று.

---

## 11-வது, ஸ்ரீ இராமரைச் சமாதானித்தல்.

இப்போது ஸ்ரீவிசுவாமித்திரருடைய ஆணையினுனே சபைக்கழைத்துவரப்பட்ட ஸ்ரீ இராமரை அரசர் சமாதானப்படுத்தலும், மனத்துயர முதலியவற்றின் காரணம் வினுதலும் வருணிக்கப்படும். விளம்பியவண்ணம் துயரத்தையும் மோகத்தையும் அடைந்திருப்பின், அவ்விடயத்திற் சோதிக்கும் ஆற்றலுடைய பேரறிவாளர்களாகிய நீங்கள் இரகுநந்தனனைத்தலைமானைப் பின்ருெடருமான்கள்போல இங்குவிரைவிற் கொண்டுவாருங்கள். இம்மோகம் அவனுக்கு ஆசையாலேனும் ஆபத்தாலேனும் வந்ததன்ரும், விவேகவைராக்கியவானுக்குப்போதமே மகோதயமாம். ஆபத்துக்களாலேனும் இராகங்களாலேனும் உண்டாம் ஜடத்தன்மையே மோகமாம், இஃதோ விவேகமுதலியவையுடையவனுக்குப்போத பலமுண்மையின்போதமாகிய பெருஞ்செல்வமேயாம். இராமனிங்கு விரைவில் வருவானுயின் வந்த இந்த இடத்திலேயே யாங்கள் சீக்கிரத்தில் அவன் மோகத்தை மலையின் மருவும் மங்குலை மாருதம் மாற்றுதலேபோல

மாற்றிவிடுகின்றோம். மோகமகன்றபோதினும் அவருக்குக் கிடைப்பது யாதெ
னின்? இம்மோகமானது ஊகத்தாலகற்றப்படவே இராகுநீத்தனன் எம்மனோ
ரைப்போல, முன்னின்ற "அது விஷ்ணுவினது பரமமாம்பதமாம்" என்னும்
சுருதிப்பிரசித்த உத்தமபதமாகிய தன்னான்மாவின் கண்ணிளைப்பாறுவன். கெ
டாத வஸ்துத்தன்மையையும், பரமானந்த ரூபத்தகைமையையும், அபரிச்சி
ன்ன ஞானரூபத்தன்மையையும் ஆனந்தம் வெளிப்பட்டபோதுண்டாம் பிரஞ்
ஞையையும், இளைப்பாறுதலையும், தாபமின்மையையும், தேகத்தில் பருமையை
யும், பேரழகையும், அமுதபானஞ் செய்தவன் மறையறைந்த அறப்பயனைக்
கண்கூடாய்க் காண்டலின் மெய்ம்மையை, சுவர்க்க சுகித்தகைமையை, தெய்
வஞான அடைவையுமுறுவதே போலடைவன். விவகாரம் அவித்தையாலுண்
டாயதெனப்பிரசித்தமாதலின் குடைநீங்கவே நிழல் நீங்கினாற்போல அதி னீக்க
முமாம், அஃதோ பிரஜைகட்கிட்ட மன்றெனின்? தனது வருணா சிரமத்திற்
குத்தகுதியாய்த் தொடங்கிய விவகாரபரம்பரையையே யிடையீடிலாது நிறை
ந்த மனத்தனாகிமானியனாய்ச் செய்வன். அவாவிய அனைத்தையுமடைந்தவ
னாயினும் வாழுமவன் சர்வவிவகாரத்தையும் விடமுடியாமையின் இஃதியமை
யாது கொள்ளத்தக்கதாயதொடங்கிய விவகாரத்தை விடுத்து வேறொன்றைக்
கொள்ளக்காரணமின்மையினானும், தனது நடையைக்கண்டு நடக்கும் பிரஜை
கட்கனுக்கிரகித்தற் பொருட்டும் தனது விவகாரபரம்பரையைத் தடையிலாது
செய்வன்.

அவற்றைச்செய்து அவற்றிற்பற்றறின் அதனால் முன்போலச் சுகதுக்க
தசையுடையவராகவும் ஆவரேயெனின்? ஆகான், மனனாதியாலாகிய ஞான
திடவலுமையென்னும் மகாசத்துவத்தையுடையவனாகியும், உலகிற் காரணதத்
துவம், காரியதத்துவம், பிராணிகளின் பரமபுருடார்த்தரூபம், சமுசாரத்தூற்ற
சுழல்கைவடிவமென்னும் பாரவாரங்களை விவேகத்தாலுணர்ந்தவனாகியும், உலக
வடிவமாகிய விராட்டையும், அவ்யாகிருதத்தையும், ஹிரண்ய கருப்பரையும்
உண்மையாகப் பிரஹ்மமே அயலல்லவென அறிந்தவன்; இதனானேபற்றறவே,
சுகதுக்கதசையற்றவனாகியும், ஓடுகல் பொன்களிற் சமமதியுடையவனாகியும்
ஆவன். என்றிவ்வாறு முனிநாதர் கூறவே, அரசர் நிறைந்த மனத்தராகி ஸ்ரீ
இராமரையழைத்து வரும்பொருட்டுத் தூதபரம்பரையை ஸ்ரீ வசிஷ்டவாக்கிய
த்தின் முன்பும் வேறு தூதர் அனுப்பப்பட்டிருப்பினும் மீண்டும் அனுப்பினார்.
முனிவர் மொழிந்துகொண்டிருந்தபோது தூதர் வந்ததும் இராகவருந்தமதரண்
மனையுள்ளாசனத்தினின்றும் தந்தைபால் வந்து சேவிப்பான் அசலத்தினின்றும்
அருக்கன்போல எழுந்து தேவேந்திரரது சுவர்க்கம்போலிருக்கும் ஸ்ரீ வசிஷ்ட
விசுவாமித்திரரது திருவடிபடலாற் புண்ணியமாகிய தமதுபிதாவினுடைய அக்
கொலுமண்டபத்தை நோக்கிப் பலதாசர்களும் சகோதரர்களும் சூழ வந்தனர்.
வரும்போது தூரத்திலேயே தேவர் கூட்டத்தாற் சூழப்பெற்ற தேவேந்திரரைப்
போல மன்னவர் கூட்டத்தாற் சூழப்பெற்ற தசரதரை ஸ்ரீவசிஷ்ட விசுவாமித்திர
மகரிஷிகளாவிருபக்கத்திலும் பிரியமும் இதமும் மதுரமுமாகிய மொழிகளான்
மகிழ்விக்கப்பட்டவராகவும், சர்வசாஸ்திர அருத்தங்களையும் உலகில் விரிக்கும்

மகாமதியையுடைய மந்திரிமார்களானே சூழப்பெற்றவராகவும் திக்குகளே யுருவெடுத்து வந்தனபோன்று தக்கபடி நிற்கும் அழகிய சாமரைக்காரங்களோடுற்ற மங்கைமாரால் இனிது சேவிக்கப்பெற்றவராகவும், இருப்ப ஸ்ரீஇராமர் கண்டனர்.

ஸ்ரீ வசிஷ்ட விசுவாமித்திராதியரும், தசரதாதியரும், அருகில்வராகின்ற ஸ்ரீ இராகவரைத் தூரத்திலேயே ஸ்ரீ சுப்பிரமண்யரைப்போலத் தரிசித்தனர். சாந்தி விவேக காரணமாகிய சத்துவகுணத்தாலுள்ளே வியாபிக்கப்பெற்றதும், யாவரானும் பூசிக்கத்தக்கதும், முடிபறியமுடியாததும், வெளிப்பட்டதும் ஆகியதாபத்தையறுக்கும் மகிழ்ச்சியுண்மையோடுகூடிய ஸ்ரீ இராமரை, பிராணிகளின் இல்லங்களாலுள்ளே வியாபிக்கப்பெற்றதும், கலைகளோடுகூடிய நிலவாற் சேவிக்கத்தக்கதும், முடிபறியமுடியாததும், வெளிப்பட்டதும் ஆகிய தாபத்தைத் தவிர்க்கும் பனிப்பான்மை மேவிய ஹிமாசலத்தைப்போலத் தரிசித்தனர். காண்பதற்குப் பிரியமானதும், குறைவு மிகுதியற்றதும், சுபவடிவதும், விநய உதாரமனத்தோடுகூடியதும், மனோஹரமும், உக்கிரமற்றதும், பரம புருடார்த்தத்தைப் பஜிப்பதும், இனிதெழுந்துவாராநின்ற யவ்வனத்தொடக்கமுடையதும், பெரியாரைப்போலும் உபசாந்தியாலழகுற்றதும் ஆகிய திருமேனியுடையவராகவும் அவிவேகமின்மையின் கலக்கமற்றவராகவும், பரமானந்தத்தையடையாதவராகவும், மனோரத மியாவற்றையுமடைந்தவராகவும், இருப்ப ஸ்ரீ இராமரைத் தரிசித்தனர். சமுசாரகதியை விசாரித்தவரும், பவித்திரமாய குணங்கட்கும் அவற்றையுடைய புருடர்கட்கும் விடயமானவரும், மகாசத்துவமுக்கிய லோபத்தானேபோலும் எல்லாக்குணங்களும் நன்கடையப்பெற்றவரும், உதாரமானதும் புகழப்பெற்றதும், கலக்கமிலாத இருப்பினானே சர்வசாதன சம்பத்திருந்தபோதிலும் தத்துவஞான இளைப்பாறுதலின்மையின் சிறிது நிறைந்ததும் ஆகிய அந்தக்கரணப் பொந்தினைத்துவாரம்போலுமிருந்து மனோரதத்தைக் குறிப்பிப்பதாகவுடையவரும், உத்தமோத்தமமானவரும் ஆகிய ஸ்ரீ இராகவரைத்தரிசித்தனர். இவ்வாறாய குணகணங்களோடு கூடியவரும், நகைப்பதுபோலும் நிர்மலத்தினும் நிர்மலமாகிய தமது அளவுபட்ட முத்துமாலையாடைகளாகிய தளிர்களையுடையவரும், ஆகிய இரகுகுலதிலகர்; அசையாநின்ற அழகிய சிரோரத்தினப்பிரகாசத்தோடுற்றதும், பூகம்பத்தாற் சலியாநின்ற மேருகிரியின் அழகோடுற்றதும், ஆகிய சிரசினானே தூரத்திலேயே வணங்கினர். இச்சர்க்க முதலிற்கூறிய வண்ணம் ஸ்ரீ விசுவாமித்திர முனீந்திரர் கூறிக்கொண்டிருந்தபோது கமலலோசனராகிய ஸ்ரீ இராமரும் தந்தையின் பாதவந்தனஞ்செய்யும் பொருட்டு வந்தனர். முதலிற்றந்தையையும், பின்பூஜிக்கப் பெறுபவரானும் பூஜிக்கப்பெறும் ஸ்ரீ வசிஷ்ட விசுவாமித்திர மகரிஷிகளையும், பின்மறையவரையும், பின்பந்துக்களையும், பின் குருமார்களையும், அழகிய இருதயத்தையுடைய ஸ்ரீ இராமர் வணங்கினர். பின்பார்வையினானும் தக்கவர்களிடத்தில் விநயத்தைக் காட்டும் சிறிது வணங்கிய சிரமசைத்தலினானும், வாக்கினானும் அரசக்கூட்டங்களாற் செய்யப்பட்ட நமஸ்கார பரம்பரையை யேற்றுக்கொண்டனர். முனிவர்களானே ஆசீர்வதிக்கப்பெற்றவராகி, ஆசீர்வாதார்த்த இலாபாலாபங்களில்சமமனமுடையவராகி, பிதாவினது புண்ணியமாகிய அருகாமையைச்சுரசுந்தராய இர

ருநந்தனர் அடைந்தனர். பாதத்தைவணங்குவதிற்றற்பரராய ஸ்ரீ இராமரை அரசர்
நன்கு தழுவி உச்சி மோந்து விரைவில்மீண்டு மீண்டும சிரசில் முத்தந்தந்தனர்
பகைவரது வீரத்தைமாற்றும் ஸ்ரீ இராமரைப்போலவே சத்துருக்நரையும இல
க்குமணரையும், மிகு நேயத்தோடுந் தழுவி, இராஜஹம்சமானது தாமரையில்
முத்தங்கொஞ்சுவதுபோல முத்தங்கொஞ்சினர். மகீபதியானவர் மடியில்வந்தி
ருத்திமைந்தவெனக்கூறவும் பூமியில் வேலையாட்களால் விரிக்கப்பட்ட வத்திர
த்திலுட்கார்ந்தனர். ஹே மைந்த விவேகியாகிய நீ மங்கலங்களையெல்லாம் மரு
வவேண்டியவனாகியிருந்தும், அவிவேகியைப்போலச் சிதிலமாகிய மதியினாலே
உயிரைத் துயரப்படுத்தவேண்டாம். மோகத்தையடையாதவர்களாகிய நின்
போல்பவர்கள், பிதாமுதலிய பெரியோர் மறையோர் ஆசிரியர் அருளிய பிர
ஜைகளைக் காக்குந் தருமசாதனமாதலிற் புண்ணியமாகிய இராஜஸ்தான சுவர்க்
காதிபதத்தையடைந்து வாழுகின்றார்களல்லவா. ஹே குழந்தாய்! மோகத்
திற்கு விரிய இடங்கொடாயேலாயின் ஆபத்துக்களானவை தூரத்திலேயே
மிகக்கோமளங்களாயிருக்கும், சம்பந்தியாதனவோ தூரத்திலேயே நிற்கும்
தொடா. சம்பந்தித்தனவோ முற்றினும் மிருதுவாகியிருக்கும் தமது காரியத்
தைக் காட்டமாட்டா. மோகம் விரியினோ மொழிந்தவைமாறாகி வந்துவிடும்.
என்றரசர் கூறினர்.

பெரும்புயங்கள் வாய்ந்த அரசகுமார? உன்னால், கெடுக்கமுடியாதன
வும், துக்கத்தைத் தொடங்குவனவும், ஆக இவ்விடய சத்துருக்களிருந்தபோதி
னும் வெற்றிகொள்ளப்பட்டனவாதலின் நீ சூரனேயாவாய் என்னை? பிரசித்த
மாய சத்துருக்கள் கெடுக்கமுடியாதவர்களே யாயினும் அவர்கள் தன்னால் துக்
கத்தோடும் சம்பாதிக்கப்பட்டவர்களல்லர், விடயப்பகைகளோ தன்னாலேயே
சம்பாதிக்கப்பட்டவைகள், வேறு துக்கபரம்பரையை யுண்டாக்குபவைகள்,
கெடுக்கமுடியாதவைகளன்றே; இங்ஙனமிருந்தும் நீ, விக்ஷேபங்களாகிய பேர
லைகணிறைந்ததும் ஆவரணததான் மூடப்பெற்றதும், அஞ்ஞானிகட்கு போக்
கியமுமாகிய அருமோகப்பெருங் கடலில் ஆன்மாவை யறியாதவர்கள்போல
ஏன்மிக மூழ்குகின்றனை என ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறினர். துக்கமடைந்ததா
லாக்கப்பட்ட, அசையாநின்ற கருங்குவளைக் கூட்டத்தோடொத்த விழிகளின்
சஞ்சலத்தன்மையைவிடுத்து எவ்வேதுவினாலே நீ மோகித்துமயங்கி யிருக்கின்
றாயோ அதனைக்கூறுதி; நினது மயக்கினுக்குக் காரணமயாது? வீட்டை மூஷி
கங்கள் குடைவதேபோல எம்மனோவியாதிகள் நின்மனத்தைத் துன்புறுத்து
கின்றனவோ அவை எதன்கண் முடிவுபெறுபவை, விரும்பிய எதனையடைந்தா
லவைதீரும், எவற்றைப்பற்றியவை, எவ்வடிவமுடையன, எக்காரணத்தால்
வந்தன, எத்தனைவகையின, மனோவியாதியின் காரணமுதலியவை உலகிற்பிர
சித்தங்களேயாமாதலின் அவற்றையேன் கேட்கவேண்டும்? எனின் பிரசித்த
மென்ப துண்மையாயினும் தகாதனவாகிய மனோவியாதிகட்கு நீ யுத்தமபத
மாகமாட்டாய் ஆபத்துடையவனேனும் தரித்திரனேனு மிடமாவன், என்றெ
ண்ணுகின்றேம் தந்தையின் மகிமையினாலே உனக்குயாதொரு ஆபத்துங்கிடை
யகதாதலின் நீ யகற்றவேண்டிய ஆபத்தேயில்லை. மேலும் சர்வ சௌபாக்கியமு

முனக்கு நிறையக்கிடைத்திருத்தலின் சுயமாகவே ஆபத்துக்கள் நீங்கியிருக்கின்றன. மனேவியாதிகளும் நீங்கியேயுள்ளன. ஹே பாவமற்றகுழந்தாய்! நீ விரும்பியதுயாதோ அதனை மறையாமல் அறைவாயாக! பாவமுனக்கில்லாமையானே விரும்பிய யாவற்றையுமே யடைவாய், அவ்வாறடைந்திடின் மீண்டும் உன்னை மனேவியாதிகள் பிளக்கமாட்டா இரகுவம்ச கேதுவாகிய ஸ்ரீராமர் இவ்வாறு மகாமதியையுடைய ஸ்ரீ விசுவாமித்திரர் கூறிய, தாம் விரும்பியவை போன்ற பொருள்களின் பிரகாசத்தைத் தாற்பரியத்தில் வைத்திருக்கும் வாக்கியத்தை இருசெவி குளிரக்கேட்டு விரும்பியபொருள் கைகூடிவிட்டதாகக் கருதி மேகசர்ச்சனையைக்கேட்ட மயிற்போல அத்துயரத்தை யடியோடு விட்டனர்.

11-வது ஸ்ரீ இராமரைச் சமாதானித்தல் முற்றிற்று.

---

## 12-வது முதற்பரிதாப வருணனம்.

இப்போது, போகங்கட்குத் துக்கரூபத்தன்மை, விஷயாதிகளின் அசத்தியத்தன்மை சம்பத்துக்களின் அனர்த்தத்தன்மை முதலியவை வருணிக்கப்படும். முனீந்திரரால் இவ்வாறு கூறக்கேட்ட ஸ்ரீ இராகவர் நன்கு சமாதானத்தையடைநது பரிபூரண அர்த்தகவுரவத்தானே மந்தநடையையடைந்து அதனுனே அழகுபெற்ற வாக்கியத்தைக்கூறத் தொடங்கினர். ஸ்ரீ இராமர், ஹே பகவன்! தங்களால் கேட்கப்பட்டது முழுவதையு முள்ளபடி யிப்போது தங்களுடைய ஆணையைக்காக்கும் பொருட்டு அஞ்ஞனுயிலும் யான் கூறுகின்றேன்; என்றுட்டியத்தைக் காண்பிக்கும் பொருட்டல்ல. பெரியோர் வாக்கியத்தை யாவரேகடப்பர் என விநயமாகக்கூறி முனிவரை வயஞ்செய்து தமது விருத்தாந்தத்தை யனுவாதஞ்செய்யும் வாயிலாகத் தருமானுஷ்டானத்தா லுண்டாய மனத்தூய்மையானே யுளதாயவிவேக வைராக்கியங்களால் தமக்கு விசாரமுதித்ததைக் காட்டுவாராயினர். இந்நான் இந்தத் தந்தையினதாண்மனையிற் பிறந்து முறையாக விருத்தியையடைந்து வித்தையையும் அடைந்திருந்தேன். பின்னர் ஹே முனிநாயகரே! நல்லொழுக்க முடையவனுகி ஆர்கலியை மேகலையாயுடுத்த பூமியைத் தீர்த்தயாத்திரையின் பொருட்டுச் சுற்றிவந்தேன். இவ்வாறிருக்குங்காலத்தில் இச்சமுசாரஆசை யடியோடொழிந்து என்மனதிலினிக் கூறும்வகையாய விசாரமுண்டாயது. விவேகம்நிறைந்த யான்பின்பு சுயமாகவே போகங்களிலிச்சையின்றிய புந்தியானே இதனை விசாரித்தேன்.

அந்தோ! இவ்விஸ்தாரமாகிய சம்சாரத்தில் யாது சுகமிருக்கின்றது? ஒன்றையும் காணேம், பிராணிகள் இன்மின்மைக்கேதுவாகப் பிறக்கின்றன இறப்பதற்கு, இறப்பதுவோ பிறப்பதற்கேயாம். மரிப்பதற்கு விரையயாம் பிறந்திடுதல், பிறத்தற்கு விரையயாம் மரித்திடுதல் என்னும் வசனமுமுளதன்றே அற்றேல் அவ்வாருகுக, ஆயினும் இடையில் வைபவ பூமிகளில் சுகமனுபவிக்கப்படுகின்றதே எனின் சரங்கட்குப் பிரவிருத்தி நிவிருத்தியதீனமான சாதனத்தானே சாதிக்கப்பட்டவையெனவும், அசரங்கட்கோ, தைவத்தாற் கிடைத்த

சார்தனுதீனமானவையெனவும், இருவகையன்றேபோகப் பிரவிருத்தி, அவ் வடிவசேஷ்டையோடுகூடிய வைபவ சமயத்தில்மாத்திர மிருப்பனவாய மாலை சந்தன அன்னபானுதிவிடயங்கள் யாவுமே இன்பமீவனவாகாவாம்; திரமற்ற வையாதலின், இலாபமற்றபோதும் கைவிட்டபோதும் துக்கத்தைக்கொடுப்பன வாம். நினக்கும் அனுபவிக்குங்காலத்தில் அவற்ருற் சுகந்தானேயெனின்? இராகாதிதோடத்தைப் பயத்தலானே பரம ஆபத்தை அடைவித்தலின் ஆபத் துக்குச் சுவாமிகளாகி மேன்மைமிக்கனவாம். இவைகள் சாஸ்திர சிஷித்தங்க ளல்லாதவைகள். இனி நிடேதிக்கப்படுவனவோ பாவத்தைப்பயத்தலின் பாவ ங்களாம்; ஆகவேவிடங்கலந்த அன்னம்போலவாதலின் அதன்யோகத்திற் சுக மின்ருமென்பதாகச் சமுசாரத்திலும் சுகமின்ருமெனத்துணிவேன். அவை சுகங்கொடுப்பனவல்லனவாயின் சுகஞ்செய்விப்பனவா யொன்றற்கொன்று யாங் ஙனம் பற்றிநிற்கின்றன எனின்? எல்லாவிடயங்களுந்தாம் இருப்புச்சலாகை களாகிய ஊசிகள் முதலியவைபோல ஒன்றற்கொன்று சம்பந்தமற்றனவேயாம்; ஆனல், இம்முறையாக எனக்கிது போகசாதனம், இதனல் இவ்வகையிதனைச் செய்வேன் என்பதாதியாய்த்தன் மனக்கற்பனையானே கேவலம் கிரியைகார காதித் தன்மையானே இவை சம்பந்திக்கின்றன; இவ்வாறே அன்வயமும் விய திரேகமுங் காணப்படுதலின். கேவலம் விடயங்களின் சம்பந்தமாத்திரம் மனே தீனமன்ரும்; மற்ருே, உற்பத்தி திதிப்பிரகாச சங்காரங்களும் மனேதீனங்க ளேயெனச் சர்வாங்கிசத்திலும் காணப்பட்ட இவ்வுலகமுழுதும் மனத்தின தீனமேயாகும் ஆயின் மனமே சுகசாதனமாகுகவே யெனின்? விவேகத்தோன் றும்பொழுது மனதும் சூனியம்போலவே தோன்றுகின்றது; தோன்றவே அத னுனும் சுகமுண்டாகப்போகின்றதில்லை; இலதாகவேயாங்களிதுகாலம் வரை எதனுற் சுகமாமெனமோகித்தோம்? முடிவின் மயக்கமேயாய சம்சாரத்தில் சுகம் அதன் சாதனங்களாகிய அசத்துக்களானே, மதியினர்களாகிய யாங்கள் கஷ்டப்படுமாறு மூடமான்கள், தூரவனத்தில் கானனீராற் கவரப்பட்டன போலக் கவரப்பட்டவர்களானேம். ஒருவரால் விற்கப்படா தவர்களாயிருந்த போதினும் விற்கப்பட்டவர்கள் போலப் பரவசமாயிருக்கின்ருேம்: அந்தோ மூடர்களாகிய யாங்கள் யாவரும் அறிவாளிகளெனச் சம்பரன்மாயையினுனே எண்ணியிருந்தபோதினும் மூடர்களேயாகின்ருேம். இவ்வுலகங்களில் விடயசுக லேசங்கள்தாமென்னே! கண்டவுடன் கழிக்தேகுமியற்கையன வாதலினுலும், அளவிடமுடியாத துக்க பீஜமாதலினுலும் துர்ப்பாக்கிய ரூபங்களேயாம் புரு டார்த்தமல்லவாம். யாங்கள் வீணுகவே மோகத்தால் கட்டுப்பட்டுளேம் என் னும் மயக்கமுடையவர் களாயிருக்கின்ருேம். ஆ! நெடுநாட்கழித் தறிந் தோம், அஃதென்னவென்ருல், மூடர்களாகியயாங்கள், வனத்திலுள்ள பெருங் குழியில் மூடமான்கள் விழுவதேபோல, மோகத்தில் வீணுகவே வீழ்ந்தோம். யான்யார், இத்திருசியக்கூட்டத்திற்கு வடிவமியாதாம், யாதின் பொருட்டுவந் தது, எனக்கு இவ்விராச்சியத்தாலென்னே போகங்களாற்ருனென்னே, அவ ற்றுள்யாது மித்தையேயாமோ அதுவே மித்தையாகுக, மாருக ஆகாதொழிக, அது மித்தையாயின் யாவர்க்கு என்னவந்தது? யாதொருகோதும் வாராதாம்.

இவையாவும் பொய்யா? அல்லது சிறிது மெய்யுமாமோ? அவற்றினுள்ளும் திருஷ்டியுண்மையா? அல்லது திருசியமுண்மையா? ஹேபிரஹ்மசொரூபரே! மேற்கூறியவகையானே ஆராயுமெனக்கதனால் எல்லாவிடயங்களிலுமே, வழிப்போக்கனுக்கு நீரின்றியபூமியிற் பிரீதியில்லாததேபோலப் பிரீதியில்லை. இவ்வாறெனக்காராய்ச்சியுண்டாகியிருத்தலினாலும், ஆராயுங்கால் அசாரத்தன்மையிருத்தலினாலும், தங்களை வினவவேண்டிய அங்கிசமிகவுளது; அதாவது:—ஹே பகவன்! முதலில் விநாச உற்பத்தி விகாரசொரூபம் எங்ஙன்சம்பவித்தல்கூடும்? உண்மையாக எல்லாருடைய அனுபவப்பிரமாண சித்தமாகிய திருசியமுற்றினுமே அசத்துப்போல ஆகின்றதே இஃதென்னே? சத்திற்குஅசத்துச்சத்துருவாதலின் அசத்தேயாமென எவனேனும் வினவின், மீண்டுஞ் சத்துவத்தையடைகின்றதே அவ்விஃதென்னே? சத்தசத்துக்கட்கு வேருனவிருத்தியாதிவிகாரங்களையும் இதுபற்றுகின்றதே இஃதென்னே? இதுவும், முன்னவஸ்தையுடைய்து கெட்டு வேறவஸ்தையுடையதுண்டாகின்றதேலாயின், அதுவேயிதுவென்னும் உணர்வின்பகையும், விருத்தியாதி விவகாரங்கூடாமையுமன்றேவாம் முன்னவஸ்தையுடையது அழியாதாயின் ஒரேகாலத்தில் இரண்டவஸ்தையுடைமைவழக்கல்லவோவரும், வேறவஸ்தையுக்தொடர்ந்து கிற்றலின், எல்லாவிடயங்கட்கும் நிர்விகாரத்தன்மையின் அடைவாம். அவஸ்தையானது விடயங்களினின்றும் வேருகுமாயின் அவஸ்தைகள்அபாவவடிவங்களாம். அபேதமாயிருக்குமெனின், திரமாயிருக்கும் அவத்தையுடையதன்கண்ணேமுறையாக இருப்பதன் கூடாமையுமாம். இம்மூன்று வினுக்கட்கு விடையளிக்கும்பொருட்டே உற்பத்தி திதி உபசாந்தியென்னும் மூன்று பிரகரணங்களாகும்; அல்லது இத்தேகம் ஏனழிகின்றது? மீண்டுமேனுண்டாகின்றது? ஏன் விருத்தியாகின்றது? இதனது பிறப்புமுதலியவற்றுனே யாதொருபயனுமின்றுமென்பதாம். பயனின்றுமென்பதாகமாத்திரமன்றும்; மாறுக, அனர்த்தபரம்பரையுமன்றேவாம்; ஜரைமரணம், ஆபத்து, ஜனனம், அநர்த்தவேதுக்களாயசம்பத்துக்கள், தோற்றுதன் மறைதலகளால் விருத்தியை மீண்டுமீண்டுமடைகின்றன. தேகம்போகவேதுவாதலின் பயனுண்டேயெனின்? துச்சங்களாகிய அபூர்வமல்லாமையின் அரைத்ததையரைத்தலபோல இரசமற்ற அவ்வப்போகங்களானே, போகலம்படர்களாகியயாங்கள் நிச்சயமாய் மலைமரங்கள் வாயுவாற்போலத்தளர்வடையப்பெற்றேம், தளர்வுறவே போகங்கட்கு மனர்த்தத்தன்மையேயாம், தாங்களேபாருங்கள். ஜடங்களைப்போன்ற ஜனங்கள் பிரஞ்ஞையுடையவர்களேனும் அத்தியந்ததுக்க நீக்கத்தைச் சம்பாதியாது பிரஞ்ஞையை வீணுக்குபவராய்ப் பிராணனென்னுங் காற்றுல் உளறுபவர்களாய்ப் புருடார்த்த உபயோகமில்லாமல், காற்றுவந்து மோதத்தானே யொலித்துக்கொண்டிருக்கும் மூங்கிலேபோல இருக்கின்றுர்கள். எவ்வேதுவினுனேமோகிக்கின்றுயெனின்? பெருந்தருவானது தனதுபொந்திலிருக்கும் உக்கிரமான அக்கினியினுலே வேதலேபோல இத்துயரமானது எங்ஙனம் நீங்குமென்னுஞ் சிந்தையானே வேகின்றேன். சமுசாரதுக்கத்தாற்கற்போல இடைவெளியில்லாமல் நெருக்கி நிரம்பப்பட்ட இருதயத்தையுடையவனுயினும் யான், எனது பந்துக்களும்என்பொருட்டாகஅழுவார்களேயென்னும்பயத்தானே

கண்ணீர்பெருக அழவில்லை. கண்ணீரில்லாத அழுகையானே பிரீதியற்றன வாதலினானே தமக்குக்காரணமாகிய மகிழ்ச்சிமுழுவியவையற்றனவாய், எனது ஜனத்தின் துக்கத்தை நீக்கும்பொருட்டுத் தேவலஞ்செய்து காண்பிக்கும் என்முகத்தின் பொய்ச்சிரிப்புப்பிரியவார்த்தை முதலியநடைகளை ஏகாந்தத்தில் எனது இருதயத்துள்ள விவேகமே பார்த்துக்கொண்டிருக்கிறது. அதிகப்பிரிய விடயங்களின் விகாசமிகுதியின்றிதியை நினைந்தும், சுகதுக்க உபசாந்தியினானே குறிப்பிக்கப்பட்ட பரமானந்தத்தின் அபாவமாகிய அஞ்ஞானத்தின் விகாரமானதிதியை நினைந்தும், தனுதிசம்பத்துடையவன் சௌபாக்கியத்தினின்றும் அயலாகத்தெய்வகதியால் அடைந்த தரித்திரத்தினாலே முன்னிலைமையை நினைந்து மோகிப்பதேபோலச் சமுசாரசேஷ்டையினானே அத்தியந்தம்மோகத்தையடைந்துளேன். ஐசுவரியங்களானே நீவிரும்பிய பயன்கிடைக்கும் ஸ்ரீமான்கட்குக் கிடையாததென்னேயெனக் கூறப்படுதலென்னெனின்? வஞ்சகதற்பரமாயிராநின்ற ஐசுவரியங்கள் மனோவிருத்தியை மோகிப்பிக்கின்றன, குணமாலையைக் கண்டிக்கின்றன துயர்க்கூட்டத்தைப் புகுத்துகின்றன. தரித்திரம் சத்துரு நோய்முதலிய தீவிரமான ஆபிரமாபத்துக்களாற் பிடிக்கப்பட்டவர்கட்குப் பிரசவித்த அனேகமனைவியரோடுகூடிய கிருகங்கள்போல, தனிகரைச்சிந்தையாகிய முனைகளால் எள்ளௌளாகத் துண்டித்துக் குவிக்கும்பொருட்டு முயன்றசக்கரங்களாகிய தனங்கள் அடியேனுக்கானந்தத்தின்பொருட்டாகவில்லை, தேகாதிவிடயங்கட்கு எப்போதுஞ்சம்பவிக்கும் அழியுந்தன்மைக்கற்பனையானே நானுவிததிருஷ்ட அதிருஷ்டதோஷ துர்த்தசைகளின் சிந்தனைகளாகிய ஹேதுக்களால், ஹே மகாமுனிவரே! கட்டுப்பட்ட காட்டியானை குறுகிய குழியை மூடியிருக்கும் ஓடிந்தகொம்புமுதலிய விழுங்காரண சம்பாதனத்தாலாய அறியாமை பசிதாகம் முதலிய தோடங்களையும், வீழ்தல் கட்டுப்படல் முதலிய துர்த்தசைகளையும் பெரிது சிந்தித்தலானே மகிழ்ச்சியடையாததேபோல எனது மனது மகிழ்ச்சியை மருவுவதேயில்லை. அஞ்ஞானவடிவ இரவில் உலகர் நெருங்கிய அவிசாரவடிவப்பனிப்புகைகளானே சாஸ்திரப்பிரகாசமானது மறைக்கப்படவே அயலார்க்குத்துயரீயுந்துட்டர்களாகிய அதின் மகாசமர்த்துடைய நூற்றுக்கணக்கான விடயத்திருடர்கள் எப்போதும் எல்லாத்திசைகளிலும் விவேகமாகிய முக்கிய இரத்தினத்தைத் திருடமிகுதியான முயல்வுடையராய் நடமாடிக்கொண்டு திரிவர்; போரிலவர்களைக் கொல்லத் தத்துவஞானிகளல்லாமல் வேறு எவ்வீரர் சமர்த்தர்; எவருமிலர். தமத்தைக்கெடுத்தாலன்றி அவரைக்கெடுத்தல் சம்பவியாதாம்.

12-வது பூதப்பரிதாப வருணனம் முற்றிற்று.

---

## 13-வது இலக்குமி நிராகரணம்.

இப்போது சர்வ மூடர்களுக்கும் பிரியையும், போகமாகிய அனர்த்தத்தை யெப்போதும் கொடுப்பவளுமாகிய இலக்ஷுமியை, பலவகையான தோடங்களாலே சுருக்கமுடிபுவரை நிந்திக்கின்றார். ஸ்ரீராமர் கூறல்:—ஹே மகாமுனிவரே! இவ்வாறு விடயங்கள் அசாரங்கள் அனர்த்தங்கள் விடயசம்பாதன

காரணமாகிய தனமும் அவ்வாறாகும், இச்சம்சாரத்தில் நீங்காதவளாகி மிக மிகச்சுகவேது வாதலின் மேலானவள் என இவ்விலக்குமி மூடர்களாலினிது கற்பிக்கப் படுகின்றாள். உண்மையாயோ, அவளும் கொலைபந்தம் நரகமுதலிய நிந்தைக்கிடமான வற்றையே கொடுத்தலானே அணுவளவின்பமுங் கொடாமையானே, பெருமோகப்பொருட்டேயாவள் பெருமோகப் பொருட்டடைவுறி னும் அடையாமற் சென்றிடினும், இகழுந்தனத்தைக் கொடுத்து விவேகத்தைக் கொடாமையினானும் நிந்தைக்கிடமேயாவள். மேலே நடித்தலினாலே விருத்தியடையாநின்ற அனந்தம் ஆகுலமிகுத்த அலைகளையும், அழுக்குகளையும், தரித்துக் கொண்டிருக்கும் மழைகாலத்திய ஆற்றிற்கொப்பாக, உற்சாகத்தானே பல்வகையாய்வளரும் முடிபில்லாத மனோரத பரம்பரையையுடைய ஆகுலமிகுத்த அநேகமூடரைப் பரவசப்படுத்தி இழுப்பள். நதியினின்றும் சஞ்சலமான அலைகள் உண்டாவனபோல இவ்விலக்குமிக்குச் சஞ்சலமான சிந்தைகளென்னுங் குமரிகள் அநேகர் உண்டாகின்றனர், மிகக்கெட்ட தொழிலானே விருத்தியடைகின்றனர்; எங்ஙனம் துர்ப்பாக்கியமுடையவள் அறியாமல் அக்கினியைக் காலில்மிதித் துத்தகிக்கப்பட்டவளாகி ஓரிடத்திற் காலைவைக்கமுடியாதவளாய் நியமமான செல்கையில்லாமல் இங்குமங்கும் ஓடுவளோ அங்ஙனமே, இவ்விலக்குமியும் தனக்கு இடமாகச்சாஸ்திரம் விதித்த ஆசரணமின்றியவனையடைந்து இதற்குமதற்கு மோடுவள். செலவிடல் பிறர் அபகாரித்தல் முதலியவற்றானேசிறிது தீண்டப்பட்ட மேனியுடையவளானபோது தன்னையுடையவர்க்கு மிகுந்த தாபத்தையுண்டாக்கி அகாலத்தில் தன்னையேனும் தன்னையனுபவிப்பவனையேனும் தீபரேகை தன்னவயவத்தைத்திண்டின் இருளையுண்டாக்குவதுபோல அழிப்பள். அநேக மூர்க்கஅரசர் தருமமும் குணமுமுடையவரோடு நேயஞ்செய்வதில்லை; மற்றோ, எவன் முற்பட்டானோ அவனோடு நேயஞ்செய்தலே போலத்துயருற்றுச் சம்பாதித்தபோதினும் தருமமுடையவரேயனுபவிக்கின்றாரென்பதாக இல்லாமல் குண அகுண ஆராய்ச்சியின்றியே முற்பட்ட எவனையேனும் பற்றுவள் எக்கருமத்தின்பலம், தன இராஜ்ஜிய இலாபாதியின் உலோபத்தாலுண்டாம் இம்சை பொய்முதலிய தோஷசர்ப்பவிஷவேகத்தின் பொருட்டாமோ; போர், சூது, வாணிச்சியம் முதலிய அவ்வக்கருமத்தானே இவ்விலக்குமி விஸ்தாரத்தை யடைவளையன்றி யாகதானாதியானேயடையாள்; மாறாக, அவை அழிவின்காரணங்களேயாம். வாயுக்கூட்டத்தாற் பனியேபோல எதுவரை இலக்குமியானே பெருங்கஷ்டப்படுத்தப்படவில்லையோ அதுவரையுயிர்கள் தம்மவரிடத்தும் பிறரவரிடத்தும் தயை, தாக்ஷிண்யம், நேயம் முதலியவற்றோடு கூடியிருப்பர். மேலும் செய்ந்நன்றியறிவோர், விவேகியர், சூரர், குசலர், இனியவர், முதலியயாவரும் இலக்குமியினாலே, பெரும்புழுதியிற்பதிந்த அருமணிபோல மலினத்தையடைவர். ஹே பகவன்! இலக்குமி இன்பப்பொருட்டல்லள் துன்பப்பொருட்டேவளர்கின்றனள்; விடக்கொடியானது, மரணந்தருவதேபோலக் காப்பாற்றப்படுவளாயின், விநாச சாதனத்தையே சம்பாதிப்பள். ஸ்ரீமான்களுள்ளும் அநேகர் தருமமுடையவராயும் கீர்த்தியுடையவராயும் காணப்படுகின்றாரெனின்? உலகாரிகழப்படாத ஸ்ரீமானும், மொழி தவறாத

சூரனும், சமதிருஷ்டியையுடைய பிரபுவும், ஆகிய மூவரும் கிடைக்கக்கூடா தவரேயாவர். இவ்விடமமான இலக்குமியானவள் துக்கங்களாகிய சர்ப்பங்க்கட்கு ஆழ்ந்த குகையாகியும், கனமாகிய மோகமென்னும் மதயானைகட்கு விந்தியபர்வதத்தின் பெருந்தாழ்வாரமாயும். புண்ணிய கருமங்களாகிய தாமரைகட்கு, குறுக்குங்காரணமாகிய இரவாகியும், துக்ககுமுதங்கட்கு, விரிக்குங்காரணமாகிய இந்துவாகியும், தயாதிருஷ்டிபாரமார்த்ததிருஷ்டிகளாகிய தீபங்கட்கு அலைமிகுத்த ஆறுபோலப் பெருங்காற்றாயும், இருப்பள். பயம் மயக்கம் என்னும் மேகங்கட்கு முதன்மார்க்கமாகிய முன் காற்று முதலியவையும், வாட்டமாகிய விடத்தை வளர்ப்பவளும், விகற்பங்களாகிய செற்கட்கு வயல்களும், துக்கத்தைப்பெருக்கும் பயத்தைப்பயக்கும் பாம்பும், துக்கப் பொருட்டுப் பயபோகமுடையவளும் ஆவள். வைராக்கியமாகிய கொடிகட்குப் பனியும், மனோவிகாரங்களாகிய காமாதிக்கூகைகட்கு இரவும், விவேகமாகிய நிலவிற்கு இராகுவின் கோரப்பல்லும், சுஜனத்தன்மையாகிய தாமரைக்குச்சந்திரிகையும் ஆவள். வானவில்லைப்போல நிலைத்திலாதனவாகியநானு ஆசைகளாகிய வர்ணங்களானே மனோகரமுள்ளவளும், மின்னலைப்போலச்சஞ்சலமுடையவளும், தோற்றியதும் தோம்சமுறுபவளும், மூர்க்கர்களாகிய தனவான்களைப் பற்றியவளும் ஆவள். சஞ்சலத்தினால் அவமதித்து ஆரண்யகுலிகளை வெற்றிகொண்டவளாவள், கெட்டகுலத்துற்றவளாவள், பிறரை வஞ்சித்தற்கு அனுகூலமானவள், வெய்யிற் காலத்தில் வெளிப்படையாய் பெருகுங்கானனீரை வெற்றிகொண்டவள் எப்போதும் தளர்தல்வளர்தலாகிய இயற்கையுடையவளாதலின் அலையைப்போல ஒருவடிவமாய் நிலைபெற்று நில்லாதவள்; தீபச்சுடர்போலச் சஞ்சலமுடையவள், இன்னவாறென்று சொல்லமுடியாத தூர்த்தசையைச் செய்விப்பவள். போரிற்பிரியமுடைய கஜேந்திரர்களுடைய குலத்தையடியோடு கெடுக்கும் பெண் சிங்கம்போன்றவள்; வாளின் முனைபோலக்குரோதமுடையவள்; பிறர் கொரேமுடையவள், கொரேமுடைய இருதயர்களிடத்திலிருப்பவள். பிறர் பொருளைக் கவர்ந்து பொருளுடையவளும், காலனாற்கவர்ந்த பொருளையும் கவருங்காதலுற்றவளும், கெட்ட மனோவியாதிகளாகிய திருடர் மறைதற்கிடமானவளும், அமங்கலமுடையவளும் ஆகிய இவ்விலக்குமியால் துக்கமேயல்லாமல் சிறிதும் சுகம் கிடையவே கிடையாது. எவனுடைய அலக்ஷுமியாகிய சக்களத்தியால் அதி தூரந்தள்ளப்பட்டவளாயும், நெடுநாள் சக்களத்தியாலனுபவிக்கப்பட்ட அவனையே, அந்தோ! அந்தோ!! மீண்டும் ஆதரவோடு திடமாய்த்தழுவுகின்றனளாதலின் மானமுடையவளல்லள், மற்றும், இலஜ்ஜையற்றவளேயாவள் மனதுக்கினிமையானவளும், மனோவிருத்தியைக்கவர்பவளும், அதோகதி மரண முதலியவற்றையுண்டாக்குங்காரியங்களானே தேடத்தக்கவளும், ஒருகணத்தி லழிபவளும், பாம்பின்மாலைகளையாகத்திலலங்கரித்துக்கொண்டிருக்கும், பாழுங்கிணற்றிலும், படுகுழியிலும் எழுந்த மலர்க்கொடிபோன்ற வளிந்த இலக்குமி தேவி.

13-வது இலக்குமி நிராகரணம் முற்றிற்று.

---

## 14-வது ஆயுளை நிந்தித்தல்.

இப்போது வியாதி ரோகம் ஜரை முதலியவற்றோடு கூடியதும், சாமாதிகளாற் கலக்கமுற்றதும், ஆகிய மூர்க்கனுடைய வாழ்க்கையும், யவ்வனமும், ஆயுளும் நிந்திக்கப்படும். இலக்குமியைப்போலவே ஆயுளும் சுகத்தின் பொருட்டாகாதாம். ஆயுளானது மூங்கிலிலை நுனிமேற்றூங்கும் பனி நீர் போலக் கணத்தில் நீங்குவதாகும். உன்மத்தனைப்போன்ற ஆயுள் உன்மத்தமாய உடலினின்றும் அகாலத்திலோடிவிடும். விடயப்பாம்பு தீண்டலானே எங்குஞ் சிதறுண்ட சித்தத்தையுடையவரும், அதிதிடமாகிய ஆன்மஞானமில்லாதவரும், ஆகியோர்க்கு ஆயுளானது ஆயாச காரணமாம். பிரஹ்மவித்துக்கட்கு மிவ்வாறேனுகாதெனின்? யாவர் நன்கறியவேண்டியதை யறிந்துளாரோ, அபரிச்சின்ன வஸ்துவின் கண்ணே இளைப்பாறியுளாரோ, இலாப அலாபங்களிற் சித்தசமாதானமடைந்துளாரோ, அவர் தம்மாயுள் சுகத்தைக் கொடுப்பதாம். ஹே மகாமுனிவரே! நாங்கள் தேகாதிகளிடத்தில் இவ்வளவுதா னுன்மரூபமெனத் துணிந்து, சம்சாரமேகமின்னற் கூட்டமாகிய ஆயுளிற் சுகிகளாகிலேம். எளிதாக ஆகாயத்தைப்பிளக்கலாம், வாயுவைக்கட்டலாம், அலைகளைக்கோக்கலாம்; ஆனல் ஆயுளின் கண்ணே நம்பிக்கைவைக்கமுடியாதாம். சரற்காலத்திருக்கும் அற்பமேகம் போலவும், தைலமில்லாத விளக்கே போலவும் அலையாநின்ற அலைபோலவும் சென்றதாகவே கருதவேண்டும். அலையையும், அலையின் கண்ணே பிரதிபலித்த நிலவையும், மின்னற்கூட்டத்தையும், ஆகாயதாமரையையும், கவர ஆசைசெய்வேனுயினும் நிலையிலாத இவ்வாயுளைக்கவர இச்சியேன். முற்றினும் ஆசை நீக்கமாகிய இளைப்பாறுதலையடையாத மகா மூடன், சுகப்பொருட்டல்லாத விஸ்தாரமாய ஆயுளைத்துக்கத்தின் பொருட்டே, ஆண் குதிரைக்கும் பெண் கழுதைக்கும் பிறந்த அசுவதரியானது தனது கருப்பம் தன் வயிற்றைக்கிழித்துக்கொண்டுவருவதாயிருந்தபோதினும் கருப்பந்தரிக்க இச்சிப்பதேபோல இச்சிப்பன். இச்சம்சாரச் சுழற்சியின்கண்ணே வெளிப்படையாய தேகக்கொடியானது சிருட்டிக்கடலில் நீர்மயமாகிய நுரையே, முற்றினும நிலையிலாமையின் ஆகும்; ஆதலினிதன் கண்ணே வாழும் வாழ்க்கையானது எனக்குப் பிரியமாகத் தோற்றவில்லை. அவசியம் அடையவேண்டியதாகிய பரமபுருடார்த்தத்தையடைந்து, எப்போதும் துயரமே சிறிதுமடையாமல், மேலினுமேலாய ஜீவன் முக்திச்சுகத்தானத்தையுற்றுவாழும் வாழ்க்கைதான் வாழ்க்கையெனப்படும். மரங்களுந்தான் வாழுகின்றன, பசுபறவைகளுங்கூட வாழுகின்றன, அதுபோன் மனனத்தின் மனஞ்செலுத்தாமல் வாழும் வாழ்க்கையும் வாழ்க்கையாமோ; மனனத்தின் பயனாகிய தத்துவஞானமேனும் வாசனக்ஷயமேனும் அடையாமல் வாழும் வாழ்வு, துச்சமேயன்றோ, மீண்டு மீண்டுப்பிறவாத பெரியவரே புகழும் வாழ்க்கையை யுலகிலுடையவராவர், மற்றையர் நெடுநாள் வாழ்பவராயினும் அசுத்தமாகிய தேகாத்ம புத்தியுடைத்தாயிருத்தலின் கிழக்கழுதையையொப்பக்கீழான இகழும் வாழ்க்கையுடையவரேயாவர். அவிவேகிகட்குச் சாஸ்திரம்பாரம்போல வீணான சிரமகாரணமாம். ஆசையுடையவர்க்கு ஞானம் பாரமாகும், சருவசிரமங்களையும் நீக்குவதிற் பிரசித்தமாகிய ஞானமும்

பாரமாயின் மற்றவற்றைப் பற்றிப்பேசுவதெங்ஙன்! சாந்தியற்றவனுக்கு மனது பாரமாம், ஆன்மாவையறியாதவனுக்குத் தேகம் பாரமாம்; சிறந்தரூபம், வாணாள், மனது, மதி, அகங்காரம், தொழில்கள், முதலியயாவுமே, கெட்ட புத்தியுடையவர்க்கு, சுமை சுமப்பவர்க்குச் சுமையேபோலத் துக்கப்பொருட்டேயாகும். ஆயுளானது, சருவசிரம நிவிருத்தியில்லாததும், இச்சித்தவை பூர்த்தியாகாததுமாம். ஆபத்துக்கட்கு முக்கியமாகிய இடமாகவும், நோய்களாகிய பறவைகட்குக் கூண்டாகவும், நிரமாயசிரமசாதனமாகவுமிருக்கின்றது. நாடோறும் துயரில்லாமல் இடைவிடாது பையப்பையப் பழங்குழியானது பெருச்சாளியாற் கெல்லப்படுவதேபோலக் காலனாலாயுள் அழிக்கப்படுகின்றது. காட்டுக் காற்றானது கொடிய சர்ப்பங்களானே புசிக்கப்படுவதேபோலத் தேகப்புற்றிலிளைப்பாறும், விஷம்போலுந்தாகத்தை மிகவுமுண்டாக்கும் கொடிய நோய்களானே ஆயுள் பானஞ்செய்யப்படும். சீயிரத்தம் மலம் முதலியவற்றையிடைவிடாமல் வெளிப்படுத்துவதும், துச்சமும், உள்ளே வசிப்பதும், குரூரமுடையதும், ஆகிய ரோகாதி துக்கங்களானே, மரவண்டானது நாட்பட்ட மரத்தைப் பொடிப்படுத்தும் வாயிலாகக் கெடுப்பதேபோல ஆயுள் கெடுக்கப்படும். விரைவில் விழுங்கற் பொருட்டு இடைவிடாமற் பேரவாவுடனிருக்கும் பூனையினாலே எலி நோக்கப்படுவதேபோல ஆயுள் மரணத்தால் நோக்கப்படுகின்றது. கர்தாதி குணங்களோடு கூடியவளும், கூனியையும், வலுவற்றவளும் ஆகிய ஜரையென்னும் வேசியினால், பெருந்திண்டிக்காரனால் அன்னம்போல, ஆயுளும் புருடனும் அழிக்கப்படுகின்றார்கள். புருடார்த்தத்திலுபயோகிக்கவில்லையென உணர்ந்து ஆதரவுசெய்யாதயவ்வனத்தால், துட்டனென்று தெரியாதவரையுமே சாதுவால் துட்டன் ஆதரிக்கப்பட்டுத் தெரிந்தபின் கைவிடப்படுவனே போலச் சில தினங்களிலேயே கைவிடப்படுவன். மேலான விடபுருடனாலழகிச்சிக்கப்படுவதேபோல விநாசத்திற்கு நேயனும், ஜரைமரணங்கட்குப்பந்துவும் ஆகிய கமனால் நித்தியம் ஆயுளும் புருடனும் விரும்பப்படுகின்றனர். ஜீவன் முக்திச் சுகத்தினாலும் நிலைபேற்றினாலும் எப்போதும் விடுபட்டதும், மிகவுந்துச்சமாயதும், குணமற்றதும் மரணத்தைச் சேவிப்பதும், இவ்வாயுள் எவ்வாறுமோ அவ்வாறு இவ்வுலகில் ஒரு பொருளும் கிடையவே கிடையாது.

14-வது ஆயுளை நிந்தித்தல் முற்றிற்று.

---

## 15-வது அகங்காரத்தை வெறுத்தல்.

இப்போது, எல்லா அநர்த்தங்களுந் தொடங்குதற்குக் காரணமாகியதும் பமும், மமதையாகியகொடிக்குக் காரணமும்ஆகிய அகங்காரம் சிறப்பாக வெறுக்கப்படும். மேற்கூறியவகையே அகங்காரமும் சுகவேது வாகாதாம்; மாறாக, சர்வ தோஷங்கட்குமபிமானமூலமாயிருத்தலின் அனர்த்தமே செய்கின்றது. அதன் விஸ்தாரத்தைக் கேட்பீர்களாக. அஞ்ஞானமாகிய நிமித்தத்தானே வீணுக்கே அகங்காரமானது எழுகின்றது, வீணாகவே நாற்புறமும் வளருகின்றது, அதனாற்புருடார்த்தமின்றாம்; அதனது காரணமும் மோகமேயாகும்.

பொய்ம்மயமாயும் நோய்மயமாயுமிருக்கும் கெட்ட அகங்காரமாகிய சத்துருவினாலே மிகவுமஞ்சுகின்றேன். சாத்தியசாதன பலப்பிரவிருத்தியிலக்கணம்வாய்ந்த பல வடிவசமுசாரமானது, அநாதிகாலந்தொடங்கி ஜனனமரண நரகாதிய நந்த துக்கபரம்பரையையனுபவித்தும் மீண்டுமீண்டும் அதன் ஏதுவாகிய இன்ப அணுக்களை ஆயிரக்கணக்கான ஆபாசங்களானும் அடையவேண்டுமென அவாவுதலின் தீனர்களினும் தீனர்களாகிய விஷயலம்படர்கட்கு இராகத்துவேஷதுர்விசனாதிதோஷ வடிவமாய கோசக்கிருகங்களில், அகங்காரவயத்தினாலேயே நற்காரியத்திற்குப்பயன்படாமையின் இகழுதற்குரிய தனத்தன்மையைச் சம்பாதிக்கின்றது. அதன்பயனையே யொருவாறாக விஸ்தரிக்கப்புகின், அகங்காரவயத்தானே சரீரதுக்கமாம் அகங்காரவயத்தானே கொடிய மானசதுக்கங்களாம்; அகங்காரவயத்தானே இச்சையும் கெட்டதொழிலுமாம், அகங்காரமே எனக்கு நோயுமாம். மேலாயதும் நெடுநாள்வைரியுமாய அவ்வகங்காரத்தைப்பற்றி அன்னமுண்ணேன், தண்ணீருமருந்தேன்எனின் இனியரும் போகங்களைப்பற்றிப்போகிக்கும்விடயத்தில் அறையவேண்டியதென்னே! வேடனால் வலைவீசப்படுவதேபோல, அவ்வகங்காரதோஷத்தால், சமுசாரவடிவ இரவில் நெடியதாய் மனத்தில் மோகஞ்செய்வதாகிய மாயைவீசப்பட்டிருக்கின்றது. பர்வதத்தினின்றும் கருங்காலித்தருக்களுண்டாவனபோல நீடித்தவைகளும், போக்கமுடியாதவைகளும், பெரியவைகளுமாகிய துக்கங்கள் அகங்காரத்தாலுண்டாகியிருக்கின்றன. சாந்தியாகிய சந்திரனுக்கு இராகுவின் வதனம்போலும், குணமாகிய தாமரைக்குப் பனியாகிய இடியைப்போலவும், எல்லாப் பிராணிகளிடத்திலும் தயையைப்பெய்யும் சமதிருஷ்டியாகிய மேகத்திற்குச் சரத்காலம்போலவும், தோற்றும் அகங்காரத்தை விடுகின்றேன்; விட்டுவிடின் தேகாபிமானம் மமதை முதலியவை தாமேதுலைந்துவிடும். யான் இராமனல்ல, எனக்கு விடயங்களில் வாஞ்சையேகிடையாது, மனமுங்கிடையாது, இகழ்பவன்பாலுமின் குணங்கவர்களன்பதால், ஹிம்சையில்லாத புத்தனைப்போல வைரமில்லாத சாந்தனாகி என்னிடத்திற்போல எல்லாவுயிர்களிடத்தும் கண்டுகொண்டிருக்கஇச்சிக்கின்றேன். அகங்காரவயத்தினானே என்னால் யாவை புசிக்கப்பட்டனவோ? ஆகுதிசெய்யப்பட்டனவோ, விவகரிக்கப்பட்டனவோ, அவையாவுமே துச்சங்களும் அசாரங்களும் ஆகியபொய்களேயாம்; அகங்காரமில்லாமையே மெய்யாம். ஹே பிரஹ்மசொரூபரே! நானென்னும் தோற்றமுண்டாயின் ஆபத்தில் துயரடைகின்றேன், இலதாயினோ இன்பமடைகின்றேன். ஆதலின், அகங்காரமின்றியிருத்தலே மேலானதாம். சாந்தமனமுடையவனாகி யகங்காரத்தைவிடுத்து, கிளர்ச்சியானவை சாந்தியில்லாத மனத்தைக் காரணமாயுடைமையின் அதன்சாந்தியினானே கிளர்ச்சிகளின்றியவனாகி இருப்பேன்; போக அடைவுகளினானே அவ்வாறேன் இருக்கலாகாதெனின்? போகக்கூட்டங்கள் தேகேந்திரியவிஷய அதீனங்களாகும்; ஆகவே அவற்றுள் ஒன்றொன்று கெடினும் கிளர்ச்சியினடைவு நீக்கமுடியாதாம். விவேகச் சோதிக்கூட்டத்தை மறைக்கும் அகங்காரமாகிய மேகம் நாற்புறத்தும் ஈரங்களை விரிக்கின்றகாலம்வரையுமே, ஆசைமல்லிகைப்பூங்கொத்தானது மலர்ந்துகொண்டிருக்கும், அகங்காரமாகிய மேகம் சாந்த

மானபோது ஆசையென்னும் புதுமின்னற்கொடியானது அணையுந் தீபச்சிகை யொடுங்குவதேபோல மிகவிரைவில் எங்கேயோ ஓடிவிடுகின்றது. சலனமி லாது வணக்கமிலாதிருக்கும் அகங்காரமாகிய மகாவிந்தியத்தில் மனமாகிய மதம்பிடித்த மகா கஜமானது, மேகங்கர்ச்சிப்பதேபோலப், போரினுற்சாகத்தா லும், பாறைகளைப் பிளக்குந் தொனிகளாலும் மிகக் கர்ச்சிக்கும். தேகமாகிய பெருங்காட்டில் கன அகங்காரமாகிய சிங்கமானது, அவ்வக்கருவ ஹேதுக்க ளானே விருத்தியடைந்து உலவுகின்றது ; அதனுலிவ்வுலகம் அறம்பாவமுதலிய விரையின்விரிவால் விரிக்கப்பெறும் "அவனெதனு லிவ்வன்னத்தையாக்கும் அவ்வவ்வுணர்வாற் கருமங்களானும்" என்னும் சுருதியும் கூறுகின்றதன்றே. ஆசையாகிய நாவிலேகதேசங் கோக்கப்பட்ட அநந்ததேக பரம்பரை முத்து மாலையாகக் கண்டத்தில் அகங்கார உக்கிரவிடனாலணியப்பட்டது. லோகஊக சம்பந்தமாய உபாயமென்னுந் தந்திரமந்திரங்களில்லாமலே புத்திரமித்திரகளத் திராதிகள், வசிகரித்தல் மனதை மயக்கல் முதலியவற்றின் சாதனமாக, இவ்வ கங்காரமாகிய வைரியினுனே விரிக்கப்பட்டிருக்கின்றன. நானென்னும் பதமா னது மூலத்தோடு மழிக்கப்படுமாயின்விரைவில் துட்டமயமாகிய மனோவியாதி கள்யாவுந் தாமே அழிந்துவிடுவனவாம். சாந்தியைக்கெடுப்பதாகிய யானென் னும் மேகமானது சாந்தியடைவே ; அகங்காரத்தைக் கெடுத்தலானது மந்தாதி காரிகட்கு நெடுஞ் சாதனப்பியாசத்தால் வரும் ஞானத்தானே கூடலின் மெது வாகவும், முக்கிய அதிகாரிகட்குத் துரிதமாகவும், மன ஆகாயத்திருந்த மகா மயக்கப்பனிப்படலமானது எங்கேயோ ஓடிவிடுகின்றது. மூர்க்கத்தன்மையி னாலே சோகத்தாற்றுக்கிக்கும் நிரகங்கார விருத்தியோடு கூடிய எனக்குயாதுப தேசிக்கத்தக்கதாமோ அதனையீண்டுத் தேவரீருபதேசிக்க வேண்டுகின்றேன். இவ்வாறு அகங்காரத்தையும், அஃதுண்டாக்கிய அனர்த்தத்தையும், அதைக் கெடுக்கினுண்டாம் பயனையும் இனிது வருணித்துத் தமக்கு அதன்றியாகத்தாலு ண்டாம் சிரவண அதிகார அடைவைக்கூறி ஸ்ரீராமர் உபதேசிப்பான் பிரார்த்திப் பதாவது:—ஹே மகானுபாவரே! எல்லா ஆபத்துக்கட்கு இடமும், நிலையில்லா ததும், உள்ளத்தேயிருப்பதும், சாந்தியாதியுத்தம குணங்களானே விடப்பட்ட தும், நாற்புறமும் மிகத்துயரையுண்டுசெய்வதும், ஆகிய அகங்காரவடிவ் அடை யாளத்தை விவேகத்திரத்தானே பற்றுமலொழித்துவிடுகின்றேன் ; மற்றின்னும் என்னசம்பாதிக்கவேண்டியதென்பதையும் ஆன்மதத்துவத்தையும் தேவரீர் உப தேசிக்கவேண்டும் என்பதாம்.

15-வது அகங்காரத்தை வெறுத்தல் முற்றிற்று.

---

## 16-வது சித்தமன தூஷணம்.

இப்போது சித்தமனதோடங்கள், அநேக ஊகங்களானும் திருஷ்டாந்த ங்களானும் விஸ்தாரமாக ஸ்ரீ இராமரால் இனிது பிரகாசிப்பிக்கப்படும். அகங் காரத்தைப்போலச் சித்தமனங்களும் சுகஹேதுக்களாகாவாம் ; மற்றோ, துக்க ஹேதுக்களேயாகும் ; "மகத்துக்கள்சேவையை முத்திக்கேதுவாய் மலர்வர்"

என்னும் வாக்கியத்தானே நல்ல முமுக்ஷுக்களால் இன்றியமையாது செய்யத் தக்கதாய ஆரிய சேவையை விடுத்துக் காமாதிகளானே சிதிலத்தன்மையாகிய புருடார்த்தசாதன ஆற்றலின்மையைச் சித்தமடையும்; வாயுப்பிரவாகத்திடையிலகப்பட்ட மயிற்ரேகை நுனியின் சஞ்சலம்போலச் சஞ்சல சுபாவமுடைய தாதவீற்சலிக்கும் மனதும் பிராணவாயுவின் அதீனமாய்ச் சலனமாகவேயிருக்கும். எவ்வாறெனின்? பொருத்தமா, பொருத்தமின்று, என விசாரியாமல் மிகுந்தவியாகூலத்துடனே மேலும் மேலும் வீணுகவே, எவ்விடத்தும் தனக்கு நிறையுங்காரணங் கிடையாமையின் தீனமான நகர் நாயானது மிகுதூரத்தினும் தூரமாகச்சுற்றித் திரிதல்போலச் சுற்றித்திரியும். எவ்விடத்தும் ஒரு சிறிதும் அடைவதேயில்லை, பெருந்தனங்களேயடைந்தபோதினும், மூங்கிற்பிரம்புப்பெட்டிகள் தண்ணீரால் நிறையாததேபோல, உள்ளே நிறைவையடைவதே கிடையாது. எப்போதும் ஆசையாகிய வலையினுற் கட்டுப்பட்டுத் தன்னுனும் விடயங்களானும் சூனியமாயமனம், தன்னினத்தினின்றுந் தப்பியமான்போலச் சுகத்தை யொருபோதுமேயடைவதில்லை. தூல அவயவ சூக்குமஅவயவங்கள் சிதையப்பெற்ற சஞ்சலமாகிய அலையின் சிலத்தைப்பற்றிடாதொழித்து ஒருகணமாயினும் இருதயத்தில் நிலைபெறுவதேயில்லை. மந்தரமலையின் மர்த்தனத்தால் நர்த்தனஞ்செய்யும் பாற்கடற் பாற்போல விடயசிந்தனையானே நானுவகைக் கலக்கமடைந்த மனமானது பத்துத்திக்குகளினும் ஓடியலைகின்றது. அலைகட்கொப்பாகிய போக இலாப உற்சாகங்களாற் சம்பாதிக்கப்பட்ட மூழ்கடிப்பதற்கனுகூலமாகிய சுழற்சியையுடையதும்,பிறரைவஞ்சிக்கு முபாயங்களாகிய குரூரமுதலைகள் சுழல்வதும், ஆகிய மனமென்னும் பெருங்கடலைத் தடுக்கயான்வல்லேனல்லேன். போகமாகிய அறுகம்புன்னுனியை விரும்பி நரகக்குழியில் விழுவதைச்சிந்தியாமல் மனமானமானுனது நெடுந்தூரம் மாறுபாடாயோடுகின்றது. சமுத்திரமானது தனது சஞ்சலத்தை விடாததேபோல எனது சித்தமானது தனது தூலாவயவவிபாகத்தையும் சூக்ஷும அவயவவிபாகத்தையும் ஆகுலத்தோடு கூடியவிருத்தியினுனே ஒருகாலும் விடுவதேயில்லை. சித்தமானது சிந்தையின் கூட்டத்தாலே மிகவுஞ் சஞ்சலமுடையதாகிச் சஞ்சலமாகிய விருத்தியினுனே, கூண்டிற்சிங்கம்போல ஓரிடத்தில் தைரியத்தையடைவதில்லை; ஏனெனின், சித்தமானது, சுயமாகவே சஞ்சல இயற்கையுடையது, சிந்தனையின் கூட்டத்தானே சலிப்பிக்கினு அத்தியந்தஞ் சஞ்சலமாகும், வலுவிற்றடுப்பினும் தைரியத்தையடைவதேயில்லை. அன்னப்பக்ஷியானது நீரினின்றும் பிரித்துப்பாலைக்கொள்வதேபோல; மோகமாகிய தேரிலேறியமனமானது, எல்லாத்துயரங்களுமற்றதும், உயர்வுதாழ்வுகளுபாதியானே கற்பிக்கப்பட்டிருத்தலின் உண்மையாக எல்லாப்பிராணிகளிடத்திலும் ஆன்மா ஓரேபடித்தாக இருந்து ஜீவன் முக்தர்களானே அனுபவிக்கப்பட்டதும், ஆகிய சமத்தன்மைச் சுகத்தைத் தேகத்தினின்றும் பிரித்தெறிகின்றது. அச்சுகம், மனம் மோகத்தேரேறுமவிருப்பின் நித்தியசித்தமேயாகும்; இத்தேகத்திலேயே கிடைத்திருந்தபோதினும் மோகத்தேரேறிய மனத்தால் விழுங்கப்படுதலின் அசாரமாகிய தேகமாத்திர புத்தி தான் எஞ்சுகின்றது. சித்தத்தினது பிரத்தியக்ஷைக்கோசரிக்கும் விருத்திகள்

அநேகவித அவைதவிடயப் பற்றுதலைக் கற்பிக்கும் படுக்கையிற்றூங்குவது போல அடங்கி எழுப்பும் சாஸ்திர ஆசாரிய வுபதேசமில்லாமல் கேவலம் தன் மதியாற் செய்யப்பட்ட ஆயிரம் ஆராய்ச்சியினுனும் எழும்பமாட்டா; அவை கள் எழும்பாமையின் யான் ஆகுலமுடையவனுகத் தாபத்தையடைந்துளேன். உள்ளே புகுந்திராநின்றயானிது எனதிதுவென்னும் அன்னியோன்னியதாதாத் மிய சம்சர்க்க அத்தியாச வடிவத்திடமுடிச்சுகள் நிறைந்தபோக ஆசைநூலில் இராநின்ற என்னுலேயே மனமாகியகரணத்தால், நூலாலாய வலையால் மாமிசப் பிரியனுகிய வேடனுல் பக்ஷிகட்டுப்படுவதேபோலக் கட்டுப்பட்டிருக்கின்றேன். விரிவாங் கோபமேயாய புகையினேடும், சிந்தையேயாய சுவாலையிலுண்டான ஆகுலத்தோடும் கூடிய சித்த அனலாற் சகிக்கமுடியாததும், சூடுண்டவராற் சிந்திக்கத்தக்க சுடரோடு கூடியதும், ஆகிய அக்கினியாற் காய்ந்தபுல்லானது தகிக்கப்படுவதேபோலத் தகிக்கப்பட்டேன். சந்ததம் உதாம் நிறையாத மனை வியாகிய பெண்ணையைப் பின்றொடரும் கோரமா நாயால் பெரும்பாரம் வாய்ந் தபிணம் தின்னப்படுவதேபோல, ஆசையாகிய மனைவியைப்பின்றொடரும் சித் தத்தால் யான் தின்னப்பட்டேன். ஆற்றங்கரைத்தருவானது, அலைமிகுந்துச் சஞ்சலித்துக்கரைக்கும் நீர் வெள்ளத்தால் வீழ்க்கப்பட்டிழுக்கப்படுவதேபோல, அலைபோற்சலித்துக்கிடையாத விடயத்தின் மொத்துண்டுழலும் விருத்திகளேச முற்ற சடவடிவமாய சித்தத்தால் இழுக்கப்பட்டேன். சூறைக்காற்றினுலே துரு ம்பானது இடையில் வீழ்த்தற்பொருட்டும், சூனியத்திற் சுழற்றும் பொருட்டும் இழுக்கப்படுவதேபோல யான், தருமப்பிரவிருத்தியானே சுவர்க்கத்திற் செல் லில் அகாலத்தில் வீழ்தற்பொருட்டும், அஃதில்லையாயின் சுகலேசமுங் கிடை யாத இவ்விடத்திலேயே புழு பறவை முதலிய பிறப்புக்களானே சுழலும்பொ ருட்டும், மனத்தால் நெடுந்தூரம் இழுக்கப்பட்டவனுயிருக்கின்றேன். அவ்வா றே:—" இந்நெறிதன்னினேயிறங்குவர் மீண்டே " எனவும் " பின்னிவ்விருநெ றியுளொன்றேனும் பெற்றில, அன்னவிவை துச்சமாம்பிராணியா யநேகமுறை, பின்னும் பிறக்கும் பிறத்தியிறத்தி, யென்னுமித் மூன்ருவது தானமாம் " என வும் சுருதிகளும் புகல்கின்றனவன்றே. சிறு நதியின் வெள்ளமானது அணையி னூற்றடுக்கப்படுவதேபோலச் சமுசார சமுத்திரத்தினின்றுங் கரையேற முயலு ம் யான் துஷ்டசித்தத்தால் அக்கடவின் கண்ணே தடுக்கப்பட்டுளேன். உருளை யானது கயற்றினுற் சுற்றப்படுவதேபோலத் துஷ்ட சித்தத்தால் பாதாளத்தினி ன்றும் பிருதுவியிற் செல்பவனுகியும், பிருதுவியினின்றும் பாதாளத்திற் செல்ப வனுகியும், சுற்றப்படுகின்றேன். பாலன் பயப்படக் கற்பிக்கப்பட்டவேதாளம், பாலபுத்தியினுனே யிருப்பதாய்த்தோற்றி அவனுக்கே பாலியம் நீங்கினவுடனே விசாரத்தால் அசத்தாவதேபோல அஞ்ஞானமதியினுனே வெற்றிகொள்ள முடியாததாகியும், பொய்யாகவே தோற்றுவதாகியும், விசாரத்தால் விவேக முதித்த அளவில் வடிவமேயில்லாததாகும் துஷ்டசித்தத்தானே பிடிக்கப்பட் டுளேன். துயரமடைந்தும் கவரத்தகாத மனமாகிய பேயானது, எப்போதுந் தகித்தற்கேதுவாதலின் தீயினுமிக்க வெப்பமுடையதாம்; மலைகளைத்தாண்டு வதினும் இதனை வயப்படுத்தல் மிகவுங் கஷ்டமாம்; இது வயிரத்தினும் வலிய

தாகும், இடியினுங்கொடூரமுடையதாம். சித்தமானது விடயங்களில், பறவை தனக்கிஷ்டமாய மாம்சங்களில் வீழ்வதேபோல விரைவில் வீழ்ந்துபற்றும்; நெடுநாட்பயின்ற நல்லொழுக்கங்களினின்றும், பாலனானவன் ஒருபோதற்ற விளையாட்டினிமித்தத்தாலும் நெடுநாட் படித்த வித்தையினின்றும் நீங்குவதுபோல நீங்கும். ஜடவியற்கைவாய்ந்ததும் சஞ்சலமாயதும், காமாதியரவுகள் நெளிவதும், விஸ்தாரமாகிய சுழிகளென்னும் விருத்திகளோடு கூடியதும், ஆகிய மனக்கடல் என்னை நெடுந்தூரத்திலிழுக்கின்றது. பெருங்கடலைக்குடிப்பதினும் மேருகிரியைப் பெயர்த்தெடுப்பதினும், அக்கினியை விழுங்குவதினும், சித்தத்தையடக்கல் மிகவும் கஷ்டமாம். பொருள்கட்கெல்லாஞ் சித்தமே காரணமாம், அஃதிருந்தால் மூன்றுலகமுமுளது, அஃதடங்கின் அகிலமுமடங்கும், எம்முயல்வானும் அதுநோய்போல அவசியம் அகற்றத்தக்கதாம். அஃதெவ்வாறெனின், பெரும் பர்வதங்களினின்றும் பெருங்காடுகளுண்டாவதேபோலச் சித்தத்தினின்றும் நூற்றுக்கணக்கான இச்சுகதுக்கங்களியாவும் கிரமமாயுண்டாகின்றன. விவேக மிகுதியினாலே அம்மனம் இலயமடையுமாயின் அவைகள் அடியோடுந் தொலைந்துவிடுமென் றெண்ணுகின்றேன். மகத்துக்களாகிய முமுக்ஷுக்களால்,எச்சித்தமானது வெற்றிகொள்ளப்படுமாயின் சகலசாந்திதாந்திமுதலிய குணங்களினடைவும், காமகருமவாசனை முதலி கலைகளோடு கூடியதும் சத்துவரஜதமோகுணங்களோடு கூடியதும்ஆகிய அவித்தையின்நாசமும், சகலகுணங்களாகிய ஆனந்தலேசங்களும் எங்கிரதிசய ஆனந்தத்தின் கண்ணுமோ அதனடைவும், உண்டாமென்றாசை கொள்ளப்பட்டதோ? அச் சித்தமாகிய சத்துருவை, "ஈண்டே யறிவனேல்இன்பயனுண்மையாம், ஈண்டறியானேலிரும்பெருமழிவாம்" என்னுஞ் சுருதியினாலே யித்தேகத்திலேயே, வெற்றிகொள்ள முயல்கின்றேன்; வைராக்கியசம்பத்தினாலே உள்ளத்தில், மூர்க்கர்கட்கும், அசுத்தர்கட்கும் மகிழ்வையும் அழகையும் தரும், மோககாரணமும் பாவகாரணமும் ஆகிய இலக்குமியைக்கண்டு; சந்திரன், நீரான்மலினமாய் நீலமாயிலகும் மேகரேகையைக்கண்டு மகிழாததேபோலமகிழேன்.

16-வது சித்தமனதூஷணம் முற்றிற்று.

---

## 17-வது, ஆசைநீக்கம்.

இப்போது, எல்லாப்பாவங்களையு முண்டாக்குவதும், தீனலோபமரணங்களை யீவதும் உலகமுழுவதுமுலாவுவதும், ஆகிய ஆசையை யிகழ்தல் வருணிக்கப்பெறும்:—பரமப்பிரீதிக்கிடமான ஆன்மதத்துவத்தையும், இருதயத்திலுதித்த விவேகாதிகளையும், மறைக்கும் கெடுக்கமுடியாத இருளினாலே, இச்சேதனாகாசமாகிய ஜீவன்பால், இராகாதி தோடக்கூகைகளின் கூட்டம், குலாவித்திரியும். இரசமாய் மிருதுவாய சேறானது சூரியனது கிரணத்தானே வற்றடிக்கப்படுவதேபோல, நேயம், தயை, தாக்ஷிண்யம், விநயம் முதலியவையபகரித்தவனும், இரசமிருதுத் தன்மைகளோடு நன்கு கூடியவனும் ஆகியயான் இப்போது உள்ளே தாகத்தைக் கொடுத்துக்கொண்டிருக்கும் சிந்தையினாலே கொடூரத்தையடைந்து அலைதளின்றியவனானேன். பெருமோக

மாகிய இருளாற் சூழப்பெற்றதும், விசாரமாகியஜனங்களின்றியதுமாகிய எனது
சித்தமாகிய பெருங்காட்டில் ஆசையாகிய பிசாசானது பெருங் கூத்தாடிக்கொ
ண்டேயிருக்கின்றது. விருத்தியடைதற்குத்தக்க இரவாலுண்டுபண்ணப்பட்ட
தாக இருக்கும் பனிநீர்த்துளிகளோடு கூடியதும், சமீபத்தில் ஊமத்தைவன
த்தாலே அழகுவாய்ந்ததும் ஆகிய கடலைச் செடிக்கொத்தானது பரவுவதே
போல அவ்வப்பீடை புலம்பன்மொழிகளானே யுண்டாய கண்ணீர்த்துளிகளோ
டு கூடியதும், பொன் முதலியவற்றின்கண்ணே வைத்தமனோவாஞ்சையினதிச
யத்தால் வெளுப்பையுதிப்பிக்கும் ஒளியோடு கூடியதும்ஆகிய சிந்தைச்செடி
க்கொத்தானது ஆசையாகிய பூமியின்கண் ணே பரவிக்கொண்டேயிருக்கும்
கடலின்கண்ணே மத்தியிற் சஞ்சலத்தையுண்டாக்கிச் சுழற்றும் பொருட்டே
ஒப்பில்லாத உயர்ந்தெழுந்தாடலை யலையானது கடலிற் செய்வதேபோல சித்
தத்தை மிகவுங் கலக்குவதாகிய ஆசையானது அளவிற்குமிஞ்சியுட்சுழற்சியை
யேயுண்டாக்கக் கஷ்டத்தினுங்கஷ்டமாகிய தனத்தைச்சம்பாதிக்கும் உற்சாக
த்தையேயடையும். உன்னதமாகிய பிறரை யிகழுதல் பொய்பேசுதல்முதலிய
பிரவிருத்தியலைகளின் சப்தங்களோடு கூடியதும், அதனானே அறைந்தஅலை
களானே சஞ்சலவடிவினையுடையதும், விடயத்தினின்றும் வேறுவிடயத்தைப்
பற்றிக்கொண்டலைவதுமாகிய ஆசையென்னும் நதியானது ஈண்டென்னுடைய
தேகமாகிய பர்வதத்தினின்றும் பெருகிக்கொண்டேயிருக்கின்றது. தனது சஞ்
சலத்தைத் தடுத்துத் தருமமேகமெனப் பெயரியசமாதிரசத்தைப் பானஞ்செ
ய்வான்முயன்ற சித்தமென்னுஞ் சாதகப்புள்ளானது, தூளிகளானே களங்கமா
கிய சூறைக்காற்றால் பட்டதுரும்பு எட்டத்தள்ளப்படுவதேபோல, இரஜோகு
ணத்தான் மலினப்பட்ட ஆசையினானே அயோக்கியமாகிய விடயத்திற்றள்ளப்
பட்டேன். விவேகவைராக்கியாதி குணங்களுக்குள் எவ்வெதன்பால்யான் அதி
க ஆவற்படுகின்றேனோ அவ்வதை எனதாசை, வீணையின் நரம்பைத் துஷ்ட
எலி கடிப்பதேபோலக் கெடுக்கின்றது. சுழலாநின்ற பிரவாகத்திற்பட்ட இலை
போலவும், சண்டமாருதத்தின் கண்ணேபட்டதுரும்பேபோலவும், ஆகாயத்தின்
கண்ணேசரற்காலவெண் மேகம்போலவும், சிந்தையாகிய சக்கரத்திற் சுழலுகி
ன்றேன்யான். எங்களுடைய பாரமார்த்திகவடிவத்தையடையமுடியாதமதியை
யுடைய யாங்கள், வலையிற் பறவைகள்போலச் சிந்தையாகிய வலையிலகப்பட்டுக்
கொண்டு பெருமயக்கத்தையடைகின்றோம். ஆசையெனப் பெயரிய அழலி
னானே அழற்றப்பட்டயான், அமுதத்தானுந் தாகசாந்தியை யடையமாட்டே
னென எண்ணுகின்றேன். இங்கிருந்தும் தூரத்திற்றூரத்திற் சென்று சென்று
மீண்டு மீண்டு மடைந்தடைந்து திக்குமுடிவுகளில் விரைவாக ஆசையென்
னும் மதம்பிடித்த குதிரையானது சுழன்றுகொண்டேதிரியும். அறம்பாவ வடி
வவிடயானுசாரமாகச் சம்பாதிக்கப்பட்ட சுவர்க்க நரகங்களிற் போக்குவரத்
துடையதும், போக்தாபோக்கியதாதாத்மிய சம்சர்க்க அத்தியாச முடிச்சை
யுடையதும், அறிவில்லாதவர்களிடத்திருப்பதும், ஆகிய ஆசையானது, மேற்
கூறிய விசேஷணங்களோடு கூடிய ஏற்றத்தின்மேலிருக்குங் கயிறுபோல நித்
தியம் மிகவுஞ் சஞ்சலமுடையதாம். தேகத்துண்மனதிற் கோக்கப்பட்டதும்,

எவராலுங்கெடுக்கமுடியாததும், ஆகிய ஆசையாற் பிராணிகள், நாசியிற் கயிறு கோக்கப்பட்ட எருதுபோல விரைவில் இகபரலோக சாதனங்களாகிய ஆயிரம் பாரங்களை யிழுத்துக்கொண்டேதிரிவர். வேடமங்கையரானே வலையானது பறவைகண் மீது வீசப்படுவதேபோல நித்தியம் இழுத்தலே யியற்கையாகவுடைய ஆசையால் புத்திரமித்திர களத்திரர் முதலிய வலையானது உலகரின்மீது வீசப்படுகின்றது. ஆசையானது, அறிவுமிகுந்து தைரியத்தோடு கூடியிருக்குமென்னையும் பயமுறுத்துகின்றது, விவேக நேத்திரங்களோடும் வெளிவிழிகளோடுங் கூடியிருந்தபோதினும் குருடாக்குகின்றது, அபரபக்ஷத்திரவேபோல ஆனந்தத்தோடு கூடியிருந்தபோதினும் பெருந்துயரப்படுத்துகின்றது. ஆயிரக்கணக்கான கோணலையுடையதும், கோமளப் பரிசமாகிய இன்பலேசத்தையியும் விடய அடைவையுடையதும், பின்பு விடம்போன்ற வைரம் பந்தம் வதம் முதலியவற்றைக் கொடுப்பதும், ஆகிய காதலாகிய கருநாகமானது சிறிது தீண்டியபோதினும் கொத்தி மோகிப்பிக்கின்றது. மாயை நோய் மாயாகாரிய வஞ்சனை முதலியவை, மாயாகாரிய சர்வப்பிரபஞ்சம் என்பவற்றை யுண்டாக்குபவளும், துர்ப்பாக்கியத்தைக் கொடுப்பவளும், தைன்னியத்தை யுடையவளும், ஆகிய ஆசையாகியகாாரக்கியானவள், புருடர்களுடைய இருதயத்தைப் பிளக்கின்றனள். சோம்பன் முதலியவற்றானும், நாடிகள் முதலியவற்றானும் சுற்றப்பட்ட சரீரத்தைக்கொடுக்கும் ஆசையானது, பழுதுபட்டசுரையாலாய வீணையானது, வேறு சுரைதேடும் ஆலசியத்தோடும், அறுபட்ட நாடிகளோடும், தையலோடுங்கூடிச் சுரைமறைப்பைத்தருவதா யமங்கலமாதலின் மங்கலோற்சவாரங்கத்தில் விளங்காததேபோல ஆசைநாசமாகவேயடைவுற்ற விக்ஷேபமில்லாத நிரதிசயானந்தத்தில் விளங்கமாட்டாது. "இவ்வுலகுற்றகாமவின்பதுவும், திவ்வியமாய தேவர்பேரின்பும், தவ்வவாவழிவாற்றுன் வருமின்பின், ஒவ்விலேசோடச கலையுளொன்றே" என்றுமன்றோ கூறுகின்றார். மலையின் குகையிலுண்டாய கொடியானது சூரியகிரணம்படாமையினானே எப்போதும் அழுக்கடைந்து, கைப்பாய்ச் சித்தமயக்ககாரணபலத்தைத் தருவதாய், நீண்டு வளர்ந்ததாய், மிருரசத்தோடு கூடியதாய், மிகப்பசையுற்றதாயிருப்பதேபோல ஆசையானது எப்போதுமே மிகவும் அழுக்குடையதும், துயராகிய பயனோடுகூடிய மனமயலைத்தருவதும், மிகவும் நீண்டுகொண்டே செல்வதும், மிகநட்போடு கூடியதும், ஆகியிலங்கும். ஆநந்தத்தைத் தராததும், புஷ்பங்களற்றுச் சூனியமும், பயனற்றதும், வீணாகவே மாமுதலியவற்றின் சாகைகளில் உயர்ந்து சென்றதும், மங்கலமின்றியதும், காய்ந்திருத்தலிற் குரூரமான முண்மயமும், ஆகி, க்ஷீணமஞ்சரிபோன்ற ஆசையான துயரும். ஒருவனது மனதையும் வயப்படுத்த முடியாமலிருந்தபோதினும் யாவர் பின்னும் தொடர்ந்து யாதொரு போகலாபப்பயனையும் சிறிதும் அடையாமல் விருத்தவிலைமாதைப்போன்ற விருப்பம் துயரையே யடையும். விரிந்த புவன நடனசாலையின் கண்ணே சோகமோக கருணை நகைப்பு முதலிய பலவித ரசங்களோடு கூடிய சமுசாரப்பெருங்கூட்டத்தில் ஆசையாகிய கிழத்தாசியாடுவள். சமுசாரமாகிய ஜீரண ஆரண்யத்தின் கண்ணே புஷ்பித்த ஜரையோடு கூடியதும், வீழ்தலெழுதலாய பலமாலையோடுற்றதும்,

மிக நீண்டதும், ஆகிய ஆசைவிடக்கொடிவிரிந்து கிடக்கின்றது. நடக்கவுஞ்
சாதிக்கவுமுடியாதவளாயிருந்தாலும், நடனகதியை முயல்பவளான, ஆசை
யாகிய கிழக்கூத்தியானவள் வலுவின்மையினனே மனமகிழ்விலாமலானந்த
மின்றிக் கூத்தாடா நிற்பள். சிந்தையாகிய சஞ்சலமயிலானது, மழைநாளெ
ழுந்தபனிபோன்ற மோகமறைத்தபோது நன்றாக நடனம்புரியும், ஒளிமிகுந்த
சரற்போதாகிய விவேக ஒளிவரும்போதோ ஓய்ந்துவிடும், அசாத்தியமாய்ச்
செல்லமுடியாதவற்றிற் கூண்டாகிய எண்ணத்தைச் செய்கின்றது. மாரி
காலமாத்திரப்பிரவாக நதியாகிய ஆசையானது, கணத்தில் பலஜல அடை
வினனே உல்லாசமாகிய விருத்தியையடையும், அவையில்லாத காலத்தில்
முற்றினும் நீணுள் சூனியமாயிருக்கும், அவையிருக்குங்காலத்தும் இடை
யிடையே சூனியமாம், அநேகம் ஜடமாகிய திரைகளையுடையதாம். நட்ட
பலத்தை விட்டுவிட்டிருக்கும் மற்றொரு விருக்ஷம் போனிற்குமிவ்வாசை
புருடனைவிட்டு மற்றொரு புருடனைப் பற்றுமிவ்வாசை பறவையைப்போல,
பசிதாகத்தானே சஞ்சலத்தை யடையும். ஆசையாகிய அதிசஞ்சல வானரம்
அடையத்தாண்டமுடியாததன் கண்ணும் எண்ணமாகிய பாதத்தைவைக்கின்
றது; திருப்தியடைந்திருந்தபோதினும் இலாபமென்னுங்காய்கனியை விரும்பிக்
கொண்டேயிருக்கும் ஓரிடத்தில்நீள்காலம் நிலைத்திருப்பதேகிடையாது. பிரா
ணிகளின் கருமானுசாரமாக விருக்கும் பிரஹ்மாவின் சேஷ்டையைப்போல
ஆசையானது, சுபமாயுசிதமானதைத் தொடங்கி அதனை முடிக்காமலே அசுப
மாயனுசிமாய்த்தொடங்கியதற்கு மாறாய எல்லாக்காரியங்களையுமே அதிவிரை
விலனுசரிக்குமாயினும் இளைப்பாறுவதே கிடையாது மற்றோ எப்போதுமே
சுப அசுபப்பலப்பொருட்டு முயன்றுகொண்டே யிருக்கும். இருதயதாமரை
யிலிருக்கும் வண்டாகிய ஆசையானது கணப்போதிற் பாதாளஞ்செல்லும்,
க்ஷணத்தில் மேலுலகங்கட்குப்போம், கணத்திற்றிக்குக்குஞ்சங்களிற் சுழலா
நிற்கும். அந்தப்புரத்திலிருப்பவனையும் அதிக சங்கடத்திற் சேருமாறுசெய்
யாநின்ற ஆசையொன்றே சமுசாரத்துள்ள சர்வதுக்கங்களுக்குள்ளும் நீண்ட
தூண்டிற் கயிறு கொல்பவனது அருகாமையிற் கொண்டிழுத்துக் கொல்லன்
முதலியவற்றைச் செய்வதேபோலப் பெருந்துயர்களை நெடுங்காலீயும். அவி
வேகப் பனியாலே முன்னும் பின்னும் கிழக்கும் மேற்குந் தெரியாமன் மூடி
வியாபித்து நிற்கும் ஆசையாகிய மேகமாலை பரம மூர்க்கத்தன்மையாகிய மிகக்
குளிர்ச்சியை யுண்டாக்கிப் பரஞ்சோதியாகிய ஆன்மசூரியனை மறைக்கும்.
அநேகம் பசுக்களின் கழுத்துத்தும்போடு கோக்கப்பட்ட மாலைக்குச் சமானமாக
க்குறுக்கேயிருக்கும் நீண்ட கயிறுபோல, சம்சாரத்தில் விவகரிக்கும் சர்வஜ
ந்து சமுதாயங்களின் மனங்கள் கோக்கப்பட்ட மாலையாசையேயாகும். விசி
த்திரமான விடயங்களின் மூழ்கிமகிழ்தலின் விசித்திரவர்ணத்தை யுடையதும்,
பலவகையற்புதங்களின் காரணவடிவுடையதும், துர்க்குணம்பொருந்தி நாணற்
றதும் மலின புருடனுகிய மேகத்தின்கண்ணிருப்பதும், மிகநீட்சியுடையதும்,
சுயம் துச்சமாதலிற் சூனியமாய் வஸ்துவல்லாததும், மனஆகாயத்திலிருத்தலி
ன் சூனியத்தை யிடமாயுடையதும் ஆகிய ஆசை இந்திரத்தனுசாயிலகும். இவ்

வாசையானது இன்குணங்களாகிய பயிர்களுக்கு இடியாகவும், ஞானத்தாமரைகட்கு நாசப்பனியாயும், ஆபத்துக்களாகிய பக்குவப்பயிர்களின் விருத்திக்கேதுவாய சரற்காலமாயும், இருட்டிற்கு ஹேமந்த இரவாயும், சம்சார நாடகத்திற்கு நடனமாதாகியும், பிரவிருத்திவடிவக்கூண்டினுக்கும் வீட்டுவிடங்கத்திற்கும் பறவையாயும், மனோரத ஆரண்யத்திற்கு மானுசியும், மன்மதசங்கீதத்திற்கு வீணையாயும், விவகாரக் கடலுக்குப் பேரலையாயும், மோகமென்னு மதகரிக்குச் சங்கிலியாயும், சிருட்டியாகிய ஆலமரத்திற்கு விழுதாகியும், துயரங்களாகிய குமுதங்கட்கு நிலவாகியும், ஜனனமரண துக்கங்கட்கு முக்கியமாகிய மாணிக்கச் சிமிழாயும், உள்நோய் வெளிநோய்களின் விலாசங்கட்கு நித்தியம் மதம்பிடித்த மடந்தையாயும் விளங்காநிற்கும். விண்வீதிக்கொப்பாய விருப்பமானது கணகாலம் சிறிது விவேக ஒளியானே விமலமாயும், கணப்போது சிறிது இருளோடு கூடியதாயும், கணநேரம் பனிக்கொப்பாய பெருமோகம் பெருகியதாயுமிருக்கும். இங்ஙனமாகிய இச்சையின் உபசாந்தியினானே யாது பிரயோஜனமெனின், மேக அந்தகாரத்தாலிருண்ட கிருஷ்ண பக்கத்திரவானது அரக்கர் சரிக்க இடமிலாமல் அழிவதேபோலத் தேகத்தாலுளவாய சிரமங்கள் நீங்குதற்கு ஆசையானது நீங்கவேண்டியதவசியமாகும். விஷவிசேடத்தாலுண்டாய விடுசிகை ரோகம்போல மரணஹேதுவாகிய ஆசையை எதுவரையினும் அனுசரிக்கின்றார்களோ, இனிது தரிக்கின்றார்களோ, விடுகின்றார்களில்லையோ, அதுவரையும் அத்தியாத்மசாஸ்திரக்கதையே கேளாத பிராணிகள் வியாகூல சித்தமுடையவர்களாகி மோகிக்கின்றார்கள். ஆயினதன் றியாகத்தில் யாதுதானுபாயமெனின், விடயத்தைச் சிந்தித்தலை விடுதலானே உலகர் எல்லாத்துயரங்களையும் விடுப்பர்; காதலாகிய விடுசிகைக்கு மகாமந்திரம், சிந்தைசெய்தலை விடுதலேயாமென்பர். (கீதை, விடயந்தமை நினைசின்றவன் விரகொன்றுவனவையில்) துரும்பு கல்காட்டம் முதலியயாவற்றையும் புசிக்கத்தக்கனவெனப்பழகிப்பற்றியேவந்து, முடிவில் மடுவில் ஆசையாகிய மீனமானது கொல்லப்படுவதாகும். ரோகபீடையும், மோகமங்கையும், சோகஆசையும், கம்பீரதீரவீரரையும், சூரியகிரணங்கள் தாமரையை மலர்த்துவதேபோல விரைவில் அதீரத்தன்மை மேன்மலர்ச்சியடையுமாறு செய்யும். மூங்கிற்கொடிபோன்ற ஆசையானது உள்ளேபொள்ளலாயும், திடஅபினிவேசமாகிய கணுக்களையும், நீண்டதனதங்குரமாகிய சிந்தைகளையுங், துக்கங்களாகிய முட்டைகளையும் உடையதாய் நித்தியமுத்துமணிப் பிரியமுடையதுமாகும். விவேகமும் அதனைக்கெடுக்குங்காரணமாகும்; அற்புதம்! அந்தோ! இஃதொருபெரிய சித்திரமாயிருக்கின்றதன்றோ! என்னை, கெடுக்கவேமுடியாததான ஆசையையும் மகாமதிமான்கள் விவேகமாகிய நிர்மலவாளினாலே கெடுத்துவிடுகின்றார்களே. கூர்மையாய வாளின்முனையும், வச்சிரவொளியும், வெந்த இருப்புப்பொறியினொளியும், இருதயத்தின்கண்ணே யிராநின்ற இவ்வாசையைப்போலக் கூர்மையுடையதல்ல; ஏனெனின், வாளின் முனை முதலியவை வெளியிலிருத்தலினானே ஒவ்வொருகாலே யநர்த்தத்தைச்செய்யும்; ஆசையோ, இருதயத்தின்கண்ணே யிருத்தலின், எப்போதுமே துயர்தரும்; ஆகையால் அவற்றினின்றும் ஆசையையதி

கமென்றே சொல்லவேண்டும். தீபச்சுடராகிய திருஷ்ணையானது, இடையில் போகவைபவப் பிரகாசமுடையதும், முடிவில் கறுத்த இருளையும் கூர்மையாய மரணத்தையுங் கொடுப்பதும், மாதா மனைவி மைந்தன் முதலிய நேயமாகி யதைலத்தானே நீண்டபாவிய யவ்வன விருத்த அவஸ்தைகளாகிய உயர்ந்த வத்திகளையுடையதும், பிரகாசமாய்ப் பிரத்தியக்ஷமாயிருப்பதும், இட்டமிழந்த மையானே யுண்டாய உள்ளெரிச்சலாற்றீண்டச் சகிக்கமுடியாததும் ஆகியிருக்கும். கவுரவத்தானே மேருகிரிக்கொப்பானவனையும், மிகுந்த அறிவுடையவனையும், சூரனையும், வேண்டாமையென்னும் விரதத்தானே நிலைபெற்றவனையும், புருடோத்தமனையும் இவ்வொரே ஆசையானது ஒரு நொடிப்போதில் துரும்பு போல உபேக்ஷிக்கத் தக்கவனாகவும் சஞ்சலமுடையவனாகவும் யாசக தைனிய அடைவினானே இருக்குமாறு செய்துவிடும். "துரும்பினுர் தூலமெலிதினு மெலிதாம், விரும்புறு மிரப்போனதனினு மெலியன், தரம்பெறுவா யுத்தானடித்திலையென், இரும்பெருமெனையுமிரப்பானெனவே" என்றுமன்றோ கூறுகின்றார். ஆசையென்னும் விந்தியமலையின் மகாதட்டமானது, விஸ்தீரணமாகிய துஷ்டகாரியங்களென்னும் ஆரண்யங்களையுடையதும், காமலோப போகலம்பட்டத்தன்மை முதலியவற்றானே பதினான்கு லோகங்களினும் விரிந்ததும், காணமுடியாததும் பயங்கரமானதும், நெருங்கிய வலைபோலக் கட்டுங்காரணமான ஆசாபாசரூப ரஜோகுணங்களாகிய தூளிகளும் நெருங்கிய பலவகைத்தருக்களும் நிறைந்ததும், பெருமிருண்மயமாகிய பெரும்பனியோடு கூடியதும் ஆகியிலங்கும். இஃதெங்ஙனம் விஸ்தீரணமாகும், எங்ஙனமாழ்ந்தறியப்படாததாகும், எங்ஙனந்தான் ஒன்றாகும், ஆசிரய விடய சப்தமுதலிய வேற்றுமையானே ஆசை காமம் உலோபமுதலிய பேதங்காணப்படுதலின் எனின், அதனைத் திருட்டாந்தத்தோடுங் கூறுகின்றேன் கேட்பீர்களாக:— இரசன இந்திரியவடிவமாகித்தேகத்திலிருக்கும் ஓரேமாதுரிய சக்தியானது, சகலபுவனங்களிலுமிருக்கும் எல்லாநீர்களிலு மிருப்பதாய்ச் சஞ்சலமாகிய தரங்கங்களோடுற்ற நதி சமுத்திராதிகளில் பெருகுதலினானே க்ஷீரமென்றும், கனைத்தலினானே உதகமென்றும், சப்தித்தலினானே அம்புவென்றும், கிரியாசப்த பேதத்தால் விவத்தையற்றுள்ள நீரின்கண்ணே இராநின்ற அறியப்படாத்தகைமையை யடைந்து ஒன்றேயெனப் பகுக்கப்படாதவாறேபோலத் தேகத்தின்கண்ணே யிருக்குமாசையொன்றே சகல புவனங்களிலுமிருக்கும் யோக்கியவத்துக்களையும் விடயீகரித்து விவகாரத்தில் அறியப்பெறாத தன்மையை யடைந்தேயிருந்த தேகஆசையே எல்லா ஆசைகளாகவும், ஆசைகாம முதலியவைகளாகவுங் கூறப்படுமென்பதானே வெளிப்படையாய்ப் பகுக்கப்படமாட்டாதாம்.

17-வது ஆசை நீக்கம் முற்றிற்று.

---

## 18-வது தேக நிந்தை.

இப்போது, உள்நோய் வெளிநோய்களாகிய, அநேகவிதக் கிலேசங்கட்கிடமாகியும், ஜரைமரணாதியானே யழிவுறுவதாயும், அபிமானம் ஆசை முதலியவற்றிற்குக் காரணமாகியும், இராநின்ற தேகம் நிந்திக்கப்படும் :— ஆசை துக்க

ஹேதுவாமெனில், ஆகுக; ஆயினும் "வாழ்க்துவளனே வயங்கவேசாணும்" என்னும் நியாயத்தால் ஆகத்திற்கே சுகபோகங்களை யனுபவித்தற்கிடனுகி யிருக்குந் தன்மை வெளிப்படையாதலினுனும், யாவருக்குமே தேகத்திலதிகப் பிரீதி காணப்படுதலினுனும் சுகவேதுவாகலாமேயெனின், அதுவுந்துக்கவேது வேயாகும்; எவ்வாறெனின்? ஈரமாய மலமூத்திராதிகள் நிறைந்த குடல்க ளோடுகூடியதும், நரம்பினுல் நிறைவுற்றதும், அநேக விகாரமுற்றதும், எங்கும் விழுதல் கழிதல் அழிதல் முதலியவற்ருேடு கூடியதும், ஆகிய தேகம் இச் சம்சாரத்திலிலங்குகின்றது; அதுவும் கேவலந் துக்கத்தின் பொருட்டேயாம். ஜடமாயிருந்தபோதினும் அது ஜடத்தை யறிகின்றமையின் பெரும்பான்மையும் ஆன்மாவிற்கொப்பாகவும், தானே அத்தகைய பிராணமயாதிகோசங்கள் நான் கிற்கும் ஆதாரமாயிருத்தலினுனே சுற்றிக்கொண்டிருப்பதேபோல ஐந்துகுணங் களையுடைய ஆரோபிக்கப்பட்ட ஆன்மதாதாத்மியத்தை யுடைத்தாகியும், ஊகத்தால், மோக்ஷாதிகார அடைவுண்டாயின் மங்கலமாயும், அல்லாக்கால் அமங்கலமாயும், வேறு ஜடவஸ்துக்களைப் போலல்லாமலும், சேதனமுமல்லா மலும் இருக்கும். இதனுனே சிற்சடதிருஷ்டிகளினுள் இது, ஆன்மபக்கத்திற் சேர்க்கப்படுமா? அல்லது அனுன்மபக்கத்திற் சேர்க்கப்படுமா? வென ஐயமுள தாகவே நிர்ணயிக்கமுடியாததுஷ்டக்கருத்தோடுகூடியதாம்; விவேகமின்மையி னுனே மூடான்மாவாய் மோகத்தையேகாண்கின்றது; அஞ்ஞன் விவேகியெ ன்னுமிருவருள்முதலதாகி இத்தேகத்தின்கண்ணேயான்மபுத்தியினுனே சஞ்சல அசுத்த சித்தத்தோடு கூடியிருத்தலின் சம்சாரத்தையே காண்பதன்றிப் புரு டார்த்தத்தைக் காண்பதேகிடையாது. அற்ப அன்னபானுதிகளானும் சீதஉஷ் ணுதிகளானும் ஆனந்தத்தையடைகின்றது, துயரத்தையுமடைகின்றது, தேகத் திற்குச்சமானமாகச் சோகிக்கத்தக்கதும், அசுசியானதும், குணமில்லாததும் உலகிற்கிடையவேகிடையாது. உபேக்ஷிக்கத்தக்கதாய் விருக்ஷம்போலிருக்கி ன்றதிது:—எப்போதும் வரவுபோக்குடையதாகும், இருதுக்களென்னும் அற்ப இன்பங் கிடைக்குந்தோறும் பற்களாகிய தாதுப் பொடிகளோடுகூடி விரிந்த நகை ப்பாம் புஷ்பத்தானே யலங்கரிக்கப்பட்டிருக்கும்; புயங்களாகிய கிளைகளோடுற்ற தாயும், உயர்ந்ததாகிய அங்கிசம்சாகை மூலங்களையுடையதாயும், பற்களாகிய பறவைகளின் கூட்டத்தைக்கட்ட ஆதாரமாய கம்பம்போல அழகிய இருப்பை யுடையதாயும், விழிகளாகிய வண்டுகளின் துளைகளோடு கூடியதாகியும், தலை யிடமாகிய பெரியபழத்தை யுடையதாயுமிருக்கும்; செவிகளாகிய மரங்குத் தும் பறவைகளானே மூக்கினுற்குத்தி யுண்டாக்கப்பட்ட நற்றுளைகளோடு கூடி யும், கைகால்களாகிய இலைகளாலலங்கரிக்கப் பெற்றும், குன்மகோய்த்தூறுகளை யுடையதாயும், வாள் கோடாலி முதலியவற்றுனே நன்ருக வெட்டிப்பிளக்கக் கூடியதாயும், இருபறவைகளென்னும் மந்திரப்பிரசித்தமாகிய ஜீவாசுரர்களா லேனும், மதிஜீவர்களாலேனும் செய்யப்பட்ட இருதயக்கூண்டையுடையதா யும் இருக்கும்; காந்தியையும் நிழலையுமுடையதாய இத்தேக விருக்ஷமானது ஜீவவழிப்போக்கக் கூட்டங்கட்கு இடமாம்; இது யாவருக்குத்தான் சொந்த மாம், யாவருக்குத்தான் சத்துருவாகும், இத்தேகதருவில் யாவருக்குப் பிரீதி

யாம், யாவருக்குத்துவேஷமாம், ஒன்றும் பொருந்தாதென உபேக்ஷிக்கத்தக்கதாம். ஆன்மாவென யாவருங்கொண்ட இத்தேகத்தை யெவ்வாறுபேக்ஷிக்கமுடியுமெனின், ஆயுணதியின் குடும்பக்கடலின் அக்கரையடைதற்கு அடிக்கடி கவர்ந்தலைடமுங் கொடியுமாகிய இத்தேகத்தில் யாவருக்கான்ம பாவனையுண்டாகும் மயிர்களாகிய எண்ணிறந்த தருக்களோடுகூடியதும், அநேகம் படுகுழிகளோடு கூடியதும், ஆகிய தேகமென்னுஞ் சூனியவனத்தின்கண்ணே, சங்கையின்றி நெடுநாளைக்கிருக்கத்தக்கதிது வென்னும் விசுவாசத்தை யாவர்தாஞ் செய்வர். தசை நரம்பெலும்புகளானே சுற்றப்பட்ட திடமில்லாமல் அசாரமாய்த் துளைகளோடுகூடிய பேரியாமிதன்கண்ணே வெளியேசெல்லுமுபாய வுபதேசமில்லாமல் யான் பூனையைப்போன் றுட்கார்ந்திருக்கின்றேன். சம்சாரமாகிய ஆரண்யத்தின் கண்ணுண்டாயதும், மனக்குரங்குலாவி மகிழ்வதும், சிந்தையாற்றிரட்டிய ஆகாரமுற்றதும், பெருந்துயர் மரப்புழுக்களானே குடையப்பட்ட துளைகளோடுற்றதும், ஆசையாமரவிற்காலயமும் சினக்காகங்கட்டிய கூண்டுகளோடு கூடியதும், தோவிலை முதலியவை மங்களங்கள் என்பதனானே புண்ணியத்தை யுண்டாக்குமேதுவாகி நகைப்பாம் புண்ணியபுஷ்பத்தைக் கிளப்புவதும், ஸ்ரீ மானாகவளர்வதும், சுபஅசுப மகாபலத்தையுடையதும், நல்ல புயக்கூட்டமாகிய கொம்புக்கூட்ட நீட்டியதும், கைகளாகிய பூங்கொத்துக்களானே யலங்கரிக்கப்பெற்றதும், பிராணனாலசைவிக்கப்பட்ட தனது சருவ அங்க அவயவ இலைகளோடுற்றதும், சர்வேந்திரியங்களாம் பறவைகட்கு ஆதாரமும் அழகிய பெருந்துடைகளாம் தம்பங்களானே உன்னதமானதும், யவ்வனகாந்தியாகிய சீதளநிழலினோடு கூடியிருக்கும்வரை சாமவழிப்போக்கன் றங்குவதும், உச்சியிலுண்டாய மிக நீண்டமயிர்களாகிய புன்மாலை நிறைந்ததும், அகங்காரமென்னும் கழுகுகட்டிய கூண்டோடுற்றதும், வயிறாகிய பெரும்பொந்தினையுடையதும், வேறுவேறாய வாசனை யெனக்கிளைத்துவரும் சடைக்கூட்டத்தானே சுற்றப்பட்ட மூலத்தோடு கூடியிருத்தலின் கெடுக்கமுடியாத வடிவத்தையுடையதும், சிரமங்களாகிய பலவகைநீட்சியினானே பிரியப்படத்தகாததும், காய்ந்ததும் ஆகியதேகப்பிலக்ஷ (கல்லொளி-இரளி-கல்லால்-இறலி) விருக்ஷமானது எனக்கின்பப் பொருட்டாகாதாம். அகங்காரமாகிய இல்வாழ்வானுக்கித்தேகம் பெரியவீடாம், இதுபூமியில் விழுந்துருண்டபோதிலும், நிலைத்தபோதிலும், இதனால் ஹே மகாமுனிவரே! எனக்காக வேண்டியதென்னே! வரிசைவரிசையாகக் கட்டியிராநின்ற இந்திரியங்களாகிய பசுக்களையுடையதும், மீண்டுமீண்டுலவாநின்ற ஆசையாகிய இல்வாழ்க்கைத் துணைவியையுடையதும், அதனானே காமமாங் காவிக்கன்முதலியவற்றானே அலங்கரிக்கப்பட்ட முழுமேனியையுடையதும் ஆகிய இத்தேகவீடானது எனக்கிஷ்டமாகத் தோற்றவில்லை. முதுகென்புக்களாகிய கட்டைகளின் சேர்க்கையானே நாற்புறமுங்குறைந்த இடத்தையுடைய பொந்துறைந்ததும், மலமூத்திர அன்னரசாதிசெல்லும் நீளமான குடல்களாகிய கயிறுகளானே கட்டப்பட்ட இவ்வுடம்பாகிய வீடானது எனக்கிஷ்டமாகவில்லை. விரிந்த நரம்புகளையே வீணைமுதலியவற்றின் சூத்திரங்களாகவும் கட்டுங்கயிறாகவும் உற்றதும், இரத்தநீராற் சேறாக்கப்

பட்டதும், ஜரையாகிய சூரணத்தானே வெண்மையாக்கப்பட்டதும், ஆகிய தேககேகத்தையான் விரும்பவில்லை. சித்தமாகியவேலைக்காரனாற் செய்யப்பட்ட அநந்தஞ்சேஷ்டையினாலே விழாமற்றடுக்கு முயற்சியுண்டாக இருப்பையுடையதும், பொய்யும் அஞ்ஞானமுமாகிய இருபெருமாதாரத்தூண்கள் தாங்கியதுமாகிய இத்தேகவீட்டை யான்விரும்பேன். துன்பமாகிய குழந்தைகளாற் செய்யப்பட்ட அழுகைக்குரலையுடையதும், இன்பமாகிய படுக்கையில் மனோரம்மியத்தையடைவதும், கெட்டகாரியமாகிய தாகபுண்களுற்ற வேலைக்காரி திரிவதும், ஆகிய இத்தேககேகத்தை யான்விரும்பேன். அதனானே அநேகதோடங்களோடும் அசுத்தரோடும் கூடியதும், விடயக்கூட்டச் சாமக்கிரிகளோடுந் திரவ்ய முதலிய சாதனங்களோடும் கூடியதும், அஞ்ஞானமாகிய இலவணமுதலிய வற்றோடும் சுவர்முதலிய வற்றோடும் கெடுக்குங்காரணங்களோடும் கூடியதும், ஆகிய தேகக்கிருகம் எனக்கிஷ்டமானதல்ல. முழந்தாட்கும்பமாகிய ஆதாரக்கட்டை மேலிருக்கும் சிறுதுடையின்சிரமாகிய பெருந்துடை என்பதாதியாய்த் தன்னுதார ஆதாரத்திற் பரம்பரையாகவிருக்கும் இவற்றோடுற்றதும், மிகநீண்டதாய புயக்கட்டைகளானே வலுவுற்றதும் ஆகிய இப்புற்கலத்தை யான்விரும்பேன். ஞானேந்திரியங்களாகிய உட்சாளரங்களுற்றதும், விளையாடாநின்ற புத்தியாகிய மனைவியோடுகூடியதும், சிந்தைகளாகிய குமாரிகளோடு கூடியதும், ஆகிய இவ்வுடம்பை யான்விரும்பேன். தலைமயிராகிய பந்தலோடுற்ற செவிகளாகிய குண்டலங்களும் முத்துமுதலிய செல்வமும்நிறைந்த மேல்வீடுகளோடுற்றதும், நீண்ட அங்குலிகளாகிய காஷ்டசித்திரங்களோடு கூடியதும், ஆகிய இவ்வாகத்தையான் வாஞ்சியேன். சர்வ அங்கங்களாஞ் சுவர்க்கூட்டங்களில் நெருங்கிய மயிர்களென்னும் யவையினங்குரங்கண் முளைக்கப்பெற்றதும், மிகச்சூனியமாம் வயிறென்னும் பொந்தினையுடையதும் ஆகிய காயத்தையான் காதலியேன். நகங்களாகிய சிலந்திகளுறையுமிடமும், பெண்ணையைப்போலச் சுழற்சிதைனியம் கலகம் முதலியவற்றையியற்றும் பசியினானே உபத்திரவப்படுத்தும் உள்ளிடமுடையதும், பயங்கரமான சப்தத்தைச் செய்யும் காற்றோடுகூடியதும் ஆகிய இவ்வுடலை விரும்பேன். உள்ளும்வெளியும் புகுந்துசெல்வதே வேலையாயுள்ள இளைப்பிலாத வேகமுறும் பிராணவாயு நிறைந்ததும், விஸ்தாரமாகிய விழியாம்பலகணியுடையதும் ஆகிய இவ்வாகத்தையான் பிரியப்படேன். நாவாகிய குரங்கைக் கட்டிவைத்திருக்கும் கடாடத்தடையாய காட்டம்போட்ட பயங்கரமாகிய தலைவாயிலையுடையதும், பிரத்தியக்ஷப்பல்லென்புத் துண்டுகளின் றோரணங்களையுடையதும் ஆகிய இத்தேகத்தையான் விரும்பேன். தோலாகிய சூரணப்பூச்சால் வழுவழுப்பையுடையதும், திகிரிக்கல்வண்டி முதலியவை சரிப்பதேபோலச் சந்திகளின் சுழல்கை செல்கை முதலியவற்றோடு கூடியதும், மனமாகிய பழைய பெருச்சாளியானே தோண்டப்படுவதேபோலச் சிதிலத்தன்மை இராஜசுவலைத் தன்மைகள் உண்டாக்கப்படுவதும் ஆகிய வுடம்பை யானிச்சித்திலேன். புன்னகையாகிய தீபப்பிரபையோடு விளங்குவதும், கணகாலம் ஆனந்தசுந்தரமாயிருப்பதும், கணகாலம் அஞ்ஞான அந்தகாரப் பிரவாகத்தோடுகூடியதும் ஆகிய தேககேகத்தை யானி

ஷ்டமாகக் கொள்ளவில்லை. எல்லாநோய்கட்கிடமும், தோற்சுருக்கு நரை
நிறைந்தபட்டணமும், முக்கிய போக்கியங்களாயிருக்கும் சர்வமானசு துக்க
சாரங்களானே செல்லமுடியாத ஆரண்யமாயிருப்பதும் ஆகிய தேகவீட்டை
யான்விரும்பிலேன். இந்திரியங்களாகிய கரடிகளின் ஆரவாரத்தானே கலக்க
விடமுற்றதும், சூனியமாயிருப்பதும், சாரமில்லாத அநேகம் புதர்களும்
பொந்துகளும் உறைவதும், இருள்சூழ்ந்து ஆழ்ந்து அறிதற்கரியதிக்குக் குஞ்
சங்களை யுடையதுமாகிய தேகமகாஅடவி எனக்கிஷ்டமாகத் தோற்றவில்லை.
ஹே மகாமுனிவரே! சேற்றிலழுந்திய யானையை யெடுப்பதற்கு அற்பபல
முடையவனுன் முடியாததேபோல இத்தேகாலயத்தைத் தாங்குவதற்கு யானு
ற்றலுடையவனுகேன். தனத்தாற்ருனென்? இராச்சியத்தாற்ருனென்? தேக
த்தாற்ருனென்? சேஷ்டைகள் மனோரதங்களாற்ருனென்? சில தினங்களிலே
யே காலன்யாவற்றையுமே யழிப்பன். அழிவையே யியற்கையான தருமமாக
வுடைத்தாகிய உதிர மாமிசமயமான இத்தேகத்தையுள்ளும் புறம்பும் ஆராய்
ந்து நோக்கின்என்ன இரம்மியமிருக்கின்றது கூறுங்கள். மரண சமயத்தில்
எக்காயங்கள் ஜீவனை யனுசரிக்கவில்லையோ, காத்துக்கொழுக்கவைத்த உபகா
ரத்திற்கு மறுஉபகாரஞ் செய்யாமையின் செய்ந்நன்றி கொன்றனவாய அவை
களிடத்தில் மதிமான்கட்கு எவ்வாறுபற்றுதலுண்டாகும். மதயானையின்செவி
நுனிபோலலைவதும், அக்காதிற்ருெங்கும் நீர்த்துளியழிவதே போலழிவதும்
ஆகியகாயம் என்னைவிடுவதற்குள் யானே அதைவிடுகின்றேன். காற்றலைவதே
போற் சஞ்சலமும், மிருதுவும் ஆகிய காயஇலையானது, காயமனோவியாதிகளா
கிய நூற்றுக்கணக்கான முட்களானே கிழிக்கப்பட்டுப் பிறல்பிறலாய்த் துச்ச
இயற்கையதாகும், ஈசப்பாயிரசமற்றதா யிருக்குமிதில் எனக்கிஷ்டமில்லை.
நெடுநாளுண்டுகுடித்து, இளந்தளிர்போல மிருதுவையும் இளைப்பையுமடைந்து
முயல்வானே விநாசத்தையடையப் போகின்றது. அடிக்கடி முன்னனுபவித்த
பாவஅபாவ சுகதுக்கங்களையே மறுபடியும் இக்காயமாகிய பாமரன் அனுபவித்
தும் வெட்கமுறுவதேயில்லை. நெடுங்காலம் பிரபுத்தன்மையை யடைந்திருந்
தும், ஐசுவரிய இலக்ஷுமியைச் சேவித்தும் விருத்தியடைவதும் மேன்மை
யடைவதும், விநாசமற்றிருப்பதும், இன்றியகாயத்தை யேன்காப்பாற்ற வேண்
டும். ஜரைவரும்போழ்தில் ஜரையேவரும், மரணகாலத்தில் மரணமேவரும்
ஆதலின் போகிதரித்திரர்களின் விசேடத்தையறியாததாய்ச் சமமாகவே இக்கா
யமிருக்கும். சமுசாரமாகிய கடலின்வயிற்றில் ஆசையாகிய சிறுவளையில்,
கெட்டபொறிகளானே கெட்டவிடயச் சேற்றுத்துகளி னிரசத்தைக்குடிக்கும்
காயமென்னும் ஆமையானது தூங்குவதுபோல மூடமாயிருக்கும்; அதனுனே
ஆன்மாவை யுத்தாரணஞ்செய்வதற் கனுகூலமான இச்சையும் தொழிலுமின்றி
யதாகும், அதனுனே ஆசிரியர் சமீபத்தையடைவுற்று அதைப்பற்றி வினுதன்
முதலிய வாக்குத்தொழிலுமற்றிருக்கும். தகனமென்னும் முக்கியப்பிரயோ
ஜனத்திற்கே தக்கனவாய காயகாஷ்டங்கள் இக்குடும்பக்கடலின் கண்ணே பல்
கோடியாய்ப் புரளுகின்றன, அவற்றுள் ஏதோவொன்றை நானெனவறிவர்.
நீட்சியில் துட்டத்தனத்தோடு வித்தாரமாய்ச் சுற்றுவதும், தாழ்ந்தகதிப்பலத்

தை முடிவிலுடைத்தாகி மரிப்பதும், துஷ்டசேட்டை யானேமரிப்பதும், ஆகிய தேகக்கொடியினுனே விவேகிகட்குச் சிறிதுகாரியமுமில்லே. தேகமாகிய மண்டேகமானது, சேற்றுச்சிறு குளங்களின் முழுகிவிரைவிலேயே ஜரையையடைந்து எத்துணைத்துர்த்தசை வகைகளானேயாண்டோ அற்பகாலத்திற் செல்கின்றது அறியமுடியவேயில்லே. காயமாகிய சஞ்சலச்சண்டமாருதமானது இரசமில்லாமலே யாவற்றையுந் தொடங்கித் தூளிகளாகிய இராசசமாத்திரம்நிலறந்த கெட்டநெறியானே செல்வதாகி ஈண்டெவரானுங் காணப்பெறுவதாகாதாம். வாயுமனங்களின் செல்கைவருகைகளும், தீபத்தின்றோற்றக் கேடுகளும் அறிதல்கூடும், சரீரத்தினது போக்குவரத்தோ எவரானுமறியப் படுவதேயில்லே. சரீரங்களிலும் உலகின் நிலேபேற்றிலும் யாவர்சாரமெனவும், நெடுநாட்கிருப்பதெனவும், சத்தியமெனவும் புத்திசெய்கின்றனரோ அவர் மோகமாகிய கள்ளுண்டுன்மத்தரானவரெனச் சீச்சீ யென்றடிக்கடியும் இகழப் படுவர். யான் றேகத்தையுடையவனல்லேன், என்னுடையது தேகமுமல்ல, இது வென்னுந் தன்மையானே கடாதிபோன்று ஜடமாமித்தேகம் யானுமல்லவென ஆராய்ந்து பரமான்மாவில் இளேப்பாறிய மனமுடையவர் புருஷோத்தமராகிய விஷ்ணுவேயாவர். மானஅவமான மிகுந்தனவும், மிகுந்தலாபத்தானே மனேரம்மியப்படுவனவுமாகிய கெட்டதிருட்டிகள் சரீரமாத்திரத்தி லாசைவைத்திருக்கும் நரனேக்கொல்லுகின்றன. சரீரமாகிய பாழுங்குழியிற் படுத்துக்கொண்டிருக்கும், கோமளமும் வலுவும் மிகுத்த அங்கத்தையுடையதாகிய அகங்கார தருமமானபோக ஆசையாகிய பிசாசானது, வஞ்சனேயானே எங்கட்கு அசாரத்திற் சாரமதிபைத்தந்து, சாரத்தை யபகரித்துழலுமாறுவஞ்சித்தாடுகின்றது. தீனமான சர்வ சற்புத்தியுமே விவேகாதியினுதவி யில்லாமல் தனித்திருப்பதாய்க்கஷ்டம் அந்தோ! காயத்தில்யான் என்றுழலும் பொய்ஞ்ஞானமாகிய துட்டஅரக்கியானவளால் வஞ்சிக்கப்படுகின்றது. இத்திருசியவர்க்கத்திற் சிறிதும் மெய்யாயில்லாதபோது அதனுட்பட்டதேகமும் அவ்வாறேயாகுமாதலின் சுயமாகவே வெந்ததாயசத்தாம் சரீரத்தாலும் ஜீவர்களனேவரும் வஞ்சிக்கப் படுகின்றனர் அகோ! இஃதாச்சரியமேயாகும். யாவரையும் வஞ்சிப்பதனுனே காயத்திற்குச் சிறிது பயனிருக்குமாயின் பொருத்தமுமாகலாமே யெனின்? அவ்வாறு யில்லவேயில்லே; இத்தேகமாகிய பழுத்தஇலேயானது அருவியினது நீர்த்துளியேபோலச் சிற்சில தினங்களிற்றானே முயல்வின்றியே வீழ்ந்துபோகின்றது. மிகவிரைவிற் கெடாநின்ற இத்தேகமானது கடலின்கண்ணே குமிழி போலும் சமுசாரசம்பந்தமாயோடாநின்ற பெரிய நீர்ச்சுழியில் தன்பொருட்டாகாமலும் பிறர்பொருட்டாகாமலும் நிட்பலமாய்ச் சுழன்றுகொண்டேதிரியும். காயமுதலிய திருசியவர்க்கம் அசத்தியமென்ப தெவ்வாறெனின், பொய்யாயிராநின்ற அஞ்ஞானத்தின் விகாரமாயும், கனவிற்காணும் நகர்க்கொப்பாயும், "தன்றேகத்திலிட்டப்படி யுலவுகின்றனன்" எனும்மறைப்படி கனமயல்கட்காதாரமாயும், வெட்டவெளியா யழிவையடைவதாயும், இராநின்ற இக்காயத்தின்கண்ணே கணமேனும் காதலுற எனக்கிஷ்டமில்லே. (கோத்திற்கு நாகரிக வியாபார சமானசத்தை யிருத்தலின் மனவுணர்க) மின்னலின் கண்ணும்,



சரற்கால மேகத்தினிடத்திலும், கந்தர்வ நகரத்தின் கண்ணும், நன்னிலைமை யை நாடுபவனெவனோ அவனே இக்காயத்தின் கண்ணும் நம்பிக்கைவைக்குக. விரைவிற் கெடுவதில் தன் தன் திறமையைக் காண்பிக்கும் பொருட்டு வலு வின் முயன்றபதார்த்தங்களுக்குள் எப்போதுமழியுங் காரியக்கூட்டத்தை வெற் றிகொள்வதாய எவ்வெம்மின்னல் சரற்காலமேகம் முதலியனவுளவோ அவற் றினும் வெற்றிபெற்று மேன்மையை யடைந்ததும், நாசஹேதுவாய தோஷ சாமக்கிரி மிகுத்திருத்தலின் பிரபலதோஷத்தோடு கூடியதும், ஆகிய இக்களே பரத்தைத் துரும்பிற்கொப்பாகத் துச்சபுத்தியினுனே நீக்கி யான்சுகமாயிருக் கின்றேன்.

18வது தேகநிந்தை முற்றிற்று

---

## 19-வது பாலிய நிந்தை.

இப்போது அறியாமை பசிதாகம் நோய் சுசியிலாமை, சஞ்சலம் என்ப வற்றோடு கூடித்தூடிக்கப்பெறுவதும், விலங்குபறவை கட்கு ஒப்பாயிருப்பதும் ஆகியபாலியம் நிந்திக்கப்படும்:—தேகத்திற்குண்டாம் பாலிய அவஸ்தையானது யாவராலும் விரும்பும்படியான மிக இரம்மியமாயிருத்தலின் உடம்பின் எல்லா அவத்தைகளுமே துக்கரூபங் களெனக்கூறுதல் முடியாது; மேலும் "பேரிறை யவனும், பெருமறையவனும், சீரிளங்குமரனுஞ், சிறந்த பேரின்பையுற், முர்தர வுறங்க லெவ்வாறுமோ" என்னுஞ் சுருதியினுனும் பாலியமானது மிகுந்த ஆனந் தத்தோடு கூடியதெனப்பிரதிபாதிக்கப் பட்டிருத்தலினுனே மிகத்துக்கமெனல் எங்ஙனம் எனின்; விஸ்தாரமா யதுசெய்யும் அனர்த்தமிகுதியைக் கூறுகின் றேன், பலவிதமாய்ச் செய்யவேண்டுமென்னும் அபிமானத்தால் அலைந்து கொண்டிருப்பதும், நான்கு விதசரீரங்களோடு கூடித்திரமற்ற ஆகாரத்துடன் சஞ்சல இயற்கையுடையதும், ஆகியசம்சார சாகரத்தில் மனுட ஜன்மங் கிடைத்த போதினும் "அரியமானுடம் பெறலரிதரிதரிதே" எனமறை கூறலின் மனுடப்பிறவிகிடைப்பதற் கருமையினும் அருமையாயிருந்தபோதினும், பாலி யம் கேவலந்துக்கத்தின் பொருட்டேயாகும். ஏனெனின், சக்தியில்லாமை, ஆபத்து, பக்ஷணாதிவிடயங்களில் விருப்பு, பேசமுடியாமை, மூடமதி யுடைமை விளையாடல் குதூகுலமாய்த் திரிதன் முதலியவற்றிலாசை, கிடையாவிடிற் றீனத்தன்மை அதி சஞ்சலமுடைமை என்னுமிவையாவும் பாலியத்தில் நிகழ்கின்றன கோபம், அழுகை, கொரோம், தைனியம், இளைப்பு முதலிய தசை களையும் வேறு அநந்ததுர்த்தசைகளையும் பாலியமானது யானைகட்குக்கட்டுந் தம்பமிருப்பதுபோலக்கட்டுமிடமாயிருக்கும். சைசவத்தின்கண்ணே இருதய த்தை எவ்வகையாயசிந்தை காற்புறத்தும்பிளந்து பீடிக்கின்றதோ அத்தகைய சிந்தை மாணத்திலும் ஜரையிலும் நோயிலும் ஆபத்திலும் யவ்வனத்திலும் கிடையவேகிடையாது. மிருகங்கட்குச்சமானமாய்த்தொடங்கப்பட்டதும், யாவ ராலுமேதுயர்செய்யப்படுவதும், அதிசஞ்சலமும் ஆகிய பாலலீலையானது மரணத்தினும் அதிகதுக்கத்தையேகொடுப்பதாம். முன்னேநிற்கின்ற பிரதிபிம் பம்போல வெட்டவெளியாய்க்கனமான அஞ்ஞானம் கணந்தோறும் மனதிற் றோற்றிக்கொண்டேயிருப்பதும், அவ்வவ்விடயங்கள் மனத்திற்பிரதிபலித்தலி

ணுனே அநேகவிதப்பிராந்தி ஞானங்களுண்டாகிக்கொண்டேயிருப்பதும், அத ணுனே நானாவித சங்கற்பங்களானே நைந்து அச்சமாயதும், சங்கற்பிக்கப்பட்ட அவ்வவ்விடயங்கள் கிடையாமையானே எல்லாவகையானும் பின்னப்பட்டு எப்போதுந்துயரோடுகூடிய மனதையுடையதும், ஆகியபாலியமானது யாவருக்குத்தான் சுகத்தைக்கொடுக்கும். நீர், தீ, காற்று முதலியவற்றானே நிரந்தரம் உண்டாக்கப்பட்ட பயத்தால் அடிக்கடிவருமச்சஞ்சோகமுதலியவை எவ்வாறு சைசவத்தில் அறியாமையாலுளவாமோ அவ்வாறுஎவ்வாபத்திற்றானுண்டாம். சாமானியமாகவும் விசேஷமாகவும், அறிந்தும் அறியாமலும், காயசம்பந்தமாகவும் மனோசம்பந்தமாகவும் செய்யாநின்ற லீலைகளிலும், கெட்ட விலாசங்களிலும், துட்டசேட்டைகளிலும், கெட்டகருத்துகளிலும், பலாத்காரமாகவிழுந்து மிகச்சாரமென்னுமயக்கத்தைப்பாலன் அடைகின்றான். பிரயோஜனமில்லாதகருமத்திலும், பாலர்கள்பைத்தியகாரர்கள் மொழியைநம்பி மகிழ்வோடும் பெருந்தொடக்கத்தைக்கற்பிப்பதும், தீய ஒழுக்கமுற்றதும் கெட்ட நிலையையுடையதும், ஆகிய சைசவமானது குரு முதலியோராற்செய்யப்படும் சாட்டையடி முதலிய சிக்ஷையின் பொருட்டேயாமன்றிப்புருடனுக்குச்சாந்தியின்பொருட்டாகாதாம். குற்றங்களும், தீய ஒழுக்கங்களும், கெட்டவசனங்களும், கெட்ட மனோவியாதிகளும், மற்றவையும், பாலியத்திற்பாழும்பொந்தில் வாழும் கூகைகளைப்போலவந்து நன்றாக அடைந்துகொள்ளும். பாலியம் மிகவும் இரம்மியமாக விருக்கின்றதெனக் கூறுகின்றார்களே யெனின், பாலியம் இரம்மியமெனஎவ்வீண் மதியினர் கற்பிக்கின்றனரோ கெட்டமதியையுடைய அம்மூர்க்கரைச்சீயென்று தள்ளிவிடவேவேண்டும், ஏனெனின், இராகாதிவிக்ஷேபமுண்டாகாதிருக்குமாயின் இயற்கையாய ஆத்ம சுகந்தோற்றுதல் கூடுமென்னும் சம்பாவனையாற்றிருட்டாந்தப்படுத்திய சுருதியின்பொருளை யவருணர்ந்திலரன்றோ அதுபாலிய இரம்மியத்தைக்கூறவில்லையாதலின் அது அரம்மியமேயாகும். எந்தப்பாலிய ஒழுக்கத்தில் மனமானது ஊஞ்சற்போல ஆடிக்கொண்டேயிருக்கின்றதோ, மூவுலகின்கண்ணும் அமங்களமாக இருக்கும் அதுவுங்கூட மகிழ்வின்பொருட்டாதல் எங்ஙனமோ! கேவலம் மனுடர்கட்குமாத்திரம் இது அமங்களமென்பதாகவின்றாம்; மற்றோ, எல்லாப்பிராணிகட்குமேயமங்களமாம், சகலப்பிராணிகட்கும் சகல அவஸ்தைகளினின்றுமே பாலியத்தில் பத்துப்பங்கதிகமாக மனதானது சஞ்சலத்தையடைகின்றது மனதின்சஞ்சலமிகுதியானே துக்கமிகுந்துவருதல் வெட்டவெளியாகவேதெரிகின்றது. மனமியல்பாகவே சஞ்சலமானதாம், பாலியமோ அதிசஞ்சலமுடையதாகும், ஆகவே அவ்விரண்டுஞ்சேர்ந்ததனாலுண்டாம் அனர்த்தத்தில் தன்னைக்காப்பாற்றிக்கொள்பவன் யாவன்றானிருக்கின்றான். சைசவத்தோடுகூடியசித்தத்தினின்றும் சஞ்சலத்தை மங்கையர்கண்களும், மின்னற்கூட்டங்களும், சுவாலைமாலைகளும், அலைகளும், கற்றுக்கொள்ளுகின்றன. சைசவமும் மனதும் எப்போதும் சஞ்சலசுபாவங்களுடையனவாய்ச் சகலவியாபாரங்களிலுமே சகோதரர்கள் போலவேகுறிப்பிக்கப்படுகின்றன. துயரைத்தரும் எல்லாத்துர்விசனங்களும், கெட்ட மனோவியாதிகளும், பிறவுள்ளஎல்லாத்தோடங்களும், ஸ்ரீமானைச்சேர்ந்து தரித்திரர் வாழ்

வதேபோலப்பாலனையே யண்டிப்பிழைக்கின்றன. புதிது புதிதாக அதிப்பிரீதி
யான வஸ்துவைப்பாலகன்றினந்தோறும் அடையாவிடின் அப்போது விடம்
போற்பொறுக்கமுடியாத மனோ விகாரத்தால் பெருமூர்ச்சையையடைகின்ற
னன் அற்பத்தினாலேயே பாலகன்வயமாகிவிடுகின்றான், அற்பத்திலேயே விகா
ரத்தையுமடைகின்றான், மலத்திலேயே இரமிக்கின்றானாதலின் இப்பாலன்
நாய்போலவன்றோ திரிகின்றான். நிரந்தரம் கண்ணீர்விட்டும் பெருமூச்செறிந்
தும் முகங்கோணினவனாகியும், புழுதியோடுகூடிய தேகத்தையுடையவனாகியும்
சடமென அறியாமையோடுகூடியவனாகியும், மழைபெய்து பாஷ்பம் பெருகும்
காய்ந்தபூமிக்குச்சமானனாகியும் பாலகன்றிரிவன். பயாகாரபரனாகியும், தீனனாகி
யும். கண்டதிலும் காணாததிலும் காதலுடையவனாகியும், அலையும்மதியையும்
அலையும் தேகத்தையுமுடையவனாகியும், இராகின்ற பாலகனதவத்தை கேவலம்
அவத்தையின்பொருட்டேயாம். தனதுமனதிற்காதலித்தபதார்த்தங்களையடைய
முடியாமல் கொதித்தமதியுடையவனாகிப் பலமிலாத பாலகனானவன் இருதயம்
பிளவுபட்டதேபோல மகாதுக்கத்தையடைவன். கெட்ட சேட்டைகளாலும்,
கெட்ட மனோரதங்களினாலும் இடம்பெற்றனவும், அநேகங்கோணலான வஞ்
சனையுபாயங்களானே குரூரமானவையும், ஆகிய துயரங்கள் பாலனுக் கெவ்வ
ளவுண்டாகின்றனவோ அவ்வளவு எவனுக்கு முண்டாவதே கிடையாது. பாலக
னானவன் பலாத்காரமானதனது மனோரத விலாசமனத்தினானே நித்தியம் வெய்
யிற்காலத்தில் வனஸ்தலங்கள் கருகுவதேபோலக்கருகுவன். கஜேந்திரனா
வன் கட்டுத்தறியிற்படுவதேபோலப்பாடகசாலையையடைந்த பாலகன்முற்கூறிய
தினும் வேறாயபரவசம் கசையடிமுதலிய அநர்த்தமநேகங்களை விடம்போலும்
மிகத்துயரந்தருவதாய்ப் பயங்கரமாயடைவன். நானாவிதமனோரதமயமாயதும்,
பொய்வத்துக்களிலேயே மெய்ப்புத்தியைக்கற்பிப்பதும், அற்பஅபிப்பிராயத்
தோடுகூடியதும் ஆகியபாலகத்தன்மை மிகநீட்சியாய துக்கப்பொருட்டேயாம்
ஒருகாற்போஜன இச்சையானே அழும்பாலகனை நோக்கிப் புவனத்தையுனக்குப்
போஜனமாகத்தருகின்றேன் என்னும் வஞ்சகவாக்கியத்தாற்சந்துஷ்டனாகிப்
பின்னதையே புசிக்க ஆசைப்பட்டழுவதும், மூர்க்கத்தன்மையினாலே ஆகாயத்
திலிருந்தும் நிலவைப்பிடித்து வ[illegible]விழைவதும், ஆகிய பாலியமானது இன்பப்
பொருட்டெங்ஙனமாகும். மனத்திற்குளிர் வெப்பமுதலியவற்றை நீக்கிக்கொ
ள்ள வேண்டுமென்னு மெண்ணமிருந்தும் முடியாமையின் இப்பாலகனுக்கும்
மரத்திற்கும் யாதுபேதமிருக்கின்றது. பரவைக்குஞ்சேபோலப் பாலகன் இறகு
களாகிய புயங்களால் எழும்புவதற் கிச்சிக்கின்றனன், பசியோடு கூடியவனாயு
ள்ளான், நித்தியம் பயாகாரபரனாகியே யிருக்கின்றான். தந்தைதாய் ஆசிரியர் மூத்
தோர் மற்றையர் முதலியோரால் சைசவத்திற்பயம் இருந்துகொண்டேயிருக்கு
மாதலிற் சைசவம்பயத்திற் காலயமாம். சகல தோஷதசைகளானே தூஷி
க்கப்பட்ட மனத்தையுடையதும், அவிவேகவடிவத்தடையிலாமற் சஞ்சரிக்குஞ்
சீலனுக்குவீடும், ஆகிய பாலியமானது ஈண்டு எவர்க்குமே யின்பத்தைத்தரத்
தகுதியுடையதாகாதாம்.

19வது பாலியநிந்தை முற்றிற்று.

## 20-வது யவ்வன நிந்தை.

இப்போது உலோபம், துவேடம், மதம், அசூயை, அபிமானம், மாற்சரியம், முதலியவற்றானே தூடிக்கப்பட்டதும், காமம்முதலிய அநர்த்தங்களின் விடும் ஆகிய யவ்வனம் நிந்திக்கப்படுகின்றது:—பாலியமானது மிக மூர்க்கத்தன்மையோடும், ஆசையோடும், பாதந்திரத்தோடும் கூடினமையின் மிகுதுயருக்கேதுவென்பதாக ஆனபோதினும் யவ்வனமானது அவ்வாறாகாமையினாலும், பலவிதமாய போகரசாஞ்சிதத் தன்மையினாலும், சுகவேதுவேயாகலாமென இச்சிக்கத்தக்கதே யாகுமெனின், ஹே மகாமுனிவரே! யவ்வனம்போல அநர்த்தத்தைக் கொடுப்பது யாதுளது? பாலிய அனர்த்தத்தைவிடுத்து, போக உற்சாகமயக்கத்தாலும், மேற்கூறப்படுங் காமப்பேய் முதலியவற்றாலும், கெடுக்கப்பட்ட மனத்தையுடையவனாகிய புருடன் இடர்ப்படும்பொருட்டு யவ்வனத்திலேறுகின்றான். பதினான்குவருடமென மாண்டவ்யமகரிஷியால் பாலியம் எல்லையிடப்பட்டிருத்தலின், அத்தகைய பாலியம் இடர்ப்பொருட்டாகாதாம், யவ்வனமோ இடர்ப்பொருட்டேயாம். யவ்வனத்தில் மூர்க்கனானவன் அநந்த விலாசத்தோ(சேட்டையோ)டுகூடிச் சஞ்சலமாயிராநின்ற தனது மனதின் இராகத்துவேஷாதி பரிணாமங்களை யனுபவித்து ஒரு துயரினின்றும் மற்றொரு துயரையடைந்துகொண்டேயிருக்கின்றான். தனது மனதாகிய துளையுட்புகுந்து நானாவித சம்பிரமங்களைச் செய்துகொண்டிருக்கும் காமப்பேயினாலே பலாத்காரமாய்த் தன்வயமற்றவனாகி விவேகத்தைவிட்டு அதன்வயப்படுகின்றான். இதனானே சுதந்தரமின்றியமனமானது தருணிகளைப்போலுஞ் சஞ்சலவியற்கைவாய்ந்த சிந்தைகட்கு, நிதிமுதலியவற்றைக்காணும் பொருட்டுக்குழந்தைகளின் கையிற்கொடுத்த சித்தாஞ்சனமானது சஞ்சலவியற்கைவாய்ந்த அவர்கள் விழியொளிகட்குத் தடையிடாமல் பூமிசிலை முதலியமறைப்பையகற்றி இட்டப்படி நிதியைக் காணும்படி ஆற்றலைச்செய்விப்பதேபோலத் தடையிலாமலிட்டப்படி சுழலவழிதரும். யவ்வனத்தில், காமசிந்தைமுதலியவற்றானே வயஞ்செய்யப்பட்ட மனத்தையுடையவனும், அதனானே அவ்வடிவமாயவைமிகுந்து நிற்பவனும் ஆகியவனே, நரகாதியேதுக்களாயும், செலவிட்டு அல்லலுற்றுத் தேடப்படுவனவாயுமிராநின்ற மங்கையர்சூது கலகமுதலிய விசனத்தைத் தொடங்குவனவாகி யவ்வனத்திலேயேமிகுந்த அதிசயம்படைத்தனவாய் வெட்டவெளியான ஆசை உலோபமுதலிய தோடங்கள் விநாசஞ் செய்கின்றன. அதனானே மகாநரகபீஜமாகி யெப்போதும் மயக்கத்தைக்கொடுத்துக் கொண்டேயிருக்கும் யவ்வனத்தினாலே நஷ்டமடையாதபுண்ணியர் மற்றொன்றாலும் நஷ்டமேயடையார், நானாவிதமாய சிருங்காரமுதலியன வென்னுங்கைப்பு முதலிய இரசங்களையும், விடய ஆசையாகிய தாண்டமுடியாத நீரையுமுடையதும், இராகம் உலோபமுதலன வென்னும் கள்வர் புலி பாம்பு முதலியவற்றின் ஆச்சரியகாரணங்களாலும், விருத்தாந்தக் கூட்டங்களாலும் நிறைந்ததும், பயங்கரமும் ஆகிய யவ்வன ஆரண்யபூமியானது எவனாற்றாண்டப்பெறுமோ அவன் மகாதீரனெனப்படுவன். கணப்போது விளங்கும் வடிவமாய்ச் சஞ்சலமாகிய மேகங்களின் கர்ச்சனையென்னும் அநேக அபிமானக்கூற்றுகள் கர்ச்சிக்கும் அமங்களமாகிய

மின்னற்பிரகாச யவ்வனம் எனக்கு இனிதாகவில்லை. போககாலத்தில் மாதுரிய மாயதனானே மனோரம்மியமாகி முடிவிற்கைப்பாய்த் தூடிக்கப்படுவதாய் நிந்தித்தற்கேதுவாய தோடங்கட்கு அலங்காரமாயிலங்கும் மதவிலாசங்கட் கொப்பாயிராநின்ற யவ்வனமானது எனக்கினிதாகத் தோற்றவில்லை. பொய்யாயிருந்தும் மெய்போலிலங்குவதும் அதிவிரைவில் வஞ்சகத்தைத் தருவதும் ஆகிய கனாக்காதலியைக் கட்டியணைத்ததுபோன்ற யவ்வனமானதெனக்கு இனிதாகவில்லை. கணப்போது மனோகரமாயிராநின்ற சர்வவஸ்துக்களுள்ளும் யாவருக்கும் மேன்மையாக விளங்குவதும் ஆகிய யாவருக்குமே கணமாத்திரமே சாங்கால் மரணக்குறியாக மனோகரமாயிருப்பதும் ஆகிய கந்தர்வ நகரம்போலிலங்கும் யவ்வனம் இனிதாக எனக்குத்தோன்றவில்லை. நாணினின்றுஞ்சென்ற அம்பானது தனது இலக்ஷியத்தை யடையுங்காலபரியந்தமாத்திரம் சுகத்தைக் கொடுப்பதும், துக்கத்தோடுகூடியே விளங்குவதும், எப்போதும் தாகதோஷத்தைக்கொடுப்பதும் ஆகிய யவ்வனம் எனக்கினிதாகத்தோற்றவில்லை. காணும் போதுமாத்திரம் இரமணீயமானதும், நற்சிந்தையற்றமனதோடுகூடியதும், ஆகிய வேசியின் ஆலிங்கனத்திற்குச் சமானமான யவ்வன மெனக்கினிதாகத் தோற்றவில்லை. யாவருக்குந் துயரத்தைத்தரும் விவகாரங்கள் எவையுளவோ அவை யாவும் தாருண்யத்தில் முன்னிலைப்படுகின்றன; பிரளயத்தின் கண்ணல்லவோ பெருங்கெடுதிகள் யாவும் பெருகுகின்றன. பைரவ ஆகாரத்தை யுடையபகவானாகிய ஈசுரரும், இருதயத்திற் கிருள்செய்யும் யவ்வனத்தோடுகூடிய அஞ்ஞான இரவிற்கு அத்தியந்தம் பயப்படுகின்றார்; அவ்வாறில்லையாயின் எப்போதுமே விவேகஞானசந்திரனை யேன்றரித்துக்கொண்டே யிருக்கின்றார். நல்லொழுக்கங்களை நன்றாக மறப்பிப்பதும், மதிக்குக் கெடுதலை விளைவிப்பதும், ஆகியமயக்கத்தை யவ்வனமோகமானது மிகமிகவும் கொடாநிற்கும். காதலியின் பிரிவினாலேயுண்டாய தீண்டமுடியாத சோகவன்னியினாலே இருதயத்தின் கண் நல்ல யவ்வனதசையில் காட்டுத்தீயான் மரம்வேதல்போலப் பிராணிகள் தகிக்கப்படுகின்றனர். யவ்வனத்தில் உள்ளமானது, தோடத்தைக்கெடுத்தலானே நிர்மலமாயிருந்தபோதினும், உதாரத்தன்மையானே விஸ்தீரணமாயிருந்தபோதினும், குணத்தைத் தருதலானே புனிதமாயிருந்தபோதினும், இன்னும் தண்மை இனிமை முதலியவற்றோடு கூடியிருந்தபோதினும், மாரிகாலத்தில் தெளிந்த நதியானது கலக்கத்தையடைவதேபோலக் கலக்கத்தையடையும். பெருந்திரையெறியும் பயங்கரமான நதியானது தாண்டுதற் கெளிதேயாகும், ஆயினும் தாருண்யத்தானே சஞ்சலத்தோடுகூடிய மனோவிருத்தியையுடையதும், போக ஆசையினாலே அலைவிக்கப்பட்ட உள்வெளியிந்திரியங்களையுடையதும் ஆகிய யவ்வனத்தை,தாண்டவேமுடியாது. அக்காதலி யழகுவாய்ந்தவள் அவள்தனங்கள் திரண்டுருண்டிருக்கின்றன, அவளை யாலிங்கனஞ்செய்தலே மோக்ஷம், அவள் முகமே குறைவிலாப் பூரணநிலாவென்றிவ்வாறு பிதற்றுஞ் சிந்தைகளானே யவ்வனத்திற் பிராணிகள் அடியோடுங் கெட்டுப்போகின்றார்கள். அலையாநின்ற ஆசைப்பேய் பிடித்தவனாகிய யவ்வனனை இவ்வுலகின்கண்ணே புகழாமல் விடுவதுமல்லாமல், முறிந்துகிடக்கும் பட்டுப்போன சிறுதுரும்புக்கொப்பா

கத் துச்சமாகவு மெண்ணுவர். மானபங்கமானது அபிமானிகட்கு மரணத்திற்
கொப்பாகக் காணப்படுதலின் மதத்தாற் பீடிக்கப்பட்டதும், தோடமுத்தையணி
ந்ததும் ஆகிய அபிமானமென்னும் பெரியயானைக்கு, நித்தியங்கட்டுக் தம்பமா
கிய யவ்வனமானது நாசத்தின்பொருட்டேயாம்; அபிமானத்தானே பெரிய
யானையைப்போல ஒன்றுந் தெரியாமற்றிரியும் அவிவேகிக்குத் தாழ்ந்தநிலையுண்
டாமேயன்றி மற்றென்னுண்டாம். மனமென்னும் விஸ்தாரவேரையுடையதும்,
தோடங்களாகிய விடப்பாம்புகளைத் தரித்திருப்பதும் ஆகிய விரும்பியது கிடை
யாமையானும், கிடைத்தது பிரிந்தமையானும், உண்டாம் உள்ளெரிச்சலானே
வாட்டமுற்றெழுந்த புலம்பல்கள் என்னும் தருக்கட்கு யவ்வனமானது அந்தோ!
பெருங்காடாக இருக்கின்றது. துஷ்ட சிந்தைகளாகிய வண்டினங்கட்கு, இரமிக்
கத்தக்கசுகலேசமாகியதேனுனும், சுகந்தரும் விடயத்திற் சஞ்சரிக்கும் இராக
முதலிய பூந்தாதுக்களானும் நெருங்கியதும், கெட்டவிகற்பங்களாகிய தனங்க
ளோடு கூடியதும் ஆகிய தாமரைமலரேயாகு மெவ்வனமென எண்ணத்தகும்.
அறம்பாவங்களும், உலகவிவகாரங்களும், ஆகிய தாழ்வைத்தரும் கெட்ட இற
குகளையுடையனவும், இருதயமாகிய தடாகக்கரையிலுலாவிவசிப்பனவும், ஆகிய
உள்நோய் வெளிநோய்களென்னும் பறவைகட்கு, நவயவ்வனமானது ஆலயமா
கும். எண்ணமுடியாமையின் அளவிறந்த விகற்ப அலைவுகளோடு விளையாடு
கின்ற ஜடங்களாகிய அலைகட்கு, மரியாதையை யபேக்ஷியாது, தனக்கிஷ்டமில்
லாத ஜரைமுதலிய துக்கங்களை யெல்லையாகவுடைய சமுத்திரமாகும் இந்தப்
புதிய யவ்வனம். சாதுசங்கம், சற்சாத்திர முதலிய முயல்வுகளினுனே யுண்டா
க்கப்பட்ட சித்த ஆகாயத்திலிருக்கும், தெளிவு, ஒளிர்வு, விவேகதிருஷ்டி, விள
க்கம் முதலிய சற்குணங்களியாவும் ஆயிரங்கோடி முயல்வானே நிலைபெறுத்தப்
பட்டபோதினும், நிலைபெறுமற்செய்யும் ஆற்றன் மிகவுமுடையதாகும் இவ்விட
மமாகிய யவ்வனக்காற்று இராஜதமோ குணங்களோடு கூடியுலவும். காய்ந்து கொ
டூரமான யவ்வனத் தூளியானவை, பறந்துவருதலின், நெற்பதர் விட்டை குப்
பை எச்சிலிலை முதலியவற்றிற் கொப்பாய இந்திரியங்களானே சகிக்கமுடியாத
னவாய் விடயவாசனையாற் கிளம்பிய ரோகங்களால் வதனத்தை வெண்மையா
க்குகின்றன; தோடங்கணிறைய மேற்றலத்தையே யடைவிக்கின்றன. நரர்களு
டைய யவ்வனஉல்லாசமானது, பாவசமபத்துக்களின் விளையாட்டிற் கேதுவாயு
லவித் தோடங்கள் யாவற்றையும் கொடுத்தும் நற்குணங்களியாவற்றையுங்கெடு
த்தும், விளங்கும். இரஜோகுணமென்னும் பூந்தாதுவினுனே தடையுற்றவிவேக
பக்ஷங்களை யுடைத்தாகித் தேகபங்கஜத்தின்கண்ணே சுழலாநிற்கும் புத்தியா
கிய வண்டை, அஃதபிமானிக்கும் அன்னமய கோசத்திலேயே யடைத்து,
இந்நவ யவ்வன சந்திரனுனது மோகிப்பிக்கும். சரீரமென்னும் அற்பவனத்திலே
னும் கொடிவீட்டிலேனும் உண்டாகியிருக்கும் இரம்மியமாகிய யவ்வனப்பூங்
கொத்தானது மேலே சென்றடைந்திருக்கும் உள்ள வண்டை மோகிப்பிக்கும்.
காயமாகிய மருப்பூமியிற் காமவெய்யிலாலுண்டாகித் தோற்றுகின்ற யவ்வன
மாகிய கடியகானனீரைக்கண்டோடி மனமாகிய மானுனது விடயப்படுகுழியில்
விழும். தேகமாகிய இரவிற்கு நிலவும், மனமாஞ்சிங்கத்தின் அழகிய பிடரிமயி

ரும், வாழ்நாளாங்கடலுக்கலை மாலையும், ஆகி இராநின்ற யவ்வனமானது எனக்கு மகிழ்வின் பொருட்டாகத் தோற்றவில்லை. ஹே உறவினரே! இந்த யவ்வனமானது தேகவனத்தில் சிலதினங்கள் மாத்திரம் பலத்தோடு கூடிச்சரற்காலமாகி யிலங்குமாதலினாலும் விரைவிலேயே யழிவையடைந்து போமாதலினாலும் இதன்கண்ணீங்கள் நம்பிக்கை வைக்கவேண்டாம். அற்ப பாக்கிய முடையவனுக்குக் கணகாலத்திற் கரத்தினின்றுஞ் சிந்தாமணியானது கழிந்து போவதே போலத் தேகத்தினின்றும் யவ்வனமாகிய பறவையானது அதிவிரைவிலேயே யோடிவிடும். எக்காலெக்கால் யவ்வனமானது உயர்ந்த நிலையை யடைகின்றதோ, அக்காலக்காற் சந்தாபத்தோடு கூடிய காமங்கள், கேவலம் நாசப் பொருட்டே விருத்தியடைகின்றன. எத்துணைப் போது யவ்வனமாகிய இரவானது முழுவதும் கெடவில்லையோ, அத்துணைப்போதுதான் இராக த்வேஷங்களாகிய பேய்களானவை விசேடமா யுலவும். பலவகையான சித்த விகாரங்கண் மிருந்ததும், எளியதும், கணத்திற் கழிவது மாகிய தாருண்யத்தில், பாலலீலை மிகுந்த இறந்துபோம் மைந்தன்மீது கருணைவைப்பதேபோலக் கருணை செய்யவேண்டும். கணத்தில் அழிவதாய யவ்வனத்திற் சந்தோஷத்தை மோகத்தால் யாவனடைகின்றானோ, அவன் மகாமூடனாதலின், அவன் மனுடனாயினும், மிருகமேயாவன் என்பர் பெரியோர். அபிமானத்தோடு கூடிய அஞ்ஞானத்தால் மதோன்மத்தமாகிய யவ்வனத்தை யாவன் சாரபுத்தியினாலே விரும்புகின்றானோ, அத்துர்ப்புத்தியானவன் மிகவிரைவில் பச்சாத்தாபத்தோடும் பந்தப்படுவன். யாவர் கொல்லாமை, மெய்ம்மை, கள்ளாமை, பிறர்மனை நயவாமை, முதலியவற்றை விடாமற் சுகமாக யவ்வன சங்கடத்தினின்றும் ஏற வல்லரோ, இவ்வுலகில் அவரே தொழற்குரியோர், அவரே புருடர், அவரே சான்றோராவார். பெரும்பெரும் முதலைகட்கு வாசஸ்தானமாம் பெருங்கடல் தாண்டுதற் கெளியதேயாகும், ஆனால் இராகமுதலிய அலைகளின் வலுவான உல்லாசத்தோடுந்றதும், இகழத்தக்கதும், தோடத்தோடு கூடியதும் ஆகிய யவ்வனக் கடலைத் தாண்டல் அரிதினும் அரிதாம். இவ்வாறாயின் பாலியமும் விருத்தாவஸ்தையும், மூர்க்கத்தனத்தினாலும் முடியாமையாலும் புருடார்த்த சாதன மாகாமையின், யவ்வனமும் அநேகத் தோடத்தோடு கூடியிருத்தலின், ஒருகாலத்திலும் புருடனுக்குச் சாதன அடைவினாலே புருடார்த்தத்தின் பொருட்டாசை செய்ய முடியவேமாட்டாதன்றோ வென்று சங்கிப்பின், எல்லா யவ்வனத்தையும் யானிகழவில்லை, மற்றோ, கெட்ட யவ்வனத்தையேயாகும்; நல்ல யவ்வனமோ புருடார்த்தத்தையே கொடுக்கும். விநயத்தினாலலங்கரிக்கப்பட்டதும், புகழத்தக்க முனிவர்பாலிருப்பதும், சாதுக்களின் வாசஸ்தானம்போல இளைப்பாறுதலைத் தருவதும், கருணையானே கவின்வாய்ந்திலங்குவதும், சாந்திதாந்தியாதி குணங்களானே பிரகாசிப்பதும், ஆகிய நல்ல யவ்வனம் இவ்விலக்கணத்துடன் இவ்வுலகிற் கிடைப்பது அரிதன்றோ; ஏனெனின், பறவைகளாற் சூழப்பெற்ற கற்பகதருக்கள் நிறைந் தலங்கரிக்கப்பட்டதும், தேவதைகட் கிடமாயும், அதனானே தயையினாற் பிரகாசிப்பதும், பலம் புஷ்பம் ஐசுவர்யம் முதலியவற்றானும் கற்பகக்கொடி முதலிய குணங்களானும் சூழப் பெற்றதும், ஆகிய ஆகாயநந்தன

வனமானது இவ்வுலகின்கண்ணே மிகவுந் துர்லபமன்றோ; இந்நந்தனவனத்தைப் போல இம்மநுட ஜன்மத்திலும் கூறிய யவ்வனங் கிடைப்பதரிதாயின், பிற விடத்தி லின்றெனக்கூறவும் வேண்டுமோ.

20-வது யவ்வன நிந்தை முற்றிற்று.

## 21-வது ஸ்திரீ நிந்தை.

இப்போது, பிரத்தியக்ஷ நரகக் கூட்டங்களாலுண்டாக்கப்பட்ட சர்வ அங்கங்களை யுடையவர்களும், புருடர்கட்கு நரகத்தையும், ஜன்மத்தையும், எப்போதும் கொடுத்துக்கொண்டேயிருப்பவர்களும் ஆகிய மங்கையர்கள் நிந்திக்கப் படுகின்றனர்:—எந்த ஸ்திரீபிண்டத்தில் காளையர்களுக்கு இரமணீயத்தன்மைப் புத்தியானதுண்டாகின்றதோ அதன் சொரூபத்தைப்பிரித்துநோக்கின் நரம்பு எலும்பு பருத்தமுடிச்சுகளோடு விளங்கும் மாம்சமயப் பாவைபோன்றமங்கைய ரின் யந்திரங்களாகிய சக்கிரமுதலியவற்றைப்போலச் சந்ததஞ்சுழலும் சரீரக் கூண்டில், இரமணீயமதியைச்செய்கின்றனரே இஃதென்னே, யாதொன்றையுங் காணேமே. இதன் விஸ்தாரத்தைப்பின்பார்ப்போம்; முதலில்காளைகட்கு எதன் கண்ணே நேத்திரமயக்கமாமோ அதை யாராயின் அமங்கல மாகத்தானன்றோ வுளது; தோல் மாம்சம் புண்ணீர் கண்ணீர் என்பவற்றைப்பிரித்து நோக்கின், நோக்கமானது இனிதாகத் தோற்றும்பக்ஷத்தில் மோகிப்பாம்; அல்லாக்கால் என் வீணும் மோகிக்கவேண்டும். இது மயிர் இது இரத்தம் என்னும் இவைவதாமே பிரியகாதலியின் நாசச்சரீரம்; இகழத்தக்க இதனுனேவிவேக விஸ்தீர்ண மதியு டையவர்க்காகவேண்டுவதென்னே. ஆ! என்னருமைநேயர்களே! யாவை அடிக் கடி கஸ்தூரி புனுகு முதலியவற்றைப்பூசும் வாசனைகளானே மினுக்கி மினுக்கிப் போற்றப்படுகின்றனவோ அவ்வங்கங்களையுடைய யாவரையும் மாம்சம்புசிக்கும் கழுகு குள்ளநரி முதலியவை கொத்தியிழுத்துப்புரட்டுகின்றனவே நோக்குமின்! பொன்மலையின் கொடுமுடியினின்றும் பெருகியுல்லாசமாய் வரும் விரிதிரைக் கங்கைப் பிரவாகம்போல முத்துமாலையானது கிடந்து புரளு முல்லாசத்தோடு கூடிய மங்கையரின் மலைமுலைகள் யாவை காணப்பட்டனவோ அவையே மயா னங்கடோறும் திசைதிசைகளில் அதிவிரைவில் நாய்களானே சோற்றுச்சிறுபி ண்டம்போல மிகவுமுருசியாகப் பக்ஷிக்கப்படும். காட்டுக்கழுதை யொட்டகை முதலியவற்றின் அங்கங்கள் இரத்தம் மாம்சம் என்பு முதலியவற்றானே விருத்தி யடைந்திருப்பனபோலவற்றானே கொழுத்திருக்கும் காமினியின் அவயவங்க ளில் ஆக்கிரகத்தால் மிகுந்த ஆசைகொள்வது என்னமூடத்தனம், அந்தோ! ஆராய்ச்சியின்றிய அறிவினாலேவிழும்வரை கேவலம் ஸ்திரீகளிடத்திற் சுந்தரத் தன்மையானது கற்பிக்கப்படும்; அதுவும் சித்தமயக்கமொன்றானேயாகின்றது, அம்மாதிரி மயக்கம் இப்பிவெள்ளியிற்கூட இல்லவேயில்லையாதலின், அக்கற் பனையும் பொய்யேயாம். மதமன்மத வாயிலாகவிஸ்தாரமான உல்லாசங்களைத் தருபவரும், தாமே காமப்போதைக் கோதால் விகாரிகளும், கொஞ்சித் தழுவல், கலகம் விளைத்தல் முதலிய விகாரிகளும் ஆகிய நாரியர்க்கும் கள்ளிற்கும் யாது பேதமிருக்கின்றது. மங்கையாகிய கட்டுத்தறியில் மதமோகத்தாற் றூங்குவதா

போன் மயங்கிக்கிடக்கும் மனுடனாகிய மதயானையானது, திடமாகிய சாத்தியங் குசத்தானும் விவேகமாகிய விழிப்பை யடைவதே கிடையாது. கூந்தலாகிய மையைத்தரித்தவரும், தீண்டத்தகாதவரும், கண்ணிற்குமாத்திரம் அழகாயிருப்பவரும், ஆகிய தீவினைச்சுடர்ச்சுவாலையா மங்கையர் மனுடனைக்காய்ந்ததுரும்பிற் கொப்பாகக் கொழுத்துகின்றனர். அதிதூரத்திலிருக்கும் நமனார் புரியிற் கொடுரமாயெரியும் நரகாக்கினிக்கும், மங்கையரிங்குள்ள வராயினும் காய்ந்த கட்டையாயிருக்கின்றன ரென்னும் காரியகாரணத்தால் இரசத்தோடு கூடியவராயினும், இரசமற்றவரேயாவர்; துஷ்டவாசனையோடு கூடியிருத்தலின் பார்வைக்குரசத்தோடு கூடியவராயினும் உண்மையில் இரசமற்றவரேயாவர்; பார்வைக்கழகாயிருப்பவராயினும், பயனுங்காற் பாவமயமேயாவர். இரவினுகாரமாகிய இருளையே கூந்தலாயுடையவரும், சுழலாநின்ற நக்ஷத்திரத்தையே கண்களாக வுடையவரும், உருளுங் கருங்கண்ணியரும், சந்திரபிம்பத்தையே முகமாகவுடையவரும், பூங்கொத்தைப்போன்ற நகைப்பையுடையவரும், சிருங்கார லீலைகளினனே புருடர்களை மிகவும் சஞ்சலப்படுத்துபவரும், அதனனேயே அவர்களுடைய அவசியம் செய்யத்தக்கனவாய தருமவிவேக வைராக்கியாதிகளை முற்றினும் கெடுப்பவரும், புத்திக்குக் கெட்டமகாமோகத்தை யுண்டாக்குபவருமாம் காமினிகள் நீண்டஇரவாகி வீணாக ஆயுளை யழிப்பர். கேவலம் புருடார்த்தத்தைக் கெடுப்பவர்கள் மாத்திரமல்லர்; மற்றோ அநர்த்த ஹேதுவையும் உண்டு செய்பவராவர். புட்பங்களையும் அழகையும் மாதுரியத்தையுமுடைய இளந் தளிர்கள்போன்ற கைத்தலத்தையுடையவரும், வண்டுகளைப்போற் சுழலும் நேத்திரவிலாசங்களை யுடையவரும், பூங்கொத்துக்களைப்போன்ற ஸ்தனயங்களையுடையவரும், மலர்களிலிருக்கும் மகரந்தப்பொடிபோன்று பொன்வெளுப்பான தேகத்தையுடையவரும், நரர்களைக்கொல்வதிலேயே தற்பரராயுள்ளவரும், காமப்பெருமதத்தாற்றமது காலின்கீழே கிடக்கும் பெருமூடரை மூர்ச்சை மரண முதலியவற்றை யடையுமாறு செய்பவரும், பாவசப்படுத்துபவரும், ஆகிய பெண்கள் விடக்கொடிபோல் வளர்கின்றனர். கரடியானது புற்றிலிருக்கும் பாம்புகளைத் தனது சுவாச பலத்தாலிழுத்துப் புசிப்பதேபோலப் பொய்யுபசாரத்தால் விசுவசித்தன் மாத்திரையானே விடர்களுடைய மனதனங்களை யபகரித்துக்கொண்டு அவர்களைக் கொல்வதில் மிகவும் உற்சாகத்தோடுகூடியிராநின்ற காந்தையானவள் ஜந்துக்களை வயஞ்செய்து விடுகின்றனள். மூடமனத்தையுடைய நரர்களாகிய பறவைகளினங்கத்தைக்கட்டக் காமவேடனாற் பரப்பப்பட்ட பெருவலைக்கொப்பாவ ரிக்கருங்கண்மடந்தையர். குமரிப்பெண்ணாகிய பெரிய கட்டுத்தறியில் இரதியென்னும் கொடிய சங்கிலியால் மனமென்னும் உன்மத்த மதயானையானது கட்டுப்பட்டு ஒன்றுந்தோன்றாமல் ஏமாந்துநிற்கின்றது. சித்தமாகிய சேறுநிறைந்த ஜன்மமென்னுஞ் சிறுகுழியில் மீன்களைப்போன்றுழலும் மூர்க்கர்கட்கு துர்வாசனையே தூண்டிற்கயிறும், பெண்களே தூண்டின் முள்ளில்வைத்த மாவுமாவர். இளம்பெண்கள் புருடர்களாகிய குதிரைகட்கு அவற்றைக் கட்டுங் கொட்டகையாயும், ஆனைகட்குக் கட்டுத்தறியாயும், சர்ப்பங்கட்கு மந்திரமாயும், இருந்து புருடர்களைக் கட்டியடக்குவர். பல்

பல இரசங்களோடுகூடியதும், சித்திரமுற்றதும், ஆகிய இப்போகபூமியென்னும்
பிரமாண்டம், இச்சம்சாரத்தில் மங்கையரைப் பற்றிக்கொண்டே திடமாகிய
நன்னிலை பேற்றை யடைந்திருக்கின்றது. எல்லாத் தோடஇரத்தினங்கட்கும்
சிமிளாயும், எப்போதுந் துயரைத்தரும் பெருஞ்சங்கிலியாயும், இராகின்ற மங்
கையராற் பெற்றபயன்போதும், எனக்குப்போதும், மாம்சமாத்திர முக்கிய சார
மாய்ப் பொய்யாயிருக்குந் தனங்களாலும் கண்களாலும் அல்குலாலும் புருவங்
களாலும் எனக்காகவேண்டுவ தென்னே ! எனக்காக வேண்டுவ தென்னே !!.
இது மாமிசம், இது இரக்தம், இவை எலும்புகள் என ஆராயிற் சில தினங்களி
லேயே பெண்களினாசை இருந்த இடந்தெரியாமற் பறந்துபோம். தூலபுத்தி
யையுடைய மனுடப் பதர்களால் இனிதெனப் போற்றப்பட்ட பிரிய மங்கையர்
வேறு வேறுபட்ட கைகால்களையுடையராகி, மயானத்திற் றூங்குகின்றனர். எந்த
முகத்தில் யாவருக்கும் அதிப்பிரியத்தினும் பிரியமுண்டாகின்றதோ, நாயக
னால் கர்ப்பூர கோரோசனை சந்தன முதலியவற்றாற் சித்திரமெழுதி யலங்கரிக்
கப்படுமோ, அந்தப்பைந்தொடியார் வதனம் காட்டிற் காய்ந்து வாடுகின்றது.
ஸ்திரீகளுடைய கூந்தல்கள், மயானவிருக்ஷங்களில் சாம்பற் சேர்ந்திருத்தலின்
பழைய சாமரைபோன்று பாவிக்கப்படுகின்றன; எலும்புகளோ நக்ஷத்திரங்கள்
போல மயானத்தில் மினுக்கு மினுக்கு என்கின்றன ; இவ்வாறு சிலநாளிலேயே
இப்பூமியில் மங்கையர் தூர்த்தசை யடைகின்றனர். தூளிகளும் மாம்சம் புசிக்
கும் கழுகுமுதலிய அநேகம்பிராணிகளும் இரக்தத்தை யுறிஞ்சுகின்றன; தோல்
களைக் குள்ளநரிகள் பிடுங்கித்தின்னுகின்றன; பிராணவாயுக்களோ ஆகாயத்திற்
செல்லுகின்றன. ஹே நேயர்களே ! இவ்வாறு பெண்களவயவங்கட்கு அதி
விரைவில் வரும் தூர்க்கதிகள் என்னாலுங்கட்குச் சொல்லப்பட்டன; என் மயக்
கம்பிடித்து அலைந்து திரிகின்றீர்கள். பஞ்சபூதஞ் சேர்ந்து விகாரப்பட்டதாய
இக்கட்டைப் பெண்ணென்றனர்; இதன்கண்ணே மதிமானானவன் ஆசையா
லெங்ஙனம் இரமிப்பன். விஸ்தாரமான சாகைகளுடன் விரிந்து நெருங்கியிருப்
பதும், பரலோக துக்கமாகிய கசந்தகாய்களோடும், இகலோகத்துண்டாம் சோக
இராக முதலிய சிறிது சுகங்கலந்து புளிப்பு மினிப்புமாகிய பழங்களோடும்
நிறைந்ததும், ஆகிய காந்தையை யனுசரித்த சிந்தையாஞ் சோதிக்கொடியா
னது மேலே கிளம்பி விஸ்தரிக்கின்றது. சித்தமானது, மேற்கூறிய சிந்தையி
னாற் றுயரையும், அதனானே நெருங்கியதன ஆசையினானே குருட்டுத்தனத்தை
யும், எத்திசைக்குச் செல்வேன், எங்கே தனங்கிடைக்கும், என்னும் அலைவை
யும் அடைந்து கூட்டத்தினின்றுந் தப்பியமான்போலப் பெருமோகத்தையடை
யும். பெண்யானையினது ஆசையால் விந்தியமலைச் சாரலிலுள்ள படுகுழியில்
மதயானையானது விழுந்து கட்டுப்படுவதேபோலத் தருணியரின் மயக்கத்தாலே
துன்புறுந் தருணனை நோக்கி யாவரும் மிகவும் வருந்துகின்றனர். எவனுக்குப்
பெண்பேய் பிடித்ததோ அவனுக்கே போகஇச்சையாம், பெண்ணற்றவனுக்குப்
போகமெவ்வாறுண்டாம், பெண்ணாசையை விட்டொழித்தாற் பெரிதானவுல
கம்போகும், பெரிதானவுலகம்போனாற் பேரின்பந்தானேயுண்டாம். கிடைத்த
போது மாத்திரம் இரமணீயமாயிருப்பதும், வண்டின் சிறகுபோல மிகச்சஞ்சல

முற்றதும், விழுந்துவிட்டாற் ருண்ட முடியாததும், ஆகிய பொய்ப் போகங்களில் பிறப்பிறப்புச்சரை முதலிய பீதியினுல் யான் இரமிக்கவேமாட்டேன்; ஹே மகாமுனிவரே! தங்கள் ஆசிர்வாதத்தாற் பெருமுயல்வினுலே சாந்தியையடைவேன், பரமபதத்தையுமடைவேன்.

21-வது ஸ்திரீ நிந்தை முற்றிற்று.

---

## 22-வது வயோதிக நிந்தை.

இப்போது, சோகம், மோகம், பிரிவு, பீடை, வாட்டம், நோய்முதலியவற்றோடு கூடியதும், பெருஞ் சிந்தைக்கும் அவமானத்திற்கும் இருப்பிடமும், ஆகிய வயோதிகத் தன்மையானது நிந்திக்கப்படுகின்றது:—மேற்கூறியவாறேலாயின், காமாதிதோஷப்பிரபலத்தன்மையினுனே யவ்வனத்திற்சுகமில்லாதிருக்குக, வயோதிகப் பருவத்திலோ காமாதிகள் குறைந்து போனதாலும் அடக்கமுதலிய சற்குண சம்பன்ன புத்திரபௌத்திராதிகளால் வீட்டிற் சேவிக்கப்பட்ட வயோதிகனுக்கு அதிக சுகமானது உண்டாகக்கூடுமல்லவாவெனின்? அந்த அவஸ்தையானது அநேக துக்கங்கட்கு இடமாயிருந்தபோதினும், அவ்வியாவற்றையும் பின்னுரைக்கின்றேன்; முன்னர், தன்னினந் தின்னும் பாம்பினங்கட்கு, இன்னினமயவிற்றவை யெங்ஙனமாம், என்னும் நியாயத்தாற் பெருங்கொடூரமுடையதென்பதைக் கூறுகின்றேன்; விளையாடல் மகிழ்ந்துதிரிதல் முதலியவற்றிலாசை நிறைவடைவதற்கு முன்னரே, பலாத்காரமாய்ப் பாலியத்தையவ்வனமானது விழுங்குகின்றது; பின்பு பெண் முதலிய போக ஆசை நிறைவுறுதற்கு முன்பே பலாத்காரமாய்த் தாருண்யத்தை ஜரை விழுங்குகின்றது தாங்களே பருங்கள், பரஸ்பரம் பெருங்கொடூரத்தன்மையை. பாமரர்கட்குப்பெரும் பிரீதியினிடமாகிய இன்ப ஆலயமென்னுந் தேகத்தையே கெடுத்துவிடுதலின் அதன்கண்ணே சுகங்கிடைக்குமென்ருசைப்படல் எவ்வாருகும். தாமரைமலர்கட்கிடிபோன்ற பனியும், சாற்காலப் புன்னுனிநீர்க்குக் காற்றும், கரைத்தருவிற்கு நதியும், இடர்செவ்வதேபோலத் தேகத்திற்கு ஜரை யிடரையேதரும் உட்கொண்ட விடத்திவலே தேகத்தை விரைவில் விகாரப்படுத்துவதேபோலச் சிதைந்த வடிவத்தையுடைய ஜரையானது, சர்வ அவயவங்களைச்சிதை வுற்றுப் பிறல்பிறலாகுமாறு செய்து, விரைவிற் றேகத்தை விகாரரூபமடையுமாறு செய்விக்கும்; தானே சிதைவு வடிவுயா யிராதாயின் பிறவற்றைச் சிதைவுறுத்த முடியாதன்றே. தளர்வுற்ற எல்லா நீண்ட அவயவங்களோடேகூடிய ஜரையால் ஜீரணித்த சரீரங்களையுடைய சர்வ புருடர்களையும் நோக்கிக் காமினிப்பெண்கள் ஒட்டைக்குச்சமானமாய்க் காண்பர். ஆபாசமில்லாமலே தீனத்தன்மையைத்தரும் ஜரையால் கவரப்பட்டவரானபோது சக்களத்தியால் மூத்தவள் தள்ளப்டுவதேபோலப் பேறிவானது அவரை விட்டோடியேவிடும். வயோதிகப் பருவத்தால் நடுங்காகின்ற கிழவனைப் பைத்தியகாரனைப்போலப் பார்த்துத் தாசர்கள், மைந்தர்கள், பெண்கள், பந்துக்கள், நேயர்கள், முதலியோர் நகைக்கின்றனர். பார்க்கச் சகிக்கக்கூடாதவனுய், சிதைந்த அவயவமுடையனுய், சற்குணங்கள் வீரமுதலியவையற்றவனுய், இருக்குங் கிழவனைப்பேராசையானது, மிகநீண்டதும பலத்தோடுகூடிய சாகை தூறு முதலியவை நிறைந்து விரிந்ததும், வேறு

பக்ஷிகள் வந்து வசியாததுமாகிய மிக நீண்டவிருக்ஷத்திற் கழுகு வந்தடைவதேபோல வந்தடையும். தீனத்தன்மையாகியதோ மிகுந்ததும், இருதயத்தின்கண் ணெப்போதுஞ் சாபத்தைக் கொடுத்துக்கொண்டே யிருப்பதும், மிகவும் நீண்டதும், சர்வ ஆபத்துக்கட்கும் முக்கியமாகியதோழியும், ஆகிய ஆசையானது, வயோதிகத்தில் வந்து வளர்ந்துகொண்டேயிருக்கும். பரலோகத்திற்காக என்னால் என்ன செய்யத்தக்கது, ஆ கஷ்டம்! எனமிகக் கொரேமா யெவ்விதத்திலும் நீக்கமுடியாத பெரும் பயத்தின் விருத்தியானது வயோதிகத்தில் மிகவுமுண்டாகின்றது, யானோ மிக முடியாதவன்என்னதான் எவ்வாறுதான் செய்வேன், மௌனமாகவே யிருக்கின்றேன், என இவ்வாறு பலவகையாய தீனத்தன்மை வயோதிகத்தி லுண்டாம். எவ்வாறு எக்காலெனக்கு என்ன போஜனம் உருசியாயிருக்கும் என்பதாக மற்றொரு ஜரையானது பிராணிகளைப்பற்றி வயோதிகத்தில் நிரந்தரம் சித்தத்தைத் தகிக்கின்றது. போகங்களை யனுபவித்தற்காக உல்லாசத்தோடும் பேராசையானது கிளம்புகின்றது; ஆனாலனுபவிக்க முடியவில்லை, போகிக்கச் சமர்த்திருந்தால் ஜீரணமாவதில்லை, ஜீரணிக்கும் ஆற்றலிருப்பினோ போகிக்க முடியவில்லை யெனச்சக்தியின் கெட்ட நிலைமையானதுண்டாம், அதனாற் கிழஅவஸ்தையில் அத்தியந்தம் இருதயமானது வெந்து புழுங்கும். காயத்திற்குக் கிலேச பீடைகளாற் றுயரையே தானிருக்கும் தருக்கட்குத் தருவதேபோற் றந்து, காயமாகிய தருவின் சிரத்திலிருக்கும் ஜரையாகிய கிழட்டுக் கொக்கானது, நோயாகிய அரவின் வாயிலகப்பட்டு ஒவென் றழும்போது, கனமாகிய மூர்ச்சையிருளில் மிகவும் பிரீதியுடைய மரணமாகிய கூகையானது எங்கிருந்தோ விரைவில் வந்துவிட்டதுபோற் காணப்படுகின்றது. சாயங்கால சந்தியானதுண்டானவுடனே யிருட்டானது ஓடிவருகின்றதேபோலத் தேகத்தின்கண்ணே ஜரையுண்டானதைக் கண்டவுடனே மரணமானது விரைந்தோடி வருகின்றது. ஜரைமலர் மலர்ந்த தேகதருவைக் கண்டவுடனே தூரத்தினின்றும் வேகத்தோடு மேலே தாவி அதையழிக்கும் பொருட்டு மரணக்குரங்கானது விழுகின்றது. ஒருவருமில்லாத நகரமும், கிளை கொடிகள் களையப்பட்ட மரமும், நெடுநாள் மழையேயில்லாத தேயமும், சிறிது விளங்கியபோதினும் ஜரையாற் சிதைந்த சரீரம் விளங்கவேமாட்டாது. காசத்தையே தொனித்துக்கொண் டெழுந்துவராநின்ற ஜரையானது, மிகவிரைவிலேயே, கணத்தில் விழுங்கும்பொருட்டே நரனைக் கழுகுமாம்சத்தைக் கவர்வதேபோற் கவர்கின்றது. குமாரியானவள் குமுதத்தைக் கொய்வதேபோல், ஜரையானது தேகத்தைக்கண்டவுடனே, மகா உற்சாகத்தோடும் அதி சீக்கிரமாகச் சிரசிலேறிக் கணத்திலழிக்கின்றது. குளிர்காலத்துக் கொடுங்காற்றாகிய ஜரையானது, சீறுசீறு எனச் சீறிச் சீறித் தேகமாகிய மர இலையைக் கொடூரமாகிய தூளிகளினாலே தூளிதூளியாக்கிக் கிழித்து அழித்து விடுகின்றது. பனிக்கூட்டத்தானே பற்றப்பட்டு வெம்பிப்போன அம்புய அழகைப்போல ஜரையாற் பிடிக்கப்பட்ட தேகமானது ஜீரணத்தன்மையையடைந்து அவ்வழகையே யுறுகின்றது. சிரமாகிய மலையுச்சியினின்றும் சந்திரிகையாகிய ஜரைகிளம்பியவுடனே மிகமுயல்வு மகிழ்ச்சியுடன் வாதம்

கர்சம் முதலிய ஆம்பற் கொடிகளை விளக்கியொளிர்விக்கின்றது. ஜரையாகிய லவணமுதலியவற்றுனே யுபகரிக்கப்பெற்ற, புருடர்களுடைய சிரமாகிய வெண்பறங்கிக்காயை நன்றாகப் பக்குவமாயிருப்பது நோக்கிக் காலசுவாமியானவர் தாமேயதனை யுண்டாக்கி வளர்த்தவராதலின் இனிது புசிப்பர். ஜரையாகிய ஜானவியம்மை தடையிலாமையின் மேலே கிளம்பி விரைவில் ஆயுட் பிரவாகத்திலோடிச் சரீரமாகிய கரைத்தருவை அடியோடறுத்துத்தள்ளும். விடயத்துளையைத் துளைக்கும் யவ்வனமாகிய எலியை ஜரையாகிய பூனையானது புசித்துவிட்டுப் பின்மதத்துக் கிளமபிச் சரீரமாமிசப் பேரவாவடைந்து மகா உல்லாசத்தையடைகின்றது. தேகமாகிய பெருங்காட்டி லுலவும் ஜரையாகிய குள்ளநரி ஊளையிட்டழுதுகொண்டு திரியும், இதைப்போல இவ்வுலகத்தில் அமங்கலகரமாகியதைச் செய்வது யாதேனுமுளதா? ஈர விறகானது எரிக்கப்படுங்காலுண்டாகுஞ் சுவாலையின் சீற்றம்போலச் சுவாசகாசச் சீற்றத்தோடுகூடியதும், துக்கப்புகை யிருண்மயமாயதும், ஆகிய ஜரையென்னும் ஜுவாலையானது எவனுக்கு ஜொலித்துக்கொண்டிருக்கிறதோ அவன் தகிக்கப்பட்டவனே யாவனன்றோ. ஜரையினுல் இளைத்திருக்கும் மனுடர்களுடைய யாக்கையானது வெண்மையாய அவயவங்களோடு கூடியதாகிப் புட்பக்கொத்தால் வளைந்திருக்கும் வெள்ளிலைகளையுடைய கொடிபோல் வளைந்துமெலியும். ஜரையாகிய கர்ப்பூரத்தானே வெளுத்திராநின்ற தேகமாகிய வாழைமரத்தை மரணமாகிய மதயானையானது கணத்தில் அடியோடு சாய்த்துவிடுகின்றது. மரணமாகிய மன்னவர் வருவதற்கு முன்னர் ஜரையாகிய வெண்சாமரையை வீசிக்கொண்டு உள்நோய் வெளிநோய்களாகிய தமது சேனைகள் வெளியே செல்லாநிற்கும். போரிற் சத்துருக்களால் வெல்லப்படாதவரும், புகமுடியாதமலைக்குகையின்கண்ணே புகுந்தவரும், ஜரையாகிய ஜீரணராக்ஷசியினுலே விரைவில் வெல்லப்பட்டதைப் பாருங்கள் ஜரையாகியபனியினுலே சுருங்கிக்கிடக்குந் தேகவீட்டிற்குள் இந்திரியங்களாகிய குழந்தைகள் சிறிதும் அசைவதற்குக் கூடமுடியாமற் கிடக்கின்றன. தண்டமாகிய மூன்றாவது காலாலடிக்கடி தடுமாறித்தடுமாறிக்காசம் அபானவாயுமுதலிய முரஜாதிவாத்தியவிசேடங்களுடன் கூடிஜரையாகிய மங்கையானவள் கூத்தாடுவள். பிரசித்தமாயிராநின்ற சம்சார அரசவிவகார சம்பந்தியாகிய, இராகாதிகளானே சித்தமாகியசபையை மண்ஞ்செய்விக்கும் விடயபோகங்களாகிய கஸ்தூரிமுதலிய மணப்பொருள்கள் நிறைந்ததேகக்கம்பின் உச்சியிற்சென்று, ஜரையெனப்பெயரியசாமரஸ்ரீ விளங்கிக்கொண்டிருக்கும், அதை அசைவிப்பது சௌந்தரியசுகந்தங்கள் வாய்ந்த மந்தமாகிய காற்றுட்டமாகும். சரீரமாகிய நகரத்திலிருக்கும ஜீவிதஆசைத்தடாகத்தில், ஜரையாகிய சந்திரஉதய நிலவின் வெண்மைவீசவே உதித்த மரண ஆம்பற் பூவானது கணத்தில் விரியாநிற்கும். ஜரையாகிய சுண்ணம்புப்பொடியாற் பூசப்பெற்று வெளுத்த சரீர அந்தப்புரத்தினுள்ளே முடியாமை பீடை, ஆபத்து என்னும் ராணிமார்கள் சுகமாக வாழ்வர். ஜந்துக்களுடைய எந் நால்வகைச் சரீரங்களில் முதலில் ஜரையானது விஜயஞ்செய்தவமானப்படுத்தும் போது அதன் முன்பாகவே மரணமானது அவசியம் வந்து தோற்றிவிடுகின்

றதோ அவற்றினுள் ஒன்றாகிய இத்தேகத்தில் மந்தமதியையுடைய தத்துவ மறியாத எனக்கு என்ன விசுவாசம் செய்ய யோக்கியமிருக்கிறது; தத்துவத்தையுணர்ந்த தங்களைப்போன்றவர்கட்கு யாதொருபாதகமுங் கிடையாது. ஜரையானது வந்த பின்னரும் வாழ்ந்துகொண்டிருக்க வேண்டுமென்ற துக்க வாழ்க்கையிற் கெட்ட பிடிவாதஞ் செய்வதாலென்ன பிரயோசன முளது, வீண்தானன்றோ; உலகத்திலுள்ளவர்களால் ஜரையானது வெற்றிகொள்ள முடியாம லிருக்கின்றமையானே ஹே மகாமுனிவரே! ஆசைகள் யாவற்றையும், விட்டொழிக்கச் செய்கின்றது.

22-வது வயோதிக நிந்தை முற்றிற்று.

## 23-வது கால நிந்தை.

இப்போது குணந் தோஷம் பலம் மேன்மை முதலிய தனது மிகுந்த விலாசங்களாலே சர்வப் பிராணிகளின் றொழில்களாகிய மனைவிமாரை இரமிக்கும்படியாகச் செய்யும் காலமானது வருணிக்கப்படும். மேற்கூறியபிரகாரம் போக்கியங்களாகிய தனங்கண் முதலியவை, போகஆசை, போக அனுபவ காலமாகிய பாலிய முதலிய அவஸ்தைகள் தோடமுடையனவென விரிவாய் விளம்பியமையானும், அளவிடப்படாத மகா துக்கத்தை முடிபாக உடைத்தாயிருக்கின்றனவெனக் கூறினமையானும் ஸ்ரீ ராமர் தமக்கு இகாமுத்திரார்த்த பலபோக விராகமிருப்பதாகக் காண்பித்தனர்; இப்போது காமாதிகளின் இயற்கையை விஸ்தரிக்கும் வாயிலாய் நித்தியாநித்தியவஸ்து விவேகமிருப்பதைக் காண்பிக்கும் பொருட்டுப் பீடிகையாகக் கூறத் தொடங்குகின்றார்:—ஹேமகா முனிவரே! இஃதென்னுடைய போக்கியம், யானிதன்போக்தா, இவை அதன் சாதனங்கள், இதனை விதைச் சம்பாதித்து நெடுநாளைக் கனுபவிப்பேன், "இஃதின்றென்னுலெய்தலாயது, இஃதினியெண்ணுமாறெய்துவலினிதே" என்பன முதலிய அளவில்லாத மனோவிகற்ப கற்பனைகளானே மிகமிகவும் விவகார வசனங்களை வசனிப்பவரும், அற்பதேகத்திலான்ம மதியைச் செய்பவரும், அற்ப சுகலேசங்களிற் பரம புருடார்த்த மதியைச் செய்பவரும் ஆகிய மூர்க்க மூடர்களால், சத்துரு மித்துரு உதாசீனர் முதலிய பேதங்களானும், தள்ளத்தக்கது கொள்ளத்தக்கது உபேக்ஷிக்கத்தக்கது என்பது முதலிய பேதத்தானும், அவற்றானுண்டாகிய இராகத்துவேஷாதி பேதத்தானும், சம்சாரத்தைப் பெருக்கும் பிரமாண்டப் பொந்தில் ஒன்றை மற்றொன்றாகக்கவரும் பெருமயக்கமானது ஒருவரானுங் கெடுக்கமுடியாத விதமாக அடைவிக்கப்பட்டுளது. வலையைப் போலத் தூரத்தினின்று மிழுத்துப் பந்தப்படுத்தும் விடயங்களும், பஞ்சரத்தைப்போல ப்பரிச்சின்னப்படுத்திப் பந்தந்தருந் தேகமும், மயலாற் சித்தித்திருத்தலினுனே அவஸ்து வடிவமாகிய இச்சம்சாரத்தில் விவேகிகட்குப் பற்றுதல் எவ்வாறுதானுண்டாகும், அதற் குவமானத்தையுங் காணேமே; ஒருவாறு கூறின், கண்ணாடியிற் பிரதிபலித்த கனியையுண்ணப் பாலர்களன்றோ விரும்புவர் என்னலாம். இத்தகைய சம்சாரத்தின் கண்ணும் எவர்கட்குத் துச்சமாகிய சுக வாசனையும் ஆசையுமுண்டாகின்றனவோ அவர்களையும், எலியானது கெல்லும்

வளைக் கருகிருக்கும் அறுகம்புன்னுனியை மாத்திரம் பற்றிவாழவேண்டு மென்றெண்ணி நூல்நூற்று அந்நூல் நுனியிற் றொங்கும் நூற்புழுவினது நூலை அடியோடும் அறுப்பதேபோலக் காலன் அடியோடு கெடுத்துவிடுவன். பூரண மிலவெழுந்தவுடனே பொங்கிப் பெருகும் பெருங்கடலை வடவாமுகவனற் குடிப்பதேபோலச் சகலமும் விழுங்குங் காலன் விவகாரபூமியான ஜகத்திடை விழுங்காததுமுளதோ! இல்லவேயில்லை யுண்டாய யாவற்றையுமே விழுங்கி விடுவன். இச்சருவதிருசியசத்தை களையும் ஒரேகவளமாய் விழுங்க முயன்ற காலனே, சர்வபதார்த்த சாதாரணமாக அதிபயங்கர சங்கார உருத்திரனுவன். வல்லமை பேரறிவு மகிமை முதலியவற்றுனே மிகப்பெரியோராயிருப்பினும் ஒருகணப்பொழுதாயினும் தாழான், உடனேகொண்டுபோய் விடுவன்; அநந்த விசுவத்தையும் தானே கவளீகரித்து விசுவவடிவமாய்க் காலனே விளங்காநிற்பன். கிரியையுபாதியாலாய ரூபத்தானே யுகம் வருடம் கற்பம் என்னும் பெயர்களானே சிறிது வெளிப்படையை யடைந்திருந்தபோதினும் குறிக்கப்படாத வடிவுடையவனுகி யாவற்றையுந் தன்வயனுக்கி யிலங்குவன். மிக அழகாயிருப்பவர்களும், நல்லொழுக்கத்தவர்களும், மேருகிரிக்குச்சமானமாய் வல்லமையுள்ளவர்களும், சர்ப்பங்கள் கருடனுல் விழுங்கப்படுவதேபோலக் காலனுல்விழுங்கபடுவர்கள். தயையேயின்றியவனும், கற்போலக் கடினமானவனும், புலிமுதலியவற்றைப்போலக் குரூரமானவனும், இரம்பாதிபோலக் கூர்மையானவனும், உலோபியும், அதமனும்; ஆகிய காலன் இதுவரைவிழுங்காத வஸ்துவேகிடையாது. விழுங்கும் விடயத்திலேயே ஓயாமல் மதியைச்செலுத்தும் பெருத்த ஆகாரத்தையுடைய காலனுனவன் ஒன்றை விழுங்கிமற்றொன்றை விழுங்கும் முறையாய் மலைகளையும் புசிக்கின்றனன், அநந்தபோக சமுதாயங்களை யுண்டபோதினும் களிகூர்வதேகிடையாது. தனமுதலியவற்றைப் பறிப்பவனும் அழிப்பவனும், புசிப்பவனும், கொல்பவனும், ஆகிக்காலனுகிய கூத்தாடி பலவகையாய சம்சார நாடகத்தைச் செய்யாநிற்பன். கிளியானது மாதுளம்பழத்தைப்பிளந்து தின்னுவதேபோல வெளிப்பட்ட அவஸ்தையோடுகூடிய அண்டஜமுதலிய நால்வகைப்பூத பீஜங்களை யிவ்வுலகின்கண்ணே நிரந்தரம் அசத்துவத்தை யழித்தலாலடைவிக்கும் வாயிலாகக் கட்டைப்பிளந்து புசிப்பன். அபிமானுதியால் விருத்தியடைந்த ஜனசமுதாயத்திலுள்ள ஜீவக்கூட்டங்கள் நிறைந்த பெருங் காட்டில் உலவாநின்ற காலனுகிய கடாக்களிருனது சுப அசுபங்களாகிய கொம்பின் நுனியால் ஜனங்களாகிய இலைகளையுதிர்த்துக் கொண்டு கர்ச்சித்துத் திரியும். (தாமரைத்தடாகத்தைக் கெடுக்கும் யானையெனவும் பாடமாம்) அபஞ்சீகிருதபூதவடிவமாகிய ஹிரண்யகருப்பரைமூலமாகவும், தேவதைகளையே பழங்களாகவும் உடைய பிரஹ்மாக்களின் பிராரப்தவிநோத ஹேதுக்களாய பிரமாண்டங்களையே பெரிய விருக்ஷங்களாகவும், அவ்வக்கருமபலன்களோடு கூடிய நால்வகைப்பிராணிகளையே சிறிய விருக்ஷங்களாகவும், வஞ்சகவேடமாகிய உலகவடிவத்தையும் அற்பபோகத்தையும், உடையதாகி யிலங்கும், "வரைதருமூர்த்தம மூர்த்தமேயென்னும், பிரமத்திருவமிரண்டாய்ப்பிறங்கும்" என்னுஞ் சுருதிப்படி பிர

பஞ்சசகிதப்பிரஹ்மமே தாண்டமுடியாத பெருங்காடாம், அதை மிக மிகவு மெவ்விடத்திலும் வியாபித்துக் காலனாகியசர்ப்பம் வாழ்ந்துகொண்டிருக்கும்; காலவயிற்றிலேயே எல்லாவஸ்துக்களின் உற்பத்தி திதி இலயங்காணவுமபடு கின்றதன்றோ. இரவுகளாகிய வண்டுகள் சூழ்ந்ததும், பகல்களாகிய பூங்கொத்துக்களால அலங்கரிக்கப்பெற்றதும், வருடமும் பிரஹ்மாவின்றினமாகிய கற்பமும் 30 காஷ்டை யென்னுங்கலையும் ஆகியகொடிகள் படர்ந்ததும் ஆம் அலங்காரத்தோடுற்ற காலன் ஒருபோதுஞ்துயரையடைவதேயில்லை, துயரினின்றுமிளைப்பாறிக் கொண்டிருப்பன். அவ்வக்காரியவடிவமாய்ப் பிளக்கப்படினும் தகிக்கப்படினும் காணப்படினும் தூர்த்தசூடாமணியாகிய காலனானவன் பிளக்கப்படுவதுமில்லை தகிக்கப்படுவதுமில்லை காணப்படுவதுமில்லை, சொரூபமாகபங்கமுதலியவற்றை யடைவதேகிடையாது. காலனானவன் ஒருநிமிடத்தில் எங்கும் ஒருபொருளை மிகவுமுயர உயர்த்திவிடுகின்றனன் மனோராச்சியம் போலமற்றொரு பொருளை மிகத்தாழ்த்தி யழிக்கின்றான். அந்த அந்தயுகத்திற்குத் தக்கப்படியாய சேஷ்டை வடிவினளும், தனது கெட்டவிலாசங்களி லெல்லாம் விலாசஞ்செய்பவளும், பிராணிகளினது கஷ்டத்தினாலேயே புஷ்டியுடையவளும், ஆகியகாலனுடைய மனைவியாற் காலனானவன், பௌதிகமாகிய தேகேந்திரியாதிகளானே தாதாத்மிய அத்தியாசத்தானே ஏகரூபமாக்கியான்ம வடிவத்தை யறியாமலுழலும் ஜீவர்களைச் சுவர்க்கநரகங்களிற் சுழற்றுவித்துக் கொண்டிருப்பன். தனது வயிற்றை நிரப்புவதிலேயே கருத்தையுடைய காலன் புழுதி இலை துரும்பு பொன்மலை மஹேந்திரம் அலைகடல் முதலியயாவற்றையும் தன்வயமாக்கி விழுங்கும்பொருட்டு முயலுகின்றனன். குரூரத்தன்மை முழுவதும் இக்காலனிடத்தேயுளது, உலோபத்தன்மையும் இவனிடத்திலேயே முழுவதுமிருக்கின்றது, சர்வ துர்ப்பாக்கியமும் இவனிடத்திலேயே நிறைந்திருக்கின்றது, சகிக்கமுடியாத சஞ்சலத் தன்மையோடு கூடியிருக்கின்றான். தன் வீட்டு முற்றத்திற் பாலகனானவன் விளையாட்டின் பொருட்டு இருகரத்தாலும், அடிக்கடிபந்தடித்து விளையாடுவதேபோல விண்டலத்தில் லீலையினாலே சூரிய சந்திரரை யேவிக்கொண்டு விளையாடாநிற்பன். சர்வ பூதங்களாகிய என்புமாலைகளானே கால்வரையும் அலங்கரிக்கப்பட்ட கோலத்தோடு முலவுங் காலன் கற்பமுடிவில் யாவற்றையும் பகுத்து நாசஞ்செய்து விளையாடாநிற்பன். தடையற்ற சரித்திரத்தையுடைய காலனது காயத்தினின்றுங் கிளம்பிய காற்றினாலே பொன்மலையானது பூவரசமரத்தின் பட்டையைப்போல எல்லாப்பக்கத்திலுஞ் சிதைந்து ஆகாயத்திற் பறக்கும் உருத்திரன் மகேந்திரன் பிதாமகன் சக்கரன் வைசிரவணன் முதலிய அநேகந் தேவதாரூபமாகியிருந்து மீண்டும் ஒரு சிறிதுமில்லாமலே யிருப்பன். கடலானது அலைகளைத் தரித்துக்கொண்டிருப்பதேபோலத் தன்னிடத்திற் காலனானவன் நிரந்தரம் வேறு வேறாகக் கிளம்பிய கிளம்பும் அளவிறந்த பிரகாசத்தோடு கூடிய சிருட்டிகளை ஓயா முயல்வுடன் இரவும் பகலும் தரித்துத் தரித்து விளையாடுவன். மகாகற்பங்களெனப் பெயரிய விருக்ஷங்களினின்றும், தேவ அசுர கணங்களாகிய பக்குவமான பழ பாரங்களை யுதிர்த்துக்கொண்டு விளையாடுவன். பிராணிகளாகிய கொதுகுகள் சூழ்கும்

என இரையும் பிரஹ்மாண்டங்களாகிய அத்திக்கனி நிறைந்த பெரிய மரமாயிக்
காலனிருப்பன். சர்வாதிஷ்டான சைதன்யமாகிய சந்திரிகையின் சந்நிதான
மாத்திரத்தானே நாற்புறமும் விரிந்து வெளிப்பட்ட ஜகத்சத்தாசாமானிய
இலக்கணமுற்ற குவளைத் தடாகத்தால் விநோத ஹேது பூதமாய அவ்வப்பிரா
ணிகளின் சுப அசுபக்கிரியை வடிவப் பிராண நாயகியோடு கூடி இரண்டாவ
தற்றதன் வடிவத்தையே விநோதிக்குமாறியற்றுவன்; விநோதமென்னும் விவ
கார மகிழ்வுகளாலாம் காலக்ஷேபமானது காலனை விளையாட்டி வைக்குங்காலம்
வேறில்லாமையின் தன் தேகத்தையே விநோதப்படுத்திக்கொள்வன். பெரிய
பர்வதமானது அளவின்றி யகன்ற தேயத்தி லிடங்கொண்டெழுந்து நிலைபெற்று
நிற்பதேபோல அபரிச்சின்னமாதலினானே முன் பின்னெல்லையில்லாத பிரஹ்
மத்தின் கண்ணே பீடம்போட்டுத் திடமாக உட்கார்ந்து நிமிர்ந்து நிகழுந் தேக
த்தோடு சிறப்பாகக் காலனிலங்குவன். நடு இரவுமை முதலியவற்றில் தமங்
களினானே கறுப்பாகியும், சூரிய சந்திரமணி முதலியவற்றில் காந்தியோடுகூடி
விரிந்தும், குதிர் குட்டிச்சுவர் முதலியவற்றிற் கூறிய இரண்டுமற்றுந் தனது
காரியத்தைச் செய்துகொண்டு விளையாடுவன். மிகவும் இலயத்தையடைந்த
எண்ணில்லாத பிராணி சமுசாரங்களுக்குள் சாரமுடையதாக மிஞ்சிநின்றதன்
வடிவஸ்திதியினானே சருவ ஆதாரமாதலின் மகாகனம் பொருந்திய புவியைப்
போல நிலைபெற்று நிற்பன். மகா கற்பங்கள் நூற்றுக்கணக்காய் வந்தபோதி
னும், வாட்டமடைவதுமில்லை, மகிழ்வுறுவதுமில்லை, வருவதுமில்லை, போவது
மில்லை, உதிப்பதுமில்லை, யொடுங்குவதுமில்லை. கேவலம் உலகைத் தொட
ங்கும் லீலையினாலே அநாதரவோடுந் தன்னுற்றனை நிரபிமானத்துடன் விஸ்தீ
ர்ணமாகக் காப்பன் அழியான். இரவாகிய மலினமான சேற்றினின்றும் எழுந்த
பகற் செந்தாமரை மாலைகளையும், மேகமாகிய வண்டினங்களையும், தனதுவடிவ
மாகிய தடாகத்திற் காலன்றேற்றி வைத்துக்கொண்டிருப்பன். நூதனமாய்த்
துடைப்ப மயலொன்றைச் சம்பாதிக்குஞ் சமர்த்தின்மையானே, மகா லோபி
யான காலனானவன் இருண்ட இரவாகிய தேய்ந்த துடைப்பக்கட்டையைக் கவ
ர்ந்து, ஒருதரங் கூட்டுதலானே அளவிறந்த பொற்குவியற் கிடைத்தபோதினும்
மகிழ்ச்சியிலலாதவனாய் மேருகிரியின் நாற்புறத்தும் ஒளிராநின்ற கனகப்பொடி
களாய்ச் சிரணித் துதிர்வனவற்றையெல்லாம் வாரிக்கொண்டே யிருப்பன். இது
மாத்திரமா இன்னும், இக்காலனானவன் லோபத்தனத்தினாலே உலகமாகிய வீட்
டிலுள்ள திக்குக் கோணங்களில சூரியனாகிய விளக்கைச் செலுத்திக் கிரி
யையாகிய விரலினாலே யெங்கே யென்ன இருக்கின்றதெனப் பார்த்துக்கொண்
டேயிருப்பன். தினமாகிய இமை திறத்தலானே சூரியனாகிய கண்ணாற் பழுத்
ததைப் பார்த்து ஜகத்தாகிய பழையவனத்திலிக்காலனானவன் பக்குவமாயிரு
க்கும் லோக பாலர்களாகிய பழங்களைப் புசித்துக்கொண்டே யிருப்பன். ஜகத்
தாகிய பழைய குடிசையிற் சிதறுண்டிருக்கும் குணத்தோடு கூடிய உலகமணி
களை யுக்கிரமாகிய பொந்தினையுடைய யமனாகிய சிமிளில் முறையாக அடைத்
துக்கொண்டே யிருப்பன். வித்தை விநயமுதலிய நூற்களானே கோக்கப்பட்ட
சற்புருடர்களாகிய ரத்தினமாலையை நிரந்தரம் அலங்காரப்பொருட்டுத் தனதவ

யவங்களாகிய கிருததிரேதாயுக முதலியவற்றில் அணிந்தணிந் தடிக்கடி அறுத்தெறிவன்; யாவரையுமே யறுத்தெறிவதாயினும் குணவான்களுடைய விநாசமேலோகப்பிரசித்தமாகுமன்றோ! நக்ஷத்திரக் கூட்டங்களாகிய நீண்ட கேசரத்தோடு கூடியதும், தினமாம் ஹம்சஞ் சேவிக்கத்தக்கதும், ஆகிய இரவாம் நீலோற்பலமாலைகளை ஹம்சம் புகுதத்தகாதபடி நிரந்தரம் சஞ்சலத்தோடு கூடியகாலனானவன் ஐந்து இருதுக்களாகிய விரல்களோடு கூடிய வருடக்கையிடங்களிற் சுற்றிச் சுற்றியாடுவன். மலை, கடல், தேவலோகம் தரையென்னும் முக்கியமான சிருங்கங்களோடு கூடிய உலகவடிவ ஆட்டுக்கடாக்களை ஹிம்சைசெய்யும் காலன் விண்முற்றத்தில் விரிந்துகிடக்கும் நக்ஷத்திரங்களாகிய இரத்தத் துளிகளையும் நாடோறும் பார்த்துப்பார்த்து நக்கிக்குடிப்பன. தாருண்யமாந் தாமரைத்தடாகத்திற்குச் சந்திரனாகியும். ஆயுளாகிய மதயானைக்குச் சிங்கமாகியுமிருக்கும் இக்காலன், அற்பர், பெரியோர் என்பவர்களுக்குள் ளெவருக்குக் கள்வனாகானோ அத்தகையரே யில்லை. சர்வ ஜந்துக்களையும் பொடித்து நமன் வாயிலிடுபவனும், பிரளய ரூபப்பெரும் விளையாட்டு விலாசத்தையுடையவனும், பாவமற்றவனாகிச் சுழுப்தியிற்போலப் பாவரூப ஞானத்தை யொளிர்விப்பவனும் ஆகித்தனததிஷ்டான பிரஹ்மசைதன்யத்தானே அத்தகையதன்பாலே இளைப்பாறுவன் அதனினின்றும் தனிப்பிரிவு செய்யான். இவ்வாறு பிரளயத்தில் இளைப்பாறி மீண்டும் சிருஷ்டிகாலத்தில் விசுவத்தைச் செய்பவன் அனுபவிப்பவன் அழிப்பவன் நினைப்பவன் என்பன முதலிய எல்லாவஸ்துக்களாகவும் தானேயாவன் புத்திசாமர்த்தியத்தினானே எவரானு நிச்சயிக்க முடியாத இரகசியத்தையும், புண்ணிய பல போகத்துக்குத் தக்கவடிவத்தையும், அதற்கு மாறான வடிவத்தையும், தரித்த சகல தேகங்களையும் தோற்றுவித்து ஒடுக்கிக் காலன் விலாசமே செய்வனாதலினால் இவ்வுலகின்கண்ணே நராகளுள் காலனுக்குப்பலம் பிரசித்தமேயாகும.

23—வது காலநிந்தை முற்றிற்று.

---

## 24-வது காலவிலாசம்.

இப்போது சண்டிகாதேவி யென்னும் பிராண நாயகியோடு கூடிய அக்காலனே வேட்டைக் குதூகலத்தோடு விளங்கும் அரச குமாரனாக வருணிக்கப்படுகின்றனன் :—அக்காலனே வேட்டை மகிழ்வால் விளையாடும் மகா மன்னவன் மைந்தனாக விளங்குவன்; இச் சம்சாரத்தில் அடங்கா மேன்மையான லீலையையுடையவனும், சர்வ ஆபத்துக்களும் மிகு தூரத்திலேயே நீங்கப்பெற்றவனும், எண்ணவொண்ணாத பராக்கிரமத்தை யுடையவனும், பிரசித்தமாகிய சூரியசந்திராதிகளையும் பிரகாசிப்பித்தொளிரும் அரசனாகிய பரப்பிரஹ்மத்தினுடைய ஆநாதிமாயையென்னும் பட்டமகிஷியின் சம்பந்தத்தாற் கிடைத்த வடிவத்தானும், யுவராஜ்ஜியபட்டாபிஷேகம் பெற்றுச் சம்பத்துக்களியாவற்றையு மனுபவித்தலினானும் மைந்தனும், ஆகிய காலனுடைய சரித்திரமானது வருணித்தற்குத்தக்க தாகவிருக்கின்றது. மிகவும் பழைமையாயிராநின்ற ஜகத்தாகிய பெருங் காட்டுக்கூட்டத்தில், தீனர்களும் அறிவில்லார்களும் ஆகிய பிராணிகளென்னுமிருகக் கூட்டங்களோடு வேட்டை விநோதத்தைச் செய்யும், இவனு

க்கே யக்காட்டின் ஏகதேசத்தில் விரிந்து விளங்கும் அழகிய வடவாமுகாக்கினி யாகிய தாமரையா லலங்கரிக்கப்பெற்ற கற்பகாலப் பெருங்கடலானது மனோ ரம்மியமான விளையாடுந் தடாகமாகச் செய்யப்பட்டுளது. கைப்பாகவும் கார பாகவும், புளிப்பாகவும் இராநின்ற அப்பூதங்களோடும், தயிர் பால் முதலிய கடல்களோடும் தனித்தனி ஏகவடிவமாகி நெடுநாளாயிராநின்ற இந்த ஜகத் தானது அவனுக்குக் காலைப் போசனமாம். (கைப்புக் கார்ப்புத்தயிர் முதலிய வற்றோடு பழைய அன்னத்தைக் காலையிலுண்ணல் திராவிடர்பாற் பிரசித்த மாம்) அவனுக்கொத்த பிராணநாயகியு மிருக்கின்றாள், சர்வ தாய்க்கூட்டங் களோடு கூடியவளும், புலியைப்போலப் பிராணிக் கூட்டங்களைக் கொல்பவ ளும், சமுசாரவனத்தில் விளையாடும் பொருட்டேவப்பட்டவளும், மகாசாமர்த் தியத்தோடு சஞ்சரிப்பவளுமாகிய சண்டியென்னும் மகா காளராத்திரியம் மையே அவனுக்கு மனைவியாம். இரசத்தோடு கூடியதும், மதுவானது சுகந்த மாயும் அழகாயுமிருக்கும்பொருட் டுலகவழக்கம்போ லலங்கரிக்கப்பட்ட செந் தாமரைசருங்குவளை செங்குவளைகளாடுங் கூட்டமாமாலைகணிறைந்ததும்,ஆகிய பூமியென்னும் பெரிய அகன்ற மதுக்குடத்தைக் கரதலத்தில் வைத்திருப்பன். மகாகர்ச்சனத்தோடு கூடியதும், சகிக்கமுடியாத தோள்தட்டு மோசையை யுடையதும், கேசரங்களானே பார்க்கமுடியாதபடி நிறைந்து பெருத்த கழுத் தோடு கூடியதும் ஆகிய நரசிங்கத்தைத் தோளிற் றொங்கவிட்டிருக்குங் கூண் டில் அசுரரைக் கொல்லும்பொருட்டு விளையாட்டுப் பறவையாக வைத்திரு ப்பன். சிலைக்கதைபின்மேற் கூறப்படும் சங்காரபயிரவனென்னும் மகாகாலனை விளையாட்டின் பொருட்டுக் குயிற்குஞ்சாகக் கொண்டிருப்பன், அக்குஞ்சானது பிரஹ்மாண்டங்களையே மாலைகளாகத் தரித்துக்கொண்டிருத்தலின் அநேகஞ் சுரக்குடுக்கைகளடங்கிய வீணையைப்போல வடிவத்தானும் ஓசையானும் இனி மையாயிருக்கும்; அதன் சொரூபமுந் தொனியும் பிறருக்குப் பயத்தையுண்டு செய்வதேயாயினும் அதனினும் உக்கிரமிகுந்தவாது திருஷ்டியில் அது மதுர மாகவேதானிருக்கும், சரற்காலத்திருக்கும் ஆகாயம்போல நிர்மல நீலமேனி யுடைதுமாம். எப்போதும் டங்காரத்தொனி தொனித்துக்கொண்டே யிருப் பதும், துயரந்தரும் அம்புமாலைகளை யளவில்லாமற் கக்குவதும், ஆகிய சங்கா ரமென்னும் கோதண்டமானது எப்புறத்தும் விளங்கிக்கொண்டிருக்கும். உத்த மோத்தமனும், அதிகவிலாசபண்டிதனும், சுழலாநின்ற இலக்ஷியங்களில் தான சைந்துகொண்டே யிருந்தபோதினும், அமோக பாணத்தன்மையினானே இல க்ஷியத்தைப் பிளப்பவனும், அதனானே, இலக்ஷியந் துளைக்கும் யாவருள் ளும் மேன்மையாக விலாசஞ்செய்பவனும், அதனானே, புராதனமாகிய. இவ் வுலகத்தில் மிகுந்த வியாகூலத்தாற் குரங்கைப்போலச் சஞ்சல விருத்தியோடு கூடிய விடயலம்பட ஜனங்களைச் சேகரித்தவனும், ஆகிய காலனென்னும் இரா ஜகுமாரனானவன் விளங்காநின்ற சரீரத்தையுடையவனாய் வேட்டைக் குதூகு லத்தோடும் விளையாடுவன் (குரங்குத்தன்மையானே உருவகப்படுத்துவது தொட ங்கிய சிறப்பிற் கனுகூலமாகாமையின் கருதாததாம்.)

24-வது கால விலாசம் முற்றிற்று.

## 25-வது நியதி நாயகன் விலாசம்.

இப்போது, கிரியை அதன் பலவடிவனும், கரையற்ற மற்றவனும், நியதியின் மணாளனும், ஆகிய காலனுடைய சித்திரமான நடன விஸ்தாரமானது கூறப்படும் :—இவ்வண்ணம் மகா காலமானது இராஜபுத்திரனென விளையாடிக் கொண்டிருப்ப அவனுபாதி வடிவம் வாய்ந்த கிரியையென்னும் காலனுடைய விநோதம் மிக அழகாம், அவன் இருவகை நடனம்புரிவன், அஃதெவ்வாறெனின் ? துஷ்டசேஷ்டை யுடையவர்களுக்குள் சூடாமணிபோல மேன்மை மிக்கவனும், முன் மொழிந்தவனினும் வேறானவனும் ஆகிய இவன். பிராணிகட்குக் கரும பலத்தைக் கொடுத்து விவகரித்தலின் பலாவஸ்தையன் கிருதாந்தன் என்னும் தெய்வமெனப்படுவேன், பயனை யவசியஞ் சம்பாதித்தலினனே கிரியையெனப்படுவேன், ஒருவனே முன் பின்னவஸ்தைகளின் பேதத்தால் இருவகையாக வியம்பப்படுவேன். அவ்விரண்டில் முதலாவதை ஊசிக்கடாக நியாயம் பற்றி முன்னரே கூறுகின்றேன், தனது அசைவு வடிவமாயிராநின்ற இவனுக்குப் பயனைத்தரும் கிரியைமாத்திரமல்லாமல் வேறொரு ரூபத்தையும் தொழிலையும் இச்சையையும் காணோம். சூரியனாற் பனிப்படலங்கடிது மிகக் கரைவதேபோல இவனால் எல்லாப் பிராணிக் கூட்டங்களும் மிகவுந் துயருறுகின்றன, எல்லாருடைய எல்லா அனர்த்தங்களும் இவன் கருமத்தானே யுண்டாகின்றன. யாதிங்கொரு சிறிது ஜகத்தாகிய விஸ்தார மண்டலம் காணப்படுகின்றதோ அது இவனது நாடகசாலையாகும், ஆண்டிவனதிகமான நடனம் புரியாநிற்பன். இராகத் துவேடாதிகளாலாக்கப்பட்ட பிருவிருத்தியி னதிசயமானது எல்லாப் பிராணிகட்கும் பிரசித்தமாதலின் இவனது நடனத்தை விரிவாகக் கூறவேண்டியதில்லை, முதலாவதானது சாஸ்திரத்தான்மாத்திர மறியப்படுவதாதலின் திட நம்பிக்கையின் பொருட்டு விஸ்தாரமாக வருணிக்கவேண்டியதாக விருக்கின்றது. முன் சருக்கத்தின் மொழிந்ததினும் மூன்றாமவனும் கிருதாந்தனெனப் பெயர் படைத்தவனும், மிகக்கோரமான செய்கையுடையவனும், காபாலிக வேடமுடையவனும், உன்மத்தனும், ஆகிய தைவமெனப்படுபவனுலகிலாடுகின்றான். அத்தியந்தம் இராகியைப் போலிராநின்ற கூத்தாடு மிக்கிருதாந்தனுக்கு எப்போதும் செய்த கருமங்கட்கு அவசியம் பயன்றரும் நியமமென்னும் நியதி மங்கையின்பால் மிகக் காமம் விளைந்துகொண்டே யிருக்கும். இனி யவனவயவங்களிற் பூடணங்களோ, சசிகலையைப்போல வெண்மையாயிருக்கும் ஆதிசேடனும் மூவகையாகப் பிரசித்தமாய ஸ்ரீ கங்கையின் பிரவாகமும் மூவுலக வடிவச் சமுசாரமென்னு மிவனதுமார்பின்கண்ணே முப்புரிநூலும் மாலைகளுமாம். சந்திரமண்டலமும் சூரியமண்டலமும் மணிக்கட்டிலணிந்த கனக கங்கணங்களாம், பொன்மலையானது கையில்வைத்து விளையாடும் தாமரைமலராம். நக்ஷத்திரங்களாகிய புள்ளிகளாலலங்கரிக்கப்பெற்றுச் சஞ்சல புஷ்கராவர்த்தமென்னும் பிரளயகால மேகங்களைப் பல்லவங்களாகவுடையதும், எல்லாக்கடல்களு மொன்றுபட்ட ஒரே பெருங்கடலில், தோய்த்த ஆகாசமே ஒரு வஸ்திரமாகும். (காபாலிகரும் நடுவிற்றுளைத்துக் கழுத்தில்

மாட்டிக்கொள்ளும் ஒரு கந்தை வஸ்திரம் தரித்தவுலகிற் பிரசித்தமாம்) இவ்வாறிருக்கும் அவனுடைய சந்நிதியில் நித்தியகாமினியாய நியதியென்னுமம்மையானவள் இடைவிடாமல் முயல்பவளாய்ச் சர்வப் பிராணிகட்கும் போகஅனுகூல காரியந் தொடங்குபவளாய் மிக மிகவுங் கூத்தாடுவள். நடனத்தைக் காணும் பிராணிகளின் போக்குவரவினாலே சஞ்சலமாய ஜகன் மண்டபப்பொந்தில் நடனம்பண்ணிக்கொண்டு சுற்றுபவளும், தடையற்ற கிரியாசத்தி வடிவினளும், ஆகிய அவ்வம்மைக்கு, தேவசகித சர்வ புவனமாலைகளும் அங்கங்களிலணியும் பூஷணங்களாம், பாதாளபரியந்தமிருக்கு மாகாசமானது நீண்டுகறுத்துப்பெருத்த குழல் மண்டலமாகும், அழுகைக் கோலாகலத்தால் ஓங்கி யெரியாநின்ற நரக அக்கினிகளானே யொளிராநின்ற நரகமாலையானவை அவ்வம்மையின் பாதாளமாகிய சரணத்திலிருக்கும் பாவநூலாற் கோக்கப்பட்ட பாதகிங்கிணி மாலைகளாம். பிராணிகளின் கருமமாகிய சுகந்தத்தை வெளிப்படுத்துமேதுவாதலின் கஸ்தூரிவடிவமாய சித்திரகுப்தனென்னுங் கரணத்தால் யமனாகியநெற்றியில் கிரியையாகிய சகியாற்றீட்டப்பட்ட மகா விசித்திரத்தோடு கூடிய திலகமிலங்காநிற்கும். (யமனிடத்திலன்றோ சித்திரகுப்தனிருப்பன்; பாதம் நெற்றியென்னும் ஆதியந்த அவயவங்களின் சித்தியினாலே அதுபோல மற்ற அவயவசித்தியையும் தக்கபடி பொருளாலுணரத்தக்கதாம்) காலனாகிய பதியினுடைய முகவிலாசங் கடைக்கண்பார்வைமுதலியவற்றாலுணர்த்தப்பட்ட திருக்கருத்தையினிதுணர்ந்து அத்தேவியானவள் கற்பாந்தங்களில், மிக ஆகுலத்தோடுகூடியவளாய் மீண்டும் பர்வதங்களெல்லாம் உரத்தசப்தத்தோடு வெடிக்கும்படியாகப் பெருங்கூத்தாடுவள்; எவ்வாறெனின், பின்பக்கத்திற் பொருந்தித்தாழ்ந்து அலைந்துகொண்டு விளங்காநின்ற சுப்பிரமண்யருடைய வாகனமாகிய மயிலின் இறகுகளையணிந்தும், மூன்றுவிழிகளாகிய பெருந்துளைகளினின்றுண்டாகும் பெருத்தபயங்கரமான உரத்ததொனியோடும், நீண்டலையும்மதிச் சடைகள்விரிந்த அரன்சிரங்களையலங்கரித்தும், மேற்கிளம்பும் அழகொழுகும் மந்தாரமலர்நிறைந்த கௌரியின் கேசசாமரைகள்கொண்டும், பெருந்தாண்டவம்புரியும் பைரவருடைய மலைபோன்ற வயிறாகிய சுரக்குடுக்கையைத்தாங்கியும் (சுரக்குடுக்கையாற் காபாலிகரது விவகாரம் பிரசித்தமாம்) சப்தித்துக்கொண்டு ஆயிரத்தேழுதுளைகளோடு கூடியிலங்கும் இந்திரன்றேகமாகிய பிக்ஷாகபாலமேந்தியும், மிகவுங் காய்ந்தசரீரசம்பந்தமாய கட்வாங்கமென்னும் முதுகென்புப் பாரங்களானே விண்ணைநிறைத்தும், பிறரஞ்சும்பொருட்டுத்தன்னானே தன்னைப் பயப்படுத்திக்கொண்டும், சர்வத்தையும் சங்காரஞ்செய்துகொண்டும், பலவகை ரூபங்களோடுகூடிய சிரக்கூட்டங்களாகிய அழகிய தாமரைமாலையால் அலங்கரிக்கப்பெற்று நானாவகையாய்ச் சுழன்றுகொண்டும் மகாகற்பங்களிலுண்டாம் தாண்டவங்களில் அவ்வம்மை விளங்காநிற்பள். உன்மத்தமாகித்திரியும் புஷ்கராவர்த்தமெனப் பெயரியபிரளய காலமேகங்களாமுடுக்கைகளின் அதிகோர சப்தங்களால் கற்பமுடிவில் தும்புராதி கந்தர்வாதியரெல்லாம் மூலைக்குமூலை யோடாநிற்பர். இங்ஙனம் நியதியம்மைக்குச் சாமக்கிரியோடும் நடனமாயின், அவளுடைய பர்த்தாவிற்கும் அதுவும் பூஷணங்களும் வேண்டுமேயெனின்?

முற்கூறிய நாடகசாலையினுள்ளே, கூறப்படும் குண்டலவடிவமாய சந்திரமண்டலத்தாலே அழகுபொருந்தியவனும், நட்சத்திரங்களானும் சந்திரிகையானும் தாரகைசந்திரப் பிரதிபிம்பங்களானும் மனோகரமாய விண்ணேயாய மயிற்றோகையால் அலங்கரிக்கப்பட்ட கேசத்தையுடையவனும், நடனஞ்செய்பவனும், ஆகிய கிருதாந்தனுடைய இடது செவியில் என்புமயமான முத்திரைவடிவக்குண்டலம் கபாலிகரைப்போலலங்கரிக்கப்பட்டுளது, வலது செவியில் மகரமேருவாகிய காந்திலயயுடைய காஞ்சனகர்ணபூஷணமணியப்பட்டுளது. இவ்விருசெவிகளினின்றும் கன்னத்தலத்தில் சூரியசந்திரர் குண்டலங்களாயசைந்துகொண்டிருக்கின்றனர், உலோகாலோக பர்வதவரிசைகள் எப்புறத்தும் கடிமேகலாபரணமாய்க் கவின்செய்யும், (வரிசைகள் என்றது அநேகஞ்சிகரங்கள் கூடியதன்மையாலேனும், கற்பப் பிரஹ்மாண்டபேதத்தாலேனும் என்றுணர்க) இங்குமங்குமோடாநின்ற மின்னல்வளையமானது தாமரைக் கர்ணிகைபோன்ற கங்கணமாகியிலங்கும், நானுவர்ணத்தோடுகூடிய பட்டுவஸ்திராதிப் பழங்கந்தைகளாகிய மேகங்களானவை வாயுவினலே நாற்புறங்களினு மசைந்தாடிக்கொண்டிருக்கும். க்ஷீணமான பூர்வசிருஷ்டிகளினின்றும் வெளிக்கிளம்பிய மிருத்தியுக்கள்யாவரும் ஒருங்குகூடியிருப்பதுபோன்றிராநின்ற உலக்கை, வாள், ஈட்டி, சூலம், தோமரம், தண்டமுதலிய கூர்மையான ஆயுதங்களானே ஆயுதங்களைத்தரித்த நாகராஜாவான ஆதிசேஷனுடைய சரீரமாகிய மகா சூத்திரத்திற்கோர்க்கப்பட்டு முற்கூறிய ராஜபுத்திரனுகிய காலனது கரத்தினின்றும் தெய்வவசத்தால் நழுவிச்சமுசாரத்தை விருத்திசெய்துகொண்டிருக்கும் ஜீவமிருகக்கூட்டத்தின் பந்தனப்பொருட்டு விடப்பட்ட பாசத்திலாக்கப்பட்ட மாலையானது இந்தக் கிருதாந்தனுடைய கண்டத்தை யலங்கரித்துக்கொண்டிருக்கின்றது. மகரிகைமுதலிய சின்னங்கள்பொறித்த அன்னியர் கங்கணங்களிலவை யுயிரற்றனவாயினும் உயிரோடுகூடி விளங்காநின்ற மகரங்களனேக நிறைக்கப்பெற்று இரத்தினங்களின்றேஜசால் இனிதொளிரும் எழுகடல்களின் வரிசைகளேகங்கணவரிசைகளாக இக்கிருதாந்தனுடைய புயத்தில் அலங்கரிக்கப்பட்டுள்ளன. சாஸ்திரீய இலௌகிகவிவகாரங்களென்னும் பெருஞ்சுழிகளோடுற்றதும், இரஜசாகிய தூளிகள் நிறைந்துதமத்தாலிருண்டிருப்பதும் ஆகிய சுகதுக்க பரம்பரையே மயிர்வரிசையாயவனுக்கொளிரும். இந்தப்பிரகாரம் மிகமிகவும் அக்கிருதாந்தனனவன் தாண்டவத்தினது உற்பவத்தையுடைய நடனஇச்சையாகிய சரீரவிக்ஷேப இச்சையைக் கற்பமுடிவில் முடித்து நெடுங்காலமிளைப்பாறிப் பிரஹ்மாதிமகேசுரர்களோடு மீண்டுஞ் சிருட்டித்துச் சிருட்டிவடிவாயதும், ஜரைசோகம், துக்கம் திரஸ்காரம் முதலியவற்றுனே யலங்கரிக்கப்பட்டதும், அபிநயமிகுந்ததும், ஆகிய இந்நடனலீலையை விஸ்தரித்துக்கொண்டிருப்பன். விளையாடுங் குழந்தைகள் ஈரமண்ணுற் பாவைகளை ஆயாசமின்றிச்செய்வதேபோல, புவனங்களையும், வனுந்தரங்களையும், லோகாந்தரங்களையும், ஜனங்களையும், கட்டும்விடயவுலகண் முதலியவற்றையும், சிரௌதஸ்மார்த்தாதி சற்கருமங்களின் நற்பிரவிருத்தியையும், அதையும் கிருதத்திரேதாயுகங்களில் அசலமாகவும், கலித்துவாபரங்களில் சலமாகவும், மீண்டும்செய்யாநிற்பன்.

25-வது நியதிநாயகன் விலாசம் முற்றிற்று.

## 26-வது சம்சார துர்த்தசை.

26-வது சம்சார துர்த்தசை. பரதந்திரமாயிருத்தலினானே தோடங்களே
இப்போது காலாதிகளின் பரதந்திரமாயிருத்தலினுனே தோடங்களே
மிகமிகவும் நிறைந்த இச்சம்சார துர்த்தசையானது வைராக்கியம் உண்டாம்
பொருட்டு வருணிக்கப்படும் :—காலனிவ்வாறுசெய்யின் அதனாலுனக்கென்னெ
னின், காலாதிசர்வவஸ்துக்களிலும் எனக்குத் தோஷதரிசனம் விஸ்தாரமாயு
ண்டாகியிருத்தலின் அதன்பயனாகிய வைராக்கியரூபப் பற்றின்மையினடைவு
ண்டாகியிருக்கின்றது; ஹேமகாமுனிவரே! இச்சம்சாரமெனப்பெயரிய இக்கால
முதலியவற்றின் சரிதத்தில் எம்போலியர்க்கெவ்வாறுபற்றுண்டாதல்கூடுந் தாங்
களேகூறுங்கள். இம்முற்கருமத்தை முக்கியமாகவுடைய முன்மொழிந்த கான்
கினாலும், சப்தாதிவிடயப் பிரபஞ்சச்செய்கைகளானே வனமான்கள் மகாமயக்
கத்தையடைவதேபோல யாங்கள் விற்றுவிடப்பட்டவர்களைப்போன்றிருக்கின்
றோம். தாழ்ந்தோர்க்குச் சமமாய சரித்திரப்பயில்வுடையவனும், ஆன்றோராற்
கைக்கொள்ளத்தகாத பௌத்தாதியசத் சாஸ்திரமுடையவனும் வயிறுவளர்ப்
பதின்மாத்திரம் தற்பரனும் ஆகிய இக்காலனென்னும் தூர்த்தன், நிரந்தரம்
போகம்வாழ்தன்முதலியவற்றி லாசைநீங்காத உலகரை அசத்தாகிய நெறியில்
முயல்விப்பவனாகி ஆபத்தாகிய கடலில் வீழ்த்துவன். உஷ்ணப்பிரகாசங்களோ
டுகூடிய ஜுவாலைகளானே மிகக்கொரேமாக அக்கினியானது தகிப்பிப்பதே
போல வுலகரைத்தேவன் கெட்டஆசைகளானேயுள்ளே கொளுத்துவன் தீய
ஒழுக்கங்களானே வெளியிலும் வெதுப்புவன். காலமரியாதைவடிவக் கிருதாந்
தனுடைய பிராணநாயகியும், இயற்கையாகவே சஞ்சலமுடையவளும், பொறி
களை வெளிச்செலுத்துவதில் நியமிக்கும் நியதியெனப்படுபவளுமாகிய தேவிபெ
ண்டன்மையினுனே சமாதிசெய்பவரிடத்தில் முயன்று அவர்கள் தைரியத்தை
வேரோடுமறுக்கின்றனள். கொடூர ஒழுக்கத்தையுடைய கிருதாந்தனானவன்
ஜரையற்ற சரீரத்திற்கு ஜரையையடைவித்துப் பிராணிகள்யாவற்றையும் எப்
போதும் காற்றைப் பாம்பு விழுங்குவதேபோல விழுங்குகின்றனன். நிர்த்த
யையரசர்கட்குள்ளிந்திரனாய்த் தயையேயில்லாதவனாய யமனானவன் பிராணி
களிடத்திலற்பமுந் தயைசெய்வதேகிடையாது, ஆதலின் எல்லாவுயிர்களிடத்
திற் றயையும் உதாரமுமுள்ள ஜீவர்கள் மிகவுந்துர்லபமாய்விட்டனர். வைரா
க்கிய திருஷ்டியினுனே நோக்குங்கால் பிரஹ்மாமுடிவாகவுள்ள சர்வஜீவஜாதி
களும் துச்சமான ஐசுவரியமுடையவர்களேயாவர்கள், பயங்கரமான விடயங்க
ளும் போகபூமிகளும் லோகங்களும் தாண்டமுடியாத துக்கப்பொருட்டேயாவ
னவாம். ஆயுளோ அத்தியந்தம் சஞ்சலமாயது, மிருத்தியுவோ மிகவும் கொடூ
ரமாயிருக்கின்றனன், தாருண்யமோ அதிசஞ்சலமாம், பாலியமோ அஞ்ஞான
த்தாலபகரிக்கப்பட்டுள்ளது. விடயானுசந்தானத்தாலுலகர் களங்கத்தையடை
ந்துள்ளார், பந்துக்களோபவபந்தனமாயுள்ளார், போகங்கள் சம்சாரப்பெருரோ
கங்களாயுள்ளன, ஆசைகளோ கானனீர்போல் விஸ்தரிக்கின்றன. இந்திரியங்
களே பகைவர்களாக இருக்கின்றார்கள், பரமார்த்தமாக ஆன்மாவென்றதேகர்தி
கள் கவரப்பட்டிருந்தன விவேகிக்குங்கால் அபரமார்த்த ஆன்மத்தன்மையை
யடைந்துவிட்டன, சத்தியஞானதி யிலக்கணம்வாய்ந்த வஸ்துவோ அசத்திய

த்தையடைகின்றது, பந்தஹேதுவாதலினுனே மனத்தையே பகையாகக்கொண்ட ஆன்மா மனேபிமானத்தால் மனேபூதமாந்தன்னை மனேரூபமான தன்னுலே துக்கப்படுத்துகின்றது. அகங்காரமானது அபிமானித்துக் களங்கமுண்டாக்கிச் சொரூப தூஷணஞ்செய்கின்றது, நிச்சயகாரணமான புத்திவிருத்திகள் வெளிமுகமாகவே திரிதலின் மிகவும் மிருதுவாகிச் சொரூபத்தின்கண்ணே நிலைக்குந்திடத்தன்மை யற்றனவாயிருக்கின்றன. சரீரசம்பந்தமான பிரவிருத்திகளோ கெட்டபயனைக் கொடுக்கின்றனவாயிருக்கின்றன, மானசவிலாசங்களோ மங்கையரிடத்தே மருவிநின்றன, ஆசைகளோ விடயங்களையவாவிநின்றன, ஆன்மவிளக்க ஆற்றல்களோ அழிந்தேபோயின, தோகையரோ தோடக்கொடிகளாய்த்துவளுகின்றனர், அனுராகங்களோ தமதுதன்மையற்றனவா யிருக்கின்றன, விடயங்களோ விரும்பத்தகாதனவா யிருக்கின்றன, அலெளகிக வஸ்துவானது காரியகாரண சங்காதத்த வடிவதாகவே காணப்படுகின்றது, சித்தமோ அகங்காரத்திற்குத் தத்தஞ்செய்யப்பட்டு அபிநிவேசத்தை யடைந்துள்ளது பொருள்களோ அழிவை யலங்கரித்துக்கொண்டிருக்கின்றன, எல்லாப்பொருள்களின் முடிவிற்கிடமாய ஆன்மாவோ அறியப்பெறவில்லை. மதியானதுள்ளே யாகுலப்பட்டுக் கேவலம் தபித்துக்கொண்டே யிருக்கின்றது, இராகரோகமானது எப்போதும் விலாசத்தை யடைந்துகொண்டே யிருக்கின்றது உலகில் வைராக்கியத்தையடைபவரைக்காணேம் மிகவுந்துர்லபமாய்விட்டது, பரமார்த்த திருஷ்டியானது இரஜோகுணத்தினுலே அதஞ்செய்யப்பட்டது தமசோமேலும்மேலும் விருத்தியாகிக்கொண்டே வருகின்றது, சத்துவகுணமடைவதே கிடையாது, மெய்ப்பொருளையுணர்வதோ மிகுதூரமாய்விட்டது, வாழ்வானது மாயமாகவிருக்கின்றது, மரணமோ எதிர்பார்க்கின்றது, தைரியம் அடியோடு அற்றுவிட்டது, பொருளல்லாத அற்பங்களில் எப்போதும் பிரீதியதிகப்படுகின்றது, மதியானது மடத்தன்மையினுனே மலினப்பட்டுளது, தேகமோ அழிவையே முக்கியமாக நோக்குகின்றது, தேகத்தில் ஜரையோவீசிவிளங்குகின்றது, பாவங்களோ பரவியிலங்குகின்றன. கெட்டமுயற்சியினுனே யவ்வனங்கழிகின்றது, சாதுக்கள்சங்கமோ அதிதூரத்திலிருக்கின்றது, கதியோயாதொன்றையு மெங்குங்காணேம், நல்லதுதார்மிகனுயிருக்கப்பட்ட உனக்குக் கதியெங்ஙனமில்லாமற் போகுமெனின்? எங்குமெய்ப்பொருளும் சத்தியமாகக் காணப்படவேயில்லை சுவர்க்கமுதலியகதிகளும் அநித்தியங்களாகலின் கனுவின்பம்போற்கழிவனவாயிருக்கின்றன. உள்ளே உள்ளமானது அதிமோகத்தை யடைந்துள்ளது, பிறரின்பத்தைக்கண்டு மகிழ்தலாகிய முதிதையெட்டாமற் றூரத்தேகிவிட்டது, கருணையானதுதித்தொளிர்வதேகிடையாது, அதிக தூரத்தினின்றும் நீசத்தன்மையின் காரணங்களாகிய அசூயைமுதலியவைகள் வந்தடைகின்றன. தீரத்தன்மையானது அத்திரத்தன்மையை யடைகின்றது, பிராணிகளோ பிறப்பிறப்புகளிலும் கீழ்மேற்செல்வதிலும் தற்பராகத்திரிகின்றுர்கள், துட்டசங்கமோ சுலபமாய் மலிந்துகிடக்கின்றது, சற்சனசங்கமோ துர்லபமாய்விட்டது, பொருள்களெல்லாம் போக்குவரவுடையனவாயிருக்கின்றன சென்றெழிந்தபோதினும் அவற்றின்வாசனை அகல்வதேயில்லை மேலும்பந்தகாரணமாகவே வளர்கின்றது, பிராணிகளின்

கூட்டங்களானவை கேவலமெப்பொழுதும் காலனால் எங்கோகொண்டு செல்ல ப்படுகின்றன. காலனாற் பயமற்றவையாய திசைகளுங்காணவேகாணோம், சத்வி வகார உபதேசமும் வேறாய அபதேசமாய் முடிகின்றது, பிராணிகட்கவகா சங் கொடுக்கும் தேசமும் அதற்குமாறாயதைத் தனக்கேயிடங்கிடையாமை யிற் செய்யத்தொடங்குகின்றது. மலைகளும் பொடிகளாகின்றன ஆயின் எம் போலியர்பாலென்னே விசுவாசம். சன்மாத்திர இயற்கைவாய்ந்த ஈசுரரானே ஆகாயமும் புவனங்களும் விழுங்கப்பெறுகின்றன, தரையும் தூளாகுமாயின் எம்போலியர்பா லென்னே விசுவாசம். ஞானமின்றி யோகமந்திராசனாதிக ளானே சித்தியுற்ற சித்தருஞ்சிதைவர், நட்சத்திரங்களும் நாசமாகும், அலை கடலும் வறண்டுபோகுமாயின் எம்போலியர்பா லென்னே விசுவாசம். தான வரும் தத்தளித் தொழிவர், துருவனும் நிலையற்ற வாழ்க்கையை யடைவன், அமரரும் அழிந்துபோவாராயின் எம்போலியர்பா லென்னே விசுவாசம். இந் திரனும் இனிதுட்கொள்ளப் படுகின்றனன், இயமனும் நியமமாயுபரதியுறுவன், வாயுவுமோயுமாயின் எம்போலியர்பா லாஸ்தையென்னே. சோமனுஞ் சூனி யமெய்துவன், சூரியனும் காரியமாகான், அக்கினியும் மக்கினத்தை யடையு மாயின் எம்போலியர்பாற் பற்றுதலென்னே. பரமேஷ்டியும் பரநிஷ்டையை (முடிவை) யடைவர், கரியாத அரியுங்கரியிலிரிவர், பவனும் அறிவில் அபா வத்தையடைவனாயி னெம்போலியர்மாட் டென்னே நம்புதல். முன்மொழி ந்த மூவகைக்காலமும் கோலமின்றியதாம், நியதியும் வயதாய்முடியும், அந்த மற்ற வெளியாவரணஆகாயமு மொளியுமாயின் எம்போலியர்மாட்டென்னே வி சுவாசம். செவிக்கும் வாக்கிற்கும் செவ்விய விழிக்குமெட்டாத தத்துவமாகிய எவனேவொரு மயக்கத்தைத்தரும் அறியப்படாத மூர்த்தியாந் தூலவடிவனாற் றன்பாலே மாயையினாற் றத்துவமறைக்கப்பட்டுக் கற்பிதங்களே காண்பிக்கப் பெறுகின்றன. அபிமான அங்கிசத்தை யடைவுற்றுலவும் பிராணிகளுக்குட் சர்வாந்தரியாமியா யெங்குமிருக்கும்பொருளாற் பாதிக்கப்படாததொன்று இம் மூவுலகத்திலும் கிடையவேகிடையாது. அதற்குச்சர்வத்தையும் பாதிக்குந்தன் மையுண்டு, அதற்கேதுவாய தடையில்லாச்சுதந்திரமுமுளது. "யாவன் ஆதித் தியன்பானின்றேவுவன்" என்னுமறையானே தன்பாலிருக்கு மீசுரராலேவப் பட்டவனுய்க்கிரண அசுவபாதங்களாற் சஞ்சரிக்கவியலாத கடினமான சிலைக ணிறைந்த கிரிச்சிகரங்களிற் சஞ்சரித்துக்கொண்டு தேர்போற்றிகழுந் திவாக ரன் குதிரையோடுகூடிய தேரைப்போலவே பெரியமலையினுயர்ந்த உச்சியினி ன்றும் வேகமாகவிழும் நீரினால் உருண்டையாய படிகாதிகற்கள் கீழேகீழே உருட்டப்படுவனபோல நித்தியம் வயமற்றவனாவன்; சூரியாதிகளும் வாயுப்பிர வாகத்தால் ஓயாமற் சுற்றுவரன்றோ. உள்ளேயிருக்குஞ் சுராசுரகணங்கட்கிட மாய சோதிடசாஸ்திரத்திற் கோளகமெனப் பிரசித்திபெற்ற இத்தரையானது, தேவர்கட்கிடமும், யுகப்பிறழ்ச்சிகளில் பூமியானது தகிக்கப்பட்டும் தூளியா யெழுப்பப்பட்டும் விகாரப்படினும் கற்பம்வரைகெடாததாய்த் திடமும், ஆகிய ஜோதிச்சக்கிரத்தானே பக்குவப்பழங்கள் தோலினாலே சுற்றப்பட்டிருப்பனபோ லச் சுற்றப்பட்டிருக்கும். சுவர்க்கத்திலுள்ள தேவநாதைகளும், பூமியிலுள்ள

நரர்களும், பாதாளத்திலுள்ள நாகங்களும், சங்கற்பமாத்திரையானே கற்பிக்கப்பட்டவர்களாய் ஜர்ஜ்ஜரத்தன்மைத் தசையை யடைகின்றார்களாதலின் இவ்வுலகிற்கு அத்தியந்தம் பரவசமாயிருத்தலும் பெருந்தோடமாம். மேலுந்தோடங்கள் மிகவுமுளதாம் :—காமனானவன் தக்கவகையிலாக் கிரமமாக உலகை வயஞ்செய்து வெற்றியையுடையவனாய்ச் சுற்றித்திரிகின்றனன்; நியந்தாவாகிய ஈசுரர்க்கஞ்சுவன் எனின், அஞ்சான், தடையேகிடையாது, ஏனெனின்? ஜகதீசராகிய மகாதேவரோடு போராடி வெற்றிகொண்டு விளங்குகின்றானன்றோ. வசந்தகாலமாகிய மதம்பிடித்தயானையானது மலர்மாரியாகிய மதத்தைப்பொழிந்து எல்லாத்திசைகளையும் மணம்பொருந்துமாறுசெய்து சித்தத்திற்குப் பயத்தையும் மயக்கத்தையுமுடைய சாபல்யத்தைக் கொடுக்கின்றது. அதிகஆசையோடுகூடியகாதலியின் சஞ்சலமாய விழியழைக்கும் பார்வையோடுகூடிய வடிவுடைய மனத்தை நன்னிலைப்படுத்தப் பெரியவிவேகமிருந்தபோதினும் ஈசன் திருவருளின்றி முடியவேமுடியாது. பரோபகாரத்தைச் செய்வதிலேயே தற்பரமாயும், பரபீடையைக்கண்டு பரிதபிப்பதாயும், தனதான்மாவிலமுழ்ந்திக் குளிர்ந்ததாயுமிராநின்ற மதியினாலே தத்துவத்தையுணர்ந்த ஞானியே சுகிக்கின்றனன் என்றெண்ணுகின்றேன் ஆனாலந்த ஞானம்மிகவும் துர்லபமாயிருக்கின்றது. வாழ்வாகிய கடலின்கண்ணே பொருள்களாகிய அலைகள், காலனாகிய வடவாமுகாக்கினியினாலே வீழ்த்தப்படுதலின் அழிவையுமுற்பத்தியையும் அடைந்துவரும், அவற்றையெண்ண எவரான்முடியும்! பிறப்பாகியபெருங்காட்டிலுள்ள முற்கூறிய தோடங்களாகிய புதர்களில் வாழும் எல்லாநரர்களாகிய மானினங்களும் பறவைகளும் மோகத்தினாலே துராசைப்பாசத்தாற் கட்டுண்டு மாய்ந்தொழிவர். ஆகாயத்தின் மரமிருக்குமாயின் அதிலிருக்கும் கொடியாற் கழுத்திற் சுற்றப்பெற்றுத் தொங்கிக்கொண்டு இருப்பதற்கொப்பாகச் சாரமற்றதும், பற்றுக்கோடின்றிய துக்கமும், வீழ்ச்சிமுடிவி னிலையையுடையதும், ஆகியசுவர்க்கநரகாதிகளைப் பயனாகவுடைய, முற்கூறிய தோடங்கணிறைந்த கெட்டகாமிய நிஷித்த ஒழுக்கங்களானே இவ்வுலகின்கண்ணே ஜன்மபரம்பரைகளில் இவ்வுயிர்களினாயுளானவை மிகவும்கழிகின்றன; அதனிவிருத்தியுபாயமோ அதிதூரத்தினிற்கின்றது, அச்சிந்தையுமுதிப்பதேகிடையாது விசாரவான்களாகிய யாங்களுமறியவில்லை. இன்றுமகோற்சவம், இதுநல்லஇருது, இதுஇனியயாத்திரை இவர்களுறவினர், இஃதின்பம், சிறப்பாயபோகமிது, என்பதாக வீணாகவே மடமையினாலே அநேகங்கோடி விகற்பங்களைக் கற்பித்துக்கொண்டு மகாசஞ்சலத்தையும் அதிமிருதுவையுமடைந்த மூடரும் அவர்மதியும் இவ்வுலகிற் கெடுமோதலினாலே கெடும்சாமக்கிரிமாத்திரம் கணந்தோறும் அதிசுலபமாம்.

26—வது சமசார துர்த்தசை முற்றிற்று.

---

## 27—வது மோக்ஷ விரோதிகள்.

இப்போது, இயம்பியுமியம்பாமலுமிராநின்ற மோக்ஷவிரோதியாயபொருள்களில் மீண்டும் வைராக்கியப்பொருட்டு விஸ்தாரமாகத் தோடங்கள் விளம்பப்பெறுகின்றன, தனித்தனியாகக் கூறிய கூறுதபொள்களில் ஒருங்குகூட்டித்

தோடங்கள் பலவற்றை விஸ்தரித்துத் தமதுசித்தவிசிராந்திஹேதுவைக்காணே மென ஸ்ரீராமர்கூறத் தொடங்கல்:—ஹேமகாமுனீசுரரே! இன்னுங்கேட்பீர்க ளாக! தொடக்கத்தின்மட்டும் மனோரம்மியமாகவும் பின்னர்மிகவும் அரம்மிய மாகவுமிராநின்ற இவ்வுலகவடிவத்தின்கண்ணே, எவ்வத்துக்கிடைத்தலினானே சித்தமானது பூரணகாமத்தன்மையாகிய அத்தியந்தம் விசிராந்தியை யடையா நிற்குமோ அத்தகைய அர்த்தசமுதாயமொன்றும் சித்தத்தின்கண்ணே தோற்ற வில்லை; ஜகத்விலக்ஷணமாகிய பொருள்கிடைப்பதேயில்லை. கற்பிக்கப்பட்ட விளையாட்டின் சஞ்சலத்தோடுகூடிய பாலியமானது சென்றொழியவே, மன மாகிய மானனது மங்கையர்களாகிய மலைக்குகைகளில் மடியவே சரீரமானது ஜர்ஜ்ஜரத்தன்மையைச்சாரவே, உலகர், கேவலம் புருடார்த்தசாதனமற்றதாய் வீணாக ஆயுளைக்கழித்தலானே மிகமிகவுந் தபிக்கின்றனர். ஜரையாகிய பனியி னாலே வாட்டப்பட்டுள்ள சரீரமாகிய தாமரைமலரை அதிதூரத்தில் விடுத்துக் கணத்தில் வாழ்வாகிய வண்டானது செல்லுங்கால் ஜனங்களுடைய இகலோக விவகாரமாகின்ற சம்சாரதடாகம் காய்ந்துவிடும். நரர்களுடைய காயக்கொடி யானது நிறைந்த ஜரையாகிய மிகுந்தபுதுமலர்களால் அலங்கரிக்கப்பட்டு மிக ச்சிதிலமுற்று எப்போது எப்போது பரிபக்குவத்தையடையுமோ நிச்சயமாக அப்போது அப்போது மிருத்தியுவிற்குப் பிரியத்தையுண்டாக்குகின்றது. ஆசை யாகியநதியானது வேகத்தோடும்பலத்தோடுங்கூடியபிரவாகமுடையதாயெல் லாநல்ல பதார்த்தங்களையும் விழுங்கித்தன் கரையிலிருக்கும் மகிழ்ச்சியென்னும் நன்மரத்தின் வேரைப்பறித்துத் தள்ளுவதிலாற்றலுற்றதாயிவ்வுலகின்கண்ணே பெருகிவருகின்றது. சரீரமாகிய ஓடமானது தோலினாலேமறைத்துக் கட்டப் பட்டு அலைகளினாலேயலைக்கப்பட்டுத் தானுங்கனமின்றி யிருத்தலினாலே பிறவி ப்பெருங்கடலிற் சுழலுகின்றது (இது தக்ஷிணதேயத்தில் பரிசலெனவழங்குவது வெளிப்படை) அதனானே கவிழப்போகின்ற நிலையிலலைகின்றது விவேகிகளும் வைராக்கிய தைரியசாலிகளும் ஆகியஜீவர்கள் அதன்கண்ணில்லாமையானே ஐந்து இந்திரியங்களாகிய முதலைகளும் உருட்டி விழுங்கப்பார்க்கின்றன. ஆசை களாங்கொடிகணிறைந்த காட்டிற் சஞ்சரித்துக்கொண்டிருப்பனவும், காமவிரு க்ஷங்களிலுள்ள நூற்றுக்கணக்கான சாகைகளிலுழல்வனவும், ஆகியமனக்குரங் குகள் ஆயுளைக்கழிக்கின்றன ஆனாற் பலமொன்றையுமடைவதில்லை. ஆபத்துக் களில் வாட்டத்தையும் மோகத்தையும் அதிதூரத்திலகற்றியவர்களும், சம்பத் துவந்தபோதுகர்வமற்றமனத்தினாலேமிக அழகுவாய்ந்தவர்களும், சுந்தரிகளாலே கொள்ளை கொள்ளப்படாத அந்தக்கரணத்தையுடையவர்களுமாகிய பெரியோர் கள் மிகவும்அரிதினுமரிதாயிருக்கின்றார்கள். எவர்கள் மதயானைக்கூட்டங்களா கிய அலைகள்நிறைந்தபோர்க்கடலைக் கடக்கின்றார்களோ அவர்கள் சௌர்யஉத் கிருஷ்டவிமரிசையோடுகூடியிருக்கும் எனதுதிருஷ்டியில்உத்கிருஷ்டசூரர்களா கமாட்டார்கள், பின்னரோ, மனோவிருத்திகளாகிய அலைகளோடுகூடியஇந்தேந் திரியக்கடலை, நிகழும் விவேக வைராக்கியாதிகளானேயுண்டாம்மூலாஞ்ஞானத் தைக்கெடுத்தலானே கடக்கின்றார்களோ அவர்களே சூரர்களாவர்கள்; உபாயங் கிடைப்பதருமையாதலின் அதுமிக அருமையன்றோ; கருமமேயுபாயமாகாதோ

வெனின் ? துராசையினாலே கெடுக்கப்பட்ட சித்தவிருத்தியையுடையவுலகர் எக்கருமத்தைப்பற்றி இளைப்பாறுதலை யடைவரோ அத்தகையதெக்கருமமும் எங்கும் எக்காலத்தும் கிலேசமும் நாசமும் அற்றதாய்ச் சமுசாரமுடிவு வடிவான மோக்ஷபலத்தையுடைத்தானமையான அழகியதாய்க் காணப்படுவதேயில்லை ; "எவ்வாறிங்கே யெழிற்றொழிலானே, செவ்வாறுக்கியபயன் றின்றுதீரும் ; அவ்வாறங்கே யறத்தாற்றரித்த,செவ்வாறுயபயனையின்றேகும்" என்பதாதி சுருதியுங் கூறுகின்றது, செயற்கையானுண்டான பயனுசமாமென்பது நியமமாம், இட்டங்கெட்டொழியினே துக்கமே முடிவிலுண்டாகின்றதென்பதும் வெட்டவெளியேயன்றோ. எவ்விடத்திற் பாக்கியமானதுதயமாகவில்லையோ, தைரியமுதலியவற்றைக் கெடுக்குமேதுக்களாகிய இராக உலோபாதிகளின் பிரபலத்தாலே, கீர்த்தி பிரதாப இலக்குமிமுதலிய அற்பப்பலன்களும் கிடையாதனவாமோ அவ்விடத்தில் மகாபலமாகிய மோக்ஷத்தைப்பற்றிச் சொல்லவேண்டிய துயாதுளது ; கீர்த்தியினாலேயுலகத்தையும், பிரதாபத்தினாலே திசைகளையும் மலைக்குகைகளையும் தனத்தினாலே இரப்போரது இல்லங்களையும், சாத்துவிகமாய்க்ஷமை விநயம் உதாரம் முதலியபலத்தானே இலக்குமியையும், (இலக்குமியானவள் கூறியவற்றானே நிறையக்கிடைப்பள்) தைரியக்கட்டைக்கைவிடாத எவர்கள் பூரணஞ்செய்கின்றார்களோ அத்தகைய பெரியோர்கள் இவ்வுலகின்கண்ணே எளிதிற்கிடைக்கத்தக்கவர்களாகார்கள். பாக்கியமானதுதயமாகிவிடினே யாவருக்குமேயாண்டும் விரும்பியயாவையும் கிடைத்தல் சுலபமாகும் புருடப்பிரயத்தனமுமப்போது வீணாகவேபோகின்றதாம் ; கிரியின் சிலைமயமானசுவர்களோடுற்ற குகைக்குள்ளே யிருந்தபோதினும், வச்சிரத்தாலுண்டாக்கப்பட்ட கெடுக்கப்படாத ஆலயத்துள்ளே யிருந்தபோதினும், பாக்கியத்தோடுகூடிய யாவரையும், ஆபத்துக்களானவை வருவனபோல அணிமாதி சித்திகளோடுகூடிய வேகத்தானே சகலஐசுவரியங்களும் எப்போதுமோடிவந்தடைகின்றன. கிலேசமும் நாசமும் அற்றதென முன்மொழிந்ததையே விரித்துரைப்பின், புத்திரர்களும் மனைவியரும், தனங்களும் மயலினாலே அமிர்தத்திற்குச்சமானமாகக் கற்பிக்கப்படுகின்றனர், மரணகாலத்திலோ அவர்யாவரும் உதவுவதேயில்லை, அப்போது போகவிடயங்கள் மிகமனோரம்மியமானவையெனினும், விஷமூர்ச்சையைப் போற்றுக்கப்பொருட்டேயாகின்றன. காயமானது வயோதிகத்தையடைந்து முடிந்துபோகும்போது மகா துக்கத்தோடுகூடியும் பெரும் விடமமான அவஸ்தையையடைந்தும், தாங்கள் தேடிவைத்த பொருள்களை நினைந்தும், புண்ணியஞ்செய்யாமற்றிரிந்ததை யெண்ணியும், இவ்வுலகத்திற் கிழட்டுப்பிராணிகள் இவ்வுடலிலவதிப்பட்டுள்ளேயே தகிக்கப்படுகின்றன. ஆதியில், தனந்தேடல் போகஆசை மிகுதியினாற் காம அர்த்தங்களானே தருமந்தேடலிற் சிறிதுமிடங்கொடாமற்செய்த இலௌகிகக் கிரியைகளானே தினங்களையெல்லாங் கழித்துவிட்டு முடிவில் மயிற்றோகையைப்போல மிகவும் சஞ்சலித்துக்கொண்டிராகின்ற சித்தத்தை எவ்வாறுதான் இளைப்பாறுதலையடையும்படி யெவனாற்றான் செய்விக்கமுடியும். தருமத்தைச் சம்பாதியாதவர்களின் சித்தத்திலத்தகைய இளைப்பாறுதலுண்டாகவேண்டாம் தருமத்தை மிகவுந்தே

டியிருக்கும் உன்போல்வார்க்கு அதன் பல லாபமிருத்தலின் ஏனஃ துண்டாக மாட்டாதெனின்? தருமபலமாய சுவர்க்கம் புத்திரன் முதலியவர்களும் அசாரந் தான், நதியினின்றுமுயர்ந்தெழும் அலைகளைப்போல அழிவனவாதலினாலே முன் னிருந்தபோதினும் கிடையாதனவேயாயவையும், தைவவயத்தாலடையப் பெற் றனவும், ஆகிய கிரியையின் பயன்களாலே அனான்மாவின் கண்ணேருசியை யுடையவர்களாதலின் அறியாதவர்கள் வஞ்சிக்கப்படுகின்றார்கள்; எதையடைந் தால் பின்னீங்கமாட்டாதோ அநர்த்தமும் வரவேமாட்டாதோ அதுதான் இலா பமென்று சொல்லப்படும், மற்றைய இலாபங்களெல்லாம் வஞ்சனைமாத்திரமே யாம், அற்பஆயுளையுடைய புத்திரனைப்பெற்றதனாலும், மீனிற்குத் தூண்டிமுண் மாமிசத்தாலும் வரும்பயனைக்காணலாமே; "யாவனான்மாவினும் அயலைப்பிரிய மென், றாவமோதுவனவன் பொருட்டறைக, தாவவன்பிரியந்தவிர்வதுதானே" என்று சுருதியுங்கூறுகின்றமையின் அந்த இலாபத்தில் விசுவாசம்வைப்பது அவ லந்தான். அசுரசம்பத்தின் விஸ்தாரத்லதயாராயினோ முற்கூறிய பொருள் நன்றாகவேயிலங்கும், இவை சமீபித்திருக்கின்றன இப்போது செய்யத்தக்கன, அவை தூரத்திருக்கின்றன வேறு தேசகாலங்களிற் செய்யத்தக்கனவென சிரந் தரம் சிந்திக்கப்பட்டனவாய் முடிவில் அநர்த்தரூபமாயிருக்குங்காரியங்கள், மனை வியரதுபிரியம்போல் நடத்தலாலே தேகம் விரைவில் ஜரையுறவே ஜனங்களு டைய சித்தமும் ஜரையுறுகின்றபடியால் அச்சித்தத்தை விவேகத்தினின்றுந் தவிருமாறு செய்விக்கின்றன தருக்களினிலைகளானவை யுற்பத்தியையடைந்து பழுதுபட்டு இலயத்தையடைவனபோலவே தமது விவேகமற்ற வுலகரும்பிறப் பினையுற்றுச் சில தினங்களிலேயே மரிக்கின்றனர். இங்குமங்குமாக அதி தூரம் சுற்றித்திரிந்து பொழுதுபோம்போது வீட்டிற்புகுந்து பகலில் விவேகிகளினது அனுசரணத்தால் நல்லகரும ஒழுக்கமேயில்லாமலொழியின் மூடனைத்தவிர இரவில் யாவன் நித்திரைசெய்வன். எல்லாப்பகைவரையுமினிது வெற்றிகொ ண்டு அஷ்ட இலக்ஷுமிகளும் நாற்புறமும் சூழ்ந்துவருமாறு சுகங்களைப் புருடானுபவிக்கும்போது எவ்விடத்திலிருந்தோ மிருத்தியுவானது வந்தழித்து விடுகின்றது. எவ்விதத்தினும் இன்னதென நிண்ணயிக்கமுடியாத காரணத்தி னாலே விருத்தியாகாநின்ற துச்சவடிவமுடையனவும், கண்டகணத்திலழிந்து போவனவும், ஆகிய இவ்விடயங்களாலே மயங்கித்திரிபவராகிய ஜனங்கள் இவ் வுலகின்கண்ணே எங்கிருந்துதானுற்பத்தியாகின்றார்களோ எங்குபோய்த்தான் மடிகின்றார்களோ அறியமுடியவேயில்லை. சர்வப்பிராணிகட்கும் பிரியமெனப் பிரசித்தமாகிய பிராணன்களாம் யஜமான்களாலே அந்தோ! யாவர் விடயப் பற்று, தேகக்காப்பு முதலியவற்றின் வலுமையாலே பருமையையே யடைந்தி ருக்கின்றாரோ விவேகவைராக்கியாதிகளைப் பயின்றிலரோ அத்தகையநரர்களே யாய ஆட்டுக்கடாக்கள் கெட்ட கருமவடிவயூபத்தம்பத்திற் கட்டப்பட்டவைக ளாய்த்தோடமையினாலே கறுப்புநிறம்முகமாகுமாறு சமஸ்கரிக்கப்படுகின்றன? அதனாலேயவை நோய்களாகி இருத்துவிக்குகளாலே மாரணகட்க முதலியவற் றால் காயகாசவாயிலாக அசத்தாகச் செய்யப்படுகின்றன "அசத்தெனச்சிவந் தனையறிந்திடுவானேலசத்தேயாவனவனெனவறிக" என மறையுமறைகின்றது.

(சில பாகங்களில் ஆட்டுக்கடாக்களும் பசுக்களாதல்வெளிப்படை) போஷிக்குந்
தம்மானேதாமே பருத்துத்திருத்தியடைந்திருக்கும் ஜனங்களாகிய அக்கடாக்
கள் பிரியப்பிராணன்களானே வலுவிலேயே துன்புறுத்துங் கருமபாசங்களாற்
கட்டுப்பட்டவைகளாய்க் காலனுடைய முகத்திற்குபகரிக்கப்படுகின்றன; அத
னானே செய்ந்நன்றிகொன்ற பிராணன்கள் காயசாசவாயிலானேபிரியமுடையன
வாகமாட்டா, மற்றோ, அப்பிரியமாய பகைகளே, ஆகலின் பிராணன்களைக்
காப்பதின்மாத்திரம் தற்பரமாயிருக்கலாகாதாம். பிராணனைக்காப்பாற்றுவரே
னும் மூடர் பிராணனிடத்திற் பிரியமுடையவரேயாகமாட்டார், அவர்கள்மிரு
த்தியுவின் முகத்திற்செல்லுமுபாயங்களை யொழுகலானே மாறாகப்பிராணனைக்
கெடுப்பவரேயாவர்; மற்றோ, தத்துவஞானிகளேயிங்குப் பிராணன்களிடத்திற்
பிரியமுடையவர்கள்; அவர்கள் தத்துவதிருஷ்டியானே பிராணன்கட்கு நித்திய
ஆன்மபாவத்தைச் சம்பாதித்துக் காப்பாற்றுகின்றார்களன்றோ; ஆகையால், அந்
தப்பிரியப்பிராணன்களானே கெட்டகருமக்கட்டுற்றுத்திரியும் அம்மூடநரக்க
டாக்கள் காலமுகம்போலுமாக்கப்படுகின்றனவேயன்றி யாதரிக்கப்படுகின்றன
வில்லை, அவர்களிடத்திருக்கப்பட்ட அதிசயமென்னவெனின், தத்துவஞான
பலத்தானே சரீரம் மூன்றையும்பாதித்து அபரிச்சின்னத்தன்மையையே யடை
வுற்று இருத்தலினானே நரக்கடாக்கள்போலத் தேகான்மமதியுடையவர்களாகார்
கள் என்பதேயதிசயமாகும். நிரந்தரம்கணத்திற்கழியும் கல்லோலமாலைகள்போ
ல அதிவேகமாயெங்கிருந்தோ இவ்வுலகத்தில் சஞ்சலமானஜனசமுதாயமானது
ஓடிவருகின்றது, இடைவிடாமல் வந்ததுபோலவே அதிவேகமாய்ச்சென்றொழி
கின்றது, இது எதனினின்றும் வருகின்றது எதன்கண்ணே சென்றொடுங்குகின்
றதென்றறியும் ஆசையுண்டாகின்றது. நரர்களுடைய பிராணனையபகரிப்பதிலே
யே தற்பரரும், கோவக்கனியொத்த இதழ்களையும், குசும்பாத்தோய்த்தவத்திரத்
தையும், செந்தாமரைபோன்ற கரங்களையும், செம்பஞ்சுதோய்த்தகால்களையும்,
வண்டுகளைப்போன்ற நேத்திரங்களையும் உடைய நாரியர்கள் விடவிருக்ஷத்தின்
கண்ணாடுங்கொடிபோல மனோகரமான காரியங்களைச்செய்து மனத்தைக்கெடு
த்து விடுகின்றனர். இம்மனுட வுலகத்தினின்றும், சுவர்க்க நரகாதிகளினின்றும்
வந்து வீணாகவே யிங்கு நாமெல்லோரும் ஒன்றுசேர்ந்து நெடுநாள்வாழ்வோம்
எனப்பரஸ்பரம் அபிப்பிராயங்கொண்டு சங்கேதஞ்செய்து அதற்குத்தக்கவடி
வோடுகூடி மித்திரகளத்திர விவகாரரூபமாயையானது தேவோற்சவ முதலிய
யாத்திரைகளில் நரர்கள் ஒன்றுசேர்ந்து சுழல்வதேபோற் சுழலுகின்றது. அனு
பவிக்கப்பட்ட பாலிய திரி முதலிய அநேகதசைகளோடு கூடினவும், மிகராகத்
தைலத்தோடு கூடினவும், மிகச்சஞ்சலமாயினவும், பொய்மயமாய்ப்பொலிவன
வும், ஆகிய விளக்கின்க்ஷணிகமானஜ்வாலையுபசாந்திப் பிரவாகங்களாகிய ஜன்ம
மரணபரம்பரைச் சம்சாரமாலைகளில் தத்துவமானது உணரப்பெறுவதில்லை.
குயவனுடைய சக்கரமானது சுழன்றுகொண்டிருந்தபோதினும் ஆராயாத புருட
னுடைய மதியில் நெடுநேரமா யிதுநிலையாகவேயிருக்கின்றது சுழலவேயில்லை
யென்னும் பிரதீதியையுண்டாக்குவதேபோல இச்சம்சாரப்பிரவிருத்திரூபகெட்
டசக்கிரமானது மழைக்காலத்து நீரிற்குமிழிகள் தோற்றுவதேபோல அநித்திய

மாயிருப்பினும் நெடுங்காலம் நிலைபெறுவதாய தோற்றத்தை ஆராய்விலாத மூர்
க்கர்மதியிலுண்டு செய்கின்றது. தாமரைமலர்போன்ற ஜனங்கட்குச் சரற்கால
மாகியயவ்வனமானதுள்ளபோது எச்சௌந்தரியசுகந்தி முதலிய குணங்கள்
சோபையோடுகூடிச் சொலித்துக்கொண்டிருக்கின்றனவோ அக்குணங்களே,
பனிக்காலமாகிய ஜரையானது வந்தபோதுதைவவசத்தாலழிந்து முகத்தலாகிய
சித்தசமாதானமானது நெடுந்தூரத்திலோடித்துர்லயமாய்விடுகின்றபடியினுனே
அவற்றில் விசுவாசம் செய்யவேகூடாது. எச்சம்சாரத்தில் நிலநீர் நெருப்பு
முதலிய தெய்வவசத்தானே புருடனுடைய வுபகாரத்தையவாவாமலே உண்
டாகி விருத்தியடைந்து பலபுஷ்பாதி ஐசுவரியங்களையுமடைவுற்றுத்தனது தேக
மாகிய பாரத்தைத்தாரணஞ் செய்தலானே மீண்டுமீண்டும் ஜனங்கட்கு நிழல்
இலை, மலர் பழமுதலியவற்றுனே உபகாரத்தையே செய்துகொண்டு அபராத
மியாதொன்றுஞ் செய்யாதிருக்கவும் விருக்ஷமானது கோடரியினுலே பிளக்கப்
படுகின்றதோ ; அத்தகையசம்சாரத்தில் அடிக்கடி அபராதமேசெய்து கொண்
டும் உபகாரம் யாதொன்றுஞ் செய்யாமலுமிராநின்ற மனுடனுடைய விசுவாச
த்தில் யாதுவழக்குளது, இதனுற்றுன் மிருத்தியு அனபகாரியையும் கொல்லவே
செய்கின்றனன். பிறரிடத்திற் றுேடமிருந்தபோதினும் இதத்தையே விரும்பும்
தன்னவரிடத்தில் தோஷமென்னேயெனின் ? மனதிற்கு இரம்மியமாயிருந்த
போதினும் சிநேகபோகாதி விருத்திகளையும் தாகஞ் சுழற்சிமுதலிய விருத்திக
ளையும் உண்டாக்கி உள்ளேயிருக்கு முபசாந்தியையும் வாழ்வையும் கெடுப்பதற்
காக முயன்றுண்டாய விடவிருக்ஷம்போன்ற ஜனசம்பந்தத்தால் மூடத்தன்மை
யும் களங்கமும் இப்போதேயுண்டாமென்பதே பெருந்தோடமாம். சம்சார
திருஷ்டிகளுக்குள் தோஷமில்லாத திருஷ்டிகளெவை ? துக்கதாகமில்லாத
திசைகள்தாமெவை, கணத்தில் நாசத்தையடையாத பிரஜைகள்தாம்யாவர்,
வஞ்சனையில்லாத இலௌகிகக்கிரியைதாமெவை ஒன்றுமில்லவேயில்லை. அன்
னியர்களுடைய பிரஜைகட்கழிவிருப்பினும் பிரஹ்மாவினுலகத்தையடைந்த
பிரஜைகட்குக் கற்பகாலமிருக்குந்தன்மை யுண்மையின் கணத்தில் அழிதலெ
வ்வாறு பொருந்துமெனின் ? சென்றனவும் வருவனவுமாகிய அநந்தகற்பங்க
ளின் எண்ணிக்கையையறியாதபோது அநந்தமென்பது சமமாயிருத்தலினுனே
கற்பங்களும் விஷ்ணுருத்திராதி திருட்டியானே கணங்களேயாமெனவாதலின்
பிரஹ்மாக்களும் கற்பமென்னுங் கணவாழ்க்கையையுற்றவர்களே யாவர்கள்,
ஆகவே அவயவத்தோடுகூடிய காலசமுதாயத்தில் குறுகல் நீட்சிமதிகளும்,
அற்பஅதிகவாழ்க்கைமதிகளும் காண்போன் கற்பனையினதீனமாயிருத்தலின் அச
த்தியங்களேயாகும் ; இதேநியாயத்தால் பிரஹ்மாண்டங்களும் அநந்தங்கோடி
பிரஹ்மாண்டங் கண்டவர்களின்றிருட்டியால் அணுக்களேயாமென அணுமகத்
தென்னும் மதிகளும் அசத்தியங்களேயாம். இவ்வாறே பிரகிருதிதிருஷ்டி
யில் விகாரங்களியாவுமே அசத்தியங்களேயாமெனத் தோன்றுகின்றது, எவ்வி
டத்திலும் பாஷாணமயமேபர்வதமியாவும், மண்மயமே பூமியெல்லாம், கட்
டைமயமே விருக்ஷங்களெல்லாம், மாம்சமயமே பிராணிகளெல்லாம், ஆயினெ
ங்ஙனம் பர்வதாதிவிசேஷ புத்தியுண்டானதெனின் ? விவகாரத்தின்பொருட்டுப்

புருடர்களாற் செய்யப்பட்ட நாமரூபசங்கேதங்களானே வேறுவேறான இயற்கையுடையனபோன்றுள்ளன; உண்மையாமியோ முன்னே சித்தமாய காரணத்தினுமயலாகவொன்றுமில்லை; இலதாகவே, யாண்டும்வியாயசமத்தன்மையானே, விகாரத்தைவிடுத்துள்ள சர்வஜகத்தும் பிரகிருதிபூதமாய ஒன்றேயாம் பரமார்த்தவஸ்துவேயுளது என ஊகித்துப்பார்க்கத் தோன்றுகின்றது; பர்வதாதி விகாரங்கள் அசத்தியமென்பதாக ஆகுக, ஆனபோதினும், அவற்றின் பிரகிருதிகளாகிய கன்மண்முதலியவற்றிற்கு அசத்தியமெவ்வாறெனின்? அவைகளும் தங்காரணமாகிய மகாபூதவிகாரமேயாதலின், ஈண்டுப்போக்கிய வர்க்கத்தில் விகாரத்திற்குவேறாக இல்லை, இலதாகவே மித்தையென்பதற்கு மென்னதடையுளது, இலதாகவே யெவ்வாறு விசுவசிப்பதோ! கன்மண்முதலியவை மகாபூதமாத்திரமேயாகுமென்பதும் விரிவாகவே தெரிகின்றது, நீர், அதனதுகாரணமாகவும் அதையிந்தனமாக்கவும் அதனைச்சம்பாதித்த நெருப்பு (பௌமவன்னியானது பிருதிவிசம்பந்திகளையிந்தனமாகவுடையவையே யாயினும், காஷ்டமுதலியவற்றினுள்ளே யிருக்கின்ற அப்புச்சம்பந்தியாய சிநேக அங்கிசமாத்திரத்தைத்தகிக்குந்தன்மையானே நீரோடுகூடியதேயாகும்) சூரியசந்திர அக்கினி உதகமுதலியவற்றை யஸ்தஞ்செய்விக்கும்வாயு, ஆகாயம், நிலைத்தபிருதிவியெனப்படுவாய இம்மகாபூதங்களேந்தே பரஸ்பரம் சம்பந்தித்துக்கோகடாதி நானாபதார்த்த இலக்குமியானேயாம் இவ்வுலகம் அவிவேகிகளின் புத்தியாற்பார்க்கப்படுகின்றது அந்தோ! இஃதென்ன அற்புதம்! விவேகதிருஷ்டியால் தனித்தனி பிரித்து ஆராயினோ பஞ்சபூதத்தினும் அயலாக ஒருசிறிதும் கிடையவேகிடையாது "செந்தழல்கொண்ட சிவப்புவர்ணம், அந்தகற்றேஜஸிலண்மியதாகும், தந்திடும் வெண்மையோ தண்ணீரதாகும், மந்தமாங்கறுப்போ மண்ணினதாகும், இந்தவாறனற்கண்ணெரியாந்தகைமை, வந்தவாறந்தோ வழிகொண்டேகும், தொந்தவாக்காற்றொடங்கிய விகாரம், மந்திரநாமமாத்திரமாகும், முந்திய மூன்றுமொழிதருரூபமே, அந்தமற்றுண்மையா யமர்ந்திடுமன்றே" என்னும் மறையுமிதையறைகின்றது. இவ்வாறு பதார்த்தங்கள் அசத்தியமாயின் ஜனங்களுக்கு விவகாரபோக ஆற்றல் எங்ஙனாகும்? இப்பிவெள்ளியினானே கங்கணஞ்செய்யமுடியாதன்றோவெனின்? பொய்வடிவமாய பொருட்கூட்டத்தில் விவகாரகுசலத்தானே நன்குதேர்ந்தோர் மதியினும் போகஅற்புதத்தை விளைவிக்கும் விவகார அதிசயமும் பிரசித்தமேயாம் ஆச்சரியமன்றாம். அவ்வகையாய அதிசயமானது ஒரோருகால் ஒவ்வொரு நரர்க்குக் கனவில் பொய்யாயவிடத்தினும் பொருந்தியுண்டாவதைக் கண்டோம்; யாவருக்கும் கனவில் போகங்கள் பிரசித்தமேயாயினும் சுகதுக்க அதிசயபோகத்தொடக்கத்தில் அதிவிரைவாகவே நனவானது காணப்பெறுதலின் பிரபலமான கருமமானது உதயமானவுன்மாத்திரம் நெடும்போக சாமர்த்தியமானதுண்டாம், அரிச்சந்திரருக்குச் சுவர்க்க நரகபோகங்கள்போலும் ஒரோருவர்க் கொவ்வொருகாற்கூடும்,போக சாமர்த்தியமுளதாவதாயின் இப்போதே யெய்தற்காக வைராக்கியத்தையடையவேண்டும், போகங்களையெல்லா மனுபவித்துத்தர வயோதிகத்தில் வைராக்கியமுற்று ஆன்மவிசாரஞ்செய்வது பொருத்தமா யிருக்குமேயெனின்?

மோகபப்பற்றுனதற்றுவிடின் வைராக்கியமும் விசாரமும் எப்போதுமே கிடையாததன்றே ஆகிவிடும்; இக்காலும் முற்காலும், தற்காலுமுள்ளவயதில் ஆகாயக்கொடிப்பழம்போலப் பொய்யேயாய போகப்பற்றுங் கற்பனையும் விசாரமின்மையானே பெரிதாயிருக்கும்போது போகஅதன்சாதனமுதலியவற்றின், ஆசைலேசத்தானே கொல்லப்பட்ட புருடர்கட்கு (பற்றுனது பெரிதாயிருப்பதால் ஆசையும் அகன்றேதானமரும், ஆயினும் நாசஞ்செய்வதற்கு அதன் லேசமும் போதுமென்பதைக் குறிப்பிப்பார் லேசமென்றுர்) எல்லாவகையானும் மேன்மைபொருந்திய பரமான்மாவினுடைய சொரூபநிரூபண வார்த்தைநிறைந்த கதையே உதிப்பதின்றெனின் நிரந்தரம் அதன் விசாரமென்பது அதிதூரத்திலன்றே நீக்கப்பெறும். பற்றுதலினுலே கேவலம் புருடார்த்தங்கெடுதன்மாத்திரம் அன்றும், மாறுக, மகாஅநர்த்தமுமுண்டாகின்றது, உலகர் மேன்மையாயிராகின்ற போகங்களையனுபவிக்கும் பாக்கியர்களின் ஸ்தானத்தையும், சமத்தன்மையையும், இராஜ்யத்தையும், தனத்தையும் சம்பாதிக்கவேணடுமென்றிச்சித்து இஷ்டப்படி முயல்பவராகி இராகலோபாதி மூ...த்தனத்தோடுகூடிய தங்கள் மனதினுலே கெட்டவர்களாகிப் புதியயவ்வனத்திலேயே ஐயமில்லாமற் கெட்டுப்போகின்றுர்கள்; எவ்வாறென்றுல், ஆட்டுக்கடாமுதலியவை பச்சையாயிருக்கும் செல்லாத இடத்திற்றளிர்த்த மூங்கிற்கொடித்தளிர் முதலியவற்றைக் கவரும் பலக்காதலாலே மலைச்சிகரத்தினின்றும் ஐயமில்லாமல் விழுவதைக் காண்கின்றேமல்லவா! செல்லமுடியாத படுகுழிக்குள்ளேயே விரிந்திருப்பனவும், அதனுனே, பயனற்ற அங்கிசத்தோடுகூடியவையும், ஒருபாகத்திலேனும் பிராணிகளாற் புசிக்கப்படாமல் வீணுய்வளர்வனவும், நிழல் கொடிஇலைகனி பூநிறையப்பெற்றனவும் ஆகிய பள்ளத்துள்ள விருக்ஷங்கள்போலத் தங்கள் சரீரத்தைக்காப்பதிலேயே யுபயோகப்படுத்தலின் வீணுகக்கெடுக்கப்பட்ட வித்தைவிநயந் தனமுதலிய சம்பத்துக்களையுடைய இப்போது இங்குள்ள நரர்களும் வீணுவே பிறந்தவர்களாதலின் வீணர்களே. சிலஇடங்களில் அறம்புரிவோருமிருக்கின்றுரெனினும் விவேகிகள் கிடைப்பதரிது, இந்தவுலகரோ இருவகையினராவர், இடையீடில்லாது செருக்கமுற்ற வனமத்தியபாக அவயவங்களாம் புதர்களில் மான்கள் வசிப்பதேபோலத் தேச அந்தராளங்களாகிய சித்தபூமிகளென்னும் தயைதாக்ஷிண்யம் க்ஷமை வித்தைவிநயம் முதலியவற்றேடுகூடிய இடங்களிற் சிலஜனங்கள் சஞ்சரிப்பார்கள், குரோதலோப நிஷ்டூரமுதலியவற்றேடு கூடிய பிரதேசங்களிற் சிலஜனங்கள் சுழன்று திரிவர்கள். ஜனங்களுடைய துர்த்தசையை நோக்கின் மிகத்துக்கமாகவிருக்கின்றபடியால் அங்நிமித்தமாகத் தெய்வத்தைத்தானிகழவேண்டியதாக விருக்கின்றது, நாடோறும் பலத்தாற் பயங்கரமும் பார்த்தால் மனோரம்மியமாகியும், இராகாதிகளானே அத்தியந்தம் வியாகுலப்பட்ட சித்தங்களாலாகுலப்பட்டும், முடிவிற் கஷ்டபலத்தைப்பயக்கும் பான்மையானே தூடிக்கப்பட்ட தொடக்கவிருத்திகளையடைந்தும், இராநின்ற, அசேதனத்தன்மையானே இறந்ததற்கொப்பாயிராநின்ற தெய்வத்தினுடைய புதியபுதிய காரியங்கள் எந்தவிவேகிகளுடைய மனத்தைத்தான் ஆச்சரியப்படுத்தவில்லை; இத்தெய்வம் இறந்ததுபோலில்லாவிடினித்தகைய தயை

யில்லாத காரியத்தைச் செய்யுமா? கூறியபொருளையே யனுவதித்துமுடிப்பார் அதனிமித்தமாகத் தமது கிளர்ச்சியை ஸ்ரீ இராகவர் காட்டுகின்றார் :—ஹே மகாமுனிவரே! காமப்பற்றையுடையவர்களோ பலவகையான குடிலத்தன்மைச் சாதுரியங்களானே விவகரிப்பதிற்றற்பரர்களா யிருக்கின்றார்கள், இவ்வுலகின் கண்ணே கனவிலும் விவேகிகளிப்போது எளிதாகக்கிடைப்பதரிதாக இருக்கின்றது, தொழில்களியாவையுமோ அத்யந்தந்துக்கரகித சாதனங்களோடும் பலன்களோடும் சேராதனவாயவசியம் துக்கத்தையே கொடுப்பனவாகவே யிருக்கின்றன, ஆகவின், இவ்வாழ்க்கைமயமாயிருக்கும் தசையை யெங்ஙனந்தான் கழிப்பதோதெரியவில்லை.

27-வது மோக்ஷவிரோதிகள் முற்றிற்று.

---

## 28-வது சர்வவஸ்துக்களின் விபரீதம்.

இப்போது சர்வபோக்கியவத்துக்களிலும் வைராக்கியமுண்டாகும்பொருட்டு எல்லாப்பொருள்கட்கும் மாறுபாடான இயற்கை வருணிக்கப்படும் :—எல்லாப்பொருள்களு மிடைவிடாமல் மாறுமியற்கையுள்ளனவெனக் கண்டபோதிலும் அவற்றில் பற்றுதல் உண்டாக கியாயத்தைக்காணேம், சராசரவடிவமாகியிலங்கும் இவ்வெல்லாக்காணப்படுமூலகமும் கனவிற்கூடிய கூட்டம்போல நிலையில்லாதனவேயாம். வற்றிய கடல்போற் படுகுழியாகயாதின்றிலங்குகின்றதோ அதுகாலையில் மேகங்கள் சூழ்ந்தபர்வதமாக ஆய்விடுகின்றது. வனக்கூட்டங்களானே விஸ்தீரணத்தையடைந்து ஆகாயத்தளாவிய உன்னதமான பெருமலையானது சிலதினங்களிலேயே பூமிமட்டமாகவேனும், பெருங்கூபமாகவேனுமாய் விடுகின்றது இத்தேகமானது இன்று பட்டுகளாலும் மாலைகளாலும் சந்தனங்களாலும் அலங்கரிக்கப்பட்டுள்ளது நாளையோ திகம்பரமாய்த்தூரத்தில் ஒருகுழியில் சின்னபின்னமாகின்றது. எவ்விடத்திலின்று விசித்திர ஆசார அலைந்தலைந்து திரியுஞ் சஞ்சலத்தோடு நகரத்தைக்கண்டோமோ அவ்விடத்திலேயே நாளடைவில் ஒருவருமில்லாத பெருங்காடுண்டாகிவிடுகின்றது. யாவனின்றுமிகுந்ததேஜசுடையவனாகி எல்லா இராஜ்ஜியங்களையுமடைந்தரசுசெய்கின்றானோ அவனே சிலதினத்தில் சாம்பர்க்கும்பலாகி விடுகின்றான் விஸ்தீரணமாகவும் நீலமாகவுமிருக்கும் ஆகாயமண்டலத்திற்கொப்பாயும் மகாபயங்கரமாயும் உள்ள பெருங்காடுகள் ஆகாயத்தைமறைக்குங் கொடிகளோடு கூடிய பெரியநகரமாகிவிடுகின்றது. கொடிமுதலியவைகளாற் சூழப்பட்டுப் பயங்கரமாயிலங்கும் பெரும் வனமானவை சிலநாள்களில் மீண்டும் வெம்பாலை நிலமாகின்றன. நீருற்றது நீரற்றதாகின்றது நீரற்றது நீருற்றதாகின்றது, கர்ஷ்டநீர் திருணமுதலியவற்றோடுகூடிய வுலகமுழுதும் விபரீதத்தையடைகின்றது. அநித்தியமாகிய பாலியம் யவ்வனம் சரீரம் தனக்குவியல் என்பனவையாவும், அலைகளைப்போல இடைவிடாமல் ஒருதன்மையைவிட்டு மற்றொருதன்மையையடைந்துகொண்டே யிருக்கின்றன. இவ்வுலகின் வாழ்வானது காற்றுக்குள்ளகப்பட்ட சிறு விளக்கின் சுடர்போலச் சஞ்சலமாயிருக்கின்றது, இம்மூவுலகி

ன்கண்ணுள்ள பதார்த்தங்களின் சோபையானது மின்னன்மின்னும் அழகைவா
ய்ந்திருக்கின்றது. குதிர்முதலியவற்றில் நிரந்தரம் அடிக்கடி நிரப்பப்பட்ட
தானியமுதலிய பீஜங்களின் குவியல்கள், செலவிடலானே விபரீதத்தையும்,
பூமியிலிட்டு நீர்நிறைவிக்க உப்பியங்குரித்துப் பயிராதன்முதலியதன்மையானே
விபரீதத்தையும் அடைவதேபோல இப்பெருத்த பிராணிகளின் பரம்பரையும்
விபரீதத்தையடைகின்றது. மனமென்னுங் காற்றினாலே நாற்புறமும் மேலே
யலங்காரமாகக் கிளப்பப்பட்ட அளவிறந்த பிராணிகளாகிய தூளிக்கூட்டவா
டையுடையவளும், அதனானே பிராணிகளின் நரகவீழ்ச்சி சுவர்க்க அடைவு
மத்தியலோகச் சுழற்சிகளைச் செய்விப்பவளும், அதனானே மேன்மையாய அபி
நயபாவங்களை விளக்கும் சேட்டைகளா லலங்கரிக்கப்பட்டவளும் ஆகியஸ்திதி
யென்னும் சம்சாரத்தின் கருத்தாபோக்தாப்பரம்பரையாய ஆடம்பர அதிசயரூ
படனமாதானவள் தனது குசல அதிசயத்தை வெளிப்படுத்தும்பொருட்டு நட
னத்தில் ஆவேசத்தோடுஞ் சுழல்பவளாய் மயன்மிகுத்துத்திரிவள்; கந்தர்வநகர
ஆகாரமாகியமயல் விபரீதத்தைவிரிப்பள், (கூத்திகள் வங்கிசத்திற்கு நேத்திர
மறைக்கும் காருடவித்தை பிரசித்தமாம்) கடைக்கண் காட்டுவதாகிய சஞ்சல
மாம் விவகாரங்களின் பெருக்கானே மனோரம்மியமாயிருப்பள், மின்னலே
யாய சஞ்சலவிழியை நீட்டிநீட்டி யடிக்கடி காட்டுவள், நடனத்தில் மிகப்பற்று
ள்ளவள்போலச் சம்சாரத்தைச் செய்துகொண்டே யெப்போதும் விளங்குவள்.
உற்சவவைபவத்தோடு கூடிய அத்தினங்களும், அப்பெரியோர்களும், அச்சம்ப
த்துக்களும், அத்தொழில்களும் பிறயாவும், நினைவுமாத்திர நெறியைமருவிநின்
றன, இனியாமுங் கணத்திலந்தவழியேதான் செல்லப்போகின்றோம், தினந்தின
மழிந்துகொண்டே யிருக்கின்றது தினந்தினம் மீண்டுமுண்டாகிக்கொண்டே
யிருக்கின்றது, கெட்டுப்போன இந்தவெந்த சம்சாரத்திற்கின்றளவும் அந்தத்
தையேகாணோம். புருடர்கள் மிருகங்களாகின்றார்கள், மிருகங்கள் புருடர்
களா[illegible]ின்றன, தேவதைகளும் அதேவதைகளாகின்றார்களாதலின் ஈண்டெதை
த்தான் நிலையெனக்கூறமுடியும். காலமாகியகதிரோன் கிரணக்கூட்டங்களானே
பிராணிக்கூட்டங்களையுண்டாக்கி மீண்டுமீண்டு மிரவுபகல் சென்றுகொண்டே
தானியற்றிய பிராணிக்கூட்டங்களின் விநாசஅவதியை நோக்குகின்றனன். வட
வாமுகாக்கினியானே நீரானது வற்றுவதேபோலப் பிரஹ்மா விஷ்ணு ருத்திரர்
பிறபிராணிகள் யாவும்அழிவையே யுறுகின்றனர். சுவர்க்கம் பூமி வாயு ஆகா
யம் மலையாறு திசையென்னுமிவையாவும் விநாச அக்கினிக்குக் காய்ந்தவிறகாக
இருக்கின்றன. தனங்களும் பந்துக்களுந் தாசர்களும், மித்திரர்களும் ஐசுவரி
யங்களும் பிறயாவும் விநாசபயத்தாற் பயந்தவனுக்கு இரசமற்றவையாகின்றன.
விநாசமாகிய கெட்ட இராக்ஷசப்பயலானவன் எதுவரை நினைவின்நெறியை
மருவவில்லையோ அதுவரையுமே யுலகின்கண்ணே பொருள்கள் உருசிக்கின்றன
இவ்வுலகர் கணம் ஐசுவரியத்தை யடைகின்றனர், கணம்தரித்திரத்தன்மையை
யடைகின்றனர் கணம் நோயற்றுவாழ்கின்றனர், கணம் நோயுற்றழுகின்றனர்.
கணந்தோறுமாறு மியற்கையையடைவிப்பதும், நிந்தையழிவு வடிவுடையதும்
ஆகியவுலகமயக்கினால் எந்தமதிமான்கள்தாம் மயங்காமலிருக்கின்றார்கள். இவ்

வாகாசமண்டலமானது கணம் இருளாகியசேற்றினாலே நன்குபூசப்பட்டும், கணம் உருக்கியபொன்போல இரம்மியகோமள சுகபரிச சந்திரன்முதலிய பிரகாசத்தானே சுந்தரமாக்கப்பட்டும், கணம் மேகங்களாகிய நீலோற்பல மாலைக்கூட்டங்கணிறைந்த உதரத்தையுடையதாகியும், கணம் பெருஞ்சத்தத்தோடுகூடியும், கணம் உமையைப்போலாகியும், கணம் நக்ஷத்திரங்களாலலங்கரிக்கப்பட்டும், கணம் சூரியனாலலங்கரிக்கப்பட்டும், கணம் சந்திரனான்மகிழ்விக்கப்பட்டும் கணம் முற்கூறியயாவுமில்லாமலும் விளங்கிக்கொண்டிருக்கும். வரவுபோக்கினையேயுடைத்தாகி யிருப்பதும், கணம் இருப்பையும் நாசத்தையுமுறுவதும், ஆகிய இதனால் இச்சம்சாரத்தில் எத்தீரன்றான் அஞ்சவில்லை. கணம் ஆபத்துக்கள்வந்தடைகின்றன, கணம் சம்பத்துகள்வந்து சார்கின்றன, கணம் பிறப்புறுகின்றது, கணமிறப்புறுகின்றது ஹேமகாமுனிவரே! கணமாயினும் என்னதான் மாறாமலிருக்கின்றது. முன்னர் வேறாகவேயிருந்த வொருவன் சிலதினங்களில் வேறாகவேயாய்விடுகின்றனன், ஆகலினிவ்வுலகில் எப்போது மேகரூபமாயும் நன்னிலையுற்றதாயும் ஒருபொருளுமில்லவேயில்லை. பருத்திவிரைத்தநிலத்திற்சிதறியகடம்பருத்தியாய்ப் பரிணமிக்குமுறையானே படமாதலைக்கண்டோம், படமுறையே கடமாயிருக்கும் ஆகலினிச்சம்சாரத்தில் விபரீதமாகாமற் கண்டபொருள் யாதொன்றையுங் காணவேகாணோம். வளர்தல், மாறுபடல் சிதைவுறல், அழிதல், மீண்டும் பிறத்தல் என்பனவாய ஐந்துபாவ விகாரங்கள் முறையாக எப்போதுமிரவும்பகலும்போல அவற்றையடையும் தேகாபிமானியாய நரனைவிட்டு நீங்கிக்கொண்டே யிருக்கின்றன நெடுநேரமிராமல் விபரீதத்தையே யடைகின்றன; இருப்பதாகிய சத்தையானது, பாவவிகாரங்களுக்குள் யாஸ்கமுனிவரானே கூறப்பட்டிருந்தபோதினும் அது அதிஷ்டான பிரஹ்மசத்தையைச் சம்பந்தித்ததாதலின் விகாரமாகமாட்டாதாம். சூரனல்லாதவனாலே சூரன் கொல்லப்படுகின்றான், ஒருவனாலும் நூறுபேர் கொல்லப்படுகின்றனர், அற்பஅறிவிலர்களும் பிரபுத்தன்மையை யடைந்துவிடுகின்றனர் ஆகவின் எல்லாவுலகும் மாறிக்கொண்டே யிருக்கின்றது. இச்சேதனக்கூட்டங்கள், ஜல அசைவின் சம்சர்க்கத்தால் அலைமாலைகள்போல ஜடமாகிய பிராணகாரணாதிகளினசைவினாலுஞ்சம்பந்தத்தால் நிரந்தரம் மாறுபாட்டையடைந்துகொண்டே யிருக்கின்றன. பாலியம் சிறிதுதினங்களிலேயே சென்றுவிடுகின்றது. யவ்வனஸ்ரீயும் அவ்வாறே யொழிகின்றது, பின்ஜரையும் முன்முறையேமுடிகின்றது, ஆகையால் தேகமும் ஒருரூபமாக இருக்கவில்லை, இனிவெளிவத்துக்களில் என்னபற்றுதல்செய்ய யோக்கியமிருக்கிறது? நடனானவன்வாட்டமகிழ்ச்சி முதலிய நாட்டியங்காட்டுவதேபோல மனமும் எல்லாப்பொருள்களிலும், கணம் மகிழ்ச்சியையுறுகின்றது, கணம் வாட்டத்தையுறுகின்றது, கணம் அழுகையடைகின்றது. இதனினும் வேறு, இதனினும்வேறு, இதனினும்வேறு, என்பதாக மகிழ்ச்சி வாட்டமயக்க விசித்திரகாரணங்களாகிய வத்துக்களை இவ்விதியானது லீலைகளிற் பாலகனைப்போல உண்டாக்கித்துயரையுறுகின்றது. நென்முதலியவற்றைப்போல விதியானது சம்பாதித்துச் சேர்க்கின்றது அவற்றாற் பிறவற்றையுண்டாக்குகின்றது அவற்றை யழிக்கின்றது அழிவுகின்

றது, பின்சுவைகண்டுகொண்டதால் அவ்வாறேநிரந்தரம் புசிக்கும்பொருட்டு வேறுவேறாய ஜந்துக்களைச் சிருட்டித்தேதிரியும், சிருட்டிக்கப்பட்ட நரரை மகிழ்ச்சிவாட்டமுதலியவை இரவும்பகலும்போல எப்போதும் அடைந்து நீங்கிக் கொண்டேயிருக்கும். தெளிவாகப்பார்க்கும்போது ஹேதுவின் நிலையின்மையினனே யுண்டாகிறதென்று தோன்றுகின்றது, சம்சாரத்துள்ள பொருள்களியாவும் தோற்றன்மறைதலாகிய இயற்கையோடு கூடியிருத்தலின் ஜனங்கட்கு நிலைமைநீங்குகின்றது, நீங்கவே ஆபத்தும் விலையில்லை. அநாதரவாகவே எளிதாய்ச் சர்வசாமர்த்தியவான்களையும் எங்குமாட்டிவைக்கும் வகையான மறைப்பிற் குசலனுகிய அக்காலன் பெரும்பான்மையும் யாவரையும் ஆபத்திலழுத்தி விளையாடித்திரிகின்றுன். கருமரசங்களின் சமவிடமபரிபக்குவத்தானே பல வேறுவகைப்பட்டனவும், காலமாகிய காற்ருலுதிர்க்கப்பட்டனவும் ஆகிய முப்புவனங்களிலுமுள்ள பிராணிக்கூட்டங்களாகிய பழக்கூட்டங்கள், உயிர்தோறும் வேறுவேறாய சம்சாரங்களென்னுந் தருக்களினின்றும் தினந்தினம் விழுந்து கொண்டேயிருக்கின்றன. ஆகலின் வீழ்ச்சியை முடிவுபேறுகவுடைய யாவமே துஷ்டங்களேயாம், ஆகவே எதன்கண்ணும் பற்றுவைத்தல் கூடாதென்றே தோற்றுகின்றது.

28-வது சர்வவஸ்துக்களின் விபரீதம் முற்றிற்று.

---

## 29-வது சகலபதார்த்தப் பற்றின்மை.

இப்போது,ஸ்ரீராமர் சர்வபதார்த்தங்களிலுந தோடங்களைக் கண்டமையின் தமக்கு வைராக்கியமுண்டாகியிருத்தலை வருணித்தலும், அவ்வறே அவைசாந்தியாம்பொருட்டுபதேசப் பிரார்த்தனையும் கூறப்படும் :-ஸ்ரீராகவர் இவ்வண்ணம் தமது சித்தத்தில் தோடத்தைக்கண்டமையின் தத்துவத்தையறியும் அவாவை முடிவாகவுடைய வைராக்கியத்தைக் காட்டத்தொடங்கல், ஹேமகாமுனிவரே ! கூழியுவகையாக உண்டாய தோடதிருட்டியான காட்டுத்தீயாலும், என்விவேகமதியில்நிறைந்த தோடங்களாகிய காட்டுத்தீயாலும் ஆசைவிரைகளெல்லாமடியோடு தகிக்கப்பட்டும், விவேகவிஸ்தாரத்தோடு கூடியும் இராநின்ற என்மதியில் மலர்த்தடாகத்திற் கானனீர்தோற்ருததேபோலப் போகஆசையானது தோற்றுவதில்லை ; அவிவேகமருப்பூமியிலன்ரே போகஆசைக் கானனீர் தோற்றும். இந்தச்சம்சாரப்பேரிருப்பும், நடோறும் காட்செல்லச்செல்ல நிட்டூர அதிசயத்தையுடையதாயும், காலத்தால் பாகத்தின் மேன்மைவயத்தால் சிறிது கசப்பு அதனினுமதிகம், என்பதாய அவஸ்தாபேதங்களாற் சஞ்சலப்பட்டுக் கசப்பு ரசமானது வேப்பங்கண்ணுகளைப்பற்றி யதிகரிப்பதேபோல விபரீதரச அதிசயத்தையுடையதாயும் ஆகின்றது. வைராக்கியமில்லாமற் போகஆசையானது மிகுந்துவிடினே மகாஅனர்த்தத்தைச்செய்யும், கூர்மையான முண்மரங்களுக்கொப்பாய ஜனங்களுடைய சித்தத்தில் தினந்தினம் தருமபாதங்குறைதலானே சுஜனத்தன்மையானது குறைந்தும், அதருமபாதம் வளர்தலானே துர்ஜனத்தன்மையானது வளர்ந்தும் வருகின்றது. காய்ந்த உளுந்துப்பயறுனவை டண்ணென்று வெடிப்பதுபோலச் சத்தஞ்செய்யாமல் நாளுக்குநாள் விரைவிலேயே

புவியிலுள்ள மரியாதைகளெல்லாம் வெடித்துப்போகின்றன. இராஜ்ஜியங்களாலும் போகசமுதாயங்களாலும் ஹேமுனீசுரரே! அளவற்ற சிந்தைகளுண்டாதலானே, சிந்தைகளின் துயரமெல்லாம் நீங்கியதாகக் கவரப்பட்ட ஏகாந்தத்திலுள்ள ஒருமையேயுயர்வாகும். எனக்குஉத்யானவனமுமானந்தத்தின்பொருட்டாகவில்லை, எனக்கு மங்கையரும் சுகத்தின்பொருட்டாகவில்லை, எனக்குத் தனஅடைவும் மகிழ்ச்சியின்பொருட்டாகாதாம், ஆதலின் மனத்தோடுஞ் சாந்தியடைகின்றேன். சாந்தியல்லாமல் வேறு சுகவேதுவைக்காணேம். உலகமானது, அநித்தியமாயும் ஆநந்தமல்லாததாயுமிருக்கின்றது. ஆசையானதுதாண்டமுடியாமற் பெருகிவருகின்றது, சித்தமோ சஞ்சலத்தினுலே கெடுக்கப்பட்டிருக்கின்றது, ஆகையால் எவ்வாறு சுகத்தையடைவேன். இறத்தலிலும் இச்சையில்லை வாழ்வதிலும் வாஞ்சையில்லை எவ்வாறிருக்கின்றேனே அவ்வாறே தாபமற்றவனுயிருக்கின்றேன். எனக்கு இராஜ்ஜியத்தாலாகவேண்டியதென்னிருக்கின்றது, எனக்குப் போகத்தாலாகவேண்டிய தென்னிருக்கின்றது, எனக்குத் தனத்தாற்றுகவேண்டியதென்னுளது, இராஜ்ஜியாதி விடயங்களாலும் அவற்றை யிச்சித்தலாலும் அவற்றிற்குரிய தொழிலாலும் எனக்காகவேண்டியதென்னே, அகங்காரவசத்தாலன்றே இவ்விராஜ்ஜியாதி, அவ்வகங்காரமோ எனக்கற்றுவிட்டது. விடயப்பற்றானது விடமுடியாமலிருத்தலின் இந்திரியங்களே திடமுடிச்சுகளாம், அவற்றால், பிறப்பின்மாலையாகிய தோம்கயிற்றிற் கட்டப்பட்ட ஜீவர்களுள் அதை நீக்கும்பொருட்டு முயல்பவர்களேயுத்தமர்கள். மன்மதனுன் மங்கையர்களாகிய கரணங்களால், அதிமிருதுவாகிய கமலமானது யானைதன் குளம்பாற்றேய்த்தலாற் கெடுவதேபோல மனமானது குடையப்படுகின்றது. இந்தப்பாலியவயதில் தெளிவான மதியினுனே மனதானது சிக்ஷிக்கப்படாவிடின், மறுபடி சித்தத்தைத் திருத்துவதற்கு அவகாசம் எவ்வாறு கிடைக்கும், "தருத்தனைச் சிறுத்துறத் தரித்திடமெலளிதே, பருத்திடின் மரத்தினைப்பறித்திடலெவரே" என்னும் நியாயமுமன்றேவுளது. விடம்விடமெனக் கூறப்படமாட்டாது, மிகக்கோணலால் விடயமே பெரியவிடமாம், விடமானது புசித்ததேகத்தைமாத்திரம் நசிப்பிக்கும், விடயமோ ஜன்மாந்தரங்களிலும் கெடுக்கும். தத்துவஞானிகளும் விடயங்களைப் புசிப்பவராய்ச் சுகாதிகளையுடையவராய்க் காணப்படுகின்றனரே அவர்களிடத்தில் யாதுவிசேடமெனின்; சுகங்களும் துக்கங்களும் மித்திரர்களும் பந்துக்களும் வாழ்வும் சாவும் ஆன்மஞானியின் மனத்தைப்பந்தப்படுத்தமாட்டாவாம். சர்வதுக்கங்களுமில்லாமல் மூலத்தோடுங் கெடுத்தலின் ஞானமுடைமையே மகாபுருடார்த்தமாமாகலின் அதன்பொருட்டுபதேசம் வேண்டியதவசியமாக இருக்கின்றது, ஆகலின், பூர்வ அபரங்களையறிந்தவர்களுக்குள்ளே மேன்மையானவரே! இயம்பிய ஏதுவினுனே, யான் ஞானியாயிருந்துகொண்டு சோகபய ஆயாசமுதலியவற்றைக் கடந்து விரைவிற் சுகமடையும்பொருட்டு விரைவினுபதேசிக்க வேண்டுகின்றேன், சமுசாரப்பெருந்துயர் பொறுக்கமுடியாமையானும் யாவற்றிலும் வைராக்கியமிகுத்துதித்தலினுனும், காலதாமதமின்றி யடியேனுக்குபதேசத்தைச் செய்யவேண்டும், வாசனைகளாம்வலைகளாகியகொடிகளின் சங்கடங்களானே சூழப்பெற்றும்,

துயரங்களாகிய கூர்முட்களானே நிறைக்கப்பட்டும், ஆபத்துச்சம்பத்துக்கள் நரகசுவர்க்கங்களாகிய மிகுத்த மேடுபள்ளங்களோடு கூடியும், அதிபயங்கரமாயுமிருக்கின்றது இவ்வறியாமையாகிய பெரும்ஆரண்யம். இரம்பத்தின் பன்முனைகளானே அறுக்கப்படுவதையும் என்னாற் சகிக்கமுடியும், சமுசாரவிவகாரத்தாற் கிளப்பப்பட்டிருக்கும் ஆசைவிடயப் பெரும் அறுப்பைச் சகிக்கமுடியவேமுடியாது. இவ்வநிஷ்டமிருக்கின்றது, இதை நீக்குவதிலும், இவ்விஷ்டமில்லை அதனைச்சம்பாதிப்பதிலும், பிருவிருத்தி நிவிருத்தியாதி விவகாரரூப அவித்தையையாலுண்டாய மயக்கம், இயற்கையாகவே சஞ்சலமான சித்தத்தைத் தூளிப்படலத்தைச் சண்டமாருதம்போலத் தூற்றுகின்றது, பஞ்சைத்தீ வாட்டுவதேபோல மகிழ்ச்சி வாட்டமுதலிய சிந்தைகள் வாட்டுகின்றன. ஆசையாகிய சூக்ஷுமநூலிற் கோக்கப்பட்ட ஜீவசமுதாயங்களாகிய முத்துக்களையுடையதும், சாக்ஷியாகிய சித்தின் வியாத்தியால் தேஜஸையடைந்து நித்தியம் நிர்மலவடிவமாய் விசேடமாய் விளங்குஞ் சித்தத்தையே சிரோமணியாகவுடையதும், மிருத்தியுவாகிய தூர்த்தனுடைய அலங்காரபூதமாயிருப்பதும், ஆகிய சமுசாரமென்னும் முத்துமாலையை, வைராக்கியாதி சம்பத்தியையுடைய சகிக்கமுடியாத யான் அக்குரோதம் அஹிம்சைமுதலிய கூர்மையாய உபாயமுடையவனாய் வலையைச் சிங்கமறுப்பதேபோலத் தங்களுடைய உபதேசஜன்னியஞானத்தானே சிதறடிப்பேன். ஹிருதயபுண்டரீகமாகிய புகமுடியாத பெருங்காட்டின் ஜாட்டியமறைப்பின்ஹேதுவாதலிற் பனிவடிவமாயிருப்பதும், ஆண்டான்ம தத்துவத்தைத்தேடப்புகுந்த மனத்திற்கு இருட்டைப்போல விவேகவிழியைமறைப்பதும் ஆகிய எனது அஞ்ஞானத்தை ; எளிதிற்கிடைப்பதும் முக்கியமும் ஆகிய விஞ்ஞான உபதேசத்திசைகளை விளக்கும் சூரியனால் ஹே! தத்துவ வித்துக்களுக்குள் சிரேஷ்டரே! விரைவில் பிளந்தருள்வீராக. சந்திரனாலே நீங்காத இராவிருட்டில்லாததேபோல, உத்தம மனத்தையுற்ற மகா[illegible]களினுடைய சங்கத்தாலும் சங்கபலமாகிய உபதேசத்தாலும் அழியாதனவாய கெட்டமனோவியாதிகள் உலகத்திற் கிடையவேகிடையா. சாந்தியாதி தாட்டியமில்லாத பாலகனாகிய உனக்குபதேசித்தபோதிலும் யாங்ஙனம் பலப்படுத்துவாயெனின், சாந்தியாதி தாட்டியம் தங்கள் கிருபையான் மிகவுமுளது, அரசனானவன் அதிகாரம்பார்க்கும் ஆவலுடையவர்கள் அநேகர்கள் இருந்தபோதினும் எவர்களிடத்தில் லோபம் அச்சம் முதலிய தோடங்களால் தேசத்தில் பீடை பகைவர்படையெடுப்பு முதலியவையாமென்னுந் தோற்றமுளதோ அவர்களை விடுத்து, எவனேனுமொரு வல்லவனாகிய குணவானுக்கே முக்கிய அதிகார முத்திரையைக் கொடுப்பதேபோல என்னுவின்று இந்த வயதிலும், ஆயுள்போகம் யவ்வனம் முதலியவற்றின்கண்ணே, ஆசை சஞ்சலம் முதலிய தோடங்களானே சித்தத்திற் றுக்கம் நாசம் முதலிய அநர்த்தத்தையெண்ணி அவைகளை விடுத்து எல்லாத்தோடங்களு மற்றதும், வல்லமையுற்றதும், ஆகிய சாந்தியின் பொருட்டுச் சித்தவிடயத்தில் திடஅசஞ்சலமாய அதிகாரமுத்திரை கொடுக்கப்பட்டிருக்கின்றது ; கூறியவற்றுள் ஆயுளோ வாயுவினா லலைக்கப்பட்ட மேகக் கூட்டங்களிற் றொங்கும் நீர்த்துளிபோற்

பொன்றுவதாம் போகங்களோ, மேற்கட்டியைப்போல விரிக்கப்பட்டிருக்கும் மேகங்களுக்குள் மின்னுகின்ற மின்னற்கொடிபோற் சஞ்சலமானவையாம், யவ்வன சம்பந்திகளாய மனோவிநோதங்கள் நீரின் வேகம்போல மிக வேகமுமலைவுமுடையனவாம், என இவற்றையெல்லாம் விரைவி லெண்ணித்தான் மனத்தின் நீள்சாந்தியின்பொருட்டு உரைத்ததுபோல முத்திரையானது கொடுக்கப்பட்டுளது.

29-வது சகலபதார்த்தப் பற்றின்மை.

---

## 30–வது பயன்பகரல்.

இப்போது, ஸ்ரீ ராமர் தமதுசித்தத்தின் கிளர்ச்சியையே அநேக ஹேதுக்களாற் பிரகாசப்படுத்தி அதனீக்கப்பொருட்டும் இளைப்பாறுதற்பொருட்டும் உபதேசத்தைப் பிரார்த்தித்தல் வருணிக்கப்படும். ஸ்ரீ இராமர் தமது சித்த உத்வேகத்தையே ஹேதுக்களானே விஸ்தரித்து விசிராந்திஹேதுவாய தத்துவ உபதேசத்தையே விஸ்தாரமாய்ப் பிரார்த்தித்தல் :-ஹே மகாமுனிவரே ! மூற்கூறியவகை வந்திராநின்ற அநேகங்கோடி யநர்த்தங்களால் நெருங்கிய சங்கடத்தோடுகூடிய சமுசாரப்பாழுங்கிணற்றுப் பொந்தில் எல்லாவுயிர்களும் விழுந்து முழுகிக்கிடப்பதை நோக்கி என்மனமானது சிந்தையாகிய சேற்றிலழுந்திக்கிடக்கின்றது. என்மனமானது சுழலுகின்றது, பயமுண்டாகின்றது, ஜரைத்தருவினிலைகளைப்போல எனது அவயவங்களெல்லாம் நடுங்குகின்றன. உத்தமோத்தம சந்தோஷதைரியத்தாயினுடைய மடியையடையாத குழந்தையாகிய எனது மதியானது மிகவும் ஆகுலத்தையடைந்து அற்ப பலத்தையுடைய காக்கும்வலுமையில்லாத பதியையுடைய தருணியானவள் நல்லிடமகப்படாமல் ஆரண்யத்திற் பயப்படுவதேபோலப் பயப்படுகிறது. எவ்வாறு மான்களானவை துச்சமாகத் தொங்காநின்ற புற்களானே வஞ்சிக்கப்பட்டுப் படுகுழியில் விழுகின்றனவோ அவ்வாறே, துச்சமாய்த் தொங்கும் விடயங்களால் வஞ்சிக்கப்பட்டு இந்த அந்தக்கரண விருத்திகள் விசேக்ஷபமாய துக்கங்களை யடையும்பொருட்டுருளுகின்றன. எதனாலெனின், அவிவேகிகளைப் பற்றிக்கொண்டிராநின்ற விழி முதலிய பொறிகள் மிகவுந் தாழ்ந்தவைகளாய்க் கஷ்டசமுசாரத்தின்கண்ணே நெடுநாட் பழக்கத்தால் நிலைபெற்று வசிப்பனவாய்ச் சத்பதமாம் பரமார்த்தவஸ்துவின் கண்ணே வசியாதனவாயிருத்தலின் பாழுங்கூபம்போல இருக்கின்றன. ஜீவநாயகனையடைந்த காந்தையான சிந்தையானவள் நாயகனது வீட்டில் அவனதீனமாயிளைப்பாறுதலை யடையாமல் வாஞ்சித்த தேயத்தையும் விடயத்தையும் அடையாமலிருக்கின்றனள். தைமாதமுதலிலிருக்குங் கொடியாகிய தைரியமானது விடயங்களாகிய இலைகளை விவேகப்பனியின் கெர்ரேத்தால் விடுகின்றது இரசமானது எஞ்சிநிற்றலின் சில சுழன்றுகொண்டிருக்கின்றன. ஆகலின் ஜர்ஜரமாக்கப்பட்டுக் கெடுகின்றன ("இரதமுமிவற்கறு மெழிற்பரங்கண்டே" என்னும் ஸ்ரீ பகவத்வசனத்தானே ஆன்மதரிசனமில்லாமல் இரதம் நீங்காதென்பதாம்) கிலேசமிகுத்துவரும் அவ்விடைப்பட்ட அவஸ்தையை விரிக்கின், என்னைச்சம்சார ஸ்திதியானது எனது விவேகமா

த்திரையானே எனக்கு அரையுணர்வுதித்திருத்தலின் பாதிவிடுத்தும் பாதி பிடித்துமிருத்தலின் கூறிய சித்தத்தினது அத்திரத்தன்மையானது சர்வசம் சாரசம்பந்த சுகங்களையும் பாரமார்த்திக சுகத்தையும் கரத்தினின்றும் நழுவுமாறு செய்துகொண்டிருக்கின்றபடியால் இரண்டுமற்றவனாக இருக்கின்றேன். நிலையாமலு நிலைத்துமிருக்குமாறுள்ளே ஆன்மதத்துவ நிச்சயப்பற்றுக்கோட்டால் அஃதற்றவனாகி அவ்வான்மதத்துவ நிச்சயத்திற் சமுசயமேயுடையவனாகி எனது மதியானது, வெட்டப்பட்ட விருக்ஷத்தின் கட்டையால் பெருமிருட்டில் இது கட்டையா கள்வனா வென்னும் உண்மையின்மைப்பக்கமிரண்டாற் சலிக்கப்பட்டும் சலிக்கப்படாமலு மிருக்கின்ற சமுசயஹேதுவினாலே புத்தியானது துன்புறுவதேபோல இது தத்துவமா அல்லது இது அதத்துவமா என்னும் ஐயத்தாற் றுன்புறுகின்றது. கூறியவடிவமாய் எனது மதியானது தோஷதர்சன ஜன்னிய வைராக்கியதிடத்தான் ஐயமின்றி இராகாதிகளெல்லா மகன்றுமைய நீங்காமையின் மூலாஞ்ஞானங் கெடாமையானே வாசனையைக்கிளப்புமேதுவிருத்தலினாலே வெட்டுப்பட்ட விருக்ஷம் மூலங்கெடாமையின் மீண்டு முளைக்கும் வாயிலாய்த்துன்புறுத்த விரிவதேபோல விரிந்துகொண்டேயிருக்கின்றது. அமரர்கள் சம்பிரமத்தோடு எங்குஞ்சுற்றும் நானாபோகசாமக்கிரிகணிறைந்த தங்கள் விமானத்தை விடாததேபோலச் சுயமாகவே சஞ்சலமும் நானாபோகவாசனையால் விஸ்தீர்ணமும், ஆகிய சித்தம் புவனத்துளெங்குந் திரிதலானே திடமாகப் பயின்ற சஞ்சலத்தோடுகூடியிருத்தலின் பலாத்காரமாக நிறுத்தியபோதினும் தத்துவஞானப் பற்றின்மையினானே சஞ்சலத்தை விடுவதேகிடையாது. ஆதலின், பரமார்த்த சத்தியமும், ஜன்மமரண ஆயாசமற்றதும், தேகாதியுபாதி சூனியமும், மயக்கஹேதுநீங்கியிருத்தலின் மயக்கமில்லாததும், இளைப்பாறுமிடமும், அடைந்தவர்க்கென்றுமே சோகத்தையுண்டாக்காததும் ஆகிய அத்தகையபதமியாது? சர்வகாரியங்களையும் நன்கு தொடங்கினவர்களாகி யெம்மனோரைப்போலவே சர்வதிருஷ்ட அதிருஷ்டபலங்களைத் தருமாறுமுடித்து அவற்றிற்கனுகூலமாய இலௌகிக வைதிகவிவகார தத்பரர்களாயே நின்றும் நல்லோர்களாகிய ஜனகாதியர் எவ்வாறு உத்தமோத்தமத் தன்மையையடைந்தனர். புருடனானவன் அங்கங்களில் அறம்பாவ சோகமோகாதிகளாய சமுசாரச்சேற்றினாலே மிகுதியாகப் பூசப்பட்டபோதினும் எவ்வாறு பற்றுறாதவனாயெவருமிகப் பூசிக்குமாறுலாவுகின்றனன். இவ்வுலகின்கண்ணே கல்மஷங்கள் யாவுமின்றி மகான்களாய் மகாகம்பீரமனத்தோடு கூடியவர்களாய் ஜீவன்முக்தர்களாய், எவ்வினியதிருஷ்டியை நன்கடைந்து தாங்கள் உலவுகின்றீர்கள். விடயவேடந்தரித்த சர்ப்பங்கள், அழிவாகிய கோணலுற்ற வுருவையுடையனவாயும், செல்வமாகிய விடமிகுத்தனவாயும், பயத்தின்பொருட்டே ஆசையுண்டாக்கிக்கொண்டும் இருத்தவின் மங்கலவடிவங்கள் எங்ஙனமாகும். மோகமாகிய மதயானையாற் கலக்கப்பட்டும், காமாதிசேறுபாசிகளால் நிறைக்கப்பட்டும், இருக்கும் பிரஞ்ஞையாகிய பெருந்தடாகமானது, மேன்மையான பிரசாதமாகிய தெளிவை எவ்வாறடையும்? சமுசாரமாகிய பிரவாகத்தில் அறிஞர்கள் விவகரித்தபோதினும் தாமரை

யிலையில் நீரானது பற்றுததேபோல எவ்வாறு பந்தத்தையடையாமலிருக்கின்ருர்கள்? பரதுக்கங்களைப்பார்த்துத் தங்களுடையனபோலவுமதங்கள் துக்கங்களைத் துரும்பேபோலவுங்கண்டு, இவ்வெல்லாவுலகையும் உட்பார்வையானே ஆன்மாவைப்போலவும் வெளிப்பார்வையானே துரும்பேபோலவுங்கண்டு, மனமானது காமாதிவிருத்திகளையடையாமல், அறிஞர்உத்தமோத்தமத்தன்மையையெவ்வாறடைகின்றனர்? அஞ்ஞானமாகிய பெருங்கடலின் கரையையடைந்த எந்தஜீவன்முக்தபுருடனைச் சரித்திரத்தானினைந்து நினைந்து அவ்வாறேயொழுகி ஜனங்கள் துக்கத்தையடையாமலிருப்பார்கள்? அழியாமையாற் பற்றத்தக்கதாய மோக்ஷமென்பது யாது? தக்கதாய கரும உபாசனுதிகளின் பலமியாது? ஒருகாலுமின்றிய இச்சம்சாரத்தில் எங்ஙனமிருந்துகொண்டிருத்தல்வேண்டும்? விவஸ்தையற்றதும் விடமஸ்திதியுற்றதும், தாதாவாலுண்டாக்கப்பட்டதும் ஆகிய உலகத்தினுடைய ஆதியிலும் அந்தத்திலும் சேடித்துநின்ற வஸ்துவை யெந்தவுபதேசத்தால் யானறிவேனே அந்தத்தத்துவஉபதேசத்தைச் செய்தருளவேண்டும். இருதய ஆகாசத்திலிலங்கிக்கொண்டிருக்கும் இந்துவாகிய சித்தினதுபோலியோடுகூடிய அந்தக்கரணத்தினது அஞ்ஞான நீக்கமானது இடையூறின்றி எனக்குண்டாகுமாறுபதேசித் தருளவேண்டும். இச்சகத்திற் கொள்ளத்தக்கதியாது? தள்ளத்தக்கதியாது? கொள்ளவும் தள்ளவுந்தகாததுயாது? சஞ்சலமாகிய மனதானது பர்வதம்போல அசையாமல் இளைப்பாறுதலை யெவ்வாறடையும்? அநேகங்கோடி ஆயாசங்களை யாற்றுவதாகிய கெட்டசமுசாரமாகிய விடூசிகை (விஷபேதி) யானது, நோய்கட்கு மூலமாய பாவங்களைப் போக்குதல் வாயிலானேயும் கெட்டகாற்றைக் கெடுக்குமேதுவாதலினுனேயும், பவித்திரமாய எம்மந்திரத்தானே ஆயாசமில்லாமலே சாந்தியையடையும்? ஆனந்த தருவின்பூங்கொத்தேபோன்றதும், தேசகால வஸ்து பரிச்சேதமற்ற பூரணமும், ஆகிய உட்சீதளத்தைப் பூர்ணசந்திரன்போல எவ்வாறு யானடைவேன்? உள்ளே பூரணத்தன்மையைப்பெற்ற பூரணுகி மீண்டுமெவ்வாறு சோகிக்காமலிருப்பேனே அவ்வாறு அடியேனுக்குத் தத்துவத்தையுணர்ந்த சாதுக்களாகிய தாங்கள் இப்போதிங்குபதேசிப்பீர்களாக; அற்பஜீவனேடு கூடிய தேகத்தை வனத்தில் சுவானங்கள் பிடுங்கித்தின்பனபோல உத்தமோத்தம ஆனந்தபதத்தில் அத்தியந்தம் நிலைபெற்று இளைப்பாறுத என்னை எப்போதும் ஈண்டுள்ள விகற்பங்கள் மிகவும் துன்புறுத்துகின்றன.

30-வது பயன்பகரல் முற்றிற்று.

---

## 31-வது இராகவர் வினுதல்.

இப்போது, சம்சாரத்தில் ஜீவித்தல் மழைகாலத்தில் பெருங்காட்டிலுள்ள துர்ஜீவனத்திற்கொப்பாம் என்பதுடன், எதனுற் சௌக்கியத்தையடையலாமோ அவ்வுபாயத்தை வினுதலும் வருணிக்கப்படும்:—இனி வினவவேண்டிய வினுக்கட்கு அடிப்பீடமாக இச்சமுசாரத்தில் வாழ்வதை மழையோடுகூடிய காடாக ஸ்ரீ இராகவர், கற்பிக்கத்தொடங்கல், மிகவுமுயர்ந்த தருவினுடைய அசைந்துகொண்டிருக்கும் இலையிற்றெங்காநின்ற நீர்த்துளியைப்போல

அழியும் நிலையை ஆயுளடைந்து (இதுபனிக்காலத்திலிருந்தபோதினும் மழையில் தாரையாய் விழுதலின் அதிவிரைவிலழியுமென்பது விசேடமாய்க்காண்க) பரமசிவனுடைய பூஷணமாகிய சந்திரன் கலையான்மாத்திர மெஞ்சுவதேபோல மிக அற்பமாயறியமுடியாமலேகுங்கால், (மழையில் மதியைக்காண்பதே முடியாதகாரியம் அதிலுங் கலைமாத்திரம் சேடித்ததைக்காணவே முடியாததாகும்) தேகமானது கெட்டுப்போயற்பமாகுங்கால், வயல்களிற் கத்தாகின்ற தவளைகளின் கண்டத்தோலினதுமத்தியபாகத்தைப்போலத் தேகம் அழியுங்கால், நேயர்கள் ஆப்தவுறவினர்களின் சங்கமமேயாய, நற்கதிமார்க்கத்தைத் தடுக்கும்படியான வலையைப்போல நெருங்கிய கொடிக்கூட்டம் ஜந்துக்களைச் சுற்றிக்கொள்ளுங்கால், வாசனையாகிய கீழ்க்காற்றுச்சுற்றி, துராசையாகிய மின்னன்மின்னிக்கொண்டிருக்கும்படியான மோகமாகின்ற உக்கிரமான பனிமேகமென்னும் மேகத்தின் ஆரம்ப அவஸ்தையானது நிரந்தரம் சாமானியமாகவும் இடிவிழும்படியாகவும் கர்ஜிக்குங்கால், தீவிரமுஞ்சஞ்சலமுமாகிய லோபமயிலானது உயரக்கிளம்பிக்கிளம்பிக்கூத்தாடுங்கால், அநர்த்தமாகிய மல்லிகையானது கலகமாகியமொக்குகள் விரிந்து மலருங்கால், சர்வப்பிராணியெலிகளையும் விழுங்கும் குரூரத்தோடுகூடிய மழைகாலத்தில் அநேக ஜந்துக்களாகிய பக்ஷணஞ்செய்தலாற் பிரசித்தபல அதிசயத்தோடுகூடிய காலனும்பூனையானது இளைப்பாறுதலின்றிய ஜலப்பிரவாகம்போன்ற சஞ்சாரமுடையதாய்ப் பூமியிலிருந்தோ ஆகாயத்திலிருந்தோ மற்றெங்கிருந்தோ தீவிரமாக மேலேவந்து விழும்போது, ஆரண்யத்திலுண்டாம் காற்றுமழைமுதலிய நீக்குவதில் குடைதிரைபாய்முதலிய உபாயமிருப்பனபோல என்னவுபாயமுளது, இரசகுளிகைமருந்தின் பூச்சு முதலியவற்றானே விரைவாக மழையின்மை தூரசேங்கதியாவதேபோல என்னகதியுளது, சங்கடத்தினின்றும் நன்குகடத்தும்மந்திரர் தேவதைமுதலியவை சிந்தையாவனபோல என்னசிந்தையுளது; கிரிகுகைமுதலியவை நல்லபற்றுக்கோடாவனபோல என்னபற்றுக்கோடுளது; உலகத்திற் பிரசித்தசாதனங்களிருப்பனபோல எண்டும் வேண்டுமே, அசுபமாகிய உத்தரகால பலத்தைத்தருவதாக வாழ்வாகிய வனஞ்செய்யாமலிருப்பது எதனுன்முடியும்? தவம் ஞானம் சக்தியென்பவற்றானே யூர்ஜிதமாய மதியையுடைய தங்களைப்போன்றவர்கள் அதிஅச்சமாய்க் கெட்டுப்போன எவ்வத்துவை இரம்மியமாகச்செய்யமாட்டீர்களோ (செய்யஅசமர்த்தர்களாவீர்களோ) அத்தகைய இதுபிருதிவியில் மனிடர்களிடத்தேனும், சுவர்க்கத்தில் தேவர்களிடத்தேனும் இல்லை, தங்களுடைய தயையினால் திரிசங்குவிற்கு அத்தகைய குருவினுடைய சாபமும் கற்பபரியந்தம் போகிக்கும் சுவர்க்கமாகப் பரிணமித்தது, சுனசேபனுடைய மிருத்தியுவுந் தீர்க்காயுளாக முடிந்தது. இந்த வெந்த சம்சாரமானது நிரந்தரம் துக்கசிந்தையினாலேயே ஆகுலத்தையடைந்திருக்கின்றது அதனாலேயே இரசமற்றதாயிருக்கின்றது மூடத்தன்மையைவிடும்வாயிலா யெவ்வாறுயவுபாயத்தானே நல்லசுவாதுடையதாகும். வசுந்தரையானது வசந்தகாலத்தில் வாசமலர்களால் வனப்படைந்திருப்பதேபோலச் சம்சாரமானது சர்வதுக்ககாரணமாய ஆசைக்கு இயற்கையாகவே விரோதியாயெழாகின்ற பூர்ணகாமத்தன்மையாகிய பால்ஸ்நாகத்

தையெப்போதடையும். காமத்தாற் களங்கத்தையடைந்த மனமாகிய சந்திரனிடத்தினின்றும் வித்வதனுபவப்பிரசித்தமாய எத்தூய்தாக்கலானே காமாதிமலங்களெல்லாம் நீங்கி அமுதப்பிரகாசமாகிய மகிழ்வைத்தருஞ் சந்திரிகையுண்டாகும்? சமுசாரவனவீதிகளில், சமுசாரத்தின் கதியானது அநர்த்தத்தையே முடிவாகவுடையது எனக் கண்டவரும் இகபரபோகங்களில் விவேகவைராக்கியபோததிடத்தினலே அத்தியர்தம் விருப்பில்லாதவரும் ஆகிய எம்மகாபுருடரைப்போல யாங்கள் விவகரிக்கவேண்டியதோ அதைத் தாங்கள் கூறவேண்டும். சம்சாரத்திற் சஞ்சரித்துக் கொண்டிராநின்ற சந்துக்களை இராகத்துவேஷ மகாரோகங்களும்போகக் கூட்டங்களும் தனங்களும் எங்ஙனம்பாதைசெய்யாமலிருக்கும்? ஹே தீரர்களுக்குள் சிரேஷ்டரே! மூலிகைரசத்தோடுகூடிய இரசமானது அக்கினியிற்றகிக்கப்படாததேபோல அக்கினியைப்போற்றகிக்குஞ் சம்சாரத்தில் விழுந்துகிடந்தபோதினும் எந்த ஞானமுதரசமேய்தலால் எங்ஙன்றகிக்கப்படாமலிருக்கமுடியும்? விவகாரந் துக்கமாயின் விட்டுவிடலாமேயெனின்? கடலிலுண்டாகிய மீன்முதலியவற்றிற்கு நீரில்லாமல் நிலைபேறில்லாததேபோல, இவ்வுலகத்திலிருப்பவர்க்கும் விவகாரத்தொழிற்செய்யாமலிருக்கமுடியாது. கெட்டவிவகாரத்திற்றனே துயரம் உண்டாகின்றது நற்றொழிற்செய்பினே அவ்வாறில்லையல்லவாவெனின்? தாகமற்றிருக்கும் அக்கினிச்சுவாலையானது இல்லாததேபோல ஈண்டு இராகத்வேஷமற்றதும் சுகதுக்கம் நீங்கியதும் ஆகிய நற்றொழிற்கிடையாது பாகியத்தில் நல்லவிவகாரமிருந்தாலிருக்குக; மனதினுடைய சஞ்சலமானது மகா துக்கமாயிருத்தலால், அதனுடைய சிகிச்சையை யருளவேண்டும். மனத்தினது விடயத்தைப் பற்றுதலாகிய இயற்கையாஞ் சத்தையின் விடயப்பற்றுதலை விடுதலாகிய க்ஷயம் இம்மூன்றுலகினும் சர்வ விடயங்களையும்பாதிக்கும் தத்துவபோதஹேதுயுக்தி யுபதேசமில்லாமலாவதில்லையாதலின், அந்த உத்தமமான யுக்தியைப் போதவுதயமுண்டாகும்வரையும் உபதேசித்தருளவேண்டும். விவகாரத்தோடு கூடியிருந்தபோதினும் கூடாமலிருந்தபோதினும் எந்தயுக்தியினுல் எனக்குத் துயரம்வரமாட்டாதோ அந்த உத்தமமான யுக்தியைக் கூறியருளவேண்டும். மேன்மையும் பவித்திரமுமாய மனமானது எதனுல் இளைப்பாறுதலையடையுமோ, அந்தயுக்தியால் மோகநீக்கமானது எவ்வுத்தமசித்தமுடையவனுல் முன்னெவ்வகையாற் செய்யப்பட்டது அதனுலெதனை யடைந்தான் இவ்வுண்மையைத் தாங்களறிந்தபிரகார முபதேசித்தருளவேண்டும். எதனுற் சாதுக்கள் துக்கமே சிறிதுமில்லாமலுலவுகின்றுர்களோ அதனைத் திருவருள் செய்யவேண்டும். அத்தகைய யுக்தியானவை கிடையாவிடின், எனது தேகத்தியாகபரியந்தம் பிராயோபவேசனத்தையே (பிராணனீங்கும்வரையுண்ணமற் றர்ப்பாசனத்திற் சயனித்தலையே) செய்வேனன்றி ஜீவன விவகாராதிகளைச் செய்யமாட்டேன். மேற்கூறிய யுக்தி யாதொன்றுமிராவிடின், அத்தகையதிருந்தபோதினும் வெளிப்படையாக எனக்குபதேசியாதிருப்பின், அவ்வுத்தமோத்தமமாகிய விசிராந்திபதத்தை யானே விசாரித்தேனும் அடையாமற் போவேனுயின், பின் யான் சருவ இச்சைகளையும் அகங்காரத்தையுமொழித்து உண்ணேன்; நீருங்குடியேன்; வத்திரமுந்தரியேன்; ஸ்நானதான அசனமுதலிய எந்தத்தொழிலையுஞ்செய்யேன்; எக்காரியங்களினுமிரேன்; சம்பத்து ஆபத்துத்தசைகளினுமிரேன்; தேகம்

விடுவதையொன்றையன்றி யொன்றையும் வாஞ்சிக்கவேமாட்டேன். கேவலம் யாதொரு ஆசங்கையுமற்றவனுகி மமதைமற்சராதிகளற்றவனுய்ச் சித்திரக்கிரியைகளாற் பித்தியிலர்ப்பிக்கப்பெற்ற ஓவியம்போல வாக்கு முதலிய சர்வவிவகாரங்களையும் விட்டிருப்பேன், பின்முறையே மூச்சுவிடுதல் வாங்குதல் சத்தாதிஞானங்களைவிடுத்து, அவயவச்சேர்க்கை வடிவமாயிராநின்ற இவ்வநர்த்தமாகிய தேகத்தைவிட்டொழிப்பேன், யானிதனுடையவனுமல்லேன் என்னுடையது மிஃதல்ல, அன்னியரும் எனக்கில்லையாதலின், தைலந்தீர்ந்த தீபமேபோலச் சாந்தியையடைவேன்; யாவற்றையுமே பரித்தியாகித்து இக்களேவரத்தைவிட்டொழிப்பேன். ஸ்ரீவான்மீகிமுனிவர் கூறல்:—ஹே குழந்தாய்! இவ்வண்ணம் மகத்தினும்மகத்தாகிய விசாரத்தானே மலர்ந்தமனத்தையுடையவரும் அமல சீதள அமுதகிரணமதிபோன்றழகுவாய்ந்தவருமாகிய ஸ்ரீ இரகுநந்தனர் இயம்பிக்கேகாரவத்தைச்செய்துகொண்டிருந்த மயூரமானது மேகங்களின் முன்பாகச் சிரமவசத்தால் மவுனமடைந்திருந்ததேபோலத் தேசிகோத்தமர்களாகிய ஸ்ரீவசிஷ்டமுனிவர் முதலிய பெரியோர்கள் சந்நிதியில் மவுனமாக இருந்தனர்.

31 - வது ஸ்ரீ இராகவர் வினுதல் முற்றிற்று.

---

## 32 - வது வானவர்மலர்மாரி மொழிமாரிகள்.

இப்போது, ஸ்ரீ இராமரது திருமொழிகளை யிருசெவி குளிரக்கேட்டமானவர்வானவர்களுடைய அளவுகடந்த ஆச்சரியமும் ஆகாயத்திலிருந்துவிழும் புஷ்பமாரியும் வருணிக்கப்படும்:—தமது விவேக நல்விசாரமூலமாயிராநின்ற இந்த ஸ்ரீ இராமரது வாக்கியாமிருதங்கள் தாமாகவிசாரஞ்செய்யுமாற்றலில்லாத முமுக்ஷுக்கட்கு உபதேசரூபமாயிருத்தலின், ஆதாவப்யாசங்களால் உயர்வாகக் கவரத்தக்கதெனக் குறிப்பிக்கும்பொருட்டுப் புகழ்பவராய் "அவர்மேலினும்வாதாரயணரன்[illegible]லின்" (மனுடர்கட்கும் மேலாயதேவதைகட்கும்பிரஹ்மவித்தையின்கண்ணே அதிகாரமுளதென வாதராயண ஆசாரியர் அங்கீகரித்தலின்) என்னும் நியாயசித்தமாய தேவதைகட்கும் கூறப்படும் பிரஹ்மவித்தையதிகாரத்தைத் தரிசிப்பிக்கும்பொருட்டு அவர்கள்செய்த ஸ்ரீ இராமவாக்கியப் புகழ்ச்சியையும், அவர்கள் வருகையின் மகோற்சவத்தையும் வருணிக்கும்பொருட்டு ஸ்ரீ வான்மீகிமுனிவர் தொடங்கல்:—ஹே மைந்த! இவ்வாறு மனோமோகத்தை நீக்கத் தக்கதாய திருமொழிகளைத் தாமரையிதழ்போலும் விழிகளையுடைய இராஜகுமாரராகிய ஸ்ரீ இராமர் கூறியபோது, அச்சபையின்கண்ணிருந்த யாவரும், விஸ்மயத்தால் விரிந்த விழிகளையுடையவராகவும், ஸ்ரீ இராமபிரானது வாக்கியாமிருதத்தைக் கேட்கவேண்டுமென்று ஜாட்டியத்தைக் கடத்தியெழுந்து வத்திரத்தைத் துளைத்து வெளியே யெட்டிப்பார்க்கும் மயிர்க்கூச்செறிதலையுடையவராகலின், பிறல் ஆடையையுடையவராகவும், வைராக்கியவாசனையினாலே சமஸ்த சமுசார காரணங்களாய இராகத்வேஷாதி வாசனைகளையும் நீக்கினவர்களாகவும், ஒருமுகூர்த்தபரியந்தம் அமிருதசாகர அலையால் அலைவிக்கப்பட்டவர்கள்போலவும் ஆனார்கள். சித்திரத்தமைத்த பதுமையேபோலக் கேட்குஞ் சமர்த்துடையோர், ஆனந்தத்தைக் குறிப்பிடுவதாகப்

பூரித்து ஸ்ரீ இராமபத்திரருடைய திருமொழியை யினிமையாகக் கேட்டனர்:— ஸ்ரீவசிஷ்ட விசுவாமித்திர மகாமுனிவர்களுடன் அச்சபையிலிருந்த ஜயந்தன் திருஷ்டி முதலிய இரகசிய ஆலோசனையிற் றெளிவுபெற்றமந்திரிமார்களாலும், தசரதர் முதலிய மன்னவர்களாலும், புரவாசிகளாலும், பாரிசுஆதிதேசவிசேஷங்களின் மன்னவர்களாலும், சாமந்தர்களாலும், இராஜகுமாரர்களாலும், பிராஹ்மணர்களாலும், பிரஹ்மவாதிகளாலும், வேலைக்காரர்களாலும், ஆமாத்தியர்களாலும், கூண்டின்மௌனமாயிருக்கும் பக்ஷிகளாலும், அசையாமலிருக்கும் விளையாட்டு மிருகங்களாலும், கனைக்காமலிருக்குங் குதிரைகளாலும், தங்கள் பலகணிகளிலிருந்த கௌசலை முதலியதாய்மார்களாலும், தங்கள் பூஷணங்களின் அரவத்தைச் செய்யாமலும் அசையாமலுமிருந்த மங்கைமாராலும், உத்யானக் கொடிவீட்டுகளிலும், மேல்வீட்டிற் புறவைக்காக்கவைத்த பாலிகைகளிலும் சப்தஞ்செய்யாமலும் இறகுகளையடிக்காமலும் ஒரேநிலையாயிருந்த பக்ஷிகளாலும், விண்ணிலுலவாநின்ற சித்தர்களாலும் கந்தர்வ கின்னரர்களாலும், ஸ்ரீ நாரதவியாசபுலகாதி முனிபுங்கவர்களாலும், தேவர்களாலும், திக்குப்பாலகர்களாலும், வித்தியாதரர்களாலும், மகாஉரகர்களாலும், மற்றும்பிறராலும், ஸ்ரீராமருடைய விசித்திரப்பொருணிறைந்த மகாஉதாரமான திருவாக்கானது கேட்கப்பட்டது. இரகுகுலமாகிய ஆகாயத்திற்குப் பூரணசந்திரரும் பூரணசந்திரர்போல மிகச்சுந்தரரும், தாமரையிதழ் போன்ற நேத்திரத்தையுடையவரும் ஆகிய ஸ்ரீ இராமர் மவுனமாயிருந்தபோது, நன்று நன்று என்னுஞ்சொல்லோடு முமுக்ஷுக்களாகிய சித்தாதிதேவகணங்களியாவருமிறைத்த மலர்மாரியானது விண்ணினின்றும் மேற்கட்டிபோல விழுந்துகொண்டேயிருந்தன. அம்மலர் மாரியானவை மந்தாரமொட்டில் விசிராந்தியுற்றிருந்த வண்டினங்களிரண்டின்ரீங்காரத்தொனியோடு கூடினவும், மாதுர்யம், மணம், அழகு முதலியவற்றுனே மனுடர்களை மகிழ்வித்துப் பாவசப்படுத்துவனவும், நக்ஷத்திரக் கணங்களை விண்ணினின்றும் காற்றானது உகிர்த்துக்கொண்டிருப்பதைப் போன்றனவும், அமரமங்கையாது நகைப்பின் காந்தியானது தரையாகிய பீடத்தில் விழுந்துகொண்டிருப்பனபோன்றனவும், பெய்துகொண்டும் கர்ச்சனையின்றி மின்னல்களால் மின்னிக்கொண்டுமிருக்கும் மேகங்களின் லேசசமூகங்கள் விழுவன போன்றனவும், வெண்ணைக்கட்டிகளின் கூட்டங்களை யிறைத்ததுபோன்றனவும், மிகமிகப் பனிக்கட்டிகளின் மாரிபெய்வதுபோன்றனவும், முத்துமாலைகளின் கூட்டங்கள் வீழ்தல்போன்றனவும், இந்துவின் காந்திமாலைபோன்றனவும், பாற்கடலலைகளின் பரம்பரைபோன்றனவும்; கேசரங்களைமிகுதியாகவுடையதாமரைகணிறைந்தனவும், சுழலாநின்றவண்டின் கூட்டங்கணிறைந்தனவும், ஜனங்களின் பரிசசுக அபிநயமாகிய சித்காரத்தொனிகளாற் பாடுவனவும், மெதுவான இன்பப்பரிச மதுரக்காற்றினாலே சிறிதுஅசைக்கப்பெற்றனவும், சுழலாநின்ற தாழைக்கூட்டம் நிறைந்தனவும், விளங்காநின்ற வெள்ளாம்பற்குவியல்களோடுற்றனவும், வீழாநின்ற குருந்தமலர்களோடு கூடினவும், அசையாநின்ற நெய்தன்மலரின் ஆலயம்போன்றனவும்; வீட்டங்கண பூமிகளைநிறைத்து மதுரசம்பொழிவனவும், விரைவில் வீடுகளையுமிறப்புகளையும் மறைப்பனவும், புரவாசிகளாகிய ஆடவரும் மங்கையரும் நிமிர்ந்து கழுத்தையுயர்த்திப் பார்த்தபடியே யிருக்கச்செய்வனவும், மேகங்களற்றதனுனே

நீலோற்பலம்போலப் பிரகாசிக்கும் விண்ணினின்றும்நெருங்கி யாகுலப்படுத்தாமற் பெய்யப்பெறுவனவும், என்றுங் கண்டறியப்படாதனவும், எல்லாஜனங்கட்கும் ஆச்சரியத்தைவிளைவிப்பனவும், காணப்பெறுமல் விண்ணினிற்குஞ் சித்தர்கூட்டங்களின் கரக்கூட்டங்களினின்றும் இறைக்கப்படுவனவும் ஆகியிருந்தன, அம்மலர்மாரியானவை அற்புதமாக அரைநாழிகைவரை பெய்தன. அம்மலர்மாரியானவை அச்சபையையும் அங்கிருந்த யாவரையும் நிறைத்துச்சாந்தியானபின், அச்சபையிலிருந்த யாவரும் இச்சித்த கணங்களின் இவ்வாக்கியங்களைக் கேட்டனர்:—சித்தசேனைகளுள்ளே சுவர்க்கத்தினுடைய எல்லா இடங்களிலும் கற்பமுடியும்வரை சுற்றிக்கொண்டு திரியும் நம்மனோரால் அபூர்வமாகிய இச்செவிக்கமுதான வேதசாரம் கேட்கப்பட்டது. இரகுகுலநிலவாகிய இந்த ஸ்ரீராமரால் யாதுதாரமாக வைராக்கியத்தோடுங் கூறப்பட்டதோ அது பிருகற்பதிக்கும் விளங்காதபொருளுடையதேயாம். மதிமான்கட்கு மகத்தாகிய மகிழ்வை மலர்விப்பதும்; ஸ்ரீராமரது முகாம்புஜத்தினின்று மெழுந்ததும் ஆகிய இத்திருமொழியை யின்றுகேட்டோம் ஆச்சரியம்! ஆச்சரியம்!! நாம் என்னமகத்தாய புண்ணியஞ் செய்தோமோ தெரியவில்லை. அந்தோ! இத்தகைய வாக்கியத்தைக்கேளாத சென்மம் என்னசென்மம் வீணேயன்றோ ஆம். ஜாதிகுல ஆசாரதரும ஞானமுதலியவற்றானே யடைந்திருக்கும் மிகமேன்மைக்குப் பெரும்பயனை நல்கிக்காக்குமிலக்கணம் வாய்ந்ததும், மிகயோக்கியமானதும், உபசாந்தியமிருதம்பொழியுமழகுவாய்ந்ததும் ஆகிய ஸ்ரீ இராமர் ஆதரவோடு கூடியுரைத்த இத்திருவாக்கால் விரைவில் யாங்கள் சுவர்க்காதிசுகங்கள் யாவும் சாரமற்றனவென அறிந்தோம்.

32 - வது வானவர் மலர்மாரிமொழிமாரிகள் முற்றிற்று.

---

### 33—வது விண்ணவரும் மண்ணவரும் விரவல்.

இப்போது, சபையிற் சித்தர்கள் வருகையும், தக்கவாறு வீற்றிருந்த அவர்களால் ஸ்ரீராமர் திருமொழி புகழப்படுதலும் வருணிக்கப்படும்:—ஸ்ரீவான்மீகிபகவான், சித்தர்களானே செய்யப்பட்ட ஸ்ரீராம வாக்கியாதியின் புகழையே மகிமைப்படுத்திக்கொண்டு, வினவியதிற்கு நிர்ணயமாகு முத்தரத்தைக்கேட்குமவாவுடையராய அவர்களது சபைப்பிரவேசமுதலியவற்றை வருணிக்கும்பொருட்டுத் தொடங்குகின்றார்:—இரகுவம்சத்தைப் பிரகாசிப்பிக்கும் கேதுவாகியஸ்ரீ இராமராற் கூறப்பட்ட அதிபவித்திரமாகிய இவ்வாக்கினதுத்தரமாக மகரிஷிகளாற் கூறப்படும் தக்க நிர்ணயம் கேட்கத்தக்கதாதலின்நாரதர் வியாசர் புளகர் முதலிய முனிபுங்கவர்களே சர்வ மகரிஷிகளே விரைவில் விக்கினமின்றிக் கேட்பான் வாருங்கள்! 'சிறந்தவை தடைகள் செறிந்தனமிகவே' என்பதால் காலதாமதமாக்காதீர்கள். சம்பத்தால் இடையீடில்லாமல் நிறைந்ததும் அதனானேயே கனகங்களால் ஓங்கியொளிவிட்டுக் கொண்டிருப்பதுமான, இந்தப் புண்யமயமாய தசரதரது சபையின் சுற்றிலும், கேசரப்பிரகாசத்தாற் கனகங்களாற் போற்பிரகாசித்துக்கொண்டிருக்கும் பத்மத்தில் வண்டுகளிறங்குவதுபோல இறங்குவோம் என அச்சித்தர்கள் கூறக்கேட்ட விண்ணேவாசஸ்தானமாகவுடைய அவ்விமானங்களிலிருக்கும் திவ்ய முனிக்கூட்

டம்யாவுமே விஸ்தீர்ணமாய அச்சபையின்கண்ணே ஸ்ரீ இராமர் முதலியோரிருந்த இடத்தில் இறங்கினர். அந்த முனிவர் கூட்டம், மீட்டாமலே யெப்போதுங் கானஞ் செய்யும் வீணையைக் கையிற்றாங்கிய நாரதமுனீசுரரையும், நீருண்டு கறுத்துப் பருத்தமேகம்போல நீலமாகிய வியாசபகவானையுமே முன்னிலையிலுடைத்தாகியும், அவ்விருவர் நடுவில் பிருகு அங்கிரர் புலஸ்தியர்முதலிய முநிநாயகர்களாலலங் கரிக்கப்பட்டும், சியவனர் உத்தாலகர் உசீரர் சரலோமர்முதலியோரானே சூழப் பெற்றும், பரஸ்பரம் நெருக்கத்தான் உரசலானே படபடவென்னும் மான்றோல்க ணிறைக்கப்பெற்றும், அசைந்துகொண்டிராநின்ற ருத்ராக்ஷபடிக மணிமாலைக ணிறைக்கப்பெற்றும், அழகிய கமண்டலங்களைத்தாங்கியும், ஆகாயத்தில் நக்ஷத் திரமாலைபோல வெண்சிவப்பாய தேஜசால் விரிக்கப்பெற்றும், சூரியர் மாலைபோல அன்னியோன்னியம் பிரகாசியாநின்ற வதனங்களாலலங்கரிக்கப்பட்டும், இரத்தின மாலைபோல அன்னியோன்னியம் நானாவர்ணங்களாலாய வடிவங்கணிறைந்தும், முத்துமாலைகள்போல அன்னியோன்னியம் மிகுந்த ஆச்சரியமான சோபைசெய் யப்பட்டும் பிரசித்தமானதற்கு விலக்ஷணமான சந்திரகாந்திமாரி பெய்வதுபோன் றும், இரண்டாவதேதோ சூரியமண்டல மிலங்குவதுபோன்றும், நெடுநாளாக ஓரி டத்திற்சேர்த்திவைத்திருந்த பூர்ணசந்திர பரம்பரைபோன்று மிருந்தது; நக்ஷத் திரக்கூட்டங்களுள்ளே மேகம்போல வியாசர் ஓரிடத்திற் பிரகாசிக்கின்றார், உடுக் கணங்களுள்ளே பூர்ணசந்திரன்போல நாரதர் ஒரு பக்கம் பிரகாசிக்கின்றார், தேவர்களுக்குள் இந்திரர்போலப் புலஸ்தியர் ஒரு பக்கம் பிரகாசிக்கின்றார், தேவர் களுக்குள் ஆதித்தியன்போல அங்கிரா ஒருபக்கம் இலங்குகின்றார். இச்சித்த சேனையானது பின் ஆகாயத்தினின்றும் பூமியிலிறங்கும்போது மகாமுனிவர்க ணிறைந்த தசரதருடைய பெருஞ்சபையானது எழுந்தது, விண்ணவரும் மண்ண வரும் கலந்தவராய்ப் பரஸ்பரம் கலந்ததேககாந்திகளானே பத்துத்திசையையும் ஒளிர்வித்து விளங்கினர். மூங்கிற்றண்டைத்தரித்த கரத்தர் சிலரும், லீலைக்கமல மலரை மலர்க்கரங்கொண்டவர் சிலரும், அறுகின் அங்குரங்களைச் சிரஞ்சேர்த்தவர் சிலரும், சூடாமணியோடு கூடியிலங்குஞ் சிகையினர் சிலரும், கருமைகலந்த பொன் னிறம் வாய்ந்த ஜடைதரித்தவர் சிலரும், சிகையுச்சியில் மாலைசுற்றிய சிரத்தினர் சிலரும், கணுக்கரங்களிற் கண்டிகைகட்டியர் சிலரும், மல்லிகைவலயம் வாய்ந்தவர் சிலரும், சீரவற்கலை செறிந்தவர் சிலரும், மாலை பட்டுகள் வாய்ந்தவர் சிலரும், அசை யாநின்றமேகலைக் (முஞ்சிப்புற், மான்றோலாலாயபூணூற்) கயிற்றை யணிந்தவர் சிலரும், அசையாநின்ற முத்துமாலைகளாலலங்கரிக்கப்பட்டவர் சிலரும், ஆகியம் முனிவர் விளங்கினர். ஸ்ரீ வசிஷ்டரும் விசுவாமித்திரரும் வந்திறங்கிய எல்லா விண்ணவர் கூட்டத்தையும் முறையே அருக்கியங்களாலும் பாத்தியங்களாலும் நன்மொழிகளாலும் பூசித்தனர். அந்த விண்ணவர் மகாகணங்களும் ஸ்ரீ வசிஷ்ட விசுவாமித்திரரை யாதரவோடும் அருக்கியங்களாலும் பாத்தியங்களாலும் இன் மொழிகளாலும் பூசித்தனர். எல்லா ஆதரவோடுஞ் சித்தர்கூட்டங்களைப் பூபதி யானவர் பூசைசெய்தனர், சித்தர் கூட்டமும் பூபதியைக்குசலம் வினவும் இன் மொழிகளாலும் அக்காலத்துக்கேற்ற கதைகளாலும் மகிழ்வித்தனர். வானவரும் மானவரும், பிரீதிக் குசிதமானதானமானுதிமுயற்சிகளானே பரஸ்பரம் பூசித்துக்

கொண்டு ஆசனங்களிலுட்கார்ந்தனர். முன்பாக நமஸ்கரித்து நின்றுகொண்டிருக்கும் ஸ்ரீ இராமபிரானை, நாற்புறங்களிலும், தக்க கதாலாபமாகிய இன்மொழிகளாலும் புட்பமாரியினாலும் புகழ்தலினாலும், அவர் யாவரும் பூசித்தனர். ஆண்டெழுந்தருளியிருந்த இருடிகண்மத்தியில் இராஜ்யலக்ஷ்மி வீற்றிருக்கும் ஸ்ரீ இராமர் இருந்தனர்; விசுவாமித்திரர் வசிஷ்டர் வாமதேவர் மந்திரிமார்கள் தேவபுத்திரராய நாரதர் முனிபுங்கவராய வியாசர் மரீசி தூர்வாசமுனிவர் அங்கிரசர் கிரது புலஸ்தியர் புளகர் சரலோமமுனீசுரர் வாத்சியாயனர் பரத்வாஜர் வான்மீகி முனிபுங்கவர் உத்தாலகர் இருசீகர் சர்யாதி சியவனர் என்பவர்களும் இன்னும் வேறநேகர்களும்வேத வேதாங்கங்களைக் கரைகண்டவர்களாயும், அவசியம் அறியவேண்டிய ஆன்மதத்துவத்தையறிந்தவர்களாயும் சர்வஞ்ஞராயும் மகான்மாக்களாயும் அவ்விடத்தில் மேன்மையாய நாயகர்களாய் வீற்றிருந்தனர். ஸ்ரீ வசிஷ்ட விசுவாமித்திரர்களோடு கூடியிருந்த விநயத்தால் வணக்கவதனத்தோடுற்ற ஸ்ரீ இராமரைப் பார்த்து ஆசிரியரிடத்தில் விதிப்படி அங்க சகித வேதாத்தியயனஞ்செய்த அந்நாரதாதியிருடியர் இவ்வசனத்தை யியம்புவாராயினர்:— அகோ ஆச்சரியம்! இக்குமாரனால், பதினாறு கல்யாண குணங்களோடு கூடியிலங்கும், பரம உதாரமாகி யழகுவாய்ந்து வைராக்கியரசத்தை வயிற்றிற்றரித்த வாக்கியமானது வழங்கப்பட்டது; விசாரித்து இவ்வாறேயென விவத்தைசெய்யப்பட்டுக் கூறத்தக்க பொருளோடுகூடியதும், கற்பனை மாத்திரையானே விவத்தைசெய்யப்பட்ட பொருளோடு கூடாமல் பதார்த்த தத்வபோதத்தோடுகூடியதும், அதனானே வித்வத்சபைக்குத் தக்கதும், வியக்தமாய வர்ணங்களோடு கூடியதும், மேன்மைதங்கிய அநேகங்கருத்துக்களடங்கியதும், இருதயத்திற்கானந்தத்தைச் செய்வதும், பூச்சியர்கட்குரித்தானதும், சித்தசஞ்சலத்தாலுண்டாயதோடமற்றதும், பொருளால் வெளியானதும், இலக்கணத்தாற் பரிசோதிக்கப்பட்ட பதங்களோடுகூடிப் பிரகாசிப்பதும், இதமானதும், வர்ணலோபமுதலிய குற்றங்களற்றதும், ஆசையழிதலாலுண்டாய மகிழ்ச்சியோடுகூடியதும், ஆகிய ஸ்ரீ இராகவராற் கூறப்பட்ட இம்மொழியானது யாருக்குத்தான் விஸ்மயத்தை யுண்டாக்கமாட்டாது? புகல்பவர்கள் யாவரினும் எல்லா அம்சத்திலும் மேன்மைப்படுத்தி இருதயத்தை மலர்த்திச் சுவைதருமாற்றலுற்றதும் அதனானே கருதியபொருளை புணர்த்துவதில் அத்தியந்தம் நியமமாக ஆற்றலுற்றதும் ஆகிய வாணியானது கூறுஞ்சமர்த்துடைய நூறு முக்கியருண் முக்கியனுக்கே விளக்கமாயுண்டாகின்றது, மற்றயாவருக்குமுண்டாவதில்லை. ஹேகுமார! உன்னையன்றியாவருக்குத் தான், சூக்குமப்பொருளைத் துளைக்கும் உணர்வாகிய பாணக்கொடியானது பிரகாசத்தோடுகூடி விசாரவைராக்கிய மலர்தளிர்களானே விருத்தியுற்று விவேகமாகிய பல நிறைந்ததாய் விரிந்துமேன்மையாயுண்டாம்? இராமருக்கே போல எவனுடைய இருதயத்திலிருக்கும் பிரஞ்ஞையாகிய தீபச்சிகையானது ஒரு பிரகாசத்தையு முவமிக்கமுடியாமலிருக்குமாறு பதார்த்த தத்துவப் பிரகாசத்தைச் செய்வித்தொளிர்கின்றதோ, அத்தியஸ்தமாகிய தேகேந்திரியாதிகளோடு சமமாயிருப்பதினின்றும் பிரித்த ஆன்மாவின் விளக்கஞ்செய்வித் தொளிர்கின்றதோ, அவனே புருடனெனப்படுவன், புருடார்த்த சாமர்த்தியமற்ற மற்றையரோ பெண்கட்குச் சமானமானவரேயாவர். நன்றாகக் கொழுத்திராநின்ற அநேகம் இரத்த

மாம்ச என்புகளாலாய யந்திரங்கள் பதார்த்தங்களை யரைத்துக்கொண்டேயிருக்கின்றன, அவைகளிற் சேதனத்தோடுகூடிய ஜீவன்கள் கிடையா; கூறிய பிரஞ்ஞையில்லாத பிராணிகள் இரத்தாதி யந்திர வடிவதேகான்ம புத்தியோடு கூடியிருத்தலின் அவைகளே சப்தப்பரிசாதி பதார்த்தங்களைப் புசிக்கின்றன, அஃதன்றிச் சேதனமாய ஆன்மாவில்லையெனச் சார்வாகத் தன்மையே அவைகட்குப் பயனுகின்றது; அவைகளில் உணர்வுவடிவ ஆன்மாவிருக்கும்பக்ஷத்தில் அவசியம் புருடார்த்தத்தில் முயலுமல்லவா, முயலாமையானே குடங்குட்டிச் சுவர்கள்போல அசேதனங்களே அவைகளாகும் மிகவும் மோகிக்கப்பட்டவர்களாய் மீண்டு மீண்டும் ஜனனமரண ஜரைத்துக்கத்தை யடைந்துகொண்டே எவர்களிச்சம்சாரத்தை விசாரியாமலே யிருக்கின்றார்களோ அவர்கள் பசுக்களேயாவர்கள் பூர்வாபரவிசாரத்தில் யோக்கியராயும், நின்மல இருதயத்தை யுடையவராயும்; இவ்விராமரைப்போலக் காமாதி சத்துருக்களை ஜயித்தவராயும் பார்க்கவேண்டுமானால் எங்கோவிடத்தில் எவனோ ஒருவன் காணப்படுவதுந் துர்லபமாக விருக்கின்றது? சர்வ உத்கிருஷ்ட அதிசய சாமர்த்தியமாய மாதுர்ய விசேடத்தோடுகூடிய தத்துவ சாக்ஷாத்கார பலம்வாய்ந்த அழகிய மூர்த்தங்களாய நல்லோர்களென்னும் நன்மா விருக்ஷங்கள் உலகின்மிகவுந் துர்லபமேயாகின்றன. உலகத்துள்ள விவகாரங்கண் முழுவதையும் இனிதாகப் பகுத்தறிந்து தமது மதியாலாகிய விவேகத்தானே தத்துவ தரிசனம் வரையிலுமுள்ள அதிசயமானது யாவரும் புகழத்தக்க குளிர் மனத்தோடுகூடிய இந்த இராமபிரானிடத்தில் இவ்வளவு இளம்பருவத்திலே காணப்படுகின்றது. மிக அழகையுடையனவும் சுலபமாக ஏறத்தகுதியனவும், பழந்தளிர் நிறைந்தனவும், ஆகிய விருக்ஷங்கள் எல்லாத்தேசங்களிலும் உண்டாகின்றன, ஆனாற் சந்தனவிருக்ஷங்கள் மாத்திரம் அவ்வாறுண்டாவதில்லை. பழந்தளிர்களோடுகூடிய விருக்ஷங்கள் வனந்தோறும் எப்போதும் விருத்தியடைந்துகொண்டே யிருக்கின்றன, ஆனால் அபூர்வமான அதிசயத்தோடுகூடிய இலவங்கமானது எங்கு மெப்போதுஞ் சுலபமாகாதன்றோ! சசியினிடத்திற்குளிர்ந்த ஒளிபோலவும், நல்ல தருவினிடத்திற் பூங்கொத்துப்போலவும், மலர் முதலியவற்றே பரிமளவரிசைபோலவும், இராமரிடத்தி லிவ்வதிசயத்தைக் கண்டோம். யாதொரு தடையுமற்றுக் கெட்டவடிவையுடைய தெய்வமென்னும் முற்கருமத்தை யனுசரித்த விதாதாவின் சிருஷ்டியாலுண்டாகிய இச்சாம்பர்ச் சமுசாரத்திற் சாரமாகிய விவேகத்தாலுண்டாம் ஆன்மலாபமானது ஹேமுனிஜேந்திரர்களே! அத்தியந்தந் துர்லபமாக விருக்கின்றது. எக்கீர்த்தி நிதிகள் எப்போதுந் தத்துவசிந்தனபரர்களாகி ஆன்மலாபரூபமாய சாரத்தையடைவதில் முயலுகின்றார்களோ அவர்களே தன்னியர்கள், புருடோத்தமர்கள், சாதுக்களுள் முதலில் எண்ணப்படுபவர்களாவர்கள் விவேகமுடையவரும் உதாரகம்பீரவடிவும் மனமுமுடையவருமாகிய இராமருக்கொப்பாக ஒருவருமே யிவ்வுலகிற் கிடையாது, இப்போதுங்காணோம் முற்போதுங்கண்டதில்லை பிற்போதும் வரப்போவதேகிடையாது என்பது எமது துணிபாம். இராமரது மனோரத சம்பத்தியை அவசியஞ் செய்விக்கவேண்டுமென்பதை அவரைப்புகழும் வாயிலாகவும் உத்தம அதிகார அடைவு அவர்க்குண்டாயிருப்பதை வெளிப்படுத்தும் வாயிலாகவும், கூறி அவரை யுபேக்ஷிக்கிற்றோடமாமென்கின்றார்:—சர்வ ஜனங்கட்கும்அதிசய குணசீல

விநயாதிகளானும் உசிதமாகவினவத் தக்க இரகசியத்தை வெளிப்படுத்தலானும், ஆனந்தத்தைச் செய்வித்த இராகவர் மனத்தில் விரும்பிய தத்துவத்தையறியும் வேட்கை வடிவமனோரதம், நம்மனோராகிய அறிவாளிகளின் உபதேசத்தாற் பலிக்காமற் போகுமாயின் முனிவர்களாகியயாமே வெட்டவெளியாய்க்கெட்டமதி யுடையவர்களாவோம், நமதறிவுண்மையும் பயனற்றதேயாகும்; ஆதலின் அவசிய முபதேசிக்கவேண்டும்.

33-வது விண்ணவரும் மண்ணவரும் விரவல்.

முதலாவது வைராக்கியப் பிரகரணம் முற்றிற்று.

---

ஓம் மகாகண பதயே நம:

# இரண்டாவது முமுக்ஷுவிவகாரப் பிரகரணம்.

## 1-வது சுகர் விசிராந்தி.

மங்கலம்.

அஜமொடுஞ் சரையற் றநாதியா யொன்று யகிலவின் பங்களுந் தமது
நிஜசுக வேச மெனநிகழ்ந் திதய நிகிதமா யாத்தும சார
யஜுர்முதல் வேத முடிபெழு மமுத வெழிலிர சாயன வடிவாங்
கஜமுக வீர மாதவன் கமலக் கழன்மலர் கருத்தில்வாழ்த் துதுமே.

ஸ்ரீ இராமாதி வசனவாயிலாய்ச் சாதன சம்பத்தானது வருணிக்கப்பட்ட போதினும், முமுக்ஷுக்களால் எம்முறையால் விவகரிப்பவர்களாய்ச் சம்பாதிக்கத் தக்கன, அதனால் தத்துவவிசிராந்தி இலாபந்தானெங்ஙனமுண்டாம், எனத் தனித் தனியாகப் பிரித்து அவற்றையுபதேசிக்கும்பொருட்டு இரண்டாவது பிரகரணத்தை ஸ்ரீவான்மீகிபகவான் றொடங்குகின்றார்:—இப்போது, தனது மதியினனே விசாரித்தினிதுணர்ந்தும் தந்தையானுபதேசிக்கப்பெற்றும் நம்பிக்கையற்றவராகி ஜனகரதுபதேசத்தாற் சுகர்தத்துவத்திலிளைப்பாறியது வருணிக்கப்படும்: ஆண்டாதியில் மந்தவைராக்கியாதிசாதனமுடையவர்கள் எல்லாம் வந்ததுபோலவே விரைவில் அதிகார அடைவின்மயக்கத்தாற் கேள்விமுதலியவற்றே முயலுதல் கூடாதெனச் சுகர்கதையினனே அந்தப்பரிபாக இலக்கணங்களைக் காண்பித்து "குருவருளானே குணமதாயறிந்த, பெருமொருவித்தையே பெரும்பயனுடைத்தாம்" என்னுஞ் சுருதியினனே குலகுருவாகிய ஸ்ரீவசிஷ்டபகவானை ஸ்ரீ இராமருக்குபதேசிப்பான் பூர்வ விருத்தாந்த நினைவினானும், தத்துவ உபதேசவுபக்கிரமத்தானும் மிகவுமுற்சாகப்படுத்துபவராய்த் தமது பிரயோஜன சித்தியின்பொருட்டே சிரவணஞ்செய்யும் பொருட்டும் விரைந்து ஸ்ரீவிசுவாமித்திரரே முதலிற் கூறத்தொடங்கினரென ஸ்ரீவான்மீகிபகவான் கூறல்:—சபைக்கு விஜயஞ்செய்த முனிவர்களானே இவ்வண்ணம் உரத்தகுரலோடும் வாக்கியங்கள் வழங்கப்பட்டபின்னர், முன்னரும் அதிகார எல்லையிலுமுட்கார்ந்திருக்கும், முக்கிய அதிகாரிகள் கிடைப்பது அருமையாதலின் ஸ்ரீ இராமரிடத்திலும், பிரஹ்மரசத்தையறிந்தவர்களுக்குள்ளுத்தமரானவராதலின்

நிகழப்போகின்ற பிரஹ்மவிசாரத்திலும், பிரீதியுடையவராய் ஸ்ரீ விசுவாமித்திரர் ஸ்ரீ இராமரைநோக்கிக் கூறுவதாவது:—ஹே இராகவ! ஹே ஞானவான்களுக்குள் மேன்மைமிக்கோய்! அவசியமறியத்தக்கது உனக்குஅயலொன்றுமில்லை, சுயமாகவே அதிசூக்ஷுமமான சாராசாரத்தைப் பகுக்குமாற்றலுற்ற மதியினனே தள்ளத்தக்க கொள்ளத்தக்க இரகசிய முழுவதையும் பரமார்த்தசாரபூத அகண்ட அத்வய சின்மாத்திரரூபமாகிய ஆன்மதத்துவத்தையும், நீயறிந்தேயிருக்கின்றாய். ஆயினேன் இளைப்பாறுதலுண்டாகவில்லையெனின்? எப்போதுமியற்கையாகவே நிர்மலமாயிராநின்ற நினது மதிக்கண்ணாடியிற் கேவலம் அவநம்பிக்கையாலாய ஐய அழுக்கையகற்றன்மாத்திரம் ஒருசிறிதே பொருந்தவேண்டியதாயிருக்கின்றது. தனது மதியாலறிந்தபோதினும் பிரமாண ஆசிரியர் முதலிய சம்வாதமில்லாமல் விசுவாசம் வரமாட்டாதன்றோ? "வலுவதாய்ச் சிக்ஷித்து வயங்கியபேர்க்கும், நலமதாயான்மனினன்னிலையுளம்பெறு" எனவுமன்றோ கூறுகின்றனர். வியாசபகவானுடைய மைந்தனாகிய சுகனுடையமனம்போன்றதாம் நின்னுடையமனதும், அறியவேண்டுவதுயாவற்றையுமறிந்தபோதினும் உள்ளே விசிராந்திமாத்திரத்தையே யபேக்ஷிக்கின்றது. (ஈண்டு வியாசர் சுகர் என்பவர், ஒவ்வொரு துவாபரமுடிபினும் வியாசாவதாரபேதம் பிரசித்தமாதலின் முன்னுள்ள துவாபரமுடிவிலுண்டானவர் கவரப்படுவர்) இவ்வாறியம்பக்கேட்ட ஸ்ரீ இராமர், ஹே பகவன்! ஸ்ரீவியாசபகவான் மைந்தராகிய சுகருக்கு ஆதியில் தமது விசாரத்தானே தத்துவம் அறியக் கூடியதாயிருந்தும் எவ்வாறு விசிராந்திவரவில்லை? பின்னர், குரு உபதேசித்த பலத்தோடு கூடிய மதியினனே எவ்வாறு விசிராந்தி கிடைத்தது? எனக் கேட்ப ஸ்ரீ விசுவாமித்திரர் கூறுகின்றார்:—ஹே இராமச்சந்திர! உன்னுடைய விருத்தாந்தத்திற்குச் சமமும், மோக்ஷகாரணமும் ஆகிய வியாசமைந்தன் விருத்தாந்தத்தைக் கூறக் கேட்பாயாக:—உனது தந்தைக்குச் சமீபத்தில் பிரசித்த நீலகிரிக்குச் சமானமாய்ப் பொன்னாசனத்திற் சூரியனைப்போற் பிரகாசித்துக்கொண்டு இதோ உட்கார்ந்திருக்கும் வியாசபகவானுக்கு, சர்வ சாஸ்திரங்களையுமுணர்ந்தவனும், சந்திரவதனனும், சரீரதம்தாடுயாகம் எழுந்தருளியதுபோன்றவனும் பேரறிவாளனும் ஆகிய சுகனென்னும் ஒரு மைந்தனுண்டானான்; இந்தச் சம்சார சங்கடங்களையெல்லாம் இருதயத்தின்கண்ணே நன்றாக ஆராய்ந்த அவனுக்கும், உனக்குதித்ததுபோலவே இத்தகைய விசாரமானதுதித்தது. அதனால், மகாமனத்தையுடைய அவன் சுயமாகவே தனது விவேகத்தினால் நெடுங்காலம் ஆராய்ந்து மிகவும் அழகாக, எப்பரமார்த்த சத்தியமாய ஆன்மதத்துவம் அத்விதீயசின்மாத்திர ரூபமாயிருக்கின்றதோ அதையறிந்தடைந்தனன். (ஞானமேயன்றோ ஆன்மஇலாபம்) தானேயடைந்த பரவஸ்துவின்கண்ணே இதுதான் வத்துவென விசுவாசம் தனக்குப் பிறவாமையானே இளைப்பாறுதலடையாத மனத்தனாயிருந்தான்; பின்னவனுடைய சித்தமானது சஞ்சலத்தன்மைகளையெல்லாம் விட்டுக் கேவலம் அகாலமழைத்தாரைகளினின்றும் சாதகப்பக்ஷியானது விலகுவதேபோலப் பலவகை விநாசதுக்க ஹேதுக்களாய போகங்களினின்றும் வைராக்கியத்தையடைந்தது; ஒருகால் நின்மலப்பிரஞ்ஞையையுடைய அவன் மேருவின்கண்ணே ஏகாந்தமாயிருந்த தந்தையாகிய கிருஷ்ணத்வைபாயனர் (வியாசர்) என்னும் மகாமுனிவரை நமஸ்கரித்துப் பக்தியோடும், ஹே தந்தாய்! பாவஞ்சனை

யின்பொருட்டு வஞ்சகமாக ஆட்டிவிடப்பட்ட இந்தச்சமுசார ஆடம்பரம் எம்முறையாக உண்டாயது? எக்காலிது அத்தியந்தம் எவ்வாறு அழியும்? எவ்வளவு பெரியது? எத்துணைக்காலமிருப்பது? இது யாருடையது? தேகத்தினுடையதா? இந்திரியத்தினுடையதா? மனத்தினுடையதா? பிராணனுடையதா? சங்காதத்தினுடையதா? அதனினுமயலாய விகாரியினுடையதா? நிர்விகார சின்மாத்திரத்தினுடையதா? எனவினவினன். இவ்வாறு வினவப்பட்டயாவுமுணர்ந்த வியாசபகவானால் அம்மைந்தன்பொருட்டுப் புகலவேண்டியது அனைத்தும் உள்ளபடியே தெளிவாகப் புகலப்பட்டது. உபதேசித்த அதைச் செவியுற்ற சுகன் அம்ம! இதை முன்னரேயானறிந்துளேன் எனத் தனது தந்தையினது வாக்கியத்தை அபூர்வ அர்த்தமொன்றுங் காணேனெனச் சுபபுத்தியினாலே பகுமானிக்கவில்லை. வியாசபகவானும் மைந்தனது கருத்து இத்தகையதெனவுணர்ந்து அவன்மதியையேயனுசரித்துப் புத்திரனைநோக்கிமீண்டுங்கூறுவதாவது:—ஹே மைந்த! கூறியதினும் அயலாக உண்மையாயொன்றையும் யான் நன்றாகவுணரேன்; பூமியின்கண்ணே ஜனகனென்னும் அரசனிருக்கின்றான்; அவனுண்மையாக வுணரவேண்டிய யாவற்றையு முணர்வன் அவனிடத்தினின்றும் நீ யாவையுமறிவாய்; என்பதாகத் தந்தையாற் கூறக்கேட்ட சுகன், மேருகிரியினின்றும் பூமியிற்சென்று ஜனகனாற் காப்பாற்றப்படும் விதேக தேசத்திலுள்ள மிதிலையென்னும் நகரத்தையடைந்தனன். ஹே மன்னவர்மன்ன! வாயிலின்கண்ணே ஸ்ரீ வியாசபகவானுடைய அருமைமைந்தராகிய சுகப்பிரஹ்ம இருஷியானவர் வந்துநிற்கின்றார் என்று மகாத்மாவாகிய ஜனகரிடத்தில் துவார பாலகர்களாற்றெரிவிக்கப்பட்டபோதினும் ஜனகரும், சுகவிருத்தாந்தம் தெரிந்தவராய் விரைவிலுபதேசிக்கின் வியாசவசனம்போல் அவமதிப்பால் அவனுக்குக் கிருதார்த்தத்தன்மையை யுண்டாக்கமாட்டாது, அவ்வாறென்மொழியும் போகலாகாதெனவெண்ணிச் சுகனுடைய வைராக்கியாதி சாதனங்களின் விசுவாச திடத்தன்மைகளை அறியும் வேட்கையுற்று உபேக்ஷயாக அவர் ஆங்கேயிருக்குகவெனக் கூறி எழுதினம்வரை ஒன்றுங் கூறாமலிருந்துவிட்டார். அதன்பின் அரண்மனை உண்முற்றத்தில் விடும்படியாகச்செய்தனர். அவ்விடத்திலும் எழுதினங்கள் அவ்வாறே தத்துவத்தை யுணரவேண்டுமென்னும் இச்சையின் மிகுதியினால் அநாதரவு யாவற்றையுமறந்து இருந்தனர். பின்னர் அந்தப்புரத்தில் விடும்படியாகச் செய்தனர். எதுவரை உணவுமுதலியவற்றானே நீர் பூஜிக்கப்படவில்லையோ அதுவரை யரசர்தெரியார் என்னும் வாக்கின்வஞ்சனையானே எழுதினங்கள்வரை அந்தப்புரத்திலயே யவ்வனத்தால் மதத்துலவும்அழகிய மங்கையராற் போஜனாதிகளானும் போகக்கூட்டங்களானும் பூர்ணசந்திரனுக்குச் சமானமான சுகனை யுபசரிக்குமாறு செய்வித்தனர். ஆயினும் அப்போகங்களும் அத்துயரங்களும் வியாசமைந்தனாகிய அவனைத் திடமூலத்தோடுகூடிய பெருங்கிரியைத் தென்றற்காற்றானது அசையாததேபோல அசைக்கவில்லை. கேவலம் போகங்களினும் அநாதரவுகளினும் நல்ல சமமுடையவனாகவும் அதனானே சுவஸ்தனாகவும் அதற்கு ஹேதுவாக வாக்குமுதலிய இந்திரியங்களை யடக்கிக்கொண்டும் சந்தோடத் தோடுகூடிய மனத்தையுடையவனாகப் பூர்ணசந்திரன்போல அங்கேயே சுகனிருந்தனன். இவ்வாறு பரீக்ஷித்தவினானே சுகனது தத்துவ தரிசனம்வரை நிலையாயிருக்கக்கூடிய விசார வை

ராக்கியாதி பரிபாக இயற்கையை யறிந்து அச்சுகனை அவ்வரசர் வரவழைத்து மகிழ்ச்சிபொங்கியிருக்கப்பட்ட அவரைப்பார்த்து ஆச்சரியப்பட்டு நமஸ்கரித்தனர். எஞ்சுதலில்லாமலுலகின்கண்ணே அவசியஞ்செய்யத்தக்கனவாய பிரசித்தகாரியங்க ளாகிய பரமபுருடார்த்த சாதனங்கள் முழுவதையும் செய்து கிருதகிருத்தியத் தன்மையை யடைந்தவரே! எல்லா ஆநந்தலேசங்களும் ஆன்மசுகத்திலடங்குதலின் அதனடைவினுனே எல்லாமனோரதங்களையுமடைந்தவரே! நீர் விரும்பியது யாதென விரைவிற் சுகமாகவிருக்கின்றீராவென வினவிய அச்சுகனைநோக்கிக் கூறினர். அர சர் கூறியதைக் கேட்ட மைந்தன் ஹே குருவே! இச்சம்சார ஆடம்பரமானது எவ்வாறுண்டாயது? எவ்வாறுபசாந்தியையடையும்என்பதை யுள்ளபடி யடியேனுக் குக் கூறுவீராகவென்றனன். இங்ஙன் வினவப்பட்ட ஜனகரால் அச்சுகனுக்கு மகான் மாவாகிய அவன்றந்தையாற் பூர்வங் கூறப்பட்ட அதுவே கூறப்பட்டது. அதைக் கேட்ட சுகன் கூறுவதாவது:—சுயமாகவே என்னுல் விவேகத்தாலிது பூர்வமுணரப் பெற்றது, இதனையே வினவப்பட்ட எனது பிதாவும் எனக்கு நன்றாக அநேக உதாகரண ஊகங்களானே விரித்துரைத்தார். உபதேசிப்பவருள்ளெல்லாம் மேன் மைமிக்கவரே! தங்களாலும் இதேபொருள் கூறப்பட்டது. இதுவே சர்வ உப நிடதத்துள்ள மகா வாக்கியார்த்தமெனச் சாஸ்திரங்களாகிய வாக்கியார்த்த தாற் பரியத்தை நிர்ணயிக்கும் நியாயங்களைக்காட்டுவதிற் றற்பரமாஞ் சூத்திரபாடியாதி களிலுங் காணப்படுகின்றது. இது தன்னிடத்திலிருக்கும் அஞ்ஞானத்தினுலுபகித மாய தன்பால் நானுவகையைக்கற்பிக்கும் விகற்பமாகிய அநந்த காமகரும வாசனைக ளாகிய விரைகளானே விருத்தியடைந்து பிரளயசுழுப்திகளிற் சமஷ்டி வியஷ்டி சமஸ்கார பரிசேடமாக அவ்வியாகிருதத்தில் லீனமாகியமனுதி ஜீவபாவ உபாதி வடிவமாம் அந்தக்கரணத்தினின்றும் பிரளயமுறைக்கு மாறிய முறையாக முதலில் அபஞ்சீகிருத ஆகாசாதி உற்பத்திக்கிரமமாகச் சமஷ்டி ஹிரணிய கருப்பவடிவமாக வும், அதன்பின் பஞ்சீகரண விராட்டுவடிவமாகவும், அதன்பின் அன்னுதிக்கிரம மாக வியஷ்டி தூலதேக வடிவமாகவும், அதனுள்ளே துன்புறுத்தும் வியஷ்டி லிங்க சரீரவடிவமாகவும் ஆவிர்ப்பவித்து மகா அநர்த்த ரூபமாகவிளங்கும், அது வும் கரும உபாசனைச் சமுச்சயமாத்திர அனுஷ்டானத்தால் அத்தியாத்மிக வியஷ்டி பாவ பரிச்சேதவாசனைமாத்திரம் ஒழியவே சமஷ்டி ஹிரணிய கருப்பபாவமா யெஞ்சாநிற்கும், சிரவணுதிபரிபாகத்தாலுண்டாய தத்துவ சாக்ஷாத்காரத்தானே வாசனையோடுகூடிய காரிய காரண அவித்தை நாசமாங்காலோ மூலங்கெடலால் அத்தியந்தம் அந்தக்கரணங்கெடலால் அடியோடுங் கெடுகின்றது; ஆகையாலிகழத் தக்க சம்சாரம் சாரமற்றதென்பதென்றுணிபாம். சுவப்பிரகாச ஆன்மாவின் கண்ணே நிலைபடாமையினுனும் பொய்யானமையானும் முன்னரே தகிக்கப்பட்ட தன்மையையுடையதுதான் ஆதலினுனே சாரமற்றதாம், அத்தகையது மறுபடியும் சாக்ஷாத்காரப் பிரளயாக்கினி யெங்கும் வியாபிக்கும்போது எவ்வாறிருக்கும்; மேலே தகிக்கப்பட்டதிருணமானது உள்ளே சாரமானது சேடித்தலின் மீண்டு மீண்டும் முளைப்பதற்கு முடியும் இச்சம்சாரமோ சாரமில்லாமலே தகிக்கப்படுவ தாகத் தத்துவவித்துக்களனுபவமிருத்தலின் எங்ஙனுண்டாகும்? இதுவென்னுன் முன்னரே சுயமாகவே விசாரத்தால் அறியப்பெற்றது, இதுவே யுண்மையாவென்?

ஆயினதைச் சந்தேகமில்லாமலிருதயத்திலுறைக்குமாறு ஹே மகா பாகுவே ! எனக்குக் கூறுவீராக; நானுவிடயங்களை இதுவா தத்துவம் அல்லது வேறுவென அவிசுவாசத்தால் உழலாநின்ற உளத்தால் உழலாநின்ற யான் உமது வசன விசுவாசத்தினாலே ஆண்டே நிலைபெற்றிளைப்பாறுவேன். எனக் கூறியதைக்கேட்ட ஜனகர் கூறுவதாவது:—ஹே மகாமுனிவரே ! நீருணர்ந்ததைப் பார்க்கினும் அதிமேன்மையானது யாதொன்றும் வேறு நிச்சயிக்கத்தக்கதாயில்லை; சுயமாகவே நீருணர்ந்தீர் குருவினாலும் மீண்டுங்கேட்டுக்கொண்டீர் அதுவேதிடமெனத் துணிவீராக. அளவு கடந்த அறிவுவடிவ ஒருபுருடனே யிங்குள்ளான்; அயலொன்றுமில்லை; தனது சங்கற்பத்தினாலே கட்டுறுகின்றான் சங்கற்பத்தை விட்டானேல் விடுபடுகின்றான். அதனால் வெட்டவெளியாக உம்மால் அறியவேண்டியது அறியப்பட்டது, மகான்மாவாகிய உமக்கு முன்னர் எல்லாப் போகங்களினின்றும், இப்போது எல்லாத் திருசியங்களினின்றும் அதிவிரக்தியானதுண்டாகி யிருக்கின்றது. ஹே பாலகராயினும் விடயத்தியாக சூரராதலின் மகாவீரரே ! உமது மதியானது நீண்டரோகங்களாகிய போகங்களினின்றும் விரக்தியையடைந்துளது, நீர் வேறென்னகேட்கவேண்டுமென் றிச்சிக்கின்றீர் ? உமக்குப் பூர்ணத்தன்மையுண்டானதேபோலச் சர்வ ஞானங்களின் மகாநிதியாகியும் எப்போதும் அபாரமான தவத்தையே செய்துகொண்டிருக்கும் உம்முடைய பிதாவிற்கும் பூர்ணத்தன்மையானதுண்டாகவில்லை. (இவ்வசனமும் இதுபோல வருபவையும் சுகருக்குத் திடமுண்டாகும்பொருட்டுப் புகழ்ந்தனவாம்) யான் வியாசரினும் அதிகனே யாவேன், அவருடைய சீடராயும் மைந்தராயுமிருக்குமீர் போகேச்சைகள் யாவற்றையும் அடியோடு விட்டிருத்தலின் என்னினும் அதிகமே யாவீர். பூர்ணசித்தத்தையுடைய உம்மால் அடையத்தக்க யாவுமே யடையப்பெற்றன; திருசியதரிசனமே சமுசாரத்திற்றள்ளுவதாதலின், பாகிய திருசிய விடயத்தில் விழவேண்டாம், ஹே பிரஹ்மசொரூபரே ! முக்தராய்விட்டீர் மயக்கத்தைவிட்டுத் தொலைத்துவிடும். "அற்பமதேனும் வேற்றுமையாற்றிடின், அற்பனக்காலே யச்சமதடைவன்" என்னுஞ் சுருதியினானே அறியத்தக்க தயலொன்றுளதென்னுமயக்கத்தையும், திருசியதரிசனமயக்கத்தையும் விட்டொழித்துவிடும். ஜனராகிய மகாத்மாவால் அம்முற்கூறிய அளவுகடந்த சிதாத்ம ஏகரே நீர் என்பதாக உபதேசிக்கப்பட்ட அச்சுகன் திருசியமலினமற்ற நிர்மலமான பரமவஸ்துவின் கண்ணே சும்மாவிருந்தனன். சோகம்பயம் ஆயாசங்கண்முழுவதுமற்றுச் சேட்டையற்றுச் சம்சயமற்றுச் சாத்விகதேவதைகள் வாசஞ்செய்தலான் விக்ஷேபம் யாதொன்றுமின்றியிருத்தலின் அநிந்திதமாய்ச் சமாதிக்கனுகூலமான மேருவின் சிகரத்தை நோக்கி நிருவிகற்ப சமாதியின்பொருட்டுச் சென்று, ஆண்டு நிர்விகற்பசமாதியிற் பதினாயிரவருடமிருந்து தைலந்தீர்ந்த தீபமேபோல ஆன்மாவின்கண்ணே விதேகமுக்தியையடைந்தான். திருசிய உன்முகத்தன்மையும், அதற்கு மூலமாகிய அஜ்ஞானமும் அகன்றமையின் சுத்தனாகி, அதனானே சஞ்சித ஆகாமியங்கள் காணப்பெறாமையானும், புண்ணியபாவங்கள் பற்றுமலும் அற்றும்போய்விட்டமையானும் அமலான்மாவும், பிராரப்தகருமந்தேய்ந்துவிட்டமையின், அசுத்ததேகாதி நீங்கிவிட்டமையின், புனிதபதமும் சுயமாகவே நிருமலமும் ஆகிய பரமான்ம வஸ்துவின் கண்ணே நீலமேக சம்பந்தம் விட்டுப்பிரிந்து கடலில்விழுந்து ஒன்றாகும் நீர்த்துளியே

போல மகாத்மாவாகிய சுகன் சர்வ வாசனையுமொழிந்தவனாகிப் பேதஞ்செய்யு முபாதியற்றமையின் உண்மையாய அகண்ட ஐக்கியத்தை யடைந்தனன். பேதத்தை யுண்டாக்கும் அஞ்ஞானமானது அடியோடும் அழிந்துபோனபின்பு ஆன்மாவுக்கும் பிரஹ்மத்திற்குமில்லாத பேதத்தைச் செய்விப்பவன் யாவனென விஷ்ணுபுராண முங் கூறுகின்றது-

1 - வது சுகர்விசிராந்தி முற்றிற்று.

---

## 2 - வது ஸ்ரீ விசுவாமித்திரர் வாக்கியம்.

இப்போது, மகாமதியையுடைய ஸ்ரீ விசுவாமித்திரரால் ஸ்ரீ இராமருக்குப தேசிக்கும்பொருட்டு ஸ்ரீ வசிஷ்டர் பிரார்த்திக்கப்படுதலும், அதனாலவருற்சாக மடைதலும் வருணிக்கப்படும்:—சுகர் கதையைப் பிரகிருதத்திற் பொருத்திக் கொண்டு ஸ்ரீ இராமருக்குபதேசிக்கும்பொருட்டு ஸ்ரீ வசிஷ்டரை முயல்விக்குமாறு தொடங்கிய ஸ்ரீ விசுவாமித்திரர் கூறல்:—அந்த வியாசமைந்தனுக்கு மலமாத்திர நீக்கும் எவ்வளவு வகையாய யூகத்தோடு கூடிய வுபதேசம்பொருந்தியதோ அவ் வளவே யுனக்கும் வேண்டியதாக இருக்கின்றது. ஹே முனீசுரர்களே! இந்த நல்ல மதிமானாகிய இராமனுக்குப் போகங்களியாவும் ரோகங்களைப்போல ருசிக்கவில்லை யாதலின் இவனால் அறியவேண்டியது முழுவதும் அறியப்பட்டதேயாய்விட்டது. போகக்கூட்டங்களியாவும் சுவைக்காமற் கைத்ததே அறியவேண்டியதையெல்லா மறிந்த மனத்திற்குத் திடமான இலக்கணமாகும். போகவாசனையினாலே பொய்ப் பொருள்களாலாய பந்தம் மிகத் திடமாகின்றது; அவ்வாசனை தேயத்தேயப் பந்த மும் உலகின்கண்ணே மிகவுந் தேய்ந்து விடுகின்றது. ஹே இரகுவீர! வாசனா க்ஷயமே மோக்ஷமென மகான்களாற் கூறப்படும் பதார்த்தவாசனைகளின் திடத்தன் மையே பந்தமெனப்பகரப்படும். எத்துணை விடயவாசனையழிகின்றதோ அத்துணை விடுபடுகின்றான், எல்லாவாற்றானும் அழியினோ எல்லாவற்றினின்றும் முக்தியை யடைகின்றான். அற்ப சிரவணாதியாயாசத்தினாலும் அபரோக்ஷ திருக்குசொரூபம் திருசிய விவேகமாத்திரத்தினாலும் நன்கு பரிசயித்தல் கூடுமாதலினாலும், தனதாத் மதத்துவத்தின் தொடக்கஞானமுண்டாதல் கூடும், விடயவைராக்கியமோ மிகக் கிலேசமுற்றே யுண்டாகின்றது. ஆனாலந்தஞானமே போதுமே வைராக்கியத்தினால் யாது பயனெனின்? இராகாதிகளின் றடையில்லாமல் யாவன் காண்கின்றனனோ அவனே தத்துவஞான ஜன்னிய அவித்தை யழிவின் பலத்தையுடையவனும் அறிய வேண்டியதை யறிந்தவனும் பண்டிதனும் ஆவன். தொடக்கஞானியோ மூர்க்கத் தன்மையை யகற்றாமையின் அத்தகையனாகான். அறைந்த பண்டிதனாகிய மகாத் மாவின்பொருட்டோ போகங்கள் பலாத்காரத்தானும் ருசியையுண்டாக்க முடிவன வாகா. கீர்த்திபூஜை யிலாபம்முதலிய யாதொருபல உத்தேசமுமில்லாமலே கேவலம் யாவனுக்குப் புவியிலுள்ள போகங்களெல்லாம் அருசியாகத் தோன்றுகின்றனவோ அவனே ஜீவன் முக்தனெனப்படுவன். டாம்பிக போகத்தியாகத்தினாலே இஷ்ட சித்தி யெவ்வாறு சித்திக்கும். வைராக்கியஞான உபரதிகள் மிக விருத்தியாயின் பரஸ்பர சகாயத்தன்மையினாலுண்டாம் ஞான பரிபாக அதிசயத்தானே மூலமா னது கெடுதலின் அத்தியந்த ஆசைநாசமுண்டாகும். எத்துணை எத்துணை அறிவு

அறியப்படவில்லையோ அத்துணையத்தனை ஜந்துக்கட்கு விடயங்களில் வைராக்கியம் மருத்தலத்திற்கொடிபோல உண்டாவதில்லை. "இரதமுமிவற்கிங்கிறைகண்டேகு" மெனக் கீதையுமிதையே கூறுகின்றது. இந்த இரம்மியமான போகவிடயங்கள் யாவும் எதனால் இரகுநந்தனனை இரஞ்சிக்கச்செய்யவில்லையோ அதனானே யிவனை யறியவேண்டியது முழுவதுமறிந்தவனாகவே தெரியவேண்டும். இராமர் தத்துவமுணர்ந்தவராயின் உபதேசிக்க முயலல் யாதுகாரணம்பற்றியோ வெனின்? ஹே முனீசுரர்களே! இராமச்சந்திரன் யாதை யுள்ளே யறிந்துள்ளானோ அதுவே வஸ்துவென்பதாகச் சற்புருடர்கள் வாயிலாய், முன்னர் விசுவாசதிடமில்லாமையினாலே அடையாததுபோலிருந்தது. இப்போது கேட்டு விசுவசித்து அதன்கண்ணே சித்த விசிராந்தியையடைவன். அதன் மூலமாய் அன்னிய அதிகாரிகளுங் கேட்டுத் தத்துவத்தையடையலாம். ஆகவே உபதேசம் சர்வ உபகாரமாகும். சரத்காலமாகிய இலக்குமியானவள் மேகமற்ற நிர்மல ஆகாசமாத்திரமாக எஞ்சியிருப்பதை வாஞ்சிப்பதேபோல இரகுநந்தனனுடைய மதியும் துவைதமியாவற்றையும் நீக்கி அத்விதீய சின்மாத்திரமாய்ப் பரிசேடித்து நிற்றலாகிய விசிராந்தியைக் கேவலம் விசுவாசத்தால் வாஞ்சிக்கின்றது. ஈண்டு இந்த மகாத்மாவாகிய இராகவனுக்கு இளைப்பாறுதலுள்ளத்திலுண்டாவதற்காக இந்தப்பகவானாகிய ஸ்ரீமான் வசிஷ்டரே யுக்தியை யுபதேசிக்கவேண்டும். நீரே யேனுபதேசிக்கக் கூடாதெனின்? இக்ஷுவாகு குலமுழுவதிற்குமெப்போதும் குலகுருவாகவும் நியந்தாவாகவுமிருப்பவரிவரே; இந்நியந்தாவைக் கடந்தன்றோ திரிசங்கு முதலியோர் பெருந்துயரை யடைந்தனர்; சர்வசாஸ்திரங்களையுமிவரறிந்தவர், உண்மையாகச் சர்வ சாக்ஷியாயிருப்பதோடும் யோகபலத்தாலும் பிரிவுபிரிவாகவும் இவர் யாவற்றையுமறிந்துகொண்டே யிருப்பவர், அதற்கேதுவாக மூன்றுகாலங்களிலும் நிருமலமாகிய மோகங்கடந்த தரிசன சாதன மாயமனத்தையுடையவருமிவரேயாவர். ஹே வசிஷ்ட பகவன்! முன்னம் மிருவருடைய வைரமுஞ் சாந்தியாகும்பொருட்டும் மகாமதிமான்களாகிய முனிவர்களின் சிரேயசின்பொருட்டும் நிடதமலையினுடைய சோலையடர்ந்த விசாலமான இடத்தில் பகவானாகிய ஸ்ரீ பிரஹ்மாவால் விரிவாக வுபதேசிக்கப்பட்ட மேன்மையாய யுக்திநிறைந்த ஞானமானது தங்களுக்கு ஞாபகத்திலிருக்கின்றதா? எந்த யுக்திப்பிரவாகம் நிறைந்த ஞானத்தினாலே இந்தச் சம்சார சம்பந்தமாய வாசனையானது சூரியனாலிருளானது முற்றினுமொழிவதேபோல முற்றினுஞ் சாந்தமாகுமோ, அதே ஞானத்தைப் பரம சீடனாகிய இராமமூர்த்திக்கு விரைவில் விசிராந்தியானதுண்டாதற்பொருட்டு நீருபதேசிக்கவேண்டும். இவ்வுமதுபதேசமானது அற்பபல அதிகப்பிரயாசமுடையதாகாது; ஏனெனின், இராகவன் கல்மஷம் நீங்கினவனாக இருக்கின்றான். நிர்மலமானகண்ணாடியில் முயல்வில்லாமலே முகமானது பிரதிபிம்பிக்குமல்லவா? இவ்வுபதேசம் பயனின்மையை யுண்டாக்கமாட்டாது. மாறாக உம்முடைய ஞானத்தன்மை தயை முதலியவற்றிற்குப் பயனுடைமைகிடைத்தலானே மேன்மையே யுண்டாகும். விரக்தனாகிய நல்ல சீடனுக்கு யாதுபதேசிக்கப்படுமோ அஃதேஞானமுஞ் சாஸ்திரார்த்தமுமாகும் அஃதே புகழத்தக்கதும் பாண்டித்தியத்தை விளக்குவதுமாகும். சுபாத்திரத்திலீயாவிடின் வீணாகப்போதலினிகழ்வேயன்றோவாம். சீடனும் விரக்தனும் அல்லாதவனுக்கு ஏதேனுஞ் சிறிதை யுப

தேசஞ்செய்யினுே அது கருநாய்த்தோலிற் கவிழ்த்த காராம்பசுவின்பாலைப்போற் களங்கத்தையேயடையும். இராகாதிகளின் காரணம் அவித்தையாக விருத்தலின் அவ்வவித்தை நீங்கலானே இராகம் பயம் குரோதம் முதலியவை நீங்கினவரும், அபிமானமற்றவரும். பாவமற்றவரும் ஆகிய உம்மைப்போன்றவர் எவர்க்குபதேசஞ் செய்கின்றுரோ அப்போதே அவ்விடத்திலேயே அபரோக்ஷ ஆன்மாவின்கண்ணே கேட்டமதியானது இளைப்பாறுதலை யடையும். காதிமைந்தராகிய ஸ்ரீ விசுவாமித்திரரானே இவ்வாறியம்பப்பெறவே வியாச நாரதர் முதலிய முனீசுரர்களெல்லாம் அப்பொருளையே நல்லதுநல்லதெனப் புகழ்ந்து பேசினுர்கள். அதன்பின் சக்கரவர்த்தியின் சமீபத்தில் வீற்றிருப்பவரும், மகா தேஜசையுடையவரும், பிரஹ்மாவின் மைந்தரும், பிரஹ்மாவிற்குச் சமானமானவரும், மகாமுனிவரும் ஆகிய ஸ்ரீ வசிஷ்ட பகவான் பிரஹ்மாவின் மைந்தராய்ப் பிரஹ்மாவைப்போலவே மகாதேஜசுமுதலிய குணங்களோடு கூடிவிளங்குதலின் திவ்யதேஜசோடு கூடிய மகரிஷிகளினது முன்னிலையிற் பிரஹ்மாவைப்போலவே புகலத்தொடங்கி, தத்துவஞானிகட்கு இலக்கணபூதமாய அபிமானமின்மை முதலிய நற்குணங்களைத் தமதொழுக்கத்தானே சிக்ஷிப்பித்துக்கொண்டு விநயமான மொழிகளானே ஸ்ரீ விசுவாமித்திரராற் பிரார்த்திக்கப்பட்டதைச் செய்கின்றேனெனப் பிரதிஞ்ஞைசெய்தல்:— ஹேமகா முனிவரே! நீர் ஆணையிட்டபடியே யாதொரு தடையுமில்லாமற்செய்வேன். சமர்த்தராயினும் கற்றுணர்ந்த பெரியோர் சொற்கடக்குஞ் சமர்த்தர்யாருளார்? யானிப்போதே அதிவிரைவில் அரசகுமாரர்களாகிய இராமாதிகளினது மனத்திலிருக்கப்பட்ட அஞ்ஞானத்தை ஞானத்தினுலே, தீபத்தினுலே இரவினிருளை அகற்றுவதேபோல அகற்றுவிப்பேன்; அஞ்ஞானத்தை நீக்குவதிலும் ஞானத்தைத்தருவதிலும் யாதொருதடையுமே கிடையாது. நிடதமலையின் கண்ணே சம்சார மயக்க நீங்கும்பொருட்டு முன்னர் எந்தந்தையாகிய பிரஹ்மாவினுல் எந்த ஞானமானது உபதேசித்தருளப்பட்டதோ அவையாவற்றையுமே சிதறுமற் கிரந்தத்தோடும் அர்த்தத்தோடும் ஸ்மரித்துக்கொண்டே யிருக்கின்றேன். அபரிச்சின்னமாதலினுனே பூர்ணமாக எந்த ஞானசொரூப ஆத்மதத்துவமுளதோ அதை நிரந்தரம் அனுசந்தானஞ்செய்துகொண்டே யிருக்கின்றேன். இந்த மகாத்மாவாகிய ஸ்ரீ வசிஷ்ட பகவான், இந்தப் பிரகாரம் வெளிப்படையாகப் பிரதிஞ்ஞையைச்செய்து, சூரனும் நடனும் ஆயுதாதிகளைத்தரித்தல் பூடணுதிகளைப் பூணன்முதலிய சாமக்கிரிகளைச் சேர்த்துக்கொண்டு இனிதாக விளங்குவதேபோலச் சீடனுக் கான்மஞான மெளிதிலுண்டாவதற்காகவேண்டிய உபாயங்களான திருஷ்டாந்தம் கதை பிரமாணம் தருக்கம்முதலியவற்றின் அனுசந்தான உற்சாகாதி சாமக்கிரிகளைச் சேர்த்தலானே உபதேசஞ் செய்பவர்களின் மிகுந்த அழகைக்கொண்டு இனிதாக விளங்குபவராய்ச் சகத்திலுள்ள சர்வப் பிராணிகளின் அறியாமையினது வேரைப்பிடுங்குவதும் பரமபதத்தை முக்கியமாயறிவிப்பதும் ஆகிய இந்தச்சாஸ்திரத்தைக் கூறத்தொடங்கினுர்.

2 - வது ஸ்ரீ விசுவாமித்திரர் வாக்கியம் முற்றிற்று.

---

## 3 - வது சிருஷ்டி வர்ணனம்.

இப்போது, ஸ்ரீ இராமரது சங்கையை நீக்கும் வாயிலாகத் தூலாதி ஜகத்தின் ஆரோப அபவாதங்களானே பிரத்தியக்குச் சிதாத்மாவாகிய விடயம் தெளிவுறுத் தப்பெறும்:—இவ்வாறு ஸ்ரீ வசிஷ்டபகவான் முன்னுற்றயாவற்றையும் அனுசந்தித் துப்பார்த்து விஸ்தாரமாக அவற்றையுபதேசிக்கவிரும்பிச் சற்குருவின் தியானவடிவ மங்கலத்தைச் செய்துகொண்டும், வித்தையின் சம்பிரதாயசுத்தியைக் காண்பித்துக் கொண்டும் சீடரை யொருமுகப்படுத்தும் பொருட்டு மீண்டும் பிரதிஞ்ஞை செய் கின்றார்:—முன்னர்ச் சிருஷ்டியினாதியில் என்றந்தையாகிய பிரஹ்மாவான பகவா னால் யாவருக்கும் சர்வசம்சார துக்க உபசாந்தியின் பொருட்டு எந்த ஞானசாதன மான சாஸ்திரம் அருளப்பட்டதோ அவ்விதையே கூறுகின்றேன், வேறுகூறவில்லை. (இதனாற் சம்பிரதாய சுத்திபியம்பப்பட்டது) இவ்வாறு செய்யப்பட்ட பிரதிஞ்ஞை யினாலே ஒருமைப்படுத்தப்பட்ட ஸ்ரீ இராகவர், அன்னியத்தை யறியவேண்டுமென் னும் அவாவான திருப்பின் கூறுவதின் மனதொருமையுறாதாதலின் ஷுசிக்கடாக நியாயத்தால் முதலிலுண்டாய ஐயத்தை நீக்கிக்கொள்ளப் பிரார்த்தித்தல்:—ஹே பகவன் விஸ்தீர்ணமாய்த் தாங்கள் மோக்ஷசங்கிதையைக்கூறுவதற்கு முன்பு கணம் ஸ்ரீ வியாசரானவர்மற்றைய ஆன்றோரைப்போலச் சீவித்திருக்கவும், சுகருக்கு விதேகமுக்தி கேட்கப்படுதலின் உண்டாய இச்சம் சயத்தை நீக்கவேண்டும்; இவ் வையம் நீங்கியபின் றங்கள் விஸ்தாரமாய்க் கூறலாம். அதிலுனக்குயாது ஐயமெ னின்? சுகருடைய தந்தையாயும் குருவாயும் சர்வஞ்ஞராயும், மகாமதியுடையவரா யும் இராநின்ற ஸ்ரீ வியாசர் விதேகமுக்தியடையாத காரணமென்ன? இவருடைய மைந்தராகிய சுகர்முக்தியடைந்த காரணமென்ன? என்பதேயாகும்; இவ்வையம் பொருந்துமாறெனின்? இங்ஙன்பொருந்துமன்றோ:—அத்தியந்தது்க்க நாசத்தானே குறிப்பிக்கப்பட்ட நிரதிசயானந்த சுவப்பிரகாச ஆத்மாமாத்திரமாய்ப் பரிசேடித்து நிற்கும் விதேகமுக்தியே ஞானபலமாகும், சர்வஞ்ஞராகவிருக்கும் ஸ்ரீ வியாச ருக்கும் அஃதுண்டாகாதிருக்கும்பக்ஷத்தில் ஞானம் அநித்திய பலமெனவன்றோ வாம். அன்றியும், ஞானத்தினானே அஞ்ஞானம் அடியோடும் அழியுமாயின் பிருகு வாதியரைப்போல உபாதானமழியவே உடம்பாதி காரியங்கணில்லாமையின் வாழ்தலே யசம்பவமாம். வாழாவிடினோ பிரஹ்மவித்தைப் பிரவர்த்தகரின்மை யின் சம்பிரதாயமே கெடும்; இனியஞ்ஞான மழியவில்லையாயின் மோக்ஷமில் லாமை துணியவேபெறும், கருமத்தைப்போல ஞானமும் அதிர்ஷ்டவாயிலாய் மரணத்தின்பின் பயன்றரும் எனலுமேலாததே! முக்காலத்திலும் அகண்டாத்ம வடிவமாய் நிலைபெறுமது இங்ஙனமென விதிக்கப்பெறாமையின்; ஜீவன் முக்திச் சித்தியுமுண்டாகாதாம் இவ்வாறு வினவப்பட்ட ஸ்ரீ வசிஷ்டபகவான், எதுவரை இராகவன், பந்தம் அவித்தையாலாயதென்பதையும், அவித்தையின் சொரூபத்தை யும், அதன் சாக்ஷியாய் அபரிச்சின்ன சர்வ ஆதார சிற்சொரூபத்தையும், அறியாம லிருக்கின்றானோ அதுவரை ஜீவன் முக்தியின் கண்ணே விசுவாசத்தையடையமாட் டான்; ஆகலின் முதலிலதனை யுதிப்பித்துப் பின்னர்ச் சமாதானப்படுத்துவாம் என எண்ணினவராகி அதன் பொருட்டு எளிதிலுணருமாறு சாக்ஷியின் கண்ணே தூலப் பிரபஞ்சபரம்பரை யத்தியாரோபத்தைக் காண்பிக்கின்றார்:—"ஆண்டுச் சூரிய

ணவிர்ந்திடமாட்டான், றாண்டறுமதியு முடுவுந்துலங்கா திதமாந்தேஜசாற் சேர்ந்து திகழ்ந்தே, யெதனாற் சூரிய னிலக்குவிப் பானோ" என்பதாதி சுருதியினானே சூரியாதி சர்வ ஜகத்தையும் விளக்கலின் பரம அருக்கனாகிய பரமான்மாவே சிற்பிரகாசமாம், அதனுள்ளே பூர்வம் மூவுலகங்களடங்கிய அநேகங்கோடி பிரஹ்மாண்டங்களாகிய மும்மையணுக்கள் உதித்துதித்து இருந்திருந்து ஒடுங்கினவைகள் எண்ணமுடியாதவைகளாம். (இதனானே இவ்வியாசாதிகளும் அளவில்லாதவர் உண்டாயினரெனக் குறிப்பிக்கப்பட்டதாம்) ஆரம்பிக்கப்பட்டு இன்னும் முடிவு அடையாதனவும், கூறும்போதிருப்பனவுமாகிய மூவுலகக்கூட்டங்களடங்கிய பிரஹ்மாண்டகோடிகள் எவ்வளவென்றுகணக்கிட யாவராற்றான் முடியக்கூடியவை! பரமான்மாவாகிய பாற்கடலினின்றும் பவிக்கப்படுவனவாய பரந்தவுலக சிருட்டியலைகள் எத்துணையனவென வெண்ண வாக்கே முயலமாட்டாது. (இதனான் முக்காலத்திய ஜகதுற்பத்தியாதி யாதாரபூதமாகிய பரமான்மாவின்கண்ணே ஜகத்தின் அத்தியாரோபங் காட்டப்பட்டது) வினவியபொருளை யுபேக்ஷித்து வேறுகூறுங் குருவின் இரகசியக்கருத்தைத் தாம் நன்றாக அறிந்துகொண்டதாக ஆசிரியருற்சாகம் அடைவான் தமது கௌசலத்தைக் குறிப்பித்துக்கொண்டு ஸ்ரீ இராகவர் அச்சிருஷ்டிகளில் தாம் சுயமாகச் சிறிது சிறப்பைக் கூறுகின்றார்:—சென்றனவாயும் வருவனவாயுமுள்ள உலக சிருஷ்டி பரம்பரைகளை விசாரிப்பது பொருந்தும், நிகழ்வன எதுபோல்வன? நிகழ்வனவாய சிருட்டிகள் தனித்தனி அசாதாரண வடிவத்தானே எண்ணமுடியாதனவேயாயினும், அவைகள் காலத்தால் இருகரையுடைத்தாயிருத்தல் காணப்படுதலின் சென்றன வருவனவாய சிருட்டிகளைக்குறித்துக் குறைந்தனவேயாமென வறியப்பட்டனவேயாகின்றன; சென்றனவற்றைப் போன்றனவா? வருவனவற்றைப் போன்றனவா? இரண்டைப் போன்றனவுமன்றாமென அவ்வரிசையில் நிகழ்பவற்றின் விசாரணை பொருந்ாதாம்; ஆகவே, அநந்தமாய் வரத்துடையனவாய அவைகளின் உபாதானமாகிய ஆன்மதத்துவம் அநந்தமாயும் ஏகமாயும் வரவற்றதாயும் சித்துருவமாயும் இருக்கின்றதெனத் தங்களாற் றெரிசிப்பிக்கப்பட்டதை யடியேன் அறிந்துகொண்டேன். இவ்வாறு இரகசியக்கருத்தை யறிதலானே அதன்கண் விசேடங்கூறலால் மிகவுமுற்சாகப்படுத்தப் பட்டவராய் முற்கூறிய தூலப்பிரபஞ்சம் பொய்யென்றுணர்ந்து கொள்வான் சூக்குமபூதங்களே பஞ்சீகரணத்தால் தூலமாக விளங்கலின் சூக்குமப்பிரபஞ்சமாத்திரமாகவே யிருக்கின்றதெனக் காண்பித்துக் கொண்டு ஸ்ரீ வசிஷ்ட பகவான் கூறுகின்றார்:—பசுபக்ஷியாதிகள் மனுடர்கள் தேவதைகள் முதலியவற்றை முக்கியமாகவுடைய பிராணிகளின் கூட்டங்களுள் எப்பிராணி எவ்விடத்தில் எக்கான் மரிக்கின்றதோ அந்தப் பிரத்தியக்கான்மா அவ்விடத்திலேயே அக்காலே இம்மூன்றுலகத்தையும் காண்கின்றது, வேறிடத்திலேனும் வேறுகாலத்திலேனுமல்லவாம். அது என்ன வுபகரணத்தையுற்று என்ன சொரூபத்தை யுற்றுப்பார்க்கின்றதெனின்? தூம அர்ச்சிராதிமார்க்க அபிமானி தேவதைகளானே பரலோகத்தை யடைவிப்பதற்குச் சாதகமாயிருக்கும் ஆதிவாகிகமெனப்பெயரிய சித்தகங்கார மனோபுத்தி பத்து இந்திரியங்கள் பிராணன் என்பவையடங்கிய வாசனைமயமான சூக்ஷ்மசரீரத்தால் தனது இருதயத்தின்கண்ணே தகர ஆகாயத்தில் மூன்றுலகத்தையும் வாசனைமயமாகவே பிறப்பற்ற வியோமான்மா

அனுபவிக்கின்றது; மயக்கத்தால் வாசனைமய அவ்வத் தேகங்களையடைகின்றது; உண்மையாயோ அந்த வியோமாத்மா முன்மொழிந்த சிதாகாசவடிவமேயாம், ஆதலினானே ஜன்மாதிவிகாரங்களொன்று மின்றியதாம். "அதனொளியா லவிரிருதய நனியாற், றிதவிவ்வான் மாத்திகழ்வுறக்கிளம்பும்; கண்ணினின்றேனும் சிரகின்றேனும், அண்ணலவயவமயனின்றேனும்; அதுகிளம்புறவே யுயிர்ப்பும்பின்போம்." "கிளம்பலும் நிலேத்துக்களர்ந் திருப்பதுவும்" என்பதாதி யனேக சுருதி மிருதிப் பிரசித்த விருத்தமாக மரித்தவனுக்கு அவனிருதயத்திலேயே பரலோகதரிசனங் கூறல் எவ்வாறு கூடுமெனின்? உண்மையே, கரும உபாசனைகளையனுசரித்த விவகாரதிருஷ்டியானே அந்தச் சுருதிமிருதிகளின் கூற்றுகளாம். ஈண்டோ பரமார்த்த திருஷ்டியானே "இதன் கட்டுறக்கமும் இம்பரும்பிறவும், சுதமுற்றுள்ளே கற்பிதமெழுமே" எனச் சுருதிகூறுதலேபோல இருதயத்தின்கண்ணே பரலோககற்பனை பகரப்பெறும்; ஆன்மா வியாபகமாதலின் இருதயமும் அபரிச்சின்னமாம், ஆகவே அதன் சாக்ஷிக்கு இருதயஎல்லையை யகற்றிக் கிரியையற்ற தன்மையையுணர்த்தவும், உலகம் வாசனைமய மாத்திரமென வுணர்த்தவும், பரலோகம்போலக் கிளம்புதல் செல்லுதன் முதலியவையும் அவ்விடத்திலேயே கற்பனைமாத்திரத்தினலும் பொருந்தியேவிடுமன்றே, இதில் யாதொருகோதையுங்காணேம். இது ஓரிடத்தின்மாத்திரமன்றும்; மற்றே எல்லாஇடங்களிலுமேயாம், இயம்பியவாறே இறந்தனவும், இறந்து போவனவும், இறப்பனவும், ஆகிய ஜீவகோடிகளெல்லாம் எவ்வெத் திருசியக் கூட்டங்கள் மரணகாலத்தில் அந்த ஜகத்வாசனையின்கண்ணே யடங்கியிருப்பனவாகி எவ்வெவ் வாசனையின்கண்ணே கருமபரிபாகத்தை யனுசரித்துத் தனித்தனியாகத் தேவமனுட பசுவாதி யோனிபேதத்தா லுதித்தொளிர்கின்றனவோ; அவ்வவற்றையேயடைகின்றன. "எக்காலெலவையெவை யெழுகின்றனவோ, அக்காலவையவை யமைகின்றனவே" என மறையும் அறைகின்றது. ("இறக்குங்காலையிலெதையெதையெண்ணி" என்னுங்கீதையையு மீண்டுணர்க) இவ்வாறுலகம் வாசனமயமாகவே, பரமார்த்த திருஷ்டியால் மயல்வடிவமேயாமென நன்கு துணியப்பெறும்; மானதபூசை முதலியவற்றில் இரத்தினமயமணி மண்டபாதிகளையுண்டாக்கலே போலவும், சிந்தனையி னழுத்தத்தினற் றேன்றுகின்ற தையலைத் தழுவுவதால் வரும் சுகமேபோலவும், பிரயத்தனமில்லாமலே மனோராஜ்ஜியத்தாற் றேற்றுகின்ற விலாசத்தைப்போலவும், இந்திரஜாலங்களான்மாலைபோல வரிசையாக ஆக்கப்பட்டவைபோலவும், கதைகளின் பொருள்கள் விளங்குவதுபோலவும், வாதரோகத்தால் பூமிநடுங்குவதைப்போலவும், பாலன்பயப்படக் கற்பிக்கப்பட்ட பேயைப்போலவும், நின்மலமாகிய ஆகாயத்தில் முத்துக்கூட்டங்கள் தோற்றுவதுபோலவும், ஓடத்திருப்பவர்க்கு ஓடமோடக் கரையிலிருக்குந் தருக்கள் ஓடுவதைப்போலவும், கனவிற்கண்ட நகரத்தைப்போலவும், நினைவாற் கற்பிக்கப்பட்ட ஆகாயதாமரையைப்போலவும், இவ்வுலகவிவகார கற்பனையைத் தனது அந்தக்கரணத்திலேயேதானே இறந்தவனும் பிறந்தவனுமாக நினைந்துகாண்கின்றனன். (ஆயின் யாங்ஙனம்? "வைதருமியமாய் வழங்கலினலும், பெரிய தருகனவுமுற் போலவுமல்லவாம்"=பாதித அபாதிதவிடயத்தன்மை வடிவவைதருமியத்தானே கனு முதலியவற்றைப்போலவாகாதாம்; என்னும் பகவானுகிய

ஸ்ரீவாதராயணரது சூத்திரமும், போக்தாவிற்கு நெடுங்காலம்ஆண்டு வைதருமிய மாகவே நியதமான விவகாராதிகளும் உண்மையனுபவங்களும் கூடுமாலோ வெனின்? உரைக்கப்படுகின்றது.) ஆண்டு நீண்டபழக்கத்தினாலும் பஞ்சீகரணத் தினது வன்மையினாலும் இவ்வுலகமானது அதுவேயிதுவெனத்தோற்றுவதாகவே ஜீவாகாசத்தில் விரிகின்றது; கூறிய இருகாரணத்தானே கனவினுமிதில் விலக்கணத் தன்மைமுதலிய விவகாரம் ஆக்கப்படும். நிலைபெறாத இயற்கையதாயிருத்தலினாலும் இவ்வுலகம்பொய்யென்பதற்குத் தடையேகிடையாது; மீண்டும் ஆண்டேபிறப்பு, பிறந்தபின் மரிக்கும்வரையுள்ள சேஷ்டை இறப்புமுதலியவற்றை யனுபவிப்பவ னாகி யாண்டிறந்தவுடனே மீண்டும் அவ்வாறே பரலோககற்பனையைச்செய்வன். வாசனையினுள்ளே அன்னியதேகங்க ளநேகம், அவைகளுக்குள் ளவ்வாறே யநேக மிருக்கின்றன, அவைகளுக்குள்ளுமநேகமென இச்சம்சாரங்கள் வாழைப்பட்டைக ளொன்றற்கொன் றாதாரமாயிருந்திலங்குவதுபோல இலங்குகின்றன. இவ்வாறு பொய்யாகிய ஜகத்தையொடுக்குவதானே ஆன்மாவானது சேடித்திலங்கும்; மரித் தவர்களுக்கு ஆண்டும், பிருதிவிமுதலிய பேருலகக்கூட்டங்களுங்கிடையா, உலக முறைகளுங்கிடையா, ஆயினும் அவர்கட்கு மயக்கத்தினால் யாவுந்தோன்றும், ஞானம்வந்தாலன்றி யிவைகளோயமாட்டா, இவைகளோய்ந்தா லான்மப்பிராப்தி யாம். மூலத்தைக்கெடுத்தாலன்றி யொடுக்குதன்மாத்திரையானே அதனீக்கமான துண்டாகமாட்டாதாதலின் அவ்வவித்தையைக்கெடுக்கும்பொருட்டுச் சூக்குமவடிவ மாகக்கூறிய பிரபஞ்சத்திற்குக்காரண அவித்தைமாத்திரமாக விருத்தலைக்கேட்டி! அளவிடுதற்கரிதாகிய இந்த அவித்தை நதியானது, சஞ்சலித்துக்கொண்டிருக்கும் சிருஷ்டிகளாகிய பேரலைகளோடுகூடியுங் மூர்க்கர்களாற் றாண்டமுடியாததாகியும், நானாவிதமான விஸ்தாரத்தையுடையதாகியும் இலங்கும். அவித்தைமுதலிய சகல கற்பனைகட்கும் அதிஷ்டானமாயிருந்து விளங்காநின்ற பரமார்த்தப் பிரஹ்மானந்த சமுத்திரத்தில் அடிக்கடி அநேகம் சிருஷ்டிப்பேரலைகள் கிளம்பியடித்துக்கொண்டே யிருக்கும், அவற்றிற்பழையனவாயுஞ்சில, புதியனவாயுஞ்சில, வேறுள்ளனவாயுஞ் சில, அதிகரித்துக்கொண்டுவிளங்கும். சிலர் குலக்கிரம மனோகுணங்களானே எல்லா வகையானும் ஒப்புடையவராயும்,மற்றுஞ்சிலர் பாதிபாகமொப்புடையவராயும், சிலர் அத்தியந்தம் விலக்ஷணராயும் இருந்து விளங்குவர். கேட்டசங்கையின் சமாதானத் தின்பீடமாக ஜகத்தின் நிலையையும் பிரகரண சாஸ்திரவிடயத்தையும் இதுவரை யியம்பி இனிச்சமாதானத்தையியம்பத்தொடங்கல்:—புராணபாரதாதிகளைச்செய்யுங் காரியத்தானே பிரசித்தியோடு கூடியும், தக்கபடி சம்பவித்த ஜன்மம் சாஸ்திராதி ஞானம் பிரஹ்மவித்தை முதலியவற்றோடு கூடியும் இராநின்ற வியாசசிருஷ்டி யலை களில் இந்த வியாசமுனிவரை முப்பத்திரண்டாவதென யானுணர்கின்றேன். அம் முப்பத்திரண்டிலும், பன்னிரண்டுபெயர்கள், பிரஹ்மவித்து, பிரஹ்மவித்துவரன், பிரஹ்மவித்துவரீயான், பிரஹ்மவித்துவரிஷ்டன் எனப்பிரசித்தமாய நான்கு ஸ்தா னங்களில் இளைப்பாறுமையின் அற்பமதியுடையவர்களாயும், குலம் ஆகாரம் அதி கார சம்புந்தசேஷ்டைகளி லொத்தவர்களாயும் இருந்தார்கள்; பத்துப்பெயர்கள் எல்லாவகையானும் சமானமானவர்களாயிருந்தார்கள், மற்றையர்களோ குலவிலக்ஷ ணர்கள். இன்னும் அனேகம்பேர்கள் முன்னிருந்தவர்களைப்போலவும் வேறுவித

மாகவும் வியாசர்களாகவும் வான்மீகிகளாகவும் பிருகு அங்கிர புலஸ்தியர்களாகவும் உண்டாவார்கள். நரர்களும் தேவஇருடிகளும் தேவகணங்களும் அளவிறந்தவர்கள் கூடிக்கூடியும் ஒவ்வொருக்கால் தனித்தனியாகவும் உற்பத்தியாகியாகி யொடுங்கிக் கொண்டேயிருக்கின்றார்கள். பிராஹ்மகற்ப அவயவபூதமாகிய 72 - வது திரேதா யுகமானது இப்போதிருக்கின்றது, கற்பங்தோறும் முன்னரிருந்தது இனிமேலு மிருக்கும், இவ்வுலகங்களும் நீயும் நானும், முன்போன்றவர்களாகவும் வேறு பட்டவர்களாகவுமுண்டாவோம், முன்னுண்டாயிருந்தோம் இப்போதுண்டாயிருக் கின்றோம்; இவையாவற்றையும் யானறிவேன். அற்புத கருமத்தையுடையவரும், யாவற்றையுமுணர்ந்தவரும் ஆகிய இவ்வியாசமுனிவருக்கு இந்தப்பிரகாரம் முறை யாக இவ்வவதாரம் பத்தாவதெனக் குறிப்பிக்கப்படும். (இந்த 10 - வதென்பது முன்மொழிந்த கடைப்பத்துட்கொள்ளலாம்) யாமநேகமுறை வியாச வான்மீகிக ளோடு உண்டானோம், இங்ஙாமே தனித்தனியாகவும் அநேகமுறை உண்டானோம், இங்ஙாமே ஒப்பானவராகவும், ஒப்பில்லாதவராகவும், யாவுந் தெரிந்தவராகவும், உண் டானோம்; இங்ஙாமே நானா ஆகாரமுடையவராகவும், ஒப்பான அபிப்பிராயமுடை யவராகவும் உண்டானோம். இன்னுமிவர் மீண்டும் எண்முறை அவதரிக்கப்போகிறார்; மறுபடியும் மகாபாரதமென்னும் மகா இதிகாசத்தைச் செய்யப்போகின்றார்; வேத விபாகங்களெல்லாஞ்செய்து, தமது வம்சத்திற்கும் பரதவம்சத்திற்கும் கீர்த்தியை யடைவித்து, இரணியகருப்பாது அதிகாரமாகிய பிரஹ்மப்பட்டத்தை யனுபவித்து விதேகமோக்ஷத்தையடைவர். அவரிப்போதோ ஜீவன் முக்தராக இருக்கின்றார், மனத்தை வென்றவராகியும், மோகக்கட்டினின்றும் நீங்கிச் சாந்தராகியும், அத னானே யானெனதென்னுங் கற்பனையற்றவராகியும், அதனானே சோகபயங்களற்றவ ராகியு மிருத்தலின் இவ்வியாசர் ஜீவன் முக்தரென யாவரானுங் கொண்டாடப்படு கின்றனர். தனம், பந்து, வயது, கருமம், வித்தை, விஞ்ஞானம், சேஷ்டை, முத லியவற்றானே, சிலர்கள் சமானர்களாயும், சிலபோது சிலபால் சமானமின்றியவர்க ளாகவு மிருப்பர்கள். சிலபாலவை சிலகால் நூறு சிருட்டிகளிலுண்டாகின்றன, சிலபா லொருபோதுமுண்டாகாமலேயிருக்கின்றன, இவ்வண்ணம் இம்மாயாகாரிய மானது அந்தமற்றமர்கின்றது. தானியராசியை அளக்கும்பொருட்டு அடிக்கடி மரக்கான்முதலிய அளவு கருவிகளினிரப்பி மீண்டுங்குவித்தபோது முன்னிருந்தபடி யிராமல் மேலிருந்தது கீழும் கீழிருந்தது மேலுமாயிருப்பதேபோல அளவிறந்த இப்பிராணிக்கூட்டங்களானவை விபரீதத்தையே யடைந்துகொண்டிருக்கின்றன. காலமாகியகடலினின்றும் சிருஷ்டிவடிவங்களாகிய அலைகள் அடிக்கடி முன்போலவே யவயவங்கண்முறையாய்ச் சேர்ந்தேனும், மாறிமாறிக்கொண்டேனும் எழுந்தடித் துக்கொண்டேயிருக்கும். ஜீவன் முக்தனுக்கு யோகபலத்தால் அதிகாரசம்பந்த மான நானா சரீரங்களைக் கவர்ந்தபோதினும் முக்தி சொரூபத்திற்கு யாதொரு கெடு தலுமில்லையாகும். அறிஞனவன் வயப்பட்ட சித்தமுடையவனும், அவித்தை மறைப்பற்றவனும், அதனானே அவித்தை மறைப்பா லுண்டாகிக்கொண்டிருந்த அசார தேகாதிமயமாய்த்திரிதல் மகிழ்வேயிலாமை முதலியவைகளெல்லா மில்லா

மையின் சர்வவிகற்பங்களுமற்றவனும், சொரூபசாரமயனும், பரமசாந்தியை யடைந்து திருத்தனுமா யிலங்கிக்கொண்டிருப்பன்; ஆதலினால் ஜீவன் முக்தியே ஞானபலமாம், அது ஒருபக்கத்ததன்றாம்.

3-வது, சிருஷ்டிவர்ணனம் முற்றிற்று.

## 4-வது பௌருஷ வருணனம்.

இப்போது, முக்தர்களுடைய அனுபவத்தானே முக்திகட்கு விசேடமில்லாமை கீர்த்திக்கப்படுவதுடன், மூலங்கிடைப்படும்பொருட்டுச் சாஸ்திரீயமான புருடப் பிரயத்தினமும் கீர்த்திக்கப்படும்:—நித்தியமுக்த இயற்கைமேய ஆன்மாவிற்கு அஞ்ஞானமறைப்பே பந்தமாம், ஞானத்தா லதனழிவே முக்தியாம்; அஞ்ஞானமானது அழிந்துபோனால் அறியப்பட்ட சித்திரப்புலிபோல விவகாரங்காணப்பட்ட போதினும் குதூகலத்தின்பொருட்டேயாமன்றி யதார்த்தத்தின் பொருட்டாகாதாம் என ஜீவன்முக்தி விதேகமுக்திகட்கு விசேடமியாதொன்றுமின்றாம் என்பதாகப் பூர்வ சங்கையைச் சமாதனித்து, இப்போது கூறிவந்த ஆன்மதத்துவத்தை விஸ்தாரமாக வுபதேசிக்க வேண்டுமென்னு மிச்சையுடையவராய ஸ்ரீவசிஷ்ட பகவான் முதலில் மூலமானது கிடைமாகும்பொருட்டுப் புருடமுயற்சியை வற்புறுத்துகின்றார்:—ஹேபிரியதரிசன! கடலின் கண்ணே சலனமில்லாத ஜலத்தன்மையினாலும், சலனத்தோடு கூடிய ஜலத்தன்மையினாலும் ஜலத்திற்கு ஜலத்தன்மை மாறாததாய்ச் சமமாகவேயிருப்பதேபோல, ஜீவன்முக்த விதேகமுக்தமுனிவர்களது சொரூபஸ்திதியும் சமமாகவேயிருக்கும். முக்தத்தன்மையானது தேகத்தோடு கூடியதேயாகுக அல்லது தேகத்தோடுகூடாததேயாகுக, ஆயினும் விடயத்தின் அதீனமாக ஆகமாட்டாதாம்; முக்தியானது சுவர்க்காதியைப்போல விடயாதீனமாகுமாயின் அங்ஙனமே விடய ஏற்றத்தாழ்வால் விடமமாயேயன்றோ முடியும். அற்றேல் அங்ஙனமாயினும், போக்துருத்தன்மை அபோக்துருத்தன்மைகளா லிக்கப்பட்ட சிறப்புளதேயாகும், தேகத்திதியானது போகப்பொருட்டேயாதலின் எனின்? இரமிக்காத போகத்திற்குப் போச்சிய அனுபூதிகள் அடைவுறல் யாங்ஙனம்? போகங்களிற் சத்தியபுத்தியினானே போக்துருத்தன்மை யபிமானத்தானே போகத்தைப் புசிக்கின் அன்றோ போகத்தாலாக்கப்பட்ட சிறப்பெய்தும். அசங்க உதாசீன ஆன்ம ஒருமையைக்காணும் மகானுக்கஃதில்லையன்றோ! ஆயின் யாங்ஙனமிவனுக்குத் தேகத்தோடு கூடியிருக்குந்தன்மையெனின்? ஜீவன் முக்தராயும் முனிசிரேஷ்டராயும் இராநின்ற வியாசரைக் கேவலந் தேகத்தோடு கூடியவராக நமது கற்பனையானே எதிரிற்காண்கின்றோமேயன்றி அவருடைய உள்ளத்திருக்கும் தேகமற்ற நிச்சயத்தைக்காண்கிலோம்; ஆகவே இவர் தேகத்தோடு கூடியவர்போல நம்மனோரால் பார்க்கப்பட்டபோதினும் தமது நிச்சயத்தானேயுள்ளே தேகமற்றவராகவேயிருக்கின்றார், ஆகலின் இவர்க்குச்சுவானுபவத்தானே விசேடமின்றாம். ஞானவடிவமாயிராநின்ற தேகத்தோடுகூடிய கூடாத முக்தர்கட்கு யாதுபேதம்? போதமில்லாமையே பேதஞ்செய்வதாம் அஃதொழிந்து போதமாத்திரம் எஞ்சி நிற்குங்கால்

பேதஞ்செய்வது யாது? அலைகளோடுகூடியகாலத் தெண்ணீரிருந்ததோ அலைகளில்லாமற் றெளிந்துள்ளபோதும் அந்நீரேயிருந்தது, நீர் நீரேயன்றி வேறுமோ! நீரின் கண்ணேனுமோரொருகால் நிர்மலத்தன்மையின்மையினுனே யாக்கப்பட்ட விசேடமாதல்கூடும், வேறுவமையின்கண் ணதுவு மில்லையன்றே. எங்ஙனமெனின், தேகத்தோடுகூடிய கூடாதமுக்தர்கட்குப் பேதஞ்சிறிதுங்கிடையவே கிடையாது, அசைந்த போதினும் அசையாமலிருந்தபோதினும் காற்று வாயுவேயாகுமன்றே (ஈண்டுச் சிலபுத்தகங்களில் "மயோக்தம் கேவலீபாவம் தத்தத் ஸ்மரணஜீவனம், ஸதேஹஸ்ய விதேஹஸ்ய சமதைவ ஸதாசிவா" என்னும் சுலோகம் அதிகமாகக்காணப்படுகின்றது, அதன் பொருளிதுவாம்:—அற்றேல், அசைவோடுகூடிய வாயுவானது குளிர்ச்சியானது தருதரங்கமுதலியவற்றின் அசைவிற்கேதுவானது துவக்கிந்திரியத்தாலுணரப்பெறுவதும் ஆம், அசைவோடு கூடாததோ அதனினும் மாறுயதாம் என ஆண்டும் வேற்றுமையுளதேயாகும், ஆகவே யாங்ஙனம் அதனின்மையின் கண்ணிது, திருட்டாந்தமாகும் எனின்? ஹே இராமச்சந்திர! அவ்வத்திருஷ்டாந்த ஸ்மரணத்தின் சாரபூதமும் வஸ்துவின் சொரூபநழுவாத இலக்கணம் வாய்ந்ததும் ஆய்க்கூற விழைந்ததை யெவ்விடத்தும் உவமித்துக்கொள்ளுதி, விளம்பவிழையாததை வேண்டாம் காரியபேதத்துற்ற விலக்ஷணத்தன்மை கற்பிப்பாய்; ஆகவே, ஓரங்கிசத்திற்றிருட்டாந்தமாகுமேயன்றி யெல்லா அங்கிசத்தும் ஆகாதாம். ஈண்டுத் தேகத்தோடுகூடிய கூடாதமுக்தி ஐக்கியம் உபமேயமாகக் கூறப்பட்டது, விளம்ப விழைந்த அவ்வொப்புப்பொருள் ஸ்மரிக்கப்படும், அதன் ஸ்மரணம் அசைவோடு கூடிய அசைவிலாத காற்றொருமைபுபமானமாம் அதனது ஜீவனம் உபமேயவொப்பினுல்லாசத்தைச் சம்பாதிப்பதாம். கேவலீபாவம் அசைவை விடுதலான் கேவலமோரங்கிசத்தானே யொருமையொப்புமைகொண்டு உவமை விடயஞ்செய்யுதி யென்பதாம்; எனவே பலித்ததிதுவாம். தேகத்தோடு கூடியவனுக்கும் கூடாதவனுக்கும் எப்போதும் மங்களமுக்தியானது சமமேயாம்.) மேலும், தேகத்தோடிருத்தல் இல்லாமை பந்தம் மோக்ஷம்முதலிய விவகாரமும் அஞ்ஞதிருஷ்டியினுனே கற்பிக்கப் பட்டமையினுனேயாமன்றிப் பரமார்த்த திருஷ்டியினுனே யின்றும்: வசிஷ்டர் முதலிய எம்மனோர்க்கும் வியாசருக்கும் தேகத்தோடுகூடிய முக்தத்தன்மையேனும் கூடாதமுக்தத்தன்மையேனும் பரமார்த்த திருஷ்டியின் விஷயமாகாதாம்; மற்றோ, துவைதசூனியமாயிராநின்ற தன்னுண்மையொருமையேயுளதாம் என அதனடைவு வடிவஞான பலத்தில் விசேடமின்மையினுனே ஞானத்திற் கநித்தியபலத்தன்மைத் தோடச்சங்கைக்கவகாசமின்றும், ஞான முதித்ததும் தேகம்வீழ்ந்து விடுமென்பது மின்றும், தனது விரோதி யங்கிசத்திற்கே ஞானந்தாற் பாதமுண்மையின், தேக தாரணமானது பிராரப்தபலமாகலின் ஞானதுல்லியமா யுபஜீவியமாயிருத்தலின் ஞானத்தோடு முரண்படாமையின் உபாதானமாகிய நித்திரைநீங்கியும் கனுச் சமஸ்காரம் சிறிதுபோது தொடர்தல்போல அவித்தைநீங்கினும் நுகர்வினைவரையுந் தேகாதிகளின் தோற்றம்பொருந்தும். இவ்வாறு தொலையா வையத்தைத் தொலைத்துத்தொடங்குந் தொடர்ச்சியைத் தெரிவிக்கின்றார்:—ஹே இராகவ! எம்மானுப தேசிக்கப்படுவதும், செவிக்குப்பூடணமாவதும், அஞ்ஞானக்குருட்டுத் தனத்தை யழிப்பதும் ஆகிய பிரகிருத இஞ்ஞானத்தை நீ கேட்குதி அற்றேல் சமைதமை

முதலிய சாதனசம்பத்தோடு கூடிய சுகர் முதலியோருக்குச் சிரவணம்பலிதமாம். இப்போதுள்ள மற்றையர்கட்கு யரங்ஙனம் அது பலிக்கும், சாதனஞ்சம்பாதித்தல் முடியாதகாரியமன்றோ வெனின்? புருடமுயற்சியாற் சாதிக்கமுடியாததொன் றில்லையாம், இச்சம்சாரத்தின்கண்ணே எப்போதும் எல்லாராலும் விடாதனுட்டிக்கப்பட்ட புருடமுயற்சியினால் எல்லாப்பொருள்களும் அடையப்படும். யாவராலும் எப்போழ்தும் யாவுமே அடையப்படுமேலாயின் எங்ஙனஞ் சிலவிடத்தில் முயற்சி பயன்படாமற்போதல் கூடும்! விடாமுயற்சி வேண்டுமென்றுணரவேண்டும், வேண்டவே யுபேக்ஷிக்காமன் முயலிற்கூடாதகாரியமென்னே! சாஸ்திரத்தில் விதித்தகாய வாக்குள்ளஅசைவு வடிவகருமத்தின்பலம் உளத்தூய்மைவாயிலாய் ஞானமாம், அஃதடைவுறவே இருதயத்திற் காமக்குரோதாதி சந்தாபத்திடர்நீங்கிய ஜீவன்முக்திச்சுகம் ஈண்டிந்துவுதித்தல்போலவுதிக்கும். “அஃதொன்றயன்றன் ஆனந்தமாகும், அருமறைகற்றும் அக்காமத்தகப்படாற்கு” எனமறையும் அறைகின்றது; “இவ்வுலகுற்றகாம வெழில்கொழி யின்பந்தானுந், திவ்வியமாகத்தேவர் சேரும்பேரின்பந்தானுந், தவ்வவாவழிவினலாந் தனிப் பெருமின்பைநோக்கி, னெவ்விலை மூவைந்தொன்றுங் கலையினு ளொன்றையன்றே” எனமிருதியுமறைகின்றது. அவை யாவுமே புருடமுயற்சியினனேயாம், மற்றொன்றுலாகாதாமாதலிற் புருடமுயற்சியே செய்யத்தக்கதாம். அங்ஙனஞ்செய்யினும் தெய்வத்திருவருளிலதேன் முயற்சி வீணுதல் காணப்படுகின்றது, படவே “மேன்மைமிக்கனவெலாமிக்கவிக்கினமுறும்” எனப்படலான் அதன்பயன் கிட்டுமெனவெண்ண வொண்ணுதெனின்? தெய்வமானது முயற்சியிலடங்கிப் பலமற்றதாமென மேற்கூறப்படுமாதலின் அதற்குச் சுதந்திரமின்றும், நடத்தல் புசித்தன்முதலிய முயற்சியானவை தொழில்வாயிலாய்த் தேசாந்திரத்தையேனுந் திருப்தியாதியையேனும் அடைவிப்பதைப் பிரத்தியக்ஷமாகக்கண்டோம், அஃதன்றி மோகத்தையுற்ற மந்தர்களாற் கற்பிக்கப்பட்ட தெய்வமென்றொன்றின்றும், முயற்சியைப்போ லதுகாணப்பெறுவதில்லையல்லவா! புகழத்தக்க அந்தமுயற்சியென்பது யாதெனின்? சாதுக்களினிதுபதேசித்தவாயிலாகவே மனோவாக்காயசேஷ்டைநடத்தல் முயற்சியாம், அதுவேபயனுடையதாம், பிறவெல்லாம் உன்மத்த ருழல்வதொக்கும். யாவன் எப்பொருளை வேண்டுகின்றனனோ அதன் பொருட்டருந்தொழிற்புரிவனோ அவன் இடைபாதியில் விடானாயின் அவசியம்முறையாக அதையடையாநிற்பன், சிலவிடையூறுகளாற்றடைப்படல் நூலிற் கூறப்பட்டமுறையை நழுவியதானேயாம், ஏனெனின் அங்கத்தோடுகூடி யனுட்டிக்கப்பட்ட கருமம் அவசியம் பயனைப்பயக்குமென்பது திண்ணமன்றோ. அந்நியமமே அநேக சம்வாதத்தாற் றிடப்படுத்தப்படும்:—ஒருசிறந்தபிராணியே மூவுலகஐசுவரியசுந்தரத்தோடுகூடிய தேவேந்திரப்பட்டத்தைப் புருடப்பிரயத்தினத்தானே இனிது அடைந்தது. மற்றொரு சிறந்தபிராணியே மிக்கபுருடமுயற்சியினனே அதிவிரைவிற் கமலாசனஞ் சேர்ந்துவாழும் ஹிரண்யகருப்பத்தன்மையாகி யப்பிரஹ்மாவாந்தன்மையையேனும் அல்லது சகுணமூர்த்தியின் சாரூப்பியமுக்தியையேனும் அடைந்தது. ஒருசிறந்தபுருடனே தனது பெரும்பிரயத்தனத்தினனே கருடக்கொடியோனாகிய புருடோத்தம சாரூப்பியமுக்தியை யடைந்தனன். ஈண்டுறுமொருசிறந்தபுருடனே மிகுந்த முயற்சியினனே, அம்பிகையோடுகூடி விளங்கா

நின்ற இளநிலாவணிந்த ஜடா சூடத்தன்மையாம் சாரூப்பியமுத்தியை யடையா நிற்பன். முன்முடித்ததெனவும், இப்போதியற்றியதெனவும் புருடமுயற்சியை யிருவிதமாயறியவேண்டும். பழைமையானது புதிதாகவாற்றும் புருடமுயற்சியி னானே விரைவின் மறைப்பட்டுப்போம். அற்றேல், அநந்தங்கோடி கற்பங்களிற் சம்பாதிக்கப்பட்ட அநந்தம் பழைமையான கருமங்களின் வெற்றியானது அற்ப மாயிப்போதனுட்டித்த புதியமுயற்சியால் எவ்வாறுண்டாகுமெனின்? முயற்சி யுடையவர்களாயும், அதிதிட அப்பியாசமுடையவர்களாயும், பேரறிவு உற்சாக முதலியவற்றோடு கூடியவராயும் விளங்கும் பிரளய அதிகாரி தேவதைத் தலை மையையடைந்த மகாபுருடர்களால் மகாமேருமுதலியமலைகளும் தூளாய்மடிக்கப் படுகின்றன வாதலின், கருமங்கள் அநந்தங்களாயிருந்தபோதினும் அவற்றிற்கு மூல மொன்றேயாம். அதைக்கெடுக்கும் வாயிலாக வெற்றி சுலபமாம்; ஆகவே முன் முயற்சியை முடிப்பதற்கென்னகதையுளது. கூறியபொருளைமுடித்து அதை நழு வின் அனர்த்தத்தைக்கூறுகின்றார்:—சுருதிமுதலியவற்றானே நியமிக்கப்பட்ட எம் முயற்சியுளதோ அம்முயற்சியே அவசியம் சம்பாதிக்கத்தக்கதாம், அத்தகைய புருட னது நிரந்தரமாற்று முயற்சியே வாஞ்சித்த பயனை வழங்குதற்குச் சமர்த்துடைய தாம், நூனெறிக்குமாறாய் நடப்பினோ அநர்த்தமேயாம். அற்றேல், அற்ப தனம் பலம் மதியுடையவர்கட்கு மகாதனம் பலம் புத்தி முதலியவற்றானே சாதிக்கப்பட்ட புருடமுயற்சிப்பயன் கிடைத்தல் யாங்ஙனமெனின்? அவர்கட்கும் தங்களாற்கூடிய முயற்சியின்பரம்பரையானே இப்பிறப்பிலேனும் மறுபிறப்பிலேனும் மகாதனாதி களின் அடைவால் அதன் இலாபம் சித்தித்தல்கூடும்; புருடனுக்குக் கெட்டதசை யேனும் நல்லதசையேனும் எப்போது மிருப்பதென்பதாக இல்லையல்லவா என்பத னானே சாஸ்திரத்தை யனுசரித்துப் பிரயத்னம் அதன் சிதைவுகட்குப் பலத்தாற் பெரும்பேதமுளதாம்; புருடனுக்குச் சாஸ்திரசம்பந்தமாய முயற்சி தவிர்ந்தபோது தானாகவே இயற்கையாய இராகாதிகளாற் றன்னுடைய கெட்ட நெறியின் நிலையத் தாலாய தரித்திரரோக பந்தனாதி நிறைந்த ஓரொரு துர்த்தசையில், தனது கைமுத லியவையும் சுவாதீனமில்லாமையின் விரல் நுனிகளின் மிகப் பீடையாலாய வணக் கத்தாற் சம்பாதிக்கப்பட்ட உள்ளங்கையினிற்கு நீர்த்துளிகூட வாயில்விடும்படி கிடையாமற் பெரிதாகி மிகக் கஷ்டமுண்டாகின்றது; அப்புருடனுக்கே, சாஸ்திர சம்பந்தமாய முயற்சியின் றிடத்தால் தருமம்மேலிடவே பிரியவிரதாதிகட்குப்போன் றமைந்த ஏழுதீவையும் ஆளுமொருதசையிற்காக்கத் தக்கமைந்தர்கட்குத் தக்கபடி ஐசுவரியத்தைப் பங்கிடுங்காற் கடன்முதலியவைகளை உள்ளடக்கஞ்செய்த இந்த மகாப்பிருதிவியும் பெரிதாகமாட்டாதாம். "பிரியவிரத உத்தானபாதர்களிருவரும் நமக்குக்கள்ளித்தருக்கள்." எனப்புராணத்திலிவ்விடயம் பிரசித்தமாம்.

4 - வது பௌருஷ வருணனம் முற்றிற்று.

## 5 - வது முயற்சியை நிலைபேறுத்தல்.

இப்போது, முயற்சியானது முக்கியமாயின் ஈண்டேயவசியம் பலமுண்டா மென்பதற்கும், தெய்வமானது முயற்சியினும்வேறாக இன்றென்பதற்கும் ஊகமும்

உவமையும் உரைக்கப்படும். முயற்சிக்குவேறாகத் தெய்வத்தின்இன்மை, தெய்வத்தினும் முயற்சிக்குமுக்கியத்தன்மை முயற்சியினனே புருஷார்த்தசித்தியுண்மை யென்னுமியாவற்றையும் ஊகங்களானே யுணர்த்துவான் றொடங்குகின்றார்:— சாஸ்திரமரியாதையைக்கடவாது வாக்குமனங்காயங்களால் விவகரிக்கப்பட்ட எல்லா அதிகாரிகட்கும் எல்லாப்புருடார்த்தங்களின்சித்தியில் முதன்முதன் முயற்சியே நீலம்மஞ்சண்முதலிய வர்ணபேதங்களின்விளக்கத்தில் ஒளியேகாரணமாவதுபோல, காரணமாம். ["ஆதலினாலே யளவையதாகும், நீதிகழ்காரியா காரியநிலையில்" "யோகமதேறுமியோகியாமுனிக்குப், பாகமார்கருமஞ்சாதனப்படுமால்" என்பதாதிஸ்மிருதிகளுமுளவாம்.] அற்றேல், வித்தைதிருப்தியாதிகளைப்போலத் திருஷ்டபலமாதலின் அதன்சாதனத்தில் சாஸ்திரசம்பந்தமாய நியமத்திற்குயாதுபயோகம்எனின்? யாது மனதால் இச்சிக்கப்படுகின்றதோ அதுசாஸ்திரப்படி முயலிற்கிடைக்கும், இஷ்டப்படிசெய்யிற்கிடைக்காதாம், உன்மத்தன் ஒழுக்கம்போலுமாகி, விரும்பியபொருளைத் தாராதாம், மாறுகமோகத்தைத்தருவதாம், திருஷ்டபலமாயிருந்தபோதினும் சாஸ்திரஞ் சாற்றுதசாதனம் அன்னுவயத்தானும் வியதிரேகத்தானும் காணப்பெறுமையிற் சாதனமாகமாட்டாதாம். சாஸ்திரசம்பந்தமாய முயற்சிக்குச் சாஸ்திரத்தைச் சம்பந்தித்ததேபயனும், அசாஸ்திரசம்பந்தமானதற்கோ அசாஸ்திரத்தைச் சம்பந்தித்ததே பயனும் என்னும் ருகுதியின் பலத்தாலும் விவத்தையானது சித்திக்கும். எவ்வாறு எவன் முயல்கின்றனனே அவ்வாறு அவன் தன்கருமத்தையே அனுபவிக்கின்றனன். தெய்வத்தாலுபயவிபரீதத்தன்மை வரலாமேயெனின்? முன்னியற்றிய கருமமே பலத்தைக்கொடுக்கவந்தபோது தெய்வமெனப்படுகின்றது, அதனினும் அயலாகத் தெய்வம்காணப்படவில்லை. இன்னுந்தெளிவாகக் கூறுமிடத்துச் சாஸ்திரத்தைக்கடந்ததும், சாஸ்திரத்தைத் தொடர்ந்ததும்என முயற்சி யிருவிதமாகக்கூறப்பட்டுளது. அவற்றுண் முதலது அநர்த்தத்தின்பொருட்டும், மற்றது பரமார்த்தத்தின்பொருட்டும். ஒருகால் ஒப்புற்றனவாயும் மற்றொருகால் ஒப்பற்றனவாயும் இராநின்ற புருடமுயற்சிகளாகியமுன்னியற்றியதும் இப்போதியற்றியதும் இருஆட்டுக்கடாய்களைப்போலப் போரில்விடப்படின் இரண்டனுள் யாது குறைந்தவலுவோடு கூடியிருக்கிறதோ அது தோல்வியடைந்துபோம். ஆகலின், முயற்சியினனே இவ்வாறு முயற்சிக்கத்தக்கதாம், எவ்வாறு சோம்பலில்லாமற் சாஸ்திரநியமத்தாற் செய்யப்பட்ட நன்முயற்சியால் விரைவில் அதிகாரியானவன் பூர்வஞ்செய்ததை இப்போதுசெய்தலான் வெற்றிகொண்டுவிடுவானே அவ்வாறும். அற்றேல், மனுடர்களுக்கு "முக்கடனுண்டு" என்னும் மறையினனே தேவகடன் முதலியவற்றை யுடையவனுகக் கேட்கப்படுதலின். "ஆதலினிவர்கட்கஃதப்பிரியம், யாதிம்மனுடரறிவுறுவாரோ" எனக் கேட்கப்படுதலினனும் அவர்களாலிவனுக்கு அவசியம் இடையூறுண்டாக்கப்படினும் முயற்சி பலமற்றதாமெனின்? ஓரொருகாற் சமஅசமங்களை யடையாநிற்கும் பிறாது தன்னது முயற்சிகளை யிரு ஆட்டுக்கடாய்களைப் போர்க்குவிடுவதொப்பப் போர்க்குவிடவேண்டும், விடின் அவற்றுண்மிக்க பலமுடையது வெற்றிகொள்ளாநிற்கும், எங்ஙனமெனின், தோடங்களிருக்கினன்றோ தேவர்களின் விக்கினசக்திக்கு இடமாதல், தனது முயற்சியினனே தோடம் வெற்றிகொள்ளப்படின் அவரது விக்கினசக்தியானது மழுங்

கிப்போகுமன்றே? அற்றேற் சாஸ்திரஞ்சொன்னமார்க்கத்தில் முயல்பவர்கட்கும் சிலகால் நோய்முதலியவற்றின் அநர்த்தம் எங்ஙனங்காணப்படுகின்றது எனின்? யாண்டுச் சாஸ்திரப்பிரயத்தினஞ் செய்துகொண்டிருக்கும்போதும் அநர்த்தம்வருகின்றதாயின் அக்கால்ஆண்டு அநர்த்தகர்த்தாவாகிய தனது முயற்சியேவலுவுடையதென அறியவேண்டும், வேண்டவே அதுவும் வெற்றிகொள்ளப்படுவதேயாம். பற்களாற்பற்களைக்கடித்துப் பொடித்து மேலானமுயற்சியைப்பற்றி இப்போதியற்றும் சுபமுயற்சியினனே இடையூறைச்செய்ய எழுந்தமுன்னியற்றிய அசுபமுயற்சியை வெற்றிகொள்ளவேண்டும். முன்னர்ச்செய்த கருமபலமானது என்னையேவுகின்றதென்னும் மதியை மிகவும் வலுவாக உதைத்துத்தள்ளிக் கொல்லவேண்டும் ஏனெனின், அது பிரத்தியக்ஷத்தினு மதிகமன்றன்றே. அசுபமாகிய முன்முயற்சியானது சுயமாக அடியோடு நன்றுகமாளும்வரையும் மகாமுயற்சியோடும் சுபத்தையே பழகவேண்டும். முன்னியற்றியதே பிரபலமாக ஏன் ஆகமாட்டாதெனின்? முன்றினம் அஜீர்ணதிதோஷமுண்டாயின் இன்றியற்றும் அன்னமுண்ணுமை முதலியவற்றுனே நீங்குவதேபோல முன்னியற்றிய அசுபங்கள்யாவும் ஐயமில்லாமல் இப்போதியற்றும் சுபங்களால் அழிந்தேபோம். முன்னியற்றிய துரதிர்ஷ்டத்தை இப்போதியற்றும் சுகிருதங்களால் எப்போதும் மேன்மைமிக்கெழுந்த மதியினனே கீழேதள்ளிமறைத்து ஆன்மாவின்கண்ணே குடும்பங்கடத்தலைச் சம்பாதிக்கும்பொருட்டுச் சமதம சிரவணதிசாதனங்கள் உண்டாவான் முயலல்வேண்டும். நற்காரியங்களில்முயலாத மனுடக்கர்த்தபங்கட்கொப்பாக அறிவுடையாரிருக்காமல் நூலிற் கூறியபடி பெருமுயற்சியே செய்தல்வேண்டும். வேண்டவே சுவர்க்கமோக்ஷங்கள் சித்தித்தல் எளிதாம். மனுடர்களாகிய பகைவர்களாலிடப்பட்ட இரும்புக்கூண்டினின்றும் சிங்கம் வெளிச்செல்வதுபோலும், அசுரர்களாலாக்கப்பட்ட மாயைக் கூண்டினின்றும் மகாவிஷ்ணு வெளிவருதல்போலவும் புருடப்பிரயத்தினத்தைப் பின்பற்றித் தானே பலாத்காரமாய்க் குடும்பக்குகையினின்றும் வெளியேசெல்க. தன்னுடையதேகமானது அழிந்துபோவதாமெனத் தினந்தினம் நோக்கவேண்டும், முயல்வின்றிய மிருகசமத்தகைமையை அடியோடுவிட்டு, மகான்கட்குசிதமாய சாதுசங்க சத்சாஸ்திராதிகளைப்பற்றுக. புண்ணிற்புழு குருதிசீக்களைக்குடித்து ரமிப்பதேபோல மனையிலிருக்கும் அற்பமான காந்தையன்னபானதி இரத்தசீக்களைப்புசித்துச் சர்வபுருடார்த்தசாதனமாய யவ்வனத்தை வீணகச் சாம்பலாய்ப்போக்கலாகாது. சுபப்பிரயத்தினத்தினலே விரைவிற் சுபபலத்தையடைவன்; அசுபப் பிரயத்தினத்தினலே எப்போதும் அசுபத்தையேயடைவன் முற்செய்த சுப அசுபங்களை விடுத்து வேறுகத்தெய்வமென்றென்றின்றும். இப்போதியற்றப்பட்ட அதிருஷ்டரூபங்களாம் சுபாசுபங்கட்குப் பிரத்தியக்ஷப்பிரமாணம் சுருதியாம். திருஷ்டங்கட்கோ அன்னுவயவியதிரேகத்தோடுகூடிய சக்ஷுமுதலியவை பிரத்தியக்ஷப்பிரமாணங்களாம். அவற்றுற்சித்திக்கப்பட்ட இப்போதியற்றும் சுபமுயற்சியை விடுத்து, அதாவது, சர்வவிவகார கதம்பத்திற்கு அதிப்பிரசித்தமாம் பிரத்தியக்ஷ சுருதிப்பிரமாணமாகிய பிரபுவைவிடுத்து புருஷப்பிரயத்தினத்தில் ஐயமுடையவனுய்ப் பிரயத்நபலத்தைக்கெடுக்கும் அனுமானத்தா லறியப்பெறுந் தெய்வத்தைக் குறித்து அப்பிரயத்தினத்தாற்பயந்து யாவன் ஓடுகின்றனனே, அவன் தன்

புயங்களையே இவைகள்பாம்புகள் எனக்கண்டுபயந்து ஓடுகின்றவனேயாவன். தெய்வமானது என்னையேவுகின்றது எனத் தகிக்கப்பட்ட மதியையுடையவர்களும், முயற்சியினுனே புருடார்த்தத்தையடைவுற்ற விசுவாமித்திரர் முதலியோரது திருஷ்டியைக் காணுதவர்களும், ஆகியோரது முகத்தை இலக்குமியானவள் நோக்கி விலகிச்செல்வள். ஆகையாற் புருடமுயற்சியினுனே நித்தியாநித்தியவஸ்து விவேக முதலிய நான்கு சாதனங்களையும் முன்னர்ச் சம்பாதித்துக்கொண்டு பின்னுன்ம ஞானமாகிய பெரும்பயனைத்தரும் சாஸ்திரங்களை யினிது விசாரம்புரிக. சிரவணுதிகளிற் சிரத்தைபக்தி திரமாம்பொருட்டு அன்னியசேட்டைகளையெல்லாம் அகற்ற வேண்டும். நூலிற்கூறியபடி தனதுசிரவணமனனுதி சேட்டைகளாற்பரமார்த்த வடிவமாயிராநின்ற ஆன்மதத்துவத்தைச் சித்தத்திற்சிந்தியாதவர்களும், அதனுனே அந்தப்புருடார்த்தத்தைச் சம்பாதிக்கமுயலாத மூடர்கட்குக் கடக்கமுடியாத நரக காரணமாகிய மிகக்கெடுதியானபோகஆசையைச் சீயெனத்தள்ளவேண்டும். அம்மூடரைக்குறித்திரங்கவேண்டும். தக்கமனுடஜன்மம்கிடைத்தும் புருடார்த்தத்தையடையாவிடின் மீண்டும் இத்தேகங்கிடைப்பது மிகவும் அரிதினும் அரிதாம். அங்ஙனமே "ஈண்டறிவானேலின்பமெய்ப்பதம்பெறும், ஈண்டறியானேலிரும்பெருமழிவுறும்" எனமறையும் அறைகின்றது. அற்றேல், இவ்வளவுகாலம் முயல வேண்டுமென்பதாக முடிபறிய முடியாமையான், அது அந்தமின்றி யிளைப்பை மிகுதியும் விளைத்தலின் அதன்கண் எங்ஙனம் பிரவிருத்திகூடுமெனின்? பிரஹ்ம சாக்ஷாத்காரமுண்டாதலே முடிபாதலின் அம்முயற்சி முடிபற்றதாகாதாம். ["காண்பது காட்சியாற்கருதறங்கமழ்வது, மாண்பெளிதியற்றிடமரணமுமற்றதே" என ஸ்ரீ பகவானது திருமொழியிருத்தலின்] இளைப்பைக்குறித்து மிச்சிப்பதல்லவாம். அற்றேற் "பூர்ணஆகுதிப்பொலிவினுன்வேண்டிய, பூரணப்பொருள்களைப்பொருந்திடுமன்றே" என்பதேபோல இதுவும் விருப்பத்தைப் பிறப்பிப்பதுமாத்திரமாம், இளைப்பதிகமிருந்தாலல்லவோ பயனதிகங்காணலாமெனின்? இந்நியமம் உடன்பாட்டிற்பிறழ்ந்துவிடும், ஏனெனின் பெரும்பிரயத்தனஞ்செய்தபோதினும் கல்லினின்றும் எண்ணையேனும் இரத்தினமேனும் எடுக்கமுடியாதன்றே? எதிர்மறையினும்பிறழும். எங்ஙனமெனின், இரத்தினத்தினுண்மையைப் பரீக்ஷிக்கும் சாமர்த்தியமுடையவர்கட்கு இளைப்பில்லாமலே அதிக இலாபங்கண்டோமன்றே. முன்மொழிந்ததற்குத் திருஷ்டாந்தமெவ்வாறெனின்? குடமானது நீரை நிறைவித்தலினுனும், ஆடையானது நீட்சிமுதலியவற்றினுனும் எங்ஙனம் அளவைகளால் துணிவுபெற அளக்கப்படுமோ, அங்ஙனமே புருடமுயற்சியும் அளவிடப்படில் பிரஹ்ம சாக்ஷாத்காரப்பயன் கைவரும் வரையிருக்கும். இருக்கவே, அளவோடு கூடியதென்பது நியமமேயாகும். அந்தப் புருடப்பிரயத்தினமும், நன்னூல் நல்லோர் கூட்டம் நல்லொழுக்கம் என்பவற்றோடுகூடித் தனதுண்மைப்பயனைப் பயக்குமென்பததற்கியற்கையேயாம்; மாறுபினோ யாதொருபயனையுந்தராதாம். இது புருடப்பிரயத்தினத்திற்கு வடிவமாகும். இத்தன்மையதின் பிரயோஜனம் பிறழுவேமாட்டாதாம், இவ்வாறு விவகரித்துக் கொண்டிருக்கப்பட்ட நரனுடையமுயற்சியானது ஓரிடத்திலும் ஒருகாலத்திலும் பயனற்றதென ஆகவேமாட்டாதாம். கூறியது திடப்படும்பொருட்டுப் பிறவிடத்திலும் நியாயமான புருடமுயற்சியின்பயன் பிறழ்

தலில்லாமையைக் கண்டுகொள்ளவேண்டும்; எவ்வாறெனின், தீனத்தன்மையினு லும் ,தரித்திரத்தினுலும் உண்டாகப்பட்ட துயரத்தோடுகூடியவர்களாயினும் நளன் அரிச்சந்திரன்முதலிய புருடோத்தமர்கள் புருடப்பிரயத்தினமாத்திரத்தானே தேவேந்திர சமானத்தன்மையை யடைந்தார்கள். இளேப்பில்லேயாயின் அந்தியத்தில் அதைச்செய்யலாமே இப்பொழுதே யதனுலாகவேண்டியதென்னெனின்? பாலிய முதற்கொண்டு மிகமிகவும் பயின்றநன்னூல் நற்கூட்டமுதலிய குணங்களுடன் கூடிய புருடமுயற்சியால் அதன்பயன் இனிதாக அடையப்படும். விரைவிற்செய் யப்பட்ட மிருதுவான இளமுட்போன்றவற்றுற்பயனின்றும். இவ்வண்ணம், எம்போன்ற ஜீவன் முக்தர்களானே கண்கூடாய்க் காணப்பட்டது, அனுபவிக்கப் பட்டது, கேட்கப்பட்டது, சாதனங்களாற்சாதிக்கப்பட்டது, அதனேத் தெய்வத்தா லடைந்தோமென எத்துட்டமதியினர் எண்ணுவரோ. அவர் கெட்டவரேயாவர், இவ்வாறிருக்குமாயின், ஏன் யாவரும் முயலவில்லேயெனின்? அநர்த்தத்திற்குக் காரணமாயும் அர்த்தத்தைக் கெடுப்பதாயுமிருக்கும் ஆலசியமா (சோம்பலா) னது இவ்வுலகத்திலில்லாதிருக்கும் பக்ஷத்தில் மிகுந்த சம்பத்துடையவனுகவேனும் பெரும்பண்டிதனுகவேனும் யாவன்ருனுகான்! ஆலசியத்தினுனே கடற்கரைகளோடு கூடிய இப்பூமண்டலமானது மனுடபசுக்களானும் தனமற்றவரானும் நிறைந்திருக் கின்றது; ஆகையால் ஆலசியத்தைவிடுத்துப் பாலியந்தொடங்கி நல்லோர்கூட்டமுத லியவற்றேடும் சேர்ந்து நல்லொழுக்கத்திலேயே வாழ்நாளேக்கழிக்குக. அத்தியந் தம் பாலியத்திலிருந்தே செய்துவரத் தொடங்கமுடியாதாயின், யவ்வனந்தொடங்கி யேனும்முயலுக. சஞ்சலத்தோடுகூடிய பாலர்களாற்கற்பிக்கப்பட்ட விளேயாட்டுகளா னேதிரியாநின்ற பாலியமானது சென்றபின்னர், அதிகாரி குருசிசுருஷைமுதலிய வையியற்றச் சமர்த்துடைய கரங்களாலலங்கரிக்கப்பட்ட யவ்வனமுதற்கொண்டே னும் பதத்தினும் அதன்பொருளினும் அதனேச்சோதிப்பதினும் குசலமான தூய மனத்தையுடைய விற்பன்னனுய், ஆசிரியர் தன்னெடுகற்றேர் போறிவாளிகள்முத லிய நல்லோர்கூட்டங்களோடுகூடி மிகமுயற்சியோடும் தன்னுடைய சாந்தியாதி குணங்கட்குப் பெரும்பயனுண்டாமென்றும், இராகாதி தோடங்கட்கு மகா அநர்த்த முண்டாமென்றும், இனிதாக ஆலோசித்தல் வடிவவிசாரணேகளேச்செய்யவேண்டும். ஸ்ரீ வான்மீகிமுனிவர்கூறல், இது அரிட்டநேமியரசர்பொருட்டு என்பதாகத்தேவ தூதன் கூறியதாகும், ஸ்ரீவான்மீகி முனிவரானவர் மேற்கூறியபிரகாரமாக ஸ்ரீ வசிஷ் டமகாமுனிவர்கூறியதைப் பரத்துவாஜர்பொருட்டுக்கூறியபோது பகற்சென்றது, சூரியனும் அஸ்தத்தையடைந்தனன். பரத்துவாஜர்முதலிய முனிவர்சபையும்ஸ்ரீவான் மீகிபகவானுக்கு நமஸ்காரத்தைச்செய்துவிட்டுச் சாயங்காலஞ்செய்யவேண்டியதாய சந்தியுபாசனே அக்கினிஹோத்திராதிகளேச் செய்யும்பொருட்டு ஸ்நாநஞ்செய்வான் சென்றது. பின்ன ரிரவுகழிந்தபோது காலேயில் சூரியகிரணங்களோடும் மீண்டும் ஸ்ரீ வான்மீகி சந்நிதியைநோக்கி வந்தது. இவ்விடத்தில் ஸ்ரீ வசிஷ்டர் கூறியபோ தெனப் பொருள்கொள்ளலாகாதாம். கொள்ளின், இனிவருமிடங்களில் விரிவாக ஆங்காங்குத் தசரதமன்னர்சபையெழுதலே வருணித்தலும், தினமுடிபின் அனுஷ்

டானத்தையும், இரவில் ஸ்ரீ இராமர்முதலியோர் கேட்டபொருளைச் சிந்தித்தலையும் அதிகாலையையும் சூரியோதயத்தையும் விஸ்தாரமாக வருணித்தலும் சமயமில்லா மற்புகழ்ந்து புலம்பியதையொக்கும்.

5 - வது முயற்சியை நிலைபெறுத்தல் முற்றிற்று.



## 6-வது தெய்வ நிராகரணம்.

இப்போது, எதன்கண்ணே பிரபலமாகத்தெய்வமுளதோ அதன்கண்ணும் பரபுருடமுயற்சியேயெனவும், அல்லது முன்செய்த தனதுமுயற்சியேவலியுடைய தெய்வமெனவும் இயம்பப்படும். கூறியபொருளை ஸ்ரீவசிஷ்டபகவான்நிலைநிறுத்திக் கொண்டு கூறத்தொடங்குகின்றார். ஸ்ரீவசிஷ்டமகாமுனிவர் கூறல்:—ஆகையால், சுதந்திரமானதெனக் கூறமுடியாமையின் முன்னியற்றிய புருடமுயற்சியினும் வேறாகத்தெய்வமின்றாம். அது தெய்வம், அதன்அதீனன், யான்சுதந்திரன் அல்லன் எனத்தெய்வத்திற்கு முக்கியங்கூறுதலை அதிதூரத்திலேயே தள்ளிவிட்டுச் சாதுசங்கத்தாலும் சற்சாஸ்திரத்தாலும் சமுசாரத்தினின்றும் ஜீவனை வலுவிற் கடைத்தேற்றவேண்டும். எவ்வாறு வலுவிலெனின்? எவ்வாறெவ்வாறு முயற்சி செய்கின்றேமோ அவ்வாறவ்வாறே பயனும் விரைவிற்கிடைக்கின்றது. எனவே, புருடமுயற்சியேயுளதாம், அதுவே தெய்வமானுலாகுக. துன்புறுங்காலத்தில் துன் பத்தால் ஆ! கஷ்டம் எனக்கூறுநிற்பன், அதுபோலவே, ஆ கஷ்ட! சத்தத்திற்கு மாற்றுச்சொல்லாக, அந்தோ தெய்வமேயெனவும் புலம்புவன். ஆ கஷ்டம் எனத் துக்கரூபமாய்ப் பரிணமித்த முற்செய்தகருமமே கூறப்படுகின்றது. அதுவே தெய்வமாகும். முன் செய்த தன் கருமத்தைத்தவிர்த்து வேற்றுருவத்தையுடைய தெய்வமென்பதொன்றின்றாம். முன்செய்த கருமமே தெய்வமாக இருக்குக. அதனாலென்னெனின்? பாலகனானவன் பிரபலமான புருடனால் வெற்றிகொள்ளப் படுவதேபோல இங்கு அது வெற்றிகொள்ளத்தக்கதேயாகும். நேற்றியற்றிய துஷ்ட ஆசாரமானது இன்றியற்றும் சிஷ்ட ஆசாரமாகிய பிராயச்சித்தாதிகளானே விரைவில் அசுபத்தைக்கொடுக்க முடியாததாவதேபோல முற்செய்தகருமமும் இப்போதியற்றும் கருமத்தாற் றீயதையீயாதாம். விடயசுகலேசங்களில் பற்றுற்றவ ராகி முற்செய்த கருமத்தை வெற்றிகொள்வான் யாவர் முயன்றிலரோ, அவர் தீனரே பாமரரே மூடரேயாகி தெய்வந்தெய்வமென்று சொல்லிக்கொண்டே திரிவர். தெய்வப்பிரபலத்தன்மைப் பிரசித்தியாயிருக்குமிடத்திலும் முயற்சியே பிரபலமாம்எனக் காணவேண்டும். புருட-முயற்சியாற் செய்யப்பட்ட கருமம் தெய் வத்தாற்கெடுக்கப்படுமேல் ஆண்டுக்கெடுப்பவனுடைய முயற்சி மிகப்பலமுடையது என அறிதல்வேண்டும். அற்றேற் புருடனாற்செய்யப்படுபவற்றில் இவ்வாறுள தாகுக, புருடனாற் செய்யப்படாக்காரியங்களில் தெய்வமேயன்றோ சரணம் எனின்? ஒரேகுலையிற்றொங்கும் இருகனிகளுள் ஒன்று ஒன்றுமிலாப்பொந்தாகி இரசமற்ற தாய்க்காணப்படுகின்றது, அவ்விரசத்தை யனுபவிக்கும் புருடனுடைய அல்லது புழுமுதலியவற்றினுடைய முன்செய்த முயற்சியேனும் இப்போது செய்த முயற்சி யேனுமே கெடுப்பதற்காக எழாநிற்கும். எல்லா இடங்களிலும் இவ்வாறே காண வேண்டும். எவ்விடத்திலுலகிற் பிரசித்தமாய் நன்னிலைமைபெற்ற பதார்த்தங்களும்

மிகவும் அழிவையடைகின்றனவோ, அவ்விடத்தில், அழிப்பவனுடைய முயற்சி மிகப்பலமுடையதென்றறிதல்வேண்டும். ஈண்டுமுற்கூறியதை நினைதல்வேண்டும். இரண்டு ஆட்டுக்கடாய்களைப் போரியற்றவிடுவதேபோலப் புருடமுயற்சிகளிரண்டையும் பரஸ்பரம் போர்செய்யவிடின் அவற்றுள் யாதுபலமிக்கதோ, அதுவே கணத்தில் வெற்றிகொள்ளும். இராஜவம்சமானது இல்லாமலழிந்தபோது புரவாசிகளாலும் மந்திரிமார்களாலும் மங்கலமாக அலங்கரிக்கப்பட்டுவிடுத்த பட்டத்துயானையானது ஒருபிச்சைக்காரனைப் பலாத்காரமாய் மன்னவனாகச் செய்யுமாயின் அது புரவாசிகள் மந்திரிமார்கள் பட்டத்துயானை என்பவருடைய பெரும்பிரயத்தினத்தின் மகாபலமென்றுணர்தல் வேண்டும். முயற்சியினாற்கடித்துப் புசிக்கக்கூடிய கடினபதார்த்தங்களை முகத்திற்கவர்ந்து தந்தங்கள் கடித்துப்பொடிக்கின்றனபோலவே, துர்ப்பலமான முயற்சியைப்பிடித்துப் பிரபலமான முயற்சிகடித்துப்பொடித்துவிடும். எதனால் அன்னத்திற்கொப்பாக அனுபவிக்கத்தக்கவர்களாயிருப்பவர்கள் முயற்சியின்மிக்கவர்கட்கு மிகவும் அற்பபலமுடையவர்ளாவர்களோ, அதனால் வேலைகளில் ஓடுகள்போல இச்சைப்படி வலியுள்ளவர்களால் ஏவப்படுவார்கள். சாமர்த்தியவானுடைய காணப்பட்டமுயற்சியேனும் காணப்படாதமுயற்சியேனும் யாதுளதாமோ அது தெய்வமெனச் சாமர்த்தியமில்லாதமூடனாற் றன்னிடத்தில் எண்ணப்படும். அப்பலமுடைய பிராணிகளுக்குள் பலமுடையவன் யாவனோ அவன் நியமிப்பவனாவான். இப்போதிருக்கும் பிராணிகளுக்குள்ளும் பரஸ்பரம் இது வெளிப்படையேயாம். தெய்வமிருக்கின்றதென்பதின்றாம். ஆகையினால் முயல்வேயுளதாம். சாஸ்திரம், மந்திரிமார், பட்டத்துயானை, புரவாசியர் என்பவர்தம் ஒருமித்த திண்ணஎண்ணமாய இயற்கைத் தன்னிரசம்வாய்ந்த மதியே பிச்சைக்காரனையரசனாகச்செய்வித்தது, பிரஜைகளைத்தாங்கிக்காப்பதுமாம். மற்றவருடைய முயற்சியினாலே மற்றொருவனுக்குப் பலபோகமுண்டாமெனின் மிகுவழக்காமேயெனின்? எவ்விடத்தில் பிச்சைக்காரன் மங்கலமாதங்கத்தால் அரசனாக ஆக்கப்படுகின்றானோ அவ்விடத்தில் அவனது பலமுடைய முன்முயற்சியே காரணமாகலாம். இப்போதியற்றும்முயற்சி முன்முயற்சியைக்கெடுக்கும், முன்முயற்சி பலமுடையதாயின் இப்போதியற்றுவதைக்கெடுக்கும், எப்போது முயற்சியிரண்டனுட் சோம்பலற்றுச்செய்யப்படுவதே வெற்றிகொள்ளும்; அத்தகையதும் இப்போதியற்றப்படுவதேயாகும், முன்னதாகாதாம், அதுமுன்னரே பிரிந்துபோனமையின் எனக்கொள்ளவேண்டும். இன்னும் வெளிப்படையாயியம்பினோ, இருமுயற்சிகளுக்குள் ளிப்போதுள்ளதே பிரத்தியக்ஷமாயிருத்தலின் பலமுடையதாகும். ஆதலின், தெய்வத்தைவெற்றிகொள்ளுதல் இப்போதியற்றும் முயற்சிகளாற் பாலகனை யவ்வனன் செயிக்கமுடிவதேபோல முடிவதேயாம். பனிக்கட்டிவிழுதலானே பயிர்த்தொழிலின் பலங்கெடுதன் முதலியவற்றே மாறுபாடாக முயற்சிகாணப்படுகின்றதேயெனின்? நல்லது, இத்திருட்டாந்தமும் நமதிஷ்டத்தையே சாதிப்பதாகும். ஒருவருடம் முயன்றுசெய்தபயிர் மேகத்தினாலே அழிவையடைகின்றதெனின்? அது மேகஅபிமானிதேவதையின் முயற்சிப்பயனேயாம். இதுபோலவே பிறவிடத்திலும் மிகமுயல்வுடையவன் வெற்றிகொள்வனென அறிதல் வேண்டும். இதுவுமியம்பியதற்காக வியம்பியதேயாம், உண்மையாயோ ஆண்டும் முன்

னியற்றிய தனதுமுயற்சியே அதிர்ஷ்டவாயிலாக ஏதுவாகும். சிலவிடத்தில் முயற்சி பயனற்றுப்போனுற்ருனென்னே! அதற்காகத் துயரப்பட்டழுங்காமல் மறு படியும் முயற்சியே மிகவுமியற்றவேண்டும். முறையே நெடுநாட்சம்பாதித்த பொருள் நஷ்டமாயினும் துக்கப்படுதல்கூடாது. எக்காரியத்தில் தனது பலம் முடியாததாகின்றதோ, அதன்கண் துயரப்படவேண்டியதில்லையன்றே? எக்காரி யம் செய்யமுடியாததாமோ, அதன்கண்ணே துக்கப்படவேண்டியதாயிருக் கும்பக்ஷத்தில் நம்மாற்கொல்லப்படாத மிருத்தியுவைக்குறித்துத் துக்கித்து அனு தினம் அழுதுகொண்டிருக்கவேண்டியதே யாகுமன்றே? தேசம் காலம் கிரியை திரவியம் என்பவற்றின் வயத்தானே உலகத்துள்ள இவையாவும் விளங்குகின் றனவாமாதலின் அதிகமுயற்சியுள்ளவனே வெற்றிகொள்ளாநிற்பன். நிற்கவே. எத்தேயத்திலேனும் எக்காலத்திலேனும் தனதுமுயற்சி பயனற்றதாமாயின் அதை விடுத்து வேறுதேயத்தில் வேறுகாலத்தில் வேறுதொழிலாலேனும் வேறுதிரவியத் தினுலேனும் முயற்சியே செய்யத்தக்கதாம். கிழக்குமுதலிய திசைகளில் ஸ்ரீ விசுவா மித்ரரது தபமானது இடையூறுற்றபோதினும் வடதிசையிற் சித்திபெற்றதைக் கண் டோமல்லவா? ஆகையால், முயற்சியைப் பின்பற்றி நன்னூலாலும் நல்லோர்கூட் டத்தாலும் தன்மதியை நின்மலமாகச்செய்துகொண்டு சமுசாரசமுத்திரத்தைக் கடக்கவேண்டும். புருடனுகிய ஆரண்யத்தில் பலத்தைக்கொடுப்பதிற் சமர்த்துடைய இருபல விருக்ஷங்கள் முன்முயற்சி இப்போதுள்ள முயற்சியென்னும் நாமமுற்றன வாயுண்டாகியிருக்கின்றன. ஒன்றன்வேரைக்களேவதால் அது காயவேமற்றென்று முளைத்தலாகிய வெற்றியானது இரண்டுக்குள் அதிக முயல்வுடையதற்கேயாம், கூறியபொருளை யங்கிகரியாதபக்ஷத்தில் அநிஷ்டமே யேற்படும். அன்றியும் ஈசுர அதீனத்தன்மைவாதமும் கண்டிக்கத்தக்கதேயாம். நல்லொழுக்கங்களானே யாவன் துச்சமாய முன்னியற்றிய கருமத்தை நீக்கவில்லேயோ தனது சுகதுக்கங்களிற் சுதந் திரமற்ற அறியாமையோடுகூடிய அவன் ஈசுரராலேவப்பட்டவனுகிச் சுவர்க்கத்தை யேனும் நரகத்தையேனும் அறம்பாவமில்லாமலே யடைந்துழல்க; உழலவே மோ க்ஷமேயின்றுமென்னும் வழக்கன்றேவாம். ஏனெனின், அவன் எப்போதுமே பராதீனமாய பசுவேயாவன். ஐயமில்லே. முயற்சிப்பக்ஷத்திலோ இத்தோடமணு காதாம். ஏனெனின், யாவனுதாரமாகிய முயற்சியிற் குசலனே நல்லொழுக்கத்தில் நலம்பெற நடக்கின்றனனே மிருகராஜாவானது கூட்டினின்றும் வெளிப்போதலே போல, அவன் உலக மயக்கத்தினின்றும் விடுபட் டேகாநிற்பன். ஈசுரரது சுதந்திரம் நீக்கத்தக்கதேயாகும். கண்கண்டதைவிட்டுவிட்டு யாரோஒருவர் என்னே யேவு கின்றனர்என அனர்த்தமாய கெட்டகற்பனேயைச்செய்துகொண்டு யாவனிருக் கின்ருனே, அக்கிழோன் நெடுந்தூரத்திற்றள்ளத்தக்கவனுவன். அற்றேல் "யாவனே யிவ்வுலகங்களினின்றும், தேவர்தம் மூலகிற் சேர்த்திடநினேக்கும், ஓவலில்லவனே யுயர்பரம்பொருளே, சேவைசெய்திடு மாநலஞ்செய்விக்கும்" "யாவனுன்மாவின் கண் ணேயிருந்து, ஏவுவனுள்ளேயான் மனேயெழிலாய்" "ஈசுரனெல்லாவுயிர்களினிதய, தேசத்தருச்சுன திகழவேயிருப்பன்" என்பனவாதி சுருதி மிருதிகட்கு முரண் பாடாக ஈசுரரைநீக்கி எங்ஙனம் ஜீவசுதந்திரங்கூறல் கூடும் எனின்? அற்றேல் "எவ் வாகாரத்தையுடையவனுவனே, எவ்வாசாரத்தையுடையவனுவனே, அவ்வாறேயா

வன், நல்லொழுக்கமுடையன் நல்லவனாவன் கெட்ட ஒழுக்கமுள்ளவன் கெட்
டவனாவன், வேட்க ஓமஞ்செய்க ஈக, கருத்தா சாஸ்திரங் கருதுபொருளுடை
மையின் உலகின் கருத்திருத்தகைமையுமிலையாம், இலகுகன்மங்களு மிலையேயா
கும், திலகமாம்பிரபு சிருட்டிசெய்வாரே" என்பனவாதி அநேக சுருதி சூத்திர
மிருதி யனுபவவிருத்தமாய்ச் சீவனுக்குப் பாரதந்திரத்தகைமையை எங்ஙன்ருன்
கூறுதல்கூடும்? சுதந்தரமில்லாத ஜீவன் கருத்தாவாகானன்றோ? ஆவனேல் "சுதந்
திரன்கருத்தன்" என விதித்திருத்தலோடு முரணுதலின்; மிகப்பலமுடைய ஈஸ்
வர அதீனனாகிய இவன் நூற்றுக்கணக்கான விதிகளானும், ஆயிரக்கணக்கான
நிஷேதங்களானும், பிரவிருத்திப்பானேனும் நிவிருத்திப்பானேனும் கூடியவன்
ஆகான். பலாத்காரமாக ஈசுரரால் பிராஹ்மணவத முதலியவற்றி லேவப்பட்ட
இவன் அபராதியாதல்தான் எங்ஙனங்கூடும்? விஷமமாகிய காரியங்களிற்
சுயமாகவே சிலரை யேவிவிட்டு அவர்களை நரகாதிகளை யனுபவிக்குமாறு செய்
விக்கும் ஈசுரருக்கு மருள்செய்தலும் அருள்செய்தலும் ஆகிய தோடங்கள் எங்
ஙனம் மருவாமற்போம்? அந்தரியாமிப் பிராஹ்மணவாக்கியசேடத்தில் "இத
னினுமயலாய்த் திருஷ்டாவில்லை, இதனினும் அயலாய்ச் சுரோர்தாவில்லை,
இதனினுமயலாய் மந்தாவில்லை" என்பதாதியினானே ஜீவநீக்கத்தால் ஈசுரருக்கே
முக்கிய சுதந்திரத்தகைமைகூறல்தான் எங்ஙனம்பொருந்தும்? கேவலம் அஞ்ஞா
னது திருஷ்டியைப்பற்றிக் கருமகாண்டப் பிரவிருத்திக்காகச் சீவசுதந்திரத்தன்மை
வாதமாம், அவ்வஞ்ஞானத்தைக்கெடுப்ப எல்லாப்பிராணிகளின்கண்ணும் ஆன்
மாவின் ஒருமையுணர்வான் பிரவிருத்தித்த விவேகதிருஷ்டியைப் பின்பற்றி
ஈசுரரது முக்கியசுதந்திரத்தன்மைவாதமாம், அதன் பலஞானத்தால் கிடைக்கப்
பெற்ற பூர்வதிருஷ்டியைப் பின்பற்றி "அவ்விப்பிரமம் அபூர்வமாயது, அவ்விய
லபரம் அந்தரம்பாகியம், எவ்வியலற்றதிவ் வாத்துமாட்பிரமம், தவ்வறயா
வையுந் தானேயுணர்வது, உலகின்கருத்திருத் தகைமையுமிலையாம், இலகுகன்மங்
களுமிலையேயாகும், திலகமாம்பிரபு சிருட்டிசெய்வாரே" என்பதாதி சுருதிமிருதி
வாதங்களாம். கனாக் கண்ணாடி முதலியவற்றில் மரயானையோடலை யானைத்திருஷ்
டியாய்க்காணில் யானையேயோடும் மரமோடாது; மரத்திருஷ்டியாய்க்காணில்
மரமேயோடும் யானையோடாது; உண்மையாய திருஷ்டியால்நோக்கினே யானையு
மில்லை மரமுமில்லை யோடுதலுமில்லை. விகாரமற்ற காண்போன் கண்ணாடிமுதலியவற்
றின் வடிவங்களேயுளவாம் என்னும் வாதங்களாம். அதுபோன்றென அவிரோதங்
கூறிடின் மோக்ஷோபாயத்தைப் பிரவிருத்திப்பிக்கும் ஸ்ரீ வசிஷ்டவசனத்திற்கும்
அஞ்ஞாவிடயத்தன்மையுண்மையின் ஈண்டு ஈசுர சுதந்தரநீக்கம் நீக்கத்தக்கதேயாம்.
[ஆகவே, ஸ்ரீமத் பகவத்பாத ஆசாரியசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய பாடியமும்
ஈண்டுன்னத்தக்கதாம் "அவ்விவ்வவித்தையெனப் பெயரிய ஆன்மானான்மாக்களின்
இதரேதர அத்தியாசத்தை வாயிலாய்க்கொண்டு எல்லாப் பிரமாணப்பிரமேய விவ
காரங்களாகிய இலௌகிகங்களும் பிரவிருத்தித்தன, விதிநிடேதமோக்ஷபரங்களா
கிய எல்லாச்சாத்திரங்களுமே பிரவிருத்தித்தனவாம்" இங்ஙனமாகவே அஞ்ஞா
திருஷ்டியினாற் சித்தித்த ஜீவசுதந்திரத்தன்மைப் பக்கத்தடைவுற்ற கருமானுசார
மாக நியந்தாவாகிய ஈசுரருக்கு மருள்செய்தல் அருள்செய்தல்ஆந்தோடங்களும்

வரமாட்டாவாம். ஆயிரக்கணக்கான விவகாரங்கள் இலாபாதிபலத்தோடு கூடிவந்திடினும் நஷ்டமுற்றுச் சென்றிடினும், அவற்றுள்வரும் பிரியாப்பிரியம் இராகத்வேடம் சுகதுக்கங்களை விடுத்துச் சாஸ்திரத்திற் கூறியபடியே விவகரிக்கவேண்டும். சாஸ்திரத்திற்சாற்றியபடி விடாமற்றொடர்ந்துவரும் தனதுமரியாதையை விடாமலிருப்பவனுக்கு இச்சித்தயாவுமே, கடலில் இரத்தினங்கள்யாவும் அகப்படுவன போல அகப்படும். புருடப்பிரயத்தனமென்றால் யாதுபொருளெனின்? தனக்கு வேண்டியவை சுகந்துக்கநீக்கமுமாம் அவற்றையடைவிக்குஞ் சாதனங்களாகியின்றியமையாது செய்யத்தக்கவையாயவற்றிலேயே மிகுந்த முயற்சியோடும் அழுந்துதல் புருடப்பிரயத்தினமென அறிஞர் கூறுநிற்பர். அதுவும் சாஸ்திரமுரைத்தபடிசெய்யின் பரமபுருடார்த்தப்பொருட்டாம். தேகாதிகளின் அசைவுவடிவப்பரம்பரையாய குருபணிவிடை சிரவணுதிக்கிரியைகளாலும் சாதுசங்கத்தாலும் நன்னூல்களாலும் அசம்பாவனை முதலியதோட நீக்கவாயிலாகத்தெளிந்த தனதுகூர்மையாயபுத்தியினால் தானாகவே ஆன்மாவானது பிரத்தியக்கமாய் விளங்காநிற்கும். அம்மதியேயிவனுக்கு விரும்பியபொருளைச் சாதித்துக்கொடுப்பதாம். சாதுசற்சாஸ்திரங்களின் இலக்கணம் யாதெனின்? அஞ்ஞானத்தாலாக்கப்பட்ட விஷமத்தன்மையின் நீக்கத்தானே உண்டாம் அழிவற்ற ஆனந்தம் பரமார்த்தமாமென அறிஞர் அறிவர். அவ்வானந்தமானது எவர்களாலடையப்பெறுமோ அச்சாஸ்திர சாதுக்களே நித்தியம் சேவிக்கத்தக்கவர்களாவர்கள். யாதிரண்டு உலகங்கட்கும் இதமாய முன் முயற்சியாமோ, தேவலோகத்தினின்றும் இங்குவந்து அங்குப்புசித்த சேடத்தை அனுபவிப்பதாமோ, அதுவே தெய்வமெனக்கூறப்படும். அவ்விது பொருத்தமுடையதேயாம். இதன்கண்ணே யாதொருஐயப்பாடுமின்றும், அதையாம்நிந்தியேம். பின் யாதுநிந்திக்கப்படுமெனின்? மூடர்களாற்பெரிது கற்பிக்கப்பட்ட தெய்வத்தை யாவர்பொருளாக எண்ணுகின்றார்களோ அவர்கள் அழிந்துபோய்விட்டார்களென நிந்திப்போம். அற்றேல், முன் றேவலோகஅடைவும் தெய்வத்தானே யேனாகமாட்டாதெனின்? தனது முயற்சியினானே நித்தியமும் இரண்டுலோகங்கட்கும் இதமானதுண்டாகும். இவ்வாறு சாதிக்கப்பெற்றதற்கு யாதுபலமாமெனின்? நேற்றைய துர்நடத்தையானது இன்றியற்றும் அழகுபொருந்திய நல்லொழுக்கத்தானே நீங்கிப்போகும்; இவ்வாறே யிப்போது செய்தலினானே முன்னியற்றிய அழகியது கெட்டுப்போகும். உளதாகுக. பழையதின்வெற்றி, புருஷார்த்த சித்தியுண்டாயது யாங்ஙனமெனின்? ஆகையால், முயற்சிசெய்து யாவன் காரியமுடையவனாகின்றானோ அதன்பயன் அவனுக்குக் கரத்தில்வைத்த நெல்லிக்கனிபோலக்கண்டோம். மூடனோ பிரத்தியக்ஷத்தைவிட்டுத் தெய்வமோகத்தில் விழுந்துவாடுவன். ஹே, நற்கருத்துடைய குழந்தாய்! அக்காரணத்தானே தனது பொருளற்ற மனோவிருத்தியின் பலவயத்தால் இனிது கற்பிக்கப்பட்டு அசன்மயமாய்ச் சகலகாரணகாரியப்பிரயோஜனங்களற்ற தெய்வத்தை யபேக்ஷியாமல் தனது முயற்சியையே பின்பற்றவேண்டும். பற்றவிதித்த அம்முயற்சியாதெனின்? சுருதிமிருதியாதி சாஸ்திரங்களானும், நல்லொழுக்கங்களால்விரிந்த அவ்வத் தேயநியத ஆசாரங்களானும் எம்மனத்தூய்மைவடிவதும் ஞானவடிவதுமாகியபலம் ஈயப்பெற்றதோ மிகமிகவும் பழைமையாய்ப் பிரசித்தமான அதன்கண் மதியிச்சை செய்யும்போது அதன்சாத

னங்களையொழுகும் இச்சையினுனே மனமானதசைவையடையும். அதையனுசரித்துப் பொறிகரசரணுதிகளும் அசையாநிற்கும். நிற்கவே, சிரவணுதிகள் நடைபெறும். இதனையே முயற்சியெனமொழிவர் ஆன்றோர். இப்புருடத்தன்மையானது அதிகாரியின் புருடஜன்ம முயற்சியின்பலமாய புருடார்த்தஞ் சித்தித்தாற்றான் பயனுடையதாம். வேறுவிதமாயின்றுமெனவுணர்ந்து எப்போதுமே ஆன்மமுயற்சி பரமாயிருத்தலைச்செய்தலே காரியமாம். பின்னந்தமுயற்சியின் முதிர்ச்சியையும் நன்னூல் நல்லோர் பண்டிதரின் சேவையினுலே கிடைக்கப்பெற்ற விசாரத்தினுலே யுண்டாம் ஆன்மஞான பலலாபத்தாற் பரமமாயபயனேடு கூடியதாந்தன்மையை யடைவித்தல் வேண்டும். இத்தன்னுடைய முயற்சியானது தினந்தினஞ்செய்யப்படுவதாய்த் தெய்வத்தை வெற்றியேகொள்ளும் என்பதாகத் தெய்வமுயற்சிகளின் பலாபல விசாரத்தானே யழகுபொருந்திச் சமதமாதிகளை யலங்கரித்துக்கொண்டலவும் அதிகாரிகளானே, பெரியோரது சேவையாலெப்போது மியற்றப்பட்ட கேள்வி முதலியவற்றுற் பெருமுயற்சியைத் தத்துவஞானமடைதற்பொருட்டுச் செய்ய வேண்டியதவசியம். இச்சீவன், இவ்வதிகாரி ஜன்மத்தின்கண்ணே சம்பாதிக்கத்தக்கதும், சாஸ்திரமுணர்த்தலிற் சத்தியமும் அவசியம் பயனைத்தருவதும் ஆகிய முயற்சியையே பரமபுருடார்த்த லாபப்பொருட்டு ஆமெனவுணர்ந்து நித்தியம் மகிழ்ந்துகொண்டே யிருக்கும். எல்லாவகையினும் மேலாய பிரஹ்மவித்துக்களின் சேவையாகிய அமோக அதிமதுர உயர்ந்தமருந்தால் ஜன்மபரம்பரை மிகுதிப்பாடாம்நோயைச் சாந்திசெய்தல் வேண்டும். மிகவுமெளிதான வுபாயமிருக்கும்போது யாதின்பொருட்டுத் துக்கப்படவேண்டும்?

6-வது தெய்வ நிராகரணம் முற்றிற்று.



## 7-வது முயற்சியின் முக்கியத்தன்மை.

இப்போது, முயற்சியின் முக்கியத்தன்மையொன்றே விஸ்தார உதாகரணங்களாலும் பிரதியுதாகரணங்களாலும் ஊகங்களாலும் நிரூபிக்கப்படும். செய்யப்பட்டதேயாய தெய்வநீக்கத்தால் முயற்சியின் முக்கியத்தன்மையையுணர்த்தலே உதாகரண பிரதியுதாகரணங்களானே திடமாக்கிக்கொண்டு அதிகாரிகட்கு இதோபதேச ஊகங்களானே புருடார்த்தத்திற்புகுகின்றுர். ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்:—அற்ப மானச துக்கபோகங்களையுடையதும் வியாதிகள் விடுபட்டதும் ஆகிய தேகத்தை அடைந்து மறுபடியும் பிறவாதபடி ஆன்மாவின்கண்ணே சித்தசமாதானப்பொருட்டு முயலவேண்டும். இச்சையில்லாதவனுக்கு எங்ஙனம் முயல்வுண்டாமெனின்? ஆண்டிச்சை யவசியம் வேண்டியதேயாகும். புருடமுயற்சியினுனே யாவன்றெய்வத்தைக் கடக்கக்காதலிக்கின்றுனே இகத்திலேனும் பரத்திலேனும் அவனிவ்வுலகில் இச்சித்த யாவற்றையுமடைவன். உடன்பாட்டானே காண்பித்தபொருளை யெதிர்மறையானுந் தெரிந்துகொள்ளவேண்டும். யாவன் நன்முயற்சியைக் கைவிட்டு தெய்வந்தெய்வமென இருக்கின்றுனே, அவன் தருமார்த்த காமமோக்ஷங்களைக்கெடுத்துத் தனக்கே சத்துருவாகின்றுன். பிரத்தியக்ஷமுயற்சிக்கு விருத்தமாய தெய்வத்தை நீக்கவிரும்பின், அம்முயற்சிக்குப் பிரத்தியக்ஷ சித்தமாய சொரூபத்தைத் தெரிந்துகொள்ளல்

வேண்டும். புருடார்த்த அதன்சாதனங்களின் உணர்ச்சி அதனாலதன் சாதனக்காதல் அதன்முயற்சி, அதனால் அங்கங்களசையுமாறு கரும இந்திரியங்களின் பிரவிருத்தி, அதனாலாய காயவெளியுபகரணஅசைவு என்பவைகள் புருடமுயற்சியின் வடிவங்களாம். அடுக்கடுக்காய் வருவனவாம், நிரந்தரம் நிகழாநின்ற இவைகளானே விரும்பிய பொருளையடைகுதல் வெட்டவெளியேயாம். கூறியபொருளின் விரிவெங்ஙனமெனின்? சாக்ஷியின்கண்ணே முன்னர் விடய விளக்கமுண்டாகின்ற தெப்படியோ அப்படியே பின்னர் மனமசைவையடைகின்றது, அவ்வாறே கருமேந்திரிய அசைவினானே காயமசைகின்றது, கிரியையனுசரித்தே பயனுமுண்டாகின்றது. இவ்வுலகில் யாண்டுயாண்டு இலௌகிகபலத்திலேனும் வைதிகபலத்திலேனும் எவ்வாறெவ்வாறு முயற்சி, தியானாதிகளில் மனதேமுக்கியம், ஆசனமும் மௌனமும் அதனங்கங்கள்; தோத்திராதிகளில் வாக்கேமுக்கியம், ஒருமையும் எதிரிருத்தலும் அதனங்கங்கள்; யாத்திரை முதலியவற்றிலோ சரீரமேமுக்கியம், வாக்கு மனநியமங்கள் அதனங்கங்கள்; சிலவிடத்திலோ இரண்டிரண்டு முக்கியமாகும்; சிலபாலோ மூன்றுமாம் என இவ்வாறுசப் பொருத்தப்பெறுமோ, ஆண்டாண்டு அவ்வாறவ்வாறு அம்முயற்சி பாலரே முதலாகக் கண்கூடாகக் கண்டதேயாகும். தெய்வமோ எவ்விடத்தும் காணப்பெறுவதேகிடையாது என அசத்தேயாம். கூறியபொருட்கே உதாகரணங் கேட்பின், முயற்சியினாலே பிருகஸ்பதியானவர் தேவதைகட்கெல்லாங் குருவேயாயினர்; முயற்சியினாலே அசுரேந்திரர்கட்கெல்லாஞ் சுக்கிராசாரியர் தேசிகராயினர். தீனத்தன்மை தரித்திரம் துயரம் முதலியவற்றோடு கூடியிருந்தபோதினும் நரஉத்தமர்கள் முயற்சியின்மிகுதியினாலே தேவேந்திரசமானத்தன்மையை யடைந்தனர். நானாவித மாயாச்சரிய வடிவங்களாய பெரும்பெரும் ஐசுவரியங்களை விரும்பியடைந்து அனுபவிக்கச்சென்ற நகுஷாதிகளாகிய பெரியோர்களும் முயற்சியின்றோடத்தானே நரகத்திற்குடியேறினார்கள். ஆயிரக்கணக்கான சம்பத்தாபத்துக்களையடையும், பற்பலவிதமாய அவஸ்தைகளையுந் தமதுமுயற்சியின் மிகுதியினானே பிராணிகள்யாவரும் கடக்கின்றார்கள். எல்லாவிடங்களிலும் புருடமுயற்சிக்கு முச்சித்திகளுளவாகின்றன. அவையாவன—தன்னானேயுண்டாவன இலௌகிகங்களாகும், தன்னானும் நன்னூலானும் உண்டாவன மகமுதலனவாம், தன்னானும் மறைமுடியானும் குருபரனருளானும் உண்டாவது ஞானமாம். இச்சித்திகள் முயல்வாலன்றித் தெய்வத்தால் ஓரிடத்தும் ஒருகாலத்துமே யுண்டாகாவாம். தெய்வத்திற்கே முச்சித்திகளாம். வியாபாரமற்ற தெய்வவாக்கிரகவாதர்களுடைய மதத்தைக் கைக்கொள்ளில் எல்லாவிதிகளும் கெட்டுப்போமேயெனின்? "சோமத்தாற் வேட்க" என்பதாதி வாக்கியங்களாற் போதிப்பிக்கப்பட்ட மகங்கட்கு வியாபார ஜன்யத்தன்மையுண்மையின் பாவனைகட்கும் புருடப்பிரவிருத்தி நிமித்தத்தன்மை யுண்மையின் பிரவிருத்திக்கும் நல்லசைவு வடிவத்தன்மையுண்மையின் என்றுணர்க. அவற்றுள் பிரகரணத்தி லுபயோகமாகத்தக்க சாரம் யாதெனின்? அசுபங்களில் இனிது புகு மனதைச் சுபங்களிலே முயல்வாற்புகுமாறு செய்யவேண்டும். இவ்வளவே சர்வசாஸ்திர அர்த்தச்சுருக்கமாம். யாது யாவினும் மேன்மைமிக்கதோ, யாது பரமார்த்தசத்தியமாயதோ, யாது நித்தியமாயதோ, பலத்தால் யாதுயாது இத்தகையதாமோ, அவ்வதை முயல்வால் ஆசரித்துக் குழந்தையே வாழ்வாயாகவெனக் குருமார்கள் கூறிக்

கொண்டேயிருக்கின்றார்கள். எவ்வாறெவ்வாறு முயல்வுண்டாகின்றதோ அவ்வாறவ்வாறே பிரயோஜனமுண்டாகின்றது விரைவிலென நிச்சயித்து முயற்சியினனே பலமுடையவனானேன் என்க, தெய்வத்தாலல்லவாம். முயல்வினாலே சித்தி காணப்படுகின்றது,முயல்வினனே மதிமான்களுடைய ஆசரணமுமாம். துயரத்தில் அழாநின்ற அற்பமதியுடையவர்கட்குக் கண்ணீர் துடைப்பதுபோலச் சமாதானமாத்திரத்திற்குத் தெய்வமென்றதேதவிர வேறில்லை. இவ்வுலகின்கண்ணே தினந்தினம் முயற்சியின் முறைமையானது காட்சிமுதலிய பிரமாணங்களால் தேசாந்தரஞ் செல்லுதன் முதலியவற்றே பயனுடையதாய்க் காணப்படுகின்றதன்றோ! உண்பவன் திருப்தியையடைகின்றானேயன்றி யுண்ணாதவ னடையவில்லை; நடப்பவன் அடைகின்றானேதவிர நடவாதவனடையான்; சொல்கின்றவன் பேசுபவனேயல்லாமற் சொல்லாதவன் பேசான் என்பதாக நரர்கட்கு முயற்சியைப் பிரயோஜனத்தோடுகூடியதாகக் கண்டோம். தாண்டமுடியாத மகாசங்கடங்களினின்றும் நன்மதியுடையோர் முயல்வினனே எளிதாகத் தாண்டிவிடுகின்றார்கள், வியாபார மியாதொன்று மின்றியதாய தெய்வதிருஷ்டியினனேயின்றாம். யாவன்யாவன் எவ்வாறு முயல்கின்றனனோ, அவனவன் அவ்வப்பயனையே நியமமாயடைகின்றனன்; உலகில் வாளாதூங்கு மெவனும் எப்பலனையும் அடைவதேகிடையாது சுபமாகிய முயல்வினனே சுபமாகிய பயனடையப்படும். ஹே இராமச்சந்திர! அசுபத்தானே அசுபமேயடையப்படும்; எவ்வாறிச்சிக்கின்றனையோ அவ்வாறேமுயலுதி. தெய்வத்தினிடத்திற் பேரன்பானதிருக்கும்பக்ஷத்தில் முயற்சியையே தெய்வபுத்தியினற் பற்றலாம். இல்லாத வேறொன்றைக் கற்பித்தலியலாதாம். இவ்வுலகின்கண்ணே எப்புருடமுயல்வினல் தேசகாலவசத்தாற் பலசம்பத்தானது நெடுநாட்சென்றபின்னேனும் விரைவிலேனும் அடையப்படுகின்றதோ, அது தெய்வமென அறையப்படும். சுவர்க்காதிலோகங்களிலிருக்குந் தெய்வம் இங்கு காணுமையானே நீக்குவதற்கு முடியாதாம் எனின்? தெய்வம் பிரத்தியக்ஷமாகவுங் காணப்படுவதில்லை, மேல்உலகங்களிலுமிருப்பதில்லை, சுவர்க்கலோகத்தில் கருமத்தின்பயனே தெய்வமெனக் கூறப்படும். உலகத்தின்கண்ணே புருடனுண்டாகின்றான், வளர்கின்றான்,மீண்டும் கெடுகின்றான். அப்புருடனிடத்தில் ஜரை யவ்வன பாலியம்போல தெய்வங்காணப்பெறுவதின்றாம். சத்தசத்துமுயற்சிகளின் வேற்றுமைக ளெங்ஙனமெனின்? விரும்பியபொருளைக் கொடுக்கத்தக்க காரியத்திலேயே முய்லுதலின்முதன்மையை அறிஞர் பௌருஷமெனக்கூறுவர்: இதனாலே யாவும்பெறலாம். ஒருதேசத்தினின்றும் மற்றொருதேயத்தின் அடைவுபாதங்கட்கு முயல்வினலேயாம், திரவியத்தைத்தரித்தல் கரத்திற்கும் முயல்வினலேயாம், அவ்வாறே மற்றைய அங்கங்கட்கு மற்றைய வியாபாரம் முயல்வினலேயாம், தெய்வத்தாலின்றாமென்பது கண்கூடேயாம். அநர்த்தம்வரும்படியான காரியத்திலேயே மிகமுயல்வோடுதிரிதல் மகாமூர்க்கத்தொழிலெனக்கூறப்படும். இதனனே யாதொருநலமும் கிடைக்கவேகிடைக்காது, தீங்கேயுண்டாகும். அதிகமாகக்கூறவேண்டுமென்று கூறப்படுகின்றது, தேகாதிகளின் அசைவு வடிவப்பரம்பரையாய குருபணிவிடை சிரவணுதிக்கிரியைகளாலும் சாதுசங்கத்தாலும் நன்னூல்களாலும் அசம்பாவனை முதலிய தோடநீக்கவாயிலாகத் தெளிந்த தனது கூர்மையாயபுந்தியினல் தானகவே ஆன்மாவானது பிரத்தியக்ஷ

மாய் விளங்காநிற்கும். அம்மதியேயிவனுக்கு விரும்பியபொருளைச் சாதித்துக் கொடுப்பதாம். கிரியைக்கு விரும்பியபொருளைச் சாதித்துக்கொடுக்குந்தன்மை மிகவும் வெட்டவெளியாம். அதன் பலபூதமாயமதியினாலே சுயம் ஆன்மப்பிரத்தியக்ஷமுண்டாம். அஞ்ஞானத்தாலாக்கப்பட்ட விடமத்தன்மையினீக்கத்தால் உபலக்ஷிக்கப்பட்ட அளவிறந்த அழியாதஆனந்தம் பரமார்த்தமும் தன்னுடையதுமாமென அறிஞர் அறைவர். அவ்வாநந்தமானது எவர்களாலடையப்படுமோ அச்சாஸ்திரசாதுக்களே நித்தியம் வந்தனங்கேள்வி சேவைபயிற்சியாதியானே சேவிக்கத் தக்கவர்களாவர்கள். எதையியம்பவேண்டுமெனவெண்ணி யியம்பியதேயியம்பப் பட்டதோ அதைக்கூறப்புகின், நன்னூல் நல்லோர்கூட்டம் என்பவற்றுள் முதலதன் பயில்விற்குக்குணம் அவர்களின் சமசீலத்தன்மையினடைவாம். சாஸ்திரப்பயில்விற்குக்குணம் சாஸ்திரக்கருத்துணர்தலாம், தத்துவபோதத்தால் சற்சாஸ்திராதிகுணம் விருத்தியாம். அதனுன் மதிவிருத்தியாம். எவ்வாறெவ்வாறு இவன் குருபணிவிடைசாஸ்திர அப்யாசங்களை மிகமிகவுஞ் செய்கின்றானோ, அவ்வாறவ்வாறே இவனதுஞானம் விருத்தியாம். எவ்வாறெவ்வாறு ஞானம்வளர்ந்துகொண்டே வருகின்றதோ, அவ்வாறவ்வாறே குருசாஸ்திர விசுவாசம் வளராநிற்கும். அக்குணம் வளர்தலானே சுகாதிவளர்தலானே மேன்மேற்பூமியிலேறுவன். இவ்வாறு பரஸ்பரப்பயிற்சியானே நெடுநாளில் விருத்தியானது மழைகாலத்தில் தடாகமுந் தாமரையும்போலவுண்டாம். ஆகவே அவற்றின் விருத்தியைக்குறித்து நெடுமுயல்வைச் செய்யவேண்டும் எனக்கூறியதே மீண்டுங் கூறப்படும். பாலியமுதற்கொண்டு மிக மிகவும்பயின்ற நன்னூல் நற்கூட்டமுதலிய குணங்களுடன்கூடிய புருடமுயற்சியால் அதன்பயன் இனிதாக அடையப்படும், விரைவிற்செய்யப்பட்ட மிருதுவான இளமுட்போன்றவற்றாற்பயனின்றாம். ஈண்டு ஸ்ரீ மகாவிஷ்ணுவால் முயல்வினானே தைத்தியர் வெற்றிகொள்ளப்பட்டனர்;புவனத்தொழில்களெல்லாம் நிலைநிறுத்தப்பட்டன; உலகங்களெல்லா முண்டாக்கப்படுகின்றன. இவையெல்லாம் தெய்வத்தாலின்றாம். ஹே அழகிய ஐசுவரியமுடைய அதிகாரி குலமேன்மையுடைய இராகுநந்தன ! புருடமுயல்வையே புருஷார்த்தத்திற்குக் காரணமாகவுடைய இவ்வுலகின்கண்ணே சங்கையற்ற நீ தரு அரவு என்பனவாய பிராணிகளின்தசையை யடையாமலிருக்குமாறு நீண்டமுயற்சியையேசெய்யவேண்டும்.

7 - வது முயற்சியின் முக்கியத்தன்மை முற்றிற்று.



## 8 - வது தெய்வ நீக்கம்.

இப்போது, தெய்வமித்தியாத்தன்மையானது வருணிக்கப்பட்டது. உதாகரண விஸ்தாரங்களாலும் ஊகங்களாலும் உபஜீவிய விரோதாதி கூறப்படும். இவ்வாறு தெய்வத்தை நிராகரித்து முயற்சியின் சுதந்திரத்தன்மையை நாட்டியபோதினும் பிரீதியில்லாமல் மிகவும் மோகமுற்றவராகி முன்னர் வைராக்கியப்பிரகாணத்தில் 25-வது சர்க்கத்தில் "துஷ்டசேஷ்டையுடையவர்களுக்குள் சூடாமணிபோல மேன்மைமிக்கவனும், முன்மொழிந்தவனினும் வேறானவனும் ஆகிய இவன்; பிராணிகட்குக்கருமபலத்தைக்கொடுத்து விவகரித்தலின் பலாவஸ்தையன் கிருதாந்தன்

என்னுந்தெய்வமெனப்படுவன், பயனை யவசியஞ்சம்பாதித்தலினுனே கிரியை
எனப்படுவன், ஒருவனே முன்பின் னவஸ்தைகளின் பேதத்தால் இருவகையாக
விளம்பப்படுவன்; சூரியனுற்பனிப்படலங் கடிதுமிகக்கரைவதேபோல, இவனால்
எல்லாப்பிராணிக்கூட்டங்களும் மிகவுந்துயருறுகின்றன; எல்லாருடைய எல்லா
அநர்த்தங்களும் இவன் கருமத்தானேயுண்டாகின்றன; அத்தியந்தம் இராகியைப்
போலிராநின்ற கூத்தாடுமிக்கிருதாந்தனுக்கு எப்போதும்செய்தகருமங்கட்கு அவ
சியம் பயன்றரும் நியமமென்னும் நியதிமங்கையின்பால் மிகக் காமம்விளைந்து
கொண்டேயிருக்கும்." என்பனமுதலியவற்றனே தம்மால்விஸ்தாரமாயினிது
வருணிக்கப்பட்டதும், அளவில்லாத சுருதிமிருதி புராண இதிகாச ஐதிகங்களிற்
பரமசுதந்திரமாகப் பிரசித்தமும் ஆகிய தெய்வத்தை நீக்கமுடியாதென எண்
ணிக்கொண்டிருக்கும் ஸ்ரீ இராமரைக் குறிப்பாலுணர்ந்து, இவனுக்குத் தெய்வ
சுதந்தரத்தின் கண்ணே உபஜீவியவிரோதம் காண்பியாதவரை விசுவசிக்கமாட்டா
னென அதைக்காட்டு மிச்சையுடையராகி ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்:—ஜாதி
யானது பொருந்தியிருக்கும் வியத்திவிசேடமும், மானசசரீர பலோபதானங்க
ளாலேனும், பொதுசிறப்பு அதன் சிறப்பாந் தன்மைகளாலேனும் வேற்றுமை
வாய்ந்த கருமம் அசைவு பராக்கிரமங்களும் இல்லாத அத்தெய்வம் என்னவடிவை
யுடையது, உண்மையாய் நிண்ணயித்து ஒருவரேனும் இதுவரையுரைத்தவரில்லை.
ஆதலின் மொழியமுடியாததேயாகும். ஆகவே பொய்யுணர்வாற்றோற்றும் பொரு
ளேபோலப் புலப்பமாத்திரமேயாம். மயக்கவுணர்வினுனே அன்னியோன்னியம்
விவரிக்கப்படுகின்றது. என்ன அதிஷ்டானத்தை யனுசரித்து மயக்கமெனின்?
அதைக்காண்பித்து அன்னியோன்னிய விவகாரத்தை வெளிப்படுத்துவாம். தன்
னுடைய கருமபலமடைவுறவே இக்கருமம் இம்முறையாக அனுஷ்டிக்கப்பட்டது.
இத்தகைய பலங்கிடைத்தது என்னும் வாக்குவிவகார விடயங்கள் தெய்வமெ
னப் பெயர்வாய்ந்து பிரசித்தியாயினவாம். அவற்றின்கண்ணே மூடமதியுடைய
வரானே தெய்வமிருக்கின்றதென்பதான நிச்சயம் மயக்கத்தானே பழுதையிற்
பாம்பு கவரப்படுவதேபோலக் கவரப்பட்டது. படவே பகர்ந்ததே பலித்ததா
கும், சென்றதினமியற்றிய கெட்டதொழில், இன்றுசெய்த நற்செய்கையானே
சோபை யுறுவதேபோல முன்னியற்றியது இப்போதியற்றுவதால் அழகையடை
யும், ஆதலின் முயல்வினுனே நற்றொழிலுடையவனாகவே யாகவேண்டும். உப
ஜீவியப்பிரமாண விரோதம் விளம்பும் வேட்கையினுன் முதலிற் பிரத்தியக்ஷமான
தன்கிரியை விரோதம் விளம்பலுரித்தாம். மூடர்களினது அனுமானத்தாற் கற்
பிக்கப்பட்ட தெய்வம் உளதென்னுந் தூர்ப்புத்தியுடையவன் யாவனோ அவன்
தெய்வத்தாற் றகமில்லவேயில்லையெனத்துணிந்து அக்கினியின்கண் நடத்தல்
தகும். இவ்வுலகிற் றெய்வமே யாவற்றையும் செய்கின்றதென்னின், ஸ்நானம்தானம்
போஜனம் தானுதிகட் கங்கமாய மந்திர உச்சாரணம் முதலியவற்றைத் தெய்வமே
செய்யாநிற்கும். நிற்கவே புருடனுடைய சேட்டையாலாக வேண்டியதென்னே?
இவ்வாறாகவே வேதாதிப்பிராமாணிய விரோதமாம், வாக்குவிவகாரமும் சுதந்திர
மின்றியதாகி இவன் ஊமையாக இருந்து, தெய்வத்தானே நடத்தப்பெற்றவனுயின்
சாஸ்திர வுபதேசத்தாலாக வேண்டியதென்னே! தெய்வத்தால் எவருக்கெங்கென்

னுபதேசிக்கப்பட்டது. கண் கண்டதிற்கு முரணுமன்றேவாம், உலகிற்சவமாயிருக் குந்தன்மையைவிடுத்து அசைவற்றிருக்குந் தன்மையைக்கண்டது முண்டோ, அசைவினனே பலத்தினடைவாமாதலின் தெய்வம்பயனற்றதாம். தேகாதிகளின் அசைவானது வேறுகருத்தாவுடன்கூடிய கருத்தாவையுடையதாம். கிரியையாதலின் சிவிகை நடத்துவதேபோலும் என்னும் அனுமானத்தில் மூர்த்தமாகிய வேறுகருத் தாப் பிரத்தியக்ஷபாதமாயின் அமூர்த்தமாயசககாரிகருத்தாச் சித்தியாநிற்கும். அதுவே தெய்வமெனத் தங்கட்குச்சித்தித்தல் எளிதெனின்? மூர்த்தமாயிருப்பவ னுக்கு அமூர்த்தமாகிய தெய்வம் எசசகாயக ுத்தாவாயிருத்தலேயு மியற்றுதல் கூடாதாம். ஆகவே மூர்த்தத்தோடுகூடிய கருத்தாவுடைமையும் திருசியத்தோடு கூடிய கருத்தாவுடைமையும் இவ்வனுமானத்திலுபாதியாகும். ஆகவே பக்கத்தில் உபாதியினபாவத்தானே சாத்திய அபாவஞ்சித்தமாம். ஆதலின் தெய்வம்பயனற்ற தேயாகும். சிலவிடத்தில் எழுதுதல் க்ஷவரம்புரிதல் முதலியவற்றே பரஸ்பரம் எழுதுகோல் கத்திமுதலிய அங்கங்களைக்கொண்டு சென்றடைந்த இருவர்களுக்குள் இரண்டாவதுவந்தவனைத் தள்ளுதலும் ஒவ்வொருவனுடைய கருத்துருத்தன்மை யும் காணப்படுகின்றது என்பது பொருத்தமாம்; இதனுற் கைகான்மனமதியாதி போலும் கிரியைக்குச்சாதகமாக இருத்தலினுனேனும் தெய்வகற்பனையாசை யகற றப்பட்டதேயாம்; ஆண்டுக்கரமுதலியனயிருப்பின் அதனுற் றெய்வம் வேறோ ராற்றுற்பெறப்படுவதேயாதலிற் காரணமாகாதாம். வாதநோய்முதலியவற்றுனே கா முதலியவை நஷ்டமாங்கால், அந்தோ! தெய்வத்தாலொருசிறிதுஞ் செய்யப்படவில்லை யன்றோ! மனமதியேபோலுமேனும் இத்தெய்வம் ஈண்டனுபவிக்கப்படுவதின்றும். கோபாலனே முதலாகப் பண்டிதனீறுக எவராலுமே யனுபவிக்கப்படாமையானே எப்போதுந் தெய்வம் இல்லாததேயாம். மேலும் தெய்வஞ்சித்திக்கவேண்டுமாயின் கருத்தா முதலிய காரகமதியே பிரமாணமா? அதனினும் அயலாயமதியேயா? இரண்டாவதேல், கிரியையின் கண்ணே யுபயோகப்படாத அயலே தெய்வமெனப் பயனற்ற அருத்தங் கற்பிக்கப்படும், முதலதேல், பிரசித்த கருத்தாமுதலியவையே தெய்வசப்தத்தானே கூறப்பட்டதாகும்; தனியாகுமேற் புத்தியன்னியம் அருத்த மாம். அதுவேயெனின் அவற்றிற் கன்னியத்தன்மையென்னே, சமானபாண்டித் திய முதலியபலத்தை விரும்பி வித்தைபயிலும் அநேகருக்குள் எவனோ ஒருவன் அப்பயனைப்பெறுகின்றுன், யாவரும்பெறுவதில்லை, ஆண்டு அவசியம் விஷமத் தன்மையில் நிமித்தம் கற்பிக்கவேண்டும். காரியவிஷமத்தன்மையின் குறியானது கற்பனைப்பிரமாண மாகுமன்றேவெனின், கற்பனைசெய்வதிற் பிரமாணமிருக்கு மாயின் முயற்சியை யேன் கற்பிக்கின்றுயில்லை. இவ்விடத்துங் கண்கண்டமுயற்சி போன்ற பழையமுயற்சியே கற்பிக்கலாமேயல்லாமல் அப்பிரசித்தமாய தெய்வகற் பனையடாதாம். வேறு காரகசககாரித்தன்மை கூடாமையினுனும் அதன் கற்பனை செய்கல் பொருந்தாதாம். அமூர்த்ததெய்வத்திற்கு வேறுகாரகத்தோடு சம்பந் தஞ் சம்பவியாதாம். தேகத்தோடுகூடிய நம்மனோர்கட்கு ஆகாயத்தோடு சம்பந் தம் உண்டாவதுண்டோ! மூர்த்தங்களே பரஸ்பரம் சேர்ந்ததாய்க்காணப்படுகின்ற மையின் தெய்வமின்றும். மூவுலகத்தும்வாழும் ஜீவராசிகளே யேவாநின்றதெய்வம் அயலாயொன்றிருக்கின்றதென்னின், ஜீவர்களியாவரும் நன்றுய்ச்சயனிக்கலாம்.

யாவற்றையும் தெய்வமேசெய்துவிடும். தெய்வத்தாலேவப்பட்டயான் ஏவியதெய்வ சங்கற்பசித்தத்தையே இவ்வண்ணஞ்செய்கின்றேன் என்னுமிச்சொல்லானது சமாதானப்பொருட்டேயாம், உண்மையாயோ தெய்வமின்றும். மூடர்களினாலே கற்பிக்கப்பட்டது தெய்வம், தெய்வம் தெய்வமெனச்சோம்பலாய்த்திரிந்தவர்கள் அழிவையெய்தனர்; அறிவுடையரோ முயற்சியினானே உத்தமமானபதத்தையடைந்தனர். இவ்வுலகின்கண்ணே சூரராயும் வெற்றியுற்றவராயும் அறிவாளிகளாயும் பண்டிதர்களாயும் இருக்குமவர்களால் எக்காரியப்பொருட்டுத் தெய்வமெதிர்பார்க்கப்பட்டது சொல்லுதி? தெய்வத்தையுணர்ந்தோர் கிரகங்களைக் கூறுகின்றார்கள், அவையே தெய்வமாகலாமேயெனின், அவைகள் இராசிகளிற் சுற்றிவரும் வேற்றுமையானே நலந்தீங்குகளைக் குறிப்பிக்கும் வாயிலாய் முயற்சி யதன்பலன்களைக் குறிப்பிக்கின்றனவே யல்லாமற் காரணங்களல்லவாம்; காலமுணர்ந்தவர்களானே எவனுக்கு நெடுநாள்வாழுந்தன்மை நிர்ணயிக்கப்பட்டதோ அவன்சேதிக்கப்பட்டசிரமுடையவனுய்வாழ்வானுயின் அத்தெய்வம் உத்தமமானதுதான். ஹே இராகவ! காலமுணர்ந்தவர்களானே எவனுக்குப் பாண்டித்தியம் உண்டாமென நிர்ணயிக்கப்பட்டதோ அவன்படியாமலே அகிலகலைகளையுமறிவனேல் அத்தெய்வம் சிரேஷ்டமாயகாரணந்தான். விசுவாசதிடப்பொருட்டு எதிரிலிருப்பவரின்கண்ணே முயற்சியின் பயனைக்கண்டு கொள்ளலாமே, விசுவாமித்திரமுனிவர் தெய்வத்தைநெடுந்தூரத்தில்விடுத்து முயற்சியினானே பிராஹ்மணத்தன்மையை யடைந்தனர், வேறுவகையாகவில்லை. எம்போன்றமற்றைய முனிவர்களானும் பெருமுயல்வினானே ஆகாயகமனமுதலிய மகாசித்திகள் அடையப்பட்டன. பிரசித்த இந்திராதிதெய்வமும் முயல்வினானே வெற்றிகொள்ளப்பட்டது பிரசித்தமேயாம்; தேவர்கூட்டங்களை ஓட்டிவிட்டு மூவுலகிலும் முயல்வினானே தானவாசுரர்கள் சாமிராஜ்ஜியத்தையடைந்து சுகித்தார்கள். தேவர்களுடைய வெற்றியும் முயல்வினானேயல்லாமல் தானாகவே வந்ததல்லவாம்; சுரேசுரர்கள் தானவர்களிடத்தினின்றும் விஸ்தாரமாகிய சுவர்க்கத்தை, சின்னபின்னமாயுந் தூள்தூளாயும் பகைவர்சேனைபோமாறு போர்புரிந்து மிகுந்ததேஜசோடுகூடிய முயல்வினானே மீட்டுச்சுகித்தனர். ஆகையால் தெய்வத்திற்குந்தெய்வம் முயல்வேயாகும். அரக்குமெழுகு முதலியவற்றானே மெழுகப்பட்ட பிரசித்தமாய பௌருஷஊகத்தானே மூங்கிற்பெட்டியானது நெடுநேரம் நன்றாகத் தண்ணீரைத்தாங்காநிற்கும், ஆங்குத்தெய்வங்காரணமன்றாகும். பந்துஜனங்களைக் காத்தல், பலாத்காரமாய் மற்றையனுடைய இராச்சியத்தைக்கவர்தல், சினந்து பராநிக்கிரகஞ்செய்தல், போகவிலாசத்தி லுழலல், மற்றும் அநேகங் கஷ்டசாத்தியங்களாய புருஷார்த்தங்களில் ஔஷதமும் மணிமந்திராதிகளும் உதவுவதேபோலத் தெய்வமுதவச் சமர்த்தைக்காணேம். ஹே நற்கருத்துடைய குழந்தாய்! தனது பொருளற்ற மயங்கியமனோவிருத்தியின் பலவயத்தால் இனிதுகற்பிக்கப்பட்டுத் துச்சமாயிராநின்ற சகலகாரணகாரியப் பிரயோஜனங்களற்ற தெய்வத்தை யபேக்ஷியாமல் உனதுத்தமமான முயற்சியையே நீ பின்பற்றவேண்டும்.

8 - வது தெய்வநீக்கம் முற்றிற்று.

## 9 - வது கருமவிசாரம்.

இப்போது தெய்வத்தை நீக்கும்பொருட்டுப் பலத்தோடுகூடிய கருமங்களைத் தம் மனோமாத்திர மெனவும் மனதும் சிதான்மாவாகவேயிருக்கின்றதெனவும் கூறப்படும்: முன்னர்ப்புருட சுதந்திரத்தன்மைச்சித்தியின்பொருட்டுச் சிலபாற்றெய்வம் அசத்தேயெனவும் இலதேயெனவும் நீக்கப்பட்டது. சிலபாலோ பழையமுயற்சியினுலுண்டாய கருமமே தெய்வமெனவும்,இப்போதையமுயற்சியேதெய்வமெனவும், இயம்பப்பட்டது; அவற்றுண்முதற்கற்பத்தில் அதிதிடமாய லோகவேதப்பிரசித்திக்குப் பற்றுக்கோடின்மையின் அடைவையும், துர்ப்பலமாயதெய்வமில்லாதவழி அதனைக்குறித்து முயற்சிக்குப் பிரபலத்தன்மை கூறலின் விரோதத்தையும், இரண்டாவதன்கண்ணே தெய்வம் அசத்தென்னும் பிரதிஞ்ஞைகூடாமையையும், இப்போதிருப்பவரின் பிரவிருத்திகளும் பூர்வகரும பலமாதலினுனே அதையனுசரித்தேயுற்பத்தியாகும்போது அதனோடுவிரோதத்தை யடையாமையானே அவற்றுல் தன் வெற்றிக்கூற்றின் முரண்பாட்டையும், அதன் பரதந்திரத்தன்மையை யடைந்தபோதினும் புருடசுதந்திரத்தன்மை கெடுதலையும் ஆக்ஷேபிக்கவேண்டுமென்னும் இரகசியக் கருத்தை வைத்துக்கொண்டு ஸ்ரீ இராமர் அதன்பொருட்டு ஆசிரியருக்கு எக்கற்பத்திற் றுற்பரியமிருக்கின்றதென்றறியும் வேட்கையராய்வினுதல்: ஸ்ரீ இராமர் கூறுதல்: சருவதருமங்களையுமுணர்ந்த ஹே பகவன்! பிரஹ்மத்தை யுணர்ந்தவரே! உலகத்தில் மிகமிகவும் பிரசித்தமாயிராநின்ற தெய்வமானது அசத்தா? அல்லது சத்தேயா? எவ்வாறுகூறப்படுமோ அவ்வாறதையருளல்வேண்டும். இவ்வாறுவினவிய ஸ்ரீ இராமரது கருத்தையுணர்ந்த ஸ்ரீ வசிஷ்டரும் தெய்வநீக்கங்கூடுதலினுனே உலகநீக்கங்கைகூடி அத்வதீயமாய ஆன்மதத்துவத்தைப் போதிப்பிக்குமிச்சையுடையராய்க் கற்பமிரண்டிற்கும் பயனுல்வேற்றுமையின்றுமென்னும் இரகசியக்கருத்துடையராகி முதற்கற்பத்தையேபற்றிக் கூறியதையே கூறுகின்றார்: ஸ்ரீ வசிஷ்டர் கூறல்:—ஹே இராகவ! எல்லாக்காரியங்கட்கும் கருத்தா முயற்சியேயாகும் வேறன்றும்.எல்லாவிடத்தும் பலபோக்தாவாயிருக்குந்தன்மையும் முயற்சிக்கேயாம். ஆண்டுத்தெய்வங்காரணமாகாதாம். உண்மையாக ஆன்மா வுதாசீனமாயிருத்தலின் ஆன்மாவிற்குக் கருத்தாத்தன்மையேனும் போக்தாத்தன்மையேனும் இன்றும் என்பதை விளக்குதற்பொருட்டுக் காரணத்தின்கண்ணும் அதன் கருத்துருத்தன்மைக் கூற்றுக்கூடியதேயாம். தெய்வம் யாதொன்றையும் செய்வதுமில்லை, புசிப்பதுமில்லை, இருப்பதுமில்லை, காணப்படுவதுமில்லை, விவேகிகளால் ஆதரிக்கப்படுவதுமில்லை. இத்தகையகற்பனையுலகருக்கு இயற்கைமயக்கமேயாம். பற்றுமையின் பொருந்தாமையைப் பரிகரித்தல்வேண்டும். அவசியம் பயனைத்தருவதாயமுயற்சியினுனே உலகத்திற்சித்தியாநின்ற பயனுய மணிமுதலியதேகத்தின்கண்ணே நாயகன் சக்களத்திமுதலியோரால் எச்சுபாசுபப் பொருள் அடையப்படுகின்றதோ அதையேபற்றித் தெய்வமெனக்கூறப்படுகின்றது. நித்தியம் முயல்வினுனே முதலிலிஷ்டமான பொருளினிடத்திற் பின்னர் அநிஷ்டமும் உண்டாகின்றது. ஒவ்வொருகான் முதலிலநிஷ்டப்பொருளினிடத்திற் பின்னரிஷ்டமுமுண்டாகின்றது. அதனையே தெய்வமென உலகர்கூறுவர். லோகாயதிகாதுமதத்தைக் கூறப்புகின், போகத்திற்கு முக்கியசாதனமாயிருப்பதும் அவசியம் வருவதுமாகிய பொருளையே இவ்வுலகக்கூட்டம் தெய்வமென வழங்காநிற்கும். சித்

தாந்தமென்னவெனின், ஹே இராகவ! ஆகாசரூபம்போலச் சூனியசமமாயிராநின்
றதும், ககனநீலம்போலத்தோற்றுவதும் ஆகிய தெய்வம் மயல்நோக்கால் எங்கே
யோ ஒருவனுக்கு ஏதோ சிறிதைச் செய்வதாகும், விவேகநோக்காலோ யாதொன்
றும் செய்வதேகிடையாது. சித்தமாய புருடமுயற்சிக்குச் சுபாசுபபல முதய
மாகும்போது இப்பலம் இவ்வாறாக இக்காரணவடிவமாய் முன்னிருந்ததென்னுங்
கூற்றே தெய்வமெனக்கூறப்படும். இவ்வாறாயமதி யெனக்குண்டாயது, இவ்வா
றெனக்கு நிச்சயமுண்டாயது, என்பதாகக் கருமபலப் பிராப்தியாங்காலத்தே எங்
கூற்றுண்டோ அதையே தெய்வமென்பர். இஷ்ட அநிஷ்டபலன்களை யடையுங்கால்
இப்பூர்வகருமமானது இவ்வாறு என்னுமருத்தத்தின் வாசகமும் சமாதானமாத்
திரப் பொருட்டாய வசனமுமே தெய்வமென வியம்பப்படும்; எல்லாக் கற்பனை
களுமே முயற்சியின்கண்ணேயடங்கும். மொழிந்த இரண்டு கற்பங்களின் அபேதக்
கூற்றாலபிப்பிராயமறியாதவராய் முதற்கற்பத்தாலெடுத்து இரண்டாவதுகறபத்தான்
முடித்தலின் விரோதம் வருவதாகஎண்ணியவராய்த் தமதுகருத்தை வெளிப்படுத்து
வான் ஸ்ரீ இராமர் கூறல்: ஹே சருவதருமங்களையுமுணர்ந்த பகவன்! முன்னியற்
றியகருமமியாதோ அதுவேமீண்டுமீண்டும் தெய்வமெனக்கூறுவீர்களாயின் அத்
தெய்வமிருப்பதேயாகும், ஆகவே யில்லையெனத்தங்களால் எங்ஙனம் நீக்கப்படும்?
நீக்கவேண்டுமென நிகழ்த்துவதற்கு கருத்துயாதோ அருளல்வேண்டும்.? தமது
கருத்தை வெளிப்படுத்தும்பொருட்டு ஸ்ரீ வசிஷ்டமுனிவர் கூறல்; ஹே நன்மதியுடை
யோய்! இரண்டு கற்பத்திலும் விரோதத்தையும் தோடத்தையும் இனிதறிந்தீர்.
தெய்வமின்றெனத் தோஷசங்கைகளெல்லாமற்றத் திரமாய்மதியுண்டாதற்பொரு
ட்டு வேண்டியவற்றையெல்லாம் கூறக்கேட்பாயாக. எம்மனோவாசனை திரமாயதி
கரித்து முன்னுண்டாயிற்றோ அதுவே இக்காயத்தால் வாக்காலாங்கருமமாக நரர்
களுக்குப் பரிணமித்துலவும் "எதுதனை மனத்தா னெண்ணுகின் றானோ அதுதனை
வாக்கா லருமொழி மொழிவன், அதுதனைத் தொழிலா லாற்றியே நிற்பன்" என்
னும் சுருதியினானும் அவ்வாறேயனுபவமிருத்தலினாலும் உணரலாமன்றோ! அத
னையே உடன்பாடெதிர்மறைகளாற்காணவேண்டும், ஜந்துவான தெந்தவாசனையோ
டுறுமோ கணத்தி லதன்கருத்தாவாயிருக்கும், வாசனைவேறாகவும் கருமம் வேறாக
வும் ஆமென்பதாகப்பொருந்துவதே கிடையாது. விசேடத்தில் உடனிகழ்தல்
காண்டலின் சாமானியத்தில் வியாத்தியானது சித்தியாகும். கிராமத்தையடைய
வேண்டுமென்னும் வெளிப்பட்ட வாசனையுடையவன் கிராமத்தையடைவன். பட்ட
ணத்தையடைய விரும்பியவன் பட்டணத்தையேயடைவன். ஆதலின், எவனெவன்
எவ்வெவ்வாதனையோடு கூடியிருப்பனோ அவனவன் அவ்வதில் எப்போதும்
முயன்றுகொண்டேயிருப்பன். எப்பயனையடையவேண்டுமென மிகவுமவாவுற்று
முன்னர் எக்கருமம் முயல்வின் மிகுதியால் திடமாகச்செய்யப்பட்டதோ அதுவே
தெய்வமெனப்பரியாயமாக இங்குக்கூறப்படும். கருமங்களில் நிலைத்திருப்பவர்தம்
எல்லாக்கருமங்களும் கூறிய பிரகாரமாகவேயாகின்றன, கருமமும் திடமாகச்சம்
பாதிக்கப்பெற்ற தனது வாதனையேயாகும், வாதனையும் தனது காரணமாகிய மன
தினுமயலாகாதாம். இது விஷயத்தில் "வாக்காலாக்கியபெயரே காரியம்" என்னும்
சுருதியுணர்த்திய நியாயமுமுளது. வாக்குக்காயங்களிலும் கருமங்காணப்பட்ட

போதினும் அவற்றையும் ஆராயின் மனோவாசனைமாத்திரமென இனிக்கூறப்படு தலைக்கருதி இவ்வாறு கூறுதலே பொருத்தமாம், கூறியமனதும் பூர்ணன்மாவே யாம்; அன்றியதனினும்அயலாக ஆகமாட்டாதாம். "அது மனதைச்சிருட்டித்தது." என்பதாய சுருதியினும் மனது ஆன்மாவினிடத்தினின்றும் விவர்த்தமெனவே காணப்படுகின்றது. புருடன் உண்மையாக நிர்விகார சின்மாத்திரரூபனாதலின் மனதசத்தாகவே கருமமும் அசத்தாதலின் அதன்வடிவமான தெய்வமும் அசத் தேயாம் எனப் பயன்பெற்றவா காண்க. காண்பதனானே எத்தெய்வமுளதோ அதுவே கருமமாம், கருமமும் மனமேயாம், மனமும் புருடனும். ஆதலின் தெய்வமில்லை யென்பதே நிச்சயம். "உயிர்த்தலானுயிராம், உரைத்தலால் வாக்காம், காண்ட லாற்கண்ணும், கேட்டலாற்செவியாம். நினைத்தலான்மனமாம்" என்னும் மறையால் ஆன்மாவிற்கே அத்தியாசத்தானே மனுதிவடிவமாய் நிற்றலாந்தகைமை யிருத்தலின் கருமமும் அதன்பயனும் ஆகவும் இருத்தலுங்கூடும். கூடவே அதுவே தெய்வமெ னக்கூறப்படுமாயின், ஆகுகதான் அங்ஙன் அதனாற் புருடசுதந்திரத்தன்மைக் கானி யொன்றையுங்காணேமேயெனக் கருதல்வேண்டும். இவ்வான்மாவே மனுதிபாவத் தையடைந்தது. எவ்வெதை நல்லதென முயல்கின்றதோ முயன்றுசெய்த அவ்வதைத் தன் வடிவமாயிருக்குந் தெய்வத்தானே யடைகின்றது. அத்தியந்தம் அசத்தே மன மாயின், யாங்ஙனம் அதனால் விவகாரசித்தியாதல்? மலடிமைந்தன் முதலியோரானே அது காணக்கிடைப்பதின்றன்றோ எனின், ஊகத்தோடுகூடிய பார்வையான் அதற் கதிர்வசநீயத்தன்மையைக் கண்டு "எவ்விது இருதயம் மனமுமிதுவே, சேதனமென் னும் விருத்தியும், ஈசுரபாவமும், கலைஞானமும், அவ்வக்கா லுளதாம் மதிவிளக்க மும்," என்பதாதி சுருதியை யனுசரித்து மனதிற்கே தெய்வாதி நாமபேதமுணர்தல் வேண்டும். சத்தெனவும் அசத்தெனவும், சித்தெனவும் ஜடமெனவும் பேதமென வும் அபேதமெனவும் உண்மையாக நிச்சயிக்கமுடியாத பொய்வடிவமனத்தோடும் ஒருமை யடைந்திருக்கும் புருடனுக்கே, மனம், சித்தம், வாசனை, கருமம், தெய்வம், நிச்சயம் என்பன பெயர்களென்று பெரியோராற் கூறப்படும். படவே புருட சுதந் திரத்தகைமை சித்தமாம். இவ்வாறு கூறியபடியாய நாமங்கள் வாய்ந்த புருடன் திட பாவனையினாலே நித்தியம் எவ்வாறு முயலுகின்றனனோ அவ்வாறே வேண்டியபயனை யடைகின்றனன். இவ்வாறே புருடப்பிரயத்தனத்தானே இவ்வுலகில் எல்லாப்பொ ருள்களுமே அடையப்பெறுமேயலாது வேறொன்றுமில்லையாம். ஆதலின், அம்முய ற்சி நினக்குச்சுபத்தைத் தருவதாக ஆகுக. இவ்வாறாயினும் முன்வாசனையின் பாவசனாகிய எனக்கு இப்போது சுதந்திரத்தன்மை சித்தியாதாம் என வினுதல் ஸ்ரீ இராமர் கூறல்:—ஹே பகவன்! பழையவாசனையின் கூட்டமானது என்னை யேவு கின்றபடியே யிருக்கின்றேன். ஹே முனிவரே! தீனனாகிப் பரவயனாய யான் என்ன செய்வேன்! இப்பொழுது பலத்திற் சுதந்திரமில்லாமை யுளதாகுக. வருங்காலத்திய பலானுகூலமாய முயல்விலோ சுதந்திரமே யிருக்கின்றதாம். நல்வித்தையை யடை வுற்ற பிறப்பா லனுமிக்கப்பட்ட நன்முயற்சிப் பிராரப்த பலத்தோடுகூடிய பூர்வவாச னைக்குத் தனது விரோதியாய பலமாத்திரத்தைத் தடுக்குந் தன்மையிருத்தலின், அவனதிகாரப்பிறப்பின்கண்ணும் அவன் பிரவிருத்தி சுதந்திரமில்லாவிடில் கருமத் தையும் பிரஹ்மவித்தையையும் போதிக்குஞ்சாஸ்திரமும் வீணாயன்றோபோம் எனக்

கருதி ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல் :—அதிகாரிஜன்ம ஹேதுவான வாசனையி னுதவி
யானே நீ சாசுவதமான மோக்ஷத்தையடையப்போகின்றாய், அதுவும் உனது பெரு
முயல்வினனே யுண்டாய ஞானத்தானேயல்லாமல் வேறு வழியாக இல்லையாம்.
வாசனையின் சகாயமோ ஜன்மவிவேகசம்பத்து விசேஷணத்தினாலே யனுமித்துக்
கொள்ளலாமல்லவா ! கூறியபொருளை நன்று யுணர்ந்துகொள்வான் வாசனையின்
பிரிவை வினவுதல் :—வாசனைக்கூட்டம் சுபமெனவும் அசுபமெனவும் மிருவகையாம்.
உனக்குப்பழையவாதனை சுபமா ? அசுபமா? சுபமும் அசுபமுமா? உளது. முதலாவ
தேல், அவற்றுள் சுத்தவாதனையின் கூட்டத்தானே யேவப்படுவையே லிப்போது
அம்முறையாகச் சுபத்தினனே அழியாதபதத்தை யடைவாய். இரண்டாவதேலோ,
சுதந்திரமாக வாதனைகட்கு எழுச்சியோ கிடையாதாம், மற்றே வெளிப்படுத்துவதன்
வாயிலாகவே எழும். அசாதுக்களுடைய சங்கமத்தானே தெய்வத்தால் அசுபவாசனை
யொன்றெழுந்து உன்னை மகாசங்கடத்தில் அழுத்துமாயின், அதையும், அதற்கு
விரோதியாய சாதுசங்கஞ் சற்சாஸ்திரமுதலியவற்றின் றிடசேவையானே விரோதி
வாசனையைக்கிளப்பி விரைவில் தூரத்தேதள்ளித்திரஸ்கரிக்கவேண்டும். முயற்சியினாற்
கிடைத்த பலத்தா லவசியம் வெற்றிகொள்ளலாம். “எவன் மனத்திருந்து மம்மனத்
தயலாம், எவனை மனந்தான் அறியாதாமோ” எனமனதின் பிரேரகமாய பிரஞ்ஞாத்மா
அன்னியமெனவே கேட்கப்படுகின்றமையின் அதனதீனமாகவே மனோவாசனை
யுற்பவமாங்கால் யாங்ஙனம் எனக்கு நல்லவாசனை யுண்டாக்குஞ் சுதந்திரங் கூடுமெ
னின், அறிவுமாத்திர இயற்கைவாய்ந்த பிராஞ்ஞனெனப்படு மதுவே நீ யாவாய்.
ஜடவடிவமாய சூக்குமதூல தேகங்கள் அன்னியனாய் விடுமாறு நீ யாகாய் “இதனி
னும் வேறாய்க் காண்போ னின்றாம். அதுவே நீயா யமர்ந்தனை” என்பதாதி சுருதியு
மிதையேயன்றோ கூறுகின்றது. ஆதலின் இவ்வாறு சின்மாத்திர சொரூபமாயிருக்
குநினக்கு அன்னியமாய சேதனத்தாலறியப்படுந் தகைமை எவ்வாறு கூடும்? பிராஞ்
ஞன் உன்னினும் அன்னியன் ஆவனேலாயின் சித்திற்கு மற்றொருசித்தால் ஒளிர்
தல் கூடாமையின் உன்னைப்பாராமல் சர்வஞ்ஞமேயது ஆகாதாம். ஆதலின்,
நீயே யதுவென மாற்றிக்கோடலானே ஒருமையானது சித்திக்கும். அன்னியத்தால்
நீ விளக்கப்படுவையேயாயின் உனக்குச் சேதனத்தன்மை எங்கேயிருக்கும்? சித்தா
லொளிர்வதற்கு வந்தடையும் ஜடத்தன்மையை நீக்கலுமேலுமோ? சித்திற்கு வேறு
சித்தால் விளங்குதல் கூடுமேல் அதுவும் அன்னியத்திற்கு விடயமாம், ஆகவே எல்லை
யில்லாது செல்லுந்தோடமுமாம். அன்னிய முன்னை யறிபுமேயாயின் அதுதனை யறி
வதுயாதோ வேறு? அவ்வறிவதையுமறிவது யாதோ? அதற்குமயலதேல் அநவஸ்தை
யாகும். அதுவும் உண்மையாகமாட்டாமல் வஸ்து சித்தியைச்செய்யாதாம். ஆகவே
உனக்குச் சத்வாசனையை வெளிக்கிளப்பும் முயல்விற் சுதந்திரத்தன்மைதடையற்ற
தேயாகும். புருடசுதந்திரத்தன்மையின் முக்கியத்திற்குப் பயனென்னெனின், சுப
அசுபங்களாகிய வழிகளில் பெருகிவரும் வாசனாநதியை முயல்வினாலே சுபவழியி
லேயே திருப்பிவிடவேண்டும். வீரியவான்களுக்குள் மகாவீரிய ! அசுபங்களிற் றிரி
ந்துகொண்டிருக்கும் உனது மனதை முயற்சியின் வலியினாலே, சுபங்களிலேயே புகு
த்தவேண்டும். சித்தமாய நதியானது புண்ணியத்தின் பொருட்டும் பாவத்தின்பொரு
ட்டுமென இருவகையாய்ப் பிரவாகமுற்று வருகின்றது. அவற்றுள் ஒருதாரையைத்

தடைப்படுத்தின், மற்றதன்கண் இருமடங்காகப் பெருகும் என்னும் யோகசாஸ்திரத்தையும் அனுசரிக்கவேண்டும். அசுபத்தினின்றும்நீக்கியது சுபத்தைச் சென்றடையும். சுபத்தினின்றும் நீக்கியது அசுபத்தைச்சென்றடையும். ஜந்துக்களுடைய சித்தமானது சிசுக்களைப்போலாகும், ஆதலினதனை யசுபத்தினின்றும் பலமான முயல்வான் நீக்கவேண்டும். இவ்வாறு கூறியமுறையே சித்தபாலகனை விரைவிலே இராகாதிவிஷமத் தன்மையை விடும்படி செய்வித்து இயற்கையாய சமதன்மையின்கண்ணே குற்றமற்றிருத்தலைச் சம்பாதித்துப் பையப்பைய ஆன்மசொரூபத்தில் நிரோதவடிவமுயல்வாற் காக்கவேண்டும். விரைவிலே அடமாக நிரோதிக்கக்கூடாது. எழுச்சியாற் சமாதானத்தை யடையாதுபோய்விடும், அவ்வாறு கூடாது. (அவ்வாறே ஸ்ரீ பகவத்வசனமும் "ஒண்டபிரியங்கவ ருணர்வினுற்பையப்பைய வுபாமந்தனைச்சேர்க" இதன்கட் பிரமாணமாகும்) உன்னுன் முன்னர்ச் சுபவாசனைக்கூட்டத்தையேனும் அசுபவாசனைக்கூட்டத்தையேனும் முயல்வின் பயில்வாற் பெரிதாகச் சேர்க்கப்பட்டிருந்தபோதினும் இப்போது சுபத்தையே பெரிதாக்கவேண்டும். முதலிற்பலமானது விரைவிற் கைகூடவேண்டியாம், இரண்டாவதிற்பகையைத் தடுக்கும்பொருட்டுச் சுபவாசனை யவசியம்வேண்டியதேயாம். வாசனையின் பயிற்சியானது பயனற்றுப்போமென்பதாகச் சங்கிக்கவேண்டியதில்லை. பூர்வவாசனைப் பயில்வுகளிற் பிரத்தியக்ஷமாகப் பயன் சித்தித்திருத்தலின், ஹே பகைவரை வெல்வோய்! முன்முயற்சியின் பலத்தால் உனது வாசனையானது மிகத்திடத்தை யடைவுற்றபோதே பயிற்சி பயனோடுகூடியதென் றறிந்துகொள்ளலாமல்லவா! ஹே பாபமற்ற குழந்தாய்! அவ்வாறே இப்போதுங்கூட உனது வாதனையானது பயில்வின் வலியால் அதிதிடமாம். ஆதலின், சுபப்பயிற்சியையே செய்வாயாக. பழையவாசனை பருத்திருந்தபோதினும் ஐயப்பாடுண்டாயிற்கேட்பாயாக, ஹே அருமைக்குழந்தாய்! உனது வாசனை பூர்வம் பயிற்சியால் திடத்தன்மையை யடையாதிருக்கும்பக்ஷத்தி லிப்போதும் அது வளரமாட்டாது, நீ சுகமாகவேயிருக்கலாம். தக்கபடி சுகமாகவே விவகரிக்கலாம். ஆகவே, துர்வாசனை வளர்தலானேயுண்டாகும் அநர்த்தஞ் சம்பவிக்குமெனத் திக்கிக்கவேண்டிய தினக்கில்லை. ஆயின் சுபவாசனையை வளர்ப்பதில் என்னை யேன் ஏவுகின்றீர் எனின், ஐயத்தை யடைந்தபோதினும் அத்தியந்தம் வாசனையையே வளர்ப்பாயாக. நல்லொழுக்கங்களைப் பழகிவருதலால் இச்சுபவாசனையை விருத்திசெய்தலானே யாதொருகேடும்வராதாம். ("நல்லதீயபயன்றனைநாடிடு, மெல்லையையுறினுஞ் சுபமேசெய்வாய், வல்லனில்லெனில் வந்ததுயாதுகொ, னல்லனுண்டெனினுத்திகன் பொன்றினுன்" என்னும் நியாயத்தையும் கண்டுகொள்க.) உண்மையாயோ சந்தேகிக்கவேண்டிய வேலையேயில்லை. பிறவிடத்தும் பயிற்சியானது பயில்வதின் றிடகாரணமாதல் துணியப்பெற்றிருத்தலின், உலகின்கண்ணே எவ்வெதைப்பயில்கின்றுனோ அம்மயமாகவே யாகின்றுன் என்பது பாலகன்முதற் பண்டிதனீருக ஐயமில்லாது கண்டோம். ஆகையாலீண்டுச் சுபவாசனையோடுகூடி மோக்ஷத்தை யடையும்பொருட்டு மகாமுயற்சியைக் கைக்கொண்டு பஞ்சேந்திரியங்களையும் வெற்றிபுரிந்து சுகித்திருத்தி. ஆயின், எவ்வளவுகாலம் சுபவாசனையைப் பயிலவேண்டும்எனின், விற்பத்தியோடுகூடிய மனத்தனுகாமற் பரமான்மபதத்தை யறியாதிருக்கும்வரை அதாவது தத்துவஞானம் வரும்வரை, குருசாஸ்திரப் பிரமாணயுக்தி யனுபவங்களான் நிர்ண

யிக்கப்பட்டதை ஆசரிக்கவேண்டும். ஆடையிற்சேர்ந்த அழுக்கானது வெள்ளாவி வைத்தல் சாரமண்ணிடன் முதலியவற்றானே தீர்தல்போல இராகாதிவாசனைக் கஷாயங்களெல்லாம் நீங்கப்பெற்றபின்னர் ஆன்மவஸ்துவை யறிந்தவனாகிச் சகலதுயரங்களும் நீங்கப்பெற்றுப் பூர்ணமாக விருக்குமுன்னால் நல்வாசனைக்கூட்டமும் விடத்தக்கதேயாகும். அவ்வாறே ஸ்ருதியும் "பக்குவங்கஷாயம் படவே வினைகளாற் பக்குவ வுணர்வுபின்பவித்திடலாமோ" எனக் கூறுகின்றது. கூறியபொருளையே சுருக்கியுபசங்கரித்துக்கொண்டு ஆசரிக்கத்தக்க சுபத்தைக் குறிக்கின்றார்:—மகாமங்களமாயும் பெரியோராற் பேணப்பற்றதாயுமிருக்கும் சுபவாதனையையனுசரித்து அதனை யடைவுற்ற மதியினானே எப்போதும் சோகமற்ற பரமார்த்தவஸ்துவைச் சாக்ஷாத்கரிப்பாயாக. அதன்பின்னர் அந்தச்சுபவாசனையை யனுசரித்தலையும் விட்டுப் பரமானந்தமாகவே யிருத்தி.

9 - வது கருமவிசாரம் முற்றிற்று.



## 10 - வது ஞானத்தின் வரவு.

இப்போது, தந்தையுந்தாமும் அவதரித்ததும், யாவருக்கும் மோக்ஷமுண்டாதற்பொருட்டுத் தமக்குபதேசித்ததும், ஞானம் வந்தமுறைமையும் கூறப்படும். முன்னியற்றிய முயற்சியே தெய்வமெனவாகுக. அது இப்போதியற்றும் நற்றொழிலானே வெற்றிகொள்ளப்படினும், வைராக்கியப்பிரகரணத்திற் கிருதாந்தனுடைய மனைவியென வருணிக்கப்பட்ட நியதியோ வெற்றிகொள்ளப்படாததேயாம். வரும்பொருள்களின் அவசியம் வருகைவடிவப் பவிக்கத்தக்கதென்னும் வேறுபெயருற்று ஒருவராலும் நீக்கவொண்ணாததாம். (பெரியோருங்கூறுவர் "தடையறவரும்பொருட்டடையெதுமுளதேற், கொடைநள விராமர்கொண்டலாந்தருமர், இடரினைமிக மிகவெய்திடமாட்டார்") ஆதலின் அதனியமத்துக் குட்பட்டதனானும் புருடனுக்குச் சுதந்திரமில்லையென்னும் வினாவை விலக்குவான் விரும்பிய ஸ்ரீ வசிஷ்டர் கூறல்:—பிரஹ்மதத்வமானது சச்சிதானந்த சுவப்பிரகாச வடிவமாயெங்கும் சமமாயெல்லாவற்றிற்கும் அனுகூலமாயிருக்கும். அதன் சம்பந்தியாய சர்வபதார்த்தங்களின்சத்தையே வருங்கால சம்பந்தத்தால் உரைக்கப்படுவதாய் வரத்தக்கதென்னும் நியதியெனப்படும். சத்தையாண்டுந் தக்கபடிநிற்கும் பிரஹ்மதத்வமாம். அதுவே காரணகாரியங்களில் நியாமக நியமியத்தன்மைவாய்ந்து நிற்பதாம். காரணமுளபோது அவசியம் காரியமாயாகும், காரியமுளபோது அவசியம் காரணமாயாகும் என்னும் நியதி நியமமாம். அதுவும் நியந்தாவாகிய காரணாதிகளின் காரியாதி நியாமகத்தன்மையாம், நியமியமாய காரியாதிகளின் நியமியத்தன்மையுமாம், நியமமாக முற்காலசத்தையையுடையது காரணமாம். நியமமாக பிற்காலசத்தையை யுடையது காரியமாம். ஆகவே அவற்றிற்குத் தேசகாலங்களாற்சிறப்பித்த சத்தைமாத்திரரூபத்தன்மை யிருக்கும். முற்கூறிய நியதியும் சருவகாரண பூதபிரஹ்மசத்தாரூபக் காலசக்தியேயாம். ஆகையால், எல்லாவற்றிற்கு மனுகூலவடிவமாயிருத்தலின் முயற்சியைப் பயன்பெறுத்துதலினும் நியதியனுகூலமாகவேயிருக்கும், பிரதிகூலமாகாதாம் என்பதனாற் கூறப்பட்டவசனம் கூறப்படுமிவ்வொருமையைச் செய்விக்கு முபாயத்தை யுணர்த்துவதாகும். முதலில் அதுவே கூறப்படும்.

நித்தியபந்துவாய பிரயத்தனத்தைப் பின்பற்றி மோக்ஷமடையும்பொருட்டு நித்திய பந்துவாயிராநின்ற அச்சித்தத்தை யொருமைப்படுத்திக்கொண்டு கூறப்பட்ட விதனைக் கேட்பாயாக. பொறிகள் விஷயாபிலாஷை யேறப்பெற்றனவா யுலவுகின்றன. மோக்ஷானந்தத்தினின்றும் மிகவும் அற்பமாய இகலோக பரலோகசுகத்தில் விரைவிற்சென்று வீழ்வனவாயுலவும். ஆதலின் அவற்றை விஷயாபிலாஷைவந்து பீடியாதபடி முயல்வினாலே மனோசாந்தியை விரைவிற்செய்விக்கவேண்டும். அதன் பொருட்டு யாதுசெய்யவேண்டுமெனின், ஈண்டுச்சித்திக்கும் ஜீவன்முக்தி சித்திக்கும் பொருட்டும், ஆண்டுச்சித்திக்கும் விதேகமுக்தி சித்திக்கும்பொருட்டும், மனுடலோக சுவர்க்கலோகாதிகளிலிருக்கும் அதிகாரிகட்கு ஞானஞ்சித்திக்கும்பொருட்டும், மோக்ஷசாதனவுபதேசம் நிறைந்த புருடார்த்தபலந்தருவதே தொழிலாகவாய்ந்த சர்வ உபநிஷத்சாரத்தாற் செய்யப்பட்ட சங்கிதையைக் கூறக்கேட்பாயாக (அதனைக்கேட்பதில் மந்தவிரக்தனுக்கும் அதிகாரங்கிடையாது) சமுசாரவாதனையை மீண்டுங் கவராதபடி உள்ளேவிடுத்து உதாரமான மதியினாலே சாந்திவைராக்கிய சுகத்தை நிறையக்கொண்டு கருமகாண்ட சுருதிகள், உபாசனை பரசுருதிகளின் ஞானசாதகத்தன்மையைக் காண்பிப்பதும், அவ்விடயங்களாற் கெடுக்கப்படாததும், ஆன்மாவின் கண்ணேயனுசந்தானத்தையுடையதும், குருசாஸ்திரம் உபதேசித்த கிரமமாகக்கிடைத்த சுவானுபவத்தையும் ஏகாசத்தையும் சம்பாதிப்பதும், சுகதுக்கங்களைக்கெடுப்பதும் பேரானந்தத்திற்கு முக்கியகாரணமாயதும், மோக்ஷத்திற்கு முக்கியசாதனமாயதும் ஆம் இவ்வியம்பும் மகாசங்கிதையை மனவொருமையுடன் கேட்பாயாக. அவிவேகிகள் சிரவணமண்டபத்துட்கூட நுழைய அருகரல்லராதலின் சர்வவிவேகிகளோடும் இம்மோக்ஷகதையை நீ கேட்டு என்றும் அழிவேயில்லாது துயரஞ் சிறிதுமில்லாத பரமபதத்தை யடைவாயாக. இவ்வாறு அங்கசகிதமாகச் சிரவணத்தைக் கூறியபின் கேட்கத்தக்க சாஸ்திராதிகள் இல்லையென்பதைக் குறித்து அஃதுண்டான பிரகாரத்தைக் கூறல்:—ஹே இராகவ! கற்பத்தின் ஆதியில் பிரஹ்மாவாகிய பரமேஷ்டியால், எல்லாத்துயரங்களையு மெரிப்பதும் மதிக்குப் பரமசமாதானத்தைச் செய்விப்பதும் ஆகிய இஃதியம்பப்பட்டது. ஸ்ரீ இராமர், ஸ்ரீ வசிஷ்ட அபிப்ராயத்தைத் தொடர்ந்து அறியும் அவாவுற்று அறைதல்:—ஹே பகவன்! முன்னர்ச் சுயம்புவால் இது என்ன காரணத்தானே கூறப்பட்டது? எங்ஙனந் தங்களா லடையப்பட்டது? இதனை யடியேனுக் குரைத்தருளவேண்டும். ஆண்டாதியிற் பரமேஷ்டியின் ஜன்மத்தைக் கூற அவர் மூலகாரணத்தை ஸ்ரீ வசிஷ்ட முனிவர் கூறல்:—அநந்தமாயிகவிலாசங்களின் அதிஷ்டானபூத ஆன்மாவுளது. அது யாவற்றினும் அயலாயுள்ளாயிருப்பது, சருவாதாரமாயது, மாயையதன்காரியமி யாவற்றையுங்கடந்தது, பிரத்தியக்குச் சித்திரூபமாய் நித்திய அபரோக்ஷமாகி எல்லாப் பிராணிகளினது இருதயத்திலொளிர் விளக்காயிருப்பது, சிதம்பரமாயிருப்பது, 'அழிவிலாவடிவமுற்றதுமாம். மாயையதன் காரியங்கள் அசையும்போதும் அசையாதபோதும் ஒரே ஆகாரமாயிருப்பதும் ஒரே யியற்கையாயிருப்பதும் ஆகிய நிர்விகார அதனினின்றும் சர்வகாரியங்களிலும் வியாபித்திராநின்ற பிரஹ்மாண்ட வடிவமாய விராட்டுஎன்னும் விஷ்ணுவானவர் சூக்குமபூதச் சிருட்டிக்கிரமமாக பெருகிவாராநின்ற நீர்நிறைந்த அசைவு அசைவின்மைகளிலும் அழியாத ஒரே

நீரியற்கையையுடைத்தான கடலினின்றும் அலையுண்டானதேபோல உண்டானர். நிர்விகாரத்தினின்றும் உலகவுதயம் விவர்த்தரூபம் ஆகுமேயல்லாது பரிணமமாக மாட்டாதாம். மேருகிரியைக் கர்ணிகையாகவும், திசைகளைத்தளங்களாகவும், நக்ஷத்திரங்களைக் கேசரங்களாவும் விளங்காநின்ற அவருடைய இருதயதாமரையினின்றும் பரமேஷ்டியானவ ருண்டானர். வேத வேதார்த்தங்களியாவற்றையுமுணர்ந்து தேவமுனிமண்டலங்களா லலங்கரிக்கப்பட்ட அவர் எல்லாப் பிராணிக்கூட்டங்களையும் மனது விகற்பக்கூட்டத்தைச் சிருட்டிப்பதேபோலச் சிருட்டித்தார். சம்புத்தீவின் ஒரு கோணத்தில் பாரதவர்ஷமெனப் பெயர்பெற்ற இதன்கண் தேகவியாதி மனோவியாதிகளாற்கஷ்டப்படும் ஜனக்கூட்டங்களின் பரம்பரையைச் சிருஷ்டித்தார். சிருஷ்டிக்கப்பட்ட ஜனங்கள், இலாப நஷ்டங்களான் மகிழ்வு கவலையுற்ற மனத்தையுடையவர்களாகவும், உண்டாகி யழிந்துகொண்டிருப்பதிற் றற்பரர்களாகவும், அற்ப வாழ்க்கையுடையவர்களாகவும், திரிந்துகொண்டிருக்கும் இப்பூதஜாதிகளின் சிருஷ்டியில் பற்பலவிதமான விஷயபோக விசனங்களா லவதிப்படும் பிராணிகளின் றுயரைப்பார்த்துச் சகலலோகங்களையும் சிருஷ்டித்து எல்லாத்துயரங்களையும் நீக்கும் சமர்த்துடைய அவர்மைந்தன்றுயரை நோக்கியிரங்கும் தந்தையைப்போலக் கருணையினல் இரங்கினர். ஆசையாற் கெடுக்கப்பட்டு அற்ப ஆயுளோடுகூடியிருக்கும் இவர்களுடைய துக்கத்தின் நீக்கத்தின் உபாயம் எஃதாமெனக் கணநேரம் ஒருமையோடுகூடிய மனத்தராய்ப் பூதியின்பொருட்டுச் சிந்தித்தனர். முதற்சுத்திசாதனமாகச் சிருட்டித்தது யாதெனின், ஈசுரராய அவர் இவ்வாறு இனிது சிந்தித்துச் சுயம் தவத்தையும் தருமத்தையும் தானத்தையும் சத்தியத்தையும் தீர்த்தங்களையுமே சிருஷ்டித்தனர். இவற்றைச் சிருஷ்டித்து மீண்டும் பிராணிகளைப் படைக்கும் பிரமதேவர் நம்மாற் சிருட்டிக்கப்பட்ட புருடர்கட்குத் தவமுதலியவற்றனே வேரோடுந் துயர மாயவில்லையெனத் தாமேசிந்திப்பாராயினர். ஜீவன் எதனுன் மீண்டுபிறப்பதும் இறப்பதும் அற்றிருப்பானே அத்தகைய பரமசுகவடிவ நிர்வாணபதம் ஞானத்தானே கிடைக்கும். சமுசாரத்தைக்கடப்பதில் ஜந்துக்கட்கு உபாயம் ஞானமேயாம். தவந் தானந்தீர்த்தமுதலியவை உபாயங்களல்லவென "திரமாமருத்தத்திஞன்மைந்தராஞுந் தீராதுகன்மத்திஞனும்" "மகவடிவான வங்கங்களாமிவை, புகுகிறமற்ற திறத்தனவேயாம்" என்பதாதி சுருதிகளிற்கூறப்பட்டுள்ளன. ஆகையா லாண்டுத் துயரைத் தொலைக்கவேண்டித் தன்னைமறந்து திரியும் பிராணிக்கு நவமாய்த் திடமாயிருக்கும் தாண்டுமுபாயத்தை விரைவில் வெளிப்படுத்தாநிற்பேன். தாமரையின்கண் வீற்றிருக்கும் பகவானுன பிரஹ்மாவானவர் இவ்வாறு சிந்தித்து உன்னெதிரிலிருக்கு மிவ்வென்னை மனத்தினுற் சங்கற்பித்துண்டாக்கினர். அநிர்வசனீய மாயையின்வயத்தானே யுபாதியுற்பத்தியா யுண்டாயயான் விரைவில் அலையினிடத்தினின்றும் மீண்டோ ரலையுண்டாவதேபோல விரைவிற் பிதாவின்சந்நிதியிலடைந்தேன். ஜபமாலையையும் கமண்டலத்தையும் கையிற்றரித்திருக்கும் நாதராகிய பிரஹ்மாவானவர், ஜபமாலையோடுங் கமண்டலத்தோடு மிருக்கப்பட்ட என்னுல் வணக்கத்துடன் நமஸ்கரிக்கப்பட்டனர். 'போ'மைந்தவெனக் கூறித் தாமிருக்கும் தாமரையின் வடதளத்தில் வெண்மேகம் சந்திரனை விடுவதேபோலத் திருக்கரத்தால் என்னை யுட்காரப் போகச்சொன்னர். மான்றோலைத் தரித்திருக்கும் தந்தையாமவர்

மான்றேலே வஸ்திரமாகவுடைய என்னைப் பார்த்து நல்லன்னமானது சாரசப் பக்ஷிக்குக் கூறியதுபோற் கூறியதாவது: ஹே மைந்த ! நினது மனதை ஒரு முகூர்த்தம் வரை குரங்கைப்போலச் சஞ்சல ஹேதுவாய அஞ்ஞானமானது சந்திரனைக் களங்கமடைவதுபோ லடைக. இவ்வாறு தந்தையால் விரைவிற் சபிக்கப்பட்டுப் பரமேஷ்டியினுடைய சங்கற்பத்தின் பின்னர், அந்தோ ஆச்சரியம் பூர்ண நிர்மல சொரூபத்தை மறந்தனன் யான். பின் பொன்னைப் பறிகொடுத்தவன்போலத் தீனத்தன்மையை யடைந்தேன், போதமற்ற புத்தியோடிருந்தேன், தனமற்றவன்போலத் துக்க சோகங்களாற் றபிக்கப்பட்டவனானேன். அந்தோ கஷ்டம் ! சமுசாரமென்னு மித்தோடம் இங்கெங்ஙன மப்பா வந்தது, என இவ்வாறு சும்மாவே யாதொரு தொழிலேயும் செய்யாமலிருந்துகொண்டுள்ளே சிந்தித்தனன். பின்பென் பிதா என்னை நோக்கிக் குழந்தாய் ! துயரமடைந்தவன்போ லிருக்கின்றாயே அஃதென்னே துயரம் நீங்கு முபாயத்தைக் கேட்பாயாக; அதனா னித்தியம் சுகியாகவே யாவாயெனக் கூறினர். அதன்பின் சகல லோகங்களையும் சிருஷ்டிக்கும் பிரஹ்மாவை வணங்கிப் பொற்றாமரைத்தளத்திலிருந்த யான் சமுசாரநோய்க்கு மருந்தை ஹே நாதரே ! மகா துக்கமயமாகிய சமுசாரம் எங்ஙனம் வந்தது? பிராணிகட்கிது எவ்வாறு நீங்கும் ? என வினவினேன். வினவவே, எதை யறிந்து தந்தையினுடைய சர்வ உற்கிருஷ்ட தத்துவஞானம்போல நிர்மல பரிபூர்ண இயற்கையனா யிருந்தேனோ அத்தகைய பரம பவித்திரமாகிய ஞானத்தை அந்தோ ஆச்சரியம் ! அதி விஸ்தாரமாக என்பொருட் டருளினர். அருளிய பிறகு அறிய வேண்டியதை யறிந்து உண்மையான இயற்கை நிலேயி லிளைப்பாறும் என்னை நோக்கி அந்த உலக கர்த்தாவாயும் ஆசிரியராயு மிருக்குந் தந்தையாகிய பிரஹ்மதேவர் சகல காரணத்தையும் கூறி யருளினர். சாபத்தால் அஞ்ஞபதத்தை யடைந்து ஹே மைந்த! இந்த ஞானத்தினது சாரத்தை எல்லா அதிகாரிகட்கும் ஞானஞ் சித்திக்கும்பொருட்டு, நீ வினவுமாறு யாமே செய்தனம். இப்போது நீ சாபந் தீர்ந்தவனாகி, கனகம் நெடுங்காலம் களங்கப் பற்றுற் கனகமல்லாததேபோ லடைந்து மீண்டும் புடம்போடலானே முதற்போதிருந்த சுத்த கனகத் தன்மையதாகவே யிருப்பதே போலப் பரம ஞானத்தை யடைந்து அகண்டானந்த ஆன்ம வடிவமா யெம்போல இருக்கின்றனை. இப்போது உலகத்திற் கனுக்கிரகிக்க வேண்டிய காரணம் பற்றிப் பூமியின்மீது சம்புத்தீவின்கண் ணிருக்கும் பாரத வருடத்திற்கு நீ செல்வாயாக. ஆண்டு, மகாமதியையுடைய நீ முறையே செல்பவனதலின் கருமகாண்ட தற்பரர்கட்குக் கிரியா காண்ட முறையாகவே உபதேசம் புரிவாயாக ; இவ்வாறே “ வினைகருமந் தொடர் வெண்மை மிக்கார்த, முளமய வியற்ற வுரித்தன்றாமால் ” என்னும் நியாயமு முளதாம். விரக்த மனத்தரும், சூக்குமப் பொருளைக் கவருஞ் சமர்த்தரும், மிக ஆராய்ச்சியோடு கூடியவரும் ஆய வதிகாரிகட்கு நீ ஆனந்தத்தைக் கொடுக்கும் ஞானத்தை யுபதேசிப்பாயாக. இவ்வாறு தாமரையினுதித்த தந்தையின் ஆணையைப்பற்றி யான் அதிகாரிகளின் பிரவாகம் இருக்கும் வரை யிருப்பவனா யிருக்கின்றேன். செய்யத்தக்க தொழிலின் பயன் எனக்கீண்டு ஒரு சிறிதுமே கிடையாது, இருக்கவேண்டிய

தற்காக மனமற்றவனுகிப் புவியின் கண்ணே யிருக்கின்றேன். அதனுனே எப்போதும் உறங்குவதே போல அபிமானமற்ற விருத்தியாற் கிடைத்து நிகழ்கின்றபடி காரியத்தைச் செய்கின்றேன், மிகச் சாந்தியோடு கூடிய விருத்தியினுனே வாழ்கின்றேன், எப்போதும் சமுசாரத்திலுறங்கும் அஞ்ஞர்களது புத்தியினுனே காரியத்தைச் செய்விக்கின்றேனே யன்றி என்மதியைக் கொடுத்து ஒரு காரியமும் செய்வதே கிடையாது.

10-வது ஞான வரவு முற்றிற்று.



## 11-வது ஆசிரிய சீட இலக்கணம்.

இப்போது, ஞானவரவின் விஸ்தாரமும். ஸ்ரீ இராமரது வைராக்கியப் புகழ்ச்சியும், ஆசிரியர் சீடரது இலக்கணமும் முக்கியமாக வருணிக்கப்படும். மீண்டும் விஸ்தாரமாக ஞானவரவின் பிரகாரத்தையும் ஆசிரிய சீட இலக்கணங்களையும் வருணிப்பவராய் அதன் வருகையை யுரைப்பதற்காகக் கூறியதை ஸ்ரீ வசிஷ்டமுனிவர் உபசங்கரிக்கின்றார்:—எனக்கு இவ்வளவு ஞானம் வந்த முறைமையும், எனது ஜன்மாதி தொழிலும், தாமரை மைந்தராகிய எனது தந்தையாரது ஜன்மாதி தொழிலும், புவியின் கண்ணே ஞானம் வந்த முறைமையும் என்பனயாவும் என்னுற்கூறப்பட்டது. ஹே புண்ணியசாலியாகிய இராம!இன்று பெரும் புண்ணியத்தின் பரிபாகவயத்தால் மேற்கூறிய இப்பரம ஞானத்தைக் கேட்க வேண்டுமென்று உன்னுடைய மனமானது அத்தியந்தம் உற்சாகத்தை யடைந்திருக்கின்றது அகோபாக்கியம்! அத்தகைய புண்ணியத்தினுதயம் எவ்வித இலக்கணங்களால் அறியத் தக்கதாகும்; அவ்விலக்கிய வஸ்துவினுபதேசப் பிரகாரங்கள் எத்தகையன வெனப்பழமையான கதை விஸ்தாரத்தைக்கேட்கும் வாயிலாக அறியும் வேட்கை யுற்ற ஸ்ரீ இராமர் கூறல்:—ஹே பகவன்! பரமேஷ்டியாய பிரஹ்மாவின்மதி, சிருஷ்டி செய்த பின்னர் உலகத்தில் ஞானத்தை வருத்தவேண்டுமென்று எவ்வாறுண்டாயது? அவ்வாற்றை விஸ்தாரமாய்க் கூறவேண்டும். பரப்பிரஹ்மத்தின் கண்ணே பிரஹ்மாவானவர் தமது பழைய வித்தை கருமவாசனை விருத்தியின் வயத்தாற்றுமாகவே அதற்குத்தக்க உபாதியோடு கூடியவடிவினராய்க் கிரியாசக்தி மிகவு முடையராய் நிரந்தரம் கடலின்கண் ணலைகிளம்புவதேபோல உண்டானார். அந்தப் பரமேசுரர் புவனங்களையும் பிராணிக் கூட்டங்களையு முண்டாக்கிப்பின் சிருஷ்டிக்கப்பட்டவர்கள் இவ்வாறு ஜன்மம் ஜரைமிருத்தியு நரகாதிய பல துயரங்களைத் தங்களஞ்ஞான வயத்தாலடைவதைக்கண்டு அத்திருஷ்டாந்தத்தானே சென்று நிகழ்ந்து வரும் காலங்களிலிருக்கும் சிருஷ்டியின் சகலகதிகளையுங் கண்டனர். அந்தப் பிரபு விசேஷமாகச் சுவர்க்க மோக்ஷ சாதனுனுஷ்டானத்திற்குத் தக்ககாலமாகிய கிருதயுகாதிகள் க்ஷயமாம்போது உலகங்களின் வருங்கால மோகங்களையாலோசித்து மிகவும் கருணையை யடைந்து; அவ்வுலகத்தாரது அஞ்ஞானஞ் சாந்தியாம் பொருட்டு என்னையுண்டாக்கி அநேக முறை யுபதேசத்தானே மெய்ஞ்ஞானத்தைத் தந்து பூமியை நோக்கிப் போம்படி யேவினர். என்னை

யனுப்பியதே போலச் சனற்குமாரர் நாரதர் முதலிய அநேகம் மற்றைய மகரிஷிகளையும் அளவில்லாமலேவினர். கரும வுபதேச முறையானே உபாசனை யுபதேச முறையானே யுண்டாம் புண்ணியத்தானும், ஞான முறையானும், மனம் அஞ்ஞானங்களாகிய அல்லது அவற்றின் சம்பந்திகளாய சமுசார நோய்களாற் கட்டுப்பட்டு வயப்பட்டதினின்றும் விடுபடும் பொருட்டுலகிற் கேவப்பட்டோம். கிருதயுகமானது க்ஷீணமாகவே முன்னர் அவ்வவ் வரிய மகரிஷிகளால் முறையாக வைதிகமான இராகலோபாதிகளாற் கெடுக்கப்படாத சுத்தக் கிரியை விதானங்கள் பூமியில் விஸ்தரிக்கப்பட்டன; கிரியையின் முறைகளைப் பிரவிருத்திப்பிக்கும் பொருட்டும் மரியாதை நியமமாய் நடந்து வரும் பொருட்டும் தனித்தனித் தேசப்பாகுபாட்டால் பூபாலர்களும் நன்கு கற்பிக்கப்பட்டார்கள்; அரசர்கள் கற்பிக்கப்பட்ட பின்னரசர்களும் குடிகளும் தந்தம் தரும நியமனப்படி யிருக்கத்தக்க ஸ்மிருதி சாஸ்திரங்களும் யாக சாஸ்திரங்களும் அளவிறந்தன பூமியின் கண்ணே தருமகாமார்த்த சித்தியின் பொருட்டுத் தக்கதக்கனவாய்க் கற்பிக்கப்பட்டன. பின்னிக் கால சக்கிரமானது உருள உருளக் கிரமங்கள் நாட்கு நாள் தடுமாறி, எப்போதும் பிராணிகள் போஜனாதி போக தற்பரர்களாகி அதற்கு வேண்டிய தானியாதி விடயங்களைத் தேடமுயன்றனர். தேசங்களின் பொருட்டும் விடயங்களின் பொருட்டும், சீதோஷ்ணாதிகளின் மிகுதியுறவே பரிகார உபாயவிடய சம்பாதனப் பொருட்டும், மற்ற அரசர்கட்குப் பிரவிருத்தி யுண்டாகவே விடய சித்திக்குத் தனங் காரணமாதலின் தனத்தின் பொருட்டுக் குடிகள் மிகவும் தண்டிக்கப்பட்டுத் துயருற்றார்கள். முன்னர்ப் போரில்லாமலே அரசர்கள் புவியைக்காக்கும் ஆற்றலுடையவர்களா யிருந்தபோதினும், பின்னர் ஆற்றல் அற்றவர்களாய்த் தேகத்தில் ஆன்ம மதியுடையவர்களாய்ப் போர் முதலிய வற்றிற் றேகநாச மாயின் ஆன்மாவே யழிந்து விடுமென்னும் பயத்தாற் குடிகளோடுந் தீனத்தன்மையை யடைந்தார்கள். அவர்களுடைய தைன்யத்தை நீக்கும் பொருட்டும், ஆன்ம தத்வஞான திருஷ்டி யுலகில் விரிதற்பொருட்டும் பின் எம்மனோரால் மகத்தான ஞான திருஷ்டிகள் கூறப்பட்டன. இவ்வத்தியாத்ம வித்தை கூறிய ஹேதுவினாலே பூர்வம் அரசர்கள்பால் வருணிக்கப்பட்டன; அதன் பின்னுலகில் விரிந்தது; இதை இராஜ வித்தையென வியாசாதிகள் புகழ்ந்தார்கள். இராஜவித்தையும் இராஜ இரகசியமும் உத்தமமும் ஆகிய அத்தியாத்ம ஞானமானது அடையப்பட்ட பின்பு அரசர்கட்கு மேலாய துயரமற்ற தன்மையானது கிடைத்தது. பரிசுத்தமான கீர்த்தியோடுகூடிய அநேக அரசர்கள் சென்ற பின்பு இவ்வவனியின்கண்ணே இத் தசரதரிடத்தினின்றும் நீ யிப்போது உதித்தனை. ஹே பகைவரை வெல்வோய்! உன்னுடைய அத்தியந்தம் நிர்மலமான உள்ளத்தின்கண்ணெழுந்த பவித்திரமும், மயானம் ஆபத்து தீனத்தன்மை எனக் கூறப்படும் பிரத்தியக்ஷ நிமித்த மற்றதும் ஆய வைராக்கியம் மகா அழகையுடையதாம். எல்லாவிவேகிகட்குள்ளும் உத்தமர்களெனப்பிரசித்தமான அநேகம் பெயர்கட்குச் சர்வ விடய சம்பந்தியாய் இராஜோகுண காரியதிருஷ்ட துக்கானுபவ நிமித்தத்தானேயுண்டாம் வைராக்கியம்

இராஜசமாம். சாதுக்கட்கு மிகவும் ஆச்சரியத்தை யுண்டாக்குவதாய் நிமித்த
மற்றதாய், சத்துவத்தானே இன்புமுணர்வுமாம் என்பதாதி மிருதியினானே
நினது விவேகஞான மாத்திரத்தானே யுண்டான நினது இச்சாத்விக வைராக்
கியம் அபூர்வமாக எழுந்துளது. இன்னும் விளக்கமாயுரைக்கின், பயப்படுத்தும்
விடயத்தைக்கண்டு யாவன்றான் வைராக்கியத்தை யடையான்? சத்துக்கட்குத்
தம வைராக்கியம் விவேகத்தினாலேயுண்டாம். நிமித்தமில்லாமலே எவர்கட்கு
வைராக்கிய முண்டாகின்றதோ அவர்களே மகான்கள், பேரறிவாளர்கள், பரி
சுத்த அந்தக்கரண முடையவராவர்கள். தன்விவேக வயத்தானே தத்துவத்தை
நாடும்படியான அதிசய ஆராய்ச்சியால் அன்னிய விடயங்களினின்று விரக்தி
யாம் மதியினானே வரமாலையினால் யவ்வனன் மகிழ்வதே போலப் பிராணிகள்
மகிழ்வாய்விளங்கும். இச்சமுசாரச் செயற்கையைவிவேகத்தால் ஆராய்ந்து வை
ராக்கியத்தை யடைபவர்களே புருடோத்தமர்களாவர்கள். இத்திருசிய முழுவ
தும் இந்திரஜாலம்போன்ற இந்திர ஜாலமாம், மாயிகமாம் என அடிக்கடி
தனது விவேகவயத்தானே ஆராய்ந்து மிகவனுவாக வெளியின் மாத்திரமே
யல்லாது, வெளியோடுகூட உள்ளினுமுள்ள உடற்பொறி யுயிர்ப்புள்ளம் மதி
யவித்தை வரையினும் அடியோடுவிடவேண்டும். மயானத்தையும் ஆபத்தையும்
தீனத்தன்மையையும்கண்டு யாவர்தாம் விரக்தியையடையார்? தானாகவே யுண்
டாகா நின்ற அந்த வைராக்கியமே மேலான மோக்ஷத்தையுண்டாக்குவதாம்.
நிமித்தமில்லாத வைராக்கிய மகான்மத்தன்மைகளை மிகவும் அடையப்பெற்
றனை; சர்வ வித்தைகளினுஞ் சாரபூதமாயிராநின்ற ஆன்மவித்தை யடைதற்கு,
உழுத பூமியானது விரைக்கு யோக்கியமாயிருப்பதேபோல யோக்கியனாயினை.
தவமகிமையானும் தெய்வப்பிரசாதத்தானும், "எவற்குத்தேவன் பாலெழி
லன்புண்டாம், அத்வைத வாசனை யரியமானுடர்க்குச் சித் வடிவான சிவனரு
ளாலாம், மலைமகண் மகிழரனருளானேதான், அலைவறுமத்தியாத்துமஞானம்,
பல பிறவியினாற் பலித்திடலாகும்" என்பதாதி சுருதி மிருதிகளை யனுசரித்
துக்கூறின், பரமான்மாவும் நாதருமாகிய பரமேசுரருடைய திருவருளால் உன்
போன்றவர்கடம் சுபமதி விவேகத்தை யடைகின்றது. "அவ்விவ்வான்மனை
யருமறைமொழியால், செவ்விய மறையவர் தெரியவே விரும்புவர், மகத்தினா
னுந்தானத்தினானும், உகத்தவத்தானு மூணின்மையானும்" என்பதாதி சுருதி
யையனுசரித்துக்கூறின், கிரியையின் முறையானும், பெருந்தவத்தானும், இந்
திரியப்பிராணமனங்களை நியமிப்பதானும், தானத்தினானும், தீர்த்தயாத்திரை
முதலியவற்றானும் நெடுநாட் பழகும் விவேகத்தானும் துர்க்கிருத்தியங்களியா
வும் பொடியாகவே பரமார்த்த விசாரணையில், காகமும் வந்தது பனம்பழமும்
விழுந்தது என்பதுபோலச் சாதன சமுதாயமியாவும் ஒன்றுசேரவே, பிராணி
களின் மதியானது பிரவிருத்திக்கும், பிரஹ்மத்தையறியும் வேட்கையை யுண்
டாக்கும் விசார உதயமே மிகவுந் துர்லபமென்றுணர்தல்வேண்டும். முற்கூறிய
கிரியைக் கிரமமும் 'கௌதம ஸ்மிருதியின் கண்ணே கூறப்பட்டவாறு:—கர்ப்பா
தானம், பும்சவனம், சீமந்தம், உந்நயனம், ஜாதகருமம், நாமகரணம், அன்னப்
பிராசனம், சௌளம், உபநயனம், நான்குவேத விரதங்கள், ஸ்நாநம், தரும

சாரணியோடு சம்யோகம், ஐந்துயாகங்களின் அனுஷ்டானம், எட்டுப்பார்வண சிரார்த்தம், சிராவண்யாக்ரயணீ சைத்ர்யாசுவஜீ என ஏழுபாகசம்ஸ்தாக்கள், அக்கினியாதேயம், அக்கினிஹோத்திரம், தரிசபூர்ணமாசங்கள், சாதுர்மாசியம், அன்யாக்ரயண இஷ்டி, நிருடபசுபந்தம், சௌத்திராமணி என ஏழு ஹவிர்ப்பாக சம்ஸ்தாக்கள், அக்கினிட்டோமம், அத்தியக்கினிட்டோமம், உக்த்யம், ஷோளசீ, வாஜபேயம், அதிராத்ரம், ஆப்தோர்யாமம் என ஏழு சோமயாக சம்ஸ்தாக்கள் என்பனவாய நாற்பதும் சமஸ்காரங்களாம்; எல்லாப் பிராணிகளிடத்தும் தயை, க்ஷாந்தி, அசூயையின்மை, சௌசம், ஆயாசமின்மை, மாங்கல்யம், கிருபணத்தன்மையின்மை, ஆசையின்மை என்பனவாய எட்டும் ஆன்ம குணங்களாம்; எவனுக்கிந் நாற்பது சமஸ்காரங்களும், எட்டு ஆன்ம குணங்களும் இருக்கின்றனவோ அவன் பிரஹ்மாவின் சாயுஜ்யத்தை யடைவன் என்பதாம். துர்லபமெங்ஙன மென்னின், எதுவரை பரமபதத்தைப் பார்க்கவில்லையோ அதுவரைசக்கரம்போலப் புருடனைச் சுழற்றிவைக்குஞ் சீலமுடையனவாய இராகாதிகளான் மறைபட்டவராகி யாவரும் இகபரலோக சம்பந்திகளாய போக சாதனக் கிரியைகளிற்றற்பரர்களாயே இச்சமுசாரத்தின்கண்ணே சுழலுகின்றார்கள். இவ்வாறே:—" இருளு மவித்தையி னிடையிற்பட்டே, மருளுந் தாமே தீரர் பண்டிதர், தெருளரெனவே தேரித் திரிபவர், உருளுங் கோணல் வழி பல வுலவிப், பொருளாறு துயரைப் பொருந்துவர் புலனிலார், வெருளுங் குருடனாற் கொடுபோங் குருடர்கள், சுருளுந் துயர்பல தொடருதல் போன்மே " என்னுஞ் சுருதியுங் கூறுகின்றது, இச் சம்சாரமாகிய திருசியக்கூட்டம் உண்மையாக அசத்தும் அசாரமும் துன்ப மயமுமாமென விவேகதிருஷ்டியினானே கண்டு, இதனையும் இதன் மயமாய மதியையும் விட்டுக்கட்டுந் தம்பத்தினின்றுந் தப்பிய களிறுபோலப் பரமார்த்த வடிவமாகி நித்திய அபரோக்ஷப் பரப்பிரஹ்ம தத்துவத்தை ஞானத்தினானே யடைகின்றனர். இச் சம்சார விவகாரமானது ஏற்றத்தாழ்வை யுடையதாயும் அந்த மற்றதாயும், இருக்கின்றது, தேகத்தோடு தாதாத்மிய அத்தியாசத்தால் ஆகத்தோடு ஒன்றுபடச் சார்ந்த பெரியோன் ஞானமில்லாது காணான்; இதனானே பெரியோனாயினும் கிருமி கீடாதிகட்கே யொப்பாவன். கடக்க முடியாத சமுசாரக் கடலை ஞானயூக வோடத்தானே ஒரு நிமிடத்தில் மகா விவேகிகள் இனிது கடந்துவிட்டார்கள். சமுசார சமுத்திரத்தைத் தாண்டற் கேதுவாகிய அவ்விஞ்ஞான யூகத்தை விசார அப்பியாசங் கண் மிருந்து விவேக வைராக்கியாதி சம்பத்தோடு கூடிய மதியினானே யொருமையுடன் கேட்பாயாக. புகழத்தக்க யூகமில்லாத காரணத்தினானே, துயரையும் அச்சத்தையும் விளைவிப்பனவா யுலக சம்பந்திகளாய அநந்த விக்ஷேபங்கள் உள்ளத்தை நெடிது தகிக்கின்றன; " வாக்கின்வேகம் மாமனத்தின் சினத்தின் நாக்கின் வேகம் நயவயிற் றின்றன்வேகம், தாக்குங் குகியத்தான வேகங்களாமே " என விக்ஷேபங்கள் வெளிப் படையாம். குளிர்காற்று வெயின் முதலிய துவந்துவ துக்கங்களை ஞானயூக மில்லாமல் வேறெதனாற் பொறுத்தல் சாதுக்களிடத் துண்டாம். மூட புருடனைத் துக்க சிந்தைகள் காலத்துக்குத் தக்கபடி யடிக்கடி யடைகின்றன, அக்கினிச் சுடர் துரும்பைச் சாம்பராக்குவது

இராஜசமாம். சாதுக்கட்கு மிகவும் ஆச்சரியத்தை யுண்டாக்குவதாய் நிமித்த மற்றதாய், சத்துவத்தானே இன்புமுணர்வுமாம் என்பதாதி மிருதியினுனே நினது விவேகஞான மாத்திரத்தானே யுண்டான நினது இச்சாத்விக வைராக்கியம் அபூர்வமாக எழுந்துளது. இன்னும் விளக்கமாயுரைக்கின், பயப்படுத்தும் விடயத்தைக்கண்டு யாவன்றான் வைராக்கியத்தை யடையான்? சத்துக்கட்குத் தம வைராக்கியம் விவேகத்தினுலேயுண்டாம். நிமித்தமில்லாமலே எவர்கட்கு வைராக்கிய முண்டாகின்றதோ அவர்களே மகான்கள், பேரறிவாளர்கள், பரிசுத்த அந்தக்கரண முடையவராவர்கள். தன்விவேகவயத்தானே தத்துவத்தை நாடும்படியான அதிசய ஆராய்ச்சியால் அன்னிய விடயங்களினின்று விரக்தியாம் மதியினுனே வரமாலேயினுல் யவ்வனன் மகிழ்வதே போலப் பிராணிகள் மகிழ்வாய்விளங்கும். இச்சமுசாரச் செயற்கையைவிவேகத்தால் ஆராய்ந்து வைராக்கியத்தை யடைபவர்களே புருடோத்தமர்களாவர்கள். இத்திருசிய முழுவதும் இந்திரஜாலம்போன்ற இந்திர ஜாலமாம், மாயிகமாம் என அடிக்கடி தனது விவேகவயத்தானே ஆராய்ந்து மிகவலுவாக வெளியின் மாத்திரமே யல்லாது, வெளியோடுகூட உள்ளிலுமுள்ள உடற்பொறி யுயிர்ப்புள்ளம் மதியவித்தை வரையிலும் அடியோடுவிடவேண்டும். மயானத்தையும் ஆபத்தையும் தீனத்தன்மையையும்கண்டு யாவர்தாம் விரக்தியையடையார்? தானுகவே யுண்டாகா நின்ற அந்த வைராக்கியமே மேலான மோக்ஷத்தையுண்டாக்குவதாம். நிமித்தமில்லாத வைராக்கிய மகான்மத்தன்மைகளை மிகவும் அடையப்பெற்றனே; சர்வ வித்தைகளினுஞ் சாரபூதமாயிராநின்ற ஆன்மவித்தை யடைதற்கு, உழுத பூமியானது விரைக்கு யோக்கியமாயிருப்பதேபோல யோக்கியனுயினே. தவமகிமையானும் தெய்வப்பிரசாதத்தானும், "எவற்குத்தேவன் பாலெழிலன்புண்டாம், அத்வைத வாசனை யரியமானுடர்க்குச் சித் வடிவான சிவனருளாலாம், மலேமகண் மகிழரனருளானே தான், அலேவறுமத்தியாத்துமஞானம், பல பிறவியினுற் பலித்திடலாகும்" என்பதாதி சுருதி மிருதிகளை யனுசரித்துக்கூறின், பரமான்மாவும் நாதருமாகிய பரமேசுரருடைய திருவருளால் உன் போன்றவர்கடம் சுபமதி விவேகத்தை யடைகின்றது. "அவ்விவ்வான்மனை யருமறைமொழியால், செவ்விய மறையவர் தெரியவே விரும்புவர், மகத்தினுந்தானத்தினுனும், உகத்தவத்தானு மூணின்மையானும்" என்பதாதி சுருதியையனுசரித்துக்கூறின், கிரியையின் முறையானும், பெருந்தவத்தானும், இந்திரியப்பிராணமனங்களை நியமிப்பதானும், தானத்தினுனும், தீர்த்தயாத்திரை முதலியவற்றுனும் நெடுநாட் பழகும் விவேகத்தானும் துர்க்கிருத்தியங்களியாவும் பொடியாகவே பரமார்த்த விசாரணையில், காகமும் வந்தது பனம்பழமும் விழுந்தது என்பதுபோலச் சாதன சமுதாயமியாவும் ஒன்றுசேரவே, பிராணிகளின் மதியானது பிரவிருத்திக்கும், பிரஹ்மத்தையறியும் வேட்கையை யுண்டாக்கும் விசார உதயமே மிகவுந் துர்லபமென்றுணர்தல்வேண்டும். முற்கூறிய கிரியைக்கிரமமும் 'கௌதம ஸ்மிருதியின் கண்ணே கூறப்பட்டவாறு:—கர்ப்பாதானம், பும்சவனம், சீமந்தம், உந்நயனம், ஜாதகருமம், நாமகரணம், அன்னப்பிராசனம், சௌளம், உபநயனம், நான்குவேத விரதங்கள், ஸ்நாநம், தரும

சாரணியோடு சம்யோகம், ஐந்துயாகங்களின் அனுஷ்டானம், எட்டுப்பார்வண சிரார்த்தம், சிராவண்யாக்ரயணீ சைத்ர்யாசுவஜீ என ஏழுபாகசம்ஸ்தாக்கள், அக்கினியாதேயம், அக்கினிஹோத்திரம், தரிசபூர்ணமாசங்கள், சாதுர்மாசியம், அன்யாக்ரயண இஷ்டி, நிரூடபசுபந்தம், சௌத்திராமணி என ஏழு ஹவிர்ப் பாக சம்ஸ்தாக்கள், அக்கினிட்டோமம், அத்தியக்கினிட்டோமம், உக்த்யம், ஷோளசீ, வாஜபேயம், அதிராத்ரம், ஆப்தோர் யாமம் என ஏழு சோமயாக சம்ஸ்தாக்கள்என்பனவாய நாற்பதும் சமஸ்காரங்களாம்; எல்லாப் பிராணிகளிடத்தும் தயை, க்ஷாந்தி, அசூயையின்மை, சௌசம், ஆயாசமின்மை, மாங்கல்யம், கிருபணத்தன்மையின்மை, ஆசையின்மை என்பனவாய எட்டும் ஆன்மகுணங்களாம்; எவனுக்கிந் நாற்பது சமஸ்காரங்களும், எட்டு ஆன்ம குணங்களும் இருக்கின்றனவோ அவன் பிரஹ்மாவின் சாயுஜ்யத்தை யடைவன் என்பதாம். துர்லபமெங்ஙன மென்னின், எதுவரை பரமபதத்தைப் பார்க்கவில்லையோ அதுவரைசக்கரம்போலப் புருடனைச் சுழற்றிவைக்குஞ் சீலமுடையனவாய இராகாதிகளான் மறைபட்டவராகி யாவரும் இகபரலோக சம்பந்திகளாய போக சாதனக் கிரியைகளிற்றற்பரர்களாயே இச்சமுசாரத்தின்கண்ணே சுழலுகின்றார்கள். இவ்வாறே:—"இருளு மவித்தையி னிடைபிற்பட்டே, மருளுந் தாமே தீரர் பண்டிதர், தெருளரெனவே தேரித் திரிபவர், உருளுங் கோணல் வழி பலவுலவிப், பொருளாறு துயரைப் பொருந்துவர் புலனிலார், வெருளுங் குருடனாற் கொடுபோங் குருடர்கள், சுருளுந் துயர்பல தொடருதல் போன்மே" என்னுஞ் சுருதியுங் கூறுகின்றது, இச் சம்சாரமாகிய திருசியக்கூட்டம் உண்மையாக அசத்தும் அசாரமும் துன்ப மயமுமாமென விவேகதிருஷ்டியினானே கண்டு, இதனையும் இதன் மயமாய மதியையும் விட்டுக்கட்டுந் தம்பத்தினின்றுந் தப்பிய களிறுபோலப் பரமார்த்த வடிவமாகி நித்திய அபரோக்ஷப் பரப்பிரஹ்ம தத்துவத்தை ஞானத்தினானே யடைகின்றனர். இச் சம்சார விவகாரமானது ஏற்றத் தாழ்வை யுடையதாயும் அந்த மற்றதாயும், இருக்கின்றது, தேகத்தோடு தாதாத்மிய அத்தியாசத்தால் ஆகத்தோடு ஒன்றுபடச் சார்ந்த பெரியோன் ஞானமில்லாது காணான்; இதனானே பெரியோனாயினும் கிருமி கீடாதிகட்கே யொப்பாவன். கடக்க முடியாத சமுசாரக் கடலை ஞானயூக வோடத்தானே ஒரு நிமிடத்தில் மகா விவேகிகள் இனிது கடந்துவிட்டார்கள். சமுசார சமுத்திரத்தைத் தாண்டற் கேதுவாகிய அவ்விஞ்ஞான யூகத்தை விசார அப்பியாசங் கண் மிகுந்து விவேக வைராக்கியாதி சம்பத்தோடு கூடிய மதியினானே யொருமையுடன் கேட்பாயாக. புகழத்தக்க யூகமில்லாத காரணத்தினானே, துயரையும் அச்சத்தையும் விளைவிப்பனவா யுலக சம்பந்திகளாய அநந்த விக்ஷேபங்கள் உள்ளத்தை நெடிது தகிக்கின்றன; "வாக்கின்வேகம் மாமனத்தின் சினத்தின் நாக்கின் வேகம் நயவயிற் றின்றன்வேகம், தாக்குங் குகியத்தான வேகங்களாமே" என விக்ஷேபங்கள் வெளிப் படையாம். குளிர்காற்று வெயின் முதலிய துவந்துவ துக்கங்களை ஞானயூக மில்லாமல் வேறெதனாற் பொறுத்தல் சாதுக்களிடத் துண்டாம். மூட புருடனைத் துக்க சிந்தைகள் காலத்துக்குத் தக்கபடி யடிக்கடி யடைகின்றன, அக்கினிச் சுடர் துரும்பைச் சாம்பராக்குவது

போலத் தகிக்கின்றன. விசாரித்தறியத் தக்கனவாய வேதாந்த சாஸ்திரங்களை யறிந்தவனும், அதனானே பிரஹ்ம தத்துவ சாக்ஷாத்காரத்தை நன்கடைந்தவனும் ஆகிய பேருணர்வோனை மானதவியாதிகள், மழையா னணைக்கப்பட்ட வனத்தை யக்கினிச் சுடர்போலத் தகியா. தூல வியாதிகள் மனோவியாதிகளேயாய மேன்மை மிக்க சுழல் காற்றுகளோடு கூடிச் சமுசார மருத்தலத்திலடிக்கும் சண்ட மாருதத்தால் வாட்டப்படினும் தத்துவத்தை யுணர்ந்தோன் கற்ப விருக்ஷம்போலத் தளர்ந்து வாடான். ஆகையால், மதிமானவன் தத்துவத்தை யறியும் பொருட்டு, மறை முதலிய பிரமாணங்களிற் குசலரும், பிரஹ்மத்தை யுணர்ந்தவரும், பேரறிவாளரும், ஆய வாசிரியரையே பிரதக்ஷிண நமஸ்கார சேவை முதலியவற்றானே மகிழ்வித்து அடக்கமுடன் வினவ வேண்டும். பிரமாணங்களை யறிந்தவரும், உத்தம சித்த முடையவரும், வினவியதை விளம்புபவரும், ஆய வாசிரியர் கூறும் மொழிகளை, குங்குமக் குழம்பில் நிறமாம் பொருட்டு அமிழ்த்திய வத்திரத்தாற் குங்குமமானது செந்நிறத் தகைமை நன்கு தோன்றும் படியாக நழுவாமற் கவரப் படுகின்றதோ, அதுபோல முயற்சியினானே கவர்ந்துகொள்ள வேண்டும். அதன்பொருட்டுபதேசகருடையவும் உபதேசம் பெறுபவனுடையவும் இலக்கணங் கூற வேண்டும். பரீட்சியாதவனை யிகழ வேண்டும். கேட்பதி லாற்றன்மிக்க இராகவ! தத்துவஞான மில்லாதவனும், கொள்ளத் தகாத மொழியுடையவனும், ஆகியவனை எந்நரன் வினவுகின்றனனோ அவனினும் மூடதரன் வேறு எவனுமேயில்லையாம். பிரமாணங்களை யுணர்ந்தவரும், சிவத்தை யறிந்தவரும், வினவியவற்றை முயல்வினோடும் அனுக்கிரகம் புரிபவரும், ஆயவரது திருமொழியையுளங் கொள்ளாதோன் யாவனோ அவனினும் நராதமன் வேறொருவனும் கிடையாது. தத்துவத்தை யுணர்ந் திருக்குந் தன்மையையும் உணராத் தன்மையையும் முன்னர் உபதேசகரிடத்தில் விவகாரக் குறியினாலே நிர்ணயித்து எந்நரன் வினவுகின்றனனோ அவ்வினவுவோன் மிகவும் மதிமானவன். பரீக்ஷயினால் நன்குபதேசிக்கப்பட்ட வரை நிர்ணயஞ் செய்யாமல் எம் மூர்க்கன் வினவுகின்றனனோ அவ்வினவுவோன் அதமனெனப்படுவன், பெரும் பொருளைக் கவரத்தகுதியனுமல்லன். முன்பின் கூறியவற்றையும் கூறுதவற்றையும் பகுத்துணர்வதில் ஆற்றலுடைய மதியையுடையனுப் புகழத்தக்கவனவனுக்குப் பிராஞ்ஞன் வினவியதைக் கூறவேண்டும், பசு தருமத்தோடுற்ற அதருமத்தினனுக் கறையொணாதாம். இவ்வாறே பரீக்ஷியாத ஆசிரியனையும் இகழவேண்டும். சீடனுடைய பிரமாணத்தோடு கூடிய பொருளைக் கவரும் யோக்கியதையை யாராயாமல் யாவனுபதேசிக்கின்றனனோ அவனை யீண்டு பெரியோர் மூடனினும் மூடன் என்பர். கூறுபவன் கேட்போனிவர் தம் இலக்கணங்கூறியதால் இங்கு வந்த பயனியாதெனின்? ஹே ரகுநந்தன! நீ மிகமிகவும் புகழத்தக்க குணங்கணிறைந்தோனாய்க் கேட்கத்தக்கவனாகின்றாய்; யானும் உபதேசிப்பதை நன்கறிவேன். ஆகையால் நம்மிருவரது சேர்க்கை சமமேயாகும். யான் எதனை யுபதேசிக்கின்றேனோ அதனை, சத்தார்த்தங்களை யுணர்ந்த குழந்தாய்! முயல்வினாலே நீ இது தான் பொருளென இருதயத்திற்

குறைவின்றி நிர்ணயித்துக்கொள்வது முக்கியமாய காரியமாம். குலத்தாலும், குணங்களாலும், நல்லொழுக்கங்களாலும் பெரியோன் நீ, விரக்தன் நீ, ஜனத்திதியில் தத்துவத்தை யுணர்ந்தவன் நீ, நின்பாலுபதேசிப்பது ஆடையிற் குங்கும நீரிறங்குவதுபோல வுள்ளே யிறங்கும். உபதேசிப்பதைக் கொள்வதின் மேன்மை மிக்கு மேதையாயும், பரமார்த்தப்பகுப்பின் சமர்த்தாலொளிர்வதாயும், நீர் நடுவுளிருக்கும் சூரியப்பிரபைபோன்ற உன்னுடைய பிரஞ்ஞை அருத்தத்திற் புகும் யாது யாதுபதேசிக்கின்றனமோ அதனை மிக்க ஆதரவோடும் நீண்ட பயிற்சியின் முயற்சியினுனே இருதயத்திற் கொள்ளவேண்டியது முக்கியமான காரியமாம். அங்ஙனமின்றேல், ஈண்டுன்னுற் பயனில்லாமலே வினவப்பட்டவனுவேன்; அவ்வாறு யானுக வேண்டாம். வேறு முயற்சியும் வேண்டும்; அதாவது சமுசார வனக்குரங்கு மிகவுஞ் சஞ்சலத்தோடு கூடிய மனமேயாம்; முயற்சியினுலே ஹிருதயத்திற் பரிசோதித்துப் பரமார்த்தமொழிகளைக் கேட்பாயாக. ஆண்டுமுதலி லுபதேசிக்கத் தக்கது யாதெனின், அவிவேகிகளும், சாஸ்திர ஜன்னிய ஞானமின்றி யவர்களும், அசாதுக்களோடு கூடித்திரிபவர்களுமாகிய ஜனங்களை அதிதூரத்தில் அத்தியந்தம் தள்ளிவிட்டு சாதுக்களையே பூஜிப்பாயாக. அதன் பயனே, தினந்தோறும் சாதுக்கள் சங்கத்தினுனே விவேகம் உதயமாம், விவேக விருக்ஷத்திற்கே போக மோக்ஷங்கள் பலன்களெனக் கூறுகின்றனர். மோக்ஷத் துவாரத்தில், சமம், விசாரம், சந்தோஷம், சாது சங்கமம் என நான்கு துவாரபாலர்கள் கூறப்படுவார்கள். இந்நால்வரும் முயல்வினுனே சேவிக்கத்தக்கவர்களாவர்கள்; முடியாவிடின் மூவரைச் சேவிக்கவேண்டும்; அதுவுமுடியாவிடின் இருவரையேனுஞ் சேவிக்க வேண்டும்; சேவிக்கின் மோக்ஷராஜக் கிருகத்தில் இவர்கள் கதவுதிறந்து விடுவார்கள். எல்லா முயற்சிகளானும் பிராணனை விடுத்தேனும் (பிராணனைவிடுத்தேனு மென்றது முயற்சியினுதரவி னதிசயத்தைக் காண்பிக்கும் பொருட்டாம்) ஒருவனையேனும் நன்குபற்றவேண்டும், ஒருவன் வயப்பட்டானுயின், நால்வருமே வயப்பட்டவர்களாவர்கள். விவேக முடையவனே, சாஸ்திர சிரவணத்திற்கும், அதனருத்தங்களை யாராய்வதற்கும், ஞானத்திற்கும், யோக்கியனுவன். சிரோபூஷணம்போல மேன்மையோடும் ஆதரிக்கத் தக்கவனுவன். பிரகாசப்பொருள்களுள்சூரியனைப்போலப் புகழ்ப்பெறுவன். அவிவேகிகளுடைய பேதிக்கக்கூடாத மூர்க்கத்தன்மையானது, நீர் சீதளமிகுதியானே கல்லெனக் கடினமாவதேபோல அதிகடினமாயிருக்கும். (பனியாலாங் கட்டிகள் கடினமா யிருத்தல் பிரசித்தமாம்). (தன் முகமாம் பொருட்டு மீண்டு ஸ்ரீ இராமரைப் புகழுதல்). இராகவ! நீ சுஜனத்தன்மையினுனும், குணங்களினுனும், சாஸ்திரார்த்த திருஷ்டிகளினுனும், உதயகாலத்துத் தாமரைபோலப் பிரகாசியாநின்ற அந்தக்கரணத் தோடிருக்கின்றுய். இந்த ஞான உபதேச மொழிகளைக் கேட்பதற்கும் கருதுவதற்கும் நல்ல மதியையுடைய குழந்தாய்! வீணைகானத்தைக் கேட்கும் ஆவலோடு மேலே கிளப்பிய காதுகளை யுடைய மான்போலத் தகுதியுடையவனுகின்றுய். வைராக்கிய அப்பியாச யோகத்தானே, சமத்தையும் நல்லோரின்றன்மமாய வணக்கமுதலிய சம்பத்தையும் சம்பாதிக்கவேண்டும், அவற்றில்

நாசஞ் சம்பவியாதாம். சமுசாரத்தை விடற்பொருட்டு முதலில் நூல்நல்லோருறவுகளின் வாயிலாகவாம் தவத்தோடு கூடிய சமதமங்களால் விவேகத்தைக் கவர்ந்து வைத்துக்கொள்ளும் ஆற்றலுடைய மதியையே நன்கு வளர்த்தல் வேண்டும். அதன் வளர்ச்சியின்கண்ணும் இந்நூற் பரிசீலனமே யுபாயமாம். சிறிது சீர்படுத்திய மதியினானே இந்நூலை நன்காராயின், இதுவே அதிகாரியின் அஞ்ஞானத்தைப் பரமநாசஞ் செய்யும்; ஆபத்துக்கட் கெல்லாம் முக்கிய இடமாயிருப்பது இச்சம்சார விட விருக்ஷமொன்றேயாம். நித்தியம் அஞ்ஞானை யினிது மோகிப்பிக்கு மாகலின் முயல்வினானே யஞ்ஞானத்தை நாசஞ்செய்க. துராசையாற் குடில நடையையுற்று அஞ்ஞானத்தானே இருதயத்துதிக்கும் ஆயிரக்கணக்கான விக்ஷேப வடிவமாய்ச் சலிக்கும் மதியோடுற்ற சிதாத்மாவானது அக்கினியிலிட்ட தோற்போலவும் சுருங்கிய தாமரைபோலவும் சுருங்குதலையும் மலினத் தன்மையையும் அடையும். ஆயின் யாண்டு விளங்குகின்றதெனின்! மேகமறைப்புகளின்றிச் சகல கலைகளோடுங் கூடிய அமல மண்டலத்தையுடைய இந்துவின் கண்ணே விழிபோலும், முன்னர்ப் புகன்ற தாய வஸ்துவைப் பரமார்த்த ரூபமாய்க் காணும் வஸ்து வடிவ திருஷ்டியாகிய சூக்குமபுத்தியோடு கூடிய சிதாத்மா, உண்மைவஸ்துவின் இரசமாத்திரத்தை யடைவுற்றதாய்ப் பிராஞ்ஞனாகிய வுபதேசிப்பவன் கிடைத்தபோது அஞ்ஞான மலினத்தன்மையை யகற்றி விளங்குகின்றது; "சூக்குமங் காண்பராற் சூக்குமமான, நோக்குயர் மதியான் நோக்கிடப்படுமே" என்னுஞ்சுருதியை யிங்குணரவேண்டும். விளங்கும் மதியையுடையவன் எங்ஙன மிருப்பனெனின்? முன் பின் ஆராய்ச்சியினானும், அதிசூக்கும அர்த்தத்தைக் கவரும் ஆற்றலினானும், அழகோடும் விளங்காநின்ற மதியையுடையவன் ஈண்டுப் புருடார்த்த சம்பாதனத்தாற் புருட ஜன்மத்தைப் பயன்பெறச் செய்தவனாகலிற் புருடனெனப்படுவன். ஆயின் என்மதி விளக்கமுடையதா அல்லவாவென வையம் உண்டாகின்றதெனின்? மேகங்களை விடுத்து விளங்காநின்ற வெண்மையோடுகூடிச் சீதளமாகிய பிரகாசத்தோடுற்ற நின்மலபூரண நிலவால் ஆகாசம் விளங்குவதேபோல, அஞ்ஞானத்தை விடுத்தலினானே மிகத்தெளிவான சாந்தியாதிகுணங்களோடும், உயர்ந்த ஆராய்ச்சியோடும், கூடிய நின்மலமான சாத்துவிக இருதயத்தால் நீ விளங்காநின்றனை.

11-வது ஆசிரிய சீட இலக்கணம் முற்றிற்று.



## 12-வது ஞான மாகான்மியம்.

இப்போது சமுசாரஞ் சார்தலா லனர்த்தத்தன்மையும், ஞானத்தின் உத்தமமான மகிமையும், இராமரிடத்தில் கேட்போனுக்குரிய குணங்கணிறைந்திருத்தலும் வருணிக்கப்படும். மற்றையருக்கும் விவேக வைராக்கிய திடத்தன்மையின் பொருட்டுச் சமுசார கதிக்கு அனர்த்த ரூபத்தன்மையையும் ஞான மாகாத்மியத்தையும் கூற விழைந்து ஸ்ரீ இராகவருக்கு மகிழ்ச்சியை யுண்டாக்கும் பொருட்டுக் கேவலம் உன்பால் விளங்காநின்ற மதி மாத்திரம் இருப்பதில்லை

மற்றே வேறு மநேகங்குணங்களும் கேட்போனிலக்கணமும் ஆகிய யாவுமே யுளவாம் எனப்புகழ்வதானே யுற்சாகப்படுத்திக்கொண்டு ஸ்ரீ வசிஷ்டர் கூறத் தொடங்கல்:—ஹே இராகவ! கூறிய கூறப்பெற்ற குணங்களானே நிறைந்த மனத்தையுடையவனும் யாவரானும் புகழத்தக்கவனும், சாமானியமாகக் குறிப்பித்தபோதினும் விசேடமாகப் பகுத்துணர்பவனும், கேட்பதற்கு நன்குணர்ந்தவனும் ஆகின்ருயாதலின் யான் ஆதரவோடும் கூறத்தொடங்குகின்றேன். இரஜசின் சஞ்சலத்தையும், தமத்தின் மறைப்பையும் அற்றதனுனே சுத்தசத்துவ குணத்தின்கண்ணும் பரமாத்மாவின்கண்ணும் தோயாநின்ற மதியை நின்பால் நிலை நிறுத்திக்கொண்டு ஞானத்தைக்கேட்பான் ஒருமையுடன் றயாராகுதி. கேட்போனுடைய குணமாலைகள் முழுவதுமே நின்பாலும், உபதேசிப்பவனுடைய குணங்களெல்லாமென்பாலும் கடலில் இரத்தின சம்பத்தும் இரத்தினத்தோடுகூடி இலக்குமியும் இருப்பதுபோல இருக்கின்றன. ஹே மைந்த! (சிடரைச் சுதர்போற்காண்க என்னும் மறையானே இவ்விளியாம்) சந்திரனுடைய கிரணங்களின் விரிவைப்பெற்ற சந்திரகாந்தக்கல் நெகிழ்ந்து பெருகுவதேபோல விவேக சம்பந்தத்தாலுண்டாய வைராக்கியத்தை யடைந்துளாய்! தாமரைக்குத் தண்டுக்குட் கெடாத நூற்களோடும் வாசனையோடும் சகஜ சம்பந்தமிருப்பதேபோலப் பரிசுத்தமாய நினக்குச் சர்வதிசைகளிலும் விரிந்தனவுங் கெடாதனவும் ஆகிய தூய நற்குணங்களோடுங் குழந்தையிலிருந்தே நெடுநாளாய்ச் சம்பந்தமிருக்கின்றது. ஆகலின், கூறுங்கதையைக்கேட்பாயாக. நீயேயதன் சிரவண பலஞானத்தை யுடையவனுவாய். சந்திரன் இல்லாமல் வெள்ளிய ஆம்பலானது சந்திரனுலாக்கப்படும் மலர்ச்சியினுதாரமாகாதன்றே? சந்திரனிடத்திலே ஆம்பல் விளக்கத்தையடைவதுபோல வுன்னிடத்திலே யிக்கதை விளக்கமுறும். அற்றேல் இக்கதையின் சிரவணத்தொடக்கத்திற்கு முடிவு எப்போதாம் எனின்? பரமபத தரிசனரூபஞானமே முடிவாம். இனிது தொடங்கப்பட்ட எவையும், பிரமாணப் பிரமேய திருஷ்டிகளெவையும் பரமான்ம பதத்தைத்தரிசித்த மாத்திரத்தில் அடியோடு சாந்தியையடையும். கூறிய இளைப்பாறுதலில் நம்பிக்கை வரவேண்டிய தவசியம். விவேகமடக்கமுள்ள சித்தத்திற்கு ஞானத்தினுலிளைப்பாறுதல் வாராவிடின் இச் சமுசாரத்திலுண்டாம் சிந்தையின் மௌட்டியத்தை எவ்விவேகிதான் சகிப்பன்? அதைச்சகிக்கமுடியாமையின், நின்னைப்போல விரைவில் தேகத்தியாகத்தையே செய்யமுயல்வன். கேவலம் பாகிய திருஷ்டிகள் மாத்திரமே கெடுவனவன்றும்; மற்றே, மானதங்களும் கெடும்; ஹிரணியகருப்பருடைய ஆயுண்முடிபாய கற்பாந்தத்திலெழுஞ் சூரியர்களுடைய சம்பந்தத்தானே குலசைலங்களின் சிலைகள் தூளாவனபோலப் பரத்தை யடைந்தவுடனே மனன விருத்திகளியாவுமே யொழிந்து விடுகின்றன; அவ்வாறே:—“பேதிக்கு மிருதயப் பெருங்கிரந் திகடாம், சேதிக்கப் படுமாற் செறியைய மெலாம், வாதிக்கு மிவனது கருமங்கண்மாயும், ஆதிக்கரியப் பராவர மறியினே” என்பதாக மறையு மறைகின்றது. சமுசாரவிஷ சம்பந்தத்தாற் பிரவேசித்த விடுசிகை வியாதி சகிக்க முடியாததாம். ஜீவப்பிரஹ்மைக்கிய ஞானமாகிய காருடமந்திரத்தானே விடசோதனஞ்செய்யவே தீர்ந்துவிடும்,

ஆசிரியரிடத்துச் சிரவணித்துச் சகபாடிகளோடு சாஸ்திரவிசாரஞ்செய்தலானே பரமார்த்த ஞானமந்திரமாகிய அவ்வியோகம் அவசியங்கிடைத்துப் பலத்தை யுங் கொடுக்கும். விரிக்கின், இவ்வதிகாரி ஜன்மத்தில் விசாரம்புரியின் சகல துக்கங்களின் அத்தியந்த நாசம் அவசியமேயுண்டாம் எனவெண்ணல் வேண டும்; ஆகலின் விசார திருஷ்டிகள் அநாதரவோடும் பார்க்கப்படுவன வன்றும். விசாரத்தான் நன்கு சிவத்தைத் தரிசித்த வதனுனே சீதள அந்தக்கரணத் தை யுடையவன் (ஆராய்ச்சியி லடைவுற்ற வபரோக்ஷ ஞானத்தானே) இவ் வெல்லா மானத வியாதிகளாகிய பஞ்சரங்களை பாம்பாற் சிரணித்ததோல் விடப் படுவதேபோல வினிது விடுத்துத் தாபத்திரயமற்றவனுகி யிவ்வெல்லா வுலகங் களையும் விநோதத்தால் இந்திரஜாலம்போலக் குதூகுலத்தாற் சுக ரூபமாய்க் கண்டுகொண் டிருப்பன்; பரம்பொருளை நன்கு காணுதவனுக்கோ இவ்வு லகம் பரமதுக்கத்தையே தரும். கூறியதன் விஷமத் தன்மையையே திருஷ் டாந்தங்களால் வெளிப்படுத்துவாம், சமுசார இராகமானது முற்றினும் விஷமத்தோடு கூடியதாம்; அது அனர்த்தம் வருமென் றறியாமலே மோக த்தால் விடயங்களில் வீழ்வதைச் சர்ப்பத்தைப்போற் கடிக்கின்றது, வாள் போல் வெட்டுகின்றது, ஈட்டியென்னக் குத்துகின்றது, கயிறுபோற் கட்டு கின்றது, அக்கினிபோற் றகிக்கின்றது, இரவுபோ லிருட்டுகின்றது, தலையில் விழுந்த கற்போல மூர்ச்சிப்பிக்கின்றது, விவேக திருஷ்டியைக் கெடுக்கின் றது, மரியாதையைக் கெடுக்கின்றது, மோக வடிவ அந்தகாரகூபத்தில் அல் லது அந்தகூப நரகத்திற் புருடரைத் தள்ளுகின்றது; இவ்வாசையானது சோமக்கொடியை நைத்துப் பிழிவதே போலப் புருடரைச் சிதிலஞ் செய்கின் றது; அதிகமாக அறைவதனு லென்னே! சமுசாரி யடையாத துக்கம் உல கத்தி லொருசிறிது மில்லவே யில்லை. நரகம்போன்று மல மூத்திரங்களின் நகரம்போன்ற சரீரங்களிடத்திலும் அவற்றி னுறவினர் அன்னபானுதிகட்க முதலிய சமுதாயங்களிடத்திலு மாசை வைத்தலானே புருடனைப் பந்தப்படு த்துப இயற்கையனவாய விடயவடிவ விசூசிகைகளாமிவை அந்தோ! முடிபின் றியவையாம்; இவைகளைச் சிகிச்சைசெய்து மாற்றுவிடின் நிரந்தரம் மேற் கூறப்படும் ஆயிரக்கணக்கான அவ்வந்நரக துர்த்தசைகளையே கொடுக்கும். அவைகளாவன:—கற்களைத்தின்னல், வாட்களால் வெட்டுண்டல், மலைச்சிக ரங்களி னின்றும் உருளல், கற்கனங்களா லடிபடல், அக்கினியாற்றுகமுறல், பனியால் எப்போதும் நனைந்திருத்தல், கோடாரி கத்திரி முதலியவற்றுல் சரீரங்கள் சேதிக்கப்படல் (பிளக்கப்படல்), சிலைப் பலகைகளில் உடல்கள் சந் தனக் கட்டையைப்போற் றேய்தல், வாளிலை மரங்கணிறைந்த வனத்திடை யோடல், காஷ்டத்துள்ளிருக்கும் புழுக்கட்கேபோல அங்கமுழுதும் காஷ்ட யந்திரத்தாற் றுன்புறல், பழுக்கக் காயவைத்த இரும்பு முட்சங்கிலியினுலே சுற்றுண்ணல், முட்டுடைப் பங்களால் அங்க முழுவதும் தோலெலும்பும்படி துடைக்கப்படல், எப்போதும் அக்கினிச் சுவாலைகளைக் கக்கும்போரிற் பொழி யாநின்ற பாணங்களின்றுரை யிடைவிடாது தைக்கப்பெறல், நீழல் நீர்குடித் தல் கிடைக்கப்பெறுமல் உஷ்ணகாலங் கழிக்கப்பெறல், அவ்வாறே சீதகா

லத்தில் நீருள் நிறுத்தி நீரைத்தாரையாகப் பொழியப்பெறல், வெட்ட வெட்ட உண்டாகிக் கொண்டிருக்குஞ் சிரசு மீண்டு மீண்டும் வெட்டுப்படல், சுக நித்திரை விடயத்திலோ வார்த்தையு மில்லாமை, முகத்தை மூடிவிடுத லான் மூச்சுவிட முடியாமை, அங்கங்களெங்குங் கொப்பளம் கிளம்பி மேடும் பள்ளமுமாய் விவகரிக்க முடியாமை, தேகம் மற்றைய ஒவ்வோரங்கங்களும் மலைபோல வீங்கப்பெறுதல். அல்லது, கற்களைத்தின்னன் முதலிய நான்கை யும் பனி தெளித்தல்போற் சகிக்கத்தக்கதாம். அங்கத்தைக் கத்தரித்தலைச் சந் தனப்பூச்சே போலவும், வாளிலைத் தருவனுதி மூன்றையும் தேக சமஸ்காரம் போலவும், விசிட்ட சரதாரை வீழ்தலையோ வேனிற்காலத்தில் விளையாடு நிமித்தங் கொடிவீடு முதலியவற்றிலிருந்து ஜலதாரையைப் பொழிவித்தல் போலவும், தலைவெட்டலாலாய மரணத்தைச் சுக நித்திரை போலவும், முகத் தை மூடலான் பலாற்காரமாய்ப் பேசாமையைச் செய்தலைச் சகஜவிருத்தியி ஞலே வதனத்தை மூடிக்கொண்டதேபோலும், உடம்பெல்லாங் கொப்பளி த்து மேடும்பள்ளமாயாதலையோ மகாசம்பத் துதயமானதைப் போலவும் அவ சியம் பொறுத்துக்கொள்ள வேண்டியதாம். துக்க ஸ்தானங்கள் அளவிறந்தன வாயிருத்தலின் ஒருதிசை மாத்திரம் இவையெனக் காண்பிக்கப்பட்டன. அவ ற்றை யீண்டு காண்பித்தலானே யாதுபயனோ வெனின், கூறிய இவ்வகையான கஷ்ட சேஷ்டைகள் ஆயிரங்கோடியாற் கொடிய சமுசாரத்துற்ற அழியப் பட்ட காயங்களாற் பரிச்சின்னப்பட்டுப் பரவசமாயிருப்பதில் அநாதரவாய்க் கவனியாமல் விட்டுவிடப்படாது. அவசியம் மேற்கூறும் பிரகாரம் விசாரிக்கத் தக்கது, மேற்கூறும் வகையாக அறியவும் வேண்டும். அஃதெவ்வாறெனில், எவ்வாறு சாஸ்திர விசாரத்தாற்றிடமாய் மேன்மையான துண்டாமோ அவ் வாறேயாம். அவ்வாறுயின் சாஸ்திர விசாரத்தான் மேன்மைபெறல் எங்ஙனங் கூடுமென்று துணிய முடியும், சாஸ்திரவிசார தற்பரர்களாகிய மாண்டவ்யாதி மகரிஷிகட்கும் ஆயிரக்கணக்கான ஆர்த்தசை காணப்படுதலின் என வினவின், வித்தைக்கு கண்கண்ட பலனுண்டென் றறிந்துகொள்ளல் வேண்டும்; ஹே இரகுகுல இந்துவே வேறுங் கேட்குதி! ஈண்டு ஞான கவசத்தாற் காக்கப் பட்டவதனனே துயாங்கட்கு வயப்படாதவராயினும் இம்முன்னியம்பிய மகா முனிகளாகிய தியான பரர்களும், மகரிஷிகளாகிய மந்திர ஜபபரர்களும், விப் பிரர்களாய கருமபரர்களும், அரசர்களாகிய ஜனகாதிகளும் அஞ்ஞர்களைப் போல் மனோவிருத்தி வாயிலாய்த் துக்கத்தைத்தரும் அவ்வச் சமுசார அனர்த் தங்களை யனுபவித்துக்கெண்டு வாழ்கின்றனர் என்றெண்ணின், அவர்களெங் ஙனம் எப்போழ்துமே மகிழ்வுற்ற மனத்தராகி வாழ்கின்றனர். ஆயின் அவர்க ளுடைய நிலைதான் எத்தகையதெனின், இவ்வுலகில் அபூர்வ விடயத்தைத் தரி சித் தனுபவிக்க வேண்டுமென்னு முற்சாகம் இல்லாதவர்களாய், விகற்பங்களா லாம் விக்ஷேப மற்றவர்களாய், அர னரி யயன் என்பவர் முதலியோர் எங்ஙன மிருக்கின்றனரோ அங்ஙனம் நரோத்தமர்களாய அம்முனிவராதியரும் மிக வுந் தூயதாய மதியுடையவராயும், ஆன்ம ஞானத்தை யடைந்தவர்களாயும் இருக்கின்றனர். பிரஹ்மாதி தேவர்களைப்போல அம்மகா முனிவர் முதலியோர்

பூர்ணகாமராயின் அவர்கட்குச்சமுசாரகாரியங்களின் சுழலல்காண்டல்எவ்வாறு மெனின்? விசாராதிகட்கு ஜீவன்முக்தி விளையாட்டேபயனும்; ஆசிரியர்முதலியவருடன் பதார்த்த பரிசோதனைசெய்தபோது தாதாத்மிய அத்தியாசத்தாற்பெற்ற ஆன்ம சாதிருசியத்தானே அனான்மத் தகைமைகொண்டு தூலாதி தேகங்களை நீக்கிய அவ்வதிகாரிக்கு முதலில் மகா வாக்கியத்தால் தத்துவம் அறியப்பெற்று மனனத்தானே அபரிச்சின்ன ஆன்மாவின்கண் அசம்பாவனை நீங்குமாறு இனிதாக வுணர்வுண்டாகியபோது, நிதித்தியாசனத்தானே நீக்கப்பட்ட விபரீத பாவனையாம் புத்தியினானும் பிரஹ்ம பாவத்தை நேரே கண்டபோது, மோகமானது முற்றினுங் கெட்டபோது, அதன் காரியத்தாலாம் நெருங்கிய மயலாகிய மேகம் விலகியபோது, செய்யுமிவ் வுலக விவகாரச் சுழல்கை விளையாட்டே யல்லாமற் பீடையைத் தருவ தல்லவாம். வினோதத்தையே விரிக்கின், வேறுங் கேள் குழந்தாய்! அறிவு மாத்திர இயற்கை வாய்ந்த பரமார்த்த வஸ்துவின் கண்ணே யமுந்தி யனுபூதி வந்தபோது, மேன்மை தங்கிய சாந்தியின் ஆவிர்ப்பாவத்தை யிருதயத்தி லடைந்து சமஸ்தமான புத்தி விருத்திகளிலும் அச்சாந்தி ரஸத்தைப் புசித்துக் கொண்டிருக்கும்போது, தனதந்தக்கரணத்திற் பிரஹ்மானந்த ரசத்தை யனுபவிக்கும்படியாக விஷமத் தன்மையானது நீங்கிய இயற்கை வரும்போது, நிதித்தியாசனத்தானே நீக்கப்பட்ட விபரீத பாவனையாம் புத்தியினானே பிரஹ்ம பாவத்தை நேரே கண்டபோது, செய்யு மிவ்வுலக விவகாரச் சுழல்கைவிளையாட்டே யல்லாமற் பீடையைத்தருவதல்லவாம். "தேராளியாக வான்மாவைத் தெரிதி, தேரே தேகமாமென்றுநீ தெரிதி" என்பதாதி யுருவக திருஷ்டியானே பார்த்த போதிலும் இச்சுழல்கை கூடும்; எவ்வாறெனின்? அவ்வகை யயலைக் கேட்குதி! வெட்டிய மரம்போலச் சேதனமாக விருக்கும் தேகத்தைத் தேராகவும், விடயத்தை முன்னிட்டுப் பொறிகள் செல்லும் நடையைக் குதிரைகளின் நடையாகவும், நாற்றிசைகளிலும் நடத்திவைக்கும் பிராணப் பிரதானமான மனதையே கசையாகவும் கொண்டு தேரைச்செலுத்தலானே பொருள்களினின்றுங் கிடைக்கப்பெற்ற ஆநந்தரூப விடயங்களையுடைய இத்தகைய தேகியான யானே சமாதியின்கண்ணே பரமான்மாவே யெனினும் விவகார காலத்தில் மதியுபாதியின் பரிச்சேதத்தாற் சூக்குமமா யணுவாய தேராளியாகியுலகில் விளையாடுவேன் என்னும் பவித்திரமான மதியானே பிரஹ்ம தத்துவத்தைக் கண்டுகொண் டிருப்பனுடைய இவ்வுலக விவகாரச் சுழற்சியானதுவிளையாட்டாமே யல்லாது துயரைத் தரமாட்டாது.

12 - வது ஞான மாகான்மியம் முற்றும்.

## 13 - வது சம நிரூபணம்.

இப்போது, ஜீவன் முக்தியாகிய பயனைத்தரும் வைராக்கியாதி குணங்களினுதயம் மிகுதியாகவும், மீண்டும் சிறப்பாகச் சமமும் வருணிக்கப்படும். வைராக்கிய சாந்தியாதி சாதனங்களை வருணிப்பவராய ஸ்ரீ வசிஷ்டர் முற்கூறிய ஜீவன் முக்தியின் நிலைமையையே வருணிக்கின்றார்:—நவின்ற திருஷ்டியைப் பற்றியே ஆன்மாவைக் கண்ட நன்மதியுடையோர் சாம்ராஜ்ய சம்பத்தை யடைந்தவர்

போல மகான்களா யிச் சமுசாரத்திற் சஞ்சரிக்கின்றனர். அவர்கள் சோகத்தை யுறுவதில்லை. சுபா சுபங்களை விரும்புவதுமில்லை. எதனுற் சுபாசுபங்களை கொள்ளவுந் தள்ளவும் விரும்புவதில்லையோ வதனுனே அவற்றின் சாதனங்களை வேண்டுவதுமில்லை ; யாவற்றையுமே செய்தபோதினும் ஒரு சிறிது முண்மையா யீண்டுச் செய்வதே கிடையாது. தள்ளுங் கொள்ளும் பக்ஷத்திற் சாராதவர்க ளாய்த் தம் வடிவத்திலே நிலைபெற்றவர்களாய் அசங்கான்ம தரிசனத்தாற் பற் றற்றுச் சாஸ்திரம் விதித்ததைச் செய்கின்றனர். இலௌகிக சன்மார்க்கத்திற் செல்லுகின்றனர், எனினும் நிருமலமாகவே நிலைபெற் றிருக்கின்றனர். அன் னிய திருஷ்டியினுனே வருகின்றனர் செல்கின்றனர்; தந் திருஷ்டியினுனே வருவது மில்லை செல்வது மில்லை ; அவ்வாறே செய்தபோதினும் செய்வதில் லை; பேசியபோதினும் பேசுவதில்லையாம். " கண்ணுளனுயினும் கண்ணிலன் போன்றே, காதுளனுயினும் காதிலன்போன்றே, கருத்துளனுயினும் கருத்தி லன்போன்றே " என்பதாதி சுருதியும் ஈண்டு நினைதற்பாலதாம். தள்ளத் தக் கனவாயுங் கொள்ளத் தக்கனவாயு மெவ்வெத் தொடங்கிய திருட்டிகளுளவோ காரியங்களுளவோ அவை யெல்லாம் பரமான்ம பதத்தைத் தன்னுருவமா யறிந்த மாத்திரையிற் சாதகங்களாய இராகத்துவேட மற்று விட்டமையானும், விடயசத்தியத்துவ புத்தியற்றுவிட்டமையானும்ஒழிந்துபோம் எல்லாஇச்சைக ளுந் தொழில்களுமற்றுச் சாந்தியையும் பிரஹ்மாகாரத்தையுமடைந்தமனத்தை யெல்லா விடத்தினும், சந்திரமண்டலத்தி லிருக்கும் சுவர்க்கியை மனமடை தல் போலவும், சந்திரமண்டலத்திலிருப்பது போலவும் சுகமடையா நிற்கும். மனன வியாபாரத்தொடக்க மற்றதும், எல்லாக் குதூகுலங்களுமற்றதும், விடய மனன குதூகுலங்கட்கே விக்ஷேப வேதுத் தன்மை யுண்மையின் அவையற்ற மையானே விக்ஷேபமற்றதும், ஆகிச்சுகவடிவத்தை யடைந்த மனது ஆன்மா வின்கண்ணே பூர்ணசந்திரனிடத்தி லமிருதமிருப்பதேபோல இருக்கும்; பரிச் சின்ன மடைய மாட்டாதாம். இந்திரஜாலம்போன்ற மாயாவிக்ஷேபங்களைச்செய் யான், அவற்றின் காரணமாய வாசனையையும் வளர்த்தான், பாலர்கட்கே போலும் மயக்கத்தாலுற்ற சஞ்சலத்தைவிடுத்து அநாதி சித்தமாய ஆன்ம சுகவடிவமாகவே நிலைபெற்று நிற்பன். பிரயோஜன விஸ்தாரமானது ஈண் டுபயோகமாம் விதத்தை மீண்டு முடிபாகக் கேட்பாயாக. இவ்வகையாய நிலை கள் ஆன்ம தத்துவத்தை யினிதுணர்தலானே கிடைப்பனவே யல்லாமல் வே றெவ்வகையானுங் கிடைக்கா ; ஆகலின் பிராணனுள்ளவரையும் அதிகாரியால் ஆன்மாவே விசாரத்தாற் சிரவணிக்கத்தக்கது, மனனிக்கத்தக்கது, தியானிக்கத் தக்கது, அறியத்தக்கது, அன்னியமொன்று மன்றும். எவ்வதிகாரிக்குச் சிர வணுதிகளின் பயிற்சியினுலே தன்னனுபூதியும் சாஸ்திரமும் குருமொழியும் ஒரு பொருணிச்சயத்தை யுறுகின்றனவோ அவனுலான்மா வெப்போதுமே யறியப்படுவதாகும். எத்துணைக் கஷ்டந்தருமாபத்து வந்தபோதினும், சாஸ் திரங்களையும் அவற்றின் பொருள்களையும் அநாதரவு செய்பவரும், பூஜிக்கத் தக்க பெரியோர்களாகிய தத்துவஞானிகளை யுபேக்ஷை செய்பவரும் ஆகிய மூடர்களோடு சமத்தன்மையை யதிகாரி யடையலாகாது. இப்பூதலத்தில்

நரர்களுக்கு அவிவேகமானது எங்ஙன மொப்பற்ற துயரைத்தருகின்றதோ அங்ஙனம் தஞ்சரீரத்துற்ற வியாதியேனும், விடமேனும், ஆபத்தேனும், மானத வியாதியேனும் துயரத்தைக் கொடாவாம். சாஸ்திரார்த்தங்களைத் தெரிந்து கொள்ளன் மிகக்கஷ்டமா யிருத்தலின் எங்ஙனம் மூர்க்கத்தன்மையின் நீக்கமா மெனின், சிறிது சீர்திருத்தப்பட்டுச் சிறிது விற்பத்தி யுடைய மதியுடையவர் கட்கு இந்நூற் சிரவணம் எவ்வாறு மூர்க்கத்தன்மையை நீக்குமோ அவ்வாறு வேறு ஒரு நூலுங்கிடையாது. பகாவாக்கிய அர்த்தரூபமாய பரமாத்மாவை யவசியம் அடையவேண்டுமென்னு மிஷ்டமுடையவனுல், தக்க திருஷ்டாந்தங்களால் அழகாயும், முரணில்லாமலும், சுகந்தருவதாயும், இருக்கு மிந்நூல் யாவுமே அவசியஞ் சிரவணஞ் செய்யத்தக்கதாம். நீக்க முடியாதனவாய ஆபத்துக்களும், துயரைத்தருவனவாய அதமப்பிறவிகளும், கருங்காலி மரத்தினின்றும் முட்களுண்டாவனபோல அவிவேகத்தினின்றும் உண்டாகின்றன. சர்வ துர்த்தசைகளின் காரணத்தைக்குறித்து ஒவ்வொரு துர்த்தசையும் மேலான தேயாம். எவ்வாறெனின், நீசச்சேரித் தெருக்களில் ஓட்டைக் கையிற்றாங்கிப் பிக்ஷை வாங்கிக் குடித்துச் சீவித்தல் மேலாகுமே யல்லாமல் மடமையோடு கூடி வாழும் கெட்ட வாழ்வானது மேலாகாதாம். கோரமாகிய இருட்கூபங்களினும், தருக்களினுடைய பொந்துக்களிலுமேனுமே யேகாந்தத்தில் குருட்டுப்புழுவா யிருத்தன் மேலாகுமே யல்லாமல் மிகவுந் துயரைத்தரும் மட்மைச் சீவனம் மேலாகாதாம். அதிகாரியானவன் மோக்ஷோபாய மயமாய இந்நூலாம் பிரகாசத்தை யடைந்து மிருத்யுவிற்கு வாயிலாய மோக மூர்ச்சையா மிருளிலும் மீண்டு அந்தத்தன்மையை யடைவ தில்லை, பிறவற்றின்கண்ணே கூற வேண்டுவ தென்னே. ஆசையை யகற்றுவதி லுபாயத்தைக் காணுமே யெனின்? விவேகமாகிய சூரியனுடைய விமலமான ஒளியானது உதியாதவரையுந் தான் மனுடராகிய தாமரைமலரை யாசையானது குவியுமாறு செய்கின்றது. சமுசார துக்கம் விடும்பொருட்டுப் பந்துக்களாய எம்மனோர் முதலியவர்களோடும், குருசாஸ்திரப் பிரமாணத்தானே ஆன்மாவின் சொரூபத்தை யறிந்து ஈண்டு ஹரிஹராதியரும் பிரஹ்மரிஷிகளும் மற்றையமுனிவரும் ஜீவன் முக்தர்களாய்ச் சஞ்சரிப்பதேபோல் ஹே இராகவ! நீ விளையாடிக்கொண்டிருப்பாயாக. இச்சமுசாரத்தில், துக்கங்களோ அளவிறந்தனவாம், சுகமோ புன்னுனிப் பனிநீர்க் கொப்பாகுமாதலின், துயரங்கணிறைந்த சுகங்களில் ஆசை வைத்துக் கட்டுப்படலாகாது. அந்த மின்றியும், ஆபாசமின்றியு மிருக்கும், ஆன்மதத்துவத்தை யடைவதற்குரியதான ஆன்ம ஞானத்தைப் பரமபுருடார்த்தம் சித்திக்கும்பொருட்டு விவேகியாகிய அதிகாரி முயற்சியினு லடையவேண்டும். எவர்களுடைய மனமானது இதனினும் மேலான வேறு பதமில்லை யென்னும்படியான மேன்மையினும் மேன்மை மிக்க வஸ்துவைப்பற்றி எல்லாத் தாபங்களு மற்றதாமோ அந்தப் புருடோத்தமர்களே புருடார்த்தத்திற்குப் பாத்திரமாவார்கள். எவர்கள் துஷ்டமனதுடன் இராச்சிய பரிபாலனுதி சுகங்களில் அருந்தல் பொருந்தன் மாத்திரையானே மகிழ்வுடையவர்களாவர்களோ அவர்களைக் குருட்டு மண்டூகங்களென்றறிதி ; கூபத்துட் கிடக்கும் மண்டூகமே

வெளியிலிருப்பதை யறியாது அதனினும் குருடாயுமிருப்பின் அத்தியந்த மொன்றுந் தெரியாதன்றே. வஞ்சகர்களும், கெடுக்க முடியாத பிரபலர்களும், கெட்ட கிருத்தியஞ் செய்வதே வேலையா யுள்ளவர்களும், போகங்களைப்போகிப் பவர்களும், மித்திரரைப்போன்று நடிப்பவர்களும் ஆகிய சத்துருக்களிடத்தில், எம்மோக மந்தமதியினர்களாய மூடர்கள் பற்றுடையவர்களாவர்களோ அவர்கள் சங்கடத்தினும் சங்கடத்தையும், துயரினுந்துயரத்தையும், பயத்தினும் பயத்தையும், நரகத்தினும் நரகத்தையும் அடைவார்கள். "இன்பின் பின்றுன்பம், துன்பின் பின்னின்பாம், மன்பெருங் கடியந்தி ரமேபோல, வன்பிளைப் பாறுதலிலா தடிக்கடி மின்படச்சுழன்று மெலிவடையும்மே" என்பதாதி வாக்கியங்களானே சுகதுக்க தசைகட்குப் பரஸ்பரம் விநாசங்கூறப்படல் காணப்படுதலின் இவனொருகாலும் சிரேயசிலிருப்பவனாய் இளைப்பாறுத லுடையவனாகான். காட்சியினானும் அவற்றிற்குப்பங்கமாந்தன்மை பிரசித்தமேயாம், சுகதுக்கங்கள் மின்னன் மின்னுவதேபோலப் பங்கமுடையனவேயாம். விரக்தர்களும் மகான்மாக்களும் நல்லவிவேகிகளும் ஆகி உன்போன்றிருக்கப்பட்டவர்களே வந்திக்கத் தக்கவர்களென்றும், போகமோக்ஷ முக்கியபாத்திரர்களென்றும் அறிதி. வைராக்கிய அப்பியாசயோகத்தால் உயர்ந்த விவேகமுற்றுச் சமுசாரநதி ரூபமாய்க் கோரமாயிராநின்ற இவ்வாபத்தினின்றுங் கரையேறுதல்வேண்டும். விடத்தைப்போல மிகுந்த மூர்ச்சையைச் செய்வித்தலானே மிகவும் மோகமாகிய களங்கத்தையுண்டாக்கு மியற்கையையுடைய சமுசாரமெனப் பெரியமாயைகளாம் பொய்வஞ்சனையுபாயங்களிலீண்டு விவேகியாயுணர்வுற்றவன் துயிலலாகாது. இச்சமுசாரத்தையடைந்தும் நன்மையைக் கவனியாமலெவன் றிரிகின்றானோ அவன் தீப்பற்றி யெரிகின்ற வீட்டினுடைய மேற்றிருணமயக் கூரையிலுறங்கும் மூடனேயாவன். சமுசாரத்தினுமேல் வேறாக யாதொன்று மில்லைவேயில்லை யாகலின் ஆண்டெதைப்பற்றிக்கொண்டு சமுசாரத்தில் விரத்தியையடைவதோவெனின்? கேட்டி! எதையடைந்தவர்கள் மீண்டுந்திரும்புவதில்லையோ, எதையடைந்தவர்கள் சோகத்தையடைவதில்லையோ அந்தப் பரமபதமானது ஞானமாத்திரத்தானே அடையக்கூடியதாயுளதேயாம், இல்லையென்பதாகவில்லை அஃதில்லையாயின் உலகங் குருடாமென்னும் வழக்காதலினானும் ஆன்மாவையகற்ற முடியாமையானும் என்றுணர்க. இதன்கண் ஐயப்படவேண்டியதே கிடையாது; அவ்வாறே "இச்சகந்நாதனில்லனேயாயின், இச்சகமியாவு மியங்குங்குருடாய், மெச்சுறு சூரியன் மிளிர்ந்திலனாயின், இச்சகமொளியிலாதிருப்பதேபோல" எனப் புராணங்களினும், "அசத்தெனச் சிவந்தனை யறிந்திடுவானே லசத்தேயாவ னவனெனவறிக, சத்தெனச் சிவந்தனைத் தனித்தறிவானேற் சத்தெனவவனை யதனாலறிக" எனச் சுருதியின்கண்ணும் கூறப்பட்டுளதாம். "நல்லமேனுல கையுற நாடினு, நல்லதாமறை நன்னெறி நாடிடல், வல்லனில்லெனில் வந்தது யாதுகொ, னல்லனுண்டெனி னாத்திகன் போன்றினான்" என்னும் நியாயத்தானே சந்தேகப்பட்டவர்களுந் தெளிவுறலாமே; அஃதில்லாதாயின் ஆன்ம விசாரத்தாலுற்ற தோஷமென்னை? அஃதிருக்குமாயின் பவசாகரத்தினின்றும் கரையேறி விடலாமல்லவா? அன்றியும், சந்தேக முறினும் மகா

பலத்தின துபேக்ஷை கூடாதன்றோ. ஆயினேன் யாவரும் பிரவிருத்திக்கவில்லை யெனின், "கரிமுகன்றிருவள் காட்சியாகவே, யருமையி னெத்துணை யணுக வில்லையோ, குருபர னெடுமறைக் கோதினூலதூஉம், ஒருவனு மத்துணை யுறுவ தில்லையால்" என்னும் வாக்கியத்தால் ஈசுர அனுக்கிரகத்தாலடையத்தக்க மோக்ஷத்தை யனுபவிக்கும் பாக்கியசாலியே மோக்ஷசாதனத்திற் பிரவிருத்திப்பான், பிறரெல்லாரும் பிரவிருத்தியார். ஈண்டுப் புருடனுக்கெப்போது மோக்ஷோபாயவிசாரத்திற் பிரவிருத்தியுண்டாகின்றதோ அப்போதே விரைவில் அவன் மோக்ஷத்தை யனுபவிப்பவனுகக்கூறப்படுவன்; பிரவிருத்தியின் பயனுய மோக்ஷத்தை யனுபவிக்குந்தன்மையானது குறியாலே தெரிந்துகொள்ளவேண்டியதாம். அற்றேல், தேக இந்திரிய விடய சூனியத்தையுறுங் கைவல்லிய ஹேதுவான இச்சாஸ்திரத்தானே யாதுபயன்? தேகாதிகளிருந்தாற்றானே வேறுபாயத்தாலேனும் சுவர்க்காதி சுகத்தையாவ தடையலாம் எனின், இம் முப்புவனத்தின்கண்ணும், கெடாததும் ஐயமற்றதும் தன் வடிவமாயிருப்பதும் உபத்திரவமற்றதும் மயலற்றதும் ஆகிய பதமானது கைவல்யத்தானன்றிக் கிடைப்பதேயில்லை; சுவர்க்காதிகளோ கெடுவனவும் வீழ்ந்து விடுவோமென்னுஞ் சங்கையோடுற்றனவும் உபத்திரவங்க ணிறைந்தனவும் மற்று மநேகந் தோடங்களுற்றனவுமே யாமாகலின் கைவல்யமே புருடார்த்தமாம். விசாரப்பிரவிருத்தியானது கிடைத்தபோது உத்தமமாகிய கைவல்யப் பிராப்தியிற் கிலேசமுண்டாகாது; தனுதிகளினுனே கைவல்யமானது உண்டாகலாமே விசாரத்தினுலே யாகவேண்டிய தென்னேயெனின், தனுதிகளேனும் மித்திரர்களேனும் பந்துக்களேனும் உபகாரமாகமாட்டார்களென்றறிக. காசரணுதியசைவுவடிவ காய சம்பந்தமான நமஸ்காராதியேனும், தேசங்கள் சுற்றும் யாத்திரை முதலியவையேனும், உபாசனை முதலியவற்றிற் காயக்கிலேசத்தால் பலம் உற்சாகம் நித்திரை முதலியவற்றை யற்றிருத்தலேனும், புண்ணியதீர்த்தங்க ணிறைந்த க்ஷேத்திரவாசமேனும் உபகாரத்தைச் செய்யமாட்டாவாம். ஆயின் அஃதெதனுற்றான் கிடைக்குமெனின்? சிரவணமனன நிதித்தியாசன வடிவப் புருடப்பிரயத்தனத்தினுற் சாதிக்கத்தக்கதும், துவைதவாசனையின் விரோதியாய பிரஹ்மாகார திடவாசனையின் சமவிடயத்தொழிலாஞ் சமாதியாற் சாதிக்கத்தக்கதும் ஆகிய சாக்ஷாத்காரத்தானே, மனோமாத்திரமாய துவைதத்தின் மூலத்தைக் கெடுக்கும் வெற்றிகொண்டு கைவல்ய பதத்தை யடைந்து விடலாம். "அருமருந் தரியநோய்களனைத்தையு மகற்றல்போல, வொரு பரம்பொருளேயாமென்றுன்னியே யிடைவிடாமல், உரைவகையுஞற்று நின்ற வாசனை யொருங்குகூடி, மூராணுறுமவித்தை யீன்ற முழுத்துயர் நீக்குமன்றே" என்றுங் கூறியுள்ளார். உடற்பொறி முதலியவற்றி னின்றும் ஆன்மாவை வேறு பிரித்தலாகிய விவேக மாத்திரத்தாற் சாதிக்கத்தக்கதும், சிரவண மனன நிதித்தியாசன வடிவ விசாரத்தால் அசம்பாவனுதி நீக்கத்தானும் ஒருமையினுனும் நிச்சயிக்கத்தக்கதும் ஆகிய இம்மோக்ஷ பதமானது துக்கக் கூட்டங்களாய விடயங்களை நீக்கினவனுனே யடையப்படுகின்றது. மிருதுவாகச் செய்யப்பட்ட ஆதனத்திற் சுகமாக விருந்து தானுகவே அதை விசாரிக்கும் புருடன் பரம

பதத்தை யடைந்து சோகிப்பதில்லை, பதமடைந்தவவன் மீண்டும் பிறப்பதில்லை. அந்தப் பரமபதம், சமுசாரத்திற் சாரமென வெளிப்படையான எல்லாச் சுகங்களுக்கும் மேலானதும், அசாரபதார்த்தங்கள் யாவற்றிற்குமே இருப்பு விளக்கத்தைக் கொடுப்பதற்கு மேலான எல்லையா யிருப்பதும் சுகமாகிய நீண்டதாரைகட்குக் கார்மேகம்போ லிடமா யிருப்பதும், முடிபாயிருப்பதும், தியானிகட்கு உத்தமோத்தமமாகிய ஆநந்தரச ஊற்றெடுக்குமிடமும் பரமாமிருதமும், ஆமென்று சாதுக்களுணர்ந்துளார்கள்; "இதனதே யின்பத்திறை மாத்திரங்கொண்டிதமா யயலுள வின்னுயிர் வாழும்", "அதுவே காட்டை யதுவே பரகதி" என்பதாதி சுருதிகளுமிப் பொருளையே யருளுகின்றனவாம். எல்லாத் திருசியங்களும் நாசமுடையனவே யாதலின் சுவர்க்க மனுடலோக விடயங்களெவற்றினுமே, கானனீரில் நீர்போலச் சுகங்கிடையவே கிடையாது. ஆதலின் சமசந்தோடங்களாற் சாதிக்கத்தக்க மனதின் வெற்றியைச் சிந்திக்கவேண்டும். அதனுல் முடிபிலாப் பரம்பொருளி லிருக்கும் ஏகரசமான ஆனந்தமான துண்டாகும். சரீரபரிசிரமமும் கிடையாது; மனுடனே யதிகாரியென்பதுமில்லை; நிற்பவனுலும், நடப்பவனுலும், வீழ்பவனுலும், சுழல்பவனுலும், அரக்கனுலும், அசுரனுலும், தேவனுலும், மனுடனுலும், பெண்ணுலும், ஆணுலும், மனோசாந்தியா லுண்டாயதும், மலர்ந்திரா நின்ற சமமெனும் மலரையுடைய விவேகமென்னும் மிகவுயர்ந்த கற்பக விருக்ஷத்தின் பலமும், ஆகிய அப்பரம சுகபதம் அடையப்படும். அப்பதங்கிடைப்பினும் மீண்டும் விவகார மடைவுறவே நீங்கிவிடுமே யெனின்? விவகார தற்பரனுயிருந்த போதினும் காரியக்கூட்டத்திற் சம்பந்தமின்றியவன் விண்ணிலுலாவும் பானுவைப்போல விடுவதுமில்லை; பூர்ணத்தன்மையானே தள்ளமுடியாத் தன்மை யுண்மையின், அதனுனே தொடுவதுமில்லை. மனதிருக்கும்போது எங்ஙனம் வாஞ்சை யில்லாதிருக்க முடியும் எனின்; மிகவுஞ் சாந்தியையுற்று, மிகவுந்தெளிந்து, இளைப்பாறி மயல் நீங்கிச் சேட்டையற்று வாஞ்சையற் றுலவும் மனது வாஞ்சிப்பதுமில்லை;விடுவதுமில்லை; எவர்களுக்கு ளொருவன் றயவைப் பெறினும் மோக்ஷத் துவாரத்துட் பிரவேசிக்கலாமோ மோக்ஷத்துவாரத்திலிருக்கும் அவ்வித் துவாரபாலர்களை,முன்னர்ச் சிறிது கூறியிருந்தபோதினும் இப்போது முறையாகக் கேட்பாயாக. இச்சர்க்கம் முடியும்வரை சமத்தைப் புகழத்தொடங்கல்:—சுகவாசை யாகிய தாகதாபத் தோஷதசையால் நீண்டுள்ள தாண்டமுடியாத சமுசார மருத்தல மண்டலத்தைத் தாண்ட நடப்பவனுக்குச் சீதளநிலவின் பிரபைக்குச் சமானமான சாந்தியானது சீதளத்தைத் தருகின்றது. சாந்தியானே மேன்மையான தடையப்படும், சமத்தாற் சிரேய சடையுமதனுனே ஆயுள் நெய்யென்பதுபோல அபேத வுபசாரத்தா லதுவே பரமபதமாம் "அது விஷ்ணுவின் பரமபதம்" என்னுஞ் சுருதியும் சமத்தையே கூறுகின்றது, இவ்வாறே "சத்துமல்லவாம் அசத்துமல்லவாம், ஒத்த சிவமே கேவலமாகும்" என்னுஞ் சுருதிப் பிரசித்தமாய சிவமும் சாந்தியேயாம் (சமம் - சாந்தி). இவ்வாறு "ஆன்மாவை யறிந்தவன் அனர்த்தத்தை யகற்றுவன்" என்பதாதி சுருதியறையும் சர்வதுக்க உபசாந்தியும் சமமேயாகும், சமமே பிராந்தியை நீக்குவதாகும். பெருஞ்சாந்தியாற்

திருத்தனும், இராகத் துவேடாதியாற் றாபமெய்தாமையின் அதி சீதளனும்,
மோகமற்றிருத்தலின் மிகத்தெளிந்தவனும் விஞ்ஞான வடிவினனும், சமத்தா
லலங்கரிக்கப்பட்ட மனத்தனுமாகிய அதிகாரிக்குச் சத்துருவும் மித்துருவாகின்
றான். எவர்களுடைய சித்தமானது சமமாகிய சந்திரனாலே யினி தலங்கரிக்கப்
பட்டிருக்கின்றதோ பாற்கடற்கே போலு மவர்கட்குப் பரமசுத்தத் தன்மையே
யுண்டாகின்றது; பாற்கடற்கு அதிவெண்மை சந்திரோதயத்தா லெவ்வாறா
மோ அவ்வாறு ஞானத்தாற் பெற்ற இயற்கையாய சுத்தத்தன்மையானது சமத்
தா லிருமடங்காய் வளருமன்றே. எச்சாதுக்களுடைய இருதய கமல கோசங்
களிற் சமமாகிய தாமரை மலர்கின்றதோ அவர்கள் ஸ்ரீ பகவானுடைய இரு
தய தாமரையானது வெளியே பிரஹ்மாவின் ஆசனமாகிய தாமரையா யிரண்
டாயிருப்பது பிரசித்தமாதலின், இரண்டிருதய கமலங்களையுடைய மகாவிஷ்ணு
விற்குச் சமமாவர்கள். எவர்களுடைய வதனங்களாங் களங்கமின்றியகலைமதிகளி
னிடத்திற் சமமாகிய இலக்குமி சோபிக்கின்றனளோ, சௌந்தரியத்தினாலே
சந்திரனை ஜயித்தும் சௌந்தரிய குணங்களால் அன்னியர்களுடைய விழிமன
முதலிய வற்றையும் வயஞ்செய்தும் உலவும் சற்குலத்தில் வாய்த்த அவ்விந்
துக்களே பாபத்தை நீக்குமேதுவாதலின் தம்பிறகுலம் விளக்குவனவுமாம், பூசிக்
கப்படுவனவுமாம். வேறு குணங்களா லன்றிக் கேவலம் ஆகாரமாத்திரத்தாற்
சாம்ராஜ்ய சம்பத் பிரதிமைகட் கொப்பாய சம ஐசுவரியங்கள் ஆனந்தத்தின்
பொருட்டாவனபோல மூவுலக வுதரத்துள்ளே நிகழும் ஐசுவரியங்கள் ஆனந்த
த்தின் பொருட்டாகாவாம். சகிக்க முடியாதனவாய துயரங்களும், ஆசையும்
கெட்ட காமக்குரோதாதிகளும் மற்றும் பிறவும், சாந்தமான மனங்களில் சூரி
யர்கள்பாலிருள்போல நசிக்கும். சர்வப் பிராணிகளினுடைய மனம், உண்டாக்
கப்பட்ட தன தான்மானுபவ குதூகலத்தோடுகூடி அவ்வாறாய வடிவமாயிருந்து
சாந்திமேய ஜனங்களிடத்திற்றெளிவை யெவ்வா றடைகின்றதோ, அவ்வாறிந்து
வினா லடைய முடியாதாம். சமத்தை யுடையவனும், எல்லாப் பிராணிகளிடத்
தும் நேயமுள்ளவனும் ஆகிய சாதுவின்பால் பரம தத்துவமானது அநாயாச
மாய்த் தானே பிரகாசிக்கின்றது. குரூரமாயும் கோணலாயும் இருக்கு முள்
ளத்தினரும், சாதுக்களும் ஆகிய எல்லா வுயிர்களும் ஈண்டுச் சமசாலியினிடத்
தில் அன்னையினிடத்திற்போலப் பரம விசுவாசத்தை யடைகின்றன. மனமான
துள்ளே சாந்தியினாற் சுகமடைவதேபோல இந்திரபதத்திலமிருத ரசாயனபான
த்தானும், விஷ்ணு பதத்தில் இலக்ஷுமி யாலிங்கனத்தானும் சுகமடைவதில்லை.
எல்லா மனோ வியாதி சரீர வியாதிகளினாலே பயப்படுத்தப்பட்டு நடு நடுங்குவ
தும், ஆசையாந் தோற்கயிற்றா லிங்கு மங்குமா யிழுக்கப்பட்டு இளைப்புறுவ
தும் ஆகிய மனத்தைச் சாந்தியா மமிருதத் துளிகளா லபிடேகித்து இனிது
மகிழ்விப்பாயாக. ஹே குழந்தாய்! சமத்தாற் சீதளமாய மதியினானே எத
னைச் செய்கின்றனையோ, எதனைப் பயில்கின்றனையோ, ஆண்டது மாதுரியமா
யிருந்து மானசத்தில் மிகுதியாய உருசியைக் கொடுப்பதேபோல மற்றொன்று
கொடாதாம். சமமாமமிருத இரசத்தோடுகூடிய மனமானது எவ்வானந்தத்தை
யடைகின்றதோ அச்சுகத்தால் வெட்டப்பட்ட அங்கங்களுங்கூட மீண்டு முண்

டாய்விடும் போற் றேன்றுகின்றது. சமமுடையவனைப் பேய்களேனும், அரக்கர்களேனும், தைத்தியர்களேனும், பகைவர்களேனும், புலிகளேனும், புயங்கங்களேனும், துவேஷியார்கள். பாணங்கள் வச்சிரப் பாறையைப் பிளவாதன போலத் துக்க நிமித்தங்களா யுள்ளவை அதி சாந்தியாகிய அமிருதரூபக் கவசத்தால் நன்றாக மூடப்பட்டுள்ள சர்வ அவயவத்தை யுடையவனைத் துன்புறுத்தாவாம். உபசாந்திவயமாயும் அதி தெளிவாயும், சமமாயு மிருக்கப்பட்ட புத்தியினாலே புருடன் சோபிப்பதேபோல அந்தப்புரத்தி லிருக்கப்பட்ட அரசனும் சோபியான். சமத்தோடு கூடியவனைக் கண்டு ஜனங்கள் எச் சாந்தியையும் மகிழ்வையும் அடைகின்றார்களோ, அம் மகிழ்வைப் பிராணனினும் அதிப்பிரியமானவனைக் கண்டும் அடைவதில்லை. சமத்தோடும் சாந்தி வடிவத்தோடு மிருக்கும் விருத்தியோடற் றெச்சாது விருக்கின்றானே இவ்வுலகத்தில் ஆனந்தமாகப் பயனோடு கூடிய ஜீவனத்தை யவனே செய்கின்றான், மற்றவனல்லன். வணக்கத்தோடு கூடிய மனத்தனாகிய சாந்தனுஞ் சாதுவானவன் பிரமாதத்தால் எவ்வபராதத்தைச் செய்த போதினும், இவ்வுயிர்க ளியாவும் அவ்வியாவற்றினும் ஆனந்தத்தையே யடைகின்றன. இப்போது இடாம்பிக சாத்துவிக பரீக்ஷையின் பொருட்டுச் சாந்த னிலக்கணங்க ளியம்பப்படும்:—சுபா சுபங்களாகிய பிரியாப் பிரியங்களைக் கேட்டுந் தீண்டியுங் கண்டும் உண்டும் மூகர்ந்தும் மகிழ்ச்சி வாட்டங்களை யடையாதவனே சாந்தனெனக் கூறப்படுகின்றான். யாவன் சர்வப் பிராணிகளிடத்திலும் சமதிருஷ்டி யுடையவனோ, வருஞ் சுகாதிகளை வாஞ்சியானோ, நுகர்வினை வயத்தால் வந்ததைத் தள்ளானோ, முயற்சியினால் இந்திரியங்களைச் செயித்துளானோ அவனே சாந்தனெனச் சாற்றப் பெறுகின்றான். குடிலத் தன்மையின்மையும் அதனிலக்கணமாம், பிறாது குடிலத்தன்மை முதலியவற்றை யறிந்தும் பரிசுத்த மதியினனே யாவன் உள்ளும் புறம்பும் ஓரே படித்தா யொத்துளானோ, எவன்பால் மோக்ஷ வுபாயமாகச் செய்யத்தக்கனவாய காரியங்கள் காணப் பெறுகின்றனவோ, அவன் சாந்தன் என அறையப் பெறுகின்றான். மரண உற்சவ யுத்தங்களில் அச்சம் ஆசை சினம் என்பவற்றால் ஆகுலமின்றித் தபியா மனமுடையவனும், அதனானே சந்திரபிம்பம்போலக் குளிர்ந்திருப்பவனும், எவனோ அவனே சாந்தனெனப்படுகின்றான். மகிழ்ச்சி சினமிவற்றின் நிமித்தமாயவிடத்தில் இருந்தபோதினும் இராதவன் போல மகிழாமலும் சினக்காமலும் துயில்பவனைப் போன்றவனாய்ச் சமனாய்த் தன் வடிவிற் சுவஸ்தனா யிருப்பவனே சாந்தனெனப் படுகின்றான். எவனுடைய திருஷ்டி அமிருதப் பிரவாகம்போலச் சுகந் தந்து சகல ஜனங்களையும் பிரீதியோடுங் காண்கின்றதோ அவனே சாந்தனெனப்படுவன். விடயங்களில், விவகாரியா யிருந்த போதினும் யாவன் பற்றுறுவதில்லையோ, யாவன் உட்சீதளத்தை யடைந்துள்ளானோ, யாவன் மூடனல்லனோ அவனே சாந்தனெனப்படுகின்றான். முடிவின்றியதாய ஆபத்துக்களினும், நெடுங்காலமுடைய கற்பாந்தங்களினும், பொய்வடிவமா யழிந்துபோங் காயங்களில் அகம்புத்தி செய்யாதவனே சாந்தனெனப் படுகின்றான். விவகாரங்களை யினிதியற்றும் எப்புருடனுடைய மதியானது, பரமாகாசமாய பிரஹ்மத்தோடு சமரசமாயிருந்து பிர

சித்த ஆகாசம்போல விகாரமற்றிருக்கின்றதோ, இராகாதிக ளங்கத்தை யடைவ தில்லையோ அவனே சாந்தனெனப்படுகின்றான். உலகத்திலும் எல்லாக்குணங் களிலும் மேன்மையதாய்ச் சமமே யிலங்குகின்றதாம்; தபசிகள், மிகத்தெரிந்த வர்கள், மகம் புரிபவர்கள், அரசர்கள் பலமுடையவர்கள், குணமுடையவர் கள் என்னும் யாவரினும் சமமுடையவனே யிலங்கா நிற்பன். பெரியோரா யும், குணவான்களாயும், சமத்தோடு கூடிய மனமுடையவராயு மிருப்பவர் தஞ்சித்தத்தினின்றும், பூர்ணசந்திரனிடத்தினின்றும் ஒளி நிகழ்வதேபோலச் சுகம் நிகழ்ந்து கொண்டே யிருக்கும். சற்குணங்களின் சமூகங்கட்கெல்லையா யும், புருடார்த்த முக்கிய பூடணமாயும், சர்வகுணங்களின் சம்பத்துக்களோடு கூடியதாயும், நிகழுஞ் சாந்தியே சங்கடங்களிலும் பயஸ்தானங்களிலும் விளங் கா நிற்கும். பிறரா லபகரிக்க முடியாததாயும், பூசிக்கத்தக்கவரால் சாவதான மாய்க் காக்கப்பெற்றதாயும் மேலானதாயும் இருக்குஞ் சாந்தியாகிய அமிர்த மயசாதனத்தை யினிதுபற்றி மகானுபாவர்கள் எம்முறையானே பரமபதத்தை யடைந்தார்களோ அதே முறையைப் பின்பற்றி ஹே இராகவ! நீ அடைய வேண்டிய தடையும் பொருட்டுக் காப்பாயாக.

13-வது சம நிருபணம் முற்றும்.



## 14-வது விசார நிரூபணம்.

இப்போது, சாதுசங்க சற்சாஸ்திர சித்தசுத்தி யென்பவற்றால் வளர்த் தப்பட்டுச் சம சந்தோஷங்கட் கேது பூதமாய விசாரம் புகழப் பெறும். இவ் வாறு, மோக்ஷவாயிற் காவலாய சமமென்னு மாதியதை வர்ணித்து இரண்டாவ தாய விசாரத்தை வர்ணிக்க விரும்பிய ஸ்ரீ வசிஷ்டர்கூறல்:—ஆண்டர்த்த வநர்த் தங்களைப் பின்பற்றியதாம் விசாரம், சாராசார விசாரம், தள்ளக் கொள்ளத்தக்க தாம் விசாரம், பிரமாண தாற்பரிய விசாரம், பரம ஆன்மதத்துவப் பரீக்ஷை யென விசாரம் ஐந்து விதமாம். அவற்றுள், இயற்கையாய பிரவிருத்தியும் விட யங்களும் அநர்த்தத்தைப் பின்பற்றினவாம், சாஸ்திரசம்பந்தமான பிரவிருத்தி யும் வைராக்கியாதிகளும் புருடார்த்தத்தைப் பின்பற்றினவாம் என்றுடன்பா டெதிர்மறைகண் முதலியவற்றானே பரீக்ஷை வடிவமாயது முதலதாம். மனைவி மக்கள் தன்றேக முதலியவற்றுள், சுயமாகவும் காரணத்தானும் பரிணாமத்தா னும் அசுசியாய மலமூத்திராதி அமங்களத்தன்மை வாய்ந்தனவெனச் சோதிக் கும் வடிவதும், பிரஹ்ம லோகம் வரையு முள்ளனவாய சுகங்களினிடத்தில் அநித்தியத் தன்மை யச்சந் துக்கங்கலந்த தன்மை முதலியவற்றைச்சோதிக்கும் வடிவதும் ஆனதிரண்டாவதாம். இவ்விரண்டும் வைராக்கிய முமுக்ஷுத் தன் மைக் கேதுக்களாம். மோக்ஷேச்சை வந்த பின்னரும் மோக்ஷசாதனம் கரும மா? உபாசனையேதானா? அவையும் கலந்தா? அல்லது ஞானத்துடன் கலந்தா? அல்லது ஞானமேயா? என்னும் பரீக்ஷை வடிவது மூன்றாவதாம். ஞானமே சாதனமாக வாயினும் அஃதென்னே! சாங்கிய வைசேடிகர் கருதத்தக்க கபில கௌதமர் முதலியோர் கூறிய அவ்வச் சாஸ்திரங்களைப் பிரமாணமாக

வுடையதா? அல்லது சுருதியை மாத்திரம் பிரமாணமாக வுடையதா? சுருதியையே பிரமாணமாக வுடையதாயினும், சுருதிகட்குத் துவைதத்திலா? அத்வைதத்திலா? விசேஷத்தோடு கூடியதிலா? விசேஷமற்றதிலா? ஆன்மாவிலா? அனான்மாவிலா? தற்பரியம் எனச்சோதிக்கும் வடிவது நான்காவதாம். அது வும் சிரவணமெனக் கூறப்படும். சுருதியாதிப் பிரமாணங்கட்கும் அத்விதீய சச்சிதானந்தப் பிரஹ்மான்மாவின் கண்ணே தாற்பரியம் எனத் துணி விருந்த போதினும், தன் னான்மாவின்கண்ணே யுண்மையாக அவ்வாறுந் தகைமை சம்பவிக்குமா? சம்பவியாதா? என்னும் இரத்தினப் பரீக்ஷை நியாயத்தானே அநுபவ நிஷ்ட ஆசிரியர் தன்னொடு கற்றார் முதலியோருடன் சம்வாதத்தாலும் ஜீவேசுவர ஜகத்தத்துவ பரிசோதனையாலும் துணிவு பிறக்கும் வரை சோதிக்கும் வடிவினது ஐந்தாவதாம். அவற்றுள் முதன் மூன்றன் பலம் சாதன சதுட்டய சம்பத்தியாம்; பின்னிரண்டற்கோ முறையே பிரமாணப் பிரமேய அசம்பாவனை களின்நீக்கமாம். அவற்றுண் முன்னவை மூன்றும்பாக்கிய வயத்தினாலே தாமாக வும் வருதல் கூடுமாயினும் அவைகள் மாறாமற் றிடப்படும் பொருட்டு மீண்டுங் குரு சாஸ்திர வாயிலாகச் செய்யத்தக்கனவேயாம். பின்னவை யிரண்டும் குரு சாஸ்திரங்களானே வருவனவாம் எனச் சர்வசாதாரணமாகச் சாஸ்திரமிருக்கும். சாஸ்திரத்தா லுணர்த்தப்பெற்று அமலமாயும் மனத்தூய்மை வந்து பரம பவித்திரமாயும் இருக்கும் மதியினாலே, விடய சமுசய பூர்வபக்ஷ சித்தாந்த பிரயோஜன வேறு பாடுகளை யுணர்ந்துள்ள சகபாடிகளோடேனும், பிரமாணப் பிரமேய தத்துவங்களைப் பிரதிபாதிக்கு முபாய சாமர்த்தியத்தோடு கூடிய ஆசிரியரோடேனும் எப்போதும் ஆன்மாவின் விசாரஞ்செய்யத்தக்கதாம். புத்தியானது விசாரத்தாற் சூக்கும தத்துவத்தைக் கவருங் குசலத்தன்மையை யடைந்து பரமபதத்தைக் காண்கின்றது; நீண்ட சமுசார ரோகத்திற்கு விசாரமே பேரவுடதமாம். அநேகம் பிரவிருத்திகளினானே நாற்புறமும் தளிர்த்து விரிந்து, இராகாதிகளால் ஆகிருதி வளர்ந்து, வருத்த மடைந்தும் தாண்டுதற் கரிதா யிருக்கும், ஆபத்து வனமானது விசாரமாகிய வாளாலும் இரம்பத்தினாலும் கோடாரி முதலியவற்றாலும் நாசமாக்கப் படுமாயின் மீண்டு முண்டாகவே மாட்டாது. ஹே பேரறிவுடையோய்! பந்து நாசங்கள் சங்கடங்கள் மயக்கங்கள் என்னுந் துக்க ஸ்தானங்களில், எஃதுசிதமாகச் செய்யத் தக்கதோ, எவ்வுபாயத்தானே துக்க நீக்கமும் சித்த சமாதானமும் ஆமோ அவை யாவும் மோகத்தானே வியாபிக்கப்பட்டு விளங்குவதில்லை. சத்துக்கட்கு ஆண்டு விசாரமே கதியாம், மறந்ததை நினைப்பதற்கு வேறொரு காரணமுங் காணோம். விரிக்கி னதனை, விவேகிகட்கு விசாரத்தை விடுத்து யாதோருபாயமு மிருப்பதாகக் காணோம்; சற்புருடருடைய மதியானது விசாரத்தினாலே அசுபத்தை யகற்றிச் சுபத்தை யடைகின்றது.பலம் புத்தி சாமர்த்தியம் அவ்வக் காலத்துக்குத்தக்கவாறு மதிதோற்றுதல்,தொழில்கள்,தொழில்களை யனுஷ்டித்தல் அவற்றின் பயன், என்பவை யாவும் மதிமான்கட்கு விசாரத்தினாலே உண்டாகிப் பயனுடையன வாகின்றன. உசிதமெனக் கொள்ளத்தக்கதையும் அநுசிதமெனத் தள்ளத்தக்கதையும் ஒளிர்விப்பதில் மகா தீபமாயும் வாஞ்சிக்கப் பட்டதைச்

சாதித்துத் தருவதாயும், அற்பமற்றதாயும், இருக்கும் விசாரத்தைப் பற்றிச் சமுசார சமுத்திரத்தைக் கடக்க வேண்டும். ஜல்பம் சலம் ஜாதி முதலிய தோட சூனியமாய்ப் பரிசுத்தமா யிராநின்ற விசாரமாகிய கேசரியானது இருதயத்திலுள்ள விவேகங்களாகிய தாமரை மலர்களை அழிக்கின்ற மகா மோகங்களாகிய மத யானைகளைப் பிளக்கின்றது. ஈண்டு, சமுசாரத்தைத் தாண்ட உபாயந் தெரியாத மூடர்களும், கால வயத்தானே பரமபதத்தை யடைந்ததானது விசாரமகா தீபத்திற்கு உத்தமோத்தமமாகிய, அத்தகைய மார்க்கத்தை விளக்குவதன் பயனும். இராஜ்ஜிய சம்பத்துக்கள், மகத்தான போகங்கள், சாசுவதமாகியமோக்ஷம், என்பவை யாவும், விசாரமாகிய பெரிய கற்பக விருக்ஷத்தினது கனிகளாம். இவ்வுலகத்தில், விசாரத்தினாலே விசாலப்படுத்தப்பட்ட பெரியோர்களுடைய மதிகள், நீரிலமிழ்த்தப்பட்ட சுரக்குடுக்கைகள்போல விபத்துக்களில் அமிழ்வதில்லை. விசாரத்தால் விவேகத்தை யுதிப்பிக்கும் புத்தியோடு கூடி யெவர்கள் விவகரிக்கின்றார்களோ, அவர்கள் மிகவும் மேன்மையாகிய பயன்களை யடைபவர்க ளாகின்றார்கள். மூர்க்கர்களுடைய இருதயமாகிய வனத்தின்கண் ணிருப்பனவும், மோக்ஷ ஆசையாகிய திசையைச் சுற்றுந் தன்மையானே முதன்மைபாகத் தகைந்து கொண்டிருப்பனவும், ஆகிய அவிசாரமாகிய குபேராக்ஷக் கொடிகளுக்கு முட்களோடு கூடிக் கசப்புப் பலன்களையுடையனவாய துக்க விவகார ஆடம்பரங்கள் பலகோச மஞ்சரிகளாம். மைப்பொடிபோன் மலினமாயிருப்பதும்,மதுவின் மததர்மங்களாய மயங்கல் விழுதல் முதலியவற்றை யுடையதும், ஆகிய மோக சஞ்சல வடிவ அவிசாரமய நித்திரை நினக்கு விசாரத்தானே நீங்குக. நல்ல விசாரமுடைய நரனானவன் பெரிய ஆபத்துக்களோடுகூடி மிகவும் நீண்டிராநின்ற அஞ்ஞானங்களில், சூரியன் இருள்களின் மூழ்காதவாறு மூழ்குவதில்லை. எவனது இனிது தெளிந்த மானச தடாகத்தில் விசாரங்களாகிய தாமரைகள் நன்றாக விரிந்துள்ளனவோ, அவன் தண்மை மேன்மை நிலைமை முதலிய குணங்களானே பனிமலைபோல விளங்கா நிற்பன். (மானசசரம் இமாசலத்துட் பிரசித்தமாம்). எம் மூர்க்கனுடைய மதியானது விசாரமற் றிருக்கின்றதோ, அவனுக்குச் சந்திரனையே தேவதையாகவுடைத்தாகிச் சந்திரனைப்போல விவேகப் பிரகாச யோக்கியமாய மனதினிடத்திற் சந்திரிகையைப்போல ஞானசுக முதித்தலே யுசிதமா யிருப்ப, அதனினின்றுஞ் சோக துக்காதி யுதித்தல் சந்திரனிடத்தினின்றும் இடியுதய மாதலாம், இது பாலகனுக்கு மூர்க்கத்தன்மையினாலே வேதாளந் தோற்றுதல் போன்றதாம். துயரங்களாகிய விரைகளையே நிரந்தரம் நிரப்ப நிர்மிக்கப்பெற்ற மிகப் பெரிய மட் குசூலமும் (குதிரும்) விபத்து வடிவங்களாய நூதனக் கொடிகளின் உல்லாச வேதுவான வசந்த காலமும் ஆகிய விசாரமில்லாத நர அதமனை நெடுந் தூரத்திற் றள்ள வேண்டும். தனக்கும் பிறருக்குந் துக்கானுகூல கருமங்களும், நிஷித்த ஆசாரங்களும், கெட்ட காமக் குரோதாதிகளும் இருளினாலே வேதாளந் தோன்றுவதேபோல விசாரமில்லாமையானே தோன்றுகின்றன. விசாரமற்றவனும், நியமமாக வனமரத்திற் கொப்பான தருமங்களை யுடையவனும், மனுடர்கள் சஞ்சரியாதவிடத்தி லிருக்கும் மரத்திற் கொப்பானவனும், அத

ஞனே வழிநடக்குஞ் சாதுக்கட்குச் சாயை யாசிரய மிலாததேபோலத் தானுதி காரியங்களிலும் புருடார்த்த உபயோகியாய காரியங்களிலும் அசமர்த்தனும் ஆகியோனை நெடுந்தூரத்திற் றள்ள வேண்டும். விவேகிகளது விசாரத்தோடு கூடிய மனமானது, ஆசையினது பரவசத்தை யடையாமல் ஆன்மாவின்கண்ணே பரம விசிராந்திச் சுகத்தைப் பூரண சந்திரன்போலத் தருகின்றது. நீரானது தாபத்தாற் பீடிக்கப்பட்ட யாவரையும் குளிர்வித்து, தாகத்தாற் பீடிக்கப்பட்ட வரைத் திருப்தி செய்விக்கின்றதேபோல விசாரத்தாலுதித்த சந்திரிகைபோன்ற வுணர்வானது, தேகத்திலுள்ள எல்லா அவயவங்களையும் மிகக் குளிர்வித்து அத்தியந்தந் திருத்தி செய்விக்கின்றது. அதிகாரியாய்ப் பிறந்தவனுக்கு, மேன் மையான புருடார்த்த வடிவ இராஜ பாவத்தின் அடைவைக் குறிப்பிப்பதாற் கொடியாந் தூயமதியின் சம்பந்தியாய விசாரம், வெண்சாமரம்போலச் சிறந்த அரச சின்னமாக இரவிற் சந்திரன்போல இலங்கா நிற்கும். (கொடி சாமரங் கட் குபமானங்கள் இரவு நிலாக்களாம்). முமுக்ஷுக்கள் விசாரத்தினனே முறையாய்ச் சீவன்முக்தர்களாகி அநேகம் பிராணிகட்கு விசாரவொளிர்வி ஞனே சமுசாரபய வடிவ தமத்தைக்கெடுத்துப் பத்துத் திசைகளையு மிலக்கிச் சூரியன்போ லினிது விளங்குவர். விசாரத்தினலே பய நீக்கம் எங்கே காணப் பட்டதெனின்? இரவினல் வெளியிற் செல்வதைத் தடை செய்வதற்காகச் சொல்லிவைத்த பாலகனுக்குத் தன் மனதின் மோகத்தாற் ககனத்தி லிரவிற் கற்பிக்கப்பட்ட உயிர் வாங்கும் வேதாளமானது விசாரத்தால் விலீனமாவதே போலச் சமுசாரமும் விலீனமாம். அங்கவ்வாருகுக, ஆயினும் பிரகிருதத்தில் எங்ஙனம் பயநீக்க முண்டாகத லெனின், பய ஹேதுவாய ஜகத்தானது ஆராய்ச் சியானே பொய்யாய்ப் போதலின் என்றுணர்க. விசார மின்மையினனே சத் தியம்போல இரமணீயங்களாகிச் சுயம் சற்பாவம் அற்றவைகளான உலகிலுள்ள எல்லாத் திருசியங்களும் விசாரத்தினலே பாறையிற்போட்ட ஓடு முதலியவை போலத் தூள்தூளாய் அசாரமாய் மித்தையாய்ப் போகின்றன. விரிக்கின், தனது மனமயக்கத்தாற் கற்பிக்கப்பட்டுப் புருடனுக்கு அளவிறந்ததுயரங்களைக்கொடா நின்ற சமுசாரமாகிய அநாதி வேதாளம் விசாரத்தால் நாசமாம். பயநீக்க மாத்திரம் பயனல்லவாம்; மற்றென்றே, நிரதிசயமான பிரஹ்மானந்த அடைவும் அதன் பயனும். உலக ஏற்றத் தாழ்வுக ளில்லாமற் சமமாய், பாதமற்றதாய், அன்னிய அதீனமற்றதாய், முடிபின்றியதாய், சுகமாய், விளங்குமிக் கைவல் யத்தை விசாரமாகிய உயர்ந்த விருக்ஷத்தின் பலமாக வுணர்தி. அது இடையில் விடுபடுமோ வெனின்? விசாரத்தால் வெளிப்படா நின்ற நிரதிசய பிரஹ்மா னந்த சாமர்த்தியத்தினற் சஞ்சலத் தன்மையின் காரணமாம் அஞ்ஞானமான தழியுங்கால் அசலம் போல் நிலைபெற்ற ஆனந்த பூர்ணத்தன்மை வடிவ நிஷ் காமத் தன்மையானது நிறை நிலவினுலுதிக்குந் தன்மையேபோல உதியா நிற் கும். அசலம்போ னிற்கையாகிய உத்தமோத்தமத் தகைமையைக் கொடுத் துக் கொண்டு பெரியோர்களுடைய மனத்திலெழுந்தருளி யிருக்கும் ஆன்ம விசாரமாகிய மகா மூலிகையாற் சித்த புருடன் கிடையாததைக் கேட்பது மில்லை; கிடைத்ததை விடுப்பது மில்லை; கிருத கிருத்தியனுகியே யுலவுவன்.

அற்றேற் சித்தமானது விசார ஜன்னிய ஞானத்தினாலே நசிக்குமாயின் வாழ்
தன் முடியாதாம்; நசியாதாயினோ மீண்டும் விக்ஷேபங்களை யுண்டாக்கவே செய்
யும் என்பதாக எங்ஙனங் கிருதகிருத்தியத் தன்மையாம் எனின்? வருத்த விரை
யானது விரைபோலிருந்த போதினும் அங்குரத்தை யாக்குவதி லாற்றலற்றதே
போல அந்தப் பரமபதத்தை யடைந்த சித்தமும் சித்தம்போ லிருப்பினும்
ஆகாசம்போ லதிவிஸ்தீர்ணமாய பிரஹ்மத் தன்மையை யடைந்த உள்விக்ஷேப
விரைவாசனைச்சால முடையதாய் மகத்தாய் வாழ்தல் கெடுமாறு அநாதி வாசனை
யால் அதிதிடமாய விஷய சமஸ்கார வசத்தால் விநாசமுமடையாது; விக்ஷேபம்
விளையுமாறு வருத்த விரைபோல இராக த்வேஷாதி விருத்திகளோடுதயமுமா
காது. அஃதெவ்வாறெனின்? உலகிலுள்ள விஸ்தாரவிடயங்களைக் கேவலம்
[illegible]வைப்போல மிக வுதாசினமாகப் பார்த்து அவற்றின்கண் ணாசை யுடைய
[illegible] புருடார்த்த புத்தியினானே
[illegible] சத்தியமெனப் [illegible] சாந்தனுகவே யிருப்
வனுய் மனதை விவேகி கொடான், [illegible] கேவலம் சாந்தியானே துயில்ப
புசிக்கவு மாட்டான்; உயர்ந்தவன் போலுமிரான்; உபாதியின் சாந்தியின் உள்வாசனை மயக்
பண்; கெடவேமாட்டான். அறிஞனவன், கனுக் காண்போன்போல போலப்பாகிய விட
வனைப்போலச் சாந்தனுவது மில்லை, கனுக் காண்போன் ஜாக்கிரம் செய்யாமலிருப்பது
சத்தில் மூழ்கிப்போவதுமில்லை, மூட ஜனங்களின் செய்யவேண்டியதைச் தன்னிடத்திலின்றும்
யத்தில் அக்கியா யிருப்பதுமில்லை, செய்யவேண்டியதைச் செய்யாமலிருப்பதுமில்லை. தன்னிடத்திலின்றும்
மில்லை, கருமத்தின் கண்ணே மூழ்கிப்போவதுமில்லை. தன்னிடத்திலின்றும் விசனத்தை
விலகியவற்றை யுபேக்ஷித்துத் தன்பா லடைபவற்றை யனுபவித்து விசனத்தை
யும் சந்தோஷத்தையுமடையாமல், தன்னைவிட்டு நீங்கிய மகாலக்ஷ்மி கௌஸ்து
பாதி வஸ்துக்களை முன்போலடைய வேண்டி விரும்பாம லுபேக்ஷித்துக் கரை
கடந்து கலங்காமலும் இயற்கையாய கம்பீர விவகாரத்தை விடாமலும் பூர்ண
மாக விளங்கும் பாற்கடல் போலப் பூர்ணமாக விளங்குவன். இவ்வுலகத்தில்
மகாத்மாக்களாய்க் கெம்பீர மனமுடையவரா யிலங்குஞ் சீவன் முக்தர்கள்,
கூறியவகையே பூர்ணமாகி மனத்தினாலே இத்தேகத்திலே ஜீவப்பிரஹ்ம
ஐக்கிய வடிவ யோகத்தை யனுபவிப்பவர்களாய் விளையாடிக் கொண்டிருப்பார்
கள். தீரர்களா யிருக்கும் ஜீவன் முக்தர்கள் இச்சையுள்ள வரை நெடுங்காலம்
வசித்தபின் முடிவில் உபாதி யபாசங்களை விட்டு அபரிச்சின்னமாய விதேக
கைவல்லியத்தை யடைகிறார்கள். ஆபத்திலுங் குடும்பாதி வியாபாரத்திலும்
புத்திமானால் யாரியாவன், யாவனுக்குச் சமுசாரம் எனச் சமுசாரத்தை யகற்
றும் சிரவணாதி யனுஷ்டானத்தோடு கூடியவனுய்த் தானே முயல்வினாற் சிந்திக்
கத் தக்கதாம். அரசன், அவசியஞ் செய்யத்தக்கது அர்த்த சங்கடங்களிற் சமா
தானமா? யுத்தமா? என்பதாதியைச் சபலமாயேனும் நிஷ்பலமாயேனும் விசா
ரத்தினாலே நிச்சயிப்ப னல்லாமல் வேறொன்று லல்லவாம். தீபத்தினாலே இர
விற் பூமியிலுள்ள பதார்த்தங்களைக்கண்டு நிச்சயிப்பதே போலக் கருமகாண்ட
வேதங்களின், வேதாந்தங்களின் சித்தாந்த ஸ்திதிகளாகிய தர்மப் பிரஹ்ம
தத்துவ இலக்கண தாற்பரிய விசிராந்தி பூமிகள், புருடார்த்த நன்னிலைமை
யடைவிக்குங் காரணங்கள் என்பது விசாரத்தானேயாம். விசாரமாகிய அழகிய
நேத்திரமானது சரும நேத்திரமானது அந்தகாரத்தில் நஷ்டமடைவதே போல

அந்தகாரங்களில் நஷ்டமடையாமலும், அது மிகப் பிரகாசமய சூர்யாதிகளில் ஒளி மழுங்குவதேபோல ஒளி மழுங்காமலும் அது தடைப்பட்டுத் தூரத்திலிருக்கும் பொருளைக் கிரகிக்க முடியாததேபோல வல்லாமற் கிரகிக்கக் கூடியதாயும் விளங்கும். விசாரமில்லாத துன்மதி யுடையவன் பிறவிக் குருடன் என எல்லாராலும் சோகிக்கத் தக்கவ னாகின்றான். ஆன்மாவைப்போல விசாரத்தைப் பிரியமாயும் முக்கியமாயும் உடைய புருடன் திவ்விய நேத்திர முற்றவனா யெல்லாரினும் எல்லாவற்றினும் மேன்மையனாகிச் சர்வ ஆபத்துக்களையும் அகற்றிப் புருடார்த்தத்தை யடைகின்றான். விசாரங்களுட் சாரபூதத்தைக் கேட்பாயாக. பரமான்ம மயமாயும், பிரஹ்மானந்தத்தைச் சித்தி செய்வதன்கண் முக்கியமாயும், பூசிக்கத் தக்கதாயும், இருக்கும் ஆராய்ச்சி யாற்றலை ஒரு கணமேனும் பரித்தியாகஞ் செய்யவே கூடாது ; " அற்பமதேனும் பேதமதாற்றும் அவன் பயந்தன்னை யடைந்திடுவானே " என்னுஞ் சுருதியையும், " எக்கணமேனுமெம் முகூர்த்தமதேனும், முக்கண னொருவனை முன்னிலனாயின், அக்கணமானியதுபெருஞ் சித்திரம், அக்கணிலாமையா மதுவுமூ கதையுமாம்." என்னும் இலிங்க புராணத்தையும் ஈண்டுப் பிரமாணமாய்க் கண்டு கொள்ளல் வேண்டும். விசாரணையினா லழகுள்ள புருடன், ஆன்ம தத்துவத்தை யுணர்ந்தவர்களுள்ளும் மாங்கனிபோலப் பரிபக்குவப்பட்டு மாதுரிய அதிசயத்தோடுகூடி யுருசியுடையவனாவன் எனின் ? அறியவேண்டுமென் றவாவியவர்களுக்குள் ளுயர்ந்தவனெனச் சொல்லவேண்டுவ தென்னை ? விசாரத்தால் அழகிய மதியை யுடையவரும், விசாரத்தினாலே அனுபவ நெறியிற் செல்லு முணர்வுள்ளவரும், இலௌகிக நெறியிற் செல்லு முணர்வுள்ளவரும், ஆகிய நல்லோர் அநேகந் துக்கங்களாகிய படுகுழிகளில் அடிக்கடி விழுந்து புரளுவதே கிடையாது. விசாரமில்லாமையினாலே ஆன்மாவற்றவனைப் போன்றவனா யஞ்ஞனாகி யிருக்கும் மூடன் ஜன்ம பரம்பரைகளில் துக்கித்து அழுவதேபோல, நோயாளியும், விஷ சஸ்திரத்தா லடிபடன் முதலியவற்றானே நூற்றுக்கணக்கான அனர்த்தங்களால் மிகத் துளைக்கப்பட்ட காயமுடையவனுங்கூடத் துக்கப்பட் டழுவதில்லை. நரனுக்கவிசாரத்தன்மை யிருப்பதைக் காட்டினும், சேற்றிற் றவளையா யிருத்தலும், மலத்திற் கிடமாயிருத்தலும், இருட்டுக் குகையிற் கண்ணில்லாத பாம்பாயிருத்தலும், மிகமேன்மையாதாம். எல்லா அநர்த்தங்கட்குஞ் சொந்த வீடாயும், சகல சாதுக்களாலுந் தள்ளப்பட்டதாயும், சர்வகெட்ட நடத்தைகட்கும் நிலைமைகட்கும் எல்லையாயும், இருக்கும் அவிசாரத்தை யறிஞன்விட்டு விடவேண்டும். அவ்வாறே பிரசித்தமுமாம். மகான்மா வானவன் எப்போதும் விசாரத்தோடு கூடியவனாகவே யிருக்கவேண்டும். வீழ்ந்தவனைக் குருடாக்கும் இராகாதிகூபத்தில் வீழ்ந்தவர்கட் காதாரமா யிருப்பது விசாரமேயாம். சுயமாகத் தன்னாலே தன்னைப்பற்றி விசாரத்தால் தன்மனமாகின்ற மிருகத்தைச் சமுசாரமோக சமுத்திரத்தினின்றும், இராகாதிப் பிரவாகத்தா லிழுக்கப்பட்ட போதினும் வலுவால் நிலைபெறுத்திக் கரையேற்ற வேண்டும். விசார சொரூபமாவது யாதெனின்? யான் யாவன்? தேகாதிகளே யானா ? அல்லது, அதனினும் வேறாயவனா?

அற்றேற் சித்தமானது விசார ஜன்னிய ஞானத்தினலே நசிக்குமாயின் வாழ் தன் முடியாதாம்; நசியாதாயினே மீண்டும் விக்ஷேபங்களை யுண்டாக்கவே செய் யும் என்பதாக எங்ஙனங் கிருதகிருத்தியத் தன்மையாம் எனின்? வறுத்த விரை யானது விரைபோலிருந்த போதினும் அங்குரத்தை யாக்குவதி லாற்றலற்றதே போல அந்தப் பரமபதத்தை யடைந்த சித்தமும் சித்தம்போ லிருப்பினும் ஆகாசம்போ லதிவிஸ்தீர்ணமாய பிரஹ்மத் தன்மையை யடைந்த உள்விக்ஷேப விரைவாசனைச்சால முடையதாய் மதத்தாய் வாழ்தல் கெடுமாறு அநாதி வாசனை யால் அதிதிடமாய விஷய சமஸ்கார வசத்தால் விநாசமுமடையாது ; விக்ஷேபம் விளையுமாறு வறுத்த விரைபோல இராக த்வேஷாதி விருத்திகளோடுதயமுமா காது. அஃதெவ்வாறெனின்? உலகினுள்ள விஸ்தாரவிடயங்களைக் கேவலம் சாக்ஷியைப்போல மிக வுதாசினமாகப் பார்த்து அவற்றின்கண் ணாசை யுடைய வனாய் மனதை விவேகி கொடான், சத்தியமெனப் புருடார்த்த புத்தியினனே புசிக்கவு மாட்டான்; உயர்ந்தவன் போலுமிரான்; கேவலம் சாந்தனாகவே யிருப் பன்; கெடவேமாட்டான். அறிஞனானவன், உபாதியின் சாந்தியானே துயில்ப வனைப்போலச் சாந்தனுவது மில்லை, கனக் காண்போன்போல உள்வாசனை மயக் கத்தில் மூழ்கிப்போவதுமில்லை, மூட ஜனங்களின் ஜாக்கிரம் போலப்பாகிய விட யத்திற் றுக்கியா யிருப்பதுமில்லை, செய்யவேண்டியதைச் செய்யாமலிருப்பது மில்லை, கருமத்தின் கண்ணே மூழ்கிப்போவதுமில்லை. தன்னிடத்தினின்றும் விலகியவற்றை யுபேக்ஷித்துத் தன்பா லடைபவற்றை யனுபவித்து விசனத்தை யும் சந்தோஷத்தையுமடையாமல், தன்னைவிட்டு நீங்கிய மகாலக்ஷுமி கௌஸ்து பாதி வஸ்துக்களை முன்போலடைய வேண்டி விரும்பாம லுபேக்ஷித்துக் கரை கடந்து கலங்காமலும் இயற்கையாய கம்பீர விவகாரத்தை விடாமலும் பூர்ண மாக விளங்கும் பாற்கடல் போலப் பூர்ணமாக விளங்குவன். இவ்வுலகத்தில் மகாத்மாக்களாய்க் கெம்பீர மனமுடையவரா யிலங்குஞ் சீவன் முக்தர்கள், கூறியவகையே பூர்ணமாகி மனத்தினலே இத்தேகத்திலே ஜீவப்பிரஹ்ம ஐக்கிய வடிவ யோகத்தை யனுபவிப்பவர்களாய் விளையாடிக் கொண்டிருப்பார் கள். தீரர்களா யிருக்கும் ஜீவன் முக்தர்கள் இச்சையுள்ள வரை நெடுங்காலம் வசித்தபின் முடிவில் உபாதி யாபாசங்களை விட்டு அபரிச்சின்னமாய விதேக கைவல்லியத்தை யடைகிறார்கள். ஆபத்துவருங் குடும்பாதி வியாபாரத்தும் புத்திமானல் யானியாவன், யாவனுக்கிச் சமுசாரம் எனச் சமுசாரத்தை யகற் றும் சிரவணாதி யனுஷ்டானத்தோடு கூடியவனுய்த் தானே முயல்வினுற் சிந்திக் கத் தக்கதாம். அரசன், அவசியஞ் செய்யத்தக்கது அர்த்த சங்கடங்களிற் சமா தானமா? யுத்தமா? என்பதாதியைச் சபலமாயேனும் நிஷ்பலமாயேனும் விசா ரத்தினலே நிச்சயிப்ப னல்லாமல் வேறொன்று லல்லவாம். தீபத்தினலே இர விற் பூமியினுள்ள பதார்த்தங்களைக்கண்டு நிச்சயிப்பதே போலக் கருமகாண்ட வேதங்களின், வேதாந்தங்களின் சித்தாந்த ஸ்திதிகளாகிய தர்மப் பிரஹ்ம தத்துவ இலக்கண தாற்பரிய விசிராந்தி பூமிகள், புருடார்த்த நன்னிலைமையை யடைவிக்குங்காரணங்கள் என்பது விசாரத்தானேயாம். விசாரமாகிய அழகிய நேத்திரமானது சரும நேத்திரமானது அந்தகாரத்தில் நஷ்டமடைவதே போல

அந்தகாரங்களில் நஷ்டமடையாமலும், அது மிகப் பிரகாசமய சூர்யாதிகளில் ஒளி மழுங்குவதேபோல ஒளி மழுங்காமலும் அது தடைப்பட்டுத் தூரத்திலிருக்கும் பொருளைக் கிரகிக்க முடியாததேபோல வல்லாமற் கிரகிக்கக் கூடியதாயும் விளங்கும். விசாரமில்லாத துன்மதி யுடையவன் பிறவிக் குருடன் என எல்லாராலும் சோகிக்கத் தக்கவ னாகின்றான். ஆன்மாவைப்போல விசாரத்தைப் பிரியமாயும் முக்கியமாயும் உடைய புருடன் திவ்விய நேத்திர முற்றவனா யெல்லாரினும் எல்லாவற்றினும் மேன்மையனாகிச் சர்வ ஆபத்துக்களையும் அகற்றிப் புருடார்த்தத்தை யடைகின்றான். விசாரங்களுட் சாரபூதத்தைக் கேட்பாயாக. பரமான்ம மயமாயும், பிரஹ்மானந்தத்தைச் சித்தி செய்வதன்கண் முக்கியமாயும், பூசிக்கத் தக்கதாயும், இருக்கும் ஆராய்ச்சி யாற்றலை ஒரு க்ஷணமேனும் பரித்தியாகஞ் செய்யவே கூடாது; "அற்பமதேனும் பேதமதாற்றும் அவன் பயந்தன்னை யடைந்திடுவானே" என்னுஞ் சுருதியையும், "எக்கணமேனுமெம் முகூர்த்தமதேனும், முக்கண னொருவனை முன்னிலனாயின், அக்கணமானியதுபெருஞ் சித்திரம், அக்கணிலாமையா மதுவுமூ கதையுமாம்." என்னும் இலிங்க புராணத்தையும் ஈண்டுப் பிரமாணமாய்க் கண்டு கொள்ளல் வேண்டும். விசாரணையினா லழகுள்ள புருடன், ஆன்ம தத்துவத்தை யுணர்ந்தவர்களுள்ளும் மாங்கனிபோலப் பரிபக்குவப்பட்டு மாதுரிய அதிசயத்தோடுகூடி யுருசியுடையவனாவன் எனின்? அறியவேண்டுமென் றவாவியவர்களுக்குள் ளுயர்ந்தவனெனச் சொல்லவேண்டுவ தென்னை? விசாரத்தால் அழகிய மதியை யுடையவரும், விசாரத்தினாலே அனுபவ நெறியிற் செல்லு முணர்வுள்ளவரும், இலௌகிக நெறியிற் செல்லு முணர்வுள்ளவரும், ஆகிய நல்லோர் அநேகந் துக்கங்களாகிய படுகுழிகளில் அடிக்கடி விழுந்து புரளுவதே கிடையாது. விசாரமில்லாமையினாலே ஆன்மாவற்றவனைப் போன்றவனா யஞ்ஞனாகி யிருக்கும் மூடன் ஜன்ம பரம்பரைகளில் துக்கித்து அழுவதேபோல, நோயாளியும், விஷ சஸ்திரத்தா லடிபடன் முதலியவற்றானே நூற்றுக்கணக்கான அனர்த்தங்களால் மிகத் துளைக்கப்பட்ட காயமுடையவனுங்கூடத் துக்கப்பட் டழுவதில்லை. நரனுக் கவிசாரத்தன்மை யிருப்பதைக் காட்டினும், சேற்றிற் றவளையா யிருத்தலும், மலத்திற் கிடமாயிருத்தலும், இருட்டுக் குகையிற் கண்ணில்லாத பாம்பாயிருத்தலும், மிகமேன்மையாதாம். எல்லா அநர்த்தங்கட்குஞ் சொந்த வீடாயும், சகல சாதுக்களாலுந் தள்ளப்பட்டதாயும், சர்வகெட்ட நடத்தைகட்கும் நிலைமைகட்கும் எல்லையாயும், இருக்கும் அவிசாரத்தை யறிஞன்விட்டு விடவேண்டும். அவ்வாறே பிரசித்தமுமாம். மகான்மா வானவன் எப்போதும் விசாரத்தோடு கூடியவனாகவே யிருக்கவேண்டும். வீழ்ந்தவனைக் குருடாக்கும் இராகாதிகூபத்தில் வீழ்ந்தவர்கட் காதாரமா யிருப்பது விசாரமேயாம். சுயமாகத் தன்னாலே தன்னைப்பற்றி விசாரத்தால் தன்மனமாகின்ற மிருகத்தைச் சமுசாரமோக சமுத்திரத்தினின்றும், இராகாதிப் பிரவாகத்தா லிழுக்கப்பட்ட போதினும் வலுவால் நிலைபெறுத்திக் கரையேற்ற வேண்டும். விசார சொரூபமாவது யாதெனின்? யான் யாவன்? தேகாதிகளே யானா? அல்லது, அதனினும் வேறாயவனா?

என்பது துவம்பதார்த்த விசாரமாம். இத்தோஷ ரூப சமுசாரம் எவ்வேதுவினு லே அதிஷ்டானத்தில் வந்துற்றது? என்பது தற்பத விசாரமாம். இவ்வண் ணம் சுருதி முனி ஆசார்ய சம்பிரதாய முறையிற் காட்டியபடியாய நியாயத் தான் ஆராய்ச்சி செய்வதே விசாரமெனப்படும். துன்மதியினுனே விசாரமில் லாம லிருப்பவனது இருதயமுமுள்ளவயவமும் சிலையாற் செய்யப்பட்டதுபோல இருத்தலின், குருடினுங் குருடாய் மோகத்தாலே மிகக் கனமாக விருக்கின் றன; ஆகையால் கேவலம் பெருந்துயரம் பீடையின் பொருட்டே யாகின்றது. (உளி கொண்டு செதுக்குதன் முதலிய கஷ்ட சாத்தியத் தன்மையானே துஷ் டத் தனத்திற்குந் துளைத்தற்குமேபோலும் தாதாவா லாக்கப்பட்டதாம். பிற விடத்தத னுபயோகமின்றும், ஒப்புமையிலாப முன்போன்றே யுணர்க. கண் ணிலாததைப் பார்க்கினும் குருடும், மோகத்தான் மிக நெருங்கிக் கெட்டியுமாத லின், அந்தகனே பாராமற் கூபத்தில்விழுவன்; மனமோ பார்த்தும் மோகத்தால் நரகங்களிலும் விழுகின்றது, சிலையிருதய பக்கத்தில் குருடினுங் குருடு, ஜடத் தன்மையால்,மோகத்தானும் மிகக்கனம் கடோரத் தன்மையாலென்று கொள்க. எத்துன்மதி விசார மற்றவனே அவனுடைய இருதயம் சிலையின் சம்பந்தத் தானே செய்யப்பட்டதாகும்). சத்திய வஸ்துவைக் கொள்ளல் அசத்திய வஸ்து வைத்தள்ளல் என்பவற்றைப் பார்க்கப்பட்டவர்கட் கிவ்வுலக விவகாரத்தில் நன் ரூன தத்துவ விசாரமில்லாமல் ஒன்றுமறியவே முடியாதாம். விசாரத்தினுலே நித்திய தத்துவம் அறியப்படுகின்றது; தத்துவ ஞானத்தினுல் மனே நிச்சலத் தன்மை வடிவ விசிராந்தியானது ஆன்மாவின் கண்ணே கிடைக்கும்; விசிராந்தி யினுனே மனத்தின் கண்ணே சாந்தத்தன்மையாம், இதுவே சர்வதுக்கங்களை யும் நீக்குவதாம். விரித்ததைச் சுருக்கிக்கூறுங்கால், உலகிலிரா நின்ற யாவர் களும், வெளியான விசார திருஷ்டியினுனே இலௌகிக வைதிக கருமங்களைப் பயனுடையனவாகச் செய்கின்றுர்கள். இனிக்கூறும் ஆன்ம தத்துவத்தினுடைய உத்தமோத்தமமாகிய ஏழாம் பூமியின் மேன்மையையும் விளக்கத்தையும் அடைவர்கள். ஆகையாற் சமாதிசாதன சம்பத்தோடுகூடிய வுனக்கும் அத் தகைய விசாரத்தின் கண்ணே விசேஷப் பிரீதியுண்டாகுக.

14-வது விசார நிருபணம் முற்றும்.

## 15-வது சந்தோஷ நிருபணம்.

இப்போது, வைராக்கியமாகிய கற்பக விருக்ஷத்தின் நிழலைப்போன்று சுக மாயுஞ் சீதளமாயு மிருக்கும் மூன்றுவது துவாரபாலனுய சந்தோஷம் வருணிக் கப்படும். முறையே வந்த மூன்றுவது துவாரபாலனுகிய சந்தோஷத்தை ஸ்ரீ வசிஷ்டர் வருணிக்கத் தொடங்கல்:—ஹே சத்ருஜய இராகவ! சந்தோஷமே பரம மோக்ஷமென்றும் சுகமென்றும் மற்றைய இனியவையுமென்றுங் கூறப் படும், இதனிலக்கணம் இனிக் கூறப்படும். (ஆயுள் நெய்யென்பதுபோலச் சாத னத்திற் பலத்தின் அபேத ஆரோபத்தாற் புகழ்ந்ததாம்). மிகவும் மேன்மை யான அத்தியந்த துக்க விக்ஷேப நீக்கமாகிய விசிராந்தியை நன்றுகச் சந்துஷ்

டன் அடைவன். சந்தோஷ வடிவ ஐசுவரியத்தின் மகிமையானே சுகிகளாய் நெடுங்காலம் விசிராந்தியை யடைந்த மனமுள்ளவர்களாகிய சாந்தர்கட்குச் சாம்ராஜ்ய சுகமும் பழுதுபட்ட திருணத்தின் லேசம்போலத் துச்சமாகத் தோற்றும். தரித்திரம் நஷ்டம் சாவு முதலிய விஷமங்களோடு கூடிய சமுசார ஸ்திதிகள் தெய்வத்தால் வந்துற்ற போதினும், சந்தோஷமுடைய மதியானது யாதொரு அச்சத்தையுமடையாமல் ஒருகாலும் சுகத்தை விடுவதேயில்லை. சந்தோஷ அமிருத பானத்தால் சந்ததந் திருப்தியை யடைந்த சாந்தர்களுக்கு ஒப்பிலாப் போக ஐசுவரியங்களும் பிரதிகூல விஷம்போன்றாய் விடுகின்றன. ஆசை தைனிய முதலிய தோஷங்களை நாசஞ்செய்யும் சந்தோஷமானது அதிமதுர ஆனந்த மிருதியை யனுபவிக்குமாறு செய்வதேபோல அமிருத ரச அலைகள் சுகத்தைச் செய்வியாவாம். சந்தோஷமுடையவனைக் கூறலானே சந்தோஷ இலக்கணத்தையும் தெரிந்துகொள்ளலாம்; விஷய மடைவுற்றபோதினும் பொய்யாதலின் அடையாததேபோன்றமையையும், அதனடைவா லுளதாய மகிழ்ச்சி முதலியனவை யின்மையினானே முன்னவஸ்தை போன்றமையையும், அடையாததில் ஆசையற்று அடைந்ததே போன்றமைபையும், அடைந்தவனுய்ச் சுக துக்கங்களற்றவன் ஈண்டுச் சந்துஷ்டனெனப் படுகின்றான். மனமானது, தானாகவே யாதொரு நிமித்தமுமில்லாமல் வேறொரு விடயத்தினு மல்லாமல் ஆன்மாவின் கண்ணே சந்தோஷம் அடையாதவரை பள்ளத்தினின்றுங் கொடிகளுண்டாவனபோல அம்மனத்தினின்றும் ஆபத்துக்கள் உற்பத்தியாய்க்கொண்டே யிருக்கின்றன. சந்தோஷத்தினுற் சீதளமாய மனது பரிசுத்தமாய விஞ்ஞான திருஷ்டிகளினானே அத்தியந்தம், தாகத்தைத் தணிக்குஞ் சலத்தினாலே சீதளமாய் வளர்க்கப்பட்ட தாமரை மலர் சூரிய கிரணத்தால் அத்தியந்தம் விரிவதேபோல விரிந்து விளங்கும். ஆசையின் பரவசமாகி அதனால் வியாகுலமுற்றுச் சந்தோஷமற்றிருக்கும் மனத்தில் ஞானத்தை யுபதேசித்தபோதினும் அழுக்கு நிறைந்த கண்ணாடியில் ஆனனம்போல் வெளிப்படத் தோன்றாதாம். எந்நர அம்புயமலரின் விரிவின்பொருட்டு நித்தியம் முன்மொழிந்த சந்தோஷச்சூரியன் உதயமாயதோ, அந்நர அம்புயமலர் அஞ்ஞானவடிவக் கொடிய அந்தகார இரவினும் சுருங்குதலை யடைவதில்லை. எவனுடைய மனது தேவபீடையையும் காமாதியையும் அடையாமல் விடுபட்டுச் சந்தோஷத்தை யடைந்திருக்கின்றதோ அவன் யதொன்றுமில்லாதவனா யிருந்தபோதினும் சாம்ராஜ்ய சுகத்தை யனுபவிப்பன். முன் மொழிந்த இலக்கண அனுவாத பூர்வகமாக வேறிலக்கணத்தையும் கேட்பாயாக. கிடையாத பொருளை யவாவாமலும், முறையே கிடைத்த சுகத்தையும் துக்கத்தையும் அனுபவித்துக்கொண்டும், உலகத்திற் கின்பந்தரும் நல்லொழுக்கத்தில் நடந்துகொண்டு மிருப்பவனே சந்துஷ்டனெனக் கூறப்பெறுகின்றான். முகத்தின் காந்தி விசேஷமும் அவன திலக்கணமாம், மகானாயும், பூர்ண மனதுடையவனாயும், சந்தோஷத்தா லெப்பொழுதும் மிகத் திருத்தியை யுடையவனாயும், இருப்பவனது முகத்தில் ஸ்ரீ இலக்குமிதேவி யானவள் மிகத் தூய்தாய பாற்கடலின்மேல் விளங்கிக்கொண்டிருப்பதேபோல் விளங்கிக்கொண்டிருப்பள். அதிகாரியானவன் தன்னிடத்திற் றன்னானே நிரதிசயானந்த

ரூப நிலைமையை நன்று யனுபவத்தா லடைந்து முயற்சியினலே எல்லாவற்றினு மிருக்கும் ஆசையையுந் தியாகிக்க வேண்டும். சந்திரன்போற் சந்தோஷவடிவ அமிருதத்தானே பூர்ணமாய புருடனுடைய, கோப சந்தாப காரணமில்லாமை யானே சாந்த சீதளமா யிருக்கும் புத்தியின் நிமித்தத்தான் மனமானது சாசு வதமாய நிலைமையை யடையும். விடப சம்பாதனமில்லாமலே கேவலஞ் சந் தோஷ மாத்திரத்தால் எங்ஙனம் தேகவாழ்க்கை சித்திக்குமெனின்? தாசர்க ளாகிய சேவகர்கள் அரசனைக் காத்திருப்பதேபோலச் சந்தோஷத்தால் நிறைந்த மனமுடையவனை மகா சம்பத்துக்களியாவும் காத்துக்கொண் டிருக்கின்றன; "ஆசைக் கடிமையே யகிலலோகத் தடிமை, ஆசை யடிமையார்க் ககிலலோகமு மடிமை" எனவுங் கூறுவர். இவ்வண்ணம் வேண்டுமானுற் றேகவாழ்க்கை யாகுக, ஆயினும், தேவர்கட்கேபோலும் மானச துக்கம் நீக்க வெளிதின் முடி யாததாமெனின்? தன்னிடத்திற் றன்னலே நன்னிலைமையை யுற்றுச் சந்தோ ஷத்தோடுகூடி யிருக்கும்போது புருடனிடத்தில் மழைகாலத்திற் றூளிகள் போலச் சகல மனோ துக்கங்களும் சாந்தியடைந்து விடுகின்றன. ஆயினும் கார ணக் களங்க ஆவரணமாகிய துக்க பீஜத்தினலே யுண்டாந் துக்கம் ஆமே யெனின்? அமாவாசியில் க்ஷீணமாகிய சந்திரன் களங்கத்தினும் வேறுக விளங்காமையினலே களங்கத்தில் மூழ்கினவன்போற் காணப் படுகின்றான். சூரியன் முன்னிலையானும் சீதளமாய தனது விருத்தியோடும் விளங்குவ தில்லை; அச்சந்திரனே பௌர்ணமாசியில் கலைகள் நிறைந்தவுடனே களங்கத் தையு மொளிர்விக்கின்னறன்; அக்களங்கமின்றிய சுத்த விருத்தியோடு மிலங்கு கின்றனன்; அதுபோலப் புருடனும் சந்தோஷமற்றபோது மோக களங்கத்தில் மூழ்கினவன்போலும் தாபத்திரயத்தாற் றபிக்கப்பட்டவனே போலும் ஆகின் றான், சந்தோஷ அமிருத கலைகளால் நிறைந்த பின்னரோ அஞ்ஞானமாகிய களங்கத்திற்குச் சாக்ஷியாயிருத்தலின் அது தீண்டாமையின் தன்னுன்ம சுக சீதளமான விருத்தியினனே விளங்கிக்கொண் டிருப்பன். உலகினுள்ளோர் சந் தோஷத்தாற் சகலரிடத்திலும் விஷம புத்தியில்லாத சமத்தகைமையால் அழகு நிறைந்த புருடனுடைய முகத்தைத்தரிசித்து எங்ஙனமானந்த மடைகின்றனரோ அங்ஙனஞ் சர்வ தன சம்பத்துக்களாலும் அடைவதில்லை. சந்தோஷமுடைய வனே யாவரினும் மேன்மையனுவன். இவ்வுலகத்தில் குணசாலிகட் கிஷ்டமான சந்தோஷத்தாற் சகலரிடத்திலும் சமமான புத்தி செய்வதால் இனிமையாக அலங்கரிக்கப்பட்டவனுய் மகா பரிசுத்தனு யிருக்கும் புருட ராஜாவைத் தேவ தைகளும் மகா முனிவர்களும் நமஸ்கரிக்கின்றனர்.

15-வது சந்தோஷ நிருபணம் முற்றிற்று.

## 16-வது சாதுசங்க நிருபணம்.

இப்போது சாதுசங்கமாகிய நான்காவது துவாரபாலனுடை மகிமையும், அந்நால்வர் தமில் ஒவ்வொருவர் நேயம் பெறினும் புருஷார்த்தபலங் கிடைத் தலும் வருணிக்கப்படும். நான்காவதாய துவாரபாலனுகிய சாதுசங்கத்தை

வருணிப்பதோடும் நால்வருள் ஒவ்வொருவர் நேயம் பெற முயலுதலும் புருடார்த்த பரியந்தமாமெனக்காட்ட வேட்கையுடைய ஸ்ரீ வசிஷ்டர் கூறல்:—ஹே மகாமதியையுடைய குழந்தாய்! நரர்கட்குச் சமுசாரத்தைத் தாண்டுவதிலீண்டுச் சாதுக்களின் உத்தமமான சமாகமமானது சகல அவஸ்தைகளினும் விசேடமாக வுபகரிக்கின்றது. எம்மகான்மாக்கள், சாதுசங்கத்தருவி னின்றும் உண்டாய விவேகமாகிய வெண்மலரைக் காக்கின்றார்களோ அவர்கள் மோக்ஷ பலசம்பத்தை யனுபவிக்கத்தக்கவர்க ளாகின்றார்கள். அறிஞர்களாகிய சாதுசங்கருங் கிடைப்பின் மைந்தராதி பந்துக்கள் தனுதிகள் இல்லாமல் மகாதுயரந்தரு மிடமும் அவற்றால் நிறைவுறுகின்றது. மரணமு முற்சவமங்கலமாகின்றது; ஆபத்துக்களும் சம்பத்துப்போல் விளங்குகின்றது. இவ்வுலகின்கண்ணே முக்கியமாயும் பிரசித்தமாயும் சர்வோத்தமமாயு மிருக்குஞ் சாதுசமாகமமே, ஆபத்தாகின்ற தாமரைத் தடாகத்திற்குப் பனியாயும், மோகமாகியபனிக்கு மாருதமாயுமிருக்கின்றது. சாது சமாகமமானது, விவேக ஞானத்தை விசேடமாக விருத்தி செய்வதாம். அஞ்ஞானமாகிய மரத்தை அடியோடு மாய்க்குங் காரணமாம், மனோ அக்கங்களை அதிதூரத்திற்றள்ளி விடுவதாம், என அறிக. மனோகரமாயும் நிருமலமாயும் முக்கியமாயு மிருக்கும் விவேகமாகிய விளக்கானது சாதுசங்கத்தாற் சலம் விடலாற் புஷ்ப பலக் கொத்துண்டாவதேபோல நன்றாக வுண்டாதல் திண்ணமாம். சாதுசங்கங்களாகிய விபூதிகள், கெடாதனவாம், பாதிக்கப்படாதனவாம், தினந்தினம் விருத்தியடைவனவாம், பரிச்சின்னப்படாதனவாம், உத்தமோத்தமமாகிய பூர்ணசுகத்தைத் தருவனவாம். மகாகஷ்டதசையை யடைந்து அன்புறுபவர்களாலும், முற்றினும் பரவசமானவர்களாலுங் கூடச் சாதுசங்கம் நொடிப்பொழுதேனும் விடத்தக்கதன்றாம். இவ்வுலகின்கண்ணே சாதுசங்கம் அஞ்ஞானமாகிய இரவுள்ளவரை, பெரியோரது நன்னடத்தையைப் பிரகாசிப்பிக்குந் தீபமாகி, இரவு நீங்கியபின்ன ரிருதய இருட்டை யகற்றி ஞான ரூப சூரிய கிரணமா யிருக்கின்றது; எவன் தாபத்தை நீக்குவதாற் குளிர்ச்சியாயும், அழுக்கை யகற்றலால் வெண்மையாயும், இருக்கும் சாது சங்கம மாகிய ஸ்ரீ கங்கையின்கண்ணே மூழ்கினானோ அவனுக்குத் தானங்களாலும், தீர்த்தங்களாலும், தவங்களாலும், யாகங்களாலும், ஆகவேண்டியதென்னை? ஹே அனகனே! ஆசையற்றவர்களாய், ஐயமற்றவர்களாய், அந்தக்கரண வதன்றன்மங்கட்கு ஆன்மாவுடன் தாதாத்மிய சம்சர்க்காத்தியாச லக்ஷண சிற்சட முடிச்சு அவிழ்ந்தவரும், ஆகி விளங்கும் சாதுக்கள் கிடைத்து விடுவாராயின் தவந்தீர்த்த முதலியவற்றைத் தேடுவதா லாகவேண்டியதென்னே. பிரஹ்மத்திலிளைப்பாறிய மனத்தோடுகூடித் தன்னியர்களாகிய சாதுக்கள் முக்கிய முயற்சியினாலே, தரித்திரனால் அடையாதன அடைந்தனவாக நவரத்தினங்கள் பார்க்கப்படுதல்போலப் பார்க்கப்படவேண்டும். புத்திமான்களுடைய மதியானது சாதுசமாகம சௌந்தரியங்களோடு கூடியதாய்த் தேவமங்கையரின்றிருக் கூட்டத்திற் சற்புருடராகிய ஸ்ரீ மகா விஷ்ணுவோடுகூடிச் சர்வ உத்கிருஷ்ட சௌந்தர்யமுடைய ஸ்ரீ இலக்குமிதேவியானவள் விளங்குவதேபோல எப்போதும் விளங்கிக்கொண்டேயிருக்கும். இவ்விரண்டும் மகத்தாஞ் சகோதரிகளாகிய தேவாங்கனைகட்கும்

கிடையா. நின்மல விசாரத்தினலே யடையத்தக்கதாய்ச் சிரோமணிபோன்ற பிரஹ்மான்ம வஸ்துவை யடைய விரும்பி முயலும் அநேகம் புருடர்களுக்குள் முதலில்அதனடைவினனே சிரோபூஷணமா யஃதாயதென யாவனற் பிரசித்தப் படுத்தப்பட்டதோ அந்தத் தன்னியனற்சாதுசங்கம்விடப்படவேயில்லை. அகத்தி லுள்ளசித்தசத்துப்பிராந்திமுடிச்சுகளையறுத்தவர்களாயும்,பிரஹ்மசொரூபத்தை யறிந்தவர்களாயும், பவசாகரத்தைத் தாண்டச் சகாயஞ்செய்பவர்களாயும், யாவ ராலும் போற்றத் தக்கவர்களாயும், பிரசித்தர்களாயு மிருக்கும் சாதுக்கள் முமு க்ஷுக்களால் தானத்தாலும் பகுமானத்தாலும் சேவைகளாலும் மற்றுமுள்ள எல்லா வுபாயங்களாலும் நன்ருகச் சேவிக்கத்தக்கவர்க ளாவர்கள். நரக வடிவ அக்கினியை யணைப்பதற்கு மேகங்கள்போன்ற சாதுக்களை எம்மூடர்கள் அநா தரவோடும் காண்கின்றார்களோ அவர்கள் நரக அக்கினிகட்கு நன்ருக வுலர்ந்த கட்டைக ளாகின்றார்கள். எம்மூடர்கள் சாதுக்களை அநாதரவோடு கூடியேனுங் காண்பதே யில்லையோ அம்மூடர்கள் நரகாக்கினிகளை வளர்த்தும் இனிது காய் ந்த விந்தனங்களாக விருக்கின்றார்கள். தரித்திரம், மரணம், துக்கம், என்பன வாதி விடய மயக்கத்தைத்தரும் சந்நிபாத ரோகமானது, சாது சமாகமமாகிய மகா மருந்தால் வேரோடும் நன்ருகச் சாந்தியாகின்றது. சர்வ துவாரபாலரை யும் ஒருமித்துத் துதிக்க விழைந்து அநுவதித்தல்:—சந்தோஷம்,சாது சங்கம், விசாரம், சமம், என்னுமிவைகளே நரர்கட்குச் சமுசார சாகரங் கடப்பதற்குப் பெரிய வுபாயங்களாம். சந்தோஷமானது பரமலாபத்தைத் தருவதாம், சாது சங்கமானது பரமகதியைத் தருவதாம், விசாரமானது பரமஞானத்தைத் தருவ தாம், சமமோ பரமசுகத்தைத் தருவதாம், எல்லாவிடங்களிலும் பலத்தின் அபேத ஆரோபமாம். சமுசார துக்கத்தைத் துடைப்பதற்கு உபாயங்களான இந்நான்கு நின்மலப் பொருள்களையும் பயின்ற அதிகாரிகள் மோகநீர் நிறைந்த சமுசார சாகரத்தைக் கடந்தவர்களே யாவார்கள். யாவற்றையும் அப்யசிக்க முடியாவிடினும், ஒன்றையேனு மப்யசிக்கலாம்; அவற்றுள் விமலமாகிய ஞான காரணமான ஒன்றைப் பயின்றபோதினும்,ஹே மதிமான்கட்குள் ளுயர்ந்தோய்! நான்கையும் பயின்றதாகவே முடியும். ஒவ்வொன்றும் மற்றவை பிறத்தற்கு இடமா யிருத்தலின் ஈண்டுச் சகலமுஞ் சித்தித்தற்பொருட்டு மிகுந்த முயல்வி ஞனே ஒன்றையேனும் பற்றி யிருக்க வேண்டும். சாந்தியினல் விக்ஷேபமில் லாமற் றெளிந்திருக்கும் புருடரிடத்தில் சாது சமாகமம், சந்தோஷம், விசார மென்பன, அலைகளின்றித் தெளிந்த கடலின்கண்ணே, மிகப் பாரம் நிறைந்த பெரு மரக்கலங்கள் மகர முதலியவற்றாற் கெடுபடாமன் மிகவுஞ் சாக்கிரதை யாய்க் கப்பல் வியாபாரிகளால் நடத்தப்படுவனபோல, புண்ணியப் பெரும் பாரங் களைத் தாங்கும் பெரும் மரக்கலங்களாய் நெடுங்காலம் மிகவும் சாவதானமா யிராகாதி தோஷங்களாற் கெடுக்கப்படாமல் நடத்தப்படுகின்றன. விசாரஞ் சந் தோஷஞ் சமஞ் சாதுசமாகமம் என்பவை நிறைந்த புருஷனிடத்தில்,கற்பக விரு க்ஷத்தை யாசிரயித்தவன்பாற்போல, ஞான சம்பத்துக்களும் இலெளகிக சம்பத் துக்களும் நிகழ்ந்துகொண்டே யிருக்கின்றன. விசார சமசத்சங்க சந்தோஷ முடையமானவன்பால், நிறைமதி யிடத்திற் சௌந்தரியாதிக ளுதிப்பனபோல்

தெளிவு முதலிய குணங்க ளுண்டாகின்றன. சற்சங்க சமசந்தோஷ விசார முடைய சன்மதியின்பால் ஜய இலக்ஷுமிகள், எப்போதும் விசாரப்பொருட்டு மந்திரிகளை யங்கீகரித்து ஆலோசித்த பொருள்களை இரகசியமாக வைக்கும் அரசனிடத்தில விளங்குவதுபோல விளங்குவார்கள். ஆகலின் முமுக்ஷுவான வன் மிகுந்த முயல்வினலே மனதை வெற்றிகொண்டு இந்நான்கு குணங்களுள் ஒன்றையேனும் தினந்தினம் பயின்று கவரவேண்டும். அதிகாரியானவன் மிகுந்த முயல்வினலே சித்தமாகிய மத்தயானையை வெற்றி புரிந்து இருதயத் தில் ஒரு குணத்தையேனுங் கவராத வரையில் உத்தமமான் கதியை யடைவதே யில்லை. மிகுந்த முயல்வினனே பற்களோடு பற்களைக் கடித்துப் பொடித்தே னும் கூறிய குணசம்பாதனத்தில் உனது மனது மிகுந்த ஆக்ரகத்தை யடைய வேண்டும். சத்துவ குணம் நிறைந்த தேவர் முதலிய பிறப்புக்களைக் குறித்து முயல வேண்டும், அவற்றில் குணத்தைச் சம்பாதிக்கும் இளைப்பில்லாமலே ஞானமான துண்டாகி விடுமெனின் ? ஹே மகா பாகுவே ! தேவனுனலும், இபக்கனுனலும், மனுடனுனலும், மாமானுலும், குணங்களைச் சம்பாதியாத வரை யீண்டு மோக்ஷமுற வேருே ருபாயமுங் கிடையவே கிடையாது. பலத் தைக் கொடுக்கும் ஒரு குணத்தையாவது அப்யாசத்தாற் றிடமாக்கின் தோஷ பரவசமாய எல்லாக் குணங்களும், குண பரவசமாய சித்தத்தின் எல்லாத் தோ டங்களும் விரைவில் நாசமடைகின்றன. பரஸ்பர விரோதிகளுக்குள் ளொன்று மிக விருத்தியடையின் அதன் சமஜாதியிலிருக்குங் குணக் குலங்கள் விருத்தி யடைவதால் மற்றென்றற்கு நாசம் வருவது வெளிப்படையேயாம் ; குணமா னது விருத்தியடையுமாயின் தோஷங்களை வெற்றி கொள்ளும் குணங்களே வளரும்; தோடம் விருத்தியடையுமாயின் குணங்களைக் கெடுக்குந் தோடங்களே வளரும். இப்பிராணிகளின் மனமாகிய மோக வனத்தில் வேகமுள்ளதாயும் சுப அசுபமெனப் பெயரிய பெரிய இரு பிரவாகங்களோடு கூடியதாயும் இலங் கும் வாசனையாறுனது தினந்தினம் ஒடுகின்றது. அந்நதியானது, தனது முயல் வினலே ஒரு பிரவாகத்தைத் தடைசெய்து மற்றொரு பிரவாகத்திற் செலுத் தின் அதே பிரவாகத்திற் சென்றுகொண் டிருக்கும். ஆகையால் உனக்கெவ் வண்ண மிச்சையோ அவ்வண்ணம் செய்வாயாக. ஹே வரமதிமானே ! மன மாகிய வனத்திற் பிரவாகிக்கின்ற தன் வாசனையாகிய மகாநதியை அதிதிடமான முயற்சியினலே சுபவாசனைப் பிரவாகத்தோடு செல்லுமாறு முறையாகச் செய் யின் ஆச்சரியப்படும்படி, அசுபவாசனைப் பிரவாகத்தா லற்பமு மிழுக்கப்பட மாட்டாய்.

16 - வது சாதுசங்க நிருபணம் முற்றும்.



## 17 - வது கிரந்த சங்கையாதி வருணனம்.

இப்போது இந்நூலின் எண்ணிக்கையும் பேதமும், பின்னப் பிரகரண முறைப்படி பிரிவாக வருணிக்கும் பொருளும் குணங்களும் வருணிக்கப்படும். இவ்வண்ணம் சாதனங்களை இனிது வர்ணித்து, அவற்றை யுடையவனுக்குப்

பிரகிருத இக்கிரந்த சிரவணாதிகளாற் புருடார்த்த சித்தியைக் காண்பித்துக்கிரந்தப் பிரவிருத்திக் கிரமத்தைப் பிரகரணாதி விபாகத்தால் ஸ்ரீ வசிஷ்டர் வருணிக்கத் தொடங்கல்:—ஹே இராகவ! இவ்வுலகத்தில் யாவன் மனதிற் கூறிய பிரகாரம் விவேகத்தோடும் விசாராதிகுண சம்பத்தோடுங் கூடியுள்ளானோ அம்மகான் ஞானவாக்கியங்களைச் சிரவணஞ் செய்தற்கு, அரசன் நீதி சாஸ்திரத்தைக் கேட்பதற்கு யோக்கியனாதல்போல யோக்கியனாகின்றான். மூர்க்கர்களின் சங்கத்தைவிட்டு மகாமதியனாய் நிர்மலனா யிருப்பவன் நிர்த்தோஷமாய்ப் பிரகாசிக்கின்ற சரற்கால சந்திரனுக்கு மேக ஜல சம்பந்தமில்லாத ஆகாசம்போல நிர்த்தோஷமாய்ப் பிரகாசிக்கும் விசாரத்திற்கு யோக்கியனாகின்றான். ஹே இராமச்சந்திர! கூறிய குணசம்பத்தெனக்கின்றென்று நினைக்கவேண்டாம், நீ இவ்வகண்டிதமான குண இலக்ஷுமியோடு கூடி விளங்குகின்றனை, இனிக்கூறப்படுவதாகிய மனத்தின் மோகத்தைக் கெடுக்கும் இவ்வாக்கியத்தைக் கேட்பாயாக. எவனுக்குப் பழபாரத்தாற் புண்ணிய கற்பகவிருக்ஷமானது வணங்கி யிருக்கின்றதோ அவனுக்கு மோக்ஷமடையும் பொருட்டு இவ்வாக்கிய சிரவணத்தில் முயற்சியான துண்டாகும். கூறிய சாந்தியாதி குணங்களின்றிய மூடன் அதிகாரியல்லன்; முன் மொழிந்த குண சம்பத்துள்ளவன் மோக்ஷ சம்பத்தையடைவதற்காகப் பரிசுத்தமாயுங் கம்பீரமாயும் உதாரமாயும் பரஞானத்தை முக்கியமாகக் கொடுப்பதாயுமிருக்கும் ஞான வாக்கிய சிரவணத்திற்குப் பாத்திரமாகின்றான், அதமனல்லன். மோக்ஷோபாய மெனப் பெயரியதுஞ் சாரமான அருத்தங்களால் நிறைந்ததும், சாரபூதமாய உபநிடதங்களோடு சமமாயதும், முப்பத்திராயிரங் கிரந்த வடிவினதும் ஆகிய இஞ்ஞான சம்மிதை நன்றாய்த் தன்னை யுணர்ந்தவனுக்கு மோக்ஷத்தைக் கொடுப்பதாம். நித்திரையில்லாது விழித்திருப்பவனுக்கு எதிரே தீபம் பிரகாசித்துக் கொண்டிருப்பின் இச்சியாதபோதினும் ஆலோகமானது பதார்த்த தரிசனத்தை யெப்படி நன்றாய்ச் செய்விக்கின்றதோ அப்படிச் சிரவணித்த இதனானே மோக்ஷ சாதன பூதமாய ஞான மிச்சையின்றியவனுக்குங் கிடைக்கும். ஸ்ரீ கங்கையானது சுழல்கைக்குக் காரணமாய பாபதாப உப சாந்தியினானே முக்கிய சௌக்கியத்தை யுடனே கொடுப்பதேபோல, இந்நூலும், முமுக்ஷுவாற் சுயமே பார்த்து நன்றாகப் பயின்று அறியப்பெறினும், அன்னியர் கூறக்கேட்கப் பெறினும், பிராந்தியைச் சாந்திசெய்து முக்கியமாகிய பிரஹ்மானந்தத்தையே கொடுக்கின்றது. இரச்சுவில் உண்டான சர்ப்பப் பிராந்தியானது இரஜ்ஜு தத்துவத்தைத் தரிசித்தலால் விநாசமாமாறு இந்நூலின் சிரவணத்தாற் சமுசார துக்கித்தன்மை சாந்தியடையும். விற்பத்தியை யுணர்வின்கண் ணுண்டாக்கத் தக்க தர்க்கங்களோடு கூடிப் பொருத்தமான அருத்தங்க ணிறையப்பெற்ற வாக்கியங்களை யுடையதும், அவ்வகையான மேன்மை தங்கிய திருஷ்டாந்தங்க ணிறையப்பெற்றதும், அவ்வாறான ஆக்கியாயிகைகளா லலங்கரிக்கப்பெற்றதும், ஆகிய ஆறு பிரகரணங்கள் தனித்தனியாக இந்நூலின்கண் ணிலங்கு கின்றனவாம். அவைகளின் பெயரை முறையே விரிக்கின், முதலில் வைராக்கியப் பிரகரணமென்பதினி தியம்பப்பட்டுளது. நிர்ஜலப் பிரதேசத்திலுங்கூட நீர்விடலானே விருக்ஷம்

வளர்வதேபோலக் கூறியபிரகரணத்தால் வளரும், அதில் அநுபந்தத்தோடு தெளிவாகக் கால தத்துவ நிரூபணமுஞ் செய்யப்பட்டுளது; அது ஆயிரத்தைந்நூறு கிரந்தமுடைத்து. அதை நன்றாக விசாரிக்கின் விஷயதோஷ நல்லுணர்வால், நன்றாகத் துலக்கிய மணியின்கண்ணே யழுக்ககல்வதேபோல இருதயத்தில் மலினத் தன்மையினீக்க முண்டாகின்றது. அதன் பின்னர் ஆயிரங் கிரந்தத்தின் சுலோக எண்ணிக்கையோடு கூடியதா யனுகூல யுக்திகளா லழகு பெற்றிலங்கும் முமுக்ஷு விவகாரமெனப் பெயரிய பிரகரணம் செய்யப்பட்டது. அதில் மோக்ஷ இச்சையுடையவர்கட்குத் தங்களுடைய அதிகார நிர்வாகஞ் செய்யும் சாதனக் கூட்டம் வருணிக்கப்பட்டுளது. அதன் பின்புற்பத்திப் பிரகரணம் திருஷ்டாந்தங்களாலுங் கதைகளாலும் நிறைக்கப்பட்டுளது ; அது ஏழாயிரங் கிரந்தமுடைத்து; விஞ்ஞானத்தை நன்றாக விளம்புவதாம் ; இவ்வுலக சம்பந்தமான பிரத்தியக்காத்மா வாகிய நானென்னும் கடாதி இது வென்னும் வடிவமாங் காண்போன் காட்சிப்பேத விசித்திர சம்பத்து உண்மையாக உண்டாகாமலே யிருந்தபோதினும் மயலினாலே யுண்டானதுபோலப் பிரதீதியாகின்றது என அவ்வுற்பத்திப் பிரகரணத்தில் வருணிக்கப்பட்டுளது. அந்தப் பிரகரணத்தைச் சிரவணிக்கின், மேலும் மேலும் ஞான பூமிகளின் பயில்வினாலே சிரவணித்தவன், யானிது வென்பதோடு கூடியுந் தோற்றா நின்ற வேறு வேறு பொருள்கள்வாய்ந்த நீயானென்னும் பதங்கட்கு ஒரு பொருட்டன்மையை யுரைக்கும் அநந்தம் பிரஹ்மாண்ட விஸ்தாரத்தோடு கூடியும், ஒவ்வொரு பிரஹ்மாண்டமும் லோக ஆகாசபர்வதாதிகளோடு கூடியுமிருக்கும் இவ்வகில ஜகத்தையும், சேதனத்தோ டுற்றது சேதன மற்றது என்ப தீருகவுள்ள பதினெண்ணாயிரச் சுலோகங்களானே கூறும் வகையாகத் தன்னிடத்திலே யுணர்வன். மூர்த்தத்திரவியத்தன்மைப் பரிக்கிரகத்தால் விடுபட்டதும், பேதமற்றதும் இச்சகத்தாம். இதனானே பர்வதாதி பாவமற்றதுமாம். பிருதிவியாதி பூதமற்றதும், சங்கற்பத்தாலுண்டாய பட்டணம்போன்றதும், கனவிற் றோற்றும் பொருள்கட்குத் துல்லியமாயதும், மனோராஜ்யத்தைப் போல் விரிந்ததுமாம். அடுத்த சூனியத் தோற்றத்தானே கந்தர்வ நகரம் போன்றதும், கண்ணுக் கிரண்டு சந்திரன்றோற்றுமயல்போற் றோற்றுவதும், கானனீர் இருந்து விளங்குவது போன்றதுமாம். ஓடத்திற் செல்பவனுக்கு மலை முதலியவை யோடுதல் போன்றதும், சத்தியமாகிய புருடார்த்த இலாபமில்லாததும், சித்தமயலா லுதித்த பேய்க்குச்சமமும் உலக பீஜமாய மாயையானது பொய்யாக விருத்தலின் ஆன்மவிகார மற்றதாதலின் பீஜமொன்றின்றிய தாயினும் இலங்குவதும் ஆம். கதையின் சிரவணப் பற்றுள்ளதாயபோது சமஸ்காரத்தாற் பிரத்தியக்ஷம்போலக் கதையின் பொருள் விளங்குவது போன்றிருப்பதும், விண்ணிற் கற்பிக்கப்பட்ட முத்துமாலைகள் போன்றதும், கடகமும் அலையும், பொன்னீர் வடிவத்தினும் வேறாக நிரூபிக்க முடியாமையின் பொன்னினும் நீரினும் பொய்யாகத் தோற்றுதல் போன்றதும் ஆம். எப்போதும் அசத்தாகவே ஆகாசத்தில் நீலத்தன்மை எழுதல்போன்றதும், சுவரும் எழுதற்குரிய வர்ணங்களும், இன்றிக் கருத்தாவற்ற சித்திரம் கனவினும் விண்ணினும் மனோகரமாய்த் தோற்றுவதேபோல நெடுநாளாகத் தோற்றுவதும், பூர்வானுபவ ஸ்மிருதி மாத்திர மனோகரமாய்த் தோற்றுவதும் ஆம். சித்திரத்தி லெழுதிய அக்கினியானது வன்னியல்

லாமலிருந்தபோதிலும் வன்னித் தன்மையைத் தரிப்பதுபோல அசத்வடிவமாக இருந்தும் ஜகத் சப்தத்திற்கு விசாரிக்குங்கால் நில்லாமற் செல்லுகின்றதென ஜகத்தாமென்று தொடர்பாய வடிவப்பொருளைச் சம்பாதித்துக் கொள்கின்றது. அலைகளினுற்பலப் புட்பமாலை மயலால் தோற்றுதல் போன்றதும், முற்கண்ட நடனம் நினைக்கப்படுவதாய் மனதின்கண்ணே தோற்றுதல் போன்றதுமாம். சய்யையினின்று மெழுந்த புருடனுக்கேனும் கவிக்கேனும் சக்கரவாகப்பக்ஷியினுடையமுக சம்பந்தி வாயுவோடுகூடிய சலசமூக சித்காரத்தோடு பூர்ணகாயத்தை நோக்குங்கால் தோற்றும் தடாகம்போன்றதும், காய்ந்து சாரமற்றிருக்கும் பழுதான இலைகளோடு கூடியதனுனே நிழலழகு முதலியவற்றோடு கூடாமலும் பழ முதலிய சம்பத்துக்க ளில்லாமலுமிருக்கும், வெயிற்காலத்து வனம்போன்றதும் ஆம். மரணத்தில் மயக்கத்தினாலும் மூர்ச்சையினாலும் கஷ்டப்பட்டுக்கொண்டு நிலையில்லாமலிருக்குஞ் சித்தம்போன்றும், சிலைகளினிருப்பிடமாகிய மலைகளின் குகையிடம் போன்று அந்தகாரசகிதமாய்ச் சூனியமுற்றுப் பயத்தைத்தருவதும், அந்தகாரத்தோடுகூடிய குகைகளில் ஒவ்வொரு கூத்துப்போலப் பித்துப்பிடித்தவன் சேட்டைபோன்றதுமாம். உண்மையாயோ சாந்தியடைந்திருக்கும் அஞ்ஞானப் பனியோடுகூடியும், விஞ்ஞான சரற்கால விண்ணோடுகூடியும், தம்பத்திலுளி முதலிய வற்றுனே செதுக்கிக் கற்பிக்கப்பட்ட பிரதிமை முதலியவற்றின் ஆகாரம்போன்றதும், சுவரிற் சித்திரம் எழுந்தது போன்றதும் ஆம். களிமண்ணாற் செய்யப்பட்ட சேதன அசேதன ஆகாரம் உண்மையாய் மண்மாத்திரமா யிருப்பதேபோல அதிஷ்டான சத்தையினும் அயற்சத்தை யற்ற இந்த ஜகத்தான துண்டாயிருக்கின்றதென உற்பத்திப் பிரகரணத்தைச் சிரவணஞ் செய்வோ னுளத்திலுணருவன். உற்பத்திப் பிரகரணத்தின் பின்னர் நான்காவது திதிப் பிரகரணஞ் செய்யப்பட்டது. அது, மூவாயிரங் கிரந்தமுடைத்து, பிரபஞ்ச அதனதிஷ்டான தத்துவ ஸ்திதியை நன்குணர்த்துவதாம், கதைகள் நிறைந்ததாம்; அஃதெவ்வாறெனில்? பிரஹ்மமே திருஷ்டா திருசிய முறையை யினிதாக அங்கீகரித்துக்கொண்டு வருணிக்கப்படும் பிரகாரமாக உலகபாவ ரூபத்தானும் அகம்பாவ ரூபத்தானும் கருத்தாவின் சந்தானத்தில் வந்த போக்தா போக்கிய வடிவமாய்த் திதியை யடைந்திருக்கின்றது என அத்திதிப் பிரகரணத்தில் விளம்பப்பட்டுளது. பத்துத் திசைகளின் விஸ்தாரத்தில் விளங்காநின்ற இந்த ஜகத் பிராந்தியானது இவ்வண்ணம் விருத்தியையும் விபரீதத்தையும் அநாதிகாலந்தொடங்கி யடைந்துகொண்டே யிருக்கின்றதென அதன்கண்ணே யறையப்படும். திதிப்பிரகரணத்தின் பின்னர் ஐந்தாவதாக உபசாந்திப் பிரகரணம் ஐயாயிரங் கிரந்தவடிவமாய்க் கூறப்பட்டுளது. அது, அதிபவித்திரமாயது. அநேகம் ஊகபரம்பரைகளானே அழகுபெற்றதாம். இது ஜகத்தென்றும் நானென்றும் நீயென்றும் அவனென்றும் உண்டாகாநின்ற மயலானது, இவ்வாறு ஜீவன்முக்திக் கிரமமாக க்ஷீணமாகிச் சன்மாத்திரப் பிரஹ்மரூபமா யணுவுமில்லாமலாமென உபசாந்திப் பிரகரணத்தில் இலங்கும் சுலோகங்களாற் கூறப்படும். உலகம் அணுவுமில்லாமற்போதல் அந்தப் பிரகரணத்தின் சிரவணபலமாகும். உபசாந்திப் பிரகரணத்தைக் கேட்டவுடனே சம்சாரமே உபசாந்தியாய்விடும். அச்சமுசாரம், எவ்வா றுபசாந்தியாமெனின், சிறிது கெட்டுங்கெடாமலு மிலங்கும் சித்திரச்

சேனைபோன்று அற்பமா யறியத்தக்க வுருவுடையதாகும். சாந்தியை யடைந்த பிராந்திரூபமாயாகும். துச்சமாய் நூறில் ஒருமடங்கே தோற்றமாத்திரமாய் நிற்கும்; ஆண்டும் மேன்மேலும் ஞானபூமிகளிலேறும்போது க்ஷயமிகுதியுமுறவே கண்டுங்காணுமலுமா யிருக்கும் சமஸ்கார மாத்திரமாய்ப் பரிசேடித்திருக்கும்; பிறனுடைய சங்கற்பத்தாலாக்கப்பட்டு அவன் மனத்திலிருக்கும் நகர அழகானது கிடையாத தனுதிகளை யெண்ணிச் சங்கற்பித்துக் கொண்டிருக்கப் பட்டவனுக்குப் பக்கத்திலிருக்கும், வேறு புருடனுடைய கனு யுத்தப் பேரரவங்களையுடைய நகர அழகுபோலப் பொய்ம்மையானே பிறனுடைய கிரியை சப்தங்கள் சமமாயினும் விஷயீபூத மல்லவாம்; அது கனுக்காண்போன் திருஷ்டியானே சிறிதுவெளிப்படையாய்க் குறிப்பிக்கப்படும், மனோராச்சியஞ் செய்துகொண் டிருக்கப்பட்டவனுடைய திருஷ்டியானே மிகச் சிறிது குறிப்பிக்கப்படினும் அசத்தாய்ச் சுயமாகவே சாந்தமாவதேபோலச் சமுசாரமுமாம். அதனினும் உபசாந்திமிகின் காணக்கூடாத அவஸ்தையிற் சேடித்திருத்தலிற் றிருட்டாந்தங்களைக் கேட்டி! உபரதியான சங்கற்பத்தாற் கற்பிக்கப்பட்ட மதயானைபோற் றடையின்றிய மேகத்தினது பயங்கரமான இடிமுழக்கம் முழங்குகின்றதுபோலும், மறந்த கனவினுலேனும் சங்கற்பத்தினுலேனும் கற்பிக்கப்பட்ட பட்டணம்போலும் ஆம். வரும் நகர உத்யான வனத்திற் பிரசவித்த வந்தியைப்போலும், நிர்மலமாகிய மேனியில்லாத மலடியினுடைய நாவினுலே கூறப்பட்ட உக்கிரமான வீரரசாதிகளோடு கூடிய தன் மைந்தனது போர் முதலியவற்றின் கதைப் பொருள்களி னனுபவம் போலும் ஆம். எழுதாத சித்திரத்தையுடைய சுவரிடமானது சித்திரத்தால் வியாபிக்கப்பட்டதேபோலும், நன்ருக மறந்திருக்கப்பட்ட பொருள்களோடுகூடிய கற்பனைப் பட்டணம் போலுமாம். எல்லா இருதுக்களோடுங்கூடி யுண்டாகாத வன அசைவுபோலக் காணப்படாத ஆகிருதியை யுடையதும், இனியுண்டாம் பூங்காவன ஆகார வசந்த இருதுவினுற்போல இரச ரஞ்சனையை யுடையதும், உள்ளே யடங்கிய அலைக் கூட்டங்களோடுகூடி நிச்சலத்தன்மையானே பிரசன்னமா யிருக்கும் நீர்நிறைந்த நதிக்குச் சமமும்ஆம். உபசாந்திப் பிரகரணத்தின் பின்னர் ஆருவதாக நிர்வாணப் பிரகரணம் உரைக்கப்பட்டது. அது முப்பத்தீராயிரத்துள் எண்ணப்பட்ட பதினேழாயிரத் தைந்நூறு போக எஞ்சிநின்ற பதினுலாயிரத் தைந்நூறு கிரந்தமுடைத்து. ஞானமாகிய மகாப் பிரயோஜனத்தையும் பொருளையுங் கொடுப்பதாம்; அதனை யுணரில் மூல அவித்தையானது கெடுதலின் எல்லாக் கற்பனைகளுங் கெட்டு மேன்மையான மோக்ஷானந்த முண்டாகின்றது. நிர்வாணப் பிரகரணத்தைச் சிரவணிப்பவன் நிர்விஷய சிற்பிரகாச வடிவனும், விஞ்ஞான வடிவனும், நோயற்றவனும், பரம ஆகாச கோசம்போற் றெளிந்தவனும், சர்வ சமுசார மயல்களுந் தீர்ந்தவனும் ஆவன். உலக விவகாரங்க ளற்றவனும், கிருத் கிருத்தியத்தன்மை யடைந்திருத்தலின் நன்னிலையி லிருப்பவனும், வஜ்ஜிரமணித் தம்பமானது தன்பாற் பிரதிபிம்பித்த சமஸ்த ஜனங்களையும் விகாரமடையாமலே தோற்றுவித்து, ஜனக்கூட்டம் அவற்றின் றேற்றமென்னு மிரண்டிற்கும் ஆதாரமாயிருப்பது போன்றவனும் ஆகாயம் போன்றவனும் ஆவன். பிரசித்தமா யெண்ணத்தக்க உலகக் கூட்டங்க ளியாவற்றையும் இனிது விழுங்கியவன்போல அதி திருப்தியுடையவனும், பௌதிகமாய பாகியேந்திரியங்களாற் கவ

ரத்தக்கமனதாற் கவரத்தக்கபோகங்கள் யாவற்றையு மனுபவித்தவனும் ஆவன். காரியம், காரணம், கருத்திருத்துவங்களாகிய ஆதிபூத ஆதியான்மிக ஆதிதெய்வ ரூபங்களிற் கொள்ளல் தள்ளல்களை விட்டவனும், தேகத்தோடு கூடியிருந்தபோதினும் தேகமற்றவனும், சமுசாரமுற்றவனா யிருந்தபோதினும் சமுசாரமற்றவனும் ஆவன். ஞானசொரூபனும், கனமான கல்லகடுபோலச் சித்திரமிலா துறைபவனும், நிறைந்திருப்பவனும், ஞான சூரியனாகி யிருக்கின்ற தனது அஞ்ஞான பரிகற்பிதமாய உலகங்களை யுலகாகார விருத்தியோடுற்ற சிற்பிரபையினாலே யொளிர்வித்துக்கொண்டு பரப்பிரகாச ரூபனாயிருந்த போதினும் திருசியமின்மையினானே அதை வெளிப்படுத்தும் விடயத்தில் கனமான அந்தகாரக் கற்போலும் பெருங்குருடுபோலு மிருப்பவனும் ஆவன். சமுசார துர்லீலைக ளியாவற்றையும் தடைசெய்தவனும், ஆசையாம் விடசிகையை யழித்தவனும், அகங்கார வேதாளத்தைச் செற்றவனும், தேகவானாயினும் களேவர மற்றவனுமாவன். அங்ஙனமே, " நிலையிலாத விம்மெய்களி னீணிலை, யலைவிலா தழிகாய மிலாததா, மலைவிலா விபுவான் மமகத்தினைத், தொலைவிரீர னறிந்திடர் தோய்ந்திலான் " என்னுஞ் சுருதியும் புகல்கின்றது. உலகத்திற்குப் பாதிக்கப்படும் பான்மை தத்துவ சாக்ஷாத்காரத்தாலாமெனக் கூறப்பட்டது சம்பவிக்கும் பொருட்டுப் பரமான்மாவிற்கு உலக கற்பனை யதிஷ்டானத் தன்மையினானே அபரிச்சின்னத்தன்மை கூறவேண்டிய தவசியமேயாம்; அதன் மயிர் நுனிபோன்ற பரிச்சின்ன அவித்தையின்பாலும் ஏகதேசத்தில் உலக இலக்குமியானவள், மகாமேருவின்கண்ணுள்ள மரத்திலிருக்கும் புஷ்பத்தி னேகதேசத்தில் வண்டிருப்பதேபோல உட்கார்ந்திருப்பள். அங்ஙனமே: " ஒருபாதமிதன்ற ெனாளிவிலாப் பூதமாம், திரிபாதத் தமுதந் திவியாயிடுமே " எனச் சுருதியும், " ஏகவங்கிசத்தா லிவையெலாம்பற்றி, யேகமாகிய யானிருக்கின்றனனே " என மிருதியுங்கூறல் எண்ணற்பாலதாம். விஸ்தாரமில்லாத இடத்தில் அதிவிஸ்தாரமாகிய வுலகத்தோற்ற மெங்ஙனமாம் என வினவின்? கண்ணாடியின்கண்ணே மேகக் கிரக நக்ஷத்திரங்களோடு கூடிய விண்புகுந்ததைக் காண்டலின் அஞ்ஞானத்திற்குச் செய்யமுடியாதது யாதொன்றுமில்லையென்றறிக. சிதாகாசமானது தனதுட் கற்பித ஆகாயமாம் பரமாணுவினும் பரமாணுவில் ஆயிரக் கணக்கான ஜகத் சம்பத்துக்களைச் செய்து தாங்கிப் பார்க்கின்றது, சிதாகாசமே தாங்குகின்றது பார்க்கின்றதாம். மகாமதியையுடைய ஜீவன் முக்தனது இருதயம் பரமான்மாவேயாகின்றது, அதனது விஸ்தீர்ணத் தன்மை நூறு இலக்ஷம் அயனரிஹராதிகளாலும் இவ்வளவென அளவிடமுடியாதாம்; அஃதென்னவர்கட் காற்றலின்மையினாலோ? அன்றாம். சத்தையினாலும் முடிவின்மையினாலும் ஆனந்த இயற்கையினாலும் மேன்மைமிக்கது கிடையாமையாலும், அத்தகைய ஆன்மவஸ்துவிற்கு அந்த அபரிச்சின்னத் தன்மையானது ஆகாசாதிகட்கேபோலும் காணும் புருடாது ஆற்றலில்லாமையாற் கற்பிக்கப்பட்டதுபோ லல்லாமல் உண்மையாகவே யிருத்தலினாலும் என்றுணர்க.

17-வது கிரந்த சங்கையாதி வருணனம் முற்றிற்று.

## 18-வது திருஷ்டாந்த நிரூபணம்.

இப்போது, இந்நூலினது முக்கிய பலம், சம்பந்தத்தாலேற்பட்ட அமுக்கிய பலம் என்பவற்றோடு மிக்கிரந்த குணங்களும் இதிற் கூறப்படுந் திருஷ்டாந்தங் களிற் கொள்ளவேண்டிய அங்கிசங்களும் வருணிக்கப்படும். இவ்வாறு பிரகரண பேதத்தை விடயப்பிரயோஜனங்களோடும் இனிது வருணித்து, கிரந்த குணமுழு வதையும் வருணிப்பவராய் ஆண்டாண்டு திருஷ்டாந்த உபந்யாசங்களிற் கொள்ள வேண்டிய அங்கிசத்தையுங் கருத்தையும் நூலின் சீலத்தையும் அறிந்துகொள் ளும்பொருட்டு ஸ்ரீ வசிஷ்டர் கூறத் தொடங்கல்:—ஆறு பிரகரண வடிவமாயிலங் கும் இம்மோக்ஷ உபாயசம்மிதையைச் சிரவணித்தறிந்த மாத்திரத்திற் கெடாத சக்தியோடும், நல்லக்ஷேத்திர நல்லகாலங்களோடும், கூடிய விரையினின்றும் அவசியம் பவிக்குங் கெடாத பலமுண்டாவதேபோல மெஞ்ஞான மினிதாகவுண் டாம். அநேகஞ் சாகைகளின் வேறுபாட்டால் வேறுவேறாயுள்ள அநேகம் சுருதிக ளிருப்ப அவைகளைவிட்டுப் புருடபுத்தியினாற் செய்யப்பட்ட இதனையே கொள்ள வேண்டுமென ஏன் கூறுகின்றீரெனின்? கேட்டி! ஊகங்களினாலே தத்துவநிர்ண யத்தைச் செய்விக்குமாயி னச்சாஸ்திரம், புருடபுத்தியினாற் செய்யப்பட்டதாயிரு ந்தபோதினும் கொள்ளத்தக்கதேயாம்; மற்றையது வேதசம்பந்தமா யிருப்பினும் தள்ளத்தக்கதேயாம்? நியாயத்தைவிடாததே முக்கியமென அனுசரிக்கும் புருட னாலாதரிக்கத்தக்கதாம்; அருமறைகள் புகழத்தக்கமேன்மையுடையனவேயாயினும் அதிரகசிய அபிப்பிராயத்தோடு கூடினவாதலின் விரைவிலனுபவிக்கமுடியாதாம். ஆகவே சாதாரண அதிகாரிகளானோ கொள்ளத்தக்கன வாகாவாம்; அவற்றின் சாயங்களையுணர்ந்த பெரியோர் தம்மனுபவத்தை மூலமாகவுடைய ஊகங்கணிறை ந்த இந்நூலோ வெட்டவெளியான கருத்தோடு கூடியிருத்தலின் அனுபவத்தில் ஒட்டிவருமென அவசியம் ஆதரவோடுஞ் சேவிக்கத்தக்கதாம். வேறு பொருட் கூறும் வாயிலாக இதனையே திடஞ்செய்யக் கேட்பாயாக, ஊகத்தோடு கூடிய வச னத்தைப் பாலகனிடத்தினின்றும் கொள்ளவேண்டும், மாறாயினோ, மலரோன் கூறியபோதினும் திருணமொப்பவிட வேண்டியதேயாம். புருடமுயல்வா லுண்டு பண்ணப்பட்டதும் கொள்ளத்தக்கதா மேலாயின், எங்கள் வங்கிசத்திலிருந்தவர் களே யெழுதிய நூல்களெவற்றையேனும் கேட்பேன்; இக்காதை கேட்கத்தக்க தன்றெனின்? தன்முன்னிகழும் ஸ்ரீ கங்காதீர்த்தத்தைவிடுத்து எனது தந்தை தோண்டிய கூப மிதுவென்று அக்கூபநீரை யாவனருந்துகின்றனனோ ஆசைமிக்க அவனை யெவர் சிக்ஷியார். இதன்கண்ணுள்ள அதிசயந்தா னென்னையெனின்? உதயகாலமுளதாகவே அவசியம் ஒளியுமுளதாவதேபோல இந்நூலை யாராய்ந்த கணத்திலே இருதயத்தில் இனிய விவேகமான தவசியமுண்டாம். வெல்லத்தை நாவிவிட்டு விரும்புமருந்தீவதேபோற் சம்பந்தித்த பயன்களைக் காண்பிப்பான் விரும்பிச் சத்தத்தாலாய விற்பத்தியை முதற்பலமாகக் கூறுகின்றார்:—முழுது முணர்ந்தவன் முகத்தினின்றும் அந்தபரியந்தம் கேட்பின் முதலிற் சாமானியமா யுணர்ந்து பின்பையப்பையத்தானே செய்யும் ஆராய்ச்சியானே மதியிற்றிட சமஸ் காரம்வரவே ஆண்டுமுதலினுள்ளே மிகவுமழகிய சமஸ்கிருத வாக்கியத்தன்மை யுதிக்கும், அது பரிசுத்தமாய கொடிபோலும் முத்துமாலைபோலும் சபாஸ்தானத்

திற்குச் சிரோபூஷணமென்னப் பிரகாசித்துக்கொண்டிருக்கும்; இரண்டாவது பலமோ அருத்தவிற்பத்தி சாதுரியமென்னும் பெருமைவாய்ந்த குணசாலியாகிய உயர்ந்த சாதுரியமுண்டாம். அதனால் அரசர்களும் அமரர்களும் நேயமாவர்கள். தேவதைகளைப்போற் பூசிக்கத்தக்க வித்வத்சிகாமணிகளும் நேயமாவர்கள். இதன் பூர்வ அபரங்களையுணர்ந்த புத்திமானனவன் எவ்விடத்திலுமே எப்பொருள்களி லும் அத்தகையனுகி யிரவில் விளக்கைக் கையிற் கொண்டுலவும் நல்விழியோன் போல வுலவுவன். சரற்காலத்தை யடைவுற்ற திசைகளினின்றும் பனிகள் ஒடு வதேபோல, மதியினின்றும் உலோப மோகாதி தோடங்க ளெல்லாம் பையப்பை யக் குறைவை யடைந்துபோம். தன்னப்பியாசமில்லாத தொழில்கள் எப்பயனை யுங் கொடாதாமாதலின் நினது மதிக்கு விவேகத்தை வளர்க்கும் விவேகாப் பியாசங்கள் கேவலம் அபேக்ஷிக்கத்தக்கனவாம். சரற்காலத்திற் பெரியதடாகம் போல மனது மிகவுந் தெளிவை யடையும், கடைந்தபின் மந்தரகிரியோடு கூடாத பாற்கடல்போல ஏற்றத்தாழ்வின்றிய பரமசாந்தத்தை யடையும். வியா மோக களங்கங்களில்லாத இரத்தினத் தீபச் சிகைபோலும் மோகவிருண் மறைப் பற்ற பிரஞ்ஞையானது பதார்த்தங்களைப் பகுக்கும் ஆற்றலுடையதாகி மிக வும் விளங்கா நிற்கும். தீனத்தன்மை தரித்திரம் முதலிய தோடக்கூட்டங்கள் தனுதி விஷயங்கள் சாரமற்றனவெனத் தெரிந்த திருஷ்டி யுடையவரை, இருப் புக்கவசந்தரித்தவரது மருமங்களை யம்புகள் துளைக்க வல்லன வல்லன போலக் கெடுக்க வல்லன வல்லனவாம். பயவேதுக்கட்கு எதிரிலிருந்த போதினும் இந் நூலுணர்ந்தவனது மனதை அம்புகள் மகா ஜடமாகிய பெருமலையைத் துளையாத தேபோல, சமுசார பயங்கள் துயர்ப்படுத்தாவாம். இச்சமுசாரத்திற் பிறப்பிற்கு முதன்மையேல் புருடப்பிரயத்னம் முக்கியம், கருமத்திற்கு முதன்மையேலோ தெய்வம் முக்கியம் என்றெங்ஙனமாம் என்பன வாதி ஐயக்கூட்டங்கள் பகலி லிருட்போலச் சாந்தியை யடையும். கூறிய விரண்டும் அவித்தையா லுண்டாகிப் பொய்யாய்ப்போதலின் இந்நூலாய்தலாற்போம். இரவு போன்ற அஞ்ஞானமகன்று பிரஞ்ஞைகட் கேதுவாய சூரியப்பிரகாசம் போன் ஞானப்பிரகாசம் வரின் இரா கத்துவேடங்களாற் கெடுக்கப்படாத இனிய சாந்தியானது எக்காலத்தும் எல்லா விடயங்களிலு முண்டாம். இந்நூலை யாராயுமகானுக்குப் பாற்கடல் போன்ற கம் பீர இயற்கையும், மகாமேருவைப் போன்ற தீரத்தன்மையும், பூர்ணசந்திரன் போன்ற அந்தக்கரண சீதளத்தன்மையும், அதிதிடமாக வுண்டாம். இவை சம் பந்தித்த பயன்களாம். இனி முக்கியமான பயனைக்கேட்பாயாக. சர்வ சங்கற்ப விசேடங்களுஞ் சாந்தியானவனுக்குப் பையப்பையப் பூமிக்கிரமமாகப் பரிபக்கு வத்தை யடைந்து வந்து வாக்கிற்கெட்டாத ஜீவன் முக்திப்பதமான துண்டாம். இந்நூலையாராயும் புருடனுடைய மதியானது பரமான்மாவின் றரிசனத்தைத் தந்து, சர்வவிடயங்களினும் தூய்மையாயும் தன்மையாயு மிலங்கி, சரற்கால சந்திரப் பிரகாசம் போலப் பரமப்பிரகாசத்தை யடைகின்றது. இருதய ஆகா யத்தில் விவேகமாகிய சூரியன் நிருமலமாய்ச் சாந்தி யொளியோடு விளங்கும் போது அனர்த்த சார்த்தங்களை யறிவிக்கும் காமாதி தூமகேதுக்கள் இரவிலேயே யுதயமாதல் வெளிப்படையாதலின் உதியாவாம். அசஞ்சலமாயும் அதியுன்னத மாயு மிருக்கும் தன்னுண்ம பதமாகிய பர்வதத்தில், ஜல ஆசையற்றுச் சரத்கால

த்திலிருக்கும் மேக மாலைகள்போன்ற அழகு வாய்ந்த அறிஞர்கள் சடமாம் பொருள்களி லாசை யற்றவர்களாய்ச் சாந்தியையும் பரிசுத்தத்தையு முடையவர் களாய் நிலைபெற்றிருப்பர்கள். பிறர்தந்து வேடங்களை யுண்டாக்கும் குரூரமான கெட்ட வார்த்தைகள் சூரியனுதயமாகும்போது துக்க முகத்தோடு கூடியபேய் களின் கூத்துப்போல நீங்கும். உலக விசித்திரங்கட்காதாரமான சமதமாதி யல் லது பரமான்வாஞ் சுவற்றினிடத்தில் ஏகரசமாகத் தைரியமடைந்திருக்கும் புத்தி யைக் காமாதி நோய்கள் சித்திரத்தி லெழுதிய கொடியைக் காற்றசை வியாததே போல் அசைக்கமட்டா. தத்துவத்தை யறிந்தவன் விடய சம்பந்தமாய மயக்கப் பாழுங் குழியில் வீழ்வதில்லை. மார்க்கத்தை யுணர்ந்த யாவன்ருன் படுகுழியில் வீழ்வன் ? அவனுக்கு இஷ்டம் போற்றிரிதல் கூடாதாம். அந்தப்புரத்திலிருக் கும் பதிவிரதைபோல அறிஞனுடைய மதியானது நன்னூல் பெரியோராசாரங் கட்கு விரோதமில்லாத கருமங்களிலும் தானுய்க்கிடைத்த பொருள்களிலும் இர மிக்கும். உலகங்களின் கோடி இலக்ஷங்களில் எவ்வளவு பரமாணுக்களிருக்கின் றனவோ அவற்றுள் ஒவ்வொன்றையும் ஒவ்வொன்றுள்ளிருக்கும் ஒவ்வொன்றுள் ளிருக்கும் பிரஹ்மாண்டங்களையும், மாயையானது செய்யாததைச் செய்விக்குஞ் சமர்த்துடையதென்னும் நிச்சயமிருத்தலினுனே அசங்கமதி யுடையவனறிகின் ருன். மோக்ஷ உபாயமாய மெய்ஞ்ஞானத்தாற் சுத்த அந்தக்கரணத்தை யுடைய ஜனங்களைப்போகக் கூட்டங்கள் ஒருகாலும் சுகதுக்கப்படுத்த மாட்டா. கலவாம லிருக்கின்ற சர்வவர்க்க அண்டங்களும் பரமாணுக்கடோறும் நீரிலுண்டாம் அலை கள் போலுண்டாகி யழிந்து கொண்டே யிருக்கின்றன. அவற்றை யெல்லாம் அறி ஞன் காண்கின்ருன். இஷ்டமில்லாதவை தன்னை வந்தடையின் துவேஷிப்பது மில்லை, இஷ்டமுள்ளவை தன்னைவிட்டு நீங்கின் ஆசைப்படுவதுமில்லை; காரிய பல முதலியவற்றின் சொரூபத்தை யறிந்திருந்தபோதினும் அதை யறியாத தருப் போலவே யிருக்கின்ருன். முயல்விலாமற் கிடைத்ததை யனுசரிப்பவனுய், இஷ்ட அநிஷ்ட பலங்கள் கிடைத்தபோது மனோ விகாரமற்றவனுய், உலவி மற்றையர் களைப்போலவே காணப்படுவன். இந்நூன் முழுவதையும் படித்துக் கேட்டுப்பின் சுலோகந்தோறும் கருத்தை யினிதாராய்ந்து பகுத்துணர்தல் வேண்டும்; கூறி யது வசனமாத்திரந்தான் என்றெண்ணத் தக்கதன்ரும்; மற்ருே பிரஹ்மாதி களின் சாபம்போலேனும் வரசாபம்போலேனும், அனுபவிக்கவே படும். அழ கான திருஷ்டாந்தங்களாற் பகரப்பட்டும், அழகான நவரசமயமாயும், மாதுரிய வுபமான முதலிய சத்த அருத்தங்களா லலங்கரிக்கப்பட்டும், மகா காவியமாயும், இருக்கு மிந்த நூலானது எளிதாகவே யுணரத்தக்கதாக விருக்கின்றது. சிறிது பதபதார்த்தங்கள் அறிந்தவன் இக்காவியத்தைத் தானுகவே யுணர்வன். இதனைத் தானுக அறிய முடியாதவனே அறிஞன் வாயிலாகக்கேட்டுக் கொள்ளவேண்டும். இவ்வுலகின் கண்ணே இந்நூலைச் சிரவணித்தும் மனனித்தாராய்ந்தும் அறிந்தவ னுக்கு மோக்ஷமடைவதில் தவந் தானஞ் சபம் முதலியவை ஒருசிறிது முபயோக மாவதில்லை; ஏனெனின், அந்தப் பிரயோஜனங்களெல்லாம் இந்தப் பிரயோ ஜனத்துக்குள்ளடங்கிப் போவதாலென்றறிதல் வேண்டும். இச்சாஸ்திரத்தைத் திடமாகப் பயிற்சி செய்தலினுலே மீண்டு மீண்டும் பார்த்தலினுலே சித் தத்தைச் சுத்தப்படுத்தும் வாயிலாக வுண்டாம் அபூர்வ பாண்டித்தியம்

கிடைக்கும்; வேறு நூற்களைப் பயின்றபோதினும் பாண்டித்திய முதிக்குமா
யினும் அது சித்தத்தைச் சுத்தி செய்யும் வாயிலாக வுண்டாகாதா மாதலினானே
இஃதபூர்வமாயதென வறிக. சூரிய உதயத்தினாலே பேயானது தானாகவே முயல்
வின்றியே ஓடிப்போவதேபோல நானென்றும் உலகமென்றும் அதிதிடமா யிருக்
கும் காண்போன் காட்சிப் பேயானது ஞானசூரிய னுதிக்கும்போது முயல்வில்லா
மற்றானே யோடிவிடும்; காண்போன் காட்சி யிரண்டு மொழியவே அறிவு வடிவ
மாய்த் தூய்தாயிருக்கு மான்மா மாத்திரந்தானே எஞ்சி நிற்கும். உலகமியா
னென்னும் மயக்கமானது, இருக்கும்போதே சாந்தியை யடைந்து கனாமயக்கமா
னது இது கனவென வறியப்பட்டபின் னற்பமேனும் மயக்காததேபோல மயக்
கத்தைத் தரமாட்டாது. சங்கற்ப பட்டணத்திலுண்டாம் சுக துக்காதிகள் மகி
ழ்ச்சிவாட்டங்களைத் தராதனபோல இவ்வுலக மயக்கத்திலும் உள்ளவற்றைக் கற்
பனைமாத்திர மிவையென வறியின் துன்பப்படுத்தமாட்டா. சித்திரப் பாம்
பைச் சித்திரமென வறிந்த மாத்திரத்திற் பாம்புப் பயத்தை யெவ்வாறு கொடா
தோ அவ்வாறே இத்திருசியப் பாம்பும் மயக்கமாத்திரத்தா லாயதென வறியின்
சுகதுக்க மகிழ்ச்சி வாட்டங்களைக் கொடாதாம். சித்திரப்பாம்பென் றறிதலினாலே
பாம்புத்தன்மை அதிஷ்டானமாத்திரமாய்ப் போவதே போலவே இச்சமுசார
மும் அதிஷ்டானத்தைத் தவிர வேறில்லையென வறிதலினானே யிருக்கும்போதே
காணாமற்போம். மிக விரிந்துகிடக்கும் பிரபஞ்சமானது கோடி கொந்தாலிகளி
னாலும் கெடுக்க முடியாததா யிருப்ப அற்ப ஆயாசத்தால் எங்ஙனஞ் சாந்தியை
யடையுமெனின்? ஞானமகிமை யவ்வாறாம். புட்பங்களினுடைய இதழ்களை யிளந்
தளிர்களை நகமுசி முதலியவற்றானே பிளப்பதற்குச் சிறிது முயற்சி வேண்டும்,
பரமார்த்த பதத்தை யடைவதற்குச் சிறிது முயற்சியும் வேண்டியதில்லை; ஆயின்
முன் புருடப் பிரயத்தனத்தைச் சாதித்தது யாதின் பொருட்டெனின்? ஞானத்
தைத் தடைசெய்யும் இராக அசம்பாவனை முதலிய புருட அபராத நீக்கப் பொ
ருட்டேயாமென்றுணர்க. புஷ்பதள மிளந்தளிர்களைக் கிள்ள அவயவங்களின்
அசைவு வேண்டும்; மோக்ஷமடைவதற்கோ மதியினசைவும் அடங்க வேண்டும்
என்றால் எவ்வங்கமேனும் எவ்வவயவமேனும் சலிக்கலாகாதென்பது அவசியமல்
லவா. மதியைமாத்திர மடக்கினால் யாவுந் தானே யடங்கும். சுக ஆசனத்திலிரு
ந்து தானேகிடைத்த போகக் கூட்டத்தைப் புசித்து, சாஸ்திர விருத்தமார்க்கங்க
ளிற் செல்லாமலிருப்பவனால் மோக்ஷமடையப்படும். எக்காலத்திலு மெத்தேயத்
திலும் சம்பவித்த சாதுக்களோடுகூடி இச்சாஸ்திரத்தையாவது உபநிடத மோக்ஷ
தருமாதிகளையாவது ஒருகணமும் விடாமல் ஆனந்தமாயாராயு மவனாற் சமுசா
ரத்தைச் சாந்தப்படுத்தும் அபரிச்சின்ன பரமான்ம அபரோக்ஷஞான மடையப்
படும்; யோநியந்திரத்தில் நெருக்குண்டு வரும்படியான பெருந் துயர்ப்பிறப்பை
மறுபடி யவனடையவே மாட்டான். இவ்வண்ணங் குணத்தினாலும் பலத்தினா
லும் சுலபமா யடையத்தக்க தன்மையாலும் இச்சாஸ்திரத்தைப் புகழ்ந்து இதிற்
புகாதவரை யிகழ்கின்றார்:—போகரசத்தில் அழுந்துபவர்களாயும், பாவிகளாயும்,
இச்சாஸ்திரம் படிப்பதிற்கூடப் பயமுடையவர்களாயும், ஆன்மாவைக் கொல்பவ
ராதலின் கூறுவதற்குந் தகுதியற்றவர்களாயும், இருக்கும் கெடுதலைச் செய்யப்
பயப்படாத அவ்வதம சிரோமணிகள் தங்கள் தாயின் வயிற்றினின்றுவந்த மலக்

கிருமிபோற் பிறந்தவர்களே யாவர்கள். இங்ஙனம் புகழ்ந்ததாலும் இகழ்ந்ததாலும் வந்ததென்னெனின்? ஹே இராகவ! மதியினுலெவை முடிவான தூயனவாமோ அவைகளுக்குள் அந்தரங்க பூதமும், விவேகமதியினுற் கவரத்தக்க சாரத்தினுஞ் சாரங்கட் கெல்லையா யிருப்பதும், புத்தியினுஞ் சாரதரமா யுள்ளாயிருக்கும் பிரத்தியக்கான்ம வடிவமும் ஆம் வத்துவை விடயஞ் செய்வதும், ஞானத்தை வித்தரித்து விளம்புவதும், இப்போதென்னுற் கூறப்படுவதும் ஆகிய இச்சாஸ்திரத்தை நீ பொருமையுடன் கேட்பாயாக! எத்திருட்டாந்தங்களினுலே இச்சாஸ்திரத்தைக் கேட்க வேண்டுமோ, எவ்வுபக்கிரம உபசங்கார வடிவமாய அவ்வப் போத உபயோகியாய சங்கேதங்களானே கேட்க வேண்டுமோ, இதன்பொருளை விசாரிக்க வேண்டுமோ, சாஸ்திர அவதாரவுபாய நிச்சயவடிவ அவ்வாபாதனிகையை நீ கேட்டி! அவற்றுள் திருஷ்டாந்தத்தின் இலக்கணத்தைக் கேட்குதி! கண்ட பொருளின் ஒப்புமையினுனே யீண்டுக் காணுத பொருளி னுணர்த்துவதும், ஞானேபகார பலத்தைக் கொடுப்பதும் ஆகியதைத் திருஷ்டாந்தமெனக் கூறுவர்; ஒப்புமைப் பலத்தினுனே பிரகிருத அருத்த நிண்ணயம் எதனுலாமோ அது திருஷ்டாந்தமாமென்பர் அதன் பொருளை யுணர்ந்தவர். திருஷ்டாந்தமில்லாமல் அபூர்வப் பொருளும் அற்புதப் பொருளும் காணுப்பொருளும் உணர முடியாவாம். இரவிற் றீபமில்லாமற் பாத்திரத்தி லிருக்கும் பதார்த்தங்களை யீட்டி லறியமுடியாதன்றே! திருஷ்டாந்தங்களில் விளம்ப விச்சித்த ஒப்புமை விவேகப் பொருட்டுத் தள்ளத்தக்க அங்கிசத்தைக் கேட்டி! இப்போதெவ்வெத் திருஷ்டாந்தங்களால் யானுனக் குணர்த்துகின்றேனே அவையாவுங் காரணங்களை யுடையன, ஜன்னியங்கள், அதனுனே பொய்யாயின வாம்; அறியத்தக்கதோ பரமார்த்த சத்தியமாயும் அகாரணமாயும் நித்தியமாயு மிருக்கின்றது; பொய்யாயே யிராநின்ற மண்பொன் முதலிய உபாதான திருஷ்டாந்தங்களாற் சத்தாகிய பிரஹ்மகாரண முணர்த்தப்படும். படவே ஜன்னியத்தன்மை பொய்த்தன்மை முதலிய திருஷ்டாந்த தருமங்கள் விடத்தக்கனவாம்; பரப்பிரஹ்ம திருஷ்டாந்தத்தில் மாத்திரம் இந்நியமமாம், அன்னிய திருஷ்டாந்தங்களில்லையென் றுணர்க. பரப்பிரஹ்மத்தை விட்டு மற்றைய உபமான வுபமேயங்கள் யாவற்றிற்குமே காரியத்தன்மை காரணத்தன்மை முதலியவற்றுனே முற்கூறிய வொப்புமை யுளதேயாம். ஆராய்ச்சி முதலியவற்றுனே பிம்பத்தைக் கவரும் உணர்வுண்டாகின்றதெனக் கூறப்படுமாயின் அவ்வாறே ஞானத்தாற் பிம்பமுற்பத்தியாம் எனக் கூறுதல் கூடாதாம். பிரஹ்மத்திற் குற்பத்தி கூறமுடியாதன்றே. பரப்பிரஹ்மத்தை விடுத்து எனமுற்கூறியதையே விளக்கிக்கூறின், பிரஹ்மோபதேசத்தில் திருஷ்டாந்த மியாதுனக் கீண்டு கூறப்படுமோ, அவற்றுள் ஏகதேச தருமஞ் சமானமா யிருப்பது கொண்டே பிரகிருத நிண்ணயஞ் செய்யப்படும்; பிரஹ்மஞ் சகத்தின் விவர்த்த அதிஷ்டானமென்பதையுணர்த்தப் பாம்பின்விவர்த்த அதிஷ்டானத்தை யறிவிக்கும் பழுதைத் திருஷ்டாந்தத்திற்கு அதிஷ்டான விவர்த்த அங்கிச மாத்திரையானே திருஷ்டாந்தத் தன்மையாம். தார்ஷ்டாந்தத்திற் சம்பந்தித்த நித்தியத்தன்மை சுகித்தன்மை முதலிய எல்லா அங்கிசத்தானு மன்றும். அத்திருஷ்டாந்தம் ஏகதேசத்திலேயே கொள்ளப்படுவதென்னே யெனின்? எல்லா வங்கிசத்தும் ஒப்புமை யெவ்

கும் பிரசித்தமில்லை யென்றறிக. பிரஹ்மதத்துவத்தை யறிவிப்பதற்காக எவ்வெத்திருஷ்டாந்தம் ஈண்டுக் கூறப்படுமோ அவையாவுங் கனவினுண்டானவை போலப் பொய்யுலகிலடங்கினவே யன்றி மெய்யாயின வல்லவாம்; வேறொரு பரமார்த்த சச்சிதாநந்தவஸ்து வெளிப்படை யில்லையல்லவா! இருந்தாலன்றோ உவமை கொடுக்கலாம். இவ்வாறாகவே உருவமில்லாத பிரஹ்மத்திற்கு உருவத்தோடு கூடியவை யெவ்வாறு திருஷ்டாந்தமா மென்னும் மூர்க்கர்களுடைய விகற்பத்தாலுளவாய வாக்கியங்கள் உதியாவாம்; பிரஹ்மம் இருமையோடு கூடியதா? இருமையோடு கூடாததா? இருமையோடு கூடியதெனின்? சித்தாந்தங் கெட்டுப்போம்; இருமையோடு கூடாததெனின்? குருசாஸ்திராதிகளொன்று மில்லாமையின் ஞானமுண்டாகாதாம், என்பனவாய விகற்பவாக்கியங்களு முதியாவாம். இதனானே, திருஷ்டாந்த உபந்யாசத்தை அனுமானப் படுத்தி யுணர்த்தும்போது திருஷ்டாந்தம் ஹேது வியாத்தி முதலியவை பொய்யாயிருத்தலின் வியாப்பியத்தன்மை யசித்தி சொரூபாசித்தி முதலிய ஏதுப் போலிகள் பிரபஞ்ச சம்பந்தமான ஏதுக்களைக்கொண்டு சத்தியத்தன்மை முதலியவற்றைச் சாதிக்கும்போது விருத்தத்தன்மை முதலிய ஏதுப்போலிகள் அப்பிரயோஜக தோடங்களாக ஆதல் கூடும் என்னும் தார்க்கிகரது சங்கைக்கு மிடங் கிடையாதென நீக்கப்பட்டது. அசித்தி விருத்த முதலிய தோஷ திருஷ்டிகளை யுடைய மற்றைய தார்க்கிகர்கள் செய்த திருஷ்டாந்தப் பெருந்தூடணங்களாற் றூஷிக்கப்பட்ட ஏதுத்தன்மை முதலிய ஜகத்தானது கனாப்போல விருத்தலின் வஸ்துவின் கண்ணே யொரு சிறிதுந் தூடணங் கிளம்பவே மாட்டாதாம்; உணர்தல் உணர்த்துவித்தல் விவகாரமோ வியாவகாரிக சத்தியத்தன்மை மாத்திரத்தானும் சாத்திய சித்தி பரியந்தம் பொருந்தும். கூறிய கனவுபமானத்தன்மை அதன் சமானதருமங் காட்டலானே தெரிந்து கொள்ளத்தக்கதாம். உண்டாவதற்கு முன்னரும் அழிந்ததன் பின்னரும் இல்லாத வஸ்துவானது நிகழ்காலத்தினும் உபாதான காரணத்தினும் வேறாக இருக்கிறதா, வேறல்லாம லிருக்கிறதா வென அநேகமாயிரம் விசார வாதிகளானே விசாரித்து நிண்ணயிக்கமுடியவே யில்லை; நிகழ் காலத்திலோ விசாரிக்கப்படின் அவஸ்துவாகத்தா னிருக்கின்றது, நனவைப் போலவே கனவும் பொய்ம்மையானே யொப்பாகு மென்பது பாலர்கள் பரியந்தந் தெரிந்த விடயமே தான். பிராதிபாசிகசத்தையோடு கூடியிருக்கின்ற கனவோடு எங்ஙனம் வியாவகாரிகசத்தை யுடையது சமமாமெனின், ஒன்றுக்கொன்று ஹேது பல பாவங்காணப்படுதலினானும் இலௌகிக ஆசாரத்தினானும் சமமாமென்றறிக. ஜாக்கிரத்திலிது செய்யத்தக்கதா அல்லவா வென வையப்பட்ட யாத்திரை முதலியவற்றில் தேவதைப் பிரார்த்தனை முதலிய வற்றானே சயனிப்பவனுக்குக் கனவிலிது செய்யத்தக்க தெனச் சங்கற்ப முதயமாகவே அவ்வாறே சிந்திக்கச் சிந்தனையாற் குறிப்பிடப்பட்ட நெடுங்கால பூஜை மந்திர ஜபந்துதி முதலியவற்றானே அதனனுகூல வரலாப முளதாகச் சத்துருக்கட்கு முனிவர் சாபாதி தரிசனத்தானேனும், விடிந்த பின் யாத்திரை முதலியவை செய்தலாற் பகைவர் வெற்றி முதலியவை காண்டலின், கனவவுடதங் கிடைத்தலானே கனவில் நோய் சாந்தியாதல் காணப்படுதலினானும், சர்வ சகத்தின் றிதிக்கும் அதற்குச் சமானமான தன்மையினானே அவ்வுருவத் தன்மையே யாதலின் கனாத்

திருஷ்டாந்தங்களீண்டு யதார்த்தங்களேயாம். இம்மோக்ஷ உபாயக் கிரந்தத்தைச் செய்த வான்மீகி முனிவரானே இது தவிர வேறுகவும் பூர்வ இராமாயணுதி கிரந் தங்கள் யாவை செய்யப்பட்டனவோ அவற்றுள்ளும் திருஷ்டாந்தங்கட்குச் சம்ப விக்கத்தக்க அங்கிச சமானத் தன்மையைப் போதிக்கும் விவஸ்தை வெளியாகவே உணர்தல் உணர்த்துவித்தலிற் காணப்படுகின்றது. ஆயின் கேட்கப்பட்டவர்கள் கனவிற்குச் சமானமாகக்கூறியதையேன் விரைவிலேயே தெரிந்துகொள்வதில்லை. சமுசயப்படுவதுதா னேனேவெனின் ? அத்தியாத்ம சாஸ்திர சிரவண சமஸ்கார மில்லாமையானே உலகஞ் சத்தியமென்னு மயக்க மிருத்தலினென் றுணர்க ; சாஸ்திர சிரவணஞ் செய்யினும் அடிக்கடி பயில்வின்மையினுனே உலகங் கனவிற் கொப்பென அறிவதில்லை. வாக்கினுற் சாஸ்திரத்தை முறையாகக் கூறலால் விரை வில் உணர்த்துவிப்பான் முடியாதாம். கேட்பவர்கட்கு விரோதி வாசனை நீக்கமா னது நெடுநாளிற் சாதிக்கத்தக்கதே யாகும். இச்சகமானது கனவு, சங்கற்பம், மானத பூசையிற் பிரசித்தமாய தியான நகரம், முதலியவற்றிற்குச் சமமா யிருக் கின்றபடியினுனே இங்குக் கனவு முதலியவற்றையே திருஷ்டாந்தமாகக் கொடுக் கப்படும், வேறு திருஷ்டாந்தங்களில்லையாம். உலகிலீயும் கனவு முதலிய உபமா னத்திற் சர்வ அங்கிசத்தும் சமானத்தன்மை சாற்றவிழையின் பிரஹ்மத்தின்கண் ணும் கடகமுகுடாதி யுபாதான காரணமாகிய பொன் னுவமானித்தபோது அது போலவே பரிணுமித் தன்மையையேன் கூற விச்சிப்பதில்லையெனின் ? கேட்குதி " அவ்விப்பிர மமபூர்வ மபரமில் " " ஒன்றே யத்துவிதீயம் " என்பதாதி சுருதி களினுனே ஆன்மாவானது அபரிணுமியாம், எதனேடுங் கலவாதாம், தூயதாம், அந்தமின்றியதாம், " இஃதவ் வியத்தம் இஃதசிந்தியமாம், இஃதவிகாரியமென வியம்பிடப்படும் " என்பதாதி மிருதிகளானே அசங்க உதாசீன வஸ்துவைப் பரி ணும ஹேதுத்தன்மை தீண்டாமையின் சித்திற்கு ஜடத்தன்மை யாகாரம் பொ ருந்தாமையினுனும் என்பதாதி யுக்திகளானும் பரிணுமம் பொருந்தாமையானே பரிணமியாத காரணமற்ற வஸ்துவா மெதன்கண்ணே உணர்தற்பொருட்டுப் பரி ணுமி பொன் முதலியவைபோன்ற காரணத்தன்மை யுபமிக்கப்படுங்கால் அதன் கண்ணே யுவமைகொடுத்த முயற்சிகளானும் சருவ அங்கிசத்துஞ் சமான தரு மத்தன்மை கிடைப்பது முடியாததேயாம். அதனையே விரிப்பக் கேட்டி ! விவாத மற்ற மதிமானுனவன் ருர்ஷ்டாந்தத்தை யறிந்து கொள்வதற்காக உபமானத்தி லிருந்து ஏக அங்கிசத்தாலே சமதருமத்தன்மை உபமேயத்திற் கங்கீகரிக்கத் தக் கதாம். உலகினும் இரத்தினந் தீபம்போலக் காணப்படுகின்றது என்பதாதியின் கண் விளம்ப விழையாத அங்கிச வொப்புமையுணர்வு காணப்படுவதில்லையன்றே! பதார்த்தத்தைப் பார்ப்பதில் தீபத்தினின்றும் ஒளிமாத்திரமே யல்லாமல் இடந் தைலம் திரி முதலியவை ஒரு சிறிதும் பொருந்துவதே கிடையாது ; ஏகதேசத் தைப் பொருத்துவித்தலானே உபமேயத்தி னுணர்வுண்டாகின்றது. அர்த்தப் பிர பையோடுந் தீபத்தை யுபமானப்படுத்துவதிற் காணலாமன்றே ! இச்சாஸ்திர சம் பந்தமான சர்வ திருஷ்டாந்தங்கட்கு முபயோகம் யாதெனின் ? உலகம் கன முத லிய திருஷ்டாந்தங்களாற் பொய்யாய்ப் போகும்போது பிரத்தியக் கான்மாவிற்கு ஆகாச சூரியாதி திருஷ்டாந்தமும், பிரஹ்மத்திற்கு மண்ணிரும்பாதி திருஷ்டாந் தமும் ஏகதேச அங்கிச மாத்திரத்தாற் பதார்த்த பரிசோதனத்தால் அறியத்தக்க

தாகிய இலக்கியார்த்தப் பொருட்டாம். அதனதுணர்வுதிக்கவே காரிய சகித அவித்தை கெடும் பொருட்டு அவசியங்கொள்ள வேண்டியதாகச் சர்வ சுருதி சாஸ்திர மகா தாற்பரிய விஷயமாய யான் பிரஹ்மமா யிருக்கின்றேன் என்னும் மகா வாக்கியார்த்த நிச்சயம் கிரகிக்கத்தக்கதாம். யான் வெள்ளையன் தூலன் என்பதாதிப் பிரத்தியக்ஷத்தாலும், ஆரோக்கிய இலாபாதிகட்காக அவுடதபானஞ் செய்ய முயற்சிக்கும் பல தரிசனக் குறியாலும்; பிறர் விவகார சமமாக வுவமிக்கப் படுதலினுலும், சருவ விவகாரங்களேயுஞ் செய்யும் மகாஜன வாக்கியங்களாலும் " மறையோன் வேட்க " என்றற் றொடக்கத்துச் சுருதியினுலும் மிருதியினுலும் தரும சாஸ்திரங்களாலும், அநேகந் தார்க்கிகாது ஊகங்களாலும் தேகமேனும் அதனி னயலேனும் கருத்தாத்தன்மை போக்தாத்தன்மை முதலிய இயற்கைவாய்ந்த ஆன்மாவாகக் கவரப்பெறும், ஆகலின் எங்ஙனம் பிரத்தியக்ஷாதியநேகம் பிரமாண விருத்த அருத்தம் மகாவாக்கிய மாத்திரத்தானே கொள்ளற்பாலது என வினவுதியேல் ? கேட்டி ! குதார்க்கிகரது மதத்தை யனுசரித்து, அறிஞரது பிரத்தியக்ஷ அனுபவத்தைக் கெடுக்கும் முடிவான பயனையுடையனவும், அசுத்தமாய தேகாதி யான்மபாவ விஷயத் தன்மையினுனும், பவித்திரமில்லாத நாய் பன்றி முதலியவற்றின் பிறப்பின் பலத்தையே யுடைமையினுனும் அசுத்தமும் ஆகிய பிரஹ்மம் பிரமாணத்தோடு கூடியதா ? பிரமாணத்தோடு கூடாததா ? பிரமாணத்தோடு கூடியதெனின் ? அத்துவிதத்திற் கானியாம் ; பிரமாணத்தோடு கூடாததெனின் ? பிரமேய ஆனியாம் என்பனவாதி விகற்பங்களானே பரம புருடார்த்தத் தன்மையைக் கொடுப்பதாகிய ஞான யோக்கிய வுணர்வுடைமையைக் கெடுத்துக்கொள்ளக் கூடாது ; தேகாதிகட் கான்மத்தன்மை சம்பவியாதாமென்பது மேற்கூறப்படும். எல்லா ஜனங்கட்கும் யாதோ ருபாதியுமற்று இச்சைப்படி விகாரஞ் செய்யும் சுகத்தை விரும்புதலினுனே தயாளுவாய் ஆத்தரினும் ஆத்தரா யிருக்கும் சார்வாகாதியரையும், மனைவி மைந்தர் மித்திராதியரையும், கண்கண்ட அளவில்லாதவிசித்திர போகசுகத்தைத் தொடர்ந்திராநின்ற இயற்கையாய தன்னிஷ்ட விடயத்திற் பிரவிருத்திப்பிக்கும் சமுசார சாரத்தன்மை முதலிய வசனத்தையும், எவ்வாறு விடமுடியும்? தவக்கிலேசம், பொறியொடுக்கம், தனஹானி ஆயாசத்தோடு கூடிய இஷ்ட புத்திர தனந்தார முதலியவற்றை நீக்குவதான சந்நியாசம் பிக்ஷை வாங்குதல் முதலிய பிரத்தியக்ஷ ஆயிரக் கணக்கான அநர்த்தங்களை முடிவு பேருகவுடையதும், விடயமொன்று மில்லாமல் ஆன்மா மாத்திரமாய் மிஞ்சும் வடிவப் பரம தரித்திர இலக்ஷண மோக்ஷபலத்தைச் சம்பந்தித்த பிரஹ்மாத் மைக்கிய ஞானத்தைத் தருவதாதலின் வைரிவாக்கியத்திற்குச் சமானமான சடமான சுருதி சம்பந்த மகா வாக்கியத்தை யெங்ஙனந்தான் கொள்ளத்தக்கது என வினவின் ? கேட்பாயாக ! கூறியதுண்மையே, விசாரமில்லாதபோது அவ்வாறே யாம், விசாரணை செய்யினே, வைரித் தன்மையானே யறியப்பட்ட வாக்கியம் நித்திய நிரதிசய ஆனந்த ஆன்மரூப பரமபுருடார்த்த அனுபவத்தைச் செய்விப்பதாம் என்று என்போன்ற அனுபவ நிஷ்டரிடத்தில் மேலான ஆத்ததமமாயும் எல்லாப் பிரமாணங்களினும் சிரமா யிலங்குவதாயுமிருந்தே தொடர்ந்து நிற்கும் ; பரமார்த்த பூதமான வைதிக புருடார்த்த தத்துவத்தை யகற்றுவதாகிய வாக்கியம் அதிகப் பிரியமுடைய ஸ்திரீயினுற்

கூறப்படினும் மரண நரகாதி யனர்த்த பரம்பரையைக் கொடுப்பதாதலின் வாக்கியப் புலம்பலே யாகும். அஃதாத்த வசனமாகாது; பிரமாணமு மாகாதாம். ஆயின், கபில கணாத ஜைமினி முனிவர் முதலாயினோர் வேதார்த்தங்களை யுணர்ந்தவராயிருந்தும் எங்ஙனம் மாறாகவே புருடார்த்தத்தையும் அதனுபாய தத்துவத்தையும் நிருபித்தவராயினர்? தாங்களோ அதற்கு மாறாக நிருபிக்கின்றீர்களே, இவற்றுள் தாங்கள் கூறுவதில் யாது சிறப்புளது எனின்? ஹே மைந்த! எம்மதியின் சம்பந்தத்தானே தத்துவ சாக்ஷாத்காரஞ் சிவன் முக்தி யிலக்கண சுபப் பிரவாக விதிபாமோ அத்தகைய மதி எங்களுக்குளது; அதனால் முற்கூறிய வகையே அபரோக்ஷ அனுபவ யோக்கிய பரம புருடார்த்தத்தை யீயும் சர்வ சுருதி வேதாந்த சாஸ்திரங்கட்கும், ஏகமகா வாக்கியார்த்த முடிவு பேறடைதல் பலமாகவாம்; ஆகலின், சுருதியின் கருத்தைத் தழுவாததாய்த் தருக்க முதலியவற்றானே புஷ்டியை யடைந்த சாங்கிய கணாதாதி பிரமாணத்தினும் மகா வாக்கிய அருத்த ரூப, அபரோக்ஷ அனுபவ யோக்கிய அருத்தத்தையுடைய பிரமாணம் எங்கட்குளது, அவர்கட்கின்றாம், குதர்க்கத்தானே கெடுக்கப்பட்ட மதியினானே சுருதியின் கருத்தை நிச்சயிக்கத்தக்க மதியை யிழந்துவிட்டார்கள்.

18 - வது திருஷ்டாந்த நிருபணம் முற்றிற்று.



## 19 - வது பிரமாண நிருபணம்.

இப்போது, திருஷ்டாந்தங்களின் அருத்தப் பிரசங்கத்தானே பிரமாண தத்துவத்தை, காண்போன் காட்சியாதிகட்குச் சாக்ஷியாய நித்திய அபரோக்ஷப் பிரஹ்மமேயென விரிவாகச் சோதிக்கப்படும். பிரசங்கத்தால் வந்ததைக்கூறி அதனால் வந்த பிரமாண தத்துவத்தை நிர்ணயிக்க இச்சித்துப் பிரகரணத்திற்கூறியதின் வாயிலாகத் தொடங்குபவராய் ஸ்ரீ வசிஷ்டர் கூறல்:—விசேஷத்தால் விளம்பும் பொருட்டு விளம்ப விழைந்த அங்கிசத்தானே சமான தருமத்தன்மை எல்லா வுபமானங்களிலும் கவரப்பெறும்; இல்லையாகி யெல்லா வொப்புமையுமாக வேண்டுமென்னின், உபமான வுபமேயங்கட்கு யாது பேதமுளது? ஆவைப்போன்றது ஆமா வென்பதாதியின்கண்ணே ஜாதியாதியானும் ஒப்புமைகூற விரும்பில் வேற்றுமையில்லாமையின் உபமான மாத்திரமே யில்லையென்பதாகக் கெடும். திருஷ்டாந்த புத்திக்குப் பலமியாதெனின்? தற்பத துவம்பதார்த்த சோதனை யுபயோகியாய அவ்வத் திருஷ்டாந்த மதியுளதாகவே ஏகமாயும் அத்துவிதீயமாயு மிருக்கும் ஞானவடிவ ஆன்ம தத்துவமே சர்வ வேதாந்த தாற்பரிய விடயமாதலின் சாஸ்திரப் பொருளாம்- அதனைக் கோசரிக்கும் அகண்டாகார விருத்தி யுதயமாதலின் அதனால் விளக்கப்பட்ட மகா வாக்கிய அருத்த வடிவப் பிரஹ்ம சொருபமாகவே நன்கு சித்தித்த அஞ்ஞான மதன்காரிய சாந்தியாம் நிர்வாணமே திருஷ்டாந்த புத்தியின் பலமெனக் கூறப்படும். அதனையே வெளிப்படையாகக் கூறுவேன் கேட்டி! ஆகலின், அதனினும் வேறாய தன்மையோடு அதன்பாலுற்ற மிகுதியாய தருமமுடைமையாம், என்பனவாதியாக் கொண்டு இஃதென்னே எல்லா அங்கிசத்திலுந் திருஷ்டாந்தமா? அல்லது சிற்சில தரும அங்கிசத்தா? என்பனவாதி விகற்ப விரிவால் யாதொரு பயனையுங் காணோம்.

திருஷ்டாந்த தார்ஷ்டாந்த விகற்பஞ் சாலும், மற்றெதனாற் பிரயோஜனமெனின்? பதலக்ஷியார்த்த தாற்பரிய அநுகூலமான கற்பித தருமமுடைமை முதலிய எந்த யுக்தியினாலேனும், மகா வாக்கியப் பொருளைக் கவர வேண்டும். சர்வ சமுசார முஞ் சாந்தியாகவே அதனுள் ளடங்கிய திருஷ்டாந்த யுக்தியாதிகட்கும் பாதம் வருதலின் போலித்தன்மையேயாம் எனின்? பலங் கிடைத்த பின்னர்ச் சாத னங் கெடின் யாதொரு தோடமு மின்றாமென்றுணர்க; சாந்தியே பரமமான மோக்ஷமென வுணர்தி. அதையடைவுற மிக முயற்சியுடையவனாதி, புசிக்கத்தக்க தாக அன்னமானது சித்தித்திடுமாயின் அதன் சித்தியிற் சாதன பூதங்களாய திருஷ்டாந்தாதி விகற்பங்கள் பொய்யாகப் போவதனாலென்ன அநிஷ்டம் வந்து விடும்? "நிரந்தர மண்ணனுக் கெனவே நினக்கும், மருந்தைக்குடிதலை மயிர் நீள் வளரும்" எனப் பிரவிருத்தி காரணங்களாகவும் சிகைவிருத்தி யகாரணங்க ளாகவு மிருப்பினும் இஷ்டசாதனத் தன்மையால் ஏகதேசமாக ஒப்பான உபமா னங்களாலும் உபமேயங்களாலும் பாலனது மருந்து குடித்தலாம், அவனுக்கதன் கண் ணிஷ்டசாதனத் தன்மையை யுணர்த்தும்பொருட் டுவமிக்கப்படு மூலகத்தில் அவ்வாறே யிங்கு மென நினைக. ஆண்டநான்ம விடய திருஷ்டாந்தம் பிரகிரு தத்தி னுபயோகமாக உதாகரித்துக்கொண்டே சாந்தியாதிகளில் முயலலாம்; கல் லிடையி லுண்டாகிக் கனத்துக் கண்ணின்றிய மண்டூகத்தைப்போல விவேகமில் லாத புருடனால் விஷயபோகங்களி லீண்டு நிலைபெறல் கூடாதாம். இவ்வாறாய திருஷ்டாந்தங்களா லறிவிக்கப்பட்டுச் சாந்தி சாஸ்திரார்த்தங்களையுடைய விசார சீலனால் மகா யத்தனத்துடன் மனத்தை வெற்றிகொண்டு பரமபதமடையத் தக் கது. முமுக்ஷுவானவன் சாஸ்திர உபதேசம் அதனப்பியாசம் நற்குணம் நன் மதி சாஸ்திராதிகளையும் ஆன்மாவையும் அறிந்தவர்கள் சங்கமென்னு மிவற் றோடுகூடிப் பூர்வ பூர்வ அந்தரங்க சாதன முறையாக அடைவுற்ற "பன்பெருங் குருபரன் பணிவிடையோடு, மன்பொடுந் தினந்தின மாற்றிடலான, முன்பரு மறையின் முடிக் கேள்வியினான், எண்பது கிருச்சிர பலமெய்திடுமே" "மாதம் மாதம் மகிழ்சத வருடம், தாதெவன் வேட்பன் பரிமேதத்தால், சாதெவன் சின மே சருவர்பாலிலனே, ஒதிருவரினுஞ் சினமில னுயர்ந்தோன்" என்பதாதி மிரு திப் பிரசித்த தருமங்கள், குரு பணிவிடை முதலியவற்றிற் குபயோகமான அருத் தங்கள், சாஸ்திர தாற்பரிய அதிசயந் தருமருத்தங்கள் என்பவற்றைச் சம்பாதிப் பதே தொழிலாக வுடையவனாய் விசாரிக்க வேண்டும். விவேகமுடையவன் மீண் டும் பிறப்பிறப்பைக் கொடாததும், துரியபத மென்னும் பெயரை யுடையதும், "இருமையில் சிவத்தை யெண்ணுவர் நான்கதாய்" என்னுஞ் சுருதியில் நான் காவது பதமெனப்பெயரிட்ட ஏழாவது பூமியிலிருப்பதா மிலக்கணம் வாய்ந்ததும், சாந்தி வடிவதும் ஆகிய ஆன்மாவி லிளைப்பாறுவதா மோக்ஷமடையும் பரியந்தம் ஆன்ம விசாரஞ் செய்தல் வேண்டும். அதனை யடைந்தாற்றான் செய்யத்தக்க யாவும் செய்து முடிந்தனவாம். துரியபத அடைவினாலடைந்த விசிராந்திச் சுகத் தை யுடையவனாய் சமுசார சமுத்திரத்தைக் கடந்தவனாயும், இருப்பவன் இல் லறத்தோ னாயினும், துறவியாயினும் அவனுக்கு, இகலோக அருத்த பலன்கள் பரலோக அருத்த பலன்கள், என்பன எவையுங் கருமஞ் செய்யினும் செய்யா விடினும் புண்ணிய கருமத்தாலேனும் பாவ கருமத்தாலேனும் கிடையாவாம்.

சுருதி ஸ்மிருதிகளின் சிரவண மனன வடிவ மனோவிருத்தி விக்ஷேபங்களுமில்லையாம். அவன் மந்தர பருவதமில்லாத பாற்கடல்போல எவ்வாறிருந்தானோ அவ்வாறே யிருக்கின்றான். இப்போதியம்பியது முரண்பட்டதா யிருக்கின்றது, இல்வாழ்வோன், துறவியென அவ்வவ்வாசிரம நியத தருமநிஷ்டத்தன்மை, பாவத்தாலும் புண்ணியத்தாலும் தொழில் செய்யினும் செய்யாவிடினும் பயனில்லையென நியதமில்லாத தரும நிஷ்டத்தன்மை, ஆண்டு மந்தரமின்றிய மாக்கடல் போலென அத்தியந்த விக்ஷேப நீக்க பரமான திருஷ்டாந்தம், எவ்வாறு பொருந்தும் எனின்? ஆன்ம தத்துவ விடயத்தில் முற்கூறிய ஏகதேசமான ஒப்புமையைக் கவர வேண்டும். அதனாற்றா னிவ்வாறு கூறியதாகும். உபமானங்களின் ஏகதேச அம்சம் உபமேய சம தருமமாமென இங்கு கருதியதாம், அறியத்தக்கபொருளை அறிவதற் கனுகூலமா யிருத்தலின் அவசியம் இவ்வாறே யறியத் தக்கதாம், இருதயத்துள் நுழையாமல் அயலாரைக் கண்டிக்கும்பொருட்டு வாயில் மாத்திர முடைத்தான ஞானமூக்கனுகலாகாது, போதசஞ்சு (மூக்குடையவன்) வைப்போலிருப்பினோ தானடைய வேண்டிய புருடார்த்தமே கிட்டாதாம். ஏதாவது யுக்தியினானே அறிய வேண்டியதை யவசிய மறியவே வேண்டும், திருஷ்டாந்தத்தைக் கண்டிக்க முயலினோ மகளுக்குத் தீங்குவருமென் றறியாமல் மருமகனைக் கெடுக்கும் வரகாத நியாயம்போலாய் விடும். ஞான மூக்கர்கள் தக்கன தகாதன பாரார், வியாகுலமுடையவரே யாவர். ஆண்டு ஞான மூக்கரு மிலக்கணத்தானே இருவகையினராவர். இருதயத்திலே சிதாகாச ரூபமாயும் விசிராந்திச் சுகரூபமாயும் அனுபவ ரூபமாயும் இருக்கும் பரமார்த்த வஸ்துவின் ஞானபலமாகிய மோக்ஷத்தை யநர்த்தமாக யாவன் கூறுகின்றானோ அவன் ஞான மூக்கனுவன். எவ்வஞ்ஞானி அபிமானங்களாலும் குதர்க்கங்களாலும் ஞானத்தையும் அதன் சாதனத்தையும் விகற்பித்துக்கொண்டு நிர்மலமான ஆகாயத்தை மேகம்போல அந்தக்கரணத்தில் நிர்மலமா யொளிரும் ஆன்ம வடிவப் போதத்தைக் களங்கமுடையதாகச் செய்பவன் இரண்டாவது ஞான மூக்கன். பிரசங்கத்தால் வந்த ஞான மூக்கன் இலக்கண மிதுவாமெனக்கூறி விவகாரத்திலும் ஜீவன் முக்தனுக்கு மந்தரமற்ற மாக்கடல்போன்ற திருஷ்டாந்தத்தாற் கிடைத்த நிட்கிரியத் தன்மையை பிரத்தியக்ஷாதிப் பிரமாண தத்துவ பரீக்ஷை வாயிலாக ஜீவனுக்கு அத்விதீய கூடஸ்த சின்மாத்திர இயற்கை விற்பத்தியாற் பொருத்திக் காண்பிப்பான், றொடங்கல்:—இவ்வுலகத்திற் சலங்கட்குச் சமுத்திரம்போலச் சகலப் பிரமாண பிராமாணிய சத்தைகட்கும் மூலமாயும் இளைப்பாறு மிடமாயு மிருப்பதால் ஆதாரமான பிரத்தியக்ஷப் பிரமாணமே முக்கிய தத்துவமாகும். ஆகலின் தத்துவமாக வருணிக்கப்பட்ட அந்தப் பிரத்தியக்ஷத்தையே கேட்பாயாக. உத்தமர்கள் சர்வப் பிரமாணங்கட்கும் இந்திரியங்கள் சாரமாவனபோலச் சர்வ இந்திரியங்கட்கும் அபரோக்ஷ ஞானம் சாரமா மென்பர். அதுதான் முக்கியமான பிரத்தியக்ஷம் யாது அவச்சேத பூதமாயும் ஆசிரய பூதமாயும் விடய பூதமாயும் குடத்தை யானுணர்கின்றேன் என்னும் திரிபுடி யுணர்வாற் சித்தமாமோ அதுவும் பிரத்தியக்ஷமே. திரிபுடியை யனுசரித்துப் பிரகாச வடிவமா யிருப்பது அனுபூதி. அறியப்படுவதாய திரிபுடியை யுணர்வது வேதனமாம், முன்றன் பொருட்டுப் பிரகாச வடிவமாக வியாபித்திருப்பது பிரதிபத்தியாம், அக்கரப் பொருளைத் தாண்

டாமல் திரிபுடியை வியாபித்திருக்குஞ் சாக்ஷியாகிய சின்மாத்திரத்திற்குப் பிரத்தியக்ஷமென விவகார பூமியில் நாமந் தரிக்கப்பட்டது அச்சாக்ஷியே ஜீவனாமென்று பிராணனைத் தரிக்கும் நிமித்தங்கொண்டு கூறப்படும். அச்சாக்ஷியே விருத்தியுபாதிகொண்டு ஞானமெனப்படும். அகந்தை ஞானமுடையவனாகிய புருடனாயோ பிரமாதாவெனப்படும். எவ் விடயாகார விருத்தியினால் புறவிடயத்திலுள்ள ஆவரண நீங்க வெளிப்படுகின்றதோ அது விடயம் எனப்படும். இவ்வாறு சாக்ஷியே முறையாக மூன்று விதத்தையு மடையும். வியஷ்டியின்கண்ணே யிவ்வாறாகச் சமஷ்டியின்கண்ணும் இரணிய கருப்பரிடத்தி லிவ்வாறே காணவேண்டும்; நீர், அலை முதலிய வடிவமாக எங்ஙனம் விளங்கா நிற்குமோ அங்ஙனமே நானாவிதம் முறை முறையாய் மயல்களைச் செய்விக்கும் சங்கற்ப விகற்பப் பிரதானமான அந்தக்கரணங்களி னாதியாஞ் சமஷ்டிகளால் உலக வடிவமாகச் சாக்ஷியே விளங்கும். அச்சாக்ஷி ரூபமாய பிரத்தியக்ஷமே முன்னர்ச் சிருஷ்டியி னாதியிற் காரண மியாதொன்று மின்றியே யுலக லீலையால் விரைவில்தானே விளங்கி யுலக வடிவமாகிய தன்பாலே தானே காரண வடிவமாயது. ஓரிடத்தில் உண்மையான காரிய காரணத்தன்மை கூடாமையினால், அசத்தாயினும் அஞ்ஞானத்தாலாகிய ஜீவனுக்குச் சத்துப் போன்றுளது. அவிசாரத்தோடு கூடிய ஆன்ம சொரூபத்தையுடைய இப் பிரகிருதியின்கண் ணுலக ரூபமும் வெளிப்படையாய் வரும். இங்ஙனம் இவ்வுலகம் ஆரோபிக்கப்படும். அபவாத மெவ்வாறென்னின்? இவ்வண்ணம், விசாரமும் அதனால் விளக்கப்பட்ட சாக்ஷாத்காரமும் சுயமாகவே யிருந்து தன்னிடத்திலிருந் துண்டாகி யுண்மையாய்த் தன் வடிவமாகவே யிருக்கின்ற வுலக தேகத்தை அஞ்ஞான நீக்கத்தாலே யழித்துத் தன் வடிவமாயும், ஆவரண மற்றதாயும், மகத்தாயும் அபரிச்சின்னமாயும் பிரத்தியக்ஷமாயும், இருக்கும் பரம புருடார்த்த ரூபமாய்ச் சீக்கிரம் செய்கின்றதென்ப துபசார மாத்திரமாம். ஆயின் அவ்விசாரமேனும், முடிபான சாக்ஷாத்கார விருத்தியேனும், மோக்ஷமென எஞ்சும், அதற்கு அன்னியத்தால் நாசமேல் எல்லையில்லாது செல்லலே யாகுமெனின்? விசாரமுடையவன் பரமான்ம வடிவமா யாகும்போது விசாரமும் தோற்றமற்றதாகி யுரையுணர்வுகட் கயோக்கியமாகிப் பரமான்மாவாகவே எஞ்சா நிற்கும். கூறிய இவ்வண்ணம் உலகம் பாதிக்கப்பட்டுத் தனது ஞானேந்திரிய கருமேந்திரியங்களோடு மனது சேட்டையற்றுச் சாந்தி யடைந்தபோது பாதிக்கப்பட்டது மீண்டுஞ் சத்தியமாகத் தோற்றாமையின் செய்யப்பட்ட கருமங்களினானும் செய்யப்படாத கருமங்களினானும் இகலோக பரலோகப் பிரயோஜனங்கள் யாதொன்றுமின்றாம். பிராரத்த அதீனமாய சலன ஆபாசத்தாற் கிரியையும் அதன் பயனுண்ணும் போக்தாத் தன்மையுமின்றாம். மனமானது ஆசையெலா மற்றுத்தொழிலெலா மற்றுச் சாந்தியை யடையின் அசைக்கப்படாத யந்திரம்போலக் கருமங்களிற் கருமேந்திரியங்கள் பிரவிருத்திக்கவே மாட்டாவாம், மனது சாந்தியாகவே கருமேந்திரியங்களின் பிரவிருத்திக்கு மேதுவில்லாமையின் அவை சலியாவெனக் கருதித்தான் மந்திர மலையற்ற பாற்கடலென்னுந் திருஷ்டாந்தங் கூறியதாம். அறியாதவன் கண்ணுக்குச் செய்வதுபோலக் காணப்பெறினும் ஜீவன் முக்தர்கட்குச் செய்கைத்தோற்ற மின்றாம். ஒன்றற்கொன்று முட்டிக்கொள்வதற்கு உள் துவாரத்தோடு மரத்தாற் செய்யப்பட்ட இரண்டு ஆட்டுக் கடாய்களின் சல

னத்திற்கு, உள்ளிருக்கும் கயறிழுக்கப்பட் டேதுவாவதேபோல மன யந்திரத்
தின் சஞ்சலத்திற்கு விடயத் தோற்றமாம் வேதனமே யேதுவா மென்பர். மனஞ்
சஞ்சலிப்பதற்கு விடயமின்றிய வேதன மேதுவாகாமையின் விடயத்தோடு கூடி
யதாகவே அது கூறப்பட வேண்டும். வேண்டவே ஆண்டு மனதசைவதற்கு
முன்னரும் விடயஞ் சித்தித்திருப்பதாகக் கூறவேண்டும். விடயங்கள் மனோமய
மென முன்ன ருரைத்திருத்தலின் அவ்வாறே விடயஞ் சித்திப்பதற்கு முன்
னரே மனத்தின் சித்தியாமெனக் கூறவேண்டும்;வேண்டவே, அன்னியோன்னிய
ஆசிரயமாம் எனின் ? மாயையோடு கூடிய சிதாகாசத்துக்குட் சர்வமுஞ் சமஸ்கார
ரூபமாக அதிஷ்டான சத்தையைப்பற்றி யிருந்தே தோற்றுகின்றது ; காற்றினுள்
ளசைவிருப்பதேபோல வேதனத்திற்குள்ளும், புறப்பொறிகளாற் கவரப்படுதல்
மனதாற் சிந்திக்கப்படுதல் என்னு மிரண்டினுக்கும் விடயங்களாய பதார்த்தங்க
ளால் நிறைந்து வியாகுலஞ் செய்யப்பட்ட வுலகமான துளதாம். ஆயினெங்ங
னம் ஒரொருகாற் றோற்றல் அதனுற்பத்தி முதலியவற்றின் விவத்தையாதல்
எனின் ? தூய்தாயும் எல்லா வடிவமாயு மிருக்கும் வேதனம் (சேதனம்) கரும
பரிபாகத்தாலாம் விவஸ்தையாலே பிராணிகள் கரும போகப் பொருட்டுத் தோன்
றுகின்றபடியே யவ்வவ் வடிவமா யுண்டானதுபோல விரிந்த திக்குகால வெளி
யுட் பதார்த்த வேடதேகங்களைத் தரித்து விளங்குகின்றது. எல்லா வடிவமான
ஆன்மா மோகத்தாற் றன்னைத் தேகாதி திருசியம்போலக் கண்டு அவையே
யெனது சொரூபமெனக் கருதி ஜீவரூபமா யிருந்து விளையாடும் ; இது பொருத்த
முடையதே யாம். எவ்விடத்தில் எவ்வடிவமா யெவ்வாறு புலப்படுகின்றதோ
அவ்விடத்தில் அவ்வடிவமா யவ்வாறேதான் தோற்றுகின்றது. வெளிப்படை
யாக விளம்பக் கேட்டி ! சர்வாத்மகமாய பொருள் எவ்விடத்தி லெவ்வாறு இனிய
வுல்லாசத்தை யடைகின்றதோ அவ்விடத்தி லவ்வாறே அவ்வடிவ முடையது
போல அதிவிரைவில் விளங்கிக்கொண் டிருக்கும். காணும் பொருள் எல்லா
வடிவமாகவு மிருத்தலினானே,காணப்படுபவற்றின் றன்மையை யடைந்ததுபோற்
றோற்றுகின்றது, போலெனக் குறிப்பித்த திருசியம் பொய்யேயா மென்பதை
நன்கு கூறக் கேட்டி ! திருஷ்டா விருந்தாற்றான் றிருசிய மிருக்கும், இல்லாவிடி
னிராதா மாதலினானே திருசியம் மெய்யாகாதாம். திருக்கு வடிவமான திருஷ்டா
திருக்கு சொரூபத்தினின்றும் நழுவித் திருசியத்தன்மையை யடையுமாயின்,
திருஷ்டாவில்லாமல் திருசிய சித்தியே யுண்டாகமாட்டாது ; நழுவாம லிருக்
கினோ அத் திருஷ்டாவிற்குத் திருசியமா யிருக்குந்தன்மை, பழுதையின் இயற்
கையினின்றும் நழுவாததற்குப் பாம்புப் பான்மைபோலும்விவர்த்தமாத்திரமாய்ப்
பொய்யேயாகும் ; ஆகவே காரியப் பொய்ம்மையானே அதனை யபேக்ஷித்த கார
ணத்தன்மைக்கும் பொய்ம்மையே சித்தித்தலின் பிரஹ்மம் காரணத்தன்மை யற்
றதேயெனச் சித்தித்தது. இவ்வண்ணம், பிரத்தியக்ஷதத்துவத்தை யாராயின்
அத்வைதமா யிருக்கும் பிரஹ்மமே சித்திக்கும்; சித்திக்கவே இங்நிலை பெற்ற பிர
த்தியக்ஷமே யுண்டாக்குவதெனத் துணியப் பெறும். அனுமானாதிகளோ பிரத்தி
யக்ஷ வாயிலாகவே யுண்டாகின்றமையினானும், அதுவதுவாக முடிவுபெ றடை
தலினானும், அதனங்கிசங்களே யாகும். ஆகவே சர்வப் பிரமாண தத்துவம் ஆன்
மாவே யென்பதாம். சிங்க நோக்கு நியாயத்தால் தெய்வ நீக்கத்தை நினைந்து

புருட முயற்சிக்கே இப்பயனெனக் கூறல்:—உண்மையாகத் தனது முற்செய்த முயற்சி மாத்திரத்தையே தெய்வமெனக் கற்பித்து அதனதீனமாக யானிருக்கின்றேனென்று கருதி அதனுபாசனையையே செய்துகொண் டிருக்கப்பட்டவனாற் கற்பிக்கப்பட்ட தெய்வசத்தார்த்தத்தைத் தூரத்தள்ளிவிட்டுப் பொறிகளை வெற்றிகொள்வதிற் சூரனாகிய அதிகாரி தன் முயற்சியினாலே அந்தப் பரமபதத்தைத் தன் முயல்வினாலே இருதயத்துள்ளே யடைவன். சுயமாகவே மதியினால் மூன்று பரிச்சேத மற்றதாயும் விசுத்தமாயு மிருக்கும் பரமபதத்தைச் சாக்ஷாத்காரமாக அடைய வேண்டும்; அடையும்வரை ஆசிரிய பரம்பரைகளின், பரமார்த்த நிஷ்டையோடும் பிரமாண பரிசுத்தியோடும் கூடியிருக்கு முபதேச முறையே ஆராய்க.

19 - வது பிரமாண நிருபணம் முற்றிற்று.



## 20 - வது நல்லொழுக்கங் கூறல்.

இப்போது, பிரஞ்ஞை விருத்தி யடையும் பிரகாரமும், மகா புருடரது இலக்கணமும், நல்லொழுக்க முறைமையும், இவை யொன்றினாலொன்று வளர்தலும் கூறப்படும். கூறிய மெய்ஞ்ஞானம் பெரியோரிடத்திலே யினிது வாழும், பிறரிடத்திராதாம். பெரியோரதந் தன்மையும் இனி யியம்பும் நல்லொழுக்கத்தானே சித்திக்குமென நல்லொழுக்கத்தைக் கூறத் தொடங்கிய ஸ்ரீ வசிட்ட பகவான் கூறல்:—அதிகாரி முதலில் ஆரியரது சங்கத்தாலும் அவர்கள் உபதேசிக்கும்படி நடத்தல், சிக்ஷைப்படல் ஊகஞ்செயல் முதலியவற்றானே பிரஞ்ஞையை மிக்க முயற்சியாய் வளர்க்க வேண்டும்; பின்னர் இயம்பப்பெறும் மகா புருட இலக்கணங்களால் தனக்கும் மகா புருடத் தன்மையைச் சம்பாதிக்க வேண்டும். இயம்பிய எல்லாக் குணங்களும் ஒருவன்பா லின்றேனும், யாவன் யாவன் எவ்வெக் குணத்தால் நிறைந்தவனாக அறியப் பெறுகின்றானோ அவ்வவன் அவ்வக் குணத்தாலே பிறரைக் காட்டினும் சிறப்புடையவனாதலின் அவ்வவ னிடத்தினின்றும் அவ்வக் குணத்தை விரைவிற் கேட்டுணர்ந்து தன்மதியை யிவண் வளர்க்க வேண்டும். இந்தச் சமாதிகுணப் பிரஞ்ஞை யுடைமையாய மகா புருடத் தன்மையானது மெய்ஞ்ஞான மில்லாமன் மற்றெதனாலும் சித்தியடையவே மாட்டாது. நல்லோரால் ஒழுகப்பட்ட நல்லொழுக்கங்களும், சாந்தியாதிகளும், மானமின்மை முதலிய நற்குணங்களும், ஆன்ம சுகத்தை வெளிப்படுத்தலாற் புகழத்தக்கனவாய்ப் புதிய அங்குரங்கள் மழையினாற்போல மெய்யுணர்வால் விருத்தியை யடையும். சாந்தியாதி குணங்களானே மேன்மையான மெய்யுணர்வானது, அன்ன வடிவமாய யாகங்களாலே நென் முதலியவை யுண்டாதற் கேதுவாய வுத்தம மழைபோல விருத்தியாம், ' அனலிற் பெய்த வாகுதி யினிதா, யினனைச் சார்ந்தேயிருக்குங் கண்டா, யினனினின்று மின்மழை பெய்யும், கனமழை தன்னாற் கழனிகள் விளையும், சனமதனாலே சரிவரவுறுமே " என்னும் மிருதிய மிதனையே கூறுகின்றது. ஒரே போழ்தினில் ஒன்றினாலொன்று விருத்தியடைவதற் கொத்த திருஷ்டாந்தத்துடன் மீண்டு மதனையே கேட்பாயாக. சாந்தியாதி குணங்களானவை ஞானத்தால் விருத்தியை யடைகின்றன; ஞானமுஞ் சாந்தியாதி குணங்க

ளால் விருத்தியை யடைகின்றது. இவை பரஸ்பரம் தாமரையுந் தடாகமும்போல
விருத்தியடையும்; நீராற் றாமரைபோலத் தாமரையாலும் தடாகம் தண்மை நன்
மணம் அழகு முதலிய குணங்களானே விருத்தியடைவது வெளிப்படையே
யன்றோ! இவ்வாறே ஞானமும் நல்லொழுக்கமும் பரஸ்பரம் காரணமாய் விரு
த்தியடைவனவே யாம். நல்லொழுக்கத்தானே ஞானம் வளரும், ஞானத்தானே
நல்லொழுக்கம் வளரும்; இந்த மெய்யுணர்வும் நல்லொழுக்கமும் ஒன்றற்கொன்று
சாதகமாகியே வளரும். மதிமானனவன் சாந்தியினாலும் பிரஞ்ஞையினாலும்
மகா புருடத்தன்மையினாலும், திட முயற்சியினாற் சிரவணாதி முறையாய் ஞானத்
தையும் நல்லொழுக்கங்களையும் பயில வேண்டும். ஹே குழந்தாய்! இவ்வுலகத்
தில் ஞானம் நல்லொழுக்கம் என்பவற்றைச் சமமாகப் பயிலாதவரை அதிகாரிக்கு
அவ்விரண்டி லொன்றுகூடச் சித்திக்கமாட்டாது. அவற்றிற்கு விருத்தியாம்
பலமும் ஒரே காலத்தில் உண்டாகின்றதென்பதிற் றிருஷ்டாந்தங் கூறக் கேட்பா
யாக; பக்குவமா யிராநின்ற நெல் வயலைக் காத்திருக்கும் பெண்ணிற்குப், பறவை
களை யோட்டுவதில் வேறொரு காரியத்தைச் செய்யாவிடினும் வித்தாரமான கா
தாளத் தொனியோடு செய்யும் பாடலினாலே, சம்பந்தித்து வந்த பறவைகள்
ஓடுதலோடு பாடலின் மகிழ்ச்சியும் சம காலத்திற் கிடைப்பதுபோல ஞானத்
தடைகளாகிய இராக மாறாதிகளை நீக்குவதில் அவாவில்லாதவனாகி, அதனானே
கருத்தாவாகாமல் ஞான சாதனமா யனுஷ்டிக்குஞ் சிரவண நல்லொழுக்கங்களை
மாத்திரஞ் செய்துகொண் டிருக்கும் புருடன், சம்பந்தித்துவந்த தடைநீக்க வாயி
லோடு சமமாகப் பரமபதத்தையு மடைகின்றான். இவ்வண்ணம் இந் நல்லொ
ழுக்க முறையானது என்னாலுனக் குபதேசிக்கப்பட்டதுபோலவே யிப்பொழுது
உத்தரப் பிரகரணத்தில் ஞானக் கிரமங்களும் நன்றாக உபதேசிக்கப்படும். (இது
மேற்கூறப் போவதின் பிரதிஞ்ஞை யாகும்). சாதனக்கூட்ட வுபதேசத்தைப் பய
னைப் பகரும் வாயிலாய் முடித்துக் கூறுகின்றார்:—மதிமானுப முமுக்ஷுவால்,
கீர்த்தியையும் ஆயுளையும் கொடுப்பதும், புருடார்த்த பலத்தைக் கொடுப்பதும்
ஆகிய இவ் வுத்தமோத்தமமான கிரந்தத்தை ஆத்தராயும் ஆன்ம ஞானியாயு
மிலங்கு மாசிரியரிடத்தில் இனிதன்போடு சிரவணஞ் செய்ய வேண்டும்; குரு
சம்பிரதாயமாய்ச் சிரவணஞ் செய்தாற்றான் பெரும்பயனைக் கொடுக்கும். கலங்கிய
நீரானது தேற்றும் பொடியாற் றெளிவை யடைவதுபோல நீயுமிச் சாஸ்திரத்
தைச் சிரவணித்து மதியின் றெளிவினாலே சாதன மகிமையின் பலத்தால் அந்தப்
பரமபதத்தை யடைவாய். கூறிவந்த சாதன சம்பத்தோடு மனன சீலனாய் வாழும்
முனிவனுடைய மனது அறியத்தக்க ஆன்ம சொரூபத்தை யறிந்து அதன் வலுவி
னாற் சுதந்திரமாய்ப் பரமபதத்தை யிச்சியாவிடினு மடைகிறது; கேவலஞ் சாதன
மகிமையாலே யிவ்வாறாகின்ற தென்பதாகவில்லை; மற்றோ, அறியத்தக்க தத்துவ
வியற்கையினாலும் என்றறிக. ஞானாதீனமாய் ஞானவடிவ அகண்டப் பிரஹ்மா
கார,விருத்தியோடு கூடிப் பிரகாசித்துக் கொண்டிருத்தலின் அஞ்ஞானத்தை
யும் அதன் காரியங்களையும் உதறி யெறிந்துவிட்டு யாவற்றையு மறிந்துகொண்
டே விழித்திருக்கும் அகண்டமாய உத்தமோத்தம பதமானது மனதை விடுவதே
யில்லை; அஞ்ஞானம் அதன் காரிய முதலியவற்றோடு மனதும் பாதிக்கப்படுவதே
யாகும்; இது மெய்ஞ்ஞானிகட்கு அனுபவமே யாகும். அவ்வாறே “உடலினை

யகமென் றுணர்ந்திடு முணர்வை யொழித்திடு மெய்யுணர்வதுதா, னுடலினை யக மென் றுணர்ந்திடு முணர்வையொத்தது திடமதேயாகி, விடலருந் தனது வடிவிலே யெவற்கு விளைந்திடு மன்னவன் வேண்டாம், விடறுய ரெனினும் விட்டெலாத் துயரும் வீட்டினை யடைந்து வாழ்குவனே."

20-வது நல்லொழுக்கங் கூறன் முற்றிற்று.

2-வது முமுக்ஷு விவகாரப் பிரகாணம் முற்றிற்று.



ஓம் மகா கணபதயே நம:

## மூன்றுவது உற்பத்திப் பிரகரணம்.

### 1-வது பந்த ஹேது வருணனம்.



மங்கலம்.

சத்திய ஞான வநந்தவொன் றஜர சாஸ்வத நித்திய விபுவாய்ச்
சுத்தவுட் பிரம ரசாயன மாகிச் சுககன பூரண பரமாய்
மத்தியுற் பத்தி முடிவிறற் சோதி மாயையின் விரிவினுன் மீண்டுந்
தொத்திய வுலகாய் மாயையும் பயமி றாயவி நாயகற் றொழுவாம்.

இப்போது ஞானத்தினுலேயே ஆன்மாவிற்கு மோக்ஷமே யல்லாமற் கரும சமாதிகளினுலே யில்லையென்பதும், ஆன்மாவானது தன்னைத்தானே யறியாமல் தன்பால் அசத்தாய திருசியவுலகைச் சிருட்டிப்பதும் வருணிக்கப்படும். சாஸ்திரங்களி லுரைத்த சாதனங்களோடு கூடிய அதிகாரிக்கு, "விவேகமுடையவன் மீண்டும் பிறப்பிறப்பைக் கொடாததும், துரியபத மென்னும் பெயரையுடையதும், சாந்திவடிவதும் ஆகிய ஆன்மாவி னிளைப்பாறுவதா மோக்ஷமடையும் பரியந்தம் ஆன்ம விசாரஞ் செய்தல் வேண்டும்" என்பதாகத் தத்துவஅபரோக்ஷ ஞானம் வரைசெய்ய வேண்டியதாய் விதிக்கப்படும் விசாரப் பிரகாரத்தை முன்னிரண்டு பிரகரணங்களில் வருணிக்கப்பட்ட எல்லாச் சாதனங்களையு முடைய வரும் அதிகாரிகளுக்குட் சிரேஷ்டரும் ஆகிய ஸ்ரீ இராகவர் பொருட்டு, "இப்போது ஞானத்தின் முறைமையானது இனிதாகச் சாதன முபதேசிக்கப்பட்டது போலவே யுபதேசிக்கப்படும்" எனப் பதிஞ்ஞை வாயிலாக இனி யியம்பப்படும் கிரந்தத்தால் விஸ்தாரமாக விளம்ப முயலும் ஸ்ரீ வசிஷ்ட பகவானுனவர் சிருஷ்டிப் பிரகாரத்தைக் கூறும் வாயிலாகப் பிரஹ்மாத்வைதத்தை விளம்புவதற்காக முற்பட்ட உற்பத்திப் பிரகரணத்தை யெளிதாக வுணர்ந்துகொள்ளும் பொருட்டு முதலிற் றொகுத்துக் கருத்தைக் காட்டக் காதலித்து "அவ்விப்பிரம மாவதன் முன்னே, செவ்வுரு நாமஞ் செறிந்தில யாமே" என்பதாதியாய்ச் சிருஷ்டியைக் கூறும் சுருதி சந்தர்ப்பத்திற்கு "யான் பிரஹ்மமா யிருக்கின்றேன்" என்பதாதி மகாவாக்கியார்த்த வுணர்விற்போல ஈண்டுந் திருஷ்டாந்தத்தி னேகதேசத்தால் உணரத்தக்கதை யுணருமுணர் வுதிக்கவே "மகாவாக்கியார்த்த நிண்ணயமே முக்கியமாகக் கவரத்தக்கதென முன்மொழிந்த வகையே முடிவுபெறும் எனக் காட்டு

கின்றார்:—பிரஹ்மமே வாக்கொளியாற் பிரஹ்மத்தை யுணர்ந்து விளங்கும் எவ்விது கனவிற்போல ஆன்மாவில் விளங்குமோ அதைத் தனது சத்தத்தாலெழுந்த அவற்றால் யாவன் எவ்வாறு யுணர்வனோ அவனதை யறிவன்.

(உரை) பிரஹ்மமே வாக்கொளியால்—மகா வாக்கியத்தாலுண்டாய அகண்டாகார விருத்தியிற் சம்பந்தித்த தனதான்ம வொளியால், பிரஹ்மத்தை யுணர்ந்து—தனது தத்துவத்தைச் சாக்ஷாத்கரித்தது போன்றதாய், விளங்கும்—உண்மையான நித்தியமுத்த பூரண சொரூபமாகப் பிரகாசிக்கும் தனது முத்தியில் வாக்கிய ஜன்னிய விருத்தியினும் வேறாயதை யபேக்ஷிப்பதில்லை யென்பது கருத்தாம். அஃதெவ்வாறெனில்? எவ்விது-உடற்பொறி முதலியவையும், விண் முதலியவையும் ஆய திருசியமாம் பந்தரூபம், ஆன்மாவில்—பிரத்தியக் கான்மவடிவமாய பிரஹ்மத்தின் கண்ணே, கனவிற்போல எழுந்திலங்கு வதனாலென்க; கனாப்பந்த நீக்கம் விழிப்பதைத் தவிர வேறொன்றையும் விழைவதில்லை யன்றோ! இவ்வாறாகவே "பிரமவித்தையினாற் பிறங்கெலாமாவேம், உரமென மனுடர்யா தென்னு கின்றனரோ, பிரமமா மஃதெதைப் பேணியுணர்ந்ததோ, வரமுறு மெதனல் யாவுமாய்வயங்கும்" எனச் சுருதியின்கண் ணாக்ஷேபித்து "பிரமமாயே யிதுமுன்பிருந்ததுவது, தரமுறத் தனையே தானுணர்ந்தது யான், பிரமமாயுள்ளேன் பிறங்கதனானே, வரமதுயாவுமாய் வயங்கிடுமன்றே" என வுத்தரங் கூறப்பட்டுளதாம். யாவும்—பூரணம், அசம்சாரியாய பூமானந்த ஓரியற்கைய தென்பது பொருள். இச்சுருதியின் கண்ணே, பிரஹ்மமானது சுயமாகவே தன் றத்துவத்தை யுணர்ந்ததாற் பந்தத்தினின்றும் விடுபட்டதாய்ப் பூரணமாயது என்பதனால் அதுவே தன் றத்துவத்தையுணர்வதற்குமுன்னர்க் கனவிற்போல இருமைப்பிரிய அப்பிரியதரிசன பரிச்சேத இலக்கணம் வாய்ந்த பந்தத்தை யனுபவிப்பதுபோலுமாம், ஆகவே பந்தத்திற்குப் பொய்ம்மையும், பிரத்தியக் கான்மாவிற்கே பிரஹ்மத் தன்மையும் மிக வெட்டவெளியாக விளங்காநிற்கும். ஆண்டெங்ஙனம், அதனைக்கூறும் அருத்தவாத வடிவமாய, "அஃதுரு நாமமா யறையவற்றானே, இஃதுலகாக இங்குறைந்திடுமே அஃதிதுபுகுந்த தீண்டாநக நுனிவரை." என்பதாதியாய் முன்னுள்ள சிருஷ்டிப் பிரவேசாதி வாக்கியங்கட்கு, அறியப்படாத பிரஹ்மமாத்திரத்தை யுபாதானமாக வுடைய உலகுயிர்த்தன்மைகட் குற்பத்தியாதி முக்காலத்திலும் பிரமத்தினும் பிறிதான சத்தை சம்பவியாமையின் பொய்ம்மையேயுளதெனக் கூறும் வாயிலாகத் தம் முக்கிய மகா வாக்கிய தாற்பரிய விஷய பிரஹ்மாத் வைதத்தில் முடிவுபேறுண்டாமோ அங்ஙனம் ஈண்டு மூணரற் பாலதாமென்பது கருத்தாம். அவ்வாறாகுக, ஆயினும் நம்மனோர்க் கதனாலென்னே யெனின்? கூறுகின்றார்:—அதையென. அந்தப் பிரஹ்மத்தை இப்போதுள்ள அதிகாரிகளாகிய நம்முள்ளும் யாவன், தனது சத்தத்தா லெழுந்தவற்றால்—சிரவணாதி யுபாயங்களினாலே, எவ்வாறு யுணர்வனோ—எவ்வாறுண்மையோ அவ்வாறே யானே பிரஹ்மமெனச் சாக்ஷாத்கரிக்கின்றானோ, அவனதை யறிவன்—அவன் முன்மொழிந்த பூர்ணநித்திய முக்த பிரஹ்மபாவவடிவ மோக்ஷபலத்தையும் வாழும்போழ்தே சாக்ஷாத்தா யனுபவிப்பன். அவ்வாறே "ஆண்டதை யெவனெவனருந் தேவருக்குள், வேண்டியுணர்வனோ வியனவனேயதாம்; அவ்வாறிருடிய ரவ்வாறு மனுடர், ஒவ்வா விவருள் ஒப்பிலவ்விதை; கண்டே

யிருடி கவின்வாமதேவர், விண்டார்யானே வியன்மனுவானேன், அண்டேசருக்க னுமாவே னெனவே" என்பதான சுருதியுங் கூறும். அல்லது எது—முமுக்ஷுக்கட்கு அறியப்பெருத தன்மையானே அறியவேண்டு மென்றவாவப் பெற்றதும், இது—எல்லாப் பிராணிகட்கும் ஆன்மாவா யிருத்தலினுனே பிரத்தியக்ஷமும், ஆகிய பிரஹ்மமானது, வாசகமாஞ்சத்தப் பிரபஞ்சத்தோடும், அதனுலிலங்கும் அர்த்தப் பிரபஞ்சத்தோடும், "திண்ணிப் பெயருருத்திரி தொழிற்றிரயம்" என்னுஞ் சுருதி காண்பித்த துவைதப் பிரபஞ்ச பாவங்களோடும் பிரிவுபடாமல், பிரஹ்மத்தை யுணர்ந்து—தன் வடிவத்தை யுணர்ந்து, ஆன்மாவில் - தன்பால், கனவிற்போல, வதபந்த சோகமோக முதலாய துக்கியியற்கையதாய்த் தோற்றும், அதை - அவ்வாறு தோற்றினும் அந்தப் பிரஹ்மத்தை, யாவன் - எவ்வதிகாரி, தனது சத்தத்தா லெழுந்தவற்றுல் - தன்வடிவ மாத்திரம் எஞ்சுவதான "நேதிநேதி" யென்பதாதி வாக்கியமாகிய இருமைநீக்கங்களால் எவ்வாறு யுணர்வனே - எஞ்சியதா யுணர்வனே, அவனே யந்தப் பிரஹ்மத்தை யுண்மையா யுணர்வன்; ஆரோபிதமாய நாமவுருவ முதலியவற்றேடு கலப்புற்றதாகக் காண்பவன் ஆகான் என்பதாம். அல்லது, வாக்கென்பதால் வசனமுதலிய கிரியாசக்திப் பிரதானங்களாய கரும இந்திரியங்கள் குறிப்பிக்கப்படும், ஒளியென்பதாற் பிரகாசப் பிரதானங்களாய ஞானேந்திரியங்கள் குறிப்பிக்கப்படும். அவற்றின் வாயிலாக யாவன் பிரஹ்மத்தை யுண்மையா யுணர்ந்தவனுயுமிருப்பனே அவன் பிரஹ்மமா யிருந்தும் ஆன்மாவின்கண்ணே கனவிற்போலப் பிரஹ்ம வடிவமாகாதவனுய் வேறுவிதமாய் விளங்குவன்; வெளிப்பார்வையனுக்குத் தத்துவதரிசனங் கூடாமையினுனும்; "செவி முதற்பொறிகளைச் செல்வெளி முகமுறச், சிவனேனுஞ் சுயம்பு செய்தமையானே, அவமுற வெளியே யலேந்தவைகாணும், அவமற வுள்ளொளி ரான்மனைக்காணு" என்பதாதி சுருதியினுனும் என்க. எவ்வதிகாரியானவன் எவ்வெளியாயிருக்கும் இவ்வுலக வுருவத்தையும் தனது சத்தத்தா லெழுந்தவற்றுல்—"பிரஹ்மமே யிவையெலாம், ஆன்மாவே யிவையெலாம்" என்பனவாதியாய பரமார்த்த பரவாக்கிய ஜன்னியபோதங்களால் எச்சர்வாதிஷ்டான சன்மாத்திரமா யுணர்வனே, அவன் புறப்பொறி விலாசங்களை விலக்கியவனு யுண்முகனு யந்தப் பிரஹ்மத்தை யுணர்வன். ஆகவே வெளிப்பார்வையாற் பிரஹ்மத்தைக் கண்டபோதினும் அநர்த்தமேயாம். பிரமாணத்தாற் பெறப்பட்ட வுட்பார்வையானே வுலகைக்கண்ட போதினும் புருடார்த்தமே யாமெனச் சிருஷ்டியை விஸ்தரிக்கும் வாயிலாக உட்பார்வை விற்பத்தியில் இப்பிரகரணத்தின் கருத்தாமென்பது பொருள். அல்லது, இனிக் கூறப்படு முபதேச வாக்கியங்களானும், திருஷ்டாந்த ஆக்கியான யுக்திப் பிரகாசங்களானும், இஃதியம்பப்பெறும் என எஞ்சிநிற்கும்; பிரஹ்மவித்தேவனே அவனே பரமார்த்தமாகப் பிரஹ்மமாம். அல்லாமற் பிரஹ்மமெனப் பெயரிய வேறொரு பொருள் தடையுற்ற தூரதேசத்தில் தன் வடிவத்தினும் அன்னியமாகவே யிருக்கின்றதென்று மயங்கலாகா தென்பதாம். எவ்வித்திருசிய வுலகருபமோ அது கனவிற்போலத் தன்பானே அத்தியஸ்தமாக விளங்குகின்றது, அதுவும் பரமார்த்த சத்தியமா யயலாயுளதென மயக்கலாகாது. ஆண்டுக்கூறிய பிரஹ்மத் தன்மை ஜகத்தன்மை யென்னு மிரண்டில், எவ் விவேகியேனும் அவிவேகியேனும், எப்பிராஹ்மண னியான் க்ஷத்திரிய னியான்

தேவதத்த னியான் என்பதாக இயற்கையாகவந்த இலௌகிகப் பிரசித்த மித்தை யான தனது சத்த ஜன்னியங்களா முணர்வுகளாலேயேனும், பிரஹ்மமே யான் சித்தே யான் என்பதாதியாய்ச் சாஸ்திர சம்பந்தத்தால் வந்த சத்திய அருத்தத் தனது சத்த ஜன்னியங்களா முணர்வுகளாலேயேனும், எத்தகைய சொரூபத் தைத் தனக்குணர்கின்றானோ, அவன் அதனையே மீண்டுமீண்டுமனுபவிக்கின்றான். சமுசாரி யான்மதரிசிக்குச் சமுசாரமே பலமாம், பிரஹ்மான்ம தரிசிக்கோ பிரஹ் மபாவமே யாமென்பதாக அத்தரிசியாகவே பவிக்கவேண்டும் என்பதுகருத்தாம். அல்லது, "இருக்கின்றபடியே பிரஹ்மதத்துவஞ் சத்தை நியதியெனப்படும், அநந்த விலாசங்களின் அதிஷ்டானபூத ஆன்மா எல்லாவற்றினுமுள்ளா யெல்லா வற்றிற்கு மாதாரமாயுளதாம்" என்பதாதியால் முன்ன ருபதேசிக்கப்பட்டதே யாகும். ஆண்டுபதேசிக்கப்பட்ட பிரஹ்மத்தின் கண்ணே சமாதியின்மையின் மனம் நிலைபடாமையாற் சமாதி சாதனங்களும் அவற்றின் றிடப்பொருட்டுப் புருடப் பிரயத்தினமும், உபதேசிக்கப்பட்டது. படவே யினி யுபதேசிக்கவேண் டியது யாதொன்றுஞ் சேடிக்கவில்லையே; ஒருமுறை யுபதேசிக்கப்பட்ட வாக்கி யார்த்தப் பிரகாசத்தாற் பிரஹ்மம் விளங்கவில்லையாயின் நூறுமுறை யுபதேசித்த போதினும் அவ்வாறேயாகும். அரைத்தமாவை மேன்மேலு மரைத்தல்போல இதனையே மீண்டுமீண்டு முபதேசிப்பதாலென்னே பயனெனின்? கூறுகின்றார். பிரஹ்மத்தை யறியவிரும்பிக் கேட்பவன் ஒருமுறை யுபதேசித்த வாக்கியார்த் தப் பிரகாசங்களாகிய வேதுக்களால் எப்பிரஹ்மவஸ்துச் சுயமேயென விளங்கு கின்றதோ அது கனுப்போலப் பாதிக்கப்படுவதே யல்லாமல் அதிதிடமாக வுண் டாவதில்லை; தூங்குபவன் திடப்படாத நக்ஷத்திராதி தன்னுமமுற்ற மெதுவாயெ ழுப்பும் வாக்கியத்தால் எழாததேபோல நன்றாகப் பிரஹ்ம நிச்சயமுண்டாக மாட்டாது; அவனே, ஹேதேவதத்த! ஹேயஞ்ஞதத்த! என்பதாதியாய் நீண்ட விவகாரத்தாற் றிடப்பட்ட தன்னுமத்தா லெழுப்பலால் எழுவதேபோல நெடுநாட் பயின்ற சிரவணாதிப் பயிற்சியாற் றிடமான வாசனையோடு கூடிய மகாவாக்கியத் தெழுந்த ஞானத்தால் எதனை யுணர்கின்றானோ அவனே யதனை யுணர்கின்றான். அத்தகைய ஐயமிலாத தன்னான்ம வுணர்வே அவித்தையை யழிப்பதற் கேதுவா மென்பது பொருள். ஆகவே அத்தகைய திடநிச்சய அபரோக்ஷ அனுபவப் பொருட்டு மீண்டும் மீண்டும் ஊகங்களானே யுபதேசம் பலம் வரும்வரை பயிலத் தக்கதென மேனூற் பொருத்தமாம். அவ்வாறே "ஆவிருத்தி பன்முறை யுப தேசத்தால்" எனச் சூத்திரமும் அறைகின்றது. அல்லது, பிரஹ்மத்தை யுண ராதவன் நனுப்பய முதலிய நீள்வாசனையால் வாசனை மிக்கவனுக் கனவில் அவித் தையினுல் கெட்ட இகழ்ச்சியான பயமுதலியவாம் வாக்கியங்களோடும் அச்சம் நடுக்கம் ஓடல் குழியில் வீழல் முதலிய வுணர்ச்சிகளோடும், கூடியவனுகித் துக் கியாய் விளங்குவதே போலும், உபாசகன் நனுத்தேவ பாவவாசனை யேற்றப் பெற்றானுக் கனவில் தேவனைப் போலும் அரசனைப்போலும் துதிபுகழ்ச்சி முத லிய வாக்குகளோடும், உண்ணல் விளையாடல் விமானமேறல் விண்ணிற் செலல் முதலிய வுணர்ச்சிகளோடும், கூடியவனாய் விளங்குவதே போலும், பிரஹ்மத்தை யுணர்ந்தவனும் நெடுநாட்பயின்ற சிரவணாதி வாசனையேற்றப் பெற்றவனுக் கன வில் இவையாவும் பிரஹ்மமே, இவையாவும் ஆன்மாவே, யானே யிவையாவுமா

யிருக்கின்றேன், என்னும் பரமார்த்தத்தைக் கூறும் வாக்குகளோடும், உண்மை
யாய பிரஹ்மத்தன்மை ஞானங்களோடும், விளங்குவன் ; அவ்வாறே பல அவஸ்
தையின் கண்ணும் கனுப்போற் பரலோக பலமும் அதிதிடமாய்ப் பயின்றவாசனை
யனுசாரியா மென்பதுமேல் லீலைகதை முதலியவற்றிற் கூறப்படும். இதன்கண்
ணே பிரமாணமென்னை சொல்லெனின் ? எவ்விக் கனுப்போற் பரலோகத்திற்கும்
வாசனை யனுசாரித் தன்மையுளதோ அதைத் தாமே கூறி யறிவிக்கும், மூலத்தை
யவாவி யல்லவாமெனத் தனது சத்தங்களென்பன சுருதிகளாம், அவற்றினின்று
மெழுந்து தாமே பிரமாண வடிவங்களாயிருக்கும் உணர்வுகளால் நிச்சயிக்கப்
பெறும். "எங்கிவன்றனைக் கொன்றிடலே போலும், பொங்குறத் துன்புறுத்திட
லே போலும், துங்கமாமியானை துரத்தலே போலும், பங்கமாங்குழியிற் பதித
மேபோலும், பங்கெதுதானனுப் பயம்பார்ப்பானோ, இங்கஃதவித்தையா லெண்
ணிடுவானல் ; எவனுறு தேவன் போலிறைவன்போல், இவைமுழுதா வேனியா
னே யென்னு, நவமுற நினைவனே நல்லவிவற்குச், சிவமுறுமஃதுயர் செல்வலோ
கமே." "ஈண்டுப் புலியாய்ச் சிங்கமாயேனும், வேண்டியெஃதெதாய் விளைந்திடு
வாரோ, ஆண்டஃத தாயாயிருப்பாரே" "எச்சித்தந்தா னியைவானம்மயம், இச்
சொலிரகசிய மிதுசனுதனமே, இச்சரீரத்தி லெய்துமுட் செயலால்" என்பதாதி
சுருதிகளானும் "இந்தவுடலம் விடும்பொழுதி யாவனியாதொன் றினைநினைந்தா,
னந்தவளவே யந்தப்பாவனையா லதனையடையுமா, லெந்தமியல்பே யெப்பொழுது
மிதயத் திடைகொண்டெம்பாலாஞ், சிந்தையொடும் வாளமர் தொடங்கி லதனு
லெமையே சேருதியால்" என்பதாதி ஸ்மிருதிகளானும் நிச்சயிக்கப் பெறும்.
பெறவே அப்பியாச காலத்தில் யாவன் எச்சமுசாரி யாத்மாவையேனும், பிரஹ்
மான்ம பாவத்தையேனும், உணர்கின்றானோ அவன் பல அவஸ்தையின்கண்ணும்
அதனையே யனுபவிக்கின்று னென்பதனானே நிரந்தரம் பிரஹ்மானுபவ வாசனை
யையே திடஞ்செய்ய வேண்டும் என உற்பத்திப் பிரகரண தாற்பரிய அருத்த
மாமென்பது கருத்தாம். அல்லது, வாக்குகளால் - சுருதி மிருதியாதி சத்தப்பிர
மாணங்களானும், அறிஞானுபவப் பிரகாசங்களானும், பிரஹ்மத்தை யறிந்தோன்
பிரஹ்மமேயாவன், இவனுக்கு அஞ்ஞான தசையிற் பிரசித்தமாய எவ்விவ்வப்
பிரமத்தன்மையும் அவஸ்தாத்திரயமும் அவ்வான்மாவின்பாற் கனுப்போலிலங்
கும். "அவனுக்கு மூன்றவத் தாத்திரயங்கனு" என்னுஞ் சுருதியினானும்,
"ஆதலிற் சம்பாவனை மாத்திரமாங், கோதுறு குடும்பங் குளிருள்ளான்மனில்,
ஓதிய பொருளிலுறு மெனிலையம் தீதறு பிரத்தியக் திருட்டியாற்காண்க." என்
னும் வார்த்திகாதிப் பிரசித்த அறிஞானுபவத்தானும் உணர்க. அவ்விரண்டு
பொருளையும் எவ்வதிகாரியானவன், தனக்கிதமானவரும், தனது கரதல நெல்லிக்
கனிபோலும் ஆன்மதத்துவத்தைச் சாக்ஷாத்கரித்தவரும், உபதேச குசலரும்,
ஆகிய ஆசிரியர துபதேசத்தத்தாலுண்டான, தனதனுபவ அனுகூல, தள்ளக்
கொள்ளவரு முபாயங்களானே எவ்வாறறிவனோ அவனே தனதனுபவத்தானு
மவற்றையறிவன். "ஆசிரியவானு மவனேயறிவன் ; ஆசிரியன் பாலறிந்தவித்தை
யே, தேசுறுஞானச் செம்பயன்பயக்கும், ஆசிரியனறிந்தோன் குசலானுசிட்டன்"
என்பதாதி சுருதியினானும் என்பது பொருளாம். அல்லது, பிரஹ்மவித்துக்களி
னது அனுபவத்தாற் சித்தமாயிருக்கின்ற பிரஹ்மமானது விவகாரத்தில் வாக்

கொளிகளோடு சமமாயிலங்கும், கடாதி சத்தங்கள் சங்கேதத்தாற் றாந்தோற்று
விக்கும் பொருள்களை யொளிர்வித்து அத்தன்மையை யடைந்தன வென்னத்
தாமே யிலங்குகின்றன போலும், ஒளிகளும் அவ்வாறு இலங்கலே போலும்,
பிரஹ்மமும் விளக்கப்படும் பொருள்களை விளக்கிக்கொண்டு அவற்றினும் வேறு
படாமற் சொப்பிரகாசமா யிலங்குமென்பது பொருள். அற்றேல், அசங்க அத்வி
தீய வத்துவிற்குப் பிறவற்றை யிலக்கும் வாயிலாக இலங்கல் கூடுமெனின்? ஆன்
மாவின்கண்ணே அத்தியாசமாகக் கனாப்போல இவற்றைத் தோற்றுவிக்குங் கார
ணத்தாற் சர்வப்பிரபஞ்ச விவர்த்த உபாதானமாம். ஆகவே காரணத்திற்குக் காரி
யத்தை யிலக்கல் பொருத்தமேயாகும்; காரியம் பொய்யாயிருத்தலினானே அசங்க
அத்விதீயத் தன்மையின் விரோதியாகாதாம். அவ்வகையாய பிரஹ்மத்தை,
தொடர்ந்து தன்வடிவத்தை மாத்திரம் விடயீகரிக்கும் ஆன்மாதிசத்த நிச்சய
வுணர்வுகளால் யாவனுணர்வனோ, அவன் அசங்க உதாசீன சொப்பிரகாச சின்
மாத்திர இயற்கையை யுணர்வன்; நாமரூபத்தோடுகூடிய விசேடத்தை யுணர்பவ
னுணரான். அல்லது, பிரஹ்மமானது சொப்பிரகாசமா யிருத்தலின் பிரஹ்மத்
தை யுணர்ந்து தனது விளக்கத்தில் அயலொன்றை யவாவிடினும், வாக்கொளிக
ளால் - "வாக்கே யிதன்சோதி வயங்கிடவாகும், எக்கமில் விரவியே யிதன்சோ
தியேயும்" என மறையறைந்த அயற்சோதிகளால், வியாமோக முறுதலின்
கனவுபோல ஆன்மாவின்கண்ணே வேறு ஜோதி கலவாத தசையாகிய சமாதியா
தியின்கண்ணே துணிபாய்த் தோற்றுகின்றது, சமுசார சாகரத்திற் றேற்று
தாம்; "ஆண்டான்மாவே யிதற்குச் சோதியாம், ஆன்மாவா மிவ் வருஞ்சோதியி
னாற், றான் மேலிருப்பன் செல்வன் வினைசெய்வன்" என்னுஞ் சுருதியாற் சுயஞ்
சோதித் தன்மை வெட்டவெளியாய்க் காண்பிக்கப்பட்டிருத்தலின். இவ்வாறு
கனவில் இனிது காண்பிக்கப்பட்ட சுயஞ்சோதி யான்மாவை நனவிலு மனுபவிப்
பதில் உபாய முரைக்கின்றார்:—இஃதெனவும், அஃதெனவும், தானெனவும் ஆஞ்
சத்தங்களாலெழுந்த ஆதிபௌதிக ஆதிதெய்விக அத்தியான்மிக விடய ஞானங்
களால், போக்தாவின் பொருட்டுவாரா நின்றனவென்னும், அவ்விதவிடயக்கூட்ட
மியாவையோ அவற்றையாவ னறிவனோ அவன் அந்தப் பிரஹ்மமாக விருந்தே
யறிகின்றான், கற்பிதவுபாதி யான்மாவாக விருந்தறியவில்லை; ஜட ஆன்மாவிற்
கறியுஞ் சத்தியில்லாமையின். "இதனினுமயலாய்க் காண்போனில்லை, இத
னினுமயலாய்க் கேட்போனில்லை" என்னு மறையில் வேறுகாண்போன் கேட்
போன் நிடேதிக்கப்பட்டிருத்தலி னென்பது கருத்தாம். ஆகவே வெளிப்பொ
ருளை யொளிர்விப்பதில் வேறு சோதி கலந்திருப்பினும், உள்ளே தோற்றும்
பொருளொளிர்வில் அதன் கலப்பின்றாமெனச் சாக்கிரத்தின் கண்ணுஞ் சொயஞ்
சோதி யான்மா விவேகிகளால் இனிதாக அறியப்பெறும் என எப்போதுமே
அதை யாராயுங் கருத்துடையவனாகவே பவிக்கவேண்டும் என்பது கருத்தாம்.
அல்லது, எவ் விகலோக ரூப கரும ஸ்தானம், அச்சுவர்க்காதிரூப அந்தப் பல
ஸ்தானம், அந்தப் பல போக்தாவாய தான் என்னும் மூன்றையும் புகலும் கரும
காண்ட சத்தத்தாலெழுந்த வுணர்வுகளால் யாது விளங்குகின்றதோ, யாதுபநிடத
வாக்குகளாலும், மனனாதிப் பிரகாசங்களாலும் யான் பிரஹ்மத்தை யுணர்ந்தவன்
பிரஹ்மமெனவேனுந் தான் விளங்குகின்றதோ, அவையாவுங் கனவிற்போல அறி

யப்படாததேயாய ஆன்மாவின்கண்ணே விளங்கும், பூமாவாகிய ஆன்மாவின்கண் ணே தோற்றுவாம்; "எதிலயற்காணுன் எதிலயற் கேளான் எதிலய னுணரான் அது பூமாவாம்" என்னுஞ் சுருதியினுலும் "விதிநிடேத மோக்ஷபரங்களாய் விளங்குஞ் சாத்திரங்களியாவும் அவித்தையுடை விடயத்தன்மையை யகன்று வா ழாவாம்" என்னும் பகவத்பாடியத் திருமொழியானும், என்க. "அவ்விவ்விரக சிய யோகத்தை யாவ னுணர்ந்தனனே அவனே யுணர்ந்தான்" என்னுஞ் சுருதி யை விரித்தனுசரித்துக் கூறுகின்றார்:—யாவன் எதை யுணர்ந்தானெனல். அறிஞ ரனுபவத்தாலே துணியப்பட்ட திஃதென்பதாம். துயருற்றும் ஊகித்தற்கரிதாகிய இச்சுலோகத்திற்கு மதிமான்களாலும் எளிதிலறிதற் கேலாதனவாய இப்பத்துப் பொருள்கள் குருப்பிரசாதத்தா லினிது பிரகாசிப்பிக்கப்பட்டனவாம். இவ்வாறு பிரகரணப் பொருளைத் தொகுத்துக் காண்பிக்கும் வாயிலா யுள்ளடங்கியவிடயம் காண்பிக்கப்படவே, பிரபஞ்சமித்தியாத் தன்மை ஞான விலக்கண உள்ளடங்கிய பிரயோஜனத்தை யனுசரித்த முன்னுற்ற வினுவிலக்கமும் பொருளாற் கிடைத்த தாம்; தொகுத்துக் காண்பிக்கப்பட்டதாய் விஸ்தாரமாய் விளம்பப்படும் அத்தி யஸ்தத்திற்கு அதிஷ்டானத்தினும் அயலாய சத்துவமாம் நியாயத்தால் அத்தியா ரோப அபவாத நியாயத்தால், சிதாகாசப் பிரஹ்மமானது அத்தியாச முறை யாய்க் காணப்பட்ட இப்பிரபஞ்ச ரூபமாயிருக்கும்போது, அபவாத முறையாய்க் காணப்பட்ட பிரஹ்மாகாச மாத்திரமா யிருக்கும்போது "ஹேபகவன்! இஃ தென்னே யழிகின்றது, இஃதென்னே ஆகின்றது, மீண்டும் இஃதென்னே வளர் கின்றது, அவ்விதனைக் கூறவேண்டும்" என்பதாதியால் நீ முன்னர் எச்சத்திற்கு நாசாதி யசம்பவம் வினவினுயோ அதுதானே நிராகரிக்கப்பட்டதேயாம். சத் திற்கு நாசாதியங்கீகரியாமையானும் அழிவதற்கு இருப்பை யங்கீகரியாமை யானும் வினுவிடயமே யின்றுமன்றே! இவ்வாறுள்ளடங்கிய விடயபலமாமிது இதை விஸ்தாரமாகக் கேட்கவிரும்பின் தொகுத்துக்கூறிய அருத்தங்க ளியாவற் றையுமே விஸ்தாரமாய்க் கூறக்கேட்குதி! பிரமாணத்தினுலேயும், அனுபவத்தி னுலேயும் உண்டாயவுணர்வின்படியும், பரீக்ஷையினுலே யறிந்திருக்கின்ற வஸ்துப் படியும், சாதன உபபத்தி நிரூபணத்தானே கிரமப்படியும், கேட்பவனுடைய புத்தியையனுசரிப்பதாலே இயற்கைப்படியும் அவ்வியாவற்றையுங்கூறுகின்றேன் அறிவின்மிக்கோய் கேட்குதி! சிருட்டிக்கு முன்னர்ச் சர்வஜகத்துஞ் சன்மாத்திர மாகவே யிருந்தது என்னும் வஸ்து முறையாகவும், சிருஷ்டியி னாரம்பகால கரு மங்களெம்பு முறையாகவும், தூலபாவ சிருஷ்டி முறையாகவும், உலகமாரோபிக்கப் பட்டபோதும் விகாரமில்லா இயற்கை முறையாகவும், ஞானத்தினுலே யடையத் தக்க பூர்ணபாவ முறையாகவும், கூற ஆதரவோடுங் கேட்பாயாக! (அதனுற் சருவமுமாய தென்னுஞ் சுருதியாற் சருவமென்றதற்குப் பூர்ணபாவமெனப் பொருள் கொண்டதாம்). கனவிற்போல ஆன்மாவின் கண்ணே யென யாது முன் மொழியப்பட்டதோ அதனது கருத்தைத் தெளிவாகக் கேட்குதி! சிதாகாய மானது சயங்தேகோகமெனச் சிவபாவத்தை யடைந்து எவ்வுலகைக் காண்கின்ற தோ அதைக்கனுப்போற் காண்கின்றது, கனவிற்கா ணுமுணர்வு விடயம் பாதமா யினும் பாதிக்கப்படுவதில்லை; அதுபோற் சாக்கிரவுணர்வுமாம். திருக்கானது எப் போது முண்மையாகவே யிருக்கும். இவ்வாறு யானெனப் பிரத்தியக்கான்ம

தாதாத்மியமாகவும், நீயென வெளியிலிருப்பதாகவுந் தோற்றும் பிரபஞ்சமும், கனுச்சமுசார திருஷ்டாந்தத்திற்றிருஷ்டாந்தமாக இனிது பொருந்தும்; திருசிய மானது எப்போதும் பொய்யாகவே யிருக்கும். பிரமாண ஜன்னியமாயிருப்ப தற்கு அப்பிரமாண ஜன்னியமாய கனுத்தரிசனம் எங்ஙனந்திருஷ்டாந்தமாதல் கூடுமெனின்? வெளிப்பட்ட ஜகத்தைப் பிரமாணங்களானே கண்டபோதினும், காரியகாரண சமுதாய வடிவ வியட்டி சமட்டி தேகத்தை யிலக்குவது சுயமே யல்லாமல் வெளிப்பிரமாண அபேக்ஷையாலன்றாம். உருவமுதலியவற்றை யுடை மையானே யுடம்பும் விழி முதலியவற்றானே காணப்படலாமே யெனின்? விழி முதலியவற்றானே யதுவிளங்குமாயின் இதுவெனவே விளங்கலாம், அதன்விடயத் தில் யாண்டும் இதந்தை காணப்படுதலின், ஆண்டிலங்கும் நானீயோகனுச் சமு சார திருஷ்டாந்தத்திலே யினிது பொருந்தல் பொருத்தமாம். கனுவொக்கக் காயமாகுக; ஆயினும் யாங்ஙனம் பாகிய நாம ரூப வடிவவுலக முழுவதிற்கும் அவ் வாறுந்தன்மை யெனின்? ஆண்டுப்பாகிய ரூபாதி மாத்திரம் தனித்துத்தோற்றுவ தில்லை. மற்றோ ரூபத்தை யான் காண்கின்றேனெனத் திரிபுடி வடிவ நானெனும் அர்த்தத்தோடுகூடிய அருத்தரூபமாம். அதுவோ சாக்ஷிமாத்திரத்தினாலே யறி யத்தக்கதாகலின் கனுச்சமுசார திருஷ்டாந்தத்தில் தார்ஷ்டாந்தமா யவசியம் பொருந்தும். அத்தியஸ்தத்தைக் கோசரிக்கும் ஞானத்தில் உண்மைப்பொருள் விடயமாகமாட்டாதாம்; "அத்தியஸ்தமே யருமையா யிலங்கும், மெத்தியமயல் களின் மேலய லெதுவுமே, சுத்தமா யிலங்கா சொன்மயல்களிலே" என்னுஞ்சித் தாந்தத்தால் வெளிப்பிரமாணங்கட்கு விவகாரங்களில் பொருள் பயனுடைப் பிர விருத்தியைப் பண்ணுதன் மாத்திரையானும் வியாவகாரிகப் பிரமாணமாதல் கெடாதாமென்பது கருத்தாம். முமுக்ஷு விவகாரத்தை மொழியும் முற்பிர கரணத்தினும் வேறாக இனி யிவ்வுற்பத்திப் பிரகரணங் கூறப்படும். (இனி யென் னும் பின்னரென்பதால் ஏதுத்தன்மைச் சம்பந்தங் காண்பிக்கப்பட்டதாம்). பந் தத்தை நீக்குமுபாயத்தை விரும்பிய எனக்குத் திருசியத்திற்குப் பொய்ம்மை யைச் சாதிப்பதிற் றற்பரமாய உற்பத்திப் பிரகரண சிரவணத்தானே ஆகவேண் டிய தென்னே யெனின்? திருசியமிருத்தலினாலே யிப்பந்தமுண்டாகி யிருக்கின் றது, திருசிய மில்லாவிடிற் பந்தமுமிலதாகும். எவ்வாறித்திருசியஞ் சம்பவியாதோ அவ்வாறு முறையாய்க்கேட்பாயாக. திருசியமில்லாத மாத்திரத்தானேபந்த நீக் கமாகாதாம். உற்பத்தி விருத்தி நாச சுவர்க்க நரகாதி பந்தமானது காண்போன் றருமமாகத் தோற்றலா லான்மாவிற் குள்ளடங்கி யிருத்தலின் திருசியம் நீங்கிய போதினும் அது நீங்காமையின் எனின்? உண்மையாக யாவனுலகினுண்டாவனோ அவனே விருத்தி நாச சுவர்க்க நரகாதிகளையும் பந்தமோக்ஷங்களையு மனுபவிப் பன். ஆன்மா வுற்பத்தியாதி யியற்கை யுடையதன்றாம். தனது சொரூபத்தை யுள் ளபடி தெரிந்து கொள்ளாமையானே அதற் குற்பத்தியாதி மயல்தோற்ற நிற்கும். எதனாற்றன்னை யறியாமையினாலே பந்தமாமோ அதனால் தன்னை யறியும் பொருட் டுனக்கு அத்திருசியஞ் சம்பவியாமையை ஆண்டு விளம்ப விழைந்த வகையாகவே விளம்புகின்றேன்; உற்பத்தியாதி சம்பந்தம் திருசிய சமுசாரகோடியின் கண்ணே பொருந்துமாறும், ஆன்மகோடியின் கண்ணே பொருந்தாதவாறும் கூறக்கேட்டி! ஆன்மாவோ திருசிய உற்பத்திக்குமுன் பெவ்வாறோ அவ்வாறே யுளதாம்,

அணுமாத்திரமும் விகாரப்படுவதே கிடையாது ; அங்ஙனமே மறையும் " உற்ற
தனிலயமில்லை யுறுவதுமில்லை கட்டை, யுற்றவனில்லை மற்றைப்பயில்பவனுயர்
வீட்டாசை, யுற்றவனில்லை வீட்டை யுற்றவனில்லை யென்னும், நற்றிறமிதுவே
கண்டாய் நண்ணுவதுண்மையாயே" என அறைகின்றது. இதுவே இப்பிரகரணத்
தின் பொருள் என இனிக் கூறப்படும் விரிவின் உபோற்காதமாக இச்சருக்கத்திற்
சுருக்கமாய் விரிக்கப்படும், இப்பிரகரணப் பொருளைச் சுருக்கமாகக் கேட்குதிபின்
நீ விரும்பிய வண்ணமே விரிவாகக்கூறுவேம். (இச்சர்க்கத்துட் பிரதிபாதிக்கப்படு
வது உற்பத்திப் பிரகரண உபோற்காதப் பொருட்டாம்) முன்னரேயாது எவ்வா
றுமோ வெனக் கூறப்பட்ட பொருளைக்கூறும் பொருட்டுப் பிரளய அவத்தையில்
எஞ்சி நிற்கும் ஆன்ம சொரூபத்தையறையும் பொருட்டு முற்சிருஷ்டிக்குக் கார
ணத்தில் இலயப்பிரகாரத்தைத் திருஷ்டாந்தத்தால் தெரிவிக்கக்கேட்குதி:- தாவர
ஜங்கம வடிவமாகக் காணப்பட்ட இவ்வுலக முழுவதும் கனவானது துயிலின்கட்
போலக் கற்பாந்தத்தில் நன்கழிந்துபோம் ; சாங்கிய நையாயிகாதியர் கருதிய பிர
தான பரமாணு முதலியவை யெஞ்சா நிற்கும் வடிவப் பிரளய வேற்றுமைப்
பொருட்டே கூறிய திருட்டாந்தமாகும். அதன் பின்னர், அமூர்த்தமாதலினாலே
தொழிலற்றதாயும், பரிச்சின்னப் படாமையினாலே கம்பீரமாயும், உருவமற்றமை
யானே தேயுவல்லாததாயும், பிரகாசவடிவ மாதலினாலே இருளல்லாததாயும்,
தரும மற்றமையானே சாற்ற வொண்ணாததாயும் அஞ்ஞானத்தான் மூடப்பட்
டமையானேயும், பிரபஞ்ச சமஸ்கார ஆதாரமானமையானேயும், வெளிப்படாத
தாயும் இருக்கும் யாதோ ஒரு சத்வத்துவானது எஞ்சி யிலங்கும். உயர்ந்த பிர
மாணமாய மறையா லறியப்படுதலின் இருதம் ; " எதனினுனிறைந் தேய்ந்திடு
மேற்றிடும், எதனினுல்விட யங்களி லங்கிடும், எதனினுலெலந்த ஞான்று மிருந்தி
டும், அதனினுலிதை யாத்துமா வென்பரால் " என ஸ்ரீ வியாச பகவான் விளம்
பிய முறையாய் ஆன்மா சத்தியத்தன்மையின் மேன்மை யெல்லையாதலின் பரம்,
பெரிதாதலினானும் உலகாகாரமாகப் பெருத்திருத்தலினானும் பிரஹ்மம், நூன்
முறையே அறிஞர்களானே யனுபவிக்கப்படுதலின் சத்தியம், என்பன வாதியாய
நாமங்கள் அதற்கு மகான்களாகிய அறிஞர்களானே உபதேச விவகாரப்பொருட்டு
இடப்பட்டனவாம். சிருஷ்டியினாதியில் அதற்குப் பொய்யாகச் சமஷ்டி ஜீவபாவ
முளதாம். அவ்வாறுய்ச் சிற் சுபாவமாகவே யிருக்கும் ஆன்மாவானது மோகத்தி
னாலே தானே அன்னிய ஜடமாய ஆகாசாதி முறையி லுண்டாய இலிங்க சமஷ்டி
வடிவமாய் அதனுட் புகுந்தமையின் அதனபிமானம் பெற்று அதுபோ லொளிர்
ந்து அதனுட்கிடந்த பிராணதாரணை யுபாதியினானே தேக முண்டான பின்பு
வரும் வாக்கு விளக்கவதீனமாக வருஞ் சீவப் பெயரானே நிந்தைக் கிடமாகச்
சம்பாதித்துக்கொண்ட ஜீவத்தன்மையை மயக்கத்தினாலே யடைந்ததுபோலாம்.
உண்மையாகவோ அவ்வாறடைவதே யில்லை. இவ்வாறு ஞான சக்தி மாத்திரத்
தாற் சாதிக்கப்பட்ட சிருஷ்டியானது கூறப்பட்டது. இனிக் கிரியா சக்தியின்
சகாயம் பெற்ற அது சாதிப்பது கூறப்படும். அதன் பின்னர்ச் சீவ சத்தத்தின்
அருத்தமான கிரியா சக்தியைப் பிரதானமாகவுற்ற பிராண தாரணையைச் செய்த
லாற் சஞ்சலத்தன்மையை யடைந்ததாய், பௌதிகமான லிங்க வடிவினதாய்,
சங்கற்ப விகற்ப மனனத்தானே ஜாட்டியத்தான் மந்தத்தை யடைந்து மனமாம்.

அம்மனோபாவத்தால் மகத்தாகிய பரமான்ம பாவத்தை மறந்து மனோதருமங்களாகிய சங்கற்பாதிகளைத் தன்னுடையனவாக வெண்ணும். எவ்வாறெனில், சலனமின்றிய கடலினின்றும் சலனமயமாய அலைகள் எழுவன போலவாமென்றறிக. இவ்வண்ணம், சமஷ்டி மனோபாவத்தை யடைந்த ஹிரணிய கருப்பனென்னும் பிரஹ்மம், அன்னியராலே யறிவிக்கப்படாம லிருந்தபோதிலும், தானாகவே பூர்வ வாசனையை யனுசரித்து விராட் பாவத்தையும் புவனாதி பாவத்தையும் அதன்கண்ணே நான்கு விதமாய பூதக் கூட்ட பாவத்தையும் நித்தியம் தன்னிச்சைப்படியே விரைவிற் சங்கற்பிக்கும், அச் சத்திய சங்கற்பத்தினாலே இவ்வாறாய விஸ்தாரமான இந்திரஜால ஐசுவரியமான இது விஸ்தரிக்கப்படும். இவ்வண்ணம் அத்தியாரோபம் ஆயிரமானாலும் அதிஷ்டானத்தினுடைய உண்மையாய நிலையானது பங்கப்படாதாம் என்ப துணரும் பொருட்டுத் திருஷ்டாந்தத்தைக் கேட்பாயாக:—பொற் கங்கண வடிவப் பொன்னினும் கங்கண சத்தப் பொருள் தனிப்படுத்தத் தகுதியதாகாததேபோலப் பரப்பிரஹ்மத்தின் கண்ணே தோற்றாநின்ற ஜகத் சப்தார்த்தத் தன்மையும் அதனினும் அயலாகத் தகுதியதாகாதாம். இரண்டற்குந் தனிப்பட்டிருத்தல் தகுதி யாகாமையானே ஏகசத்தையுடைமை சித்தமாம். அதுவும் என்றுமுள்ள பிரஹ்ம பாவத்தின்கண்ணே தானாகவே யுளதாம். இடையிலுற்ற உலக பாவத்திலோ அதன ததீனமா யுளதாம்; தானாகவே யின்றாம்; இவ்வுலகமானது பரிச்சேத சுபாவத்தை விட்டொழித்ததாய்ப் பிரஹ்ம சுபாவத்தின்கண்ணே யிருக்கும், உலக சத்தார்த்த பரிச்சேதமுடைய வடிவ இயற்கையிலோ இராதாம்; கங்கண வடிவத் தகைமை பொற்சுபாவத்திலிருக்கும் கங்கண சுபாவத்தி லிராததேபோலுமென் றுணர்க. இது தானாகவே யில்லாதிருக்கும் ஆயின் எங்ஙனம் இருப்பதுபோலப் பொலிதல் கூடுமெனின்? மருமரீசியினாலே கற்பிக்கப்பட்ட (கானனீர்) நதியின் வேகப் பிரவாக தரங்கங்களேபோல வுலக சம்பந்த இந்திரஜால ஐசுவரியமானது இல்லாதிருந்தபோதினும் இருப்பதேபோல ஈண்டு மனதினாலே விஸ்தரிக்கப் படுகின்றது. அதற்கு அசத்துத் தன்மையானதும் அவித்தையி னுண்டாவதாகி அவித்தை வடிவ வுடைமையின் எனக் கருதி அதை யனுசரித்த நாமங்களானே அவித்தையைக் காட்டுவாம்; வித்தையா னீக்க யோக்கியமாதலின் அவித்தையாம், மேல் கீழ் குறுக்குகளிற் சுழற்றுவிக்கு மேதுவாதலின் சமுசாரமாம். சுதந்தரமில்லாதிருத்தலைச் செய்வித்தலின் பந்தமாம், பொய்யா யிருத்தலின் மாயையாம், மயக்க வேதுவாதலின் மோகமாம், தாண்ட முடியாமையின் மகத்தாம், தற்சொரூபத்தை மறைத்தலின் தமமாம், என்பன வாதியாய நாமங்கள் யாவற்றையு முணர்ந்த பெரியோர்களால் அவித்தைக் கிடப்பட்டனவாம். இந்து நிகர்த்த வதனமமைந்த மைந்த! முதலில் பந்தத்தின் உருவத்தைப் பற்றிப் பகருமிதனைக் கேட்குதி! பின் மோக்ஷத்தின் சொரூபத்தை யறிந்து கொள்வாய். ஞானத்தினாலே உடைவதற்கும் அடைவதற்குந் தகுதியாய பந்த மோக்ஷங்களின் சொரூபமியாதென்னின்? காண்போனுக்குக் காண்பொருளின் மெய்யாய விருப்பே பந்தமெனப் பகரப்படும். காண்போன் காண்பொருளின் வலுவாற் கட்டுற்றவனாவன், காண்பொரு ளிலதாங்கால் விடுபடுவன்; உலகம் நீ யான் என்பன வாதியாய இப் பொய் வடிவமே காண்பொருள் எனப்படும், எதுகாறும் இது தோற்றிக்கொண்

டிருக்குமோ அதுகாறும் மோக்ஷமான துண்டாகமாட்டாது. அற்றேல், திருசியந் தோற்றுமையே மோக்ஷமாயின் அவ்வப்போ தெதிர்வரும் திருசியங்களை இஃது இல்லை இஃது இல்லையென நீக்குவதனுனே ரோக நீக்கத்தானே ஆரோக்கிய முண்டாவதேபோல மோக்ஷமான துண்டாம்போது தத்துவஞான ஆயாசத்தாலாக வேண்டுவ தென்னேயெனின் ? இத்திருசிய ரோகமானது இஃதில்லை இஃதில்லையென்னும் சங்கற்பத்தையாக்கும் வீணுன புலப்பத்தால் நன்கு சாந்தியை யடையமாட்டாது, மாருக விருத்தியையே யடையும் ; இஃதில்லை யென்னும் புலப்பமானது திருசியமான திருக்குமாயின் பாதிதப் பொருட்டன்மை யுறுதலின் அதன் விரோதியாய வேறு திருசியத்தை யுண்டாக்குஞ் சங்கற்பத்தால் அதனை யுண்டாக்கலால் முற் றிருசியத்தை நீக்குவதாக மொழியலாம். ஆகவே ஒரு திருசிய நீக்கப் பொருட்டு இருதிருசிய மெழுப்பலின் விருத்தியே யன்றோவாம். ஹே விசாரமுடையவர்களே ! திருசிய ஜகத்தான திருக்குமாயின் தருக்க அதிசயாதிகளானும், தீர்த்தாடனுதிகளானும், நியமாதிகளானும், அத்திருசிய வியாதி சாந்தியை யடையாது. இவ்வளவு மாத்திரமே யன்று ; மற்றோ வேறு துயரும் வந்து சேரும் ; திருசியத்தி னிருப்பானது அநாதரவா லுபேக்ஷிக்கத் தக்கதன்றும் ; மற்றோ ஆராய்ச்சியாற் பாதிக்கத் தக்கதாம். மேலுந் திருசியத்திற்குச் சுயமாக இருப்பை யங்கீகரிப்பின் இருப்பதற்குப் பாதங் கூடாமையின் மோக்ஷ மின்றென்றும் ; திருசியமாய வுலகானது இருக்குமாயின் எவருக்கும் ஒழியவே மாட்டாது, இராததற்கு இருப்பேயிலையாம்; இருப்பதற்கு இல்லாமையே யிலையாம். அற்றேல் இத்திருஷ்டாவானவன் தபோதியானுதி பலத்தினுலே திருசியங்கள் விடுபட்ட இடத்திலேனும், திருசியம் புகுவதற்கு முடியாததான பரமாணுவின் உதராதிகளிலேனும் சென்றிருந்து கொண்டாற் றிருசியம் இனிது விடுபடுதல் உண்டாம் என யாங்ஙனம் மோக்ஷமின்றென் றுதலெனின் ? தவ முதலியவற்றுனே அறியக்கூடாததான சிற்சொரூப ஆத்மாவாய திருஷ்டாவானவன் எங்கெங் கிருக்கின்றனனே அங்கங்குள்ள அணுவுதரத்தின் கண்ணும் இவனுக்குத் திருசிய ஐசுவரிய முண்டாம் ; அத்தகைய ஆன்மாவிற்கே திருசிய பீஜத்தன்மை யுண்மையின் அணுவி னுதரத்தின் கண்ணும் மயக்கத்தினுலே விரிந்து தோற்றுவதற்கு விரோதமில்லாமையாலே ஆண்டுந் திருசிய பந்தம் நீக்க முடியாததே யாகும். ஆகையால் திருசியமான வுலகமானதுளது அவ்விது என்னுலிருக்குமிடத்திலேயே தவந் தியானஞ் சப முதலியவற்றுனே நீக்கப்பட்டது, தேசாந்தரஞ் சென்று கூறியவற்றுனே நீக்கப்பட்டது, என்பது நீராகாரங் குடித்தேனும் மதுபானஞ் செய்தேனும் திருப்தி யடைந்தது போலவாம். பரமாணுவி னுதரத்தின்கண்ணுள்ள ஆத்மாவின் கண்ணும் பிரஹ்மாண்ட மினிது புகுதல் பொருந்தற் பொருட்டுத் திருட்டாந்தங் கேட்டி ! ஜகத்தாகிய திருசியமான திருக்குமாயின் பரமாணுவி னுதரத்தினுமிராநின்ற இச்சிற் கண்ணுடியின்கண்ணே, விசாலப் பிரதேசத்திற் பிரதிபிம்பிப்பதுபோலவே பிரதி பிம்பிக்கும், குறுகிப் பிரதிபிம்பியாதாம். எங்கேனுமுள்ள கண்ணுடியின்கண்ணே மலையுங் கடலும் பூமியும் நதியும் வாரியும் பிரதிபிம்பிப்பதுபோலவே சிற்கண்ணுடியின்கண்ணே யாவும் பிரதிபிம்பிக்கும். அதன்பின் பாண்டு மீண்டும் மீண்டும் ஜரை மரண ஜன்ம வாயிலாகத் துயரமே யுண்டாம்.

நனவில் தூலபாவ அபாவக் கிரகங்களாம்; கனவில் சூக்குமபாவ அபாவக் கிரகங்களாம்; சுழுப்தியிலோ யாதொன்று மில்லையாம்; இங்ங னியங்கியும் இயங்காமலும் போதலின் அஸ்திரமே யாம். ஞானத்தை யவாவாத சவிகற்ப சமாதியினாலே திருசியத்தைத் துடைத்தல் கூடுமேயெனின்? இத்திருசியமான தென்னுவினிதாக நீக்கப்பட்டது, ஈண்டு யான் சுவஸ்தனா யிருக்கின்றேன் என்னுமிதுவே, சமாதியிற் சமுசாரத்தை நினைக்கவேண்டி யிருத்தலின், திருசியத்தை யுண்டாக்குவதற்கு அழிவற்ற பீஜமாம்; நினையாதவனுக்கு நீக்குதல் கூடாமையின் அதை நினைந்துகொண்டிருப்பினே சமாதி கைகூடாமற் போகும். இதனானே நிருவிகற்ப சமாதியினாலும் அது துடைபடுதலில்லையாம்; இத்திருசியமானது இருக்குமாயின் நிருவிகற்ப சமாதிதா னெங்ஙன முண்டாம்? நிருவிகற்ப சமாதி யிருக்கும்போது சித்தமிருக்குமாயின் சேதனத்தன்மையாம். அது பாதிக்கப்படுமாயின் துரியத்தன்மையானது பொருந்தா நிற்கும். சமாதிதான் உளதாகுக, ஆயினும் சமுசாரம் நீக்க முடியாததாம். சமாதியினின்றும் வெளியில் வரும்போது உறங்கி யெழுந்தவனுக்கேபோலும் இத்துக்க மயமாகிய எல்லா வுலகமும், எவ்வாறு முன்னிருந்ததோ அவ்வாறே சிறிதுங் குறைவுபடாமல் விளங்காநின்றதன்பால் விரிந்துரு நிற்கும். ஹே இராகவ! சமாதிகளினாற் கிடைப்பதென்னே! மீண்டும் அனர்த்தம் சம்பவிக்குமாயின் கண மாத்திர சமாதானத்தானே சுகமியாது? சுகமின்றாம். நிருவிகற்ப ஸ்திதியில் நிலைத்து ஒருகாலும் எழுதலை யடையானேல் ஆயின் அழிவில்லாத இன்பத்தை ஞானமின்றியும் அடைந்தவனாவன் என எண்ணுவானாயின் (பர அபிப்பிராய அனுவாதமாம்) அழிவில்லாத நித்திரைச் சுகம்போலவே யஃதாம்; என்னை, மௌட்டிய மகலாமையின், அபுருடார்த்தத் தன்மையே யாம். அவ்வா றமைதி யடைதலே யமலபதமெனின்? மனோவடிவமான இத் திருசிய மிருக்கும்போது எச்சமாதிக்கு முயல்பவனாற்றான் எத் திருசியந்தா னடையப்பெறவில்லை? எதனாலெனின்? இவனுடைய சித்தத் தன்மையானது எவ்வெவ் விடயத்தில் வரா நிற்குமோ அவ்வவ் விடயத்தில் அதைத் தொடர்ந்த உலக மயல் நீக்க முடியாததேயாம். மேலும் இவன் அஞ்ஞானியா யிருத்தலின் அனான்மாக்களாய கன் முதலியவற்றைச் சமாதியின்கண்ணே பாவிப்பானாயின் பயன் கைவரும்போதும் இவனுக்குத் திருசியத்தன்மையே யுண்டாம். திருக்கு மாத்திரஞ் சேடித்து நிற்குஞ் சமாதி சித்தியாதாம்; திருஷ்டாவானவன் பலாற்காரமாகப் பாஷாண ரூபத் தன்மையைப் பாவித்துக் கொண்டிருப்பின் அந்தத்திலும் அடிக்கடி இவனுக்குத் திருசியத்தன்மையே யுதித்துக் கொண்டிருக்கு மன்றோ! சமாதி பலத்தினாற் கிடைக்கப்பெற்ற துயரற்ற பாஷாணத் தன்மையின் கண்ணும் திரத்தகைமையானது கிட்டு மாசையில்லையாம்; பாஷாணத் தன்மைக்குச் சமமாய நிருவிகற்ப சமாதிகள் எவர்கட்கும் திதிபெற வருவதின்றாம். இப்பொருளானது எல்லாச் சமாதி நிஷ்டர்களாலும் அனுபவிக்கப் படுகின்றது. நிரூடமில்லாதவர்க்குத் திரத்தன்மை யுண்டாகா தொழிக. அத்தன்மையை யடையும் பரியந்தம் நிரூட சமாதி யுடையவர்க்குத் திரத்தன்மையானது உண்டாமெனின்? ரூடியை யடைந்த போதினும் அசேதன அநித்திய பாஷாண முதலியவற்றோ டொக்குஞ் சமாதிகள் சருவ சமுசார சாந்தியானே யுபலக்ஷிக்கப்பட்ட சித்துருவமும் அஜமும் அக்ஷயமும் ஆகிய உயர்

ந்த மோக்ஷபத மாவதில்லை; ஆதலின் முற்கூறியதே சித்தமாம், ஆகவே இத்திரு சியமானது இருக்குமாயின் அஃதொருகாலுஞ் சாந்தியை யடையவே மாட்டாது. தப ஜபத் தியானங்களானே திருசியம் சாந்தியடையு மென்பது அறிவில்லாதவ ருடைய மனக்கிடக்கையாம். அவித்தையோடு கூடியிருக்கும் காண்போனிடத் தில் காண்பொரு ளிருக்கும் வகையை யுவமைகளாற் கேட்டி! கமல விரையி னிடையில் இனிவருந் தாமரைக் கொடிக் கேதுவாய சூக்குமமான பதுமக்கொடி வடிவம் எவ்வா றிருக்கின்றதோ, அசத்திற் குதயம் பொருந்தாமையானே, அவ் வாறு திருஷ்டாவின் கண்ணே திருசிய சகிதமதி யுளதேயாம். பதார்த்தங்க ளில் இரச மிருப்பதே போலும், எண் முதலியவற்றில் எண்ணெ யிருப்பதே போலும், மலர்களில் வாசனை யிருப்பதே போலும், திருஷ்டாவின் கண்ணே திரு சியமதி யிருக்கின்றது. சத்திற் குற்பத்தியும் நீக்க முடியாததாம் என்பதன் கண்ணும் திருஷ்டாந்தத்தைக் கேட்டி. யாண்டாண்டேனு மிருக்கும் கர்ப்பூ ராதியினுடைய நறுமணப் பான்மை யெவ்வாறு வெளியாக உதயமாமோ அவ் வாறு திருசிய வுலகமானது சித்தாதுவி னுதரத்தி லிருந்தபோதினும் வெளியா கத் தோற்றும். பரமாணுவி னுதரத்திலும் என யாது கூறப் பெற்றதோ ஆண் டும் அதனைக் கேட்டி! நினது இருதயத்தினுள்ளே மனோராச்சிய மதியானது நின் னனுபூதியினானே எங்ஙன் காணப்பட்டதோ சொப்பனமுஞ் சங்கற்பமும் காணப்பட்டதோ அங்ஙன் திருசியமும் தோற்று நிற்கும். ஆகையாற் சித்த விகற்பத்தா லெழுந்த பேயானது பாலகனைக் கொல்வதேபோல இத் திருஷ்டா வையும் திருசிய இலக்கண வடிவமாய பேயானது கொல்லும்; பெண் வடிவத் தானே மோகிப்பித்துப் புருடரைப் பேய்கள் கொல்வது வழக்கமாம். சருவ திரு சியங்களும் இருதயத்தி லிருக்குமாயின் இப்பொழுதே யாவரானும் அனுபவிக் கப்படாத தென்னை கொல்? அங்குரமானது பீஜத்தினுள்ளே நன்னிலை பெற்று அது வெளியாவதற்குச் சககாரியாய தேச கால கரும பரிபாகங்களை யனுசரித்து விளக்கமான ஆகிருதியைச் செய்கின்றது; அதுபோலவே திருசிய மதியும்பெருக் குகின்றது. இஃதின்னபடி யென்னத் தருக்கிக்க முடியாமற் காரியத்தை யுண்டு பண்ணும் ஆற்றல் சமத்கிருதியாம், அது விரை முதலிய பொருள்களின் உதரச் சார பாகத்திலேயே யிருப்பதுபோலச் சின்மாத்திர இயற்கை வாய்ந்த அவித் தைச் சரீரமுற்ற ஆன்ம திரவியத்தினுடைய வுதரத்துள்ளும் ஜடா ஜடங்களைக் கிளப்பு மியற்கை யமைந்த ஜகத் திதியாகிய சென்றவரும் உலகசத்தை யுளதா மெனக் கூறியதே நிலை பெற்றதாம்; கூறிய சமத்கிருதியானது எப்போது மிலங் குவதும் அஸ்தமன மில்லதும் ஆம்.

1 - வது பந்தஹேது வர்ணனம் முற்றிற்று.



## 2 - வது முதற் சிருஷ்டி கருத்தாவின் வர்ணனம்.

இப்போது, பூதமயமான தேகத்தை யாத்மாவாகக் கொண்ட அறியாதவன் காலனாற் பக்ஷிக்கப்படுவன் என்றும், தத்துவத்தை யுணர்ந்தவன் சின்மாத்திரமே யாத்மாவென் றிருத்தலின் ஆகாசஜனாகிய மறையோன்போலக் காலனாற்பக்ஷிக் கப்படா னென்றும் இயம்பப்படும். காம கரும வாசனைகள் நன்கு நிறைந்துள்ள அவித்தையை யுபாதியாகவுடைய ஆன்மாவே யுலக பீஜமும் கால பீஜமுமாம்,

வித்தையினாலே அந்தப் பீஜசக்தி தகிக்கப்படினே காலன் வசப்படுவதில்லை யென முற்கூறிய பொருளில் விசேடத்தைக் காண்பிக்கும்பொருட்டு உலகத்தை யாதியிற் படைப்போன்றத்துவ சோதனத்தால் விளம்பப்படும் பொருளுபோற் காத சங்கதியுற்ற ஆக்கியாயிகையை வருணித்துக்கொண்டு ஸ்ரீ வசிஷ்டர் விளம்பல்:—ஹே இராகவ! உற்பத்தியெனப் பெயரிய பிரகரணப்பொருளை யுணர்வதற்குச் சாதகமாகிச் செவிக்கரிபூஷணம் போன்றிலங்கும் இவ்வாகாசஜ ஆக்கியானத்தைக்கேட்டி:-ஆகாசத்தினின்றும் அத்தியஸ்தமாகிய அவித்தைக் கருமையின் ஆதாரத்தன்மையானே ஆகாயத்திற்கொப்பாயதும், அவித்தையான் மறைபட்டமையின் ஒளிகுன்றியதும் ஆகிய பிரஹ்மத்தினின்றும் உண்டானவன் ஆகாசஜனவன். இலிங்க சமஷ்டியான்மாவாகிய இரணியகருப்பன் என்னும் அவனது ஆக்கியானமெனவுணர்க. "அஃதெங்ஙனங்கிருதின்" என்பதாதி சுருதியினானே இரணியகருப்பபதத்தை யடைவிப்பதாகிய சம்வர்க்க வித்தை முதலிய தருமத்தில், பிரஜைகள் யாவருஞ்செய்த தருமங்களின் உள்ளடக்கங்கழறப்பெறுதலின் பரமதரும மூர்த்தியாய் ஆன்மசிந்தனை செய்வதிலேயே தற்பரராய்,எப்போதும் பிரஜைகட்கிதத்தையே செய்பவராய் ஆகாசஜன் எனப்பெயர் படைத்த பிராஹ்மணர் ஒருவர் இருக்கின்றார். அவர் மிருத்தியுவின் வயப்படாமல் நீணாள் வசித்துக்கொண்டிருந்தபோது மிருத்தியு சிந்திக்கின்றான், எல்லாப் பிராணிகளையும் யான் முறையாக அக்ஷயனாகவிருந்து பக்ஷிக்கின்றேன். இவ்வாகாசஜனென்னும் விப்பிரனையேன் பக்ஷிக்கமுடியவில்லை? கட்கத்தின் முனையானது கல்லில் மழுங்குவதேபோல இவனிடத்தில் என்னுடைய ஆற்றல் குன்றிப் போகின்றதென்னே என, நெடிது நினைந்து அக்கணமே அவரைக் கொல்லும் பொருட்டுச் சத்தியலோகத்திற் புகுவதற்கு மிருத்தியுவிற்கு ஆற்றலின்மையின் மேருவின் மத்தியிலிரா நின்ற பிரசித்தமான அவரது புரத்தைநோக்கிச் சென்றனன் சாமர்த்தியமுடைய எவருமே தமது தொழிலின் முயற்சியைத் தியாகிக்க மாட்டார்களன்றே! பின்னக்கிரகத்தையடைந்து காலன் தானே புகும்போது, சமாதிவிக்கினத்தைத் தடுக்கும்பொருட்டு முன்னரே பிரஹ்மாவினாலே கிரகத்தை வளைந்துகொண்டிருக்குமாறு சங்கற்பிக்கப்பட்ட பிரளயகால அக்கினிபோன்ற அக்கினியானது இம்மிருத்தியுவைச் சுடத்தொடங்கியது; அந்த அக்கினிச் சுவாலைகளின் மகத்தான மாலை வடிவக்கோட்டையைப் பிளந்து மிருத்தியுவானவன் உள்ளேசென்று பிராஹ்மணரைப் பார்த்து மிகுமுயல்வுடன் கரங்களாற் பற்ற இச்சித்தனன். பிராஹ்மணர் எதிரே காணப்பட்டபோதினும் நூற்றுக் கணக்கான கரங்களால் அகப்படுத்தக்கூடாமற் போய்விட்டனர்; சங்கற்பமாத்திர கற்பித புருடனை யெத்துணைப்பலவானா யிருந்தபோதினும் தீண்டக்கூட முடியாமை வெளிப்படையேயன்றே. பின்னர் மிருத்தியுவானவன் ஜயத்தை யகற்றும் யமன்பால் வந்து, ஹே வியாபகரே! அவ்வாகாசஜனைப் புசிக்க யான் சமர்த்தனாகாத காரணம் என்னே! யென வினவினன். அதைக்கேட்ட யமன், ஹே மிருத்தியுவே! நீ சகாயமற்றவனைப் பலத்தாற் கொல்வதற்கு ஒரு சிறிதுஞ் சமர்த்துடையவனாகமாட்டாய்; மரணத்திற் கேதுவாய கருமங்களே மரணத்தைச் செய்விப்பனவாகுமன்றி மற்றவையாகாவாம்; நினதாற்றல் குன்றியதன்

கண்ணும் இதுவே காரணமல்லாமல் மற்றதொன்றுமின்றும். ஆகையால் முயல்வினாலே கொல்லத்தக்க இவ்விப்பிரனுடைய கருமங்களைத் தேடுவாயாக; அவற்றின் உதவியினானே இவனை நீ புசித்துவிடலாம் என்றனன். அதன்பின்னர் அம்மிருத்தியுவானவன் அக்கருமங்களைத் தேடுவதன் கண்ணே மிகவும் ஆதரவுடையவனுய் மண்டலங்களையும், திகந்தங்களையும், தடாகங்களையும், நதிகளையும், திசைகளையும், வனக்கூட்டங்களையும், காட்டின் கூட்டங்களையும், மலைகளையும், கடற்கரைகளையும், தீபாந்தரங்களையும், ஆரண்யங்களையும், நகரங்களையும், மகாநகரத்துள்ளடங்கிய சாகா நகரங்களையும், கிராமங்களையும், எல்லாத் தேயங்களையும், தேயங்களுக்குள்ளிருக்கும் காடுகளையும் சுற்றினன்; எத்தேயத்தின்கண்ணேயிவன்முன்னெக் கருமம் செய்துளான் என வொருமையோடும் ஆலோசனை செய்தலேயே பெரு முயல்வாற் பெறத்தக்கதாதலின் சுழன்றதாகக் கூறியதாகும், தேசசஞ்சாரமென அதற்குப்பொருள் கொள்ளலாகாதாம் கருத்தாவின் சூக்கும சரீரத்தி லபேதப்பட்டிருக்கும் அதிருஷ்டங்களைப் புறத்திற்றேடுதல் கூடாமையின் கூறியவண்ணம் பூமண்டலம் முழுதும் சுழன்று முயன்று மிருத்தியு எவ்விடத்தும் ஆகாசஜனது கருமங்கள் எதனையுமே பிராஞ்ஞன் வந்தியாபுத்திரனைப்போலும், சங்கற்பமலையைச் சங்கற்பித்தவனினும் அயலான்போலும் அறியவில்லை. பின்னர் வந்து எல்லாப் பொருளையும் அறிந்த யமனைநோக்கி தாதர்கட்கு ஐயுற்ற இடங்களில் பிரபுக்கள் கதியாக விருக்கின்றபடியினாலே, ஹே பிரபுவே! ஆகாசஜனுடைய கருமங்கள் எவ்விடத்திருக்கின்றன வென்பதைக் கூறவேண்டுமென வினவ, தருமராஜாவானவர் நெடுநேரம் நன்காலோசனைசெய்து இதனைக் கூறத்தொடங்கினர்:—ஹே மிருத்தியுவே! ஆகாசஜனுடைய கருமங்கள் யாதொன்று மின்றும்; இவ்வாகாசஜனுகிய விப்பிரன் கேவலம் ஆகாசத்திலிருந்தே யுண்டானவனுவன்; பிராரப்த அதிகார பலங்கட்குப் பலத்தொடக்கத்தானே நாசமுண்மையினானும் சஞ்சிதங்கட்கு ஞானத்தானே பாத முண்மையினானும், வருங் கருமங்கட்கு விரையின்மையினானே இருப்பின்மையினானும் யாதொரு கருமமுமில்லை யென்றுணர்க. ஆகாயத்தினின்றே யாவனுண்டாயினனே அவன் நின்மலமாய ஆகாயமேயாவன்; சககாரிகளாய அபிமான இராகாதிகளேனும், மிருத்தியுவாகிய நீ கொல்வதற்குச் சககாரிகளாகிய இப்போதியற்றிய கருமங்களேனு மில்லையாம், வேறெக் கருமங்களுமே யில்லையாம். ஆகிருதி படையாதவனுக்கும் மலடி மைந்தனுக்கும் சம்பந்தம் உளதாவதிலதேபோலும் முன்னியற்றிய கருமத்தோடும் இவனுக்கு அணுவளவேனுஞ் சம்பந்தமே கிடையாது. அவ்வாறே சூத்திரமும் "அதனையறிந்திடப்பின் முன்னகங்கள், துதையாமை யழிவுகள் சொலவதுபடுதலின்" என்பதாகக் கூறுகின்றது. காரணங்களாகிய அவித்தையாதிகளின் இன்மையினானே நிர்விகாரத்திற்கு விகார ஹேதுக்களின் இன்மையினானே விகாரங்கூடாமையின் ஆகாசமே யவனுவன்; ஆகாயத்தின் கண்ணே பெரிய விருக்ஷமில்லாததேபோல இவனுக்குப் பூர்வ கருமமில்லை. சரீர சம்பந்தமான கருமமில்லாவிடினும் மனே சம்பந்தமான கருமம் இருக்கலாமேயெனின்? பூர்வ கருமங்களின் அபாவத்தினாலே இந்த ஆகாசஜனுக்குச் சித்தம் அவச மாகாதாம்; முற்சரீர அசைவின் வர்சனையின் வசமாகவே சித்தத்தின் அசைவாம், அஃதில்லாமையானே இக்காலத்திய சரீர

சம்பந்தமாய்ப் புசிக்கத்தக்கதாக மிருத்தியுவிற்குச் சஞ்சித கருமமும் கிஞ்சித்து மின்றும். இங்ஙனமாகவே, இவன் பரப்பிரஹ்ம இயற்கையனுகவே இருக்கின் ருனேயன்றித் திருசிய இயற்கையனுக இருக்கவில்லை ; இன்னணம் ஆகாசகோ சாத்மாவாய அந்தணன் தெளிந்த சிதாகாச ரூபமாய தன் காரணத்திலிருப்பவ னுய் நித்தியனுயுள்ளான் இவனுக்கெக்காரணங்களுமில்லை. அத்தன்மையினுனே முன்னியற்றிய கருமாதிகளின் அடைவேயில்லையாம் ; இவ்வந்தணனுக்குப் பழைய கருமங்களில்லவே யில்லை; யிப்போதும் யாதொன்றும் செய்கின்ரு னில்லை ; ஈண்டிவன் விஞ்ஞானவிண் மாத்திர வடிவமாகவே விளங்குகின்ருன். ஆயின் இவன் எங்ஙனம் நம்மனோரால் பிராண தேகாதிக்கிரியாவானுகக் காணப் படுகின்ருன் எனின் ? பிராணனது அசைவு முதலானவையாங் கருமங்கள் இவ் வந்தணனுக்கு யாவை நம்மனோராற்றுணியப் பெறுகின்றனவோ அவை நம்ம னோரால் நமது அவித்தை மயக்கத்தினுனே காணப்பெறுகின்றதேயன்றி இவ் வந்தணனுக் கிதன்கண்ணே சத்தியகரும புத்தியின்ரும். ஆயின் யாங்ஙனம் அவனுக்குத் தேகாதிமதி யுண்டாமெனின் ? அறிவு வடிவமாகிய தூணின்கண் ணே சித்வடிவமாகவே யுலவும் பதுமையானது பரபதத்தினும் தன்னது பின்ன மாயசித்து விலக்ஷண ஆகாரத்தைக் காட்டுவதுபோ லிருக்கின்றபடியினுலே பாவனைமாத்திர வடிவமாமன்றியஃதுண்மையன்ரும் என்பது இவன்றன்மதியாம். தம்பத்திலிருக்கும் பதுமையானது தம்பமாகவே யிருப்பதுபோலவும், நீரின் கண்ணே நெகிழ்ச்சியிருப்பதே போலவும், ஆகாயத்தின் கண்ணே சூனியத்தன் மை யிருப்பதே போலவும், வாயுவின்கண்ணே யசைவிருத்தல் போலவும், பரம பதத்திற் பரமார்த்தமாக ஆனந்தான்ம வடிவமாகவே யிவ்வந்தணன் இருந்தி லங்குகின்றனன் ; இவ்வந்தணனுக்கு இப்போது சம்பாதிக்கப்பட்ட கருமங்க ளேனும் சஞ்சிதங்களேனும் கிடையவே கிடையா. பூர்வ கருமங்கள் இவனுக் கில்லாமையானே யிவன் ஈண்டுச்சம்சார வசப்படவில்லை ; கரும அசம்பவத்தின் பயனேயன்றே சமுசார வயப்படாமை, பிரசித்தமான வெள்ளியாங் காரணத்தி னின்றும் உண்டாகாத இப்பி வெள்ளிக்கேபோலும் அவனது தேகாதிகட்குப் பொய்ம்மை நிண்ணயமுறவே, அதனுலுள்ள கருத்துருத்தகைமை பாதிக்கப்படு தலின் மிருத்தியு பிடிக்கமுடியாதாம் சககாரி காரணங்களில்லாமலே யாவனுண் டாகின்றனனே அவன்றனது காரணத்தினின்றும் பின்னமாக ஆகான் என அனுபவிக்கப்படுவன். காரண மின்மையினுனே இவன் சுயம்பு (தானேயுண் டானவன்)ஆவன். இவன் முன்னருங் கருத்தாவல்ல இப்போதுங் கருத்தாவல்ல வாகலின் நீ யெங்ஙனமிவனைப் பிடிக்கமுடியும் கூறுதி; வேறு ஜீவர்களும் இவ னது வியஷ்டியாக விருத்தலின் எங்ஙனம் அவர்கள் மிருத்தியுவினுலே கவரப் பெறுகின்றனர் எனின்? எச்சிவனுக்குப் பிருதிவியாதிமானுகிய தேகமேயா னென்னும் நிச்சயம் உளதோ அம்மூடன் பார்த்திவ தேகமேயாகின்ருன்; அவ னுக்கு இந்தப் பிரஹ்மா சத்தியசங்கற்பபுத்தியினுனே மரணமெனப் பெயரிய கற்பனையைச் செய்கின்ருர் ; அக்காலவன் விரைவில் உன்னுற் கவரமுடிந்தவனு வன்; பிருதிவியாதி கற்பனையற்றவனுதலினுனே யிவ் வந்தணன் ஆகாரமுடை யவனுகான்; திடமாய பாசத்தாலாகாசம் கவருதற்கேலாததே போலக் கவருதற் கேலான். விகாரமற்ற சூனியத்திற்கு விகாரமும், பிறப்பற்றவனுக்குப் பிறப்பும்,

சத்தாய பிருதிவியாதிகட்கு அசத்துத்தன்மையும் கூறியது சம்பவியாதெனக் கொண்டு மிருத்தியுவானவன் ஹே பகவன்! சூனியத்தினின்றும் யாங்ஙனம் உண்டாதல் கூடும். பிருதிவியாதிகள் எங்ஙனமிருக்கின்றன? இவையில்லையென்பதுதான் யாங்ஙனம்? எனக்கேட்ப, யமன் கூறியதாவது:—பரத்தையாகாச மெனக் கூறியதும், பிருதி வியாதிகளை யசத்தியமெனக் கூறியதும் சூனியத்தன்மைக் கருத்தினாலன்று; மற்றோ, காரியத்திற்குக் காரணத்தினும் வேறுசத்தையில்லையென்னுங் கருத்தானேயாம். இங்ஙனம் பிறப்பற்றவனுக்குப் பிறப்புக் கூறியது விவர்த்தாபிப்பிராயத்தானன்றிப் பரிணும அபிப்பிராயத்தானன்றும். இக்கருத்தையே விளக்கிக்கொண்டு மேலுங் கூறுவதாவது:-இவன் ஒருகாலத்தினுண்டானவனல்லன், ஒருகாலில்லாதவனுமல்லன், எதனாலித்துவிஜன் பரமார்த்தமாய்க் கேவலம் விஞ்ஞானவொளிமாத்திரமாவனே அவ்வேதுவினாலே அவ்வாறே யெப்போதுமிருப்பனன்றி விகாரத்தை யடையவேமாட்டான். முதலினும் கடையினும் அதுமாத்திரமா யெஞ்சுகின்றபடியினாலே யதுவே யிவனுடைய இயற்கையான உண்மை வடிவமாம். மகாப்பிரளயம் வந்தபோழ்து ஒரு சிறிதும் எஞ்சுவதே கிடையாது; சாந்தமாயும் ஜரையற்றதாயும் அநந்தமாயும் இருக்கும் கேவலம் ஆன்மாவாய பிரஹ்மமே யிருக்கின்றது; அது சூனியமாயும் சூக்குமமாயும் உபாதியற்றதாயும் பரமாயும் நித்தியம் விளங்கிக்கொண்டிருப்பதாயுமிருக்கும். நம்மனோரான் மயக்கத்தாலிவ்வாறு காணப்பட்டதென்று முன்னோதியதையே விளக்கிக்கூறின், சிருஷ்டி தொடங்கும்போழ்து, வாசனையதிருஷ்டநிறைந்த ஜீவாவித்தை யேதுவினாலே இவனுக்கு ஞானமாத்திர இயற்கைத்தன்மையுண்மையின் சமீபத்தில் முன்னிலைப்பட்ட விடயத்தன்மையானே பர்வதம்போலும் அகற்ற முடியாததாக விராட்டு வடிவமேனும் நான்முக வடிவமேனும் ஆனதேகம் யானெனக் கூறத்தக்க பெருந்தூல வடிவம் சிறிதிலங்கும்; அக்கால் அத்தகைய அவித்தையேதுவினாலே காகதாலீயம்போலும் காரணமின்றியே கனாப்போலப் பொய்ம்மயமாய தமாகாரத்தை யாம் முதலியோர் காண்கின்றோம். இங்ஙனமாகவே வேறு திருஷ்டியினால் அத்தியசிக்கப்பட்ட தேகாதிகளானே இவனுடைய நிருவிகற்பத்தன்மை முதலியவற்றின் கெடுதல் கூடாதாமென முன் மொழிந்தது தடையின்றியதேயாகும்; அவ்விவ்வந்தணன் சிருஷ்டியினாதியில் ஆகாயத்தின் உதரத்தில் நிருவிகற்பமாய்ச் சிதாகாசரூபமாயிருந்து கொண்டு விளங்குவன். இவனுக்குடலுமில்லை, தொழில்களுமில்லை, கருத்துருத்தகைமையுமில்லை, வாசனையுமில்லை, இவன் சுத்த சிதாகாச விஞ்ஞானகனனாக வியாபித்திருக்கின்றான். கேவலஞ் சிதாகாச ரூபனான இவனுக்குப் பிரகாசவடிவ தேஜசுக்கேபோலப் பழைய வாசனைக்கூட்டம் சிறிதுங் கிடையவேகிடையாது. பகிர்முக சிற்பிரவிருத்தி மாத்திரம் சாந்தியாயின் தோற்றிக்கொண்டிருக்கப்பட்ட ரூபங்கூடத் தோற்றவேமாட்டாதாம். ஆயின் வேதனையின் சாந்தி யெங்ஙனமாமாலோவெனின்? அதிஷ்டான தத்துவப் பழக்கத்தினாலே விடயபாதமாகவே அதனைக் கவரும் விருத்திகளாகிய வேதனைகளும் சிதாகாசமிருப்பதுபோலவே அத்தன்மையால் நிலைபெறுகின்றன. யாண்டுச் சித்தியற்கை வாய்ந்த வேதனைகளும் பொறுக்கமுடியாவோ ஆண்டுப் பிருதிவியாதிகளைப் பொறுக்குஞ் சம்பாவனை வெகு தூரத்ததாம். ஆகவே நீ பிடிக்க வேண்டுமென்னு மிச்சையே

செய்யத்தகாததாம். இவன்பால் பிருதிவியாதிகளின் சம்பவம் எத்தகையது, எங்ஙனந்தான் கூடும், அகோ! இவனைப் பிடிப்பதுதான் எங்ஙன்ஏனும்? ஆகை யால் பிடிக்கவேண்டுமென்னும் முயற்சியை யடியோடும் விட்டுவிடுவாயாக. எவ னும் ஆகாசம் ஒருகாலும் கவருதற்குக் கூடாதன்றே என்றிதனைக் கூறக் கேட்ட மிருத்தியுமிகவும் ஆச்சரிய முடையவனுய்த்தன்னரண்மனைக்குச் சென்ற னன். ஆகாசஜப் பிராஹ்மணன் என வேறு பெயர்பெற்றுப் போற்றப்பட்ட பிரஹ்மாவே என்னல் ஆக்கியாயிகையின் கருத்துரையென்பதும் உலகம் பொய் யென்பதும் இனிதறிந்து கொள்ளப்பட்டன என்பதைக் குறிப்பிக்கும் வாயி லாக ஆசிரியரை மகிழ்வித்துக்கொண்டு ஸ்ரீராகவர் கூறுகின்றார்:—சுயம்புவாயும் அஜராயும் ஏகான்மாவாயும் விஞ்ஞானன்மாவாகிய ஜீவசமஷ்டி ரூபமாயும் இருக் கும் பிரஹ்மமாகிய இப்பிரபிதாமகரே உம்மால் ஹே தேசிகோத்தமரே! கூறப் பட்டவராவர். ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்:—ஹே இராகவ! இவ்வண்ணம் எம் மால் இப்பிரஹ்மா வுனக்குக் கூறப்பட்டார்; இவர் பொருட்டே முன்னர் யம னேடும் மிருத்தியு சம்வாதஞ் செய்ததாகும். மனுக்களின் சந்திகாலத்தில் எல்லா வற்றையும் பக்ஷிக்கும் மிருத்தியு எல்லாப் பிரஜைகளையும் கொன்றுகொண்டு வலுவைப்பெற்றுத் தாமரையிற் பிறந்தோனைப் பிடித்துக்கொல்லத் தொடங்கி னன்றுனகவே; அப்போழ்தே தருமராஜாவாகிய யமனலே விரைவிலுபதேசிக் கப்பட்டவனுவன். முடியாத காரியத்திலும் மிருத்தியுவிற்கு அடிக்கடி முயற்சி யாங்ஙனம் கூடும் எனின்? கவலையினுலே கூடுமன்றே! எதனையாவன் நித்திய மியற்றுகின்றனனே அதன்கண்ணே ஆடுதல் உண்டாகிக்கொண்டேயிருக்கும். ஆக்கியாயிகை வாயிலாய்க் கூறிய பொருளைக் கண்டத்தானும் கூறி அவர் சரீ ராதிகட்கு மனேமாத்திரத் தன்மையைக் கூறுகின்றார்:—பரஆகாச சரீரமாயும் மனேமாத்திரமாயும், சங்கற்பரூபமாயும், பிருதிவியாதி யற்ற ஆகிருதியாயும், இருக்கும் பிரஹ்மாவானவர் எங்ஙனம் பிடிக்கப்படுவர்? சிதாகாச சமத்கார மே ஆகார அநுபூதிமானுய்வர அவன் சிதாகாசமாகவேதானிருப்பன்; அவனுக் குக் காரணத்தன்மையேனும் காரியத்தன்மையேனும் கிடையா. ஆகாயத்திற்கீழ் முகமான இந்திரநீல மகாகடாக ஆகாரம் பிருதிவியாதியற்றதாய்த் தோற்றுவதே போலும், சங்கற்ப புருடன் பிருதிவியாதியின்றியே தோற்றுவதேபோலும் இச் சுயம்புவும் விளங்குகின்றார். நிருமலமாகிய ஆகாயத்தில் பிருதிவியாதி விகார மில்லாமலே முத்துமாலைகள் தோற்றுவதேபோலும், மனோராஜ்ஜியத்திலும் கன விலும் பிருதிவியாதியின் விகாரமன்றியும் பட்டணந் தோற்றுவதேபோலும், இச்சுயம்புதோற்று நிற்பர். கேவலமான பரமான்மாவின் கண்ணே திருசியமு மில்லை திருஷ்டாவுமில்லை, சுயம்சின்மாத்திர சுபாவத்தன்மையேயுளது, ஆயினும் இவன் சுயம்புவென இலங்காநிற்பன். சங்கற்பமாத்திரமே இம்மனத்தின் வடிவ மாம் பிருதிவியாதியோடு சேர்ந்ததல்லவாம், அதுவே. பத்மஜராகிய பிரஹ்மா வெனக் கூறப்படும். சங்கற்ப ஆகாச புருடனே பிரஹ்மாவாம். இவருக்குப் பிருதிவியாதி சம்பந்தமில்லை. நிராகாரமாய சங்கற்பத்திற்கு எங்ஙனம் புருஷா காரத் தன்மையாமெனின்? சித்திர மெழுதுபவன் மனத்தின்கண்ணே எழுதும் பதுமையின் ஆகாரத்தைச் சங்கற்ப மாத்திரத்தானே உள்ளேசெய்து அவ்வா றே வெளியே எழுதுவன்; உள்ளேயிருக்குஞ் சித்திரப் பிரதிமை தேகமற்றதாயி

னும் அவ்வாகாரமா யிலங்குகின்றதேபோலச் சிதாகாசத்தினுடைய நிருமலமான பிரதிபிம்பத்தைக் கவரும் மனது பிரஹ்மாவாகிய பிரஜாபதி சரீர ஆகாரத்தை யுற்றிலங்கும். ஆண்டு மனத்திற்கு அவ்வாகார கற்பனைப் பரிணமம் உண்மை யாக வின்றும்; மற்றே, தூய்தாய பிரஹ்மமே அஞ்ஞானத்தால் அவ்வாறு விவர்த்தத்தையடையும்; கேவலமாயும், அநந்தமாயும், முதலிடையில்லாததாயு மிருக்கும் சிதம்பரமானது தனது சித்தவசத்தாற் சுயம்புவாகிய பிரஹ்மாவென ஆகாரமுடையதுபோலும், புருடன்போலும் விளங்காநிற்கும் உண்மையாயோ மலடி மைந்தனுக்கேபோலும் அவனுக்குத் தேகமே கிடையாது.

**2 - வது முதற் சிருஷ்டி கர்த்தாவின் வர்ணனம் முற்றிற்று.**



## 3 - வது பந்த ஹேது வர்ணனம்.

இப்போது மனோரூபம் பிரஹ்மாவாதலினானே அவனுடைய சங்கற்பமயம் உலகாம்; இவ்வுலகம் மனோராச்சியம்போலவே யசத்தாம் என்பது வருணிக்கப் படும். மனோமாத்திரமாயும் சங்கற்ப ரூபமாயும் பிருதிவியாதியற்ற ஆகிருதியா யும் என முன்மொழிந்த முறையானே பிரஹ்மாவிற்கு மனோரூபத்தன்மையை யங்கிகரிப்பதில் மனத்திற்கு வாசனைக்கூட்ட ரூபத்தன்மை யுண்மையின் பழைய வாதனைக்குழுச் சிறிது மிவனுக்கில்லையெனக் கூறுதல் பொருந்தாதாம் என எண் ணினவராய் ஸ்ரீராகவர் கூறுகின்றார்:—இயம்பியவண்ணமே மனஞ்சுத்தமானதே பிருதிவியாதியற்றதேயாகும், மனம் பிரஹ்மாவெனத் தாங்கள் கூறியது முண் மையே; பிருதிவியாதியற்றவரே யவருமாவர். ஹே பிரஹ்மசொரூபரே! ஆயின் இந்தப் பிரஹ்மாவினுடைய தேகத்தில் முன் சரீரத்தை விடுங்காலத்திலுண்டாம் நினைவு, உமக்கும் எனக்கும் அன்னியருக்கும் பசுவாதிகட்கும் தத்தஞ் சரீரத் திற் பழைய நினைவு காரணமாவதேபோல எங்ஙனங் காரணமாகாமற்போம். "எதனையெதனை யெண்ணி யிவ்வுடல் விடுவனோ" என்பதாதிமிருதியும் கூறு கின்றதன்றோ. பழைய நினைவு இருக்குமாயின் அஃதுண்டாவதற் காதாரமான சமஸ்கார தேகாதிகளும் முன்னுள்ளனவாகவே தள்ளத்தகாதனவாம். ஸ்ரீ வசிஷ் டர் கூறல்:—ஹே இராகவ! உண்மையே பூர்வதேகாதி சித்தியானுற்றான் ஆண் டனுபவித்ததைக் கவரும் நினைவு காரணமாகும்; அதுவே அசித்தமாம்; யாவ னுக்குப் பூர்வ கருமத்தோடு கூடிய பூர்வ தேகமுளதாமோ அவனுக்கிப்போது சமுசாரத் திதியின் காரணமான நினைவு சம்பவிக்கும்; பிரஹ்மாவிற்குப் பழைய கருமம் ஒரு சிறிதுமில்லாதபோது பழைய நினைவும் அவனுக் கக்கால் எங்ஙனம் எதனானுதிக்கும். அற்றேல், "அவ்விவ்வுலக ஜித்தே" என்பதாதி சுருதிகளா னேயும் அதனையாற்றியவன் என்னும் நியாயத்தானேயும் இரணிய கருப்பபதத் திற்குக் கரும உபாசனையென்னு மிரண்டன் கூட்டுப்பலத்தன்மை யுண்மை வெளிப்படையாதலின் எங்ஙனம் முன்னுடம்பு வாதனையாதி யில்லையெனக் கூறுதல் கூடும்? எங்ஙனந்தான் மனோமயமாகிய அவன் தேகத்திற்குப் பிருதி வியாதி மயத்தன்மை யின்மை கூறல் கூடும்? மனத்திற்கு "சௌமியனே மன மன்னமயம்" என்பதன் மாட்டு விகாரத்தன்மைப் பரசுருதி விரோதம் வருத லினும், அபஞ்சீகிருத பூத காரியத்தன்மைச் சித்தாந்தப் பகைமை வருதலி

ஞனும் எனின்? உண்மையே, "அஞ்ஞ திருஷ்டியினுனே யங்ஙனம், என்னினு 'மன்னியமில்லாத போழ்து, எதினின்றும் யான்பயம் எய்துவன் கொல்லோ" "நான்கு நன்குறும்" என்னும் சுருதிமிருதிகளாற் சித்தமாய அவனது தத்துவ திருஷ்டியினுனே முக்காலத்திய பிரபஞ்சத்திற்கும் இருக்கவில்லை இல்லை இருக்கமாட்டாது என்னும் முக்காலத்திய பாதமுண்மையின் பூர்வதேக வாசனை முதலியவற்றின் இருப்பின்றும் என அங்ஙன் கூறியதாம். பாதித அனுவிருத்தியினுனே (மடிந்தது தொடர்தலினுனே) மனத்தின் கண்ணும் அத்தேகத்தின் மாட்டும் வெந்த ஆடையின்கண் நூலிருக்குந் தகைமையேபோலும் பிருதிவியாதி மயத்தகைமை 'முன்போ லின்றுமென யாதொரு விரோதமுங் கிடையாது; யாண்டுப் பாதிக்கப்படாத அஞ்ஞமனச் சங்கற்ப நகராதிகட்கும் சத்தியத் தகைமையும், பௌதிகத் தகைமையுமின்றுமோ, தத்துவ ஞானத்தாற் பாதிக்கப்பட்டுத் தொடர்ந்திருக்கும் விரிஞ்சனது மனச்சங்கற்பத்தாலாய விசுவத்திற்கு அவ்வாறுந் தகைமை என்பதன் கண்ணே பென்னை கூறக்கிடக்கின்றது. இனிக் கூறப்படும் உலகப் பொய்ம்மைக்குச் சாதகமாக விருக்கும் தத்துவ திருஷ்டியையே பற்றிப் பூர்வதேக வாதனை முதலியவற்றை நீக்க வேண்டும். அஞ்ஞ திருஷ்டியை யனுவதிக்கும் உபாஸ்தி பல சுருதி வாயிலாயன்றும். ஆகையால் அகாரணமாகவே விளங்குகின்றது அல்லது தனது சித்தமாகிய தேகத்தைக் காணுஞ் சித்தமே முக்கிய காரணமாகும். அவனுக்குச் சுயமாகவோ சித்தங்கிடையாதாம். சுயம்பு தனது காரணத்தினும் அனன்னிய வடிவமாம்; சுயம் ஆத்மவடிவமாம். இச்சுயம்புவிற்கு ஆதிவாகிக தேகமே இருக்கின்றது, இவ்வஜனுக்கு ஆதிபௌதிக தேகம் பொருத்தமாகாதாம்; அர்ச்சிராமாதி மார்க்கத்தானே லோகாந்தரத்தை யடைதலின் கண்ணே சாதகமாய் நம்மனோரது இலிங்க தேகம்போலிருப்பது அதிவாதிக சூக்குமமாம். ஆதிபௌதிகமோ தூலபூத ஜன்னியமாம். ஸ்ரீ இராகவர் கூறல்:—ஆதிவாகிக தேகமென்பதொன்றுளது; ஆதி பௌதிக தேகமென்பதொன்றுளது; எல்லாப் பிராணி ஜாதிகட்கும் பிரஹ்மாவிற்கு மாத்திரம் ஒன்றே யென்பதென்னே? ஸ்ரீ வசிஷ்டர் கூறல்:—ஹே இராகவ! நேத்திர முதலிய வியாவகாரிகப் பிரமாணத்தா லறியத்தக்க பஞ்சீகிருத பூதரூபகாரண வடிவினையுடைய எல்லாப் பிராணிகளுக்குமே முன்மொழிந்த இரண்டு தேகங்களுமுண்டு. அஜனுக்கு அவித்தை யபஞ்சீகிருதபூதங்களின் அனன்னிய பரசுருதி நேத்திரமுதலியவற்றுனே விளக்கப்படாமையானும் சாக்ஷிக்கு மாத்திரம் விடயமாகுந் தகைமையானும் தோற்று மாத்திரத்தன்மையானே வியவகாரிக சத்தியத்தன்மை யின்மையின் அல்லது முன்மொழிந்த முறையே காரணமில்லாமையின் ஒரே ஆதிவாகிக சரீரந்தானுளது. வேறு வகையாகவுங் கூறக்கேட்டி:—எல்லாப்பிராணி ஜாதிகட்கும் அஜன் ஒருவனே முக்கிய காரணமாவன்; அதனுனே அவன் ஒரே தேகத்தையுடையவனுவன்; அவ்வஜனுக்குக் காரணங் கிடையாது. முதலிலுண்டாய பிரஜாபதிக்குப் பௌதிகதேகங் கிடையவே கிடையாது. சிதாகாச மாத்திர வடிவனுய்த்தோற்றுவன் இவன் ஆதிவாகிக தேகவானேயாவன்; ஆரோபித பதார்த்தத்திற்கு அதிஷ்டானத்தினும் அயலாய சொரூபமில்லை யல்லவா? இவ்வாறுகவே அவன் சங்கற்பத்தாற் கற்பிக்கப்பட்ட வுலகிற்கும் அதனதிஷ்

டான சின்மாத்திரத்தன்மை பலிதமாம்; இரணிய கருப்பன் சின்மாத்திர சரீர முடையவனுவன், பிருதி வியாதி முறையால் வந்த சரீரமுடையவனல்லன்; ஆக லின் ஆதி புருடனாகிய இப்பிரஜாபதி விண்வடிவினனாகிப் பிரஜைகளைச் சிருஷ்டிப்பன். அப்பிரஜைகளும் ஞானவிண் வடிவமாகவே யிருக்கும். என்னை, பிரஜாபதி சங்கற்பத்திற் கயலான காரண பேதங்களானே உண்டாகாமையின், எவ்வஸ்துவானது எவ்வுபாதானத்தினின்றும் உண்டாயதோ அவ்வஸ்து அதுவாகவே யிருக்கும் என்பது யாவராலும் கனககுண்டலாதிகளில் அனுபவிக்கப் படுகின்றது; படவே உலகிற்குப் பிரஹ்ம மாத்திரத்தகைமையே சித்தித்தது; அதனானே ஜீவனும் அம்மாத்திரமேயெனத் துணியப்பெறும்; புருஷன் நிர்வாண (சுக) மாத்திரமேயாவன், பரசொரூபனும் அறிவு சொரூபனும் அவனேயாவன்; அவன் சித்தத்தை யுபாதியாக வுடையவனாகலின் சித்த மயக்கத்தால் சித்த மாத்திரபூதனா யிருந்தபோதினும் உண்மையாயோ சிதாகாசமாகவே யிருக்கின்றான்; பௌதிக புருஷாதி பாவத்தை யவனடைவதே கிடையாது. சமுசார விவகாரிகளாகிய எல்லாப் பிராணிக் கூட்டங்கட்கும் சித்தத்தைத் தேகமாகவுடைய அகம்பாவத்தினுதயம் முதலினுண்டான விகாரமாம். இந்த முந்தி யிருக்கின்ற விகாரத்தினின்றும், இதனை யுபாதானமாகவுடைய தூலத்திற்கு இது மாத்திரமாயிருக்குந்தன்மை யுண்மையின் வேறுபடாமல் இதன் சொருபமாயிராநின்ற இவ்விஸ்தாரமாகிய சிருஷ்டி, காற்றினாலே அசைவின் சிருஷ்டியைப்போல ஆம். அத்தியஸ்த மனோவிகாரமாகிய வுலகிற்கும் அத்தியஸ்தத் தன்மையே பலிதமாம். தோற்ற மாத்திரத்தானே சித்தமாய ஆகிருதியுடைத்தாய்ப் பரமார்த்த சின்மாத்திர ஆகாரமாயிருக்கும் இதனினின்றும் சின்மாத்திர ரூபத்தைத் தரித்திருந்த போதினும் சிருஷ்டியானது காணப்பட்ட ஜடாகாரமா யிலங்குகின்றது. சத்தியானுபவமுடையதாக விருக்கின்றது. இதன் கண்ணே திருஷ்டாந்தம் யாதெனின்? கனாப்புரமங்கை கலந்ததேயாகும், கனவின்கண்ணே யாதொரு வேறு கனவுளதோ அங்குற்ற மங்கையை யணைந்ததெனவே சூக்கும கற்பனையுள்ளடங்கிய தூலகற்பனை திருட்டாந்தப் பொருத்தமாம். அஃதசத்தா யிருந்தபோதினும் விவகாரப்பிரயோஜன மடைவித்தலானே சத்தியானுபவமாய் விளங்காநிற்கும். ஆகவே முன்மொழிந்தது அசம்பாவிதமாகாதாம். பிருதி வியாதி மயமாகாதவனும் சிதாகாச வுருவுடையவனும், தேகமற்றவனும் தன்பாற் றானே யுதித்தவனும், ஆகிய பூதேசன் தேகத்தோடு கூடிய புருடாகிருதி யுடையவன்போல விளங்குவன். உண்மையாயோ அவனுண்டாகின்றதில்லை; மயலினால் உண்டானவன் போலிருப்பன். அஃதெங்ஙனமெனின்? அறிவுருவமாயிருத்தலினானே யுண்டாவதில்லை; சங்கற்ப ரூபமாயிருத்தலினானே யுண்டானவன் போலாவன். சொரூப ஸ்திதியானது தன் வயமாக இருத்தலினானே உதிப்பதுங் கிடையாது ஓடுங்குவதுங் கிடையாது. உலகத்தினிருப்பே போலத் தனதிருப்பு அவித்தை முதலியவற்றின் அதீனமாகாதன்றோ! பிரஹ்மா சங்கற்ப புருடர் பிருதி வியாதியற்ற ஆகிருதியுடையவர், கேவலஞ் சித்த மாத்திர வடிவினர், மூவுலகத்தின் நிதிக்குங்காரணர். விண்வடிவ இச்சுயம்புவினுடைய சங்கற்பமானது, எத்தகைய பிராணியின் கருமத்தை யனுசரித்து எவ்வெவ்வகையாக விரிகின்றதோ அவ்வவ்வகையாகவே இவ்வுலகும் நின்சங்கற்ப

மலேபோல விளங்குகின்றது. ஆயின் எங்ஙனம் எல்லாருக்கும் சங்கற்ப சபிலவில க்ஷண ஆதி பௌதிகத்தன்மையோடு கூடியதாயும் அருத்தக்கிரியா சமர்த்து டையதாயும் அனுபவம் வருதல்கூடும்? உள்ளே திடமாகச் சொரூபத்தை மறந் திருத்தலினாலும் ஆதிவாகிகத்தன்மையை மறந்திருத்தலினாலுமே ஆதி பௌதிக ஞானத்தாற் பேய்போலப் பொய்யாய்ப் புலப்படுகின்றனன். ஆயின் விரிஞ்சனுக் கும் நம்மனோர்க்கேபோல ஆதிவாகிகத் தகைமையேன் மறக்கப்படவில்லே? இந்த விரிஞ்சனுடைய ரூபமானது மாயாசபலப் பிரஹ்மத்தினுடைய சர்வஸ்தூலப் பிரபஞ்சத்தைக் குறித்துக்காரணபூத சூக்கும வடிவமாயிருக்கையின்கட் சத்திய சங்கற்பத்தன்மை யுண்மையின் அவ்வாறே தமத்தால் மறைக்கப்படாமையின் பிரத்தியக்கமாக விளங்கிக் கொண்டிருக்கிறது. ஆகலின், விரிஞ்சனுக்குச் சுத்த ஞான ரூபத்தன்மை யிருத்தலின் ஆதிவாகிக மறதியுதிக்கவில்லே. இலதாகவே யிவனுக்குப் பேய்த்தோர்போல மித்தையாயும் அசத்தியமாயும் ஜாட்டிய மய லேத்தருவதாயு மிருக்கும் ஆதி பௌதிக ஜன்னியப் பேயானது உண்டாகமாட் டாது. எக்கற்பத்தில் எதனாற் பிரஹ்மாமனோ மாத்திரம் ஆவரோ பிருதி வியாதிமயான்மக மாகாரோ அதனல் விசுவமும் மனோமாத்திரமேயாகும்; எதனி னின்றும் யாதுண்டாகின்றதோ அது அதுவேயாம். இவ்வாருகவே "அன் னத்தாற் சௌமிய" என்னுஞ் சுருதி காண்பித்த நியாயத்தானே ஜகத்திற்கு மனோமாத்திரத் தன்மையாம், மனத்திற்கும் பிரஹ்மமாத்திரத் தன்மையாம் எனப் பிரஹ்மாத்வைதம்பலிதமாம்; எதனல் அஜனுக்குச் சககாரி காரணங்கள் ஒன்றுமில்லேயோ அதனல் அவனினின்று முண்டானதற்கும் யாதொரு காரண முங் கிடையாவாம். காரண விசித்திரத்தன்மையானே காரிய விசித்திரத் தன் மையாம்; அதனலீண்டு யாதொன்றுமின்றும். காரணம் எத்தகைய சுத்தமா யிருக்கின்றதோ காரியமும் அத்தகையதாகவே யிருக்கின்றது. இவ்வண்ணமா கவே வேற்றுமைப்படுத்த முடியாமையானே காரிய காரணத்தன்மை பொருந் தாமையின் உலகம் பிரஹ்மமேயெனச் சித்தமாம்; ஈண்டுக் காரிய காரணத் தன்மையானது ஒரு சிறிதும் பொருந்துவதில்லேயாதலின் பரப்பிரஹ்மம் எத் தகைமைத்தா யுளதோ அத்தகைமைத்தாகவே மூவுலகமுமுளது. மனத்தன் மையை யடைந்ததுபோ லிருக்கும் பிரஹ்மாவினலே சுத்தமாய தன்னினும் அயலாகாதபடி நீரினின்றும் நெகிழ்ச்சியேபோல வுலகம் விரிக்கப்படுகின்றது. அசத்தாகவே யிருக்கும் இவ்வெல்லா வுலகமும் சங்கற்ப நகரம்போலவும், கந்த ருவ பட்டணம்போலவும் மனதினலே விஸ்தாரமாக விரிக்கப்படுகின்றது. இன் னணமாகவே, தத்துவத்தை யுணர்ந்தவர்கட் குலகமே பாதிக்கப்படும்போது தேகாதியின்கண்ணே ஆதிபௌதிகத் தன்மையுணர்ச்சி சம்பவியாதாம்; பழு தையின்கண்ணே பாம்புத் தன்மைபோல, ஆதிபௌதிகத் தன்மையானது இல தாம், சொரூபத்தை யுணர்ந்த பிரஹ்மாதிகள் அதன்கண் ணெவ்வா றிருப்பர் கள்? கைமுதிக நியாயத்தினலும் கூறிய பொருளேத் திடப்படுத்தக் கேட்டி! தெளிந்த மதியுடைய ஞானிக்குத் தோற்றமாத்திர தேகமுங் கிடையாதபோது ஆதிபௌதிக தேகத்தின் சொல்லேனுந்தா னுண்டு எவ்வேதுவினலே எவ்வகை யானே யுண்டாம்? உண்மை வடிவம்போ லுற்றிலகு மிவ்வுலகம் மனமெனப் பெயரிய விரிஞ்சன் வடிவத்தைத் தரித்த மனுடனது மனோராச்சியமேயாம்.

(மனுடனென்றது முன்பிருந்த உபாசக அவஸ்தையை நினைந்து கூறியதாம்.) மனதே யாவற்றையும் சிருஷ்டிக்குந் தன்மைவடிவ விரிஞ்சித் தன்மையதாம், ஆகவே அவ்விரிஞ்சித்தகைமை விரிஞ்சனுக்குச் சங்கற்பமாத்திரமாயது வெளிச் சாதன ஆதீனத்ததன்றும், தன் றேகத்தை விஸ்தாரமாக்கி மனத்தினு லிவ்வுல கம் விரிக்கப் பெறுகின்றது. மனதிற்கு விரிஞ்சன் வடிவம் விரிஞ்சனுக்கு மனம் வடிவமாம், பிருதிவியாதி மனத்தி லிலவா மேதுவினுனே இப் பிருதிவியாதி மனத்தா லான்மாவின்கண்ணே கற்பிக்கப்பட்டனவாம். தாமரை விரையின் கண்ணே தாமரை யிருத்தலேபோல மனத்தினுள்ளே திருசியவருக்க மிருக்கும். பிருதிவியாதி மனத்தி லிலவாமெனவும் மனத்தினுள்ளே திருசியவருக்க மிரு க்குமெனவும் இப்பகைப் பொருள் கூறுதல் யாங்ஙனமாங் கொல்லெனின்? மன முந் திருசியமும் இரண்டையு முணரும் சாக்ஷியாத்மாவும் ஆகிய இவை எவனு லும் ஒருகாலும் பகுக்கப் படுவதேயில்லை; படாதபோது அஞ்ஞானங் கெடா மையானே உளதே யாமெனக் கூறியதாம்; மனமுந் திருசிய தரிசனமும் ஆய இரண்டும் பகுக்கப்படாதபோது உளதேயாம். ஆகவே மனத்தைக் கெடுத்தலே திருசிய தரிசனத்தைக் கெடுத்தலாம். ஆண்டு அன்னுவய வியதிரேகத்தாற் றுணியப்பெற்ற திருஷ்டாந்தங்களைக் கூறி நிண்ணயிப்பாம். ஈண்டுன்னுடைய கனவுஞ் சங்கற்பமும் மனோராச்சிய வுணர்வும் உன்னனுபூதிக் கியையவே திரு ஷ்டாந்தமாம். ஆகலின் திருசியங்கள் இருதயத்தி லுளவாம்; உளவாகவே சித்த விகற்பத்தா லுதித்திருக்கும் பேயானது சிசுவைத் துன்புறுத்துவதே போலத் திருசிய ரூபியாகிய பேயும் உள்ளே காண்பவனைத் துன்புறுத்தும் விரையினுள்ளே யங்குரமான திருந்து தேசகால பரிபாகத்தினுலே விளங்கும் படியான ஆகிருதியைச் செய்வதேபோல மனதும் திருசியத்தை விரிக்கும். மகத் தான முயல்வினுலே திருசிய மித்தியாத் தன்மையைச் சாதிப்பது யாதின் பொருட்டோ, அது சத்தியமா யிருப்பின் வந்த கெடுதி யாதோவெனின்? திருசிய துக்கமானது சத்தாக இருக்குமாயின் ஒருகாலும் ஒழியவேமாட்டாது; திருசியம் போகாமற்போனல் உணர்ந்தவனிடத்திற் கேவலத்தன்மை சித்தியா தாம்; திருசியமில்லாதுபோயின் உணர்பவன்பால் உணர்பவனுந் தன்மையானது இருந்தபோதினும் சாந்தியையடையும்; ஆயின் மித்தை வடிவமாயின் என்னே கூறற்குளது? இவனுக்கு அக்கேவலத் தன்மையை மோக்ஷமென மொழியா நிற்பர்.

3 - வது பந்தஹேதுவர்ணனம் முற்றிற்று.



## 4 - வது உற்பத்திப் பிரகரணார்த்த கற்பனம்.

இப்போது உபதேசங் கேட்டு முன்னெழுந்திருத்தன் முதலியவை இர வின் கிரமம், விடியற்கால வருகை, சித்த இயற்கை என்பவை வருணிக்கப்படும். ஸ்ரீ வான்மீகி முனிவர் கூறல்:—மேன்மையான வசனத்தையுடைய முநிநாயக ரான ஸ்ரீ வசிஷ்ட பகவான் இங்ஙனியம்பியபோது கேட்பதற்காக ஜனங்கள் மவுனமுற்று ஒருமையோடு மிருந்தார்கள்; எவ்வா றொருமையின் குறிப்பிருந்த தென்னின்? அசைவின்மையினுனே கிங்கிணிகளின் சத்தங்கள் யாவும் சாந்தி

யடைந்திருந்தன, பஞ்சரங்களுக் குள்ளிருக்கும் பச்சைக் கிளிகளும் நாகணவாய்ப் புட்களும் விளையாட்டை விட்டிருந்தன. மங்கையர்க ளியாவரும் விளையாட்டை முற்றினும் மறந்திருந்தனர்; அதனானே அரண்மனையிலுள்ள யாவரும் சித்திரச் சுவற்றி லமைக்கப்பெற்ற சித்திரங்கள்போ லிருந்தனர். இனிமையான வெய்யிலோடு கூடித் தினமும் ஒரு முகூர்த்த காலத்தோடு சேடித்திருந்து விவகாரங்களும் சூரிய கிரணத்தோடு சுருங்கிநின்றன. இனிது விரிந்தசெந்தாமரைக் கூட்டங்களின் மணங்களாற் புஷ்டி யடைந்தனவாய்க் காற்றுகள், மந்தமந்தமா யசைந்து இனியனவாய் ஸ்ரீ வசிட்ட வாக்கியங்களைச் சிரவணிக்க வந்தனபோல் வந்தன. சூரியன் சிரவணத்தாற் கவர்ந்த பொருள்களைச் சிந்திக்கும் மனனத்தாற் றிடப்படுத்தும் பொருட்டுப் போவதுபோற் றினஞ் செய்யுமயலை யொழித்து ஜனங்களில்லாத ஏகாந்த அஸ்தகிரியின் தாழ்வரையை யடைந்தான். ஞானத்தைத் தரும் ஸ்ரீ வசிஷ்ட வாக்கிய சிரவணத்தாலுள்ளே குளிர்ந்திருக்குஞ் சாந்ததைகள்போல வனபூமிகளிற் பனிகளின் றொடக்கத்தாலுண்டாம் விடமத்தன்மை யில்லாத உட்சீதளங்க ளுண்டாயின. ஜனங்கள் ஒருமையுடன் சிரவணிப்பதற்கே போலும் சர்வ வேறு வியாபாரங்களையும் விட்டவர்களாய்ப் பத்துத் திசைகளிலும் அற்ப சஞ்சாரமுடையவ ராயினர். சகல வஸ்துக்களின் நிழல்களாகிய சகல சுரோதாக்களின் நீண்ட கழுத்துகள் ஸ்ரீ வசிஷ்ட பகவானது வசன முறையைச் சிரவணிப்பான்போன்று நீட்சியையடைவுற்றன. துவாரபாலனானவன் சந்நிதியில் வந்து வணங்கினவனாகி பூபாலராகிய தசரதரை நோக்கி ஹே தேவ! ஸ்நாந துவிஜ அர்ச்சனை முதலியவை செய்வதற்குக் காலம் மிகவும் ஆகிவிட்டது என்று விண்ணப்பித்தான். அதன் பின்னர் ஸ்ரீ வசிஷ்ட பகவான் தமது மதுரமாகிய வாணியை யுபசங்கரித்து, ஹே மகாராஜாவே இன்று சிரவணித்தது இம்மட்டும் இருக்கலாம், மற்றவற்றைக் காலையிற் கூறுகின்றேனெனக் கூறி மவுனத்துட னிருந்தனர்; இங்ங னியம்பியதைக் கேட்ட அரசர் அவ்வாறே யாகுகவெனக் கூறித் தமக் கயிசுவரிய சித்தியின்பொருட்டுப் புஷ்பம், பாத்தியம், அர்க்கியம், சன்மானம், தக்ஷிணை, தானம் பூஜை முதலியவற்றானே, தேவதைகளையும் இருஷிகளையும் முனிவர்களையும் பிராஹ்மணர்களையும் ஆதரவோடும் பூஜை செய்தனர். அரசர் முனிவர் முதலியவற்றின் மண்டலத்தோடு கூடிய சர்வ சபையும் பின்ன ரெழுந்திருந்தன; எழுந்திருந்தபோது ஆசையற்ற முனிவர்களானே அரசர் தந்த இரத்தினங்கள் உபேக்ஷையால் விடப்படலான் மண்டலாகாரமாய் வீழ்ந்திருக்கும் இரத்தினக் கூட்டங்களின் ஒளிவிழுதலான் மறைவுற்ற முகங்களை யுடையவராயினர். பரஸ்பரம் அங்கங்கள் படுதலானே கேயூர கங்கணங்களெல்லாம் சப்தித்துக்கொண்டிருந்தன. முத்து மாலைகளின் பாரங்களோடு கூடிப் பொன் கலந்த பட்டுப் பீதாம்பரங்களின் காந்தியைக் கவர்ந்தனவாய ஊருஸ்தனாந் தரங்களோடுகூடியிலங்கினர். உச்சியில் வைத்திருக்கும் மலரின் விரிந்த பாகத்தில் இளைப்பாறிக் கொண்டிருந்த வண்டுகளின் சத்தங்களாற் சிரத்தின் கேசங்கள் பேசுகின்றனபோன்று கும் கும் என்னுஞ் சப்தங்களோடு கூடினவாகிச் சிரங்கள் பொலிந்தன. பொன்னாபரணப் பொலிவின் ஒளியினாலே பொன்மயமாக்கப் பட்டன. திசைமுகங்களெல்லாம், ஸ்ரீ வசிஷ்ட பகவானுடைய திருவாக்கி னின்றுங் கிளம்

பிய அருத்தங்கள் மதியின்மாட் டிருத்தலானே சாந்தியடைந்த இந்திரியங்களை யும் விருத்திகளையு முடையவரா யிருந்தனர்; இவ்வண்ணமாய் விண்வாழ்வோர் விண்மனைகட்கும் மண்வாழ்வோர் மண்மனைகட்கும் சென்றனர்; அவர்களியா வரும் தங்கள் தங்கள் கிருகங்களில் தினத்தில் நடக்க வேண்டிய ஆசாரங்களைச் செய்தனர். இவ்வாறிருக்கையில் ஜனசங்கங்களி னின்றும் விடுபட்டிருக்கும் பால அங்கனை வீட்டிலிருப்பதேபோலக் கறுத்த இரவானது காணப்பட்டது. வேறு தேசங்களை விளக்குவதற்காகத் தினநாயகனாகிய சூரியன் சென்றனன். எல்லா இடங்களிலும் பிரகாசஞ் செய்வதே சற்புருடர்கட்கும், பிரஹ்ம வடிவ மானவர்க்கும், பிரஹ்மத்தின்கண் ணிட்டை புரிபவர்க்கும் விரதமன்றோ! சந் தியையானது நிறைந்த நக்ஷத்திரக் கூட்டங்களோடு கூடியதாயும் மலர்ந்த கிஞ் சுக வனங்களோடு கூடியதாயும் வசந்த இலக்குமி வந்துதித்ததேபோலப் பக்கங் களி லுதித்தது. மா கடம்பம் கதம்ப முதலிய தருக்களின் சாகைகளிலும் கிரா மங்களிலுள்ள ஆலயக் கோபுரங்களிலும் மாடிகளிலும் இருக்குங் கூண்டுகளிற் பறவைகள் நித்திரையோடு கூடிய சித்தத்தின்கண்ணே நிருமல விருத்திகள் அட ங்குவனபோ லடங்கின. சிறிது சிறிதான குங்குமச் சாயையாற்போல விசித் திரமான சூரியனது பிரகாசத்தானே யலங்கரிக்கப்பட்ட மேகங்களானே பீதாம் பரந் தரித்தும், நக்ஷத்திர மென்னும் முத்துமாலையைப் பூண்டும் அழகோடு கூடியும் இராநின்ற அம் முன்னறைந்த அஸ்தமய பர்வதமானது சூரியனுடைய காந்தியினாலே யலங்கரிக்கப்பட்ட மேகங்களின் லேசத்தோடுகூடி நக்ஷத்திர ஆரத்தோடுகூடி யழகோடு விளங்கும் ஆகாசத்திற் பிரவேசித்தது; விஷ்ணுவா னவர் பீதாம்பர தாரரா யுடுக்கணமொத்த ஆரத்தை யணிந்தவரா யிலக்குமி யோடு கூடி மறைப்பற் றிலங்கும் தமது வடிவத்தைத் தியானிப்பவர்களுடைய இருதயாகாசத்திற் பிரவேசித்ததுபோ லிருந்தது. (இதனானே மாலைக் காலங் களிற் கடவுளைச் சிந்தித்திருத்தல் மேன்மையானதெனக் குறிப்பிட்டவா றாயிற்று) பூஜையைப் பெற்றுச் சந்தியாதேவி சென்றிருந்தபோது அந்தகாரங் கள் அவ்வம்மையின் கணங்களான வேதாளங்கள் சரீரத்தைத் தரித்து வந்தன போல் வந்தன. வாயுவானது அதிசீதளமாய்ப் பனித்துளிகளைக் கவர்ந்து விளை யாட்டாகத் தளிர்களை யசைத்து மிக் மிருதுவாக மனோரம்மியமாய் மணமுற்ற தாய் வீசிக்கொண்டு இதழ்களை விரியுமாறு செய்தலானே ஆம்பல்களைப் புகழ் ந்து வந்தது. சூரியனாகிய நாயகனை யிழந்த திசைகள் விதவைப் பெண்கள் போலப் பனி வெண்புடவையை முக்காடிட்டு மூடிக்கொண்டிருத்தலின் ஒளிர்வு பெறுத நக்ஷத்திரங்களாகிய நேத்திரங்களோடு கூடித் தொங்கிக்கொண்டிருக் கும் நீண்ட இருளாங் கூந்தலோடுற்று மிகவுங் கண்டெரியாமையை யடைந்தன. சசியாகிய பாற்கடல் உலகத்தை ஒளியாகிய பாற்பிரவாகத்தால் நிரப்பிக்கொ ண்டு ரசாயனமென்னும் அமிருத மயாகாரமாய்க் ககனத்திற் கிளம்பியது. இருட் கூட்டங்கள் ஓடி யெங்கேயோ ஒருவருக்குந் தெரியாமன் மறைந்துகொண்ட தன்மை, ஸ்ரீ வசிஷ்ட பகவானுடைய ஞானோபதேசத்தைச் சிரவணித்த அர சர்களது சித்தத்தினின்றும் அஞ்ஞானங்கள் சென்ற தன்மைபோன் றிருந்தது. இருடிகளும், பூமிபாலர்களும், முனிவர்களும், பிராஹ்மணர்களும், ஸ்ரீ வசிஷ்ட பகவானா லுபதேசிக்கப்பட்ட அருத்தங்கள் தங்கள் சித்தத்தி லிளைப்பாறி

யிருப்பதேபோலத் தங்கள் தங்க ளிருப்பிடங்களி லிளைப்பாறினார்கள். யமனு டைய சரீரத்திற் கொப்பான இருட்டாற் கொளுத்திருக்கு மிரவானது சென் றது, பின் பனியினாலே மிகவு மூடப்பட்டு விடியற்காலம் மெதுவா யங்கவர்கட் குற்றது. விண்ணில் விளங்கிக் கொண்டிருந்த நக்ஷத்திரங்கள் விடியற்காலையில் வீசும் வாயுவினான் மழையுதிர்த்த மலர்கள் ஒதுக்கப்படுவதேபோல மறைதலை யடைந்தன. அருக்கன் றனது காந்தியினாலே ஜனங்களுடைய விழிகளைத் திற ந்துகொண்டு பெரியோர்களுடைய மனதின்கண்ணே புதிதாகத் தோன்றிய விவேக விருத்தியைப்போலக் கண்காணத் தோன்றினான். சிறிது சிறிதான குங் குமச் சாயையாற்போல விசித்திரமான சூரியனது ஒளியானே யலங்கரிக்கப் பட்ட மேகங்களானே பீதாம்பரந் தரித்தும், இருளைக் கெடுக்கும்படியான பொன்மயச் சிகரங்களைப் பொருந்தியும், உடுக்கணங்களாகிய வெண்டாள மாலை யைப் பூண்டும், கவின்மிக வாய்ந்து மிலங்காநின்ற உதயாசலமானது அத்தகைய ஆகாயத்திற் பிரவேசித்தது. விண்ணிருப்பாரும் மண்ணிருப்பாரும் விடியற் காலையில் செய்யவேண்டிய நியமங்களை யெல்லாம் முடித்துக்கொண்டு மீண்டும் சென்ற நாண்முறைபோலவே சபையை வந்தடைந்தனர். முனபோ லருக்கத் தோடும் புகுந்திருந்த சகல சபையும் காற்றற்ற தாமரைத் தடாகம்போல அசை வற்றிருந்தது. பின்னர் முன் பிரசங்கத்தை யனுசரித்து ஸ்ரீ இராகவர் மதுர மாகிய வாணியினாலே உபதேசிப்பவர்களுட் சிரேஷ்டரும் முனி சார்த்தூலரும் ஆன ஸ்ரீ வசிஷ்ட பகவானை நோக்கிக் கூறுகின்றார், ஹே பகவன் ! மனதினது உண்மையான வடிவம் எத்தகையது என்பதைப் பற்றி வெளிப்படையா யனுக் கிரகிக்க வேண்டும், அம்மனத்தினாலன்றோ இவ்வெல்லா வுலகமாகிய பூங்கொத்து கள் இயற்றப் பெறுகின்றன ; மனத்திற்கு எந்த ரூபங் கூறப்படுமோ அதே ரூபம் அகிலத்திற்குமாம் ; தத்துவமற்றதாம் வடிவ மித்தியாத் தன்மையானது பொருந்தாதாம். ஸ்ரீ வசிஷ்ட பகவான் கூறல்:— ஹே இரகுநந்தன ! சூனிய ஜட ஆகிருதியையுடைய ஆகாயத்திற்குப் பெயர் மாத்திரமே யல்லாமல் யா தொன்றுங் காணப்படாததேபோல இம்மனதிற்கு மொரு வடிவத்தையுங் காணேம், இதனானே யதன் காரியங்களில் "விகாரம் வாக்கால் விரித்த பெய ரதே" எனக் கேட்ட மித்தியாத்தன்மை பொருந்தும். (சூனிய ஜடாகிருதித் தகைமை பூதாகாசத்திற்கும் மனத்திற்கும் பொதுவாகப் பொருந்தும்) விண் போன்றமையையே மேலும் விரிப்பின், எல்லாவிடத்திலுமிருந்து கொண்டிரு ந்து மிவ்வாகாயம் சத்ரூப மாகாததேபோல இம் மனமும் சத்ரூபமாக வெளி யிலு மிருப்பதில்லை ; உள்ளிருதயத்திலு மிருப்பதில்லை. இம் மனதினின்றுங் கிளம்பி யிருக்கின்ற ஜகத்தானது மயற்கு விஷயீபூதமா யத்தியஸ்தமாய்த் தோற்றுங் கானனீருக்குச் சமானமாய்த் தோற்றும். இதன் ரூபமானது கண சங்கற்பத்தினாலே இரண்டாவது சந்திரனைப் பார்க்கும் மயற்குச் சமானமாம். உண்மையாக மனமெனப் பெயரிய பதார்த்த மொன்றில்லவே யில்லை யெனினும் சாஸ்திர சம்பந்தமான விவகார சாதகமாகக் கற்பனையா யதனுருவஞ் சொல்ல வேண்டியதே யாகும் ; பிரத்தியக்ஷத்தில் எதிரே யிருப்பதும் மிருதியாதி பரோ க்ஷத்தி லில்லாததும் ஆகிய அருத்தத்தி னிடையில் எவ்விவ்வவ் வாகாரத் தோற்றமுளதோ, எல்லா ஜனங்கட்கும் பிரசித்தமாகத் தெரியவருமோ அது

மனமென அறியத்தக்கதாம்; மற்றென்று மல்லவாம். தொகுத்ததனையே கூறின் எப்பொருட் டோற்றமுண்டோ அதுவே மனமென அறையப்படும், மனமெனப் பெயரிய வஸ்து வேறென் றொருகாலுங் கிடையவே கிடையாது. மற்றே, நிரா காரமாய சித்திற்கு யாதொரு அருத்தாகாரமான அத்தியாசமுளதோ அதுவே மனதாம். இவ்வண்ணம் விருத்தி சாமானியமாக இவ்விலக்கணங் கூறப்பட் டது. இனி அசாதாரண விருத்தியினாற் கூறுவாம். சங்கற்பிக்கின்றதே மன மென அறிந்துகொள்ளல் வேண்டும். சங்கற்பத்தினுமது வேறுவதே கிடை யாது. எதுபோன்மெனின்? நெகிழ்ச்சியானது நீரினும் வேறாகாததேபோலும் அசைவானது வாயுவினும் வேறாகாததேபோலும் என்றுணர்க. அதனையே விஷயபேத விவஸ்திதியைக் காட்டும் வாயிலாய்த் திடப்படுத்துவாம். யாண் டுச் சங்கற்ப முண்டாகின்றதோ ஆண்டு அம்மனம் அங்கமாம். அவ்வாறே நிலை பெறும் சங்கற்ப மனதுகள் ஒருகாலும் ஒருவரானும் பிரிவுபடுவதே கிடை யாது. அங்ஙனமாயின் சித்தோடு கூடியிருக்கும் விருத்தியே பதார்த்தத் தோற்றமெனப் பகரப்படுகின்றது. ஆண்டுச் சித்திற்குச் சத்தியத்தகைமை இருப்பின் அதனோடு கூடிய மனதிற்கு மித்தியாத்தகைமையுறல் எங்ஙனங் கூடு மெனின்? பொய் விடயாகாரத்தாற் பொய்யாயின் ஆகுக, சத்திய சித்தின் சேர்க்கையாற் சத்தியமாயினு மாகுக, எவ்வாறு கூறினு மிஷ்டமே யல்லாமல் இவ்வாறுதா னிருக்க வேண்டுமென்பதாக ஆக்கிரகமில்லை, பதார்த்தத் தோற் றம் எங்ஙன மிருந்தாற்றானென்னே, அத்துணை மாத்திரம் மனமென அறிந்து கொள்ளல் வேண்டும், அதனையே பிதாமகனாகிய பிரஹ்மாவென அறிந்துகொள் ளல் வேண்டும், மனம் எம்மாதிரியாக இருக்கின்றதோ அம்மாதிரி யதன் சமஷ் டியும் அம்மாத்திர இயற்கையதேயாம், அதுவே விரிஞ்சியுமாம் என்னும் விஷ யம் கெடுதலில்லாததே யாகும். இவன் சர்வாகார மனோதேகத்தை யுடையவ னாயின் இவனுக்கு வேறாகச் சிருஷ்டிக்கக் கிடந்ததென்னேயெனின்? ஆதிவாகிக சூக்கும தேகாத்மா மனமென மலரப்படும்; சூக்குமங்களுக்குள்ளே நெடுநாட் கலந்திருந்து கலப்பினாற் பஞ்சீகரண முற்றபோது தூலப் பிருதிவியாதி மதியை அவனே செய்வன் அதுவே அவன் சிருஷ்டித்தலாம். மன முதலிய பிரபஞ்ச மியாவும் அவித்தையின் விலாசமாதலின் அவித்தையேயாம். அதற்கே மேலும் மேலும் பெயர்கள் கூறப்படும்; அவித்தை, சமுசாரம், சித்தம், மனம், பந்தம், மலம், தமம், என்பனவாய பரியாய நாமங்கள் திருசியத்திற்குண்டென உத்த மர்க ளுரைப்பார்கள். உண்டா யிருக்கப்பட்ட திருசியத்திற்கு அவித்தைத் தன்மையேனும் மனத்தன்மையேனும் ஆயின் எங்ஙனம், அவற்றிற்கநாதித்தன் மைப் பிரசித்தியாதல் கூடும்? திருசியத்தைத் தவிர்த்து மனதிற்கொரு சிறிதும் ரூபமில்லையென்ப துண்மையே யாகும்; ஆயினும் இத்திருசியமானது உண்டா கவே யில்லையென மீண்டும் கூறப் போகின்றோம். ஆகவே சித்தினிடத்தில் அவி த்தையி னிருப்பே யுலகின் இருப்பெனப் பலத்ததாகும், தாமரைப் பீஜத்தி னுள்ளே தாமரைக் கொடியானது இருப்பதேபோலப் பரமாணுவென்னச் சூக் கும மகா சித்தினுள்ளே திருசியமாகிய வுலக மிருக்கின்றது. அவித்தையோடு கூடியிருக்குஞ் சித்திற்குத் திருசியப் பிறழ்ச்சியிலாமையின் திருசியம் அதன் சுபாவமாம், பிரகாசத்திற்கு ஆலோகம் சுபாவமாதலே போலும், காற்றிற்கசைவு

சுபாவமாதலேபோலும், நீருக்கு நெகிழ்ச்சி சுபாவமாதலேபோலும், திருஷ்டாவின்கண்ணே திருசியத்தகைமை சுபாவமேயாம். அதன் சுபாவமாகவே அதனினுந் தனித்த சத்தை யின்றென்றாயிற்று. பொன்னிற் பூஷணமிருத்தலேபோலும், கானலாற்றில் நீரிருப்பதேபோலும், கனாப் பட்டணத்திற் சுவரிருப்பதேபோலும் திருஷ்டாவின்கண்ணே திருசியமதி யுளதாம். இவ்வண்ணந் திருஷ்டாவினிடத்தில் வேறல்லாததே போல எத்திருசியத் தகைமை யிருக்கின்றதோ அம்மலத்தையும் விரைவில் உனது சித்தமாகிய கண்ணாடியினின்றும் நீக்கி விடுகின்றோம். மற்றொன்றின் சத்தையினாலே மற்றொன்றிற்கு இருப்புக் கூடாமையின் திருசியத்திற்குத் திருஷ்டாவைக் காட்டினும் வேறாகச் சத்தையிலதாகவே திருசியம் ஒழிந்தவழி அவ்வனுமையானே சின்மாத்திரமாய இத்திருஷ்டாவிற்கு எவ்வதிருஷ்டாத்தன்மை யுளதாமோ அதனானே பாதிக்கப்பட்ட திருசியத்தாற் சன்மாத்திர சித்துருவத்தால் எஞ்சிய ஆன்மாவிற்கு அக்கேவலத்தன்மையாமென வுணர்க. இங்ஙனமாகுக, ஆயினும் தாங்கள் பிரதிஞ்ஞை செய்தபடி எனது மனக் கண்ணாடியிலிருக்கும் திருசியமல நீக்கம் எங்ஙனம் சித்தியாமெனின்? சித்தத்திற் கைவல்லிய போதத்தால் அத்தன்மை யுளதாகவே இராகத் துவேஷாதி வாதனைகள் காற்றசைவினா லுண்டாய வன தடாகாதிகளின் கலக்கங்கள் காற்றின் அசைவின்மையினானே சாந்தியடைவதேபோலச் சாந்தியடையும். விடயமில்லாமல் ஞானத்தின் றிதி சம்பவிக்க மாட்டாதென்னும் எண்ணத்தினை திருஷ்டாந்தத்தால் அனுபவப்படுத்துவாம்; ஒளிர்விக்கப்படுவனவான திக்குப் பூமியாகாச ரூபங்களியாவு மில்லாதபோது ஒளிக்கெத்தகைய நின்மலரூபம் பவிக்குமோ, மூவுலகம் நீயாம் என்பனவாய திருசியங்களிலாதபோது விமல வடிவமாய திருஷ்டாவிற்கு அத்தகைய கேவலீபாவமான துண்டாம். சைல முதலிய சருவப் பிரதிபிம்பங்களுந் தோற்றாதிருக்குந் தருப்பணத்தில் தருப்பணத் தன்மையானது கேவலந் தருப்பணான்ம வடிவமா யெப்படி யிருக்கின்றதோ அப்படியே, நீயும் யாமும் உலகமும் பிறவும் ஆகிய திருசிய சம்பிரமம் எல்லாம் ஒழிந்தபோது திருஷ்டாவினிடத்திற் றிருசியத்தைக் காணவேண்டுமென்னும் நோக்கம் இலதாகவே திருஷ்டாவினிடத்திற் கேவலத் தன்மை யிருக்கும். திருசியமானது அசத்தியமாயின் தாங்கள் கூறிய கேவலீபாவமாம் அதுவே யனுபவ விருத்தமாம் இருக்கின்றது இருக்கின்றது என்பதாகவே திருசியம் அனுபவிக்கப்படுதலின் எனப் பரிணும வாதத்தைக் கருத்துட்கொண்டு ஸ்ரீ இராகவர் சங்கித்தல்:—இத் திருசியமானதிருக்குமாயின் ஒழியவே மாட்டாது, என்னை? இருப்பதற்கு இல்லாமையானது கிடையாதன்றோ, தோஷத்தைக் கொடுத்துக்கொண் டிருக்கும் இத்திருசியத்தின் கண்ணே அசத்துத்தன்மை யிருப்பதாக எங்களுக்குத் தெரியவில்லை; ஆகலின், ஹே பிரஹ்மத்தை யுணர்ந்த முனிசிரேஷ்டரே! மனத்தா லுண்டாகா நின்ற ஜன்மாதி, மயலைச் செய்விப்பதும், துயர பரம்பரையைத் தருவதும் ஆகிய இத்திருசிய விசூசிகையானது எங்ஙன் சாந்தியை யடையும்? இல்லாத திருசியத்திற்கும் அவித்தையினாலே சற்சம்பந்தத்தால் உள்ளதென்னும் மயலாம், கேவலீபாவ சாக்ஷாத்காரத்தானே அவித்தை நசித்தவுடன் இம்மயக்கம் உண்டாக மாட்டாது என்பது மகா ரகசியமாகும்; முன்னர்ச் சீவன் முக்தனைத் தரிசித்

திருக்கும் ஏதுவினுனும், மோக்ஷம் வராமற் போய்விடும் என்னும் வழக்கானும், திருசியத்திற் சத்தியத்தன்மை நம்பிக்கையை யகற்றி விவர்த்தவாதம் பற்றி ஸ்ரீ வசிஷ்ட பகவான் விடையளித்தல்:—ஹே இராகவ! இத்திருசியப் பேயின் சாந்தியின் பொருட்டு இம்மந்திரத்தைக் கேட்பாயாக, அதனுல் அத்தியந்தமில்லாமற் சேதனத் தன்மையானே கருதப்பட்ட தேகாதிகள் மரிக்கும், அசேதனங்கள் நசிக்கும். (பாதம் இருவகையாகக் கூறியதாம்) பரிணும வாதத்தில் தோஷமென்னேயெனின்! ஹே இரகுநந்தன! யாது இருக்கின்றதோ அதற்கொருகாலும் நாசமே கிடையாது, ஆகலின், அஃதழிந்த போதினும் இருதயத்துள்ளே பீஜபூதமா யிருக்கும்; பரிணும வாதத்தில் உத்தரோத்தர அவஸ்தைகளினுலே பூர்வ பூர்வ அவஸ்தையின் மறைப்பு மாத்திரமே யல்லாமல் அழிவுபாடு கிடையாதாம், இருப்பதற்கில்லாமை கூடாமையின்; ஆகவே, நாச இலக்கண ஆறும் விகாரத்தானே மறைபட்ட இருமையும் மனத்திலேனும் பிரகிருதியிலேனும் இருந்து பின் காம கரும வாசனைப் பீஜத்தான் மீண்டு முண்டாவதைத் தடுக்க முடியாதாக மோக்ஷமின்றென்னும் வழக்கன்றேவாம். சிதாகாசத்திற் றிருசிய மதியானது, நினைப்பு போகத்திற்குச் சாதகமாகிய அந்தக்கரண விருத்தி முதலிய யாவுமாம் வித்தினின்றும் மீண்டு மீண்டு முண்டாகியுலகுசைல அம்பர ஆகாயமாய தோஷத்தை விஸ்தாரமாக விரித்துக்கொண்டேயிருக்கும். இருக்கவே மோக்ஷமின்று மென்னும் தோஷமாம் அதற்கிங்கு சம்பவமாதல் தகுதியல்லவாம், ஏனெனின்? தேவதைகளேயும், இருடியரையும், முனிவரையும் ஜீவன் முக்தர்களாகப் பார்க்கின்றேமன்றே. சிதான்மாவாய இவன் தனக்கு வெளியிலிருக்கும் பிர்தானத் தமர்ந்த திருசியத்தையே அவிவேக மதியினுனே தனது இருதயத்தி லிருப்பதாகக் காண்கின்றனன். அதுவே யிச்சமுசாரமாம், அது விவேக ஞானம் உதயமாகவே அதன் விவேகத்தாலாய அபிமானம் நீங்கிய வழியும் வெளியி லஃதிருந்தபோதினும் விவேக ஞானத்தினுன் மோக்ஷமாமே யெனச் சாங்கியர் கூறுவதை யேன் பற்றலாகாதெனின்? இவ்வுலக முதலியவை யிருக்குமாயின் அதனுன் மோக்ஷம் ஒருவருக்குமே யுண்டாகமாட்டாது, அத்திருசியமானது வெளியிலிருப்பதன் கண்ணேதா னிருக்குக, இருதயத்துள்ளேதா னிருக்குக, கேவலம் நாசத்தின் பொருட்டேயாம். ஆகையால் விவர்த்தவாதமே பரிசேடித்திலங்கும். அதனுல் விடயத்தி லாசையுள்ளவர்க்கும் ஆரம்பவாதிகட்கும் பயத்தைச் செய்விக்கும் இப்பிரதிஞ்ஞையை நீ கேட்டி! மேற்கூறப்படுங் கிரந்தத்தானே யதனை நன்குக அறிந்துகொள்வாய். (" தீண்டலில் யோகத் திகழ்பெய ரிதுதான், காண்டாற் கரிதெலாக் கண்யோகுளார்க்கும், ஆண்டகை யோகிக ளச்ச மடைகுவர், ஈண்டெத னற்பய மிலதிலேயும்பயம்" எனப் பயத்தை ஸ்ரீ கௌடபாத ஆசிரியரும் கூறியுள்ளார்.) இதுவென்னும் ஆகாச பூதாதிருபமும் யானென்பதுமாகத் தோற்றும் உலக சப்தத்தின் நாமார்த்தம் யாதொன்றையுங் காணவே காணேம். எவ்வித் திருசியக்கூட்டமானது எதிரே யிருப்பதாகச் சிறிது காணப்படுகின்றதோ அவ் வியாவுமே அஜாமாயும் அமரமாயும் அவ்வியயமாயு மிருக்கும் பரப்பிரஹ்மமே யாகும். பிரத்தியக்கானது பிரஹ்மத்தோடு ஐக்கியமாதலாகிய பூரணத்திற் பூரணஞ் சேர்தலாம். மூன்றவஸ்தைகளுஞ் சாந்தியடைந்திருக்கும் வத்துவின்

கண்ணே ஆகாய முதலிய துவைதம் சாந்தி யடைந்திருப்பதாகிய சாந்தத்திற் சாந்தமிருப்பதாகும். குட முதலிய வுபாதி யொழிந்துபோகவே வியோமத்தின்கண்ணே வியோம மெழுவதாகும். ஆகவே பிரஹ்மத்தின்கண்ணே பிரஹ்மமிருக்கின்றது அணுமாத்திரமும் அது விகாரப்படுவதே கிடையாது; (யாண்டு தான்யாதினத்தியாசமாமோ அதனலாற்றும்குணத்தினுதல்தோடத்தினுதல் அணுமாத்திரையேனும் அது பற்றுறுதாம் என ஸ்ரீமத் பாடியத்தும் அறையப்பெற்றுளது.) சத்ரூப வத்துவானது திருசியமுமன்று, திருஷ்டாவுமன்று, தரிசனமுமன்று, சூனியமுமன்று, ஜடமுமன்று, மதிப்பதிவிம்ப சைதன்னியமுமன்று, மற்றோ எங்கும் நிறைந்திருக்கும் சாந்த சொரூபமேயாமிது. விளம்பிய விவர்த்த வாதத்திற் பாமரர்கட்கு அசம்பாவனை யுண்டாகின்றது என ஸ்ரீ இராகவர் வினுதல்:—மலடி மகனலே மலையானது பொடியாகின்றது, முயற்கொம்பானது இனிது பாடுகின்றது, கற்சிலையானது கைகளை விரித் தபிநயித்துத் தாண்டவம் புரிகின்றது; (ஈண்டுத் திருட்டாந்தங்க ளியாவும் பெரும்பான்மையும் பதார்த்த வாக்கியார்த்தங்க ளிரண்டும் அசம்பவமென்பதைக் காட்டற் பொருட்டாம்) மணல்கள் எண்ணெய்யைப் பொழிகின்றன, கற்பெண்ணனவள் பேசுகின்றனள், சித்திரமேகங்கள் கர்ச்சிக்கின்றன என்று சொல்லப்பட்ட வாக்கியங்கள் போல ஹே பிரபுவே! இவ்வசனம் தோற்றுகின்றது. ஜரை மரண துக்காதி யோடு கூடிச் சைலாகாச மயமாகிய ஜகத்தானது இல்லவே யில்லையென இஃதென்னே பிராமாணிகர்க்குட் சிரம்போல் விளங்குந் தங்களாலும் விவேகசாலியாகிய வஞ்சிக்கத்தகாத என்பொருட்டும் அருளப்பட்டது? (பாமரர் கருத்தைப்பற்றிப் பகர்ந்ததாம்). (இப்போது தமது கருத்தேபற்றிக்கூறல்). இவ்வுலகானது முன் இராதவாறையும், உண்டாகாதவாறையும், இனியிராதவாறையும், ஹே பிரஹ்ம சொரூபத்தை யுணர்ந்த தவசிரேஷ்டரே! எனக்குத் துணிவுண்டாம் வண்ணம் தாங்கள் துணிந்தபடி இதைக்கூறி யருளல்வேண்டும். தொகுத்த தோடத்தைத் துடைத்து இல்லாததற்கும் உளது போற்றோற்றம், கனத் திருஷ்டாந்தத்தால் சம்பவிக்குமாறு செய்வித்துக்கொண்டு ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்:—ஹே இராகவ! கூறக்கேட்டி! பொருத்தமற்றதைக் கூறுவேமல்லேம். இந்தத் துவைதமானது தொனிசெய்யும் மலடிமகன்போல அசத்தாகவே தோற்றுகின்றது; இத்திருசியம் சிருட்டியினாரம்பத்தி லுண்டாகவேயில்லை; அதனலிது இல்லாததே துணிபாயாகும்; கன முதலியவற்றிற் பட்டணம் தோற்றுவதேபோல மனதின்கண்ணே இது தோற்றுகின்றது. மனமே சிருஷ்டியினாரம்பத்தில் உண்டாகாததாயும் ஆகமற்றதாயுமிருந்தது; இதுவிஷயம் நின்மனதிலனுபவப்படும்படி சொல்லக்கேட்பாயாக.மனது திருசியமயமா யறிவுவடிவமாயிருந்து இத்தோடத்தை யுண்டாக்குகின்றது, கனவானது வேறு கனவைத்தோற்றி வைப்பதேபோல அசத்தையே சத்தாகாரமாய்த் தோற்றிவைக்கின்றது. அம்மனது சுயமாகவே இஷ்டப்படி விரைவில் தேகத்தைச் சங்கற்பிக்கின்றது, நீண்டபர்வணை விஸ்தாரத்தையுடைய அம்மனதினனே இவ்விந்திரஜால இலக்குமி விரிக்கப்படுகின்றது. கேவலம் மனதே சஞ்சல சக்தியினலே எங்கு எப்போழ்து சலிக்கின்றதோ அங்கு அப்போழ்து விளங்குகின்றது, சுற்றுகின்றது, செல்கின்றது, யாசிக்கின்றது, பிரமிக்கின்றது, மூழ்குகின்றது, கொல்கின்றது

சுயம் சம்சார தசையாலுற்ற தாழ்வையும், கைவல்லிய இலக்கண மேன்மையை யும் அடைகின்றது, என்பதாக மயக்கத்தாலே தோற்றுநிற்கும்.

4 - வது உற்பத்திப் பிரகரணார்த்த கற்பனம் முற்றிற்று.



## 5 - வது மூலகாரண தேவ சொரூப வருணனம்.

இப்போது விசுவத்திற்கு மூலம் மனதென்றும் அதற்கு மூலமின்னதென்று மிங்கு வருணிப்பதுடன், அதுவே மனதிற்கும் விசுவத்திற்குந் தத்துவமென் றும் வருணிக்கப்படும். இவ்வண்ணம், மனப்பொய்ம்மையின் வருணனையால் பிரகரணப்பொருள் துணிவுற்றவழி யதனதிஷ்டான தத்துவத்தையும் அதன் ஆரோபப் பிரகாரத்தையும், அது பொய்யாவதிற் காரணத்தையும், விரிவாக அறியவேண்டுமென்றிச்சித்த ஸ்ரீஇராகவர் கூறல்:—ஹே பகவன்! முனி சிரேஷ் டரே! மனோ மயக்கத்திற் பரமார்த்த பூதமூலம் யாதாம்? மாயாமயமான மனது எங்கிருந்து எவ்வாறுண்டாயது? சர்வஜக துற்பத்தி மூலத்தை யொழித்து மனோமூலமாத்திர வினாவில்விரை யென்னேயெனின்? ஹே உபதேசம் புரியுந் தேசிகருக்கிந்திரரே! முதலில் மனதினுற்பத்தியைச் சுருக்கமாகத் தாங்கள் அனுக்கிரகிக்க வேண்டும், பின்னர் மற்றவற்றையெல்லாம் விசேடமாகக் கூறலாம், முதல் அதன் மூலத்தை நன்கு தெரிதலானே சுருக்கமாகச் சருவமூலந் தெரித லுங் கூடுமன்றோ. அவற்றுள் முதல் வினாவின்விடை முக்கியமாதலின் விரிவா கச் சர்க்கசமாப்தி பரியந்தம் ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறத்தொடங்கல்:—மகாப் பிரளயம் வருங்காலத்தில் உலகம் சூக்குமமாய் விட்ட படியால் அருத்தக்கிரியை யசமர்த்தத்தன்மையை யடைந்தபோது வருஞ் சருவ திருசிய சிருஷ்டியின் ஆதியில் விக்ஷேபமற்ற சாந்தமே எஞ்சியிருந்தது. அத்தமியாத ஜோதியருக்க னாகிப் பிறப்பற்றுத் தேவனாய் நோயற்று எப்போதும் சர்வக்கிரியாசக்தி சம்பன்ன னாய்ச் சருவமாய் மகேசுரராய்ப் பரமான்மா விருக்கின்றார். எதனினின்றுங் கோசரிக்கமுடியாமல் வாக்கானது திரும்புகின்றதோ, யாது ஜீவன் முக்தர்களாற் பிரத்தியக்ஷமாக அனுபவிக்கப்படுகின்றதோ, எதற்கு ஆன்மா முதலிய பெயர் கள் கற்பிதங்களாமோ அநாரோபித ரூபங்களா யுண்டாகவில்லையோ, மற்றோ ஆரோபித தருமஜன்னியங்களாமோ; சருவவாதிகட்கும் அதுவே அவ்வப்புத்தி கற்பித விசேடங்களாற் சித்தாந்த விடயமென்பது விவாதமற்றதாம் சருவாதிஷ் டானமான அதன்கண்ணென்றுணர்க; யாது சாங்கியதிருஷ்டி யுடையவர்கட் குப்புமானாகியும், வேதாந்த வாதிகட்குப் பிரஹ்மமாயும், விஞ்ஞான முணர்ந்த வர்கட்கு ஏகாந்த நிருமலமாய கணிகவிஞ்ஞான மாத்திரமாயும், இருக்குமோ; யாது சூனிய வாதிகட்குச் சூனியமாயும், யாது சூரியன் அக்கினிகளையும் விளக்கிவைப்பதாமோ; சகலமான பிராணிகட்கும் பிரத்தியக் காத்மாவும் யாதோ, சொல்வதும், நினைவதும், உண்மையும், போகிப்பதும், காண்பதும், தொழிற் செய்வதும் எப்போதுமேயதுவாம். யாதொன்றுலகின்கண்ணே யிருந்த போதினும், இல்லாததுபோலாமோ, யாது தேகத்தின்கண் ணிருந்தபோதினும் அசத்வாபாதக அவித்தையான் மறைபட்டபடியாற் பாமர திருஷ்டியானே இல்லாததாமோ, அதனானே தூரத்ததாமோ, சூரியனிடத்தினின்றும் பிரகாச

மான துண்டாவதேபோல எதனினின்றும் இச் சிற்பிரமையான துண்டாகின்ற தோ எதனினின்றும் பிரகாசத்தோடு கூடியிராநின்ற விஷ்ணுமுதலிய தேவதைகள் சூரியனிடத்தினின்றும்கிரணங்களுண்டாவதேபோலஉண்டாகின்றார்களோ; எதனினின்றும் கடலினின்றும் குமிழிகள் உண்டாவதேபோல அசேதனமான அநந்த ஜகங்களுண்டாகின்றனவோ; பெருங்கடலை நதிகளடைவனபோலத் திருசியக் கூட்டங்கள் எதனைப் பிரளயத்தடைகின்றனவோ,யாதுதீபம்போலத் தன்னையும் பிறவற்றையும் சுவப்பிரகாசத் தன்மை யுண்மையின் தன்னையும்பிறிதையும் விளக்கிவைக்கும் ஆற்றலினாலே ஒளிர்விக்கின்றதோ ; (தன்னையொளிர்விக்கின்றதென்பது அபேதத்திலும் இராகுவின் சிரமென்பதேபோலும் உபசாரமாம்.) யாது ஆகாயத்திலும், ஆகத்திலும், கற்களிலும், நீரிலும், கொடிகளிலும், பொடிகளிலும்,மலைகளிலும், காற்றுகளிலும்,பாதாளங்களிலும் இருக்கின்றதோ, சர்வாந்தரத் தன்மையுண்மையினாலே சர்வகத் தன்மையதாமோ, அதுவே பிரமான்மாவாம்.யாது தத்தம் வியாபாரங்களில் முயன்றுகொண்டிருக்கும் கருமேந்திரியங்கள் ஞானேந்திரியங்கள் பூதசூக்குமங்கள் பிராணன்கள் அவித்தை காமங் கருமம் அந்தக்கரணமென்னும் புரியஷ்டகத்தை யுள்ளும்வெளியும் தன்னுடைய சித்து வியாப்தியினாலே அலைக்குமோ, சேதனங்கட்குச்சேதனத்தன்மை எதனாலுண்டாமோ, இங்ஙனமே யசேதனங்களின் விசித்திரத் தன்மையின்கண்ணே யாதுகாரணமாமோ, எதனாலே மூடர்கள் ஊமைகள்போல ஆக்கப்பட்டிருக்கின்றனரோ, சிலைகள் தியானம் புரிபவரைப்போல நிச்சலமாக ஆக்கப்பட்டிருக்கின்றனவோ; எதனால் ஆகாயம்சூனியமாயாக்கப்பட்டதோ மலைகள் எதனாற் கனமாயாக்கப்பட்டனவோ; நீர் நெகிழ்விக்கப்பட்டதோ, எதன்வயமாய இரவியாந் தீபம் விளக்குமியற்கையதாமோ, "எதனாற் சூரியன் எரிக்கின்றனனால்" என்னு மறையுமதனையேயன்றோ வறைகின்றது, அதுவே பரமான்மாவாம், நித்தியானந்த பூரணமாயிருக்கும் எவ்வத்துவினின்றும், அசாரமாய சமுசார திருஷ்டிரூப விருஷ்டிகள் (மழைகள்) விசித்திரமாக, நீர் மிகுதியால் நிறைந்திருக்கும் மேகத்தினின்றும் மழைத்தாரைகள் உண்டாவதேபோலும் உண்டாம். தோற்றல் மறைதல் வடிவமான திரிபுவனதரங்கங்கள் அத்தியந்தம் விஸ்தீர்ணமாய எவ்வத்துவின்கண் ணிலங்குதல் மருப்பூமியிற் கானனீர் இலங்குவதுபோலுமாமோ; யாது பிரபஞ்ச வடிவமாய் நாசரூபமாமோ, சொரூபமாக அவிநாச வடிவமாமோ, யாதத்திபந்தஞ் சூக்குமமாயிருத்தலின் எல்லாப் பிராணிகளுள்ளும் மறைந்திருக்குமோ, அத்தியந்தமகத்தாதலின் யாவற்றினும் அதிகரித்திருக்குமோ, பிரபஞ்சமின்றியதாகச் சேடித்து நிற்குமோ, சர்வ பாவங்களிலும் அதுவே நிறைந்துநிற்கும், "சருவ பூதங்களுஞ் சாரிதன்பாதமாம், பருவமா மூன்று பாதமமிர்தமாம்" என மறையுமறைகின்றது. எவ்வறிவாம் வாயுவினாலே, சுத்த சிதாகாசத்திற் பிரகிருதியாகிய கொடியானது, மனமாகிய வேருடைய தாய்ப் பொறிகளாந் தளிர்கணிறையப்பெற்றுப் பிரஹ்மாண்டங்களாம் நற்கனிகளைத் தந்து நடிக்கும். எச்சின்மணியானது ஒவ்வொரு தேகங்களாகிய சம்புடங்களில் விளங்கிக்கொண்டிருக்குமோ, எவ்விந்துவின் கண்ணே யிவ்வுலகக் கூட்டங்களாகிய கிரணங்கள் விளங்கா நிற்குமோ; மிகச் சாந்தமாயும் அமிருதமழையைப் பெய்துகொண்டுமிருக்கும் எச் சின்முகிலினிடத்தில், ஜாட்டியத்தை மிகவு

முடைய தாரை நீர்களாகிய பூதங்களின் சிருஷ்டிகளும், சிற்பிரகாசப் பிரதானங்களாம் மின்னற் சிருஷ்டிகளும் இலங்குகின்றனவோ ; எதன் ஒளியினாலே பரஸ்பரம் வஸ்துக்கள் விசித்திர காரியங்களைச் செய்கின்றனவோ, எதனாலசத்தாயிருப்பது அசத்தேயாயிற்றோ, எதனால் சத்துச் சத்தாகவேயாயிற்றோ ; எப்பிரசித்தமான தேவ நர திரியக்கு முதலிய காயங்கள் இச்சையில்லாமலும் அசங்கமாயும் சாந்தமாகத்தன்னிடத்தில் நிலைபெறுவதாயும் இருக்கும் எதனுடைய சந்நிதியின்கண் ணித்திருசிய பூதமிருக்குமோ இருப்பதனானே மிகச் சடமாயிருப்பினுஞ் சலியா நிற்குமோ அதுவே பரமான்மாவாம். சிருஷ்டி காலத்தில் அவசியம் சிருஷ்டி யுண்டாகவேண்டும், பிரளய காலத்திலேயும் அவசியம் பிரளயமுண்டாகவேண்டும் என்பதாதி நியமமாகிய நியதி, அதனை வரைந்துகொள்வதான தேச காலங்கள், அவையடைவுற்ற வழி விரை முதலியவற்றின் கண்ணேயுள்ளிருக்கும் காரியத்தின் விரை யுப்புதல்வாயிலாய சலனம், பீஜபுடத்தைப் பிளந்து முளை முதலியவற்றின் வெளிப்போதலாம் அசைவு, அதனினின்றும் பின்றண்டுதளிர் கிளைமுதலாய முறையாற் பலபரியந்த வியாபாரமாய கிரியை, என்னுமிம்முறையானே சர்வ பாவங்களும் எதனால் விவகார அர்த்தக்கிரியா சமர்த்துடைத்தாஞ் சத்தையை மருவினவோ அதற்கு உலக விலக்கண பரமார்த்தசத்தையே கூறப்படும். அல்லது அதுவே மாயிக வியோமாதிபாவ சிந்தையினாலே வியோமாதி பாவமா யடைவுற்றதாகும்; அதனினும் அயலொன்று வியோமாதி சத்த முடையதாகாதாம்; யாது சுத்த ஞானமயத் தன்மையோடு கூடியிருத்தலின் விண்ணெண்ணத்தால் விண்ணும், பதார்த்த சிந்தையினாலே பதார்த்தத்தன்மை யுற்றதுபோலாம், "உருவமியாவையு முன்னியே யுரனுறும் பெயர்க, டருவதாகியே சாற்றி மெய்யிலகிடுந்தானே" என மறையு மறைகின்றது. (விசித்திர காரியங்களைச் செய்கின்றனவோ என்பது முதலாக இச்சுலோகம் வரையும் ஜகத்தாரோபப் பிரகார வினாவினுக்கும் விடை யளிக்கப்பட்டது. இப்போது தனது பொய்ம்மையிற் காரணங் கூறப்படுகின்றது.) நிருவிகாரமாயும், அஸ்தமயமற்றவறிவாயும், அதனானே சுவஜாதீயாதி பேதங்களையும் உதயஸ்திதி முதலியவற்றையும் விட்டிருப்பதாயும், உள்ள தன்னிடத்திற்றான் மாத்திரமாயிருப்பதானே பெரும் பெரும் பிரமாண்டங்களின் அநந்தமான கூட்டத்தில் விசித்திர லீலைகளைச் செய்துகொண்டிருந்தபோதினும் ஒன்றுஞ் செய்யவேயில்லை யாதொரு கிரியையும் கிடையவேகிடையாது எனவே, நிருவிகார வுபாதானமுடைமையே காரியப் பொய்ம்மையிற் காரணமாம்.

5-வது மூலகாரண தேவசொரூப வருணனம் முற்றிற்று.



## 6-வது முமுக்ஷு முயற்சி யுபதேச வருணனம்.

இப்போது, ஞானத்தானே பரமான்மாவான தடையப் பெறுமென்றும், கருமங்களா லடையமுடியாதென்றும், ஆதலினானே ஞான உபாயங்களில் முயற்சி யின்னதென்றும் அதன் முறையீதென்றும் வருணிக்கப்படும். இங்ஙனம் ஜகன்மூல காரணமாகிய தேவ சொரூபத்தை யினிது வருணித்து அதை யடையுமுபாயமாய ஞான சாதனங்களை யுபதேசிக்கும் அவாவுடைய

ஸ்ரீவசிஷ்டபகவான் கூறல்:—தேவனாகிய இரணிய கருப்பனுக்கு மூலகாரணமா யிருத்தலினானேனும், விடயங்களை விளக்கும் இந்திரிய மனங்கட்கும் சாக்ஷியாக விருந்து விளக்கிவைக்குந் தன்மையானேனும், தேவாதி தேவனாயும், எல்லாமேன் மையையு முடையவனாயும் இருக்கும் இப்பரமான்மாவினுடைய திட அடை வானது ஞானத்தினானே யுண்டாகின்றதேயன்றி யனுஷ்டான துக்கங்களினாலே யுண்டாவதின்றாம். ஈண்டு ஞானமே யனுஷ்டானமாம், அயலொன்றும் அமை வதேகிடையாது, அனுஷ்டானத்தைப்போலக் கூறப்படும் பிரயத்தனத்தாற் சம் பாதிக்கப்படுவதாதலின் ஞானமும் உபசாரமாக அனுஷ்டான மெனப்படுகின் றது. கோடி கோடி கருமங்களாலும் பேதிக்க முடியாததானதற்கு ஞானத்தி னான்மாத்திரம் நிவிருத்திகூடுதலின் கண்ணுற்ற திருஷ்டாந்தம்யாதாமெனின்? கானனீரின் மயக்கநீங்க ஞானமாத்திரம் வேண்டப்படுவதைக் கண்டதேபோ லும். அவித்தை நீங்க ஞானமாத்திரம் வேண்டற்பாலதாம். மிகவுந் தூரமாகா மலும், மிகவுஞ் சமீபமாகாமலும், கிரியைகளில்லாமற் கிடைக்கப்பெறுமலும், ஏற்றத் தாழ்வு முதலியவற்றோடு கூடியிருக்கு மிடத்திலிருப்பதாயு மிருக்கும் பலத்திற்கிரியை சபலமாம், ஆன்மாவோ அவ்வாறாகாதாமென அது தொழிலாற் கிடைக்கப்படுவதொன்றன்றாம், இவ்வான்மாத் தூரத்திலுமில்லை சமீபத்திலு மில்லை கிடைக்கத்தகாததுமல்ல ஏற்றத் தாழ்வானவிடத்தி லிருப்பதுமில்லை; மறந்த கண்டாபரணம்போல ஆன்மா ஞானத்தாற் சுலபமா யடையத்தக்கதாம், தனதானந்த விளக்கத்தையுடைய இப்பரமான்மாத் தன் றேகத்தானே கிடைக் கின்றார். முன் மொழிந்த பரமாத்ம அடைவின்கண்ணே தவந்தானம் விரத முதலிய எவையுமே யுபகாரஞ் செய்வதே கிடையாது. சுபாவமாத்திரத்தில் இளைப்பாறுவதைத் தவிர்த்து வேறு சாதனங் கிடையவேகிடையாது. ஈண்டுக் காரணம், சாதுசங்கம், சத் சாஸ்திரபரத் தன்மையேயாம், ஈண்டதனை யடை வதன்கண்ணே சாதனமாக ஞான மிருந்தபோதினும் எவ்வகையானுமே கருமநிர பேக்ஷத் தன்மையாங்ஙனமாலோ வெனின்? நித்திய சித்தமாய பிரஹ்மமே அந்திய சாக்ஷாத்கார விருத்தியின்மேலேறியதாகிப் பாதத்திற் காரணமாம், வே றொன்றுமல்லவாம். துக்க நிவிருத்திக்கேனும் ஜீவன் முக்திக்கேனும் வேறுசாதன மாமெனின்? இவன் சற்பிரஹ்மந்தானென்று நன்றறிந்த மாத்திரையானே, பிராணிகட்குத் துயரமுண்டாகாதாம்; ஜீவன் முக்தத்தன்மையை யடையும். "அவ்விதுதனைவேத அத்தியயனத்தினால்" என்னுஞ் சுருதி பிரத்தியக்ஷமாக யாகதானதவங்கட்கு ஞான சாதனத்தன்மை கூறுதலின் சிறிதும் உபகாரஞ் செய்யமாட்டாது எனக்கூறியது சாதாரண தவமுதலியவற்றையேயாகும், அதி தீவிரமாகிய தவ முதலியவை விதிக்க விரும்பியே யவ்வாறறைந்ததா மென எண் ணினவராய் ஸ்ரீ இராகவர் கூறல்:—தன்னானே நன்றாக இவ்வான்மா வறியப் பட்ட மாத்திரையானே மீண்டும் மரணாதி தோடங்கள் ஒருகாலும் பாதிக்கவே மாட்டாவா? தேவதேவனாகிய இம்மகா தேவன் எவ்வறிவினானே விரைவிலடை யப்படுவன், அந்த அறிவு தீவிரமான எத்தவத்தானேயடையப்படும், அல்லதெவ் வளவு பிரயாசத்தானே யடையப்படும்? பரம் பொருளை யறியவேண்டுமென்னும் அவாப்பொருட்டு விதித்துள்ள ஜன்மாந்தரங்களி லனுஷ்டிக்கப்பட்ட சாதாரண நிட்காம கருமங்கள் அறியும் அவாவை யாக்கிவைத்தே யழிந்துபோகின்றமை

யின் மேன்மை மிக்க அறியும் வேட்கையுளதாய வழி சிரவணாதி முயல்வே செறிகின்றது.. தவ முதலியவையன்ரும் என எண்ணிய ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்:—தன்னுடைய புருடப் பிரயத்தனத்தினனும் இனிது விரிந்த விவேகத்தினனும் அத்தேவன் அறியப்பெறுகின்றுனே யன்றித் தவம் ஸ்நாநம் கருமம் முதலியவற்றுனே அறியப்பெறுவதேயில்லை. இராகந்துவேடம் அவிவேகம் குரோதம் மதம் மாற்சரியம் என்பவற்றை விடாமல் தவந்தானமாற்றல் துயரமேயல்லாமல் உண்மையாய சாதனமாகாதாம். அஃதெங்ஙனமெனின்? சித்தத்தில் இராகாதி கூடியிருக்கும்போது அன்னியனுடைய தனத்தை வஞ்சகஞ்செய்தே சம்பாதிக்கும்படி நேரும்; நேரவே அத்தனத்தைத் தானஞ்செய்யின் பொருள் எவனதோ அவனுக்கே யதன் பயனும்; இராகாதிகளிருக்கும்போது தனத்தைத்தேடில் பரவஞ்சனை முதலியவை யவசியம் செய்யவேண்டியிருத்தலின், மனத்தூய்மை கிடைத்தலே யருமைத்தாதலின், தான முதலியவற்றிற்குக்காமியமாய பலமும் கிடைப்பதரிதேயாம். ஆகலின் ஞானமோக்ஷ ஆசைகளோ அதிதூரத்தனவாம்; இராக முதலியவை சித்தத்தைக் கெடுக்கும்போது விரத முதலிய அனுஷ்டானங்கள் யாவையுளவோ அவை இடம்பமென வியம்பப்படும், அதற்குச் சிறிது பயனுங் கிடையவேகிடையாது; ஆகையாற் புருட முயல்வினனே முக்கிய மருந்தைக் கவரவேண்டும். முக்கிய மருந்தே முதலிலிருவகையாகும், நன்னூலும் நல்லோர் கூட்டமும், சமுசார வியாதியைக் கெடுக்கத் தக்கனவாம். ஈண்டுப் புருடப் பிரயத்தனமொன்றை விடுத்துச் சர்வ துக்கங்களையும் அகற்றுவதன்கண்ணே அயனுபாயம் ஒன்றையுங்காணேம். ஆன்ம ஞானங் கிடைக்கும்பொருட்டு எத்தகைய புருடப் பிரயத்தனம் வேண்டுமோ அத்தகையதைக் கேட்பாயாக, அதனல் இராகத்துவேட விடூசிகை எஞ்சுதலில்லாமற் கெடும். உலகத்திற்குஞ் சாஸ்திரத்திற்கும் விரோதமில்லாமற் சீவனசாதனமாக அடைவுற்ற தக்க விருத்தியினனே யுண்டாஞ் சந்தோடத்தான் மகிழ்ந்த மனத்தினனுகிப் போகவாசனையை யபினிவேசமில்லாது தியாகிக்கவேண்டும். சம்பவித்தபடி முயல்வினனே இது நம்மாற் சாதிக்கமுடியாதென்று விரக்தி யடைந்துவிடாமல் தனது இதத்தானே நன்னூல் நல்லோருறவுகளிற்றற்பரத்தன்மையை முதலிற் பற்றவேண்டும். கிடைத்த பொருளைக்கொண்டே மகிழ்வுற்றவனுகியும், நூல்களும் ஆன்றோர்களும் இகழ்பவற்றை யுபேக்ஷை செய்பவனுகியும், நல்லோருறவு நன்னூற்பின் செல்வதிற் றற்பரனுகியும் இருக்கின்றவன் விரைவில் விடுபடுவன். ஆராய்ச்சியினனே ஆன்ம தத்துவத்தை நன்கறிந்த இயற்கையனுகிய மகாமதியனது தயைக்கு இவ்விந்திர பிரஹ்ம விஷ்ணு சங்கரரியாவரும் பாத்திரமாவர். சாதுக்களியாவ ரென்னின்? தேயத்திற் சுருதி மிருதியாசார நிஷ்டர்களிற் பெரும்பான்மையோர்கள் யாவனைச் சாதுவென்று புகழுகின்றுர்களோ அவன் ஞான வைராக்கியாதி குணங்களோடு கூடியிருப்பானுயின் சாதுவெனப்படுவன், அவனை முயல்வினனே பின்பற்றவேண்டும். வித்தைகளுக்குள்ளே அத்தியான்ம வித்தையே முக்கியமாம். அதனைப் பிரதிபாதிக்குஞ் சாஸ்திரமே சற்சாஸ்திரமா மெனப்படும். அதனை விசாரித்தலானே பந்தத்தினின்றும் விடுபடலாம். (ஆன்மாவைப்பற்றிப் பிரவிருத்தித்த வித்தையென்னும் ஞானம் அத்தியான்ம வித்தையாம். அஃதுண்டாவதற்

கனுகூல விசார வடிவ கதையின் ஆசிரயமாகிய சாஸ்திரம், உபநிடதம் சூத்திர பாடிய முதலிய இந்நூல்களாம்.) அற்றேல் அநேக உபாயங்களிருப்ப நன்னூ லும் நல்லோர் கூட்டமே தங்களாற் கீர்த்திக்கப்படுவானேன் எனின்? மோக மாகிய அவித்தையும் வித்தையின் விரோதிகளாகிய இராகாதிகளும், நீரிற்கலந்த சேறுனது தேற்றாங்கொட்டையின் சேர்க்கையா லழிவதேபோலும், ஜனங்க ளின்பாகிய மனோவிருத்திகள்யோகப்பயில்வினாலே நசிப்பதேபோலும் நன்னூல் நல்லோருறவுகளினாலுண்டாய விவேகங்களாற் பலாத்காரமாக நசித்தேகும்.

6-வது முமுக்ஷு முயற்சியுபதேச வருணனம் முற்றிற்று.



## 7-வது திருசிய அசத்வப் பிரதிஞ்ஞை.

இப்போது, விரிஞ்சன் முதலாகிய ஜகத்திற்கு மூலமாகிய எத்தேவன் முன் னர் நிரூபிக்கப்பெற்றனனோ, நிகிலவுபாதியும் நீங்கப்பெற்றிருக்கும் அத்தேவ னுடைய தத்துவம் வருணிக்கப்படும். பிரசங்கத்தாலறிய அவாவிய சாதனம் அறியப்பெறவே அறைந்து வந்த ஜகத் காரணத்தின் உண்மையான ரூபத்தை யறிய அவாவிய ஸ்ரீ இராகவர் கூறல்:—விரிஞ்சன் முதலாயினோர்க்குக் காரணபூத னென்று முன்னர்க் கூறப்பட்ட இப்பிரத்தியக் கான்மபூதமாய தேவன், எத் தேவனை யுணர்ந்தால் பந்தத்தினின்றும் விடுபடலாமோ அவ்வித்தேவன் எவ்வு பாதியின்கண்ணே மறைவில்லாமலிலங்குவன்? எத்தகைய தத்துவத்திலிருக்கின்ற ன்ன்? எங்ஙனந்தா னியானிவனை யடைவேன்? (குதூகுலத்தாற் கூறியதென் றேனும், சாதனங்கண் முன்னர்க் கூறப்பட்டிருத்தலின் அந்தரங்க வேறுபாய வினாவென்றேனும் ஆம்). அவற்றுள் ஆதியில் முதல் வினாவின்விடை பகரப் படும்:—எத்தேவன் முன்னர்க் கூறப்பட்டானோ அவன் தூரத்திலிருப்பதில்லை, சரீரத்திற் சாமானியமாக விளங்கியும் அதனுள்ளிருதய தாமரையில் விசேட மாக விளங்கியும், சின்மாத்திரமா யெப்போது மிருப்பதாகக் கேட்கப்படுகின்ற னன்; (தூரத்திலிருக்கவில்லை யெனக் கூறியது குதூகுலத்தைப் பரிகரித்தற் பொருட்டாம்). ஆனாற்றேக அளவினனோ இவன் எனின்? அல்லவாம், இவன் இவ்வெல்லா விசுவ வடிவமாயுளன், ஆயிற்றிருசிய விசுவாகாரமாகவே யிருக்கின் றனனோ எனின்? அல்லவாம், விசுவமுழுவதையும் இவன் வியாபித்திருக்கின்ற னன். சர்வாதிஷ்டானத் தன்மையானே எங்கு மிருக்குந் தன்மையை யியம்பற் பொருட்டு முன் விசுவ வடிவமென்றதாகும், இவன் ஒருவனாகவே யிருக்கின்ற னன், விசுவமென்னும் பெயரேனும் உணர்வேனுமில்லவேயில்லை. கேவலங் காரிய வடிவமான விசுவமாத்திரம் அதற்கன்னியமாக இல்லையென்பதாக இல்லை, மற்றோ, அதன்காரணமாய மாயையும், அதன்குண அபிமானி தேவதைகளோடு இலவாம்; இச் சந்திரசேகரரும் சின்மாத்திரமே, கருட நாயகரும் சின்மாத் திரமே, சூரியனுஞ் சின்மாத்திரமே, தாமரையிற் பிறந்தவருஞ் சின்மாத்திரமே. (சூரியன் றிரி மூர்த்தி ரூபமாக வெளியாயிருத்தலின் திரி மூர்த்தி பந்தியிற் சேர்த்துக்கூறியதாம்.) சின்மாத்திரம் என்பதன்கண்ணே கருத்தாவினிடத்திற்கு விப்பந்தத்தான் மாத்திரச் விகுதிவந்துழிச் சேதனமாத்திரம் (சேதனத்தை யுடையது) விசுவம் என்னும் பொருள் கிடைக்கும்; அதுவும் உலகிற் பாலர்

கோபாலருக்கும் பிரசித்தமாம், புருடார்த்த முடிவுபேறடையாததுமாம் என உபதேசிக்கத் தகாததாம் என்னுங் கருத்தை யுட்கொண்டாவது தாற்பரியத்தை வெளியிடுபவராய் ஸ்ரீ இராகவர் வினுதல்:—சின்மாத்திரம் ஜகம் என்பதாகவே கூறப்படின் இதனைப் பாலருங் கூறுநிற்பர். இதன்கண் ணுபதேசிக்கவேண்டியதென்னை யுளதோ? இது கருத்தாவின்கண்ணே குவிப்விகுதியைப் பெற்றதன்றும் மற்றுமே பாவத்தின்கண்ணும், ஆகவே கூறியதோடங்குலவாதாம் என எண்ணிய ஸ்ரீ வசிஷ்டபகவான் முன் மொழிந்த கற்பத்தை யிகழுகின்றார்:— சின்மாத்திரம் சேதனம் விசுவம் என யாது நீ யறிந்தனையோ பவத்தைக்கெடுக்கும்படியானதுன்னால் அற்பமும் அறியப்படவேயில்லை, என்னை! பிராந்தியின் அஞ்ஞான லேசங்கூட நீங்கவில்லையன்றே, எனறியப்படவில்லை யெனின்? கருத்தாவிற் குவிப்பந்தத்வ முளதாயவழி சிற்சேதன சத்தங்கள் சமப்பொருளையுடையனவாம், நந்தியாதி ல்யுவிகுதிக்கும் கருத்தாவின்கண்ணே விதான மிருத்தலின் அறிவின் கருத்தாவதன் பொருளாம், நித்திய சித்தின்கண்ணே கருத்துருத்தகைமை சம்பவியாதாம் என அநித்திய மனோவிருத்திப் பிரதிபலன சித்தைக்கோடின் அதனதாசிரயபூத அந்தக்கரணமே ஆன்மாவெனக் கொள்ளும்படி நேர்ந்து அவ்வான்மா சமுசாரியாய் ஜீவனெனக் கூறப்படும், அவன் வெளிப்பார்வையானே விடயங்களையே சாரமாகக்கண்டு பசுவாவன், இத்தேகேந்திரிய விடய வாசனையின் அநுசாரமாகவே அவ்வத் தேகத்தைக் கவர்ந்துவரவே பயம் ஜரைமரண முதலியவைகள் உள்ளிருந்து வெளிவருவனபோலக் கிளம்புகின்றனவாம். அற்றேல் மூர்த்தத் தூல சரீரத்தினும் வேறுக அதன் ஞானத்தானே ஜரைமரண முதலிய பிரத்தியயம் சித்தமாம் "அசரீரமதா யமர்பவன்றன்னை, யணுகுவதில்லை பிரியவப்பிரியம்" என மறையறைதலின் எனின்? அமூர்த்தனுய்த் தூலதேக சூனியனுயினுமிவன் கிருதார்த்தனுகான். பசுவாகி அஞ்ஞானவானுதலின், சேதனத்தன்மையைப் பெறுதலின் நினைப்பு வடிவமான எம்மனமுளதோ அவ்வடிவய்ாய அநர்த்தமும் தானேயாகி யிருந்துளானுகலின் துக்கத்திற்கேபாத்திரமாவன், அசரீரம் என முன்னுரைத்தசுருதிக்கோ தூலசூக்கும காரணமெனப் பெயரிய முத்தேகமற்றவனைப் பிரியாப் பிரியங்கள் தீண்டாவெனப் பொருளாம், தூலதேகமாத்திர மற்றவனை யெனப் பொருள்படாதாம்; தூலதேக மற்றிருந்த போதினும் கனவிற் பிரியாப்பிரியங் காண்டலின், ஆயின் எத்தகைய அதன் ஞானத்தானே கிருதகிருத்தியத் தகைமையெனின்? திருசியத்தை விட்டிருத்தலும் திருசியமற்ற பிரஹ்மாகாரமாய்த் திதிபெற்றிருத்தலும் (இவ்விரண்டும் முத்தியிலும் சமாதியிலும் வெளிப்படையாம்) ஆகிய இரண்டு மிவனுக்குப் பூரணமாய அவஸ்தையாம் அதனை யுணர்ந்தபின் சோகத்தை யடைவுறான். அதன்கட் பிரமாணமாஞ் சுருதியைக் கேட்பாயாக, மூல அஞ்ஞானங் கெடுதலானே அதன் காரியமாகிய அந்தக்கரண தாதாத்மிய அத்தியாச வடிவ இருதயக்கிரந்தி நசிக்கும், அது நாசமாதலினுனே அதனை மூலமாகவுடைய எல்லா ஐயமுதலியவையும் சிதையும், இவனது கருமங்கள் யாவும் நசிக்கும், எப்போதெனின், உலக காரணமாகிய மாயையும் சிறிதென்னுமாறு பெரிய பிரஹ்மத்தைத் தானுகக் கண்டபொழுதாம். அற்றேலாயின் மனத்தை யடக்கும் வடிவ யோகத்தானே திருசியத்திற் செல்லுதலை யடக்கமுடியுமாதலின் ஞானத்தை

யடையப் பிரயாசப்படுவானேன் எனின்? அவனது திருசியத்திற் றிரியுந்தன்
மையானது, திருசியத்தின் அசம்பவமாகிய ஞானத்தான் மூலத்தோடும் அழித
லின்றி யடக்குவதற்கு முடியாததாகும். ஞானமில்லாமற் றிருசிய மெங்ஙனஞ்
சாந்தியையடையும்; ஆகவே ஞானமில்லாமல் அத்தகைய சொரூப சமாதியே
சித்தியாதாம். இங்ஙனம் மோக்ஷமும் ஞானமில்லாவிடிற் றுர்லபமேயாகும். எம்
மோக்ஷமெனப் பெயரிய திருசியமற்ற சிற்சொரூபமுளதோ அதுவும் சம்பவியா
தாம். என்னை? முன் மொழிந்த திருசியவழிவிலாது கூடுவதெங்ஙன்? சமாதி
யின்கண்ணே கேவலம் சொரூபமாகவே நிற்குந் தன்மையும் திருசிய பாதத்தி
னானே யுண்டாகின்றதெனின் மோக்ஷத்தில் அஃதவசியம் வேண்டுமென்பதைப்
பற்றி யென்னே கூறக்கிடக்கின்றது. எச்சீவனை யறிந்தாற் சமுசாரம் நசிக்க
மாட்டாதோ, விண்ணைப்போலக் கற்பித ரூபமுடையவனும், பசுவும், அஞ்ஞ
னும் ஆகிய அச்சீவன் எவ்வாதாரத்திலிருக்கின்றனன்? எத்தகையனாகி யிருக்
கின்றனன்? சமுசாரகோடியி லிருக்கின்றனனா? ஆன்மகோடியி லிருக்கின்ற
னனா? மேலும் ஜீவன் சமுசார கோடியிலேயேயுளனாயின் அவனுக்குச் சமு
சார சாகரத்தைத் தாண்டிவைப்பவனாகச் சாதுசங்க சற் சாஸ்திரங்களால் எப்
பரமான்மா காணப்பெறுகின்றனனோ உபதேசிக்கவும் பெறுகின்றனனோ அவன்
எத்தகையன் எனத் தாங்கள் தயவுசெய்து கூறியருளவேண்டும்? கடலையே
கடலினின்றும் கடத்தி வைப்பவனெவனையும் கண்டிலேன்; ஆகலின் ஜீவனுக்
குச் சமுசாரித் தன்மை வசனம் முரண்பாடுடையதாம். அற்றேல் இராகவரு-
டைய இவ்வினாச்சுலோகப் பொருளிரண்டும் பொருத்தமற்றதாம், எண்ணமுடை
மையே சமுசாரமாம்; சமுசாரமாய இச்சீவனே பசுவெனப்படுவன் எனச் சீவ
வடிவமும் அதனாதாரமும் மனோமூல காரணமும் முன்மொழிந் திருத்தலினானே,
முதற் சுலோகவினாக் கிளம்பவேண்டியதின்றாம்; பிரஹ்ம சொரூபத்தையும்
சருக்கத்தின் ஆதிச்சுலோகத்தில் வினவியிருக்கின்றபடியினாலே மீண்டும் வினா
தல் தகாதாம் எனின்? இன்னணமாயின் கேட்டபடியாய வினா ஸ்ரீ இராகவரது
கருத்தாகாதாம்; மற்றோ, ஆக்ஷேபமாம். அங்ஙனமன்றோ, ஜீவனே சமுசாரமெ
னக் கூறல் முரணும். அவனுக்குப் பிரஹ்மப் பிராப்தி யாங்காற் பிரஹ்மத்திற்
கும் சமுசாரித் தன்மை வழக்காதலின், அதன் பிராப்தி யாகாக்காலோ அதற்
குச் சாதனமாய ஞான சாஸ்திராதி வீணாகப்போம், ஆகலின் வேறொன்றாகவே
ஜீவ சம்பந்தரூபங் கூறவேண்டும்; அவ்வாறே யதன் ஆதாரமும், பிரஹ்மமே
யா? அல்லது வேறொன்றா? முதலதேல், ஞானத்தானே பிரஹ்மத்தி லத்தியஸ்த
மாய எல்லாத் துவைதத்தோடும் பாதவுடைவாகவே வரகாதநியாய அடைவாம்.
இரண்டாவதேலோ பிரஹ்மாத்வைதம் முரணும் என்று எண்ணி ஸ்ரீ இராகவர்
வினவியதாகும். ஜீவனே சமுசாரஞ் செய்யின் ஜீவனே தனது ஞானத்தானே
விடுபடின் ஜீவனேதான் தத்துவமாய ஆன்மாவாயின் இஃதிங்ஙனமாகுக, அவ்
வாறோ இல்லையாம். "இதற்கு முன் பிரஹ்மமே யிருந்தது; அஃதியான் பிரஹ்
மமா யிருக்கின்றேன் எனத் தன்னையே யுணர்ந்தது; ஆகலின் அஃதெல்லாமா
யமர்ந்தது" என்னுஞ் சுருதியிற் பிரஹ்மத்திற்கே தனதஞ்ஞானத்தாற் சமுசா
ரம் தனது ஞானத்தினானே முக்தியெனப் பிரதிபாதித்தல் முரணுதலினானும்;
"இதனினு மபலராய்க் காண்போனில்லை" என்பதாதி சேதன தாதுவயற்

பிரதிஷேத விரோதத்தானும்; பிரஹ்மமே "இச்சீவவடிவமாக" என்னுஞ்
சுருதியினுனே இதுவென்பதற் கிடனுகியும், கற்பிதமாகியு மிருத்தலினுலே
அநாத்ம பூதமாய்ச் சமுசாரகோடியுட் புகுந்ததாயே யிருக்கும் ஜீவன் ஆன்
மாவாய் மயக்காற் கவரப்பட்டு அத்தருமங்களானே ஜீவனேயானென எண்
ணிச் சமுசாரஞ் செய்யும்போது ஜீவனுக்கே சமுசாரித் தன்மையாமென முடி
வுறும் என்பதாக அதன் பாதமாயினும் வரகாத நியாயம் அடைவுறன்முதலிய
தோடங்கள் வராவெனக் கருதித் தாம் கூறியதையே திடப்படுத்தி ஸ்ரீ வசிஷ்ட
பகவான் கூறல்:—எவ்விச் சேதனமாகிய ஜீவன் பிறப்பு சீரக் கூட்டத்தோடு
சேர்தலாகிய பெருங் காட்டில் வருந்தித் துயருறுகின்றுனே இவனே, யான்மா
வாக யாவரறிய இச்சிக்கின்றுர்களோ அவர் பண்டிதராயிருந்தபோதினும் அறி
யாதவரே யாவர். ஜீவனே சமுசாரமாம், எண்ணங்களினுலே துயரபரம்பரை
யாம், இவன துண்மையை யுணரில் எவ்விடத்திலும் அறியப் பெருதது யாதொ
ன்றுமே கிடையாது. பரமான்மாவானது அறியப்பெறுமாயின் துயர பரம்பரை
யழிந்துபோம். விஷவேகம் தணிந்துபோனுல் விஷசிகைவிடுவ தொருதலை யன்
றே! இவ்வண்ண மொருமைப்பட்ட ஸ்ரீ இராகவர் சருக்காரம்பத்தில் வினவிய
பொருளேயே பிரசங்கத்தாற் கூறியதுகொண்டு மறைவுற்றதென மீண்டும் வெளி
யாய் வினவுகின்றுர்:—எதைத் தரிசிக்கில் மனமானது சகல மோகங்களேயும் தா
ண்டாநிற்குமோ அத்தகைய பரமான்மாவினுடைய உண்மையாய வடிவத்தைத்
தேவரீர் அடியேனுக்குக் கூறி யருளவேண்டும் என்ன; ஆண்டுலகின் கண்ணே
விடயமின்றிய ஞானம் வெளியாக வில்லாமையின், விடயமின்றி மறைப்பின்றி
யிருக்கும் அபரோக்ஷ அறிவுருவம் அதுவெனக் கூறினும் அனுபவத்திற்குவரா
தாகலின் எவ்வாறு அது புத்தியிற்படுமோ அவ்வாறு கூறக் கேட்டியென
ஸ்ரீ வசிஷ்டபகவா னருளுகின்றுர்:—சாகை நுனியிற் சந்திரனைக் காணுங்கால்
விழிவாயிலாக வெளிப்போந்த அந்தக்கரணத்தா லிலங்கும் அபரோக்ஷ வுணர்
வானது சாகையிருக்கு மிடத்தினின்றும் தூரமாய சந்திர தேசத்தை இமைப்பு
மாத்திரையானே அடைவுற்றதாய்ச் சாகை சந்திரர்களை யொரே காலத்திற்கவர
லயலாற்றுற்பொருந்தாமையானே சாகையிடத்தினின்றும் தொடங்கிச் சந்திரன்
வரைதொடர்ந்திருத்தலாதல்அவசியம் அறைதல்வேண்டும்; இடையில்விடுபடுதற்
குக் காரணமும் அனுபவமும் காணும், ஆண்டு, அதற்குச் சாகை சந்திர இடங்
கள் விடயத்தோடு கூடியதா யிருந்தபோதினும், இடையிலிருக்குஞ் சொரு
பமே விடயமற்ற அபரோக்ஷ சித்துருவமெனப் பிரசித்தமாமென்பதாகப் பர
மான்மாவிற்கும் அஃதுருவமென அறியத் தக்கதாம். எஞ்ஞான மகா சமுத்தி
ரத்தில் நாசாதி விகார மில்லாமலே தனததிஷ்டானமாகிய எதன்கண் மித்தைத்
தகைமையைப் பொருந்திய சமுசாரத்தின் அத்தியந்த அபாவமே யுளதாகின்
றதோ அவ்வுருவம் பரமான்மாவிற்காம். மேலு மினிது கூறின், எதன்கண்ணே
திருஷ்டா திருசியக் கிரமம் இருந்த போதினும் இல்லாததேயாமோ, யாது ஆகா
சமற் றிருந்த போதினும் அபரிச்சின்னத் தன்மையானே விபுவாதலின் ஆகாச
மாமோ, அது பரமான்மாவினுடைய ரூபமாம். யாது ஜகத் சுபாவ சூனியமாயி
னும் சர்வ வஸ்துக்களின் தக்க தக்க சொரூபமாய்ப் பூரணமாதலின் அணுமாத்
திரையானும் அசூனியம்போற் சூனியமாமோ, அசத்தாகிய வுலகமும் எதன்

கண் ணிருப்பை மேவியிருக்குமோ, சிருஷ்டி வடிவங்களாய கூட்டங்களேயுடைய அஞ்ஞான மிருக்கும்போது யாது சத்தா யிருந்தபோதினும் உபயோகமின்மையினுனே சூனியம்போற் சூனியமாமோ, அது பரமான்மாவினுடைய ரூபமாம். யாது மகா சித்து விலாசத்தானே யறிவுமயமா யிருந்தபோதினும் தூல முதலிய தருமங்க ளற்றிருந்த போதினும் அஞ்ஞர் பார்வையினுலே பாஷாணம்போலும் பெருந் தூலமாமோ உள்ளே அஜடமாகவே இருந்தபோதினும் ஜடம்போலுமாமோ, அது பரமான்மாவினுடைய ரூபமாம். வெளியிலுள்ள அதிபூத அதி தெய்வங்களும், உள்ளிலிருக்கும் அத்தியாத்மமும், என யாவை பிரசித்தமாமோ அவற்றோடு எல்லா வுலகமும் எதனது அத்தியாசத்தாலேற் பட்ட சம்பந்தமுற்று இருக்கின்றது இருக்கின்றதென்னும் விவகார யோக்கிய வடிவ சொரூப சத்தையை யடையா நிற்குமோ, அது பரமான்மாவினுடைய ரூபமாம். பிரகாசாதிகட்கு ஆலோக முதலியவை வடிவமாகத் திதி பெறுவதே போலவும், ஆகாயத்திற்கு வடிவமாகச் சூனியத் தகைமை போலவும், இவை யாவும் எதன்கண் வடிவுபெற் றிருக்குமோ அது பரமான்மாவினுடைய ரூபமாம்; இத் திருஷ்டாந்தங்கள் உலக திருஷ்டியினுனும்; உண்மையாயோ காரிய முழுவதினும் தொடர்ந்திருக்கும் பிரஹ்மமே எல்லாப் பொருள்கட்கும் வடிவமாம், இடையிலுள்ள பிரகாசாதிக ளாகாவாம். யாது அளவைகளானே எங்ஙனம் அறியப் பெறுகின்றதோ அது அங்ஙனமே யிருக்குமன்றி வேறு ரூபமாக மாட்டாதாம். பிரஹ்மமோ அறியப் பெறுவதில்லை, அதனைச் சத்து ரூபமெனத் துணிவான் கூடுதல் யாங்ஙனம்? ஜகமோ அவ்வாறறியப் பெறுவதா யிருப்பதால் அசத்தென்று கூறுதல் யாங்ஙன மேலுமென ஸ்ரீ இராகவர் சங்கித்தல்:— சத்ரூபம் பரமான்மாவென வறிதல் எங்ஙனங் கூடும்? இது இதுவென அநந்தம் பிரமாணங்களாற் சித்தமாய ஜகத்தெனப் பெயரிய திருசியத்தின் அசம்பவந்தான் எங்ஙன் கூடும்? பிரஹ்மமானது அளவைகளானே அறியப்படாதது என்பது அசித்தமாம். தடையில்லாதவழி மகாவாக்கியங்களால் அஃதறியப் பெறக் கூடலின், தடையைப் பொடிபடுத்தலோ அதன்கண்ணே யத்தியஸ்தமாகிய துவைதம் பொய்யென்னு முணர்வினுனேயாம்; சர்ப்ப முதலியவற்றை நீக்காமல் இரஜ்ஜு தத்துவத்தை யுணர்த்துவிப்பான் முடியாதாமெனக் கருதி ஸ்ரீ வசிஷ்ட பகவான் கூறல்:—ஆகாயத்தில் நீலநிறம்போலப் பொய்யாகத் தோற்றும் இச்சகத்துச் சம்பந்தமான மயக்கினுடைய அத்தியந்த அபாவ ஞானத்தின் திடப்பயில்வாம்போது உலகில்லாமலேபோம். பிரஹ்மத்தினுடைய ரூப்மானது அதனானேயே யறியப்பெறும், அந்நியகருமத்தாலாகாதாம். திருசிய அத்தியந்த அபாவப் பயில்வினின்றும் அடையலாமேயன்றி அயற்சுபகதி யில்லவேயில்லை. இத்திருசியமானது திரமாயிருப்பது போன்று திரமா யத்தியந்த அபாவப் பிராப்தியானதுண்டாயின்யாது எஞ்சாநிற்குமோ அஃதறியப்பெறும்; யாதறியப்பெறுமோ அது அவ்வறிவினுலே யறிபவன்றன் பரமார்த்த ஆன்மாவாகவேயாகின்றது. கூறிய பொருளில் ஊகங்கேட்டி. மதியின்கண்ணே பிரஹ்மத்திற்குப் பிரதிபிம்பந்திருசியாபாவத்தின விடுத்தெங்குங்கிடையாது. மதியின் மாட்டுப்பிரதிபலித்த பிரஹ்மமே தன்னைமறைத்திருக்கும் அஞ்ஞானத்தைத்தகித்து உண்மைப்படி யொளிரா நிற்கும்; அத்தியஸ்த சத்தியத்தன்மைப் புத்திபிற்

பிரஹ்மம் பிரதிபலிக்கமாட்டாது; விரோதி துவைதம்பற்றிய புத்தியிலத்வைதப்
பிரதிபிம்பம் உதயமாகாமையின் துவைதப் பிரதிபிம்ப சூனியத்தன்மைத்தசை
யிற் பிரஹ்மம் பிரதிபிம்பிக்கலாமே யெனின்? கண்ணுடியானது எங்கும் யா
தேனுமொரு பிரதிபிம்பக் கவர்ச்சியின்றி யிராததேபோலப் புத்தியும் துவைதப்
பிரதிபிம்பக் கவர்ச்சியின்றி யிராதாம். இவ்வூகத்தானும் முற்கூறியது துணியப்
பெற்றதன்றே, உலகமெனப் பெயரிய இத்திருசியத்தின் பொய்ம்மை யின்றிப்
பரமதத்துவமானது எத்தகையனுலும் எக்காலத்தும் அறியமுடியவே முடியா
தாமென்பது திண்ணமேயாம். சிறிது அதிக விசேஷத்தைக் கருதி ஸ்ரீ இராக
வர் இரண்டாவது வினுவைக் கிளப்பல்:—ஹே மகாமுனிவரே! பிரஹ்மத்தின்
கண் ணுலகமத்தியஸ்தமாயின் இவ்வாருகலாம்; ஆனுலதுவே சம்பவியாத காரிய
மன்ரே? என்னே, திருசியக்கூட்டமாய பிரஹ்மாண்டமான இத்துணே யுலகின்
நிலைமைக்குப் பொய்ம்மை யெங்ஙனம் உளதாகும்? பரமசூக்குமப் பிரஹ்மத்திற்
சின்மாத்திர ரூபத்தன்மை யுண்மையின், இத்துணேப் பிரஹ்மாண்ட விஸ்தார
ஸ்தூலப் பிரபஞ்சத்தின் அத்தியாசம் பொருந்தாமையின்; ஏனெனின் கடுகின்
உதரத்தில் மேருகிரி நுழைதல் எங்ஙனந்தான் முடியும்? உலகில் ஸ்தூலத்தகை
மை ஆராய்ச்சியின் முன்னிற்குமாயின் நீ கூறியது சரியாம்; அஃ தவ்வாருகா
தாம். உனக்குலகிலிருக்கும் ஸ்தூலத்தன்மை ஞானம் எம்மால் நாட்கு நாள்
ஊகங்களானே சிதிலஞ்செய்யப்படவே யக்கால் நீ யாம்கூறியதைத் துணிவா
யென ஸ்ரீ வசிஷ்ட பகவான் உபதேசிக்கத் தொடங்கல்:—சிலதினம் வரை கிளர்
ச்சியின்றிய மனத்தனுகிச்சாதுசங்கசற்சாஸ்திரப் பயில்வுடனிருத்தியென்னின்,
ஹே இராகவ! யாமொரு நொடியில் நினது சித்துருவத்தில் திருசிய மெதுவு
மில்லாமற் கானனீரை யாராய்ச்சியாற் றுலேத்தல்போற் றுலேத்து விடுவேம். திரு
சியமொழியவே திருஷ்டாத்தன்மையும் ஒழிந்துபோம்; கேவலமறிவுமாத்திரம்
எஞ்சாநிற்கும். திருசியத் துவைதமிலதாகவே கேவலம் திருஷ்டாயாத்திரம் இல்
லேயென்பதாகவில்லே; மற்ருே இருமையொருமைகளு மில்லாமலேகும்; இத்திரு
சியமிருக்குமாயின் திருஷ்டாத்தன்மையு முண்டாம்; திருஷ்டா விருக்குமாயின்
திருசியத்தன்மை யுளதாம்; இருமை யிருக்குமாயின் ஒருமை யுளதாம்; ஒருமை
யிருப்பிற்ருன் இருமையு முளதாய்; ஒருமையானது இருமை முதலியவை யய
விடத்திற் பிரசித்தமாயின் அவற்றை விலக்கற்பொருட்டுக் கற்பிக்கப்படும்; விலக்
கப்படுவ தப்பிரசித்தமாயின் இன்ரும்; ஒன்றின்றே லிரண்டென்பதே சித்திக்க
மாட்டாதாம். இங்ஙனந்துவைத ஐக்கியமற்ற சன்மாத்திரம் எஞ்சாநிற்கும். இரு
மை யொருமை காண்பொர்ருள் காண்பான் யாவுமிறக்கிற்சன்மாத்திர மலாதுவே
றென்னேயிருக்கும்? வேறுவகையானும் திருசியநீக்கத்தைக் கேட்பாயாக. நினது
மனதாகிய கண்ணுடியினின்றும் அகந்தை முதலிய ஜகத்திருசிய மலம்யாவற்
றையும் திருசியம் அத்தியந்தமில்லே யென்னும் ஞானத்தானே யாம் துடைத்து
விடுவோம். இல்லாத பொருட்கு இருப்பின்ரும்; இருப்பதற்கு இல்லாமையின்
ரும்; இயற்கையாகவே யாது இல்லேயோ அதனேத் துடைப்பதில் யாது கிலேச
முளது? இல்லாததற்கிருப்பு விகாரமாயேனும் விவர்த்தமாயேனும் சொரூபமா
யேனும் பொருந்தாதாம். இம்மூன்றுவகையும் ஏன் பொருந்தாதெனின்? ஆகா
யப் பூவின்கண் இம்மூன்றையுங் கண்டிலமன்றே, இவ்வாறு இருப்பதற்குமில்

லாமை சொரூப முரண்பாட்டானே பொருந்துறுதாமென அநிர்வசனீயத் தன்மை சித்தித்தவழி அதனைத் துடைப்பதில் யாதொரு கிலேசமுமே கிடையாதாம். இங்ஙனம் சத்திற்குற்பத்தியும் வீணேயாம். அசத்திற்கோ பொருந்தவே மாட்டாதாம் எனப் பொன்னிற் கற்பித்த கடகத்தன்மை பொற்பார்வையானே நன்கு பாதிக்கப்படும். உலக முதலிலே யுண்டாகவேயில்லை. யாது இஃதிஃதென விஸ்தாரமாய்த்தோற்றுகின்றதோ அது பிரஹ்மமேயாம். விமலமாயிருக்குந் தன்னிடத்திலேயே தானே ஞானவடிவமா யிருக்கின்றமையின் விரிந்ததேயாகும். உலகமெனப் பெயரியதொன் றுண்டாகவே யில்லை இருப்பதுங் கிடையாது, காணப்படுவது மின்றும், பொன்னிற் கடக முதலியவை யுண்டாகவே யில்லையன்றோ? இத்தகையதைத் துடைப்பதில் யாது சிரமம்? (இனிக் கூறப்படும் வேறு வகையாய கூற்றையும் பிரசங்கத்தா லிப்பொழுதே பிரதிஞ்ஞை செய்தல்.) சுயமாகவே பாதிக்கப்படாத தத்துவத்தை நீ யனுபவிக்கும்படி அநேக யூகங்களானே விரிவாக யாம் கூறுவேம். உண்டாகாததற்கு இருப்பில்லாததே போல அதன் கவர்ச்சியு மில்லாததேயாம்; யாது முதலிலுண்டாகவே யில்லையோ அதற்கிங்கு இருப்பெங்ஙனமாம்? கானனீராறு பெருகிவரக் கண்டதுண்டோ! இரண்டாவ திந்துவைத்தான் கண்டதுண்டோ! இவ்வாறாக மயக்கமும் அதன் விடயமும் ஆகிய இரண்டும் அசத்தாமெனத் திருஷ்டாந்தத்தானே துணியலாம். மலடி மகன் இல்லாததேபோலும், கானனீரில்லாததே போலும், ஆகாயத்திற் றருவில்லாததேபோலும் ஜகன் மயக்கங் கிடையவே கிடையாது. ஆயின் இக்காட்சிப் போலிகளில் உண்மையாக யாதுதா னுளதாமெனின்? யாது சிறிது தோற்றுநிற்குமோ அது நிராமயமாகிய பிரஹ்மமே யாகும்; இவ் விடயத்தை மேல் வெறும் வாய்ச் சொன்மாத்திரமா யல்லாமல் அநேகங் கதைகளானும் ஊகங்களானும் கூறுவேம். அனுபவத்திற்கு வராததன்கண் ஆயிரம் ஊகங் கூறிய போதினும் பயன் யாதாம்? இலக்கியந் தவறி யெய்யு மம்போடுகூடிய விற்பிடித்தவன் நகையன்றோ செய்ய நேரிடுமெனின்? தத்துவத்தை யுணர்ந்தவர்கள் எப்பொருளை ஊகங்களோடு மிங்குக் கூறுவர்களோ அப்பொருளின்கண்ணே நகைப்பானது தக்க நற்புத்திமானுக் குண்டாதல் தகுதியன்றும். யாவன் ஊகத்தோடு கூடியிருப்பதை யாதரியாமல் மூடமதியினனாகி ஊகமில்லாததன்கண்ணே ஆக்கிரகம் செய்கின்றனனோ அவனை யறிவாளர் அறிவிலானென்றே யறிவர்.

7 - வது திருசிய அசத்வப் பிரதிஞ்ஞை முற்றிற்று.



## 8 - வது சற்சாஸ்திர நிருபணம்.

இப்போது முற்கூறிய தத்துவ ஞானமானது சற்சாஸ்திரத்தினாலேயேயா மல்லாது மற்றொன்றினானு மாகாதாம். சற்சாஸ்திரங்களுள்ளும் இந்நூல் உடனே பயனைத் தருவதெனெ வருணிக்கப்படும். ஊகத்தாற் கூறுகின்றேமெனத் தேசிகரால் யாது பிரதிஞ்ஞை செய்யப்பட்டதோ அதனை ஸ்ரீ இராகவர் வினாதல்:—எவ்வூகத்தா லிஃதறியப் பெறும்? இஃதெங்ஙன் வெளியாம்? இத்திருசிய மிபாவு மெங்ஙனீங்கும்? இந்ந பிபாயமாக அனுபவித்த அளவில் அறியத்தக்க

தியாதொன்றும் இல்லாத தெங்ஙனம்? யாதிங்கே காணப்படுகின்றதோ அது நிராமயமாகிய பிரஹ்மமே யாம் என யாது கூறப்பட்டதோ அதையேதான் வினவுகின்றேன். உலகமெனப் பெயரியதாயும், அவிசாரமெனப் பெயரியதாயும் உள்ள பொய்ஞ்ஞான விடூசிகையானது நெடுநாளாய் வஜ்ஜிரம்போன் றமைவுற்றிருக்கின்றது; இது ஞானத்தினலன்றிச் சாந்தியை யடையாது. ஞானம் சித்திக்கும்பொருட்டு அநேகங் கதைகளைக் கூறுவேம். ஊகங்களிறைந்த அவ்வியாவற்றையும் மதிமானுகிய நீ கேட்ட மாத்திரையானே முக்தனேயாய் விடுவாய். கிளர்ச்சியின் மிகுதியினுனே கேட்காம லிடையி லெழுந்துபோய் விடுதியேயாயின் பசுவாதிகளின் றருமத்தோடு கூடும்படி நேரிட்டு யாதொன்றுமுனக்குச் சற்சாஸ்திர சிரவண யோக்கியதை யில்லாமையிற் சித்திக்கமாட்டாது. பெரியோர்கட்குங் கிடைக்கத்தகாத இது என்போன்ருர்க்கு எங்ஙனம் கிடைத்தல் கூடுமெனின்? (இது மந்த மதியினர்தம் தேறுதலின்மையை வினவியதாம்). யாவன் எப்பொருளை வேண்டுகின்ருனே அவன் அதனை யடைவான்; முயல்கின்றனனு யவசியம் அதனையே யிடையின் முயற்சியை விடாமலிருப்பின் அடைவன். சாது சங்க சற்சாஸ்திரபானு யிருத்தி யென்னின் பரமபதத்தை மாதங்க ளென்பதாக இல்லாமற் சில தினங்களிற்ருனே அடைவது திண்ணம். நூலுணர்ந்தார்க்குண் மேன்மை மிக்கவரே! ஆத்ம ஞானத்தைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு எதனை யுணர்ந்தாற் பின் சோகமுறேனே அதனை யுணர்த்துவதில் முக்கியமான சாஸ்திரம் யாதாம்? ஹே மகாமதியையுடைய இராகவ! ஆன்ம ஞானத்தைப் பிரதிபாதிக்கும் முக்கிய நூல்களுக்குள் மேன்மை மிக்க நூல் சுபமாகிய இம்மகா ராமாயணமேயாம். இவ்வுத்தம இதிகாசத்தைக் கேட்ட மாத்திரையானே ஞானமுண்டாம்; இது மாத்திரம் எங்ஙனம் உத்தமமாகுமெனின்? எல்லா இதிகாசங்கட்குள்ளுமிது சாரமெனக் கூறப்படும். வாக்கிய சந்தர்ப்ப வடிவமாய இதனைச் சிரவணஞ்செய்த மாத்திரையானே கெடாததாய ஜீவன்முக்தத் தன்மையான்து அவசிய முயல்வின்றியே யுதிக்கும். ஆகலின் இதுவே மிகவும் பவித்திரமாம். கனவு முதலியவற்றின்கண்ணிருந்துகொண்டே, இது கனவென் றுணரின் கனு மெய்யென்னும் பாவனை யொழிந்துபோவதேபோல வுலகமாகிய திருசியமானது இருக்கும்போதே ஆராய்ச்சியினுனே யொழிந்துபோம். ஞானத்திற்குச் சாதகமாகிய ஊகக்கூட்டம் யாவை இந்நூலின்கண்ணே யுளவாமோ அவை பிறநூலின்கண்ணு முளவாம், யாவை யீண்டிலவோ அவை யெதன்கண்ணு மிராவாம். ஆகலி னிதனை யறிஞர் சமஸ்த மெய்ஞ்ஞான சாஸ்திர தனங்க ணிறைந்த களஞ்சியமென வுணர்வர். யாவனிதனை யெப்போதும் சிரவணஞ் செய்துகொண்டு வருகின்ருனே அத்தகைய மகா சமர்த்துடைய அவனது மதி மற்றைய நூல்களினு லுண்டாம் உணர்வைக் காட்டினும் மேன்மையான வுணர்வை யடையா நிற்கும். இதன்கண் ஐயமே கிடையாது. பாவத்தினுதயத்தால் எவனுக்கிந்நூல் ருசிக்கவில்லையோ அவன் ஞானத்தைப் பிரதிபாதிக்கப்பட்ட ஏதேனுமொரு சற்சாஸ்திரத்தைப் பயில்க. அவ் விடயத்தில் எமக்கு யாதொரு துவேஷமுமே கிடையாது. ஆயின் இந்நூலதிசயிக்கத்தக்கது என்பதன்கண் யாது காரணமெனின்? சித்தர் மருந்தை யுட்கொள்ளின் நோயின்மையானது சுபமாகவே யுண்டாதல்

போல இந்நூலைச் சிரவணித்த மாத்திரையானே ஜீவன் முக்தத் தன்மையான துண்டாம். இச்சாஸ்திரத்தைச் சிரவணித்த மாத்திரையானே சிரவணித்தவன் ஜீவன்முத்தத் தகைமையைச் சுயமாகவே யனுபவிப்பன் என்றெம்மனோரால் கூறப்பட்ட இது, எங்களாற் கொடுக்கப்பட்ட வரமும் சாபமும் பலித்தல்போல உள்ளபடியேயாம் இதன்கண் மாறுபாடின்றாம். இச்சமுசார துக்கமானது; தத்தமது ஆன்ம விசாரணைவடிவ இந்நூலின் கதைகளானே, நசிக்குமேயல்லாமல், தனங்களாலேனும், தானங்களாலேனும், தவங்களாலேனும், பேதத்தைப் போதிக்குஞ் சாஸ்திர சிரவணங்களாலேனும், கருமகாண்ட ரூபவேதங்களாலேனும், துவைதவேத சாஸ்திரங்களைப் படித்தல் படிப்பித்தல்களாலேனும்,யாகஹோமாதிகளைச் செய்யும் நூற்றுக்கணக்காய முயற்சிகளாலேனும், எவர்க்கும் நசிக்கவே மாட்டாது.

8 - வது சற்சாஸ்திர நிருபண முற்றிற்று.

## 9-வது பரமகாரண வருணனம்.

இப்போது ஜீவன் முக்தனுடைய இலக்கணங்களும், அவன் எல்லா வடிவமாயு மிருக்கின்றான் என்பதும், உலகம் பிரளயமாங்காற் சேடித்து நின்ற ஆன்ம சொரூபத்தி னியல்பும், வருணிக்கப்படும். ஆன்ம விசாரமும் துணிவுண்டாம் வரை அஃதொன்றன்கண்ணே மனஞ்செல்லும்படியாகவே வேண்டற்பாலதாம்; அல்லாமல் ஓரோர் நாளைக்குச் செய்வதாயேனும், இடையிடையே மற்றையகாரியங்களைச் செய்துகொண்டு செய்வதாயேனும் அவ்விசாரம் வேண்டப்படாதாம். "ஆன்மாவின்கண்ணே விளையாடிக்கொண்டும் ஆன்மாவின்கண்ணே சுகித்துக் கொண்டு மிருக்குந் தொழிலுடையோனே இப்பிரஹ்ம வித்துக்களுள் மேன்மை மிக்கோன், பிரஹ்மத்தில் நிலைபெற்றோன் பேரமுதம் பெறுவான்" என்பதாதி மறைகளும் இதனையன்றோ கூறுகின்றதென எண்ணி ஸ்ரீ வசிஷ்ட பகவான் கூறல்:—அவ்வான்மாவின்கண்ணே சித்தத்தையுடையவர்களும், அதனை யடைய வேண்டியதற்கான முயல்வினாலே வாழ்நாளை யுடையவர்களும், ஒருவருக்கொருவர் அதனையே போதிப்பவர்களும், அதனையே யெப்போதும் பேசுபவர்களும், அதைக்கொண்டே நித்தியம் சந்தோஷிப்பவர்களும், அதன்கண்ணே யிரமிப்பவர்களும் ஆகிய, ஞானசாதன சிரவணாதியின்கண் ணயலொருதொழிலுமிடையிலாமல் ஒரே நிஷ்டையையுடைய ஆத்மஞான ஆராய்ச்சியுடையோர் தமக்குப் புகன்ற ஜீவன்முக்தத் தன்மையானதுண்டாம்; அது தேகத்தைவிட்ட பின்புண்டாம் தூயமுக்தத் தன்மையேயாம், அயலன்றாம். சிரவணாதி பலக்கூறு விரிக்கவுற்றபோது ஜீவன்முக்த விதேகமுக்த இலக்கணங்களை யறியவிரும்பிய ஸ்ரீஇராகவர் வினவல்:—ஹே பிரஹ்மன்! விதேக முக்தனுடைய இலக்கணத்தையும், ஜீவன் முக்தனுடைய இலக்கணத்தையும் கூறவேண்டும், கேட்டபின் சாத்திரமாய நேத்திரத்தாலுண்டாம் மதியால் அவ்வாறே யான் முயலவேண்டும். ஜீவன் முக்தி வாயிலாகவே விதேகமுக்தி யுண்டாதலின் சொன்முறை தன்னினும் பொருண்முறை வலிதேயென்னும் நியாயம்பற்றி வினவிய முறையைப் பற்றாது முதலிற் சீவன் முத்தன் இலக்கண மியம்புவாம்; சாஸ்திர நிஷித்தமில்லாத

விவகார வானாயினும், எவனுக்குலகம் உண்மை விழியானே பாதமாதலின்
இலயமடைந்ததாய் விண்போலச் சூனியமாமோ கண்ணாடி நகரம் போலப்
புலப்படினும் இல்லாததே யாமோ அவன் ஜீவன் முக்தனெனப் பெறுவன்.
யாவன் விவகரித்துக் கொண்டிருந்த போதினும் "யான் யாதொன்றுஞ்
செய்கின்றிலேன் எனச் சொரூப நிட்டனாகி யான் றத்துவ வித்தெனப்படு
வன்" என்னும் ஸ்ரீ பகவா னருளிய நெறியானே சிற்சொரூபத்தின் மாட்
டே நிட்டையை யடைந்துளானோ அவன் விழித்துக் கொண்டிருந்த போ
தினும் தூங்குவோன் போல் நிர்விகாரனே யாவன், அத்தகையன் ஜீவன்
முக்தனெனப்படுவன். கிடைத்ததைக்கொண்டு மகிழா நிற்கும் எவனுடைய
முகக் காந்தியானது இன்பத் துன்பங்கள் எய்திய காலத்தும் விரிதலுங் குவி
தலு மடையமாட்டாதோ அவன் ஜீவன் முக்தனெனப்படுவன். யாவன் நிர்
விகாரமான தன்பாற் றுயில்பவன்போல இருப்பினும் அவித்தையாம் நித்திரை
யழிந்தபடியால் தன்பால் விழித்தே யிருப்பனோ, தேகேந்திரியாதிகள் பாதிக்
கப்படுதலின் பொறிகளால் விடயங்கள் புலப்படும் நனவானது யாவனுக்கில்லை
யோ, நனவின் வாதனையை நிமித்தமாகக் கொண்டுண்டாம் கனவும் யாவனுக்கு
இல்லையோ, எவன் வாதனையற்ற மெய்ஞ்ஞான வடிவமாகவே யிருப்பனோ அவன்
ஜீவன்முக்தன் எனப்படுகின்றான். இராகத்துவேஷ பயாதிகளின் றொடர்ந்த
வடிவமாய்ச் சுழன்று நடனைப்போலத் தக்க தக்கவாறு நடித்துக்கொண்டிருந்
தானெனினும் யாவன் உள்ளே விண்போல நிர்மல மறைப்பற்ற ஆன்மாவின்கண்
ணிலைபெற்றிருப்பனோ அவன் ஜீவன் முக்தன் எனப்படுகின்றான். விவகரித்
துக் கொண்டிருந்தபோதினும் விவகரியாம லிருந்த போதினும் அகங்காரத்
தோடு கூடாத தன்மை யாவனுக்குளதோ, அவனது மதி செய்தேன்
செய்யவில்லை யென்னும் அபிமானத்தாற் பற்றாதோ அவன் ஜீவன்முக்த
னெனப் படுகின்றான். எச் சிதாத்மாவினுடைய மறைப்பினதுபாதி நீக்கத்
தானே மூன்றுலகங்களினுடைய பிரளயத்தையும், எதனதுபாதி மறைப்பை
யடைந்ததனானே அவற்றின் முற்சம்பவத்தையும் யாவன் காண்கின்றனனோ,
தனக்குத்தானே யொப்பானவனாயிருக்கின்றனனோ அவனே ஜீவன்முக்தனெனப்
படுவன்; விதேகமுத்தியின் கண்ணேயே எஞ்சுதலில்லாமல் ஆவரணம் ஏகலின்
சாக்ஷியாகிய ஈசுரரிடத்திலோ ஆவரணம் இன்மையினானும் மேற்கூறிய இரண்
டன்கண்ணும் பாதியெனக் கூறியதாகும். எவனை நோக்கி யுலகர் அஞ்சாரோ,
யாவன் உலகருக் கஞ்சானோ, மகிழ்ச்சி பொறாமை பயவேதுவாய அஞ்ஞான
அபிமானத்தினின்றும் விடுபட்டுளானோ அவன் ஜீவன்முக்தனெனப் படுகின்
றான். சருவ சமுசார சத்திய புத்தியினின்றுஞ் சாந்தியானவனும் அன்னியர்க
ளுடைய பார்வைக்குத் தேக அவயவங்களோடு கூடியவனா யிருந்தபோதினும்
அவயவமற்றவனாவனோ, யாவுந் தெரிந்தவனா யிருந்தபோதினும் மனமற்றவனா
யிருக்கின்றனனோ அவன் ஜீவன்முக்தனெனப் படுகின்றான். யாவன் எல்லா
வஸ்துக்களோடும் விவகரித்துக்கொண்டிருந்தபோதினும் இராகாதி தாபமின்றிக்
குளிர்ந்திருக்கின்றனனோ, இராகாதி விடயங்களாகிய பதார்த்தங்களினும் அவற்
றின் வடிவமாதலின் நிறைந்திருக்கின்றானோ அவன் ஜீவன்முக்த னெனப்படு
கின்றான்; தள்ளக்கொள்ள முடியாத தனதான்மாவின்கண்ணே அத்தியஸ்தமா

யேனும் பொய்யென நிச்சயிக்கப்பட்டதா யேனும் இருக்கும் [illegible] களில் இராகாதி சம்பவித்தல் கூடாதன்றோ! இப்போது முதலில் [illegible] விதேக முக்த இலக்கணம் கூறத் தொடங்குகின்றார்:—ஜீவன் முத்திப் பதத்தை [illegible] விதேக மானது பிராரப்தம் தீர்தலானே காலத்தாற் பிடிக்கும்போது வாயுவானது அசைவின்மையை யடைதல்போல, இச்சீவன் முக்தன் விதேக முக்தியை யடைகின்றான். அவனுக் காதியில் அறிஞர் அனுபவ சித்தமான சொரூப லக்ஷணத்தைக் கேட்டி! விதேக முக்தனானவன் வளர்வது மில்லை, குறைவது மில்லை, நாசமடைவதுமில்லை, வெளிப்படுவதுமில்லை, வெளிப்படாமலுமில்லை, தூரத்திலுமிருப்பது மில்லை, நானென்பது மில்லை, நானல்ல வென்பதுமில்லை, மற்றவனென்பது மில்லை. அவனுக்கு லோக திருஷ்டியினாலே சர்வ வடிவமாகி யிருக்கும் இலக்கணம் வாய்ந்த தடஸ்த லக்ஷணம் கூறக்கேட்டி! சூரிய சொரூபனாக விருந்து உலகத்தை யொளிர்விக்கின்றனன்; விஷ்ணுசொரூபனாகவிருந்து மூவுலகத்தையும் காக்கின்றான்; உருத்திர சொரூபமாக விருந்து யாவற்றையும் சங்கரிக்கின்றான்; பிரஹ்மா சொரூபமா யிருந்துகொண் டுலகங்களைச் சிருட்டிக்கின்றான்; ஆகாசரூபமாய் இருஷிகளும் தேவதைகளும் அசுரர்களும் நிறைந்திருக்கும் வாயுபத்த லோகங்களைத் தாங்குகின்றான்; குலபர்வதங்களா யிருந்து லோக பாலர்களுடைய புரங்களைத் தாங்குகின்றான்; குலாசலம் மேரு மானசோத்தரம் என்னு மிடங்களிற்றான், லோக பாலர்களுடைய புரங்கள் இருக்கின்றன. பூமியாக விருந்து இந்த ஜன மரியாதைக்குப் பங்கம் வாரதபடி தாங்குகின்றான்; புற்களாயும் புதர்களாயும் கொடிகளாயும் இருந்து அநேகவித பலபரம்பரையைக் கொடுக்கின்றான்; நீராகாரத்தையும் நெருப்பாகாரத்தையும் பொருந்தி அதிவேகமாகச் சொலிக்கின்றான், பெருகுகின்றான், சந்திரனாகி யிருந்து அமிருதப் பிரவாகத்தைத் தருகின்றான், ஹாலாஹலம் என்னும் விடமாயிருந்துகொண்டு மரணத்தை யுண்டுபண்ணுகின்றான். தேஜசா யிருந்துகொண்டு திக்குகளை யெல்லாம் பிரகாசிப்பிக்கின்றான்; இருட்டா யிருந்துகொண்டு யாவற்றையும் மறைக்கின்றான், சூனியமா யிருந்துகொண்டு ஆகாயமாகத் துலங்குகின்றான், பர்வதமா யிருந்துகொண்டு தடங்கலைச் செய்கின்றான். வெளியான அந்தக் கரண அபிவியக்த சைதன்யத்தினாலே சங்கமமாகின்றான், வெளிப்படாம லிருக்கின்ற சித்துத் தன்மையினாலே மிகுந்த ஜடாகிருதியை யுடைத்தாய் ஸ்தாவரமாகி யிருக்கின்றான், சமுத்திரமாக விருந்துகொண்டு பூமியாகிய ஸ்திரீயை வளயம்போல வளைக்கின்றான். மறைப்பற்ற சிதாத்மாவாயிருந்துகொண்டு அந்தப் பிரகாசமானது வியாபித்திருக்கும் மூவுலகமே முதல் மும்மை யணுவரையுமுள்ள பதார்த்தங்கள் யாவற்றையும் விஸ்தரித்துக்கொண்டிருந்தபோதினும் தான் நிர்விகாரமாகவே யிருக்கின்றான். எவ்விச் சிறிது தோற்றா நிற்குமோ, முன்னும் தோற்றிற்றோ இனிமேலும் தோற்றா நிற்குமோ அவ்விக்காலத் திரயத்திலு மிருக்குந் திருசியமி யாவுமே அந்த விதேக முக்தனான் இதுவே விதேக முக்த னிலக்கணமாம். தடை மிகுந்திருத்தலினாலே சமதிருஷ்டி கிடைத்தல் அருமையாதலினாலேமுத்தி கிடைத்தலும் மிகஅருமையதேயாகும் என எண்ணினவராகிய ஸ்ரீ இராகவர் அம்முத்தி கிடைக்கு முபாயத்தை யறிய வேண்டு மென மிக விரும்பிச்சங்கித்தல்:—ஹேபிரஹ்ம சொரூபரே !

எதனால் இத்திருஷ்டியானது விடமமாயுளதோ அதனாலிம் முக்தியடைதற் கரிய தாம், இனி யொருவாறடைந்த போதினும் அதன் கண்ணே சித்தம் நிலை பெறு தல் முடியாத காரியமா யிருத்தலின் ஏறமுடியாததாம் என்பது அடியேனது துணிபாம்; தாங்கள் எங்ஙனமுண்டா மென்பதை யினிதியம்பியருளல்வேண்டும்? என்று இவ்வண்ணம், விருப்பத் தோடிருக்கும் ஸ்ரீ இராகவரை அதனை யடையு முபாயவுபதேசத்தான் மகிழ்வித்துக்கொண்டு ஸ்ரீவசிஷ்டபகவான்கூறத்தொடங் கல்:—ஹே இராகவ! இதுதான் முக்தியென்று சொல்லப்படும், பிரஹ்மமென்று இது தானியம்பப்படும், இதுதான் பரமானந்தமென்று மியம்பப்படும், இஃதெங் ஙன மெய்தலாமென்பதைக்கேட்பாயாக! அனான்மாவின்கண் ணாரோபித பிரத்தி யக்குத் தன்மையாய யானென்றும், வெளிச் சேதனத் தன்மையாய நீ யென்றும் இன்னும் பலவகையோடு கூடியும் எவ்விததிருசியம் காணப்படுகின்றதோ அவ் விது சத்தென்று தோற்றிய போதினும் மலடிமைந்தனைப்போல அத்தியந்தமுண் டாக வில்லையென்னு முணர்வானே இஃதடையப் பெறும். பிரஹ்மம் எல்லா வடிவமாகவு மிருக்கின்றதென்று கேட்கப்படுகின்றமையின் பிரஹ்மத்தையடை யுங்கால் அத்தன்மையானே சமுசார அடைவேயேனுண்டாக மாட்டாது எனஸ்ரீ இராகவர் வினாதல்:—ஹே அறிஞர் சிகாமணியாய பகவன்! விதேக முக்தர் மூவுலக வடிவமாயிராநின்ற பரம்பொருளை யடைவராயின் அக்கால் அவர்கள் சமு சாரத் தன்மையையே யடைந்தவர்கள் ஆவர்கள் என எண்ணுகிறேன். முன்மொ ழிந்த அத்தியந்த முண்டாகாமையையேபற்றி ஸ்ரீவசிஷ்டர் பரிகரித்தல்:—மூன்று லகமுமிருக்குமாயின் அவ்விதேக முக்தர்கள் அவ்வச்சமு சாரத்தன்மையையடை வார்கள், யாண்டு மூவுலக மென்னுஞ் சத்தார்த்தமும் ஒருசிறிதுஞ் சம்பவியாதோ ஆண்டு இம்மூவுலகத் தன்மையை பிரஹ்ம மடைந்த தென்னும் நினது வினாப் பொருட் புத்தி யெங்ஙனமாகும்? ஆதலால் இவ்வுலக சத்தார்த்த கற்பனை சம் பவிக்கமாட்டாதாம். இவ்வியாவும் சன்மாத்திர வியற்கையினவா மென்னும் உணர்வினாலே, இரண்டின்றியதும், சாந்தமும், அறிவு வடிவதும் ஆகாயத்தைப் போல நிர்மலமும் ஆகிய பிரஹ்மமே ஜகத்தாம். பிரத்தியக்குத் திருஷ்டியினானே நன்கா லோசனைசெய்து பார்க்குமளவில் சிவத்திற் கற்பனையாற்றோற்றியவை பொய்யேயாம். ஆமாறுற்றதிருஷ்டாந்தங்களைக் கேட்டி! யாம் பொற் கடகத் தில் ஆய்ந்தாய்ந்தும் நின்மலமான பொன்னைத் தவிர்த்து எங்குங் கடகத் தன்மையைக் கண்டிலோம். நீரையும் திரையையும் நீள ஆயினும் நீரினும்வேறாக அலையென்பதாகச் சிறிதுங் காணவேகாணோம், யாண்டு அத்தகைய அலையானது தோற்றியதாகக் கண்டோமோ ஆண்டேயஃதில்லாமற் போகின்றதன்றோ, காற் றைப்பார்க்கினும் வேறாக அசைவையோரிடத்திலும் ஒருகாலும் கண்டதே கிடையாதாம், அசைவு எப்போதும் வாயுவேயாம், ஆகவே யுலக மறிவைத் தவிர வேறின் றென்பதிலைய மென்னே. ஆகாயத்திற் சூனியத் தன்மையிருப் பதே போலும் கானலைமருப்பூமியில் நீராகத்தோற்றுவதேபோலும் தேயுத் தானே யெப்போதும் ஒளியாகத்தோற்றுவதேபோலும் பரமசிவமே மூவுலக வடிவமாய்த்தோற்றா நிற்கும். இவ்வண்ணம் காண்பிக்கப்பட்ட திருஷ்டாந்தங் களை யினிது நோக்கியாசிரியர் அருளிய பொருள்களை இரண்டு சுலோகங்களாற்

சம்பாவனை செய்து அதன் கண் விபரீத பாவனையால் விக்ஷேபமுண்டாதலின் மீண்டும் அசம்பாவனை விகற் உதயங்களால் நிலைபேறுருமையின் மனத்தாற்றுணி வான் முடியாதவர் போல அதனைத் துணியுமுபாயத்தை ஸ்ரீ இராகவர் வினு தல்:—உலகதிருசியத்தின் அந்தியந்த அபாவ சம்பத்தாம் பாதகத்தால் விடு படுகை எவ்வுத்தியானே யுதிக்குமோ அவ்வுத்தம யூகத்தை யடியேனுக்கு பதே சிக்கவேண்டும். காண்போன் காட்சிகளாகிய பாஸ்பரங்கலந்தொன்று பட்டவை கள் பாதித்த பின்னர் எஞ்சிய சொப்பிரகாச வடிவத்தை யுற்றவைகளாய் வேற் றுமை யொழிந்த போழ்து நிர்வாணபதமே எஞ்சும். ஆகையால் உலகமாகிய திருசியம் அத்தியந்தம் எங்ஙனமில்லாமற் போமோ? இத்தகைய இயற்கை யோடு கூடியிருப்பது பிரஹ்மமே யென எங்ஙன மறிதல் கூடுமோ? அங்ஙனமடி யேற்குபதேசித்தல் வேண்டும்? எந்த யூகத்தினாலே யிதனை நன்கறியலாம்? இஃ தெங்ஙனம் பிரசித்தமாய்? இதுசித்தமாகும் பக்ஷத்தில் ஹேமுனீந்திரரே! சாதிக்கத்தக்கது யாதொன்றுமே யெஞ்சமாட்டாது. சிரவணித்த பொருளை ஒரு முறை சப்பாவனை செய்து மீண்டும் மீண்டும் நீண்ட மனனப்பயிற்சியே அதன் நிலை பேற்றின்றுணி வுபாயமாகுமென ஸ்ரீ வசிஷ்ட பகவான் கூறல்:—இப் பொய்யுணர்வு விடூசிகையானது நெடு நாளாகவே ரூன்றிக்கிடக்கின்றது விசார மாகிய மந்திரத்தானே அத்தியந்தம் வேரேயில்லாமலு பசாந்தியையடையும். சிகரத்தின் மீதேறிய புருடனுக்கு, எப்பக்கங்களிலும் கீழே யிறங்குதலைச் சம மாகவுடையதான மலையிற் சமகாலத்தில் ஏறுதல் இறக்குதல் சடுதியிலேயே செய்ய எங்ஙனம் முடியாததாமோ அங்ஙனம் இதனைக் கணத்தில் விரைவாகப் பறித்தேறிதற்கு முடியாதாம். ஆதலின் அப்பாச யோகத்தினாலும் யூகங்களினா லும் நியாயங்களினாலும் கதைகளினாலும் உலகமயக்கமானது நினக்கெங்ஙன மேகுமோ அங்ஙனங்கூற இதனைக் கேட்பாயாக. இனிக் கூறப்படும் உலகப்பிரள யக்கதை யாதோ அதனை யுணர்வு சித்தித்தற் பொருட்டுக்கேட்கு தியேல் மெய் யுணர் யுடையனாய் முக்தனேயாகி விடுவாய். பிரளயக்கதை கூறியபின்புலகுற்பத் திப் பிரகாரம் கூறப்படும், அது நிருவிகார உபாதானத்தையுடையதாய் விவர்த்த மாகவே யெஞ்சா நிற்கு மெனப்பந்தப் பொய்ம்மையுளதாய வழி மோக்ஷமானது தானே சித்திக்குமென்றுணர்தி யாதுயாது உண்டாகின்றதென்று சொல்லபடுகின் றதோ அது அது பந்தமற்றதாய்த் தானகவே நிலைபெறும். இந்த வுலகமயக்க மானது இங்ஙனுண்டாகாமலே ஆகாயமயமாயிலங்குகின்றது என்று இவ்வுற்பத் திப் விரகரணத்தி லெம்மாலிப்போது கூறப்படும். உண்டாகாமலே ஆகாயமயமா யிலங்குமெனக்கூறிய பொருளைப் பிரளயக் கதையாற் பொருத்திக்கூறக் கேட்பா யாக; சுரர் அசுரர் கின்னார் முதலியவர்களோடு கூடியெல்லாவகை யானும லங் கரிக்கப்பட்டு விளங்கும் ஸ்தாவர ஜங்கம வடிவ எல்லாவுலக மெனயாது சிறிது இது காணப் பெறிகின்றதோ அது உருத்திராதிகளையுமறைக்கும் பிராகிரும மகாப்பிரளய முண்டாகியபோது எங்கேயோ ஓடி நசித்து அசத்தாய்க் காணப் படாமல் அறிவாய்ப்போம். நசித்துச் சூனியமாய்ப் போகின்றதோ வெனின்? இல்லை, மற்றென், நசித்த பின்னர் நிச்சலமாயும், கம்பீரமாயும், ஒளியற்றதாயுமி ருளற்றதாயும், விஸ்தாரமாயும், பெயரற்றதாயும், வடிவற்றதாயும், இலங்கும்

அவாங்மானச சத்தொன்று சேடித்து நிற்கும். பெயரையும் வடிவையும் விடே திக்கில் நாமரூப சூனிய வஸ்துவிற்கு உலகத்தில் அத்தியந்தம் பிரசித்தி காணப் பெருமையின் சூனியத்தன்மை யன்றோ வாமெனின்? அது சூனியமாகாதாம், ஆகாதயின் சூனியமாகாத அதற்கு ஆகாரத்தன்மை திருசியத்தகைமை தரிசன னத் தகைமை முதலியவை எஞ்ஞனலாமே யென்னின்? அது ஆகார முடையது மல்ல திருசியமுமல்ல தரிசனமுமல்ல, அநந்தமாயிருத்தலினானே பூதபதார்த்தக் ட்டமுமல்ல. பெயரில்லாதபடியினாலே எவ்வாற்றானும் கூறமுடியாத வடிவதாம், பூரணத்தினும் பூரண வடிவமதாம் எப்படி யியம்ப முடியாதெனின்? கேட்குதி! அது சத்து மன்று அசத்துமன்று சதசத்து மன்று காலசம்பந்தமும் கால சம்பந்தமுடையது மன்று உற்பத்தியும் உற்பத்தியுடையது மன்று; அது சின் மாத்திரமாயிருப்பதும், திருசியமற்றதும், அந்தமின்றியதும், ஜரையற்றதும் சிவமும், முதலிடைகடை யற்றதும், காரணமற்றதும் நோயற்றதும் ஆம். எதன் கண்ணே யிந்த வுலகமானது, முத்துக்களையுட் கொள்ளும் அன்னப் பக்ஷிகள் அதன் பரிணாம மாதலின் முன்னர் முத்து வடிவமாயும் பின்னர் அன்ன வடிவ மாயும் காணப்பட்ட அவ்விரண்டுந் தொடர்ந்த திரவியம் போலும், சித்திரமய க்க முதலியவற்றே காணப்பட்ட முத்து மய அன்னம் போலும் காணப்படும், யாது அத்திரோப திருஷ்டியினானே யாவுமாமோ, அபவாத திருஷ்டியினானே யாவுமாகாதோ அத் தெய்வம் வெளிப்பட்டும் வெளிப்படாமலுமிருக்குமவஸ்தை யிரண்டைத் தொடர்ந்து விளங்கும். அது யாண்டும் எப்போதும் செவியில் லாததாயினுங் கேட்கும், நாவில்லாததேனும் இரசிக்கும், நாசியில்லாததேனும் முகரும், துவக்கில்லாததேனும் தொடும், விழியில்லாததேனும் காணும், காது முதலியவை யில்லாவிடினும் கேட்கை முதலியவை யிதற்குக் கனவிற் கண்டா மன்றோ; அங்ஙனமே "கண்ணுங்காதுமில தெனினும் காணக்கேட்கக் கடவதிது, பண்ணுந் தொழிலெல்லாம் விரைவிற் பாணிபாதமிலதேனும்" என்னும் மறையு மறைகின்றது. எவ்வொளியானே முன் மொழிந்த சத்த சத்துவடிவம் குறிப்பிக் கப்படுமோ அச்சிற் பிரகாசமும் அத்தெய்வமேயாகும், அவ்வாறே அஞ்ஞான மிருக்குங்கால் விசித்திரமான சிருஷ்டியும் அஞ்ஞானமானது அகலுங்கால் ஆதி யந்த மற்ற சொரூபமும் ஆகிப் பிரசித்தமாய் விளையாடுவது மதுவேயாம். இங்ஙு னஞ் சீவன் முக்த தசையிற் பாதிக்கப்பட்ட வுலகப்போலிக் காட்சியும் அதுவே யாம், யோகிகள் கேசர முத்திரையிற் புருவத்தினிடையிற் பார்வையைச் செலுத் திற் பாதிதிறந்த விழிதிருசியப் புருவத்திடையே புகுத்திய கருவிழிநனியானது வெளியாகாமையானே யிருப்பது போன்ற வுலகத்தைப் பார்ப்பதேபோல யாது ஆகாயமயமா யிருப்பது போன்ற சொரூபத்தைக் காண்கின்றதோ அதுவும் அத்தெய்வமே யாமென்பது பொருள்; யோக சாஸ்திரத்திற் கேசர முத்திரை யின் இலக்கண மியம்பப்பட்டுளதாவது:—"செய்ய கபாலத் துளையினிற் சிகு வை செலுத்தி யுண்மாற தாய்ப் புருவத், துய்யிடைப் பார்வைப் படுத்த முத்தி ரையு மூயர்ந்த கேசரி யெனப்படுமா, ஊயுறல் பிணியாலிலை யவன் வினையா னண்ணுத விலையிடா டரான், மையுறுகால மதனிருற் புகன்ற மருவு கேசரி யறிந்தவனே" என்பதாம். அந்த விபுவாகிய பரமாத்மாவிற்கு மூயற் கொம்பு

போல யாதொரு காரணமு மில்லையாம், இவ்வுலகங்களி யாவும் கடற்கலைக் கூட்ட மே போலுங் காரியமாம். இவ்வண்ணம் சர்வலய ஆதாரதற் பதார்த்தம் காண் பிக்கப்பட்டது இனித்துவம் பதார்த்த ரூபத்தாலும் அதனைக் காட்டுவாங் கேட் டி ! எவ்விடங்களிலும் பொதுவாக வொளிர்வதும், சித்தத் தானங்களில் மறைப் பில்லாமையின் நிரந்தரம் சிறப்பாய விளக்கத்தானே யொளிர்ந்து கொண்டிருப்ப தும், ஆகிய சின்மாத்திர தீபத்தின் ஒளியினாலே மூவுலகங்களும் விளங்கும். பர மாத்மா வில்லாதிருப்பின் சூரியன் முதலிய எல்லா வொளிகளும் இருட் கொப் பாகிப்போம், குருடனுக்குங்கூகைக்கும் பகலுண்டாகியிருந்தபோதினும் அப்பிர காச ரூபமாயிருப்பதே போலத் திருக்கு ரூபமாகிய பரமான்மாவின் உதவியின் றேல் அந்த காரமயமேயாம், அஃதிருந்தாற்றான் மூவுலக வடிவக்கானனீர் கிளம் பிக்கொண்டே யிருக்கும். அதன் கண்ணே மனோபாவத்தால் அசை வுண்டான போது உலக இலக்குமி யுண்டாவது போலுண்டாம், அசை வுண்டாகாமல் உள் ளே யிருக்கும் பிரத்தியக் கான்மாவை யடைந்திட்டபோது உண்டாவதின்று மென்னும், இஃதுண்மையே யாகும், கொள்ளிக்கட்டையை யிரவிற் சுற்றினாற் சக்கிராகாரமாய்த் தோற்றுவதே போல அதன் கண்ணே யிவ்வுலக இலக்குமி யுண்டாம். மேலும் வெளிப்படையாகக் கூறின் வியாபகமாயும் மகத்தாயு மிருக் கும் அதனது உலகுதயதிதிலயவிலாசம் அசைவு அசைவின்மை மாத்திரத் தானேயாம், அதனது பாரமார்த்திக ரூபமோ நிருமலமாயும் அக்ஷயமாயு மிருக் கும், அதனது சத்தையானது காற்றினதேபோலும் அசைவாயும் அசைவில்லாத தாயும் எவ்விடத்தும் இருந்து விவகாரத்தாற் பெயர் மாத்திரையானே வேறு பட்டிருப்பினும் உண்மையாக வேறுபடாமலே யிருக்கும், கூறிய அசைவு அசை வின்மைகள் சத்துரூப பூரணத் தன்மைகள் வேறு வகைப் படாமையின் அத னினு மயலாய வேறுவகைப் பட்டதற்கு விவர்த்தத் தன்மை முடிவாதலின் நாமத்தினாலே வேறுமன்றி யுண்மையாக வேறின்றாம். அதற்கு, அறிந்தவன் அறியாதவன் முக்தன் என்பவர்களுடைய பார்வையான் மூவகைப்பிரசித்த முண் டாதலைக் கேட்டி ! அது எப்போதுமே விழித்திருக்கும், எப்போதுமே துயின் றிருக்கும், எப்போதும் எவ்விடத்தும் தூங்காமலும் விழியாமலுமே யிருக்கும். முமுக்ஷுவின் தள்ளல் கொள்ளல்களின் சாதகமும் அதற்குக் கூறிய இரண்டு ரூபமேயாகுமென் றுணர்தி, அஃதசையாதேற் சிவமாயுஞ் சாந்தமாயு மிலங்கும், அசையுமேலோ மூவுலகத் திதியாம், அசைவு அசைவின்மை விலாச வடிவமாக அஃதொன்றே நிறைந்த ஆகிருதி யுடையதாக இருக்கும். புட்பங்களிற் சாரமா மணம் போல் அழியும் பொருள்களிற் சாரமாயிருந்து அழியாதாம், சர்வ வஸ் துப் பிரத்தியக்ஷ விருத்திகளில் ஒளி வடிவமா யிருந்த போதினும் வெள்ளாடை யில் வெண்மை பிரிவு படாமலிருத்தலேபோல விருத்தி விடய நிஷ்கர்ஷத்தானே கவர முடியாததாம். அது வாக்கிந்திரிய மற்றதாகலின் ஊமைபோலிருந்தபோதி னும் எல்லா வாக்குகளின் பிரவிருத்திக்கும் நிமித்த ம தலின் ஊமையாகாதாம், இங்ஙனம் மனனவிகார மற்றிருத்தலிற் கற்போலிருப்பினும் மனனஞ் செய்வ தாம், நித்திய திருப்தமா யிருந்தபோதினும் போக்தாவாம், யாதொரு கிரியாதி நிமித்தமில்லா திருந்தபோதினும் கருத்தாவாம். அது அநங்கமா யிருந்த போதி

னும் சமஸ்த அங்கங்களையு முடையதாம் அதனுனே அநந்தமாயிரங்கரம் விழி
களை யுடையதாம், சிறிதும் எங்கும் நிலைத்திராததா யிருந்தபோதினும் எல்லா
வுலகங்களிலும் வியாபித்து நிற்கும். இந்திரிய பலமற்றதாயினும் எல்லா இந்திரி
யத் தொழிலியற்றுவதாம், மனன மற்றதாயினும் மனத்தா லுண்டாக்கப்பட்ட
அநேகவிகற்பங்களோடுற்றுள வுலக ரூபங்களோடு கூடியதாம். அதனைத் தரிசி
யாமையானே மயக்க மாத்திரமாகச் சமுசார சர்ப்ப பயங்க ளுண்டாம், அதனைத்
தரிசித்த மாத்திரையானே சருவ ஆசைகளும் திசைகளும் பிரதீதிகளும் பயங்க
ளும் ஓடியே போம். விளக்கிருந்தால் நாட்டியாதித் தொழில்கள் நடப்பதே போ
லும் அபரிச் சின்னமாயும் பிரகாசமாயும் அதனுனே சாக்ஷியாயும் நிலையுற்றதாயு
மிருக்கு மதுவிருப்பின் அசைவின் வாயிலாகவாம் சித்தச் சேஷ்டையானவை
கிளம்பாநிற்கும். கடலினின்றும் சிற்றலை பேரலை முதலியவை கிளம்பி வருவதே
போல அதனினின்றும் கட பட ஆகாரபதார்த்த கோடி வகைகள் கிளம்பிக்கொ
ண்டே யிருக்கும். அந்தச் சிதாத்மாவே ஜடப் பிரபஞ்ச மென்னும் நூற்றுக்கண
க்கான மயக்க வஸ்துக்களாக, கடகந் தோள்வளை கேயூர நூபுரங்களாகப் பொன்
னே பொலிவதே போலும் பொலியும். அது விளங்குவதா யுன்னாற் சாக்ஷாத்கரிக்
கப்பட்டு நின்மாத்திரமா யொன்று யிருக்கும், என்னாற் சாக்ஷாத்கரிக்கப்பட்டு
என் மாத்திரமாயும் இந்த ஜனங்களாற் சாக்ஷாத்கரிக்கப்பட்டு ஜனங்கள் மாத்திர
மாயும் ஒன்றாயு மிருக்கும், அஃதறியப் பெறுதாயின் நீயாகவும் யானாகவும் இந்த
ஜனங்களாகவும் ஆகமாட்டாது. அந்த ஆத்மாவினின்றும் திருசியங்களானவை
நீரிற்றிரைமாலைபோல அயலாயிலாம லிருந்தாலும் அயல்போலும், வேற்றுமைப்
படாதிருப்பினும் வேற்றுமைப் பட்டன போலும், உற்பத்தி யில்லாம லிருப்பி
னும் உற்பத்தியுற்றனபோலும் கிளம்பிக்கொண்டேயிருக்கும். அதனிடத்தினின்
காலசம்பந்தியாய அறுவகை விகாரங்களு முண்டாம், அதனுனே திருசியத்
தின்றரிசன பல வியாப்தியுண்டாம், அதனுனே இஷ்ட அநிஷ்டங்களின் அடை
தல் அகலுதல் விடயங்களாய மனோரதவி கற்பங்களாம், முறையே அதனது சச்
சிதானந்த ரூபத்தன்மையே நிர்வகிக்கின்றதாம், அந்த மூன்றும் அதனது பிர
காசத்தினாலே ஜகத்தாகவே யிலங்கும் அயலாக உலகங் கிடையாதாம். அறியப்
படாததிற் பொதுவதா யெங்கு நிறைந்திருப்பது சத்தாம், மறைபடாததின்
மாத்திர மிருப்பது தரிசனமாம், அவற்றுள் அநுகூலமா யறியத் தக்கதின் மாத்
திர மிருப்பது ஆனந்தமாம், இவ்வண்ணம் உட்பட்ட வுபாதி விலக்ஷணமா யிரு
ந்தபோதினும் ஒளிரூப இருப்பு ஒரேமாதிரியா யிருக்கும். கருமேந்திரிய வுபாதி
யிற் கிரியையையும் ஞானேந்திரிய வுபாதியில் ரூபரசகந்த சத்தப் பரிசங்களையும்
அந்தக்காரணவுபாதியில் அறிவையும் பிரமாதாவையும் எவ்வடிவமாயிருந்து அறி
கின்றனையோ அந்தப்பிரமாதாவினும் வேறாய அவ்வடிவம் பரமான்மாவினுடைய
தேயாம். எவ்விடய வியாப்த விருத்தியினும் வேறாய அறிவுருவத்தா லுணர்கின்
றாயோ அதுவும் அந்தப் பரமான்மாவேயாம். ஆகலினது திரிபுடி சாக்ஷியெனப்
பலித்ததாம். காண்போன் காட்சி காண்படு பொருள்களி னிடையில் எத்தரிசன
முளதோ அதனை யொருமைப்பட்ட மனத்தால் உபாதிகளினின்றும் வேறுபடுத்திக்
காணும் வகையினானே நினது வடிவமென வுணர்ந்து கொள்ளுதி இவ்வண்ணம்

தத்துவம் பதார்த்தங்கள் காண்பிக்கப்பட்டன. இனி வாக்கியார்த்தத்தைக் காட்டத் தெரிந்துகொள்ளுதி:—அந்தப் பரமாத்மாவானது பிறவாததும், ஜரையற்றதும், அநாதியதும், சாசுவதமும், நித்தியமும், சிவமும், மலமற்றதும், மோக மற்றதும், யாவராலும் வணங்கத் தக்கதும், உயர்ந்ததும், நிந்தையற்றதும், சகல வியாபாரங்களு மற்றதும் (இதுவரை தற்பத இலக்கியார்த்தம்) காரணங்கட்கெல்லாங் காரணமும், (இது தற்பத வாச்சியார்த்தம்) முழுவதையு முணர்வதும் (இது அவஸ்தாத் திரயங்களையுங் காணும் துவம்பத வாச்சியம்) அநுபவ வடிவதும் அவஸ்தாத் திரய வேத்தியங்கள் விடுபட்டதாகிய அறிவு வடிவதும் (இது துவம்பத இலக்ஷியார்த்தம்) ஆம், ஒன்று சேர்ந்திருத்தலாலது அகண்ட வாக்கியார்த்த வுபதேசமாம்.

9-வது தெய்வ நிராகரணம் முற்றிற்று.

---

## 10—வது பரமபாவ வர்ணனம்.

இப்போது முன்மொழிந்த பிரஹ்ம இலக்கணத்தில் விரோதம் வருவது போன்றெண்ணி முறையாக அதன் பரிகாரமாகக் கருத்தீண்டு வருணிக்கப்படும். மகாப் பிரளயத்தி லெச்சத்தான தெஞ்சுகின்றதோ அது தேயுவுமல்ல தமமுமல்ல என்ப தாதிவிருத்த ரூபஞ் சம்பவிக்க மாட்டாதாமென வெண்ணி அவ்வாறு கூறிய தன் கருத்தை யறிய விரும்பிய ஸ்ரீ இராகவர் இருபொருளிலொன்று கூடுமெனக் கூறுபவராய் வினவிட அடியிடல்:—மகாப் பிரளயமானதுண்டாங் கால்யாதொன் றெஞ்சா நிற்குமோ அஃதாகார முடையதல்ல வென்பது மிகப் பிரசித்தமேயாகும் இதன் கண்ணே யாதொரு ஐயமுங் கிடையாது, ஆனல் இதனிற் றெரிந்துகொள்ள வேண்டியது யாதென்னின்? இது சூனியமாகாமற் போவ தெங்ஙனம்? பிரகாசமாகாமற் போவது எவ்வாறே? தமவடிவமாகாத தென்னனம்? விளங்கிக் கொண்டிருக்கு மொளியாக மாட்டாத தென்னேயோ? நஷ்டமாகியதற்கு அசூனியத் தன்மை கிடைக்கத் தகாததன்றே, ஒளி யிருள்கள் இரண்டனுள் ஒன்றேகுமானல் இரண்டுளொன்று எஞ்சாமலிருக்கையப் பிரசித்தமேயாம், ஒளிர்விக்கப்படும் பொருள்க ளில்லாமையால் அப்போது அயலையொளிர்விக்குந் தன்மையிலதெனினும் மின்மினி போலும் தான் மாத்திரமாயிலங்கலாற் பொலிவு வடிவமேன் ஆகமாட்டாது? திருசியத்தினு மயலாயதற்குத் தரிசனத் தன்மை வெட்ட வெளியாதலின் திருசியமுமின்று தரிசனமுமின்று எனக் கூறுவதில் வியாகாத தோஷம் வருகின்றதே, சித்துருவ மேனுகாது? ஜீவரூப மேனுகாது? புத்திதத்வ மேனுகாது? மனந்தானே னுகாது? திருசிய தரிசனங்களின் வேறுகக் காண்போனே பிரசித்தமாயுளனெனக் கூறின் ஜீவனேனும் புத்தி தத்துவமேனும் மனமேனும் ஏன் ஆகமாட்டா? அவைகளே மதவேற்றுமையாற் காண்போனென வெளியாதலின், ஆகவே அவைகளே உலகத்திற் பிராணிவாசக பூத சப்தவிடயமாதலின் பூதபதார்த்தக் கூட்டமுங் கிடையாவெனக் கூறியது வியாகாதமாம். அது விளங்குவதா யுன்னுற் சாக்ஷாத் கரிக்கப்பட்டு

நின்மாத்திரமா யொன்று மிருக்கும் என்னுற் சாக்ஷாத் கரிக்கப்பட்டு என்மாத்
திரமாயும் இந்த ஜனங்களாற் சாக்ஷாத் கரிக்கப்பட்டு ஜனங்கண் மாத்திரமாயும்
ஒன்றுயு மிருக்கும், அஃதறியப் பெறுதாயின் நீயாகவும் யானுகவும் இந்த ஜனங்
களாகவும் ஆகமாட்டாது என முன்பாது ஒதப்பெற்றதோ அதுவும் தங்கள்
கூற்றிற்கு வியாகதமாகத் தானே முடியும், நீயான் முதலானவை தாமொருசி
றிது மெங்ஙமே னுகமாட்டா? சருவமுந்தா னெங்ஙனுகும், இவ்வாக்கியங்களின்
முறைகளானே அடியேனுக்கு மோகமுண்டானதுபோ லிருக்கிறது ? எனது
கருத்தைக் கடந்து கேளாத கேள்வியைக் கேட்டனை, இக்கேள்வியின் பிஜமா
கிய ஐயத்தை, இரவிலுள்ள இருளைச் சூரிய னீக்குவதேபோல முயல் வின்றியே
யெனது கருத்தை யறிவிக்கும் வாயிலாக நீக்குகின்றேன், மகா கற்பாந்த மடை
யும்போது எச்சத்தானது எஞ்சா நிற்குமோ அது சூனியமாகா திருக்கும் வகை
யைக் கூறக் கேட்பாயாக; உருவோடு வெளிப்படாமற் றூணிற் பிரதிமை யிருப்
பதே போலப் பரமாத்மாவின் கண்ணே யிவ்வுலக முழுது மிருக்கின்றது, அதனு
லந்தப் பரமபதமானது சூனியமாக மாட்டாது, கம்பத்தி னின்றும் உருப்பட்ட
பிரதிமைக்குக் கம்பசத்தையினு மயலாய சத்தை யின்மையின், அதன் சத்தையா
லிருப்பதற்கு உருப்படாத் தசையினும் அபாய மின்றன்றே. இவ்வண்ணம் மிக
வும் பெரிதா யுலகமெனப் பெயரிய இவ்வத்துவானது விவகாரத்தாற் சத்தியமே
யாகுக, பரமார்த்தத்தால் அசத்தியமே யாகுக, எவ்வதிஷ்டானத்தின் கண்ணே
யிவ்வுலகமானது பிரதீதியாகின்றதோ அதற்குச் சூனியத் தன்மை யின்றும்,
சூனியத்திற்கு ஆரோப அதிஷ்டானத் தன்மை கூடாமையின் என்றுணர்க.
உடன் பாட்டு முகத்தாற் காண்பித்த பொருளை எதிர்மறை முகத்தானும் காண்
பிக்கின்றூர்:—உருவாக்கப் படாமலிருக்கும் பிரதிமையை யுடைய தூணனது
பிரதிமைச் சூனியமாகாததே போல முன்னர் பிரஹ்மமே ஜகத்தாகத் தோற்றிய
ஹேதுவால் தத்பதமானது ஜகத் சூனிய மன்றும். அக்காலுலகமான திருக்கு
மாயின், பிரளயங் கூடாதாம், இல்லாதாயின் அதன் சூனியத் தன்மை யடை
வுற்றதே யாகும் என வருஞ் சத்துவ அசத்துவ வியாகாதத்தைத் திருஷ்டாந்
தத்தா னீக்குவாங் கேட்டி! நீரின் கண்ணிலயமாகி யிருக்கும் அலையானது இருப்
பதும் இல்லாதது மாகாததே போலப் பிரஹ்மத்தின் கண்ணே இவ்வுலகமானது
சூனியமாயும் சூனியமாகாமலு மிருக்கும், அநிர்வசனீயத் தன்மையை யடைந்
திருக்கும், சூனியம் அசூனிய மென்னும் இரண்டன் கற்பனை அதிஷ்டானமாகிய
பரமார்த்த வஸ்துவாக இருக்கும். தம்பப் பதுமை போலவே பிரளயத்தி னுலக
மிருக்குமாயின் அதன்கண் வாதிகள் என் மோகமடைய வேண்டும், தம்பப் பது
மையில் மோக மடையக்காணுமே? பதுமை செய்யத்தக்க கருத்தா கருமாதார
தேசம், தின முதலிய காலம், கருத்தா கரண உபகரணுதிகள் என்னும் எல்லாச்
சாமக்கிரிகளும் சேர்ந்திருக்கின்ற படியினுலே மரவிகார மாயகம்பத்திற் பதுமை
செய்தல் கூடும் அதனுல் அதன் கண் அதன் சத்தையைப் பொருத்துவித்தற்கு
முடியும்; மூவித பரிச்சேத சூனிய பிரஹ்மத்தி னிடத்திற் கூறிய சாமக்கிரிகள்
ஒன்றுங் காணப் பெறுமையினுனே அவ்வாதி ஜனங்கள் மோகிக்கின்றூர்கள்.
கூறிய பிரகாரம் விஷமத் தன்மை யிருக்குமாயின் கம்பப் பதுமைத் திருஷ்டாந்

தங் கூறுவானேனெனின்? முன்மொழிந்த கம்பப் பதுமையாகியவது, பரமார்த்தமாய பிரஹ்மத்தினிடத்தி லுலகமிருப்பதற்கு அதனிருப்புக் கெடாத ஏகதேச அங்கிசத்தானே யொப்பாய வுபமானமாம் எல்லாவற்றானு மன்றாம். அறைந்த படியுலக சத்தையானதுளதாகுக, விருத்தங்களாய அதனுதய அஸ்தமயங்கட்கு ஆண்டொரே காலத்திற் சத்தை யெங்ஙனங் கூடுமெனின்? அவற்றிற்குத் தந்தருமிக்கயலாகச் சத்தையங்கீகரியாமையின் தருமிக்குத் தனிச் சத்தையிலதென அகற்றவே சம்பாவனையே யின்றாம். ஒருகாலு மிதுபரத்தினின்றும் உண்டாவதே கிடையாது, ஒடுங்குவதுங் கிடையாது, இஃதிவ்வாறிருக்கச் சத்தாய பிரஹ்மமானது கேவலம் தன்னிடத்திலே நன்னிலை பெற்றிருக்கும். இங்ஙனம் அசூனியத் தன்மைபோல் உதிப்பதுங்கிடையாது ஒடுங்குவதுங் கிடையாது எனச் சூனியப் பொருள்வாய்ந்த இன்மையானுரைத்தல் எங்ஙனமேனுமெனின்? பிரதியோகியின்கண்ணே அசூனியத் தன்மையிருப்பது போற்கொண்டு அதனைக்குறித்து வேறு வஸ்துவில் அதன் சூனியத்தன்மை கற்பிக்கப்படும்; கற்பிக்கப்பட்ட சூனியத் தன்மையைக் குறித்துப் பிரதியோகியின் கண்ணே அசூனியத் தன்மையாமெனப் பரஸ்பரம் அவாவாயவழி சூனியத்தன்மை யசூனியத் தன்மைகள் எங்ஙனஞ் சம்பவிக்கும். இவ்வண்ணம் முதல் வினா விடையை நிலைபெறுத்தி யிரண்டாவதையும் சமாதானிக்கின்றார்:—பிரஹ்மத்தினிடத்திற் பூதங்களாலாய ஒளியானதுண்டாவதில்லை; ஜலவிறகு பிருதிவிவிறகுகளின்கழிவினாலாம் சூரியன், அக்கினி, சந்திரன், நக்ஷத்திராதிகள், அழிவிலாத பிரஹ்மத்தினிடத்தில் எங்ஙன் எழும்; அவைகள் பிரகாசியாவன்றே. (இதனானே எங்ஙனந்தான் ஒளிர்வதன்றா மென்பதற்குமுத்தரங் கூறியவாறு காண்க.) தமோரூபமேனாகாதென்றதற்கும் விடையைக் கேட்டி! சூரியன் முதலான மகாபூத அபாவத்தானே யுண்டாவது இருளாம், அது பிருதிவியாதி மகாபூதப் பிரகாசங்களின் விரோதியாய் வேறொன்றா லொளிர்விக்கப்படும் பிருதிவியாதிகளிலேயே தமமெனக் கூறப்படுமேயன்றிச் சுவப்பிரகாசத்தி லன்றாம்; அதனாலீண்டியாதொரு தமமுங் கிடையாதாம்; இங்ஙனமே மாயையிருளும் விலக்கப்பட்டதா மென்றுணர்க. சுவப்பிரகாசத் தன்மையை யனுபவத்தாற் கூறக்கேட்பாயாக, கேவலம் ஆகாச சொரூபமாயிராநின்ற இதனது பிரகாசம் சுவானுபூதியே யாகும். யாவனுள்ளிருக்கின்றானோ அவன்றன்னாலேயே யனுபவிக்கப் படுகின்றான், அன்னியத்தாலே யனுபவிக்கப்படான்; மதி முதலியவைகள் மற்றொன்றா லனுபவிக்கப்படுகின்றன வென்றாலும் அவைகளுக்குள் யாவனுளனோ அவனவனாலே யனுபவிக்கப்படுவன் தன்னினு மயலாய அநுபவத்தை யவாவான், இவ்வாறன்றேல் எல்லையில்லாது செல்லலன்றோவாம். இரண்டாவது மூன்றாவது வினாவின்விடை விளம்பியதை விளங்கக்கூறின், இந்த ஐரையற்ற பதமானது தமப்பிரகாசங்களினின்றும் விடுபட்டதென்பதை நன்குணர்தல் வேண்டும். ஆகாயவுதரம்போலுந் தெளிவாய பிரஹ்மமானது தனமெனப்படும் உலகதிதிக்குக் கோசக்கிருகம் போன்றிருப்பதாமென்றறிதி. இனியிறு ஈற்றயல் வினாக்களின் விடையைக் கேட்பாயாக, வில்வத்திற்கும் வில்வ உதரத்திற்கும் பேதமியாதொன்று மில்லாததே போலப் பிரஹ்ம வுலகங்கட்கு ஒரு சிறிதும் வேற்றுமையே கிடையாதாம்

'நீரினுள் அலையிருப்பது போலவும், மண்ணினுள் அற்பகட மிருப்பதுபோல வும் ஜகத்தினிருப்பானது பரமாத்மாவின் கண்ணே யிருக்கும் அத்தகைய அது, எங்ஙனஞ் சூனியமாம்? (இது சிங்காவலோகன நியாயத்தாற் கூறியதாம்) நீர்க் குள்ளிருக்கும் மண்ணும், குட முதலியவற்றுள் ளிருக்கும் நீர் முதலியவையும் ஆதார இயற்கையை யனுகக் காணுமையின் பிரஹ்மத்துள்ளிருக்கு முலகுக்கக் காற் பிரஹ்ம வியற்கை யெங்ஙன் கூடுமெனின்? உன்னுலுரைக்கப்பட்ட நீ ராதியுபமானமானவை தக்கனவாகா, ஆகாரமுடையதை யவசானமாகவுடைய தாகக் காணப்பெறுவ தாகலின், பிரஹ்மமானது ஆகாயம் போன்று நின் மலமாகி நிராகாரமாயது; அத்தகைய நிராகாரப் பிரஹமத்தின் உள்ளே யிரா நின்ற வுலகமானது விலீனமடைந் திருத்தலின் நிராகாரமாகவே யிருத்தலின் அந்தப் பிரஹ்ம வடிவமாகவே யிருக்கின்றது. இன்னும் வெளிப்படையாகக் கூறக்கேட்டடி! ஆகையால் ஆகாசத்தைப் பார்க்கினும் அதி தெளிவாக இருக் கும் சிதாகாசமானது எத்தகையதா யிலங்குகின்றதோ அத்தகையதாகவே அத னுள்ளிருக்கும் உலகமானது உகைசத்தார்த்தத்தை யனுபவிப்பதாயினும் இருக் கும்; இதனுனே நான்காவது வினவும் விலக்கப்பட்டதாம், மிளகினுள்ளிருக்குங் காரமானதை யொழித்து மிளகைக் காணமுடியாததே போலத் திருசியகலையை யொழித்துச் சிதாகாயத்தின்கண்ணே சின்மாத்திரத் தன்மையானது தெரியா தாம்; சத்தியமே திருசியத்தினு மயலாகவே தரிசனத் தன்மையாற் பிரசித்த மாம், அதுவும் திருசிய மின்மையானே தரிசனத் தகைமை விவகார யோக்கிய மாம். ஆகையாற் சித்தும் அசித்துருவம் ஆம், அக்கால் ஆன்மாவின் கட்டிரு சிய மின்றும், இதனுனே சித்து முதலிய சத்தங்கள் பிரத்தியக் கான்மாவின் கண்ணே இலக்கணையினுலே பிரவிருத்திக்கின்றனவாமன்றி முக்கியவிருத்தியி னுலே யின்றும். உலக மிலயமாயின் சித்திற்குலக விடயத்தன்மை யிலக்கண சித்துத்தன்மை நீங்குகின்றதே போலும் சித்து விடயத்தன்மை யிலக்கணம் வாய்ந்த ஜகத்திற்கும் ஜகத்தன்மையாம்; அத்துணைமாத்திர ஆத்மத் தன்மை வயத்தால் வெளியிலிருக்கும் ரூபவொளிகளும் உள்ளிருக்கு மெண்ணங்களும் அதன் மயமாகவே விளங்குமன்றி யயலாக விளங்காதாம். ஆகலின், உலகமுள்ள படியேயிருந்து, துயிலாகவாவது, துரியமாகவாவது ஆம்; மேற் கூறப்படும் ஏழு பூமிகளுக்குள் ஐந்தாவது பூமிவரை யடைந்தவர்கட்குத் துயிலாகவும், மேற்பூமி யுள்ளவர்கட்குத் துரியமாயு மிலகும். கூறிய பொருளையே மேலும் வெளிப் படையாகக் கூறின், ஆகையாற் றுயில்வடிவமாக விருக்கின்ற யோகியானவன் விவகரித்துக்கொண் டிருந்தபோதினும் சாந்தமதியுடையவனுகி, சர்வ சமஸ்கா ரங்கட்குச் சம்புடமாக விருப்பினும் ஒரு சமஸ்காரமு மற்றதாய பிரஹ்மமாத் திரமா யிருப்பவனுகி யிலங்குவன். ஆகாரமின்றிய பிரஹ்மவடிவமா யாகாரத் தோடு கூடியவுலக மிருப்ப தெங்ஙனமா மெனின்? பல ஆகாரத்தோடு கூடி யிலங்கும் அலை முதலியவையேகாகாரநீர்மாத்திரமாய் நிலவுதல்போலு மென் றுணர்க, இதில் என்னே முரண்? சலனமின்றி யிருத்தலினுனே பிரசன்னமா யோராகாரத்தை யுற்றிருக்கும் நீரிற் பேரலைக ளிருக்கின்றன வன்றே, அது போலவே ஆகிருதியற்றுப் பரமாயிராநின்ற பிரஹ்மத்தின்கண்ணே விசுவமும்

அத்தகைத்தாயமரும். இவ்வண்ண முபாதி பூதமாயவுலகமானது காரணத்தினும் வேருகாம லொழிந்தது அதனை யுபாதியாயுடைய ஜீவனுக்கும் அத்தகைமை யை யறையக் கேட்டி ! யாது பூர்ணப் பிரஹ்மத்தினுடைய சம்பந்தத்தால் உபாதியாலாயபேதத்தாற் சிவவடிவமாக இலங்குகின்றதோ அஃது உண்மையா கப் பூர்ணமேயாம் ; ஆண்டாகார முடையதற்குப் பூர்ணத்தன்மை கூடாமை யின் யாது பூர்ணமாமோ ஆகிருதியற்ற தாமது, பூர்ணமாகு மேலாயின் விசுவ வடிவமாயும்,ஜீவவடிவமாயும்,தோற்றுகின்றதே யாதின்பொருட்டோவெனின்? எந்தப் பிரஹ்மமானது விசுவவடிவமாகத் தோற்றியதோ அது தனது சொரூப லாபப் பிரயோஜன சித்தியின் பொருட்டு அவ்வாருக அவாவியதாம், முறையே அதிகாரிசரீரத்தைத் தனது தத்துவசாக்ஷாத்காரத்தால் அஞ்ஞானத்தால் மறை பட்ட தனது ஆன்மலாபப் பொருட்டு உலகுயிர் வடிவமாக விரிகின்றது. அங்ங னமே:—"ஒவ்வொரு ரூபந்தோறு மொன்றியேநின்ற தன்னைச் செவ்விதினுணர வேண்டி" என்னும் மறைபு மறைகின்றது. அஃதங்ஙனமாக எங்ஙன மிச் சித்தது என்னின் ? பூர்ணத்தினின்றும் பூர்ணமே யுண்டாகின்றது அது பூர்ண மாகவே யிருக்கின்றது ஆகையா லிவ்வுலகம் உண்டாகவே யில்லை, உண்டாவது போற் றோற்றுவதும் அந்தப் பிரஹ்மமேயாகும். அந்தப் பிரஹ்மத்தின் கண் ணே யுலக சத்தார்த்தப் பொருட்டகைமை திருசிய மில்லாமையால் ஏகரசமாக விருக்கின்றது, அனுபவிப்பவ னில்லாமையால் மிளகிற்கார மெங்ஙனந்தோற்றும்? பரம்பொருள் ஏகரசமாக விருத்தலினுலே சித்தம் திருசியமென்பன முதலிய நானரசத் தன்மையப்பரம்பொருளில் உண்மையி வில்லாம லிருந்தேயுண்டு போற்றோன்றுகின்றது ; பிரதிபிம்பத்திற்குப் பரமான்மப் பிராப்தியினுலே பிரதிபிம்பமா யிருக்கத் தகுதியாதல் எங்ஙனங்கூடும் ? இவ்வாருகவே உபாதியி லதாகப் பிரதிபிம்ப ஜீவபாவயோக்யதை யெங்ஙனம்? கிடையவேகிடையாதாம், ஆகவே ஜீவன்முன் எங்ஙன மிருக்கமாட்டாது என்னுஞ் சங்கையும் நீக்கப்பட் டது. ஜீவனே அணுப் பரிமாணமேனும் மத்தியமப் பரிமாணமேனும் உடைய வனுவன், புண்ணிய பாவாதிகளோடு கூடியிருத்தலின் தோஷமேவியசுத்தனு வன், தனக்கு விளங்கும் விடயங்களை யனுபவிப்பவனுவன், பிரசித்தமாகவு முளன், அவ்வஸ்துவோ அவனினும் மாருகவன்றோ விருக்கின்றது, பரம்பொரு ளானது அதி சூக்குமமாக விருக்கும் பரமாணுவைக் காட்டினும் அதி சூக்கும மாக விருக்கின்றது, அணுவிற்கணுவா யிருக்கின்றது தூயதாயிருக்கின்றது பரம மாயிருக்கின்றது சாந்தமா யிருக்கின்றது ஆகாசவுதரத்தினும் அதி சூக்கமத் தெளிவுடையதா யிருக்கின்றது, திக்குக்காலாதிகளினுலே யளவிட முடியாததா யிருக்கின்ற வுருவமுடைமையின் அதி விஸ்தாரமாக விருக்கின்றது ஆதியந்த மற்றதாக இருக்கின்றது ஒளிவடிவமாக இருக்கின்றது ஒளிர்விக்கப்படும் வத்து வற்றதாக விருக்கின்றது; யாதுவிடயத்தை விளக்குந்தன்மை யிலக்கணச் சித் திருவத் தன்மையையுங் கூடச் சகிக்கவில்லையோ அது அநுகூலப் பிரதிகூல விட யப் போக்தாத்தன்மை யிலக்கண ஜீவத்தகைமையைச் சகிக்கமாட்டா தெனச் சாற்றவும் வேண்டுமோ; யாண்டு அறிவுருவமெனவே தெரியப்பட வில்லையோ ஆண்டு ஜீவத்தன்மை யென்பது எங்ஙன் றெரியும்; இதனுனே எங்ஙனம்

புத்திதத்துவ மாகமாட்டாது எங்ஙனந்தான் மனமாக மாட்டாது என்
னுஞ் சங்கையும் நிராகரிக்கப்பட்டது; ஆராயின் ஆண்டுச் சித்தாகாரந்தா
னெங்ஙன்கூடும் அநித்தியமாயவாதனை தானெங்ஙன்கூடும். மேலும் வெளிப்படை
யாயி யம்பின், ஆண்டுச் சித்துருவ முதியாமையானே ஜீவத்தன்மையானது
இல்லவேயில்லை, புத்தித் தன்மையேனும், சித்தத் தன்மையேனும், இந்திரியத்
தன்மையேனும், வாசனையேனும் கிடையவே கிடையாது. எல்லா வினுக்கட்கும்
விடை விளம்பிய தன்பயனைக் கேட்டி! இந்தப் பிரகாரம் கூறியவாறே, ஐரையற்ற
பதமானது அண்டாதி மகாரம்பத்தையாக்கிய போதினும் பூர்ணமாயிருப்பினும்
எம்மனோரது திருஷ்டியானே சாந்தமாயும், ஆகாயத்தினும் கோடி மடங்கு
சூக்குமமாயுமிருக்கும். இவ்வண்ணஞ் சமாதானிக்கப்பட்ட இராகவர் ஒருமைப்
பட்ட மனதில் எவ் வடிவத்தானே அஃதபரோக்ஷமாயநுபவித்தல் கூடுமோ அவ்
வசாதாரண ரூபத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்னும் அவாவுடைய
ஸ்ரீ இராகவர் மீண்டும் வினுதல்:—அநந்தமாயும் அறிவாகாரமாயும் பரமார்த்த
மாயுமிருக்கும் அதனது ரூபமியாதாம் என்பதை மீண்டும் அடியேனுக்கு நல்
லுணர்வு வளர்தற்பொருட்டு மிகத் தெளிவாகத் திருவாய்மலர்ந்தருளவேண்டும்.
ஹே! குழந்தாய் மகாப் பிரளயம் வரும்போது சருவகாரண காரணமும் பர
மும் ஆகிய பிரஹ்மமே சேடித்திலங்கும், அஃதபரோக்ஷமாமாறு கூறக்கேட்பா
யாக:—சமாதியின்கண்ணே தடைப்படுத்தலால் விருத்திகள் ஒடுங்கிய வழி
விறகிலாத கனல்போல மனத்தினது சொரூபத்தையுங் கெடுத்துவிடின் இன்ன
படியென வியம்பவொண்ணாத தாயஸ்வப் பிரகாச சத்து ரூபம் யாது எஞ்சா
நிற்குமோ அது அந்தப் பரமான்மாவினது வடிவமாம். இவ்வண்ணம் நிருவி
கற்பசமாதி யாரம்பத்தில் திருசிய வுலகமில்லை திருசிய மின்மையின் காண்போ
னுகிய பிரமாதாவும் விலீனமானதே போற்றோற்றும் என்னும் திரிபுடிலய விள
க்கமாகிய சாக்ஷி சொரூபமே அந்தப் பரமான்மாவின் வடிவமாம். இவ்வண்ணஞ்
சமாதியினின்றும் எழுமுன் வருஞ்சிவ இயற்கையதாய அறிவினுக்குத் திருசியத்
தைப் பாராத எவ்வடிவமுண்டோ அந்தச் சின்மாத்திர விமல சாந்தவடிவமே
அந்தப் பரமாத்மாவின் வடிவமாம். சமாதி மத்திய காலத்திலும் இலங்கா
நின்றது பரமான்ம வடிவமேயாமெனினும் அஃததி சூக்குமமாயிருத்தலினுனே
ஆரூட பதவியை யேறவிழைந்து பயின்று கொண்டிருப்பவர்கட்கு அக்கால் அறி
ந்து கொள்ளுதல் முடியாதாமென முதலினும் கடையினும் காண்பிக்கப்பட்
டது. இப்போது ஆரூட அனுபவித்த சமாதிமத்தியிலிலங்கும் வடிவத்தானும்
அதனைக் காட்டுவாம்:—பிரஹ்மாகார அவச்சின்ன அபரோக்ஷ விருத்தி யுடை
மையானே சித்தமான திருக்கும்போதும் பானீர்போலப் பிரஹ்மத்தின் கண்
ணே ஏகரசமயமாக மறைபட்டிருத்தலின் சித்தத்தை யநாதரவுசெய்து காற்று
முதலியவை மேனியிற் படினும் அந்தப் பரிசாதி யனுபவமின்றி யிலங்கு மெவ்
வடிவமுண்டோ அதுவே பரமான்மாவினுடைய வடிவமாம். இப்போது யோகப்
பயில்விலாருக்கும் எவ்வாறு அனுபவிக்க முடியுமோ அவ்வாறு கூறுவாம் கனுக்
காணுமலும் கொதுகுமுட்டை முதலனதுயருறுத்திக் கெடுக்காமலும் மனமினைப்
பாறுதற் கேதுவாயு மிருக்கின்ற சுழுப்தியே சித்தத்தின் ஜாட்டியமில்லாமல்

நீள் காலங்கிடைக்கப் பெறின் ஆங்கிலங்கு முருவமே பிரளயத்திலும் எஞ்சா நிற்கும். ஆகாயத்தின் இரகசிய வடிவ சூனியத்தன்மை, காற்றின் இரகசிய வடிவ உள்ளும் வெளியும் நிறைந்திருக்குந்தன்மை, சிலையின் கனத்தன்மை, திருசியத்தினும் வேறாகித் திருசியமற்றதாகிச் சிதாகாசமாயிருக்கும் பொருளிருப்பின் யாதொரு ரூபமாமோ அவ்வுருவம் பரமாத்மாவிற்காம். அதிகமாகக் கூறுவதாலாகுங்காரியமென், எல்லாப் பிராணிகளுக்கும் திருசியத்தையும் சித்தத்தையும் பரித்தியாகஞ் செய்தபோது எந்தஸ்திதியானது எஞ்சா நிற்குமோ அதுவே அதனதுருவமாகுமென்றுணர்தி, திருசியமற்று மனமற்றுயிர்கட்கியற்கையாயுளதா யாதொரு நிலையுண்டோ, பரமசாந்த சத்தையா மதுவே அம்முதன்மையான வஸ்துவின் வடிவமா மென்றுணர்தி. திருஷ்டாக்களின் கோடியில் அன்னமயம்வரை ஆன்மாவாக விரிந்த சிற்பிரகாசமான யாது ஒவ்வொரு கோச விவேகத்தால் ஆராய்ந்து பார்க்குங்கால் ஆனந்தமய கோசத்திற்கும் உள்ளே யிருத்தலின் மத்யமாமோ, திருசிய கோடியின்கண்ணே மூர்த்தப் பிரபஞ்ச சாரபூத ஆதித்திய வடிவப் பிரகாசத்திற்கும்,அமூர்த்தப் பிரபஞ்சசார பூதமாய ஆகாயத்திற்கும், லிங்க சமஷ்டி யான்மாவாகிய அவ்வியாகிருத ஆகாசத்திற்கும் உள்ளாயிருத்தலினானே யாதொன்று மத்யமமாயிருக்கின்றதோ, விழி முதலியவற்றின் சம்பந்தமான விருத்திகட்கும் உள்ளே விளக்கரூபமா யிருத்தலின் யாதொன்று மத்யமாயிருக்கின்றதோ; இம்முறையே ஆநந்தசத்துச் சித்து ரூபம் யாதொன்று பிரசித்தமாமோ அதுவே பிரஹ்மத்தினுடைய ரூபமாம். ஆகவே தைத்திரியவுபநிடதத்தின்கண்ணே அன்னமயாதி கோசங்கட்குள்ளாக ஆநந்தமய கோசத்தைக் காண்பித்து அதற்குப் பிரியமே சிரம், மோதம் தக்ஷிணபக்ஷம், பிரமோதம் உத்தரபக்ஷம், ஆனந்தம் ஆத்மா, பிரஹ்மபுச்சம் பிரதிஷ்டையென அதற்குமுள்ளாகப் பிரஹ்மம் காட்டப்பட்டது. பிருஹதாரண்யகத்தின் கண்ணும் "பிரஹ்மத்திற் கிரண்டு பெருவடிவங்களுண், டுருவமா மூர்த்தமுமுயரமூர்த்தமுமே" எனத்தொடங்கி "அவ்விம்மூர்த்தத்தினிதுரசமாகும், எவ்வி துதபிக்கு மெழிலிது ரசமாம்? அவ்விவ்வ மூர்த்தத்தினறையெவ் விதுதான், செவ்விம்மண்டலஞ் செறிதருபுருடனே" என அவ்வுபய சாரத்தையுங் காண்பித்து "ஆதலினினியா தேச நேதிநேதியாம்" என மூர்த்த அமூர்த்த ஆரோப அதிஷ்டானமாகிய அவற்றினுமுள்ளான பிரஹ்மம் அவற்றின் நிடேதவாயிலாகக் காண்பிக்கப்பட்டது "விருத்திகடோறும் விளங்கிடு மான்மா" எனக் கேனோப நிடதத்தின்கண்ணே யெல்லாப்புத்தி விருத்தியினுள்ளிருப்பது எனக் கூறப்பட்டுளது. ஆகையாலவ்வுருவம் பிரஹ்மத்திற்காமென்றறைவர். புத்தி விருத்திக்கும் பொருள் விளக்கத்திற்கும் விடயத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் சாக்ஷி வடிவமாயிரா நின்ற எவ்வேதன முளதோ அவற்றிற்கு ஆதியந்த முண்மையினானே எதற்கு ஆதியந்தங்கிடையாதோ அது பரமான்மாவினுடைய ரூபமாம். உலகமானது நித்தியமுண்டாகாமலிருந்தபோதினும் எதனினின்றும் உண்டாவதே போலவும், வேறாகாதபோதினும் வேறாக இருப்பதுபோலவும் ஆமோ அதுவே பரமான்மாவினுடைய ரூபமாம். மாயிக விவகாரத்தைச் செய்து கொண்டிருந்தபோதினும் ஞானிக்கேனும் ஈசுரருக்கேனும் யாதொரு கற்

போன்ற அசல நிலைபெறுமோ, சித்திரமற்றதாயே யிருந்தும் உலகங்கட்கெல்லா மிடங்கொடுத்துண்மையின் ஆகாசத்தன்மையானதெதற்காமோ அவ்வடிவமே பரமான்மாவின் வடிவமாம். வேத்திய முதலிய திரிபுடிஜன்மாதி நிமித்தமான எச்சச்சித்து ஆன்மவடிவமுளதோ அதுவே அவ்வடிவமாம்; வேத்தியம், வேதனம், வேத்துருத்தகைமை, என்னுமிம் மூன்று ரூபமும் எவ்வத்து வினின்று முண்டாகி யெதன்கண்ணே யொடுங்கின்றனவோ பரமதுர் லபமாய அதுவே பரமான்மாவின் வடிவமாம். இதற்கு நிமித்தமாயிருத்தலும் பரிணாமத்தாலன்றும்; மற்றுவிவர்த்தத்தானேயாம், வேத்தியவேதனவேத்துருத்தகைமைகள் யாண்டுப் பிரதிபிம்பிக்கின்றனவோ அதுவே பரமான்மவடிவமாம், அந்தப் பரமான்மாவாகிய பெருங் கண்ணுடியின் கண்ணே சிருஷ்டியாதியில் அவிவேகத்தாற்றிரிபுடிகளெல்லாம் பிரதிபிம்பிக்கின்றனவாம். கனுக்களாலும் பொறிகளோடு கூடிய நனுக்களாலும் விடுபட்டுள்ள மனதானது எத்துயிலான்ம வடிவத்தை யெய்துறுமோ அதுவே தாவரத்திலும், ஜங்கமத்திலும் திருசியப்பிரளய காலத்திலிருக்கின்ற மகாசித்தினுடையவடிவமாம். ஸ்தாவரங்கட்கு எவ்வசை விலா வடிவமுளதோ எம்மனேபுத்தியாதி விடுபட்ட வடிவமுளதோ அந்த ரூபம் ஞானமயமாகவுமிருந்துவிடின் அது பரமான்மாவோடுவமிக்கப்படும். மொழிந்த பிரளயான் மதத்துவத்திதியை முடித்தல்:—இவ்வுலகில் யாவரானு மனுபவிப்பதாயிரா நின்ற பிரத்தியக் கான்மாவாகிய இந்தப் பிரஹ்மமானது எல்லா வுபாதிகளின் இலயவயத்தாற் பிரஹ்மா, சூரியன், விஷ்ணு, அரன், இந்திரன், சதாசிவன் முதலியோர் சாந்தியை யடையுங்கான் மேலுக்கு மேலாயும் மாயை விடுபட்டிருந்தலிற் சைதன்ய மாத்திர மயமாயும் விசுவ சங்கங்களையெல்லாம் விட்டொளித்ததாயும் நிருவிகற்பமாயும் ஏகமாயும் சாந்தமாயுமிருக்கும் பரமசிவ மாத்திர மிலங்கும்.

10-வது பரமபாவ வருணனம் முற்றிற்று.

---

## 11—வது பரமார்த்த வருணனம்.

இப்போது சத்ததிஷ்டானத்தினது சத்தையானது பிரளயத்தினு மகற்ற முடியாததேயாம் என்பதும், சுயமாகவே ஜகத்தினது சத்தை சிருஷ்டியிலும் விலக்கத்தக்கதேயாம் என்பதும் வருணிக்கப்படும். பிரளயத்தி லுலகசத்தை சாமானிய வடிவப்பிரஹ்ம மாத்திரமாக எஞ்சி நிற்றலின் தனித்த தன்னுடைய சத்தை யுலகுக்கில்லாவிடினும் அவ்வடிவத்தானே சத்தையாம். சிருஷ்டியிலோ பிரளய விலக்ஷணத்தன்மையிருப்பது யாவருக்குமே யனுபவசித்தமாதலின் சுதந்திரமான சத்தையும் வேறென்று கூறவேண்டும், வேண்டவே அச்சத்தையோடு கூடிய ஜகத்தானது பிரஹ்மத்தினின்றும் நீங்கி யன்னிய இடத்திலிருப்பதாகவே சம்பவிக்கும், "இருப்பதற் கின்மையின்றெனவுணர்க" எனத் தங்களாலேயே சத்திற்கு அசத்துத்தன்மை நீக்கப்பட்டிருத்தலின், ஆகவே யாண்டிருக்குமோ ஜகத்திற்குப் பராயணமாய் அதுவே யுபதேசிக்கத்தக்கதாம் என்றெண்ணி, ஸ்ரீ இராகவர் கூறல்:—இவ்வண்ணம் பதினான்கு புவனசுரநர அசுரதிரியக்கு முத

லிய அநந்தவிஸ்தார ரூபமுடையதும், இந்தப்பிரகாரம் அதிஸ்புடமாயிரா நின்ற திருசியவர்க்கங்களோடுற்றதுமாகிய பிரத்தியக்ஷாதிகளாற்றிடமான ஜகத்தானது மகாப்பிரளயம் வந்துற்றகாலையில் இல்லையெனத்திருவாய் மலர்ந்தருளினீர்களே அக்கால் அது எங்கேயிருக்கும் என்பதை யியம்பியருளவேண்டும். எல்லாப் பொருள் கட்கும் உற்பத்தி காலத்தில் தனிச்சத்தையால் எங்கிருந்தேனும் வருகையாமேலாயின் அவற்றிற்குப் பிரளயத்தின்கண்ணும் பிறவிடத்தே செயல்கையும் ஆண்டிருத்தலும் கூடும்; அதுவே ஆண்டு வந்தியா சுதனுக்கேபோலும் அவற்றிற் கின்று மென்னும் கருத்தால் ஸ்ரீ வசிஷ்டபகவானருளல்:—மலடிமைந்தன் எங்கிருந்து வருகின்றனன்? எத்தகையன்? எங்கே செல்லுகின்றனன்? ஆகாயக்காடானது எங்கிருந்து வருகின்றது ? எங்கே செல்கின்றது ? கூறுவாயாக! இதன்கண்ணே, திருஷ்டாந்ததார்ஷ்டாந்தங்கள் விஷமங்கள்போற்காணப்படுகின்றன. ஏனெனின், வந்திமைந்தனும் ககனவனமும் இருப்பனவே யன்று இனி வரவுமாட்டா, அவற்றிற்குத் திருசியத் தன்மையெத் தகைத்தாம் அவற்றிற்கு நாசத்தகைமை யெத்தகைத்தாம்; அக்காலத்திய தனதுசத்தை வருங்காலத்திய சத்தை பிரத்தியக்ஷ விடயமாந் தன்மையவற்றிற் கின்றுமெனவிடமமாம். பிரதியோகியின் இருப்பு அப்பிரசித்தமாகவே இன்மையும் அவற்றிற்குக் கூறமுடியாததே யாகுமன்றே. இங்ஙனமாமேலாயின் தன் சத்தையால் இல்லையாம், இராதாம், திருசியமுமன்றும் என அதற்கு அதனைப் பேயாகு மென்றுணர்தி, மலடிமைந்தன்விண் வனங்கள் எங்ஙன மொருகாலுமின்றுமோ ஜகதாதியகிலதிருசியமும் ஒருகாலும் அங்ஙனமில்லவேயில்லையாம். சத்தையிலதாகவே ஜகத்திற்குற்பத்தியாதிகளும் சித்திக்க மாட்டாவாம். உலக முண்டாவதுமில்லை யொழிவதுமில்லை, யாது முதலிலேயே யிலதாமோ அதற்குற்பத்தி யெத்தகைத்தாம்? நாசமெனக்கூறல்தான் எக்கதையாம். பிரத்தியக்ஷாதி சித்தஉற்பத்தியாதிகளையுடைய ஜகத்திற்கு வந்தியாமைந்தர்கள் எங்ஙனமுபமானமாகும் ? அத்தியந்த அசத்தானது எங்கேனு முபமானமாவதுண்டா ? ஆகலின், எஞ்சியதாக விகற்பரூபவவ்வுணர்வே யுபமான மாகலாம். ஜன்மநாசாதியுடைமையானே அதற்கு ஜகத்சாதர்மியஞ்சம்பவித்தலின் என்றுரைக்கலாமே ; மலடிமகன் ஆகாயதருக்கற்பனை ஆண்டுளதோயாகும்; அது நாசஜன்மங்களை யுடைத்தாயிருப்பதே போல இதுவுமேன் ஆகமாட்டாது ? அது உபமேயமாய ஜகத்திலடங்காமற் போமாயின் அஃதுபமானமாகுக, அதிலடங்கியவழியதற்குபமானத்தன்மை சம்பவியாதாம் எனப் பரமார்த்த சத்தல்லாத ஜகத்திற்கு யாங்கூறிய திருஷ்டாந்தமே சம்பவிக்கும்; உவமிக்க இச்சித்த திருசியம் உவமேயத்தினும்வேறாய உபமானங்கிடையாமையானே உவமிக்க முடியாததாகும், அத்தகையதற்கு உபமேயகோடியுட்புகுந்த பாவகங்களால் யாதொரு உவமைவசனமுளதோ அது பொருத்தமில்லா அலங்கார உதாகரண வடிவக்கூற்றையே மருவும் "ககனமோககனுகாரங் கடல் கடறன்னையொக்கும்" என்னுங் கூற்றுனதுஅனுபவமாகவே முடிவதேபோலவாம். ஆகவே விகற்பகற்பனைத் திருட்டாந்தம்கூடாதாம்; ஆகலின், உலகத் தனிச்சத்தை யாங்கூறிய வந்தியாமைந்தர் சத்தையைப் போன்றதேயாகும்; அசத்திற்கு நற்றிருட்டாந்தத்தன்மையைக் காண்பியாவிடினும் அசத்திருட்டாந்

தத் தன்மை விரோதியாதாம், வந்தியா புத்திரனைப் போலும் ஆகாயதாமரைய சத்தாமெனல் காணுதலின். பிரத்தியக்ஷமாகத்தோற்றுவதற்கு எங்ஙனம் அசத் வங்கூடுமெனின்? அத்தகையதற்கும் நற்றரிசனமாங்கால் வாததிருஷ்டியினுல் அசத்துத்தன்மை அநேகந்திருஷ்டாந்தங்களிற் பிரசித்தமாமெனவுணர்க; பொன் னுலாயகடகத்தில் வெளியாகக் காணப்பட்ட இக்கடகத்தன்மையானது இல்லவே யில்லாததே போலப் பரமாத்மாவினிடத்தில் உலகத்தகைமையுங் கிடையாதாம். ஆகாயத்தின் கண்ணே சூனியத்தன்மையில்லாததேபோலப் பேதத்தோடு கூடிய தாகப் பிரஹ்மத்தின் கண்ணே ஜகத்தானது காணப்பட்ட போதினும் இல்லாத தேயாகும். மையினின்றும் கறுப்பானது வேறுகாததே போலும், பனியினின் றும் தண்மை வேறுகாததேபோலும், தனித்துலகங்காணப்பட்ட போதினும் பர பதத்திலொரு சிறிதுங்கிடையவேகிடையாதாம். நிலவினும், பனியினும் தண்மை வேறுக இல்லாததேபோலும் பிரஹ்மத்தினும் சிருஷ்டிவேறுகக் கிடையவேகிடை யாதாம். ஈண்டுக்கானலாற்றில் நீரில்லாததேபோலும்,இரண்டாவது, சந்திரனிட த்தே சந்திரத் தன்மையில்லாததேபோலும், நிருமலமாகிய ஆன்மாவின்கண்ணே அநுபவிக்கப்பட்டபோதினும் உலகம் கிடையவேகிடையாதாம். காரணமின்மை யினுனே ஆதியிலேயே யாதொன்றில்லேயோ அதுதானுகவே நிகழ்காலத்திலுமில் லாததேயாகும். எனின் அதற்கழிவுண்டாமென்பது என்ன கதையாம். காரணங் கூடாமையெங்ஙனமாமெனின்? பிருதிவியாதி ஜடவஸ்துக்கட்கோ ஜடமேகாரண மாகத் தக்கதாம் பூதஜாட்டியம் பொருந்தாத அந்தப் பிரஹ்மம் எங்ஙனங்கார ணமாகும், இதனை நிழற்குத் தினகரன் எனவுங் கண்டோம், எங்குமே தனஜ் விருத்த பரிணமங்காணப் பெறுமையின். பரிணம திருஷ்டியினுனே காரண மாகாமையின் இக்காரிய மியாதொன்றுமே யுதயமாக வில்லையாம்; விவர்த் ததிருஷ்டியினுனேவிருத்த ஆரோபமுஞ்சம்பவிக்குமென்றுலும் அக்காரணமே இங்ஙன மூலக வடிவமாகவுளதாம். தனியாகக் காரியத்திற்குச் சத்தை கிடையா தாம். அஞ்ஞானமேயாயிற் பரிணமகாரணமாகவுளதாம். ஆகவே காரண மின் றென்பதெங்ஙனமெனின்? அஞ்ஞானமே யுலகாகாரமாகப் பரிணமித்திலங்கு மாயின் அதுணர்வை யுலகவடிவமாகத் தோற்றிவைக்குமென்பதாகவேயாம். அதாவதுணர்வையேயுலகாகாரமாகவிவர்த்திப்பிக்குமென்பதாம், ஆகவே அஞ் ஞானபரிணமத்திற்கு உணர்வின் விவர்த்தத்தன்மையோகனவில் யாவருங் கண் டதேயாம், எவ்வுலகமானது கனவிற்காணப்பெறுகின்றதோ அது உணர்வின் கசி வேயாகும். வெளிப்படையாகக் கூறுமிடத்து உணர்வின் கசிவேயுள்ளே யுலக மயலாகக் கனவிற் காண்பதே போலச் சிருஷ்டியினுதிபிற் பிரஹ்மத்தின்கண் ணே யுலகின் கசிவானது விஸ்தாரமாகத் தோற்றும்; தோற்றவே யுலகிற்குப் பிரஹ்மமாத்திரத் தன்மையாது பிரதிஞ்ஞை செய்யப்பட்டதோ அது பிரசித்தி யாயதாம். பரமார்த்த வியற்கைவாய்ந்த ஆன்மாவின்கண்ணே யாவை யிவை யற்பந் தோற்றுகின்றனவோ எல்லாம் எப்போதுமே யிருக்கும், ஒரு சிறிதுலகு மொருகாலும் உதிப்பதுங் கிடையாது ஒடுங்குவதுங் கிடையாது. நெகிழ்ச்சி நீரே போலும், சலனங் காற்றேபோலும், விளக்கம் ஒளியேபோலும், பிரஹ்மமே கனக் காண்போனது உணர்வேயுள்ளே கனப்புரமாகத் தோற்று மூவுலகுமாம்.

வதேபோலும் பரமான்மாவின்கண்ணே தன்னுத்மாவே யுலகம்போலுந் தோற்றும் உலக உணர்வானது மிகக் கனமா யிருத்தலினுனே கனவோ முழுவதும் வெளிப்படாமையால் அற்ப மாதலினுனே விடமமும் திருஷ்டா திருசிய சம்பந்தத்திற்கும் இயற்கை யிருத்தலினுனே நீக்க முடியாமையின் முக்கிய சம்பவமுமாம் என ஸ்ரீ இராகவர் சங்கித்தல்:—இத்திருசியவிடம் கூறியமுறையே கனுவனுபூதி போலும் அசத்தாமேலாயின் கற்பாந்த பரியந்த மிருப்பதாகிப் பயனேடு கூடிய விவகாரத்தைப் பயக்கத்தக்கதாகி அதிதிடமான வுணர்விற்கு விடயமாகி யெங்ஙனமுண்டாம் என்பதை ஹேபகவன் அருள் செய்தல் வேண்டும்; திருசிய மிருக்குமாயின் திருஷ்டாவும் அவசிய மிருப்பன் அகலான், திருஷ்டா விருப்பனுயின் திருசியமும் அவசியமிருக்கும், அகலாதாம், இரண்டனுள் ஒன் றிருப்பின் பந்தமாம், இரண்டனுள் ஒன்ருெழியின் முக்தியாம் அது முடியாத காரியமென்றே நினைக்கின்றேன். ஏன் முடியாதெனின்? முற்றினும் மூலங்கூட எஞ்சாமல் அசம்பவமாக அதாவது மூலஅவித்தையின் பாதத்தால் அத்தியந்தம சம்பவமாகத் திருசியத்தின் க்ஷயமானது எதுவரை யுணரப்பெற வில்லையோ அதுவரை திருஷ்டாவின் கண்ணே திருசியத்தகைமை நீக்க முடியாததேயாகும். ஆகலின் மோக்ஷ வுணர்ச்சியு முண்டாக மாட்டாதாம். அத்தியந்த அசம்பவ போத முண்டாகவேண்டாம் உண்டாயதற்கே வித்தையினுலே க்ஷயமுண்டாகுகவே யெனின்? ஆதியில் திருசிய முண்டாகியிருக்குமாயின் பின்னர் க்ஷயத்தையும் அடையாநிற்கும், ஆயின் சமஸ்கார வடிவமாக இருக்குந் திருசியமானது மீண்டு முண்டாகிக்கொண்டே யிருக்கும் அதுவே பேரநர்த்தமாம். ஆகவே பந்தமானது கெடமாட்டாதாம். திருசியப் பிரதேச நீக்கத்தானே திருசிய அசம்பவப் பொருத்தவினுவிற்குப் பரிகாரம் தங்களாலேயே முன்னுரைக்கப்பட்டதன்ருே, கண்ணுடியின்கண்ணெதிர்ப் பட்டதற்குப் பிரதிபிம்பம் அவசிய முண்டாவதே போலச் சித்தின்கண்ணும்யாவும் நினைவு மயமாயிருத்தலினுலே எல்லாவற்றின் பிரதிபிம்பமும் அவசிய முண்டாம். முதலிலேயே திருசியமுண்டாயிருக்கும் பக்ஷத்தில் திருஷ்டாவாகிய சைதன்யத்திற்குத் திருசிய சுபாவத் தன்மையி னின்றும் முக்தத் தன்மையானது சம்பவிக்கும், உற்பன்னமாகா திருக்குகை யனுபவிக்கப் படுவதின்ரும். ஆகலின், திருஷ்டாவிற்குச் சுபாவ நிர் முக்தியின்ருமன்ருே; ஆகையால் முக்தி யசம்பவத்தின் சங்கையை நீக்கி அநேகம் சக்திகளினுலே திருசியத்தின் அத்தியந்த அசம்பவமானது மனதிற்றிரமாகத் தரிக்கும் வரை ஹே பிரஹ்மவித்துக் குண்மேன்மை மிக்கவரே! அடியேனுக் கனுக்கிரகிக்க வேண்டும். கனுவைப் பார்க்கினும் விடமமா யிருத்தல் யாது சங்கிக்கப்பட்டதோ அதற்கு மேற்கூறப்படும் சிருஷ்டி ஆக்கியாயிகையினுலே சமாதானஞ் செய்யப்படும்; எல்லா வடிவமா யிராநின்ற ஜகத்தானது அசத்தாகவே யிருந்தபோதினும் சத்துப்போற் ருேற்றுகின்ற தென்பதை மண்டப உபாக்கியானுதி விஸ்தாரமான கதையினுலே யாம் கூறக் கேட்பாயாக. இச்சகம் திரவுணர்வினதா யிருந்தபோதினும் அசத்தேசத்துவடிவமாயிலங்குகின்ற தென்னும் அங்கிசத்தில் சொப்பனத்திற் கொப்பாகவே யிருக்கின்றதாம்; திர வுணர்ச்சி பெறுதலோ நீள்தொடர்பினுனேயாம். முன்னிருந்தவரின் விவகாரக்

கதைகளின் வாக்கியங்களால் அது வர்ணியாதவரை மடுவிற்றாளிகள் போலும்
நினதிருதயபத்தி லிளைப்பாறுத லுண்டாகமாட்டாது. அதனுனே யிரண்டாவது
சங்கை நீக்கமாம்; ஆகவே விசிராந்தியும், உலக விவகாரமும் சித்திக்கும், இவ்
வுலக சிருஷ்டியின் மயக்கத் திதியின் அத்தியந்த அபாவத்தை யினிதுணர்ந்து
அறிவின்கண்ணே ஏகாக்கிரத்தியான நிஷ்டாபரனுகி விவகாரஞ் செய்துகொண்
டிருப்பாய். பாவ அபாவங்கள், பயனுடைத் தாங்காற் கவரப்படுபவைகள்,
பயனுறுக்கா ற்றள்ளத்தக்கவைகள், தூலசூக்குமங்கள், அத்தகைய விடயங்களிற்
செய்கை செய்கையின்மைகள் அவற்றிற்கேற்ற விவகார திருஷ்டிகள் இராகாதி
களை யுண்டாக்கும் வாயிலாக வுன்னைப் பெரிய பர்வதத்தை அம்புகள் துன்
புறுத்தாவாறு துன்புறுத்தாவாம். அத்தகைய ஆன்மாவாயவிது ஒன்றே யுள
தாம்; இரண்டாவது, கற்பனையற்றிருக்கும் அவ்வான்மாவின் கண்ணும் எவ்வா
றுலகுண்டாயதோ அதனை நினக்கு நிகழ்த்தக் கேட்பாயாக. ஹே குழந்தாய்! இவ்
வுலகங்களெல்லாம் அவ்வான்மாவினின்றும் உண்டாயிலங்குகின்றன; தடஸ்த
ஈசுரரிடத்தி னின்றும் பேதமாகவோ வெனின்? அல்லவாம். அம்மகாத்மா
வும், சமஷ்டி வியஷ்டி ரூபமாகப் புறப்பொறிகளானே காணப்பட்ட ரூபப்
பார்வை வகைகட் கிடமாகவும், உள்ளே மனம் மனனவகை யாகாரத்திற் கிட
மாகவும் ஆகித்தானுகவே யுண்டாகின்றது, ஒடுங்குகின்றது; உதய இலயத்
தன்மையதாக மயக்கத்தானே தோற்றும்.

11-வது பரமார்த்தவருணனம் முற்றிற்று.

---

## 12-வது உலகுற்பத்தி வருணனம்.

இப்போது, எல்லாப் பொருள்கட்கும் அபவாத முறைபற்றி அத்தியந்த
அசம்பவங் கூறும்பொருட்டு அதற்கொத்ததாய சிருஷ்டி யத்தியா ரோப
முறைபற்றி விரிக்கப்படும் பிரதிஞ்ஞை செய்த பொருளைக் கூறத்தொடங்கிய
ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்:—பரமமாயும், சாந்தமாயும், பரமபதமாயும், பரம
பவித்திரமாயு மிருக்கும் இப்பரமான்மாவி னின்றும் எங்ஙனம் இவ்விசுவமுள
தாயதோ அதனைக்கூற ஏகாக்கிர வுத்தமமான புத்தியோடுங் கேட்பாயாக. ஒவ்
வொரு புருடன்றேறும் துயிலான்ம ரூபமே கனுப்போல விவர்த்தமாம்; அது
போலவே பிரஹ்மமும் காண்பதற்குத் தக்கபடியாய கற்பனைசெய்யும், ஆகை
யாற் பிரஹ்மமே சிருஷ்டிவடிவமாம், ஆண்டு ஏகபுருடவாசனை மாத்திரகாரியத்
தன்மையோடுலவலிற் கனுத்திடவுணர்வின்விடய மாகாதாம். சர்வவாசனைகளின்
தன்மையோ டுலவலிற் பிரபஞ்சம் திடவுணர் வின்விடயமாம் எனப்பூர்வ
காரியத்தன்மையே பரிகாரமாகலாமே, "உண்டாவதற்கு முன்னிது ஏக ஆன்மாவாகவே
சங்கையின் பரிகாரமாகலாமே, "உண்டாவதற்கு முன்னிது ஏக ஆன்மாவாகவே
யிருந்தது" என்னுஞ்சுருதியில் சருவத்தைச் சாற்றும் இதம்பதசாமானுதி கரண்
யத்தானே சர்வான்மகத் தன்மை வாய்ந்ததும், சருவ சுழுப்த சமஷ்டிப் பிரள
யாவஸ்தையதும், ஆகிய பிரஹ்மமா மதின்பால் ஆண்டுண்டாங் கிரமத்தைக்
கேட்பாயாக! அவ்வநந்தப் பிரகாசாத்மரூப அநந்த சின்மணியினது சத்தா
மாத்திரவடிவ பரமார்த்தரூபத்தை விசுவம் எக்காரணத்தால் அனவரதம் இயற்

கையதாக வுடைத்தா யிருப்பதாமோ அக்காரணத்தால் திருசியத் தகைமையை யடைந்தது போலவாம். அதற்கு முதலில் "ஏலவேயெல்லா மாவேமென்று கொண்டிசைந்து பார்த்தான்" என்னுஞ் சுருதி சித்தமாய ஈக்ஷணபாவத்தைக் காண்பிப்பாம், அகங்கார அத்தியாச மில்லாமல் ஆகாயத்தினும் அணுவாயும் தூய்தாயு மிருக்கு மெவ்வுணர்வுளதோ அது யாவற்றையும் சிருஷ்டிக்கும் விடயத்தில் வரும்பெயர் வடிவ அநுசந்தானத்தாற் சிறிது ஊகித்த ரூபங்களோடு கூடியதாய்த் தன்னிடத்திற்றானே சிறிது திருசியத் தகைமையை யடைந்தது போலவாம். அதனது ஈக்ஷணவிருத்தி அதன் விடய வுபாதிகளால் ஈசுரஜீவபாவ வருகையையுங் கேட்டி! அதன்பின் அப்பரமசத்தையானது ஈக்ஷணாத்மக விருத்தியோடு கூடியதனால் வெளியாம்; சைதன்யப் பிரதானமாய்ச் சர்வஞ்ஞ ஈசுர நாமயோக்கியமாகும், வாக்கின் பிரவிருத்திவிடய தருமமுடைமையானே சிறிது வாக்கு விவகாரமடைந்தது மாகும். நீட்சியாய தொடர்பினாலே அதிதிடமாகிய ஈக்ஷணஞானத்தை யுடையதாய், அதன் விடயமான சூக்ஷுமப் பிரபஞ்சாத்ம பாவ இலக்கண பரிச்சேத கற்பனையைக் கவர்ந்ததாய், அதனானே அபரிச்சின்ன பூமாத்ம பாவமாம் பரமபதத்தை மறந்ததாய்த் தியாகிக்கும்; அக்கால் வரும் பிராணதாரணை யுபாதியையுடையஜீவஹிரண்ய கர்ப்பாதிநாமமுடையதாயாகும்; அவ்வாறாயினும் பிரஹ்ம சத்தைக்குச் சொரூப நாசமுண்டாகாதாம்; அக்கால் பிரஹ்மசத்தையே பாவனாமாத்திர சாரமாய்ச் சம்சார முன்னிலைப்படும், விகாராதிக் கிரியாசார மாகாதாம். அஃதெங்ஙன மெனின்? வஸ்துவின் இயற்கையினானே என்றுணர்தி, ஆயினெங்ஙனஞ் சிவபாவமெனின்? அவ்விச்சத்தையையே யனுசரித்துப் பழுதையின்கண்ணே பாம்புபோலச் சிவபாவமா யெழுமென்றுணர்தி. இப்போது மகாபூத சிருஷ்டியை யுரையாடு முன்னாகாச சிருஷ்டியைக் கேட்டி! இச்சிவசத்தையின் பின்னரே ஆகாசசத்தை இதரபூதங்கட் கவகாசத்தைக் கொடுத்தலின் சூனியத்தன்மையை மிகவு முடையதா யுண்டாம். சூரியாதி சிருஷ்டியின் பின்புண்டாகா நின்ற ஆகாசாதி நாமங்கட்கு எங்கும் பிரகாசத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும் பொருடருவதாம், சத்தாதி குணபீஜமாம். ஆண்டு முன்மொழிந்த ஜீவனுக்கு அகந்தை யபிமானமும், அக்காலந்தொடங்கி இருபரார்த்தமென அளவிட்ட வாணாளின்றுணிபும் ஆம், அகந்தையுதித்த பின்பே அதனோடும் காலசத்தையால் ஆபுணிச் சயமுமாம். வரும்பெயர்ப் பொருளால் முக்கியவுலகதிதியின் விரையுமாம். இவ்வாகாச வகங்கார காலசிருஷ்டி ஹிரண்ய கருப்பரிடத்தினின்றே யுண்டாவதின்றாம். மற்றோ அவ்வேடவுபகித பரமாத்ம சத்தையி னின்றேயாம், அதுவே சர்வகாரணமாதலின். அந்தப் பராசக்தியாகிய பரசத்தையி னின்றும் தன்னுணர்வு மாத்திரமாய் விகாரப்படுத்தாமலே இவ்வசத்துருவக் கூட்டமியாவும் உண்மைபோ லுதித்தொளிரா நிற்கும் விண்ணகங்காரத்தால் விண்போன்ற வடிவுற்ற ஆன்மவுணர்வானது விண்ணாகிய காரியத்தைக் கோசரிக்குஞ் சங்கற்ப விருக்ஷத்தின் விரையாம்; இதனானே அவ்வகங்காரத்தின் ஏகதேசம்போலப் பரிச்சின்ன அசைவு சக்திப்பிரதானமாக வாயுவானது கிளம்பும்; அவ்விண்ணகந்தையுபகித, பரமசத்தையினின்றே சர்வ சத்தங்கட்கும் பீஜபூதமாயசத்த தன்மாத்திரை யான்மத்தன்மைப் பாவனை

யால் அதனுற்பத்தியாம். அகந்தையோடு கூடிய சித்துவியோமசத்ததன்மாத்திரப்பாவனையால் அதிசூக்குமமாய ஆகாசபாவத்தினின்றும் சிறிதுகனத்தையடைந்து மெதுவாக சத்ததன் மாத்திரையாம்; சாங்கியதரிசன புராணாதிகளில் தன்மாத்திரையினின்றும் பூதவுற்பத்தி பிரசித்தமாயிருந்த போதினும் "ஆன்மாவினின்றும் ஆகாயமுண்டாயது அது தேயுவை யாக்கியது" என்பதாதி சுருதிகளில் விண் முதலியவற்றிற்குச் சாக்ஷாத் பிரஹ்ம உபாதானத்தன்மை கேட்கப்படுதலின், "நந்துபியடிப்போன்" என்பதாதியிற்சத்த சாமானியத்திற்கு அதனினின்றும் விசேஷ உபாதானத்தன்மை கேட்கப் படுதலினுனும் ஆகாயத்தினின்றே சத்த சாமானியவடிவ தன்மாத்திரை யுற்பத்தி கூறப்பட்டதெனத் தோடமாகாதாம். சத்ததன்மாத்திரத்திற்கு வேதாதி சர்வசத்தவிசேஷ வுபாதானத் தன்மையிருத்தலினாலே வரும் நாமார்த்த ரூபத்தையுடைய அது சத்தக்கூட்டத்தருவிற்கு விரையாம், அதனினின்றும் பதவாக்கியப் பிரமாணப் பெரியவேதக்கூட்டம் விளங்கப் பெறுவனவாகும். அந்த வேத வடிவமாய பரமான்மாவினின்றும் எல்லாவுலக இலக்ஷ்மியும் உண்டாயது, அவ்விலக்குமி சத்தக் கூட்டங்களான் நிர்மிக்கப்பட்ட பொருட் கூட்டப் பரிணாமங்களால் விரிவுற்றதாம், "அவர் பூவென விவகரித்துப் பூமியைச்சிருஷ்டித்தனர்" "ஏதேயெனப்பிரஜாபதி தேவர்களைச் சிருஷ்டித்தார்" அசிருக்ரமென மனுடர்களையும் இந்துக்களெனப் பிதுர்க்களையும் சிருஷ்டித்தார் வருஞ்சிவாதி நாமமுடையதாயெனயாது முன்னோதப்பெற்றதோ அது, வாயுவுண்டாக அதற்கே பிராணத்தன்மையுண்மையின் அதனைத் தரிக்கும் நிமித்தத்தாற் சித்தித்துவிடும், இங்ஙனமியம்பியவகையே வாயுவீரிய பரிவாரமுடைய சித்தானது ஜீவசத்தத்தாற் கூறப்படும், அதுவே சருவமூர்த்தியாகாரஹேதுவாம் வருஞ்சத்தார்த்த ஜாலத்தால் மூர்த்தியாகார விருக்ஷத்திற்குப் பீஜமாம். அதற்கு வியஷ்டிப்பிராணபாவத்தால் அத்தியாத்மிகசர்வக்கிரியைகளின் ஏதுத் தன்மையியம்பலாம், பதினான்கு புவனபேதத்தால் பதினான்கு விதமான பிராணிக்கூட்டம் ஆம், அதன் பின்னுரைத்த பிராண வாயுவின் நிமித்தத்தினாலே தன்னால் வியாபிக்கப்பட்ட உட்பங்குகள் வாய்ந்த பிரஹ்மாண்ட வுதரங்களாகிய குழிக்கூட்டங்கள் விஸ்தாரமாயுண்டாம். அந்த வாயுத்தன்மையபிமான உபகிருதைதன்யத்திற்கே சர்வபரிச விசேஷ வுபாதான பரிச தன்மாத்திர பாவமும், வருதல் போகுதல் ஆதி நாற்பத்தொன்பது வாயுஸ்கந்தவிபாகத்தால் சர்வ பதார்த்தக்கிரியை யசைவு நிமித்தத்தன்மையும் கூறப்பெறும், முன்னர்க்கிட்டப் பெறுத நாமாகார முடையதேனும் வாயுபாவ அபிமான வேகத்தால் விளங்குந் தேகமுடையதாம், அதுவே கணத்தில் பாவனையால் பரிசதன் மாத்திரமாம் காற்றின் ஸ்கந்த விஸ்தாரம் பரிசக்கூட்ட விருக்ஷத்திற்குப் பீஜமாம், அதனினின்றும் சர்வ பூதக்கிரியை யசைவானவை விஸ்தரிக்கின்றன. அதனினின்றும் தேயுவுண்டாம். ஆண்டே பிரகாச வடிவத் தன்மைப் பாவனையால் பிரகாசம் அனுபவத்தாற்பளிக்கும் அதனினின்றும் வரும் பெயர்ப் பொருள்வடிவினதாய உருவதன்மாத்திரையானதுண்டாம். அத்தேயுசூரிய அக்கினிமின்னன் மதியுடு முதலியவை ஒளித்தருவிற்குப் பீஜமாம், அதனினின்றும் ரூபவேற்றுமையாலுலகம் விஸ்தாரமாம். அதனினின்றும் நீருண்டாம், அத்தேயு

பூத ஆத்மாவானது நீரின் இரதஸ்கந்தம் போல யானிருக்கின்றேனெனப் பரிச் சின்னமான அச்சரீரத் தகைமையையே யெண்ணி அத்தகைமையையடையாநிற் கும், அந்நீர்வடிவமூர்த்தத் திரவியத்தை நாவாற் சுவைத்தால் மதுரமிது வென வாஞ்சுவையின் விசேஷ உபாதான சாமானிய ரூபத்தன்மையுண்மையின் இரத தன்மாத்திரமெனக் கூறப்படும். வரும் வாரிவிலாசாத்மாவாய அது இரததரு விற்கு விரையாம், அதே இரதத்தை இந்திரிய விடயபாவத்தானே அன்னி யோன்னியமாகச் சுவைத்த வழி யவ்விடய இராகாதி யுற்பவத்தான் மீண்டு மீண்டு விடய சம்பாதனப் பிரவிருத்தியாத்மாச்ச முசாரம் விரிந்து கொண்டே போம். அதனினின்றும் பிருதிவியின் சிருஷ்டியாம், இந்நீர்த்தன்மையையடை ந்த பரமாத்மா பிருதிவியேயான்எனச் சங்கற்பவடிவமாகியதாய் வரும் அவ்வுரு வச்சங்கற்பப் பெயரியதாயாகி மணச்சங்கற்பாத்மகுணங்களாற்றனது மணத் தன்மாத்திரையைப்பார்க்கும். அதனதுபயோகமியாதெனின் ? பிரஹ்மாண்ட கோளகத்தன்மையினுனேனும் சோதிடப் பிரசித்த பூகோளகத்தன்மையினுனே னும் மனுடாதியாகார விருக்ஷத்திற்குப் பீஜமாம், சர்வாதாரவடிவமாயிரா நின்ற அதனினின்றுஞ் சமுசாரம் விஸ்தாரமாம். இவ்வண்ண முண்டாகிய பூதங்களின் சேர்க்கையினுலே பிரஹ்மாண்டாகார பரிணுமமுண்டாம், முன் மொழிந்த பூத அகம்பாவமடைந்த வுணர்வினுனே பிரஹ்மாண்டாகாரமாக மிகவும் பாவிக்கப் பட்டன வாகிய தன்மாத்திரைகள் பரஸ்பரம் கலந்து பதின் மடங்குத்தாரத்தம் மாவரணத்துட் சுயமாகவே நீரின்கண் மொக்குள் எழுவன போலப் பிரஹ் மாண்ட வடிவமாகப் பரிணமிக்கின்றன. எவ்வளவு காலம் அவற்றிற்குச் சேர்க் கையான இருப்பெனின் ? இந்தப் பூதங்கள் மீண்டும் சர்வநாச பரியந்தமுமே பிரியாதபடி சுத்தமாகத் தோற்றுமாறு கலக்கப்பட்டனவாம். பிரஹ்மசத்தை யான் முற்சத்தையே தூல வடிவமாயாவிற்பாவமாம் என்னும் விடயத்தே திருஷ் டாந்தங் கூறக்கேட்டி! ஒரு சிறிய ஆலவிரையினுள் அநேக ஆலவிருக்ஷங்கள் உள வாதலே போலும் அவ்வியாகிருத ஆகாசத்தின் கண்ணே அறிவுமாத்திர வடி வினவாக யாவுமமராநிற்கும். சூக்குமதமத் தன்மையுண்மையின் அவகாச மின் றிய தன்மாத்திரைகளில் தூலநிலை பேறுனது முரண்பாடடையுமே யெனின்? உதயமானது காணப்படுகின்றது நூற்றுக் கணக்கான சாகைகளாக வொளிரும் பரமாணுவினுள்ளும் தோற்று நிற்கும் கணகாலங் கற்பம் போலுமாம், ஆண் டுண்மையான நிலைபேறுனது இல்லையாகும்; மற்றூ மாயையாலாம் உதயாதி தரிசன மாத்திரமேயாகும், அதுவும் பரமாணுவினுள்ளும் சம்பவிக்கும், கன வின் கண்ணே அதிசூக்குமமான நாடித் துவாரங்களினும் அதிவிசாலமான வுலகங்களைக் காணுதலின். அவற்றிற்குத் தூலபாவ மிருந்தபோதினும் சொரூப சூக்குமத் தன்மையின் அபாயம் இன்றாகும், என்னை, விவர்த்தமானது விகாரத் தைச் செய்யமாட்டாதன்றே, கேவலம் நிர்விகார அறிவுருவமாகவ்வ யிருந்த போதினும் விவர்த்தமாகவே தோற்றுநிற்கும், அவிகார அறிவானது ஹேது வாகக் கூடியிருத்தலின் யாவுமே சிற்சம்பந்திகளாகி யதனுனே தடைப்படாதன வாகிக் கணத்திற் பிண்டப்படுகின்றன, பரிணும பக்கத்திலோ பூசினிக்காயின் விருத்தியைப்போலத் தடைப்பட்டாம்; மொழிந்த பொருளை நினைந்து முடித்

தல் :—அச்சங்கற்ப வடிவமாய சித்தானது தன்மாத்திரைக்கணமான விவை யாம் மும்மையணு முதலியவை தோற்றுமாத்திரமாய்த் தோற்றுவதேபோல ஆகாரமில்லாமலே காணப்படுவதாம். இவ்வண்ணம் பிரஹ்மமே யுலககாரமாக ஆகின்றது என்பதாக யாதோதப் பெற்றதோ அது துணியப் பெற்றதாம், தோற்றுகின்ற வுலகங்கட்குப் பீஜம் பஞ்சதன்மாத்திரைகளேயாம், அவற்றிற் குக் காரணம் பரமான்மாவோடு தடைப்படாததாயிருக்கும் நேர்சம்பந்தமுற்ற உலகதிதி யேதுவான ஆதி மாயாசக்தியேயாம், அதனது காரணமாக அந்தச் சிவமேபவிக்கின்றதெனச் சின்மாத்திர வஸ்துவே பிறப்பற்றதெனவும், ஆதிய தெனவும் அனுபவிக்கப்படுமெப்போது மாதலின், அதனினின்றே ஜகத்விலா சம் உண்டாகி யொடுங்கும்; இவ்வாறாகவே அந்தப் பரமாத்ம தத்துவமே மாயா சக்தியாற் பீஜமாய் மாயை யொழிந்தபோது அந்தப் பரமசிவமேயா யிருக்கு மென முன் பிரதிஞ்ஞை செய்த பொருளின் சித்தியாம்.

12-வது உலகுற்பத்தி வர்ணனம் முற்றிற்று.

---

## 13-வது சுயம்புற்பத்தி வர்ணனம்

சருக்கஞ் சாற்றலான் முன்னுலகத் தன்மையானது பிரஹ்மத்தினின்றும் பொய்யாகவே யுண்டாகின்றதென வருணிக்கப்பட்டது, இப்போது ஜீவபாவ மானது இத்தன்மையதெனவும், அதற்குத் தேகாதிகளின் அடைவும் வருணிக் கப்படும். பிரளயத்தில் துயிலிற்போல விலயமாதலான் மாயாசபளப்பிரஹ்ம பாவத்தையடைந்த ஜீவோபாதிகள் மீண்டும் எழுமுறையை ஹேதுவோடும் ஸ்ரீ வசிஷ்ட பகவான் கூறி யருளுகின்றார்:—விஸ்தாரமாயும், விகாரத்தாலாக்கப் பட்ட ஏற்றத் தாழ்வற்ற மாயாசபளத்தன்மையுண்மையிற் சமமாயும், சர்வா திஷ்டானமாயும், உண்டாகாத ஆகாயதேயுதமாதிகளின் காரண வடிவமாய சத்தையாயும், சிதாத்மாவாயும் இருக்கும் பரப்பிரஹ்மத்தின் கண்ணே, சித் திற்கு அறிபவனுந் தன்மையிலக்கண ஜீவத்தன்மையானது விடயகரண சித்தி வாயிலாகவே சித்திக்கவேண்டி யிருத்தலின் அதனத்தியாசம் முதலிலேயே யமையுமாதலின் முன்னர்த் திருசியத் தகைமைக் கற்பனையாம், அதன் கண்ணே ஏது யாதோவெனின்? சத்வஸ்துவிற்கஃதுண்டாகாத வியற்கையே யாகுமன்றோ, ஆகவே சத்திற்குச் சேத்தியாங்கிசசேதனத்தாலாம், சிதிசக்தித் தன்மைச் சேதனத்தாற் சித்தகற்பனை யுதிக்கும், யாது யாது அத்தியசிக்கப்படுகின்றதோ அதனதன் வெளிப்பாட்டியற்கை சித்தினிடத்தின் முன்னரே சித்தித்திருத்த லின் யாண்டும் நிமித்தத் தன்மையாம்; அதன் பின்னர்ச் சேத்யசையோக சேத னத்தாற் சீவத்வகற்பனையாம், சேத்தியத்தின் ஏகபரத்தன்மை வசத்தால் அதன் பின் மாயையென்னும்அகம்பாவகற்பனையாம், அதுவும் ஜீவபாவத்தின் நிரூட அவஸ்தையாகும், ஏகபரத்தன்மையும் அத்துணை மாத்திரத்தின் யானென்னும் அபிமானமாம். அதன்பின் அகந்தையின் விருத்தியினாலே புத்தித் தன்மைக் கற்பனையாம். இதுவே மனஸ்தாதிசப்ததன்மாத்ரகாதிமானும்; அதாவது இவ்வண்ணந் தரும சித்தியாகவே சப்தாதி விடயமாத்திரைகளாய் வாதனை வடி

வமாகத் தன்பாலடங்கியவற்றிற்குக் கனவிற்போல மனனத்தால் அஃதடங்கு
மனோரூபமிதுவே யமையும் என்பதாம். அதற்குத் தூலதேகத் தன்மையின்
அடைவைக் கேட்குதி! வாசனை வடிவமாய சத்ததன் மாத்திரைகட்குப் பரிசாதி
தன் மாத்திரைகளோடு சேர்க்கை யுண்மையின் பஞ்சிகிருத பாவத்தாற் பருமை
யையுற்றஅத்தியான்மிக மகாபூதரூபியினின்றும்; அதாவது, தூலதேக பாவத்தை
யடைவுற்ற மனத்தினின்றும், இவ்வண்ணம் இப்பெருந்தருவா மூலகாதி காணப்
பெறுகின்றது. முடிவாக மொழியுங்கால், இங்ஙனம் முறையாக விரைவிற்
கனவிற்புரம்போலும் ஆக்கப்படாததாம், அதாவது இச்சை யில்லாமலேபியைந்
ததாம், மகாகாச மகா அடவியின் கண்ணே யுண்டாகி யுண்டாகி யொழியும்;
உலகமாங் கருவேலங்காட்டுக் குடிசைகட்குப் பீஜம் இச்சன்மமற்ற வத்துவே
யாம், நிலநீர் நெருப்பு முதலியவற்றைச் சிறிதும் அவாவுவதே கிடையாது. இச்
சிதாத்மகமானது பிற்போது, கனக்காண்போன் தானனுபவிக்கும் புரம்போலும்
பிருதிவி முதலியவற்றைச் செய்யும், செய்தபோதினும் உண்மையாக அது
அசங்கமேயாகும், சின்மாத்திர வடிவமேயாகும், யாது சிதான்மகமா யிருக்கின்
றதோ, அது யாண்டாண்டிருந்தபோதினும், ஜகதாதி யங்குரத்தை விடவே
செய்யும். உலகத்திற்குத் தன்மாத்திரைகள் ஐந்தே காரணங்களாம், அவ்வைந்
திற்கும் கெடாத சித்தே காரணமாம், யாது பீஜமோ, அதைப் பலமென வுண
ர்தி, ஆதலினுலகம் அறிவின் மயமாம். இன்னணம் மகாகாசத்தின்கண்ணே
சிருஷ்டியினுதியில் இக்குண பஞ்சகம் சிற்சத்தியென்னும் திருசியத்தை வெளிப்
படுத்தும் ஆற்றலினாலே தன்னுடம்புபோல உடம்புற்றதாய்க் கற்பிதமாம். உண்
மையன்றும், ஐந்துணத்தாற் பருமனையுற்று எவ்வித்தூலம் விரிவுறுகின்றதோ
அதுவும் ஆகாச ரூபம் போலும், தற்கற்பனை யதிஷ்டான ஆன்மாவின் கண்ணே
யிருத்தலினாற் சன்மயமாம்; தானாக அல்லவாம். அதனையே விரிக்கின் எவ்விடத்
தும் யாது அசித்தத்தாற் சாதிக்கப் பெறுமோ அது சித்த மாகாதாம், யாது,
விகற்ப வடிவமான சொரூபத்தை யுடையதோ, அஃதெங்ஙனம் சுத்தியமாதல்
கூடும். பிரஹ்மத்தின் கண்ணே அத்தியஸ்தமாய குணபஞ்சகத்திற்குப் பிரஹ்
மமாத்திரத் தன்மையுளதாகுக, ஆயினும், அதனது காரியத்திற்கு அஃதெங்ஙனங்
கூடுமெனின்? பிரஹ்மவடிவமான மதியினாலே ஐந்தும் பிரஹ்மமாகவே, அதன்
காரியமாகிய தூலபூத பஞ்சகமும் அறிவாம் பிரஹ்மமேயாம், ஏனெனின்,
காரண காரியங்களி னொருமைப் பிரசித்தியேது வினாலாம், ஆகவே, மிகத் திர
மாகத் தோற்றுநின்ற மூவுலகக் கிரமமும் பிரஹ்ம மாத்திரமென்றே துணியப்
பெறும். ஆயின், அபின்னத்திற் காரிய காரணத்தன்மை விவகாரம் எங்ஙனமா
மெனின்? கேட்டி, இப்பஞ்சக சம்பவமானது. சர்க்காதியி லெங்ஙனமிலங்கா
நிற்குமோ அங்ஙனமே. இப்போதீண்டுத்தரகாலத்திருக்கும். தன் பொருட்டே
பூர்வ காலத்திருப்பை யனுசரித்துக் காரணத்தன்மையை யடைகின்றது. இங்ங
னம் சிறிதேனும் உலகக் கூட்டமென்பது உண்டாவதே கிடையாது. குறிக்கப்
படுவது மன்றுமென்று துணியப்பெறும், அதனை யுபாதியாகவுடைய ஜீவபாவ
மும், அசத்தே யாமெனக் காட்டுவதுடன் இல்லாததை யிருப்பதாக அனுபவிக்
குஞ் சம்பவங்களைத் திருஷ்டாந்தத்துடன் விலக்குவாம். கனச்சங்கற்பபுரம்

போலும், அசத்தானவத்துவும் சத்தென அனுபவிக்கப்படுகின்றது; பிரஹ்ம மாகாச ரூபமான பராகாசமாம். பரமப் பிரகாச ஆன்மாவின்கண் ஜீவாகாசத் தன்மை அசத்தா யிருந்தபோதினும். சத்தாக அனுபவிக்கப்படுகின்றது, சுத்த ஆத்மாச் சித்தின்கண்ணே பார்க்கின்றது, உண்மையாகப் பரிச்சேத வுபாதிக ளாகிய பிருதி வியாதிகள் சம்பவியாமையின். ஆகாயத்தில் கந்தர்வ நகரக் கிருசு கடாதி பரிச்சின்னம் ஆகாயத்தினின்றே கற்பனையாலுதித்ததாம், இச்சீவன் றன்னுன்மாவேயென இயம்பப்பெறுவன் இவ்வண்ணஞ் சாமானிய அபிமானத் தால் பிரஹ்மத்திற்குச் சமஷ்டி ஜீவபாவங் கூறி விசேஷ அபிமானத்தால் விய ஷ்டி பாவத்தாற்றால தேகம்வரை தாதாத்மிய ஆரோப முறையை விரித் துக் கூறுவாம்; ஜீவாகாசம் இத்தேகத்தை யெவ்வாறுணர்கின்றதோ அதனைக் கேட்குதி, அதிலாதியில் பாவனையினாலே சமஷ்டி யுபாதியினின்றும் வியஷ்டி யந்தக்கரண அங்குர ஆரம்பம் ஆமாறிவ்வாறும், அந்தப் பரமேசுரரிடத்திற் கற்பிதமாகிய சமஷ்டி ஜீவ ஆகாசம் விஸ்தாரமாக இருந்தபோதினும் தன்னை அணுவினும் அதிக அற்பமெனவும் பொறிபோலும் தேயுக்கணமா யிருக்கின் றேன் என்னும் எண்ணத்தால் அவ்வாறே தன்னை யனுபவிக்கின்றது; இதனையே கருதிச் சுருதியும் "வெவ்வழனின்றுந் துச்ச வெம்பொறிகள், எவ்வகை கிளம்பு மவ்வகையேயா, யிவ்வெழிலான்மனி னின்று மெழும்பிடும், இவ்வெலாவான் மவின் குழுவன்றே" என்றறைகின்றது. அதற்குப் பாவனையின் விருத்தியால் விருத்தியுண்டாம், யாதனுபவித்ததோ அதுவே பருத்ததுபோல ஆன்மாகாசத் திற் பாவிக்கின்றது. சதாகாரமாக யாதைப் பாவிக்கின்றதோ, அது சங்கற்ப சந்திரன் இல்லாததேபோல இல்லாததேயாம். அதனைப் பாவித்தலால் யாது பயனோவெனின்? அதனையே பாவித்துக் காண்போன் காண்பொருள் வடிவமா யிருக்கும், ஒன்றே யிருமை யடைகின்றது, கனவிற்றனது மரண வுணர்வே போலும். காண்போன் காண்பொருட்பான்மையை யடைந்தபோது அதன் விருத்தியானதுண்டாம், பின் அணுதேயுக் கணத்தன்மையை யகற்றி தாரகைக் கொப்பாக வுணர்ந்து சிறிது தூலத்தன்மையை யடைந்ததுபோலாம், இதுவே யிதற்குப் பூதமாத்திரத்தோடுற்ற இலிங்காத்ம பாவமாம். இச்சீவன் பின் அத் தகைய உணர்வால் அத்தாரகையாகாரமாகவே தன் வடிவ முற்றது, சோக மெனச் சுயம்பாவித்த மாத்திரப் பொருள்போலப் பவித்தலான் விசுவரூபத்தான் ஆமென்றுணர்தி. இந்த லிங்கதேக வுணர்வும், வருந்தூலதேக வுணர்வும், சித்த கற்பனையின் வயத்தானே யாம், தாரகையினாகாரமாக முன் மொழிந்த இலிங்க ஆகாரத்தையும், வரும் தேகப் பெயரிய வடிவத்தையும் கனவிற்றன்னையே வழிப் போக்கனாகக் காண்பதே போலச் சித்தத்தினின்று முணர்ச்சியுண்டாம். சித்தம் எதனைப் பாவிக்கின்றதோ, அத்தன்மையையே யடையும், அதன் கண்ணே திருஷ்டாந்தமோ, சித்தம்விட யாகாரத் தன்மையையடைவது போலவாம். வஸ்து சர்வோபாதிபாகியமா யிருந்தபோதினும் மோகத்தால் அத்தன்மைப் பரித்தியாகத் தானே யுபாதியினுள்ளே தோற்றுதல் கூடும் என்பதற்குவமை யும், அதற்குச் சொப்பனநிதி வாசனுமயச் சமுசாரமும், கூறக் கேட்குதி, அது பாகியத்தை விடுத்தேபின்றாகக் கோரமென்னும் உபாதியுட் கற்பிக்கப்பட்ட

ஆகாயத்தின்கண்ணே தோற்றும், கண்ணாடியின் கண்ணே மலை தோற்றுவதே போலப் பாகியத்திலிருப்பதாயினும், உள்ளே தோற்றும். யாண்டும் விவகார சமர்த்தமான தேகமானது கூவத்திற்றோற்றுவதாகி அத்துணைமாத்திரம்விவகாரத் தோடுகூடியதாக விளங்குவதே போலும், ஜலாசயத்தினின்றும் கேட்கத்தக்கதா யிருப்பினும் கூவுதன் முதலிய சப்தங்கள் சம்புடத் தடைப்பட்டதாய் வெளியில் விளங்காததேபோலும், கனசங்கற்பங்களின்உணர்வு உடலினுள்ளேகனமுதலிய வற்றைக் காண்கின்றதே போலும், அணுமயமாக முன் மொழிந்த அழற்பொறி க்கொப்பாய வுபாதியின்கண்ணே சொரூபமாகக் கற்பித்தாரகையினுள்ளிருக்கும் இச்சீவன் சுயம் வாசனை மயமாய தேகாதி விவகாரத்தை யனுபவிக்கின்றது. சித்தம் விடயாகாரத்தன்மையையடைந்ததேபோலும் என்னுந்திருஷ்டாந்த பக் கத்திலும் மேற்கூறியதை யிங்ஙன் பொருதிக்காணலாம்:—சொப்பன சங்கற்பங் களின் விடயம் வெளியிலிருப்பதாயினும் அதன் வெளியுருவத்தைத்தியாகித்தே உள்ளிலங்குகின்றதேபோலும், கூப நீரிற் பிரதிபிம்பித்த தேகம்போலும், குகா திசம்புடத்துட்பட்டபிரதித்தொனி வாக்கியமேபோலும், ஜீவன் இவ்வாசனைமய மாய வேத்தியத்தையுணர்கின்றான்; மற்றவற்றை முன் போலுணர்க. அவ்விவ் வாசனாமயதேகாதி விவகார திருஷ்டியால் துணிவுற்றவழி புத்தி சித்தாதி பரிணா மத்தன்மை யுண்மையின் அவ்வவ்வுருவுடையதாம் பரமார்த்த திருஷ்டியால் ஆராயினோ சச்சிதானந்த வுருவமுடையதேயாம், அவ்வத்தூலதேக பாவனை யால் அத்தன்மையையடைந்ததற்கு விழி முதலியவற்றின் கற்பனையால் நனவிவ காரச் சமுசாரத்தைக்காட்டுவாம், ஜீவாகாசமானது தானே ஆண்டுத்தாரகாகாச கோசத்திருப்பதாய்ப் பார்ப்பேன் யானென்னும் பாவனையினாலே காணும்பொரு ட்டு ஆகாயத்தில் விரிவதுபோலாம், பின்னர் இருதுளையினானே வரும்பாகியப் பெயரையுடையதாய் மீண்டும், எதனாற் காண்கின்றதோ அவ்விரண்டும் நேத்திர மென்னும் பெயரொடு பவிக்கும், எதனாற்றீண்டுமோ அது துவக்காம், எதனாற் கேட்குமோ அது செவியாம், எதனான் முகருமோ அது கிராணமாம், அது தன் னையான்மாவின்கட்காணும், அது அதன் இரசனேந்திரியமாம், பின்னர் இர சனையுமுண்டாம், யாதசைகின்றதோ அது வாயுவாம், பிராணாதி விருத்தியாம், கருமேந்திரிய சங்கசேஷ்டையாம், ரூபஆலோகமனோவிருத்திஜாதமெனவும் பாவிக்கும். ஆதிவாகிக தேகாத்மா அம்பரமாக அம்பரத்தின் கண்ணே யிருக் கும், இவ்வண்ணம் பூரித்தலையடைந்து அத்தேயுவின் கணத்தில் அத்தியா சம் பண்ணிக் கொண்டு பிரஹ்மமிருக்கும், அசத்தியமாயினும் சத்தியம் போற்றோற் றிக்கொண்டு ஜீவ சப்தம்போலப் பிரஹ்மமிருக்கின்றது, இவ்வண்ணம் அது ஜீவ சப்தார்த்தமுடையதாகி அநேகந்தொழில்களினாலாகுலத்தை யடையும். சித்ததே காம்பரத்தையே தூலத் தன்மையினானே தூலதேக ஆகிருதியாக வுடையவனும் ஆதிவாகிகதேகாத்மாவுமானவன் பொறியாகாரமே முதல் பாகிய விடயம் வரை தன் கற்பனையாகாரம் பிரஹ்மம், அதனந்தத்தில் ஆவரணாதி சம்ஸ்தாவோடுற்ற பிரஹ்மாண்ட மினிதுகாணும். அதற்கே நீருட்பட்ட பிரஹ்மாண்ட சரீர அகம் பாவவேதனமும், அதனுள் நான்முகசரீர அகம் பாவவேதனமும் என்னு மிரு வகையுமாம், ஒன்றை நீரினுள்ளிருப்பதாயுணரும் ஒன்றைச் சம்பிராட்டுச்

சொரூபமாயுணரும், வரும் பிரஹ்மாண்ட விவகாரத்தைப்பார்க்கும் அனுப
விக்கும். ஆத்மத்தன்மையானே கருதப்பட்ட சித்த நிமித்தத்தானே சங்கற்
பப்படி ஆன்மாவிற்குக்,கர்ப்பக்கிருகவாச நிமித்தத்தன்மை யுண்மையின் கர்ப்பக்
கிருகமாம், தேச கால கிரியை திரவிய கற்பனை யுணர்வைப்பாவித்து நாமாதி
களை யுண்டாக்குபவர் ஈசுரரேயாவர், அவரே கற்பிதமான அவ்வச்சத்தங்களால்
அவ்வவ்வர்த்தங்களையும் தம்மையும் பந்திப்பவராவர்; அசத்தியவுலக மயக்
கத்தில் ஆதிவாகிக தேகமுடையவராவரிவர் கனவின்கண்ணே ககனத்தெழுந்து
செல்வதேபோல அசத்தியமாகவே யிவை தோற்றுகின்றனவாம். சொல்லி
வந்தவுற்பத்தி ஆக்கியாயிகைக்கு இங்குறுமுபயோகத்தைக்கேட்டி ! இவ்வண்
ணம் உற்பத்தியாகாமலிருந்தே இச்சுயம்புவானவர் தாமே யெழுவர், ஆதி
வாகிக தேகாத்மாவினர், பிரபு, ஆதியர், பிரஜாபதி; இந்தப் பிரஹ்மாண்ட
மாக்கும் மயல் அடைவுற்ற போதினும், ஒரு சிறிதும் அடைவுறவேயில்லை, உண்
டாகவுமில்லை, காணப்பெறுவதுமில்லை, அந்தப் பிரஹ்மாகாசம் ஆகாசமே
யாம், அந்தமற்றதாகவே யிருக்கும்; சங்கற்ப நகராகாரமா யிருக்குமிது
சத்தாயினும் சத்தன்றும், நிர்மிக்கப்படாததாம், இரங்க த்திரவியமற்றதாம்,
இத்தகைய விது விசித்திரமாகவே யெழுந்துளதாம். வெளிச்சாமக்கிரியினாலே
நிர்மிக்கப்படாததே போலும் உட்பிரயத்தனத்தினாலும் ஆக்கப்படாததேயாம்
அனுபவிக்கப்படுவதுமாம், உண்மையன்றாயினும் உண்மைபோற்றோற்றுவதாம்,
அற்றேல், ஆயின் அதிர்ஷ்ட சமஸ்காராதி சாமக்கிரி ஜன்னியமேயாகுஞ் சகத்து
என ஏன் கூறலாகாதோ வெனின்? மகா கற்பத்திற் பிரஹ்மாதிகட்கும் ஐயமின்றி
விமுக்தத்தன்மையுண்மையின் ஆகாதென்றுணர்தி. "அயனார் தம்மொடும் அவ
ரனைவருமே, வியன் மகாப்பிரளயம் விளைந்தவேலையில், அயனார் தம்மதி காரவந்
தத்தில், உயுமெய்யுணர்வினையுடையவராகி பயமறு பரமபதம் பெறுவாரே"
"அதிகாரம்வரை பவத்திதி யதிகாரிகட்காம்," என்பதாதி மிருதி சூத்திரங்கள்
காண்பித்த நியாயத்தானே மகா கற்பாந்தத்தில் முதியோர்களாகிய பிரஹ்மாதி
கள் முக்தியடைந்த துணிபால் அவரது அதிருஷ்ட சமஸ்காரத்தான் மேலு
றுஞ் சகத்தின் சிருஷ்டி கூடாதாம்; எவ்வுபாசகன் கற்பாதியில் ஹிரண்யகர்ப்
பாதிபதம் அடைகின்றனனோ அவனால் ஒருகாலும் விசித்திரமான ஜகத்தானது
முன் சிருஷ்டிக்கப்பட வில்லையென அனுபவாபாவம் ஆகியவழி அதன் சமஸ்
காரஞ் சம்பவியாமையினானே ஜகத்தானது சமஸ்கார ஜன்னியமன்றாம், அன்
றாகவே கனவு இந்திரஜாலம்போல அகஸ்மாத்தாகவே அவித்தையினாலேயே
கிளம்பி யிருத்தலின் பொய்யேயெனத் துணியப்பெறும். பழைய மிருதியா
னது எதுவும் சுயம்புவிற்குக்காரணமாகாதாம் அதனால் எத்தகையராய்ச் சுயம்பு
விருப்பரோ அத்தகையதாகவே யவராலாக்கப்பட்ட விஃதுமா மெனப்படும்.
ஆயின் அநாதியான சாக்ஷியின் அனுபவத்தினாலே அதன் சமஸ்காரமுளதா
குக அதனாலாயது பிரபஞ்சமாகுக வெனின் ? அநாதியனுபவம் இவ்வண்ணம்
யாதுபிருதிவியாதி சர்க்கவிடயத்தில் உளதோ, அதுகனவனுபூதம் பிருதிவியாதி
பிரபோத காலத்தில் எத்தகைத்தாமோ அத்தகைத்தாம்; சாக்ஷிவேத்தியமாய
னைக முதலியவை பொய்ம்மையாகக் காண்டலின் அதனாலாகிய சமஸ்காரத்தினி

ன்று முண்டாகியதற்கும் பொய்ம்மையே ஆகுமன்றோ, எவ்வாறாகச் சுயம்பு
இருக்கின்றாரோ அவ்வாறாகவே அவராலுண்டாயதுமாம் எனயாது கூறப்பெற்
றதோ அதன் விரிவைக் கேட்பாயாக:— அச்சுயம்பு நினைக்கப்பட்டதுபோல்
நினைக்கப்பட்டவர் ஆவர், நினைக்கப்பட்ட சென்ற பொருள்போல் விண்மாத்திர
வடிவினர் சூனியமாத்திர இயற்கையர், அவ்வாறு எப்போதுமேஜகத்தும் நினைக்
கப்பட்டதையே யொக்கும். எவ்வெத்தேயத்திலும் எவ்வெக்காலத்திலும் நீரில்
நெகிழ்ச்சியானது பிரசித்தமாய் வேறாகாததேபோல், அவ்வத்தேயத்திலும் அவ்
வக்காலத்திலும் பரமான்மாவைப் பார்க்கிலும் சிருஷ்டிவேறாதலே கிடையா
தாம் இவ்வண்ணம் இச்சிருஷ்டிபிரௌடமாக இலங்குகின்றது, உண்மையாயோ
ஜகத் விஷயத்தன்மையற்ற தகைமையதாகவே யிருக்கின்றது. விரித்துரைக்
கின்றேன், ஈங்குரைமுறையே பிரஹ்மாண்டம் பிரசித்தமாக அதி நிர்மலமாகிய விண்
வடிவமாகவே விளங்குகின்றது, தன்னாலாக்கப்பட்ட மயக்கமாத்திரமேயாகும்
இத்திருசியமியாவுமிங்ஙன் சாந்தசொரூபமாகவே யிருக்கின்றது. நிராதார
நிராதேய அத்வைதமும் ஐக்கியவர்ஜிதமாம், துவைதவிவகார மிலதாகவே
விலக்கப்படுவதின்மையின் ஏகத்வ எண்ணிக்கையாலும் வர்ஜிதமாம், உலகமா
னது அறிவின்கண் மயலினாலே தோற்றிய போதினும் ஒரு சிறிதுந்தோற்றவே
யில்லை, பரமாகாசமானது மகா சூனியமாயும் அத்தியந்தந் தெளிவாகவுமே
யிருக்கின்றது, சர்வசம்சாரத்தன்மை யுடையதல்லாததாக எஃதாகவே யிருக்
கின்றதோ அஃதாகவே யிலங்காநிற்கும். ஆண்டாதேயமுமின்றாம், ஆதாரமு
மின்றாம், திருசியமுமின்றாம், காண்போனுந்தன்மையுமின்றாம், பிரஹ்மாண்டமு
மின்றாம், பிரஹ்மாவுமின்றாம், மோகமதாந்தகர்களுமின்றாம், உலக ஆராய்ச்சி
யிற்றம்பக்ஷமிலாது போராடும்வைதண்டிகரும் சிறிதுமின்றாம்; உலகமுமின்றாம்,
உலகவிவகாரமு மின்றாம், யாவுஞ் சாந்த சொரூபமாகவே யிருக்கின்றது, அதி
தெளிவாக இருக்கின்ற பிரஹ்மமே யிலங்குகின்றது, இங்ஙனந்தானே தன்னி
டத்திலேயே தன்னாலேயிலங்குகின்றது. நெகிழ்ச்சியினாலே சுழலாநின்ற நீரே
போலும், அறிவாந்தன்மையானே ஆன்மாவின்கண்ணே இஃதசத்தாகவே
தோன்றுகின்றது, எனினுமிதனைச்சத்தைப்போன்றே மூடர் அனுபவிக்கின்ற
னர்; கனவிற்றன் மரணமேபோலும் அந்தத்தி லசத்தேநசிக்கின்றது. இவ்வண்
ணம் அபவாததிருஷ்டியினாலேதானே யுலகிற்குச் சூனியத்தன்மை கூறப்பட்
டது இனி அதிஷ்டான திருஷ்டியினானே கூறுவாம்:—இவையாவும் தனது
சொரூபமாகவேயிலங்கலின் நோயற்றதான சத்சொரூபமேயாம், அது கண்டமற்
றதாம்; ஆதியற்றதாம், அந்தமற்றதாம், சிதாகாசமே வடிவமாகவிருப்பதாம். சிங்க
அவலோகன நியாயத்தால் முன் விளம்பியயாவற்றையும் அனுசந்தித்து முடித்
துக் கூறுகின்றார்:—பரப்பிரஹ்மத்தின் கண்ணே பிரஜைகட் கீசராகிய சுயம்பு
சூனியமேயாம், சமமாயிராநின்ற பரமான்மாவே எப்போதும் சூனியப்பிரஜேசா
திவடிவமாகத்தானே விளங்குகின்றது, எக்காரணத்தால் அந்தப்பிரஜேசர் ஆதி
வாகிக மென்னும் மனோமய சரீரமுடையவரேயலாமல் பாஞ்சபௌதிக சரீரமு
டையவ ராகாரோ அக்காரணத்தால் அவர் சங்கற்பமாத்திர ரூபத்தானே பிருதி

வியாதியுண்மையாகாதாம், உண்டாகாத முயற்கோடு முதலியவை யில்லாதன
போல இல்லாதனவேயாம், உண்டாகாததிலதாமெனவுரைத்தோமல்லவா?

13-வது சுயம்புற்பத்தி வருணனம் முற்றிற்று.

---

## 14-வது பிரஹ்மப் பிரதிபாதனம்.

இப்போது முன்னர் வருணித்த ஜீவபாவத்தில் பரிச்சேதாதி சமுசயங்
களை ஊகத்தால் நீக்கிச்சேடித்த பிரஹ்மைக்கியம் வருணிக்கப்படும். ஆண்
டாதியில் சமஷ்டி விராட்டுச் சிவபரிச்சேத நீக்கப்பொருட்டுக் கூறியதை யனு
வதித்து பூமிகை கூறுகின்றார் :—இவ்வண்ணம் ஜகத்தகந்தை முதலிய திரு
சியக்கூட்டம் யாதொன்று மின்றும், உண்டாகாததனாலேயும் இல்லாததேயாம்
யாதுளதாமோ அதுபரமேயாம். அதற்கனுகுணமாய விராட்டுத் தேககற்பனை
யைக்கூற இச்சித்து அதன்பொருட்டுச் சமஷ்டிஜீவபாவ சித்தியைக் கூறல்:—பர
மாகாசமாகிய சிவமே ஆதியில்தானே ஜீவத்தன்மையை யிலக்குகின்றது. அசை
வற்ற ஆர்கலியிடையில் நீரசைவதேபோலும் ஆகாசரூபம் விடாததேயாம்; உட்
சங்கற்பவடிவம் வாய்ந்த சித்து விருத்தி இங்ஙனங்கூறப்படும் விராட்டுபாதி
விஷயமாகிச்சொப்பன சம்பற்பசைலாதிகளிற்போல ஆன்மத்தன்மையயலினாலே
பிரேமாஸ்பதத் தன்மையையறிவதே போலுமாம். சங்கற்ப ஜன்னிய மெனக்
கூறியதன்பயன்யாதெனின்? பிருதிவியாதி யற்றதேகத்தையுடைய எவ்விராட்டு
வடிவப்பெரியோனுளனோ அவன் ஆதிவாகிகமுடையவனேயாவன் சின் மாத்திர
சொச்ச ஆகாசமயனவன்; நிவாசமற்றவன், கனமலை யொப்போன், நீணிலையுற்ற
கனப்புரமிருக்குமாயின் அதற்கொப்போன், சித்திரக்காரனுக்கு நிச்சல சித்தமுள
தாயபோது அவன் வாசனைவடிவச் சித்திரசைதன்யசமாகிருதியுடையோன். கிறப்
பெறாத பெருந் தம்பஞ்சேர்பதுமைக் கூட்டமும் அதற்கொப்பான அன்னியங்
கண்முழுவதும்போன்றவன், பிரஹ்மாகாச இலக்ஷண நற்றம்பத்தில் செய்யப்
பெறாதவடிவினதாய பதுமையன்; ஆதிபௌதிக வடிவம்மிந்தையென்ன அவனதி
ஆதிதைவிகமும் அவ்வாறேயாம்; முதன்மையாய பிரஜாபதி பூர்வம் சுயம்பு
வெனக்கேட்கப் பெறுவன், முன்னியற்றிய தனது கருமங்களில்லாமையினானும்
அகாரணன் ஆவனென முன்னரும்இவ்வேது கூறப்பட்டது, மகாப்பிரளய பரி
யந்தங்களில் ஆதியபிதாமகர்கள் யாவர்களுமே விடுபடுவர்கள் ஆகலின் முன்னி
யற்றியகருமம் அவர்களிடத் தென்னுளது? கண்ணாடி முதலியவற்றில் பிரதி
பிம்ப குட்டியவடிவம் போலத்திருசியமும் அசத்தாதலின் தரிசனயோக்கிய
மாகாதாம், சுயஞ்சைதன்யமாத்திரமுளதாம், அசத்துத்தகைமை நன்கு தெளி
தற்பொருட்டு அசங்க நிர்விகாரசித்தின் கண்ணே திருஷ்டாதிருசியதரிசனமும்,
சிருஷ்டா சிருஷ்டி சர்ஜனமும், போக்தா போக்கியம் போகமும் என்னும்
திரிபுடி மூன்றின் அசம்பவம் உளதா மெனவுணர்த்துகின்றார்:—திருசியமு
மின்று, திருஷ்டாவுமின்று, சிருஷ்டாவுமின்று, மற்றயாவுமேயின்றும். இங்ங
னம் சர்வ நிடேதமாயினும் சத்தந்தோறுமுண்டாம் அர்த்தங்களின் சூனியத்
தன்மையின்றும், என்னை, இப்பிரத்தியக்கான்மாவே சர்வசப்தங்களின் அரு
த்தங்கட்கும் ஆன்மாவாம்! அதனினின்றும் ஜீவமாலையுதிக்கும் அது தீபத்தி

னின்றும் தீபமாலையுதிப்பதுபோலவாம். கனசங்கற்ப வடிவவிராட்டுக்காரியத் தன்மையானே வியஷ்டிதேகிகட்கும் சங்கற்பமாத்திரமயத்வமே யல்லாமற் சத்தியப்பிருதுவியாதியடங்கிய தன்மையின்றாம், சற்கற்பத்தினின்றும் திரமாகச் சங்கற்பமே பிருதிவியாதியற்றதாகவுண்டாகின்றது, கனவினின்றும் கனாவுண்டாவதேபோல, ஆதியாயஹிரணியகருப்பரினின்றும் பொய்யாதலின் அத்தியந்தஞ் சூனியமாய விராட்டுண்டாயதென்ன விராட்டினின்றும் வியஷ்டியான்மாவும் உண்டாம். ஓரியற்கையினானே வியஷ்டி சமஷ்டிகளின் ஒருமையைக் காட்டியவதனாற்பிரஹ்மைக்கியபரிசேடஞ்சித்தமாம், இஃதொன்றன் அசைவினானே எச்சீவர் விரிந்தசைகின்றனரோ சககாரிகாரணங்களின் அபாவத்தினானும் அவர் அதுவேயாவர், சககாரி காரணங்களின் அபாவத்தானே ஒன்று அசகாயமாகவே யசைகின்றது அவ்விதமாய் இவ்விராட்டினின்றும் எவ்வியஷ்டி ஜீவர் அசைவரோ அவர் அதுவேயல்லாமல் அயலல்லர், அத்தகைய விருக்ஷத்தினின்றும் விரிந்தொளிரும் சாகாதிகட்கு அதனினின்றும் வேற்றுமை காணாமைபோலுமென்றுணர்க;சககாரிகாரணங்களின் அபாவம் உளதாகவே இக்காரியகாரணமொன்றேயாய் நிகழும் ஆகலின் இவ்வுலகமயக்கம்பரம் பொருளினின்றும் அயலாகவே யாகாதாம் பிரஹ்மமே ஆதியவிராட்டாத்மா அவ்விராட்டாத்மாவே சர்க்கத்தகைமையாம்,ஜீவாகாசமாய அதுவே பிருதிவியாதி யசத்துக்கள் தோன்றுமாறு இங்ஙன் நிலவுறும். வியஷ்டி சமஷ்டியவற்றின் மூலங்கள் ஒருமையுறவே வியஷ்டி சமஷ்டிகட்குப் பொய்ம்மை யுளதாம், அவற்றின் மூலத்திற்கே மெய்ம்மையாமெனல் எங்ஙன் கூடும்? மூலசமஷ்டிகட்குப் பொய்ம்மையும் பிரத்தியக்ஷாதிப் பிரமாண சித்தமாய வியஷ்டி விபாகத்திற்கே மெய்ம்மையாகாததென்னையோ ? சேனைச் சமாஜாதிகளிற் சமஷ்டியகன்றிடினும் வியஷ்டியெஞ்சுதலானே அதற்குமெய்ம்மைசித்தமாமென எண்ணினவராய் ஸ்ரீ இராகவர் சங்கித்தல்:—அளவினுக்குட் பட்டதா? அல்லது ஜீவராசியநந்தமா அல்லது அநந்தாத்மாவாய ஜீவபிண்டம் அசல உவமையதா? வியஷ்டிமாத்திரஞ் சத்தியமாயின் வியஷ்டி ஜீவரே ஏகபுத்தியளவாதலின் ஏகதேச இருப்பினாலேனும், பரஸ்பரச் சேர்க்கையினானே ஏக பிண்டவடிவத்தன்மையடைதலினாலேனும் கற்பித சமஷ்டியாத்மா சம்பவிக்கும் அவசியம் இவ்வண்ணம் அங்கீகரிக்கத்தக்கதாம் இல்லையாயின் மழைவாரிதி நீர்த்துளி போலேனும் அக்கினிப் பொறிபோலேனும் சமஷ்டியினின்றும் உற்பவமாயின் அநித்தியத்தன்மையடைவுறுதலின் செய்ததற்கின்றிச் செயாததற் கொன்றுமென்னும் தோடமாமன்றோ, மேகத்தினின்றுந் தாரைகள் போலும் கடலினின்றுங் கணங்கள் போலும் காய்ந்த இரும்பினின்றும் பொறிகள் போலும், எதனினின்றும் இச்சீவர்கள் வருகின்றார்கள்? எதனினின்றும் வருகின்றார்களோ அது சம்பவிக்கமாட்டாது? ஹேபகவன்! ஜீவக்கூட்ட நன்னிச்சய வடிவ இது விஷயத்தை அடியேனுக்கு அனுக்கிரகித் தருளவேண்டும். சிறப்பாக அறியும் அவாவால் விபரீதத் தன்மை யடைவித்தல் துன்மேதையாகாதன்றோ, அத்தன்மையதாகத் தங்கள் கருத்துணராமையின், இது விடயத்தைப் பெரும்பான்மையும், அடியேனுமறிந்திருக்கின்றேன் அதனையே தாங்களும்வெட்ட வெளியாகக் கூறியருள் வீராகவென ஸ்ரீஇராகவர்கேட்ப ஸ்ரீ வசிஷ்ட

பகவான் அருளுகின்றார் :—ஹே குழந்தாய்! பயனேடுற்ற பிரஹ்மாத்ம ஒருமையின் சித்தியின் பொருட்டு ஏக அதிஷ்டான அநேக கற்பனை யெளிதிற் கோடலாமெனச் சமஷ்டி ஜீவனைக் கற்பித்து, அதனுபகித வியஷ்டி கற்பனை யெம்மாற் கூறப்பட்டதேயன்றி, வியஷ்டி சமஷ்டிகளுள் ஒன்றுண்மை யென்பதாக வேனும் ஜீவோற்பத்தியாதி கூறுவதாக வேனும் எம்மாற் கூறப்படவில்லை யாகலின், உனதாசங்கை அதன் கண்ணெங்ஙன் புகும்? ஒரு ஜீவனுமிலாதபோது இராசிகளின் சம்பவம் எங்ஙனமாம்? முயற் கோடானது வேகமாக எழுந்து ஓடுகின்றதென்பதே போலுமன்றோ நின்வசன மிருக்கின்றது. ஹே இராகவ! ஜீவனுமில்லை, ஜீவர்களின் இராசியுமில்லை, பர்வத ஆகிருதிவாய்ந்த யாதொரு ஜீவபிண்ட மொன்றுமில்லை. சமஸ்த தோற்றங்களோடு கூடிய ஜீவசப்தார்த்தத் தோற்றங்கள் யாவுமீண்டின்றுமென்னுந் துணிபு நினக்கு மலையிலக்காக வுண்டாகவேண்டும்; ஈண்டெங்கும் நிறைந்த சுத்த சின்மாத்திர அமலப் பிரஹ்மமே யுளதெனவறி நீ அது சர்வ சக்தியோடு கூடியிருத்தலின் சுயமாகவே கௌசலங்களையடைகின்றது அநுசந்திக்கின்றது. கொடி முறையாகத் தன்னை அரும்பிய தன்மையதாகவும், மலர்ந்த தன்மையதாகவும் பார்ப்பதேபோல, அவ்வச்சங்கற்ப விருத்திக் கிரமத்தை யனுசரிக்கும் சின்மாத்திர ஆபாசங்களின் அனுப்பிரவேச நிமித்தத் தானே மூர்த்த அமூர்த்த சொரூபமாக ஆவிர்ப்பூத அக்கலையையே விரைவிற் காண்கின்றது. தரிசன வகையையே விடயவிரிவினனே விளக்கி யுரைப்பக் கேட்பாயாக, ஜீவன் புந்தி கிரியை அசைவு மனம் இருமை, ஒருமை எனவும், தன் சத்தையாக விளங்கும் அதனை விடயம் செய்கின்றது. அந்தப் பிரஹ்மமேயாம். அவ்வாறு விளங்கலும் அதற்கு அவித்தையினுமேயாம் அஃதகலினே விக்ஷேபமற்ற சொரூப மாத்திர நிலைபெறும், அஃதறியாமையினாலே யிவ்வாறுகின்றது, அறிவுறினே பிரஹ்மமேயாம், அறியாமையானது ஆன்ம போதத்தாலழிந்தகலும், அந்தப் போதந்தான் கிடைத்தற்கு மிகவும் அரியதாகுமாதலின், போதமுண்டாவதில்லை. ஆயின், நீங்கிய அறியாமையானது எவ்வடிவமாக எஞ்சும்? அறிவு வடிவமாகவோ எஞ்சாதாம், அதற்கது காரணமாகாமையானும், முரணுண்மையானும், அன்னிய வடிவமாகவும் எஞ்சாதாம்; அன்னியமொன்று சேடித்து நின்று கோடலின் எனின்? இருளானது தீபத்தால் நோக்கப்படுவதாகி நாசத்தை யடைகின்றது; அதனது தத்துவம் யாதொன்றுங் காணேம்; இது போலவே, அறியாமையும் ஆமென்றறிக, முடிவு யாதாயிற்றெனின்? இங்ஙனம் பிரஹ்மமேஜீவாத்மா விபாகமற்றதாம். நிரந்தரமாம், சர்வசக்தியாம், ஆதியந்தமற்றதாம், மகத்தாம், சித்தே பாதிக்கப்படாத அங்கிசமாதலினனே உண்மை யுருவத்தால் அறிவுருவமேயாம். எங்கும் அபரிச் சின்னத் தன்மையானே விடய பேதமகலவே, அதன்றோழிற்பேதமும் வனம் வெட்டுப்படின் வனுதப பேதமேபோல நீங்குவதாகுமாதலின், இதற்கு யாண்டும் பேதகற்பனையே கிடையாதாம்; பிரஹ்ம மாத்திரம் எஞ்சிற்கும், எத்தொழில் காணப்பட்டதோ, அது அனுபூதியினாலே அதுவேயாகும். ஸ்ரீஇராகவர் முற்கூறியதில் வியஷ்டி, சமஷ்டி ஜீவர்களின் அபேதமாயவழி வியஷ்டி ஜீவேச் சாதிகட்கும், சமஷ்டி தருமத் தன்மை கூறியதை யங்கீகரித்து,

வந்துறுதலின் அமோகத்தன்மை அடைவினாலேபோக, மோக்ஷவிவஸ்தையின் மையாமெனவினாதல்:—தாங்கள் முன்னர் வருணித்தது இங்ஙனமேயாயினும், ஹேபிரஹ்மன்! மகா ஜீவ ஏகத்தன்மை வயத்தால் ஏகஜீவ இச்சையினாலே எங்ஙன் அன்னிய எல்லா ஜீவரும் பொருந்தி விவகரியார்! பிரஹ்மம் முதலிற் சத்திய சங்கற்ப சமஷ்டி ஜீவபாவ மடைவுற்று தனது சங்கற்ப அதீனவிருத்தி வியஷ்டி ஜீவபாவத்தை யடைவுறும், ஆண்டுப் பூர்வ சங்கற்ப விருத்த அருத்தத்தில் வியஷ்டிகளின் சத்திய சங்கற்பத் தன்மைச் சித்தி யாகாதாமெனப் பரிகரித்துக் கொண்டு ஸ்ரீவசிஷ்ட பகவான் சமாதானித்தல்:—மகா ஜீவாத்மாவாகிய அந்தப் பிரஹ்மம் சர்வ சக்திமய வடிவதாம்; ஜகத் விவஸ்தை சித்திக்குமாறு இச்சிப்பதாம்; அதாவது யானே எப்போதும் எல்லாவற்றினும் சத்திய சங்கற்பனாவேன் என்னும் இச்சையுடையதாம்; வியஷ்டி விபாகத்தினும் முன்னர் விபாகமற்றதாயே யொளிரும்; நிரந்தரம் எதனைச் சத்திய சங்கற்பத்தாற் சங்கற்பிக்கின்றதோ, அது அம்மகான்மாவாய அதற்கு விரைவினுண்டாம், பூர்வம் அதனாலிட்டப்பட்டதன் இச்சை அதனால், அயலிச்சையின் றடையாம், அதன்பின் வியஷ்டி விபாகமுண்டாம், பின்னர் விபாகத்தால் விபாகிக்கப்பட்ட தன்னங்கிச ஜீவர்களின் கற்பிதமாம், தண்டசக்கிராதி வெளியுபகரணத்தால், சுழல்கை முதலியவற்றால் குடமுதலியவை யுண்டாகின்றன வென்னும் அதனாற் கிரியைக்கிரமமாம், சங்கற்பமாத்திரத்தினா லின்றாம். அற்றேலாயின் மற்றைய மகரிஷிகட்கும் கிரியை முறையில்லாமலும் சங்கற்பத்தினாலேயே காரிய தரிசனமெங்ஙன் கூடுமெனின்? இங்ஙனம் அந்தக்கிரியை முறையில்லாமல் காரிய அநுதயம் நியதமாயவழி சில விடத்தே இம்மகரிஷியாதி வியஷ்டி சக்திகட்குக் கிரியை முறையில்லாமல் எவ்விச்சையாகின்றதோ அது பிரதான மாயசமஷ்டியினது இச்சையேயாவதாம், இவனுக்கு இச்சங்கற்பஞ் சித்திக்குகவெனப் பிரதானத்திற்கே ஆண்டு இச்சைகற்பிக்கப்படும், உண்டாகாத பிரஹ்ம சம்பந்தியாஞ் சத்தியினானே இந்நியமம் கற்பிக்கப்படுமென்றுணர்க. இன்னும் வெளிப்படையாகக் கூறக்கேள், எச்சீவப் பெயரியதற்குச் சக்தியபேக்ஷியிது பலிக்கின்றதோ பிரதானசக்திநியம அனுஷ்டானத்தா லன்றியாகாதாம். கிரியை முறைக்கும் பலசித்தியானது பிரதான சங்கற்ப அதீனத்தானேயாம், பிரதான சக்தி நியமம் இனிதாகப்பல சித்தியனுகுணம் ஆகாமற்போமாயின் அப்பயன் சக்தியினதீனமா யிருத்தலின் காரியாதி சேஷ்டைகட்கும் எவ்விடத்தும் பயனுண்டாகாமற்போம் இவ்வண்ணந் துணிபுறவே பிரஹ்மமே மகாஜீவனும் அதுவே வியஷ்டிசமஷ்டி யென்னும் இருகோடியுமாம் எனப்பலித்ததென வுணர்க, முடிபாகக்கூறின் இவ்வண்ணம் பிரஹ்மமே மகாஜீவனாய் ஆதியந்தங்களற்றதாயுளதாம், ஜீவகோடி மகாகோடியாம் ஒருசிறிதும் வேறன்று மின்றாம். விரிவாகக்கூறியதைச் சௌகரியமாக வுணர்தற்பொருட்டுச் சுருக்கிக் கூறக்கேட்பாயாக, திருசியத்தின் நாட்டத்தினாலே ஜீவனாகிச் சமுசாரத்தை யடைகின்றது, திருசியத்தை நாடாமலிருப்பின் விடமில்லாமற் சமமாயிராநின்ற பிரஹ்ம ரூபத்தை மீண்டு மடைகின்றது. பிரஹ்மத்தன்மையானது ஜீவர்கட்கு உபாசனையினாலே சமஷ்டித் தன்மையின் அடைவின் முறையினாலேனும், ஈண்டே ஞானத்

தால் நேராகவேனும் இனிதாகவுதிக்கும், இங்ஙனம் சிறியஜீவர்கட்குப் பெரிய
ஜீவக்கிரமாக் கிரமங்களினுல் முற்கூறிய பிரஹ்மபாவ மகாஜீவத்தன்மையானது
தாமிரங்கட்குப் பொன்மையானது இரச ஔஷதங்களாற் பாகமுறையாலே
னும், பரிசையோக முளதாகவே முறையிலதாகவேனும் உண்டாவதேபோல
இனிதாகவுண்டாம். ஜீவஜகத் பாவங்களே யாராயின் அறிவின் வல்லபமாத்திர
மேயாகும் அயற்பொருளாகாதாம், ஈண்டுப் பிரத்தியக்குருவமகாகாசத்தில் இவ்
வண்ணம் இக்கூட்டம் அசத்தாயினும் அறிவின் வல்லபவடிவமாகத் தன்னுன்
மாவே சத்துப்போ லுதித்திலங்கும். சுயமாகவே சித்திற்கு எவ்வல்லபம் இனி
தாக இயைகின்றதோ அதுவரும் நாயதேகாதி அகம்பாவமென அறியத்தக்க
தாம். அவ்வறிவின் வல்லபம் யாதெனிற்கேட்டி ! சித்திற்கு ஜகத்தின் சமஸ்கா
ரத்தாற் சமஸ்கரிக்கப்பட்ட மாயைப் பிரதிபிம்பத்தால் அஃதொன்றை ரசித்த
லால் தனதாத்மாவின் சுவாதாம், தன்மயத்தன்மையால் அநந்தமாம் அஃது இப்
புவன விஸ்தாரமென அவ்வான்ம அறிவின்கண்ணே யிலங்கும், அந்த அழியாத
தான சித்தின்சுவாதே உண்மையாய சித்துருபத்தினின்றும் பேதிக்கமுடியாத
தேயாயினும் பரிணும விகாராதி சப்தங்களினுனே தன்னுற்றலினுனே வேறு
போலும் நன்கறியப்பெறும், சித்திற்கும் அதனதீனப்பிரகாசம் வாய்ந்ததிருசிய
த்திற்கும் இயற்கையாகவே யாதொரு அவிச்சின்ன விலாசவடிவப் பிரிவுபடா
வியற்கையுற்ற சுவாதுளதோ அதுவே யுலகமென மயக்கால் இருக்கின்றது.
ஆண்டும் அகந்தை தரிசனம் முன்னராம் அதனுலாக்கப்பட்ட பரிச்சின்ன வுலக
ருபதரிசனமாம், ஆகாயத்தினும் நுண்ணியதாகிய சித்தினது இந்த ஆற்றல்
விரிவாக யாதொன்றுளதோ அஃதியற்கையினுலேயே இவ்வகந்தையை யினிது
நோக்காநிற்கும். தன்னிற்றன்னுல் தன்வடிவாய்வாரிதிகர்ப்ப இதனதெவ்விலக்க
முளதாமோ அக்காலிது வெளிக்குவெளியில் தூலத்தன்மையின் மேன்மைப்
பரம்பரையில் பிரஹ்மாண்டங்களே முடிவிலுடைத்தான அகந்தை யணுவைக்
காணுநிற்கும், நிற்கவே அறிவின் வல்லமைக்கே யுலகெனப் பெயராகுமேயல்லா
மல் உலகம் வேருகவுளதென லின்ருமெனப் பலித்ததாகும், மிகுந்த ஆற்றலோடு
கூடிய அறிவானது அழகாக எவ்வாற்றலே நிகழ்த்தாநிற்குமோ தன்னிடத்திற்
ருனேயதனுல் அதற்கே யுலகமெனப் பெயராம். அகங்கார கற்பனே சித்தின்
அதீனமெனவும், தன்மாத்திரை முதலியவுலக கற்பனே அதனது அதீனமென
வும் நிலேபெறவே எதனததீனம் அன்னியகற்பனே யென்ருமோ அதுவேயெஞ்சி
நிற்கும், சித்தின்விடயம் அகங்காரம் அதுவே இராகவ ! கற்பனேயாம், தன்மாத்
திரை முதலியவை சித்தேயாதலின் இருமை யொருமைகள் எவ்விடத்துள்ளன
வாம் ? பொய்மெய்க் கற்பனேகளுக்கிடையில் நீ நான் என்னும் சேதனபரிச்சேத
கற்பனேயேதியாகிக்க முடியாதனவாம், ஜீவபாவப்பொருட்டு நிமித்த வதுக்களா
கிய வாசனேகருமாதிகளும் உபாதானங்களும் இனிதுதியாகிக்கப்படில் எஞ்
சியதாகத் தானுகவே விகற்பமியாதொன்று மில்லாமையின் சன்மாத்திரரூபமே
யடையப்படும் ஞானத்தானே திருசியமும் அதனேடுகூடிய சத்தையும் நழுவிய
போது முன்னர்ச் சித்தித்திருக்கும் அதிஷ்டானசத்தை இருந்தது போலவே
மேகம் நீங்கிய வழி நிருமலவியோமசத்தைபோலுமாம். சித்தினுலிலங்குந்தனது

சத்தை ஆதியிலிருந்ததுபோலவே உதிதமாகி யபின்னமாய்க் காணப்படும் விண்ணின் சத்தசத்தைகளைக் கண்டிலமன்றே; அனுபவிக்கப்பட்ட நீஷ்பிரபஞ்சத் தன்மையை யனுமானித்துக் காட்டவுங் காண்பாயாக, மனதின் சேஷ்டை வடிவமாகிய சூக்ஷுமமானவுலகம் சூனியமேயாம், அங்ஙனமே இந்திரியங்களும் அவற்றை நடத்துந் தேவதைகளும் வாழும் ஆலயமாம் ஆகாரத்தோடு கூடிய தூலம், விசுவவிராட்டு ரூபமென்னும் இருவகையுலகும் சூனியமாகவே யிருக்கின்றது. அறிவின் வல்லமைவடிவமாயிருத்தலின் வெறென்று மன்றும். அண்டவியாத்தியாதி சித்திக்கும் பொருட்டு உதாரணாதிகளைக் கேட்பாயாக, யாது எதன் விலாசமாமோ அதனினுமது ஒரு காலத்திலும் வேறாகமாட்டாது, அவயவத்தோடுகூடிய நீர் முதலிய காரியங்களாகிய அலை முதலியவற்றின்கண்ணும் அவ்வாறு காணப்பட்டதென்றால், அவயவமின்றிய சித்தின் காரியத்தில் கூறற்கென்னை கதையுளதாம். இவ்வாறாகவே, நாமரூபங்களொன்றுமின்றிய அபரிச்சின்ன சித்துருவமே உலகத்தின் மெய்யான வுருவமெனப் பலித்ததாகும், திருசியமற்றதாய் நாமரூபமற்றதாயிருக்கும் அறிவுக்கு நித்தியம் எவ்வுருவமுளதோ அவ்வவ்விளக்கவடிவமா யிராநின்ற வுலகிற் குருவமாம். விபரீதமாகப் பார்த்த போதிலும், உலகச் செயற்கை சித்தின் செய்கையேயாகும் எனத் துணியப் பெறும். மனம், புத்தி, அகங்காரம், பூதங்கள், மலைகள், திசைகள் முதலனவாக உலகத்திதியின் எவ்வெச் செயற்கைகள் காணப்பெறுகின்றனவோ, அவையெல்லாம் அறிவின் செயற்கைகளேயாகும். இவ்வண்ணம் உலகம் அறிவு மயமாகவே சித்தன்மத் தன்மையே துணிபாம். சித்தின் சித்தன்மையே யுலகமென வறிவாயாக, அஜகத்துச் சித்வமாகாதாம்: அஜகத்தன்மை யுண்மையின் அசித்துச் சித்தாம் விளக்கத்தான் வேற்றுமை யுலகெங்ஙனும்? சித்துச் சித்துத்தன்மைகட்கும், கற்பனைரூப விளக்கத்தான் வேற்றுமை யுண்மையாயின்றுமென வுலகெங்ஙனும்? வருணிக்கப்பட்ட ஜகத்தின் சின்மாத்திரத் தன்மையை அநேக விசித்திர வசனங்களால் அதிதிடமாக விரித்துரைப்பக் கேட்பாயாக. சித்தாகிய மிளகாயின் விதையின் தற்குரிய உட்சக்தி யாதொன்றுளதோ, அவ்விப்பொருட் பிரகாசக சக்தியே ஜீவன். அவனுபாதிபூத தன்மாத்திர மாத்திரமாய் ஜகத்தென்னும் வேடத்தோடும் நிலவுகின்றது. அதன்பின்; சித்தத்தினின்றும், அகங்கார சக்தி விளக்கமே அசைவு. கருமப்பிராணச் சூழ்ச்சியால் ஜீவசப்த வாச்சியமாய்ப் பவிக்கும், அவ்வாறாயினுஞ் சித்தினியற்கை மாறாதாம், சித்திற்குச் சித்தின்றன்மையானே நெகிழ்ச்சியானது தன்விகாரங்களாம்; அகந்தாதிகளினால் விலக்கப் பெறுவதாய்த் தான் சம்பாதித்த ஜீவாதி நாமவடிவத்தை யடைவுற்றபோதினும் அதனை விலக்கும் வடிவவுபாதியானது பொய்யாயிருத்தலின், உளதாகாதென வேற்றுமைத் தோற்றமே யுண்டாகாதாம்; அறிவசைவாற்றல் வேற்றுமையான் அகங்காரப் பிராண வுபாதியுற்ற ஜீவவேற்றுமை வருமேயெனின்? அறிவு முக்கியவகங்காரங்கருத்தா, அசைவு முக்கியப்பிராணன் கிரியை, ஆம். தற்கிரியை பினும் கருத்தாபேதிப்பதின்றும்; ஆகலின், அறிவசைவோடுகூடிய புருடனே ஜீவனுவன். இங்ஙனம் சித்தமன இந்திரியாதி பாவத்தினுஞ் ஜீவபேதமாகாதாம், ஜீவோபாதி மனமேயாம், கோளக வேற்றுமையால் இந்திரியபாவமா யமைந்

திருத்தலின், ஜீவன் சித்தத்தசைவாம், புருடரின் சித்தம் அதுவேயாம், மன
மானது பொறியுருவமாய்ச் சத்தையைப் பலபோத மடையும்; இங்ஙனம் ஜக
ஜீவபேத மொழிந்தவழி என்னபயன் கைவந்ததோ வெனின்? எதனானே
அத்தியந்தந் துச்சமாய காரியகாரணாதி யியற்கைவாய்ந்த வுலகம் முற்கூறிய
முறையானே சிற்பிரகாசத்தின் ஒற்றுமை யுற்றதுபோன்று அதனபின்ன இரு
ப்பு விளக்கமுற்றதாகி யிலகுமோ அதனாலே வேறொன்று மின்றாமெனச் சர்வ
விசேடங்களுஞ் சாந்தமாய பிரத்தியக்காத்ம ரூபமே யடையப்பெறும். ஆண்டுச்
சர்வ அநர்த்தங்களும் நிவிருத்தியாம். சேதிக்கத் தகாதவன் யான், தகிக்கத்தகா
தவன் யான், நனைக்கத்தகாதவன் யான், உலர்த்தத் தகாதவன் யான், நித்தியன்
யான், எங்கு முள்ளவன் யான், ஸ்தாணு யான், அசலன் யான், என்னும் அநு
பவ நிலையே திதிபெறும். இதனை யறியாமலே துவைதவாதிகட்கு விவாதபேத
மாம். எம்மனோர்க்கின்றாம், தந்தம் மயக்கத்தால் அன்னியரை மயக்குவிப்பவ
ராய் விவாதிப்பவரேபோலும் ஈண்டும் விவாதிப்பர். யாமோ மயக்கமற்றவரா
யுள்ளேம். திருசியத்தில் அறியாதாரறிந்தாரின் மூர்த்த அமூர்த்த பாவனையா
லாக்கப்பெற்றதேயாம்; சத்திய மித்தியத் தன்மையாலாந் துவைத அத்துவைத
விபாகமென்றுணர்க; அஞ்ஞர்களான் மிகவுங் கருதப்பட்ட மூர்த்ததிருசியத்தின்
கண் விகாராதிகள் தனியேயுண்டாம், அறிஞரானே சாக்ஷாத்கரிக்கப்பட்ட
சத்வடிவ சிதாகாச அமூர்த்தத்தின்கண்ணேவிகாரமின்றாம். சித்வசந்த ஸ்ரீ யாகிய
சக்தியானது சித்தாகிய தருவின்கண்ணே திருசியப்பற்றுதல் வடிவ்ஜலந் தெளித்
தலால் ஆகாசாதியாக மேலேவெட்டவெளியாக விரிந்தமாயை காலாதிநாமங்களை
யுடைய தன்பூங்கொத்தை விஸ்தரித்துக்கொண்டிருக்கும் பிரஹ்மமானது தன்ன
தீனமான கற்பனைக்கிரமங்களால் ஜகத்ஜீவபாவத்தை யடைந்திருப்பதே போலத்
தன்னதீனமேயாய போதக் கிரமங்களால் சொரூபத்தின்கண்ணே நிலைபெறும்;
சித்தானது தானாகவே கெடாதகருவாயிருந்தே முதலாகாச கற்பனத்தில் அவ
காச இருப்பால் விசித்திரமாக அண்டத்தைப் போன்ற பிரஹ்மாண்ட ரூபமாயி
லங்கும், அதன்பின் அண்டஜான்மக வாயுவென்னும் சூத்திராத்மாவாதல் வாதஸ்
கந்த ரூபமாதல் விலக்ஷணமான அசைவுடன் தானாகவே யிலங்காநிற்கும். பின்
கூறப்படும் தேயுவுண்டானபின் சித்தானது சுயமாகவே விசித்திரமான அப்புத்
தத்துவத்தை யடைந்து விளங்கும், அதுவும் மண்பறித்துண்டாக்குந் தடாகாதி
களல்லவாம், என்னை? பூசிருஷ்டியாவதற்குமுன்பு அவைபொருந்தாவன்றோ.
அச்சித்தானது தானாகவே விசித்திரப் பொன் வெள்ளி முதலியதாதுக்களோடுற்
றபிருதிவித் தன்மையையடைந்தது. சிறப்புவாய்ந்த தேவஅசுரமனுடர்களின்
தேகாதித்தன்மைகளையும் உண்டாக்கியடைவுறும் உலகி னீரலாம் நிலவுவடிவமா
யும்தானே யாம், பூமிசம்பந்த ஔஷதி ரசபேதங்களும் சந்திர அதீனமாயிருத்த
லின் தன்விசித்திரத்தோடமைந்த ரசோல்லாச சததோதித சித்தொளியாகத்
தானேசித்தேவெளிப்படும், அச்சித்தொளியானது பெரும்வடிவினதாம். ஈண்டுத்
தேயுவின் சிருஷ்டி பாடக்கிரமத்தினிம் பொருட்கிரமம் பலமுடைத்தென்றபடி
முன்மொழிந்த வாயுசிருஷ்டியின் பின்னுணரப்பாலதாம், சித்தண்டமென்பதாதி
யாவுமே யாண்டும் ரூபகமாயேனு முணரப்பாலதாம். தன்ஞானத்தானே பாகிய

திருசியம் தானுக ஒழிந்துபோகவே வெளிப்பட்ட பூர்ணபாவசித்தானது நிலை பெற்றுநிற்கும். தானுகவே ஸ்தாவரங்களில் ஜாட்டியத்தன்மையால் துயிற்சம்பந்த மானபதத்தையடைவுறும் கூறியபொருளையே தொகுத்துக் கூறுமிடத்து மகாகாச மானது அவிசாரமுளதாக அசைவியற்கை வாய்ந்த பிராணுதியான்ம பாவகற்பனை வந்தவழி அசைவுறுஞ் சமுசாரியேயாம், தனதாராய்ச்சியானே வெளிப்பட்டசித் துத்தன்மையானே தன்னியற்கையாய சித்தின்கண்ணே நிலைபெறும், அத்தகைய அவஸ்தையமைந்தானுக்கு ஜகத்திருக்கின்றதா? இல்லையா? இருக்குமாயின் சமு சாரத்தினடைவாம், இலதாமாயினே அசத்வியாத்தி வழக்காம்எனின்? எப்போ துமே ஜகத்தானது பிரஹ்மசத்தையினுலுள்ளதேயாம் தன்சத்தையினுனே இல் லாததேயாம். சித்தேஜசின் ஒளிரூப ஜகத்துளதுமாம் இலதுமாம், சிதாகாச வக சூனியத்தன்மைச் சகத்துளதுமாம் இலதுமாம், சித்தொளிமகாரூபச் சகத்துளது மாம் இலதுமாம், சிற்காற்றுலசைவுறுஞ் சகத்தது உளதுமாம் இலதுமாம், சிற்கனத்துவாந்த கிருஷ்ணத்தன்மைச் சகத்துளதுமாம் இலதுமாம், சித் தருக்க ஆலோகதிவச சகத்துளதுமாம் இலதுமாம், சித்துமைத்தூட் டைலப் பரமாணுவாஞ் சகன்மயன்முறை, (தைலந்தாகமாகியவழி மைக்கேபோலும் உல கம் பாதமாகியவழி சித்தெஞ் சலான் மைத்தகைமைக் கூற்றும், காரியத்தகை மைக்கருத்தாற் கழறியதன்றும்) சித்தக்கினியுஷ்ணமாம் உலகரேகை சிற்சங்கின், வெண்மையாம் உலகம், சின்மலை வயருமுலகம், சிந்நீர் நெகிழ்ச்சியா முலகம், சிற்கரும்பின் மாதுரியமாம் உலகம், சிற்பாலின் நெய்த்தலாம் உலகம், சிற்பனிச் சீதத்தன்மையா முலகம் சிற்சுவாலைச் சுவலனமாம் உலகம், சிற்கடுகின் நேயமா முலகம், சிந் நதியின்திரையாமுலகம் சித்தேனின் மாதுரியமாமுலகம் சிற்கனககே யூரமாமுலகம் சின்மலரின்மணமர் முலகம், சிற்கொடிமுனைப் பலமாமுலகம் எவ்விடத்தும் சித்தினுந்தனியிலா வுண்மையானே யுலகத்திற்குச் சித்தன்மத்தன் மைகருதப்பட்ட தாதலின் சிற்சத்தையே ஜகத்சத்தையாம்: ஜகத்சத்தையே சித் வடிவமாம். ஈண்டுப் பேதவிகாராதிகள் ஆகாயத்திற் கருமைபோற் றோற்றினும் நிலைபெறுவாம், முப்புவனமும் அசத்தாக இருந்தபோதினும் கூறியமுறையானே சன்மயத் தன்மையானே சத்தாம். ஜகத்தசத்தாயின் வேறுவத்துவாமே யெனின்? விகற்பமற்ற ததன்வடிவாதலின் சத்தையசத்தை யொருமையே மருவும், கற்பிதநிரூபித சத்தையசத்தைகள் அதிஷ்டானத்திற் கயலாகக் காணப்பெறுவ ன்றே. அவயவத்தோடுற்றதற்கும் வுறுததற்கும் எங்ஙனந்தனிப்படாச்சத்துவம் என்றுரைக்குந் தார்க்கிகரை வித்வதனுபவங்கொண்டே விலக்கித்திக்காரம் புரிய லாம், அவயவ அவயவித்தகைமைச் சப்தார்த்தங்கள் முயற்கோடு போன்றன வேயாம், அனுபூதியகற்றும் பொருட்டு எவர்களாற் கற்பிக்கப்பெறுமோ அவர்க ளைத் திரஸ்கரிக்கலாம், அதன் கண்ணேயூகவிரோதமிருத்தலின், மலை கடன் மண் முதலியவைகளுடனும் அவ்வதன் ஈச்சுராதிகளுடனும் இலங்குமுலகம் ஆண்டில் லாததேயாம். அறிவுமாத்திரம் ஒன்றுயிருத்தலின் ஆண்டு அவயவாதிகளின் மயக்கம் எங்ஙனம் அடைவுறும், சிலையிதயத்தினும் கனமாயிருப்பினும் தன்னு காயத்தில் சித்துத்தெளிவாகவே யிருக்கும்; மித்தையாயிருத்தலின் அசத்தாகவே யிருக்கும் யாவற்றையும் உள்ளேயவகாசமீந்து படிகமலையான்து பிரதிபிம்பகரத்

திற் கவகாசமிந்து தரித்தலே போற்றரிக்கும், அகிலத்திற்கும் அசத்வமுண்டாதல் எங்ஙனமெனின்? சர்வபதார்த்தஅதிஷ்டான சிதாகாசத்தின்கண்ணே இப்பூதாகாசஜன்னியவாயு முதலனவாய சாவயவப்பிரபஞ்சங்கள் இராவாம், ஆண்டசங்க இயற்கைவாய்ந்த பூதாகாசத்தின் கண்ணும் அதன் காரியப்பற்றுண்டாகாதாமாயின் சிதாகாசத்தின் மாட்டுச் சத்தா அசத்தாதியசம்பந்தங்கள் ஒருதலையாயிராவாம், சத்தை யசத்தையான்மதை யகந்தைமமதை முதலனவாய பற்றுயாவுமிராவாம்; ஆயின் அறிவின் கண்ணசத்தாய ஜகத்தின் புகுதலின் விளக்கம் எங்ஙனங் கூடுமெனின் ? இலையினும் வேருகக்காணுணுமையின் அசத்தாகவே அதன் அயல் வடிவாகவும் அயல் வடிவன்ருகவும் நின்று இலை நிறையப் புகுந்த ரேகைக் கூட்டத்தை இலைதரித்தலே போலுஞ் சித்து அன்னிய அனன்னிய வடிவமாய இவ்வியாவற்றையும் உள்ளே சித்தியற்கையானே தரிக்கும்; நிர்விகார ஆகாயத்தை யுபாதானமாக வுடைமையின் ஜகத் விகாரத்திற்குப் பொய்ம்மைபுகன்றேம், பொய் விகற்பப் பன்னூறுவடிவச் சித்தச்சமட்டிவடிவ இரணியகருப்ப காரணமுடைமையானும் ஜகத்திற்குப் பொய்ம்மை புகலலாம் என்னை, எல்லாக்காரணக் கூட்டங்கட்கும் ஆதிகாரணம் பிதாமகராம். இயற்கையானே சித்தகாரிய மனோரத சம்பந்த விகற்பங்கள் அசத்தாதலினானே சித்தம் அகாரண வடிவமாம் : அதுவே பிதாமகரா். சேத்தியமாகிய திருசியம் அசத்தியமாகவே சித்தும் அசத்தாம். அதற்கது பிறழ்ச்சி காணப்பெருமையின் எனச் சொல்லானும் சித்திற் கசத்துவஞ்சித்தியாதாம், என்னை, சித்தானது அனுபூதியினானே சித்தித்த பதார்த்தமன்றோ, அனுபவ விருத்தத்திற்கு வாக்கிற்குப் பிராமாணியமின்றும். உலகம் சுயமாகவே சத்தாக இருக்குமாயின் ஞானமுதலிய உபாயங் கோடிகளானும் கெடுக்க முடியாததேயாகும். சத்திற்கு முற்றினுங் கெடுதல் பொருந்தாமையானே மீண்டும் வெளிப்படுதல் தள்ளொணுமையின் மோக்ஷமின்று என்னும் வழக்கன்றோவாம் என்னை, யாதுளதோ அது உதிக்கின்றதென்றன்றோ விரையினின்றும் முளைபோற் கண்டோம். திருசியஇருப்பிற் பெரிய பிடிவாதமிருப்பின் அனுபவத்தானே வேற்றுமையையகற்றிப் பரமபதவடிவ சின்மயத்தன்மையானே அச்சத்தையானே யதைச் சுவீகரிக்கலாம்; ஆகாயத்திற்போல இம்முப் புவனமும் இம்மகாசித்தினுட்பேதமற்றதாகவேயிருக்கின்றன, இச்சமஸ்த திருசியங்களும் பரமபத மயமென்னும் பெருந்துணிபுடையவனாக அனுபூதியினனாகுதி. ஸ்ரீவான்மீகி முனிவரானவர் மேற்கூறிய பிரகாரமாக ஸ்ரீ வசிஷ்ட மகா முனிவர் கூறியதைப் பரத்துவாஜர் பொருட்டுக் கூறியபோது பகற்சென்றது; சூரியனும் அஸ்தத்தை யடைந்தனன். பரத்துவாஜர் முதலிய முனிவர் சபையும் ஸ்ரீவான்மீகி பகவானுக்கு நமஸ்காரத்தைச் செய்துவிட்டுச் சாயங்காலஞ் செய்யுவேண்டியதாய சந்தியுபாசனை அக்கினிஹோத்திராதிகளைச் செய்யும்பொருட்டு ஸ்நானஞ்செய்வான்சென்றது, பின்னர் இரவுகழிந்தபோது காலையிற் சூரியகிரணங்களோடும் மீண்டும் ஸ்ரீவான்மீகி சந்நிதியை நோக்கி வந்தது.

14-வது பிரஹ்மப் பிரதிபாதனம் முற்றிற்று.

3-வது தினம்.

---

## 15-வது இராஜ வர்ணனம்.

இப்போது திருஷ்டாந்த ஊகக்கூட்டங்களாற் கூறிய பொருளை மீண்டும் அனுபவித்துக்கொண்டு விஸ்தாரமான மண்டப உபாக்யானத்தைத் தொடங்குகின்றார்:—இவ்வுலகமானது சிதாகாசமாகவே யிருக்கின்றது, இருக்குமாயின் எங்ஙன் வேறாகத் தோற்றல் கூடுமெனின்? நிருமலமான விண்ணின்கண் மயலான் முத்துக்கூட்டங்கள் விளங்குகின்றனபோலு மென்றுணர்க. சிதாகாசம் எங்ஙனந் தன்வடிவாகவே ஜகத்தைக்காண்பிக்கின்றதோ அங்ஙனமாய திருஷ்டாந்தத்தைக் கேட்டி ! மூவுலகப்பதுமையானது வெளிப்படுத்தப்படாமலே விளங்குவது போலும், சித்துத் தம்பத்தானே அது வெளிப்படும், ஈண்டு வெளிப்படுத்தும் கருத்தா கிடையாதாம், அதனை வெளிப்படுத்துங் கருத்தா சேதனத்திற் கயலாய்ப் பிரசித்த மில்லாமையின் நிருவிகார அசங்கத்திற்கு வெளிப்படுத்துதல் கூடாமையின் என்றுணர்தல் வேண்டும். சமுத்திரத்தினுட் சலத்தினசைவுகள் இயற்கையானே கெடாதன வாயினும் திரைவேகங்கள் பவிப்பன போலும் பரத்திலுலக வுணர்வுகளாம். இவ்வுலகத்தை மிகவும் மகத்தாக மூடர்கள் அனுபவித்தபோதினும் அறிஞர்களது திருஷ்டியானே உண்மையாகச் சாளர இரவியொளியணுவினும் மிகவும் அற்பமாம். இரவியினொளியினானே சாளரத்துளையிலக்கப்பெற்ற தண்டம் உலக்கை முதலிய வடிவத்துட்பட்ட தூளிகளுங்கூட அணுக்களைக்குறித்து அசலங்களேபோல உலகத்தோற்றத்தைக் குறித்து அதி தூலங்களாம்; அன்றியும், உலகத்தை யொளிர்விக்குஞ் சாக்ஷியாய சிற்பிரகாசத்திற்கு, சூரியாதியாலோகப் பிரகாசத்தினாலே தோற்றுகின்ற சாளரத்துட்பட்ட பரமாணு முதலியவற்றினும் அதிசூக்குமத் தன்மையானதுளதாம். அதனையே யினிது காண்பிப்பான் சூரியகிரண வதனணு வைதர்மியம் சித்தின் கண்ணே காண்பிப்பாம். பிரஹ்மத்தினும் வேறாக இவ்வுலகத் தோற்றமானது தோற்றுவதின்றாம்; சாளர இரவிகிரணஜாலமோ வியதிரேக அனுபூதி தருவதாம்; வேறாக விளங்குவதில்லையென விளம்பியதன்கண் ணனுபவ விரோதம் வாராதாம் என்னை, விண் வடிவமேயான பிருதிவி முதலிய இவ்வுலகங்களியாவும் அனுபவிக்கப்படுவதேயாயினும் கனாச்சங்கற்பங்களே போல இல்லாதனவேயாமன்றோ. அநேக தினவஸ்தாபின்னத்திற்கு எங்ஙனங் கனாச்சங்கற்பத்திற் கொப்பாவது எனின்? கேட்டி ! இவ்வுலகத்தின் கண்ணே விஞ்ஞானாகாசரூபம் வாய்ந்த மூர்த்தத்தன்மை யங்கீகாரமானது எவ்விடத்தும் கானலாற்றினீர் போலச் சம்பவியாதாம்; அபிண்டமாய்க் கவரத்தக்க சங்கற்ப நகரசமானமான இவ்வுலகில் மயல் வடிவமான திருசியத்தன்மையானது கானலின்கண்ணே நதிபோன்றிலங்கும். உலகங்களின்றிருசிய இலக்குமியைச் சாக்ஷி சைதன்யத்தின்கண்ணே யோரிடத்திற கனவிலேற்றிச் சாராசாரவிவேக புத்தி வடிவத்துலைநடுமுட் பிரதேசத்தாற் சமமாய்ச் சீர்தூக்கித் துணிந்தவழி அதுவே நனவிற் கனாப்போலும் வியாபார மற்றதாய் விண்ணிகர்ப்பச் சூனியமாய்ப் பிரஹ்மமேயாய்ப் பிரசித்தமாம்; ஆகவே அவிவேகிதிருஷ்டியினானே பிரஹ்மாதி சத்தார்த்தத்தினும் உலக சத்தார்த்த பேதமாம்: தத்துவ முணர்

தோர் திருஷ்டியினுனே ஆகாதாம். ஜகத் சத்தார்த்தைப் பஜிக்கு மஜ்ஞவிஜ்ஞானத்தை விடுத்து ஜக்த் பிரஹ்ம ஸ்வ சத்தங்களின் அர்த்தத்திற் பின்னத் தன்மை கிடையவே கிடையாதாம். ஆயின் தத்துவமுணர்ந்தோர் திருஷ்டிக்குச் சகத்தைக் குறித்து அதன் சாக்ஷி தரிசனம் எங்ஙனமெனக். கூறின் சூனியவடிவ ஆகாசத்தைக்குறித்து அதன் ஆலோகத்தின் பிரகாசத்தன்மைத் தரிசனம் போலும் என்றுணர்தல் வேண்டும். இத்திருசிய சின்மாத்திரமோ ஆகாயத்தைக் குறித்துச் சூரியனொளி விளங்கலே போலும்; ஆயினெங்ஙனம் சாக்ஷி சைதன்யத்தைக் குறித்துச் சகத்தின் றரிசனம் எனின், ஆண்டும் எவ்வாறு மேகத்தைக்குறித்துச் சங்கற்ப மேகம் சூக்குமமாமோ அவ்வாறே சூக்குமமாம். மிகவும் மலின மாயிரா நின்ற திருசியத்திற்கு மிகவுந் தெளிவாயிரா நின்ற சின்மாத்திரத்தன்மை யெங்ஙனமாமென வினவின்? வெளியுட்டிருசியங்கட்குப் பிரதீதி காலத்திலேயே மலினத்தன்மையாம், மறையுங்காலத்திலோ பரஸ்பர அபேக்ஷையால் மிகத்தெளிவதாந்தகைமையே எஞ்சாநிற்கும்; நனுப்புரவரத்தைக் குறித்துக் கனுப்புரஞ் சொச்சமாமென்ன இந்நனுவுலகம் சங்கற்பத்தாலாய சொப்பனத்தாலாய வுலகத்தைக் குறித்துச் சொச்சமாம். முடிந்த பொருள் யாதோவெனின்? ஆகலின் திருசிய மல்லாத சித்துருவமாம் விண்ணே கேவலம் ஜகத்தாம், அருத்தசூனியங்களாய வியோமஜகத் சப்தங்கள் சின்மயங்களாய்ப் பரியாயங்களாம் என்றுணர்தி; ஆகலின் ஈண்டு ஜகதாதி திருசிய வஸ்துக்கள் ஒரு சிறிதேனும் உண்டாகவேயில்லை யென்றுணர்தி. பெயரற்றதாயும் வெளிப்படாததாயுமுள்ள வஸ்துவானது இருந்தபடியாகவே யிருக்கின்றது. கூறிய முறையே மாயாகாசத்திலிருக்கும் உலகமானது ஆவரணமற்ற சிதாகாசமேயாம், பரிச்சின்னஜகத்தை யபேதஞ்செய்யின் சித்திற்கும் அத்துணை மாத்திரத் தன்மைதானே ஆமெனின்? சிற்பிரதேசமானது அணுவென அற்பதரமாயிருந்த போதினும் அதாவது அற்ப அந்தக்கரண விருத்தியதன் வாதனைப் பரிச்சின்ன அணுதமசிற்பாகமாயினும், சருவஜகத் பரிச்சேதபானத்தால் அதனுட்பட்ட தான ஜகத்திற்கு அதனைக்கூட நிரப்பு மாற்ற லிலதேல், பிரஹ்ம சைதன்யத்திற்கு அத்துணை மாத்திரத்தகைமை எத்துணைத் தூரத்தென எள்ளற்பாலதாம். மகா விஸ்தாரமாயிராநின்ற உலகின்நிலைபேறுனது விண்ணுக்கச் சூனியம் போன்றிரா நின்ற சித்த விருத்தி யதன்வாதனையுள்ளந் தர்ப்பூதமாத லெங்ஙனமெனின்? மூர்த்தி சுவீகாரமற்றதாய்த் தெளிவான் சிதாகாயமயமாகவே யிருக்கின்றது, விண்ணின் கண்ணே விண்மய வோவியம் போன்றேயிருக்கின்றது ஆண்டஃதனுபவத்தேறத் திருஷ்டாந்த மியாதோவெனின்? சங்கற்பபுரம் போலுமிருக்கின்றதென்றுணர்தி. கூறிய பொருளில் ஸ்ரீ இராகவருக்கு ஐயந்திரிபு துணிபின்மைகளிருப்பதைக் குறிகளாலுணர்ந்த ஸ்ரீவசிஷ்டர் அவற்றை யகற்றும் பொருட்டு அதற்குவேண்டிய யுக்திகோடிகணிறைந்து கதை விசித்திரத்தால லங்கரிக்கப்பட்ட அதிவிஸ்தாரமான மண்டபஉபாக்கியானத்தைக் கேட்பிக்கும் பொருட்டுப் பதிஞ்ஞை செய்தருளுகின்றார்:—

ஹே இராகவ! ஈண்டிந்தச் சிரவணபூஷணமாயிரா நின்ற மண்டபோபாக்கியானத்தைக் கேட்பாயாக, கேட்ட மாத்திரையானே ஐயமில்லாமலிப் பொருள் சித்தத்

தில் விசிராந்தியையடையும். ஹே பிரஹ்ம சொரூபமாய ஆசிரியரே! போதத்தைத் விருத்தி செய்யுமண்டபோ பாக்கியான முழுவதையும் நல்லுணர் வுதிக்கும் பொருட்டு முன்முன்பதிஞ்ஞையிற்போல ஊக விலம்பமிலாது விரைவில் வேண்டிய பொருளைத் தொகுத்து அடியேற்குக் கூறி யருளவேண்டுமெனப் பிரார்த்தித்த ஸ்ரீ இராகவருக்கு ஸ்ரீ வசிஷ்ட பகவான் கூறியருளல்:—ஹே குழந்தாய்! இம் மகீபீடத்தில் விளக்கத்தோடு கூடியவனும் விவேகவானும் ஸ்ரீமானும் அநேகங் குமரர்களை யுடையவனும் கீர்த்தியாகிய சுகந்த ஹேதுவாய வங்கிச கமலம் போன்றவனும், பத்மனென்னும் நாமம் வாய்ந்த ஓரரசனிருந்தான். அவன் வருணாசிரம மரியாதையையும் வயங்குந் தீபமரியாதையையும் காக்குங் கருணைக்கருங் கடலாகியும், பகையிருளகற்றும் பாற்கரனாகியும், காந்தையாமாம் பற்கலைமதியாயும், தோடத்துரும்பைத்தொலை யெரியாயும், அறிஞர் அமரர் அருங்குழாத்திற்கோர் பொறிநிறை மேருவைப் போன்றவனும், பவக்கடலிற் புகழ்பான்மதியாயும், சற்குண வன்னச்சரமேயாயும், சம்பத்துருவத் தாமரைகட்கோர் விம்பவிமலவிண்மணியாயும், பகைவரைப் போரிற் பவனனைப் போல மிக நடுங்கிடச் செயும் வீரியனும், அதனானே, மானமாம் வலியுறும் மன வடிவினவாம் ஆனைகடமக்கோ ராண்சிங்கமாகியும், பகைவர்கண் மானபங்கமாதலே சிகை முடி தாழ்த்தச் சிரங்கொயானும், பெரும் வித்தையனைத்தினும் பிரியோனும், குரு வெலாவற்புதக் குணாகரனும், இந்திர சத்துருவெனப் படுமாசுரர்தங்கடற் கலக்கித்தனியாயிலங்கு மரும்பெரு மந்தரவசலமதாயும், விலாசப்புட்பக் குழுமது (வசந்தம்) வாயும், பல் பாக்கிய மலர்ப்படை யோனும் லீலைக்கொடி நடிலீகாலாயும், சருவாசாத்திய தரணியுத்தார முதலிய சாதன முயல்வாஞ் சாகசக் கிளருற்சாகக் கேசவனும், சுஜனதைக்கைரவச்சுகநிலவாயும், வேறுறு நடைகளாம் விடக்கொடிகளையே நீறுறப் பொடிக்கு நெடுந்தீயாயும், இருந்து விளங்கின நித்தகையிவற்குச் சுபகை பாரியை சொலும் பெயர் லீலையாள், விலாசினியாவாள், விளங் கெலாப்பாக்கியம் உடையவடிருவெனவுதித் தவள்பூவில், நாயகன் சேவை நவில்வகை யனைத்தினும் தூய பரிஜனந் துதைந்தவ ரெவர்க்குஞ் சேயனுகூலஞ் செயலினுங் கோமளை, ஆடல் பாடலமை மதுமொழியாள், ஆநந்தத் தொடுமந்தவருநடையுடையாள், இணையிரண்டாவது இந்தெழுமொளியாள், கூந்தற் குளிரளி கொண்மனோ ஹாரியாந் தண்டாமரை அருமுகமமைந்தாள், களிவிமலாங்கி, கர்ணிகைக் கவுரி, (கர்ணிகைபோலக் கர்ணிகையாலுங் கவுரி) சங்கமம் போலச் சரோஜனியானவள், கொடிவிலாசக் குந்தக்கூட்டத்தலர்பவளன்புமகரந்தத்தினள், இளந் தளிர்க்கரமும் இன்மல ரொளியுங் கொளுமது (வசந்தம்) த்திருவெனக்கொளுந் திருமேனியள்,சொச்சத்தனு வினள், சொலிபுண்ணியவதி, பரிசன்மகிழ்வு பண்ணு புண்ணியை, மாகக்கங்கைமகிழ்ந்தூர் வந்தென ஆகப்பொலிவினள், அன்ன விலாசினி, பூதலப்புட்பப் போர்ப்படையவனு மாதலெலா மகிழாக்கிடுவவற்குச் சீதளமாகச் சிரம்பணி செய்ய நீதிபயல் ரதியென்ன நிகழ்ந்தவள், கலக்கங்காதலனுறிற் கலங்கிடுவள், விலக்க மகிழ்வுயில் வியன்மகிழ் விரவுவள், ஆகுலம் பெரிதுறிலாகுலித்திடுவள், பதிவிம்ப மெரிப்பப்பகர்ந்திடு காந்தை, சினந்திடினுதன் சேர்பயத்தினளே.

15-வது இராஜ வர்ணனம் முற்றிற்று.

---

## 16-வது அரசி யிரங்கல்.

இப்போது காம போகங்களினின்றும் அதிருப்தி மீண்டுந் துக்காவசானத்தன்மை தேவர்களாலும் வேறோராற்றுஞ் செய்யமுடியாமை கூறப்படும். அவ்வரசன் அனன்னியதயிதையின் பதியாதலாலே செயற்கையற்ற பிரேமை ரசத்துடன் அந்தப்பூதல அப்சரசென்னுங் காந்தை யோடொன்றி இரமித்திருந்தனன். உத்தியான வனத் தூறுகளிலும், தமால வனங்களிலும், இரம்மியமான புட்பமண்டபங்களிலும், கொடிபடர் வீடுகளிலும், அந்தப் புரத்துள் அவர் அணைகளிலும், புட்பம் பரப்பிய வீதிகளிலும், வசந்த உத்யான ஊஞ்சல்களிலும், ஆடற்றடாகங்களிலும், சந்தனத் தருச்சயிலங்களிலும், தன்னாற்றலினாலேனும் இந்திரப் பிரசாதத்தினாலேனும் அடையப்பெற்ற கற்பகதரு விசேட மாய சந்தானக விருக்ஷ நிழற்றலங்களிலும், கதம்பநீப கிருகங்களிலும், மந்தார உதரங்களிலும், காந்தையோடுங்கூடி இரமித்தனன். விரிந்த குந்தமந்தார மகரந்த சுகந்திகளிலும், வசந்த வன ஜாலங்களிலும், கூவுங் கோகிலப் பக்ஷிகளிடத்தும், இரமித்தனன். பல ஆரண்யங்களிலுள்ள அதிமிருதுவும் பிரகாசமும் பொருந்திய தலங்களிலும், அருவிகளிலும், தூவா நின்ற துளிகணிறைந்து நிரந்தரம் தாரை பொழியுமிடங்களிலும், சைலங்களின் பாறைகளிலும், மாணிக்க மணிப்பலகைகளிலும், இரமித்துக்கொண்டிருப்பன். தேவ இருடி-முனி கிருகங்களிலும் தூரத்திருக்கும் புண்ணிய ஆசிரமங்களிலும் பிரியாது காந்தையோடு யாத்திரை செய்து இரமித்திருப்பன். இரவின் மலர்ந்தகுமதவதிகளிலும் பகலில் விரிந்த கமல ஓடைகளிலும் கறுத்த புன்னிறைந்த விரிந்த மலர் நிறைந்த கனிந்த கனி நிறைந்த வனத்தலங்களிலும் இரமித்திருப்பன். அச்சுந்தரன் சுரர்க் கொப்பான தாருண்யத்தாலும் சுரதங்களாலும் சுந்தரமான விடயங்களை யனுபவிப்பதாலும் அநேகம் விலாசசேஷ்டைகளாலும் அதிகோமளமான அன்னியோன்னிய கனமானபிரேமைரச மிகுதியினாலும் லீலாதேவியோடும்இரமித்துக் கொண்டிருப்பன். அவ்விருவரும் இலௌகிகமான பரிகாசக் கதைகளினாலும் புராண சம்பந்தமான கதைகளினாலும் அக்ஷரமுஷ்டி அஷ்டாபதம் கூடசதுர்த்த முதலிய அநேகஞ் சூதாட்டங்களாலும், விளையாடிக் காலம்போக்குவர். நாட்டிய திருசியார்த்தப் பிரபந்தங்களாலும், கேட்பதற்கு மாத்திரமாநந்தரசஞ் சொட்டும் காவியங்களிற் கட்டிய கதைகளாலும், அறிஞர்களது மதிகளாலறியத்தக்கனவாய மறைபொருணிறைந்த கூடசுலோகங்களினாலும் தேச காலவிபாகங்களாலும் நகரக்கிராம சேஷ்டைகளின் அனுகரணங்களாலும் விளையாடிக்கொண்டிருப்பார்கள். அநேக விதமான மாலைகள் சூடுதலாலும், பற்பல விதமான பூஷணங்கள் அலங்கரித்துக் கொள்வதாலும், லீலை விளையாட்டுச்சலனங்களாலும், விசித்திரமான ரசபோஜனங்களாலும், காலங்கழிப்பர். ஈரமானகுங்கும கர்ப்பூர தாம்பூல தளங்களை மெல்லுதலாலும், மலர்ந்தமலர் கொடி குன்றி மணி முதலியவற்றானே தேகத்தை மூடிக் கொள்வதற்காய நகக்கிள்ளுகளாலும், விளையாடுவர். பின்னோடித் தொடுதன் முதலிய முக்கியமான லீலைகளாலும், மாலையாயுதக் கிரமங்களாலும், கிருகத்தில் மலரூஞ்சல்களாற் பரஸ்பரம் ஆடு முறைகளாலும் காலங்கழிப்பர் ஓடங்களி லேறிச் சென்றும் நன்றாகச் சிக்ஷிக்கப்

பெற்ற யானை குதிரை ஒட்டகை முதலியவற்றின் ஜோடிகளிற் சவாரி சுழல்கை கமனுகமனங்கள் செய்தும், நீர் விளையாடலின் விலாசம் புரிந்தும் ஒருவர்மேல் ஒருவராகத் தெளித்து விளையாடிக்கொண்டும் இருப்பர். நிருத்தியகீதகலைகளிற் சொல்லியமுறை நடனதாள தாண்டவ மண்டனங்களாலும் சங்கீதங்கள் பாடுதலாலும், இன்கதைச் சல்லாபங்களாலும் வீணை பேரிமுதலியவற்றை வாசித்தலாலும் காலங்கழிப்பர். உத்தியானங்களிலும் நதிதீர விருக்ஷங்களிலும், இராஜவீதிகளிலும், அந்தப்புரங்களிலும், மேன்மாடிகளிலும், வேடிக்கையாக ஏறியும் இறங்கியும் இருந்தும்நடந்தும், ஓடியும்ஆடியும் களிப்பர். அவ்வரசனைப்போலவே அவனது பிரிய நாயகியாகிய தேவியும் அளவிறந்த சுகத்தையடைந்து வாழ்ந்தனள்; இவ்வண்ணம் வாழ்ந்துவருமோர்நாள் நல்லெண்ணமுடைய அக்கல்யாணி இவ்வாறு சிந்திப்பதானாள் :—இவ்வுலக நாயகனாகிய எனது நாதர் எனது பிராணனைப்பார்க்கினும் எனக்குப் பிரியராவர்; அவர் யௌவனஉல்லாசவராயும் ஸ்ரீமானாயும் ஜரைமரணமற்றவராயும் எவ்வாராவர்; ஆகிய அவரோடும் உன்னதமான ஸ்தன்னியங்களோடுகூடிய நான் புட்பக்கொடி வீடுகளில் அழகுவாய்ந்த தருணியாய் இஷ்டப்படி நூற்றுக்கணக்கான யுகங்கள் எப்போதும் எப்படி இரமிக்கமுடியும்? முதலிற்சந்திரவதன அரசர் ஜரையும்மரணமும் அற்றவராகுமாறு வேண்டியபடி தவம் ஜபம் இயம நியம அனுஷ்டானம் முதலியவற்றானே முயல்வேனாக. ஞானவிருத்தர்களும் தபோவிருத்தர்களும் வித்தைவிருத்தர்களும் ஆகிய பிராஹ்மணர்களை நரர்கட்கு மரணமானது எங்ஙனம் வாராமலிருக்கும் எனக்கேட்பேனாக. எனச்சிந்தித்து அத்தகைய மறையவரையழைத்துப் பூஜித்து மிகவும் வணக்கமாக ஹே விப்பிரேந்திரர்களே! அமரத்தன்மையானது எனக்கும் எனதுநாயகருக்கும் எங்ஙனம் உண்டாகுமென மீண்டும்மீண்டும் அவள் கேட்டனள். அதற்கு அவ்வருமறையவர் அம்மையே! தவம் ஜபம் இயம நியம அனுஷ்டானமுதலியவற்றானே சமஸ்தசித்தர்தஞ் சித்திகளுமினிதாகவே கிடைக்கும்;ஆனால் அமரத்தன்மையோ ஒருகாலும் கிடைக்கவே மாட்டாது என்றுசொல்ல அதைக்கேட்ட தேவி மீண்டும் தனதுநுண்ணுணர்வானே வருமாறுவிரைவிற் சிந்திக்கலானாள். பிரியநாயகர் பிரிந்துவிடுவரேயென மிகப்பயந்தனள். நாயகர்க்குமுன் எனது மரணம் தெய்வயோகத்தாலுண்டாமேலாயின் அதன்பின் சர்வதுக்கங்களும் விடுபட்டவளாகி எனது சொரூபத்தின்கண்ணே சுகமாகவாழ்வேனாக. பரலோகத்திற் செல்லினும் இச்சன்மஸ்மரணமின்மையின் நாயகர்வியோகத் துக்கம் அடையாமையின் ஆயிரக்கணக்கான வருடங்கள் சென்றபின் எனதுநாயகர் எனக்குமுன்பு தேகம் விடுவரேலாயின் எவ்வுபாயத்தால் ஜீவன் வீட்டைவிட்டு வெளியேறாமலிருக்குமோ அவ்வுபாயத்தைச் செய்வேன். எனதுநாயகரது ஜீவன் சுற்றி விளையாடிக்கொண்டிருக்கும் எனது பரிசுத்தமாய அந்தப்புரமண்டபத்தில் நாயகரால் பார்க்கப்பட்டவளாய் நித்தியம் இஷ்டப்படி வசிப்பேனாக. இப்பயன் சித்திக்கும்பொருட்டு இன்று முதல் ஞானவடிவமாகவிளங்காநின்ற சரசுவதிதேவியை சந்தோஷமுண்டாகும் வரை ஜபஉபவாசநியமங்களினாலே பூஜிப்பேனாக; என்றுநிச்சயித்து அந்த லீலாதேவியாகிய சுந்தரியானவள் நாயகருக்குத் தெரிவிக்காமலே நூலிற்கூறியபடி உக்கிரமான தவத்தைப் புரிந்தாள். அவ்வாறே அநேகநியமத்தோடுங் கூடியிருந்

தாள். அற்றேல் "பதியினல் ஆணைசெய்யப் படாமலே மடமானேவள்முதுமுப வாசநோன்பு முற்றுறச்செய் வளன்னுள், பதியுடையாயுளீர்வள் பாறிடி லாவி யக்தோ, கொதியுறு துயரமிக்கவொடுநரக டைவளன்றே" என நாயகருக்குத் தெரிவிக்காமலென்பது சிந்திக்கத்தக்கதாகஇருப்ப நூலிற்கூறியபடி யென்றியம் பியது எங்ஙனங்கூடும் எனின்? கேட்டி! "காட்சியாக வகாட்சிப தாகவோ, மாட்சி யென் றுமனுளானுக் கெய்தற, நீட்சிநோன் புபவாச நியமங்கள், ஆட்சிலோகோ பசாரமு மாற்றுவாள்." என்பதனுல் முன்னூல்நிந்தை, நாயகனிதத்திற்கயலாகத் தனது இஷ்டசித்தியின்பொருட்டு உபவாசாதிவிஷயகமாமெனத் தோடமின்மை யறிக. மூவிரவுக்கொருமுறை மூவிரவுக்கொருமுறை பாரணை செய்பவளாய்த் தேவதைகள் மறையவர் ஆசிரியர் அறிஞர் கற்றோர்முதலியவரைப் பூசைசெய் வதிற் றற்பரையாய், ஸ்நானம் தானம் தவம் தியானம்முதலியவற்றை நிரந்தரம் புரியும் முயல்வுடையதேகியாய், எல்லாச் சாஸ்திரப்பொருள்களினும் அவசியம் பயனுண்டென்னும் எண்ணமுடையவளாய்த் தவம்புரிந்துகொண்டு காலாகாலத் திற் செய்யவேண்டிய செய்கைப்படி நூற்படி முறைப்படி பர்த்தா தெரிந்து கொள்ளாதபடி நாயகரை மகிழ்வித்துவந்தனள். நியமத்தோடுகூடி யிவ்வண்ணம் அந்த பாலையாகியலீலை பத்துமாதபரியந்தம் இடைவிடாமல் மிகவுங் கஷ்டப் பட்டுத் தபோநிஷ்டையை யனுஷ்டித்து வந்தனள். இவ்வாறு நூறு மூவிரவு விரதத்தை யனுட்டித்தலா லெழுந்தருளிப் பாகியஉபசாரத்தாற் பூஜிக்கப்பெற் றவளும் பாவனேபசாரத்தாற் பகுமானிக்கப்பட்டவளும் சர்வ ஐசுவரிய சம்பன்னையாய பகவதியும் கௌரியுமாய ஸ்ரீ சரசுவதிதேவி சந்தோஷித்து அந்த லீலையை நோக்கி ஹே புத்ரி! பர்த்தாவினிடத்திலிருக்கும் மிகுந்தபக்தியினுல் நிரந்தரஞ்செய்த நீள்தபசால் மிகவு மகமகிழ்ந்தேமாதலின் உன்னுளம் விரும் பியவரத்தைக் கேட்டுக்கொள்ளென்று கூற; உளம்பூரித்த லீலாதேவி வரும் நாயகஜீவன பிரஹ்மவித்தை யடைவுவடிவதும் பாக்கிய அனுரூபமாயதுமே யான ஸ்துதியைத் தெய்வயோகத்தாற் செய்கின்றனள்: ஜன்மஜரைகளாகிய சுவாலையின்ருபத்தை யகற்றும் சந்திரகாந்தியாகிய சரசுவதிதேவியே! நீடூழி நீ வாழ்க. இருதயாந்தகாரக்கூட்டத்தை யகற்றும் சூரியகாந்தியாகிய சரசுவதி தேவியே! நீநீடூழிவாழ்க. ஹேஅம்பிகே! ஹேமாதாவே! ஹே யுலகமீன்ற அன் னையே! இக்கிருபணையாகிய அடியாளைக் காப்பாயாக. ஹே தருணமங்கலையே! அடியாள்பிரார்த்திக்கும் இவ்விரண்டுவரங்களையும் கொடுத்தருள்வாயாக. ஹே அம்பிகே! அவற்றுளொன்றே அடியாளுடைய நாயகர்தேகநீங்கிய பின்னர்ச்சீவன் இவ்வெனது அந்தப்புரமண்டபத்தினின்றும் அயலனுகாதொழிக: மற்றொ ன்றே ஹே மகாதேவியே! அடியாள் தேவரீரையெப்போது எப்போது பிரார்த் திக்கின்றேனே தரிசனத்தின்பொருட்டும் வரங்கொடுத்தற்பொருட்டும் அப்போ தப்போது எனக்குத் தரிசனங்கொடுத்தருள வேண்டும். என்பதைக்கேட்ட தேவியாமுலகமாதாவானவள் அவ்வாறே யுனக்குளவாகுக வெனத் தாமேகூறி யருளிக் கடலிலெழுந்தஅலையானது அடங்குவதுபோல ஆங்கேயறிவிற் கரந் தனள். பின்னர் இஷ்டதேவதையைச் சந்தோஷிப்பித்து வரதானம்பெற்ற அவ்வரசியானவள் இன்கீதங்கேட்ட பெண்மான்போலப் பெருமகிழ்ச்சி யுடை யளானுள். யக்கங்களாகிய நேமிகடகங்களும் மாதங்களாகிய மத்தியகடகங்

களும் இருதுக்களாகிய நாபிகடகங்களும் உடையதும், "மூந்நாபிசக்கிரம் அஜரம்" என்னுஞ்சுருதியினுலே மூன்றினுந்தொடர்ந்திராநின்ற தினங்களாகிய அராக்கள் குறுக்காகத்தொடர்ந்துநின்ற சங்குகள் கேசரம்போன்றவை யுடையதும், வருடமாகிய அக்ஷதண்டமுடையதும், மூப்பதுகலைவடிவநாபியாகிய மத்தியத்துளையுடையதும், ஆகிய சூரியாதியசைவுமயமான காலசக்கிரமோடிக் கொண்டிருப்ப, அவளுடைய பதியின் பிராணனுதிக்குறிகளாலே பிரத்தியக்ஷமாய சேதனம் இலிங்கதேகத்தின்கண்ணே மறையநுற்றது; கண்டுகொண்டிருக்கும்போதே விரைவிற்காய்ந்தவிலையிரதம்போலும் ஆகியது. போரில்வெற்றி கொண்ட தேகமானது அவ்வந்தப்புரமண்டபத்தில் இறந்துபோனவுடனே நீரில்லாத தாமரையோடையைப்போல அவள் மிகுந்த வாட்டத்தையடைந்தனள். விடம்போலும் அதிக வெப்பமான பெருமூச்சினுலே வேறுவர்ணமாக்கப்பட்ட அதரபல்லவங்களை யெல்லாமுடையவளானுள். அம்பூடுருவப்பட்ட பெண்மானுனது எங்ஙனம் மரணுவஸ்தையையடைவுற்றதாய்த் துன்புறுமோ அவ்வாறுனள். அவ்வரசன் பிராணன் நீங்கியபின்பு அவ்வரசிமுன் தீபத்தாலலங்கரிக்கப்பட்ட வீட்டின் அழகானது தீபச்சுவாலையின்வேகமும் நாசமானபோது இருண்டதொப்பப் பேரிருளையடைந்தனள். பிரவாகமானது குறைந்துபோனவுடன் நதியானது உப்புமயத்தூள்களோடு மலினமாக இருப்பதேபோலப் பாலலீலையானவள் இரசமற்றதன்மையை யடைந்து இளைத்தனள். முன் னுபகனேடுகூடி மானதியாயிருந்தவள் நாயகனிறந்தவுடனே மரணத்திற்குமுற்பட்டுநின்ற அவள் சக்கிரவாகப்புட்போல நாயகனது பிரிவாற்றுமையினுனே விரைவிற்கோவென்றழுவள் விரைவிற்பேசாம லூமையைப்போன் மூர்ச்சையிலிருப்பள்ஆயினள். மடுக்காய்ந்துபோகத் துயருறும்மீன்குஞ்சை முதன்மழைபோலும், இவ்வாறு அளவுமிகுந்த துயரத்தோடுற்றிருக்கும் அந்த லீலையை, முன்னனேகஜன்மங்களில் ஆராதித்திருத்தலின் தத்துவஞான தானஞ்செய்யவந்த கிருபாமூர்த்தமும் அசரீரியும் ஆகிய ஸ்ரீசரசுவதிதேவியானவள் பலன்கிட்டுங் குறிப்புண்டாக்கிக் கொண்டுற்றனள்.

16-வது அரசியிரங்கல் முற்றிற்று.

---

## 17-வது சந்தேக தேச வர்ணனம்.

இப்போது உடன்பாடெதிர்மறைகளாலே, புதுப்பழைய சிருஷ்டிகள் மனோமாத்திர விலாசத்தன்மையோடுகூடி யிருத்தலின் சமமாமென வருணிக்கப்படும். அசரீரிணியாகவேயிருந்து சமாதானித்தல் விரும்பும் வரந்தரல்களால் அனுக்கிரகிக்கும் ஸ்ரீ சரசுவதிதேவி கூறியருளல்:—ஹே குழந்தாய்! சவமயமாக இருக்கும் இந்நினது பர்த்தாவைப் புட்பக்குவியலுண் மறைத்துவைத்திருத்தி; மீண்டும் நீ இந்நாயகனை யடைவாய். புட்பங்கள் மலினத்தையடையா; இது கெடவுமாட்டாது; மீண்டும் நினது நாயகத்தகைமையை நீணுளில்லாமலே செய்யும்; ஆனல் முன்றந்தவரம் பொய்யாமோ வெனின், ஆகாயத்தைப்போல நிர்மலமாகவிருக்கும் இச் சரீரசம்பந்தி சீவன் இந்நினது அந்தப்புரமண்டபத்தினின்

றும் விரைவிலகலாது. அளிநிறைக்கண்ணுளும் பந்துக்களோடும் இவ்வண்ணங் கேட்டுத் தாமரைத்தடாகம் தண்ணீர்வற்றலாற் காய்ந்து நீரால் நிறைவிக்கப் பெற்றுப் பெருக்குறுவதேபோலப் பந்துக்களாற் சமாதானிக்கப்பெற்றுள். ஆண்டே புட்பராசியினுலே மறைத்துப்பதியைத் தாபித்து நிதிகிடைக்கப்பெற்ற தரித்திரியானவள் மகிழ்ந்ததேபோலச் சிறிது மகிழ்வுற்றிருந்தனள். அவ்வந்தப் புரமண்டபத்தில் அந்த லீலாதேவியானவள் அதேதினத்திற் பாதியிரவில் வேலைக்காரிகளெல்லாம் நன்ருகத்தூங்கும்போது ஞானமயமாயப் பகவதியாயிராநின்ற தேவியைச் சுத்தியான மகாமதியால் துக்கம் பொறுக்கமுடியாமல் வரவழைத்தனள். அந்த ஸ்ரீ தேவியானவள் அவளையடைவுற்றுக் கூறுவதாவது, ஹே குழந்தாய்! எதன்பொருட்டாக என்னைத் தியானித்தாய்; ஏன் மிகச் சோகத்தோடு கூடியிருக்கின்ருய்; கானனீரானது பயனின்றியே தோற்றுமாபோலச் சமுசார மயக்கங்கள் தோற்ருநிற்கும். என்ன அதற்கு லீலை கூறுவதாவது, ஹே தாயே! எனது நாயகரானவர் எங்கேபோயிருக்கிருர், என்ன செய்கிருர்; எத்தகையராக இருக்கிருர்; என்னையவருடைய சமீபத்திற் சேர்ப்பித் தருளவேண்டும். நான் ஒண்டியாய் வாழமுடியவேமாட்டாது; என்ன, இகலோகம்போலப் பரலோககற்பனைக்கும் சின்மாத்திர அதிஷ்டானமுடைமையைக் காண்பிக்கும்பொருட்டுச் சிதாகாசத்தைப் பகுத்துக் காண்பிக்கின்ருர் தேவியார். ஹே அழகியகுழந்தாய்! வாதனைமயமாய சித்தாகாயமெனவும், பிரசித்த விவகாரசம்பந்தமான ஆகாயமெனவும், சாற்றிய இரண்டிற்கும் இடையில் உபயசூனியமாயிலக்கியமாஞ் சிதாகாசமெனவும், ஆகாசம் மூன்றுவிதமென்றறிதி. சிதாகாசமே தன்னுவாண அஞ்ஞானத்தினும் வேறுபடுத்தப்படாததாய் விளங்கி அசத்துலகவடிவமாயிப் போதிலங்குகின்றது: அதனுனும் துயரமுதலியன அனுபவிக்கப்படுகின்றன. நீவினவிய நினது நாயகனிருக்குந் தலாதி உண்மையாகச் சிதாகாசகோசவடிவமாகவே யுளதாதலின் தனியே இல்லாமலிருந்தபோதிலும் சிதாகாசத்தினது ஏகாக்கிரசிந்தனத்தினுலே விரைவில் ஈண்டே காணலாம்: பின்னர் ஆண்டுச் சென்று அனுபவிக்கலாம். அதன்பொருட்டுச் சிதாகாசத்தைப் பயிலவேண்டும்; ஓரிடம்விட்டு மற்ரேரிடமடையின் இடையேயிருக்கும் அறிவே நிமிடமுணரலாம்; அதுவே சிதாகாசமாம்: எனக் குமரியே! நீயறிவாயாக. முறையாகவரும் விடயமிரண்டாபாசசந்தியின்கண்ணே அதனுபயசூனிய சிதாகாசம் எளிதிலே யுணரலாமன்ருே! ஆகலின் நினக்கு அதன் அடைவே அத்தன்மையை யடைந்திருக்கும் நாயகசமீப அடைவாம்; ஆண்டே நினது நாயகரின் பரலோக கற்பனையுமாம்; அதன்கண்ணே சர்வசங்கற்பங்களையும் விட்டு நிலைபேறை யடைவையே யானுல் அல்லாவடிவையுமுடைய பதமாகிய தத்துவத்தையடைவா யென்பதன் கட் சமுசயமே கிடையாது. ஆயின் எங்ஙனம் அதை யடையலாமெனின்? அதற்குபாயத்தைக்கேட்டி. தத்துவ தரிசனத்தினுலே அவித்தையழிவுறவே துவைத மனுதயமாகவே உலகின் அத்தியந்த அபாவ அடைவாம், ஆகவே யதனுல் இஃதடையப்பெறும். அயனெறியதற்கின்றென்னு மருமறைமுறைப்படி வேறென்ருலும் முடியாது. ஹே அழகி! ஆயின் எனக்கு ஞானப்பிராப்தியானது எங்ஙனமாமென எண்ணுதே; எமது வரப்பிரசாதத்தினுனே விரைவில் நீயவ்வறிவையடைவாய்; என்றருளிச்செய்து அவ்வுலகன்னையானவள் தமது திவ்ய

ஸ்தானத்திற்கு எழுந்தருளவே லீலையானவள் வரப்பிரசாதமகிமையால் பயிற்சியின் சிரமமில்லாமல் விளையாட்டாகவே நிருவிகற்பசமாதியை யடைவுற்றனள். ஒருநிமிடத்தினில் லோகபஞ்சரம்போலும் பேதிக்கமுடியாததான அந்தக்கரண சகிதந் தூலதேகம்விடுத்து (சித்தத்தை நிலைநிறுத்தி அபிமானத்தியாகமே ஈண்டு கூற விழைந்ததாம்; மரணம்போலும் தேகம்விடுத்து வெளியேசெல்லுதலல்லவாம்) பரவையானது கூட்டைவிட்டு வெளிப்போந்து ஆகாயத்திற் பறப்பதேபோலப் பறந்தனள். பின் சிதாகாயத்தின்கண்ணே யிருப்பவளாய் அவ்வாலய ஆகாயத்தின்கண்ணே வெளிப்பட்ட தன்வாதனைகரும அனுரூபமாகத்தோற்றுந் தேககிருகாதியோடுற்றிருக்கும் தனது நாயகனைத் தரிசித்தாள்; அப்போதவன் அநேகம் அரசர்கள் கூட்டமுற்ற ஆஸ்தானமண்டபத்தில் சிங்காசனத்தில் வீற்றிருக்கும் பூபாலனாய்க்காணப்பட்டான். நீ நீடூழிவெற்றிபெற்று வாழ்கவென வாழ்த்தப்பெற்றிருந்தான்; அவனதெதிரிற் கைகுவித்து மண்டலானீகமானது காரியத்தை இனிதுமுடித்து அடைவிக்கும்பொருட்டு ஆதரவோடுங் காத்துக்கொண்டிருக்கிறது. கொடிக்கூட்டங்களால் வியாபிக்கப்பட்ட இராஜதானியின் பிரதான அரண்மனையின்கண்ணே அவன் எழுந்தருளியிருப்ப அவ்வரண்மனையின் கீழ்வாசலில் எண்ணில்லாத விப்பிரர் முனிவர் இருடியர் கூட்டங்கணிறைந்திருந்தன; தெற்குவாசலிலோ எண்ணில்லாத இராஜ இராஜேசுர மண்டலங்கள் காத்திருந்தன; மேலைவாசலிலோ எண்ணில்லாத பெண்மணிக் கூட்டங்கணிறைந்திருந்தன; வடக்குவாசலிலோ ரதகஜதுரகாதிகள் எண்ணில்லாதன நண்ணி நின்றன. ஒரு தாசன்வாக்கால் தக்ஷிணபதத்திற் போர்பிரசங்கம் நிர்ணயித்துக் கொண்டிருப்பவனாயிருப்பதோடுஞ் சர்வ அரசர்களுமேயவனுக்கு வசமாயிருப்பதாகவே கண்டனள். கர்நாடதேசாதிபன் வருணித்த பூர்வதேச விவகார மர்யாதை ஸ்தாபனத்தையும் சர்வ மிலேச்ச உத்தராபதத்தை நிக்கிரகித்து வசப்படுத்திச் சுராஷ்டிராதிபன் செய்த செய்தியையும், மாளதேசாதிபதியால் நன்றாகப் பிடிக்கப்பட்ட மேற்குப்பக்கத்துத் தங்கணதேசமுழுவதின் வசத்தையும், தென்கடற்கரையினின்றும் வந்த இலங்கைத்தூதன் கூறிய விநோதத்தையும், கீழ்கடற்கரையிலிருந்து வந்த மகேந்திரமலையிற் சனித்த சித்ததவசியால் வருணிக்கப்பட்ட ஆயிரமுகவித்தாராதி விசித்திர ஸ்ரீகங்காதேவியின் மகிமையையும், வடகடற்கரையிலிருந்துவந்த தூதன் வருணித்த இரகசிய மொழிகளையும், மேல்கடற்கரையைக் கண்ட தூதனால் வருணிக்கப்பட்ட அஸ்தமயக்கிரமங்களையும் இருசெவிகுளிரக் கேட்டுக்கொண்டிருப்பதைக் கண்டனள். எண்ணில்லாமல் வரிசைவரிசையாக நிற்கும் பூபாலரின் காந்தியினால் முழுவதுங் கலக்கப்பெற்ற கொற்றவன்முற்றத்தையும், யாகஸ்தானத்தில் மந்திரம்படிக்கும் பிராஹ்மணர்களை வெற்றிகொண்ட தூரியாக்கிரவாத்திய விசேடத்தின் தொனியையும், வந்திமார்களின் கோலாகல உல்லாசத்திற்குப் பிரதித்தொனிசெய்யும் வனகுஞ்சரங்களையும்; வாத்தியாதி விசேடங்களினாலுண்டாம் தொனிகளினால் எழும் பிரதித்தொனியையுடைய ஆகாயமத்தியபாகத்தையும், பரி கரி தேர்களின் நெருங்கிய வரிசைகளாலெழுந் தூளிமண்டல மேகங்கள் நிரம்பிய ஆகாயத்தையும், கண்டு கேட்டு மகிழ்ந்தனள். புட்ப கர்ப்பூர தூபங்கணிறைந்து சுகந்தங்கமழும் மலைநிகர்த்த மாடமாளிகைகளையும், எல்லா மண்டலங்களினின்றும் வாங்கிக்கொணர்

ந்து உபயோக சுகசாதனங்களை அரண்மனைகளில் நிறைவிப்பதற்காக வேலைக்காரர்களாற் செய்யப்பட்ட அநேக சாசனங்களையும் அரசன் கீர்த்திகளாகிய கர்ப்பூரராசியுபமானமாய மேகவடிவ அத்தியந்தம் வெளுத்து ஆகாயத்திற் கிளம்பிய பர்வதங்களையும் கண்டுகளித்தாள். பூவுலகிற்கும் தேவுலகிற்கும் ஒரு தம்ப பூதமாய்க் கேவலம் தனது பிரதாபத்தினாலே யவ்வரசன் சூரியனையும் வெற்றிகொண்டிருப்பதையும், மிகமிகப்பெரிதாகத் தொடங்கப்பட்ட உதாரமான காரியங்களில் மிகவும் உற்சாகத்துடன் முடிக்க முயலும் சிற்றரசர்களை யவனுடைத்தாயிருப்பதையும், பல நகரங்களையுண்டாக்கும் முயற்சியோடு கூடியிராநின்ற சிற்பகுலபதிகட்காணையிடுமீசனுமிருப்பதையும் கண்டுகளித்தனள். பின்னர் விண்வடிவமாய் வாசனைமாத்திர ரூபத்தோடிகூடியிராநின்ற பெருமுயற்சியோடுற்ற அந்தலீலையானவள் வியோமமயமாய நரபதியின் அச்சபையில், அம்பர அடவியைப் பனிப்படலம் வியாபித்ததேபோலப் புகுந்தனள். சங்கற்பமாத்திரத்தாலுண்டாக்கப்பட்ட காமினியைப்போலுஞ் சுழலாநின்ற அவளைத் தங்கள்முன்பாக அவளிருந்தும் அச்சபையிலுள்ள எவருமே யுணர்ந்திலர். மற்றையனது சங்கற்ப மாத்திரத்தின லுண்டான நகரமானது மற்றையனுக்குத் தெரியாததேபோல அவ்வவையோர்முன்னே சஞ்சரிக்கும் அவளைக்கண்டிலர். அவ்வவையிலுள்ள யாவர்களையும் தன்னவர்களாய் முன்னுள்ளவர்களாயிருக்கவே யரசனேடும் கண்டனள். அக்காட்சியானது ஒரு நகரத்தினின்றும் மற்றொருநகரத்திற்கு யாவரும் வந்திருப்பது போலத் தோற்றியது. அவர்களியாவரும் தன்தேசத்திலுள்ளவர்கடம் ஆசாரத்தையே செய்பவர்களா யிருந்தார்கள்; பாலகர்களும் தன்றேயத்தினர்; சிறுமிகளும் தன்றேயத்தினர்; மந்திரிமார்களும் முன்றன்றேயத்திலிருந்தவர் ஆகவே காணப்பட்டனர். அப்பூபாலரே, அப்பண்டிதரே, இரகசிய ஆலோசனை செய்யும் சகாய அம்மந்திரிமாரே, அவ்வேலைக்காரரே இருக்கக்கண்டனள். வாசனாமயமாய கனவிற்போலப் பூர்வசாதிருசிய நியமமில்லாமலே வேறு வேறான அபூர்வ பண்டிதர்களையும் நேயர்களையும் விவகாரங்களையும் புரவாசிகளையும் கண்டனள். மத்தியானகாலத்திற் றிவசத்தில் நெருங்கிய ஆரண்யங்களோடு கூடிய திசையைக்கண்டனள்; சந்திரார்க்கர்களுடனும் மேகவாயுத் தொனியுடனும் அந்தரிக்ஷத்தைக் கண்டனள்; தருக்கள் நதிகள் சைலங்கள் புரங்கள் பட்டணங்கள் நிறைந்திருப்பதையும், நானா நகரங்கள் விந்யாசமாயகாடுகள் கிராமங்கள் நிறைந்திருப்பதையும், கண்டனள். பழையபஜனரைமுதலியவை யொன்றுமின்றி பதினறுவயதுடைய காளையாகப் பூபாலனைக்கண்டனள். சர்வபழைய ஜனக்கூட்டங்களையும் சர்வகிராமவாசிகளையும் லீலையானவள் கண்டு மிகவுஞ்சிந்தையோடு கூடியவளானாள். அந்தவாசனாநகரத்தி லவர்களையெல்லாம் கண்டு இஃதென்னே முன்னிருந்த நகரத்திலிருந்தவர்களெல்லாம் இறந்துபோய் விட்டார்களா? என்றுச்சரியப்பட்டு மீண்டும் ஸ்ரீசரசுவதிதேவியின் பிரசாதத்தினாலே யுண்டாகிய வுணர்வாற் சமாதியினின்றுங்கிளம்பிப் பழையஅந்தப்புரத்தையடைந்தனள். அவ்வர்த்தராத்திரியில் அங்கு முன்போன்று இருந்த யாவரையும் கணத்திற் கண்டனள். அதன் பின்னர் நித்திரையோடுகூடியிருக்குஞ் சகிமார்களைஎழுப்பி யவள் கூறுவதாவது:—எனக்குமிகவுந் துயரமாயிருக்கின்ற படியினலே சபையின்

சந்நிதானத்தில் என்னைக் கொண்டுசேர்க்கவேண்டும்; எனது நாயகரது சிங்காசனத்தின் பக்கத்தில் யானிருப்பனாயின் சபையோர்கூட்டத்தையும் பார்ப்பனாயின் யான்வாழ்வேன் இல்லாவிடின் வேறெவ்விதத்தானும் யான்வாழேன்—என்று கூறக்கேட்ட ராஜபரிவாரங்கள் அவ்வாறே செய்கின்றோமென்று சொல்லி நித்திரையைவிட்டுவிட்டு மிகவுங்கவலையுடன் யாவரும் தங்கள்தங்களுக்குத்தக்கபடிக் கேற்பட்ட கிரியைகளிலிருந்தார்கள். புரவாசிகளையும் சபையோர்களையும் கொண்டுவருவதற்காகக் காவற்காரர்கள் பூமியின்கண்ணே விவகாரஞ்செய்யும் பொருட்டுச் சூரியன்கரங்கள் செல்வதேபோலச் சென்றார்கள். சபாமண்டபத்தை ஆதரவோடுகூடிய வேலைக்காரர்கள் சுத்தஞ்செய்தார்கள்; மழைகாலத்திய மேகம்நிறைந்த ஆகாயத்தைச் சரற்கால தினங்கள் சுத்தஞ்செய்வதேபோலச் செய்தபின் இவ்வாச்சர்யத்தைக் கண்காணவந்ததேபோல நக்ஷத்திரக்கூட்டங்கள் அடைவுற்றன வென்னும்படி தமத்தண்ணீராருந்துந் தீபக்கூட்டங்களை மண்டபத்தெல்லாவிடத்தும் ஏற்றினார்கள். முற்சருக்கத்திற் பிரளயத்தாற் காய்ந்த கட்டில்களை நீர்நிறைவிப்பதேபோல ஜனக்கூட்டங்கள பிரவாகம்போலு முயன்றுவந்து அரண்மனைமுற்றங்களை நிறைவித்தனர். மூவுலகங்கள் மீண்டுமுண்டாங்காற் றிக்குப்பாலர்கள் திக்குகளில் வருவதேபோல மந்திரிமார்களும் சிற்றரசர்களும் தங்கள் இடங்களிற்புகழுடன் அமரவந்தனர். கற்பூரங்கமழ்ந்து கனத்த ஹிமசீதளத்துடன் வெளுத்துச் சீதளித்து விரிந்தமலர்களின் மகரந்தங்களினாலே புஷ்டமாய் நறுமணங்கமழ்ந்துவருந் தென்றல் வீசிக்கொண்டிருந்தது. ஹிமவானாதி மலைகளில் சுக்கிரீவ ஆலயத்தின்கண் சுக்கிரீவ அனுக்கிரகப் பொருட்டுச் சூரியனது விசேஷசந்நிதான முண்டாதலினாலே தாபபீடிதமேக மாலைகளிருப்பதேபோல ஆஸ்தானமண்டபமேனிலங்களில் வெண்டுகில்களோடு கூடியகாவலாளிகள் நின்றுகொண்டிருந்தார்கள். பிரளயக்காற்றினாலே உதிர்க்கப் பெற்ற நக்ஷத்திரக்கூட்டம் போலும் ஒளியா லிருட்கூட்டத்தைவிழுங்கிய புட்பக்கூட்டங்கள் பூமியில் விழுந்தன. விரிந்ததாமரைகள் நிறைந்த தடாகத்தை யன்னங்கள் அலங்கரித்தனபோலும் அவ்வாஸ்தானமண்டபத்தை யரசனையனுசரித்த அனைவரும் நிறைந்தலங்கரித்தனர். சிங்காசனத்தின் அருகிலிருக்கும் அற்புதபொற்சித்திராசனத்தில் இந்தலீலாதேவியானவள் மன்மதன் மனதில் இரதிதேவியமர்ந்ததேபோலும் மன்மதவிகார மனதின்கண்ணே சிருங்காரசேஷ்டையமர்ந்ததேபோலும் அமர்ந்திருந்தனள். அம்மன்னவர்களையும் ஆசிரியர்களையும் போற்றத்தக்கவர்களையும் நேயர்களையும் சபையோர்களையும் சுகிருத்துக்களையும் சம்பந்திகளையும் பந்துக்களையும் மற்றெல்லாரையும் முன்னிருந்துள்ளவர்களாகவே கண்டனள். யாவற்றையுமே அந்தலீலாதேவி முன்னிருந்ததுபோலவே யினிது கண்டு மிகமகிழ்ச்சியை யடைவுற்றனள். அரசனது ஆளுகையிலுற்றவர் யாவரும் நிச்சஜீவனக்கிளர்ச்சியுடையவராய் நிலவுபோலும் ஒளியமலொளிர்ந்தனர்.

17-வது சந்தேக தேசவர்ணனம் முற்றிற்று.

## 18-வது உலகமயக்க முரைத்தல்.

இப்போது சமாதியிற்கண்ட சிருஷ்டிக்கும் பூர்வசிருஷ்டிக்கும், இப்போது திருசியத்தன்மை யுண்மையின் இரண்டும் பொய்யாவதால் இருப்பது சின்மாத்திர நிலைமையென வியம்பப்படும்.—ஸ்ரீவசிஷ்டபகவான் கூறல்: இவ்வண்ணம் ஆஸ்தான அலங்காரக் காட்சிமுதலியவற்றானே இத்துயரமுற்ற சித்தத்தை வேண்டியவாறு விநோதிப்பித்து மகிழ்வேனென்று தன்கருத்தறிவிக்கும் குறிப்புகளால் மன்னவர்கட்கறிவித்து ஆஸ்தானமண்டபத்தினின்று மெழுந்து அந்தப்புரமண்டபம் புகுந்து அம்மண்டபத்தில் மலர்களாலே மறைபட்டிருக்கும் நாயகனருகிலுட்கார்ந்து சித்தத்திற் சிந்திப்பாளாயினள். "அகோ! இம்மாயை யாச்சரியகரமாகவன்றோ இருக்கின்றது! நமதாளுகையிலிருக்கும் பிரஜைகள் சமாதியிற் கண்ட உள்ளவகாசதேசத்திலும் வெளிஇத்தேசத்திலும் அன்றோ இருக்கின்றார்கள்; பனை பச்சிலைமரங்கள் நிறைந்த இம்மலைகளும் அங்கெவ்வாறிருந்தனவோ அவ்வாறே இங்குமிலங்குகின்றனவாதலின் இவ்வித்தாரமாயையை என்னவென்றியம்பலாம்! இம் மாயைத்தன்மையை உவமித்துப்பார்க்கின் கண்ணாடியின் உள்ளும்புறம்பும் பர்வதம் அனுபவிக்கப்படுவதேபோலும் சிற்கண்ணாடியில் உள்ளிலும் வெளியிலும் உலகசிருஷ்டி யனுபவிக்கப்படுகின்றது. ஆனால் திருஷ்டாந்தத்தைப் போலவே இரண்டுள் ஒன்றனுக்கே பொய்ம்மையாம். இரண்டிற்கு மாகாதாமெனச் சப்பவித்தலின் இதன்கண் ஐயமன்றோ உளதாகின்றது! இவ்விரண்டனுள் மயக்கமயச்சிருஷ்டியாதாம்? உண்மையுலகமியாதாம்? இவ் விஷயத்தை ஸ்ரீ வாக்கீசுவரியை யினிதாராதித்து அத்தேவியின் சந்நிதியில் ஐயமாயிருக்கின்றதென்று விண்ணப்பித்து அவ்வையம் நீங்கும்வண்ணம் வினவித் தெரிந்துகொள்வேன்." எனத் துணிந்து அக்கணமே அன்போடும் அவள் அருச்சித்தேத்தினள். பின் முன்றரிசனந்தந்தவுற்ற குமாரிவடிவ திவ்ய மூர்த்தியைக் கண்டு கண்களிகூர்ந்து பரமார்த்த மகாசக்தியும் பத்திராசனத்தெழுந்தருளியவளும் ஆகிய அவ்வாக்தேவியை புவியிலுற்ற லீலாதேவி கைகூப்பியினிதாகச்சந்நிதியிலிருந்து வினவுவாளாயினள்:- –ஹே பரமேசுவரி! எம்மனோரை தபோசித விடயத்திலல்லவோ உத்தமர் சாதுரியமாய்ப் பஜிப்பர். உம்மாற் சர்க்காதியி லிங்ஙனமன்றோ உத்தமமரியாதை ஸ்தாபிக்கப்பெற்றதாகும். ஆகையினால் தேவரீரது சந்நிதியில் வணக்கமாக விண்ணப்பித்துக்கொள்ளும் விஷயங்கட்குத் தேவரீரது அனுக்கிரகம் பயனுடைத்தாமாறு அடியாட் கருள்வேண்டும். ஐயவிரையை யடியோடீர்க்கும்பொருட்டு உபோற்காதமாகச் சமாதியிலனுபவித்த ஆன்மசொருபத்தை முதலில் அனுவாதஞ்செய்கின்றேன். இவ்வுலகத்தைத் தோற்றுவிக்குங் கண்ணாடியானது ஆகாயத்தினும் அதிக நிர்மலமானது. அதனைக்குறித்துஅநேகயோஜன கோடிகோடிகளின் அவயவங்களும் அற்பமாகும். வாக்குகளெல்லாம் அதனது சம்பத்தைக் கவராதனவாய் அகண்டார்த்த போதகங்களாயிலகும். அத்தகைய அந்தப் பிரஞ்ஞானஜோதியானது அமூர்த்தமாதலிற் கனமாயும், கடினமின்மையின் மிருதுவாயும், எல்லாத்தாபங்களும் நீங்கியிருத்தலின் சீதளமாயும், ஒன்றிற்கும் விடயமாகாத சித்தாயும், ஆவரணமற்றதாயும், பேதமின்றியதாயும், எல்லாவிவகாரங்களினும்

முந்தியிலங்குவதாயும் பிரசித்தமாம். எவ்வான்மக் கண்ணுடியில் திசைகாலங் களும் அவற்றுட்பட்ட எல்லாக்காரியங்களின் றோற்றமும், உற்பன்னமானவற் றிற்கு ஆகாயத்தில் அவகாச அடைவும், தேயுநயனுதிகளாற் பிரகாசமும், பிரகாசிக்கப்பட்டவைகட்கு இதனல் இது இவ்வகையேயென அர்த்தக்கிரியை களில் உபயிதிதமும் இத்தகைய விவகாரத்திற்குப் பொருந்துமென நியதிக் கிரமங்களும் தேசகாலவிஸ்தீரண விகாரவிசித்திரத்தை யுடையனவாகிப் பிரதி பிம்பங்களைப்போலும் உள்ளே யொளிருகின்றனவாம். உபோத்காத பூர்வக மாக விரித்தவிடயத்திலே அடியாட்கு வினவ வேண்டியதுண்டு; யாதெனின், மூவுலகப்பிரதிபிம்பச்செல்வம் வெளியிலும் உள்ளிலுமிருக்கின்றது: அவ்விரண்ட னுள்ளே பொய்யாது? மெய்யாது? விளம்பல் வேண்டும். உண்மைநோக்கான் நோக்கின் உலகில் உண்மையில்லவே யில்லையெனக் கருதி லீலையின் ஐயவினைதயை யடியோடீர்க்க வேண்டி ஸ்ரீபரமேசுவரி கூறுவதாவது:-ஹே அன்புடைய சுந்தரீ! சிருஷ்டிக்கு மெய்ம்மை எத்தகையதாக வாகும்? எத்தகையதாகத்தான் பொய் ம்மையாகும்? கூறுதி யுள்ளபடிபார்ப்போம். விஸ்தாரமாகக் கண்டவற்றிற்குப் போதுமான தேசகால மில்லாதபடியினுலே பொய்யென்னலாம்; பர்வதப் பிரதி பிம்பாதிகளிற் பார்த்தோம், அதுவும் பதியினுலகத்திலே காணப்படுகின்றது: இவ்வுலகிற்காணேம். எனப்பிரித்துப்பார்த்து லீலைகூறுவதாவது:—ஹே அம்பி கையே! இங்கே அடியாளிருப்பதும் பரமேசுவரியாகிய நீயிருப்பதும் ஆகிய இதுதனை மெய்யானவுலகமென உலகமாதாவே யுன்னுகின்றேன். இப்போழ்து எனது நாயகரும் அவருடைய சிருஷ்டியும் யாதுளதோ அது பொய்யென் றெண்ணுகின்றேன், ஏனெனின்? தன்னிலைமைக்குப் போதுமானதல்லாததாகிய அற்பமான தேசகாலவிவகாராதிகளும் நிறையாமையின், பிரதிபிம்ப சொப்பன பர்வதாதிகளை அங்ஙன்கண்டோமன்றோ. நாயகனது சிருஷ்டி ஹேதுவோடு கூடாததா? ஹேதுவோடுகூடியதா? ஆதியதாகாதாம்; உற்பத்தியுண்டாகாதென் னும் வழக்குண்டாதலின். மற்றதன்கண்ணும் பொய் ஹேதுவோடுகூடியதா? மெய்ஹேதுவோடுகூடியதா? அவற்றுள்ளாதியிலும் இச்சர்க்கஹேதுவை யுடை யதா? அன்னியஹேதுவை யுடையதா? ஆண்டன்னியத்திற்குப் பிரசித்தமின் மையின் முதற்கற்ப பரிசேடத்தில் பொய்யேதுவை யுடைய இச்சர்க்கத்திற்கும் பொய்ம்மையேயெனும் வழக்காம்; வேறுவேறு சத்தையுடையவற்றிற்கு ஹேது பலபாவங்காணுமையின் சிருஷ்டிகளில் விதர்மபாவங் கூடாதாமெனத் திருவுள த்தேகருதி தேவி விடையளித்தல்:—பொய்யானது மெய்யாய சர்க்கத்தினின்றும் ஒருகாலத்தும் உண்டாகமாட்டாது; ஏனெனின், காரணத்தினும் காரியம் ஒப்பற்றதாக எங்கும் உண்டாவதேகிடையாது. கூறிய நியமத்தில் லீலை பிறழ்ச் சிச்ய சங்கையுளதெனல்:—ஹே தாயே! காரணத்தினும் காரியம் முற்றினும் வேறாகவன்றோ காணப்படுகின்றது. எங்ஙனமெனின், பிண்டவடிவ மண்ணானது நீரைபுட்டாங்க முடியாததாகும்; அதனினின்றும் உண்டாகிய குடமானது நீரைத்தாங்குவதில் ஆற்றலுடையதாகவே காணப்பெறுகின்றது; பெறவே அங்ஙனவித்தன்மை நியமம்போலும் சமசத்தை நியமமும் சம்பவியாதாமன்றோ? சமசத்தான விசித்திரத்தன்மையினுலேனும் சககாரிநிமித்த விசித்திரத்தன்மையினு உபாதா

லேனும் மண்ணிற்கும் குடத்திற்கும் விசித்திரத்தன்மை யுளதாகுக. யாதொரு
தீபத்தினின்றும் வேறுதீப முண்டாதல்போன்று சமஉபாதான நிமித்தமுடைய
வற்றிலோ விசித்திரப்பான்மையைக் கண்டிலேம்; பிரகிருத சிருஷ்டிகளிலும்
அத்தகைமையே யாகுமெனத் திருவுளங்கருதி அம்பிகை யருளுவதாவது:—
ஹே லீலையே! எக்காரியம் காரணங்களாலும் சககாரிகளாலும் உண்டாகின்றதோ
ஆண்டு அசாதாரண தண்டசக்கிராதி காரணவைசித்திரியம் சிறிது காணப்பெறு
கின்றது; நினது நாயகனுடைய சர்க்கத்திற்கோ அசாதாரண காரண வைசித்திரி
யம் கற்பிப்பான்முடியாதாம். இரண்டிற்கும் மாயை காமங் கருமம் வாசனைமாத்
திரமூலகத்தன்மை யொருபடித்தாயிருத்தலின் நின்னுயகனது சர்க்கத்திற்கு
இச்சிருட்டியிலுட்பட்ட மண்முதலியவற்றின் மத்தியில் யாதுகாரணம் எதனுல்
விசித்திரத்தன்மையாமோ அதைக்கூறுதி. ஹே சுந்தரவதனீ! பௌதிகங்களி
லும் எங்ஙனம் இப்பூமண்டலத்தினின்றும் உற்பத்தியுண்டாமோ, அங்ஙனம்
அப்பூமண்டலத்தினின்றும் ஆண்டுமாமென விடமத்தன்மையின்றும். இவ்
விடத்திய பூமியாதியினின்றுமே அவ்விடத்தியபூமியாதி யுற்பத்தியாகுக வெனி
னே, கேட்டி! இங்கிருந்து இதுசென்றிருக்குமேல் இப்பூதலமெங்ஙனமிருக்கும்?
இக்காரணத்தின்கண்ணே சககாரிகாரணங்கள்தாம் யாவையெனக் கூறக்கிடந்
தன? இது செல்லாதிருக்குமேல் ஆண்டுக் காரியமுண்டாதல் எங்ஙனங்கூடும்?
ஆதலால் இவ்விடத்தியக்ககாரிகாரணங்கள் இல்லாவிட்டாலும்எச்சாமக்கிரிவடிவ
சககாரித்தகைமை யுதிக்குமோ, அதாவது காரியம் வேறோராற்றாற் பெறப்படா
மையின் கற்பிக்கப்படுமோ அது, அதன் பூர்வசருக்க காரணமாகிய காமகரும
வாசனை அவித்தைவடிவத்தினும் வேறாகாதாம் என்பது யாவராலுமனுபவிக்கப்
படுகின்றது; படவே விலக்ஷணமெங்ஙனமுஞ் சித்தியாதாம். சத்தியமாகிய இச்
சிருஷ்டி யனுபவஜன்னிய சமஸ்காரத்தாலுண்டாகிய, எடுபட்ட அதுவென்னுந்
தன்மை மிருதிபோலும் எனது நாயகாது சிருஷ்டி கனைப்போலுளதாகுகவே
யென லீலை வைதர்ம்யத்தை வேறுவிதமாக வினவுவதாவது:—ஹே ராஜேசுவரி!
எனதுநாயகரது விரிந்தசிருஷ்டி ஸ்மிருதியேயாகும்; அந்தஸ்மிருதியின்காரண
மும் இச்சர்க்கமேயெனத் துணிவுறுகின்றேன். ஆயின் ஹேசுந்தரி! அந்த
முன்கண்ட சர்க்கத்தினின்றும் சமஸ்காரவாயிலா யுண்டாயதாம். உனதுநாயக
னதுசர்க்கம் எங்ஙனம் ஸ்மிருதியாகாசரூபம் மிருதிபோலும் முன்னிகழும்?
விடயசூனியத்தகைமை யுடைமையின் ஆகாசரூபமோ அங்ஙனம் சமஸ்கார
ஹேதுவான அனுபவவிடய முற்சர்க்கமும் வியோமமேயாகும்; ஆகலின் அது
வும் அவ்வாறு அதன் முற்சருக்க சமஸ்காரஜன்னியமே யன்றோவாம். அருளிய
பொருளை இனிதாலோசித்து அங்கீகரித்த லீலாதேவி ஸ்ரீதேவிகருத்தை யனு
சரித்துக் கூறுவதாவது:—ஹே மாதாவே! எனதுநாயகனுக்கு ஸ்மிருதியாகாச
மய சர்க்கம் எங்ஙனம் உதிதமாமோ, அங்ஙனம் இதனையான் எண்ணினேன்;
அச்சர்க்க மீண்டு நிதரிசனமாகும். லீலை யியம்பியதைக்கொண்டு மகிழ்வுற்ற
ஸ்ரீதேவி யியம்புவதாவது:—ஹே குழந்தாய்! இவ்வண்ணம் எல்லாயாற்றானும்
அசன்மார்க்கம் எதன்கண்ணுமோ அது ஆன்மாவேயாகும். அதுவே நாம்பகற்கு
அவ்வச்சர்க்கபாவத்தானே தோற்றுகின்றது. ஹே மாதாவே! எங்ஙனம் ட்,திக்கு
அமூர்த்தமாக இச்சர்க்கத்தினின்றுஞ் சர்க்கம் மயக்கவடிவமாயுண்டாமோ,

அங்ஙனம் உலகமயக்கநீக்கப்பொருட்டு அனுக்கிரகித்தருளவேண்டும். இச்சர்க்கமும் முற்சர்க்ககோசர சமஸ்காரஜன்ய மயக்கமேயாகும். எனக் கூறியபொருளை மெய்ப்பிக்கும்பொருட்டு மண்டபஉபாக்கியானஆரம்பத்தை ஸ்ரீஅம்பிகைபதி ஞானசெய்து கூறுவதாவது:—முன்மிருதியினால் மயக்கமாத்திரவடிவ இச்சர்க்கமுதித்து கனமயல்வடிவமாயிலங்குகின்ற இவ்விதத்தைக் கூறக்கேட்பாயாக:— ஹே குழந்தாய்! இச்சமுசாரமானது ஒருஜீரணமண்டபமேயாகும். எங்ஙனமெனின்? அஞ்ஞானத்தான்மறைபட்ட அங்கிசமாய்அதனினும் சிருஷ்டிப்பவனான் அந்தக்கரணபாக சிதாகாசத்தில் அச்சமுசாரமண்டபமுளதாம். ஆகாசரூபமான யாதொருகாசகண்டம்போலும் நீலமேலவயவச்சேர்க்கையான் மறைவுற்றஆகிருதியுடையதாகும்; அதன்கண்ணிருக்கும் மேருகிரியாகிய தம்பத்தின்கண்ணமைக்கப்பெற்ற உலகபாலர்களாகிய இந்திரன்முதலிய பதுமைகள் மிகஅலங்கிருதமாகும்; பதினான்கு லோகங்களாகிய உள்வீடுகள் அதன்கண்ணுண்டு; திரிபுவன அந்தராளப்பள்ளமுமுண்டு; ஆண்டாதித்யனே அணையாத்தீபமாம்; ஒருகோணந்தனிற் புற்றுண்டாக்கும் பூதமும் புற்றுகளாகியநகரங்களுமுண்டு; ஆண்டுயர்மலைகளெனும் ஓடுகள்நிறைந்திருக்கும்; அநேகம் புத்திரர்களோடுகூடிய விருத்தரான பிரஜைகட்கீசராம் பிரஹ்மாவென்னும் பிராஹ்மணர்வீடு மங்குளதாம். ஜீவக்கூட்டங்களாகிய கோசகாரப்புழுக்களினீட்டமங்கதிகம்; இவைகள் தம் பந்தனக்கூடுசெய்யும் புழுக்களாம்; விண் மேற்றலங்கருமையாயிருக்கும்; ஆகாயவீதியிலுலாவும் சித்தக்கூட்டங்களாகிய கொதுகுகள் கும்கும் எனஇரைந்துகொண்டிருக்கும்; வாயுமார்க்கமாகிய மகாவம்சத்தின்கண்ணே (மதுவித்தையின்கண்ணே சுவர்க்கமே குறுக்காயிருக்கும்வம்சமாகுமாதலினென்க) இருக்கும் விமானத்தேறியுலவும் புழுக்கள் எண்ணிறந்தனவாம், மேகங்களாகிய இற்புகைகளின் உக்கிரக்கூட்டத்தாற் சூழப்பட்டிருண்டிருக்கும் ஒருகோணம்; மற்றொன்றிற் சுரர்அசுரர்முதலிய தீயமக்களின் விளையாட்டோசை கலகலவென மாறாது நிறைந்துறையும்; பூவாதிலோகங்களின் உள்ளடங்கிய புரம் கிராமங்களாகிய மண்டபத்துற்ற பாண்டபதார்த்த அதிசயங்களாம்; ஏரி நதி கடல் தடாகஜலங்களால் ஈரப்படுத்தப்பட்ட மகீதலமுமாங்குண்டு; பாதாளம் பூதலம் சுவர்க்கம் என்னும் பாகங்களாயிலங்கும் பொந்துகளுமாங்குண்டு என்றறிதி. அத்தகைய மண்டபத்தின்கண்ணே ஏதோவொரு ஏகதேசகோணத் தேகதேசபொந்தாகாயத்திலிருக்கும் மலையோட்டடியில் ஒருசிறியகிரிக்கிராமக் குழியுளதாம்; ஆறுகளாலும் குன்றுகளாலும் உபவனங்களாலும் சூழப்பெற்ற அந்தக்கிராமத்தில், யாகாக்கினியையுடையவனும் கற்புக்கரசியையுடையவனும், அநேகம்மைந்தர்களையுடையவனும், அரோகதிடகாத்திரனும், பாற்பசுக்களும் வாகனங்களுமுடையவனும், அரசபயமணுகாதவனும் எல்லாவருணஆசிரம அதிதிகளையும் பூசிப்பவனும் போஷிப்பவனும் அறநெறிநின்றோனும் ஆகிய அருமறையோன் ஒருவனிருந்தனன்.

18-வது உலகமயக்க முரைத்தல் முற்றிற்று.

---

## 19-வது மறையவன் மரண வர்ணனம்.

இப்போது மறைவனது அரசதரிசனமும் அரசாக்ஷியாசையும் திரமனே ராச்சியத்தாற் பிறப்பும், இப்பதுமசிருஷ்டியானது முற்பிறப்போதும்வாயிலாக வருணிக்கப்படும். ஸ்ரீ தேவி கூறல்:—தெய்வதனம், மநுடதனம், வடிவம் வயது, தொழில், வித்தை, பெருமை, சேட்டை முதலியவற்றால் வசிட்டனுக்கே அம்மறையவன் ஒப்பாவான். எனினும் வசிட்டனது கிருத்தியங்களாகிய இக்ஷு வாகுவங்கிசத்திற்குக் குருத்தன்மைசெலுத்தல் ஸ்ரீ இராம உபதேசாதிகள் இல் லாதவனாவன்; வசிட்டனென்னும் பெயரானே வழங்கப்பெறுவன். அவனது அடிபரவும் இந்துசுந்தரியாயமனைவி அருந்ததியெனப் பெயர்பெற்றவளேயாவள். ஆனாலவள் விண்ணருந்ததி; இவள் மண்ணருந்ததியாவள். வித்தம் வேஷம் வயது கருமம் வித்தை விபவம் சேஷ்டை முதலியவற்றானே இவளும் அவ்வருந்ததி யையே யொப்பாவாள் எனினும், சேதனசொரூபஸ்திதியி லொப்பாகாள்; அம் மறையவன்பால் மிக மெய்யன்புடையவள், விலாச மந்தநடையுடையவள், வெள் ளாம்பல்போலும் புன்னகையுடையவள், இத்தகைய இவள் அவனது சமுசாரசர் வைசுவரியமாக இருந்தனள். இவ்விருவருக்கும் அவ்விருவருக்கும் வேற்றுமை, தத்வஞானம் வரும்பிறப்பில் உளதாவதாக இருத்தலால் அக்கால் அஞ்ஞாத லின் கட்டுப்பட்டிருத்தலினாலும், தத்வஞானம் அப்போதேயிருத்தலின் ஜீவன் முக்தத்தன்மையோடுகூடி யிருத்தலினாலும் என்றுணர்க. அம்மறையவன் அம்மலை யின் சார்பின் சோலையிற் பசும்புற்சூழ்ந்த சமநிலத்தில் ஒருகால் உட்கார்ந்திருந்த போது பூமியிற்செல்லும் பூபதியொருவனை நன்கு கண்டனன். அந்த பூபதியான வன் எல்லாப்பரிவாரங்களோடும் வேட்டையாடும்வேட்கையோடும் பெருஞ்சேனை யின் ஆரவாரத்தோடும், மிருகங்களைப் பிளக்குமாசையோடும் மேருகிரிக்கொப்பா கச்சென்றனன்; கொடிவனத்தை வெண்சாமரைகளாலும் பதாகைகளாலும் சந்திர கிரணங்கலந்ததாகச் செய்துகொண்டும் அங்ஙனமே யாகாயத்தை வெண்குடை மண்டலங்களால் வெள்ளி மேனிலைமாடமாகச் செய்துகொண்டும் சென்றனன். அசுவங்களின் பாதக்குளம்புகளின் காப்பாய்த்தைத்திருக்கும் தகடுகளால் கிண் டப்பட்டெளிதாய்க் கிளம்பிய தூளிகளால் ஆகாசம் நிறையும்படி சென்றனன்; ஆனாலவ்வரசன் அத்தூளிகளான் மூடப்பட்டிலன்; மற்றே, ஆனைச்சமூகத்தின் மேலிருக்கும் சூரியகிரணங்களையும் காற்றையும் தடுக்கும் தங்க வெள்ளி முத்து மண்டபங்களால் இரக்ஷிக்கப்பட்டுச் சென்றனன்; மகா கலகலவென்னும் கோலா கலங்களால் திக்குப்பிரமை முதலனவுளதாகவே சுழல்போலும் பத்துத் திசைகளி லும் மிருகாதிபூதமண்டலங்கள் வெருண்டோடும்படி சென்றனன்; சென்றவம் மன்னவன் பிரகாசியாநிற்கும் பொன்மாணிக்க ஹார கேயூரமண்டலங்களால் ஒளிர்ந்தவனாயிருந்தான். அத்தகையமகிபாலனைக் கண்ணுற்று இதனைச் சிந்தை யோடுமெண்ணாநின்றான்:—சர்வ சௌபாக்கியங்களோடுங் கூடி விளங்காநின்ற அரசியற்கை என்ன இரம்மியம் அஹோ ஆச்சரியம்! இரதகஜதுரகபதாதிகளாலும் கொடிகுடைவெண்சாமரைகளாலும் சோபிக்கப்பெற்ற இது வன்றோமகாபாக்கி யம்! பத்துத்திசைகளிலும் பரந்த இராச்சியங்கட்குச் சக்கிரவர்த்தியாக எப் போது ஆவேன்; அந்தப்புர அழகியர்களோடு ஆலிங்கனலீலைகள் ஆற்றியாத

அண்டான சிரமத்தெழுந்த வேர்வைத்துளிகளை, புட்பங்களின் மகரந்தப்பொடிகளுடன் கலந்து சுகந்தமடைந்தவாயுக்கள் எப்போதுமாற்றுகிற்குமோ! நற்சரித்திர ஆசரணசிக்ஷணங்களாற் புரந்தரிக்கும் புரந்தரிகளின்திசைகளின் முகங்களைப் பச்சைக்கர்ப்பூரத்தோடுகூடிய சந்தனத்தாலும் நிறைந்த கீர்த்தியாலும் முறையே இந்து உதயத்தாற்போலும் பிரகாசமுடையனவாக யான் எப்போது தான் செய்வேனே! இவ்வண்ணம் அவ்வேதியன் இச்சித்துப் பின் அதுமுதல் இஷ்டவிஷயத்தை நினைந்துகொண்டே யிருந்தான். வாழ்நாள் முழுதும் சோம்பலின்றி நித்யம் தனது தர்மத்தில் வழுவாதவனாகவே இருந்தான். தாமரையைப் பனி யிடி தகர்ப்பதேபோலும், தடாகநீரைக்கரையிடிதல் கெடுத்தலேபோலும் அம்மறையவனை ஜர்ஜரம்செய்யுமாறு ஜரையானது வந்தடைந்தது. மரணத்தையடைய நெருக்கமாகவிருக்கும் அம்மறையவனது மனைவி வசந்த இருதுவானது சென்றபின் உஷ்ண இருதுவின்பயத்தால் வாடுங்கொடிபோல வாட்டத்தையடைந்தனள். அதன்பின்னவள் உன்னைப்போல எம்மையன்புடன் ஆராதித்தனள்; சாவாதிருத்தல் அடையமுடியாததெனவெண்ணி இவ்வரத்தை எம்பால் வேண்டிக்கொண்டாள்:—ஹே இராஜ இராஜேசுரி! எனது நாயகர் மரித்த பின்னர் அவ்வுயிர் இம்மண்டபத்திலேயே யிருக்கவேண்டும். இதனைவிட்டு வெளியிலேகலாகாது எனப் பிரார்த்தித்துக்கொண்ட அளவில் அவ்வாறேயாகுகவென வரமீந்தேன். பின்பு அவ்விப்பிரன் காலவசத்தால் மரணத்தையடைவுற்றனன்; அக்கிருக ஆகாயத்திலேயே அந்தக்கரண வாசனைவச்சின்னப்பிரஹ்மமாய ஜீவாகாசத்தன்மையானே யிருந்தனன். பின்றானுகவே முன்செய்த அளவில்லாத திடபாவனையின் வயத்தினாலே ஆகாயசரீரமுடையவனாகவே தனது பதியுயர்ந்த தெய்வமாஅட சத்திமானான மன்னவனானன். மானுடப்பிரபாவத்தாற் பூமண்டலமுழுவதையும் வெற்றிகொண்டும், தெய்வப்பிரதாபத்தால் தெய்வலோகத்தையும் அடக்கிக்கொண்டும், பாதாளத்தை வெற்றிகொண்டு கிருபைபாலித்தும், மூவுலகவிஜய மன்னவனாயிலங்கினன். காட்டக்கனியிற்கழிந்தான் மீண்டுமுற்பவசம்பாவனையுமுண்டாம்; ஆனால் தனது பகைவர்களாகிய தருக்கட்குக் கற்பாக்கினிக்கொப்பாக விருந்தான்; மடமாதர்கட்கோ மீனக்கொடியோனென விருந்தான்; சஞ்சலங்களைத் தரும் விடயங்களாகிய வாயுக்கட்கு மேருவைப்போல அசையாதவனாகவிருந்தான்; சாதுக்களாகிய தாமரைமலர்கட்கு இரவியாக விருந்தனன். அக்கிருகத்துள்ளிருக்கும் ஆகாயத்தில், சித்த சமஸ்கார்ராவச்சின்னப் பிரஹ்மாகாசப்பிரசுரவடிவப் பூதாகாசவடிவம் வாய்ந்த அம்மறையவன் தேகம் நீங்கிய போது, அவனது மனைவியாகிய பார்ப்பினியானவள் சோகத்தாலத்தியந்தம் மூர்ச்சித்து வாடி காய்ந்த உளுந்து இரண்டாக வெடிப்பதேபோல் இருதயம் பிளந்திறந்தாள். நாயகனேடு சவமாய தேகத்தை சேய்மையில் விட்டுவிட்டுப் பரலோகத்திற்குக் கொண்டு செலுத்தும் மானசதேகத்தோடும் நாயகன்பால் நண்ணினள். நதியானது பள்ளத்தாக்குகளில் செல்லல்போல் அந்நாயகனையடைந்து பூங்கொத்தானது வசந்தகாலத்திற்போலச் சோகமற்றவளாயினள். அந்தக்கிரிக்கிராமத்தின்கண்ணே அம்மறையவனுடைய வீடுகளிருக்கின்றன; பூஸ்தாவராதி தனங்களுமிருக்கின்றன; மரணமாகி யிப்போது எட்டுத்தினங்களாயின; உயிரும் கிரிக்கிராம கிருகமண்டபத்திற்றானிருக்கிறது.

19-வது மறையவன் மரண வர்ணனம் முற்றிற்று.

---

## 20-வது பரமார்த்த வர்ணனம்.

இப்போது, முற்பிறப்பின் சரிதத்தைக்கேட்டும் லீலையானவள் அசம்பாவனையினாற் பீடையுற்றவளாக ஸ்ரீ பரமேசுவரியினால் திருஷ்டாந்தங்களாலும் ஊகங்களாலும் உபதேசிக்கப்படுதல் வருணிக்கப்படும். அம்மறையவன்றான் இப்போது மன்னவனாந்தன்மையையடைந்து நினக்கு நாயகனாகவிருக்கின்றனன்; அருந்ததியாகவிருந்த அவளே இப்போது லீலையாகிய நீயாயிருக்கின்றாய். நீங்களிருவருந்தா மிப்போது அரசனும் அரிசியுமாகவிருந்து அற்புதமான சக்கரவாகப்புட்களைப்போலும் புவியின்கண் ணெழுந்தருளிய உமையும் உமாநாயகனும் போலும் மகிழ்ந்து அரசுசெலுத்துகின்றீர்கள். முடிவாகக்கூறுமிடத்து இரண்டு சிருஷ்டிகளைப்போலும் பழைய சர்க்கமும் மயக்கமாத்திரமே யாகும்; இங்ஙனம் முன்னடந்த சிருஷ்டிக்கிரம முழுதையுங்கூறினேம். அதன்கண்ணே பிரஹ்மாகாசத்தைச் சிவரூபமாகப்பார்த்தமயலே மூலமாகுமென்றறிதி; மயன்மாத்திரத்தையடைந்த ஆகாசந்தான் இங்ஙனம் ஜீவரூபத்தைத் தரித்தாடுகின்றது. பின்பின் மயல்கட்கு முன்முன்மயலே காரணமாகும். இம்மயலினின்றும் சிதாகாயத்தின் கண்ணே இம்மயக்கம்பிரதிபிம்பித்த தென்றறிதி. தனது திருஷ்டியினாலே அசத்தியமேயாகும் அதிஷ்டானதிருஷ்டியினாலோ சத்தியமேயாகும் என்றுணரின் உங்கள்பவம் நீங்கிச்சுகம்பெறலாம்; இவ்வாறாகவே மித்தையான அனர்த்த உணர்சியினால் எல்லாச்சர்க்கங்களுமே துல்லியமேயாகும். ஆகையால் சிருஷ்டி மயன்மயமியாதாகும் மயலற்றதுதான்யாதாகும். இங்ஙனம் இடரிலாது அநர்த்தத்தையுணரின் அயலொன்றுந் தோற்றவேதோற்றாதாம். ஸ்ரீவசிஷ்டபகவான் கூறல்:- இங்ஙனந் தேவிகூறியதைக் கேட்டு அசம்பாவனையால் நெடுநேரம் மிகவும் விஸ்மயத்தால் மலர்ந்த நேத்திரங்களையுடையவளாய் லீலையானவள் தத்தளித்து அக்ஷரமொழிகளாற் றேவியைநோக்கிக் கூறுவதாவது:—ஹே ஜெகதீசுவரி! உம்முடைய திருமொழி பொய்யேயாகும் மெய்யேயாயினும் இத்தகைய விரு... மானவிது எங்ஙனஞ் சம்பவிக்கும்; மறையவனுயிர் தன்வீட்டிலெங்கே! இந்நாமெங்கே யிருக்கின்றோம்; விஸ்தாரமான தேசத்தில் அற்புதம்! சமாதியிற்கண்ட நாயகரது சர்க்கமும் என்வீட்டிற்றானெவ்வாறு சம்பவிக்கும்? அத்தகைய வேறு உலகமும், அப்பூமியும், அம்மலைகளும், அப்பத்துத்திசைகளும் ஆகிய எனது நாயகரிருக்கும் அவைகளெல்லாம் இவ்விட்டகத்தே யெங்ஙனமிலங்காநிற்கும்? அசம்பாவனை புஷ்டியாமாறு ஸ்ரீதேவி கூறிய பொருளில் திருஷ்டாந்தங்களினால் நன்மையின்மையை லீலை கூறுமாறு:—ஹே சர்வேசுவர ஈசுவரீ! மதத்த ஐராவதமானது ஒரு கடுகின்றுளையிற் கட்டுப்படுவது போலும், ஒரு புன்கொசுகாற் செய்யப்பட்ட போர்க் காற்றாது வீரசிங்கக் கூட்டங்கள் அணுவின்றுளையிலடைக்கலம் புகுந்தது போலும், தாமரை விரையிற் றாபித்த மேருகிரியானது அங்கிருந்த ஒரு சிறுவண்டின் குஞ்சால் நெரிந்து தூளானதேபோலும், கனமேகங் கர்ச்சிப்பக் கேட்டுச் சித்திரத்திலிருக்கும் மயில் நடனஞ் செய்வதேபோலும், அருளியது யாவும் அசங்கதமேயாகும்; வீட்டிற்குள்ளே பிருதிவியும் பர்வதங்களும் எங்ஙனந்தா னிருக்கும்? பிரசாதத்தை யனுக்கிரகிக்கும் விடயத்திற் பெரியோர்கள் சிறிதும் வருந்தார்களல்லவா? ஆதலின் இது எவ்வாறு

பொருந்துறுமோ அவ்வாறு நின்மலமான திருவுள்ளத்திற் கருணைபுரிந்து அருளல் வேண்டுமென்று லீலைகேட்ப அதற்குத் தேவி யனுக்கிரகிக்கின்றதாவது:— ஹே சுந்தரியே! பொருந்தாததை யுண்டாக்கும்படியான பொய்யை யேன் யாங்கள் புகலவேண்டும், ஒருகாலும் பொய் மொழியே யாங்கள் புகலேம்; உள்ளபடியே கூறக்கேட்டி! "பொய்ம்மொழி புகலற்க" வென்னும் நியதிகளை யெம்போலியர் கடந்து நடவார். அன்னியர்களாற் பேதிக்கப்படும் மரியாதையை யாமே ஸ்தாபிப்பேம்; யாம் அம்மரியாதையைக் கடந்தால் மற்றெவர் காப்பர்? அக்கிராமத்திருக்கும் மறையவனாகிய ஜீவான்மா அத்தன் வீட்டின் கண்ணே விண்ணின்கண்ணே இம்மகா ராஜ்யத்தை அரசவாசனையுபகித சிதாகாசவடிவமாக விருந்தே காண்கின்றது. அவர்களே யாங்களாகவிருக்கும் பக்ஷத்தில் அவ்வாறு பிரத்தியபிஞ்ஞை யேன் உண்டாகலாகாது? மரணத்திற்குத்தான் என்ன வடிவம் எனின் கேட்டி! அப்பழைய ஸ்மிருதியானது உங்கட்கு உண்டாக மாட்டாது; வேற்றெண்ணமே யுண்டாகும்; கனவின்கண்ணே நனவின்மிருதி எங்ஙன முண்டாகமாட்டாதோ அங்ஙனமே மரணப்பான்மையுந் தோன்றுதாம். கனவிற் றிரிபுவனம் போலவும், மனநினைவிற்றிரிவித வுலகம் போலவும் கதைப்பொருட்பேபார் போலவும், மருப்பூமியில் மன்னுநீர்போலவும், அம்மறையவனது வீட்டினுள்ளே பர்வதவன பட்டணத்தோடுகூடிய பூமி முழுதும் மனத்தினுங் கண்ணுடியிலும் வயங்குமா போலிருந்து விளங்குகின்றது. கனமான இச்சிருஷ்டியானது சத்தியம்போல அசத்தியமாகவே தோற்றுகின்றது, அசத்தியமாயிருந்த போதினும் சத்தியமாகத் தோற்றுவானேன் எனின், பஞ்சகோசத்துள்ளிருக்கும் பரமசத்தாஞ் சிதாகாசத்தின் நிமித்தத்தானே சத்தாகத் தோற்றுகின்றது. முற்சர்க்க மசத்தியமானுல் இச்சர்க்கத்திற்கு வந்தது என்னெனின்; அசத்தியமாகிய பொருள்களினின்றும் உண்டாகிய ஸ்மிருதியினல் உண்டாகிய அதுவும் அசத்தேயாம்; தாரங்களோடுற்ற கானநீரிலெழுந்த தரங்கங்களும் பொய்யேயன்றோவாகும்? இவ்வுனதரண்மனையும் அம்மனையாகாசகோசத்துள் ளிருப்பதேயாகும். எம்மையும் உன்னையும் மற்றியாவற்றையும் கேவலம் அச்சிதாகாயமென்றே தெளிதி. எல்லாவுலகமும் பொய்யாகவும் சின்மாத்திர வஸ்துமாத்திரம் எஞ்சிநிற்கவும் அனுபவ சித்தமான திருஷ்டாந்தவாயிலாக அனுமானப்பிரமாணங்கள் வருமாறு சொப்பன சம்பிரம சங்கற்ப சுவானுபூதி பரம்பரைகள் ஈண்டு நன்குணர்த்திவைக்கும் பொருட்டு முக்கியமாய் பிரமாணங்களாம்; பிரதீபம் போலும். இச்சர்க்கத்தானே கேவலம் கிருக ஆகாசமேபூரிக்கப்படவில்லை யென்பதாக இல்லை; மற்றோ, அக்கிருகத் தேகதேசத்திருக்கும் ஜீவாகாச ஏகதேசமும் பூரிக்கப்படவில்லை; ஆகலின் பொய்யென்பதற்கென்ன தடையுளது? பிராஹ்மணனுடைய வீட்டினுள் மறையவனுயிர் நின்றது; அவ்வுயிராகாயத்தில் கடல் வனம் அவனி முதலவெல்லாம் தாமரையில் அளிகளெனவிருந்தனவாம். அதனுடைய ஏதோ வோரேகதேச அற்பகோணப்பொந்தில் இந்தப்பட்டணந் தேகாதிகளெல்லாம் நிர்மல ஆகாய ஏகதேசத்தில் குண்டலவடிவமாக கேசாகாரமயல் உண்டாதலே போலும் உண்டாகி யிலங்குகின்றனவாம். இவ்வாறாகவே மறையவனை மனைக்கு விஸ்தார சிருஷ்டியுட் புகுதலானே அசுவதரி வயிற்றிற் கருவுண்டாத

லால் நாசமுண்டாதலே போலும் நாசமுண்டாகுமென நினைக்கவு முடியாதாம்; அம்மனையின்கண்ணே இச்சர்க்கமும் இப்புர முதலனவும் உட்புகுந்திருந்த போதினும் அம்மறையவன் இல்லம் இருப்பதேயாகும் கெடமாட்டாதாம்; ஆகவே அம்மனை கெடாம லவையிருப்பதென னற்புதம்! மும்மை யணுவின் பாலும் உலகக்கூட்ட மொளிர்கின்றது பார்! விவர்த்தமாய்ப் பொய்யாயிருத்தலி னிருப்பதற்கென்ன தடையுளது குழந்தாய்! ஆகாசாதி ஜகத்சர்க்கமாகிய முன் னுள்ளது நிரவகாசத்தன்மை விரோதியன்றா மெனப் பரமாணு வவச்சின்ன சிதான்மாவின்கண்ணும் அது சம்பவித்தவழி யசம்பவ ஆசங்கை யுளதாவதே கூடாதாமென்றறிதி; பரமாணுவிற் பரமாணுவிற் சிதாத்மாவின் கண்ணெ உள் ளுள்ளே உலகங்களிருக்கின்றன வாதலின் இதன்கண் ணென்ன சங்கிக்கக்கிடந் ததோ அறியோம். ஹே பரமேசுரியாகிய என்றாயே! எட்டாந் தினத்தில் விப் பிரன் வீழ்ந்ததாக விளம்பினையே நமக்கு அநேகவருடங்கள் சென்றுள்ளனவே இஃதெங்ஙனம் பொருந்துமுரையாய்! என்று லீலை பிரார்த்திப்ப ஸ்ரீபரமேசுரி கூறுவதாவது:—ஹே சுந்தரி! தேய நீடியதல்லாமைபோற் காலமும் நீடியதாகா தாம் என்பதன் நியாயத்தை யாம் கூறக்கேட்பாயாக! ஜகத்சிருஷ்டியின்றோற் றரவானது எங்ஙனந் தோற்றரவு மாத்திரமாய் நிகழுமோ அங்ஙனமே, கணங் கற்ப முதலியவற்றின் றோற்றரவும் கேவலந் தோற்றரவு மாத்திரமே யாகும்; தோற்றரவு மாத்திரமென்பது எங்ஙனங் கூடுமெனின் கேட்டி! கணங்கற்பாதி யெல்லா வுலகும் நீ யாந்தகைமை எனதாந்தகைமை யத்தியாச அதீனத்ம ஜன் மப் பிரமவான்களுக்கே தோற்று நிற்குமென்றறிதி; அத்தோற்றரவின் முறை யைக் கூறக்கேட்பாயாக. ஜீவனானவன் பொய் மரண மூர்ச்சையைக் கணகால மனுபவித்து முன்னிருந்த நிலைமையை மறந்து மற்றொன்றையே காண்பன். ஓரி மைக்கொட்டு மாத்திரைக்குள்ளே வியோமத்தின்கண்ணே வியோமத்தைப் போல ஆதாரதேகாதி சூனியமாயினும் இது ஆதேயமென்றும் இவ்வாதாரத்தின் கண்ணே யானிருக்கின்றேனென்றும் சமஸ்கார முற்பன்னமாகின்றது. ஹஸ்த பாதாதியோடு கூடியிருக்குந் தேகமாகிய இது என்னுடையது எனப் பார்ப்பன்; எத்தேகத்தைச் சிந்தை செய்கின்றனனோ அத்தேகத்தையே காண்குவன். இத தந்தையின் மைந்தன் யான் எனக்கித்தனை வருடமாயிற்று, இவர்கள் எனது மனோரம்மியமான பந்துக்கள், இஃதெனது அழகிய வீடாகும் யான் பிறந்திருக் கின்றேன் யான் பாலன் யான் விருத்தியடைந்துளேன் யானித்தகையன் இவர் களி யாவரும் என்னுடைய பந்துக்களாவார்கள் இவர்களிவ்வாறு நடக்கின்றார் கள் எனக் காண்பன். பந்துக்களெல்லாம் தேகசம்பந்திகளாகக் கற்பித்தலின் அதனதுவாகவாயினும் தன்னதுவாகவாதல் யாங்ஙனங் கூடுமெனின்? தேக பாவத்தை யடைந்த சித்தமும் ஆன்மாகாசமும் அதிதிட ஐக்கிய அத்தியாச மடைந்திருத்தலால் அவர்கள் உண்மையா யன்னியர்களா யிருந்தபோதினும் தன்னவர்களாகவுங் காணப்படுவார்கள். இவ்வாறு இவனது தேகபாவமடைந்த சமுசார முண்மயமாய சித்தத்தின்கண் ணுதித்தபோதினும் யாதொன்று முண் மையா லுதிக்கவேயில்லை; நிர்மலமான சிதாகாசமே யிருக்கின்றது; கனவிற் காண் போனிடத்தில் எவ்வாறு சித்தானதிருக்கின்றதோ அவ்வாறு திருசியத்தின்கண்

னும் சித்தேயுளது. கனவில் எல்லாவிடங்களிலும் எல்லாவற்றிலும் அதாவது காண்போன்காட்சிப்படு பொருட்டன்மையானே கற்பிதமான பேதங்களிற் காணுது தொடர்ந்துநின்றசித்தானது அவ்விரண்டும்பாதமாகவே ஒன்றாகவே கண்டதரிசனமதாம்; அதாவது மீண்டுங்காணப்பட்டதாம். எதனாலோ அதனால் யாதொன்றும் உதயமாகவேயில்லையெனலாம். கனவில்எங்ஙனமோ அங்ஙனமே பரலோகவுணர்வாதிகளால் உதிக்கின்றது; பரலோகத்தி லெங்ஙனமுதிக்கின்றதோ அங்ஙனமே இங்குதிக்குமாமது; அக்கணப்பரலோக இகலோகங்களிலுள்ள யாவுமே உண்மையில் அசத்துக்களாயிருந்தபோதினும் மயலாற் சத்துப்போற்றோற்றுகின்றனவாம். கடலினின்றும் அலைகட்குப் பேதமில்லாததேபோல யாதொருபேதமும் சிறிதுங் கிடையவேகிடையாதாம். ஆகலின் உண்டாகியுள்ள விசுவமானது உண்டாகாமையானே யுண்மையின் அழிவையுடையதுமல்லவாம்; ஆன்மாவையே பாரமார்த்திக ரூபமாகவுடையதாதலால் உலகரூபமாக இல்லாததேயாகும்; ஆயின் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களினாலே விளங்குகின்றதே அவ்விஃதென்னேயெனின்? யாதிலங்குகின்றதோ அதுசித்துத்தான்; அதிஷ்டானசைதன்யமே எல்லாப்பிரமாணங்களாலு மிலங்குகின்றது; அதுவே அறியப்பெறுகதனாலும் பாதிக்கப்படாததனாலும் பிரமாணயோக்கியமாகும். ஆகலின் ஜடம் யோக்கியமாகாதாம்; அதன்கண்ணாவரணத்திற்கு வேலையின்மையின் பிரமாணப்பிரவிருத்தி பலமின்மையின்என்றறிக. திருசியம் யாதொன்றுமின்றியபோது பரமவியோமரூபமானது எங்ஙனம் நிர்மலமாகவிருந்ததோ அங்ஙனமே திருசியத்தோடு கூடியகாலத்து மிருந்ததாம், என்னை? ஆரோபிததிருசியத்தினால் அதிஷ்டானத்திற்கு யாதொரு இடரும்ஏற்படாமையின் என்க. எனவே திருசியமானது சித்திற்குவேறாகக் கிடையவேகிடையாதாம். கடலினுக்கு வேறாகக் கல்லோலங்கண்டதுண்டோ! அலைத்தன்மையும் இரசத்திலில்லையாகும் இரசதன்மாத்திரமேயன்றோ நீரினதுதத்துவம் அதன்கண்ணே அலைத்தகைமையின்றாம். இருந்தால் இரசனேந்திரியத்தால் அறியலாமே, விழியினலதுதோற்றுதலோ வேறுபூதங்களின் கூட்டுறவுபாதியாலாயதேயாகும்; ஆகவே முயற்கோடு போலவே பொய்யாம்; அதுவே திருசியம்போன்றுபதேயாம். இயற்கையாயோ சொரூபதிருஷ்டியால் அழிவற்றபொருளேயாகும் எனினுமமையும். ஆகலின் திருசியப்பொருள் இல்லாததேயாகும், ஆகவே திருஷ்டாதிருசியஞானமுண்டாதல் யாங்ஙனம்? மரணமோகத்தின் பின்னர் ஜீவனுக்கு நிமிஷமாத்திரத்தானே மூவுலகத்திருசிய சிருஷ்டியைசுவரியம் தோற்றுமாத்திரமாய்ப் புலப்படுகின்றது. வாசனைகட்கு நியமமாகத் தேசகாலாதி விடயமிருத்தலின் அதனாலுண்டாக்கப்பட்ட தோற்றமும் அவ்வாறேயாகும்; இன்னதேயத்தில் இன்னகாலத்தில் இன்னதொடக்கத்தில் இன்னமுறைப்படி இன்னபடியுண்டாகி இன்னதாய்க்கு இன்னதந்தைக்கு இன்னபுத்திரனாக இன்னவயதுடையவனாக இன்னவுணர்வினனாக இன்னவிடத்தில் இன்னசேஷ்டையுடன் இன்னவுறவினருடன் இன்ன வேலைக்காரருடன் இன்னபடி பாங்காமஸ்தமயமுதயமென்ன உண்டாகாமலிருந்தேயும் மேற்கூறிய வாதனைகளுடன் உண்டானதுபோலச் சித்துருவம் உண்டானேன்யான் எனச்சிந்திக்கின்றது. தேச காலக் கிரியை திரவிய மனது மதி இந்திரியாதிகளுடன் விரைவாகவே மரணமுடிவில் தேகத்தை யவ்வனத்துடன்

காண்கின்றனன்; இவள் தாய்; இவன் றந்தை; இவர்கட்கு யான் புதல்வனுகத் தோற்றியிருக்கின்றேன் என்று அனுபூதமானதேனும் அனுபூதமாகாதேனும் ஸ்மிருதிமயமுறை யாதுண்டாமோ அது பின்னர் புட்பத்திற்குப் பலஉதயம் போலத் தோற்றுகின்றது. இராக்ஷசயோனியின்கண்ணே சம்புவின் வரப்பிர சாதத்தால் தாய்க்குச் சமானவயதினடைவால் முதலில் யவ்வனத்தை யடைந்த போதினும் கற்பிதபால்யாதி ஸ்மிருதிமயக் கிரமம் பின்னருண்டாவது வழக்கம்; நிமிடமாத்திரத்திற்றுனே எனக்குக் கற்பம் கடந்தது என அனுபவிப்பன்; இது மார்க்கண்டேயபுராணத்திலும் லோகத்திலும் பிரசித்தமாகவேயுளதாம்; இரவு பன்னிருவருடங்களாக அரிச்சந்திரனுக்குத் தோற்றியது அவ்வாறல்லவா? காந் தையை விட்டுப்பிரிந்தவர்க்கு ஒருதினம் ஒருவருடம் போலாவதுங்கண்டா மன்றே? யான் மரித்தேன் பிறந்தேன் யான் அன்னியன் எனது பிதா என்ப தாகக் கனவிற்றேற்றுவதேபோலப் புசிக்காதபோகமே புசிக்கப்பட்டதேபோல வுணர்ச்சியுண்டாகின்றது; பிரமாணங்களிஞலே அலக்ஷிதம் கூறும்தன்மைய ராகிய அலங்கிதவாதியரான முக்தர்களிடத்தில் புசித்ததின்கண்ணும் புசிக்காத வுணர்ச்சி முதலிய யாவற்றையுங் கண்டோம். அவித்தைக்குக் கேவலம் அசத் துவத் தோற்றமாத்திரமின்றும்; மற்றே சத்தின் முரணுன தோற்றமும் பிரசித் தமாம்; சூனியமும் ஜனசமாஜ வியாப்தத் தன்மையை யடைகின்றது. உற் சவங்களோடு வியசனந் துல்லியமாம்; விப்பிரலம்பனும் லாபம்பெறும் மத சொப்பனுதி யுணர்விலென்றுணர்க. மிளகாயின் விரைக்கூட்டத்திற் காரமிருப் பதேபோலவும் கம்பங்களில் உள்ளே ஆக்கப்படாத பிரதிமைக்கூட்ட மிருப்பதே போலவும் எப்பிறப்பற்ற வஸ்துவின்கண்ணே இத்திருசியம் அன்னியமாக இல் லாமலே அதனது சத்தையினுனே சாந்தமாயுளதாமோ அவ்வான்மாவிற்கு உண்மையாய பந்தமோக்ஷ திருஷ்டிகள் எந்நிமித்தத்தால் எவ்வடிவின்வாயுண் டாம்? எவ்வாற்றுனுமே சம்பவிக்கமாட்டாவாமென்க.

20-வது பரமார்த்த வர்ணனம் முற்றிற்று.

---

## 21-வது விசிராந்தி யுபதேசம்.

இப்போது ஸ்தூலத்தை விசாரித்தலாலும் சூக்ஷ்மத்தை விசாரித்தலாலும் அதனதவித்தையை விசாரித்தலாலும் அதுவும் சின்மாத்திரமேயாமென ஸ்ரீதேவி லீலைக்குபதேசித்தல் வருணிக்கப்படும். கூறியபொருளையே விசேட மாக வருணித்தற்பொருட்டு மீண்டு வித்தரிக்கத் தொடங்கி ஸ்ரீதேவி கூறுவ தாவது:—ஹே புத்திரி! மரணமோகத்தின்பின்னர் விரைவில் ஜீவனுக்கு விழி த்தலானே கண்ணிற்கு உருவங்கள் தோற்றுவனபோல வேண்டுவன வெல்லாவற் றோடுங்கூடிய அகிலலோகங்களும் தோற்றுநிற்கும். திசை, காலம், தொழில், ஆகாசம், தருமமயமாய சுவர்க்காதிகள் கருமமயமாய இல்லமாதிகள் கற்பாந்த மிருப்பனவாகத் தோற்றும்; பிருதிவிமுதலியன மற்றும் அளவற்றன தோற்று நிற்கும். மாயிக ஸ்மிருதியனுபவ ஆபாசங்கட்குப் பிரசித்த ஸ்மிருதியனுபவ வைதர்மியங் கூறுதுங் கேட்டி! அனுபவித்திராததும் கண்டிராததும் யாதோ அஃதென்னுற் செய்யப்பட்டதென்றும் அக்கணத்திலேயே கனவிற் றன்மரண மொப்ப ஸ்மிருதியு முண்டாகும். இவ்வண்ணம் இம்மயல் அநந்தமானதே

யாகும்; சிதாகாசமானது மாயாகாசத்தில் மலர்ந்துகொண்டேயிலகும்; எங்ஙனெனின், பொய்வடிவமான உலகமெனப்பெயரிய சுவரிலா நகரமாகவென்றறிதி. ஆறுவகையாய விகாரங்களுள் முன்மூன்றன் பிரதானத்தன்மையானே சர்க்கமிஃதென்றும், பின்மூன்றன் பிரதானத்தன்மையானே ஜகத்திஃதென்றும் ஸ்மிருதிக்குக் காரணமாயிராநின்ற வாதனையே இலங்காநிற்கும். அதுவும் சமீபம் தற்போதுகளினுந் தூரம் கற்பம் எனத்தேசகாலச்சிறப்புவேற்றுமை வடிவத்தானே சாசுவதமாய் நிஷ்கிரியமாயிருப்பதன்கண்ணும் கண அதனப்யாசவடிவ கடிகை முகூர்த்தம் தினம் பக்ஷம் முதலியவற்றின் வடிவத்தானே யுண்டாம் எம்மயல் உளதோ அவ்வடிவமாயிலகும். முடிபுமொழியின், அனுபூதமாகியும் அனுபூதமாகாமலும் உண்டாகும். உணர்வு இவ்வாறு இருவகையாகவே பூர்வகாரணமில்லாமலே சித்துருபமே பிரவிருத்திக்கின்றது. அனுபவியாததில் அனுபவித்ததன்மைமயல் எவ்விடத்திற் காணப்பட்டதெனின்? கனுமயன் முதலியவற்றில் அயற்றந்தையிடத்திற்போலத் தந்தையின்ஸ்மிருதி காணப்பெறுதலின் அனுபூதமில்லாத பொருளிலும் அனுபவிக்கப்பட்டதகைமையுணர்வு உள்ளே யுதிக்கின்றது கண்டோம். அநாதியாயிருக்கப்பட்ட சமுசாரத்தின்கண்ணே யாவுமே அனுபவிக்கப்பட்டது எனஸ்மிருதிஐக்கியம் அதுவெனுந்தகைமை வெடுபட்டதோமயலாகாதாம் எனின்? ஒரொருகால் ஸ்மிருதித்தகைமையை விட்டொழித்து அனுபவமாத்திரமாகவே யிருந்து பிரஜாபதியின் பிரதமசர்க்கங்களி லிலங்குகின்றது ஸ்மிருதிரூபத்தால் அதன்பின் றொடர்ந்திலங்கும். இங்ஙனமாயின் அனுபவிக்கப்பட்டதே விளங்குகின்றது என்னும் நியமம் இல்லையாகுமெனின்? திருபுவனமுதலிய இத்திருசியங்கள் அனுபூதமாக ஸ்மிருதியின்கண்ணே இருக்கும் சிலசிலவோ அனுபூதமாகாதனவாய் ஸ்மிருதியின்கண்ணே யிருக்கும். மற்றுஞ் சிலவோ ஸ்மரணமில்லாமலே விளங்கவே செய்யும், சித்தனுக்கட்குக் காகதாலீயநியாயம்போல பிரஜைகட்கீசத்தன்மையானது உண்டாகின்றதல்லவா? அந்தப்பிரஜைகட்கீசத்தன்மையும் முன்னனுபவித்ததன்றென்றே சொல்லல்வேண்டும், என்னை, நான்குமுடனண்ணும் என்னுமிருதியினனே ஆண்டுஞானோதயமானது அவசியம் உண்டாகவே மறுபிறப்பானது மருவாமையின் என்றறிக. வாசனையின் கூட்டவடிவ மனோமயம் சமுசாரமாம்; பின்அதனழிவுபாட்டால் அத்தியந்தம் நிர்வாசனைவடிவ விஸ்மிருதியே மோக்ஷமெனவன்றோ இதனுற்பலித்தது? உலகத்தையத்தியந்தம் மறப்பதுதான் மோக்ஷமென்று மொழியப்படும் பிரியாப்பிரியங்கள் ஆண்டொன்றுமின்றாம். "அசரீரமாகிய அசங்கவான்மனை, திசைவரு பிரியாப்பிரியந் தீண்டா" என மறையுமறைகின்றதன்றோ? அவ்விரண்டு மில்லாத காரணமென்னையோ வெனின், மோக்ஷத்தில் யாதொருசித்தானது எஞ்சுகின்றதோ அது எவ்விஷயத்தின் போக்தாவென்றியம்புவது? இயம்பினன்றோ பிரியாப்பிரியங்கள் அதனிடத்துண்டாம். "யாண்டுதானிவற்கெலா மான்மாவேயாம், ஆண்டெதனனே யருமெதைக் காண்பன்" என்பன வாதியாய சுருதிகளுமுளவாம். அகந்தைமயமாய ஜகத்தின் ஸ்திதிக்குக் காரணமாகிய அவித்தையின் அத்தியந்தஅபாவ சம்பத்துவடிவ பாதமில்லாமலே இது உண்டாகாததன்மையை யுடையதேயாகும் உதயமாகாதொழிதலே முக்தத்தன்மையென்று சொல்லப்படும். இரஜ்ஜுவின்கண்ணே

சர்ப்பமயல் சர்ப்பசப்த அர்த்தங்களின் அசம்பவமாகிய இன்மை இரஜ்ஜுவடிவ
மாக இருக்கின்றது. உண்டாகாமலிருக்கும் அதனை யுபேக்ஷித்துணராமல் சாந்த
மாயிருப்பினும் சாந்தியை யடைவதில்லை. யோகத்தினாலே மனோவிருத்தியின்
நற்சாந்தத்தானே சாந்தியடைதலாம். ஞானத்தானே யெங்ஙனமெனின், கேட்டி!
யோகத்தினால் விக்ஷேபஅம்ச சாந்தியால் பாதிசாந்தமாயினு மிவன் சாந்தனாகான்
சமமுறான் எழுந்தசையில் மீண்டும்விக்ஷேபார்த்தமாக எழுச்சியாதல் கூடும்.
ஒரு பிசாசு தோற்றிமறைந்தபின் புத்தியில்லாதவர்க்கு மற்றொருபிசாசு தோற்று
மன்றோ? ஆகலின் ஞானத்தினாலே தாண்டுதலெளிதாம். இந்தவிஸ்தாரமய
மாகிய சமுசாரமானது பரமசிவமேயெனத் துணியத்தக்கது. அவித்தைவடிவ
காரணம் பாதமாகவே எவையேனும் இலங்காநிற்குமெனின், அவையாவும்
இலங்காதனவேயாகும்; மீண்டும் ஆவரணசங்கையுண்டென்பதேயில்லை யென்று
ணர்க. இச்சர்க்கமானது பிராஹ்மணப்பிராஹ்மணி சர்க்கப்பயில்வாலுளதாய வாத
னையின் காரியமென முன்னம்பிகை கூறியதிற் கூடாமையுளதென லீலை சங்கிப்ப
தாவது:—ஹே பரமேசுவரீ! மறையவன் மறையவன்வடிவ சர்க்கத்திலிருக்கும்
இச்சர்க்கத்திற் காரணபூதமான சமஸ்காரம், முன்னர் வெளிப்படாததாய் ஸ்மரண
யோக்கியமாய இக்காலத்தியதிருசியமில்லாமல் எங்ஙனமுண்டாயது? இப்போ
திருக்கப்பட்டவை முன்னில்லாமையானே அவற்றின் அனுபவ அபாவத்தாற் சம
ஸ்கார இலக்கணவாசனை அப்போதுண்டாகாதன்றோ? ஹே சுந்தரீ! சமஸ்காரமே
வாதனையன்றோ. இரண்டாவதுங்கூறுதும்:—சமஸ்காரமும் ஆண்டு அவசியந்தான்
எனநினைதியேல் பிதாமகன் முற்றுணர்வோனாதலின் வரும்பொருளும் அனு
பவிக்கக்கூடலின் அதனதுசமஸ்காரமே ஆண்டுக்காரணமாம். அவனது தேகாதி
சர்க்கத்திலோ அவனது சமஸ்காரமும் ஏதுவாகாதாம். பூர்வபிதாமகசமஸ்காரம்
ஏதுவெனவே சம்பவியாதேயாம் என்னை? பூர்வபிதாமகன் முற்கற்பமுடிவில்
விதேகமுக்தி யடைந்துவிட்டமையின் என்றறிக. ஆண்டு ஸ்மரிக்கத்தக்
கது இல்லாமையானும் உண்டாமன்றோ ஸ்மிருதியின் அசம்பவம்! ஆகலின்
ஸ்மரிக்கத்தக்கது முன்னர்ச் சம்பவிக்கவே யில்லையென்பதனால், முற்பதுமஜ
தேகாதி வாசனையோடுற் றிருக்கும் மாயோபகித சைதன்யத்திற்கு அவ்
வாறு இருப்புண்மையின் அதுவேசுயம். இவ்வாறாய அபூர்வ பதுமஜவடிவ
மாக விவர்த்தபாலத்தை யடைகின்றது. முற்பதுமஜ வாசனையோடுகூடிய
அவித்தையானது அதனதுதத்துவ வுணர்வினானே பாதமாய்விடுமோ
யெனின்? பிரஜாபதியினும் அன்னியபிரஜாநாதன் யான் ஆவேன் என்பதாகக்
காகதாலீயந்யாயம்போலத் தோற்றுமாத்திரமா யெவனேனு முண்டாதலும்
கூடும். தோற்றுமாத்திரத் தகைமையானே அவனும் அவனது சர்க்க
மும் பாதமாதல் பொருந்தும், இவ்வாறு தோற்றுமயமாய உலகில் ஒரு சிறிதும்
ஒருகாலத்திலும் ஓரிடத்திலும் உதயமாகவேயில்லை. மற்றோ, சிதாகாசமே யிலங்
கிக் கொண்டிருக்கிறது. பூர்வ அனுபவ ஜன்னிய சமஸ்காரத்தாலுண்டாயதும்,
அநாதியவித்தைச் சக்திரூப வாசனை வேறாலுண்டாயதும், அல்லது, இரணிய
கருப்பன் சம்பந்தமாயதும் மற்றவர் சம்பந்தமாயதும் என்னும் இருவகையாய
இம்மிருதிக்கு மாயாசபலப்பிரஹ்மமே காரணமாம்; சுத்தத்தின்கண்ணே காரிய
காரணபாவாதி வேற்றுமையின் நாற்றமும் பொருந்தாறாம்; சிதம்பரத்தின

கண்ணே காரியகாரணபாவமான இது ஒன்றாகவே யிருக்கின்றது. அவிசார வடிவ மாமையினாலகப்பட்ட காரியகாரணவிகற்பம் விசாரமுறுங்காற் பாதிக்கப் படும் எனக்காட்டுதுங் காண்டி! ஆடைகாரியம் நூலுகள்காரணம் எனத்துரி வேமாதி சககாரிகாரணங்களால் ஆம். ஆண்டுபகாரம் செய்யாதவற்றிற்கு சக காரித்தன்மை பொருந்தாமையின் உபகாரரூபமாயகாரியமும் அவ்வாறாயவற் றானே அறையத்தக்கதாகும் என அனவஸ்தைவருதலின் அதற்குபகார மின்மை யின் காரியகாரணபாவம் பாதமாம். ஆகவே, அக்கற்பனைக்கதிஷ்டான தந்து வாதி யைக்கியம் பேதகாரணமில்லாமையின் சாந்தியுறுதாம். இஃதுளதாகுக யூகத்தினாலிவ்வண்ணம் எனினும் அனுபவத்தில் இஃதேறுவது எவ்வண்ணம் எனின்? அதன்பொருட்டுப் பிரத்தியக்குத் திருஷ்டியைக் கூறக்கேட்குதி! நினைந்துகொண்டிருக்கும் சித்தோடுகூடிய வியஷ்டிசமஷ்டி யந்தக்கரணமே வேதனமாம்; அதுவும் மாயாசபள ஈசுவரகாரியமாம்; ஆண்டு மாயா உபாதியை யும் அந்தக்கரண ஆகாரஉபாதியையும் பேதமாகப் பராமரிசஞ் செய்யுங்கால் அவற்றை யுபாதியாகவுடைய அதிஷ்டானசன்மாத்திரத் திடத்தும் பேதகற் பனையுளதாதலின் காரியசத்தை காரணசத்தையினதீன ஜன்மத்தையுடையது என மயலால் முன்னவஸ்தையையுடையது சத்காரணம் பின்னவஸ்தையையுடை யது சத்காரியம் என வறிதியேலது அங்ஙனறிதல் கூடாதாம்; மற்றோ, மாயை யதன் காரிய ஆகாரங்களை யுபேக்ஷித்து அவ்விரண்டினுந் தொடர்ந்திருக்கும் சன்மாத்திரவடிவ மகாசித்துருவமே ஸ்மரணமென வுணர்தி; கூறிய இலக்கணம் வாய்ந்த பிரத்தியக்குச்சாக்ஷியின் றரிசனத்தால் காரியகாரணத்தன்மையானது பாதிக்கப் பட்டதேயாகும்; காரியகாரணசப்தமாத்திரமே எஞ்சாநிற்கும்; அது வும் அக்காட்சியானே கண்டதேயாம் உண்மையிலோ இல்லையாம். இப்பிரத்தியக் குத் திருஷ்டியானது வெட்டவெளியாக இந்நூலுரையாசிரியரியற்றிய சுவாராஜ்ய சித்தியின்கண்ணே யுரைக்கப்பட்டுமுளது:--பிண்டாவஸ்தைக் குடத்தகைமையை யெண்ணுங்கால் மனத்தில் காரணகாரிய மதியுளதாம்; மண்மாத்திரமாக ஒன்றாக நன்றாக எண்ணுபவர்க்குக் காரணகாரியமில்லையாம். அதுபோலவே ஈசுவரனையும் பிரபஞ்சத்தையும் விரைவிலெண்ணில் பிரஹ்மமானது உலகிற்கேதுவாகும்; சன் மாத்திரம் ஒரேவடிவம் என மிகுமதியுடன் எண்ணுபவர்க்கு மாயையுடையவனு மில்லை யுலகமுமில்லையாம். இதுவிடயம் வார்த்திகத்துங் கூறப்பபட்டுளது. ஆகலிற் சம்பாவனைமாத்திரமே யிச்சமுசாரம் பிரத்தியக் கான்மாவிடத்தில் கூறிய பொரு ளில்லையப்பாடுளதாமேல் பிரத்தியக்குத்திருஷ்டியினானே ஆராய்ந்து காணலாம். இவ்வண்ணம் நிட்பிரபஞ்சத் தன்மைதானுளதென் றுணர்தி. இன்னணம் ஜக ஜீவபரமுதலிய எத்திருசியமும் ஒரு சிறிதும் உண்டாகவேயில்லை; சிதாகாசத் திற் சிதாகாசம் கேவலம் தன்பாலே யிருக்கின்றது; இதனைத் தன்மகிமையிலே தானிருந்துளதா மென்றும் மறையின்கருத்தாகத் துணிதி. அவ்வாறுளதாய திருஷ்டியினானே தெளிவடைந்த லீலையானவள் கூறுவதாவது:—ஹே ஜகன் மாதாவே! அற்புதம்! அற்புதம்!! உலகசம்பந்தமாய ரூபஐசுவர்யம் சாலப் பிரமையினாலே வெட்டவெளியாகப் பார்வையாற் பிரகாசிக்கப்படுவதேபோல நின்னால் எனக்கு யந்ததிருஷ்டியானது காட்டப்பட்டது. இப்போது யானிதன் கண்ணிருக்கின்றேன் திருக்கின்கண்ணே அப்பாசத்தாலல்லாமல் விற்பத்தி திட

முடைமைவராமைவரை கூறப்படும் மனோஎழுச்சியைத் தவிர்த்தருளல்வேண்டும் ; அதாவது, எவ்வீட்டிலம்மறையவன் மறையவளோடும் இருந்தனனோ அதனையான்காணவேண்டும் அச்சர்க்கத்தையும் அக்கிரிக்கிராமத்தையும் காண்பான் அவாவுளதுஆகலின் என்னை ஆங்கு கூட்டிக்கொண்டுபோய்க் காட்டியருளல் வேண்டும் எனவேண்ட ஸ்ரீதேவி கூறுவதாவது :—ஹேசுந்தரி ! அதைக் காணும்பொருட்டு முன்போலச் சமாதியில் இத்தேகத்தை மறத்தல் ஆவசியமாம் ; திருசியமற்ற சித்துருவமயப் பரமபவித்திரதிருஷ்டியான காரணப்பிரஹ்மரூபத்தன்மையைப் பற்றிக்கொண்டு அமலையாகுதி இத்தேகஆகாரத்தை விடுதி. அதன்பின்னர் பூமியின்கண்ணிருக்கும் நரசங்கற்பம் ககனத்துட்புரங் கதுவலேபோலும் சிதாகாயத்தின்கண்ணிருக்கும் மாயாகாசவடிவ அச்சர்க்கத்தை ஐயமில்லாமலடையலாம். இவ்வண்ணமிருப்பையேல் அவ்வியாவற்றையும் என்னோடுகூடவந்து யாதொரு தடையுமில்லாமற் காணலாம் ; அதைக் காணும் விடயத்தில் இத்தேகமானது பெருந்தடையென்றுணர்தி. ஹேபுவனேசுவரி ! இத்தேகத்தோடும் வேற்றுலகை எக்காரணத்தாலடைய முடியாதென்பதை மிகுந்த ஊகங்களோடும் அடியாட்கனுக்கிரகிக்கவேண்டும் அனுக்கிரகிக்கும் விடயத்தில் அன்புடையார்பால் நீ மிக்காசையுடையவளல்லவா ! இங்ஙனம் பிரார்த்தித்தபின் தேவியருளுவதாவது :—ஹே அன்புடையோய் ! மாயாமாத்திரமாக இருப்பதனானே உலகசம்பந்தமான இவைகள் அமூர்த்தங்களாக இருந்தபோதினும் பொய்யுணர்வினானே மூர்த்தமுடையனவாக நீங்கள் பூஷணபுந்தியினானே பொன்களைப்போலும் இவைகளை யுணர்கின்றீர்கள். பூஷணரூபந்தரித்த பொன்னின்கண்ணேயும் பூஷணத்தன்மையாகிய பொன்னலாத்தன்மை இல்லாததேபோலும், உலக உருவப்பிரஹ்மத்தின்கண்ணே உலகமில்லவேயில்லையென்றுணர்தி. இவ்வுலகம் ஆகாசமாக ஈண்டுப் பிரஹ்மமே காணப்படுகின்றது ; எங்ஙனமெனின் ? தூளிவிரோதியாய சமுத்திரத்தின் கண்ணே யாதோ ஒருமாயை ஈண்டும் பிரதிபிம்பத்தூளிபோலுந் தோற்றுகின்றதன்றோ. கூறியபொருளிற் பிரமாணசமுசயமூலத்தைக் கெடுத்தற்பொருட்டு அதிதிடமானபிரமாணங்கள் காட்டப்படுகின்றன காண்குதி ! இவ்வுலகம் அத்தியந்தம் மித்தையானதேயாகும் அத்வயமாகிய பிரஹ்மமாம்யானே சத்தியன் இதன்கண்ணே முக்கியமாய பிரமாணங்கள் வேதாந்தங்களேயாகும் ; அங்ஙன் அவ்வேதாந்தங்களின்றூற்பரிய அர்த்தத்தின் அனுபவமேறுதற்பொருட்டு ஆசிரியரது சுவானுபவமோ மயன்வடிவமான பிரமாணமாம். பிரஹ்மமமே பிரஹ்மத்தைப் பார்க்கின்றது ; அப்பிரஹ்மம் பிரஹ்மத்தைப்பார்க்கவேமாட்டாதாம். சிருஷ்டியாதி யென்பதாகப் பிரசித்தமுறுவதும் இத்திருக்கினுடையதேயாய இயற்கையாவிருதசத்தையேயல்லவா ! பிரஹ்மத்திற்கும் உலகத்திற்கும் காரியகாரணத்தன்மையுதயமாதல் இலாததேயாகும், என்னை? எல்லா சககாரிகாரணங்களும் இல்லாதனவேயாதலினென்றுணர்க. அப்பியாசயோகத்தானே நினது பேதபுத்தியானது எதுவரை சாந்தமாகவில்லையோ அதுவரையும் அப்பிரஹ்மமான தேகாதி யான்மபுத்தியிருத்தலின் அவ்வடிவமாயிலகும் நீ பிரஹ்மத்தைக் காணல் முடியாததேயாகுமன்றே ! ஆண்டுத் திடஉபஸ்திதியை அடைந்திராநின்ற இவ்வெம்போலியாதியரோ பயிற்சியின்முதிற்சியாற் பிரஹ்ம சம்பத்தியிலிருத்தலின்

எப்போதுந் தற்பரவடிவமான அதனையே சொரூபமாகக் கண்டுகொண்டிருக்கின்றோம். மனோமாத்திரமாய் நகரங்களைக்காணும் எமக்குடலமோ சுத்தசித்தாகாச மயமேயாகும்; இத்தேகத்தோடும் தற்பதவடிவமான பிரஹ்மத்தையே உள்ளே பார்க்கின்றோம். யாவற்றையுமுணரும் விசுத்தசித்தத்தானே, தேகமுடையவர்களாய் எப்பொழுதும் பிரஹ்மதரிசன யோக்கியர்களாய் எம்போலவே இப்பதும ஜாதியருமிலங்குவர்; உண்மையாயோ பிரஹ்மவடிவினவாய உலக அதன்விவகாரங்கட்கு லேசத்தில் நிலைபெற்றைக்காண்பர். இங்ஙனமே சுருதியும் "இதனது பாதமிவ்விசுவபூதங்களே, இதன் மூப்பாதமின்னமுதந் திவி" என்னுமறையுமறையாயிற்கும். ஹேகுழந்தாய்! நினக்குப்பயிற்சியில்லாமல் ஆகாரம் பிரஹ்மத்தன்மையயடைந்திலது; அந்தக்கரணத்திலிருக்குஞ் சிதாபாசரூப வடிவமாகநின்றனை; அதனால், அந்தப் பிரஹ்மத்தையும் முன்மொழிந்த கிரிக்கிராமத்தையும் நீ காணமுடியாதவளா யிருக்கின்றாய். இத்தேகத்தோடும்போய்க் காணமுடியாமைக்குச் சங்கற்பத்தாலாகி யிருப்பதே காரணமாகும். இதனைக் கைமுதிகநியாயத்தாற் காட்டகாணுதி; யாண்டுதன்னுடைய சங்கற்பபட்டணத்தை தன்றேகத்தாலேயே யடையமுடியாதோ ஆண்டு அன்னிய சங்கற்பபட்டணத்தை யன்னியதேகமடையமுடிவதெங்ஙன் கூறுதி. ஹே காரியந்தெரிந்தவருண்மேன்மையாய்! ஆகலின் இத்தேகத்தைவிட்டொழித்து எச்சிதாகாசவடிவமாக இருந்தாற் பார்க்கமுடியுமோ அதனையே அதிவிரைவிலடைய முயலுதி. சங்கற்பநகரமானது, தேகசாத்தியமாகவேனும் விதேகமாகவேனும் சங்கற்பிதமாய அந்நகரவிவகார உபயோகப்பொருட்டு அர்த்தக்கிரியா சமர்த்துடையதாம்; இதரவிவகாரப்பொருட்டோ துச்சமாம். தாதாவினுடைய சங்கற்பத்தினாலுண்டாய இவ்வுலகமும் எமது சங்கற்பத்தாலுண்டாய இவ்வுலகமும் சங்கற்பத்தாலாயதாற் சமானமேனும் உட்டோன்றும் விலக்ஷணத்தன்மை யெங்ஙனமாமெனின்? அநாதிநியதி வடிவமான ஈசுவர இச்சாலக்ஷணமாயாசக்திவயத்தானே யாமென்றுணர்தல் வேண்டும்; ஆதிசர்க்கத்திற் சகத்பிராந்தி யெவ்வாறு இந்தஸ்திதியை யடைந்திருக்கின்றதோ, அவ்வாறே அதுமுதலாக இங்ஙனம் நியதி அதிதிடமாகவே நடந்துவருகின்றது. ஹே இராஜராஜேசுவரி! பிராஹ்மணப்பிராஹ்மணி யுலகைக் காண இருவரும் போகலாமென முன்னர்க்கூறினையன்றோ? அஃதெவ்வாறு போகமுடியுமென்பதை அடியாட் கனுக்கிரகிக்க வேண்டுகின்றனன். இத்தேகத்தை யிங்கே நிலைக்கப்பண்ணிச் சுத்தசத்துவத்தோடுகூடிய சித்தத்தினால் யான் போதல்கூடும் அவ்வுலகத்திற்கு நீ யெங்ஙன் போதல்கூடும் இத்தேகத்தோடும் கூறுதி. ஹே சுந்தரீ! நினதுசங்கற்ப ஆகாசவிருக்ஷம் சங்கற்பசம்பந்தசத்தையோடுகூடி யிருந்தபோதினும் வாஸ்தவசத்தையால் ஆகாயவடிவதாம்; குட்டியவடிவம்போலும் மூர்த்தமாகாதாம், குட்டியத்தாற் றடுக்கப்படுவதுமின்றும் குட்டியத்தாற் கெடுக்கப்படுவதுமின்றாம். எமது தேகாதிகள் சுத்தமாய சத்துவகுணத்தினானே பண்ணப்பட்ட காரியமாகலிற் சித்துருவத்தினவேயெனலாம்; அவ்வாறே தோற்றலுமாம்; அவ்வேதுவினானே அந்தப் பரப்பிரஹ்மத்தினின்றும் சிறிதுமாத்திரமே பேதிக்கின்றது; தகிக்கப்பட்ட ஆடையில் ஆடையின் ஆகாரமுளது. உண்மையாகவோ அது சாம்பலேயாகும் அஃதொப்பவாம். இவ்வெமது தேகமானது இத்தகையதாகும்; ஆகவே இதனை விட்டு

விட்டு யாம் போகவேண்டிய அவசியமில்லை; காற்று மணத்தையடைவதேபோல இத்தேகத்தோடே அத்தேசத்தையடையாநிற்பேம்; ஆயின் எனது நாயகருடைய சங்கற்பத்தாலாய சர்க்கத்தோடு இதற்கு எங்ஙனம் சேர்க்கையாமெனின்? நீரோடு நீரும் நெருப்போடு நெருப்பும் காலோடுகாலும் கலந்துநிற்பதே போலும் மனோமயமாய தேகங்களோடும் மற்றையபொருள்களோடும் கலந்து கொள்ளுமென்றுணர்தி. ஆயின் எனது தேகமும் உண்மையாக மனோமாத்திரமேயாதலின் நினதுதேகம் சமஜாதியாகும்; ஆகலின் நினது தேகத்தோடு ஒருமையாலேனும் சையோகத்தாலேனும் கலந்ததாய் ஆங்கடைவுறலாமேயெனின்? பிருதிவியானது விகாரத்தன்மையானே அழியப்படுவதான நினதுதேகம், அதனினும் முரணுப் பிருதிவிசம்பந்தமற்றதாய் அறிவுமாத்திர அறிவுதன்னாலறியப்பெறுவதாய எமது தேகத்தோடும் ஒருமையையேனும் சையோகத்தையேனும் ஒன்றாறுதென்றுணர்தி; கற்பனைமலைக்கும் மலைக்கும் ஒன்றற்கொன்று ஒருமை தானுதல் அபிகாதசையோகந்தானுதல் யாண்டுகூடும்? இதற்கும் மானசத்தன்மையே யுளதாகுக; ஆகப்பார்த்திவத்தன்மை யெங்ஙனங்கூடும்? ஆதிவாகிகமேயாகிய இச்சித்ததேகத்தை நும்போலியர் ஆதிபௌதிகத்தன்மைப் புத்தியினால் நீண்டபாவனையைக்கொண்டு கவர்ந்துள்ளீர்; கனவிற்போலும், நீள்காலத்தியானத்திற்போலும் மயலிற்போலும் மனோராஜ்ஜியத்திற்போலும் கந்தர்வபட்டணத்திற்போலும் என்றுணர்க. ஆயினெப்போது இதனது பார்த்திவத்தன்மை நிவர்த்தியாகுமெனின்? எப்போது சமாதியின் பயில்வினாலே நினது வாசனையானது சுருங்கிச் சொருபஸ்திதி யடையப்பெறுமோ அப்போதுதான் மீண்டுந் தேகத்தில் ஆதிவாகிகத்தன்மையை யடையலாம். மற்றையர்களுடைய தூல தேகங்கட்கு அழிவுகாணப்படுதலின் ஜீவன்முக்த யோகிதேகத்திற்கும் அழிவே சம்பவிக்கும்; சம்பவிக்கவே ஆதிவாகிகத்தன்மை யாகாதாம் என்றுகருதி லீலை வினவுவதாவது :—ஹேஅம்பிகே! சமாதியப்பியாசத்தானே ஆதிவாகிகதேகத்தன்மை யுணர்வானது திடமடைந்திருந்தும் அந்தத்தசையை யடைந்தபோது இந்தத்தேகம் அழிவுறுவதென்னே? தத்துவவித்தினுடைய தேகமானது ஞானத்தாற்பாதிக்கப்பட்டிருத்தலின் வெந்தவத்திரம்போலும் இல்லாததேயாகும், முன்வாசனைமாத்திரத்தினாலே படஆபாசம்போலும் தோற்றியபோதினும் வாசனைகுறுகக்குறுக அதனினும் சூக்குமப்படுதலின் ஆதிவாகிகத்தன்மையையே யடைவுறும் அழிவினையடைவுறாதாம் என்னுந்திருக்கருத்துடன் அம்பிகையருளல் :—ஹேகுழந்தாய்! யாதுளதாமோ அண்டேநாசாநாசக் கிரமமானதுண்டாகும், உண்மையாக யாதுஇல்லாததேயாமோ அதற்கு நாசமுளதாதலென்பது எத்தகையவார்த்தையாம். உண்மையுணர்ச்சியின் வயத்தினானே இரஜ்ஜுவின் கண்ணே சர்ப்பமயலொழிந்தஅளவில் சர்ப்பந்தானும் நஷ்டமடையவில்லையா? அல்லது நஷ்டமடைந்துவிட்டதா என்று பேசப்பட்டகதை யெதுபோலுமாகுங் கூறுதி. உண்மையுணர்வினானே இரஜ்ஜுவின்கண்ணே சர்ப்பமானது காணப்பெறாததேபோல ஆதிவாகிகத்வநிமித்தமாம் பிரஹ்மஞானத்தினால் ஆதிபௌதிகம் காணப்பெறமாட்டாதாம். கற்பிதப்பிரபஞ்சமானது முன்னரிருந்தது ஞானத்தினானே மூலத்தோடு அதுவிருத்தியாயது என்னும் விவகாரகற்பனையும் ஆரம்பதிருஷ்டியை யனுசரித்தேகூறியதாம், தத்துவதிருஷ்டியானே அதனது

சம்பாவனையும் இலாததேயாகும், எவராலேனும் இஃதாக்கப்பட்டிருக்குமாயின் கற்பனையும் நிவிருத்தியாகலாம், ஈண்டொருகாலத்திலுமில்லாத அக்கற்பனை நிலையின் னல்லுபாஸ்தையேயாம். (இவ்வாறே ஸ்ரீகௌடபாதஆரியராலும், "எவர்தமாலேனும் இலகுமே லுலகம் இவணறவிலக லேலுவதாகும், அவிருப தேசத் தாலிவ் வாதமாம், சிவமறி தரினே சிறிதில திருமையே" என அறையப் பட்டுளதாம்.) ஆயினெங்ஙனம் தங்கள் தேகாதிகளைத்தாங்கள் பார்க்கின்றீர்க ளெனின்? பரப்பிரஹ்மத்தா லினிதுநிறைந்துள்ள இத்தேகாதி ஐந்துகோசங் களும் ஒன்றிலொன்று உட்புகுந்திருக்கும், இவையாவுமாகிநின்ற பரப்பிரஹ் மமே தனதுமகிமையாம் பரத்திலிருக்கும் என, யாங்கள்பாதிக்கப்படாத சத்தி யத்தையே காண்கின்றோம், உனக்குணர்வு பூரணமாக உண்டாகாமையின் நீ காணுப். அதிருசிபமாகிய சித்தானது திருசியசத்துவாத்மத்தன்மையை எங் ஙனமடைந்தது? இலிங்கவடிவத்தினது சர்க்கத்தில் அதைக்கோசரிக்கும் சித்திற் குச் சித்துத்தன்மையெனப் பெயரிய தருமமுண்டாம், எக்காற் பஞ்சிகரணத் தின்கற்பனையானே தூலரூபங்கற்பிதமாமோ அக்கால் அதுமுதலாக ஒருஅணு கதசத்துவம் திருசியத்தையனுசரித்துத் தானும்திருசியபூதமாய்த்தானே மயலாற் காண்கின்றதென்க. முன்னர்க்காலத்தின் அதீனமாகச் சகலகற்பனையும் ஏற் பட்டதாகக் கூறப்பட்டது ஆண்டு லீலை பொருந்தாமையுளதாமென வினவல்:— ஹேஇராஜேசுவரி! முற்போதுளதாய பாலானதுபிற்போதிருக்குந் தயிராகார மாகப் பரிணமிக்கின்றதுதயிராயிருக்குங்காற் பாலில்லாததேயாகும், ஆங்கு, ஒன்றேயா யினிதுசாந்தமாய்த் திக்குக்காலாதிகளினானே படுக்கப்படாததாய்க் காலசம்பந்தமற்றதாய் நித்தியமிருக்கும்பரதத்துவமாம் பரப்பிரஹ்மத்தின் கண்ணே காலதத்துவமென்னும் முதல்விகாரமே யில்லாமையின் காலத்திற் கவகாசமெங்ஙன்கூடும்? உண்மையாய விகாரத்தை யங்கீகரிக்கினன்றோ நீகூறிய தோஷமாகும், பொய்யாயங்கீகரிக்கின் தோஷமெங்ஙன் வரும் என அம்பிகை விடையருளல்:—ஹேசுந்தரீ! பொன்னின்கண்ணே பூஷணத்தன்மையும், நீரின் கண்ணே தரங்கத்தன்மையும், கனசங்கற்பநகராதிகளிற் சத்தியத்தன்மையும் உண்மையை யனுபவிக்குங்கால் இல்லவே யில்லாததேபோலப் பிரஹ்மத்தின் கண்ணே அநாமயமாய ஆன்மசுபாவத்தினும் அயலாகக் கற்பனைகிடையவே கிடையாதாம். ஆகாயத்திற் றாளியில்லாததேபோலப் பரத்திற்கலையில்லையாம், கலைமுதலிய எவ்விடயமும்அற்றதும் பரமசாந்தமும் ஏகமும் பிறப்பற்றதும் ஆகிய இவ்வஸ்து எங்கும்நிறைந்து ததும்புகின்றது. யாதிங்கொருசிறிது தோற்று கின்றதோ அத்துயரற்ற வெறுந்தோற்றம் அதனதேயாகும், காசமணியினது தோற்றமேபோலும் அதிசயமானகாந்தமணியினது தோற்றமேபோலும் ஆம். கூறியமயக்கத்திற்கு ஏதுயாதென லீலை வினுதல்:—ஹேமாத! இவ்வளவுநீண்ட காலம் இந்தநாங்கள் துவைதாத்வைத விகற்பங்களோடு எதனுன் மயங்கியுழன் றோம் உரைத்தருள்வாய்? என வினவப்பட்ட ஸ்ரீபரமேசுவரி கூறுவதாவது:— ஹேதுழந்தாய்! ஆராய்ச்சியினாலே பாதிக்கப்படுதலின் அவிசாரமென்னப்பட்ட மோகமே அதன்காரணமாகுமென் றறிதி, அவிசாரத்தினாலேயே நெடுங்காலம் ஆகுலமுடையவளாய் மயங்கிச்சுழன்றாய், அவ்வவிசாரமும் இயற்கையாகவே எழுந்ததாகும் அதுவும் விசாரமாத்திரையானே விநாசத்தையடையும். அவிசா

மானது விசாரத்தினுனே நிமிடமாத்திரப்போதிலே நசித்துவிடும், நசித்த இது சத்தையேயாகும், ஆகலின் உள்ளவித்தையாமிது இல்லாததேயாம், அவிசார இலக்கணம் வாய்ந்தஅவித்தையாமிது விசாரத்தாற் பாதிக்கப்படுங்கால் பிரஹ்ம சத்தை வடிவமேயாகின்றது; அப்பாதமும் முக்காலத்துளதாவதே யாகும், ஆகலின் அவிசாரங் கிடையவேகிடையாதாம், அவித்தையென்பதுங் கிடையா தாம், பந்தமுங்கிடையாததே பந்தமில்லாமையின் மோக்ஷமுங்கிடையாததே இவ்வுலகமென் றுரைப்பதும் ஒருகாலும் பாதிக்கப்படாததாய சுத்தபோத சொரூபமே யாகும். இதுகாலபரியந்தம் உன்னுலிது விசாரிக்கப் படாமையிற் றுன் நீயுணராமலிருந்தாய் ஆகுலமுடையவளாகி மயங்கிச்சுழன்றே மால்கடன் மூழ்கினுய். இன்றுமுதலாக உணர்ந்தவளாயினை விடுபட்டவளாயினை விவேகி யாயினை, ஞானத்தினுலே துவைதவாசனை பாதமாகியவழி தத்துவவாசனை சேடி த்தலாகிய வாசனையின் சுருங்கலே மோக்ஷத்தின் பீஜமாகும் அது நினதுமனத் தில் விதைக்கப்பட்டது. மீண்டுந் துவைதவாசனை எழுதல் கூடுமேயெனின்? சமுசாரமெனப் பெயரியதிருஷியம் ஆதியிலேயே யுண்டாகாதபோது எங்ஙனம் அதனுல்வாசிக்கமுடியும் வாசனையென்பதுதான் என்னே? மனமானது ஞாதா ஞானம்ஞேயம் என்பவற்றின் முற்றுமின்மை சம்பத்தில் முற்றினும்மூழ்குமானுல் பரத்தின்கண் ணேகத்தியானமுண்டாகும், ஆகவே நிருவிகற்ப சமாதியுமுறும், உறவே அவ்விருதயத்தில் வாசனுக்ஷயபீஜமானது சிறிது அங்குரிக்கும், முறை யாக இராகத்துவேஷாதிகளாந் திருஷ்டிகள் உதயமாகாதொழியும், இச்சமுசார சம்பவமும் மூலத்தோடும் நாசமாகும், நிருவிகற்பசமாதியின் நிலைமையும் வேண் டியவண்ணம் அடையவும் முடியுமென்றறிதி. இவ்வண்ணஞ்செய்யும் நிருவிகற் சமாதியின் நன்னிலைமையானே சிறிதுகாலத்திற்குள், மாயாகாசத்திற்கும் அதன் காரியங்கட்கு உள்ளிருக்கும் அதிஷ்டானவடிவநிருமல ஆன்மாவின் பெரும் பற்றுக்கோட்டால், மயல் சோகமோகவடிவ களங்கமற்று அதனுனே அகளங்கை யாய் அதாவது அதனது சமஸ்காரகளங்கம் விடுபட்டவளாய், எல்லாப்பிராணி களினுடைய மயல்களும் அவற்றின் காரியங்களாகிய வாசனைகளும் அவற்றின் காரணமாகிய அவித்தையும், பாதமாக எஞ்சிநின்ற மோக்ஷமெனப்பெயரிய பரம புருடார்த்தம் நீயேயாகுதி.

21-வது விசிராந்தி யுபதேசம் முற்றிற்று.

---

## 22-வது விஞ்ஞான அப்பியாச வர்ணனம்.

இப்போது, துரியஅவஸ்தையின் இலக்கணமும் ஜீவன்முக்தியினது ஸ்திதி யும், வாசனையினது க்ஷயஉபாயமும் அதனதுபயிற்சியும் வருணிக்கப்படும். முன் னர்க்கூறப்பட்ட ஞானத்தின்றிடத்தன்மையானே யுண்டாம்தூலதேக பாவநீக்க மும், ஆதிவாகிக பாவஅடைவும் திருஷ்டாந்தங்களினு அுணர்த்துவிக்கும்பொரு ட்டு ஸ்ரீதேவி அருளத்தொடங்கல்:—சொப்பனத்தை யுணர்ந்துகொள்வதனுனே சொப்பனதேகமானது உண்மையாகாததேபோல அநுபவித்துக்கொண்டிருந்த போதினும் இத்தேகம் வாசனையின்க்ஷயத்தினுலே யில்லாததேயாகும். கனவை யுணர்தலினுனே கனுத்தேகம் சாந்தியடைவதேபோல வாசனையின்க்ஷயத்தினுனே

நனுத்தேகமும் சாந்தியாம். கனசங்கற்பதேகங்களின் முடிவில் இத்தேகம் காணப்படுவதேபோல ஜாக்கிரத்திற்றாலதேக மியானென்னும் பாவனையினீற்றில் அதாவது மூலோச்சேதத்தா லுச்சேதமாங்கால் ஆதிவாகிக தனுவினுதயமாம் மீண்டுங்கனவுண்டாதலின் கெடாமலிருந்துகொண்டு கிளம்பாவாசனையின்பீஜம் உளதாங்கனவில் துயிற்றன்மையுதிப்பதேபோல நனவில் எல்லாவாசனுபீஜமும் முற்றுமொழியவே ஜீவன் முக்தியானதவசிய முண்டாய்விடுகின்றது. ஜீவன்முக்தர்கட்கும் வாசனையுளதேயாம்; மாறுயினோ, விவகாரம் கூடாததேயாமெனின்? ஜீவன்முக்தர்கள்பா லிருக்கும்வாசனையானது யாதோ அது வாசனையல்லவாம் மற்றோ, சுத்த சர்வவாசனைகளின் பாதஅவதியாய அதிஷ்டான சத்துவத்திற்கே சுத்தவாசனையெனப் பெயரிருத்தலின் அதுவேயாகுமது, அதுவே சத்தாசாமானியமெனவுங் கூறப்படும், வெந்தவத்திரமென்று சாம்பலையே சொல்லுதல்போல அதற்குமுன் னுள்ள சர்வவாசனைகளிலும் அனுகதமாய சத்தாசாமானியமே அவ்வாறுகூறப்படு மென்பதுகாண்க. மூர்ச்சைசுழுப்திகளின் அவாந்தரபேத மியாதென்னின்? சுத்தவாசனை நித்திரையாமோ அதுவே சுழுப்தியெனப்படும், எச்சுத்தவாசனை ஜாக்கிரத்திற்கனமாமோ அதுவே மோகமெனப்படும்; வாசனைகளினது சுத்தி, உண்டாகாததெனவும் மறைப்பட்டதெனவும் ஆம்: ஆகவே அனுற்பூதவாசனை நித்திரை சுழுப்தியாகும், மறைப்பட்டவாசனை நனு மோகமாய் மூர்ச்சையெனப்படும்; நனவின்கண்ணே கனதரஉற்பூதவாசனைகள் விரைவிலுளதாய துயரஅதிசயத்தால் முற்றினும்வலிதின் மூடப்படுதலின் கனத்தன்மையைவிடாமலே மோகபாவஅடைவு அவற்றிற்கு அக்காலாதலிற்றான் கனமெனமோகஞ் சிறப்பிக்கப்பட்டது. நன்குக்ஷீணித்த வாசனைநித்திரை துரியமென்று சொல்லப்படும், நித்திரையென வேண்டுவதில்லை நனவின்கண்ணும் பரமபதத்தையறியுமறிவினல் மூலத்தோடும்வாசனையானது க்ஷயமாகவே துரிய முண்டாதல் ஒருதலையேயாம். அதுவே ஜீவிப்பவர்க்கு ஜீவன்முக்தியாம், ஜீவிப்பவர்கட்கு ஜீவனஸ்திதியாயிங்குள்ள நன்குக்ஷீணித்த வாசனையாதுளதோ அமுக்தர்களால் அறியக்கூடாத அதுவே ஜீவன்முக்தத்தன்மை யென்றுசொல்லப்படும் முன்னர்க்கூறிய சுத்தசத்துவமுற்றுச் சமாதியின் சாமர்த்தியத்தால் நெடுங்காலம் நிலைபெற்றதும், நன்றாகவாசனைகுறைந்ததும் ஆகியசித்தம், பனிக்கட்டியானது வெய்யிலினுலுருகி நீர்மையையடைவதேபோல் ஆதிவாகிகத்தன்மையை யடையும். ஆதிவாகிகத்தன்மை யடைந்ததும், சமாதியினின்றுங் கிளம்பியவிவகார காலத்திலும் ஆன்மஞானத்தோடுகூடியதுமாகிய மனமானது, சர்க்காந்தரத்திற் சென்றவற்றோடும் ஜன்மாந்தரத்திற் சென்றவற்றோடும், வேறுசித்தங்களோடும் சித்தர்களோடுந் தேவயோகியாதி சரீரங்களோடும் ஒருமையுற்றுக் கலந்திலங்கும், மற்றபடிமுடியாதாம். எக்கால் நினது இவ்வகம்பாவமானது நினது பயிற்சியினது வலுவினுற் சாந்தியை யடையுமோ, அக்கால் நினக்கு விஸ்தாரமாகிய திருசியப்பிரபஞ்சத்தினுடைய ஈறுமவதிபூத போதமான இயற்கையுணர்வுண்மை தானகவே யுளதாம். சாசுவதமா யிராகின்றநிலையை ஆதிவாகிகத்தன்மை ஞானம் என்றடையுமோ அன்று சங்கற்பத்தாற் றாடிக்கப்படாததும் அதனுனே பவித்திரமானதும் ஆகிய உலகங்களைக் காண்பாய். ஆகையால் அதிநிதமாகிய வாசனுக்ஷயத்தில் முயற்சிசெய்வாயாக, அதுமுதிர்ந்து வளர்ந்த அளு

விற் சீவன்முக்தையாயிருந்து வாழ்வாய். கிரிக்கிராமத்தைக் காணவேண்டு
மென்னு மாசையாற்றடைபட்ட சித்தத்தின்கண்ணே உணர்வின்நிறைவேனும்
வாசனையின்நீங்கப்பயிற்சியேனும் உண்டாகாதா மென்றுணர்தி; இவ்வதிசீதள
மாய போதசந்திரன் பூரணமாவதற்கு முன்னமீர தேகத்தையிங்குவைத்துவிட்டு
லோகாந்தரஞ்சென்று காண்பாயாக. எனது தேகத்தை நிறுத்தவேண்டுங்
காரணமென்னே, நினது தேகச்சேர்க்கையால் இதற்கும் செல்லும்படியான ஆற்
றல் ஏன் உண்டாகலாகாது எனிற் கேட்டி? விவகாரகாரியங்களில் மாம்சதேக
மானது மாம்சதேகத்தோடே சேர்க்கையையடைகின்றது; சித்தசரீரத்தோடு
அடையமாட்டாது? வரம்போலும் சாபமபோலுந்தான் நினது வசனத்தினு
லேயே சேர்க்கையேன் ஏற்படாதெனின்? ஏற்படாதுகேள்! இது அனுபவப்
படியே இருக்கின்றபடியே கூறப்பெற்றதாகும், பாலர்முதற் சித்தர்ஈறுக இனிது
சித்தமாயதேயல்லாமல் வரசாபம்போலு மல்லவாம்; அத்தியந்த மூடருள்
பாலகரேமுதலாக அத்தியந்தஅறிஞர்களுள் சித்தர்களீறுக யாவருக்குமனுபவப்
பிரசித்தமான பொருளே எம்மாற்புகலப்பட்டதே யல்லாமல் அபூர்வ அர்த்தம்
ஒன்றும் பலாத்காரமாகக் கட்டாய்க் கூறப்படவில்லையென் றுணர்தி, உலக
சித்தவஸ்துவின் இயற்கையானது பிறழமாட்டாதென்றால் வாசனையானது க்ஷய
மானபோதிலும் இத்தேகத்திற்கு ஆதிவாகிகத்தன்மை யானது சம்பவிக்குமாறு
செய்யமுடியாததே யாகும் எனின்? உணர்வினது திடதரப்பயிற்சியினாற் சமு
சாரவாசனையானது குறைந்துபோம், போகவே இத்தேகத்திற்கே யவசியம் ஆதி
வாகிகதேகத்தன்மையானது சித்திக்குமென்றறிதி. உயிர்களின் பரலோகத்திற்
குச்செல்லுகையும் ஆதிவாகிகதேகத்தாலென்பது பிரசித்தமாம் மரணமடைந்த
தூலதேகமோ ஈண்டேயிருத்தலுங் காணப்படுகின்றதே அவ்வாறிருக்க ஒன்
றற்கு ஆதிவாகிகத்தன்மையானே ஜீவனமும் தூலத்தன்மையானே மரணமும்
ஒரேகாலத்தி லெங்ஙனங் கூடுமெனின்? அவ்வாதிவாகிகத்தன்மையும் மரண
காலத்தில் ஈண்டிச்சரீரத்திலேயே யுதிக்கின்றது, எவ்வுயிரற்றதாலும் உயிருற்ற
தாலும் காணவேமுடியாதாம். பேசஸ்கரீ யென்பதாதிசுருதியினால், பரலோகத்துக்
கேற்ற தேகத்தையாக்கும் பொருட்டு, தனது அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட
தேகத்தைத் தொடங்கும் பூதமாத்திரை யம்சத்தோடுகூடியிராநின்ற மரித்த
வனுக்கே பரலோகஞ் செல்லுதல் கூடலின் அம்மாத்திரைகளை யவன் காணமுடி
யானேனும் ஆதிவாகிகத்தன்மை பொருந்தற்குயாதொரு தடையுமில்லை; ஜனங்
களாற்கேவலம் தேகம்மரித்துப் போனதெனக்காணப் படுகின்றது, யாதொரு
அன்னிய அஞ்ஞான கற்பிதமான பூதமாத்திரையங்கிச அஞ்ஞானதேகமுளதோ
அது அன்னிய ஜனங்களால் மரித்ததெனக் காணப்படுகின்றது. மேலும் உண்
மையல்லாதஇத்தேகம் மரிப்பதுமில்லை ஜீவிப்பதுமில்லை. அந்தஜீவிதமரணங்
களா லாகவேண்டுவதென்னே, சொப்பனசங்கற்ப மயல்களாற் கற்பிக்கப்பட்ட
அவற்றை யார்பொருட்படுத்துகின்றனர், அவையொருவஸ்துவே யல்லவென
ஈண்டு விரோதசங்கையே பொருந்தாதாம். சங்கற்பபுருடனிடத்தில் வாழ்தலும்
வீழ்தலும் பொய்யேபோல இத்தேகத்தின்கண்ணும் அவைதோற்றல் அத்தியந்
தம் பொய்யேயாகுமென்றுணர்தி, இவ்வாறருளக்கேட்ட லீலை கேட்பதாவது:—
ஹேதாயே! இங்ஙனம் நிர்மலமாகியஞானமானது உன்னால் அடியாட்குபதேசிக்

கப்பட்டது, அவ்வுபதேசத்தைச் செவிகுளிரக்கேட்ட மாத்திரத்தானே திருசிய விடேசிகையானது பரமசாந்தியையடைந்தது, அவ்வுணர்வுற வுபசாரமென்ன, என்ன பயிற்சிவேண்டும் எத்தகையது அது அஃதெங்ஙனம் விருத்தியடையும், அதுவிருத்தியானல் அதனுலுண்டாவதென்னே ? உரைத்தருளல் வேண்டுமென வேண்ட ஸ்ரீஜகன்மாதா கூறுகின்றாள் :—ஹேகுழந்தாய் ! எக்கால் எக்கால் எதனுல்எதனுல் யாதுயாது சிறிது செய்யப்படுமோ அவையெல்லாம் ஒருகாலத்திலும் பயிற்சியில்லாமல் ஈண்டுசித்தியுருவாம். ஆண்டாதியிலப்பியாச சொரூபத்தைக் கேட்டி ! ஐயமில்லாமல் தனதுபுத்தியில் ஏறுவதற்காக அதனது சிந்தனமும், அறிவாளர் அயலரர்மிச்சம்வாதப்பொருட்டு அதனது கூறுதலும், ஒன்றற்கொன்று அறியாத அங்கிசங்களைத் தெளிவித்தற்பொருட்டுப் பரஸ்பரம் அதனது அன்னியோன்னிய இனிது தெரிவிக்கையும் ஆகிய இவ்வுபாயங்களால் சமுசயங்களின் நிவிருத்தியானபின் விபரீதபாவனையின் நீக்கப்பொருட்டு அதனேடு ஒருமையுற்றிருக்குந் தியானத்தைச்செய்து வருவதையும் அதனதுஅப்பியாசமென்று பெரியோர்சொல்லுவர். திடமான வைராக்கியாதிகளே அதன் இலக்கணங்கள் என விரக்தஸ்துதிமுகமாகக் காட்டக்காணுதி ! விரக்தர்களாகி மகாத்மாக்களாகிப் போகபாவனைசளாகிய விடயவாசனைகள்யாவற்றையும் முயல் வுற்றுள்ளே இல்லாதனவாகப் பாவிப்பவர்களாகியிருக்குமுத்தமர்கள் ஜனனமரணாதிகளற்றவர்களாகிப் புனிதர்களாகிப் புவியில் யாவருஃ புகழவிளங்குவார்கள். இனிதுண்டாய சர்வபரிக்கிரகங்களின் தியாகஇலக்கண சௌந்தரியத்தாலும் வைராக்கியஇரசத்தினுலும் இரஞ்சிதர்களாய் ஆனந்த அமுத ஊற்றெடுக்கும் மதியுடையவர்களாய் அதனுனே மேன்மைதங்கியவர்களாகியிருப்பர்கள் அப்பியாசிகள். சிரவணுதி பரத்வமாயிருத்தலும் அதனப்பியாச இலக்கணமாகுமென்றுணர்தி, ஞாதாஞேயாதி திரிபுடிப்பொருள்களின் அத்தியந்த அபாவ சம்பத்தியின்கண்ணே, பிரமாணத்தத்துவ நிச்சய அனுகூல யூகத்தினுலும், வேதாந்த சாஸ்திரங்களாலும் யாவர் முயலுகின்றனரோ அவர் பிரஹ்மாப்பியாசிகளென்றுணர்தி. முக்காலத்திய திருசியபாத தரிசன ஆவிருத்தியும் அதன்பயிற்சியேயென்றுணர்தி, இஃதுலகம் இதுநான் என்னு மித்திருசியம் சிருஷ்டியினுதியிலேயேயுண்டாகவில்லை யாதலின் எப்பொழுதுமே கிடையவேகிடையா தென்று பயில்வர் பிரஹ்மசாதகர், திருசியம் அத்தியந்தம் இல்லையென்னும் போதத்தால் இராகத்துவேடாதிகளெல்லாங் குறைந்து வரவே மனத்தாலுண்டாய வித்தை வாசனைத்திடத்தன்மையாலாகும் ஆன்மரதியாதோ அதனைப்பிரஹ்மாப் பியாசமென்பர். திருசியமித்தியாத்வ தாட்டியத்தாலாய இராகாதியின் அழிவின் கண்ணே முன்னர் ஞானுபயோகியாதலின் அக்காலதனப்பியாச இலக்கணமாம் அயல்வகையாயாகாதாம், திருசியஅசம்பவ போதமில்லாமல் துவேஷாதியின் குறைவு தவமென்று கூறப்பெறும் ஆகலின் ஞானமாகாதாம், அத்தவமும் வீணுகத் துவேஷாதிகளைத்தகையும் துயரத்தை விரித்துக்கொண்டேயிருக்கும். அதன்கண்ணே காரணத்தையும் அவ்வப்பியாச பலத்தையுங் கேட்டி ! எக்காரணத்தால் முடிபானசாக்ஷாத்கார வடிவ ஞானமும் அதன் ஞேயமாகியபிரஹ்மமும் திருசியத்தின் அசம்பவம் எதனுல் அல்லதுஎதன்கண்ணே அவ்விதமானதே போதமென்று சொல்லப்படும், அதன்பயில்வினுலே நிர்வாணபதவியானது

கிடைக்கும் என அப்பயிற்சி பெரும்பயனையுடையதன்றோ. சரற்காலத்தின் கண்ணே மகத்தானபனிப்படலம்போலச் சித்தத்தின்கண்ணே கூறியவண்ணம் பயிற்சிசெய்யப்பட்டதும், சர்வ தாபங்களின்உபசாந்தி காரணமாதலின் இம சீதளமும், ஆகிய எப்போதுஞ்செய்யப்பட்ட விவேகத்தாலாகிய விஞ்ஞானநீரின் றெளித்தலால், சமுசாரமென்னப்பட்ட கிருஷ்ணபக்ஷ இரவின்கண்முயன்ற மோகமென்னும் பெருந்தூக்கமானது சமஸ்காரவடிவமாகக்கூட எஞ்சாமல் அழிந்துபோகும். ஸ்ரீ வான்மீகி முனிவரானவர் மேற்கூறியபிரகாரமாக ஸ்ரீ வசிஷ்டமகாமுனிவர் கூறியதைப் பரத்துவாஜர்பொருட்டுக் கூறிய போதுபகற் சென்றது, சூரியனும் அஸ்தத்தையடைந்தனன், பரத்துவாஜர் முதலிய முனிவர் சபையும் ஸ்ரீ வான்மீகிபகவானுக்கு நமஸ்காரத்தைச் செய்துவிட்டுச் சாயங்காலஞ் செய்யவேண்டியதாய சந்தியுபாசனை யக்கினிஹோத்திராதிகளைச் செய்யும்பொருட்டு ஸ்நாநஞ் செயவான் சென்றது, பின்னரிரவு கழிந்தபோது காலையிற் சூரிய கிரணங்களோடும் மீண்டும் ஸ்ரீ வான்மீகி சந்நிதியை நோக்கிவந்தது.

22-வது விஞ்ஞான அப்பியாச வர்ணனம் முற்றிற்று.

---

## 23-வது ஆகாச கமன வர்ணனம்.

இப்போது யோகத்தினாலே தூலயாக்கையை விடுத்துக் கிரிக்கிராமத்தைப் பார்க்கவேண்டுமென்னு மிச்சையினாலே ஞானலீலா தேவிமார்களின் விஸ்தார மான கிருக ஆகாயத்திற் சேர்க்கை வருணிக்கப்படுகின்றது. ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுதல்:—ஹே இராகவ! இங்ஙனம் அவ்விரவின்கண்ணே அந்தப்புர மண்டபத்தில் திடமாகச் சகல சாளரம் வாயின் முதலியவற்றின் தாழ்கள் போட்டு மிகுந்த சாமர்த்தியத்தோடுங் கூடிய மனத்தையுடைய சேடிமார்கள் யாவரும் தூங்கிய பின்னர், மலர்க்குழல்விடுத்து மிகுமணத்தாற் பூரிக்கப்பெற்றவரும், வாடாத மாலையாடையுடைய சவசமீப ஆசனத்திருப்பவரும், சமக்ரமும் அகளங்கமும் ஆய நிறைநிலவொத்த வதனங்கிளர்ந்தொளிருவதற் கிடமானவரும் ஆகிய அவ்விருதேவிமாரும் இனிதுற மொழிந்து பின் சமாதிநிலையையடைந்து, இரத்தினத்தம்பத் தமைத்திருக்குமிரத்தினப் பதுமைகள்போலவும் சித்திரபித்தியி லமைந்த சித்திரப்பாவைகள் போலவும் காயங்களசைவற்றுக் கலங்காதிலங்கினர்; எல்லா எண்ணங்களுமற்றிருந்தனர்; எல்லாப் பொறிகளையும் தடைப்படுத்தித் தத்தங்கோளகத்துள் வைத்திருந்தனர்; நிறுந்தத்தாமரை யொத்தனர்; பரப்பிய பரிமள பாகத்தினர்; காற்றற்ற சரற்காலத்திற் பர்வதத்தின்கணிறங்கிய மேகங்கள் எங்ஙனந் தூய்தாயும், மங்களமாயும், சாந்தமாயும், சீதளமாயும், அசைவற்றதாயும் இருக்குமோ அங்ஙனமே அத்தியந்தம் சாந்தமாயும், சுத்தமாயும், மங்களமாயும் அசைவற்றுமிருந்தனர்; வசந்தாதியிலிருக்கும் மநோகரகற்பலதைகள் பழந்தளிர்வாடக் காண்டலின் பூர்வ இரசத்தை விடுகின்றன வென்ன நிர்விகற்பசமாதியினாலே வெளியுணர்வுகள் யாவற்றையும் விட்டொழிந்திருந்தனர். அத்தியந்த திருசியசாந்தியால் நிருவிகற்பசமாதி நிலைபெறுவதில் தத்துவ சாக்ஷாத்காரத்தால் மூலத்தோடும் முக்காலத்திய திருசியபாதமே நிலைபெற முற்றியகாரணமாகும், யான் உலகம் என்னும் திருசியமயல் முதலினுண்

டாகவேயில்லை யாகலின் அத்தியந்தம் கிடையவே கிடையாது என்றவர்கள் அறிந்ததும் இத்திருசியப் பேயானது இருவரிடத்துமில்லாமலே போய்விட்டது. சமாதியின்கண்ணேபோலும் எக்காலத்திலும் முக்காலத்திய திருசியபாதம் எம தனுபவ சித்தமாமென ஸ்ரீ வசிஷ்டபகவான் ஸ்ரீ இராகவரை விளித்துக் கூறு கின்றார்:—ஹே இராகவ! எம்மனோரது திருஷ்டியில் இவ்வுலகத்தின் றோற்றம் கேவலம் கானனீருக்குச் சமானமாகவே யிருக்கிறது; உண்மையில் இத்தோற்ற மும் இல்லாததேயாதலின் முயற்கோடுபோலவே யாம்; என்னை? முதலிலேயே யாது இல்லாததாமோ அது நிகழ்விலும் இல்லாததேயாமன்றோ. திருசியமி யாவுமொழிந்த காலத்தில் அவர்கள் எவ்வாறிருந்தன ரெனின்? சந்திரசூரியாதி சர்வபதார்த்த சமுதாயங்களால் மிகுந்த தூரத்தில் விடப்பட்ட ஆகாயம்போன் றும் சர்க்கத்தினுடைய ஆதியில் வாயுவுற்பத்தியின் முன்னரும் வாயுவிருகப் பிர ளயமாகிய போதும் இருந்த ஆகாயம் போன்றும் அவ்விருவரும் இயற்கையா கவே கேவலம் பரமசாந்தஸ்வரூபமாகவே யிலங்கினர். கூறப்படும் விண்செல் லில் அவர்தம் தேகவேற்றுமையிருந்தவாறு கேட்டி! ஸ்ரீ ஞானதேவி யானவள் முன்னிருந்த ஞானதேகத்தோடு முலவினள், லீலாதேவியோ அயலான தியான ஞான அனுரூபமாய தேகத்தோடு முலவினள் விரைவில் அத்தூரவிண்செல்லுங் கற்பனையும் தனது சிருகமண்டப ஆகாசப் பிரதேசமாத்திரத்திலேயே நடந்ததல் லாமல் வெளியிலன்றும், வீட்டிற்குள்ளேயே பிராதேசமாத்திரமேறி (தேகாந்த யிடமேல் இதயத்தினின்றுங் கண்டதேச பரியந்தமான பிரதேசமாத்திர நாடி மார்க்கத்தையுற்று எனப் பொருளுரைத்துக்கொள்க) வெளிப்பட்ட பூர்வ சங்கற்ப சமஸ்காரவுணர்வினுனே சிதாகாசரூப மாயிராநின்ற அவ்விருவரும் விண்செலுமாகிருதிக ளுடையராயினர். கிருபாதிருஷ்டியையுடைய அம்மையா ரும் விநோதப்பிரிய லீலாதேவியும் விஷயவுணர்வின் இயற்கையாய விடயத்தை யனுசரித்த வியவகார கற்பனையின் வசத்தால் அங்கிருந்து விண்ணில் மிகுதூரஞ் சென்றனர். அவ்வீட்டிலிருந்துகொண்டே விண்ணில் அதிதூரம் செல்வோம் யாம் என்னும் சிற்பிரதானமானசகற்பனு விருத்தியினுனே கோடியோஜனை விஸ் தீர்ணம் தூரத்தினும் தூரத்தினும் அதிதூரம் சென்றனர். உண்மையாகச் சிதா காசதேகமுடையவ ராயிருந்தபோதினும் முன் சங்கற்பித்த திருசிய அனுசந் தான சகிதசித்தவடிவத்தன்மையை யடைந்திருக்குந் தம்மியற்கையினுனே ஆகாசதேகத்தோடு கூடியவராயிருந்தபோதினும் ஒருவருக்கொருவர் ஆகாரத் தைக் கண்டுகொண்டு அன்பின் மேலீட்டால் நேயமுற்ற இருவரும் சென்றனர்.

23-வது ஆகாச கமன வர்ணனம் முற்றிற்று.

---

## 24-வது ஆகாச வர்ணனம்.

இப்போது அநந்தவிசுவ விசித்திரவிலாசங்களோடு கூடியிருப்பதும் இரண்டு தேவிமார்களும் செல்வதும் ஆகிய ஆகாயநெறி வருணிக்கப்படும். தூரத்தினும் அதிதூரம் கிளம்பி மெதுவாக மேலிடஞ்செல்பவரும், கரத்தொடுகரம் இனிது பற்றிச் செல்பவரும்; ஆகிய தேவிமாரிருவரும் ஆகாய நெறியிற்கண்ட அதிசய மாவன:—அவ்வாகாயமானது ஒரு பெருங்கடலேபோலும் மிக விசாலமுற்றுக்

கம்பீரமாய் அதிநிருமலமாய் அதிகோமளமனோகரமாய் மந்தமாருதக் கலப்பாற் சுகபோகந் தருவதாயிருந்தது; சூனியத்தன்மை வடிவநீரின்கண்ணே மூழ்கலால் அத்தியந்தம் சந்தோஷத்தைத் தருவதாயும், உலகின்மைவடிவப் பிரஹ்மநீரில் முதலில் எழும்பலால் உயிர்களாகிய வண்டுகளின் சந்தோஷகாரணமாய கமலமாயும், மிகவுமழகியதாகியும், அத்தியந்தப்சுத்தமாயும், கம்பீரமாயும், நல்லோர்களினும் அதிகத் தெளிவாயுமிருந்தது; அதைக் கண்டுகொண்டு செல்லுங்கால் திசைகளில் மேருவாதிகளின் கொடிமுடிகளினிலவும் நிருமலமேக நக்ஷத்திரங்கள் நிறைந்திருந்த சுதாலயங்கடந்து அமிர்தமயமாய பூர்ண சந்திரமண்டலம் புகுந்து சித்தகந்தர்வமந்தாரமாலை முதலிய மனோகர வஸ்துக்களான் மிக மகிழ்வுற்று மந்தமாருதத்தினைப்பாறிச் சந்திரமண்டலம்விட்டு நீங்கி ஆநந்தத்துடன் சென்று சூரியதாபமுடிவில் மின்னற்போன்ற செந்தாமரைநிறைந்த தடாகத்திற் போலச் செந்தாமரையொத்த மின்னல் நிறைந்து நீர் பூரித்து மந்தம்வாய்ந்த மேகமண்டலத்தில் ஸ்நாநம் செய்தார்கள். அவ்வப்பூதலக்கூட்டங்களிலிராநின்ற பெருமலைகளாகிய ஹிமவான்கைலாய முதலியவை தாமரைக்கந்தங்களின் அங்குர கோடிகளைப்போலுஞ் சென்றனர். திசைகளில் வண்டுகள் தாமரையிற்போல இஷ்டப்படி சுற்றினர். தாராகிருசமதியால் தீர கங்கையின் சீகராகணங்களைத் தரிப்பவராய் காற்றினாற் கலங்கிய மேகமண்டல மண்டபத்திற் சுழன்றனர். அதன்பின் இனிய நடையுடையவர்கள் தங்கள் சக்தியளவு இளைப்பாறுபவர்களாய்ச் சூனியமாய ஆகாயத்தில் மிகவிரிந்த புவனங்களின் அவற்றிலுள்ள ஜனங்களின் நெருக்கங்களைச் கண்டனர். ஞானவடிவமாய அம்பிகையால் முன்னம் பார்க்கப்பட்டனவாயிருப்பினும் ஒருவரோடொருவர் கூடி முன்பாராதனவாய் எல்லாச் சங்கடங்கட்குங் காரணங்களாய் கர்ப்பச் சித்திராதியங்கிசங்களோடு கூடினவாய் எல்லாப் பிராணிகளின் சமுசார துக்கங்களின் ஆசிரய பூத காரணங்களாயிருப்பவற்றைக் கண்டனர், நூறுகோடிக்கணக்காயுள்ள உலகங்களாலும் நிறைக்கப்பெறாது விரிந்திருக்கும் விண்மண்டலத்தையுங் கண்டனர்; மேலுக்குமேலுயர்ந்தனவாய் வேறுவேறாகத் தனித்தனி விசித்திராபரண ஆகாரபூமண்டலங்களாய சோபனவிமானங்கணிறைந்த புவனமண்டலங்கள் சூழ்ந்திருப்பதைக் கண்டார்கள். ஆகாயம் அளாவிய மேருமுதலிய குலபர்வதங்கள் நாற்புறங்களிலிருப்பதையும் பக்கங்களிற் பதுமராகமணிமய தடாகங்களின் ஒளிகளால் கற்பச்சுவாலைக்குச் சமமாக வியாபிக்கப்பட்டிருப்பதையும் கண்டார்கள். அப்பர்வதங்களின் முத்துமயமான சிகரங்களின் பிரபையின் பிரவாகத்தால் ஹிமவானது மேனிபோல் அழகுற்றிருந்ததையும், பொன்மலைத் தலப்பிரபைகளால் பொற்றலம்போற் பொலிவுறுமிடங்களையும், அப்பர்வதங்களின் பெரும்பெருங் காந்திவாய்ந்த மரகதமணிகளின் பிரபைகளால் புன்னிறைந்த இடங்கள் போலும் நீலப்பொலிவுற்றிருப்பதையும், சிலபால் விழிகளோடுகூடிய ரூபபேதங்களின் ஸூக்ஷ்மமாகவே மிகப்பற்றுதல்கொண்டுண்டாய இருட்டெழுங்கறுப்பையும் கண்டார்கள். சிலபாற் பாரிஜாதகற்பலதை வனத்தின்மேல் உலவாநின்ற விமான கணங்களின் கேதனஸ்தானங்கள் சமீபத்திற் பார்க்குங்கால் அவ்வனமஞ்சரிகளின் ஆகாரங்கள்போலவும், தூரத்திற்பார்க்குங்கால் வைடூரியமயபூதலம்போலவும் இருப்பதையும் கண்டார்கள். ஆங்கு மனோவேகத்தையும் மகாசித்தவேகத்

தையும் வாயுசஞ்சார வேகத்தையும் வெற்றிகொண்டனவாக, விமானங்களிலும் வீடுகளிலும் உள்ள தேவஸ்திரீகளின் கானங்களின் வாத்தியங்களின் கும்கும் என்னும் தொனிநிறைந்திருந்தன. மூவுலகங்களிலும் மேன்மையுற்ற பூதக் கூட்ட சஞ்சாரமெங்கும் ஓயாமலிருந்தன; ஒருவருக்கொருவர் தெரியாமல் உலவும் படியான சுரஅசுரக்குலங்களின் ஆகுலங்கள் வியாபித்திருந்தன. அநேக அரக்கர் கூட்டங்களும் பேய்க்கூட்டங்களும் நிறைந்திருந்தன; வாயுவின் போக்குவரவு வேகத்தாற் செல்லும் விமானக்கூட்டங்கள் கோடானுகோடி விளங்கின; அவ் விமானங்களின் வேகத்தாலும் ஒன்றோடொன் றுறைதலாலும் உண்டாம் இடி முழக்கங்கள் நிறைந்திருந்தன; கிரஹநக்ஷத்திரங்களின் மிகுந்தசஞ்சாரத்தால் வாயுப்பற்றுறுஞ் சோதிசக்கிரமும் அசைந்துநின்றது; சிலபால் ஆதவனது சமீப தேச ஆதபத்தால் தபிக்கப்பட்ட தவயோக இரசாயனாதிகளினு லற்பசித்தர் களும், தேவயோனி; விசேஷமாய சித்தர்களும் நிலைபேறற்றுலவினர்; சூரியனு அம் அவரது குதிரைகளின் முகக்காற்றாலும் அற்பவிமானங்கள் காணுமற்போ யின் கலக்கங்களுற்றன கருகியழிந்தன; உலகபாலர் அப்சரப்பெண்களின் கூட் டங்களின் பாதசஞ்சாரங்களாலும் ஒருவர் மேலொருவர் ஏறிச்சரித்தன் முதலிய சஞ்சாரங்களாலும் அவர்கள் அவர்கட்குரிய ஆசாரவிசேஷங்களாலும் சஞ்சல முற்றிருந்த தக்ககனம்; தேவி யந்தப்புரத்தெழுந் தூபதூம மேகநிறைந் திருந்ததக்ககனம். இந்திர சந்திராதிகளினாலே சுவர்க்கமென்று சொல்லப் பட்ட தங்கள் தங்கள் உலகப்பொருட்டு அழைக்கப்பட்டு அதனாலேயே மற்ற வரைமறுத்து அகந்தையோடும் ஓடாநின்ற தேவாங்கனைகளின் சரீரங்களினின் அம் நழுவிய பூஷணங்கள் நிறைந்திருந்தது; அம்மங்கையரை யனுபவிக்கும் பாக் கியமற்ற சாமானியசித்தரும் இந்திராதிகளைப் போலும் அணிமாதி விசேஷ சித்தி யற்றவரும் ஆகிய சுவர்க்கத்துள் ளுலவுங் கூட்டத்தார்தம் உக்கிரஒளிக் கூட்டம் குரோதஅசூயைகளான் மறைபடத்தோன்றும் தமோகுணமிகுதிபோ அம் நீலமயமாயிருந்தது அக்ககனம். பலவான்களாகிய தெய்வப்பிறப்புச் சித் தர்களின் தாக்கிக்கொண்டுசெல்லுங் கமன ஆகமனங்களால் பொடிபட்டனவாய மேகங்களால் பயந்தடையப்பட்ட பக்கத்துள்ள இமயம் மேருமந்தரம் முதலிய பர்வதங்கள் ஆடையணிந்தன போலிருந்தன. காகங்களும் கூகைகளும் கழுகு கள் முதலிய பக்ஷிகளெல்லாம் கூடிக்கூடிப் பறந்துகொண்டிருந்த தோற்றமும், டாகினித்திரள்கள் கூட்டங்கூட்டமா யாடிக்கொண்டிருந்த தோற்றமும் கடலி லெழும் அலைபோலிருந்தது. நாய் காகம் ஒட்டை கழுதைமுகங்களோடுகூடிய அலையும்யோகினிகணங்கட்கு அணிமாதி சித்திகளிருப்பதால் தாங்களிருக்கு மிடத்திலேயே தங்களுக்குவேண்டியவை கிடைத்தபோதினும் வீணாகவே நூறு யோசனைகணக்காக வெகுதூரஞ்சென்று மீண்டுகொண்டிருந்தன. திக்குமுடியும் வரை விரிந்திருத்தலின் அவ்வத்திசைகளின் அதிஷ்டாதாக்களாகிய லோகபால ரின் முன்புபோலுள்ள இருட்டொத்திருவிழிகள் காணமுடியாத புகைக்கருப்பு மேகமந்திரத்தில் சித்தகந்தர்வ மிதுனநற்றொடக்கச் சுரத உற்சவம் நடந்து கொண்டிருந்தது. சுவர்க்கத்தின்கண்ணே கானம்பண்ணுநின்ற திவ்யமான கானங்களினாலும் திவ்ய ஸ்தோத்திரங்களினாலும் உத்தீபனம்பண்ணப்பட் டுன்மத்தர்களாய் மதனாக்கிராந்தர்களாய் விண்ணெறியிற் சென்றுகொண்டிருந்த

னர். எப்போதுஞ் சென்றுகொண்டிருக்கும் நக்ஷத்திரங்கட்கு வாஸஸ்தானமா
யிராநின்ற சோதிச்சக்கிரத்தில் இரவியாதிகளின் கதியாற்குறிப்பிக்கப்பட்ட சுக்
கில கிருஷ்ணபக்ஷாதி காலவிபாகம் நடந்துகொண்டிருந்தது; வாதஸ்கந்தபேதரூப
அச்சக்கிரத்தின்கண்ணே கற்பிக்சப்பட்ட தாழ்ந்ததேயத்துள் கங்கையின் நீர்ப்
பிரவாகம் விளையாடிக்கொண்டிருந்தது ; ஆச்சரியங்காண்டலால் தெய்வக்குழந்
தைகள் பயந்து சென்றுகொண்டிருந்தன ; வஜ்ஜிரம் சக்கிரம் சூலம் அசிசக்தி
முதலியவற்றைத் தரித்துக்கொண்டு தேவதைகள் உலாவிக்கொண்டிருந்தார்கள்.
ஒருபாற் சுவரிலாமாளிகையில் தும்புருநாரதர் பாடிக்கொண்டிருந்தார்கள்; மேக
மார்க்கப் பிரதேசத்தில் மகாமேகங்களாகிய புஷ்கராவர்த்தகாதிகளின் பெரும்
பிரளய விருஷ்டியாரம்பத்தால் ஒருபால் ஆகுலமிருத்திருந்தது; மற்றொருபால்
சித்திரத்திலெழுதியதுபோல வியாபாரமற்றதாய்ச் சப்தமற்றதாய்க்கற்பாந்தமே
கங்கள் கூடியிருந்தன ; மற்றொருபால் நீலகிரியுலவிவிளையாடல்போன்ற அழ
கைச் சிலமேகங்கள் அடைந்திருந்தன ; மற்றொருபால் பொற்பாலொப்பாங்
காந்தக்கிரீஷ்மமேயாய தாபத்தினீற்றில் இலகும் மழைகாலமேகங்களிருந்தன ;
திக்குத்தாகத் தாபத்தோடுகூடிச் சிலவிருந்தன ; இருஷ்யமூக கிரியின்கண்ணே
மழைபெய்த மேகங்கள் வஸ்திராலங்காரங்களைச் செய்துகொண்டிருந்தன ; மற்
றொருபால் நிச்சலக்கடற்றொடக்குற்று நீர்மையற்றிருந்தது ; வாயுப்பிரவாகத்
தில் பெரியவிமானங்களாகிய துரும்புகளும் இலைகளும் அலைந்து கொண்டிருந்
தன ; மற்றொருபால் விளையாடாநின்ற வண்டின்கூட்டம் பிருஷ்டதுவக்குக் காந்
திநிர்மலமுற்றிருந்தது ; சிலபால் மழைகாலத்த மலைநதிகட்குச் சமானமான
காற்றுத்தூளிப் பிரவாகங்களாற் சிறிது வெளுப்புற்றிருந்தது ; சிலபால் விமான
தேவதைகளின் பிரபைசித்திரங்களால் விசித்திர அங்கமுற்றிருந்தது ; நிரம்பராம்
அல்லது நிரந்தரங்குதித்துக்கூத்தாடும்; மாத்ருகணங்கள் சூழ்ந்திருந்தார்கள் ;
நித்தியம் நவநவமான மதங்களால் மதப்பட்ட யோகீசுவரீகணங்கள் நிறைந்திருந்
தன ; சில்பால் எல்லாக்கரணங்களுஞ் சாந்தியாகிச் சமாதியுற்று அதனால் இளைப்
பாறியுள்ள முனிக்கூட்டங்கள் நிறைந்திருந்தன ; வெகுதூரத்திற் கோபாதிக
ளெல்லாம் ஓடியொழிய மநோகரமான சாதுசித்தமானது சமமுற்றிருந்தது ;
சிலபால் கானஞ்செய்துகொண்டு விளையாடும் கின்னர கந்தருவ தேவ மடந்தை
யர்கூட்டமிருந்தன ; சிலபாற் சலனமில்லாத புரக்கூட்டங்களிருந்தன ; மற்றுஞ்
சிலபால் சுழன்றுகொண்டிருக்கும் திரிபுராதி புரவரங்களுமிருந்தன ; உருத்திர
புரங்கள் நிறைந்திருந்தன ; சிலவிடத்திற் பிரஹ்மமகாபுரங்க ணிறைந்திருந்தன;
மாயாபுரங்க்ளிருந்தன ; சிலபாலோ ஆகாமிபட்டணங்களிருந்தன. சுழலாநிற்
கும் சந்திரனே சிலபால் அமிர்தம் நிறைந்திருத்தலின் தடாகமாயிருந்தது ; சந்
திரனையொத்த மாயாதடாகமு மிருந்தது ; மற்றொருபால் தெய்வசக்தியினாலே
மிகக்கனமயமாய ஜலநிறைதடாகமிருந்தது. சிலபாலுலவும் சித்தக்கூட்டங்க
ளும், இந்துவாலாக்கிய வுதயமும், சூரியவுதயமயமும் இராத்தமோமயமும் ஆயி
ருந்தன ; சிலவிடத்திற் சந்தியாகிரணத்தாற் காலவர்ணமும் பனியினால் சிறிது
வெளுப்புவர்ணமும் இமமேகவெண்மையும் பெய்துகொண்டிருக்கும் மேகமுமா
யிருந்தது ; சிலபால் தலத்திற்போல ஆகாயத்திலேயே இளைப்பாறும் லோகபால
ரிருந்தனர் ; (சண்டிலக்கணவிதி பயனின்மையின் விடுக்கப்பட்டது) மேலும்

கீழும் செல்லுதலின் மிகமுயலும் சுரகணமும் அசுரகணமும் சிலபாலுலவிக் கொண்டிருந்ததுடன் கிழக்கிலும் மேற்கிலும் தெற்கிலும் வடக்கிலும் சஞ்சார ஆகுலமிகுத்திருந்தது. லோகாலோக பர்வதத்திற்கப்பால் இலக்ஷம்யோஜனை வரையும் அடையப்படா அசலமாயிருந்தது; சிலபாலோ கற்கர்ப்பம்நிகர்ப்ப அழிவிலாத் தமம்நிறைந்திருந்தது; சிலபாற் சூரிய அக்கினிகட்கொப்பாக அழிவிலாப் பேரொளியாயிருந்தது; சந்திராதி வீடுகளில் பனிக்கூட்டமேபோலும் கடுமையான குளிராக இருந்தது; சிலபால் தைத்தியர்களது பயத்தினுனே தேவ அனுசரர்களானே உண்டாக்கப்பட்டு விருத்திசெய்யப்பட்ட கற்பகவிருக்ஷக்கொடி வனம்நிறைந்திருந்தது; மற்றொருபால் தைத்தியர்களால் ஹதம்பண்ணப்பட்டுத் தேவபட்டணங்கள் பெருங் குவியல்குவியல்களாக இருந்தன; விமானங்களில் ஏறிச்செல்லும் சொர்க்கிகளுடைய போக்கின் நீர்க்கதேஜசின் வீழ்ச்சியாற் சிலபால் வன்னிரேகையாற் குறிப்பிக்கப்பட்டிருந்தது; அநேகங் கோடி கொடிகள் ஒன்றோடொன்றுமோதிக் கிழிந்துகிடந்தன. மற்றொருபாற் சுபக் கிரகக்கூட்டங்களிருக்கும் சிரேஷ்டமான ஊர்த்தபாக மண்டலங்களிருந்தன; சிலபாலிரவிருட்டு மூடப்பட்டும் சிலபாற் பகலொளிவீசப்பட்டுமிருந்தது; சிலபால மிகக்கர்ஜிக்கும் மேகக்கூட்டங்களும், சிலபாற் கர்ஜியாத நிர்மலமேகக் கூட்டங்களும் நிறைந்திருந்தன; மற்றொருபால் வாயுவினுற் சிதறப்பட்ட வெண்மேககணங்களாகிய புஷ்பங்கள் பரப்பப்பட்டிருந்தன; சிலபால் திருசியபதார்த்தங்கள் ஒன்றுமின்றித் தூய்தாய் அஞ்ஞானமேகங்களி னிடையீடின்றி ஆநந்தமாய் மிருதுவாய்ச் சாந்தமாய் அநிர்மலமாய் அறிஞனதுமனம்போல வியாபித்திருந்தது. சிலவிடத்தே சுக்கிரன்முதலிய சர்வவிண்ணவர்தம் வாகனங்களாகிய மண்டுகக்கூட்டங்களாற் கலகலவென்னும் சப்தம் நிறைந்திருந்தது; ஆகாசவாசிகளின் க்ஷேத்திரமானது சூனியமாய நீராற் பூரிக்கப்பட்டிருந்தது; சிலபான் மயூர ஹேமசூடாதி பக்ஷிகளானே சூழப்பட்டிருந்தது. வித்யாதரதேவிமார்களின் வாகனங்கள் வாழுமிடங்களுமிருந்தன; சிலபான் மேசமண்டலத்துள்ளே கூத்தாடும் ஸ்ரீ கந்தஸ்வாமியின் மயூரமண்டலங்கணிறைந்திருந்தன; மற்றுஞ்சிலபால் அக்கினியின் வாகனங்களாகிய கிளிகளாற் பசும்புற்றலம் போலும் பசுமையுற்றிருந்தது; (மேஷவாகனம் அக்கினிக்குப் பிரசித்தமாயிருந்தபோதினும் ஈண்டுக் கூறியகூற்றாற் கிளிவாகனமு முண்டென்றுணர்க; சிலபால் எமதர்மரது மகிஷவாகனக் காயமகிமையாற் பெருத்தமேகங் காணப்பட்டது; சிலபாற் குதிரைகள் புற்கூட்டமென மயங்கித் தொடரும்படியான கார்மேகம் நிறைந்திருந்தது. சிலவிடத்துத் தேவபுரங்களும் மற்றுஞ்சிலவிடத்துத் தைத்தியர்தம்புரங்களும் நிறைந்திருந்தன; அவைகளும், அன்னியோன்னியம் அடைவதற்கு முடியாதனவாயிருந்தன; ஏனென்றால், பர்வதங்களையும் துளைக்கும்படியான ஆற்றலுடைய பலவத்தர வாயுநிறைந்திருந்தது. சிலபாற் குலாசல ஆகிருதியையுடைய பைரவர்தம் நடனங்கள் விளங்கிக்கொண்டிருந்தன; சிலபாற் பக்ஷத்தோடுகூடிய பர்வதேந்திரங்கட்கு ஒப்பானவிநாயகக்கூட்டம் நடனம்பண்ணிக்கொண்டிருந்தன. சிலபாற் கர்க்கரவாதக் கூட்டங்களென்று சொல்லும்படியாகப் பக்ஷத்தோடுபறக்கும் மேகங்களிருந்தன; சிலபாற் கந்தர்வநகரச் சுரப்பெண்களின் அழகுநிறைந்திருந்தது. சிலபால் எழுந்து

செல்லாநின்ற மலைகளாற் பொடிப்படுத்தப்பட்ட லக்ஷக்கணக்கான விருக்ஷங்களாற் சத்திரங்களாற்போலப் பின்னப்படுத்தப்பட்ட மேகங்கள் நிறைந்திருந்தன. (ஈண்டு அம்புதம் எனவிலாது அம்புதிம் எனவிருந்தபோதினும் மேகமெனவே பொருள்கொள்க.) சிலபான் மாயையால் ஆக்கப்பட்ட ஆகாச தாமரைநீராற் சீதளமடைந்திருந்தது. சிலபாலிந்து கிரணங்களாற் றழுவப்பட்டுச் சீதளமகிழ்வை வாயு செய்துகொண்டிருந்தது. சிலபால் வெம்பியகாற்றால் வெதுப்பிய விருக்ஷங்களும் மலைகளும் மேகங்களுமிருந்தன. சிலபாலத்தியந்தம் மிகச்சாந்தமான காற்றினால் முற்றினும் ஓசையற்றிருந்தது; மற்றொருபாற் பர்வதசமானமான நூற்றுக்கணக்காம் மேகசிகைக் கூடத்தோற்றங்களாம்; சிலபான் மழைகாலத்துண்டா முன்மத்தகன மேககர்க்கரவோசையாம் சிலபாற் சுர அசுர கணங்கள் முயலும் பெரும்போராட்டமாம். சிலபால் ஆகாசதாமரைக் கூட்டத்தில் அன்னப்பறவைகள் கூவுங் கமலவாகனங்கள் இலங்கின; சிலவிடத்தில் மந்தாகினிதீரத் தாமரைகளின் மணங்களைக் காற்று கொள்ளைகொண்டிருந்தது. சிலபால் ஸ்ரீ கங்காதிநதிகளின் சந்நிதானத்தினின்றும் தேவசரீரத்தோடும் மேற்கிளம்பிய மச்சமகர நண்டுமண்டூக தாமரையாமைகள் காணப்பட்டன. சோதிடப்பிரக்கிரியையைப்பற்றிக் கூறப்புகின், பூகோளத்தைச்சுற்றிலுஞ் சுற்றும் ஆதித்தியன்சுழலப் பூமியின்சாயையும் சுற்றிலும் சுழலும்; பாதாளஞ் சென்ற சூரியன் மேலேகிளம்பும்; அதுவே கறுப்பாகஇருத்தலின் காகமாம். அதனது ஆக்ரமணத்தாற் சிற்சிலபான் மண்டலங்களிற் பிடிக்கப்பட்டது சந்திர மண்டலமாம்; அவ்விது சந்திரக்கிராசத்தில் ஊகமாம்; சூரியக்கிராசத்திலோ இவ்வூகமாகாதாம்; மற்றோ, சந்திரனதுதடைப் பிற்பாகத்தில் அருக்கன் செல்லில் சந்திரமண்டலத்திற்சனித்த எப்பூமிச்சாயைப் பிரதிபிம்பமோ அதனால் கறுப்புக்கதுவலின் காகம்போன்றுற்ற சந்திரனது ஆக்கிரமணத்தாற் சிற்சிலபான்மண்டலங்களிற் பிடிக்கப்பட்டது அருக்கமண்டலமாம். விமானத்திற் செல்லுந் தேவதைகளானே தங்கள் மங்கையர் விஸ்மயப்பொருட்டுண்டாக்கப்பட்ட மாயைச்சிருஷ்டிக்காற்றாற் சிறிதசைக்கப்பட்ட மாயைப்பூந்தோட்டமிருந்தது; வீழாநின்ற புஷ்பங்களானும் பனிவேகமழையானும் பயந்தனர் விமானத்திற்செல்லுமடந்தையர். இவ்வண்ணம் விண்ணில் வருணித்ததால் விண்ணவர்தம்வாழ்வில் ஆசைநண்ணலாகாது; அதனைத் துச்சமாக எண்ணவேண்டும்; என்னை? அத்திப்பழத்தகட்டில் விளையாடுங் கொதுகின்முறைபோலும் மூவுலகத்துட்பட்டுலவும் பிராணிக்கூட்டங்களெனவுணர்க. இவ்வியாவற்றையும் அவ்விரு தாய்மார்களும் தாண்டி ஆகாயமேற்சென்றபின் மீண்டும் மகிதலத்தை யடையும் பொருட்டு முயன்றனர்கள்.

24-வது ஆகாச வர்ணனம் முற்றிற்று.

---

## 25-வது பூலோக வர்ணனம்.

இப்போது எழுகடல் எழுதீவுகளோடுகூடியதும், பிரஹ்மாண்ட ஆவரணங்களோடுகூடியதும், ஆகிய அபூர்வபுவனம் அவர்களாற் காணப்பட்டபடி வருணிக்கப்படும். ஞானதேவியினது திருவுள்ளத்திலுள்ள சில அபூர்வத்தை ஞானதேவி லீலாதேவியின்பொருட்டுக் காண்பிக்குமாறு:—விண்டலத்தினின்றும் மண்டலக்

கிரிக்கிராமஞ்செல்லும் இருதேவிமாரும் ஞானதேவியின் றிருவுள்ளத்துள்ள சில வற்புதப் பூமிதலத்தையே கண்டனர்; அப்பூமிதலமானது பிரஹ்மாண்டபுருடனுடைய இருதயதாமரையாகவிருந்தது; அந்தப் பிரஹ்மாண்ட நரஇருதய பதுமமானது பெரிய அஷ்டதிக்குகளாகிய தளங்களையுடையதாக இருந்தது. கிரிகளாகிய கேசரங்களையுடையதாக இருந்தது; தன்மணம்நிறைந்து சுந்தரமாகவிருந்தது; கடற்றேன்நிறைந்திருந்தது; கிரிகளாகிய கேசரங்களினின்றும் கிளம்பியநதிகள் கேசரவுட்சாகைகளாக விருந்தன; நாளமத்தியில் பனிக்கணங்களே மகரந்தபிந்துக்களாம்; இருளிரவுவண்டு சுழலும்; பிராணிக்கூட்டமாம் கொதுகுகள் இரையும்; நாளத்தினுள்ளே தந்துக்களாகிய மிகுமிகு போக்கிய வஸ்துக் குணகணங்களிருந்தன; சோபனமிக்க நாளரந்திர பாதாளாதியுலகத்வாரங்களிருந்தன; அத்துவாரங்கள் கிளம்புநீராற் பூரிக்கப்பட்டிருந்தன; பகலின் ஒளியினாற் காந்தியுடையதாக இருந்தன; சிருங்காராதிரசங்களால் நனைந்திருந்தன; ஆகாயத்தில் அப்ரத்தோடுகூடிய சூரியனாகிய ஹம்சமிருந்தது; இரவிற் சுருங்கு மியற்கையதாக இருந்தது; பாதாளச்சேற்றிற் பதுங்கிக்கிடக்கும் நாகநாதனும் தாமரைக்கொடியுடைத்தாக விருந்தது. "அப்புவின் மேலது பிருதிவியாயிற்று" என்னும் சுருதியினாலும் புராணங்களிலும் ஸ்ரீ வராகத்தாலெடுக்கப்பட்டு நீர்மேல் நிலைபெறுத்தப்பட்டதெனப் பிரசித்தமாதலினாலும் பூமியைத் தாங்குமிடமான எம்மகாசமுத்திரமுளதோ அஃதோரோர்கால் அசையுங்கால் பூமியசையத் திக்குகளும் அசையும்; கீழ்நாளத்தில் அநந்த தைத்தியதானவமுட்கள் நிறைந்திருந்தன; கீழே பூதபூஜமென்னும் தன்சந்ததிவடிவ பிராணிபீஜபூதமான சம்போகத்திற்கு மிகஇனிமையாம் அசுரஸ்திரீகளின் கூடமாகுந் தாமரைக் கலிகாதிமஞ்சரியாலடையத்தக்கதான மேருவாதி மகாபீஜஸ்தானீயங்கட்கு இருதயம்போலும் ஜீவனநிமித்தமான நாளமூல முடையதாக இருந்தது. நதிகளாகிய கேசரவுட்சாகைகளையுடையதும் நாளத்தோடுகூடியதும் நகரக்கிராமகேசரத்தோடுற்றதும் குலபர்வதேச்சுரர் தம்மேலாய எழுவகைகாரணசுந்தரியும் மத்தியிலிருக்கும் உயர்ந்த மகாமேருபீஜத்தால் வியாபிக்கப்பட்ட ஆகாயத்தலத்தையுடையதும் ஜம்புத்தீபமெனப் பிரசித்திபெற்றதும் விஸ்தாரமாகஇருப்பதும் ஆகிய ஆண்டுள்ள கர்ணிகையை இருவருங்கண்டனர். அதுசரங்களையே இமபிந்துக்களாகவும் சிறுவனம் பெருவனங்களையே பராகங்களாகவும் உடைத்தாயிருந்தது; கர்ணிகைபரியந்தமிருக்கும் ஸ்தலங்களில் எல்லாமண்டலத்துள்ளுமிருக்கும் ஜனக்கூட்டங்களேயாய வண்டுக்கூட்டங்களையுடைத்தாயிருந்தது; அநேகயோஜனைவிஸ்தீர்ண அநேகநதிகளோடுகூடிய நான்குதிசைகளாற்படுக்கப்பட்ட நான்குகடல்களாகிய வண்டினங்களாற் சூழப்பட்டிருந்தது, திக்குப்பாலகர்கள் எண்மரோடுகூடி யெண்டிசைகளில் இளைப்பாறும் எண்கடல்வண்டினங்களை யுடைத்தாயிருந்தது. முன்னர் ஓரேகடலுக்கே நாலுதிசையுபாதியால் நாற்கடலின் பிரமரகற்பனையாம்; ஈண்டே எட்டுத்திக்குப்பாலக வுபாதிகளினானே "தலங்களில் எண்கடற் பிரமரகற்பனையாம் என்றுணர்க.) பத்திர அசுவகேது மாலாதிகளாகிய ஒன்பது சகோதரர்களாகிய மன்னவர்களானே ஒன்பது பிரிவாகப் பகுக்கப்பட்டதாக இருந்தது. லக்ஷம்யோஜனை விஸ்தீர்ணமாகச் சிறுதூளிகளால் படர்ந்திருந்தது; அநேகங்கிராமங்களாலும் அநே

கம் ஏரிகளாந்துளிகளாலும் நிறைந்திருந்தது. தீபத்தைப்பார்க்கினும் இரு மடங்கு அளவுள்ள உப்புக்கடல்ரேகையானே வெளியில் மணிக்கட்டைச்சங் கிவளயம்போலும் வளைக்கப்பட்டிருந்தது. (தீபத்தினும் இருமடங்குளன் பதாதி பௌராணிகப் பிரக்கிரியையின் விருத்தக்கூற்றால் பிரஹ்மாண்டம் வேறாக இருத்தலினாலும் மாயிகமென்பதினாற் றூற்பரியமாதலினாலும் தோஷ மின்றென்றுணர்க.) வளைய ஆகிருதியாக மேனிகொண்டதைப்பார்க்கினும் இரு இருமடங்குபருத்திருக்கும் சாகையெனப்பெரிய வுலகவடிவ தீபரேகையால் தாமரைக்கொடியாற்போலும் வியாபிக்கப்பட்டிருந்தது; அதனினும்இருமடங்கு பருத்தவடிவினதாகி அதிமதுரசிதளமான பாலால்நிறைந்த கடல்வளயத்தால் வளையப்பட்டிருந்தது. அதனினும் இருமடங்கு பருத்தவினதாகி நாநாவிதமான ஜனங்களால் அலங்கரிக்கப்பட்டுக் குசத்தீபமெனப்பெயரிய ரேகையால் வளையப் பட்டிருந்தது; அதனினும்இருமடங்கு பருத்தவடிவினதாகி நித்தியம்சந்தர்ப் பணஞ்செய்யும் தேவர்கூட்டங்களோடுகூடிய தயிர்க்கடல்ரேகையானே வளையப் பட்டிருந்தது; அதினினும் இருமடங்கதிகமாயாகிருதியுற்றுக் கிரவுஞ்சமெனப் பெயர்பெற்ற தீபரேகையானே அகழாம்புஷ்கரணியால் அற்புதமான மன்ன வன்மாபுரி வளையப்பட்டிருப்பதேபோலும் வளையப்பட்டிருந்தது; அதனினும் இருமடங்கதிகமாமாகிருதியுற்ற நெய்க்கடல்ரேகையனே வளையப்பட்டிருந்தது; அதனினும் இருமடங்கதிகமாமாகிருதியுற்ற மலம் நிறைந்த (அசுத்தமிருந்த) சால்மலித்தீபரேகையானே வளையப்பட்டிருந்தது; கட்கடலா லித்தீபம் வளையப் பட்டிருத்தலின் பாவமிகுதியுற்றி யசுத்தமாம்; அதனினும் இருமடங்கதிகமா மாகிருதியுற்று மல்லிகைப்பூப்போலும் வெளுத்த கள்மகாகடல்ரேகையானே ஆதி சேஷாதுதேகமாகிய கொடியினால் ஸ்ரீ ஹரிமூர்த்தி வளையப்பட்டிருப்பதே போல வளையப்பட்டிருந்தது; அதனினும் இருமடங்கதிக ஆகிருதியுற்ற கோமே தகமணிவிசேஷப் பிரதானமான ப்லக்ஷத்தீபரேகையினானே வளையப்பட்டிருந் தது; ஹிமவானது பாறையைப்போலும் அதிதூய்மையான கரும்பின்சாற்றுக் கடல் முன்போலிருமடங்காய் வளைந்துகொண்டிருந்தது; அதனினும் இருமடங் கதிகஆகிருதியுற்ற புஷ்கரத்தீபரேகையான் வளையப்பட்டிருந்தது;முன்மொழிந்த படி இரட்டிப்பாகிருதியுற்று முடிவில் நன்னீர்க்கடல் ரேகையானே வளையப் பட்டிருந்தது. அதனினும் பத்து மடங்கதிகமாய்ப் பாதாளதலத்திற்குச்செல்வ தாய் கீழ்த்தேசவளைவுற்றதாய் மேலாகக் குழியின்சமுதாயவடிவினதாய் பயத் தைத்தருவதாய்ப் பாதாளத்திற்குச்செல்லும் மார்க்கமாக வளைந்துகொண் டிருந்தது. (புராணங்களில் முன்னதினும் இருமடங்கு விஸ்தாரமாய பொற்பூமி யால் எனக்கூறப்பட்டுளது; அதனது விரோதபரிகாரம் முன்னரே கூறியுள் ளோம் அவ்வாறறிக; இதுவிஷயத்தில் "சிற்சிலவிடத்தே புராணாதிகளில் செறி தருபுராண்கள் யாவைகண்ணுறுமோ நற்சில கற்பபேதாதிகளால் நண்ணும் விவத்தையென்றறிவுளோர் நவில்வர்" என்று ஸ்ரீதர ஆசார்யசுவாமிகளாற் சொல்லப்பட்டுளது; இவ்வெல்லாவற்றைப்பார்க்கினும் பதின்மடங்குமேலாய் ஆகாய மேலெல்லையையளாவி நான்குதிசைகளிலும் வியாபித்துப் படுகுழிச் சமுதாயமாகி பயப்படுவதற்கேதுவாகி பரபக்கத்தில் மேல் பாகத்தில் ஆதித்யப் பிரகாசக்கலப்பால் கீழ்இருட்பாவமுறுதலின் மிகவும் மலினமுற்றுத் தமோ

ரூபவளயாகாரமாகி கருங்குவளைமாலையைப்போன்றதாகி நானாவிதமான மாணிக்கசிகரசரங்களிலுண்டான வெள்ளாம்பலையுடைத்தாகி லோகாலோகமெனப் பெயரியதாகிமிருந்துயர்ந்து பகுத்துள்ள குணங்களால் அரும்பெருமாலையாகி இருக்குமதனுல் மூவுலகஇலக்குமிமயிர்முடிவளயம்போலும் வளையப்பட்டிருந்தது; இவ்வெல்லாவற்றினும் பத்துமடங்கதிகரித்த ஆகிருதியுடையதாய் எல்லாப்புராணங்களினும் கூறியகூற்றையனுசரித்துப் பாடமுறையினும் அர்த்தமுறை பலமென்பதுபற்றியும் யோஜனைகோடிகளின் எனமுடிபில் கூறப்புகும் பிரஹ்மாண்டச் சுவர்வியாப்தியை யீண்டேயுணர்க; அதற்கு வெளியிலிருக்கும் ஜலாதியாவரணங்களே யிப்போது கூறுவதென்க. அறியாத பிராணிசஞ்சாரப் பெரிய ஆரண்யத்தால் வளையப்பட்டிருந்தது.) இவ்வெல்லாவற்றினும் பதின்மடங்கதிகரித்த ஆகிருதியுடையதாய நிருமலமானநீரினுல் ஆகாயத்தாற்போலும் நான்குதிசைகளும் வியாபிக்கப்பட்டிருந்தன. இவ்வெல்லாவற்றைப்பார்க்கினும் பதின்மடங்கதிகமான ஆகிருதியுள்ளதாகி மேருமுதலிய மகாபர்வதங்களையும் கரைத்தருக்கும் பிரளயத்திற் குற்சாகமாக இருப்பதேபோன்ற சுவாலைக்கூட்டம் பிரஹ்மாண்டத்தைமாலைபோற் சுற்றிக்கொண்டிருந்தது; இவ்வியாவற்றினும் பதின்மடங்கதிக ஆகிருதியதாகிச் சுமேருபர்வதம்முதலிய அசலக்கூட்டங்களையெல்லாம் துரும்புதூளிகட்கொப்பாக எடுத்தெறிவதாகிப் பர்வதேந்திரர்களையெல்லாம்பொடிப்படுத்தும் யாவற்றினும் அதிகவேகத்தோடுகூடிதட்டுப்படமூர்த்தங்கள்யாதொன்றுமின்மையினுனே சப்தமின்றியதாய மகாவாயுவினுலே நாற்பக்கமும் சூழப்பட்டிருந்தது. இவ்வியாவற்றினும் பதின்மடங்கதிகரித்த ஆகிருதியுற்றதாகி மிகச்சூனியமாயேகரூபமாய ஆகாயத்தால் நாற்பக்கமும் சூழப்பட்டிருந்தது. யோஜனகோடிகளின்நூற்றுக்கணக்கோடுகூடி மிகக்கனரூபமுற்று பசும்பொற்றங்கத்தாலாகி இருபருவங்களோடுகூடிய பிரஹ்மாண்ட பித்திகையால் வியாபிக்கப்பட்டிருந்தது. இவ்வண்ணம் மாகடல்கள் மாமலைகள் லோகபாலர்கள் தேவதைகள் அவர்தம்புரங்கள் அம்பரபூதலங்கள் என்புவற்றுனே பூரிக்கப்பட்டிருந்த ஜகத்தின்உதரத்தை லீலாதேவியானவள்கண்டு அதிவிரைவில் பூமியின்கண்ணே தனதுமந்திரஆதாரமாகிய கிரிக்கிராமஇடத்தைக் கண்டனள்.

25-வது பூலோக வர்ணனம் முற்றிற்று.

---

## 26-வது சித்ததரிசன ஹேது வர்ணனம்.

இப்போது தன்னுடைய வீட்டில் தன்ஜனங்களைக்கண்டு அவர்களது துயரங்களையெல்லாங்கேட்டு லீலாதேவியினது அனுக்கிரகமும் ஜகத்தத்துவமும் வருணிக்கப்படும். கூறப்புகும் கதைச்சம்பந்த உணர்ச்சியின்பொருட்டுக் கூறியதையனுவாதஞ்செய்தல்; அவ்விரண்டு சுந்தரமூர்த்திகளும் பத்மபூபாலப் பிரபஞ்ச ஆதார பிரஹ்மாண்டமண்டலத்தினின்றும் அன்னிய பிரஹமாண்ட மண்டலத்தை மேற்கூறியபிரகாரம் அடைந்து அம்மறையவனது இடம் நோக்கிச் சென்றனர். சித்தயோகினிகளாகிய அவர்கள் மற்றொருவருக்கும் தெரியாவண்ணம் நின்று அம்மறைவனதுஇடமாகிய மண்டபமாம் லீலையினது கிருகத்தைக் கண்டார்கள். அக்கால் அம்மண்டபமானது சிந்தாகுலத்தையுடைய அடிமை

களாற் சூழப்பட்டும், கண்ணீர்ததும்பித் துயருற்றுவாடும் மங்கையர்தம் முகங்களையுடைத்தாகியும், கண்ணீர் துளிமுதலியவற்றானே மலினமுற்றும், பூஷணங்கள் திலகங்களின்றியும் இருத்தலின் அழிவுற்றதுபோன்ற ஜனங்களுடைய முகங்களையுடைத்தாகியும், சீரணமான இலைத்தாமரையையொத்த வதனங்களை யுடைத்தாகியு மிருந்தது. அழிந்த உற்சவபுரத்தை யொத்தும், ஸ்ரீ அகத்தியர் பானஞ்செய்த கடலையொத்தும், வெய்யிற் காலத்தால் வெதுப்பப்பட்ட உத்யானவனத்தை யொத்தும், மின்னலால் தகிக்கப்பட்ட விருக்ஷத்தை யொத்தும் இருந்தது. காற்றாற் சிதறடிக்கப்பட்ட மேகத்தையொத்தும், பனியால் வெம்பிய பங்கயமொத்தும், தைலங்குறைந் தசைவிளக்கொத்தும், பார்வையதற்ற படுகுருடொத்து மிருந்தது. மிருத்யுவையடைவுற்றுச் சோகமிகநிறைந்து அழுதழுது அழகொழிந்த முகங்களோடுகூடியும், மிகவும்சீர்ணமான பட்டமாவிலைவனத்தை யொத்தும், மழையில்லாமற் காய்ந்துதூளிகிளம்பிய ஊரையொத்தும் அவ்வீட்டெஜமான்கள் அழிந்து போனமையானே அவ்வீடிருந்தது. ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல் :—நீண்டநிர்மல ஞானப்பயிற்சியினானே சத்தியசங்கற்பத்தையும் சத்தியகாமத்தையும் தேவியைப் போலடைவுற்றிருந்த அச்சுந்தரியாகிய லீலையானவள் இங்குள்ளவர்களாகிய பந்துக்கள் என்னையும் சாமானிய மங்கையுருவந் தரித்திருக்கும் சரசுவதி தேவியையும் கண்ணுறுகவெனச் சிந்தைசெய்தனள்; உடனே அவ்விருகத்திலிருந்த அவர்கள் இருதேவிமார்களையும் கண்குளிரக்கண்டார்கள்; அவ்விருவரும் அலைமகளும் மலைமகளும் ஒருங்குவந்ததுபோலும் அவ்வீடு முழுவதையும் ஒளிர்வித்துக்கொண்டு மிருந்தார்கள்; சிரத்திலிருந்து பாதபரியந்தம் அநேகவித மணமிகுந் தழகியமாலைகளையும் ஆடையாபரணங்களையும் தரித்திருந்தார்கள்; இரண்டு வசந்தஇலக்குமிகள்சேர்ந்து மாதுர்யமணத்தை உத்யானவனத்தில் வீசிக்கொண்டிருப்பது போலுமிருந்தார்கள்; திருமுகச் சந்திரிகை யமிர்தத்தினால் எல்லா அவுஷதிவனக்கிராமங்களையும் பலமுறுமாறு பூரிப்பித்துக்கொண்டிருந்தார்கள்; தண்ணிய மகாமகிழ்ச்சிச்சுகத்தைத் தந்துகொண்டிருந்தார்கள்; இரண்டு பூர்ணசந்திரர்கள் உதயமானது போலிருந்தார்கள்; அளகங்களாம் கொடிகளின் சந்நிதியில் ஆடிக்கொண்டிருக்கும் வண்டுகள் கருங்கண்கள் போலத்தோற்றலால் நீண்ட கூந்தற்கொடியிற் சலிக்கும் கண்ணளிப் பார்வைகளால் கடாக்ஷங்களினது நீலத்தோடுகலந்த வெண்மையொளி வீசுதலின் கருங்குவளையோடுகூடிய மல்லிகையை வெற்றிகொண்டிருந்தார்கள். ஓடவிட்ட செம்பொன்னின் ரசநிறைந்தோடும் வேகநதியைப் போலும் மனோஹாரியாக இருக்கும் திருமேனிகளின் ஒளிப்பிரவாகத்தால் அந்தப்பக்கங்களை யெல்லாம் பொன்மயமாக்கிக் கொண்டிருந்தார்கள்; தேககாந்திவடிவ இலக்குமியோடுகூடி விளையாட்டின் பொருட்டுல்லாசமாக ஊஞ்சற்போல அசைந்துகொண்டிருக்கும் விலாசத்தோடுகூடிய அவர்தம் லாவண்யயாகிய சுபாவசுந்தர பிரஹ்மவடிவக் கடலுக்கேனும் தங்களுடைய சௌந்தர்ய லக்ஷணக்கடலுக்கேனும் அவர்கள் மேன்மைமிக்க அலைகளாக இருந்தார்கள். தனித்தனியாகத் தோள்களாகிய லதைகளும் அருணவொளிவீசும் இருகரங்களும் அசைந்து கொண்டுவருதலின் கணந்தோறும் விந்யாஸவேற்றுமைகொண்டு சமுதாயத்தில் கற்பிக்கப்பட்ட வனவடிவவேற்றுமையால் புதிதினும் புதிதாயாம் பொன்மயக் கற்பகவிருக்ஷக் கொடி

வனம்போலு மிருந்தார்கள். அழகிய இளந்தளிர் போன்றும், மணமிகுந்த மலர் போன்று மிலங்கும்பாதங்களால் நிலத்தாமரைத் தலம்பெற்றுப் பூமியைத் தீண்டாமல் நின்றுகொண்டிருந்தார்கள்; வெள்ளிய வர்ணத்தோடுகூடி மிகவுங் காய்ந்துதிய்ந்த தாலதமாலக்கட்டைகட்கும் கிருபாகடாக்ஷ அமிருதந்தெளித்த லானே இளந்தளிர் உண்டாகுமாறு செய்துகொண்டிருந்தார்கள்; இவ்விருவரை யுந்தரிசித்து ஹே வனதேவதைகளாகிய தாய்மார்களே! உங்கட்கு நமஸ்காரம் நமஸ்காரம் என்று அங்கிருந்த ஜனங்களோடும் புஷ்பாஞ்சலியை மூத்தகுமாரன் செய்தனன்; இல்லத்தில் எழுந்தருளிய அவர்களது பாதபதுமங்களில் அந்தப் புஷ்பாஞ்சலியானது ஹிமநீர்க்கணமழை பதுமவல்லியிற்போலத் தூவியது. மூத்த சருமர்முதலியோர் கூறல்:—அடியேன்களுடைய துக்கங்களெல்லாம் நீங் கும்பொருட்டெழுந்தருளிய வனதேவிமார்களே! ஜயமுறுவீர்களாக. நல்லோர் களுடைய நடைகளெல்லாம் அயலார் துயரைக் களைவதேயன்றோ? இவ்வாறு அவர்கள் இயம்பியபின் அவ்விரு தேவிமார்களும் மிகவும் ஆதரவோடு நீங்கள் யாவரும் இங்ஙனம் பெருந் துயரடைந்திருப்பதற்குக் காரணமென்னை? இயம்பு வீர்களாக வென வியம்பினார்கள்; அதைக்கேட்ட மூத்தகுமாரர் முதலியோர்கள் அத்தாய்மார்களை நோக்கி முறையாகத் தம்பதிகளின் விபத்துவடிவமான தங்க ளது பெருந்துயரத்தைத் தெரியப்படுத்தினார்கள்; அதாவது:—ஹே தாய்மார் களே! சர்வ அதிதிகளையும் பூஜிப்பவர்களும் சந்ததியைச் செய்தவர்களும் மறை யவர்தம் மரியாதையைக் காப்பாற்றத் தம்பம்போலும் ஆதாரபூதமானவர்களும் மிகுந்த நேயமுற்றவர்களும் ஆகிய பிராஹ்மண தம்பதிகள் ஈண்டிருந்துகொண் டிருந்தார்கள்; எந்தாய்தந்தையராகிய அவ்விருவரும் இன்று (நீள்காலமில்லை யென்பதைக் குறிப்பிக்கும்பொருட்டு) புத்திர பசு பந்துக்களோடுகூடிய இவ்வில் லத்தைவிட்டுச் சுவர்க்கத்தையடைந்தனர்; அதனால் மூவுலகமும் சூனியம்போல் எங்கட்கிருக்கின்றது; "பூரண னுலகைப்பூர்ணமாய்க் காண்பன்; காமுக னுல கைக்காமுகங் காண்பன்; ஆர்த்தியுலகை யார்த்திமயமே, லுப்தன் லப்தமாய்த் தன் மனம்போன்றே" என்னும் நியாயத்தை யனுசரித்துக் கூறுகின்றார். கணங் கணம் ஆகாயத்தில் தந்தேகம் கலக்கமுற்ற பக்ஷிகள் வீட்டிலேறி மிருதமான தைக்குறித்துப் பக்தியால் மதுரசுரத்தோடு சோகிக்கின்றன. பர்வதமானது குகைவடிவங்களான குருகுருவெனப் புலம்பும் வதனங்களால் மிகுந்த வியாகுல முற்றதாகி நதிகளாகிய பெருங் கண்ணீர்த்தாரைகளைவிட்டு ஓலமிட்டழுகின்றன. திசைகள் ஆகாயத்தைவிட்ட மேகங்களை யுடையனவாயும் வஸ்திரங்களைந்த ஸ்தன்னியங்களை யுடையனவாயும் தேவதைகளிடத்தில் துயரெடுத்துக் கூறுவன வும், வெம்பிய பெருமூச்சால் வித்வஸ்தமாயும் வெய்யிற்காற்றால் வித்வஸ்தமா யும் மிகவும் மெலிந்திருந்தன. பூமியில் உருளுவதாலும் அடித்துக்கொள்வதா லும் சிறுபுண்களும் பெருபுண்களும் உடம்பெல்லாம்முடையவராயும், கருணை யுரல் ஓலமிட்டுக் கஷ்டப்படுபவராயும் ஆகாரம் உட்கொள்ளாதவராயும் தீனராயும் கிராமத்திலுள்ள ஜனங்களெல்லாம் மரணத்தை யெதிர்பார்த்துநின்றனர். பகலில் ஒவ்வொரு விருக்ஷங்களும் பனிக்கண்ணீர்த்துளிகளைக் கொத்துநேத்திர கோசங் களினின்றும் கீழே விட்டுவிட்டு ஆதப சோகாக்கினியுடன் அழுகின்றன. ஜனங் கள் எவருமே நடவாமல் வெறுந்தூளியோடுகூடி மார்க்கங்கள் விதவையானவள்

ஆனந்தமின்றியவளாகிச் சூனியமனத்துட னிருப்பதேபோல இருந்தன. குயில்களும் வண்டுகளும் கூக்குரலிடுகின்றன ; மழைக்கண்ணீராலும் பெருமூச்சாலும் லதைகள் ஹதமாயின ; வெம்பிய உசுவாச நிசுவாசங்களோடும் இலைகளாகிய கரங்களாலடித்துக்கொண்டு தேகத்தை யழிக்கின்றன. தம்மை நூறுகூறாய்ப் பொடியாகச் செய்துகொள்ளும்பொருட்டுக் கீழேயிருக்கும் வெள்ளிய பளிங்குப் பாறையில் தாபத்தால் மிகத் தபித்த சரீரங்களோடுகூடிய அருவிகள் விழுந்து மடிகின்றன. சந்தோஷ வார்த்தைகள் ஒன்றுமின்றி சாஞ்சல்யமான எண்ணங்கள்போலும் பானைசட்டி கடகமகுடாதி யாதொன்றுமின்றி பெருமிருட்டால் நிறைந்து வீடுகள் வனங்கள்போலிருந்ததனாலேயே ஐயமின்றி யழகொன்றுமடையாமலிருந்தன. பிரமரங்களின் ஓசைகளானே ரோதனஞ்செய்துகொண்டிருந்த உத்யான புஷ்பகண்டங்களியாவும் நறுமணம் வீசுவதைவிடுத்துத் தீயமணம் வீசிக்கொண்டிருந்தன ; சுகந்தமாயிருந்தாலும் சோகமுடையவரால் கிராணஉபத்திரவங்கொண்டு துர்க்கந்தமென நிந்திக்கப்பட்டது. சைத்ரத் தருக்களையும் சைத்யங்களையும் விலாசப்படுத்தும் இயற்கைவாய்ந்த கொடிகளெல்லாம் தினந்தினம் ரசமற்றனவாகி வாடிக் கொத்துகளாகிய கண்களை மூடிக்கெடுகின்றன. நதிகளெல்லாம் தங்கள் உடல்களைக் கடலில் வீழ்த்திவிடவேண்டுமென்றுத்தேசித்துக் கலகலவெனச் சப்தித்துக்கொண்டுப் பூமியில் புறண்டுகொண்டு மிகவும் ஆகுலத்தோடு செல்லுகின்றன. முன்னர் ஜனங்கள் விவகாரஞ் செய்தலின் மிகச் சஞ்சலத்தோடும் விவகரித்துக்கொண்டிருந்த வாபிகள் யாவும், இப்போது கொதுகுவர்தாடும்படியான சஞ்சலமற்றதாகி யிருப்பதனால் தங்களுடைய எதார்த்தசொருபத்தின்கண்ணே சமாதிகூடியிருக்கும் மகான்களைப்போல அசைவற்ற ஆனந்தத்தை யடைந்திருந்தன. இன்று கின்னர கந்தர்வ வித்தியாதர தேவமங்கையர்களால் பாடப்பெற்ற எமது தாய்தந்தையர்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றது. விண்ணுலகம் இவ்வண்ணம் சோகத்தை நன்கு வருணித்து விளம்பவிழைந்தபொருளைக் கூறுகின்றார் :—ஆகையினாலே தாய்மார்களாகிய நீங்கள் எங்களுடைய சோகங்களையெல்லாம் நாசஞ்செய்வீர்களாக ; என்னை? பெரியோர்களுடைய தரிசனமானது ஒருகாலத்திலும் வீணாகப்போகாதல்லவா ? இவ்வாறு கூறிய அந்த மூத்தமைந்தனை நோக்கி லீலாதேவியானவள் நீர்நீங்கும்போது தாமரைத்தடாகத்தில் இலையினால் மிக வணங்கிய தன் சந்தான மூலக்கிரந்தியைப்போல அழகிய கரத்தால் தலையைத்தடவித் துயரொழித்தாள். அந்த லீலாதேவி யவ்வாறு தடவியதால் அம்மைந்தனுடைய துக்க துர்ப்பாக்கிய சங்கடங்களெல்லாம் பெருமழையின் சம்பந்தத்தால் வெய்யில் வெப்பம் பர்வதத்தைவிட்டு நீங்குவதுபோலும் நீங்கின. அத்திருவையொத்த தேவிமார்களின் கிருபாதிருஷ்டியினால் அவ்வீட்டிலிருந்த ஜனங்கள்யாவரும் அமிர்தபானஞ் செய்தவர்கள்போல எல்லாத் துயரங்களினின்றும் விடுபட்டனர். லீலாதேவியினது சத்தியசங்கற்பத்தினாலேயே முன்னிருந்த தாய்த்தேகத்தானே புத்திரனது துயரம் நீங்கும்பொருட்டு ஏன் தரிசனங் கொடுக்கக்கூடாது ; அம் மூத்தகுமாரனுக்குத் தாய்ச்சரீரத்தானே லீலாதேவி தரிசனந்தந்தாலென்ன என எனக்குண்டாகியிருக்கும் மோகத்தை யொழிக்கவேண்டுமென வினவிய ஸ்ரீ இராகவருக்கு (மோகமொழியின் அதன்காரியமாய ஐயம் தானேநீங்கும்) ஸ்ரீ வசிஷ்டபகவான்

புத்திரனது வீட்டிற்குவந்த லீலாதேவிக்குப் பிரபஞ்ச மித்யாத்வபரிக்ஷையே முக்கியமாதலின் புத்திரவாஞ்சை தூண்டாமையானும், புத்திராதிப் பிரபஞ்சத்திற் பொய்ம்மைத்துணிபுளதாகவே புத்திரநேயமின்மையின் தத்துவஞானத்தால் மூலபாதத்தின்பின் நிகழ்காலசரீரத்தினும் அன்னியமாய பௌதிகசரீரதாரணங் கூடாமையானும் பூர்வசரீரதாரணங் கூடாதென ஊக்கத்தோடும் விடைபகரத் தொடங்குகின்றார்:—ஹே குழந்தாய்! எவ்வழிவிலியால் பொய்யாய மண்முதலியவற்றின் சம்பந்தத்தாலாய தேகமானதுண்மையாய மண்முதலியவற்றினதாகவுணரப்படுமோ அவனுக்குண்மையாகக் கேவலம் அத்விதீயமாய சிதாகாசமே மயக்கத்தினால் பிண்டவடிவத்தையடைகின்றது; அயலாய தத்துவஞானிக்கோ அதனேதுவாய அஞ்ஞானமில்லாமையின் கேவலம் அத்விதீயமாய சிதாகாசமே சொரூபமாக எஞ்சாநிற்கும். பிருதிவியாதியென்று காண்பதனானே அசத்தே சத்துப்போற்றோற்றுகின்றதேயல்லாமல் வேறில்லை; பாலகனுக்குப் பிராந்தியினானே புருடனென்றுணராமையானே வேதாளமானது தோன்றுகின்றதல்லவா? பிருதிவியாதியபோற்றோற்றியவையாவுங்கணத்தில் அப்பிருதிவியாதியவேயாகிப் போம்; கனவைக் கனவென்றுகண்டமாத்திரையிற் போவதேபோல நனவின்கண்ணும் வெட்டவெளியேயாம். மண்முதலியவற்றை வெளியெனவுணரின் வெளியாகவே யனுபவிக்கப்படும்; கலங்கிய பித்தாதிதாதுக்களானே விக்ஷேபப்பட்டவர்கட்கு வாயில்போன்ற ஸ்படிகாதிச்சுவர்களில் ஆகாயமெனவே முயல்வுண்டாகின்றதன்றோ? கனவின்கண்ணே நகரத்தைச் சூனியபூமியாகவும் சமபூமியைப் பெருங்குழியாகவும் காணப்படுகின்றது; கனமங்கை யில்லாதவளாயினும் விடர்கட்குப் பாதம்பிடித்தல் முதலியவற்றைச் செய்கின்றாளன்றோ? பரமார்த்த வஸ்துவானது உணர்ந்தபடி விவர்த்தமாகத் தோற்றுமென்பது எல்லாவுலகமும் அறிந்ததன்றோ? வெளியானது பிருதிவியாதியாக உணருங்காற் கணத்திற் பிருதிவியாதியாகவே தோற்றும்; மூர்ச்சையின்கண்ணே பரலோகத்தையும் சில பேர் பிரத்யக்ஷமாக அனுபவிக்கின்றனர். பாலகன் ஆகாயத்தையே வேதாளமாகக் காண்கின்றான்; மரணத்துயருறுபவன் ஆகாயத்தில் வனத்தைக்காண்கின்றான்; மற்றொருவன் மயிர்ச்சுருளை ஆகாயத்திற்காண்பன்; வேறொருவன் ஆகாயத்தில் முத்துமாலையைக்காண்பன்; பயந்தவனும், மதம்பிடித்தவனும், அரைவிழிப்புடையவனும், ஓடத்தில் ஓடுபவனும் எப்போதுமே யாகாயத்தில் வேதாள வனவிருக்ஷாதி காண்கவும் அநுபவிக்கவும் செய்கின்றனர்; எழுந்தும் ஓடுகின்றனர்; இப்பதார்த்தங்கள்யாவும் பாவித்தபடியே வடிவெடுத்தாடும்; அப்பியாசத்திற்குத்தக்கபடி தோற்றிக்கொண்டேயிருக்கும்; பரமார்த்தமாயிவைகட்கு நியமங்கிடையாது. லீலாதேவி யறிந்ததெவ்வாறென்றாலோ, பிருதிவியாதியொன்றும் இல்லையென உள்ளபடியே லீலையுணர்ந்திருக்கின்றாள்; உணர்வுமயமாயு ஆகாயமே பொய்ப்பிரபஞ்சமாகத் தோற்றுகின்றது. ஹே மனனசீல! பிரஹ்மாத்ம ஐக்கிய சிதாகாசமாத்திர போதமுடையவர்கட்குப் புத்திரமித்திரகளத்திரங்கள் எங்ஙனங்கூடும்? எவை எக்கால் எங்கிருந்தாம்? ஆதியிலேயே திருசியமுண்டாகவேயில்லை; உண்டாகாததே தோற்றுகின்றது என்னும் நல்ல ஞானமுடைய மகான்கட்கு இராகத்வேஷ திருஷ்டியானது எங்கிருந்துண்டாகும்? அற்றேல் புத்ரநேயாதி யில்லாதிருக்கும்பக்ஷத்தில் புத்திரனதுசிரத்தின்கண்

ணத்தம்வைத்துத்தடவல் முடியுமோவெனின் ? அத்தம் சிரத்தின்கண்ணே தரப்பட்டதுஎன யாதுளதோ அது புத்திரநேயபலமல்லவாம்; மற்றோ அந்த ஜேஷ்டசர்மனது வருஞ்சுபப்பொருட்டு இராநின்ற தொடக்கஉணர்ச்சி முன்னுள்ள சுகிருதத்தொடக்க அதன்பயன்றரும் ஈசுரபோதமென்னும் அவ்விதமான சர்வாதிஷ்டான சித்தினதே விவர்த்தரூபபலமாம். சர்வ சாரார்த்தத்தையும் அனுவதித்து முடித்துக்கூறுமிடத்தோ, போதமானது எவ்வாறு முன்னஞ்சிந்திக்கின்றதோ அவ்வாறே சுபங்களுண்டாகின்றன. ஆகாயத்தினும் அதிசூக்குமமாகி அத்தியந்தஞ் சுத்தமாகியிருக்கப்பட்ட அவ்வஸ்துவே எவ்விடத்தும் எல்லாப் பொருள்களாயுந் தோற்றுகின்றன; கனுக்களிற் கற்பிதபுரங்களில் இஃதனுபவிக்கப்பட்டதன்றோ ?

26-வது சித்த தரிசன ஹேதுவருணனம் முற்றிற்று.

---

## 27-வது ஜன்மாந்தர வருணனம்.

இப்போது லீலாதேவி மிக ஆச்சரியமடைவதும் பர்த்தாவின்றரிசனத்தை மீண்டும் விரும்புவதும் ஞானதேவியால் அறிவித்த அளவில் தன்னுடைய ஜன்மங்களையெல்லாம் நினைந்து அநேகஞ்சொல்லுதலும் வருணிக்கப்படும். அந்தக் கிரிதடக்கிராமத்தில் அம்மறையவனது கிருகத்தின் மண்டபஆகாசத்தில் அவணின்றுகொண்டிருந்த ஜேஷ்டசருமாதிகளின் முன்பே அவ்விருதேவிமாரும் மறைந்துவிட்டனர். நம்மனோருக்கு வனதேவிமார்களின் பிரசாதம் கிடைத்ததென்று துயரங்களையெல்லாம் விட்டொழித்துக் கிருகத்தினுள்ளவர்களியாவரும் தங்களுடைய கிருககிருத்தியங்களிற் றற்பரராயிருந்தார்கள். மண்டபஆகாயத்தில் இதரஜனங்கட்குத் தெரியாமல் மறைந்தபின்னர் லீலையைநோக்கி ஸ்ரீ சரசுவதிதேவி கூறுவதாவது:—அவ்வாறு கூறுங்காலவர்கள் தேகத்தோடுகூடியிருந்தார்களோவெனின் இல்லை ; மற்றோ, விஸ்மயத்தால் ஒன்றும்பேசாமல் இருந்தவளாகிய சூனியவடிவ சங்கற்பசரீரத்தாகாயவடிவினளைநோக்கி ஞானவிண்வடிவத்தேவி கூறினாள் என்க. அற்றேல் அன்னியோன்னிய சங்கற்பத்தாற் றோற்றியவர்கட்கு அன்னியோன்னியங் காணக்கூடாமையின் எங்ஙனம் அவர்தம் சம்வாதம்கூடல் என்னும் ஸ்ரீ ராகவரது வினாத்தோற்றத்தைக் குறிகளாலுணர்ந்த ஸ்ரீ வசிஷ்டபகவான் தாமே சமாதானிக்கின்றார் :—உலகத்தில் யாவருக்குத் தேவதையநுக்கிரகாதிகளினானே உஷை அநிருத்தர்கட்கேபோலும் சமானமாகவே பரஸ்பரம் பயன்பற்றியசங்கற்பம் ஆதல் கனவாதல் உண்டாயின் அவர்கட்காண்டு பரஸ்பரம் சம்பாஷணம் உத்தரகாலசம்பந்தமாக அர்த்தக்கிரியையையுடைத்தாதலேபோலும் ஞானலீலாதேவிகட்கும் சம்வாதங்கூடுமென்றுணர்க. அதிபூதமாய பிருதிவியாதிகளும் அத்தியாத்மமாகிய நாடிபிராணாதி யுபலக்ஷிதசரீரங்களும் இல்லாமலே எழுந்தருளியிருக்கப்பட்ட அவர்களுடைய அந்தச் சம்வாதவுணர்வானது கனாசங்கற்பங்களேபோலும்பொருந்தும். இங்ஙனமெழுந்தவினாவைச் சாந்திசெய்தனம். இனிப்பிரகரணத்தை யனுசரித்துப்பேசுவாம்; ஸ்ரீ சரசுவதிதேவி கூறல் :—ஹே குழந்தாய் ! கண்டபொருள்களின் காணப்பொருள்களின் உணர்வுகளாகிய அறியத்தக்கவையாவுமே அறியலாயது இத்தகையது இந்தப் பிரஹ்மசத்தையென்று தெரிந்துகொண்டனை யினியுனக்கு

வேறு யாது வினவவேண்டுமோ அதனைக்கூறுதி. லீலாதேவி கூறல் :—ஹே இராஜராஜேசுவரி! இறந்த எனது நாயகஜீவன் யாண்டு அரசுபுரிகின்றதோ ஆண்டு யான் அவர்களாற் காணப்படாத காரணமென்னை? ஈண்டு மைந்தனால் காணப்பட்ட காரணமென்னை? அருளல்வேண்டு மென்றுவேண்ட ஸ்ரீ தேவி கூறுவதாவது :—ஹே குழந்தாய்! அப்யாசமில்லாமல் நினது துவைதஎண்ணமாகிய வுலகவுண்மைநிச்சயம் நன்றாக முழுதும் நாசமாகவில்லை. அத்வைதத்தைப் பேதப்படுத்தும் அவித்தையை யழிக்கும்வாயிலாக அடையாதவர் சத்தியசங்கற்பம்முதலிய பயனுறுங் கிரியைகளோடு பொருந்தலெங்ஙனங்கூடும்? வெய்யிலினுழல்பவனுக்கு நிழலின்குணமாகியதண்மையின் அனுபவமும், நிழலின்கண்ணே யிருக்கும் புருடனுடைய மகிழ்ச்சியனுபவமும் எங்ஙன்றெரியும்? நான் லீலையா யிருக்கின்றேன் என்பது பயிற்சியின்மையினாலே யுனக்குக் கெடாமலிருந்தது; லீலாதேகத்தில்மாத்திரம் யானிருக்கின்றேன் என்னும் திடசமஸ்காரம் இருந்தபோதுனக்குச் சத்தியசங்கற்பம் உண்டாகவில்லை. இன்று சத்தியசங்கற்பத்தை யடைந்திருக்கின்றாயாதலின் மைந்தன் என்னைக்காண்குக என்னும் நினது விருப்பம் சபலமாய்முடிந்தது; இப்போது நீ அந்நாயகனது சமீபத்தையடைவையே யானால் கூறியகாரணங்கொண்டு முன்போன்றே விவகாரத்தை முற்றுமாறு செய்துகொள்ளலாம். இவ்வண்ணம் பிரத்யக்ஷமாகக் காட்டலானும் உபதேசித்தலானும் ஞானதேவி கூறியபொருளில் அசம்பவ ஆசங்கைநீங்கினவளாகி மண்டபாகாசத்தினுள்ளேயே நாயகரது பரலோகமிரண்டும் ஆயிரக்கணக்கான பிரமாண்டங்களும் சம்பவிக்குமென்பதை யனுவாதஞ்செய்யும்லீலை மீண்டும் தனது நாயகரது மண்டலதரிசனத்தைப் பிரார்த்தித்தல்; லீலைகூறல் :—இவ்வீட்டாகாயத்தின்கண்ணே எனது பதியாகிய பிராஹ்மணர் இருந்தனர்; ஈண்டே அவர் பிராணவியோகமாகிப் பூபாலரானார்; ஈண்டேயுள்ள அப்பூபாலரது அந்த வேறுபூமண்டல சம்சாரத்திலிருக்கும் இராஜதானிபுரத்தில் அவரது பட்டமகிஷியாயிருந்து வாழ்ந்தேன்; ஈண்டேயிருக்கும் அவ்வந்தப்புரத்தில் அவ்வெனது பூபதி மிருதமானார்; ஈண்டேயுள்ள அப்புரத்தே அவ்வந்தப்புர ஆகாயத்தின் கண்ணே பொருந்திய பூமண்டலத்தில் அநேக நகரங்கட்கீசுரராகிய நிருபர் எனது நாயகரானார்; இங்குதானே நிர்விகார பரமார்த்தமாய பிரஹ்மத்தின் கண்ணே கற்பிக்கப்பட்ட சர்வவஸ்துக்களினுடைய மாயிகமாய சலனாதிவிகாரங்கள்யாவும் இவ்வண்ணம் கூறியபடி கண்டகேட்ட வடிவங்களியாவும் இம்மண்டப ஆகாயத்தின்மாட்டே நிகழ்கின்றன. இவ்வீட்டாகாயத்தின்கண்ணே சிமிளினுள் கடுகுக்கூட்டங்கள் அடங்கியிருப்பதேபோல எல்லாப் பிரஹ்மாண்டபூமிகளும் அடங்கியிருக்கின்றனவென எண்ணுகின்றேன்; எனது அப்பர்த்தாவினுடைய மண்டலமானதெப்போதும் அதிசமீபத்திலேயே யிருக்கின்றதென எண்ணுகின்றேன். யாதோ ஒருபக்கத்திலிருக்கும் அம்மண்டலத்தை யிங்குகாணுமாறு அருள்புரியவேண்டும்; என வேண்ட அம்பிகையருளுவதாவது :—இப்போது தோற்றுவனமாத்திரம் இம்மண்டப ஆகாயத்தின்கண்ணேயுளவெனலில்லை, மற்றோ, சென்ற வருவன யாவுமேயுளவாம்; ஆண்டு நினது அநேகஜன்ம சம்பந்திகளாகிய அநேக நாயகசப்தவாச்சிய சரீரங்களுள்யாவற்றையுங் காணமுடியாதாதலின் சமீபமாய் அம்மூன்றனுள் எம்மண்டலம் காணவேண்டும் கூறுதி; ஹே

குழந்தாய் ! பூதலஅருந்ததியாகிய உனக்கிப்போது மூன்று பர்த்தாக்கள் ஏற்பட்டிருக்கின்றார்கள் இவர்களல்லாமல் ஏற்பட்டவர்கள் முன்னூற்றுக்கணக்கானவர்கள் என்பதொப்பத்தக்கதாம் ; ஈற்றிலுள்ளவர்களாகிய மூவர்மத்தியில் பிராஹ்மணர் சாம்பராய்விட்டனர் ; அரசர் அந்தப்புரத்திற் சவமாகிப் புஷ்பமாலைகளுக்குள்ளிருக்கின்றனர் ; இச்சமுசாரமண்டலத்தின்கண்ணே அம்மூன்றாவதாகிய மன்னவர் மகாசமுசாரசமுத்திரத்தின்கண்ணே முழுகிச் சுழன்றுகொண்டிருக்கின்றனர். போகங்களாகிய அலைகளின்றொழில்களால் மகாவிக்ஷேபத்தையடைந்துளார் ; அதனாலே மலினமதியுடையவராக இருக்கின்றனர்; ஆகையினால் இதனுட் பிரதிபலிதமாகிய சித்விருத்தியும் அச்சாட்டியத்தாலே மிகச் சிதிலமடைந்திருக்கின்றதனாலே சமுசாரக்கட லாமையேயாமெனலாம் ; மிகுந்த ஆகுலத்தைத்தரத்தக்கனவாகிய வைச்சித்திரியமான அரசகாரியங்களைச் செய்துகொண்டு ஜடத்தன்மையினாலே தூங்கிக்கொண்டிருக்கின்றாரேயல்லாமல் இப்பவமயக்கினின்றும் விழிக்கவேயில்லை. யானீசுவரன் யான்யோகி யான்சித்தன் யான் பலவான் யான்சுகி என்னும் அனர்த்தமாகிய பெருங்கயற்றினாலே கட்டப்பட்டுப் பரதந்திரமாய்க் கிடக்கின்றார். ஹே சுந்தரி ! எந்தப்பர்த்தாவினுடைய சமீபத்திற்கொண்டுபோய் விடவேண்டுமோ அதைச்கூறுவையேயாயின் காற்றின்சமுதாயமானது சுகந்தரேகையை ஒருவனத்தினின்றும் மற்றொருவனத்திற்குக் கொண்டுபோய்விடுவதேபோலும் கொண்டுபோய்விடுகின்றேன். அன்னியமேயாகுஞ் சமுசாரம் பிரஹ்மாண்டமண்டபமாகிய அது அன்னியமாம் ; அன்னியமாகவே விஸ்தாரமாகியிருக்கின்றது விவகாரபரம்பரையெனவுணர்தி. அச்சமுசாரமண்டலங்களானவை அதிஷ்டானசித்துப்பார்வையாலே அதிசமீபத்திலிருப்பனவாக இருந்தபோதினும் சமுசாரதிருஷ்டியாலே பார்க்கில் கோடிகோடி யோஜனைதூரம் அவைகட்குத் தடையுளதென்றறிதி. பரமார்த்ததிருஷ்டியாலே பார்க்கினோ இச்சமுசாரமண்டலங்கட்கு இப்பாரமார்த்திக சரீரம்மண்டபத்துள்ளிருக்கும் சிதாகாசமாத்திரமேயாகும் அவ்விவைகளில் கோடானுகோடி மேருமந்தரமுதலியவைகள் இருக்கின்றன. பரமாணுவின்பாலும் பரமாணுவின்பாலும் சர்க்கவர்க்கங்கள் யாதொருதடையுமில்லாமற் றோற்றிக்கொண்டிருக்கின்றன ; சாளரவாயிலிற் றோற்றும் அருக்கனொளியிற் புலப்படும் திரயணுக்கள்போல மகாசித்தின்கண் அண்டகோடிகளிலங்கும். இவ்வண்ணங் காண்பித்தபிரஹ்மாண்டம் போலவே பெரியபெரிய தீபசமுத்ர புவனாதியாரம்பங்களால் மிகப்பெரிதாக இருந்தபோதினும் பிரஹ்மாண்டங்கள் சித்திருஷ்டிதுலையால் நோக்குங்காற் கேவலம் ஆலம்விரைக்கும் ஒப்பென்றறையவொண்ணாதனவேயாகும். நானாரத்னமலைப் பிரகாசமானது வனம்போலும் எங்ஙனம் ஆகாசத்திற்றோற்றுகின்றதோ அங்ஙனம் பிருதிவியாதி பூதங்களில்லாமலே அவித்யாதிடவாசனையால் சித்து ஜகத்தாகத்தோற்றுகின்றது. மயலால் உலகமானது தோற்றினபோதிலும் வஸ்துவின்கண்ணே யொருகாலத்திலும் சிறிதும் பொருந்துவதின்றாம், இஃதுலகமென அறிவேபுலப்படுகின்றது ; அசங்க ஆன்மாவின்கண்ணே யயலொன்றுமின்றாம்; சர்க்கத்தின் ஆதியிலேயே பிருதிவியாதிகளொன்றும் ஒரு சிறிதுமில்லாமலே இவைதோற்றும்; அலைகளானவை தடாகத்தில் உண்டாகி உண்டாகி யொடுங்கி மீண்டுமுண்டாவதேபோல விசித்திரஆகாரங்களாகிய தின

ராத்திரிமுதலியகாலங்களும் பிரஹ்மாண்ட புவனாதிதேசங்களும் பேரறிவின்கண்ணுண்டாகி யுண்டாகி மீண்டுமுண்டாகின்றன; லீலைகூறல்:—ஹேமாதவே! இவ்வண்ணம் இச்சகத் விஷயமெல்லாம் இப்போது யானுணர்ந்தேன்; இவ்வெனது ஜன்மம் இராஜசமாம்; தாமசமல்ல சாத்விகமும் அல்லவாம்; இந்த ஜன்மம் இரஜசின்காரியமாம்; துக்கசந்தாப மிகுதியினால் "இடையே யிருப்பரிராஜசத்தாரே" என்றும் மனுடஜன்மங்கட்கு இராஜசத்தன்மை யுணர்த்தும் ஸ்மிருதியுமுளது, ஹிரண்யகருப்பரது ஆதியாய அக்கற்பத்தினதுமுதலில் அந்தக்கரண உபாதியுற்பத்தியாகிப் பிரதிபிம்பமுளதாய் வந்தஎனக்கு எண்ணூறு ஜன்மங்கள் நானாவிதயோனிகளில் ஒழிந்தன; இப்போது, அவற்றைக் காண்பதுபோன்றே வெளியாக ஸ்மரிக்கின்றேன். முன்னொருபோது ஒருசமுசாரமண்டலத்தில் வித்யாதரலோகமாகிய தாமரையின் கண்ணே வித்யாதர வாங்கனையாகிய வண்டாக இருந்தேன்; துர்வாசனையினாலே கெடுக்கப்பட்டுப் பின்னயான் மனுடதேகமுற்று இருந்தேன்; பின்னர் மற்றொரு சமுசாரமண்டலத்தில் பன்னகேசுவர காமினியாக இருந்தேன்; கடம்பு குருக்கத்தி எனுமிச்சை மாதுளை புங்கவனங்களிற்சுற்றிக்கொண்டு தளையாடையைச் சுற்றிக்கொண்டு கறுத்தவளாகிய வேடச்சியாயிருந்தேனியான். வனத்தில்வசிக்கும் வாசனை மிகுந்து அதனாலே மூடையாய் தருமமரியாதைகளை யறியாதவளாகி யிருந்தமையானே கெட்டகாரியங்களை நிறையச்செய்து பூங்கொத்துகளாகிய கண்களையும் இலைகளாகிய கரங்களையும் உடைத்தாகி வனத்தில் விலாசஞ்செய்யும் கொடியாகி யமர்ந்தேன்; முனிவரது சங்கத்தால் பவித்திரத்தை யடைந்துவாழும் புண்யாசிரலதையாக இருந்தேன்; வனாக்கினியாலக்கொடிதகிக்கப்பட்டு மகாமுனிவருக்குப் பெண்ணாகப்பிறந்தேன்; புண்ணியத்தா லாண்மகவாய் இராஜ்ஜியாதி போகபயன்களைத் தரும் முன் சஞ்சிதகருமங்களினது பரிணாமத்தால் நூறுவருடம் சுராஷ்டிரதேயத்தில் சகல ஐசுவரிய சம்பன்ன அரசனாகயானிருந்தேன். பனைகளுந் தாழைகளும் நிறைந்து ஜலம்நிறைந்த பிரதேசங்களில் அரசனாகவிருந்து பரதனங்களையபகரித்த தோஷவிசேஷங்களால் குஷ்டத்தால் நஷ்ட அவயவங்களையுடைய கிரிப்பிள்ளையாக ஒன்பதுவருட மிருந்தேன். சுராஷ்டிரதேசத்தில் எட்டுவருடம் பசுமாடாக இருந்தேன்; இருக்கும்போது துஷ்டர்களாயும் ஒன்றும் அறியாதவர்களாயுமிருந்த மாடுமேய்க்கும் பயல்களால் அடிக்கப்பட்டும் விரட்டப்பட்டும் அவர்கள் மோகவிளையாட்டால் மிகுதுன்பமடைந்தேன். பின்னர் பக்ஷியாகிக் காரணமின்றிய வைரத்தினானே வேடர்களாற் போடப்பட்ட வலைகளிலகப்பட்டுப் பெருங்காட்டிற் பெருந்துயரடைந்தேன்; அதமமாய துவைதவாசனையினாலே யான்பட்டபெருங் கிலேசத்தைச் சொல்லமுடியாது. கர்ணிகை கேசரங்களினிடையே அவற்றையே சேவையாகக்கொண்டு ஆண்வண்டோடு இளைப்பாறியிருந்தேன்; விழித்துப் பதுமமொட்டுகளிலிருக்கும் கேசரத்தேன் முதலிய வற்றைக்குடித்துக்கொண்டு துயருற்றேன். இரம்மியமாகிய கண்களோடுற்ற பெண்மானாகி உயர்ந்த சிருங்கங்களிற் சுற்றிக்கொண்டு திரிந்தேன்; இரம்மியமாயும் வேடர்களால் உபத்திரவப்படாததாயும் இருந்தஇரகசியவனஸ்தலங்களிலும் மறைந்து திரிந்துகொண்டிருந்தேன்; அலைகளால் எடுத்தெறியாநின்ற மச்சமாகிய என்னால் திசைகள் அறிய முடியாமையினாற் பட்டதுயர் கோடியாம். தடி

யால் முகத்தில் அடிபட்டதுபோற் பட்டேன் ; வீணாக பேரலைகள் தள்ளிய ஆமை யோட்டிலடிபட்டதநந்தம் சர்மண்வதீதிரத்தில் மதுரசுவரங்களைப் பாடிக்கொண்டு பறைக்குட்டியாக இருந்து சுரதலீலைகட் கிடுபட்டுக் கட்குடித்தும் இளநீர்முத லியவை குடித்தும் திரிந்தேன் ; தடாகத்தின்கண்ணே மிகவும் பிரீதியோடுகூட வண்டைப்போல் நிச்சலமாக இருந்தஎன்னால் ஊடல்விளையாட்டுகளானே இனிமையான கானபாஷணங்கள்கொண்டு இஷ்டப்படி எனது பதியானவர் மிகவும் பேரின்பத்தையடைந்தார். தாலி தமாலகுஞ்சங்களில் சஞ்சலத்தோடு கூடிய நேத்திரத்தாற் செய்யும்மதமயக்குப் பார்வைகளானும் மன்மதக்கலக்கங் களானும் எனதுநாயகனை நோக்கிக்களிப்பித்தேன் ; (இதனானே அத்தகுந்த ஜன் மாந்தரங்கூறப்பட்டது) தங்கத்தை யுருக்கிவிட்டபடி நிறைந்த சுந்தரம்வாய்ந்த அங்கபஞ்சரங்களால் சுவர்க்கத்தில் அப்சரவடிவ தாமரைத்தடாகமாயிருந்து கொண்டிருந்த என்னால் அதர மதுபானாதிகளால் தேவதைகளாகிய வண்டினங் கள் சந்தோஷிப்பிக்கப் பட்டார்கள். மணிகளும் பொன்களும் மாணிக்கங்களும் முத்துக்களும் கூட்டமாகநிறைந்த பூதலத்தின்கண்ணேயும் கற்பகவிருக்ஷ வனங் களிலேயும் மேருவின்மேலும் தருணர்களோடு ச்ரசவுல்லாசம் அப்பிறப்பிலேயே யளவின்றிச்செய்யப்பட்டது. கரங்கங்களால் ஆகுலங்கணிறைந்து நீர்பூரித்த தேசங்களிலும், ஒளிபொருந்திய பூங்கொத்துநிறைந்த கொடிகளிலும் குழிகளி லும் வனங்களிலும் குகைகளிலும் கடலிலும் வெகுகாலம் ஆமையாக இருந்தேன். சலித்துச் சப்தித்துக்கொண்டிருக்கும் சரங்களில் யான்என்னுடைய அசையா நின்ற இளைச்சிறகுகள் அடிபடும்படம்போலும் வெண்மையான பக்ஷபந்திகளைக் கொண்டு தாமரைமயக்கினானே பிரவேசித்த வண்டுகட்கு விளையாடும்சாதன மாகிய இராஜஹம்சித் தன்மையைச் செய்துகொண்டிருந்தேன். (இராஜஹம்ச மாயிருந்தேன்) ஒரு இலந்தையிலைநிறைந்த தேயத்தில் ஆடிக்கொண்டிருந்த வெகுகொதுகுகளின் மத்தியில் அதனினின்றும் நழுவிய ஒருகொதுகிற்கு அவண் புகுதும் ஆற்றலின்மையின் விளையாடுந் தரித்திரத் தன்மையைக் கண்டு அச் சமஸ்காரத்தானே மரணத்தையடைந்த ஹம்சத்தால் கொதுகுஜன்மம் எடுக்கப் பட்டு அதிதீனத்தோடு மிருந்தேன்; அவ்வாறே ஸ்மிருதியும் "எத்தன்மை எத்தன் மையை நினைத்துக்கொண்டு சரீரத்தை விடுவாரோ" அறைகின்றது. சலித்துச் சப் திக்கும் தரங்கங்களோடுகூடிய கிரியிலிருந்து வரும் நதிகளில் மேலெறியும் அலை களின் முகங்களை முத்தங்கொடுத்துக்கொண்டு விளையாடும் ஜலஅசோக விருக்ஷங் களினது லீலையைச் செய்துகொண்டிருந்தேன்; (அசோகமர மாயிருந்தேன்) ஸ்தாவராந்தமாய் அதமயோனி ஜன்மங்களைக்கூறி உத்தமஜன்மங்களு மிப்போது கூறப்படுகின்றன:—கந்தமாதன மந்தார மந்திரங்களில் மதனபீடைநிறைந்த வித்யாதரகுமாரர்கள் முன்னம் பாதங்களில் வீழ்ந்துவணங்கினர். அங்கேயும் அநேக துக்கங்களை யடைவுற்றேன். கற்பூராதி வாசனைத் திரவியங்கணிறைந்த சய்யையின்கண்ணே அக்குமாரர்களின் வியோகத்தானே மிகுந்த துக்கியாய் நீள் காலம் இந்துபிம்பங்களிற் சசிப்பிரபைபோலப் புரண்டுபுரண்டு துயருற்றேன். இனிச் சுருக்கிக்கூறுமிடத்து, நூற்றுக்கணக்காக அநேகவகைத் துக்கங்களோடு கூடிக் கூடி அநேகம்யோனிகளில், சமுசாரமாகிய நீண்ட நதியின் சஞ்சலமான லகரிகளானே தடுக்கமுடியாத் தானவாதப்பிரமியின் வேகமான ஓட்டத்திற்

கொப்பாக ஓடியோடித் தராசின் தட்டுகள்போல மேற்கதிகீழ்க்கதி களையடை வுற்று அதனுனே ஆகுலமிகுந்த மனஅங்கத்தை யுடையவளாகி மயங்கிச்சுழ ன்று திரிந்தேன். (வாதப்பிரமியானது இயற்கையாகவே வாயுப்பிரவாக அனுசாரிணியாயிருப்பது மேற்கீழ்தேசங்களில் ஆயாச மின்றியே ஓடுவதென் பது பிரசித்தமாம்.)

27-வது ஜன்மாந்தர வருணனம் முற்றிற்று.

---

## 28—வது கிரிக்கிராம வர்ணனம்.

இப்போதுகண்ட வுலகம் பொய்யாதலின் காணுமறிவு மெய்யெனவும் விஸ்தாரமாகப் பர்வதமும் கிரிக்கிராமமும் வருணிக்கப்படும். வஜ்ஜிராங்கம் போல அதிதிடமாயும் முற்கூறியமுறையானே அநேககோடியோஜனைதூரம் நன்ருக உட்கனமாய்ப் புஷ்டியுற்றதும்—நெருங்கிய மண்டலங்கணிறைந்த தும் ஆகியபிரஹ்மாண்டச்சுவர்கடந்து அவ்விருதேவிமாரும் எவ்வாறு சென்ற னர். பொய்வடிவச் சுவர்களாக இருந்தபோதினும் கனவில் நடையைத் தடைப்படுத்துவதில் ஆற்றல்காண்டலின் எவ்வாறுதாண்டுதற்கு முடியுமென்று ஸ்ரீ இராகவர் வினவ ஸ்ரீ வசிஷ்டபகவான் தடைசெய்வது அபாதிதநிலை யுடை யதேயாகுகவாயினும் பாதகமாகாதாம் கனவின்கண்ணும் அது காணுமை யின் என்னுங்கருத்தாற் பரிகரிக்கின்ருர்:—யாண்டு பிரஹ்மாண்டம்? யாண்ட தன் சுவர்? யாண்டது வஜ்ஜிரம்போற் றிடத்தன்மையுறுவது? உண்மையாக அத்தேவிமார் அந்தப்புரத் தழகிய அம்பரத்திலன்ருே இருக்கின்றனர். அதே கிரிக்கிராமத்தின்கண்ணே அதேஆலயஆகாயத்திலன்ருே அவ்வசிஷ்டப்பிராஹ்ம ணன் விதூரதனுகி இராஜ்ஜியபரிபாலனத்தை யனுபவிக்கின்ருன். சூனியமாத் திரமாயிராநின்ற அம்மண்டப ஆகாசகோணத்தையே சமுத்திரம் நான்கும் சூழ்ந்த பூதலத்தை அப்பதுமபூபாலன் அனுபவித்தது. ஆகாய வடிவத்திற் பூ பீடமாம். அதன் கண்ணந்த ராஜபட்டணம் அந்நகரத்தின்மாட்டு அரசனதரண் மனை அதனையவனும் அந்த அருந்ததியும் அனுபவிக்கின்றனர். (அவளதனுப வம் வர்த்தமான சமீபத்தை யனுசரித்து நிகழ்காலம்போலும் நிகழ்த்தியதா கும், விதூரதவாசனையாலாய கூறப்படும் வேறு லீலைவடிவம் அடைந்தவளாய் அவ்வருந்ததி அனுபவித்தல்எனின் முக்கியநிகழ்காலம் பொருந்துமென்றுண ர்க) லீலை யென்னும் பெயருடையவளவளானுள்; அவளால் ஞானதேவி யருச் சிக்கப்பட்டாள்; ஞானதேவியோடு ஆச்சரியமனோகரமாய் ஆகாசத்தை யினி தாகத் தாண்டி ஒட்டைமாத்திரமாய ஆகாயத்தில் அவ்வீட்டிற்குள்ளேயே யவள் பிரஹ்மாண்டத்தைத் தாண்டி வேறு பிரஹ்மாண்டத்தை யடைவுற்று கிரிக்கிராம மந்திரத்தில் தனதுவீட்டில் வந்திருந்தனள்; படுக்கையிற்கிடப்ப வன் ஒரு கனவைவிட்டு மற்ருெரு கனவையடைந்து விவகரித்ததே போலு மென்றுணர்தி; மயன்மாத்திரமேயாய இவ்வியாவும் மாதிரமாத்திரமென்றே யுணர்தி பிரஹ்மாண்டமுமில்லை சமுசாரமுமில்லை குட்டியாதிகளுமில்லை சேய்

மையுமில்லை யென்றறிதி. அத்தகைய மனோகரமாகி வாசனை மாத்திரத்தால் அவ்வப்பதார்த்த விவகாரத்தோற்றசகிதம் யாவுமாய் அவர்களுடையசித்தமே அவ்வண்ணம் விரிந்துதோற்றுகின்றது. அந்தமற்றதாய் ஆவரணமற்றதாயே இச்சிதாகாசமிலங்குகின்றது. அவர்களாற் றங்களுடைய சித்தத்தில் ஒருசிறிது பிரஹ்மாண்டமும் கற்பிக்கப்படவேயில்லை; ஆகாயமே அசைவோடுகூடிய தாகிக் காற்றெனக்கற்பிக்கப்பெறுகின்றதன்றோ! எப்போதும் எவ்விடத்துமே சாந்தமாய்ச் சனிப்பற்றதாயிருக்கும் சிதாகாசமே யிலங்குஞ்சித்துத் தன்மையால் தானே தன்னுற்றன்பால் அறிவையறியாத மூட சிகாமணிக்குச் சகத்துப்போற்றோற்றுகின்றது. எவன் அறிவைத்தானாக அறிந்தானோ அவன் திருஷ்டியி லிவையேது? அறிவையறிந்தவனுக்கு இவ்வாகாயத்தினும் அதி சூனியமாகவன்றோ அது இருகின்றது; அங்ஙனமாயின் பிரஹ்மாண்டச் சுவரி னின்றும் மற்றொருவனும் வெளியேயேகலாமே அங்ஙனங் காணாததென்னே யெனின்? அறிவையறியாதவனுக்கு இது வஜ்ஜிரசாரபர்வதத்திற்குச் சமானமேயாகும். கனவில் வீடுதானே மிகஅழகுவாய்ந்த நகரம்போலுந் தோற்றுகின்றது. அதுபோலவே இஃதில்லாமலிருந்துமே உட்சித்தாதுவின்கண்ணே வெகுவிரிவாய் விளங்குகின்றது. மருப்பூமியின்கண்ணே நீரைக்கண்டதும் பொன்னின்கண்ணே கடகத்தைக்கண்டதும் இல்லாதது இருப்பதுபோலத் தோற்றுவதாம். இவ்வண்ணமே இத்திருசியப் பிரபஞ்சமும் ஆத்மாவின் கண்ணே தோற்றுகின்றது. கூறியபிரகாரம் அவ்விரண்டு சுந்தர ஆகிருதியையுடைய தேவிமார்களும் பேசிக்கொண்டே கிருகத்தினின்றும் வெளியேபுறப்பட்டு அழகாக நடந்து சென்றனர். கிராமத்திலுள்ள ஜனங்கட்குத் தெரியாதவர்களாய்க் கிரியின்முன்பாகத்தைப் பார்த்துக்கொண்டேசென்றார்கள்; அக்கிரியானது ஆகாயத்தினுடைய மத்தியசித்திரத்தை யொட்டியதாயும் ஆதித்தியமண்டலத்தை யணுகியதாயும், நானாவர்ணங்களோடுகூடிய அநேகவித மலர்ந்த புஷ்பங்கணிறைந்த விசித்திரவனங்களால் நிர்மலமாயுமிருந்தது. அநேக மருவிகள் ஓடிக்கொண்டும் அநேகவிதமான பறவைகள் கூவிக்கொண்டுமிருந்தன. விசித்திரமான பூங்கொத்துகளின்கூட்டத்தால் அநேகவித மஞ்சள் இரத்தவர்ணங்களுற்ற மேகமண்டலத்தோடு கூடியிருந்தது; சோபனமேகங்களோடுகூடியிருக்கும் மிகஅலங்காரமாக அம்மலைச்சிகரத்தே படர்ந்த நிர்மலமான கொடிகளின்மீது அநேகம் பறவைகள் இளைப்பாறிக்கொண்டிருந்தன. பலவான்களாய குருக்கத்தி நீர்வஞ்சிகளின் மூலவிஸ்தாரங்களால் வீழ்ச்சியினின்றுங் காப்பாற்றப்பட்ட அகிலசரித்தடாகங்களோடுகூடியிருந்தது; நன்ருக விருக்ஷத்தைப்பற்றிக்கொண்டிராத சிலபாம்புப்பாழிகளில் முளைத்திருக்குங்கொடிகளைச் சுழற்றிக்கொண்டிருக்குங் காற்றையுடைத்தாயிருந்தது. மலர்களையுச்சியிலுடைய மலைச்சிகரமரங்களால் ஆகாசகோசச்சுவர்கள்போன்ற மேகங்கள் மறைக்கப்பட்டிருந்தன; வீழாநின்ற நீண்டநதித்தாரைகள் அம்மலைக்கு முத்துமாலைகள்போன்றிருந்தன. அசைந்துகொண்டிருக்கும் வனக்கூட்

டங்களும் காற்றுவீசும் சரித்தடங்களும் அங்கிருந்தன ; கானவனங்களினின்று முண்டாய்ப் பரந்தநிழலாலெப்போதும் சீதளமாக இருந்தது. கிரியை வர்ணித்துக் கிரிக்கிராமம் வர்ணிக்கப்படுகின்றது:—ஆண்டவ்விருதேவிமாரும் சுயமாக ஆகாயத்தினின்றும் நழுவிபசொர்க்கமண்டலம்போலும் அக்கிரிக்கிராமத்தைஅக்காற்கண்டார்கள். கடீயந்திராதி ஜலப்போக்குகளின் கூட்டம் சப்தித்துக்கொண்டும் பூர்ணமானபுஷ்கர்ணீகணம்பொலிந்தும், குசகுசவெனப்பக்ஷிகளிரைந்து விளையாடு நீரொடுகூடிய கிராமத்தின் லீலைப்பொருட்டான பாழிக்ணிறைந்தும் நிகழ்ந்தன. செல்லாநின்ற கோவின் கூட்டச்சம்பத்துகளும் அவைகளின் உங்காரங்களும் ஒன்றோடொன்றுறுமிக்கொள்வதும் அவைகளை மேய்க்கும் கோபாலரின் வேணுகானங்களும் எத்தோப்பிலும் எச்சோலையிலும் நிறைந்திருந்தது ; கொடிகள் சுற்றியபுதர்களும் கொடிவீடுகளும் நெற்கோதுமைநிறைந்த வயற்போக்குகளும் நன்னிழல்தரும் ஆல் அரசு முதலிய பெரியமரங்களும் அவைகள் மேய்வதற்குக் கனமான பசும்புற்றரைகளும் நிறைந்திருந்தன; சிலமார்க்கங்கள் சூரியகிரணம் புகமுடியாததும், பாறைகளாலும் பனிகளாலும் வெண்ணீறு பூசியதுபோன்றதும் உயர்ந்திராநின்ற பூங்கொத்துகளின் சமுதாய சடாபாரங்கள் தாங்கியதாயும் இருந்தன. பாறைகளின் வெடிப்புகளிற் சப்தித்துக்கொண்டு மேற்கிளம்பிவரும் முத்துகள் போன்ற பிந்துக்கணிறைந்த அருவிகளானவை மந்திராசலத்தையலம்பும் பாற்கடலின் பாலழகை நினைப்பூட்டிக்கொண்டிருந்தன. பலபுஷ்பமகாபாரத் தோற்றத்தோடுநின்ற முள்ளத்தருக்கள் புஷ்பபாரங்கொணர்ந்து நின்று விவாதிப்பவர்போன்றிருந்தன. சஞ்சலத்தரங்கமுண்டாகும்படி சீர் சீர் எனக்கிளம்பும் காற்றுலைசைந்து குலுங்கி மரங்களும் மகரந்தங்களோடும் பிரேமரசங்களோடுங் கூடி இனியபுஷ்பவிருஷ்டியை யுதிர்க்குமாறல் வழிப்போக்கர்களாகிய அதிதிகளை மனுடர் பூசிக்கும்விதம் வழங்கவுந்தரமோ. சங்காயோக்கியங்களாயினும் அசங்கிதமாய்ச் சிலாகூடங்களினின்றும் பெருகாநின்ற நீர்த்துளிகளின் டங்காரத்தொனிஹேதுக்களால் வில்லுண்டைவைத்து வாங்கும் விற்றொனியெனப் பயந்தவைகளாயதனுனே ஒளிந்துகொண்டுள்ள பறவைகளால் அற்பத்தொனிசெய்து சூழப்பட்டிருந்தது. மேலெழுந்து வீசாநின்ற லகரிகளிலிளைப்பாறிச் சீகரமாங்கணங்களைக்குடிக்கும் ஆகுலமிகுந்து நதியின்கண்ணே நக்ஷத்திரஅலங்காரங்களைச் செய்துகொண்டுவாழும் ஹம்சங்களாற் சூழப்பட்டிருந்தது. உயர்ந்த பனைமுதலியவற்றில் ஒளிந்திருக்கும் காகம் பூனைமுதலியவை பார்த்துவிட்டதோ என்னும் ஐயத்தோடு கூடினவரும் விடிந்தபின் நாம் புசிப்போமென்னுமெண்ண முற்றவரும் அதன்பொருட்டுத் தமது பாலாடைமுதலியவற்றைத் தெரியாதஇடத்தில் மறைத்துவைப்பவரும் ஆகியபாலகர்சூழ்ந்திருந்தனர். புஷ்பங்களையும் சிரோபூஷணங்களையும் வஸ்திரங்களையும் மிகப்பாரமாய்த்தரித்த கிராமபாலகர் அநேகரிருந்தனர்; பேரீச்சு வேம்பு எலுமிச்சைமுதலிய ஆகாயமளாவியவிருக்ஷங்க

ளாற் சீதளமுற்றிருந்தது. வேடுவத் தரித்திரப்பெண்களும் ஆண்டு நிறைந்
திருந்தனர்; அவர்கள் காசாஞ்செடியின் அவயவங்களின் சாகைகளையே கரங்
கிடைத்த அம்பரங்களாகவுடைத்தாயிருந்தனர்; காதுகணிறையப் பூங்கொத்து
களையணிந்துகொண்டிருந்தனர்; பசியாற்றளர்ந்து வாடி வீதிகளிற் சுற்றிக்
கொண்டிருந்தனர்; கிராமத்திற் கேடம்போதுமுபேக்ஷிக்கத்தக்கத் தரித்திர
நீச ஆலசிய அறிவிலிகளின் காந்தைகளாய்த் திரிந்துகொண்டிருந்தனர். நதி
களின் அலைகளடிக்கும்பேரொலிகளான் மறைக்கப்படுதலின் கேட்கமுடியாத
சம்பாஷணத்தோடுகூடியவர்களும், தொழிற்செய்வதிற் சாட்டியர்களாய்த்
தகுந்த மதியின்மையின் மிகுந்தபயமுடையவர்களும் மூடஆலசியமுடையவர்
களும் ஆனவர்களால் விரும்பப்பட்ட ஏகாந்த இருப்புகளங்கிருந்தன. தயிர்
மலிந்த வாய் கைமுதலிய அங்கத்தினரும் தேனிறை மலர்க்கொடிகளைத்தரித்
தவரும் நக்கினரும் கோமயஞ் சேறு முதலியவையுடம்பில் நிறைந்தவரும்
ஆகியபாலகரால் முற்றம் ஆகுலமிகுத்திருந்தது. நதிகளின்றீரத்திலிருக்கும்
புற்றரையிலிருக்கும் கொடிகளின் ஊஞ்சல்களில் பாலகர்கள் விளையாடிக்
கொண்டிருந்தார்கள் கூறிய கொடிகளை ஊஞ்சற்போலும் அலைத்துக்கொண்டு
விளையாடும் தரங்கங்களால் வெளிப்படுத்தப்படும் ஜலம் மணல்களில் ரேகை
களையெழுதிக்கொண்டிருந்தது. தயிர் பால்களைக்குடித்து மிகுந்த சந்தோஷத்
தையடைந்து மதத்து மெதுவாக நடந்துகொண்டிருந்தன ஈக்கள்; இஷ்டப்
பட்டதையருந்தும்பொருட்டு அழுது ஆர்த்தெழுங் கண்ணீராற்றளர்ந் திளை
த்து சுவதந்திரமின்றியவர்களாயிருந்தனர் பாலகர். கோமயம்நிறைந்த வள
யற்கரத்தொடும் வேறுபெண்களிடத்தில் மிகக்கோபமுடையராகி மயிர்க்
கொண்டையவிழ்ந்துவிழ எரிந்து கரிந்து பயந்த பெண்களைக்கண்டு ஜனங்கள்
சிரித்துக்கொண்டிருந்தார்கள். கோபத்தைவென்ற முனிவர்கள் புஷ்பங்களா
லும் பத்திரங்களாலும் விரட்டுவதேயல்லாமல் காஷ்டலோஷ்டங்களால் விரட்
டாமையின் ஒருக்காலும் அடியார்கள் என்னுந்துணிபாற் பலிகர்ம அக்ஷதை
முதலியவற்றைப் பக்ஷிக்கும்பொருட்டு வீழாநின்றகிரிச்சிகரங்களின் காகங்
கள் கூடியிருந்தன. கிருக தெருக்கூட்டவாயில்களில் முள்ளோடுகூடிய
குரூரமான கொடிகள்படர்ந்திருந்தன. வீட்டிற்குப் பக்கத்திருக்கும் பாழி
யில் விளைந்து பூத்தொளிரும் கொடிசுற்றிய புதர்கள் தினம் காலையில் பரடு
வரையுதிர்த்தும் புஷ்பம்நிறைந்திருந்தது முற்றம். பசும்புன்னுனியாதிகளை
மேயும் மானினங்களும் மிருகங்களும் பறவைகளும் கூட்டமாய்த்திரியும் முட்
காடுகள் நிறைந்திருந்தன. குன்றிமணிச்செடிகணிறைந்த கொடிவீட்டுகளில்
வளர்ந்திருக்கும் இளம்புற்களின்மீது மான்கன்றுகள் படுத்துறங்கிக்கொண்
டிருந்தன. (ஈண்டு காடுகொடிவீடுகள் கிராமத்திருப்பதாக வருணிப்பது
மகாபாடியவசனபலத்தால் விரோதமாகாது.) தனியேஉறங்கும் கன்றுக்குட்
டிகளின் ஒருகாதசைத்தலால் ஓடிவரும் ஈக்கூட்டங்களிருந்தன; கோபாலர்
கள் உண்ட ததிகளொட்டிய கன்னங்களில் ஈக்கள் ஆடிக்கொண்டிருந்தன;

எல்லா வீட்டுகளிலும் தேனீக்கள் வந்தடைவதுகொண்டு கருதப்பட்ட தேனிறைந்த கூண்டுகள் அங்கிருந்தன; மலர்ந்த அசோகவிருக்ஷநிறைந்த உத்யானவனத்திற்செய்த லாக்ஷாரஞ்சித மரமயக்கிரீடை மந்திரங்களிலங்கின. தூவிக்கொண்டிருக்கும் மழையோடுகூடிய காற்றினால் எப்போதுமீரமாகிப் பூத்திருக்கும் மரங்களிலங்கின; கதம்பப்புஷ்பங்கணிறைந்தும் எம்மரங்களிலுமிருக்கும் புற்கூடுகளிற் பறவைக்குஞ்சுகள் மறைந்திருந்தன. பிரதிகூலமாக இருத்தலினாலே சின்னப்படுத்தப்பட்ட கொடிகள் தடையின்றிப் பூத்துத் தாழையின்றுதுக்களால் வெளுத்திருந்தன, நீர்நிறைந்து வழிந்தோடுங் கால்வாய்க்கூட்டங்களினின்றுங் கிளம்பாநின்ற குருகுருவென்னுஞ் சப்தமிகுத்திருந்தது. சாளரங்களிலும் குகைகளிலும் இருந்து கிளம்பிய மேகங்கள் மேல்வீடுகளில் இளைப்பாறிக்கொண்டிருந்தன; ததும்புநீர்ப்புஷ்கரணிகளிற் பூர்ணசந்திரனைப் போல மலர்ந்தபதுமங்கள் வரிசையாக மிகமிக மேன்மையுற்றிருந்தன; அத்தாமரைகளில் உன்னதமான அன்னங்கள் விளையாடிக்கொண்டிருந்தன; இடையிடில்லாமல் நெருங்கிய சோலைச்சாயையாற் சீதளம்நிறைந்த நிர்மலமான பசும்புற்றரைகளிருந்தன; எல்லாப்புல்லுகளின் நுனியிலிருக்கும் நீர்த்துளிகளில் நக்ஷத்திரங்கள் பிரதிபிம்பித்திருந்தன. இடைவிடாமல் வீழ்ந்துள புஷ்பங்களாலும் பனிமழையாலும் மிகவெண்மையான ஆலயமாயிருந்தது; விசித்திரமான பூங்கொத்துகள் புஷ்பபத்திரங்கள் இனியகனிகளுடன் விருக்ஷங்கள் நிறைந்திருந்தன. கிருகபக்கத்தில் வந்துறங்கும் மேகத்துள் தருணப்பெண்களுறங்கிக்கொண்டிருந்தனர். மேல்வீட்டுகளிலிருந்த மேகங்களிலிலங்கும் மின்னல்களினாலே வேறாகக் காரியச்சித்தியின்பொருட்டுத் தீபங்கள் கொள்ளத்தகாதனவாயிருந்தன; மலைத்தாக்கில்வீசும் காற்றின் பங்கார வேகத்தாற் பிரதித்தொனியானது நெருங்கிக் கும்கும் என்று மண்டபங்கள் ஒலித்துக்கொண்டிருந்தன; விளையாடிக்கொண்டிருக்கும் நிலாமொக்கி பச்சைக்கிளிகள் மிக அழகுடையனவாய் மனோகரமாய் ஆலயத்தை யலங்கரித்துக்கொண்டிருந்தன; மலர்ந்தகந்தலீபுஷ்பங்களால் வெளிப்படுத்தப்பட்ட அளவற்ற ஆமோதங்களால் நிறைந்து மந்தமந்தமாக வரத்தொடங்குங்காற்றினாலே இலைகள் ஆடத்தொடங்கின; சீவிலுக்குருவி கிளி நாகணவாய்ப்புள் முதலியவை பேசும்பேச்சில் மூழ்கிய பெண்மணிகளின்கூட்டமிருந்தன; சக்கிரவாகம் குயில் அண்டங்காகம் முதலியவற்றின் கோலாஹலங்களின் ஆகுலமிகுத்திருந்தன; ஆச்சாமரம் கூந்தற்பனை பச்சிலைமரம் தாமரை கருங்குவளை அவற்றின் பலங்கள் நிறைந்திருந்தன; கொடிகளின் வளயவிந்யாச விலாசங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தன மரங்கள். கிரிமந்திரங்களானவை அசையாநின்ற இலைகள் வாய்ந்து சுற்றிக்கொண்டிருக்குங் கொடிக்கூட்டங்களோடுகூடியிருந்தன; அக்கொடிக்கூட்டங்களின் பரம்பரைகட்கு அதிகரணமாயிருந்தன; அவற்றிற் படர்ந்தகொடிகள் எல்லா மார்க்கங்களை மறைத்துக்கொண்டிருந்தன; மலர்ந்த மல்லிகை மலர்களானும் கனிந்தகனிகளானும் காளான்களானும் மணமிகுத்

திருந்தன; கூந்தற்பனைகளின் தமாலங்களின்றலங்கள் தாண்டவஞ்செய்யும் மண்டபங்களோடுகூடியிருந்தன; சுற்றியிருக்கும் சோலைகளில் விரிந்தபுஷ்பங்கள்நிறைந்த தருக்களாற் சீதளமுற்றிருந்தன; நீர்ப்பெருக்கைத்தாண்டுவதிற் சபித்துக் கஷ்டப்படும் பொதிமாடுகளையும் கோகுலங்களையும் உடைத்தாயிருந்தன; பச்சென்றும் நீலமாயும் தோற்றும் நெற்பயிர்களையும் புஷ்பத்தலங்களையும்பெற்று அழகுவாய்ந்திருந்தன; தீரத்திருக்கும் தருக்கூட்டங்களால் மறைக்கப்பட்டோடும் நதிப்பிரவாகங்களையுடைத்தாயிருந்தன; இடையீடின்றி மலர்ந்திருக்கும் கொடிகளின்றுளிர்களாகிய மேற்கட்டிகளோடிருந்தன; உத்தியான குருந்த மல்லிகை மகரந்தங்களின் சுகந்தங்கணிறையப்பெற்றிருந்தன; மணக்குருடுகளான அறுகாலளிக்குலங்கள் புகுந்து மறைந்த மறைமலர்கள் நிறையப்பெற்றிருந்தன; புரந்தமந்திரங்களையெல்லாம் சௌந்தரியத்தால் வென்றுகொண்டிருந்தன; கூட்டமான தாமரைகளினின்றும் காற்றுக்கொண்டேகும் ரஜோகணங்களால் ஆகாயத்தைச் சிவக்கச்செய்துகொண்டிருந்தன; வேகமாகவோடுகின்ற கிரிநதிகளின் கர்க்கரசப்தங்களையுடைத்தாயிருந்தன; மல்லிகைபோலும் பரிசுத்தமாய மேகப்பிரகாசங்களானே பிரகாசித்துக்கொண்டிருந்தன; மேன்மாடிகளிலிருக்கும் மிகவுல்லாசத்தோடுமலர்ந்த கொடிகளின் ஆலயங்களாகவிருந்தன; விளையாடும்சாஞ்சல்யத்துடன் மாதுர்யமாயதொனிகளுடன் பறவைகளால் நிறையப்பெற்றிருந்தன; மிகு மணத்தோடுற்ற மலர்களாலாய சையைகளில் உல்லாசமாக யவ்வனர்கள் வீற்றிருப்பவர்களோடுகூட நகசிகபரியந்தங் கந்தமாலைகளைத்தரித்த விலாசினியாந்தருணிகள் நிறையப்பெற்றிருந்தன; எவ்விடத்தும் கவின்வாய்ந்த நவ அங்குரங்களோடுகூடிய தாமரைக்கொடிகளின் நகைப்பையுடைத்தாயிருந்தன; சோபைவீசாநின்ற மேன்மையான கொடிகளானே நீர்ப்போக்கின்கதி நிரோதங்களும் யாசகரும் வியாபிக்கப்பட்டவராகுமாறிருந்தன; விளைந்திராநின்ற கோமலக்கொடிகளோடுற்ற கருங்குவளைகளைக் கூட்டமாகவுடைத்தாயிருந்தன; வீற்றிருக்கும் மேகங்களாகிய ஆடைகளாலலங்கரிக்கப்பட்ட ஆலயங்களையுடைத்தாயிருந்தன; பனித்துளிநீர்களாகிய முத்துமாலைகளையணிந்திருக்கும் பசும்புற்றரைகளையுடைத்தாகிக் கீர்த்திக்கப்பட்டனவாயிருந்தன; மேன்மாடியிலிலங்கும் மேகமின்னல்களானே மங்கையர்கள் பயப்படக்கூடியவையாயிருந்தன; நீலோத்பலங்களானேவீசப்பட்ட வாசனைகளால் மிகவும் சுந்தரமுடையனவாயிருந்தன; பசும்புற்களை நாடிச்செல்வனவாய் மனோகரமான உங்காரங்களைச்செய்வனவாய கோகுலங்களையுடைத்தாயிருந்தன; துன்புறுத்தார்களென்னும் விசுவாசத்தையுடையனவாய் இள மௌட்ய மான்கள் உலவும் கிருகமுற்றங்களையுடைத்தாயிருந்தன; பேரருவிகளின் பெருங்கணங்கள் தெறித்தலானே மழையெனமயங்கி மயிற்கூட்டங்கள் மலர்ந்து கூத்தாடுமிடங்களை யுடைத்தாயிருந்தன; சுகந்தத்தோடுகூடியிருத்தலானே மத்தன்போலும் சுழலும்காற்றால் வியாகூலங்களையெல்லாம் நீக்கிக்கொண்டிருந்தன.

தாழ்வரையி லுண்டாகியிருக்கும் ஔஷதிகளாகிய சோதிக்கொடிகளானே தீபங்களை மறக்கும்படியாயிருந்தன; பறவைகளின் கோலாஹலசப்தமிகுந்த கூண்டுக் கூட்டங்களாலாகுலமிகுத்திருந்தன; மலையருவிகள் எப்பக்கங்களினும் வீழ்தலானே கலகலவென்னுந்தொனிகளால் சம்வாதங்கள் கேட்கமுடியாமற் றிரஸ்கரித்துக்கொண்டிருந்தன; அதிசீதளத்தையடைந்து சுற்றிலுமிருக்கும் மரங்களின் கொடிகளிலிருந்தும் இலைகள் புன்னுனிகள் முதலியவற்றிலிருந்தும் வெண்டரளங்கள்போலும் அழகிய நீர்த்துளிக்கூட்டங்கள் வீழ்ந்துகொண்டிருக்கும் பெருமைவாய்ந்திருந்தன; இவ்வாறிருக்கும் கிரிக்கிராமத்தின் கிரிமந்திரங்களின் அளவிலாது எக்காலும் விரியும்மலர்களின் அழகைத் தமக்கென வுரிய சோபையை இவ்வளவெனவெண்ண யாவரேசமர்த்தராவர்.

28-வது கிரிக்கிராமவர்ணனம் முற்றிற்று.

---

## 29—வது பரம ஆகாச வர்ணனம்.

இப்போது லீலாதேவியினது முன் சரித்திரங்களின் பிரத்தியபிஞ்ஞையும், உலகசமுதாயங்களா லலங்கரிக்கப்பட்ட விண்ணின்கண் மீண்டு பிரயாணப்படுதலும் வருணிக்கப்படும். ஆண்டவ்விருதேவிமார்களும் கிராமத்தில் போக மோக்ஷ இலக்குமிகள், பரமான்மாவையறிந்த சாந்தியாதி நிறைந்த உட்சீதள வுள்ளஜீவன்முக்தனிடத்திற்போல இனிது புகுந்தார்கள். அப்பயிற்சியின் முதிர்ச்சியால் இக்கால் லீலாதேவி தூய ஞானமயமேயாய வுடம்போடுகூடினமையின் முக்காலத்தையும் நன்றாகத் தெரிந்துகொள்ளும்படியான தன்மையுடையவளாயினள். முன்னடந்த சமுசாரகதிகளியாவற்றையும், முற்பிறப்பின் மரணாதிகளையும் சுயமாகவே யாதொரு முயற்சியு மில்லாமலெண்ணினள். லீலாதேவிகூறல்:—ஹே இராஜேசுவரி! இத்தேயத்தைக்கண்டு உன்னுடைய திருவருளால் ஈண்டு முன்னர்ச் செய்த அவ்வியாவும், அதனினும் முன்ஜனன பரம்பரைச் செய்கையாவும் உணர்ந்தவளாயினேன். வெளுத்திளைத் தெலும்பும் நரம்புந்தோலுமாய்த் தளர்ந்து காய்ந்ததர்ப்பை நுனிகிழித்ததழும்புற்ற கரவுதரங்களோடுகூடிய பார்ப்பினியாக ஈண்டு முன்யானிருந்தேன்; நாயகரதுகுலத்தை விருத்திசெய்யும் நாயகியாகியும் பாற்கறத்தல் தயிர்கடைதல் முதலியவை செய்பவளாகியும், இவ்வெல்லாமைந்தர்கட்குந்தாயாகியும், அதிதிகளிடத்தில் மிகுந்த அன்புசெய்பவளாகியும் தேவப்பிராஹ்மண சாதுக்களிடத்தில் மிகுந்த பக்தியுடையவளாகியும் நெய்யாலும் தயிராலும் பாலாலும் நிறைந்த அங்கத்தையுடையவளாகியும் காய்ந்தவயிறுடையவளாகியும், பானை சட்டி கும்ப முதலியபாண்டங்களினுள்ளே யழுக்கில்லாமல் விளக்கிவைப்பவளாகியுமிருந்தேன். நித்தியம் அரிசிமுதலியவற்றைக் குத்தச் சமைக்க வேகமாய் வேலைசெய்யத் தடைப்படுத்தி யுடையாமலிருக்குமாறு மணிக்கட்டில் ஒருவளையலைத்தரித்துக்கொண்டிருந்தேன். மருமகனையும் மகளையும் சகோதரர்களையும் தாயாரையும் தந்தையாரையும் மிகப்போற்றுவேன்; தேகம்

விழும்பரியந்தம் வீட்டைக்காப்பாற்றுவதிலேயே இரவு பகற் காலங்கழித்து வந்தேன்; மகன் மருமகள் வேலைக்காரர் முதலியோரைநோக்கி வேலைகளை வேகமாய்ச் செய்யும் பொருட்டு நேரங்கழித்து நீயேன் முழுகினையென்றும் இந்நேரம் நீ யேன் தாமதித்தாயென்றும், முழுகுவதற்கா இந்நேரமென்றும் இக்காரியம்இந்நேரமட்டுமா செய்வதென்றும் சொல்பவளாகி எந்நேரமும் ஆகுலப்பட்டுக்கொண்டேயிருப்பேன். யான் யாரென்றுவது இச்சமுசாரம் எப்படிவந்ததென்றுவது கனவிலும் விசாரித்ததேகிடையாது ; என்னைப்போலவே கிருககிருத்தியங்களில் மிகவும் பற்றுடைய தூய்மையற்ற மதியாகிய சுரோத்திரியமூடருக்கு மனைவியாயிருந்தேன் ; சமித்து கீரை காய்கறி கோமயவிறகு முதலியவற்றைச் சேகரிப்பதில் விழிப்பாக ஒரேமனதுடையவளாக இருப்பேன் ; அழுக்குக்கம்பளமொன்றைப் போர்த்திக்கொண்டு நரம்பென்புமயமாய் ஊத்ததேகத்தை யுடைத்தாயிருந்தேன் ; கன்றுக்குட்டியினது கர்ணமூலத்திலுண்டாகியிருக்கும் கிருமிகளை யெடுப்பதில் தற்பரையாயிருந்தேன் ; வீட்டிற்குபயோகமாகும் காய்கறித் தோட்டத்திற்குத் தண்ணீர்விட விரைந்துகூவிக்கொண்டிருக்கும் வேலையில் கவலை யுற்றவளாகியிருந்தேன். ; உரிய வேலைக்காரரை யேவுவேன் ; நீலமாகிய நீரின்அலைகளின் அவதியாய கரைகளிலிருக்கும் பசும்புற்களைநேயமிகுதியால் யானே பறித்துக்கொடுத்து இளங்கன்றுகளை வளர்த்துக்கொண்டிருந்தேன்; கணந்தோறும் வீட்டுவாயில்களில்மெழுகி மெழுகி அநேகவிசித்திரமான சிந்தூராதிகளாற் கோலம்புனைந்துகொண்டிருப்பேன். நீதிவிநய ஆசாராதிகளைச் சிக்ஷிக்கும்பொருட்டு அற்ப தைனியத்தோடு கூடியவளாகி இத்தகையோரது கிருகத்தில் எங்ஙனம் இத்தகைய வணக்கமின்றிய ஒழுக்கமுடைய வேலைக்காரர் இருக்கின்றுரென ஜனங்கள் சொல்லுவார்களே யென்பதாதிவடிவ ஜனவசனங்களைப் பிரகாசிப்பித்துக்கொண்டுலவுவேன்; கடல் கரைகடவாததேபோல மரியாதையை நியமிக்கும்பொருட்டு யானே மரியாதைகடவாமல் நடந்துகாண்பித்து நிரந்தரம் என்னுெழுக்கத்தானே மரியாதையை நிலைநிறுத்திக்கொண்டிருந்தேன்; இவ்வண்ணமிருந்த எனக்கு ஜரையானது மிகுதியாக வாமக்காது செவிடாகி குலைநடுக்குற்று கூனுண்டாகித் தடிபிடித்து அதனதீனமான சஞ்சார ஜீவனதசைவந்துற்றது; ஜீர்ணபர்ணம் போலும் வர்ணத்தையுற்ற தேகத்தின் தக்ஷிணக்காது தானே தலையசைதலால் அசைந்து அதனதீன சிரவணவிவகாரத்ததாகி அதனுனேபற்றிய காஷ்டத்தைத் தூக்குதலால் அதையடிக்கத்தக்கதுபோலெழ ஜரையின்சம்பந்தத்தாற் பயந்ததுபோலிருந்த கடைசி ஜீவனநிலையுடன்கூடியவளாகக் குறிக்கப்பட்டு இங்கிருந்து துயருற்றேன். ஸ்ரீ வசிஷ்டபகவான்கூறல்:—இங்ஙனம்கூறிக்கொண்டே சிகரிக்கிராம கோடரத்தே நடக்கும் அவள் சுழன்று சுழன்று விஸ்மயத்துடன் ஸ்ரீ சரசுவதிதேவிக்குக் காட்டினள்; ஹேமாத! இஃதெனது கொடிவீடுகள் அகண்டிதமாய்மண்டி நெருங்கிய பூந்தோட்டம். இஃதெனது புஷ்பித உத்யானமண்டபாசோகத்தோட்டமாம்; இவைபுஷ்கரணிதீரதருக்

களிற் சிறு கட்டுக்கட்டிவிட்டிருக்கும் கன்றுக்குட்டிகளாம்; இதோ இது கர்ணிகையெனப்பெயரிய கன்று என்னைவிட்டுநீங்கியதனால் அழுதுகொண்டு இலை தின்னாது நிற்கின்றது. இதோ இவளெனக்கு நீர்கொணர்ந்து தருமவள் தாழ்ந்தவளாய்மிகுந்ததுயரினாற் றன்காரியஞ்செய்யக்கூட ஆற்றலற்றவளாய்த் தூளி படர்ந்த மேனியளாயிருக்கின்றாள். இந்த எட்டாநாள் நீர்நிறைந்தகண்ணோடு மழுதுகொண்டேயிருக்கின்றனள்; இங்குதானம்பிகேயானுண்டது, இங்கு தான்வசித்தது. இங்குதானிருந்தது, இங்குதான்றூங்கியது இங்குதான்குடித்தது, இங்குதான்கொடுத்தது, இங்குதான்கனிதானியாதி வாங்கியது, இதோ இம்மந்திரத்தில் ஜேஷ்டசர்மன் என்னும் எனதுமைந்தன் அழுதுகொண்டிருக்கின்றான், இதோ எனதுகறவைப்பசு காட்டிற் பசும்புற்றரையில் மேய்கின்றது. வீட்டில் வசந்தாரம்பத்தில் ஒலிப்பண்டிகைத்தாகப்பொருட்டாக்கப்பட்ட காய்ந்தவரகம்புற்சாம்பரால் இதோ சிறிதிங்குவெளுத்திருக்கிறது என்னுடைய தேகத்தைப்போல அதிபிரியமாயும் தேகத்துறையும் ஞானேந்திரிய பஞ்சகம்போலவுமிருக்குஞ் சாளரமிதோ எனது வெளித்வாரப்படிக்கட்டைக் காண்டீ! என்னைப்போனினைந்து போற்றிவளர்த்துப் புஷ்டியுற்ற உக்கிரமாய்க் கடுவாயிராநின்ற சுரக்கொடிகள் வீட்டின்மீது தக்கவாறு படர்ந்திருக்கின்றதிதோ! இதோ எனது வேறுதேகம்போன்ற சமயற்கட்டு இலங்குகின்றது; இதோ பூமியிற் பிரத்யக்ஷமாய்ப் பந்தவடிவங்களாம் பந்துக்கள் செங்கண்ணீர் சிந்தி யழுகின்றார்கள்கேயூரங்களில் ருத்ராக்ஷங்களைப்பூண்ட இவர்கள் அனல் இந்தனஞ் சேகரிக்கின்றார்கள்; நிரந்தரம் நீர்நிறைந்த பாறைகளிற் பூங்கொத்து முதலியவற்றை எடுத்தடித்துக்கொண்டிருப்பதும், தீரக்கொடிகளின் றளங்களைத் தீண்டிக்கொண்டிருப்பதும், சீகரங்களால் வியாபிக்கப்பட்ட அக்ர பாகங்களையுடைத்தாய்ப் பசும்புற்றரையிலுண்டாயிருக்கும் நற்கொடிகளோடு விளையாடுவதும், சிலைகளாகிய பலகைகளிலடிப்பதனானே நுரைகளோடுற்ற உற்பல மணச்சீகரங்களோடுகூடியதும்; ஆகிய அலைகளின் சகாயத்தைக்கொண்டு திரஸ்கிருதசொருபமாகியதாய் மத்தியான சூரியனுடைய அதியுஷ்ண கிரணக்கூட்டங்களையும் பனியைப்போற் குளிருமாறுசெய்வித்தனவும் மலர்ந்த மலர்க்கூட்டங்களாலழைக்கப்பட்டுவந்த வண்டினங்களின் ரீங்காரங்களால் உற்சாகத்தையடைந்தனவும், பிரதிபிம்பிக்குந்தன்மையினானே யுட்புகுத்தப்பட்ட பலாசபுஷ்பங்களின் காந்தியினாலே பவளங்கள் நீரிலிருப்பதுபோற் செய்வித்துப் புஷ்பராசிகளால் நிறைந்திலங்கிநிற்குங் கரைமரங்களால் வியாபிக்கப்பட்டதும், பிரவாகங்களா லடித்துக்கொண்டுவரப்பட்ட மாம்பழ முதலியவற்றையெடுக்கும்பொருட்டு ஆசையும் ஆபத்துவரும் பயமுமடைந்து பிரமித்துநிற்கும் கிராமபாலர்களோடுகூடியதும், கலகலவென்னும் பேரரவங்களுடன்வெகு கோலாகலஞ்செய்துகொண்டிராநின்ற சுழல்களால் மதம்பிடித்ததுபோன்றிருப்பதுமாகிய கிராமத்தைச் சுற்றுங்கால்வாய்களாற் சூழப்பெற்றதும், சஞ்சலத்தோடடித்துத்தாக்கும் நீரினாற் கழுவப்பட்ட பாறையிடங்களையுடைய

தும், நெருங்கிய இலைகளோகூடிய தருக்களின்சாயைகளின் மறைப்பினால் எப்போதுங்குளிர்ந்திருப்பதும், மலர்ந்த கொடிகளாற் சுற்றப்பட்டழகுவாய்ந்திருப்பதும், உதிராநின்ற கனிகள் புஷ்பக்கொத்துகள் முதலியவற்றானே மறைபட்ட சாளரங்களோடு கூடியதும், ஆகவல்லவோ இக்கிருகமண்டபங் காணப்படுகின்றது ! ஈண்டென்னுடைய நாயகர் ஜீவாகாசமாக இருந்து கிரியையற்றவராயினும் பூபதியாகி நாற்கடலையும் மேகலைபோலுடுத்த பூமி முழுவதையும் ஆளுகின்றனர் ; ஆ ! ஆ ! ! நினைவிற்கு வந்தது ; யான் விரைவிலரசனாகவேண்டும் என்னுந் திடநிச்சயத்தை யுடையவராயிருந்த இதனானே தாம் வாஞ்சித்த படியே ஆகிவிட்டார் ; எட்டுநாட்கொண்டே அநேககாலம் ஆனதுபோன்ற உணர்வுடன் சகலசம்பத்தும் நிறைந்த மகாராஜ்யத்தை யதனாலேயடைந்துவிட்டனர் ; ஹே பரமேசுவரி ! ஈண்டெனது நாயகஜீவனானது மன்னவனாகிக் கிருகவிண்ணில் யாவர்க்குங் காணாததாய் ஆகாயத்தில் வாயு நின்றதுபோலும் வாயுவின்கண்ணே மணம்நின்றதுபோலும் நின்றது. ஈண்டே அங்குஷ்டமாத்திர அளவில் எனது நாயகரது ராஜ்யமிருந்தது ; அவ்விண்ணின்கண்ணே இருந்த அப்பதம் மயக்கமாத்திரத்தினாலே யோஜனைகோடி விஸ்தீரணமுள்ளதாய் உண்மையாய பொருள்போலத் துலக்கமாய்த் தோற்றியது. நாம் கேவலம் சிதாகாசமாத்திரமாகவே யிருக்கின்றோம். அச்சிதாகாயத்தின்கண்ணே ஆயிரக்கணக்கான மலைகளால் நிறைந்த எனது நாயகரது இராஜ்யமுமிருக்கிறது ; ஹே பரமேசுவரீ ! இவ்வளவாகவும் இம்மகாமாயையன்றோ விரிந்திருக்கிறது. ஹே தேவேசி ! மீண்டு மெனது நாயகரது நகரத்தைப் பார்க்கவேண்டுமென்னு மிச்சையெழுகின்றதாதலின் அங்கு செல்வதற் கருள்புரியவேண்டும் ; முயற்சியுடையவர்கட்கு அஃதொரு தூரமாகாதென்றே நினைக்கின்றேன். ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல் :—இவ்வண்ணம் லீலாதேவி கூறி ஸ்ரீ தேவேசியின் றிருவடியில் நமஸ்கரித்து மண்டபத்துட் பிரவேசித்து அத்தேவியோடும் கூட, வேறு அஞ்சன சமுதாயவொளியுடையதும், கலக்கமின்றி நிச்சலமாய ஏகசமுத்திர துல்லிய அழகுவாய்ந்ததும், ஸ்ரீமந்நாராயணருடைய திருமேனிபோன்றதும், கருவண்டினது பிற்பாக அமலவொளிவாய்ந்ததும், ஆகியமண்டபத்துட் கற்பிதமகாகாசத்தினின்று பறவைகள்போற் கிளம்பினர் ; கிளம்பி மேகமார்க்கத்தைக் கடந்து காற்றின்கழுத்துப் பிரதேசத்தையுங் கடந்து சூரியமார்க்கத்தை யடைந்து சந்திரமார்க்கத்தையுங் கடந்து துருவலோகத்திற்கு மேலேபோய்ச் சாத்தியர்களது மார்க்கத்தையடைவுற்றுச் சித்தர்களது லோகத்தையுங் கடந்து சுவர்க்கமண்டலத்தையுங் கடந்து பிரஹ்மலோகத்திற்கு மேலேபோய் நித்தியசந்துஷ்டர்கள் வாழும் வைகுண்ட பதவியுங் கடந்து, கோலோகத்தையுங் கடந்து, புராணங்களில் தேகத்தோடு கூடியவர்களாயும், தேகத்தோடு கூடாதவர்களாயும் மீண்டுமீண்டும் ஆவர். தங்களிச்சைப்படி யென்பதனானே, சிவசாரூப்ய முக்தியை யடைந்தவர்கட்கு இருவகைநிலைமையுங் கேட்கப்பெறுதலின் அவர்கள் வாழுமுலகமும்,

உலகங்கட்கெல்லாம் பிதாமாதாக்களா யிராநின்ற பரமேசுரரும் பரமேசுரியும் வீற்றிருந்தருளுவதும் ஆகிய ஜகத்பித்ருலோகமாகிய சிவலோகத்தையும் வெகுதூரஞ் சென்று கந்து, (சண்டமூலத்திருக்கும் பிதுர்லோகசப்தம் சில லோகபரமேயாகும்; என்னை! கவ்யவாடாதி பிதுர்தேவதைகள் வாழும் லோகம் வெகுதூரத்திற் கீழேயே யிருக்கின்றபடியா லிங்கடைவுறுதென்க) அபரிச்சின்ன சொருபத்தை மறந்துவிட்டமையினுனே வெகுதூரத்தினும் வெகுதூரம் சென்று சிறிதுணர்ந்தவளாயினள். ஆகாயவெளியில் வெகுதூரஞ் சென்றுசென்று எத்துணைக்காலமும் எத்துணைத்தூரமும் சந்திரசூரிய நக்ஷத்திர முதலியவை கீழே சிறிதும் பார்க்கப்படவில்லையோ இருண்மாத்திரமிருந்ததோ அத்துணையின்பின்னர், அசஞ்சலமாய்க் கம்பீரமாய் திசைகளின் பொந்துகளை யெல்லாம் மூடியதாய் ஏகசமுத்திர உதரத் தோற்றத்ததாய்ச் சிலையின் உதர கனத்ததாயிருந்த அதனைக் கண்டனள். கண்ட லீலாதேவி கூறுவதாவது, ஹேமாத! சூரியாதிக்ளினுடைய ஒளிகள் கீழெங்கே சென்றுவிட்டன? சிலை யின் வயிறுபோல அதிகடினமாய், கடினமாயிருத்தலினுனே கையிற் பிடிக்கப் படுவதுபோல மிகுந்ததாய இருள் எங்கேயிருந்து வந்தது? என ஸ்ரீதேவி யரு ளல் :—ஹே குழந்தாய்! இவ்வளவு தூரம் இவ்விண்பதவியை நீ கடந்து வந் திருக்கின்றனை, சூரியாதி ஒளிகளும் காணவே முடியாதபடி வந்தனையாதலின் மகா அந்த கூபத்தின் கீழிருக்கும் மின்மினியானது மேலே தூரதேசத்திருப் பவராற் காணமுடியாததேபோலக் கீழேயிருக்கும் சூரியாதியொளிகள் உன் னாற் காணக்கூடவில்லை யென்றுணர்தி. ஹேதேவி! அகோ ஆச்சரியம் எவ்வ ளவோ தூரமன்றோ யாம் நெறிகடந்து வந்துளோம், சூரியமண்டலமும் கீழே திரயணுகத்தினுடைய கனமாகிய பரமாணுவைப் போலுமற்பங் கூடத் தெரி யவில்லையே! இதற்குமேலே வேறு எத்தகைய என்ன பதவியை எவ்வாறு தாயே! யாமடையவேண்டுங் கூறுதி இதற்கு மேலுக்கு மேலாக ஹே குழந் தாய்! பிரஹ்மாண்ட சம்புடத்தின்மேற் கபால மிருக்கின்றது அதைக்குறித்து நோக்கின் சந்திராதிகள் தூளிவேசங்கள்போல இருப்பனவாகும். ஸ்ரீவசிஷ்ட பகவான் கூறல் :—இவ்வாறு பேசிக்கொண்டே அவ்விருவரும் பிரஹ்மாண்ட கபாலத்தை யடைந்தனர்; மலையினது வண்டுகள்போன்ற இவர்கள் அக்குட் டியத்தைப் பார்க்க அது இடைவெளியில்லாது நெருங்கியதாக இருந்தது; இருப்பினும் அதனினின்றும் யாதொரு கிலேசமு மில்லாமலே ஆகாயத்தி னின்றும்போல வெளிக்கிளம்பினர். உண்மையென்னும் நிச்சயித்திருக்கும் வஸ்துக்களாகிய கற்பித குட்டியாதிகள் வஜ்ஜிரகனமாயிருக்கும் மித்தியாத்வ புத்திபாதிதமன்றும். அதன்பின்னர் நிராவரண விஞ்ஞானத்தையுடைய அவள் பிரஹ்மாண்டத்தினது சுற்றுப்பக்கத்தில் அதிவிஸ்தாரமாய் மிகப் பிர காசமா யிருக்கும் ஜலாதி யாவரணத்தைக் கண்டனள். பிரஹ்மாண்டத்தைப் பார்க்கினும் பதின்மடங்கு நீரானது ஆண்டு நிலைபெற்று நின்றது; மலை ஊவக் காயின் விரைக்கபால பிற்பாகத்திருக்குந் தோற்போலச் சுற்றிக் கொண்டிருந்

தது. அதனினும் பத்துமடங்கு அக்கினியும், அதனினும் பத்துமடங்கு வாயுவும், அதனினும் பத்துமடங்கு ஆகாயமும்; அதன் பின்பு சுத்தமாய சிதாகாசம் அவித்தையானது நஷ்டமாயிருத்தலின் அவ்யாகிருத ஆகாசபரிசேஷத்தால் இருந்தது; அஃதபரிச்சின்னமா யிருந்தது. அந்தப் பரமவியோமத்தின் கண்ணே ஆதி மத்தியம் அந்தம் என்னும் விகற்பங்கள் யாதொன்றுமே மலடிமகன் கதையைப்போலத் தோற்றுவதின்றும்; கேவலம் விஸ்தாரமாயும் சாந்தமாயும் அநாதியாயும் மயலற்றதாயும் ஆதிமத்தியாந்தரகிதமாயும் மகத்தாகியதன் வடிவின்மாட்டே மலர்ந்திருந்தது; "தன் மகிமையிற் சார்ந்தஃதிருக்கும்" எனச் சுருதியுமுளது. அவ்விமல அம்பரத்தில் மேற்றேயத்தினின்றும் கற்பம் வரை சிலையானது உத்தம பலத்தான் மிகுந்த வேகத்தோடும் விழுமாயின் கீழ்த்தேயத்தினின்றும் கருடராஜனுயினும் கற்பம்வரை அதிவேகத்துடன் மேற்செல்லுமாயின் அவ்விரண்டனிடையில் அளவிட முடியாமல் இரண்டனது ஏகவேகத்தோடும் வாயுவேகின் அவ்விரண்டையும் சேரமுடியாதாயின், மற்றெப்பக்கத்தும் முடிவுகாண்ப தென்னேயென எங்கும் அபரிச்சின்னமேயஃதாம்.

29-வது பரம ஆகாச வருணனம் முற்றிற்று.

---

## 30—வது விசித்திர பிரஹ்மாண்ட கோடி வருணனம்.

இப்போது அத்தகையனவாயும் அவற்றினும் விசித்திரங்களாயும் இராநின்ற பிரஹ்மாண்ட அநந்த கோடிகள் சிதாகாயத்தின்கண்ணே லீலாமாத்திரத்தானே ரேணுக்களைப்போலக் கண்டார்கள் என வருணிக்கப்படுகின்றது. ஸ்ரீவசிஷ்டபகவான் கூறல்:—ஹேஇராகவ! பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசங்களின், ஒன்றினும் ஒன்று பதின்மடங் கதிகமான ஆவரணங்களைக் கணப்போதிற் கடந்து பிரமாணமற்றதாய் முன்னுரைத்தவண்ண மிருக்கும் அவித்யாசபலமாய பரம சிதாகாயத்தையும் அவ்வாகாயத்தின் கண்ணே வருணித்தபடி பிரஹ்மாண்ட லக்ஷஞ்சகத்து விரிந்திருந்தபடி சர்வபிரஹ்மாண்ட சமுதாயத்தையும் கண்டனள் எவ்வாறெனின், சொப்பிரகாச அதிஷ்டான சைதன்யத்தானே விளங்குவனவாய கோடிகோடி அத்தகைய ஆவரணங்களையும் பிரமாண்ட சிருஷ்டிகளையும் ஆகாயத்தின் கண்ணே வெயிலில் மும்மை யணுக்களைப் போலக் கண்டனள். மகாகாச மகாசமுத்திரத்தில் மகாசூனியமாய அவித்தைநீரில் மகாசித்தின் திரவபாவத்தா லெழுந்த அளவில்லாத புற்புதமாமண்டலங்களைக் கண்டனள். "என வித்தகையவா யெழுங் கோடியாயிரம், கனவண்டங்கள் காண்கபொய்ப்பகுதி, மனுமெவ்விடத்துமாதலிற் குறுக்கும், பினுங்கீழ் மேலும் பிறங்கி நின்றனவே" என்னும் புராணங் கூறுகின்றபடியே, அந்த அந்தப்பிரஹ்மாண்ட அபிமானிகளாகிய ஜீவசைதன்யங்களின் அனுசாரமாகச் சில அண்டங்கள் கீழே செல்வனவும், சில மேலே செல்வனவும், சில குறுக்கே செல்வனவும், மற்றுஞ்சில நிலைபெற்று நிற்பனவும் ஆயிருந்

தன. இப்போதுள்ள கிரியைகளின் விசித்திரங்களானே பூபவிசித்திரத்தால் உற்பத்தியும் பழைய வுபாசனை யுணர்வின் அனுசாரமாக வேயாம், யாண்டு யாண்டு எங்ஙனம் எங்ஙனம் எவர்கட்கு எவர்கட்கு உணர்வுண்டாகின்றதோ ஆண்டு ஆண்டு அங்ஙனம் அங்ஙனம் ரூபம் அவர்கட்கு அவர்கட்கு உதிதமாகும். இதுவும் அதையனுபவிப்பவர்கள் திருஷ்டியானே கூறப்பட்டது பரமார்த்தமாயோ அச்சிதாகாயத்தின்கண் ணிப்பிரஹ்மாண்ட தேசத்திலும் யாதொன்றுமே கிடையாது மேலுமுற்றினுங் கிடையாது கீழுங் கிடையாதேதுவும், அவ்வண்டங்களினது கமனா கமனமுங் கிடையாது, மற்றோ, சிறிதும் வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாததும் திக்கு விபாகாதி சர்வ துவைதங்களற்றதும் ஆகிய வஸ்து ஒன்றேயுளது, ஆகலின் பிரஹ்மாண்டக் கூட்டங்கள் வருணித்ததும் தேகாத்ம புத்தியோடு கூடிய அஞ்ஞதிருஷ்டியை யங்கீகரித்தே யவ்வாறுரைத்ததாம். தருமியே யில்லாதொழியின் உற்பத்தியாதி கற்பனை யாண்டையதெனின் அதனதிஷ்டான சித்துருவின் கண்ணேயாமென்றுணர்க, சுயம்பிரகாச சைதன்யமானது தனது அவித்தையினது மகிமையினானே தன் சங்கற்பத்தால் உண்டாயது போலும் அழிந்தது போலவும் அடிக்கடி பாலசங்கற்ப ஜாலமொக்கவாம். அதிஷ்டானத்தின்கண்ணே திக்கு விபாக மில்லாதாகுமாயின் அத்தியஸ்த வஸ்துவிலு மில்லாதாகும், அத்தியஸ்த வஸ்துவிற்கு அதிஷ்டான மிருக்குமாறிருப்பதே நியமமாதலின் என்னுங்கருத்தால் ஸ்ரீ இராகவர் கேட்கின்றார் :—ஹேபகவன்! ஈண்டதிஷ்டானத்திலேயே முன்னரில்லாதிருக்குமாயின் ஆண்டுக்கற்பனையாற் றோன்றா நின்றவுலகில் ஏன் கீழென்று தோற்றுகிறது மேலென்று தோற்றுவானேன், எக்கணக்காற்குறுக்கென்று தோற்றுகிறது, இதனை யடியேற்கருளல் வேண்டுமென ஸ்ரீவசிஷ்டபகவான் மாயிகமாய வுலகில் இத்தகைய நியமப்பிறழ்ச்சி தோடப் பொருட்டாகாதா மென்றுத்தரமருளுகின்றார்:—ஹேஇராகவ! திமிரதூஷிததிருஷ்டியினானே ஆகாயத்தில் மயிர்ச்சுருள் தோற்றுவதேபோல அந்தமற்றொன்றாய் மகத்ததாம் பொருளில் இவ்வகில ஆவரணங்களும் பிரஹ்மாண்டங்களும் இலங்குகின்றன. எல்லாவஸ்துக்களும் ஈசுரஇச்சையின்பரதந்திரமாகவேயிருக்கின்றன வெனினும் நியமத்தைத் தாண்டல் தோஷமாகாதன்றோ சுதந்தரமின்மையினானே யெல்லாப் பொருள்களுமே ஓடுகின்றனவாம்; கதம்பகேசரங்களின் ஆதாரகர்ணிகைக் கோளகத்தை யபேக்ஷித்தே மூலதேசகற்பனை செய்வதே போலப் பிரஹ்மாண்டங்களிற் சர்வபாவங்கட்கும் பிருதிவியையபேக்ஷித்தே கீழ்த்தேசகற்பனையாம், வாஸ்தவமாய கீழ்த்திசையிலதாயின் காம்பினின்றும் விடுபட்ட பழம் கனமாயிருத்தலின் கீழ்வீழ்தலில் ஒருபக்கம் நிறுத்தும் ஊகங் காரணமையாமென்னற்க, விஷயங்கட்குக் கனதையும் தத்தமிந்திரிய ஆகர்ஷணசக்தி போலத் தஞ்சக்கிய சம்பத்தபிருதிவியாதிகளின் தம்மங்கிச ஆகர்ஷண சக்தி

யேயாகுமல்லாமல் வேறுகுணமல்லவாம், அதனுனே யன்ருே வெளித் திசை விபாகமில்லாமையின்மிக மிகக்கனமாக இருக்கப்பட்ட பிரஹ்மாண்டங் கட்கும் விழ்ச்சியின்மை முதலியவற்றின் அடைவாம், அவற்றின் ஆவரண ஜலாதிகட்கும் அவற்றின் வியோக அடைவின்ருும், என்பதனுல் அதிஷ் டான சித்தின்கண்ணே திக்குவிபாக அபேக்ஷையிலதாம் என்னுங் கருத் துள்ள வேறுசமாதானத்தையுங் கேட்டீ, பிரஹ்மாண்டத்தில் மகாபிருதிவி ரூபப்பிரஹ்மாண்டபாகமாம் அவ்வெல்லாப் பௌதிக பதார்த்தங்கட்கும் கீழ்நோக்குண்டாம், அவற்றினும் அயலாயவை ஆகாய பாகங்களாம் அவற் றிற்குமேல் நோக்காமென்றறிதி இவ்வண்ணம் பூகோளம் முழுவதும் சோதி சக்கர ஆதாரமாயககோளத்தானே சுற்றப்பட்டிருக்கும் என்றங்கீகரித்திருக் கப்பட்ட சோதிடசாத்திரஞ் செய்தவர்கட்கும் சம்மதமாகும், அவர் கள் கூறிய திருஷ்டாந்தமாவது, விண்ணில்வட்ட மிருத்துப் பிண்டத் தில் பத்துத்திசைகளையும் நோக்கிப்பாதங்கள் கீழேயே யிருக்கும் பிற் பாகம் மேலேயே யிருக்கும் என மகத்துகளாகிய சூரியாதிகள் தமது சித்தாந்தத்தே கூறியிருக்கின்ருர்கள். இவ்வண்ணம் சங்கையைச் சமாதானப் படுத்தி சொல்லிக்கொண்டுவந்த பிரஹ்மாண்டங்களின் விசித்திரத் தன் மையை வருணிக்கத் தொடங்கிக் கூறுகின்ருர்:—சில பிரஹ்மாண்டங்களின் உட்பூதலம் தருப்புற்றுக் கூட்டங்களால் சூழப்பெற்றிருக்கும் மனுடரே யிரார், நிர்மல விண்ணனது சுரர்களாலும் நரபின்னர்களாய் நரர்க்கொப்பான கிம்புருடர்களாலும் தைத்தியர்களாலும் அவர்கள் அவர்கள் வாழும் உலகங்க ளாலும் சூழப்பட்டிருக்கும். சிலபிரஹ்மாண்டக்கூட்டம் அப்போதுதான் கற்பிக்கப்பட்ட வடிவினவாய் நான்குவகைப்பிராணி வர்க்கத்தோடுகூடவே யுண்டாகியிருக்கும், அங்குகிராமங்களும் நகரங்களும் பர்வதங்களும் நிறைந் திருக்கும், பக்குவமாயிராநின்ற கந்தராலவிருக்ஷபலமானதுதோலினுலே மூடப்பட்டிருப்பதேபோலுமென்றறிதி. விந்தியாசலத்தினது வனவிஸ்தார இடங்களின் கொம்பானைகள் அளவின்றிச்சஞ்சரிப்பதேபோல அந்தப்பர மான்மாவினது மாயாசபல விஸ்தார இடத்தில் பிரஹ்மாண்டங்களாகியமும் மையணுக்கள் அளவின்றிச்சுழலும். பிரஹ்மாண்டமானது சிதாகாசத்தை நோக்கியணுவாக இருப்பதேபோலச்சிதாகாயமும் யாதாவதொரு பொருளைக் குறித்து ஏன் அணுவாக இருக்கமாட்டாதெனின்? அதன்கண்ணே யாவுமிருக் கின்றன, அதனினின்றுமே யாவுமுண்டாகின்றன, அதன்கண்ணேயாவுஞ் சென்றொடுங்குகின்றன எந்தவஸ்துவானது எதனுல் இங்ஙனமாயோ அதனுல் எல்லாத்திசைகளிலும் எல்லாக்காலங்களிலும் எல்லாவஸ்துக்களிலும் அதுவே யாகும், அதுவும் சர்வமயமென்னும்சுருதிப்பிரசித்தநித்தியஆன்மாவேயாம், அவ்வாருய அதுஎதைக்குறித்து அணுவாகும், எதைக்குறித்தும் ஆகாதாம். சுத்தஞானமயமாயிலங்கும் அந்தப்பரம ஆலோகவாரிதியினிடத்தில் நிரந்தரம் பிரஹ்மாண்டமெனப்பெயரிய அலைகள் உண்டாகியுண்டாகி ஒடுங்குகின்றன.

சிலபிரஹ்மாண்டங்களோ அவ்வியாகிருதங்களாகவே யுள்ளடங்கிக்கிடக்கும், பூர்வகற்ப சம்பந்தமான சர்வசங்கற்ப பீஜலிங்கசரீர உபாதிக்ஷயமாகிய வழி தமோரூபங்களாகத் தூங்குவதுபோலச் சிலவுட்சூனியங்களாய் கிடக்கும், "அசத்துத்தானுதலிதன்முன்னிருந்தது" என்னுஞ்சுருதியைப் பின்பற்றி அவ்வியாகிருதமயமாய அர்ணவத்தில், பெருங்கடனீரில் அருந்திரையிருப்பது போல "எங்ஙனமசத்தினின்றும் சத்துண்டாம்" எனச்சுருதிசொன்ன ஊகத்தால் உளவாமென வெகுவாகத் தர்க்கிக்கக்கிடந்தன சிலவோ அந்தக் கற்பாந்தமுற்றுக் கர்க்கர் என்னுஞ்சப்தத்தோடு முயன்றுகொண்டிருந்தன, இயற்கையாகவே யிருக்கும் மோகத்தானே விஷயஇராகங்களோடுற்ற ஆகுலத்தரான மற்றையராற் கேட்கப்பெறவுமில்லை அறியப்பெறவு மில்லை. மற்றுஞ் சிலபிரஹ்மாண்டாங்களில் முதல் முதல் உண்டாம்கற்பயுகாதி யாரம்பகாலத்தில் பூர்வஉற்பன்ன பிராணிகளினுலே தூஷிக்கப்படாமை யினுனே தூய்மைவாய்ந்த புவனங்களின் சர்க்கமுண்டாகிக்கொண்டிருந்தன, அதுமண்ணில் ஊறியபீஜத்தினுள்ளேயிருந்து தூய்தாய அங்குரகலையுண்டாவதுபோலிருந்தன. சிலபிரஹ்மாண்டங்களின் மகாப்பிரளயமானது சம்பவித்துயாவும் கெடநேரிட்டபோது, புவனங்களை யெல்லாம் பொடிப்படுத்திய சூரியாதிய சுடர்களும் மின்னல்களும் மலைகளும் தாபத்திற்பட்ட பனிக்கணங்கள்போலக் கரையமுயன்று கொண்டிருந்தன. சிலவோஆதாரங்கள் அடையபெறுதனவாய்க் கற்பம்வரை வீழ்ந்து கொண்டேயிருந்தன; அற்றேல் வீழ்ச் சியினசம்பவம்முற்கூறியது என்னகதியாவதெனின், கரிந்துசரிவனயாவும் சம்வின் மயங்களேயாகுமென்க, வீழ்ச்சி யுணர்வுமயங்களில் விழ்ச்சி விரோதப்படாதாம். சிலவோ ஆகாயத்தில் மயிர்ச்சுருள்போல நிச்சலமாக நின்றன, வாயுவினது ஸ்பந்தாத்மசம்வித் வாசனைப்பிரபவங்களாய் வேறு சிலவை விசேஷமாயுதித சம்வித்துடையனவாய் விளங்கின. ஆனல் "தாதாமுற்படி கற்பித்தானே" என்னுஞ்சுருதியால் சர்க்கங்கட்கு ஏகரூபத்தன்மை கேட்கப்படுதலின் அதற்கு முரணுக இந்த விசித்திரங்கள் கூறுதல் எங்ஙனம் பொருந்துமெனின்? அந்த சுருதியினுனே பூர்வகற்பத்திற் ருதாவினது எத்தகைய சிருஷ்டி அத்தகையதாகவே துவிதியாதி யெனப்பிரதிபாதிக்கப்படுகின்றது, ஆண்டுவேதசாஸ்திர சம்பந்திகளாய முற்பவித்தகருமஞான அனுஷ்டான வடிவமாய ஆசாரத்தாற் ருத்துருத்தகைமையை யடைவுற்றவருக்கு முதற்சருக்கதிலேயே வேறுதாதாவின் சருக்கவிலக்ஷணமுண்மையாக உதித்தவழி,அவரதுஉத்தர கற்பசம்பந்த சர்க்கங்களின் ஆரம்பமும் அவ்வாறு முன்போன்றே யுளதாகுகவே, உளதாயினும் வேறுதாதாவின் சர்க்கத்தைக் குறித்து இவரதுமுறை அநியதமாகவே நிலைபெற்றுநிற்குமாகலின் வைசித்ரிய சித்தியாகுமென்றறிக. "தவத்தான் மகிழ்வித்தே தந்தையாம்பகவனை ஒன்றற்கொன்றுயரும் வேட்கையோடுவெப்பாயொன்றற் கொன்றுள்ளு

தித்தாரே" எனப்புராணங்களில் பிரஹ்மா விஷ்ணு ருத்திரர்கள் கற்ப வேற்றுமையால் ஒருவரினின்றும் ஒருவர் உண்டானரெனக்கேட்கப்படுதலின், உண்டாக்கும் முதன்மையில் அவர்கட்குக்குணவேற்றுமையுண்மையின் சருக்கத்திற்குச் சத்துவாதி குணப்பிரதானத்தாலுண்டாக்கப்பட்ட விசித்திரத் தகைமையும் நீக்க முடியாததேயாகும், சில பிரஹ்மாண்டங்கள்நான்முகப் பிரஹ்மாவையே யாதிபுருஷனைகவுடையனவாம், சிலவோ விஷ்ணுவேயாகிய அயனும் சர்க்கஅதிநாதனையுடையனவாம், சிலவோ ருத்திரபைரவ துர்க்கை விநாயகர் முதலியோரைப் பிரஜா நாதராகவுடையனவாம், அவ்வத்தேவதைகளின் மகாத்மியங்களைப் பிரதிபாதிக்கும் புராணாதிகளில் அவர்கட்கும் பிரஹ்மாதி நியந்துருத்தகைமை கேட்கப்படுதலின், சிலவோ நியந்தாக்களற்ற மிருக பக்ஷியாதி ஜந்துகளையுடையனவாயிருந்தன; சிலவோ பிரஹ்மாதிகளின் சம பிராதான்யத்தில் விசித்திர சர்க்கேசர்களையுடையனவாம், இவ்வண்ணமாகவே பிராணி கர்மவாசனை விசித்திரத்தன்மையினாலும் சிருஷ்டிப்பவரது இச்சை ஞானாதிவிசித்திரத் தன்மையினாலும் பிரஹ்மாண்ட விசித்திரத் தன்மையிஷ்டப்படி சுகமாகவே கற்பிக்கலாம், சிலவோ திரியக்கு மயவுட்பட்டன, சிலவோ ஏககடலானிறைந்திருப்பன, சிலவோ ஜனிவர்ஜிதங்களாயிருப்பவன, சிலவோ சிலையங்கம்போலும் நிரந்தரம் நெருங்கிய பிண்டமாயிருப்பன, சிலவோ கிருமிமயவுட்பட்டன, சிலவோ தேவமயமாயேயிருப்பன, சிலவோ நரமயவுட்பட்டன, சிலவோ எப்போதும் பேரந்தகாரம் நிறைந்திருப்பன அவ்வாறே அதிர்ஷ்ட ஜந்துக்கள் நிறைந்திருப்பனவுமாம், (கோட்டான் முதலியவை அந்தகாரத்திலும் காண்பவற்றைக் காணுமென்றுணர்க) சிலவோ எப்போதும் பேரொளியோடு கூடியிருப்பன அவ்வாறே அதிர்ஷ்ட ஜந்துக்கள் நிறைந்திருப்பனவுமாம் சிலவோ அத்திப்பழத்தின் அழகையொத்துக் கொதுகுகள் நிறைந்திருப்பன சிலவோ எப்போதும் சூனியமேயுள்ளாயிருப்பன சூனிய அசைவு வடிவ ஜந்துக்களோடு கூடியிருப்பனவுமாம்; அத்தகைய சர்க்கத்தானே எச்சர்க்கங்கள் பூரணமாயிருக்கின்றனவோ உட்டிருட்டியோடு கூடியிருக்கும் எந்தயோகிகட்கும் ஸ்புட விவகாரகற்பனை வாய்ந்த சவிகற்பக ஞான விஷயத்தன்மையை அவை யெவையுமே மருவமாட்டாவாம், எம்போன்ற மதிவாய்ந்த யோகிகட்கும் விண்ணிறை மலைபோலும் எட்டாவாம். விண்ணிறை மலைநிகர்ப்ப இவற்றுள்ளாகாயமாம் சூனியமற்ற இயற்கையதாம் இது போன்றே மகாப் பிரகாசமும் எங்கும் நிறைந்து நிற்கும் இவற்றைக்காண வாழ்நாள் முழுதும் வெகுவேகமாக ஓடியோடிச் சுற்றினும் விஷ்ணுவாதிகளானும் இவ்வளவுதானென அளவிட முடியாதாம். நல்லது அனந்தம் பிரஹ்மாண்டங்களும் அவற்றின் விசித்திரங்களும் உளவாகுக, உளவாயினும் பாகிய ஜலமுதலிய ஆவரணங்களின் விதாரகமில்லாமையின் வியோகமெங்ஙனமில்லாமற் போகுமெனச் சங்கிப்பின்முன் யாங் கூறிய ஆகர்ஷண சத்தியினானே யெனச் சமாதானமாகலாம்; பூதங்களின்

ஆகர்ஷணம் செய்யும் சக்தி விசேஷம் பிருதிவிசம்பந்தமானதாய்த் தனதி யற்கையானே கடக ரத்நம் போலும் தனித்தனியாக அண்டகோளத்தை வியாபித்து நிற்கும், இந்த ஜகத்தின் விஸ்தீரணத்தை வருணிக்க ஒருவருக்கு மே சக்தி கிடையாது, ஹே மகாமதியையுடைய இராகவ! எமது மதிக் கெட்டியதாக ஒருவாறு ஜகத்தின் வர்ணன விஷயத்தில் சர்வ வைபவங்களுங் கூறப்பட்டன, இதற்கு மேலாக இவ்வுலகத்தை வருணிக்க எம்மால் முடியாது யாம் வருணிக்க முடியாமையானே இவ்வளவு தான் ஜகத்தென நினைக்க வேண்டாம், மற்றே, ஒருவராலுங் காணமுடியாதனவாயும் அளவற்றன வுள்ளன, என்னை, மாயையின் சர்க்க சக்தியானது அளவற்று நிற்கின்ற மையின்; அதற்குதாரணங்கூறக் கேட்டி! பேரிருணிறைந்து மிக அகன்று மிகப் பெரிதாக இருக்கும் ஆரண்யத்தில் ஒன்றோடொன்று பாராதனவாய் வடிவத்துடன் மதம்பிடித்தனவாகிப் பூதகணங்கள் கூத்தாடுவதே போலும், அவித்தையால் மறைபட்டதாகிய அதிவிஸ்தார பரம சிதாகாயத்தின்கண்ணே அளவற்ற பெரும் பெரும் உலகங்கள் தோற்றிக் கொண்டே யிருக்கின்றன.

30-வது விசித்திர பிரஹ்மாண்ட கோடி வருணணம் முற்றிற்று.

---

## 31—வது போர்த்தோற்ற வாகாய வர்ணனம்.

இப்போது மீண்டும் அந்தப்புரத் தோற்றமும் வேறு பிரஹ்மாண்ட தரிசனமும் சூராதிலக்ஷண சந்நத்தசேனைத் தோற்றமும் வருணிக்கப்படும். முற் பவித்த ஜகத்ஸதைத் தாண்டி கூறிய வண்ணம் அநந்த கோடி பிரஹ்மாண்ட விசித்திரங்களைக் கண்டுகொண்டேயேகி அவற்றுள் ஒரு பிரஹ்மாண்டத்தின் கண்ணே யவ்விருவரும் விரைவிற் புகுந்து அந்தப்புரத்தைக் கண்டார்கள். ஆண்டு வெகுநேரமிராமல் உடனே கிளம்பிப் போயினர். அவ்வந்தப்புரமானது, புஷ்பபாரத்தினாலே நிறைந்த மகாராஜ மகாசவத்தோடு கூடியிருந்தது; சவத்தின் சமீபத்தில் வீற்றிருக்கும் உட்சமாதியிலாரூடமாயிருக்கும் சித்தத் தோடுற்ற லீலையின் சரீரத்தோடு கூடியிருந்தது; சோகத்தினாலே நீண்டிருந்த கன இராத்திரியாதலின் அற்ப அற்பமாகவும் மகாநித்திரை யாசவுமிருக்குஞ் சுழுப்தியானனே வியாபிக்கப்பட்ட ஜனங்களின் ஆகுலம் மிகுத்திருந்தது, தூபம் சந்தனம் கர்ப்பூரம் குங்குமம் முதலியவற்றானே யுண்டாஞ் சுகந்தத் தானே கவின் வாய்ந்திருந்தது. அதனைப் பார்த்து விட்டு வேறு நாயகரது சமுசாரத்தை யடைவான் முயன்றவளாகிச் சங்கற்பதேகத்தோடும் அந்தப் புரத்திலேயே முற்கூறிய மண்டபாகாயத்தை நோக்கித் தாவினள், சிறிது விரிந்திராநின்ற சமுசார ஆவரணத்தைப் பிளந்து கொண்டு பிரஹ்மாண்ட கபாலத்தையும் பிளந்து கொண்டு பர்த்தாவினுடைய சங்கற்ப சமுசாரத் திற்புகுந்தனள். மீண்டும் ஆவரணத்தோடு கூடியயிராநின்ற விஸ்தீர்ண பிரஹ்மாண்ட மண்டபத்தை வெகு வேகத்தோடும் பரமேசுரியோடும் புகுந்தடைந்தனள்; இருண்மேகங்களாகிய சேறுகளாற் சூழப்பெற்றதும்

பர்த்தாவினுடைய சங்கற்பத்தாலாகியதும் ஆன சேற்றுச் சிறுகுட்டை யைக் கண்டனள். அவ்விண்வடிவமேயாகி நின்ற தேவிமாரிருவரும் பக்குவ மாய மிருது வில்வத்தைப் பிபீலிகைகள் அடைவதே போலப் பிரஹ்மாண் டத்துள் ஆகாயஜகத்தை யடைந்தனர்; ஆண்டு லோகாந்தரங்களேயும் மலை களையும் அந்தரிக்கலோகத்தையும் கடந்து சைல மண்டல அம்போதிகளாற் சூழப்பெற்ற பூதலத்தை யடைந்தார்கள், மேருவினாலே யலங்கரிக்கப் பட்ட தும் ஒன்பது கண்டங்களாகிய தலங்களோடு கூடியதும் ஆகிய ஜம்புத்தீவை யடைந்து பின் பாரத வருஷத்தில் லீலாநாதரது மண்டலமாம் இராஜ்ஜி யத்தைக் கண்டனர். அச்சமயத்தில் அந்த மண்டலத்தில் அநேக நகரங்கள் நெருங்கி யிருக்குமிடத்தில், தனக்குச் சகாயமாய் வந்திருக்கும் மண்டலே சுரர்கள் பெருகப் பெருகியிருக்கும் சிந்துராஜனென்பவன் சேனையினால் ஆக்கிர மணஞ்செய்திருந்தனன். அவனோடு கூடப் போர்தொடங்கியிருத்தலின் அதைக் காணும் பொருட்டுற்று நிறைந்த மூவுலகத்திய பிராணிகளானே நெருக்கச் சங்கடத்தை அவ்விண்ணடைந்திருந்தது. உலகம் பொய் யென்னும் உணர் வுண்மையானும், மறையுங் குசலத்தன்மை யிருத்தலினானும் பய சங்கையற்ற வர்களாய் வந்துற்ற அத்தேவிமாரிருவரும் ஆகாயத்தின் அலங்காரத்தைக் கண்டனர், அது மேகபடலங்கள் மூடிக்கொண்டிருப்பதே போல விண்ணவர் கூட்டத்தால் மூடப்பட்டிருந்தது, சித்தர் சாரணர் கந்தர்வர் கணங்களும் வித்தியாதரக்குழுக்களும் நிறைந்திருந்தது, இவர்தாஞ் சூரரெனக் கணக்கிடு வதிற் குறிப்புள்ள சுவர்க்கலோக அமரமங்கையராற் சூழப்பெற்றிருந்தது, இரத்த மாம் சங்களை நாடிக்கொண்டிருக்கும் பூதரக்ஷபிசாசுக் கூட்டங்களால் நிறையப்பெற்றிருந்தது, புஷ்ப விருஷ்டி செய்து கொண்டு மலர் நிறைந்த கரத்தராய வித்யாதர மங்கையரால் அலங்கரிகப் பெற்றிருந்தது, கைகலந்து செய்யும் போரைக்காணும் மிகுவேட்கையுடையவராய், ஆயுதங்கள் நாலு பக்கங்களினும் விழுதலின் அவற்றினின்றும் தம்மைக்காக்கக் கிரித்தாழ்வரை களைப் பற்றியவராய பூதஜாதி பேதங்களாய வேதாள இயக்க கூஸ்மாண்டக் கூட்டங்களால் சூழப்பெற்றிருந்தது, அஸ்திரங்களின் மார்க்கத்திற்கடுத்த விண்டலத்திருந்த பூதமண்டலம் பயந்தோடுங் கவினுற்றிருந்தது, யான் புருஷ னல்லவாவென்னும் அபிமானத்தால் நெஞ்சைத் தட்டிக்கர்ச்சிக்கும் படர்கள் சூழ்ந்த பெருமையுற்றிருந்தது, பெரும் போரானது நேர்ந்துவிட்டதென யாவரும் ஒருவருக்கொருவர் பேசுந்தன்மையதாக விருந்தது, லீலைகளினும் நகைப்பு விலாசங்களினும் மிக வுற்சாகத்தோடிருக்கும் சாமரை தரித்த சுந் தரிகளாலலங்கரிக்கப் பெற்றிருந்தது, அறத்தின் மிகுதியால் மற்றையராற் காண முடியாதவரும் முயன்ற யோக பலத்தால் மிக்க மேன்மையுடையவரும் ஆகிய முனிவர்கள் உலகம் விரும்பியது பெறும் பொருட்டுப் படிக்கும்படி யான தேவதைகளின் ஸ்தோத்திரங்களோடு கூடியிருந்தது, அவ்விடத்துற்ற அநேக கந்தர்வாதி லோகபாலரின் வனிதைகள் விஷயமான சமயத்திற்குத்

தக்க தோத்திரங்களோடுற்றதும், தேவமங்கையரை நோக்கி எங்களையு
பேக்ஷித்து விட்டு வேறு நவமான காந்தரைச் சேராதிர்களென லோகேசராற்
ருேத்தரிக்கப்படுஞ் சிறப்பையுற்றிருந்தது, சுவர்க்கத்தை யலங்கரிக்குந்
தன்மையராய்த் துறக்கத்தக்க சூரர்தம் வருகையால் வியாகுலமுற்ற இந்திர
படர்களால் விளங்கிக்கொண்டிருந்தது, சூரப்பொருட்டு அலங்கரிக்கப்பட்ட
மிகவுன்னதமான லோகபாலப் பெயரியஐராவதாதி மத்தகஜங்களாலலங்
கரிப்பட்டடிருந்தது, வாராநின்ற சூரர்களைச் சன்மானிக்கும்பொருட்டு எதிர்
பார்த்துக்கொண்டிருக்கும் கந்தர்வ சாரணர்களோடு கூடியிருந்தது, சூரர்களை
யெதிர் நோக்கிக்கொண்டிருக்கும் அமரமங்கையர் கூட்டத்தாற் கடாக்ஷித்து
நோக்கப்பட்ட நல் வீரர்களையுடைத்தாயிருந்தது வீரர்தம்பாகுரூபதண்ட ஆலி
ங்கனப்போரசை வாய்ந்த மங்கையர் சமுதாயத்தோடு கூடியிருந்தது, வெண்
மையான சூரரது கீர்த்தித்தண்மையானே மறைபட்ட உஷ்ணத்தோடுற்றுச்
சந்திரனைப்போன்றுள்ள திவாகரனை யுடைத்தாயிருந்தது, பிரசங்கம் பற்றிச்
சூராதி இலக்கணம் அறியவிரும்பிய ஸ்ரீ இராகவர், ஹேபகவன் ! சூரசப்தத்தா
னே எத்தகைய படன் கூறப்படுகின்றான் ? சுவர்க்க அலங்காரம் எவனுலாம் ?
டிம்பாஹவர் யாவர்என வினவ; (கூறுமலும் குறிப்பிடாமலுமிருப்பினும்டிம்பா
ஹவர் இலக்கணம் ஈண்டு வினவியது சுவர்க்கத்தை யலங்கரிக்குஞ் சூரரினும்
வேறாக இருத்தலின் பிரசங்கம் பற்றியாம்) ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்:—
சாஸ்திரத்திற் கூறிய ஆசாரத்தோடுகூடிய பிரபுவை யுத்தேசித்து யாவன் போ
ரில் போரிடுகின்றானே அவன் இறப்பினும் வெற்றியுடன் சிறப்பினும் சூரலோ
கத்தையாளும் சூரனவன். மாறுகப்பிராணிகளாற் சின்னம் பண்ணப்பட்ட அங்
கத்தினை யுடைய வனாய்ப் போரில் யாவன் மரணத்தை யடைவானே அந்நான்
நரகத்திற் கிடப்பவனாகிய டிம்பாஹவஹதன் எனப்படுவன். இன்னும்
வெளியாக வியம்பக்கேட்டி ! சாஸ்திரப்படி நடவாதவனை வாழ்விப்பான்
பொருட்டாக யாவன் போரிற் போரிடுகின்றானே அவனிறப்பின அக்ஷய
நிரயத்தை யடைவன் தனக்கேற்பட்ட சாஸ்திரவிதி வழுவாமலும் லோக
மரியாதையைத் தாண்டாமலும் இருக்கும் நீதிமான் பொருட்டுப் போர்
செய்யு முத்தமனே பக்தன் சூரன் எனப்படுவன். கோவின் பொருட்டும்
பிராஹ்மணன் பொருட்டும் நேயன் பொருட்டும் சாதுக்கள் பொருட்டும்
நன்மதப்பொருட்டும் சரணாகதனைக் காப்பாற்றும் பொருட்டும் போர் முயற்
சிப்பவன் இறப்பினும் சுவர்க்கத்தை யலங்கரித்துக்கொண்டிருப்பன். அவ
சியம் பரிபாலிப்பதற்கு யோக்கியமாய தன்னுடைய தேயத்தினது காப்
பையே கடனாகப்பூண்டெப்போது மொழுகும் அரசனுக்குச் சகாயமாய்ப்
போர் புரிந்துறும் வீரர் வீரலோகத்தை யுடையவராவர். பிரஜைகளை யுபத்திர
வஞ்செய்யும் அரசன் பொருட்டேனும் அரசன் அல்லான் பொருட்டேனும்
பிரபுவின் பொருட்டேனும் போர் புரிந்திறந்தவன் நிரயத்தை விட்டு நீங்கான்
சாஸ்திரத்தில் விதித்தபடி செய்யாதவனை யாசிரயஞ் செய்பவனே நரகப்

பொருட்டாவனெனின், மற்றென்னே, பிரஜைகளையுபத்திரவஞ் செய்பவனே யரசிரயஞ்செய்பவன் எனச் சொல்வது! நரகமடைவன் அரசனாகத்தானிருக்குக அல்லாதவனாகத்தானிருக்குக, சாஸ்திரத்திற் கூறியபடி செய்யாதவனயின் அவன் பொருட்டு யாவன் வெட்டுப்பட்ட காயத்தையுடையவனைப் போரில் மரிப்பனோ அவன் நிரயத்தையடைவதில் ஐயம்யாதுளது? புண்ணியவானைப் பற்றியிருந்த போதினும் அதர்மமாகப் போரிற் போர் செய்திருந்தானுக்குச் சுரக்கமின்றாம்; தருமத்தைத் தாண்டாமல் எவ்வண்ணமாமோ அவ்வண்ணம் போர்புரிவனயின் அவன் சுவர்க்கம்பெற்று வாழ்வன், அதர் மியைப்பற்றி யதர்மமாகவே போர்புரிந்து இறந்தவருக்கும் சொர்க்கமுண்டாகுமாயின், நரக பயமற்றவராய் அத்தியந்தம் அதர்மப்போரனும் மதோன்மத்தராய் மற்றையரை நாசப்படுத்தி யன்றோவிடுவர். ஆனால் பருயிர் தம்மைப் பகர்தன்னுயிரான் வரமிகச்செய்தே வாங்கியவாளான், மரிதருமெங்கெங்கங்கு மாசூரன் கருதியதுறக்கங் கதுவுதறுணிபே" என்பதாதி சாமானியப் பிரவாதங்கட்காங் கதியாதோ வெனின்? கேட்டி! யாண்டு யாண்டிறப்பன் சூரன் ஆண்டுச் சுவர்க்கம் என்னுங் கூற்றிற்குப் பொருள், தருமப் போர் செய்யுஞ் சூரன் அடைவன் என்பதே சாஸ்திரத் துணிபொருளாம் சதாசாரமுடையவர் பொருட்டாகக் கட்கதாரையைச் சகிப்பவரே சூரர் எனக்கூறப்பொறுவர், மற்றையரோடிம்பாஹ வாஹதராவர், போரில் அவர் பொருட்டே ஆகாயத்தில் சூரர்களாகிய மகாவலிமையுற்ற அவர்தம் மனைவியர் யாம் என்னுங்குதூகல உற்சாகக்கருத்தினராய் எதிர்பார்த்து நிற்பர் தேவப் பெண்கள். முன்வருணித்த அவ்வாகாயமானது, வித்யாதரப் பெண்மணிகளானே அதிமதுரமாக மந்தம் மந்தம் பாடும் கீதத்தால் நிறைந்திருந்தது, சூரர்களது மார்பில் மந்தாரமாலையைச் சூட்டும் பொருட்டும் தங்கள் கொண்டைகளிற் சிங்காரிக்கும் பொருட்டும் ஆகுலவேகத்துடனுலவும் காமினிகளோடு கூடியிருந்தது, மிகுந்த ஒளியும் அலங்காரமும் நிறைந்த சுரர் சித்தர் முதலாயினரது விமான வரிசைகள் இளப்பாறுதலால் அலங்காரமுற்றிருந்தது மகோற்சவப் பொருட்டு மேலேசென்ற சோபைபோலும் மிகமிகவும் இலங்கியது:

31-வது போர்த்தோற்ற வாகாய வர்ணனம் முற்றிற்று.

## 32-வது போர்த் தொடக்க வருணனம்.

இப்போது, சங்கற்பத்தாலாய விமானத்திருக்கும் ஞானலீலா தேவகளாற் காணப்பெற்ற போர்முகமாகி நின்ற பூபதிகளின் இருசேனையும் போர் செய்யும் வாஞ்சையுற்றமை வருணிக்கப்படும். வீரவரர்களைக் கண்ட வுற்சாகத்தானே கூத்தாடும் தேவமங்கையர் நிறைந்த விண்ணில் விளங்கிக் கொண்டிருக்கும் வித்தியாதேவியாகிய சரசுவதியும் அவ்வம்மையோடு கூடியிலகும் லீலாதேவியும் அவனியில் இருசேனைகளையுங் கண்டார்கள். நாயகராற் பரிபாலிக்கப்ப

ட்ட சுவராஷ்டிர மண்டலத்தில், சதுரங்க சைனியத்தோடு கூடியதும், சிங்கந் தேள் அரக்க பிசாசாதிகட் காதாரமாதலின் துவிதீயாகாச பீஷணமுற்றதும் ஆகிய ஒரு விஸ்தார ஆரணியத்தில் அவ்விருசேனைகளும் நிறைந்திருந்தன அவ்விரண்டும், கலக்கமற்றனவாயும் அழகிய இருகடற் கொப்பானவாயும், மகத்தாய காரியங்களில்முயன்று கொண்டிருப்பனவாயும், மதம்பிடித்தனவாயும் இரண்டு மன்னவர்களால் அலங்கரிக்கப் பெற்றனவாயும் இருந்தன. போரின் பொருட்டு வரிந்து கட்டுவனவும், பெருங் கர்ச்சனையுடன் யுத்த சங்நாகஞ்செய்வனவும் அக்கினியைப்போலத் தீப்தமுற்றனவும் அற்புதமுற்றனவும் முன்னர் பாணப்பிரயோகஞ் செய்வதை யெதிர்பார்த்துக்கொண்டிருப்பதானே மூடாத செங்கட்கலக்கமுற்றிருப்பனவும் ஆகியிருந்தன. மேற்றாக்கியசைக்கும் நிருமலமாய கட்க தாரைகளேயாய மழைத்தாரைகளைத் தாங்கும் வீரர்களோடு கூடினவும் பிரகாசியாநின்ற பரசு இறகம்பு எறியீட்டி உபயதாரைக்கட்கம் உலக்கைக் கையினவும் ஆகியிருந்தன. பக்ஷிகளின் பக்ஷங்களால் விக்ஷேபதமான வன சம்பாத கம்பிதமாயினவும் எழாநின்ற சூரியனது ஒளியினாலே பளீர் என்று மின்னும் கனககவசம் பூண்டனவும் ஆயிருந்தன. பரஸ்பரம் முகங்களைப் பார்த்தலானே கோபமூண்டு ஆயுதங்களையுயா கிளப்புவனவும், அன்னியோன்னியம் பார்க்கும் பார்வை பந்திக்கப்படுதலின் சுவரிலெழுதிய சித்திரம் போன்றனவும் ஆயிருந்தன. சர்ப்பாதி நிரோதப் பொருட்டு மாந்திரிகரானே கீறப்பட்ட ரேகைக்கொப்பாக இருசேனைகட்கு மத்தியில் நீளமாகப் பந்திக்கப்பட்ட ரேகை மரியாதையால் நிறுத்தப்பட்டனவும், தடுக்க முடியாத பெருஞ் சேனையின் பெருங்கர்ச்சனையானே மறைபடுதலின் அன்னியோன்னியம் பேசும் சம்பாஷணையும் கேட்க முடியாதனவும் ஆயிருந்தன. முன்னர் பாணப்பிரயோகம் செய்யற்கவென அரசர் ஆணையிட்டிருக்கின்றாரே யென்னுஞ் சங்கையின் நிமித்தத்தானே நெடுநேரம் மிகச் சாந்தத்துந்துபிகளோடும் பந்திக்கப்பட்ட வீரர்களாகிய பிரதான அவயவ சந்நிவேசங்களோடு கூடிய நிகில சேனையான் மந்தமாயிருந்தன. இரண்டு விற்பிரமாணம் ஜனங்களில்லாததாய மத்தியபாக மரியாதை யொன்றால் கற்பாந்த வாயுவினானே மதத்த ஏகாரணவம் வகுக்கப்பட்டது போலும் வகுக்கப்பட்டிருந்தன. காயத்தில் சங்கட மேற்படு மென்னுஞ் சிந்தாகுலமின்றிக் காரியத்திற் சங்கட மேற்படுமோ வென்னும் சிந்தா பரவசமுடைய மன்னவரோடு கூடினவும் பயத்தினானே கத்தும் தவளையின் கண்டத்தோற்போற் றுடிதுடிக்கும் பயங்காளிகளின் இருதய குகைகளை யுடைத்தாயிருந்தன. பிராணன்களின் சர்வ சுதந்தரங்களையும் மன்னவர்க்கு இனிது கொடுத்துப் போர்முயற்சியோடு நிற்கும் அளவற்றசேனையோடிருந்தன; காதுவரை யிழுக்கப்பட்ட அம்புக்கூட்டங்களின் பிரவாகங்களை விட எதிர்பார்த்துக்கொண்டு நின்ற விற்றரித்தவரால் நிறையப்பெற்றிருந்தன. பாணப்பிரயோகம் வருவதை நோக்கியசையாமல் நின்று கொண்டிருக்கும் அசங்கிய சேனைகள் சூழப்பெற்றும், அன்னி

யோன்னியம் போருற் சாகத்தாற் கடுஞ்சினமுற்றுக் கண்சிவந்து அஞ்சு
மாறு புருவங்களை நெரித்துக் கொண்டும், நின்றன. பரஸ்பரம் அடிபடுவ
தானே கடு டங்காரஞ் செய்யும் இருப்புக் கவசத்தை யுடையனவும், போர்
வீரர் தம்முகாக்கினியானே மிகத்தகிப்புற்றது போலக் கறுத்துறு முகங்க
ளானே பயத்தோடும் ஆதாரந் தேடிநோக்கும் கிரிகோடரங்களையுடையன
வும், ஆயிருந்தன. பரஸ்பரம் போரைக்காணும் பரியந்தம் சமுசயமற்ற
ஜீவிதத்தையுடைத்தாயினவும், நன்கு மேலுயர்த்திய கரங்களோடும் மயிர்க்
கூச்செறிதலோடும் கூடியிருத்தலானே மேலே உன்னதமுற்றனவும் குறுக்கே
விரிந்திருப்பனவும் ஆகிய ஆனைகளையும் சேனைகளையும் உடைத்தாயினவும்
ஆகியிருந்தன. முன்பாணப் பிரயோகத்தை யெதிர்நோக்கும் வியாகுல
மனத்தோடு கூடியும், நிஸ்தரங்க சமுத்திரம் போன்றும், நித்திரையால் முத்
திரையுற்ற புரம்போன்றும், இருந்தன. சங்கக்கூட்டங்களின் ஒலிகளும்
துந்துபி முதலியவாத்திய விசேஷங்களின் ஒலிகளும் அடங்கியிருப்பதுடன்
எல்லாத் தூளிமேகங்களும் பூதல ஆகாசங்களில் அடங்கிக் கிடக்குமாறு
விளங்கின. ஓடுவதிற் றற்பராசற் பின்விடுக்கப்பட்ட சேனைமண்டன வடிவ
ராம் வீரர் தம்மண்டலத்தோடு கூடியும், மகரக்கூட்டங்கட்கும் மச்சங்கட்கும்
போர்நேர்ந்த கடலொத்த விஸ்தாரமான மகரவியூகம் வகுத்தப் போர்முகப்
பட்ட இருதிறச் சேனைகளின் விளக்கத்தோடு கூடியும் இருந்தன. கொடி
களின் பூங்கொத்துக் கூட்டங்கள் விண்ணுடுக்களை வெற்றி கொண்டு செல்
வனவாயும், யானைகளின் மீது இருப்பவரும் யானைகளும் கரங்களையும் உலக்
கைகளையும் உயர்த்திக்கொண்டிருப்பதானே கானனம்போலும் நிறைந்து
ஆகாய அவகாசத்தை யடைத்துக் கொண்டனவாயு மிருந்தன. மிதவாநின்ற
சஞ்சல ஒளிகளினிறைவாற் பக்ஷங்களோடு கூடினபோன்று விளங்கிய சகல
ஆயுதங்களோடு கூடினவும், துந்துபி முதலியவற்றின் தமத்தம் என்னுஞ் சப்
தங்களாலும், சுவாசத்தால் எழாநின்ற சங்கு கொம்பு முதலியவற்றின் சப்தங்
களாலும் உண்டாகிய பேரோசை ஆகாயத்தை யடைப்பனவும் ஆகியிருந்தன.
இப்போது சேனைகளின் பிரதேச பேதத்தால் வியூகரசனையின் பேதத்தை
வருணித்து விசேடிக்கப் படுகின்றது;—சிலபால், சக்கிரவியூகம் வகுத்து நிய
மித்த அதிபரால் துட்டராய அசுரர்களை யெதிர்த்து வளைத்த தேவதைகளாற்
போல விளங்குவனவும், கருடவியூகம் வகுத்து நின்ற கம்பிரத்தாற் கருடர்
களைக்கண்டு நாகக்கூட்டங்கள் ஓடுவனபோன்று யானைக் கூட்டங்களை யோட்
டுவனவும் ஆகியிருந்தன. சிலபால் பருந்து வியூகம் பகுக்கப்பட்டு இரு
சேனைகளும் நின்ற நிலையால் ஏற்றத்தாழ் வோடுற்ற தொனிகளுடன் கூடின
வும், சிலபால் அன்னியோன்னியம் நோக்கிப் புயங்களைத் தட்டுதலானே
யகங்கரித்துக் குதித்துக் கொண்டிருக்கும் பெருங் கூட்டங்களுடன் விளங்கு
வனவும் ஆகியிருந்தன. நானாவிதமான வியூக விந்யாசங்களானே வெளிப்
பட்ட வீரர்களின் வீராவேசத் தொனிகளுடன் கூடினவும், கரங்களை யுயர்த்தி

யசைக்கும் உல்லாசத்தால் மதம் பிடித்தவரைப் போன்று சுழலும் உலக்கைகளின் கூட்டம்போல் விளங்குவனவும் ஆகியிருந்தன. கறுத்திராநின்ற ஆயுதங்களின் கிரணங்களோடு போன்றுதித்த மேகங்களானே மறைக்கப்பட்ட திவாகரனுடன் கூடினவும், காற்றினாலே யசைக்கப்பட்ட பல்யூலங்களென்னும் திருண விசேஷங்கள் சீறு சீறு என்பனபோலும் காற்றடிபட்ட சரத்தொனிகள் சேர்ந்தனவும் ஆயிருந்தன. பிரளயஞ் செய்வதிற் சமர்த்துடையனவாய புஷ்கராவர்த்தகாதி மேகங்கள் அநேகங்கள் முன்பாகத்திற் கூட்டங் கூடி நிற்பதே போலும் வீரர் சூழ்ந்து நிறையப் பெற்றிருந்தன, பிரளய சண்ட மாருதத்தானே மிகவுங் கலக்கமுற்ற ஏகசமுத்திரம் போலும் எழுந்து விளங்கின, மகாமேரு பர்வதத்தைத் தற்போதுதான் இருகூறாக்கி இருபக்கம் வைத்ததுபோலுமிலங்கின, நீலகிரியானது மிக வீசுங் காற்றினாலே பெயர்த்தெடுத் திங்கு எறிந்துவிட்டது போலும் மிக்க கறுப்பான ஆனைக் கூட்டங்களுடன் விளங்கின, அவைகளின் கறுத்த கூட்டக் கோலங்கள் பாதாள குகையினின்றும் கிளம்பியுற்ற மகா இருள்போலு மிலங்கின, உன்மத்தரது நடனத்தினாலே மிகச் சஞ்சலத்துடன் விளங்குவனவாய பிராகாரங்கள் லோகா லோக பர்வதங்கட்குச் சமானமாயிருந்தன, மகா நரகக்கூட்டங்கள் அவனியைப் பிளந்து கொண்டு எழுந்து வந்தனபோலு மிருந்தன, மிக மிகவுஞ் சுழலாநின்ற குந்தம் முசலயம் வாளாயுதம் பரசு முதலியவற்றின் கிரணங்கள் சூரிய பகவானுடைய தினவொளியை மறைத்து உலகிற் குதவும் மேகங்கட்குச் சமானமாய் நிறைந்து அநந்த புவனகோசங்களைத், தம்முட்படுத்திப் பிரவாகமாய் அகாதமான ஏகார்ணவஞ்செய்யும் பொருட்டு மிகமுயன்று கொண்டிருப்பன போலு முற்றுவிளங்கின.

32-வது போர்த்தொடக்க வருணனம் முற்றிற்று.

---

## 33-வது முதற்பாத வருணனம்.

இப்போது சங்கற்பத்தாலாய விமானங்களிலிருக்கும் ஞானலீலாதேவிமாராற் பார்க்கப்பட்ட இருசேனைகளின் போர்ப்பிரவிருத்தி வருணிக்கப்படும் :—ஹேபகவன்! தங்களுடைய திருவாக்கியங்களைக் கேட்கக்கேட்கத் தெவிட்டாத அமுதமாய்ச்செவிகள் குளிர்ந்து மிகமகிழ்வுறுகின்றனவாதலின், தத்துவ உபதேச கிரகணத்தடையாய ஆலசியாதிதோஷ நீக்கப் பொருட்டுக் கூறிவந்த இப்போரைச் சுருக்கமாகச் சிறிது அருள்புரியவேண்டுமென ஸ்ரீ இராகவர் வேண்ட ஸ்ரீ வசிஷ்டபகவான் அருளல் :—ஹே இராகவ! அத்தேவிமாரிருவரும் அப்போரைக் காணும்பொருட்டு ஆண்டே சத்திய சங்கற்பத்தினாற் கற்பிக்கப்பெற்றதும் மிக அழகியதும் விமலமான விண்ணின்கண்ணிச்சலமாய் நிலைத்து நிற்பதும் ஆகிய விமானத்தின்கண்ணே ஏறியிருந்தார்கள். ஆண்டவ்விரண்டு சேனைகளின் முகங்களும் ஒன்றோடொன்று சேர்ந்த அளவில், பகைவனது சைனியத்தினின்றும் பிரளயக்கடலலையெனக் கிளம்பி ஒருபடன்

நிர்ப்பயனுய்வந்து தன்து பட்னெருவனைத் தாக்குவதைக் கண்டவுடனே லீலேசஞ்கிய விதூரதன் அதனைச் சகிக்கமுடியாதவனுகிச் சிலேயைமலேயிற்போ லும் அப்பகைப்படன் மார்புநொறுங்குமாறு தனது முசலத்தை வீசினுன். அரசன் இவ்வாறுசெய்தபின் பிரளயக்கடல் பொங்கியதுபோல பாணப்பிர யோகங்கள், அக்கினிக்கும் மின்னலுக்கும் சமானமாய்ச் சொலித்துமின்னும் கொடூர அஸ்திரசஸ்திர வர்க்கங்களால் நாற்பக்கங்களிலும், இருசேனைகளிலும் மிகமிகவும் உண்டாயின. அப்போரின் சம்பிரமமிருந்த விதத்தைக் கேட்டி! மிதந்துகொண்டிருப்பனவாய சஸ்திரங்களின் சஞ்சலத்தாரை முனைகளால் ஆகாயம் அநேகங்கிருண்டது போலிருந்தது; கணகணவெனத் தொனித்துக் கொண்டிருப்பதற்கிடையில் டாண்டாண் எனச் சப்தமுண்டாய் கொண்டிருந் தது; தீரர்கள் உங்காரஞ்செய்து அதனுடன் கலந்ததனுலே தாரதம்மியமாக இருக்கும் வெப்பஈற்றின் மேககர்க்கரத் தொனிகளை யுண்டுகொண்டிருந்த னர். (தந்தொனியா லிடியைத் திரஸ்கரித்தனரென்றபடி) ஏவப்பட்ட சரதா ரைகளின்மேற் பிரதி பலிதமான சூரிய வொளிகள் மேற்கட்டி யலங்காரத் தைச் செய்துகொண்டிருந்தன; சரகட்காதிகளின் தாடனத்தால் வெட்டுண் ணும் கவசங்களினின்றும் டங்காரசப்தத்தோடும் தீப்பொறிகளும் கிளம்பிச் சென்றன; பரஸ்பரம் வெட்டுப்பட்டொடியும் கட்கத்துண்டுகளேயாய பற வைகள் ஆகாயத்திற்பறந்து கொண்டிருந்தன; வீரர்தந்தோள் விருக்ஷங்களின் சஞ்சாரங்களாற் சஞ்சரிக்கும் வனத்தோடு கூடி யாகாயம் விளங்கியது; கோதண்ட சக்ரகிரேங்காரசப்தங்களால் அஞ்சி விமானத்திலிருந்த பெண்க ளோடினுர்கள்; மகாஹலஹல அரவங்களால் அடக்கப்படுதலின் வண்டினிரைச் சல்போல அற்பமாகச் செய்யப்பட்டன மேகத்தொனிகள், "எங்ஙனமுப்பினி ரதம் உள்வெளியிலாது முழுதுமிரதமயமாமோ, அங்ஙனமரே யிவ்வான்மா முழுதும் அறிவுருவாயேயமருமென்றறிதி" என்னும் மறையினுலே காட் டப்பட்ட ஏககனப்பரமான்மா தற்பாவவயத்தால் நிருவிகற்பசமாதியிலிருப்ப தாகி வெளிச்சத்தாதிகளை யனுபவியாததேபோலுமென்றறிதி. "சமாதியிற் பாகியசத்தாதிகளி லமாதுபோதம் பெறுமக்கால்வரை, சமாதி சவிகற்பஞ்சா திப்பதாகும், சமாவதன்பின்னிருவிகற்பமாஞ்சுகமே" எனவுங் கூறவும் பட்டுளது. நாரசமழைத்தாரைகளின் கூர்களால் வெட்டுப்பட்டசூரர் தஞ்சி ரங்களும் கரங்களுஞ் சிந்திக்கிடந்தன; பரஸ்பரம் பக்கங்கழிற்றுக்குவதால் தொனிகிளப்பிக் கவசங்கள் சங்கடப்படுத்தின. உங்காரத்தோடும் ஹதஞ் செய்யும் கட்கஉக்கிர அடிகளினுலே கடூரமான டங்காரங்கள் நிறைந்திருந்தன, சிதறுகின்ற கட்கதாரைத்தரங்க மேகங்களானே பற்களையுடையனவாயிருந் தன, திசைமுகங்களெல்லாம்; வாள்வீச்சினுலே பகைவரைக்கலக்கி அவர் சிரத் தைக் கவரும்பொருட்டு முயன்ற கரங்களானவை அவைகள் கிடையாமை யானே ஜணஜணவென்னும் சப்தங்களையே முஷ்டியாற் கவர்தல்போலும் கவர் ந்துவந்தன. நெடுநேரம் புயங்களைத்தட்டும் சூரர்களின் தட்டுகளானே சட

சடசடவென்னும் சப்தங்கள் கொள்ளையடித்துக்கொண்டுவந்தனபோலு மிருந்தன. மிகவிரைவாக உறைகளிலிருந்து வெளிவராநின்ற கட்கங்களின் உரைதலாலுண்டாம் சரசரவென்னும் சப்தங்களோடும் ஜ்வாலைக்கணங்களின் சணசணசப்தங்களும் கோர்த்துநின்றன. சரியாநின்ற சரக்கூட்டங்களின் மார்க்க அவதியாகிய லக்ஷியதேசத்தில் வதஞ்செய்யும் ஸ்வரஸ்வரசப்தங்கள் நிறைந்திருந்தன. தகத்தக் என்னும் சப்தங்களோடும் வெட்டுண்ட கண்டத்தினின்றும்பெழுந்த பிராணங்களும் இரக்தங்களும் நிறைந்து நின்றன. வெட்டுப்பட்ட தோள்களும் சிரங்களும் கட்ககண்டங்களும் ஆகாயத்தைப்பூரித்து நின்றன. கவசங்களினின்றும் யெழுந்த அக்கினியினது ஜடைக்கொப்பான ஜ்வாலைகளினுலே கேசங்களெல்லாம் பற்றியெரிந்தன. ரணத்தென்று வெட்டிவீழும் வாளாயுதக் கூட்டங்களின் மதோன்மத்த மகிழ்ச்சிபரவச மனமுடையாராய்ப் போர்உத்சாகத்தால் பூரித்த தேகங்களையுடையவராய சூரர்களிடத்தில் ஜண ஜணவென்னும் சப்தம் நிறைந்து நின்றன. குந்தமென்னும் ஆயுதங்களினுலே குண்டிதங்களாய மத்தகஜங்களின் தரங்கம் மிகுந்த இரத்தப் பிரவாகம் பெருகிவந்தது. யானைகளின் தந்தங்கள் ஒன்றோடொன்று உராய்தலால் மிகப் பெரிய சீத்காரங்கள் பயங்கரமாயுண்டாயின. பெரியபெரிய இருப்புலக்கைகள் ஒன்றோடொன்றடிபட்டுப் பொடியாகி படபடவெனச் சப்தித்து கஷ்டத்தைக்கொடுத்துக் கொண்டிருந்தன. கிளம்பாநின்ற சூரர்களுடைய சிரத்தாமரைக் கூட்டங்கள் ஆகாயத்தை மறைத்து நின்றன. ஆகாயமானது புயங்களாகிய நாகேந்திரகளாலே அலங்கரிக்கப்பட்டிருந்தது. மேகங்களானவை தூளிகளாலே நிறையப்பெற்றிருந்தன. கேசங்களை ஒருவருக்கொருவர் கையாற் பிடித்துக்கொண்டு செய்யா நின்றபோரே அவர்களின் கட்கங்களை ஒடித்தெறிந்ததற்கு அபராதமாகியமாறு தொழிலாயிருந்தது. பரஸ்பரம் நகங்களால் செய்தபோரானது கண்களையும் காதுகளையும் மூக்குகளையும் உதடுகளையும் கழுத்துகளையும் கிள்ளியெறிந்தது. சின்னப்பட்ட ஆயுதங்களால் மகாமல்லர்களின் திரஸ்காரவடிவமான மேன்மைதங்கிய பாகுயுத்த விளையாட்டால் வெற்றிஸ்தானங்கள் பெறப்பட்டன. மதம்பிடித்த யானைகளினுலே வீழ்த்தப்பட்டு துடித்துக்கொண்டும் ஓடமுடியாமல் பூமியிற்புரண்டு கொண்டும் இருப்பவர்தம்வேகம் மிகுத்திருந்தது. ரணரணவென்றுஓடும் தேர்களின் வேகத்தால் உண்டாகும் அழிவால் உதிரநதியானது பெருகியோடிக்கொண்டிருந்தது. தூளிகளானவை பனிபோல் மூடிக்கொண்டிருந்தன. ஆயுதங்களானவை மினனல்போல் மின்னிக்கொண்டிருந்தன; கலங்காநின்ற சேனைக்கடலின் கர்ஜனையும் மேகங்களின் கர்ஜனையும் வேறுபிரிக்கமுடியாமலிருந்தன. மத்தகாசவிலாசத்தோடுங்கூடிய காலனுலே பக்ஷிக்கப்பட்டும் ஹிம்சிக்கப்பட்டும் கெடுக்கப்பட்டுமிருந்தன. கர்வம்பிடித்த பர்வதேந்திரர்கள் போன்ற நாகேந்திரர்களாலே கர்ஜிக்கப்பட்ட பெருங்கர்ஜனையால் மேகங்களும் அவற்றின் கர்ஜனைகளும் துச்சமாக்கப்பட்டன; விருக்ஷங்களிலும்

குகைகளிலும் தடங்களிலும் இருந்துகொண்டு போர்புரிப்வரை வதஞ்செய்யும்
பொருட்டு ஏவப்பட்ட சக்கிரங்களும் வேல்களும் கட்கங்களும் முசலங்களும்
மறைந்துகொண்டன, சரங்களாகிய சிலந்தி நூற்கள் இடையீடில்லாமல் அணு
சூதமாகி நானு வர்ணங்களோடுற்ற மேகலாபரணமாய்ப் போர்வடிவ பர்வ
தத்தைச் சுற்றிக் கொண்டிருந்தன. மேகங்களையாக்ரமணஞ் செய்தும் மேகங்
களிலிளைப்பாறியு மிருக்கும் மின்னல் முதலியவைகளாலே சின்னு பின்னப்பட்
டனவாய்க் கொடிகளும் ஆடைகளும் சாமரைகளும் அவதிப்பட்டன ; கவண்
களினின்றும் விடுபட்ட கற்களாலும் சக்கிரக் கூட்டங்களாலும் பறவைகளெல்
லாம் மூலைக்கு மூலை மிகுதூரமோடின. மரண வியாகூலப்படும்படி யடிபட்ட
காயங்களோடு கூடிய போர் வீரர்தம் ஆலாபனம் அதிகர்க்கரமாயிருந்தது;
குடாரங்கள் கொண்டு வலிமிகுத்தடித்தலால் பிளக்கப்பட்ட தலைக் கூட்டங்கள்
எண்ணிறந்தனவாயின, கட்க கண்டங்கள் வெகுதூரத்திலுயரக் கிளம்பி
மின்னி யாகாயத்தில் நக்ஷத்திர அழகைச் செய்து கொண்டிருந்தன; மிகுந்த
வலுவுடன் பிரயோகிக்கப்பட்ட வேற் கூட்டங்களானே பிளக்கப்பட்ட
யானைக்கூட்டங்கள் பூமியைமறைத்துக் கொண்டிருந்தன; சைன்ய வியாகூல
வேதாளப் பெண்கள் விடுத்த உலக்கைகள் நிறைந்திருந்தன. ஆகாயத்தில்
மேலு மேலுங் கிளம்பிய பெரிய பெரிய சூரர்கள் விடுத்த தோமரங்களே
தோரண மாலைகளாக விருந்தன. புசுண்டியென்னும் போராயுதத்தாற் துண்
டிக்கப்பட்ட கட்கக்கூட்டங்களின் கண்டமாலைகளே ஆகாயத்திற் கேசங்களா
யிருந்தன. குந்தசமுதாயவடிவ வேணுவனத்தில்வைத்த காடாக்கினியைப்
போல ஆகாயத்தின்கண்ணே குந்தகாந்தியானது பிரகாசித்துக் கொண்டிருந்
தது. கட்கங்களின் இருகூர்வாள்களின் மழைகளால் சந்தோஷத்தையடைந்த
அவற்றின்சுவாமிகளாகிய இராஜாக்களால் பூஜிக்கப்பட்டவர்களாக சேனையி
லுள்ளவர்களிருந்தார்கள். சூலத்தினுலே மூர்ச்சையையடைந்த நல்ல சூரர்
களை யெதிர்கொண்டழைக்க தேவமங்கையர் யெதிர்பார்த்திருந்தனர். கதை
களாகிய பனிகளினுலே வீரர்களுடைய முகங்களாகிய தாமரைகள் அவதிப்பட்
டுக்கொண்டிருந்தன. குந்தங்களினுலே அத்தியந்தம் நொறுக்கப்பட்ட கவ்
டத்தினுலே ஆய்ஆய் என்றலறிப்புரண்டு கொண்டிருந்தனர். சக்கிரங்களின்
ரம்பங்களின் சஞ்சாரத்தினுலே பரிகளும் நரர்களும் கரிகளும் துண்டிக்கப்பட்
டுக்கிடந்தன. பரசுக் கூடடங்களின் சந்தாபத்தினுலே மதம்பிடித்த யானை
கள் வீழ்ந்துகிடந்தன. தடாகம் தடாகங்களாம். மஞ்சகம் மஞ்ஜகங்களாம்.
மண்டபம் மண்டபங்களாம். லகுடம் லகுடங்களாம்; என்னும் இருரூபக்கூற்
றுல் லகுடங்களாகிய பெருந்தடிகளினுலே (ட,டகாரங்களின் வேற்றுமையின்
றுல் இருரூபக்கூற்றுல் மூலத்திலறிக.) கோக்களையடிப்பதுபோலடிப்ப அத
னைம இருரூபக்கூற்றுல் ஓடிய அநேகம் படர்கள் விருக்ஷங்களாலும் குட்டியங்களாலும்
றுல் மறைந்து ஓடிய அநேகம் படர்கள் விருக்ஷங்களாலும் குட்டியங்களாலும்
சருமங்களாலும் தம்மை மறைத்து ஒளித்தனர் கவணினின்றும் விடுபட்ட
கற்களின் வீழ்ச்சியால் கொடிகளும் தேர்மரங்களும் பொடியாயின.

கைப்பிடிகளும் மேற்கலசங்களும் இழந்த குடைகளாகிய உத்தம்சபத்மங்க
ளால் வெளுக்கப்பட் டிருந்தது. கவண் முதலியவற்றால் கலக்கத்தை யடைந்து
மிகுந்த க்ஷீணமுற்ற போதினும் அதனை அச்சேனை பொருட் படுத்தாம லிருந்
தது. குதித்துத் தாவி தேராளிகளின் உயிரைக் கவற வேணுமெனு மிச்சை
யுடையவராகச் சென்று முடியாமல் தங்கள் சிரமறுபட அம்முண்டங்கள் தலை
யற்றனவா யிருந்த போதினும் தேராளிகளை தாவிக் கட்டி யிழுத்தலால் உயி
ரோ டிருக்கு மவர்கள் வீழ்ந்த போது இஷ்டப்படி செல்லும் தேர் முதலிய
வற்றானே பக்கத்தி லிருந்தவர்கள் மாப்போ லரைக்கப் பெற்றனர்கள்.
யானைப் பாகர்களானே அங்குசங்களால் இடரடைந்த போதினும் பயப்படா
மல் போலிப்போர் செய்யும் சூரர்களால் யானைகள் விரட்டப் பட்டன. மற்
றுஞ் சில யானைகள் பரசுக் கூட்டங்கள் வந்து வீழ்தலால் தங்கள் மதமும்
நீங்கி ஓடியோடி விழுந்தன. பாசாபாசி விசேஷங்களை யுணர்ந்த வீரர்களு
டைய அதிசயமான சுற்றிச்சுற்றி ஆடும் விளையாட்டாகிய பிராணச் சூது
நிறைந் திருந்தது. கைவாளால் வயிற்றைக் கிழிப்ப ஹிருதய தாமரையா
னது கெட்டு உயிரிழந்தவர் அநேகர். திரிசூலத்தினாலே குத்தி யெடுப்ப
சில உன்மத்த சூரர்கள் சரீர உபத்திரவம் பொறுக்க முடியாமல் அச்சூலத்
தின் மேற் றுடித்துக் கொண்டிருந்தனர். இங்கு மங்கும் ஓடியோடி யெய்யும்
வில்லாளிகள் நிறைந்து நிற்பதால் எங்கும் மாதுரியமான நாணோசைகள்
நிறைந்தன. எறியீட்டி முதலிய வற்றை யுடையவராய் கேசர முடையவராய்
மிகுந்த அகங்காரத் தோடுங் கர்ஜிக்கப் பட்டவரா யிருப்பதால் நரசிம்ம
வேஷ நடர்களைப் போலும் படர்க ளிருந்தனர். வஜ்ஜிர முஷ்டி மல்லர்கள்
கசக்கும் கசக்கினாலே கசங்கிய அநேகம் வீரர்கள் துன்புற்றுக் கொண் டிருந்
தனர். பருந்து போல ஆகாய பதவியில் கட்க வர்க்கங்கள் விரிந்து பறந்
தன. அங்குசங்களினாலே சூலவீரர்களும் தேர் கரி பரிகளும் கொடிகளும்
சின்னா பின்னமாக்கப் பட்டன. கலப்பைகளின் போரில் மிக அதப்பட்டு
அவமதிப் புற்று ஆகுல மடைந்து குலாசலங்களைப் போலும் உன்னதமா
யிராநின்ற பகைவர் கூட்டங்கள் இங்கு மங்கும் சிதைந் தோடின. சில வீர
சூரர் அசையாமல் அங்கேயே நின்றனர். பெரிய கூந்தற்பனை போலு மிரா
நின்ற உன்னத புருஷர்களால் பெரிய பெரிய குந்தாலங்கள் கொண்டு தோண்
டப்பட்ட பெரும் பள்ளிகளை அவ்வன பூதலங்கள் உடைத்தா யிருந்தன. வில்
லில் நின்றும் விடுபட்ட அம்புகள் விழும் இருமடங் கிடத்தில் யுத்த சஞ்சார
சௌகரியப் பொருட்டு கைகா லொடிந்த ஜனங்களையும் சிலா வளயங்களையும்
மறைத்து வைத்தனர். அநேகம் மதம் பிடித்த பெரிய யானைகள் இருகூறு
ரம்பங்களிற் பட்டு வெட்டுண்டு துடித்தன. அப்போரின் கண்ணே நடந்த
முசலை யுத்தமானது போராகிய உரலின் கண்ணே வீரர்களாகிய அரிசிகளைப்
போட்டுத் தீட்டிக் கொண்டிருந்தது போல் விளங்கின. அஸ்திரக் கூட்டங்க
ளாலும் சங்கிலிகளாலும் வலைகளாலும் சேனைகளாகிய பக்ஷிகள் கட்டுப்பட்ட

டிருந்தன. யுத்தத்தின் கண்ணே வாள்களை விசிறிக் கொண்டு திரியும் வீரர்கள் அவர்களுடைய கட்க விசேஷங்களால் வேட்டை யாடுபவரின் அதிபதியாய யமராஜாவின் வீட்டுவாசலை யடைந்தனர். யுத்தத்தில் விழுந்த மேன்மை தங்கிய வீரர்களை யிழுத்துக் கொண்டு போகும் புலிகளும் குள்ளநரிகளும் கூட்டம் கூட்டமாயிருந்தன. பெரு நகங்களோடு கூடிய விரல்களால் இழுத்து விடப்பட்ட அம்புக் கூட்டங்களின் வேகமானவை ரணரண வென்னும் அரவங்களோடு கூடி பிளந்து சென்றன. மிளகு முதலிய வற்றால் வியஞ்சனங்கள் போலும் சகல சப்தங்களும் ஒன்று கலந்து ரஞ்சித்துக் கொண்டிருந்தன. சைனியம் வைத்த கும்பாக்கினி யானது யுத்த வீரரா லேவப்பட்ட ஆயுதங்களை தகித்துக் கொண்டிருந்தது. சைனியம் வைத்த கும்பாக்கினியானது யுத்த வீரரா லேவப்பட்ட ஆயுதங்களை தகித்துக் கோண்டிருந்தது. சைனியம் வைத்த கும்பத்திலிருக்கும் தப்த அங்காரத்தால் பார்வைகள் கெட்டன. சைனியம் வைத்த கும்பத்தி லிருக்கும் விஷவாரியால் அநேக வீரர்கள் விநாசத்தை யடைந்தனர். நாராசங்களாகிய மழைகளை அளவின்றிப் பெய்யும் நிறைந்த வீரசூர வடிவ மதத்த மேகங்களின் சம்பிரமங்களைக் கண்டு கவந்த வடிவ மயில்கள் யெழுந்தெழுந்து கூத்தாடிக் கொண்டிருந்தன. இந்தப் பிரகார மிருந்த அந்த ரணசம்பிரமமானது வேகத்தோடு சுற்றிக் கொண்டு திரியும் மதம்பிடித்த யானைகளாகிய பர்வதங்களா லலங்கரிக்கப் பட்ட கல்பாந்த காலத்தைப் போலு மிருந்தது.

33-வது முதற்பாத வர்ணனம் முற்றிற்று.

---

## 34—வது போர்காண்போர் வர்ணனம்.

இப்போது விசேஷமாக போர்காண்போர்கூற்றால் யுத்தத்தினுடைய பல வைபவங்களை விசித்திரார்த்த நிபந்தனங்களோடும் வர்ணிக்கப்படும். ஸ்ரீ வசிஷ்டபகவான்கூறல் :—ஹே இராகவ ! இந்தப்பிரகாரம் போரைவிரும்பிய அரசர்களும் மந்திரிகளும் வீரர்களும் விண்ணிலிருந்துபார்க்கும் தேவகந்தர்வாதிகளும் இவ்வாறு பேசிக்கொண்டனர்.—சூரர்களுடைய சிரங்கள் வியாபித்த விண்ணானது சஞ்சரிக்குந்தாமரைகளும் பறக்கும்பறவைகளுமே நிறைந்த தடாகம்போலுமிருந்தது. நக்ஷத்திரங்கள்நிறைந்த ஆகிருதியுடையதுபோலுமிருந்தது. இரத்தத்துளிகளின் நிறைவினாலும் சிந்தூரத்தாற் சிவந்த அருணமாருதங்களாலும் இம்மேகங்களும் இப்பானுகிரணங்களும் சந்தியாகாலத்தைச் சம்பந்தித்தனபோல விளங்குகின்றன கண்டீரோ ! ஹேபகவன் ! வைக்கோல் நிறைந்தபோர்தோற்றுகின்றதே விண்ணில் இஃதென்னே ! யென்று ஆகத்திலிலங்கும் சரக்கூட்டங்களில் வைக்கோல் மயக்கமுற்றான் ஒருதன்னகந்தையனைக் கேட்ப அதற்கவன் சொல்வதாவது, இது வைக்கோற்போரன்று தம்பி வீரர்களது சரங்கணிறைந்த மேகங்களாமிவை, புவியின்கண்ணே எவ்வளவு ரணசேனுக்கள் வீரர்கள் உதிரத்தாற்றெளிக்கப் பெறுகின்றனவோ அவ்வளவு

ஆயிரக்கணக்கான வருடங்கள் அவர்கள் சுவர்க்கத்தின்கண்ணே சுகமடைந்து வாழ்வார்கள். நீலோற்பலதலகாந்தியுற்றவிவைகட்கமென வயரவேண்டாம், இவை வீரர்களைக்காணும் சுவர்க்கலக்ஷ்மி ஜயலக்ஷ்மிகளது நயனச் சுழல்களாம், விண்ணவர்கூற்று, வீரர்களையாலிங்கனம் செய்ய வேண்டுமென்று பேராசையுடனிருக்கும் தேவாங்கனைகளின் நிதம்பத்திலிருக்கும் மேகலைகளைச் சிதலஞ்செய்யும்பொருட்டுப் புஷ்பாயுதன் புறப்பட்டான்போலும். மற்றொரு வீரனைநோக்கி மற்றொரு வீரன்கூற்று, ஹேவீர! ஒளிராநின்ற புயலதையசைந்தும் இரக்தபல்லவ உள்ளங்கைகளையுடைத்தும் மதமதர்த்த மஞ்சரிக்கண்களையடைந்தும் வண்டுகள் மொய்க்கும் சுகந்தங்களை யணைந்தும் உல்லாசமாகயிருக்கும் நந்தன உத்யானவன தேவதைகள் நீ வருவாயென்று கருதி இனிமையான சுரங்களாற் பாடுகின்றார்கள், மிகுந்த நடனஞ்செய்யவும் ஆரம்பித்து விட்டார்கள். இந்தச் சேனையானது கடினமான குடாரங்களானே ஒவ்வொரு படைத்தொகையையும் உள்ளே துளைத்துப்பிளப்பது கிராமத்திலுள்ள வனிதைதன துயிரியனைத் திருஷ்டி விலாசங்களாற்றுளைப்பதுபோலுமன்றோ இருக்கின்றது. ஹா! ஹா!! குண்டலத்தோடும் ஒளிராநின்ற எனது தந்தையினது சிரமானது அம்பினாலே சூரியனிடைய அருகிற் சூரியசம்பந்தகாலத்தில் எட்டாவது கிரகமாகிய இராகு சேர்வதுபோலச் சேர்க்கப்பட்டது. பயந்தவன் பயந்தவனைநோக்கிப் பகரல், பாதபரியந்தம் தொங்காநின்ற யந்திரச் சங்கிலியின்கண்ணே கோர்க்கப்பட்டுச் சுழலாநின்ற ஸ்தூல உபலமிரண்டையுடைத்தாகி விசித்திரதண்டத்தைச் சுழற்றிக் கொண்டு சக்கரஉபலயந்திரத்தைத் தாங்கிக் கையை மேலேதூக்கிக்கொண்டு அதிவிரைவாகத் தென்றிசைக்கோடியினின்றும் வாராநின்ற இப்போர்வீரனாகிய இயமன் சேனையின் எல்லாப் பக்கங்களையுமன்றோ சங்கரித்துக்கொண்டு வருகின்றான் ஆகலின் நாம் எங்காவது ஓடிப்போவோம் ஓடிவா ஓடிவா. இப்போதுதான் வெட்டிய தலையின் கண்டக்குழிகளில் அழுந்தாநின்ற பருந்துக்கூட்டங்களின் ஆகுலத்தைப்பார், இரணஅங்கணத்தில் போர்த்தாளங்களோடு போட்டிபோட்டுக் கவந்தங்கள் குதிக்கின்ற காட்சியைப்பார், காலப்பிரகாரபுருஷநிமித்தங்களைக் கடாவிக் கீர்வாணகண கோஷ்டிகளில் ஒருவருக்கொருவர் சம்பாஷணைகள் செய்யத்தொடங்கியதாவது, எத்தீரர்கள் எங்கிருந்து எவ்வண்ணம் எப்போது லோகாந்தரத்தையடைவர்கள்? மச்சமகர வியூகங்களோடுந் திரண்டு புரண்டு வாராநின்ற சேனைக்கூட்டம் சாகரத்தை நோக்கிச் செல்லாநின்ற நதித்திரள்போலுமன்றோ இலங்குகின்றது. அந்தோ இப்படர் மகாவிடமர்; யானைக்கதுப்புகளிலும் மேலும் வீழாநின்ற நாராசதாரைகளைப் பார்த்தால் கிரிகளின் சிருங்க சங்கங்களில் எல்லாவிருஷ்டிகளும் ஒன்றுகூடிப் பெய்வதுபோலுமன்றோ இருக்கின்றன. ஆ! ஆ!! குந்தத்தானே என்னுடைய தலைபோயிற்று எனச் சிரச்சேதமானவன் துயரமிருந்த மதியினாலே சொல்லுவதற்கிச்சித்திருப்பச் சேதப்பட்டு மேலே கிளம்பிப்போன சிரத்தால் சுவர்க்க ஆரோகண உற்சவத்தைக் கண்ட

தால் யான் ஜீவித்துக்கொண்டிருக்கின்றேனே யல்லாமல் மரிக்கவில்லை என்று மகிழ்வுடன் ஆகாயத்திற் கூறியது பக்ஷிகள் கூறியதுபோல ஜனங்கள் கேட்டார்கள். கவண்களில் வைத்தகற்களின் மாரியால் எவ்விச்சேனை நம்மனோரை யசையவிடாமற் பொழிந்து தடுத்ததோ அதனைச் சங்கிலிகளாலும் வலைகளாலும் வலுவாகக்கட்டுங்கள் உருட்டுங்கள் முன்மனைவிமுன்னேமரித்து தேவாங்கனை யாகித் திகழ்கின்றனவாய்ப் போரின்கண்ணேமரித்த தனதுநாயகன் தேவன் ஆனதுகண்டு ஆலிங்கனத்துடன் அங்கீகரிப்பதைப் பாருங்களெனத் தேவதைகள் கூறினார்கள். குந்தாயுதங்களின் சமுதாயகாந்திகள் சுவர்க்கபரியந்தம் வீரர்கள் சுவர்க்கத்திற்கு ஏறிப்போவதற்காகச் சோபானவரிசைகளாகச் செய்தாற்போலும் ஒளிர்ந்தன. எந்தபடனுடையகாமினியை சுயமாகவும் காஞ்சனங்களாலும் பிரகாசியாநின்ற கரசரணாதிகளுடைய படனது மார்பில் இறக்கக் கண்டோமோ அவ்விவள்தேவபுரந்திரியாகி நாயகனைத் தேடுபவளாகக் காண்கின்றோம் ஆச்சரியம்! மகாப்பிரளய கல்லோலங்களானே சுரசைலத்தலம் கெடுவதேபோல மிகக்கொடூரமான முஷ்டிகளோடுகூடிய படர்களானே நமது சேனையானது அந்தோ! அந்தோ!! அதமாய்விட்டதேயென அஞ்சினோர் கூறிக்கொண்டிருந்தார்கள். ஹேமூடர்காள்! மேலேசென்று போர்புரியுங்கள் நமது அரையுயிர்போன ஜனங்களைக் கொண்டு செல்லுங்கள். ஹே அதமர்களே! இவர்களைக்காலால் மிதித்துக்கொல்லாதீர்கள். கொண்டையழகில் கொந்தளித்தாடி கனவுற்சாகத்துடன் மினுங்கும் தேவசுந்தரிகூட்டத்திடையில் திவ்வியதேகத்தோடும் பக்கத்தில்வந்தடைந்தபடனைப் பாருங்கள்! மலர்ந்தபொற்றாமரை மலர்கணிறைந்த தேவநதியின்றீரத்தில் இருக்கும் நிழலாலும் தண்ணியநீராலும் மணம்வாய்ந்தமாருத்ததாலும் நெடுந்தூரத்திலிருந்துவந்த வீரனுமிவனைக்கட்டியணைத்து விநோதஞ்செய்தியெனத் தேவாங்கனையைநோக்கி இளைப்பாற்றச் சகியொருத்திசாற்றினாள். நானாவிதமான ஆயுதங்களானே அடிபட்டுக்கண்டிக்கப்பட்ட அளவறும்பருத்தபருத்த எலும்புக்கூட்டங்களும், கணகணவெனச் சப்தித்துக்கொண்டுதிரியும் கவந்திகளும் ஆகாயத்தின்கண் நக்ஷத்திரங்களைப்போல விரிந்து விளங்கிக்கொண்டிருந்தன. ஆகாயத்திற் ஜீவநதிப்பிரவாகத்தில் அம்புகளாகியவாரிகள் புரண்டுசென்றன சக்கரங்களாகிய சுழல்களும்எண்ணிறந்தனவிருந்தன கிரிகளும் ரேணுக்களாகிய சேற்றின்பான்மையை யங்கு அடைந்திருந்தன. (கற்பிதமான பிரவாகத்திற்குத் தக்கபடி கற்பிதமாகவே சேறுங்காட்டப்பட்டது) கிரகமார்க்கங்களிற் சுழலாநின்ற வீரர்களாகிய அரசர் தஞ்சிரங்களால் ஆகாயம் தாமரைத்தடாகம் போன்றிருந்தது, எவ்வாறெனின், ஆயுதங்களுடைய கிரணங்களே தாமரைக் கொடிநாளங்களாம், அவற்றின்கண்ணேயமைந்த வாட்களேதளங்கள், பிளக் குஞ்சாதனங்களாகவிருந்த சூலகுந்தம் முதலியவையோ முட்களாகவிருந்தன, கொடிகளின்றுணிகளே தாமரையின் அவயவவடிவ இலைகளாகவிருந்தன, பாணங்களாகியவண்டுகளும், மொய்த்துக்கொண்டிருந்தன, காற்றினலே

யசைந்து கொண்டிருக்கும் இப்பதுமங்களோடுகூடி அத்தடாகம் விளங்கியது. கிரியின்கண்ணே எறும்புகள் இலயமாவனபோலும் புருடன்மார்பில் அங்கனை யடங்குவதுபோலும் இறந்தயானைக்கூட்டங்களிற் பெருநரிகளும் சிறுநரிகளும் அடங்கியாடின. அபூர்வ உத்தமசௌந்தரிய நாயகனது சங்கமங் கிடைக்கு மென்று சந்தோஷப்படும்படியாக வித்தியாதர ஸ்திரீகளின் அளகத்தை யுல்லா சப்படுத்திக் கொண்டிருக்குங் காற்றானது அடித்துக்கொண்டிருந்தது; அதாவது வீட்டினின்றும் வெளிப்பட்டவருக்கு அளகத்தையுல்லாசப்படுத்துதலானே அனுகூலமாகச் சகுனங்கிடைத்தலால் மனோரதசித்தியாமென்று ஆசைப்பட்டுச்சென்றனர். ஆகாயத்தின்கண்ணே பறந்து சென்றுகொண்டிருக்கும் வெள்ளியபெருங்குடைகளாற் சந்திரத்தன்மை யொற்றப்பட்டதேபோலும், கீர்த்திமூர்த்தியாகிய இந்துவினாலே மிகத்தூய்மைவாய்ந்த பெரிய வெண்குடைத்தன்மை யாற்றப்பட்டதேபோலும் இருந்தது. படனனவன் மரணமூர்ச்சையின் ஈற்றில் ஒருகணத்தில் தனது கருமச்சிற்பியாலே யுண்டாக்கப்பட்ட அமரசரீரத்தைக் கனாப்போலும் அடைந்தனன். சூலம் வேல் வாள் சக்கரம் முதலியவற்றின்விருஷ்டிகள் அசந்தோஷ சீலமுடையனபோலும், விண்ணும்பெருங்கடலில் வியாகுலமுற்ற மச்சமகரரூபசங்குல அவயவங்கள் போலுமிருந்தன. சரங்களினாலே மேலேவீசப்பட்ட வெள்ளிய குடைகளாகிய ராஜஹம்சங்களாகிய சஞ்சிதமான பூரண இந்துபிம்பலக்ஷங்களான் வியாபிக்கப்பட்டதேபோல ஆகாயம் விளங்கிக்கொண்டிருந்தது. வாயுவினாலே நீக்கப்பட்ட ஸ்திரத்தன்மையையுடைய தரங்களினது கூட்டத்தொளியை ஆகாயத்தின்கண்ணே கிளம்பிப்பறக்கும் சாமரங்களினது கவின்வாய்ந்த கர்க்கரத்தொனிகள் செய்துகொண்டிருந்தன. கட்கங்களினாலே துண்டிக்கப்பட்ட கொடைகளும் வெண்சாமரங்களும் கொடிகளும் ஆகாசக்ஷேத்திரத்தை வியாபித்திருக்குங்கீர்த்தி சாலக்கொடிபோலுங் காணப்பட்டன. ஹே க்ஷேமமுடையோய்! மழையால் விளைந்து பயன்றரக்கூடியதாகவிருக்கும் நெற்குவியல் சலபங்களாற் கெடுவதேபோலும் ஆகாயத்தில் உலவாநின்ற சரங்களினாலே வேல் விருஷ்டியானது க்ஷயமுற்றதைப்பார்த்தி! விஸ்தாரத்தோள்களையுடைய வீரனது கட்கத்தினானே மோதப்பட்ட அதிகடினமான கவசத்தினின்றும் உண்டான இச்சடாரென்னும்சப்தமானது மிருத்தியுவினது உக்கிரமான உங்காரமாகவேயிருந்தது; கட்கமுதலிய ஆயுதங்களாகிய கற்பாந்தக்காற்றினானே சூரணஞ்செய்யப்பட்ட, தூய்மையான வெண்மையாயிருத்தலினானும் வெளியேகிளம்பிவருதலானும் தந்தங்களாகிய அருவிகளையுடைத்தான மலைகளாகியமாமதயானைகள் ஜகத்தின்க்ஷயகாலமாகிய இப்போது தூள்தூளாய் மடிந்தன. உதிரமாகிய மகாதடாகத்தில் சக்கரம் நாதன் சூதன் அசுவம் என்பவற்றுடன் சந்நத்தமாய் ஹாஹாவென்னுங் கேதத்தால் மறைபட்டகதியையுடையதாய்த் தேர்ப்பட்டணம் சேட்டித்துக்கொண்டிருக்கிறது. வீரஹஸ்தியாதிகரங்களும் கவசங்களும் உடைத்தாயிராநின்ற நரம்புத்

தாரை முதலிய விணுகுணங்களில் கட்கங்களின் வெட்டானது விழுந்துடாண் என்று சப்தித்தலானது அதிநடனம்புரியும் காளராத்திரியம்மையால் ரணவீணைவாசிப்பதுபோலுமிருந்தது. மனுடர் யானைகள் கழுதைகள் குதிரைகள் முதலியவற்றினின்றும் வழியானின்ற உதிர அருவியானது தனது தூளிகளோடு கூடி யடிக்குங் காற்றினலே திசைகளைச் செந்நிறஞ் செய்வதைக் காண்டி! மேகத்தின்கண்ணே மின்னலானது விளங்குவதே போலும் ஆகாயத்தில் மிகக்கறுத்த கேசங்கட்குச் சமானமாயிராநின்ற மேகமண்டலத்திற் சஸ்திர வொளியும் சங்களாகிய அரும்புகள் நிறைந்தமாலையும் விளங்கிற்று. அளவில்லாத உதிரப்பிரவாகத்தால் நனைக்கப்பெற்று வித்வம்சமான அவனிதலங்களானும் ஆயுதங்களானும் ஆகுலத்தையடைந்திராநின்ற புவனமானது மிகுந்த சுவாலையோடு கூடியிராநின்ற அக்கினிலோகம்போலவும், அக்கினிச் சுவாலையோடு கூடித்தகிக்கப்படும் நகராதிகள்சோகித்து ஆகுமெப்படுவது போலவும் தோற்றிக்கொண்டிருந்தது. அக்கினியந்திரம் வேல் சூலம் வாள் உலக்கை பாலாமுதலியவற்றின் விருஷ்டிகள், பரஸ்பரம் சேதபேதங்கள் செய்துகொண்டு கரங்களினின்றும் கூட்டம் கூட்டமாய் விழுவனவாய்ச் சஞ்சலப்படுத்த முடியாதவர்களாயிருக்கும் அநேகருள் ஒரு சூரதமன்றனது இலாகவ அதியத்தாற் புகுந்தடித்தலின் இராக்கதர் தம்மாயையோடும் உவமிக்கத்தக்க விதமாகச் சூரர்கள் போர்புரிவதும். குரோதத்தோடும் பார்க்கும் வீரர்மதியும் ஆவேசமும்பொருந்தியதும், ஆகியபோரானது, விநாசஅனுகூல சேதபேதர்திசஞ்சலனசூன்யங்களாய கனப்பொருள்களில் ஒருநனுமாத்திரம் புகுந்தமாத்திரத்தில் பாதமாகி அவையாவும் அரக்கர்மாயையோடும் உவமிக்கத்தக்க பொய்ச்சேஷ்டையோடுற்றதும், ஆவேசத்தால் நோக்கும் பிரஞ்ஞையோடும் சயஞ்சோதியாய ஆத்மப்பிரஞ்ஞையோடும் உற்றகனுப்போலும் இருக்கின்றது; இத்நகைய விசித்திரமாயென்முன்ரேற்றும் இப்போரையான் ஒருகனுப்போலவேகாண்கின்றேன். நிறந்தரம் வேறுசப்தமேயில்லாமல் அன்னியோன்னியம் கர்ச்சித்தடித்துக்கொண்டிருத்தலிற் கிளம்பும்போர்ஜ்ஜன ஜணங்களால் காயமும் கலக்கமுமடைந்து மகிழ்ந்த இரணபைரவர் கானஞ்செய்வதுபோலுமிருந்தது. பரஸ்பரம் போர்புரியும் கட்கமுதலிய உக்கிரமான ஆயுதவர்க்கங்களெல்லாம் மிகச்சூரணித்துப்பூரணித்த இரணக்கடல் தூள்தூளான கொடைமுதலியதரங்கங்கணிறைந்துமணல்மயமாகவேயிருந்தது. அதிவேகமாக மகிழ்வுடன் மிகுந்த மாதுரியமானரசங்களால் நாற்பக்கங்களிலும்பரவும் வாத்தியவிசேடங்களின் பிரதித்தொனிகளானே திக்குப்பாலகர் தம்லோகங்களையெல்லாம் நிறைத்துந், தூரிய அரவங்களோடு மேற்கிளம்புமுயல்வாற் பெருங்கர்ச்சனை செய்தாபிராநின்ற இங்ஙன்காணப்பட்ட போர்வடிவ போர்க்கருகிலுள்ள பர்வதமானது யுகாந்தத்தில் ஆகாயத்தில் அதியுக்கிரமான போர்க்கோரமாயுலவும் இருவகைச்சேனைகளாகிய பக்ஷங்களுடன் வலுமிகுந்த ஆற்றலோடும் பரஸ்பரம் பிரதிகூலசலனத்தோடும் மேற்கிளம்புவதில் முயன்றதுபோற்காணப்பட்டது.

மிகுந்த ஆற்றலுடையனவாயினும் கடினமான கவசங்களில் பயனுற்றனவாய தஞ்சரங்களை நோக்கி மிகச்சோகமுற்ற வீரர்கள் கூறுவதாவது:—ஹாஹா! மிகவுங்கடினமாயிராநின்ற கவசங்களைப் பிளவாமலே அவற்றாலடியுண்டு மேற்கிளம்பி வெளிப்பட்ட மின்னற்சடைகட்கு ஒப்பாகிய சுவாலைகளானே மிகத்தபிக்கப்பட்ட நாராசங்கள் சமீபத்திலிருக்கும் பர்வதச்சிலைக் கணங்களைப் பிளந்துகொண்டு திரிகின்றன இஃதென்னே! விரும்பியகாரியத்திலேவப்பட்ட இவை அக்காரியத்தைச் செய்யாமல் விரும்பாத பெருங்காரியத்தைச் செய்த போதினும் என்பயன் சீச்சீ! இவை கிரேங்காரஞ் செய்யும் நாண்களினின் றும் போர்புரிய இனிதேகிச்செய்தது இதுதானோ! இச்சராக்கினிகள் பயனற் றனவேயாமன்றோ! போர்க்கிளைத்தேனொருவன் அவனைப் போன்றானொருவனை நோக்கிக்கூறுவதாவது:—ஹே இளைப்பினாலே போர்செய்யுமிச்சையற்றநண்ப! ஒருமகா இதமானவசனங் கூறுகின்றேன் கேட்குதி! அக்கினிச்சுவாலைகளோடு கூடியெரியாநின்ற அம்புகள் நமது அங்கங்களாகிய கைகால்களைப் பங்கஞ் செய்வதன்பொருட்டு நம்பால் வருவதற்கு முன்னரே அதிவிரைவாக நம்மா லோட்க்கூடியவரை இங்கிருந்து ஓடிவிடுவோம்வா! இப்போது நான்காவது யாமமாக இருக்கின்றது யமசம்பந்தி தினமாகவுமிருக்கின்றது, யமன் நியம மாக உண்ணும்தினம்போல ஜனக்ஷயப்பொருட்டுங் காணப்படுகின்றது ஆகை யாற் சின்னமான கவசமுதலியவற்றே சாச்சிரும் என்னும் சப்தத்தோடும் அங்கபங்க மாவதற்குமுன் ஓடுவதே நலம்.

34-வது போர்காண்போர் வருணனம் முற்றிற்று.

---

## 35-வது இரண வருணனம்.

இப்போது, சமுத்ரம் வனம் கற்பாந்தம் என நானூருபகமாக விஸ்தார மாய்ச் சதுரங்கங்கள் செய்யும் சங்கிராமத்தை அதிவிரிவாக வருணிப்பாம்:— அப்போர்க்கடலானது, மேற்கிளம்புவதில் மிகமுயற்சியுடைய துரங்கங்களாகிய தரங்கங்களையுடைத்தாகி யிருந்தது மேலும் உன்மத்தனானவன் இஷ்டப்படி மேற்கிளம்பி யாடுதல் போல ஆடிக்கொண்டிருந்தது. குடைநுரைக் கூட்டங் களில் விசிராந்தியுற்ற வெள்ளிய அம்புகளாகிய அற்பமீன்குஞ்சுகள் கூட்ட மாகத் திகழப்பெற்றதாயும், குதிரைப்படை முதலியவை மிகுந்த வுல்லாசத் தோடுங் குலவும்கல்லோல குலகோட்டரமாயுற்றதாயு மிருந்தது, நானுயுதநதி கள்நண்ணப்பட்ட சைனியாவர்த்தச் சுழல்கையோடுற்றிருந்தது, அப்போரில் மதத்தயானைக்கூட்டங்கள், மூலத்தோடுஞ் சஞ்சலப்பட்ட குலாசலங்களாகிய மந்தரகிரிமுதலியன பலாபலபரீக்ஷையின் பொருட்டுப் போர்செய்வன போனு மிலங்கிக்கொண்டிருந்தன, பிரகாசியாநின்ற சக்ரசதபரிப்பிரமதத்தால் அவற்றாற் சேதிக்கப்பட்ட சிரதிருணங்கள் சுழன்றுகொண்டிருந்தன, தூளிக ளாகிய மேகங்கள் சுழலாநின்ற கட்கப்பிரபைநீரைக் குடித்துக்கொண்டிருந் தன. மகரவியூக விஸ்தாரத்துடன் வெற்றிதோல்வியுற்ற படர்களாகிய மேகங்

களின் மகாகுடுகுடு எனச்சுழலும் பேரிடிச்சப்தங்கள் மேகமண்டலங் துளைத்துக்கொண்டும் மலைக்குகைகளில் பிரதித்தொனி செய்துகொண்டு மிருந்தன. மீனங்களின் வியூகங்களாற் பிரசவிக்கப்பட்ட காசபீஜக் கூட்டம்போலும் வெளுத்த அண்டங்களாகிய கடுகுகள் இருப்பனபோல, இறந்தவர்களினுடல்களின் சமுதாயங்களைப் பிளந்து கொண்டேகிய சரங்கள் க்ஷேத்திரங்களிற் பலிதமாய விரைக்கூட்டங்களின் பிளவின்சிரத்திருப்பணவாய கடுகுகள் போன்றனவாயிருந்தன, பெரியபெரிய கட்க கல்லோலங்களானே அறுக்கப்பட்டனவாகிக் கொடிகளாகிய கல்லோல மண்டலங்கள் தூள்தூளாகப் பறந்தன. சஸ்திரவாரியினு லாக்கப்பட்ட மேகசமான அஸ்திரமான ஆவர்த்தங்களேயாய குண்டலங்களிலங்கின, மிகுந்த குரோதத்தினாலே கனசஞ்சாரஞ் செய்யுஞ் சேனைகளே பெரும்பெரும் திமிகளாகவும் திமிங்கிலங்களாகவுமிருந்தன. இரும்பின் சாரமயமாகச் செய்யப்பட்ட கவசங்களைத் தரித்துக்கொண் டிராநின்ற சேனைகளாகிய நீர்நிறைந்து பயங்கரமாயிருந்தது அப்போர்க்கடல், மேலும் கடலானது சைனியங்களைப்பக்ஷிக்கும் அரக்கர்களையே பூஷணங்களாக உடைத்தா யிருப்பதேபோல, நீர்போற் கொந்தளிக்கும் தலையிலாவுடல்களின் சுழல்ரேகைகளிடையில் சைனியாதிகளின் பூஷணங்களெல்லாம் நிறையப்பெற்றிருந்தது. திசைகள் சரசீகர இமங்களோடு கூடி அந்தகாரமயமாக இருந்தன, நிர்க்கோஷத்தினானே வற்றடித்தனபோலும் எச்சப்தங்களும் கேட்கப்படாமல் ஒரேகனமான கும்கும்தொனி தொனித்துக்கொண்டிருந்தது, சிரக்கண்டங்களின் சீகரங்கள் வீழ்ந்தெழுந்து விளையாடிக்கொண்டிருந்தன, ஆவர்த்தங்களாகிய சக்கரவியூகங்களில் வீரர்களாகிய காஷ்டங்கள் பெரிதுஞ் சுழன்று கொண்டிருந்தன ; கேட்கமுடியாதடாங்காரத்தோடுகூடிய கோதண்டங்களாகிய வளைந்தசர்ப்பங்களை வெட்டியெறிவதில்வீரர்கள் பாய்ந்து கொண்டிருந்தனர். கீழுலகிற்கும் மேலுலகிற்குங் கணக்கே யிடமுடியாதபடி நிறைந்தெழுந்த மிகத்தைரியச் சேனைகளாகிய திரைகளை யுடைத்தாயிருந்தது அப்போர்க்கடல், மேலும் போக்கு வரவோடு கூடியதிற் றற்பரமான அளவற்ற குடைகளும் கொடிகளும் ஆகிய நுரைநிறையப்பெற்றிருந்தது, தேர்களாகிய விருக்ஷங்களை யிழுத்தடித்துக்கொண்டு வரும்வேகத்தோடு கூடிய உதிரநதிகளால் நிறையப்பெற்றிருந்தது. ஆனைகளின் ஆகிருதிகட்குச் சமானமான பெரும்பெரும் இரத்தக்குமிழிகள் அளவிலவாய்த் தோற்றப்பெற்றிருந்தது, அங்குள்ள சைனியப்பிரவாகத்தின்கண்ணே குதிரை யானைமுதலிய ஜலஜந்துக்கள் சுற்றிக்கொண்டுதிரிந்தன. அச்சங்கிராமமானது ஆகாசக் கிராமமே போலும் (கந்தர்வநகரம்) யாவருக்கும் ஆச்சரியத்தைக் கொடுத்துக்கொண்டிருந்தது. மேலும் அச்சமரம் கற்பாந்தம் போலும் காணப்பட்டது, பூமியெல்லாங் கிடுகிடுவென நடுங்கியது அசலங்களெல்லாம் மகாசஞ்சலத்தையடைந்தது கண்டு ஜனங்கள் சஞ்சலப்பட்டனர், தரங்கங்களைப் போலப் பறவைகள் அலைந்தன, கரிக்கூட்டங்கள் கரைகளைப்போல் விழுந்துகிடந்தன, பயமுற்ற

பயங்காளிமிருக அநீகங்கள் குருகுருவெனச் சப்தஞ்செய்து கொண்டிருந்தன; இங்குமங்கு மேகாநின்ற சரக்கூட்டங்களாகிய சலபங்கள் சேனைகளை நூறு நூறாய்க் கூறுகூறாய்ச் செய்தன, துரங்கங்களாகிய சரபங்கள் எங்குஞ்சுற்றின, எவ்வனத்திலும் எவ்விடத்திலும் சரக்கூட்டங்களே நிறைந்திருந்தன, எங்கும் வண்டுகள் ரீங்காரஞ் செய்துகொண்டிருந்தன, மற்றைய வாத்திய விசேடங் களும் மிகமிகக்கோஷிக்கப்பட்டன. நெடுநேரம்வரை சைனியங்களோடுகூடிய கஜாதிகளாகிய மேகங்கள் வீரர்களாகிய சிங்கங்களால் உருண்டுகொண்டிருந் தன, தூளிகளாகிய மேகபடலங்கள் எங்கும்படர்ந்தன, சைனியங்களாகிய பாறைகளையுடைய பர்வதங்கள் சின்னபின்னமாயின, மகாரதங்களின் அங்கங் களெல்லாம் தெறித்துவீழ்ந்தன, கட்கங்களும் மிருகவிசேடங்களும் கண்டங் கண்டங்களாயின. பாதங்களே புஷ்பங்களாக வீழ்ந்துகொண்டிருந்தன, பதாகைகளும் குடைகளும் மேங்களைப்போலுந் திரிந்தன, இரக்த நதிப்பிரவாக மானது ஓடிக்கொண்டிருந்தது அதன்கண்ணே அலறி வீழ்ந்தன மதயானைகள்; இவ்வண்ணம் கொடிகளும் விதானங்களும் கொடைகளும்பிறவும் அடியோ டழிந்து பட்டணங்களுந் தேர்களும் பாழாகி உலகங்களையெல்லாம் விழுங்கும் ஆகுலமிகுத்த போர்க்கற்பாந்தமானது பொங்கிவழிந்தது. அளவிறந்த கட்கக் கூட்டங்கள் வீழ்ந்துகிடந்தவை அநேகசூரியர்கள் விளங்கிக்கொண் டிருந் தனபோலிருந்தது கடினமான பிராணசந்தாபத்தினாலே எல்லாருடைய மனங் களும் பெருந்தாபத்தை யடைந்தன; கோதண்டங்களாகிய புஷ்கராவர்த்த மென்னும் பிரளயமேகங்கள் சரதாரைகளைப்பெய்து நிரந்தரம் உலவின, கட் கங்களினது சிலைகளிற்றீட்டிய தாரைகள் மின்னிக்கொண்டு நிரந்தரம் விண் ணின்கண் வியாபித்தன, நிறைந்து பொங்கிவழியாநின்ற இரக்கசமுத்திரத்தின் கண்ணே யானைக்குலபர்வதங்கள் வீழ்ந்து அவதிப்பட்டன, ஆகாயத்தின் கண்ணே பரந்துவீழ்பவற்றோடுங் கலந்துநிற்பதனானே தூலீகரித்த இரக்தபிந் துக்களே நக்ஷத்திரங்கள்போலு மிலங்கின சக்கரபரம்பரை நதிகளினாலே அம்பு தங்களிருக்குமிடங்களில்சுழல்கையுண்டாகவே ஆவர்த்தங்களேநிறைந்து நபோ நாடிகளும் அம்புதங்களு மிருந்தன; அஸ்திரகற்பாக்கினியினாலே மிகவுந்தத்த மாகிய சைனியமானது பரலோக ஆக்கிரமணஞ் செய்துகொண்டிருந்தது. கட்கமழைகளாலும் இடிகளாலும் எப்பூதலங்களும் எம்மலைகளும் மூடப்பட் டுப் பளபளவென்றிருந்தன கஜராஜாக்களாகிய பர்வதக் கூட்டங்களின் பாதங் களிற் பட்டு மிதியுண்டு ஜனக்கூட்டங்கள் மாவுருண்டைபோலாயினர்; சரதா ரைகளை விடாதுநிறையப்பெய்யும் சைனிமாகிய மேகங்களானே மண்ணுலகும் விண்ணுலகும் மூடப்பட்டிருந்தன, பெருஞ்சேனையாகிய மகாசமுத்திரமானது கலங்கி இங்குமங்கு மெங்குமோதியலைந்து பொங்கிவழிந்தோடியது. பெருங் காற்றினாலே உருட்டப்பட்ட ஜலடுண்டுபசர்ப்பங்களினாலே பர்வதங்கள் வியாபிக்கப்பட்டன போலுமிருந்தன, அதாவது அசலங்கள் சமுத்திர அந் தர்க்கதமாயின, அன்னியோன்னியம் வெட்டுப்பட்டுக் கட்டப்பட்ட சஸ்

திரங்களால் சஸ்திரமழைபெய்த பெருக்கமானது பிரளய உபத்திரவத்தை யுண்டாக்குவது போலிருந்தது. சூலம், வாள், சக்கரம், அம்புவேல், தண்டம், அக்கினியந்திரம் பாலாமுதலிய தேஜோமயமான கோடானு கோடி ஆயுதங்கள் அன்னியோன்னியம் பிளத்தலினாலே தொனிசெய்துகொண்டு பத்துத்திசைகளினுஞ் சுற்றுவனவாய்க் கற்பாந்தக்காற்றினனே சுழல்வனவாய சிலைவிருக்ஷ சஸ்திராதி பதார்த்தங்களின் விளையாட்டைச் செய்துகொண்டிருந்தன:

35-வது போர் வருணனம் முற்றிற்று.

---

## 36—வது ஜனபத வருணனம்.

இப்போது சமாயுத துவந்துவப்போரும் சகாயங்களாகக் கிழக்குமுதலிய திசைகளிலிருக்கும் ஜனங்கள் தங்கள் அரசர்களோடு வந்து சேர்தலும் வருணிக்கப்படும் மேகமண்டலம்வரை குவிந்திருந்த வரிசையான மத்தமாதங்கங்களின் சவசைலங்களில் இராநின்ற சரராசிகள் கொம்பின்உவமைகளைச் செய்துகொண்டிருந்தன, பயங்காளிகளெல்லாம் பங்கப்பட்டுப் பத்துத்திசைகளிலும் பயந்தோடினார்கள், இரக்த சமுத்திரத்தின் கண்ணே இயக்கர் அரக்கர் பேய்முதலியவை விளையாடிக்கொண்டு திரிந்தன. பெருமையுடையவரும் தருமநிஷ்டை யுடையவரும், நற்சரித்திரமுடையவரும், தேஜசும் பலமுடையவரும், தூய்மையரும், நற்குலத்தவரும், பதுமம் வாசனைபரிமளிப்பதே போலும் தங்கீர்த்தியாகிய நன்மணத்தானே பத்துத்திசைகளையும் பரிமளிக்கச் செய்பவரும், வீரர்களும், போர்க்குப்பின்வாங்காதவரும், புறங்கொடாதவரும், மேகங்களைப்போலக் கர்ச்சனை செய்பவரும் ஆகிய சூரர்கட்கு, அன்னியோன்னியம் போரினால் விழுங்குவீதில் மிகவுற்சாகமுளதாகித் துவந்துவப் போரானது உண்டாயிற்று, உண்டாகவே நதியினது பிரவாகம், ஒன்றோடொன்று சேர்வதேபோல வீரர்கள் நெருங்கிச் சேர்ந்தனர்கள். பஞ்சரம் பஞ்சரத்தோடுபோலும், யானைக்கூட்டம் யானைக்கூட்டத்தோடும், வனவாசியர்வனவாசியரோடும் கிரிகிரியோடுபோலும் வலுதிற்பொருதினர்கள்; சமுத்திரத்தின்கண்ணே தரங்கக்கூட்டம் மிகுகோஷத்தோடும் தரங்கக்கூட்டத்தோடும் பொருதுவதேபோல அசுவக்கூட்டம் அசுவக்கூட்டத்தோடும் மிகக்கனைத்து வேகத்தோடும் பொருதிற்று. காற்றினாலே யசையாநின்ற மூங்கிற்கூட்டம் காற்றினாலாடும் மூங்கிற்கூட்டத்தைத்தாக்குவதேபோலும், சமாயுதங்களையேந்திக்கொண்டிருக்கும் நரருடைய சைனியம் நரருடையசைனியத்தோடு போர்புரிந்தது. தெய்வத்தன்மையோடுகூடிப் பறந்துகொண்டிருக்கும் அசுரசம்பந்தியாய நகரம்நகரத்தோடுபோலும் தேர்க்கூட்டம்தேர்க்கூட்டத்தோடு பொருதி பரஸ்பரம் தமது ஆகிருதிகளையே நொருக்கிக்கொண்டிருந்தன. விற்றரித்தகொடியுடையோர் ஆகாயமறையுமாறு பெய்யாநின்ற மிகு சரமாரியா சம்பாதிக்கப்பட்டயுத்தம் புதிதானமேகம்போலும் போர்புரிந்தனர். விடம

மானஆயுதப்போர்களில் அமர்புரியும்பயங்காளிகள்பயந்து ஊக்கத்தோடுந் தப்பியோடும்போது போர்க்கற்பாக்கினியின்கண்ணே பட்டுக்கொண்டவதி யுற்றனர். சக்கரந்தரித்தவர் சக்கரந்தரித்தவரோடும் விற்றரித்தவர் விற்றரித் தவரோடும், வாள்தரித்த போர்வீரர் வாள்தரித்த போர்வீரரோடும், அக்கினி யந்திரம்தரித்தவீரர் அக்கினியந்திரம்தரித்தவீரரோடும் போர்நெருங்கிப் புரிந் தனர். உலக்கைதாங்கினர் உலக்கைதாங்கினவரோடும், ஈட்டிதாங்கினர் ஈட்டி தாங்கினவரோடும், அசிதாங்கினோர் அசிதாங்கினவரோடும், பாலாத்தரித்தவர் பாலத்தரித்தவரோடும், வேலைத்தாங்கினர் வேலைத்தாங்கினரோடும், சூலந் தாங்கினர் சூலந்தாங்கினரோடும், சம்மட்டிபிடித்தவர் சம்மட்டிபிடித்தவ ரோடும், தண்டாயுதபாணிகள் தண்டாயுதபாணிகளோடும் போர்புரிந்தனர். பாலாவீசத்தேர்ந்தவர் அதைத்தரித்தவரை வீசிப் பாலாக்களைக்கலக்கினர், பரசுவித்தையிற்தேர்ந்தவர் அதைத்தரித்தவரைச் சாடி அவர்பரசுகளையும் அவ ரையும் அவதிப்படுத்தினர், மூங்கிற்றண்டம் சுழற்றத்தெரிந்தவர் அதுசுழற்று வருடன் எதிர்த்துமுறுக்கியடித்தனர், கவண்வீசத்தெரிந்தவர் கல்லுருண்டை தெரிக்கத் தெரிந்தவர் அத்தகையவருடன் கடும்போர்புரிந்தனர். பாசந்தரித் தவர் பாசந்தரித்தசேனைகளோடும், சல்லியந்தரித்தவர் சல்லியந்தரித்தவரோ டும், கத்திக்கரத்தர் கத்திக்கரத்தரோடும், பிந்திபாலாத்தரித்தவர் பிந்திபாலாத் தரித்தவரோடும் போர்புரிந்தனர்; வஜ்ஜிரந்தரித்தவர் வஜ்ஜிரந்தரித்தவரோ டும், குத்துச்சண்டைசெய்பவர் அத்தகையரோடும் இருப்புமுஷ்டிபந்தமல்லர் அத்தகையரோடும், அங்குசந்தரித்தவர் அங்குசந்தரித்தவரோடும், கலப்பைப் போர்வலர் கலப்பையாயுதம்தரித்தவரோடும், திரிசூலந்தரித்தவர் திரிசூலந் தரித்தவரோடும் பெரும்போர்புரிந்தனர். கவசஜாதிபேதங்களாகிய சங்கிலி ஜாலங்களோடுகூடியவர்கள் அத்தகையவண்டினுடம்புபோலக் கறுத்துமினு மினுத்திருக்கும் சங்கிலிஜாலர்களோடு கற்பாந்தத்திற் பொங்காநின்ற சாகரத் தின் அலைக்கூட்டம்போலும் மோதிக்கொண்டு யுத்தஞ்செய்தார்கள். ஆகாய ஆர்ணவமானது தளங்களைப்போற் சுழலும் சக்கரதளங்களாகிய ஆவர்த்தங் களையுடைத்தாயும், சரசீகரமாருதத்தை யுடைத்தாயும், கட்கங்களாகிய மகரங் கள்சுழல்வதாயும், விள்ங்கியது. ஆயுதங்களாகிய விரிந்ததரங்காதிகளுடன் கூடியும் குலஜலசரங்களோடுகூடியும் பூமிக்கும் சொர்க்கத்திற்கும் மத்திய பாகமாகிய சமுத்திரமானது இருப்பதால் ஜீவிததேவதைகளாலே தாண்ட முடியாததாயிருந்தது. வித்தை புத்தி பலம் சௌரியம் அஸ்திரங்கள் அசு வங்கள் தேர்வில் எனப்பிரசித்தமான கெடாததிவ்விய இவ்வெட்டும் உடைய போர்வீரஜனப்படையானது முற்கூறியபிரகாரம் துவந்துவமாயொன்று சேர்ந் துகலந்து இருபக்ஷமாக இருசைனியங்ளும் பாதிபாதியாக மிகக்கோபித்து நின்றன, பூபாலர்களாகிய சிந்துராஜவிதூரதர்கட்குச் சகாயமாக இருபக்கமு மிருந்தன. இயக்கர் அரக்கர் பிசாசர் அசுரர் என்பவர் ஒருபுறமாயும், தேவர் கந்தருவர் கின்னரர்வித்தியாதரர் ஒருபுறமாயும், எனத்திவ்விய எண்மர்

வாய்ந்தஜன அதிகமானது, வரும்வெற்றி தோல்விகளையனுசரித்து இருபக்ஷ மாகச் சைனியத்தின்பாதிபாதியாய்க் கோபித்து அவ்விரண்டு அரசர்களின் அனுரூப அதிர்ஷ்டசாலியாகநின்று வாழ்த்திற்று. இப்போது பதுமசிந்து ராஜர்களின் சகாயவடிவினராக வந்தஜனங்கள், கிழக்கு முதலியதிசையின் பேதங்களாலும் அவ்வத்தேசபேதங்களாலும் முறையாக வருணிக்கப்படுகின்றார்கள்:—மத்தியதேசாதிசங்கையில் லீலாநாதனாகிய பதுமனதுபக்ஷத்தில் கிழக்கு முதலிய திசைகளினின்றுவந்து கூடியிருக்கும் இச்சனங்களின் ஆஸ்பதங்களைக்கூற ஹேராகவ கேட்பாயாக; கோசலர் காசியர், மாகதர், மிதிலர், உற்கலர்,மேகலர், கர்க்கரர், முத்திரர், சங்கிராமசௌண்டகர்,முக்கியர், இமர், ருத்திரமுக்கியர், தாமிரலிப்தர், பிராக்குஜோதிடர், வாஜிமுகர், அம்பட்டர், புருஷாதகர், வர்ணகோட்டர், சவிசுவோத்திரர், ஆமமீனாசனர், வியாக்கிரவக்திரர், கிராதர் சௌவீரர், ஏகபாதகர், எனக் கிழக்குத்தேயங்களிலுள்ளவர் 24 வகை ஆம். (மார்க்கண்டேயபுராணாதிகளிற் கூறப்பட்ட தேயங்கட்கும் ஈண்டுள்ளவைகட்கும் சிலநாமவிலக்ஷணம்வித்தியாச மிருந்தபோதினும், இது வேறு பிரஹ்மாண்டமானபடியினாலே யாதொருதோஷமும் உண்டாகாதென்க.) மாலியவான்சைலர், சிபிரபர்வதர், நீலகிரியர் விருஷலகிரியர், துவஜபர்வதர், பதுமபர்வதர், உதயகராசலர், எனமலையாளிகள் பூர்வத்தில் 7 வகை ஆம். விந்தியாதிவாசியர், சேதயர், வற்சர், தசார்ணர், அங்கர், வங்கர், உபவங்கர், கலிங்கர், புரண்டரர், ஜடரர், விதர்ப்பர், மேகலர், சபரானனவர்ணர், கர்ணர், திரிபுரபூரகர், முட்காடர் தனித்தீபகோமளர், கர்ணாந்திரர், சௌழிகர், சார்மாண்வதர், காககர், ஹேமகுட்டியர், மீசைக்காரர், பலிக்கிரீவர், மகாக்கிரீவர், கிஷ்கிந்தையர், தென்னையர், என்னும் 27 தேயத்தவரும், கிழக்கிற்கும்தெற்கிற்கும் இடையிலுள்ளவர் ஆவர். விந்தியர், குசுமாபீடர், மகேந்திரர், தர்த்துரர், மலயர், சூரியவானர், கணர், இராஜ்ஜியசமிருத்தகர், அவந்தியர், சாம்பவதியர், தசபூரர், கதாசக்கரர், ரேஷிகர், துரகச்சபர், வனவாசர், உபகிரியர், பத்திரகிரியர், நாகரர், தண்டகர், கணராஷ்டிரர், அனுராஷ்டிரர், சாகர், சைவர், இருஷ்யமூகர், கர்க்கோடர், வனபிம்பிலர், பம்பைநிவாசிரியர், கைரகர், கரக்கவீரகர், சுவேரிகர், யாசிகர், தருமபட்டணபஞ்சிகர், காசிகர் திருஷ்ணகல்லூலர், யாதாஸ்தர், தாமிரபர்ணகர், கோநர்த்தர், கணகர், தீனபட்டணநாமகர், தாம்ரீகர், தம்பராகீர்ணர் சககாரர், ஏணகர், வைதுண்டகர், தும்பவனர், லாஜினர், தீபகர்ணிகர், கர்ணிகாபர், சிபயர், கௌங்கணர், சித்திரகூடகர், கர்ணாடர், மண்டர், வடகர், மகாகடகிகர், ஆந்தரர், கோலகிரயர், அவந்திகர், விசேரிகர், சண்டாயத்தர், தேவநகர், கிரவுஞ்சர், வாகர் சிலாக்ஷரர், உதபர், நந்தமர்த்தனர், மலயப்பெயரியர், சித்திரகூடசிகரர், இலங்கைரக்ஷோகணர் எனத் தெற்கில் மலையர் 6. தேயர் 63. மகாராஜ்யர், சுராஷ்டிரகர், சிந்துவாழ்வார், சௌவீரர், சூத்ராக்கியர், ஆபீரர், திராவிடர்,கேகடர்,சித்தகண்டாக்கியர், காலிருகர், ஹேமகிரியர், ரைவதகர், ஐயக்ச்சர், மயவரர், யவனர்,

பாஹ்லீகர், மார்க்கணுவந்தர், தூமிரர், தூம்பகர், லாஜகணர், ஈண்டுக்கிரிவாசியர், அப்திதோகர், நியுதர், எனத்தென்மேற்கில், பர்வதர் 4. தேயத்தவர் 19. இவர்யாவருமே லீலாநாயகன்றுணேவராவர். இனி எதிரிகக்ஷியிற் சேர்ந்தவரைக் கூறக்கேட்டி! பெருமலையராகியமணிமானென்னும் சைலேந்திரர், குரார்ப்பணகிரியர், வனர், அர்க்ககர், மேகபவர், சக்கரவானஸ்தர், ஜனர், காசபிராஹ்மணசயஅந்தகராயபஞ்சனர், பாரக்ஷர், பாரகர், சாந்திகர், சைப்பியர், ரமரகர், யாச்சர், குருத்வர், நியமர், ஹைஹயர், சுஹ்யகாயர், தாஜிகர், ஹூணகர், தக்ஷிணோத்தரகத தேசங்களின் பார்சுவத்திற்கர்க்கர், கிரிபர்ணர், வமர், இவர் தருமமரியாதையைத் தாண்டிய வர்ணர் மிலேச்சஜாதியர், அதனினின்றும் தேயமற்ற பூமி இருநூறு யோஜனையாம் அதன்பின் மகேந்திரசிகரியர், முத்துமணிமயஅவனியர், மகிதரசதங்களோடுகூடிய அசுவகிரியர், அதன்பின் பீமமகார்ணவக்கரையில் பாரியாத்ரகிரியர், எனமேற்கில்மகாவீரர். கிரியர் 9. நாட்டார் 19. கிரிமதியர், வேணுபதியர், நித்தியஉற்சவ நரபதியர், பல்குணகர், மாண்டவ்யர், அநேகநேத்ரகர், புருகுந்தர், பாரர், பானுமண்டலபாவனர், வன்மிலர், நலினர், தீர்க்ககேசஅங்கபாகுவினை யுடைத்தாயதீர்க்கர், ரங்கர், ஸ்தனிகர், அன்னியகுருகர், லுகர், ஸ்திரீராஷ்டிரர், அதுலர், கோவிருஷக்குன்று போஜனர், எனவடமேற்கில் 19 நாடுடையர். ஹிமவானர் கிரவுஞ்சர், மதுமானர், கைலாசர், வசுமானர், மேரிகிரியர், தாழ்வரையில் மத்ராவர்ரேவ யௌதேயர், மாலவர், சூரசேனிகர், ராஜன்யர், அர்ஜுனர், தனயர், திரிகர்த்தர், ஏகபாதக்ஷுத்திரர், மபலர், சுவஸ்தவாசியர், அபலர், பிரகலர் சாகர், க்ஷேமதூர்த்தயர், தசதர், நாகர், வசன்யர், தண்டர், ஹன்யசனர், தானதர், சரகர், வாடதானர், அந்தரத்தீபர், காந்தாரர், வந்திசுரர், தக்ஷசிலர் வீலவகோதனியர், புஷ்கராவர்த்த தேசத்தின் யசோவதிமகியர், நாபிமதியர், திக்ஷர், காலவரர், காககர், நகரர், சுரபூதிபுரத்தர், ரதிகர், தரிசர், அந்தராதரிசர், பிங்கலபாண்டவ்யர், யாமுனயாது தானகர், மானவர், நாங்கனர், ஹேமதாலர், ஸ்வஸ்வ முகர், எனவடக்கில் மலையுடைர் 6. தாழ்வரைநாடர் 44. ஹிமவான்வசுமான் கிரவுஞ்சகைலாசபர் வதங்களினின்றும் 800 போஜனைகள்தேயமற்ற இடக்களாம். காலுதர், பிரஹ்மபுத்திரர், குணிதர், கதினர், மாலவர், ரந்தரராஜ்ஜியர், வனர், ராஷ்டிரர், கேடவர், சிங்கபுத்திரர், வாமனர், சாவர், கச்சர், பலவகர், காமிரர், தரதர், அபிசர், சதஜர் அர்வாகர், பலோலர், குவிகௌதுகர், கிராதர், யாமுபாதர், தீனர், சுவர்ணமகீயர், எனவடகிழக்கில் ஜனபதர் 24 பர்வதர் 1. அதன்பின் தேவஸ்தல உபவனபூமி அதன்பின் விளங்காநின்ற கவின்வாய்ந்த விசுவாவசுவின் உத்தமமந்திரம், அதன்பின் கைலாசபூமி அதன்பின் மஞ்சுவனம் சைலம்வித்தியாதர அமரவிமான சமானபூமியாம்.

36-வது ஜனபதவருணனம் முற்றிற்று.

---

## 37-வது ஜனபத வருணனம்.

இப்போது மத்தியதேசசம்பந்தமான இடங்களும், ஆங்குள்ளஜனங்களும், ஜனபதங்கட்குண்டாம் துவந்துவப்போரும் அதனுலாம் வெற்றிதோல்விகளும் வருணிக்கப்படும், ஹேஇராகவ! போரின்கண்ணே மிகுந்தசந்தோஷத்தோடும் கொடூரமான எதிரிநரகரிகளைத் துவம்சப்படுத்திக்கொண்டு யான்முந்தி யான்முந்தியென கூட்டங்களின்மேற் ருவிவிழாநின்ற இவர்களும் அன்னியர்களும் ஆகியயாவர்களும் அப்போரில் அக்கினியின்கண்ணே முயற்சியோடுவிழும் விட்டில்போலும் சாம்பராய்ப்போனுர்கள். கூறியவர்களைப் பார்க்கினும் அன்னிய மத்தியதேயத்தவர்களை யாம் கூறவில்லையல்லவா அவர்களையுமிப்போது விபரமாகக் கூறக்கேட்டி! தத்தேசிகர், சூரசேனர், குடர், அசுவகநாயகர், உத்தமஜோதியர், பத்திரர் மதமத்யமிகர், சாலூகர், கோத்தியமாலாசியர், தௌர்ஞேயர், பிப்பலாயனர், மாண்டவ்யர், பாண்டுநகரர், சௌக்கிரீவர், குருக்கிரகர், பாரியாத்திரர் குராஷ்டிரர், யாமுனர், உதும்பரர், ரர்ஜ்ஜியாஹ்வர், உஜ்ஜிஹானர், காலகோடிகர், மாதுரர், பாஞ்சாலர், தருமாரண்யர், உத்தரதக்ஷிணர், பாஞ்சாலகர், குருக்ஷேத்திரர், சாரசுவதர், எனலீலாநாயகனுக்குச் சகாயமாகவந்த இவர்கள் 29. தேயத்தார்களும் மத்தியதேயத்தவர்கள் ஆவர்கள். இவர்களும்மற்றவர்களும் போரில் சாம்பரானுர்கள் எனயாதுமுன்னர்க் கூறப்பெற்றதோ அவ்வகையாகவே ஜனபதங்களை நன்குபிரித்துச் சர்க்காந்தபரியந்தங் கூறப்படும்; மாளவதேயத்து உஜ்ஜயினியி லுள்ளவர்களின் தேர்வரிசைகள், குந்திதேசத்தவர் பாஞ்சநதத்தவர் தம்போர்மகிழ்வேவுதலாலும் கட்கங்களால் வீழ்த்தப்படுதலாலும், மிகுந்தபயத்தோடும் நடுங்கியோடிப் பெரிய மலைத்தாழ்வரையில் விழுந்தன. கோசப்பிரஹ்மரும் வசான்ரும் வஸ்திரவதீ ஜனங்களானே சின்னுபின்னராகிப் பூமியின்கண்ணே புரண்டுவீழ்ந்து மதகயங்களால் மிதிக்கப்பட்டுத் துவம்சமாயினர். தாசபுரர்களாகிய சூரர்கள் பாணபூமிஸ்த தேசத்தவர்களால் தாக்கப்பட்டுச் சஸ்திரங்களால் உதரமுங் கந்தரங்களும் கிழிப்பட்டவாராகித் தோல்வியுற்றோடி தெய்வீகமாயடைந்த மடுவின்கண்ணேமூழ்கி மாய்ந்தனர்கள். வயறுகிழிபட்டுக் குடல்களும் நரம்பு முதலியவையும் வெளிப்படவே நிரோதப்பட்டதனுனே சாந்தசஞ் சாரமுடைய வர்களாய சாந்திகர்களை இரவிற்பேய்கள் பிடுங்கித்தின்றுகொண்டிருந்தன. சங்கிராம அத்வர தீக்ஷதர்களாகிய உயர்ந்தவேகமும் சப்தமுமுடைய பத்திரகிரியரால், ஆமைகளைப்போலும் மரகரைப்படு குழியின் கண்ணே வீழ்த்தினர். தண்டிகை நகரவாசிகள் ஹைஹயர்களாற் றுரத்தப்பட்டு மிகுந்தவேகத்துடன் ஒட்டப்பட்டவர்களாய் அடிபட்டு இரத்தம் ஒழுகுமுடம்பினர்களாய், காற்ருற்றுரத்தப்பட்ட வாதப்பிரமிபோல அதிவேகமாயோடினுர்கள். தந்திதந்தங்களால் மிகமிகவும் பிளக்கப்பட்டவராய் சத்துருக்களாற் சின்னுபின்னப் படுத்தப்பட்டவராய் தரதவாசிகள் உதிரமகாநதியால் விருக்ஷங்களின் இலைகளைப்போலும் இழுத்தடிக்கப்பட்டார்கள். நாராசங்

களினாலே துளைக்கப்பட்டசினர் ஜீரணராகி ஜர்ஜ்ஜரஜீவிதர்களாகிப் பாரபூதமாக இராநின்றனபோன் றிருக்குமுடல்களைச் சமுத்திரத்தின்கண்ணே வீழ்த்தினர். கர்நாடவீரரால் வீசப்பட்டு மேலெழுங் குந்தங்களால் மறைபட்ட கழுத்தையுடைய நளதகூரர்களும் தாரகக்கூட்டங்களைப்போலும் மிகஅழிந்தனர். தாசகரும் சகரும் போர்புரியவராகித் தெய்வவயத்தாற் கரீந்திரரான் மகரவியூகத்தாற்போலும் மிகவிரைவாக அழிக்கப்பட்ட ஆயுதமுடையவராகிக் கேசத்தையும் கேசத்தையும் பிடித்துக்கொண்டு கடும்போர் செய்தனர். பாசதேசியரால் விடுக்கப்பட்ட சங்கிலிஜாலங்களால் பயமடைந்தவராகிய தசார்ணர் வஞ்சிக்கொடியின் மூலத்தையாசிரயித்த அஸ்திமய மச்சவிசேஷங்கள் போலும் உதிரச்சேற்றின்கண் மூழ்கினர். தங்கணர் மேல்வீசும் கத்திச்சுழல் கைகளானும் சங்கசதங்களானும், குர்ஜரஅநீகநாசத்தால் குர்ஜரீகேசங்கள் அறுக்கப்பட்டன. வீரகட்கங்கட்கொப்பான பிரபைப்பம்புதங்கள் தமது பிந்துக்களாகிய ஏதுக்களானே வனங்கள் தெளிக்கப்படுவனபோலும், கர்ணம் போலும் மேற்றாக்கப்பட்டனவாய்ப் பிரசித்தங்களான சஸ்திரக்கூட்டங்களினின்றும் வெளிப்பட்ட வீரர்களுடைய கட்கங்களின் பிரபைமின்னல்களானே யம்புதவடிவங்களடைந்த நிகட ஜனபதர்கள், மற்றையகுகஜனபதர்களை நோக்கிச் சரதாரைகளைச் சொரிந்தனர். புசுண்டியென்னும் அஸ்திரமண்டல ஒளிகளால் நீலமாக்கப்பட்ட சூரியன் உற்பாதமாக (கெடுகுறியாக) வெண்ணிப் பயமடைந்த ஆபீரர்கள்மேல் சத்துருக்கள் பசும்புற்றலத்தில் கோக் கூட்டங்கள் குதிப்பனபோலக் குதித்தார்கள். திங்களைப்போ லாதித்தியன் சித்திரம், மங்குறரசிமிமண்டலமுறுமேல், பங்குறுகறுப்புரத்தாந்தபர்யந்தம், கங்குலகழிவின்காரணக்குறியே" என உற்பாத இலக்கண மியம்பப்பட்டுளது. பொன் போன்றொளிரும் தாமிரர்களாகிய யவனவிசேஷப்படையாகிய நாயகியை கௌடபடநாயகன் நககேச சந்நிவேசங்களால் உபபோகஞ்செய்தனன். போரில் விருக்ஷங்களையும் சைலங்களையும் துவம்சஞ்செய்து கொண்டுவரும்படியான அநேகவித சப்தங்களைச் சப்திக்கும் சக்கராயுதங்களினாலே பொடிப் பொடியாக்கும் ஜனபதங்களால் தங்கணரும் கணசரும் கழுகுகளிடத்தும் பருந்துகளிடத்தும் கலந்துவாழ்ந்தனர். தடிகளைச் சுழற்றுவதானே யுண்டாகாநின்ற கௌடபடசம்பந்தியான குடுகுடுஎன்னும் அவ்யக்தபாஷணத் தொனியைக்கேட்டுக் காந்தாரகோக்களைப்போலும் திரவிடர் மூலைக்குமூலையோடினர். நதிகளைப்போலும் கிரிகளினின்றும் இரங்கியோடிவரும் நீலாம்பரர்களாகிய சகர்களின் நீலாகாசம்போலும் கருங்கடல்போலும் இருந்த இக்கூட்டமானது வெள்ளியவத்திரர்களாகிய பாரசீகர்கட்குக் கனமான இராச்சம்பந்த இருட்டு மயக்கத்தை யுண்டுசெய்தது. அதனானே அப்பாரசீகர்களாகிய பகைவர்மீது பாய்ந்த ஆயுதங்கள், பரிசுத்தமாக இராநின்ற பாற்கடல்கடைய இட்டமந்தரபருவதத்தின் வனங்கள்போலும், ஹிமாசலப்பாறைகட் கிடையிலிருந்த வனங்கள்போலும் போர்புரியும்போது தோற்றிக்கொண்டிருந்தன. மன்னவர்

திருஷ்டிக்கு அந்தரிக்ஷத்தில் சஸ்திரக்கூட்டங்கள் மேற்கிளம்பி யுலவியதானது மேகங்கள் எழுந்துலவியது போலிருந்தபோதினும், விண்ணவர்திருஷ்டிக்குச் சமுத்திரத்தின்கண்ணுடும் அலையின் பின்னலையாகத் தொடர்ந்து வருவது போற் றோற்றியது. ஆகாசகரனனமானது, வெண்குடைகளால் நூற்றுக் கணக்கான சந்திரர்களோடு கூடியதாயும், சரங்களால் விட்டில்களெங்கும் நெருங்கிவியாபித்ததாகவும், வேலாயுதங்களால் அநேகம் பக்ஷிகளோடுகூடி யிடையிடின்றியதாயும் தோற்றியது. கேகயரால் அநேகஞ்சத்துருக்களாகிய வீரர்கள் பிணங்கட்கு ஒப்பாக ஆக்கப்பட்டனர், கங்கரால் அநேகஞ் சத்துருக்களினுடைய சிரங்கள் கழுகுமுதலியவை கவ்விக்கொண்டு ஆகாயமார்க்கஞ் செல்லுமாறு ஆக்கப்பட்டன. கலகலவெனச் சப்தித்துக்கொண்டுலவும் அங்க தேசத்தார் வேடசேனைவடிவக் கன்னிகைகளைக் காமமுறுமாறு மன்மதோத்ரேகமென்னும் விதேகத்தன்மையை யடையும்படிசெய்வித்துப் பைரவர்போலுங் கர்ச்சனைசெய்தனர். சமுத்திரசம்பந்த நரவிசேஷர்கள் மாயையினாலே பறவைகளாகி யாவற்றையும் வாரும்படியான கலக்கந்தரும் இறகுகளால், காற்றானது தூளிகளை யடித்துக்கொண் டேகுவதேபோல, தந்தேககர்களை யடித்துகொண்டுபோனார்கள். நார்மதர் யுத்தஉன்மத்தர்களாகி யாவரையுஞ் சங்கரித்துக் கட்கங்களையும் ரணம்பரத்தையும் தியாகித்துப் பரிகாசலீலையைச் செய்துகொண்டும் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டுந் திரிந்தனர். கிங்கிணிக் கூட்டங்கள் கிணுகிணுகிணுவென வொலித்தன, வேன்மழைபொழிந்தது, சாலுவர் பாணக்காற்றுவீசியது, காயங்கள் கடுகுகடுகு ஆகக்கழிக்கப்பட்டன. குந்திதேசத்தவரானே சைப்பியர் கண்டிக்கப்பட்டுச் சுழலுங்குந்தங்களானே பிளக்கப்பட்டு பிணங்களான பின்மேலுலகமடைந்து வித்தியாதரரைப்போலும் விளங்கினர். போர்க்களத்தில் மிகமிகவும் போர்புரியும் சாமர்த்தியம் வாய்ந்த அதிதீரஅஹீனதேச சேனையினது சலனஉல்லாச மாத்திரத்தினாலே பாண்டு நகரத்தினர் பாழாயினர். மத்தகாசிகளாகிய பாஞ்சநதர்களால் தந்தேககர் குந்தங்களானும் கஜதந்தங்களானும் விருக்ஷங்களானும் தாக்கிப்போர் செய்யும் ஆற்றலுடையவராக இருந்தபோதினும் மதயானைகளான் மரங்கள்போல மாய்க்கப்பட்டனர். பிரஹ்மாவத்சநகநாடார் நீபநாடார்தஞ் சக்கரத்தால் வெட்டுப்பட்டு வீழ்ந்தனர், சஹயர் ரம்பங்களாற் சின்னப்பட்டது மலர்ந்த மரம்போலுமிருந்தது. சுவேதாக தேசத்தார் முகங்கள் ஜடரதேயத்தாரேவிய குடாரங்களினாலே வெட்டுப்பட்டன, இந்தஜடரசைனியமானது பக்கத்திலிருந்த பத்ரேசன் சரவன்னியினாலே தகிக்கப்பட்டது. காஷ்டப்போர் வடிவச் சேற்றில் பந்தனத்தம்பமில்லாமலே மக்கினமாகிச் சீரணமாயின மதங்கதேச ஜன்னியப்படைகளும் மதயானைகளும்; அப்போரின்கண்ணே யாவரும் ஒங்கியெரியாநின்ற அக்கினியின்கண்ணே காய்ந்தவிறகுகள் மாய்வனபோலும் மாய்ந்தனர். திரிகர்த்தராலே பிடிக்கப்பட்டுத் துரும்புக்குச்சமானமாக மேலேவீசிச் சுழற்றப்பட்ட மித்திரகர்த்தர் பாதாளம் வரை பறந்தோடத்தங்

கள் தலைகளை வியாகுலத்தோடும் கீழ்ப்புகுத்தினர். மந்தமாருதத்தினாலே யசை யாநின்ற மாகடல்போலுமிலங்கும் மாகதசேனையில் மந்தவனிலர் சேற்றிற் சிரணயானைபோலும் வீழ்ந்து ஆழ்ந்தனர். ரணஅங்கணத்தில் தங்கணர்தம் விவேகபுத்திகளையும் உயிர்களையும் சேதயர், மார்க்கத்தின் உதிர்ந்துகிடக்கும் மலர்களின் மிருதுசோபை மணமுதலியவற்றைச் சூரியகிரணங்கள் கவர்வன போற் கவர்ந்துவாட்டினர். பௌரவர் சப்தங்களைச்சகிக்க முடியாதவராகிய கோசலதேசத்தவர் அந்தகனைப்போலும் பௌரவரால் விடப்பட்டகதை பாலா அம்பு வேல்முதலியவற்றின் மிகுமழையோடுகூடியவராயினும் சென்று வென்றனர்; தோல்வியடைந்த அவர்கள் ஆயுதங்களால் ஹிம்சிக்கப்பட்டவர் களாயினும் பராதுவெற்றியில் ஆச்சரியமுறுதவர்களாய், ஆதனானே ஈரகன ஆயுதங்களாலே பாலசூரியர்கட்கொப்பாக விளங்குபவர்களாய், மலையின்கண் ணே பவளவிருக்ஷங்களே ஓடுவனபோலத்தோன்றினார்கள். நாராசக் கூட் டங்களானும் பெருங்கட்கக் காற்றானும் விடுக்கப்பட்ட மூர்த்திகளாகி வண்டின் கூட்டங்களின் விளக்கம்போலும் மேகங்கள்போலும் சுற்றிக்கொண்டிருந்தார் கள். மேகங்களெல்லாம் சரதாரைகளோடுகூடியிருந்தன, சரங்களாகிய தமது ரோமங்களால் பூரிக்கப்பட்டு மேஷங்கள்விளங்கின, சரபத்திரங்களோடுகூடி விருக்ஷங்களிருந்தன, அக்கோசலருடைய கர்ஜனஉபலக்ஷித கஜங்கள்சுற்றிக் கொண்டு திரிந்தன. கந்தமூலமுள் முதலியவைநிறைந்த இடங்களிலுண்டாகி வனராஜ்ய ஜனபத வடிவஜரையினால் ஜீர்ணர்களாகிய மனுஷ்ய ஹஸ்திமுத லியவர்கள் பலமற்றுத்துன்புற்று இளைத்தவர்களாகி நூற்களைப்போலச் சின் னாபின்னப்பட்டார்கள். வெட்டிய குழியின்கண்ணே தடைபட்டதேர்களின் சக் கரங்கள் பொடியாக அத்தேர்முடிகளில் வனமுடிகளில் மேகங்கள்போல சத் துருஜனக்கூட்டங்கள் கொல்லப்பட்டு வீழ்ந்தனர்கள். சாலவனமும் தாலவன மும் போரில்பரஸ்பரம் ஜனசமுதாயங்களோடு சேர்ந்ததனாலேயே மகாவனத் தன்மையையடைந்து போர்க்கிடமாய் அங்கு தோள்களும் சிரங்களுஞ் சிதை வுற்றமையானே முறையாக மேலுருவத்தாலவிருக்ஷமயமாகவும் ஸ்தாணுவன மாகவும் ஆயிற்று; சாலவிருக்ஷங்கள் நாற்புறமும் சாகைகள்சிதைந்தபடியால் தாலமயத்தன்மையையும் தாலவிருக்ஷங்கள் சிரச்சேதமுற்றபடியால் ஸ்தாணு மயத்தன்மையையும் அடைதல் இயைபுடைத்தேயாம். மதோன்மத்த யவ் வனம்வாய்ந்த நந்தனஉத்யான சுந்தரிகள் வீரவரர்களைப் பற்றிக்கொண்டு சுமேருபருவதத்தின் வனஉபவனப்பிரதேசங்களில் ஆடிப்பாடிரமித்துக்கொ ண்டிருந்தார்கள். பரபக்ஷத்தால் கற்பாநலச்சுவாலைகளால் துன்புறுதவரை உத்தமமானசைனிய கானனத்தில் மிகவும் மேலான சப்தங்கள்கிளம்பிக்கொண் டிருந்தன. பேய்ப்பிரதான காமரூபாதி ஜனபதர்களோடு போரின்பொருட்டு முயன்றதசார்ணர் பூதங்களால் அபகரிக்கப்பட்ட ஆயுதமுடையவர்களாய்க் கன்றுக்குட்டிகள் இளந்தளிரை யிழந்தோடுவனபோல மார்க்கத்தில்கர்ணங் களை யிழந்தோடினார்கள். வெய்யிலின்கொடுமையால் நீரோட்டங்கள் யாவும்

வற்றியவுடன் தாமரையோடைகள் தம்மழகிழந்தனபோலசுவாமியிழந்தவர்கள் தமதுகாந்தியை ஜிஷேவனஜனபதத்தார்களது பேரொளியால் இழந்தார்கள். அம்பு வேல் அசிமுசலாதிகளால் மேசலர்களால் துஷாகர்தாக்கப்பட்டுத்துன் புற்றனர், நரகர்களால் மலைநிதம்பஞ்சரிப்பவர்களும் நிராகரிக்கப்பட்டவர்க ளாகி யோட்டமெடுத்தனர். தமதுஸ்தானத்திலேயே யிருந்துகொண்டு போ ரில்வல்லவர்களாகிய பிரஸ்தவாசதீரர்களால் வீழ்த்தப்பட்ட கௌந்தக்ஷேத் திரவாசிகள் துஷ்டர்களால் மேற்கொள்ளப்பட்ட சற்குணர்களேபோலும் வெட்டவெளியாக அசக்தத்தன்மையையடைந்தார்கள். பாகுதானர்களுடைய தலைகளைக்கணத்தில் த்விபயர்பிடித்து ஆயுதங்களினால் விரைந்து ஓடஓட தாமரை கொய்பவர்களைப்போல கொய்தார்கள். சரசுவதிதீரத்திலுதித்தவர் கள் பரஸ்பரம்போர்புரிபவர்களாய்த் தினம்முடியும்வரைமுயன்றும், வாதங் களில் பராஜயமடையாத பண்டிதர்களைப்போலச் சலிப்பற்றவர்களாயிருந் தார்கள். கர்வகர்க்ஷேத்திரர்களாகத் துறத்தப்பட்டபோதினும் இலங்கையி லிருக்கும் இராக்ஷதர்களின் உதவியைப்பெற்றுச் சாந்தமான அக்கினியானது காய்ந்தவிறகினாற்போலப் பரமதேஜஸையடைந்தார்கள். ஹே இராகவ ! எவ் வளவென்றுதான் எடுத்துக்கூறுவது போரிதன்மகிமையை, இரண்டாயிரம் நாவுடைய ஆதிசேஷனுங்கூட வருணிக்கமிகவும் ஆகுலப்படுவனென்றால் நம் மால் வருணிக்கமுடியுமா.

37-வது ஜனபதவருணனம் முற்றிற்று.

---

## 38—வது போர்க்கள வருணனம்.

இப்போது, தினமுடிவில் இருசைனியங்களும் போரினின்றும் திரும்பிச் செல்வதும் போர்க்களமானது பேய்களினது கொடும்பயத்தோடுகூடியிருப் பதும் விஸ்தாரமாக வருணிக்கப்படும். இவ்வண்ணம்மிகவும் ஆகுலம்நிறைந்து போரானது நிகழ்ந்தபோது, வெற்றியுடன்விளங்கும் வீரர்கள் தோள்தட்டு வதைக் கேட்டதோல்வியடைந்தவர்கள் மிகவும் பயத்தையடைந்தார்கள், உதிரப்பெருக்கைத்தடுக்கும்படியான கடினகவசங்களில் அவ்வுதிரநீரானது பொங்கி வழிந்துகொண்டிருந்தது, இருளானது மிகுதியாக ஆதித்தியனும் மறைய ஆரம்பித்தனன், கவண்களினின்றும் அதிநிர்மலமான கற்களின்மாரி கள் ஒருபக்கத்தினின்றுங் கிளம்பிமற்றொரு பக்கத்தில் வீழ்ந்துகொண்டிருந் தன, நதிகளில் தாமரைகளின் பங்திகள் சங்கோசத்தையடைந்துகொண்டிருந் தன, சரபலஅக்கிரபாகங்கள் பரஸ்பரம் அதிகடினமாக உறைதலாலுண்டா கும் வன்னிகணங்கள் சரநதிகளிலிருந்து சீகரங்கள்போற் கிளம்பிக்கொண் டிருந்தன, அந்நதிகள் அதிதூரத்தினின்றும் வந்துகொண்டும் போய்க்கொண்டு மிருந்தன. வெட்டப்பட்ட சிரங்களே அந்நதியிற்றாமரைகளாயிருந்தன, அவ் வகைச்சக்கரங்களே ஆவர்த்தங்களாயிருந்தன, அவ்வகைக்கட்கக்கூட்ட மந் தாகினிகணங்களால் நிறைக்கப்பெற்ற அலைகள்வீசும் ஆகாயசமுத்திரத்தின்

பூர்ணத்தன்மை பொங்கிக்கொண்டிருந்தது. பெருங்காற்றிற்கொப்பாகக் கணகணவென்னுஞ் சப்தத்தோடுகூடிய சஸ்திரங்கள்நிறைந்திருப்பதனுனே நெருங்கியமேகங்கள் வந்துமழைபெய்யத்தொடங்கினவோவெனச் சங்கித்துக் கபிகள்ஜலசம்பந்த நந்திவிருக்ஷப்பிரதேசங்களில் மதமிருத்துக் காமநோய் கொண்டுழன்றன, இவ்வாறுபுதிதுபுதிதாக மேகங்கள்சஞ்சரிப்பதால் ஒரு வேளைபிரளயந்தான் வந்துவிட்டதோவென யாவரும்சந்தேகிக்கும்படியா யிருந்தது. அஷ்டபாகதசைச்சேஷ பிரதாபமாதுரிய ஆகிருதியானது சஸ்திர அடியினுல் மொத்துண்ட இரக்தகாந்தியினுலே சூரனைப்போல மெலிவையடைந் தது. குதிரைகளும் ஆனைகளும் இளைப்பையடைந்தன கைகாலொடிந்தன, கட்கக்கூட்டங்கள் ஒளிமழுங்கி யொடிந்துவீழ்ந்தன, திவசத்தோடுகூடச்சேனை மந்தப்பிரதாபத் தன்மையையடைந்தது. பின்னர் சேனையின் அதிபதிகள் மந் திரிமார்களோடு விசாரஞ்செய்து போரைநிறுத்தவேண்டுமென்று தூதர்களைப் பரஸ்பரம்அனுப்பினுர்கள். ஆண்டுச்சிரமவசத்தால் யந்திரசஸ்திரபராக்கிரமங் களெல்லாம் மந்தமாய்விட்டபடியாலும் பொழுதும்போய்விட்டபடியாலும் யாவருமே போரைநிறுத்துவதற்குச் சம்மதித்தார்கள். அதன்பின்னர் இரு சேனைகளிலும் துருவனைப்போலும் ஒவ்வொருபோர்வீரன் பெருந்தேரின் மேலே கொடிக்கட்டுமிடத்தில் ஆதாரமாகச்செய்திருக்கும் நீண்டமூங்கிற்றம் பமிரண்டிலேறி, இரவிற் பூரணசந்திரன்பிரகாசிப்பதேபோலப் போரைநிறுத் தலாமென்பதன் குறிப்பாக அழகியபெரிய வெள்ளைக்கொடியை எத்திசைகளி லும் வீசினுர்கள். பின்னர்யாவுமடியும் மகாப்பிரளயகாலத்தில் புஷ்கராவர்த்த கங்களேபோலும் திசைகளிலெல்லாம் பிரதித்தொனிகேட்கும்படியாகத் துந்துபிகளெல்லாம் தொனித்தன. விஸ்தீரண ஆகாயத்தில் விரிந்துநின்ற சரங் கட்கமுதலிய ஆயுதநதிகள் யாதொருதடையுமில்லாமல் வருவதற்குமான சாதி சரசுகளினின்றும் சரயுவாதிநதிகள்போலத் தொடங்கின. போர்வீரர்களுடைய தோள்களாகிய விருக்ஷசஞ்சாரங்கள் மெதுவாகப்பூகம்பத்தின் முடிவில்வனத் தின் அசைவுகள்போலும், சரற்காலத்தில் சமுத்திரம்போலும் சுருங்கியோய்ந் தன. போரினின்றும் இருசேனைகளும் பிரளயாந்தத்தில் நாற்றிசைகளினு முள்ள நாற்கடலும் ஒருபெருங்கடலாவதேபோல நாற்றிசைகளிலும் பிரிந்து சென்றன. மந்தரபர்வதத்தை யெடுத்தபின் பாற்கடலின் வதனுகுலம் சாந்தி யுற்றதேபோல் மெதுவாகச் சுழன்றுகொண்டிருந்த சைனியமானது அவ் வியாகுலத்தையடைந்தது. ஜனங்கள் நிவர்த்தியாகிக்கொண்டிந்தமுறையில் ஒரு முகூர்த்தத்தில் பூதனாசுவரியின் உதரம்போலும் பயங்கரமாகஇருந்தது, அப் போர்க்களமானது ஸ்ரீஅகஸ்தியர்குடித்த கடல்போலச்சூனியமாகவே தோற் றியது, பிணப்பரம்பறை நிறைந்திருந்தது, ஓடிக்கொண்டிருக்கும் இரக்த ஆறுகளால் ஆகுலமிகுத்திருந்தது, வனபதங்கநிறைந்தவனம்போல வெங் கும் ஜங்காரசப்தங்கள் நிறைந்திருந்தது. ஓடாநின்ற இரக்தநதிதாரைகளின் அலைகளின் சப்தங்கள் கர்கர்ளனமுழங்கிக்கொண்டிருந்தது. பாதியிறந்துமிற

வாமலும் கிடப்பவர் அலறிக்கொண்டும் பிராணனிழுத்துக்கொண்டு மிருக்குமா குலம் மிகுதியாகவிருந்தது. இறந்தபாதி யிறந்ததேகங்களினின்றும் கிளம்பும் ஆயுதங்களும் அவைசெய்ததுளேகளிற் கிளம்பும் இரக்தஊற்றருவியும் மிகுத்திருந்தன, உயிரோடுகூடியிருக்கும் மனுடர்மேற் கிடக்கும்பிணங்களும் கீழ்த்துள்ளலால் துள்ளுவபோற்றோற்றின கரீந்திரசவங்களின் குவியல்களின்மேல் மேககண்டங்கள் இளேப்பாறிக்கொண்டிருந்தன, காற்றுள் சின்னபின்னப்பட்ட மகாவனத்திற்குச் சமானமாகத் தேர்க்கூட்டங்கள் அழிந்துகிடந்தன ; ஓடாநின்ற ரக்தநதியின்வேகமானது குதிரைகளேயும் யானைகளேயும் அடித்துக்கொண்டு சென்றது, சரம் வேல் சந்திரகாசம் உலக்கை கதை குந்தம் வாள் முதலியவற்றின் கூட்டங்களேயும் கொண்டுசென்றது. பூதலத்திலெங்கும் கட்டில்களும் அங்கரக்ஷகங்களும் தோற்சந்நாகங்களும் இருப்புக்கவசங்களும் பரவிக்கிடந்தன, கொடிகளும் சாமரங்களும் பட்டுக்கூட்டங்களும் அவற்றுன் மறைப்பட்ட பிணக்கூட்டங்களும் பரவியிருந்தன. படங்களேப்போலும் உன்னதமாய் முகமுடையனவாய்துவாரங்களோடுகூடியிருக்கும் தூணீரங்களில் மூங்கில்வனத்திற்போலக் காற்றானது சப்தித்துக்கொண்டுஇருந்தது, பிணக்கூட்டங்களின் வைக்கோலீட்டத்தாலாய சய்யையிற்பேய்கள் தூங்கிக்கொண்டிருந்தன, சிரத்திற்றரிக்குஞ் சூடாமணிகளும் தோள்முதலியஅவயங்களிற்றரிக்கும் ஆபரணங்களும் விடும்பிரகாசத்தினுலே சக்ரசரபங்களின் சமுதாயம்போலும் வியாபித்திருந்தன, நாய்கள் குள்ளநரிகளின் கரங்களில் நிபிடமாஎஸ்தான நரம்புகள் சிறுசிறுகயறுகள்போலச் சுற்றிக்கொண்டிருந்தன, உதிரநிறைந்த க்ஷேத்திரத்தில் கர்க்கரசுரத்தோடும் புருடரதுதந்தங்கள்சப்தித்து அடித்துக்கொண்டிருந்தன, அவர்கள் பிராணன்களும் விரைவிற்செல்லத் துடுக்குத்துடுக்கென்றிருந்தன, உயிரோடுகூடிய மனுடமண்டூகங்கள் இரக்தச்சேற்றுக்குழியில் மூழ்கிப் புரண்டுகொண்டிருந்தன. சித்திரகஞ்சுகமென்று பிரசித்திபெற்றது நூற்றுக்கணக்காயகண்களோடு வெளிப்பட்டுன்னதமாயிருந்தது, புயம் தொடைக்காட்டக்கூட்டங்களினின்றும் கோரமான ரக்த அருவிகள் நூற்றுக்கணக்காகப் பாய்ந்துகொண்டிருந்தன, அழுதுகொண்டிருக்கும் பந்துக்களோடுகூடினவாய்ப் பாதியிறந்தும் இறவாமலும் சிலஇருந்தன, அப்போர்க்களமத்தியிற் சரங்களும் ஆயுதங்களும் தேர்களும் குதிரைகளும் யானைகளும் விமானங்களும் வீழ்ந்துமறைத்துக்கொண்டிருந்தன, அளவிலாதமுண்டங்களுந் தோள்களும் கூத்தாடலால் ஆகாயம்உன்னத்திலிருந்து தாழ்த்தப்பட்டது போலுமிருந்தது, மதமும் மேதையும் மஜ்ஜையுங் கொழுப்புமுதிரமும் பெரும்புன்னாற்றத்தைக் கொடுத்துக்கொண்டிருந்தன, குதிரைகளும் யானைகளும் பாதியிறந்துமிறவாமலும் நாக்கானது வெளியே தள்ளிக்கொண்டு குத்துயிராய்க்கிடந்தன, ஓடாநின்ற ரக்தநதியலேகள் துந்துபிகளே யடித்துடைத்துக்கொண்டிருந்தன இரக்தநதியானவை நூற்றுக்கணக்காக இறந்த யானைகுதிரைமகரங்களே யிழுத்துக்கொண்டுஓடின இறந்திருக்கும் நரசைனிய

பூத்காரத்தால் நீக்கப்பெற்று வதனப்பிரதேசத்தினின்றுங் கிளம்பிவரும் இரக்த ஒட்டங்கள் அநேகம். அற்பஜீவனுடையவர்களாய்ச் சரம்நிறைந்த முகதிருஷ்டியர்களாய்த் துயருடன் அநேகர்கள்கதறிக்கொண்டிருந்தார்கள், வாமகுக்ஷியின்கண்ணிருக்கும் மாம்சகிரந்தி விசேஷமாகிய பிண்டபார்மையின் வசையினதுகந்தத்தால் உபலக்ஷிதமாய், வாயுவின்பரிசத்தால் வலியபீடம்போலும் உறைந்துகனீபூதமான இரக்தம்நிறைந்திருந்தது, பாதியிறந்தயானைகளிற் றலைமைமிக்கவை துதிக்கைகளில் முண்டங்களைத்தூக்கிக்கொண்டுகதறின, தம் பாகர்களின்மையின் ஆள்வாரிலாமல்யானைகளும் குதிரைகளும் தங்கட்டு விட்டு இங்குமங்கும் ஓடிக்கொண்டுதிரிந்தன, அழுதுகொண்டும் ஓலமிட்டுக் கொண்டும், சுற்றிக்கொண்டும், வீழ்ந்துகொண்டுமிருக்கும் பிணங்களினாலே இரக்தஒட்டங்கள் கலக்கமுற்றிருந்தன, இறந்துபோனபர்த்தாவின் கழுத்தைக் கட்டிக்கொண்டு அழுகும்போது தெய்வவயத்தால்கிளம்பிய சஸ்திரத்தால் அடிப்பட்டுக்குலஸ்திரீகள் பிராணனைவிட்டார்கள் (மதிவாயிலாகச் சஸ்திர அடியால் நாயகசகமனம் கூடாமையின் தெய்வவயமென்றதாம்) சமஸ்கரிக்கும்பொருட்டுச் சவத்தைக்கொண்டுவரச் சுவாமியாஞ்ஞையைப்பெற்றுப் படைவீட்டிற்புகுந்த சேனையினின்றும் வெளிப்பட்டுத் தனித்தனியாகப் போர்க்களப்பிரவேச பயத்தாற் கூடிக்கொண்டு அதிவேகமாகமுயலும் அநேகர்கள் தங்கள் தங்கள்சொந்தஜனசவங்களைப் பரீக்ஷைசெய்துகொண்டிருந்தார்கள். சவமெடுப்பவர்கள் தங்கள்தங்களுக்கு வேண்டியசவங்களைத் தேடும்விரைவிற் கைப்பட்ட உயிரோடுள்ள சேவகர்களால், ஆகுலப்பட்டார்கள். கேசங்களாகிய பாசிகளையுடைத்தாய், வதனங்களாகிய தாமரைகளையுடைத்தாய், சக்கரங்களாகிய சுழல்களையுடைத்தாயிலங்கும் இரக்தநதிகள் நூற்றுக்கணக்காக ஓடிக்கொண்டிருந்தன, சஞ்சரியாநின்ற உன்னதமான அலைக்கூட்டங்கள் அடித்துக்கொண்டிலகும் இரக்தப்பெரும் நதங்களநேகமிருந்தன; அங்கங்களிற்பட்ட ஆயுதாகாதத்தால் மிகத்துன்புற்று இறந்தும்இறவாமலுமநேகர்கிடந்தனர், விதேசத்தில் இறந்தவர்களின் சோகத்தால் அலறிக்கொண்டுகொடுத்தனர் அங் கபூஷணங்களையும் யானைகளையும் குதிரைகளையும். பிராணன்நீங்கும்வரை புத்திரர்களையும் இஷ்டவஸ்துக்களையும் தாய்தந்தையரையும் மற்றையதேவரையும் பரமசிவத்தின்நாமங்களையும் சிலர்ஸ்மரித்துக்கொண்டிருந்தனர் சிலர் ஹா ஹா ஹீ ஹீயென அலறிக்கொண்டு இரகசியஸ்தானங்களில் அடிபட்டமை பொறுக்க முடியாமலிருந்தனர். பாரக்கிரமம்செய்யாமலே இறந்துபோந் தேவஉன்மதித மிகபலமுடையவரால் தமது பிராரப்தகருமக்கூட்டம் நிந்திக்கப்பட்டுக்கொண்டிருந்தது, யானைகளோடுபோர்செய்வதில் அசமர்த்தர்களாய் ஆனைகளின் எதிரில் வீழ்ந்து கிடக்குந் தேகமுடையவராய் மிதித்துவிடுமென்னும் பயத்தினாலே சிலர்தமதிஷ்டதெய்வங்களைப் பிரார்த்தித்துக்கொண்டிருந்தனர். இறந்தவர்களைக் காலாலுதைத்து அவமதிப்புச்செய்ததால் அபராதம்வந்ததெனத்தெரிந்த அநேகர்மிகவிரைவாக ஓடிக்கொண்டிருந்தனர், அதனானே சங்கையற்றவர்களாய்

இரக்த ஆவர்த்தபயாநக இடங்களிலும் விரைந்துற்சாகமாக ஓடினார்கள், இரகசியஸ்தானங்களைச் சேதிக்கும்படியான அம்பின் அடிகளால் துயரடைந்து தமது ஜன்மாந்தரபாவங்களை யனுமானத்தாற்சிந்தித்துத்துயரமடைந்தனர், மிகவிரைவிலோடும் கவந்தங்களைப்பந்தித்து இரக்தங்குடிக்கத்தொடங்கிய வேதாளங்கள் வாயைத்திறந்துகொண்டாடின, உதிரமடுக்களில் கொடிகளும் குடைகளும் அழகியவெண்சாமரைகளும் வெண்டாமரையலங்காரத்தைச் செய்துகொண்டிருந்தன இரக்தமடுக்களில் சந்தியாகால இராகப்பிரதிபலனத்தால் சிவப்புத்தேயுசமுதாயவடிவ செந்தாமரைகள் திசைகளில்விளங்கின, தேர்களும் சக்கரங்களும் முறையே பர்வதங்களாகவும் ஆவர்த்தங்களாகவும் அமையப்பெற்ற, பிரசித்த ஏழுகடலன்றியிரக்தமயமாய எட்டாவது கடற்போலிலங்கியது, அக்கடலின்கண்ணே பதாகையே நுரைக்கூட்டமாக இருந்தது, அழகியசாமரைகளே குமிழிகளாக விருந்தன. விபரீதத்தையடைந்ததேர்கள் ரக்தச்சேற்றுப்பூமியிற் கிடந்தவை சேற்றிலழுந்தியபுரத்திற்குச்சமானமாக விருந்தன, பெருங்காற்றால் வீழ்த்தப்பட்ட பெருவனமரங்கள்போலும்வீழ்ந்து கிடந்தனவிஸ்தாரமாய்கற்ப அக்கினியினாலே தக்தமாய உலகமிருந்ததுபோலவும், அகஸ்தியராலேயாசமனஞ்செய்யப்பட்ட ஆர்கலியமர்ந்ததுபோலவும், அதிவிருஷ்டியினாலே அதமாக்கப்பட்ட தேசம்போலவும், அப்போர்க்களமானது அழிந்த மனுடர்களால் நிறைக்கப்பெற்றிருந்தது. பூஷணங்களாலும் சரங்களாலும் குந்தங்களாலும் வியாபிக்கப்பெற்றிருந்தது. புசுண்டீயாயுதமண்டலங்களால் ஆகுலமிகுத்திருந்தது, நாற்றுக்கணக்கான மதகயங்களென்னப் பிணங்கள் குவிந்திருந்தன, சர்ப்ப ஆகாரமாகத் தண்டங்களும் உலக்கைகளும் இருந்தன. அந்தரக்த நதியினது தீரத்தில் ஆயுதங்களின் உன்னதமான விருக்ஷங்களுண்டாகியிருந்தபடியால் சிலைச்சிகரத்தினின்றுங் கிளம்பி வியாபித்த தாலவிருக்ஷங்களின் கூட்டம்போலுமிருந்தது; யானைகளின் அங்கங்களிற் கோர்த்துக்கொண்டிராநின்ற ஆயுதக்கூட்டங்களேயாகிய விருக்ஷங்களினுடைய கிரணவடிவ புஷ்பங்களால் ஆகுலமிகுத்திருந்தது, கழுகு முதலிய பக்ஷிகளும் நரம்புகளும் நாக்குகளும் பிறவுங் கூட்டமாயிருந்தது, ஆகாயத்தின்கண்ணே வலைவீசியதுபோலிருந்தது. உதிரநதியின்றீரத்திலிருந்துண்டாய ஆயுதவுன்னதவனவிருக்ஷங்கள் நிறைந்திருந்தன, இரக்ததடாகத்தின் அழகியமேற்றானங்களிற்கிடந்தபதாகைகள் செந்தாமரையழகைச் செய்துகொண்டிருந்தது, இரக்தக்குழியில் மூழ்கிக் கிடந்தவர்கள் தங்கள் சுகிருத்துக்களைக் கூவிக்கொண்டிருந்தார்கள், கரீந்திரப்பிணங்களினின்றும் சற்று நகர்ந்த இடுப்பு முதலிய ஒடிந்தவர்கள் மிரண்டு பார்த்துக்கொண்டிருந்தார்கள், கட்கங்களாற் சிதைக்கப்பட்டகொடிவிருக்ஷங்களானே அர்த்தகபந்தங்கள் சந்தேகிக்கக்கூடினவாக இருந்தன, இரக்தநதிகளில் மிதவாநின்ற யானைகளின் கண்டங்களும், மேல்விரிப்பு அம்பாரி முதலியவையும், ஓடக் கூட்டங்கள்போலுமிருந்தன, இரக்தநதிகளில் விளங்காநின்ற வெள்ளாடைகள் நுரைப்பிண்ட ஆடலொத்திருந்தன, சஞ்சா

ரத்தின்பொருட் டேவப்பட்டு வேகத்தோடுசெல்லும் வேலைக்காரர்கள் பிணங்களாற்றடைப்பட்டுழன்றார்கள். முண்டங்கள் இங்குமங்கும் குதித்துக்கொண்டு திரியத் தானவக் கூக்குரன்மிகுத்திருந்தது, மேல்வடிவுற்ற பெருஞ்சித்திரங்களோடு கூடிய சக்கரக்கூட்டங்களால் அடிபட்ட சைனியங்கள் திசைதிசையோடிக்கொண்டிருந்தன; இரக்தசப்தசகிதபாங்காரமும் பேத்காரமும் ஆகிய இறந்துமிறவாமலுமிருப்பவர் தஞ்சப்தங்கள் மிகமிகக் கிளம்பிக்கொண்டிருந்தன, சிலமுகங்களில் ஒழுகும் இரக்ததாரையைப் பானஞ்செய்யும்பொருட்டுப் பற்றுதலின்மையானே இறகடித்துக்கொண்டு தூளிகளையெழுப்பும் கழுகு முதலிய பக்ஷிக் கூட்டங்கள் பறந்துகொண்டிருந்தன. மிகவும் பெரிய பெரிய வேதாளக்கூட்டங்கள் தாளம் முதலிய வாத்தியவிசேடங்களோடு கூத்தாடும் சங்கடங்கள் மிகுதியாகவிருந்தன, கெட்டுப்போன தேர்மரத்துள்ளே பாதிச் சரீரமகப்பட்டுக்கொண் டுயிர்போகாமல் சிலபேர் கதறிக்கொண்டிருந்தார்கள், உள்ளேயிருக்கும் நன்கு ஜீவித்துக்கொண்டிருக்கும் வீரர்கள் அசைதலால் மிகப் பயமுண்டாகிக்கொண்டிருந்தது, இரக்தச்சேறுனது முகம் நிறைந்து சிறிது ஜீவித்துக்கொண்டிருந்ததால் தயையைய முடிவாகப் பிணங்கள் உண்டயனவாயின, சிறிதுயிரோடிருப்பவர் தலையைத் தூக்கியதும் மிகவுந் துக்கத்தோடும் நாய்களும் வாயசங்களும் விழித்தன. ஏகமாமிசவுற்சாகத்தானே இராக்ஷசர்தம் போர்க்கோலாகல ஆகுலமிகுத்திருந்தது, ஏகமாமிசம் பொருட்டுப் போர்செய்துகொண்டு பரஸ்பரம் கூட்டமாக அநேக இராக்ஷசர் இறந்தொழிந்தனர். விசேஷமாக இறந்துகிடவாநின்ற எண்ணிறந்த குதிரைகள் யானைகள் வீரர்கள் தேராளிகள்தம் உதிரங்களும், வெட்டுண்ட ஒட்டைகளின் கழுத்தினின்றொழுகும் இரக்தங்களும், ஒருங்குகூடிப் பெருகியோடி யழகுசெய்துகொண்டிருக்கும் நதிகளோடும், காயாமல் இரக்தந் தெளிக்கப்பெற்று இலைகளையுடைத்தான ஆயுதவிசேடக் கொடிகளோடும், கூடியிலங்கும் போர்க்களமானது யமனுடைய உத்யானவனமாக விருந்தது, கற்பாந்தத்தில் யாவும் விபரீதமுற்ற சைலத்தோடுற்ற ஜகம்போலும் இலங்கியதாம்.

38-வது போர்க்கள வருணனம் முற்றிற்று.

---

## 39—வது சூரியாஸ்தமய முதலியவற்றின் வருணனம்.

இப்போது, சூரியாஸ்தமயமும் சந்தியையும் அரக்கர்வேதாளக்கூட்டங்களின் ஆடம்பரங்களும் பயங்கராதியாதிக்யமும் இரவில் இரணஸ்தானநிலையும் வருணிக்கப்பெறும். அக்கால்அஸ்தமித்த ஆதித்யன் வீரரைப்போலும் இரக்தமயமாகஇருந்தனர், நிர்மலமான ஆகாயத்தில் மந்தஇரஸ்மியுடையவராயினர், மேற்குக்கடலில் ஸ்நானஞ்செய்யப்புகுந்தனர், வீரர்தம் ஆயுதவர்க்கங்கள் பிரபையாவுமிழந்து சமுத்திரஞ்சென்றுவீழ்ந்தன, வீரருமாங்கே. சூரியவடிவமாய வீரராதுதலைகளற்று வீழ்ந்தஅளவில் முன்னர்விண்ணுங் கண்ணுடியில்

வீழ்ந்துபிரதிபலித்தஇரணஇரக்ததேஜசானது விடுபட்டு அற்பகாலம் சந்தியை ரேகையையுண்டாக்கியது. பூமியிலும் பாதாளத்திலும் ஆகாயத்திலும் திக்கு களிலும்பிரளயக்கடல் நீர்க்கூட்டம்வியாபிப்பதேபோலும், சர்வதிக்கு வளை யங்களால் வளையாகாரமாகத் தொனிக்கும் கரதாளங்களும் சுற்றிக்கூத்தாடும் பனைபோனீண்டவேதாளங்களும் வியாபித்திருந்தன, தினவடி வகஜராஜேந் திரங்களின் மேன்மைதங்கிய மஸ்தகங்களில், சாணையிற்றீட்டப்பட்டு இருள்நீங் கியவாளாயுதங்களானே வெட்டியமாத்திரையில், சந்தியைச் சிவப்புவாய்ந்த நக்ஷத்திரக்கூட்டங்களையொத்து இரக்தந்தோய்ந்து சிவந்தமுத்துக்கூட்டங் கள் சிதறிக்கிடந்தன. அன்னமுதலியஜந்துக்கள் அகன்று, அந்தகாரத் தால் இருண்டுகிடந்த தடாகங்களில் முன்னர்தொனித்துக்கொண்டிருந்த வண்டுகளோடுகூடிய பதுமங்கள், இறந்தவர்களுடைய இருதயங்களில் உயிர் அகன்று, மோகம்மூடியிருளுற்று, முன்ஜீவனப் பிரேமையுடைத்தாயிருப் பப் பிராணன்கள் பெருமூச்செறிந்து சப்தித்துச்சென்றுவிடுவனபோலுங் குறுகியிருந்தன. மரணதுக்கத்தால் கண்டங்களைத்தூக்கும்படியாகச் செய் வித்தகட்கங்கள் பிணச்சரீரங்களிற் புகுந்தனபோல இறகுகளையடக்கிக்கொண்டு குறுகித்தூக்கித் தொங்கும் கந்தரத்தொடும் பறவைகள்தங்கள்கூண்டுகளில் நொடியில்தூங்கின. பரிபூர்ணசந்திரப்பிரகாசத்தோடுகூடி அந்நிலவுக்கொப்பா யிலங்கும் குமுதாதிபுஷ்பபந்திகள் மனோரம்மியமாகஉண்டாகி வீரர்பக்ஷங் களில் வெற்றிலக்குமியொளிர்வதேபோலும் ஒளிர்ந்தன. சந்தியையின்சிவப் பிரதிபலினத்தால் இரக்தசிருசவாரி மிகுந்ததடாகங்கள், இரக்தவாரிமய மாயும் அங்கங்களில் ஒளிந்தபாணங்களையுடையதாயு மிலங்கும் இரணபூமி யானது சுருங்கியமுகங்களுடன் கூடியிருப்பதேபோலும் தம்மிடம்புகுந்த வண்டுகளையுடைய சங்கோசபதுமங்கள்நிறைந்தனவாகவிருந்தன. விண்சா மானது தீரா குமுதங்களோடு கூடியதாய் மேலேவிளங்கிக்கொண்டிருந்தது, கீழேயோவாரிசரமானது குமுததாரகத்தோடு கூடிவிளங்கிக்கொண்டிருந்தது. அணையற்றஆறுகள் அங்குமிங்கு மெங்குந்திசைகளில் விரிவனபோல இருளில் முன்னர்ப்பிராணிகள் வேறுபட்டிருந்து பின்னர்ஒன்றுகூடினவெனினும் ஒரு வருக்கொருவர் தெரிந்துகொள்ளமுடியாமையின் பய மத்தியந்தமடைந்திருந் தன. அப்போர்க்களமானது கானஞ்செய்துகொண்டு திரியும்வேதாளகுலக் கூட்டங்களால் நிறையப்பெற்றிருந்தது, அங்கு பிணங்களின் அங்கத்தேறிக் கழுகுகளும் அண்டங்காக்கைகளும் விளையாடிச்சப்தித்துக்கொண்டிருந்தன. அவ்விரண அங்கணமானது, மேதைமாம்சமயமான அக்கினியானது பசபச வெனச்சப்தித்து ஆகாயத்தையும் நக்ஷத்திரங்களையும் அளாவிகாஷ்டசிதை யால் ஜொலிக்கப்பெற் றெறிந்துகொண்டிருக்குமாறு விளங்கியது ; எல்லா அங்கக்களிலுமுள்ளஎன்புகளானவை வெளியாக எங்கும்வெடித்துக்கொண் டிருக்கும்படியாகஓங்கியெரியும் தேஜோசமுதாயமேஅங்கு வீரர்களைப்போ லும் பிரதானமாகப்பிரகாசித்துக்கொண்டிருந்தது. வேதாளமங்கையரால்

தொடங்கப்பட்ட ஜலக்கிரீடையிற் போலச் சுடலைத்தீக்களில்மறைதலாதி விளையாட்டுடன் கூடியப்போர்க்களமிலங்கியது. நாய் காக இயக்கவேதாளதாள கோலாகலமங்குமிகுத்திருந்தது, பூதங்களின் வரவுபோக்குகளால் நன்குபறந்த வனம்போலுமிலங்கியது; இரத்தம் மாம்சம் வசை மேதைகளைப்பிடுங்குவதிலாக்கிரமிகுத்த இடாகினிகளோடு கூடிவிளங்கியது, இரத்தங்களைக்குடித்துக்கொண்டும் வசைமாம்சங்களைத்தின்றுகொண்டும் கடைவாயிரண்டிலும் இரத்தம் ஒழுகும்படியாக நடித்துக்கொண்டுமங்குப் பேய்களிலங்கின. இடையிடைச் சிதைகளிற்பேய்களாலே பார்க்கப்பட்ட பிரகடஇரத்தங்களோடு கூடிய சவக்கூட்டங்கள் நிறைந்திருந்தன, பூதனைகள் தங்கள்தோள்களில்வைத்துப் பெரும்பிணங்களைத் தூக்கிக்கொண்டுசென்றன; கும்பாண்டமென்னும் பிசண்டிலப்பிசாசுகளின்கூட்டங்கள் பெருவயறுடையனவாய்ப் பேராகிருதியுடையனவாய் உக்கிரமூற்றுப் பெருந்தாண்டவமாடிக்கொண்டிருந்தன, சமித்சமித்தெனப் பிரலாபம்போலச் சவவக்திராந்தத்தில் சுவாலைச்சப்தங்கள் உண்டாகிக்கொண்டிருந்தன, மேதை இரத்தங்களின் ஈரத்தோடுகூடியபுகையினுல் அம்புதத்தோடுகூடியதுபோலிருந்தது. பிரவகித்துச்செல்லாநின்ற இரத்தநதியின்வேகத்திற் பாதங்களைவைத்தலினுனே பூதனைகள்பூமியிற் சஞ்சரிக்கின்றனவென எண்ணும்படியாயிருந்தன, வேதாளகுலங்கள் பிணங்களையிழுக்குங் காலங்களில் தங்கள்குலங்கட்கேற்றபடி சந்தோஷமதுரகீதங்களைப் பாடிக்கொண்டிருந்தன; இறந்தயானைகளின் வயிறுகளாகிய பெட்டிகளில் வேதாளக் குழந்தைகள் தூங்கிக்கொண்டிருந்தன, தனித்த போர்க்களத்தில் இரத்தபானதிகளைச் செய்து விளையாடலாமென்னும் முக்கிய உத்தேசத்தோடும் அநேக இராக்கதர் உலவிக்கொண்டிருந்தனர். மதம்பிடித்த வேதாளங்கள் கலகஞ்செய்யத் தொடங்கிச் சிதையிலிருக்குங் கொள்ளிக்கட்டைகளை வீசிப் போர்புரியப் பிரகாசம் மிகுத்திருந்தது. பெருகாநின்ற இரத்தவசைகலந்த கந்தக்கடுங்காற்றடித்துக்கொண்டிருந்தது, மேலும் பூதனிகளின் பெட்டிகளினின்றும் வெளிக்கிளம்பி விசிரடரடவெனச் சப்தஞ்செய்துகொண்டிருந்தது, பாதிவெந்திருக்கும் பிணங்களைத்தின்னவேண்டுமென்ற ஆசைமிகுத்து இயக்கர்கள் சண்டையிட்டுக்கொண்டிருந்தனர், உன்னதமாயிராநின்ற வங்ககலிங்கதங்கணதேசத்தவர் அங்கங்களில் பேய்களும் கழுகுகளும் பிடுங்கித்தின்றுகொண்டிருந்தன; நக்ஷத்திரங்கள் வீழ்ந்தனபோன்ற தந்தங்களானே சிரித்துக்கொண்டிருக்கும் சன்முகப்பட்ட சுவாலைவடிவங்கள்மிகுத்திருந்தன, இரத்தச்சேற்றின்கண்ணே நடுமத்தியிற் குதித்துச் சிறித்து உல்லாசமாய்த்திரியும் எங்கும் இரத்தமயமாய விகாரரூபவேதாளங்கள் விலங்கிக்கொண்டிருந்தன, பேய்கள் பயந்தோடும்படியான கேட்கமுடியாதான சப்தங்களைச்செய்துகொண்டு அநேகயோகினிக்கூட்ட அதிபதிகலிலங்கின. விஸ்தாரமாய ஆந்திரமகாநாடிகளில் வெகுவாகச்செய்யப்பட்ட வாத்தியங்கள் சப்தித்துக்கொண்டிருந்தன,

இறந்து பிறவாமலுங்கிடந்த சற்படர்கள் பூதனைகளைப்பார்த்தவுடனே திடீ ரென்றுபயத்தையடைந்தார்கள், பேய் பேய் என்னும்வாதனையானே பேய் வடிவமாகவே அநேகமானவர்கள் ஆனர்கள், சிலபால் வேதாளங்களும் அரக் கர்களும் பெரியதானகல்யாணமகோற்சவம்கொண்டாடினர்கள். தமது பூதனை கள் தங்கள்தோளிற்றாக்கிக்கொண்டுபோகும் பிணம் வீழ நிசாசரர்பயந்தனர், சிறிதுயிரிருக்கும் சவங்கள் குதிப்ப அரக்கர்அஞ்சினர் ; ஆகாயத்தின்கண்ணே ஒன்றேடொன்றிடித்துக்கொள்ளும்படியான பிரசித்தமல்லாத பூதபெட்டிக ளால் நிரந்தரம்சங்கடமாகஇருந்தது ; மிகவும் முயன்று அபகரித்த இறந்த நரமாமிசத்தையுடைத்தாயிருந்தன, தமதுபக்ஷியமாக அபேக்ஷிக்கப்பட்ட பக்ஷங்களில் விக்ஷேபத்தைத்தரும் சவக்கூட்டங்கள்நிறைந்திருந்தன ; குள்ள நரிகளின் முகங்களின் அக்கினிச்சுவாலைகளால் உச்சேதமிலாது எழுந்து மூர்ச்சை யினின்றும் நல்லுணர்வுபெற்றவர்களானும் இரக்தத்தால்வியாபிக்கப் பட்ட நரர்களானும் நாற்புறங்களிலும் புதிதாய அசோகபுஷ்பக்கொத்துகள் போலும் விளக்கங்கள்உண்டாயின ; வெட்டப்பட்ட சிரபந்தனவிளையாட்டு களில் மிகக்கவலையுற்றவர்களாய் வேதாளபாலகர்திரிந்தனர் ; இயக்கஅரக்க பிசாசாதிகளின் பிரகாசியாநின்ற ஆகாயத்துள்ள கொள்ளிகள்நிறைந்திருந் தன ; ஆகாசபூதரங்களிலும் அவற்றின் கொடி வீடு குகைகளின்இடையீடுகளி லும் பிண்டம்போலும் நெருங்கியிருக்கும் வியாபகமான தமவடிவமேகங்கள் பீடம்போலும் நிலைபெற்றதாய்க்கூட்டமாயிருந்தன, அதிசஞ்சலத்தோடுகூடிய பூதங்களின்வேகத்தினுலே ஆகுலமிகுத்த கற்பக்காற்றால் தூற்றப்பட்டஜனங் களும் அவர்தம்கரகாதிஅநேகவஸ்துக்களும் அவதிப்பட்டுக்கொண்டிருந்தன ; இவ்வாருக பிரஹ்மாண்ட உதரத்திற்குச் சமானமாக இரணக்களமானது விள ங்கிக்கொண்டிருந்தது.

39—வது சூரியாஸ்தமயமுதலியவற்றின் வருணனம் முற்றிற்று.

---

## 40-வது ஸ்மிருதியனுபவ வருணனம்.

இப்போது, விதூரதன் தூங்கியபின்னர் அம்பிகை லீலைகளின் அரண் மனைப்பிரவேசமும் ஆதிவாகிகதேகத்தின் தத்துவமும் வருணிக்கப்படும். இவ் வண்ணம் நிசாசரரகளது ஆசாரத்தினுலே நீள்போது கோரமாய்ப் பயங்கர மாயிருந்த போர்க்களத்தில் யமசம்பந்திகளாகியதூதர்களும் தாழ்ந்தபிசாசா திகளும் சுழன்றுதிரிந்தனர், பகலில் ஜனங்கள் தங்கட்குத்தக்க ஆசாரங்களைச் செய்வதேபோலச் சகலகோலாகலங்களும் நடந்துகொண்டிருந்தன; கையாற் பிடிக்கமுடிவதேபோலும் நெருங்கியிருக்கும் இருட்பிண்டத்தால் பிரகடி பூதங்களாய குட்டியங்கள் அங்கிலங்கின, அவ்விதமாய இருள்வடிவவீட்டில் பக்ஷியசமிருத்திலாபமாகியவழி வஸ்திரமற்றேடும்யாசக தைனியத்தோடு கூடிய பூதக்கூட்டங்கள் கிரீடித்துக்கொண்டிருந்தன; இங்ஙனம் போர்க்களத் திநிருப்ப நகரத்திதிவருமாறு:—சப்தமியாதொன்றுமின்றி யிருளானது என்

குஞ்சஞ்சரிப்ப எல்லாத்திசைகளிலுமுள்ள பிராணிகள் அனைவரும் நித்திரை செய்துகொண்டிருக்குஞ் சமயத்தில் உதாரவடிவமான லீலாபதியான விதூர தன் சிறிதுதுயரடைந்த மனத்தினன்போலும் எல்லாஇரகசியங்களையும் உண ரும்படியான ஆற்றலோடுகூடிய மந்திரிமார்களுடனே காலையில்நடக்கவேண் டுங் காரியங்களையாலோசித்து விரைவில் சந்திராதோத்திற்குச்சமானமாகிய அழகியவீட்டில் குளிர்ந்த ஒடுக்கத்தில் நீண்டசந்திர சமாகாரமான ஹிமசீதள சயனத்தில் ஒருமுகூர்த்தநேரம் கண்தாமரையைமூடி நித்திரைசெய்தனன், அக்கால் அம்பிகையும் லீலாதேவியும் தமது ஆகாயஇருப்பைவிட்டுத் தாமரை யின் மொக்கில் காற்றின்ரேகைகள் புகுந்தனபோல அவரசனிருப்பைச் சாளர வாயிலாக அடைந்தனர். அதிசூக்குமமாயிராநின்ற பிரஹ்மாண்டசித்திரத்தி னின்றும் வெளிக்கிளம்பும் விஷயத்தில் முன்னர் வினவியபொருளையே ஸ்ரீ இராமர் மீண்டும்திடப்படுத்தும்பொருட்டு அறியும் அவாமிகுதியோடும் வினு தல்:—ஹேபகவன்! ஹேவாக்குவல்லவரில்வல்லவ! இத்தூலகாயம் எத்துணை மாத்திரம், நான்குகைப்பிரமாணநீளமல்லவா, எங்ஙனம் விரைவில் தந்துதனு ரந்திரத்தாற் புகுந்தார்கள். ஹேபுண்ணியமூர்த்தியாகிய இராகவ! ஆதிபௌ திக தேகமியான் என்னும் மயக்கமதியாவனுக்கோ அவன் இவ்வணுரந்திர சூக்குமசித்திரத்தாற் செல்ல ஆற்றலற்றவனேயாவன்; ஏனெனின் இதனால் யான் தடைப்பட்டவன்யான் இச்சித்திரத்தில்நரதேகி இயற்கையால் அளவிட முடியாதவனாக இருக்கின்றேன் என்னும்மதியுடையவன் முன்னர்அநேக முறைஅனுபவிக்கப்பட்டதேயாய தூலதேகசொரூபத்தகைமையை ஆன்மா விற்கனுபவிப்பனாகஆகின்றான், அதனால்இம்முறையே செல்லமுடியாமையை யேயனுபவிக்கின்றான்; தூலநரதேகதாதாத்மியபுத்தியின்மையாலும், ஆதிவா கிகதேகமாத்திரத்தகைமை நிச்சயத்தாலும், பூர்வகாலத்திய நிடவாசனாவிசிஷ் டனாகிச் சூக்குமத்தினும் அதிசூக்குமமாய துவாரத்தினும்செல்லு மாற்றலு டையேன் என்னுமுறையில் நூற்றுக்கணக்கான அனுபவமுடையவனே அத் தகைய கமன இயற்கைமுற்பட்டவடிவ அறிவங்கிசவியற்கையனாவன், அத்த தகையன்பிற்காலத்தில் தூலதேகஅனுரூப நிரோதாதிய தொழிலோடுவிசே டிக்கப்பட்டவனாக எங்ஙனாகுவன், முன்னர்வெளிப்பட்ட ஆற்றலியற்கையா னது வேறொருவிதமாக்குதற்கு முடியாதல்லவா! வெளியிலும் வஸ்துவின் ஆற்றலியற்கை அவ்வாறே நியதமாகக் காணப்படுகின்றது; வாயுமேனோக் கிச்செல்வதில்லை அக்கினி கீழ்நோக்கிச்செல்வதில்லை, யாதுஎங்ஙனந்தான்முன் வெளிப்பட்ட ஆற்றலுடையதாமோ அவ்வுணர்வு அங்ஙனமே நிலைபெற்றதா கும்; ஸ்தூலதேகஆன்மபுத்திரகித யோகி பிசாசாதிகட்கும் நிரோதத்துக்கமில தேல் துவைதமாத்திர அத்தியாசமற்றவர்களாகிய தத்துவஞானிகட்கு அத் துயரமில்லையென்பது சொல்லவும் வேண்டுமோ, நிழலின்கண்ணே புகுந்தவ னுக்குத்தாப அனுபூதிகள் எங்ஙனமுண்டாம்? பரமான்மாவை நன்குசா க்ஷாத்கரித்துவிடில் அன்னியவஸ்து எதவனும் அனுபவிக்கப்படுவதேயில்லை.

அதிஷ்டானஅறிவின்கண்ணே தூலத்தகைமை சூக்ஷுமத்தகைமைமுதலிய சக்தி வெளிப்பட்டபோதினும் சித்தத்திற்கு அஃதோடமருந்தன்மையெங்ஙன மாவெனின்? எங்ஙனம் உணர்வோ அங்ஙனஞ்சித்தமாம், அஃதவ்வாறேய வஸ்திதியையடையும், ஆனால் எங்ஙனம் வேறொராருயமைவதோயெனின்? மிகுதியாயமுயற்சியினானே செய்யப்படும் யோகஞானஅப்யாசாதியால் மீண்டும்அன்னியதசையடையப்படும்; ஆண்டுஞானப்பிரயத்தானே வேறொராருக வாதல் கண்டாமன்றோ, கயற்றின்கண்ணே தோற்றிய சர்ப்பைகவுணர்ச்சியானது கயற்றின்றத்துவநிர்ணயமாங்கால் பலாத்காரமாய் நீங்கிவிடுகின்றது, மாறாயினோ அதுமுன்னிருந்ததுபோலவே நிலைபெற்றிருக்கும்; சித்தத்திற்குச் சம்வித் சக்தியனுசாரித்தன்மைபோலச் சேஷ்டைக்குச் சித்தானுசாரித்தன்மையும் பிரசித்ததரமேயாம், சம்வித்தெங்ஙனமோ அங்ஙனமே சித்தமாம், எங்ஙனஞ்சித்தமோ அங்ஙனமேசேஷ்டையாம், இதுபாலன்பொருட்டும் பிரசித்தமேயாம், யாவர்தாமிஃதறியார்; தூலதேகம்போல ஆதிவாகிகமாய சித்தசரீரமும் என்றடைப்படுத்தாதெனின்? சொப்பனசங்கற்பபுருடன் பிரதிமையாகிருதியன் ஆகாயமாத்திரத்தையாகாரமாகவுடையவன் எங்ஙனம் எதனாற்றடைப்படுவன். பௌதிகமாய இத்தேகத்திற்கு ஞானபலத்தாற்றான் எங்ஙனம்சித்தசரீரத்தன்மையின்அடைவு ஆதல்கூடும்? எங்கும் எவருக்குமேசித்தமாத்திரமே சரீரமாகும், இருதயத்தின்கண்ணே யிராநின்ற ஞானவலுவினானே வருவதுபோலச் சிலபாலிதுகாணப் பெறும், பெறவே பூதங்கள்சித்தத்திற்குப் புறம்பாக இராவென்றறிக. பூதங்கட்குச் சித்தத்திற்குப் புறம்பாக இருப்பின்றென்பதிவ்வாறும், இந்தப்பரமான்மாவினுடைய சித்திவிருத்தியைத்தாண்டாமல் இவ்வெல்லாப்பூதக்கூட்டங்கட்கும் அஸ்தமயம் உதயமாம்,ஆதிசர்க்கத்தில் அஞ்ஞானகருமங்களாலுண்டாம், பின்னர் தூலமாயபூதங்கள் பௌதிகங்கள் ஆகியதுவைதங்களின் கலப்பால்ஏகதேகபாவத்தால் ஐக்கியமும் காரணமாம் அதாவது பின்னர்பஞ்சீகரணப்படுமெனவுணர்க. இங்ஙனமே சித்தஅவ்யக்தங்கட்கும் சுத்தசித்தினும் தனிச்சத்துண்மையிலதாம், சித்தாகாசம், சிதாகாசம், ஆகாசம், எனமூவிதமாம், இம்மூன்றையும் ஒன்றெனவுணர்தி, அதிஷ்டானசத்தைக்கயலாக அவைதோன்றுவன்றோ இவ்வண்ணம் அதிஷ்டானசத்தைய தீனசத்தையொப்பேயாயினும், தூலத்தினும் சூக்குமத்தில் தடுக்காக்காரணவிசேஷமுளதாம், இச்சித்தசரீரத்தை எல்லாவஸ்துக்களினும் தன்னிச்சைப்படி ஆவிர்ப்பாவசக்தியடைந்திருப்பதாகவுணர்க, எங்ஙனமெனின்? பூர்வவாசனாகரும அனுசாரி பதார்த்த விளக்கத்தைத்தாண்டாமல் உதயமாம் இயற்கையுடையதாமாகலின்; வெளிப்பொருள் ஆற்றலனுசாரியியற்கையதன்றாம், அதுதானெங்ஙனமாமெனின்? சுக்தியையும் வெள்ளிவடிவமாகவுணருமாறு ஆசை நேர்தலின், சுக்திசக்தியை யனுசரித்துபேக்ஷிப்பதில்லையாம், ஆகவே ஸ்தூலத்திற்குப் பாகியவஸ்து வனுசாரித்தன்மை யுண்மையின் நிரோதங்கூடினும், சம்வேதன இச்சாமாத்திரஅனுசாரியாய சித்தசரீரத்

திற்கு நிரோதமில்லையாம். சர்வகதஉதயத்தகைமையை விரிப்பக்கேட்டி, மும்மையணுவினுள்ளேவசிக்கின்றது, ககனஉதரத்திற்றரிக்கின்றது, அங்குர கோசங்களில் இலயமடைக்கின்றது இலையிற் பசையுடைதாகின்றது,நீர்த்திரைத் தன்மையில் உல்லாசத்தை யடைகின்றது, சிலையுதரத்தில் நன்னடனம் புரிகின் றது, மேகமாகிப்பொழிகின்றது, சிலீயாகித்திகழ்கின்றது; இஷ்டப்படியாகா யத்திற்செல்கின்றது. பர்வதங்களின் உதரத்துள்ளும் பரவிவருகின்றது, அந்த மற்ற அவகாசசொரூபமாக இருந்து பரமாணுப்பான்மையைப்பற்றுகின்றது, வனமாகிய மயிர்களைத் தாங்கிக்கொண்டு பர்வதமாக இருக்கின்றது. தரையா கவும் ஆதாரமாகவும் தாரையாகவும் இருக்கின்றது, திடமூலமுடையதாகவும் ஆகாயமாகவும் நாடிகளாகவுமிருக்கின்றது, தேகத்தினுள்ளே கனவில் மேற் கூறிய பொருள்களாகத் தோற்றல் வெட்டவெளியேயாம், வெளியிலோ் இந் திரஜாலாதியில்காணல் கண்கூடேயாம். ஆகாசமாக ஆகின்றது, சித்தசொரூ பத்தினும் அபின்னமாக இருந்து இலகும் பிரஹ்மாண்டகோடிகளை யெங்குந் தாங்குவது கடற்சுழற்செய்கையையொக்கும். கிளர்ச்சியால் வேறுபாட்டை யாததாய்க் கருமானுசாரியான நல்லுணர்வானது சர்க்காதியின்கண்ணே சித்ததேகமுடையதாய் ஆகாசாதிமுறையானே பெரிய பிரஹ்மாண்டவடிவ மாய்ப் பின்னர் நுகர்வினையின் அனுசாரமாய் முயலும், கானல்நீரின்கண்ணே நீரின்பான்மைபொய்யாகவே புத்தியினற்றோற்றுதல்போலவே அஃதவ்வா றும், வந்திபெற்றமைந்தன் இந்ரன் என்பதாகக்கனவில் மயக்கமாய்த் தோற்றுவதேபோலத் தோற்றுமென்றறிதி. சூக்குமதமமாயிராநின்ற சித் தமே சர்வஜகத்தும் சர்வசக்தியுடையதும்ஆம், அதுவே அறியமுடியாத தத் துவமாய்த் தூலம்போலுமாகிப் பரதந்திரமாம், அறியமுடிந்ததத்துவமாயோ விவகாரத்தில் யாண்டும் தடையற்றதாகிச் சுதந்திரமாமெனக் கூறப்பட்டது, ஆண்டு நம்மனோரது சித்தம் தனித்தனியாக இத்தகைய ஆற்றலுடையதா? அல்லதில்லையா? முதலதேல் சித்தந்தோறும் விசித்திரசர்வபேதசத்வப்பிரசங் கமாம், மற்றதேலோ, சித்தத்தினின்றும் உண்டாகாதது சித்தத்தினும் அயல தேயாய்ஜகத்துருவமாம், அவ்வாறேயாவரானும் பார்க்கப்பட்டபடியினால், ஆகவே ஞானத்தாற்சித்தநாசமாயினும் ஜகத்தின்றொடர்பேயுண்டாம் என்னுங் கருத்தால் ஸ்ரீ இராகவர்வினுதல் :—ஹேபகவன்! நம்மனோராதியரைச் சம்பந் தித்திருக்கும் சித்தமானது கூறிய ஆற்றலுடையதாமா அல்லது ஆகாதா? முதலதேல், ஒவ்வொருசித்தமும் வேறும்ஜகத்சத்ரூபமும் ஆகாததென்னே? மற்றதேலோ அன்னியமெங்ஙனமாகாமற்போம் பார்க்கப்படுதலான். முதற் கற்பத்தையேயனுசரித்து ஸ்ரீ வசிஷ்டபகவான் உத்தரங்கூறுகின்றார் :—ஹே இராகவ! தனித்தனியேயிராநின்ற எச்சித்தமுளதோ அது இத்தகையரூப சக்தியையுடையதாம், தனித்தனியே ஒவ்வொன்றும் உதிதமாம், சித்தந்தோ றும் உலகமயச்சுமாம், கணகற்பவுலகசங்கங்கள் சிலருக்குநிமிடத்தில் உண்டாகி யொடுங்குகின்றன, சிலருக்கோ கற்பத்தாலவையாம் இம்முறையைக் கேட்பா

யாக; ஆயினெங்ஙனம் மகாப்பிரளயத்தின்பின்னர் சிருஷ்டிவிளம்புதல் கூடுமெனின்? மரணதிமயீமூர்ச்சை தனித்தனியாகவே யனுபவிக்கப்படுகின்றது. அம்மூர்ச்சையை மகாப்பிரளய இரவென நன்மதியோய்! நவில்வர்; வியஷ்டியாற்செய்யப்பட்ட சர்க்கத்தில் முன்னர்த்தாயமரணமே மகாப்பிரளயமாகும். அதனந்தத்திற் சர்க்கங்கங்கள் யாவருமே தனித்தனியே செய்வர்கள், சுபாவமாயிராகின்ற அவித்தையாலுண்டாய் அவஸ்தைகள் மூன்றுஞ் சொப்பன சங்கற்பங்களைச் சித்தமோக அசலநிருத்தியம்போலுஞ் செய்யும் "அதற்கு மூன்றினிதாருமிடங்கள் அவைகடாமூன்றுஞ்சொப்பனமென்ப" எனச் சுருதியுங்கூறுகின்றது. மகாப்பிரளய விரவினந்தத்தில் நீள்போதாகப் பரப்பிரஹ்மத்தினுடைய சமஷ்டி மனச்சரீரமாகிய ஹிரணியகருப்பன் சத்தியசங்கற்பத்தாற் நிகழ விரிப்பதேபோலத் தனித்தனியே மரணத்தின்பின்னர் விரிக்கும்; அதைத்தாண்டாமலே யுண்டாக்கலான் மனந்தோறும் நனுப்பிரபஞ்ச விசித்திரமாகிய அடைவுருதாம்; கனமுதலியவற்றே விசித்திரத்தகைமைகாண்டலின் இஷ்டமேயாகும்; சமஷ்டிமனச்சரீர ஹிரணியகருப்பன் சமஷ்டிபோக்கியமாகிய பிரபஞ்சத்தை விரிப்பதேபோல வியஷ்டி மனோமாத்திரமாயுலவுஞ்சீவனும் தன்தன்போக்கியமாகிய கனமுதலிய வியஷ்டிப்பிரபஞ்சத்தை யுண்டாக்குவன். அற்றேல், எதுதனை மனதால் மனனிப்பானோ அதுதனை வாக்கால் வழங்காநிற்பன, அதுதனைத்தொழிலால் ஆற்றுநிற்பன்" என்னுஞ் சுருதியினுனும் சர்வ அனுபவத்தானும் ஸ்மிருதிபோலும் கிரியைகட்கு ஏக வஸ்துவிஷயத்தன்மை நிச்சியிக்கப்பட்டுள்ளது, ஸ்மிருதியும் தனது காரண அனுபவம் சத்தியார்த்தத்தையுடையதாயின் யதார்த்தமாம், அசத்தியமாயின் அயதார்த்தமாம்; ஆண்டு நம்மனோருக்குப் பிராந்தியாதிக்யமுண்மையின் அசத்தியசங்கற்பமுண்மையின் நமதுஸ்மிருதிகள் அயதார்த்தங்கள், அவற்றுளவாய சிற்சில கனமுதலிய பிரபஞ்சங்கள் அசத்தியமேயாகுக; ஹிரணியகருப்பனுக்கோ முற்றறிவுண்மையிருத்தலின் மயக்கமின்மையின் சத்தியசங்கற்பத்தன்மை யுண்மையினுனும் அந்த ஸ்மிருதி யதார்த்தமாகாமையின் அவன் சிருஷ்டித்த பிரபஞ்சத்திற்கு மித்தியாத்தன்மையி னடைவுண்டாகா தாம் என்னுங்கருத்தால் ஸ்ரீ இராகவர் வினுதல்:—ஹே பகவன்! வியஷ்டி ஜீவர்களானே இறந்த தடையற்ற பிற்காலத்தில் ஸ்மிருதியினுனே தாங்கள் செய்த சர்க்கங்கள் அனுபவிக்கப்படுகின்றன, அதுபோலவே சமஷ்டியும், மகாப் பிரளயத்தின்பின்னர்த் தமது யதார்த்த ஸ்மிருதியினுனே சிருஷ்டித்தபிரபஞ்சத்தை யனுபவிக்கும் ஆகலின் அம்மிருதியினுனே ஏறிய பழைய மெய்ப்பொருள்கட்கே இக்கற்பசம்பந்த மெய்யுலககாரணத்தன்மை சம்பவித்தலின் உலகம் பிரஹ்மத்தினும் அயலாய சத்தியகாரணத்தன்மையற்றது என யாது முன்னோதப்பெற்றதோ அம்மதம் வியாகாதமடையுமேயெனின்? அங்ஙனமாகுக, ஆதி சர்க்கத்தில் யதார்த்த அனுபவஜன்னிய சர்க்ககாரணஸ்மிருதி அதற்குச் சம்பவிக்குமாயின்; அதுமுதலில் ஹிரணியகருப்ப

பதமடைந்தவுபாசகனுக்கு சம்பவியாதன்றே, அவனுக்குண்டாகுமிருதியும் உபாசனையாற்சம்பாதிக்கப்பட்ட சமஸ்காரஜன்னியமாம், யதார்த்த அனுபவ ஜன்னியமன்றும், உபாசனையும் முன்னையவியஷ்டிக்கே சமஷ்டியாவசிந்தனம்? யதார்த்தஅனுபவமன்றும், என்பதாக அயதார்த்தவுபாசனுசமஸ்காரஜன்னிய ஸ்மிருதி ஜன்னியத்தன்மையுண்மையின் ஆதிசர்க்கத்திற்குமெய்ம்மையின் அடைவின்றும், முன்னோர்சிலர் அயலோர் முற்றறிவுள்ளோர் அக்கால்உள ரெனவின்றும், யாவரும்முன்னரே மோக்ஷமடைந்திருத்தலின், இரண்டாவது கற்பாதிசர்க்கஹேதுவாய ஸ்மிருதிக்கோ பூர்வசர்க்கத்தனுபவித்த பொய்ப் பொருள் விஷயத்தன்மையேயென யாண்டும் சர்க்கசத்தியத்தகைமையி னடைவு இலதாம் என்னுங்கருத்தொடும் ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுகின்றார்:— ஹே இராமச்சந்திர! மகாப்பிரளயத்தின்கண்ணே ஹரிஹராதிகள்யாவருமே விதேகமுக்தத்தன்மையை யடைகின்றபடியினாலே ஸ்மிருதியின்சம்பவம் எது போலாம். எம்போலியதத்துவவித்துக்கள் விதேகமுக்தியடைதல் திண்ண மேயாம் விதேகிகளாகிய பத்மஜாதியர் எங்ஙனம் முக்தர்கள் ஆகாமற்போ வார்கள்? மரணஜன்மப்பிரயோஜக சர்க்கங்களில், நின்போன்ற அன்னியஜீவர் கட்குப் பழையபொய்ப்பொருளினனுபவ வாசனுஜன்னியமேயாய ஸ்மிருதி மோக்ஷாபாவவயத்தால் ஈண்டு காரணத்தன்மையையடைகின்றது. ஹிரணிய கருப்பசம்பந்தமான சிருஷ்டி, பிரதானத்தினின்றும் மகத்து அகங்காரமுத லனவென்னும்முறையானே புராணுதிகளில் கேட்கப்பெறுகின்றது, ஜீவசம் பந்தமான அதுவோ சகசமாகவே யுண்டாகின்றது ஆண்டு எங்ஙனம் அச் சிருஷ்டிக்கொப்பாக ஜீவசம்பவசிருஷ்டியைக்கூறுதல் ஏனுமெனின்? ஆண்டும் பிரதானமகதாதிமுறைகள் உண்டாமெனவுணர்தி, ஜீவனுனவன் மிருதிமூர்ச் சாந்தங்களில் விழித்ததுபோலிருப்பினும் பாகியத்தில் விழியாமலேயிருப்ப னே அவ்வவஸ்தையே மூலப்பிரகிருதியாமெனப் புராணுதிகளிற் புகலப்படும். "ஆகாயமெனவது குறுக்கினும் நெடுக்கினும்" என்னும் சுருதியினுனே வியோமாதிசப்தங்கட்கும் ஆண்டுப்பிரசித்தமாம், அது வியோமப்பிரகிருதி யெனப்படும் அதுவே யவ்வியக்தமாம் சிற்பிரதிபிம்பக்கிரகத்தாற் சடாசடம் ஆம், சிருஷ்டிக்கும் பிரளயத்திற்கும் ஆதியந்தஅவதி இதுவாம் பவஉதயத்தில். அதுவேபோத உன்முக அவஸ்தையில் மகதத்துவமாம் உணர்வுற்றிடின் அகங்காரதத்துவமாம், ஆகியபோது அத்தகைய அவஸ்தையோடுகூடிய ஆகாயத்தின்றும் அதாவதுமுன்மொழிந்த அவகாசத்தினின்றும் தன்மாத் திரை திசை காலம் கிரியை பூதம் பௌதிகாந்தமுண்டாம். அதுவே சிறிது உச் சூனமெனப்படும் சூக்கும அவஸ்தையையடையும்போது பஞ்சஇந்திரியங்களை யுணர்வதாகும், அதுவேசொப்பனஜாக்கிரங்களிற் றேகத்தையுணரும், அவ்விது இதற்கு ஆதிவாகிகமாம் நெடும்போதுசெய்யும் பரிசயத்தினுலும் கற்பனை மிகப் பருத்தலானும் பௌதிக தூலதேகத்திலகம்பாவத்தைப் பாலகன்போலடை யும்; அதன்பின்னர் திக்காலங்களையனுசரித்த பதார்த்தங்களின்றெழில்கள்

தூலதேகாசிரித சக்ஷுராதி யதீனமாகஇருப்பனவாய் அனுதிதமாகவே வாயுவின் அசைவுதொழிலேபோலும்வெளிப்படுகின்றன. இவ்வண்ணம் வீணாகவே விருத்தியை இப்புவனமயக்கமடைந்துகொண்டிருக்கும் கணநாயகியைக் கட்டியணைத்ததேபோல அனுபவித்போதினும் அசத்துமயமேயாம்; ஜந்துயாண்டு மரிக்குமோ ஆண்டே புவனவிஸ்தாரம் இவ்வண்ணமிது இருக்கின்றது என்பதுபோல விரைவில் அதுவேகாணாநிற்கும்! வியோமமே யாயின்ஜகத்தென்னும் மயக்கத்தை அதிதெளிவாக அனுபவிக்கும் அதுவும்வியோமரூபமேயாம், வியோமரூபியாய ஜீவன் ஆகந்துக தேகாதி யான்மவடிவமாயிருந்து ஆன்மவானைப்பிறந்ததுபோல யானென்றும் உலகென்றும் பெருமயலடையும், ஜகத்மயக்கத்தின் சிறப்பைக்கேட்டி, இந்திராதிதேவதைகளாலும், அமராவதி முதலிய அவர்தம்பட்டணங்களாலும், மேருமுதலிய அதன் ஆதாரசைலங்களாலும் அவற்றைப்பிரதக்ஷிணம்புரியும் சூரியன் நக்ஷத்திரமுதலிய கூட்டங்களாலும் சுந்தரமாக இருக்கும், ஜரைமரண விகலத்தன்மை வாய்ந்த வியாதிசங்கடக்குடில்களென்னும் மர்த்யலோகாதிகளுமுள்ளன. தமதனுகூலங்களின் சம்பாதனமும் பிரதிகூலங்களின் நிவாரணமும் ஆகியவிஷயங்களிற் பெரும்பிரயத்தினத்தோடுகூடிய தூலசூக்ஷ்மசரஅசரப்பிராணிகள் நிறைந்துள்ளன, கொடிகள் பற்றுக்கோடுள்ளதேசத்திற் பரவுதலும் பற்றுக்கோடில்லாத தேசத்திற்றிரும்புதலும் முண்மையின் உலகப்பிரசித்தமாயவற்றிற்கும் முயல்வுண்டாம், கடல்களும் மலைகளும் பிருதிவியும் நதிகளும் அவ்வவற்றின் அதிபதிகளும், அவற்றோடுகூடிய பகலிரவாதிகளும் கற்பம் கணம் க்ஷயம் என்பனவுமாம். இத்தந்தையால் உண்டானேன்யான் இவ்விடத்திற்றான் யான்பிறந்தது எனத் துணிவும் இவள்தாய், இதுதனம், இதுஎனக்கேயுரியதென்றும் என்னுடையதென்றுமுதித்தவாசனையும், சுகிருதமானது துஷ்கிருதமானது இது என்னுடையது என்னுங்கற்பனையும் முன்பாலனாக இருந்தேன் இப்போதுதருணனாகஇருக்கின்றேன் எனவும் ஹிருதயத்தின்கண்ணே விலாசமாகத்தோற்றுகின்ற வுலகமயக்கத்தைக்காண்பன். இப்போது தனித்தனியான அச்சீவசமுசாரத்தையே வனகண்டத்தன்மையானயானே வருணிப்பாம்:—தனித்தனியாகவே இவ்வாறு சமுசார வனகண்டகமானது உதயமுற்றிருந்தது, நக்ஷத்திரங்களால் மலர்ந்திருந்தது, நீலமேக சஞ்சல இலைகளோடுகூடியிருந்தது? அங்கு சஞ்சரித்துக்கொண்டிருக்கும் மிருக அநீகங்கள்நிறைந்திருந்தன, சுர அசுரப்பறவைகள் சுற்றிக்கொண்டிருந்தன, ஆலோகப் பிரதானப் பகல்களே மலர்ச்சம்பந்தி மகரந்தங்களாம், இருள்வாய்ந்த இரவுகளே புகுதமுடியாத கொடிவீடுகளாம்: கடல்களாம்புஷ்கரணிகளால் நிறையப்பெற்று அதுவிளங்கியது மேருமுதலிய அலச ஓடுகளோடு கூடியிருந்தது, சித்தமாகிய தாமரைக்கொட்டையினுள்ளே சமஸ்காரவடிவமாயிருக்கும் சித்தவிருத்திகளாகிய அங்குரங்களுடன் கூடியிருந்தது; யாண்டிவன் பிராணத்தியாகஞ்செய்தனனோ ஆண்டே இவ்வண்ணம் கணத்திற்காண்பன் வர்ணிக்கப்பட்ட வனகண்டகத்தை. இங்ஙனம்

தனித்தனியே உதயமாய ஜகத்கண்டங்களில் அநேகங்கோடி பிரஹ்மாக்கள், ருத்திரர்கள் இந்திரர்கள் தேவர்கள் விஷ்ணுக்கள் சூரியர்கள், பிஹ்மாண்டத் துள்ளடங்கிய அநேக லோகங்கள் பர்வதங்கள் கடல்கள் மண்டலங்கள் தீவுகள் முதலியவற்றைக்காண்பவர்களாகி யுலவிக்கொண்டிருப்பர்கள். சென்றனர் செல்வர் செல்கின்றனர் இத்திருஷ்டிகள் அசத்துச்சொரூபங்களாம், யாவர் பிரஹ்மத்தில் ஆவர்ப்பவித்து மகிழ்ந்து வாழ்ந்தனரோ அவர்தமைக்கணக்கிட யாவரான்முடியும் இவ்வண்ணம் பிரபஞ்சத்தினது ஆரோபக்கிரமத்தை வருணித்தாம் இனியபவாதக்கிரமத்தையும் கேட்டி! இவ்வண்ணம் குட்டியம் போலுந் தூலமாயிராநின்ற விசுவமானது சங்கற்பவடிவமான சூக்கும அவஸ்தையினும் அயலாக இலாததேயாம், "மூன்றுருபங்களே முதலுண்மையாம்" என மறையுமறைகின்றது; தூலம் திரவியற்கையது மனமோ சலனுன்மகமாயது ஆகலின் எங்ஙனம் இதற்குமனோமாத்திரத்தகைமை கூடுமெனின்? பாகிய விசுவம் திரமாகத்தோற்றியபோதினும் மனனித்த மனத்தால் இஷ்டப்படி பாவிக்கப்பட்ட அஸ்திரசுபாவமே யனுபவிக்கப்படும்; சுழலும்மனதிற் சுழல்வது போலவும், தெளிந்தமனதிற் றெளிந்ததுபோலவும், மலினமானமனதில் மலினமேபோலவும், மனோரதாதிகளில் உண்டாக்கப்பட்டுப் பிறவிடங்களில் ஆரோபிக்கப்பட்டன போலவும், யாவரானும் அநுபவிக்கப்படும், அதனையிப் போது நீ சுவானுபவத்தினலேயே ஆராய்ந்தறிதி. மனதையும் ஆராயின் அச்சாக்ஷிமாத்திரமாகவும் சாக்ஷியும் பிரஹ்மமாத்திரமாகவும் இருக்கின்றபடியாற் பூரணஏகசின்மாத்திரமேசேடித்துநிற்கும், மனனம்எச்சிதாகாசமோ அதுவே யாமது, அச்சிதாகாசமேபரமபதமுமாம் கூறியபொருட்குத்திருட்டாந்தமியாதெனின்? கேட்டி! எந்நீருளதோ அதுவேசுழியாம், அதற்குச் சுழியாதலுண்மையினின்றும், திருசியம்போலத் திருஷ்டாவே யிருக்கின்றனன்றி யுண்மையாகத்திருசியமின்றும்; அபூத அசத்திய அநாதியான மாயாகாயத்திலேனும், சூக்குமபூதகாரியசித்தாகாயத்திலேனும், ஜீவபாவமாகயாதொருவிளக்கமுண்டோ அதுவே நாமரூபவடிவமாக வரும் நானுபவனசீலமாய இவ்வுலகமென இயம்பப்பெறும், இந்திரஜாலஞ் செய்யும் மணியினனே ஆகாயத்தில் அநேக வித கந்தர்வநகரச் சித்திரம்போலும் பொலிகின்றதன்றே அது உண்மையாகச்சிதாகாசமாத்திரமாகவே யிருக்கின்றது. யானுணர்ந்தபொருள் அதிஷ்டானசின்மாத்திரம், நீயுணர்ந்தபொருள் ஆரோபிதசத்தை, நீ நானென்னும் உலகப்பிரமாதாவும் என்னுலுணரப்பெற்ற சாக்ஷி சின்மாத்திர சுபாவமேயாயிருக்கின்றதன்றி யுன்னுலுணரப்பெற்ற ஜீவசுபாவமாயில்லை. முடிபுற்றது யாதோவெனின்? ஆகலின்சத்தியசங்கற்பசித்தாகாசமாத்திரசரீரங்களையுடையவர்களாய் எங்கும் செல்லக்கூடியவர்களாய் புண்ணியசீலர்களாய் எவ்விடத்தும் அதிசூக்குமமானசிறுதுவாரத்தினும்புகுவதிற்றடையற்றவர்களாய் நிர்மல பரமத்மசொரூபிகளாய் விளகிங்கிக்கொண்டிருந்த லீலையும் கலைத்தெய்வமும், எக்காலும் எங்கெங்கும்மகாகாயத்தின்கண்ணே அடையவேண்டுமென்

றது அடையுமிச்சைப்படியும், அடைந்ததை அனுபவிக்குமிச்சைப்படியும் ஆவிர்ப்பவிப்பவர்களாய் அக்காரணத்தினுனே விதூரதன் வீட்டினுட்புகும் ஆற்றலுடையவர்களாயிருந்தார்கள் யாதொருதடையுமில்லாமல் யாண்டும் சிதாகாசமானது சம்பவித்துளது, அதுவேயசைவுற்றுமானச விஷயத்துணிபு வரை வெளியில்விரியுமியற்கைத்தாப் உண்மையுணர்வாம், அவ்வாதிவாகிகமு மீண்டு அதிசூக்குமமாகவேயுளதாமென்பர் அத்தேகங்கள் எந்நிமித்தத்தானே எவ்வகையானே எதுபோற்றடைப்படும் கூறுதி, எவ்வாற்றுனும் அதுதடைப் படுஞ்சம்பாவனையுமிலதேயாம்.

40-வது ஸ்மிருதியனுபவ வருணனம் முற்றிற்று.

---

## 41-வது பிராந்திவிசார வருணனம்.

இப்போது, உட்புகுந்த அவ்விருவர்களும் உறங்கியெழுந்த மன்னவனுற் பூஜிக்கப்பெறுதலும், மன்னவன்றொடர்பும் ஸ்மிருதிஞானவடிவ உபதேசமும் வருணிக்கப்படும். மன்னவனது அரண்மனையுட்புகுந்த அவ்விருதேவிமாரும் இருசந்திரர்போலிருந்ததால் மிகவும் ஒளிராநின்ற அதிவெண்மையான உத ரத்தோடும் அதுமிகவுமழகாக பதுமன் அரண்மனைபோலும் இருந்தது; இன் பப்பரிசமுடையதாய் நிருமல நறுமணமுடையதாய் மிகமிருதுவதாய் சங்கற் பத்தாலுண்டாய மந்தாரபுஷ்பமாருதம் வீசிக்கொண்டிருந்தது, அத்தேவிமார் களுடைய மகிமையினுலே மன்னவர்களும் மற்றைய ஆண்பெண்களும் நித்தி ரையில்மூழ்கினுர்கள், சௌபாக்கியத்தால் நந்தன உத்யானம் போலும் வியா திவேதனைகள் யாவற்றையும் ஓட்டியது, வசந்தகாலத்து வனம்போலும் எங் கும்மலர்ந்திருந்தது, காலைத்தாமரைபோலும் யாவர்வதனமும் மலர்ந்திருந் தது, சசிகிரணங்களைப்போலும் அதிசீதளமாய அத்தேவிமாரது திருமேனி களின் பிரபைப்பிரவாகத்தால் மிகமகிழ்வடைந்த அவ்வரசன் அமிருதத்தால் தெளிக்கப்பெற்றவனைப்போல விழித்தனன். இரண்டுமேருவின்சிகரத்தில் இரண்டுசந்திரபிம்பங்களிலங்குவ போலிலங்கும் திவ்வியமான தேவிமாரிரு வரும்சங்கற்பத்தாற் கற்பிக்கப்பட்ட இரண்டு பொன்னுசனங்களில் வீற் றிருப்ப அம்மன்னவன்கண்டனன். நீளநினையின் பூசைமுதலியவற்றின்றடை யால் அபராதம்நேருமென நிமிடகாலம் உண்ணினைந்து அம்மன்னவன் விஸ்ம யத்தையடைந்து, சக்ரகதாதரன் சேஷசயனத்தினின்று மெழுந்ததேபோலச் சயனத்தினின்றுமெழுந்தனன். நித்திரைப்போது வேறுபிரிந்திருந்த மாலையா ரம் அம்பரமுதலியவற்றை கண்டாதியதத் தமது சிதஸ்தானத்திலணிந்து இரு கரங்களிலும் மலர்ந்த புஷ்பங்களைக்கொணர்ந்து அன்புடன் புஷ்பாஞ்சலிசெய் வான் தன்னுடைய புஷ்பசயனத்தினின்றும் கிளம்பிப் பூமியின்கண்ணே பத் தபதும ஆசனத்தின்கண்ணேயிருந்துகொண்டு இதனைக் கூறத்தொடங்கினன்; ஜன்மம் துக்கஜீவனம் மூவிததாமம்முதலிய தோடங்களைக்கெடுக்கும் சந்திரப் பிரபைகளேவெல்க, வெளியுட்டமங்களைவிலக்கும் ஆற்றலோடுகூடிய சூரியப்

பிரபைகளே தேவிமார்களேவெல்க, வெனவியம்பித்தானே குடலையில் மல ரைக்கவர்ந்து அவர்களுடையபாதங்களிற் புஷ்பாஞ்சலியைச் சமர்ப்பித்தனன், அதுதிரவிருக்ஷம் தன்புஷ்பங்களைப் பதுமினிகளின் பதுமங்களிலுதிர்த்தன போலிலங்கியது. அந்த சரசுவதிதேவியானவள் மந்திரியைக்கொண்டு லீலா தேவிக்கு அரசனது பிறப்பின் பரம்பரையைத் தெரிவிக்கக்கருதிப் பக்கத்தில் நித்திரைசெய்த மந்திரியைச் சங்கற்பமாத்திரையானே எழும்புமாறு செய் தனள், எழும்பியதும் அத்திவ்யமான தேவிமார்களைத் தரிசித்துத் திருவடி யின்கண்ணே நமஸ்கரித்துப் புஷ்பாஞ்சலியைச் சமர்ப்பித்துச் சந்நிதியில் மிகவும் வணக்கத்துடன் உட்கார்ந்தனன். ஹேஅரசனே நீயார், யாருடைய குமாரன், எப்போதிங்குபிறந்தனை யெனத்தேவிவினவியதைக் கேட்டமந்திரி இவ்வாறு மொழியலுற்றான்:—ஹேதேவிமார்களே! தங்களுடைய பிரசாதமே யிதுவாம், தங்களுடைய சந்நிதியிலும் அடியேன் பேசும்படியான பாக்கியத் தையடைந்தேனல்லவா! அடியேனுடைய பிரபுவின் ஜன்மபரம்பரையைச் சொல்லக்கேட்பீர்களாக! இக்ஷ்வாகுவம்சத்திற் பிறந்தவனுய்த் தாமரை யிதழ்போன்ற நேத்திரமுடையவனுய்த் தன்புயநிழலினாலே மறைத்ததேபோ லச் சத்துருதாரித்திரமுதலிய சந்தாபங்களை நீக்கிப்பூமண்டலத்தைப் புரப்பவ னுய் ஸ்ரீமான் குந்தரதன்என்னும் பேரிறைவன் முன்னிருந்தனன், அவனுக் குச்சந்திரவதன முற்றபத்திரரதன் என்னும் நாமம்வாய்ந்தமைந்தன் உண்டா னான், அவனுக்கு விசுவரதன் என்னும் மைந்தனும், அவனுக்குப்பிருகத்ரதன் என்னும் மைந்தனும், அவனுக்குச்சிந்துரதன் என்னும்மைந்தனும் அவனுக்குச் சைலரதன் என்னும்மைந்தனும், அவனுக்குக்காமரதன் என்னும்மைந்த னும், அவனுக்குமகாரதன் என்னும்மைந்தனும், அவனுக்கு விஷ்ணுரதன் என்னும்மைந்தனும், அவனுக்கு நபோரதன் என்னும்மைந்தனும், அவனது மகத்தாகிய புண்ணியபுஞ்சபரிபாகத்தால் இவ்விதூரதன் என்னும் எங்களது பிரபுவானவர் உண்டானார், இவர்பூர்ண அமல ஆகிருதியுடையவர், அமிருத திருஷ்டியினாலும் சிநேகமாதுரிய ஔதாரியாதி குணங்களினாலேயாவரையும் மகிழ்விப்பவர், பாற்கடற்குப் பூரணசந்திரனைப்போன்றும் யாவரையும் பூரிக் கச்செய்பவர், சுமித்திரையென்னும் தாய்க்கு ஸ்ரீபார்வதிதேவியாருக்குக் குகன் உண்டானதேபோல அபரகுகனெனும்படி யுதித்தனர், இவரதுபிதா பத்தாவதுவயதில் இவ்விராஜ்ஜிய பாரத்தையிவர்பாற்கொடுத்து வைராக்கி யத்துடன் வனஞ்சென்றனர், அது முதலாகத் தருமத்துடன் இப்பூபீடத்தைக் காப்பாற்றிவருகின்றார், எங்களுடைய அறத்துருமம் பலந்தரவருங்காலம் போலும் நீங்கள் எழுந்தருளினீர்கள், தங்களுடைய தரிசனம் நீள்தவத்தாலும் அநேகங்கிலேசங்களாலும் கூடக்கிடைப்பது அருமையன்றோ! இத்தகைய தரிசனத்தையன்றோ இப்பாக்கியவானான எங்கள் அரசர் பெற்றனர், இன்று உங்களது திருவருளினாலே இம்மன்னர்மன்னவர் பரமபவித்திரத்தையடைந்த னர் எனக்கூறி மந்திரியானவன் மௌனமாகவிருந்தனன் அவ்வாறே மன்

னவனும் நமஸ்கரித்து வணங்கிய முகத்தோடும் பூமியின்கண்ணே பத்தபதும ஆசனத்திருந்தனன், அவனைநோக்கி, ஹே அரச! முன்ஜன்மவரலாறெல்லாம் நினைதிநீவிவேகத்தால் எனச்சுயமாகவே சரசுவதிதேவியானவள் தமது திருக்கரத்தால் அரசனது சிரத்தைத்தடவிக் கூறினள், கூறவேஹிருதய ஆகாசத்திலிருந்த ஜீவனை மறைக்கும் இருண்முதலியவை நஷ்டமாயின, ஞானதேவியார் பரிசித்தமாத்திரத்தில் அவன் மனமானது சாந்தப்பிரகாசத்தோடு கூடியதாயிற்று, இருதயத்தின்கண்ணே விளங்கித்தோற்றுநின்ற பூர்வவிருத்தாந்தம் யாவற்றையும் நினைந்துகண்டனன், விடுத்ததேகத்தையும் சக்கரவர்த்தியாக இருந்து ஆண்டமையையும், லீலாதேவியோடு விலாசித்துக்கொண்டிருந்ததன்மையையும், ஞானதேவியாரது திருவருளினதுவலுவினாலே அனுபவிக்காதனவாயினும் அறிந்தனன், மகாதேவியாரது விருத்தாந்தத்தையும் லீலாதேவியினுடைய விசேடவிருத்தாந்தத்தையும், தன்னுடைய முற்சரித்திரத்தையும், கண்டு ஆனந்தசமுத்திரத்தின்கண்ணே மூழ்கியவன்போல ஆயினன், ஆ! ஆ!! சமுசாரமயமாய நமது மனதில் இம்மாயை இவ்வண்ணமன்றோ விரிந்துகிடக்கின்றது, தேவிமாரது திருவருளாலன்றோ இப்போது யாவற்றையும் கண்டனன். ஹேதேவிமார்களே! முன்னிருந்த எனக்கு ஒருநாள்தானே ஆகியிருக்கின்றது இப்போதெனக்கு எழுபதுவருடம் கழிந்துளதே இஃதென்னே! அநேககாரியங்களை ஸ்மரிக்கின்றேனே, முப்பாட்டனையும் நினைகின்றேனே பாலியத்தையும் தாருண்யத்தையும் மித்திரர்களையும் நெருங்கியபந்துக்களையும் நினைக்கின்றேனே இஃதென்னே! என்றுமன்னவன்விண்ணப்பிக்க, அதற்கு ஞானதேவியார் சர்வப்பிரபஞ்சமும் சொருபத்தானே அதிஷ்டானசின்மாத்திரசொருபமாகவே யிருக்கின்றது தோற்றமாகியமற்றையதோ மாயாமாத்திரமேயாம் என்னு முண்மையையுபதேசிக்கும் பொருட்டுமுதலில் தூரதேச காலத்திலிருக்கும் லோகாந்தரகமனமயக்கமகற்றி யுபதேசிப்பதாவது:— ஹேமன்னவனே! மரணமகா மோகமூர்ச்சையின் பின்னரே, அதேகாலத்தில் இந்தினது வீட்டிலேயே இதனதிஷ்டான சிதாகாசத்திலேயே இருப்பதும் மாயாவரணத்தான் மறைபட்டதாய கிரிக்கிராமத்த அந்தணன் வீட்டினுள்ளே யிருப்பதும் அப்பதுமாண்டத்திலிருப்பதும், அவ்வரண்மனையிலேயே யிருப்பதும், அதனினும்பிரதான கிரகத்தினுள்ளேயுள்ள ககனத்தேயிருப்பதும் ஆம் இப்பிரமாண்டமண்டபம். இந்தப் பிரஹ்மாண்டமண்டபத்தினுடைய உள்ளே இப்போதுகாணப்படும் நினது ஜன்மாதிதோற்றுநிற்கும் புதிதாகவே, ஆனால் அந்தப் பிராஹ்மணரது ஜகத்தே இவ்வாறு தோற்றுகின்றதோவெனின்? இன்றும், மற்றோ, வேறுவேறாகவே இவ்வுலகவீடானது தோற்றுகின்றது, தனித்தனியாக இருப்பதையேகாட்டுதும், பிராஹ்மண வீட்டினுள்ளே எனது பத்தனை இருக்கும் ஜீவன்உளன், ஆண்டேயவனது பூபீடம் அம்மண்டபத்தின்கண்ணேயுளது. அக்கிரகத்தினுள்ளேயே இப்பதுமசமுசாரமண்டலமிருக்கின்றது, அப்பதுமக்கிரகமண்டபத்தின்கண்ணே பையவேயாரம்பிக்

கப்பட்டதாயிந்த நினதுவீடிருக்கின்றது, மூன்றுலோகமுமே மனோவிகார மாத்திரமாக இருக்கின்றதாகலின் நினது நிருமல ஆகாசமயமாய நிருமல மனத்தின்கண்ணே இந்தவிஸ்தார விவகாரமயக்கத்தினுடைய பிரதிபிம்பமான துண்டாகியிருக்கின்றது (நிருமலக்கூற்றுப்பிரதி பிம்பப்பொருட்டாம்) விவகாரமயக்கவிஸ்தாரம்கண் கண்டதைக் கொண்டேகருதலாமன்றோ! என்னுடைய ஜன்மம் பிரசித்தமாயிருப்பதேபோலயான் இக்ஷுவாகுகுலத்தன் என்பது பிரசித்தமாகவே யிருக்கின்றது, என்னுடைய பெயரின்னது எனக்கு முன்னரே பாட்டன்மார்கள் இருந்தார்கள், யானிப்போது பிறந்துபாலகனாக இருக்கின்றேன் எனக்குப் பத்துவருடமாயிருக்கும்போது என்னுடையதந்தை பரிவிராட்டாகித் தவப்பொருட்டுக் காட்டுக்குச் சென்றனர் யான் இராஜ்ஜிய அபிஷேகஞ் செய்துகொண்டு இங்கிருந்து பின்றிக்கு விஜயஞ்செய்து ஏக இராஜ்ஜியமாக்கிக்கொண்டு இந்த மந்திரிமார்களோடும் இந்நாட்டுப்பிரஜைகளோடும் நீதியாக இராஜ்ஜியத்தைப் பரிபாலிக்கின்றேன், யாகாதிக்கிரியைகளின் நெறிபிறழாது தருமமுறையிற் பிரஜைகளைக் காப்பாற்றிவருகின்றேன் இப்போதெனக்கு எழுபதுவருடமாகின்றது இப்போது அன்னியசத்துருக்களால் எனக்குப் பெரும்போரானது சம்பவித்திருக்கின்றது, இப்போரைப்புரிந்து இப்போது இவ்வீட்டில் வந்து சயனித்திருந்தேன், தேவிமார்களாகிய நீங்களிருவரும் எழுந்தருளினீர்கள் தங்களைப்பூசித்தேன், தன்னைப் பூஜிக்கப்பெற்ற தேவதைகள் வேண்டியவரங்களைக் கொடுப்பதற்காகத்தாமே யெழுந்தருளுமன்றோ! இவ்விருதேவிமார்களுள் ஒருதேவி எனக்கு என்பூர்வ ஜன்மவரலாறுகளை யெல்லாஞ்சிந்திக்கும் உணர்வையளித்தனள் அதனால் இரவியின் பிரபையால் இனியகமலம் விரிதல்போல என்னிதயமியாவுமுணருமாறு விரிந்தது, இப்போதுயான் கிருதகிருத்தியனாகிவிட்டேன் என்னுடைய ஐயமெல்லம் நீங்கிவிட்டது, சர்வதுக்கங்களும் நீங்கிவிட்டமையானே மகாசாந்தனாக இருங்கின்றேன், நிரதிசயசுகத்தை நிறையவடைந்திருத்தலின் பொங்கித்ததும்பிப்பூரித்துள்ளேன் கேவலம் ஏகரசமான சுகரூபமாகவே துலங்குகின்றேன், என்பதாக இங்ஙன்பெருமயக்கம் மிகநிறைந்துண்டாகியிருக்கின்றது, நினக்கு நானாசாரவிகாரங்களோடு கூடியவர்களுடனும் லோகாந்தர சஞ்சார சித்தர்களாகிய எம்போலியர்களுடனும் உண்டாகிய திப்பெருமோகமென்றுணர்தி, முன்னரெம்முகூர்த்தத்தில் நீமரணத்தையடைந்தனையோ அம்முகூர்த்தத்திலேயே இருதயத்தின்கண்ணே இத்தோற்றமானது சுயமாகவே உண்டாயது, நீரில்ஒருசுழல்போய் மற்றொருசுழல்வருவதேபோல இம்மயக்கம்உண்டாயது அதிவேகமாக நதிப்பிரவாகமும் சித்தப்பிரவாகமும் மாறிவருவதேபோல மாறியது, மற்றொருசுழற்சியோடு மற்றொரு சுழற்சிசேர்ந்துவருவதேபோன்று சேர்ந்துவந்தது, ஒவ்வொருகால் சிருஷ்டிலக்ஷ்மியானது சேர்ந்தும் சேராமலும்வளரும், நனவின்கண்ணே வேறுஜீவர்களுடைய சர்க்கத்தோடுசேரும், கனவின்கண்ணே சேராதாம், அம்மரணமுற்ற முகூர்த்தத்தில்

ஞானபானுவாயசினக்கு இத்தோற்றமெல்லாமுண்டாம் இவ்வசத்துருபக்கூட்டமெல்லாம் உண்டாம், கனவினிற் கடிகையொன்றிற்கண்டாமன்றே நூறு வருடமயல், சங்கற்பநிர்மாணங்களில் ஜீவனம்மீண்டும் மரணங்கண்டாம், கந்தர்வநகரத்திற் குட்டியங்களையும் அதன்கண்ணுற்றசித் திரங்களையும் கண்டாம், ஓட்மோட அதனுள்ளிருப்பவனுக்குப் பக்கத்திருக்கும் விருக்ஷமும் பர்வதமும் ஓடுவதன்காண்கையுங்கண்டாம், தன்னுடையதாதுக்களாகிய வாதபித்த சிலேஷ்மங்கள் கலக்கமுறவே சந்நிபாதமுண்டாக அபூர்வமாகப்பர்வதநர்த்தனமுண்டாதலுங் கண்டாம், கனவின்கண்ணே விவகாரத்திற்குப்பொருந்த மறப் பொய்யான தன்றலைவெட்டித் தன்கரங்கொண்டேகலுங்கண்டாம், இவ்வண்ணம் மித்தையாகவே மிகப்பெருமையதும் அகற்றலாகாததும் ஆகிய பெரும்பிராந்தியிதுவாம், ஆயின் பரமார்த்தசத்தியமாயிருப்பது யாதெனின் உண்மையாக நீ யொருகாலத்திலும் உண்டாகவுமில்லை மரிக்கவுமில்லை தூயநல்லறிவுமயமாயிருக்கின்றநீ சாந்தனுப் நின்வடிவின்கண்ணே நிலைபெற்றுளாய். திருசியம்யாவும் பொய்யாகுங்கால், அதனோடுகூடிச் சிதாபாசவடிவமாகக் காண்குதலும்பொய்யேயாகலின் நிர்விஷயசின்மாத்திரமே சேடித்துநிற்கும், எவ்விவ்வியாவற்றையும் காண்கின்றனயே இவையாவற்றையுமே காண்கின்றிலாய், நின்னுலேயேநின்னிடத்தில் நித்தியம் எல்லாவடிவமாகியேயிலங்குகின்றாய். மகாமணியைப்போலும் உதாரனுக இருக்கின்றாய் மார்த்தாண்டனைப் போலும் மகாவொளியுடையவனுயுள்ளாய், உண்மையாகவிப்பூபீடமுமில்லை, இவ்விதூரதேசமுநீயல்லை, இக்கிரிகளுமில்லை கிராமங்களுமில்லை இவ்வுறவுபகைகளுமில்லை யாமுமில்லை, ஏனெனின்? அதியற்பமாகவிருக்கப்பட்ட தன் கண் நிகமகத்தாயிருப்பது அடங்காமையே பொய்யாதற்குக்காரணமாகும், கிரிக்கிராமத்திலிருக்கும் மறையவன்றன் மண்டபஆகாயத்திற்றனே இத்தனை பொய்யுந்தோற்றுகின்றன். அந்தலீலாநாயகநாயகியை சுவரியமுற்ற ஜகத்தானது மிகவிளக்கமாயொளிர்கின்றது, ஆண்டுலீலையின் இராஜதானியானது, எப்பக்கமும் அநேகஞ்சாலைகள் நிறைந்த பேராகிருதியோடுகூடியதாக விளங்குகின்றது, எவ்வீட்டின்கண்ணே யிங்குஇப்போதுயாமிருக்கின்றோமோ அவ்வீட்டின்கண்ணே யுலகமெல்லாந்தோற்றுகின்றது, காணப்பெற்றவுலகமெல்லாம் அதனுதரஆகாயத்தின்கண்ணே தோற்றுகின்றது. இவ்வண்ணம் அம்மண்டபங்களினுடைய எவ்வியோமாதிகளுளவோ அவைஆகாசாதி சூனிய நிருமலப்பிரஹ்மமேயாகும், அவ்வாறே மண்டபங்களில் மகியுமில்லைபுரியுமில்லை, வனங்களுமில்லை மலைக்கூட்டமில்லை மேகம் நதிகடல்முதலனவுமில்லை கேவலம் ஆண்டுச்சின்மாத்திர பூர்ணபிரஹ்மத்தின்கண்ணே பொய்யாயவீட்டில் பொய்யாயஜனங்கள் பொலிகின்றார்கள், ஜனங்களும்பார்ப்பதில்லை பார்த்திபர்களும்பார்ப்பதில்லை பூதரங்களுமில்லை, ஜனங்கள்பார்ப்பதில்லையென்னும் கூற்றால் மந்திரிசேவகாதியர்கள் கனவிற்கண்டசமாஜ ஜன்சாமியமாவர்கள் அஃதசம்பவமன்றோவாம், ஹேமாத! கூறியவண்ணமேலாயின் எங்ஙனம்

இங்கு என்னுடைய வேலையாட்கள் வேலைசெய்தல்கூடும்? இவர்களெல்லாம்ஜீவனோடுகூடித்தானே யிருக்கின்றார்கள், யானெவ்வாறுசத்தியற்கையோடு கூடியிருக்கின்றேனோ அவ்வாறிவர்களிருக்கின்றார்களா? இல்லையா? உலகம்கனுப்பொருள்போலுலவுகின்றது எனக்கு இந்நரர்களும் கனநரர்கள்போலவே தோற்றுகின்றார்கள். எங்ஙனம் ஆன்மாவின்கண்ணே சத்தியமாவது? இன்றோதான்சத்தியமிஃதியம்புதி? என்ன, எங்ஙனஞ்சத்தியமாம்? அஞ்ஞதிருஷ்டியோடுகூடிய ஜீவபாவத்தால் அவைகட்குண்மையைவினவுதியேலாயின் அஃதினக்குமொவ்வாததே, தத்துவதிருஷ்டியாகிய அதிஷ்டானசின்மாத்திர பாவத்தாலேலாயின் அவைகட்கும் அஃதிருக்கின்றதேயாம் எனத்தேவியுத்தரம் அருளுவாளாயினள்:—ஹேமன்னவ அறியவேண்டியவற்றையறிந்து தூயஞான ஏகரூபமாயிருப்பவர்களிடத்தில் கேவலம்சிதாகாசமாத்திரவடிவமாக வுள்ளவர்களிடத்தில் ஜகத்சம்பந்தமான இவையெவையுமே சத்தியமாக இல்லையாம், சுத்தபோதவடிவமாகவே யிலங்குகின்றதன்றி ஜகத்தென்பதுமயக்கமாத்திரமாகவே யாக்கப்பட்டதாம், இரஜ்ஜுவின்கண்ணே சர்ப்பமயலானது தீர்ந்துபோகவே மறுபடிசர்ப்பமயக்கமெங்ஙனமாம்? அசத்பாவத்தையறிந்தோமானல் ஜகத்மயக்கத்தில்சத்தை யெங்ஙனமாம்? மிருகதோயத்தையுணர்ந்தோமேயானல் மீண்டும் நீர்மதி யாண்டாம், கனக்காலத்தில் ஜீவஸ்வரூபத்தில் பிரபோதத்தாலுணர்வேமாயின் கனமரணமெங்ஙனஞ்சத்தியமாம், தன்கனவிற்கனமரணபயம் மரியாதவனுக்கேயுண்டாகின்றது, ஞானத்தினல் அஞ்ஞானமேகாவரணநீங்கியவழி சரற்காலத் தாகாயம்போலழகுவாய்ந்த அதிநிர்மலமும்,விளங்காநின்ற ஆத்மப்பிரகாசத்தினலே அதிதாவள்யமும் அதன் ஏகரசப்பிராப்தியினனே பூர்ணத்தன்மையையடைவுற்றதும் ஆகியகருத்தையுடைய சுத்ததத்துவவித்திற்கு அஞ்ஞதிருஷ்டியினனே பிரசித்தமாய யானென்றும் உலகமென்றும் வழங்கும் அற்பசப்தத்தின் அருத்தம் உண்மையாக இல்லவேயில்லை, ஹே குழந்தாய்! விகாரம்வாக்கினல் விரிந்திடும்பெயரே, உகாமண்டானே யுண்மையதாகும்என்பதாதி சுருதியினனே யாவும்வாசிநமேயாகும். இவ்வண்ணம் மகாமுனிவர்கூறியபோது பகற்சென்றது சூரியனும் அஸ்தத்தையடைந்தனன், பரத்துவாஜர்முதலிய முனிவர்சபையும் ஸ்ரீ வான்மீகிபகவானுக்கு நமஸ்காரத்தைச்செய்துவிட்டுச் சாயங்காலஞ்செய்யவேண்டியதாய சந்தியுபாசனை அக்கினிகோத்திராதிகளைச் செய்யும்பொருட்டு ஸ்நாநஞ்செய்வான் சென்றதுபின்னர் இரவுகழிந்தபோது காலையில்சூரியகிரணங்களோடும் மீண்டும் ஸ்ரீவான்மீகிசந்நிதியை நோக்கிவந்தது.

41-வது பிராந்திவிசார வருணனம் முற்றிற்று.

---

## 42-வது சொப்பனபுருஷ சத்தியத்வவருணனம்.

இப்போது அஞ்ஞானகாலத்தில் உலகத்திற்குண்மையும் கனவிற்குண்

மையும் வருணிப்பதுடன் இதனீற்றிற் கதையின்சேடமும் வரதானந்தமும் வருணிக்கப்படும்; வித்வான்களது திருஷ்டியானானே உலகின் பொய்ம்மையை விஸ்தாரமாக வருணித்து அதனைத்திடப்படுத்தும் பொருட்டு அஞ்ஞதிருஷ்டியினானே அதற்கத்தியந்த திடசத்தியத்தன்மை கூறப்படுகின்றது:—ஹே இராகவ அறியாமதியனாய் மூடனாய் விஸ்தாரபதத்தில் திடமான விற்பத்தியில்லானாகவிருக்குமவனுக்கு இவ்வுலகமானது அசத்தாக இருந்தபோதினும் திடமான வஜ்ரசாரத்திற் கொப்பாக அதிதிடமான சத்தாகவேயிருக்கும், இவ்வுலகத்தின்கண்ணே அர்த்தக் கிரியா காரித்தன்மையானே சத்தியத்தன்மை பிரசித்தமன்றே! அசத்தாயும் அஞ்ஞனுக்கு அர்த்தக்கிரியா காரித்தன்மையானே சத்வமாதல் கண்டதுண்டோவெனின்? பாலகனுக்குத் தோற்றிய வேதாளமானது மரணபரியந்தம் துக்கத்தைக்கொடுப்பதேயாமன்றே, அதுபோல அசத்தேயாய ஜகத்தானது மூடபுத்தியனுக்குச் சத்துவடிவமாகத்தோற்றுகின்றது; மருப்பூமியாதபன்றானே அஞ்ஞமிருக திருஷ்டியால் உண்மைநீராய் மிருகங்கட்கு மயக்ககாரணம் ஆவதேபோல அசத்தியமேயாய இவ்வுலகமானது மூடமதியனுக்குச் சத்தியமாகத்தோற்றும். ஜந்துக்கட்குக் கனாமரணமானது அசத்தியமாகியும், சத்தியமாகத் தோற்றுவதேபோல் மூடமதியினர்க் குலகமானது சோக ரோதனாதியர்த்தக்கிரியா காரியாகத்தோற்றும்; தொடர்ந்து தோற்றும்கனகசொரூபத்தை யறியாதவனுக்குக் கனகத்தாலாய கடகத்தே, கடகவுணர்வேயிருக்கின்றதன்றித் தங்கமதி சிறிதுங்கிடையவே கிடையாதாம்; அஃதொப்ப அறியானுக்கு வீடுகளும் மலைகளும் விருக்ஷங்களும் கஜங்களும் நாகங்களும் புரங்களும் ஆகிய இவற்றின் அதிஷ்டானமாயிலங்கும் சர்வ அனுகத் ஏகசத்பிரஹ்மதிருஷ்டி கிடையவேகிடையாது இவற்றின்கண் மாறாயதிருசியமென்னும் திருஷ்டியேயுளதாம். ஆகாயத்தின்கண் முத்துமாலையும் மயிற்றேகையும் மயிற்சுருளும் பிறவும் அசத்தியமாக இருந்தும் சத்தியமாகத் தோற்றுவதேபோலக் குதிருஷ்டியுடையவர்க் குலகமானதுதோற்றும். அகந்தாதிகளுடன் கூடியிராநின்ற தீர்க்கசொப்பனமாம் இவ்வுலகம், தன்னினும் அயலாயிருக்கும் சத்தியஜனங்கள் கனவிற்கண்ட வேறுபுருடர்களே, ஆயின் அவர்கள் எங்ஙனம் சாஸ்திரங்களிற்கூறிய வேட்டல் வாங்கல் கூறல் முதலிய அர்த்தக்கிரியா சமர்த்தர்களாய்ச் சத்தியர்களெனச் சாஸ்திரங்களி லங்கீகரிக்கப்பட்டுள்ளார்கள்! சத்தியர்கள் ஆகுமாறுகூறக்கேட்குதி:—சர்வாதிஷ்டானமாயும் சாந்தமாயும் "பிராணன்களேசத்தியம் அவற்றினுமிதுசத்தியம் என்னும்மறைமொழியின்படி நிரதிசய சத்தியமாயும் சுசியாயும் திருசியமற்றசின்மாத்திரவபுவாயும் விஸ்தாரமாய பரமாகாசமாயும்,அப்பொருளிருக்கும், இது தானே மாயாசபலமாகுங்கால் எங்குமிருப்பதும் எல்லா ஆற்றலுடையதும் எல்லாமாவதும் எல்லாவடிவமாவதும் சுயமும்,மாயையினாலே எங்கெங்குளத்தகை எத்தகைய அர்த்தக்கிரியாயோக்கியம் ஆக ஆவிர்ப்பவிக்கின்றதோ அங்கங்கு அவ்வத்தகையதாகவேயாம். அவ்வாறுநனவில் சாஸ்திரிய அர்த்தக்கிரியா

யோக்கியமாக அஃதாவிர்ப்பவிக்கின்றது, கனவிலின்று என்பதாக உட்பட்ட சிறப்பிருப்பினும் சத்துருவத்தில் யாதொருசிறப்புமின்ரும், அதனுற்சொப் பனபுரத்தில் திருஷ்டா எப்புரவாசிகளை நரர்களெனக்கண்டனனே அவர்கள் கனகாலம் அவனுக்குநரர்களே யாவர்கள்; திருஷ்டாவினுடைய சிற்சொரூப மானது, கனவைவிரித்துவிளக்கும் அதிசூக்குமநாடியின் சித்திரத்தினுள்ளி ருப்பதாம், கனவத்தியஸ்தமாகும் விஸ்தார ஆகாசத்துலவும் சித்தவொளி சித்தவாசனையின் அனுசாரமாக விவர்த்தமாகத்தோற்றுவதே நரர்களெனப் பாவிக்கப்பெறுவதாம், கனநனுவிரண்டன்கண்ணும் தன்பால் நரத்தன்மை முதலிய வுணர்வுகள் அத்தியஸ்தங்களாக இருக்கவும் உண்மையென நினை வதில் அன்னியோன்னியதாதாத்மிய சமுசர்க்க அத்தியாசமேகாரணமாகும் அறிவோனுந் தன்மைவாய்ந்த சத்திய சொப்பிரகாச அபரோக்ஷ சைதன்யத் தோடு தாதாத்மிய அத்தியாச வயமாயசமுசர்க்க அத்தியாசத்தினுல் நரத்தன் மையே புணரப்பெறும், ஆன்மாவின்கண்ணே கற்பிதமாதலின் அதன்பலத் தால் கனநனுக்கட்கும் அத்தியஸ்த அதன்றருமங்கட்கும், சத்தியத்தகைமை யானது பிரசித்தமாகத் தோற்றுகின்றது. இந்தப்பிரகாரம் நனுக்கனுத்திரு சியபதார்த்தங்கட்கு ஒன்றுகலந்தமாயை அதனதிஷ்டானவடிவ மெய்பொய் யான இருவிதசரீரத்தன்மை கூறப்பெற்றது, அதன்கண் ஸ்ரீஇராகவர் கனவிற் குப்பொய் மாயாமாத்திரசரீரத் தன்மையுளதாகுக மெய்யங்கி சத்தைச்சேர்ப் பதால் வருவதுயாதோவெனச்சங்கித்தல்:—ஹே பகவன்! நனுப்புருடர்கள் அதிஷ்டானசத்தையால் சத்தியர்கள் ஆகார்களேல், விவகாரம் பயன்படாமல் கருமசாஸ்திர அப்பிராமாண்யமும் வந்துசேருந்தோஷமாம் என்பதால் அவர் கள்சத்தியர்களாகவே யிருக்குக, சத்தியமல்லாத மாயாமாத்திர சரீரங்கணி றைந்த கனவின்கண்ணும் கற்பிக்கப்பட்ட கனுப்புருடர்கள் அவ்வாறுண்மை யாக வேண்டாமே வேண்டாமையால் யாதுதோஷம்வந்துவிடும்?'' மாயாமாத் திரமேயாம் முழுமையாக வெளிப்படா வடிவுடைமையின், என ஸ்ரீவியாசபக வானுல் கனுமாயாமாத்திரமெனச் சூத்திரிக்கப்பட்டிருத்தலின் எங்ஙனம் உண் மையானவுலகிற்குக் கனுவொப்பாந்தகைமை? என, கனுப்பொருள்கள் பிரஹ் மத்தைப்போல வுண்மையாகச் சத்தியங்கள் ஆகாவெனமாத்திரம் அறைதல் கூடுமேயன்றி நிரதிஷ்டானத் தன்மையுண்மையின் அதிஷ்டானசத்தையானும் சத்தியங்கள் ஆகாவென்றறைதல் கூடாதாம் பிரத்தியக்ஷப்பிரமாண விரோத மாதலின், என்று ஸ்ரீவசிஷ்டபகவான் உத்தரமருளல்: குழந்தையே! கனவிற் ருேற்றும்புரங்கள் வாஸ்தவங்களே உண்மையாகச் சத்தியரூபங்களேயாம், இதன்கட் பிரத்தியக்ஷப்பிரமாணங்கூறுதும் வேறுபிரமாணங்கள் வேண்டிய அவசியமில்லை, அத்தியந்தம் அசத்தாயிருப்பதற்குப் பிரத்தியக்ஷம் பொருந்து ருதாம் மலடிமைந்தனைக்காணக் காட்சிபயன்பட வில்லையன்ருே; மேலும் கனவானது அத்தியந்தம் அசத்தாகவிருக்கும்பக்ஷத்தில் நனுவுலகிற்குங் கதிய

துவாமென்பதை நகர்த்தமுடியாதாம் அதுவும்ஹிரணியகருப்பரது கனுருபமே யல்லவா! கனுப்போலும் அனுபவிக்கத்தக்கதாய இதுசர்க்காதியின்கண்ணே ஆன்மாவின்றுண்டாய்த் தோன்ருநிற்கும், அத்தகையசங்கற்ப கலாமாத்திர மாய விசுவம் இங்ஙனம் கனுப்போன்றுநிகழ்வதேயாகும்; ஆகவே உலகமா னது கனவிற்குச்சமமும் முற்கூறியவுண்மையதும் ஆம்; இங்ஙனமிவ்வுலகங்கன வாக, கனவின்கண்ணே நீயெனக்குச்சத்தியம், நினதுசத்தியத்தன்மையை நீ நீக்கமுடியாமையின், நீயுண்மையாவதுபோலவே மற்றையரும் உன்போன்றவ ராகவும் என்போன்றவராகவும் சத்தியராவர்; இவ்வண்ணம் அன்னியநரர்சட் கும் தங்கள் தங்கள் அனுபவ அனுசாரமாகக் கனுச்சத்தியத்தன்மை சித்தமாம் இன்னும் வெட்டவெளியாக இயம்பில், கனவின்கண்ணே வீட்டிலிருப்பவர்களும் நகரத்திலிருப்பவர்களுமாகியவர்கள் சத்தியர்களாக இராவிடில், இங்கும் அத்த கைய ஆகாரத்தின்கண் சிறிதும் சத்தியத்தகைமையிராதாம் யான்நினக்குச்சத் தியவடிவினன் ஆதலேபோல எனக்குயாவுமேசத்தியமாம், கனவிற்புலப்படும் சமுசாரத்தில் பரஸ்பரசித்தியின் பொருட்டுண்டாம் பிரமையித்தகைத்தாம்; விஸ்தாரமாகிய கனுச்சமுசாரத்தில் யானினக்குச்சத்தியமாவதேபோல நீயு மெனக்குச் சத்தியமேயாம், கனவில்யாவும் இம்முறையினவேயாம். இங்ஙன மேலாயின் கனவுகண்டவனுக்கு நனவுண்டாய பின்னரும் கனவுலகம் நனவுல கம்போல நிலைபெறவேண்டுமே நித்திரையில்லாத கனுக்காண்போனிடத்திற் ரேற்றும் கனுக்காண்போனுடைய கனுப்பட்டணம் சத்துருவமாகஇருத்தலின் என்னுடையமதியில் தங்களுடையவசனத்தால் அவ்வாறே யுளதாகுக வெனத் தோற்றுகின்றதெனச் சங்கிக்கின் நியாயந்தானேயது, இங்ஙனமிது அவ்வாறே யாகுக கனுப்பட்டண முண்மையதாகலின் நித்திரையில்லாத கனுக்காண் போன்பாலும் ஆகாயத்தைப்போலுந் தெளிந்த ஆகிருதியையுடைய அதிஷ் டான சன்மாத்திரசுபாவம் உண்மையேயாகும். இங்ஙனமாயின் நனுப் பொருட்போலக் கனவிற்கும் அயற்கனவின்கண்ணே பிரயோஜன சகித விவ காரமாமே யென்று ஸ்ரீஇராகவர் இயம்புமிச்சையை யுத்தேசித்துத் தேசசாந் தர காலாந்தரங்களில் தொடர்ந்திராமையா லுண்டாக்கப்பட்ட பயனேடு கூடாமை அநேகநனுப்பொருள்களிலும் உளதாம்; பிருதிவியாகாச நாமஜாதி யாதி சிற்சிலபதார்த்த அனுவிருத்தியாய பயனுடைமை கனவின்கண்ணும் உளதாமென்பதனுல் யாதொருசிறப்புங் கூறமுடியாதாம் ஆகலின் இதைவிரித் ததுஇனிச்சாலும், எதை நீ நனுப்போலநினைகின்றனையோ அதை உட்டேச காலாதி வேண்டியபடியில்லாத கனவேயெனவறிதி. கனுப்பொருள்கள் சத்தி யங்களாயின் நனவின்கண்ணும் தொடர்ந்திலங்குகவே யென்றனையன்றே, நல் லது கனுப்பொருள்கட்கு நனவின் வெளித்தேசகாலாதித் தொடர்பின்மை யின் துச்சமென நினைதியாயின், நனவெனவெதனை நீ நினைகின்றனையோ அது வும் உட்சொப்பனதேச காலாதி பூரணமற்றதேயாகும் என்பது துல்லியமே யாக இரண்டிற்குங் கனவின்றன்மையே துணியப்பெறும். இங்ஙனம் அதிஷ்

டானசத்தையினுனே சத்தியத்தன்மையுறினும் சர்வதேச காலாதியபூரகத் தன்மையுண்மையின் தானுக அத்தகைய தாகாமையின் இரண்டிற்கும் பொய்ம் மை யொப்பேயாகும், இப்படியே யிவையாவும் உண்மையாக விருப்பன போலாயினும் உண்மையன்ரும், கனமங்கையின் கலவியைப்போலும் பொய் யாகவே தன் பற்றலினுல் மோகிப்பிக்கின்றது. உணர்விற்குச் சர்வதேச காலாதி பூரகத்தன்மையுண்மையின் சத்தியத்தன்மையும், யாண்டும் மாயா சக்தியினுனே சர்வபாவத்தால் விளக்கும் ஆற்றலும் ஆம்; தேகத்தினுள் ளிலும் வெளியிலும் யாண்டும்யாவுமுளவாம், எதனையெவ்வாறு உணர்வு உணர்கின்றதோ அதனையவ்வாறேதானே காண்கின்றது; கோசத்திலே யிருக்குந் தனத்தைக்கண்டவன் அதனையடைவதேபோலச் சிதாகாயத்தின் கண்ணே யாவுமிருக்கின்றனவாதலின் யாவுமேசிதாகாயத்தால் விஷயீகரிக் கப்படுகின்றன. இங்ஙனம் ஸ்ரீ இராகவரது ஆக்ஷேபத்தைச் சமாதானித்து தொடங்கிவந்தகதையை யனுசரித்துக் கூறுவதாவது : பின்னர்விதூரதனை நோக்கி ஞானதேவியானவள் ஞானமிருதத்தைத்தெளித்து நல்விவேக அங்கு ரத்தை யுண்டாக்கிக்கொண்டு அழகிய இவ்வமுத மொழிகளைக் கூறத்தொடங்கி னுள்,இம்முற்கூறியதத்துவமானது ஹேமன்னர்மன்ன லீலையின் பொருட்டாக இனிதருளினேம், நினக்குவாஞ்சித சித்தியானதுண்டாகுக, உரைத்தவுலகம் பொய்யென்பதனது திருஷ்டாந்த திருஷ்டிகள் மண்டபத்தடங்கிய நினது பிரஹ்மாண்ட கற்பனையிலக்கணங்கள் லீலையாற்காணப்பெற்றன, யாம்செல் கின்ருேம். இந்தப்பிரகாரம் ஸ்ரீசரசுவதிதேவியினுல் மதுரவர்ணங்கணிறைந்த வாணியானது நிகழ்ந்தபோது மகாமதிமானுயும் பூமிபாலனுயுமிலங்கும் விதூர தன்இங்ஙனியம்பத்தொடங்கினுன்; ஹேபரமேச்சுரியே! அற்பதானசாமர்த்திய முடைய எம்போலிய மனுடமாத்திரரிடத்தும் வேண்டினேர் பயன்றவராக கார்என்ருல் மகாபலங்களையருள்செய்யும் தங்களுடையதரிசனம் எவ்வாரு மெனஎன்சொல்வது? யான்இதன்பின்னர் இவ்வுலகத்தைவிடுத்துத்தேகத்தை யொழித்துப் புராதனமானதைக் கனவினின்றும் வேறுகனவையடைவதே போலத் தடையில்லாமல் அடைவேன். ஹேமாதாவே! வேறு கதியிலா துன்னையே சரணுகதியாயடைந்த வென்னைக் கிருபாதிருஷ்டியினுனே நோக் குதி; என்னுல் வேண்டிக்கொள்ளப்பட்ட உபதேச உத்தரகாரியத்தையும் அடைவித்தருளுதி, தங்களுடைய அன்பர்களது அவமதிப்பு ஹேவரதையே பெரியோர்களுக்கு இஷ்டமிராதல்லவா! நல்லது நீ விரும்புவது யாதோவென, ஹேபரமேச்சரியே! யான்எத்தேயத்திற்குச் செல்கின்றேனே அத்தேயத் திற்கு இம்மந்திரியும் இம்மனைவியும் பிறவும் என்னுேடுகூடவரும்படி தயவினுல் திருவருள்செய்யவேண்டும் வருதிலீலாபக்தி, பாக்கியஉசித அர்த்தவிலாசங்க ளால் அழகுவாய்ந்த முன்ஜன்ம மண்டலபதியினுடைய இராஜ்ஜியத்தை யாதொருதடையுமில்லாமல் அனுபவிப்பாயாக, எம்மைபிரார்த்திப்பவரது

ஆசைவாய்க்காமற் போவது எக்காலத்திலும் எங்கும் எவருக்கும் கிடையவே
கிடையாது யாரும் கண்டது மின்றென்றுணர்தி.

42-வது சொப்பனபுருஷ சத்தியத்வ வருணனம் முற்றிற்று.

---

## 43-வது தீதியரித்த கிருகாதி வருணனம்.

இப்போது வேண்டிய வரமீதலும், புரங்கள்தீப்பற்றியெரிதலும் தீப்பற்றி
யெரிந்த புரவாசிகட்குளதாய சேஷ்டையும், வருணிக்கப்படும் அவன் விரும்
பிய வரும்பொருள்களையும்வெளிப்படையாகக்கூறிச் சேஷவரங்களையும் தேவி
கொடுக்கத்தொடங்கல்: ஹேராஜன்! இந்தப்போர்க்களத்தில் இப்போது
உயிர்விடுவாய் விட்டபின் பழையஇராஜ்யத்தையடைவாய் நினக்குயாவும்
பிரத்தியக்ஷமாகவேயாம். குமாரியோடும் மந்திரியோடும் நீபழையபுரத்தையே
யடைவாய், சவமயமாயிருக்கும் அச்சரீரத்தையேயுடைவாய்; யாங்கள் வந்த
வழியே செல்கின்றோம், நீ இறந்தபின்னர் குமாரியோடும் மந்திரியோடும்
ஆதிவாகிகதேகரூபங்கொண்டு அப்பழையதேயத்தையேவந்தடைதி; இவ்
வாதிவாகிக தேககதிமனோரதகதிபோல மண்டபத்துள்ளிருக்கும் ஆகாயத்தின்
கண்ணும் மிகுதூரம் போலவாம், குதிரைமுதலியவற்றின் கதிக்குமுன்னிருப்ப
தாக விஸ்தாரதேயம் வேண்டியதே போலவன்றும், அசுவத்தின்கதி வேற
தேயாகும் கழுதையொட்டைகளின்கதியும் அயலதேயாகும் மதத்தால் திமிர்
கொண்ட கபோலத்தையுடைய தந்தியின் கதியும் அன்னியமே யாகும்,
என்றுணர்தி, யென இவ்வண்ணம் மாதுர்யவாக்கையுடையவர்கள் பரஸ்பரம்
பேசிக்கொண்டிருந்தபோது வீட்டின் மேன்மாடிமுதலிய உன்னதப் பிர
தேசங்களிலேறி யிரவின்கண்ணே வெளிப்புற விருத்தாந்தங்காணும் சேவகர்
இராஜசந்தியை யடைந்து திக்குமுக்காட்டியவனாகி நின்றுகூறுவதாவது: ஹே
மகாப்பிரபுவே! அம்பு நேமி யரியவாள் கதை யுலக்கைமுதலியவற்றின் மழை
களோடு கூடிமகத்தாகிய சேனையானது மிகவுங் கோலாகலத்துடனெழுந்து
பெருங்கடல்போலும் வந்தடைந்துளது. கதை வேல் அக்கினி யந்திரமுதலிய
வற்றின் மழைகளைக் கற்பகால அநிலங்களால் எடுத்தெறியப்பட்ட குலாசல
சிலைச்கொப்பாக மகா உற்சாகத்துடன் மாற்றார்சேனை கொட்டுகின்றனர், உன்
னதமான மேன்மாடிசிகரங்களாலும், திருணகாஷ்டாதி யைசுவரியங்களாலும்
பர்வதசமானமான நகரத்தில அக்கினிவைக்கப்பட்டு எட்டுத்திக்குகளிலும்
வியாபித்துவிட்டது; ஆகாயத்தின்கண்ணே கற்பமேகங்களாகிய சம்வர்த்த
மேகங்களின் கூட்டங்கட்குச் சமானமாய புகைமகாமலைகள் கருடனைப்போல
வலுவிற்கிளம்பத் தொடங்கிவிட்டன மிகுந்தபயத்தோடு மிங்ஙனியம்பிய
போது ஜனங்களின் நிஷ்டுரபாஷணவடிவ சப்தங்களின் கோலாகலங்கள்
மிகமிகவெளியில் எத்திசைகளிலும் எழுந்து, நிறைந்துநின்றன, அக்கோலா
கலமே சம்பந்திகளின் பேதத்தால் நானாவிதமான சிறப்புற்றிருந்தது; வலு
வாகக்காதளவு இழுத்து வளைக்கப்பட்டுச்சரமழைகளைப்பெய்யும் தனுஷகளின்

மகாஹல ஹலாஅரவங்களும், மலைபோலப்பருத்து மகாமதம்நிறைந்த மாதங்கங்களிஅதிவீரகர்ஜனைகளின் கோலாகலங்களும், புரத்தின்கண்ணே சடசடவெனச்சப்தித்து வெடித்தெரியும் பெருந்தீயின்பெருமோசைகளும், வீடும் மனைவிமக்களுமெரியக்கதரும் புரத்திலுள்ளோர் கூக்குரலும், இங்குமங்குங்கிளம்பும் அக்கினிகண்டங்களின் டாங்காரஓசைகளும் நாற்புறங்களிலும் சுழன்று அக்கினிசுவாலைகளின்தகத்தக்கென்றெரியும்பேரோசைகளும், ஜனங்கள்பரிதாபப்பட்டுப்பேசிக்கொள்ளும்ஓசைகளும், ஒருங்குகூடியெழுந்துகொண்டிருந்தன. சாளரங்களின்வழியாகத் தேவிமார்களும் மந்திரியும் விதூரதமன்னவனும், பேரிருளையும் பேரோசைகளையும் பெரும்பட்டணத்திக்குமுக்கையும் கண்டார்கள். பிரளயஅநலத்தாற்சுவருநின்ற பூர்ணஏகார்ணவவேகத்தோடும், பரசைனித்தால்உக்கிரமாக விடப்பட்டஉக்கிரஅம்பின்மேகதரங்களோடும்கூடி நிறைந்திருந்தது;மேருமுதலியபர்வதங்களையுமுறுக்கும்கற்பாந்தஅக்கினியைப் போலும் அக்கினிவீசிக்கொண்டிருந்ததுஆகாயம்அளாவியமாகச்சுவாலைகளின் சிகைகளால் யாவும் வெந்துகொண்டிருந்தன, பிறர்பொருளைக் கொள்ளையிடும் பொருட்டு மற்றவரைப்பயமுறுத்துவான் மகாமேககர்ஜனையைப்பார்க்கினும் அதிககர்ஜனையுடையவராய், மிகுந்தகோபத்தோடும் உபத்திரவம்செய்பவராய் பிராபல்யமுடையராய், அதிபுஷ்டராய்த்திரியும் சோரர்களின் கோரமான சோரத்தாலும் அதட்டுதலாலும் கலகலவெனப்பயங்கரசப்தம்நிறைந்திருந்தன புஷ்கராவர்த்தமென்னும் பிரளயமேகங்கள்போன்ற புகைமேகங்களானே விண்டலம் மூடப்பட்டிருந்தது, எங்கும் ஓங்கியெழாநின்ற பொற்கோடிகளை மேலாகஉடைத்தானவைபோன்ற சுவாலைக்கூட்டங்களானே சொலித்துக் கொண்டிருந்தது. ஆகாயத்தின்கண்ணே கொள்ளிக்கட்டைகளின்றுண்டங்களே உக்கிரமாய அசுபங்காட்டுங்குறியாகச் செவ்வுடுக்கூட்டமாகச் சென்று நிறைந்தன,சுவாலைகள்நாற்புறமும்சூழ்தலானே அன்னியோன்னியதேசக்கலப்பால் வீட்டுக்கூட்டங்கள் பற்றிக்கொண்டு சுவாலைவிட்டெரியும் சுவாலைமலையுயர்ந்திருந்தது, கொன்றெஞ்சியசேனைகள் நகரப்பிரவேசஞ்செய்துகொண்டிருந்தது, மேகமண்டலம்வரைவியாபித்த அக்கினியானது மேகமண்டலத்தைத்துளைத்துக்கொண்டிருந்தது, கோரமான சப்தத்துடன் தகிக்கப்படாத ஜனசமுதாயங்களாகிய சத்துருக்கள் உக்கிரமாகக்கர்ஜித்துக்கொண்டிருந்தார்கள். அக்கினியின் பொறிகளாலும் நாராசங்களாலும் விஸ்தாரவிண்டலமானது நெருக்கமாகநிறைந்திருந்தது, அநேகம்பாணங்களாலும் கற்கூட்டங்களாலும் புரஜனங்கள்இங்குமங்கும்வீழ்ந்தனர், அவர்தமைப்புரத்தில் தீயைவைத்துவிட்டு ஆயுதத்தை யுயர்த்தியகையினர்களாய சத்துருக்கள் விரட்டிக் கொண்டுதிரிந்தார்கள் ; போரின்கண்ணே யானைக்கூட்டங்களானே மிதியுண்டு பொடிப்பொடியான சூரவீரர்களநேகர், நெறியிற்கொள்ளையடித்துப்போடும் மகாதனத்தையுடைய சோர்களின்சிரங்களைக்கொய்து நடித்துக்கொண்டிருக்கும் வீரசூரர்கள்அநேகர். அக்கினிக்கு வியல்வீழ்த்தலானே நரநாரியபெரிய

கூக்குரலுடன் அழுதுகொண்டிருந்தனர் பெரும்பெரும்மரங்கள் யாருங்கேட்ப சடசடவெனவெந்துசாம்பராயின ; விஸ்தாரமானஎரிகொள்ளிச்சக்கரங்களின் கூட்டத்தால் நாற்றுக்கணக்கான சூரியரோடு கூடியிருந்தது விண்டலம் அப்பு வியின்கண்ணெங்குகாணினும் நெருப்புகளும் கொள்ளிகளும் சுவாலைகளுமே காணப்பட்டன ; எரிந்துகொண்டிருக்கும் அக்கினிகாஷ்டங்களுடன் க்ரேங் க்ரேங் எனச் சப்தித்துகொண்டெரியும் மூங்கிற்கூட்டங்கணிறைந்திருந்தன ; சைனியங்களில் அநேகம்பிராணிகள் நெருப்புப்பற்றியெரிந்து கரிந்துகோ வென்றலறிவலுவாயழுது கொண்டிருந்தது. பொடிகளேமிஞ்சும்படியாக இராஜஐசுவரியங்கள் வெந்துவந்தால் அக்கினிபகவான் விருத்தியடைந்து திருப்தியுற்றிருந்தனர் அக்கினிபகவானுகிய பெருந்தினீக்கார பக்ஷகர்சகலத் தையும் விழுங்கும்முயல்வுடன் பெருங்காரியஞ் செய்துகொண்டிருந்தனர்; அகஸ்மாத்தாகத்தெய்வம் செய்துதென்னச் சர்வஐசுவரியங்களையும் கவர்த லும், இரவிலுறங்கும்வரைக் கள்வர்வதைத்தலும், நீக்கமுடியாதபெருந்தீயில் வேதலும் ஆகிய இவற்றினுனே வீடுகளெல்லாம் பெருந்துயருற்றன; அநந்த ஜீவர்களின் போஜனங்கட்குத் தகுதியவாய தானிய இராசிகள்யாவும் அக்கினி பகவானுல் உண்ணப்பட்டுச் சாம்பராயும் சிலவை உண்ணப்படும் இந்தனமா யும் வெந்துகொண்டிருந்தன, பின்னர், பாருங்களென்றும் ஓடுங்களென்றும் பார்த்தோடிக்கூவும் மனைவிமுதலியவை வெந்தவர்களாகிய போர்வீரர்களின் அரவத்தை விதூரதமகாராஜாவானவர் கேட்டனர்: ஒருவன் ஒருவனைநோக் கிக்கூறுவதாவது; ஹேதோழ! இரசமிருத்திருத்தலானே பச்சையாகவிருக் கும்தனுனே சூரியசந்தாபம்யாவற்றையும் போக்கும் வலிமை வாய்ந்து மிக வும் உயரமாக வளர்ந்தோங்கி நமதுவீடுகளோடு ஒன்றிநின்ற பெரியதருக்களை வேரோடீர்க்கும்பொருட்டு விபத்தாகிய பிரளயக்காற்றுக் கரகரவெனச் சுழன்றுகொண்டு வருகிறது ஐயோ! பார் அந்தோ! முன்பனிச்சீதமுற்றுச் சந்தாபமடைந்துநின்ற தாரங்கள்தந்திமரித்த தேகங்களில் லீனப்பட்டது, ஞானுக்கினியினுலே தூலாதிதேகங்களையெல்லாம் தக்தம்செய்து திரிவிததா பங்களையும் உபசமனஞ்செய்துண்மையின் பனியைப்பார்க்கினும் அதிசீதள மான விஞ்ஞானசூக்திகள் மகாத்மாக்களுடைய மனங்களில் மக்கினமாயின போலிருந்தது, ஐயோ! அப்பா! வீரர்களாகியகாற்றினுலே ஏவப்பட்டசஸ் திர அக்கினிகளும் நானுவிதமான அதன்சுவாலைகளும் தருணிகளதுகூந்தலாந் திருணக்கூட்டத்திற் பற்றிக்கொண்டு காய்ந்தசருகின் கூட்டத்திற்போலக் கொழுந்துவிட்டு எரிகின்றன. இதோபார்த்தீரா! புகையமுனை அநேகம் சுழற்சியோடுகூடிப் பிரவாகபேதங்களினுல் மிகநீள்நதியதாகி மேலே அநேக அலைகளோடும் ஆரவாரித்து விண்ணுகியகங்கையிற்கலக்க ஓடுகின்றது. கொள் ளிக்கட்டைகளோடு மேற்செல்வதாகி அக்கினிகணங்களாகிய குமிழிகளை யுடைத்தாகிப்பிரவகிக்கும் புகைநதியானது விமானத்திலிருப்பவரைக்குருடாக் குவதைக்கண்டீரா! ஆபுத்திரியே! இவளுடைய தாயுந்தந்தையும் உடன்பிறந்

தானும் மருகனும் புதல்வியும் குழந்தைகளும் ஆக இவ்வில்லத்தில்நிறைந்திருந்
தவர்சள்யாவரும் இங்கக்கினியில்லாவிடினும் வெந்தேபோனதைப்பார்! ஆ!
ஆ!! ஆ!!! ஓடிவா வெளியே அதிவிரைவில் உன்னுடைய அக்கினிபற்றியெரி
யும் வீடானது, பிரளயகாலத்தில் வெந்துவீழும் சுமேருகிரிபோல் தன்னிருப்
பிடம் விட்டுவிழும்பொருட்டசைகின்றது. அந்தோ! அம்புகள் வேல் குந்தம
பரசு வாள் முதலிய சஸ்திரங்கள் விட்டில்களைப்போலச் சாளரஜாலகவடிவசந்
தியாமேகபடலத்தை யடைகின்றன. அகோ! நீரின்பிரவாகங்கள்நீர்நிதியின்
கண்ணே நீளப்புகுவதொப்பச் சஸ்திரப்பிரவாகங்கள், மிகுந்தசுவாலைகளோடு
கூடிய வடவாக்கினிபோலச் சொலித்துக்கொண்டு பயத்தினாலே ஆகாயத்திற்
பறக்கமுயலும் புரியின்கண்ணேபுகுந்தன. பெருமேகங்களெல்லாம் புகை
மயமாயின, சிருங்கங்களோடுகூடிய மேல்வீட்டுகளின் மேலானபாகங்களில்
சுவாலைகள்நிறைந்தன, தடாகங்கள் வாவிகள் உத்யானவனங்கள் காமிகளின்
கள்ளமனங்கள்போலக் காய்ந்துபோயின. யானைக்கூட்டங்கள்தம்மைக்கட்டும்
சாலையினிற்கும் தம்பங்கள் போன்றிருக்குந்தன்மை பற்றிமிகுந்தகோபத்தோ
டும் தருக்கூட்டங்களைச் சீறிச்சீறிச்சப்தித்துக்கொண்டு கடகடவெனமுறித்து
நொறுக்கி யெறிந்தன. மிகுந்தபுஷ்பபலகிளைகளோடுகூடிநின்ற வீட்டுவிரு
க்ஷங்கள் அழகு அழிந்தனவாய் எல்லாஐசுவரியங்களும் அகன்ற கிருகஸ்தனைப்
போலத் தீனத்தன்மையை யடைந்துநின்றன. தாய்தந்தையர்களற்றபாலகர்
கள் வீட்டைத்தேடி யிருட்டுக்குள்தடுமாறித், தேடித்திரியுங்காலையில் ஹே
தோழ! அந்தோ! என்னசொல்வேன், அம்புநிறைந்ததெருவில் அப்பாலகர்
சுவர்வீழ நசுங்கிமடிந்தனர். காற்றினாலே தூற்றப்பெற்ற நெருப்புக்கூட்டங்
கள் விழப்பெற்றதாய் மழைவெய்யிற்றடுப்பான் வைத்தஅம்பாரியோடுகூடிய
கொம்பானைகள் மிகவுங் கொடூரமாகக் கதறிக்கொண்டு போர்முகத்தேபயந்து
திரிந்தன. வாளாயுதத்தால் வெட்டுப்பட்ட கழுத்தின் காயத்தில் பெருங்
கொள்ளிக்கட்டை வலுவாய்வீழ அதன்மேலேயே கவண்கல் பலமாய் இடி
போல்விழ அப்புருடன் கட்டப்படுவதைப்பார் அந்தோபரிதாபம்! கோக்க
ளும் குதிரைகளும் எருமைகளும் யானைகளும் ஒட்டகைகளும் நாய்களும் குள்
ளநரிகளும் ஆடுகளும் கோரமாகக் கத்திக்கொண்டு பரஸ்பரம் போவார்தம்
வழிமறித்துக்கொண்டு போர்தொடங்கிக் கொண்டிருக்கின்றன பாருங்கள்!
ஸ்திரீகள் அக்கினிச்சுவாலை பற்றும்பயத்தால் ஈரவஸ்திரம் கட்டிச்செல்வதைக்
காண்மின், படபடவெனச்சப்திக்கும் ஜலபிந்து ஜால அளிக்கூட்டம் சுற்றிக்
கொண்டிராநின்ற வஸ்திரங்களோடுங் கூவிக்கொண்டு மங்கையர் ஹஸ்தபாத
வதனவடிவநிலப்பதுமங்கள்போல ஓடுவதைப்பாருங்கள்! சுவாலைகளின்சிகை
கள் மங்கையர்தம்கூந்தன் மஞ்சரியைப்பற்றி ஒட்டகங்கள் நீண்டதருசாகை
களைப்போலவும் தெய்வவசமாக அவற்றைப்பற்றியிருந்த பன்னகிகளைப்போல
வும் அசோகபுஷ்ப ஒளியைச்செய்வதைக் காண்மின்! அந்தோ! அந்தோ!!
இளமானின்கண்கள்போன்ற கண்களையுடையவர்களின் வண்டின் இறகுகட்

கொப்பான கண்ணிரப்பைகளில் அக்கினிசம்பந்தியாயசுவாலே, குமார்க்கங்க ளிற்போலவிசிராந்தியடைவதை நோக்குங்கள்! தான்வெந்துகொண்டிருந்தபோ தினும் மனைவியைக்காணுமல் இவன்பிராணன் போகேன் என்கின்றது, அகோ ஆச்சர்யம்! பிராணிகளின் நேயமாகிய வலேயானது ஒருவராலும் கெடுக்க முடியாததாக விருக்கின்றது. பலவேகத்தால் எரியாநின்ற அக்கினியோடு கூடிய சாலேயின்றம்பங்களைப் பங்கஞ்செய்து அவ்வாறுசெய்தபோது துதிக் கைநுனிவெந்துபோனயானையானது ஜனங்களைத்தாண்டியோடிக் கோபத் தோடும் தாமரைதரும்தடாகத்தை யடைந்து மூழ்கியது புகையானது அம்பு தங்களின்பதமாகிய மழைபெய்யும் அதிகாரத்தை நிர்வகிக்கும் ஆகயத்தானத் தையடைந்து சஞ்சல வன்னிச்சுவாலேவடிவ உட்பட்ட மின்னற்கொடியை யுடைத்தாய்ச் சுவாலேவீசும் அக்கினிகளின் அம்புகளின் கூட்டங்களாகிய மழையையெங்கும் பொழிகின்றது. அரசனைநோக்கி யொருவன்கூறுவதா வது ஹேதேவ! புகையானது ஆகாயத்தில் இரத்தினங்கணிறைந்த சமுத்திரம் போன்றிருக்கின்றது, விளங்காநின்ற வன்னிகண ஆவர்த்தங்கள் சுழன்று கொண்டிருக்கின்றன, சிகைகளாகிய தரங்கங்களை யுடைத்தாயிருக்கின்றது. சுவாலேயின் சிகரதேஜசினுலே ஆகாயம் கௌரமாயும் பீதமாயும் தோற்றிக் கொண்டிருந்தது, மிருத்தியுவினற்போலுற்சவத்தில் குங்குமங்களினுல் இரஞ் சிதமாயபெட்டிகள் திக்குமங்கையரானே கொடுக்கப்பட்டன. அந்தோ! விட மமாகவன்றே ஈதிருக்கின்றது சற்சரிதமற்றதாகவன்றே இருக்கின்றது, ஆயு தத்தோடுகூடிய வைரிகளின்வீரர்களால் பெரியோர்களும் அதமாகின்றுர்கள். அரசமங்கையர் தங்கதியாதாயிற்றேவெனின்? மார்க்கத்தில் ஓடிவருவதால் மிகுந்தவிக்ஷேபத்துடன் மணிமாலேகளும் மலர்மாலேகளும் சிறைந்துபோக, கூந்தல்பாதிவெந்து மார்பின்கண்ணிருக்கும் தனங்களேயும் நெருப்பானது பற் றிக்கொண்டமங்கையரநேகர். ஆடைகள் இங்கும் அங்கும் விலகலால் இடுப் பின்கீழ்முன்பின் றெரியத்தக்கவர்களாயும், மாணிக்கவளயல்களும் அவை பதித்தபொற்கங்கணங்களும் எங்குஞ்சிதறிப்பூமியை யலங்கரித்துக்கொண்டி ருக்குமாறு செய்பவர்களாயும் ஓடிவருகிருர்கள்! சிலர்ஹாரங்களும் அமல முத்துமாலேகளும் கொடிக்கூட்டங்களும் சிதைய ஓடுகிருர்கள், சிலர்கண்டுங் காணுமலிருக்குமாறுற்ற தனபாரங்களேயும் தங்க நகைகளேயும் பக்கத்துற்ற கனகப்பையையும் உடையவர்களாயோடுகிருர்கள் சிலர், ஆட்டின் சப்தம் போல் அதிகடினமாய்க் கேட்கமுடியாததாய்க் கதறிக்கதறிப் போரொலியை யும் மந்தமாகுமாறு செய்கிருர்கள்; சிலர், இடைவிடாத தாரையாகக்கிளம்பும் பெருங்கூக்குரலோடும் மார்புபிளந்துபோகுமாறு அடித்துக்கொண்டழுது கொண்டிருக்கிருர்கள், அதனுனே இன்னதுசெய்யத்தக்கதெனக் தெரியாமல் மயங்கிவாடுகிருர்கள். உதரச்சேற்றினுலும் கண்ணீரினுலும் நனைந்து ஒடுஞ்சங் கையால் ஒன்றற்கொன்று பின்னிக்கொண்ட வஸ்திரமுடையவராயினர் சிலர், சிலரோ புயமூலத்தோடு சேர்த்தியபுயங்களால் வலுவில்நரர்களால் இழுத்துக்

கொண்டு போகப்பட்டனர். நம்மையார் இந்த அவஸ்தையிலிங்குகாக்கப் போகின்ருர்களென வெருண்டுபார்க்கும் பார்வையாலும், உற்பலாவிபோலும் கண்ணீர்பெருக்கலாலும் தம்பக்கத்துச்சேனைகளை எங்குந்தயையால் அழுகு மாறு செய்விப்பவராயிருக்கின்ருர்கள். தாமரையைப்போலும் அதிகோமள மாய் அதிநிர்மலமெல்லிய சுத்த அம்பரத்துட்டேயங்களில் குறிக்கப்பட்டுள்ள குறங்கின்மூலஜாலங்களால் ஆகாசதாமரைக்கொப்பானவர்களாயிருக்கிருர்கள். சாஞ்சல்யத்தோடு கூடியிருக்கும்மாலைகளோடும் ஆடைகளோடும் ஆபரணங்க ளோடும் அங்கராகங்களோடுங் கூடியவளாகி, கண்ணீரால் ஆகுலமிகுத்து மீக நீண்டசையாநின்ற கூந்தன்மஞ்சரியையுடையவளாகி, விடயானந்தத்தளர்வி ஞலே நிரந்தரம்மதனமுற்ற காமக்கடலினின்றும் இனிதுதிதமானவள்போலு மிருந்தனள் இராஜஇலக்குமி.

43-வது நீயெரித்த கிருகாதி வருணனம் முற்றிற்று.

---

## 44-வது ஜகத்பிரஹ்மவருணனம்.

இப்போது,பயந்தபட்டத்துராணியைக்கண்டும் அந்தப்புரத்தில் நடக்கும் அலங்கோலங்களைக்கேட்டும் அரசன் போர்க்குச் செல்லுதலும் லீலாதத்துவ மும் வருணிக்கப்படும். மேற்கூறியவண்ணம் நடந்துகொண்டிருக்கும்வேளை யில் மதோன்மத்தயவ்வனம்வாய்ந்த பட்டத்துராணியானவள் தாமரைத்த விசை மகாலக்குமியடைந்ததை நிகர்ப்பதன்னரண்மனையையடைந்தனள். (அந்தலீலையின் பிரஞ்ஞையாலதிஷ்டிதமாயதாம் அவ்வரசனரண்மனை) அசை யாநின்ற மாலைகளையும் ஆடைகளையும் உடையவளாகி, பின்னமுற்றஹாரலதை களாலாகுலமுற்றவளாகி, சகிமார்களோடும் தாசிமார்களோடும் பயமிகவுற்றவ ளாகித் தளர்ந்துசென்றனள். சந்திரமுகியாகி அதிநிர்மல அங்கமுடையவ ளாகி, பெருமூச்சினுலே மேனடுக்கமுற்றஸ்தன்னியங்களையுடையவளாகி, தார கைகளாகியபற்களையுடையவளாகிச் சுவர்க்கத்தைப்போலும் வடிவுடையவளா யினள். பூதக்கூட்டங்களோடு போர்தொடங்கிய அமரேந்திரரை அமராங் கனைநோக்கிக்கூறியதுபோல அம்மன்னவனைநோக்கி அத்தேவியின் சகிகளி லொருத்தி விண்ணப்பிக்கத் தொடங்கியதாவது:—ஹேதேவ! அபிஷேகஞ் செய்யப்பெற்ற முக்கியமகிஷியாகிய தேவியானவள் எங்களோடுகூட அந்தப் புரத்துள்ளிருந்து ஓடிவந்துகாற்றினுலடிப்பட்ட கொடியானது தருவைச்சர ணடைவதுபோலத் தேவரீரைச்சரணடையநிற்கின்றனள். ஹேமன்னவர் மன்ன! பெருங்கடலின் பேரலைகளால் தீரத்தருக்கொடிகள்போலப் பலமு டைய ஆயுதந்தரித்த பகைவர்களானே மனைவிகளாகிய மற்றையபோகமாதர் அபகரிக்கப்பட்டனர். அந்தப்புரத்திற்கு அதிபர்களாக இருந்தயாவரும் மதோன்மத்தர்களாகிய சத்துருக்களானே பொடிப்பொடியாக ஆய்விட்டார் கள், பயமற்றுவந்த சத்துருக்கட்களவில்லை அவர்களானே காற்ருல் உயர்ந்த தருக்கள் அழிவதேபோல நம்மவர் அழிந்தனர். தூரத்திலிருந்து பயமில்லா

மல்வந்த சத்துருக்களானே நமதுபுரம்நிறைந்துள்ளது, வாரிகளானே கமலங் கள்போல இரவில்மழைகளில் இடியிடிப்பதுபோலச் சப்தித்துக்கொண்டு புரத்தையதம்பண்ணுகின்றனர். எங்கும் புகைப்பித்துக்கொண்டும் உரக்கக்கர்ச் சித்துக்கொண்டும் பேருற்சாகத்துடன் சர்ப்பம்போன்ற அநேகம்பாணங்களை யும் அக்கினிகளையும் ஏவிக்கொண்டும் கூட்டம்கூட்டமாய்வரும் சத்துருக்க ளானே நமதுபுரம்வியாபிக்கப்பட்டுளது. பரிவாரங்களுடன் விலாசினிக ளாகிய தேவிமார்கள் மயிர்பிடித்திழுக்கப்பட்டுக் கூக்குரலிடுபவர்களாய் வலு வில்வலைஞரானே மான்களும் பறவைகளும் கவரப்படுவதுபோலக் கவர்ந்து கோண்டேகப்பெற்றனர். இவ்வண்ணமெங்கட்குச் சாகோபசாகையாய் வந் திருக்கும் ஆபத்தைநீக்குவதற்கு அத்தியந்தம் தேவரீருக்கேசாமர்த்தியமு ளது. விதூரதமன்னவன் இவ்வாறுகூறக்கேட்டுத் தேவிமார்களைப்பார்த்து வேண்டுவதாவது:—ஹேதேவிமார்களே ! யான்போரின்பொருட்டுச் செல் கின்றேன் பொறுத்துக்கொள்ளுங்கள் தேவிமார்களுடைய உத்தரவில்லாமலே இடையில் போர்க்குச்செல்லும் அபராதத்தை, இவ்வெனதுமனைவிதங்கள் பாத தாமரையின் வண்டாக இருந்து தங்களாற்காப்பாற்றப்படட்டும். இவ்வண் ணம் பிரார்த்தித்துக்கொண்டு சினத்தாற் சிவந்தவிழிகளையுடையனாகி மதம் பிடித்தயானைகள் அதஞ்செய்யும்வனக்ருகையினின்றுங் கோபமுற்றசிங்கங் கிளம்பியதுபோலப் போர்க்குக்கிளம்பினன். கண்ணுடியானின்றும் கண்கு ளிரக்காணப்பெற்ற பிரதிபிம்பம்போன்றவளும், தனது ஆகிருதிக்குச் சமான மான ஆகிருதியையுடையவளும், ஆகிவந்தலீலையை யுணர்ந்தலீலைகண்டு கூறுவ தாவது:—ஹேபரமேசுரீ ! இஃதென்ன அற்புதம் ! இவளாகயானிருந்ததெவ் வாறோ ! முன்யான்எவளாக இருந்தேனோ அவளாகிய இவளாகயானிருந்த வாறென்னேயோ ! வயதும் ஒன்றாகவே காணப்படுகின்றதீதென்னே ! (தனக் கன்னியத்தன்மை கூடாமையானும், சென்ற அவஸ்தைக்கும் ஸ்திதிகூடாமை யானும், என்பதுகருத்தாம்) மேலுமந்திரியாதிகளிடத்தும் பேதப்பிரத்திய பிஞ்ஞைகள் விருத்தங்களேயாம், மந்திரிமுதலியவர்களும் புரவாசிகளும் பல வாகனசகிதபோர்வீரர்களும், என்னும்யாவருமே அங்கிருந்ததுபோலவே இங் கிருக்கின்றார்களே இஃதென்னே ! ஹேமாத ! அங்குமிங்கும் யாவருமிருப்ப தெப்படியோ ! கண்ணுடியில்உள்ளிலும் வெளியிலுமேபோல இவர்யாவருமே யுயிரோடுகூடினவரா ? சிற்சக்தியினாற்றல்கள் தருக்கிக்கமுடியாதனவாக விருத் தலின் சமானகருமத்தாற் கிளப்பப்பட்டவர்கட்குச் சமானமாகவே தோற்ற முண்டாம் சிற்சிலபாலிதனைக்கண்டாம் என ஸ்ரீதேவியார் திருஷ்டிசிருஷ்டி வாதத்தை யவலம்பித்துச் சமாதானிக்கின்றார்:—எவ்வாறெண்ணம் உள்ளே யுண்டாகின்றதோ அவ்வாறேகணகாலத்தி லனுபவமாம், மனமானதுகனாமுத லியவற்றே சித்தத்தாலனுபவிக்கப்பட்ட நனாப்பொருளாகாரத்தன்மையை யடைவதேபோலச் சித்தானது அத்தியாசத்தானே திருசிய ஆகாரத்தன்மை யையடையும். எவ்வாகாரப்பொருள் எதன்கண்ணே அவ்வகையாய சமஸ்

காரவடிவஜகத்துருவம் ஆண்டுச்சித்தத்தின்கண்ணும் சித்தின்கண்ணும் உளதாம், அவ்வகையாகவேகணத்திலுண்டாம்; போக்தாவின் அதிருஷ்டத்தாற் கிளப்பப்பட்ட மாயையோடுகூடிய சிற்சக்தியானது செய்யாததையும் செய்விக்கும் என்ப, எனவே தேசகால அற்பத்தன்மை விபுலத்தன்மை விரோதமும் பரிகரிக்கப்பட்டதேயாம், தேசகாலதீர்க்கத் தன்மையின்றும் பதார்த்தஜன்னிய விசித்திரத்தன்மையுமின்றும், அது பதார்த்தஜன்னியமென்று கூறின் அவ்வியற்கைக்கு விரோதம்பொருந்தாதாம் அவ்வாறில்லையன்றே! சைதன்யத்தின்கண்ணே யத்தியஸ்தமாகலின் அவ்வுள்ளிலிருக்குமுலகும்வெளியிலிருப்பதேபோல விளங்குகின்றது, கனப்பொருளிலிதைக்கண்கூடாய்க்கண்டாமன்றே! உள்ளேயிருக்கும் சித்தின்கண்ணே யத்தியஸ்தமாகத்தோற்றும் கனப்புரமும் மனப்புரமும் வெளியிற்றோற்றுவதுபோன்மன்றே. அவ்விவை வெளியிலுள்ளனவென்னும் பெயரானே நீண்டபழக்கத்தால் வெட்டவெளியாகத்தோற்றும்சத்தியம்போலவேயிருக்கும்; எத்தகைய பாவனையுடன் அக்காலத்தில் அவ்விடத்தில் கினதுநாயகனிருந்தானோ அத்தகையபாவனையுடன் இறந்தான் ஆகையினால் பாவித்தபடியான அப்பொருள்களையே அங்கேயே அடைந்தவனானன்; சமானமான கருமவாசனைகிளப்பலின் ஆகாரசமமிருந்போதினும் இம்மந்திரி முதலிய ஜீவர்கள் அவர்களல்லர்கள் மற்றோ அயலோர்களே யாவர்கள் அத்தகையர்கள்போன்று தோன்றியபோதினும் அவர்களின்றுமிவர்களை வேறென்றே யெண்ணுதி அவர்களேயெனப்பிரத்தியபிஞ்ஞைலனே மீண்டுமீண்டுமனுபவிக்கப்படினும் அத்தகையரயலாரேயாவர். சொப்பனசங்கற்பசைனியம்போலும் இவ்வரசன்முதலாயினோர்கள் சித்சத்தையினனே ஆயின்சத்ரூபமேயாவர்கள், இத்துணைமாத்திரமே கனவினும் நனப்பொருள்களின் விலக்ஷணத்தகைமையாது அவிசம்வாதி சர்வபுருஷசாதாரணார்த்தத்தன்மையோ, இத்துணைமாத்திரத்தானே சத்தியத்தன்மைச்சித்தியாகாதாம், சந்திரன் ஒட்டையளவுதோற்றுதல் இந்திரஜாலமுதலியவைகூட அவிசம்வாதியாய் யாவருங்கண்கூடாய் அனுபவிக்கக்கண்டாமன்றே. இவற்றின்கண் ணதைச் சத்தியமென்னக்கூறலாம்? இத்தகையதுண்மையென்பதெங்ஙனம்? பிற்பொழுது பாதிக்கப்படுதலின் சொப்பனத்திற்கு அசத்தியதன்மைபோல் ஜாக்கிரத்தின்கண்ணுமதுசமானமேயாம் நாசபாதங்கட்கு வஸ்துவின்கண்விசேடமின்மையின்; அல்லதுஅச்சொப்பனம்பிற்போது நாசப்படுதலின் அவஸ்துவேயாகுக. இவ்வியாவுமித்தகையதேயாக இவற்றுள்நனப்பொருள்களில்அதிகமியாதொன்றையுங்காணேம், பரஸ்பரகால அசத்துவமும் சிறப்பற்றதேயாகும், கனவின்கண்ணே நனவானது அசத்தியரூபமேயாம், நனவின்கண்ணே கனவானது அசத்தியரூபமேயாம்; பாதத்தைப்போல நாசத்தின்கண்ணும் பரஸ்பரகால அசத்துவம்சமமேயாம் ஜன்மத்தின்கண்ணே மரணம் அசத்துவடிவமாம், மரணத்தின்கண்ணே ஜன்மமும் அசத்துமயமேயாகும், நாசத்தில் அவயவங்கள் நாசமுடையனவாதலின் திரவியமானதுநசிக்குக, பாதத்திலோ அனுபூதி

யிது அனுபவ பலத்தால் நசிக்குக, இங்ஙன் நிமித்தபேதமிருப்பினும் அழி வதிற்சிறப்பொன்றையுங்காணேமே; ஹேஇராகவ! முன்னர் சத்தியத்தன்மை சாற்றப்பெற்றது ஈண்டோ அசத்தியத்தன்மையென அநிர்வசனீயத்தன்மை யாம் இரண்டும்சமமேயாம், இவ்வண்ணமாக இது சத்துமல்ல அசத்துமல்ல, மயன்மாத்திரமாகவேமலர்கின்றது; மலர்ந்துறவே, திருஷ்டிகாலத்திலும் பிர ளயகாலத்திலும் சிறப்பின்றியசத்ரூபப்பிரஹ்மம் சித்தமேயாம். மகாகற் பாந்தமடைந்தபோதினும் இப்போதும் இதன்பின்சென்றவரும்யுகபோதங் களிலும் எக்காலத்தும் எங்கும்யாதின்றே அதுசொரூபமாகவன்றும், மற்றே அக்கற்பனையின் அதிஷ்டானப் பிரஹ்மமேயுளதாம் ஆகலின் அதுவேயுலகாம் விளங்காநின்ற அப்பிரஹ்மரூபம் ஜகத்தல்லவாம். அதனிடையில் சிருஷ்டி யெனப்பெயர்வாய்ந்த இம்மயக்கங்கள் இலங்குகின்றனவாம். ஆகாயத்தின் கண்ணே மயிர்ச்சுருள்கள்போலும் உண்மையாக இலங்குவனபோலவன்றும், இலங்குவனவேயன்றும்எனலாம், எனினும்பிரபஞ்சத்தைப்போல அதனின்மை யின் கண்ணும் பிரஹ்மாதிரிக்தவடிப்பொய்ம்மையை விளக்கற்பொருட்டே போல வென்றதாம். கடலின்கண் கல்லோலங்கள்எங்ஙனமோ அங்ஙனமே பரம் பொருளின்கண் இச்சிருஷ்டிகள்யாவும்; பெருங்காற்றில் தூளிகள்போல உண்டாகியுண்டாகி யொடுங்கிக்கொண்டேயிருக்கும், ஆகையாற் பிராந்திமயா பாசத்தில் மித்தையாகவே நீயான்என்பதானபகுப்பான்வின்கண்ணேயாம். கானனீர் நீர்க்கூட்டத்தேபற்றென்னுளது அஃதொப்ப தக்தபடசாம்பற் போன்ற பிரபஞ்சச்சாம்பலில் என்னபற்றுதல்வைப்பதோ! விடயபாதமாயி னும் மயலுணர்வுவடிவம் பாதிக்கப்படாமையின் அவற்றானே துவைதமாமே யெனின்? மயலுணர்வுகளும் ஆண்டுஅயற்படுவனவன்றும் அப்பரமபதமாகவே யொளிரும், என்னை! நிர்விடயஞானங்கட்குப் பாஸ்பரம்பிரஹ்மத்தினும் வேற்றுமையின்மையின் பிரஹ்மமாத்திரமே யென்றுணரக்கிடத்தலின்என்க பேரிருளின்கண்ணே பாலகனுக்குப்போய்முதலியபிராந்திகள் உண்டாயினும் இருளேஅங்ஙனந்தோற்றுவதேயல்லலாமல் பேய்முதலியவையில்லாமைபோல வும் அதனானே மரணாதிதுயரங்கள் உண்டாதல்போலவும், அஞ்ஞானஅதன் காரி யங்களாகிய மறைப்புத்தோற்றவாற்றல்களே இவ்வுலகமாக விஸ்தரித்திருக்கிற படியினாலே இந்தஜனனமரணமோகமானது தோற்றுகின்றது. பிரஹ்மஞானத் தினானே சர்வபாதவடிவ விஞ்ஞானசம்பந்தபிரளயத்தோடுகூட யாவுமே பாதிக்கப்படும், அதிஷ்டானபிரஹ்மசத்தையே திருசியத்தினுடைய சத்வ அசத்வாதிசர்வபக்ஷங்களையும் தடுக்குகின்றபடியால் யாவுஞ்சாந்தியடையும் போது யாதுஎஞ்சாநிற்குமோ அந்தப்பிரஹ்மத்தினும் இத்திருசியம் சத்திய மாகவுமில்லை ஒருகாலத்திலும் அசத்தியமாகவுமில்லை. சத்திய அசத்தியவுபய ரூபமாகவுமில்லை, என்னை, ஒன்றற்கேவிரோதமுள்ள இருரூபத்தன்மைசம்ப வியாதன்றே. ஆண்டு மூன்றுவிருத்தகற்பங்களினும் அவிரோதமாகச்சம்ப வித்தலின் பிரஹ்மமே யென்னுங்கற்பம்மேன்மையதாதம், ஆண்டெலாம்

பிரஹ்மமேயிருத்தலின் பிரஹ்மமயமேயாவும் ; கற்பனைமாத்திரத்தகைமை பிரபஞ்சத்திற்கு யாண்டுஞ்சம்பவிக்கின்றது, ஏனெனின்? ஆகாயத்தின்மாட்டும் பரமாணுவினுள்ளும்திரவியகுணாதிகளின் அற்பதரமாகிய உட்பாகத்தினும் மரஹ்மமேயிருக்கின்றது. ஜீவ அனுயாண்டுளதோ ஆண்டுதன்னுடம்பாக இச்சகமுழுதையுங்காண்கின்றது வாசனையின் வலுவினாலே ஆன்மாவின் கண்ணானன்மஅத்தியாசத்தில் திருஷ்டாந்தங்கூறக்கேட்டி! முன்னர் அக்கினியல்லாமலிருந்த உபாசகன் யானே அக்கினியெனவுபாசித்தலான் தன் பாவனையின்முறைபற்றிப்பலபாவமாக ஆவிர்ப்பவித்த வெம்மையதாய்த் தன்னையுணர்வதொக்க, விசுத்தசித்தாகிய ஆத்மாவானது இவ்வியாவற்றையும் பாவனையானே தன் வடிவமாகவேகாணும். சூரியனுதித்தவுடனே வீட்டில் மும்மையணுக்கள் உலவுவதேபோலப் பிரஹ்மாண்டமும்மையணுக்களெல்லாம் பரமஆகாயத்தின்கண்ணேயுலவும். வாயுவின்கண்ணசைவும் வாசனையும், ஆகாயத்தின்கண்ணே சூனியத்தன்மையும் இருந்ததொப்பத் தூலத்தன்மை விடுபட்ட விசுவமானது பரத்தின்பாலிருந்தது, ஆவிர்ப்பாவதிரோபாவங்கள் உபாதானம்தியாகம் (இதுகிரிமைமாத்திரத்தைக்குறிப்பிப்பதாம்) தூலசூக்குமசராசரங்கள் பிரஹ்மத்திருக்கும் அவயவங்களால்விவர்ஜித பிரஹ்மத்தின் கற்பிதவிபாகங்கள் இத்தகையனவாம், அதனால் சாகாரமாய விசுவத்திற்கு நிராகாரத்தகைமையை யுணர்த்தற்பொருட்டு அத்தகைய தன்வடிவத்தினும் அனன்யங்கள் அநவயவங்கள் போன்றனவெனவறிக, போன்றென்றதனானே சாவயவத்தன்மையைப்போல நிரவயவத்தன்மையும் பொய்யென்றுஇராகவவுணர்தீ ; இவ்வண்ணம் அநவயத்தன்மையினானே நிஜபாவனை முறையாகப்பாரமார்த்திகரூபமாய் புலப்பட்டமுன்போன்றிருக்கின்ற விசுவமே விசுவசப்தார்த்தங்களாற் சூனியமாகாதாம், விசுவசப்தத்திற்குப் பூர்ணார்த்தத்தன்மை யெஞ்சிநிற்றலின் பூர்ணத்திற்குச் சூனியத்தன்மைகூடாமையின்என்க, பிரஹ்மத்தின்கண் விசுவம் அனன்னியமாகனவன்றேவிருக்கின்றது, அனன்னியவேதுவால் அஃதங்ஙனாயினும் சாவயவமாகக்காணும் விசுந்தான்யாதோவெனின்? அதுகயற்றரவுபோலச்சத்துமாகாது அசத்துமாகாது. மற்றே அநிர்வசனீயமேயாம் : அஃதெதனாலெனின்? மயலுணர்வினானேயனுபவிக்கப்பட்டது சத்தியமாகமாட்டாதாம், வஸ்துதத்துவப்பரீக்ஷைவடிவ அதன்பாதகவுணர்வு சத்தியத்தைவிடாதாம் அதனாலன்றே வசத்தியமாதல் மாயையினாலே மறையப்பட்ட சொரூபசித்துத்தன்மையால் பரமமெனவும் காரணமெனவும் ஜீவத்தன்மையெனவும் பிறவெனவுமாம். அதன்பின்னவ்வாறே நீளுணர்வின்றிர அனுபவத்தால் ஜீவத்தன்மையானது வெளியாக விளங்கும், இச்சமுசாரத்தின்கண்ணே ஜீவபோக இச்சைக்கேதுயாதோவெனின் விஷயரஞ்சனையேபொருத்தமுடைத்தாம், சத்தியத்தன்மையேனும் அசத்தியத்தன்மையேனும் ஏதுவாகாதாம், சிதாககாயத்தின்கண்ணே விரிந்திலங்குமிவ்வுலகம் உண்மையேயாகுக அலது இன்மையேயாகுக, அதனாலென்னே!

தனதிச்சைகளினாலும் அனுபூதிகளினாலும் ஜீவ அணுமோகித்துக்கொண்டே யிருக்கும், உபோற்காதத்ததிவ்வாறுக, ஆயினும் வினவியவினாவின் விடை யாதாயிற்றோவெனின்? முன்னனுபூதியோடு ஒப்பாகவோ ஒப்பில்லாமலோ சிற் சில அபூர்வ அனுபவமாகவோ விரைவில் அனுபவிக்கின்றார்களென்றுணர்தி! சிலபால் ஒரொருகால் சர்வ அவ்வாசனை யுண்டாங்கால் பேதத்தைபிரித்துப்பா ராமையின் அவைகளேயெனத்தோற்றும், சிலபாலோ பாதிவாசனையுளதாயின் பாதிசமமாகவேதோற்றும் ஜீவாகாசத்தின்கண்ணே அனுபூதிகள் அசத்தியங் களாயினும் சத்தியங்கள்போலத்தோற்றுகின்றன, அவற்றுள்முதலிலிவ்வகை யாம், அக்குலமாய், அந்நல்லாசாரமாய் அப்பிறப்பாய் அச்சேஷ்டையுடைத் தாய் அம்மந்திரிமாறே யெனவும் அப்புரவாசியரேயெனவும் புலப்பட்டுத் தோற்றுமென்றுணர்தி அவற்றிற்கு அதிஷ்டான திருஷ்டியானே பரமார்த்த மாகப்பழைய அபேதமாம், அத்தியஸ்த்த திருஷ்டியானே சாமியமாக எஞ்சி நிற்கும்; பாரமார்த்திக சொரூபத்தின்கண்ணே அத்தியந்தம் அவையேயெனச் சத்தியங்கள் நம்தத்தமது தேசகாலத்தில் ஹிததிருஷ்டியானே துல்லியுங்க ளாம். யாண்டுமேசைதன் யஸ்திதியிவ்வாறும், எங்குமிருக்கும் ஆத்மஸ்வ ரூபத்திற்கு எங்குமே பிரதிபையாம்; அற்றேல் ஈசுரருக்குப்பிரதிபையையனு சரித்துப் பொருளுண்டாக்கல் பொருந்துமெனமறையறையும் ஜீவனுக்கோ பொருளையனுசரித்தே பிரதியையுதயமாகும், மாறுகுமாயின், மனோரதிகளுக் கும் சத்தியத்வசாதாரணியங்கள் அடைவுறுதலின் அங்ஙனமாக எங்ஙனம் இராஜப்பிரதிபை மாத்திரத்தால் பொருள்களின் சித்தியும், மற்றைய ஜீவப் பொதுவாவிவகாரத்தகுதியும் எனின்? இராஜ ஆன்மாவின்கண் எத்தகைய சன்மயமாய சர்வசாதாரணசத்தியார்த்தப் பிரதிபையுதிக்கின்றதோ அத்தயை யதாய் அதினினுமுற்பாவினியாய்ச் சாதாரணபோஜக அதிர்ஷ்டவசத்தால் சற்சப்தவாச்சியமாய விண்ணின்கண்ணே அவ்வியாகிருத ஆகாசரூப ஈசுவர னிடத்திற் சத்தியசங்கற்பரூபப்பிரதிபை யுண்டாகவேசெய்யும், செய்யவே செப்பியதோஷமிலதாம், ஆகவே நினதுசிலத்தளாய் நினதுலொழுக்கத்தளாம் நினது குலத்தளாய் நினது தேகமயத்தளாயிவள் வரற்குரித்தேயாம். மொழி ந்தமுறையில் பிரதிபிம்பஜன்னியப் பிரதிபையாக இந்தலீலையிலங்குகின்றனள், எங்கும் நிறைந்திருக்கும் அறிவாங்கண்ணாடியில் பிரதிபைபிரதிபிம்பிக்கின்ற படியால் யாண்டும் இதுவே முறைமியனக்காணலாம். யாண்டு எத்தகையதோ அது ஆண்டு அத்தகையதாகவே நிரந்தாம் உத்யமாம், ஜீவாகாசத்தினது உள் ளிருக்கும் அந்தர்யாமி ஜசுரப்பிரபையானது வெளியிலும் செய்யும், செய்யவே வெளித்தன்மையானே சாதாரணதிருசியத்தன்மையடைவாம் என்றுணர்தி; பாகியத்திற்சிற்கண்ணாடியால் பிரதிபிம்பமாக இஃதிருக்குமென்றறிதி. ஹே இராகவ! ஆகாசம் அதனுள்ளடங்கியபுவனம் அதனுள்ளடங்கிய தரை அத னுள்ளடங்கிய நீயான் இராஜா என்பனயாவுமே விளங்காநின்றசின்மாத்திர சொரூபமேயாம், யானென்னும் பிரத்தியக்குருவமேயாம், இவ்வண்ணமே

அன்னியதத்துவமுணர்ந்தவரும் யாவற்றையும் சிதாகாசவடிவமாய் வில்வத்தி னுள்ளே அதன் சத்தரமாத்திரமாய்ப் பீஜகர்ப்பமாயிருப்பதாகவுணர்வர். அவ் வாறே நீயுமுணர்ந்துகொள், அதனுல் இயற்கை நிலையாகிய நிருமல நிருவி கேஷபமாகவே யிருக்கலாம்.

44-வது ஜகத்பிரஹ்ம வர்ணனம் முற்றிற்று.

---

## 45-வது சத்தியகாமாதி வருணனம்.

இப்போது இரண்டாவது லீலைக்குவரமும் பதுமப்பிராப்தியும் தத்தமது சங்கற்ப அநுசாரமாகச் சீவர்கட்குப் பலலாபமும் கூறப்பெறும். ஸ்ரீசரசுவதி தேவி விதூரனுகிய இவ்வுனது நாயகன் போர்க்களத்தில் இத்தேகத்தைவிட்டு அந்த அந்தப்புரத்தையே யடைந்து பதுமபூபாலவடிவினனுயிருப்பன் என்று கூறியதைக்கேட்ட இரண்டாவது லீலையானவள் எதிரில் நின்று இருகரங்கூப்பி மிகுந்தபக்தி வணக்கத்தோடும் அநேக நமஸ்காரபூர்வகம் இவ்வசனங்களைக் கூறத்தொடங்கினள்:—ஹேஞானசொருபமாகிய பகவதித்தாயே! இத்தகைய தேவியை நித்தியம்யான் அருச்சித்துக்கொண்டிருந்தேன் அத்தேவி யிரவிற் கனவில் இனியதரிசனத்தைக் கொடுத்துக்கொண்டிருந்தனள், அத்தேவி எத் தகையினளாயிருந்தனளோ அத்தகையினளாகவே நீயிருக்கின்றுய் ஆகலின் ஹே அம்பிகையே அழகியதிருமுகத்தாய்! கிருபணர்கள்மேல் வைக்குங் காருண்யத்தால் வரந்தரல்வேண்டும். நீதான் அந்தத்தேவி யென்பதிலையமே யில்லை இந்தப்பிரகாரம் அவள்வேண்டிக்கொண்ட அளவில் ஸ்ரீஞானதேவி யானவள் அவள் அன்பினுற்சிந்தித்ததையும் பூசித்ததையும் கருதி அந்த லீலை யைநோக்கி மிகமகிழ்வுடன், அனன்னியமாகிய பாவனையினுலே யிடைவிடா மல் சாங்காறும் நோன்புற்றுள நின்மேல் பரமதிருப்தியையடைந்தேன் ஆக லின் ஹேகுழந்தாய்! உனக்கு வேண்டியவரத்தைக் கேட்டுக்கொள்! என்றருள; போர்க்களத்திற் றேகத்தைவிட்டு எனது பதியானவர் எங்கேபோயிருப் பாரோ அங்கு இத்தேகத்துடனே இவ்வங்கனையாயிருக்குமாறு திருவருள் செய்யவேண்டுமென்று அத்தேயத்து லீலைவேண்டிக்கொள்ள, அதற்கு ஸ்ரீ ஞானதேவி, அவ்வாறேயாகுக, நீயாதொருதடையும்படாமல் மிகச்சிறந்த பக்தியோடும் புஷ்பதூபதீபாதிய பூஜைச்சாமக்கிரியுடன் மிகநன்றாக நெடுநாள் ஹேகுழந்தாய் பூஜித்துவந்தாய்! என அருள்செய்தாள், அந்தலீலையானவள் கிடைத்தவரத்தின் சிறப்பால் மகிழ்வுடன் முகமிகமலர்ந்தனள்; அக்கால் தூல தேகத்துடன் அவளுக்கு நாயகலோகப்பிராப்தியும் தனக்குத் தூலதேகம்விட் டுப்பிராப்தியும் உண்டாவதன் சிறப்பென்னேயென்னும் சந்தேகத்தோடுழனும் எண்ணமுடையவளாய் புராதனலீலை ஸ்ரீதேவியைநோக்கி, எவர்கள் தங்களைப் போலச் சத்தியகாமர்களாய் இவ்வாறு சத்தியசங்கற்பமுடையவர்களாயிருந்து பிரஹ்மருபமாக விளங்குகிறுர்களோ அவர்களிச்சித்த யாவும் அதிவிரைவில் உண்டாய்விடுகின்றன சத்தியகாமமகிமை அவ்வாறிருக்க அதே தேகத்தோடும்

ஹேபரமேசுரியே! யான் அவ்வேறுலகத்திலிருக்கும் கிரிக்கிராமத்தை யேன்
அடையவில்லை இவள்மாத்திரமிப்போதுதேகத்தோடும் அடையும்வகையாதோ
ளுதி! யென்று பிரார்த்திப்ப ஸ்ரீஞானநாயகி கூறுவதாது:—ஹே! குழந்தாய்!
எனக்கு யாதொரு இச்சையும் சுயமாகக்கிடையாது, பூர்ணகாமத்தன்மை
யிருத்தலின், பிராணிகளின்கருமானு சாரமாகவேயுதிக்கு மவ்விச்சை அதனது
விவத்தையானே விவத்தியாம், ஹேவரவர்ணினி! யாவருக்கும் ஒருசிறிதும்
யான் கொடுப்பதேகிடையாது, ஜீவர்கள் தாங்களே தங்களிச்சைப்படி யாவற்
றையும் விரைவிற் சம்பாதித்துக்கொள்ளுகிறார்கள். ஞானதேவியாகிய யான்
பிராணிகள் வாஞ்சித்தவருஞ்சுபத்தை வரதானவாயிலாகப் பிரகாசிப்பிப்பேன்,
அறிவுமாத்திர அதிதேவதையாயிருப்பன், பல உற்பாதனத்தில் சீவர்களுடைய
தனித்தனியாய பழைய காமகருமவாசனையால் வரைந்துகொண்ட சித்துவடிவ
ஜீவசக்தி சொரூபிணியாகிய அவ்வக்காரிய பீஜபூதமாயையோடுற்ற சித்சக்தி
யுளது; ஆகலின் அதனனுசாரமாகவே யான்பயனைக்கொடுப்பேன், எவ்வெச்
சீவர்க்கு எவ்வெச்சக்தி யெவ்வாறு எவ்வாறுண்டாகின்றதோ அவ்வாறு அவ்
வாறு அவரவர்க்கு அவ்வப்பயன் கொடுப்பதாகக் கரும அனுஷ்டான ஹேது
காமவிஷயமாக எப்போதும் இலங்கும் நின்பாலுதயமாய ஜீவசக்தி என்னை
யினிதாராதித்துறைந்து யான்முக்தையாவேன் என்னும் வருங்கரும அதன்
பலகுக்கும அவஸ்தையைக் கருப்பத்துற்ற காமத்தால் வரைந்துகொண்ட
அறிவுருவமாகும், இத்தகைய நீள்பாவனையால் அத்தகைய்வீடக்காலடையும்;
அவ்வவ்வகையானே நீயென்னுணர்த்தப்பட்டாய் அந்த யூகத்தினாலே உணர்
வினாலே யொதுக்கப்பட்ட அஞ்ஞான ஆவரணங்களால் நிருமலவடிவ அவஸ்
திதிவடிவ அமலத்தகைமையை ஹேவரவர்ணினியே நீயடைந்தனை. யான்
முக்தையாவேன் என்பதான பாவனையானே நீள்போதுகூடினவளானபோது
முற்போதித்த யூகத்தானே தெளிவிக்கப்பட்டாய், அப்பாவித்த பொருளையே
எப்போதும் தன்சிதிசக்தியினானே யடைந்தனை. எவனெவனுக்கு எவ்வா
றெவ்வாறாகத் தன்சித்தவச்சின்னமாய புருடமுயற்சி நீள்காலுதயமாமோ
அவனவனுக்குக் காலத்தாற்பலம் அவ்வாறவ்வாறேதரும்; தன்னுடைய சித்
தேதவமாகவேனும் தேவதையாகவேனும் வேறொருவிதமாகஆகி ஆகாசபலம்
வீழ்வதேபோற் பொய்யான பலத்தை யிஷ்டப்படி தருகின்றதென்றறிதி;
நின்னுணர்வின் முயல்வல்லாமல் அன்னியமெதுவும் ஒருபோதும் பலனீவதே
கிடையாது, அதனால் அதிவிரைவில் எத்தகைய பலத்தை விரும்புகின்றனை
யோ அத்தகையதற்கு அனுகூலமான கருமத்தைச்செய்தி நிச்சயமாகச் சிற்
சத்தையே எங்கும் நிறைந்த அந்தரான்மாவாம், முற்போது விதானமாக
வோ நிஷித்தமாகவோ எக்கருமம் எண்ணப்பெறுவதாய் முயலப்பெறுவ
தாமோ பிற்போது அதற்கே பலரூப ஸ்ரீ உதிக்கின்றதென ஆராய்தி, ஆராய்
வினாலோபவித்திரமானபதமியாதோ அதையறிந்து அதன்கண்ணே வாழ்த்தி.

45-வது சத்தியகாமாதி வருணனம் முற்றிற்று.

## 46-வது விதூரத நிர்யாணம்.

இப்போது சைனியசம்பிரமங்களோடு போரின்பொருட்டு விதூரதனுடைய வெளிப்பாடும் போர்க்களம்புகுதலும் போர்தொடங்கலும் புகலப்பெறும் இவ்வண்ணம் அவர்கள் அவ்வீட்டிற் பேசிக்கொண்டிருந்தபோது அவ்வீட்டி னின்றும் மிகச்சினமுடையவனுகி வெளிப்போந்த விதூரதன் யாதுசெய்தான் என்று ஸ்ரீஇராகவர்கேட்ப ஸ்ரீவசிஷ்டபகவான் விடையருளுவதாவது:— மகத்தான பரிவாரங்களாகிய நக்ஷத்திரக்கூட்டங்களோடு பூர்ணசந்திரன் வெளிக்கிளம்பியதேபோல விதூரதன் மிகுந்தபரிவாரங்களோடு தனதரண் மனையிலிருந்து வெளிக்கிளம்பினன்; கவசம் ஆயுதமுதலியவற்ருனே எல்லா அவயவங்களும் அலங்கரிக்கப் பெற்றவனுய், தத்தமது சிதஸ்தானங்களில் ஹாரமுதலிய ஆபரணங்களைத் தரித்தவனுய், மகாஜயஜயசப்தங்களோடு சுரேந்திரனைப்போல வெளிப்போந்தனன்; போர்வீரர்களை அவரவர்கட்குத் தகுதியான காரியங்களில் புகுமாறேவிக்கொண்டும், மந்திரிகளாற் கூறப்பட்ட வியூகரசனை விசேஷத்தோடுற்ற மண்டலத்தின் நற்றிதியையும், ஜனபத விவஸ்தையையும் கேட்டுக்கொண்டும் வீரகணங்களைக் கண்டுகொண்டும், அரசன் அழகிய தேரேறினுன். அத்தேர் மேருவாதிசிகர ஆகாரத்தோடு சமமாய ஆகாரமுற்றதாயும் முத்து மாணிக்கமுதலியவற்ருனே யலங்கரிக்கப் பெற்றதும் ஐவகைக்கொடிகளானே யலங்கரிக்கப்பெற்றதும் சுவர்க்கத்திற் பிரசித்தமாய தெய்வவிமானத்திற் கொப்பானதுமாகியிருந்தது. சக்கரங் களிலும் சுவர்களிலும் அநேக சுவர்ண விசித்திர வேலைப்பாடுகள் செய் யப்பட்டிருந்தன, முத்துமாலைகளாலலங்கரிக் கப்பட்ட அழகியநீண்ட மூற் பாகமானது கலகலவெனச் சப்தித்துக்கொண்டிருந்தது. அழகிய கழுத் துடையனவாய் நல்லிலக்கணங்கள் வாய்ந்தனவாய் உத்தமஜாதியிலுண்டா யினவாய் மிகச் சஞ்சலமுடையனவாய் இளையனவாய், மிகவேகத்தோடும் தாவி விழுந்தோடுவனவாய் தேவதைகளைப்போல அந்த ரிக்ஷத்திலும் செல்லுமதிசயமுடையனவாய் அதிவிரைவிற் செல்லுதலில் வாயுவைக் கதிக் கிரமங்களாற் சகியாதனவாய், பூர்வகாயகதிக்கிரம வேகத்தால் பிற்பாதி பறந்து வருவனபோன்றனவாய் ஆகாயத்தைக்குடிக்கும் பொருட்டுச் செல் வனபோன்றனவாய், சாமரப்பிரகாசங்களால் சம்பூர்ணசந்திரர்களா லேவப் பட்டனபோல்வனவாய் சர்வதிசைகளிலும் ஏவப்பட்டுச் செல்வனவாய் எட்டுக் குதிரைகளால் பூட்டப்பட்டிருந்தது அவ்விரதம் மத்தகஜ வடிவமேகங்க ளின் சப்தங்கள் பின்னதிசயமாகக்கிளம்பின, துந்துபித்தொனிகளோ மலை களின்தாழ்வரை முதலியவற்றிற் பிரதித்தொனி கிளப்பிக்கொண்டு மிகு கோர மாகக்கிளம்பின. மதம்பிடித்த போர்வீரர்தமினின்றும் உண்டான கலகல சப்தங்கள் வியாபித்திருந்தன, கிங்கிணிக்கூட்டங்களின் சப்தங்களும், ஆயுதங் கள் ஒன்றோடொன்று அடிபடும் பெருஞ்சப்தங்களும் நிறைந்திருந்தன. வில் லின்சடசடவென்னும் சப்தங்களும் சரங்கள்சீறுஞ்சப்தங்களும் வீரப்பாட்டு

களும், ஒருவருக்கொருவர் அங்கங்கலந்து நடக்கும்போராற்கவசங்கள் தூளியாதலாலாம், ஜணஜணசப்தங்களும் கிளம்பின ஓங்கி யெரியாநின்ற சுவாலைகளின் டணத்கார சப்தங்களும் வீராவேசத்துடன் வீரர்கள் செய்யும் பெருஞ் சப்தங்களும், வீரர்கள் ஒருவருக்கொருவர் கூவிக்கொள்ளும் சப்தங்களும், வந்திமார்களால் வீரர்கள்தம் உற்சாகப்பொருட்டுக் கூறுஞ்சப்தங்களும், போரிலடிபட்டுக்கைகாற்போய்த் துயரத்தாலழுஞ் சப்தங்களும் மிக வியாபித்திருந்தன, பிரஹ்மாண்டத்துள்ளெலாம் தன்னிறைவானே கற்போன்றிடையீடின்றித் தொனி தொனித்துக்கொண்டிருந்தது, கனத்தன்மையானே கையாற் கவர்வதேபோலுமிருந்தது, பத்துத்திசைகளிலுமுள்ள கொடிவீடு முதலியவற்றில் நிறைந்து அந்தப் பயங்கரத்தொனியானது வியாபித்தது, பின்னர்ச் சூரியமார்க்கமானது அத்தியந்தம் மூடும்படியாகவிருந்தது, தூளிவேடத்தோடும் பூபீடமே ஆகாயத்தின்கண்ணே யெழுந்துபறந்துகொண்டிருந்ததுபோற் றோற்றிற்று; அத்தூளிகளானே அம்மகாபுரமானது கர்ப்பவாசத்திலிருப்பதுபோலாயிற்று, வீரியமிகுத்த யவ்வனத்தில் இயற்கையாய் அவிவேகம் மிகுவதேபோல மிகக்கொடிய இருளானது பரவியது; பகலினாலே நக்ஷத்திரகணங்கள் மறைவதேபோலத் தீபக்கூட்டங்களெல்லாம் எங்கேயோ மழுங்கிப்போயின மிகவுஞ் சஞ்சலத்தோடு கூடியிரவிற்சரிக்கும் பூதபரம்பரைகள் மிகுந்தபலமுடையனவாயின; பழையலீலையும் புதியலீலையும் தேவியினாலே கொடுக்கப்பட்ட திவ்யதிருஷ்டிகளைக்கொண்டு வெட்டவெளியாக இருதயத்தாற்போல அப்பெரும் போரைக்கண்டார்கள். விதூரதன் வெளிப்பட்டபின்னர் நகரக்கொள்ளைக்காரர்களும் சைந்தவர்களும் பாணங்களும் கிளப்பிய சப்தங்களும் கடகடகடவெனச் சப்தித்தன, சப்தித்ததுபிரளயத்தின்கண்ணே ஒருபெருங்கடனீர் நிறைவோடு வாடவவன்னிகள்போலுமிருந்தது. மெதுவாகச்சேனைகளைச் சேகரித்துக்கொண்டு அவ்விதூரதனெனவன் சைந்தவர்களுடைய பலத்தையும் தன்பலத்தையும் சீர்தூக்கியேற்றத்தாழ்வு பாராமலே ஒருமித்துநிரம்பியுள்ள பிரளயக்கடலிற் பக்கத்தோடுபறக்கும் மேருகிரியானது புகுவதேபோலப் பகைவரது சேனையிற்புகுந்தனன்; அதன்பின்னர், அதிஸ்புடமாக வில்நாணின்ஓசைகள் சடசடவெனக் கிளம்பின, தத்தமது ஆயுதவர்க்கங்களால் அம்சுமயமேகங்களைப் பகைவர்பரம்பரை பரப்பியது; பற்பலபாணப்பறவைகள் ஆகாயத்தைப்பற்றிப்பறந்தன, அன்னியவுயிர்களைக் கவர்ந்ததனானே பாவத்தினாற் போற்கருமையுற்றுச் சஸ்திரவொளிகள் முற்றினும்பரவின. கொள்ளியெரிபோலச் சஸ்திரங்கள் ஒன்றோடொன்றுமுட்டுண்டாம் அக்கினியானது சொலித்துக் கொண்டிருந்தது, வீரமேகங்கள் சரதாரைக்கூட்டங்களைக் கர்ச்சனையோடும் பெய்தன. வீரர்களுடைய தேகங்களில் ரம்பம்போல அதிகூர்மையான பாணங்கள் புகுந்தன; கட்கங்களின் ஒன்றோடொன்று மோதும் ஓசைபடபடவெனச் சப்தித்து ஆகாயத்தின்கண்ணே பரவியது. சஸ்திரசம்பந்தமான அக்கினிப்பிரகாசங்களால் விரைவில் இருள்

கள் சாந்தியடைந்தன; எல்லாச் சேனைகளுமே ரோமக்கால்தோறும் நவநாராச முடையனவாயின், யமஆராதன யாத்திரையுற்சவத்தில் நடம்புரிவனபோலக் கவந்தபந்திகள் எழுந்தன, ரணஉற்சவ அலங்கார பூதப்பேய்த்தருணிகள் போரிற் பேருற்சாகத்தை யடைந்தார்கள், வலுவுடன் யானைகளின் தந்தங்கள் ஒன்றோடொன்று மோதியுண்டாகும் டங்காரத்தொனி மேலே கிளம்பியது, கவணினின்றும் விடுபட்ட கன்மகாநதிகள் ஆகாயத்தின் கண்ணே யோடிக் கொண்டிருந்தன, நிரந்தரம்காற்றினாலே உதிர்க்கப்பட்ட காட்டுக்காய்ந்த இலைகள்போல பிணங்கள் உதிர்ந்தன, பிராணி மரணத்தினாலே மழைபொழிதலால் போர்வடிவ மலையினின்றும் இரக்த நதிகள்பெருகிக்கொண்டிருந்தன, இரக்தங்களானே தூளிகள் சேறாயின ஆயுதவன்னிகளாலிருள்கள் ஒளிந்தன, போரின் ஏகநினைவானே சப்தங்களோய்ந்தன, மரணநிச்சயத்தாற் பயங்கள் பறந்தன, போரானது கேவலம் ஓய்ந்த சப்தமுடையதாயும் சம்பிரமற்றதாயும் ஆகியது, வாயுவாதிகளாலே ஆகுலமில்லாத வர்ஷாமேகவொளியையுற்றது, கட்கமின்னற்றரங்கங்கள் பளீர்பளீரெனமின்னி டாங்காரசகிதமாயின. சரக்கூட்டமானது கதகதவென வொலித்தது, அக்கினியந்திரம் டகடகவெனக்கதறிக் கொண்டிருந்தது, பெரிய அஸ்திரங்கள் ஒன்றோடொன்று கலந்து ஜணஜணவெனச்சப்தித்தன, இவையல்லாமல் பிறவற்றானே திமிதிமியெனச் சப்தங்கள் உண்டாயின இவ்வண்ணம் அப்போரானது பயங்காளிகட்குத் தாண்டமுடியாததாயிருந்தது.

46-வது விதூரதநிர்யாண முற்றிற்று.

---

## 47-வது விதூரதசிந்துசமாகமம்.

இப்போது சிந்துராஜாவிற்குச் சத்துருஜயகாரணமும், சூரியவுதய ரணக்கிரமமும், மந்திர அஸ்திரங்களானே இரண்டு அரசர்கட்கும் தேர்ப்போரும் வருணிக்கப்படும். இந்தப்பிரகாரம் அதிகோரமானபெரும்போரானது நிகழ்ந்தவழி மீண்டும் ஞானமயமான பகவதியைநோக்கி இருலீலைகளும் இவ்வாறு கேட்கத்தொடங்கினர். (மீண்டுமென்றதனானேகூறப்படும் வினாவிடைகள் முன்மொழிந்த ஊகங்களானே அடங்கிக்கிடத்தலின் கூறியதுகூறலென்னும் கோளேவருதலின் கூறியபொருளின் வெளிப்படையாக்கும் பயன்மாத்திரத்தைக்கருதியதாம்.) ஹேபரமேசுரியே! யானைகளையும் அடித்து ஓடும்படிசெய்யும் பெரும்போரில் எங்களுடைய நாயகரானவர் தங்களுடையகிருபையைப் பெற்றிருந்தும் அகஸ்மாத்தாகயாதுகாரணத்தால் வெற்றிபெறவில்லைகூறுதி விதூரதமன்னவனது பகைவனாகிய இம்மன்னவன்வெகுகாலம் வெற்றிபெற என்னையாராதனை செய்திருக்கின்றான். விதூரதமன்னவனோ அவ்வாறு செய்யவில்லை. ஆகலின்சிந்துராஜாவேஜயம்பெறும் விதூரதன் வெற்றிபெறான், எல்லாப்பிராணிகளின் மனத்துள்ளடங்கிய ஞானவடிவமாகியேயானிருக்கின்றேன் இத்தகைய என்னை யாவர் எக்கால் எவ்வண்ணம் காமகருமவாசனைப்

பலத்தான் பலதானஞ்செய்யுமாறு பிரேரிக்கின்றாரோ விரைவில் அவ்வண்
ணம் அக்கால் அவருக்கு யான் அவ்வப்பிரயோஜனவடிவமாக விவரத்தமா
கியே யுபகரிப்பேன், அதாவதுயாவர் எவ்வாறென்னையேவுகின்றாரோ அவ
ருக்கு அப்பலவடிவமாகியேயிருப்பேன். இவ்வென்னதியற்கையானது மற்
றொருதன்மையதாக வன்னியினதுஷ்ணம்போல மாறுதல் உறாதாம். இவ்
விதூரதனோ என்னையான்முக்தன் ஆகவேண்டுமென்றுபாசித்திருக்கின்றான்.
ஆகலின் பிரதிபைவடிவமான ஹேகுழந்தாய்! அவன்முக்தனேயாவன். இவ
னுடையசுயஞ்சத்துரு சிந்துமகிபதி வெற்றியாற்சத்துருக்களைப் போரிற்
பிடிப்பேனாக யானாகவேண்டுமென்றென்னையுபாசித்துளான், ஆகையால் விதூ
ரதனானவன் அத்தேகத்தைபார்யையாகிய உன்னோடும் இவளோடும் அடைந்
துகாலாந்தரத்தில் மோக்ஷத்தையுமடைவன், இவனுடைய சுயஞ்சத்துருவாகிய
சிந்துமகீபதியானவன் இவனைக்கொன்று இப்பூபீடத்தில்வெற்றிபெற்றவனாகி
இராஜ்யபரிபாலனஞ்செய்து கொண்டிருப்பான். என்றிவ்வாறுதேவிமார்கள்
பேசிக்கொண்டிருந்தபோது இரண்டுபலவான்களும் போர்செய்துகொண்டி
ருந்த ஆச்சரியத்தைப் பார்க்கும்பொருட்டுப்போல் இரவி உதயாசலம்வந்தது,
விதூரதனுடைய சத்துருரூபமாய திமிரக்கூட்டங்கள் இரவின்கண்ணே அரக்க
பிசாசாதி ஜீவசங்கங்களைத்தஞ் சைனியங்களைப்போலத் தோற்றுவித்தன,
அதுசந்தியாகாலத்தில் நக்ஷத்திரங்கள்போற்றோற்றின; மெதுவாகநீலகாசமலை
பூமிகள் பிரகடமாயின, புவனம்சேற்றுக்கடலினின்றும் எடுத்துவந்துவைத்
ததுபோலிருந்தது, சூரியனுடையகிரணங்கள் பொன்னைப்பாலாக்கியெங்கும்
பரப்பின, சைலங்களில், போரில்ரணவீரர்கள்மேல் ரக்தச்சடைபோலிருந்தது,
போர்க்களமானது வீரர்களது பாகுகளாலே சுழலாநின்றபாம்புகளாற்போல்
வியாபிக்கப்பட்டிருந்தது, ஆகாயமோசூரியனுடைய பாகுகளாற்போல் கிர
ணங்களால் வியாபிக்கப்பட்டிருந்தது, பொற்பிரபைகளினானே நிறைக்கப்பட்
டிருந்தது, ஆகையால் இரண்டுமேதெரியமுடியவில்லை, இரண்டும் இரண்டுபிர
பைகளினாலே கலந்தகாஞ்சனம்போலும் காணமுடியாமலிருந்தது. வீழா
நின்றகுண்டலங்களினாலே இரத்தினக்கூட்டங்கள் கலந்துகிடந்தன, சிரங்களினா
லோதாமரைகள்காணப்பட்டனவாகலின் தடாகம்போலிருந்தது. ஆயுதங்க
ளாற் பறவைக்கூட்டங்கள் நெருக்கமுற்றிருந்தன, சரங்களாற் சலபங்கள்
நிறைந்திருந்தன, இரத்தப்பிரபையினாலே திரமானசந்தியாகாலம்போலிருந்
தது, சவங்களினாலே சித்தபுருடனுடனிருந்தது, ஹாரங்களினாலே சர்ப்பத்
தோலையுடையதாயிருந்தது, கவசங்களானே சங்குலமிகுத்திருந்தது கொடிக
ளானே கொடிகள்விளங்கிக்கொண்டிருந்தன, தொடைகளினாலே தோரணங்
கள்கட்டப்பட்டிருந்தன, கைகான்முதலியவற்றானே இலைகள்பரப்பப்பட்டி
ருந்தன, சரங்களினானே சரவனமொத்தது, சஸ்திரகிரணங்களினானே புற்ற
ரைக்கறுப்பாகவிருந்தது, சஸ்திரங்கள்நிறைந்திருத்தலினானே தாழைப்புதரா
யது உன்மத்தபைரவர்போல ஆயுதமாலைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது,

சஸ்திரங்கள் ஒன்றோடொன்று அடித்துக்கொள்ளலால் மலர்ந்த அசோகவனா
கர்ரமாயிருந்தது, கடல்போலும் கும்கும்மகாசப்தங்களானே சித்தநாயகர்க
ளெல்லாம் ஓட்டம்பிடித்தார்கள், பாலசூரியகசித ஆயுதங்களானே பொன்ன
கராகாரம் (பொன்னகரம்திரிபுரத்தில் பிரசித்தம்) பரசுவாள்வேல் சக்கிரந்தண்
டம் உலக்கைமுதலிய ஆயுதங்கள் ஆகாயத்தின்கண்ணே சுழன்றுகொண்டிருந்
தன, ஓடிக்கொண்டிருக்கும் ரக்தநதியின்வேகமானது பிணக்கூட்டங்களையடித்
துக்கொண்டுபோயின. அக்கினியந்திரம்வேல் குந்தம்வாள் சூலம் பாஷா
ணம் முதலியவைநிறைந்திருந்தன, சூலசஸ்திரமுதலியவற்றானே வெட்டுப்பட்
டமுண்டங்கள் தொடர்பாகவிழுந்துகொண்டிருந்தன; இவ்வாறுவியோம
ரணமகீதலங்களிருப்ப சிந்துவிதூரதர்கள் என்னுயினர்களெனின், அவர்தமிரு
தேர்ப்போர்தேர்முதலியவற்றின் வாயிலாகக்கூறக்கேட்டி! பரிவாரப்போர்
வீரர்கள் பரஸ்பரம்போரால் அழியவே, காலதாண்டவவேதாள குலந்தொடங்
கும்கலகலப்புநிறைந்த அச்சூனியப் போர்க்களத்தில் பதுமசிந்துமன்னவரின்
உலவாநின்ற இருதேரும் விளங்கிக்கொண்டிருந்தன, ஆகாயத்தின்குறிகளாய்
இலக்கணபூதங்களாயிருக்கும் இரவியிந்துக்கள் துறக்கத்திற்போலத் தெரி
யாமலிருந்தன, சக்கிரம் சூலம் அக்கினியஸ்திரம் தண்டம் பரசு முதலிய ஆயு
தவர்க்கங்களானே ஆகுலிக்கப்பட்டிருந்தன, ஆயிரம் ஆயிரம் வீரர்கள் பரி
வாரங்களாக இருந்தார்ந்தன இஷ்டப்படி சுறறித்திரிந்தன, சுழன்று சுழன்று
விரிவான சப்தங்களுடன்நிகழ்ந்தன, சீத்காரத்தோடுகூடியமகாசக்கிரங்கள்
அநேகம் பேர்களையறைத்தலால் சிலரிறந்தும் சிலர் இறவாமலும் கிடக்குமாறு
நடித்தன, மத்தவாரண லீலையினுலே இரக்தநதிகளைத் தாண்டிக்கொண்டிருந்
தன, அந்நதியின்கண்ணே கேசப்பாசிகள் கிடந்தன, சக்கிரவாகங்களும் ஜலப்
பிரதிபிம்பித இந்துக்களும் விளங்கின, அவ்வாறியற்றிய அத்தேர்களின் சக்கி
ரங்கள் அநேகம் யானைகளை யடித்துக்கலக்கி வீழ்த்தியாகுலப்படுத்தின, போ
ரின்முயன்றவர் தம் ஜனத்கார ஓசைகள் கிளம்பின அவற்றோடுகூடிய அத்
தேர்களின் மேற்கோப்புகளிற் கட்டியிருக்கும் மணிகளும் முத்துக்களும் ஜண
ஜணவென்ன வொலித்துக்கொண்டிருந்தன, காற்றினுலேயடியுண்ட கொடி
களின் நுனிகள் படபடபடவெனச் சப்தித்துக்கொண்டிருந்தன; பயங்கர
மயமான அளவில்லாத மகாகோர, போர்வீரர் பின்றொடர்ந்துவரச் சென்றன,
விற்பிடித்தவர் அம்புகள் குந்தங்கள் யாவும் ஒன்றோடொன்று மோதிச் சண்
டையிட்டன, மேலும் வேல்களும் பரசுகளும் சங்குகளும் சக்கரங்களும் ஒன்
றோடொன்று சண்டையிட்டன. போர்ப்பூமியின் குண்டலங்கள்போல் அலங்
காரபூதமான தேர்களின் சுற்றுநின்ற மண்டலங்கள் கணகாலந்திரும்பின,
இருதேராளிகளும் எதிர்எதிராக எதிர்த்து, மாறுமாறுக ஆயுதப்பிரயோகஞ்
செய்ய ஆரம்பித்தனர், நாராசங்கள் சலதாரைக்குச் சமமாகப்பொழிந்தன,
பரசு குந்த முதலியவையேயாய ஆலங்கட்டிகள் மிகவும் விக்ஷேபப்படுத்தின,
அவ்வீழ்ச்சிச்சகிப்பாற் றெனிகளுண்டாயின, மேகம்போற் பொழிவதும்

கடல்போற் பொறுப்பதுமாயிருந்தது, பரஸ்பரம் பெருங்கடல் போற்கர்ச் சித்தார்கள், பூமண்டல நரசிங்கங்களைப்போலப் பாணங்களாலடித்துக் கொண் டார்கள், அவர்களுடையசரங்கள் மிகவும் விசித்திரங்களாக இருந்தன, ஆகா யத்தை மூடிக்கொண்டிருந்தன, பாஷாண முசல ஆகாரங்களாக இருந்தன, கட்கமுகங்களாக இருந்தனசில, சிலவோ தண்டமுகங்களாக விருந்தன, கூர் மைபொருந்திய சக்கிரமுகங்களாக இருந்தன சிலவோ பரசுமுகத்தனவாக இருந்தன, வேன்முகத்தனவாயிருந்தனசில, சிலவோ சூல சிரோமுகத்தனவா யிருந்தன, சிலதிரிசூலவதனங்களாக விருந்தன, சிலவோ தூலங்கள்போன் மகாசிலைகளாக விருந்தன, அப்போது பிரளயசண்டமாருதமுதிர்த்த சிலைக் கூட்டங்கள்போலப் பாணங்கள்வீழ்ந்து கொண்டிருந்தன, அச்சிந்து விதூரத மன்னவர்கள் பரஸ்பரஞ்சேர்ந்தது, பிரளயப்பொருட்டு மிகவிருத்தியாய சமு திரங்களின் பரஸ்பரஞ் சேர்க்கைவிலாசத்தானே நிகழ்ந்தது போலிருந்தது.

47-வது விதூரத சிந்து சமாகமம் முற்றிற்று.

---

## 48-வது ஆயுத வருணனம்.

இப்போது விசித்திரமாயையை யுண்டாக்குவனவாகிய மந்திர அஸ்திரங் களானே யகிலத்தைமயக்கும் சிந்துபதிமன்னவர் தம்யுத்தத்தை விஸ்தார மாக வருணிப்பாம், நிமிர்ந்த கழுத்தோடுகூடிய சிந்துமன்னவனை முன்னுற்று அவ்விதூரதமன்னவன் மத்தியானதபனசமான கோபத்தோடும் அதிவேகத் தையுடையவனுயினன்; வில்லெடுத்து நாணோசைசெய்ய அதுநெடுநேரம்வரை எல்லாத்திசைகளிலும் சப்தித்துக் கொண்டிருந்தன, மேருகிரியின் றடத்தைக் கற்பாந்தச்சண்டமாருதமடித்தது போலிருந்தது. மிகவும்விக்கிரமம் பொருந் திய இராஜாவானவர் அம்புறுத்தூணியாகிய இரவிலிருக்கும் முகுளித பதுமங் களில் பந்திக்கப்பட்டிருந்த பாணங்களாகிய வண்டுகளின் பாம்பரைகளைப் பிரளயமார்த்தாண்டன் கரங்களைவிட்டதேபோல விட்டனர். அவரது நாணி னின்றும் விடுபடுங்காலத்தில் ஒரேபாணமாக விருந்தது ஆகாயத்தின்கண்ணே போகும்போது ஆயிரமாகவிருந்து இலக்ஷக்கணக்காய் வீழ்ந்தன; எளிதாக வே சிந்துமன்னனுக்கும் அவ்வாருகவேயிருந்தது ஆற்றல்; இத்தகையபோர்க் கவுசலம் அவர்கட்கெங்ஙனமுண்டாயதெனின்? வரதராஜாவாகிய ஸ்ரீமகா விஷ்ணுவை தவத்தாலாராதனை செய்து பெற்றவரப்பிரசாதத்தால் இவ்வில் லாண்மையானது இவர்கட்கு நேர்ந்தது முசலமெனப் பெயரிய அப்பாணங் கள் ஆகாயம் முழுவதையும் முசலவடிவங்களானே மறைத்துப் பெருந்தொனி களைக் கற்பாந்த இடிகள்போலச் செய்தன, கனகநாராசபந்திகள் ஆகாயத் தின்கண்ணே மிகுந்ததொனியோடும் விளங்கிக்கொண்டிருந்தன, அவைதொ னித்துக்கொண்டு கற்பாந்தக்காற்றாலடிபட்ட நக்ஷத்திரக்கூட்டங்கள் போல் வீழ்ந்தன. விதூரதனினின்றும் அம்பின் பெருமழை நிரந்தரம் அடித்துக் கொண்டேயிருந்தது, அது கடலினின்றும் ஜலப்பிரவாகம்போலும் சூரியனி

டத்தினின்றும் கிரணங்கள்போலும், பிரசண்டக்காற்றினலே மகாதருவினின்றும் உதிர்க்கப்பட்ட புட்பங்களைப்போலும், பழுக்கக்காய்ச்சிய இரும்புக்கட்டியினின்றும் அடிக்க அடிக்கக் கிளம்பும் அக்கினிப்பொரிகள்போலும், மழைமுகிலினின்றும் தாரைகள் கிளம்புவதுபோலும், அருவிகளினின்றும் சீகரகணங்கள் கிளம்புவதுபோலும், முன்மொழிந்த விதூரதபுரத்தின் அக்கினிமகாதாகத்தினின்றும் ஒளிரும் புலிங்கங்கள் கிளம்புவது போலும், இருந்தது. அவ்விருமன்னவரது இருகோதண்டங்களினின்றும் சடசடவெனக் கிளம்பிய சப்தங்களைக்கேட்டு இருசைனியங்களும் சமுத்திரஞ்சாந்தமடைந்திருப்பதேபோலக் கண்கெட்டு வாய்கெட்டு நின்றன. ஆகாயத்தின்கண்ணே கங்கையின் பிரவாகமேபோலச் சரப்பிரவாகங்கிளம்பியது. சமுத்திரம் போன்ற சிந்துமன்னவனது அபிமுகம் போரில் கர்க்கர அரவத்தோடு அதிவேகமாக இருந்தது. இடைவிடாமல் கனக நாராச சரமழை சொரிந்துகொண்டேயிருந்தது. சவசவா சப்தமுண்டாகிக் கொண்டேயிருந்தது, தனுமேகத்தினின்றும் பாணமந்தாகினிப் பிரவாகமுண்டாகிச் சிந்துவைப் பூரிக்கச்சென்றது, அந்தப்புரத்தின்கண்ணிருக்கும் லீலையானவள் சாளரத்தினின்றும் அதைக்கண்டு, அந்த சமுதாய பாணப்பிரயோகத்தால் நாயகனுக்கு வெற்றியுண்டாகுமென்றுகருதி, ஆனந்தத்தால் முகபங்கஜமானது மலர்ந்து இவ்வாக்கியத்தைக் கூறத்தொடங்கினள்:—ஹேமகேசுவரீ நீநெடுநாள் வாழ்தி ! இவ்வென்னுதன் வெற்றிகொள்வதைப்பாருங்கள் ! அன்றியும் பிரயோகித்த இச்சரக்கூட்டத்தால் மேருவுந்தூளாய்ப்போகும். இவ்வண்ணம் மிகுந்த அன்போடும் ஆகுலத்தோடும் அவள்கூறிய மொழிகளைக்கேட்டு மனுஷ தேகாத்மபுத்தியோடுகூடி அறியாதவளாகவிருக்கும் அவளது இருதயத்தைக்கண்டு விநோதம் பார்ப்பதிற்றற்பரர்களாய அவ்விருதேவிமார்களும் சிரித்தார்கள். கொந்தளித்தெழாநின்ற அச்சரார்ணவத்தைச் சிந்துவாடவமானது சரக்கூட்டங்களாகிய அகஸ்திய பூதகரணத்தால் குடித்துபசங்கரித்தது, ஜன்னுமுனிவர் மந்தாகினியைக்குடித்ததுபோற் குடித்தது; அளவிறந்த பாணவருஷங்களால் அம்மகாகனமான பகழிகளையெல்லாம் சிதைத்துத் தனுவைத்தூளியாக்கி ஆகாயார்ணவத்திலெறிந்தனன். சாந்தமானதீபத்தின் கதியானது அறியமுடியாததேபோல அவனது சாயகசங்கத்தின் கதியையறிய முடியவில்லை. அம்புமழையைப்பெய்யும் சரீரவடிவ நீர்களைத்தரித்த மேகத்தைப் பிளந்து போர்க்கவுசலத்தானே சவசதத்தோடுகூட ஆகாயத்தின்கண்ணே பரவவிட்டனன். விதூரதன் அதனையும் விரைவில் உத்தம அம்புகளினனே சாமானியமரன மேகத்தை அதிவேகத்தோடுகூடிய கற்பாந்தக்காற்று அடக்குவதேபோல அடக்கினன். இவ்வண்ணம் செய்தல் மாறிச்செய்தலாகும் அம்புமழைகளால் மகீபதியானவன் வீணகவேமுயன்றனன், என்னை, அம்பின் அடிகள் குறிகளைப்பிடியாமலே சென்றன, சிலசமயம் குறிகளைபிடித்தும் பிடியாமலும் சென்றன, சிந்துமன்னன்கந்தர்வரது கருணையினலடைந்த

மோகனாஸ்திரத்தை எடுத்துவிடுத்தனன் அதனானே விதூரதனை யொழிந்து மற்றையர் யாவருமே பெருமயக்கத்தை யடைந்தனர்; அம்மயக்கத்தால் சஸ்திரத்தையும் வஸ்திரத்தையும் விட்டவர், மூகர், துயருற்ற வதன நேத்திரமுடையவர், இறந்தவர்போன்றவர், சித்திரத்தைப்போன்றவர் எனப் போர் வீரர் ஆயினர். விதூரதனையொழிந்த மற்றையர் மந்தமாக மயக்கத்தையடைவதன்முன்னரே விதூரதமன்னன் பிரபோத அஸ்திரத்தையெடுத்து விடுத்தனன், பின்னர்த்தாமரைத் தடாகமானது காலையில் விரிவதேபோல யாவருமே விழித்தெழுந்தனர், எழுந்ததும் மந்தேக அருக்கன் இராக்கதன் பேரிற் சினந்ததேபோல விதூரதவிடயத்திற் சிந்துசினந்தனன் சிவந்தனன். பின் பாசபந்தனத்துயரை யுண்டாக்கும் கொரேமான நாகாஸ்திரத்தை வித்தனன், அதனானே பர்வதத்திற்குச் சமானமான சர்ப்பங்களானே ஆகாரம் வியாபிக்கப்பட்டது; பூமியானது பாண்டுரசர்ப்பங்களானே தாமரைத்தண்டுகளானே தடாகம்போல வியாபிக்கப்பட்டது, பர்வதங்களெல்லாம் கிருஷ்ணசர்ப்பகம்பளமுடையனவாயின. பதார்த்தங்கள் அங்கிருந்தன வெல்லாமே விஷக்காற்றின் வயத்தானே மகாதுக்கத்தையடைந்தன மலினத்தையுமடைந்தன பர்வதவனமுழுவதும் வியாகுலத்தன்மையையடைந்தன. விஷவைஷம்யம் பரவிய காய்ந்தனவாயும் உஷ்ணமுடையனவாயும் பசையோடு சீதளமுடையனவாயும் பதார்த்தங்கள் ஆவதற்குக் காரணமான வாதங்கள் அவ்வடிவ ஜ்வலனரேணுக்கள் பஸ்மத்தாற் பகுப்புற்ற அங்காரங்களாற் கலப்புற்றதேபோலப் பரவியது. விதூரதன் பின்மகா அஸ்திரவுணர்ச்சியுள்ளவனானபடியினாலே சௌபர்ணாஸ்திரத்தை யெடுத்தும் விடுத்தனன், மலைபோல் அச்சௌபர்ண கருடாஸ்திரம் மேலேபோயது போங்கால் எல்லாத்திசைகளையும் பொன்மயமாச்கியது எல்லாத்திசைகளிலும் பூரணமாகியது, பக்ஷத்தோடு கூடியபர்வதத்திற்கொப்பாக மேலேபோம் சம்பிரமவேகத்தால் பிரளய சண்டமாருதத்தையுண்டாக்கியது, நாசியினது. காற்றின் வேகத்தால் சர்ப்பமண்டலங்களையெல்லாம் இழுத்துச்சென்றது, பெரியகுர்குர் என்னும் அரவத்தானே நிறைந்த கடலையும் கடந்திருந்தது. அச்சுபர்ணவடிவ மேகமானது அச்சர்ப்பவடிவ அளவிலாப்பிரவாகத்தைக் குடித்தது அப்பிரவாகம் பூமிமுழுதும் நிறைந்திருந்தது, அவற்றைப்பானஞ் செய்யுங்கால் சலசலவெனச்சப்தித்தது அகஸ்தியர் சமுத்திரபானஞ்செய்யும் போதுண்டான சலசலப்பையொத்தது; மூற்போது வராகத்தானே எடுக்கப்பட்டதானே வாரிராசியினின்றும் வெளிக்கிளம்பிப் பூமியானது யாவருக்கும் சஞ்சரிக்கயோக்கியமானதேபோலச் சர்ப்பகம்பளமானது விடுபட்டவுடன் பூமண்டலம் நன்றாகவிளங்கியது அதன்பின் அக்கருடச்சேனை யாண்டோ மறைந்து போய்விட்டது; காற்றினாலேதீபக்கூட்டம்போலும் சரற்காலத்தான் மேகமண்டலம்போலும் பக்கத்தோடுகூடிச் சஞ்சரித்தமை நாகாதிபர்வதக் கூட்டங்கள் வஜ்ஜிரபயத்தாற்போலும் சொப்பனத்திற்கண்ட வுலகம்போலும் சங்கற்பபட்டணம்போலும் மறைந்தது. அதன்

பின் சிந்துமன்னன் மிகுந்த அந்தகாரத்தை யுண்டாக்கும் தம அஸ்திரத்தை யெடுத்து விடுத்தனன் அதனுலே பூமத்தியம சமானமான இருள் மிக்க கடின மாகப் பரவியது; மண்ணுலகிற்கும் விண்ணுலகிற்கும் இடையில் விஸ்தரித்து ஒருபெருங் கடல்போல ஆய்விட்டது, சேனைகள் மீன்கள் போலாயின, நக்ஷத் திரங்கள் மணிகளைப்போலாயின, அந்தகாரத்தினது பிரவிருத்தியினுலேமைக் கடல் சேற்றுக்கடல்போல வுலகமாகியது, அஞ்சனபர்வதத்தின் காரணபூத மாய ரேணுக்களோடுகூட உண்டாகியகற்பக்காற்றுப்போல வியாபித்தது அந்தகூபத்தில் வீழ்த்தியதேபோல எல்லாப்பிரஜைகளும் அயர்வுற்றனர், எல் லாத்திசைகளிலும் விவகாரங்கள் பிரளயகாலத்திற்போல ஓய்ந்தொடுங்கின. பின் விதூரதன் பிரஹ்மாண்டதீபமாகிய மார்த்தாண்ட அஸ்திரத்தையெடுத்து மந்திரமுணர்ந்தவர்களிற் சிரேஷ்டனுகிய அம்மன்னவன் குப்தமான விசாரத் தை யபேக்ஷியாமலே செலுத்தினன், செலுத்தவே உதயமாய அருக்க அகஸ் தியன்கிரணங்களினுலே பேரிருட்கடலை நிருமலமாகிய சரற்காலம் கார்மேகத் தைக்குடித்ததே போற் குடித்தனன். பூபதியினது முன்னிலையில் இரம்மிய் மான பயோதரங்களோடு கூடிய காந்தையைப்போலத் தெளிந்த திசையா னது பேரிருளாகிய வஸ்திரமானது நீங்கப்பெற்று விளங்கியது; வனபந்திக ளெல்லாம் உள்ளேயிருந்து வெளிப்பட்டன, பட்டதுசத்துக்களுடையயுத்தி கள் லோபச்சேற்றுச் சாலத்தினின்றும் விடுபட்டனபோலிருந்தது. பின் கோபாகுலத்தோடு கூடிய சிந்துமன்னவன் மகாபயங்கரமான ராக்ஷச அஸ் திரத்தை யெடுத்துக் கணத்தில் விடுத்தனன், அது மந்திரத்தோடுகூடிய சரவ டிவமாயிருந்தது. பாதாளத்திலிருக்கும் திக்கஜங்கள் பூத்காரஞ்செய்த தானே பெருங்கடல்கள் கலங்குவதேபோல திக்குகளினின்றும் அதிபயங்கர மாய் அதிதூலமாயவன ராக்ஷசர்கள் கிளம்பிவந்தார்கள். அவர்கள் கபில நிறமேனுக்கிய ஜடைகளோடுகூடி தாம்ரவர்ணர்கள் கேட்கமுடியாதபடி சட சடவெனச் சப்தஞ்செய்பவர்கள் ஈரவிறகுகளையுடைய அக்கினிகள்போற்றா மிரமாக இருந்தார்கள், அக்கினிக்குக் காலிகராலி மனேஜவை சுலோகிதை சுதூ மிரவர்ணை ஸ்புலிங்கினி விசுவருசி என்பனவாய்ச் சஞ்சலநாவுகளிருப்பதொப் பப் பெரியநாவுகளையுடையவர்களாகவு மிருந்தார்கள். விருத்திச்சுழற்சியோடு கூடியவர்களாயும், ஆகாயத்தின்கண்ணே பயங்கரமான சீத்காரடாங்காரங்க ளைச் செய்பவர்களாயும் அக்கினிதாகர்களாயும் மகாதூமவிலோலர்களைப் போலக் கொள்ளிகளோடு கூடியவர்களாயுமிருந்தார்கள். பற்களாகிய தாம ரையங்குரங்களாந்தண்டுகணிறைந்த முகங்களோடும் மலினமாய விழி முதலிய சேறுகளாலும் பதுமபீஜங்களாலும் குறிப்பிக்கப்பட்ட தேகங்களோடும் ரோமங்களாகிய பாசங்களோடும் கூடியிராநின்ற ஏறமுடியாத படுகுழித் தடா கங்கள்போல இருந்தார்கள். அவ்வரக்கமேகங்கள் ஜனங்களாகிய ஜோதிக ளைப் பக்ஷித்துக்கொண்டும் ஓடிக்கொண்டும் கர்ஜித்துக்கொண்டும் உலகத்தை யெல்லாம் உண்ணும்பொருட்டே சிருஷ்டிக்கப்பட்டனவேபோன்றும் ஜடாஜால

மின்னற் கூட்டங்களோடுகூடியும் ஜலங்களோடு கூடியதுபோன்றும் திரிந்தன. இவ்வாறாயசமயத்தில் அந்த லீலையின் நாதனாகிய விதூரதன் நாராயண அஸ்திரத்தை யெடுத்துத் துஷ்டபூதங்களெல்லாம் நீங்கும்படியாக விடுத்தனன். இம்மகாமந்திர பூர்வக அஸ்திரத்தினின்றும் கோடானுகோடி யஸ்திரங்கள் கிளம்பவே சூரியனுதயமாகப் பேரிருளோடுவதேபோல இராக்கதர்கள் ஒடுங்கினார்கள்; முப்புவனத்திலும் ராக்ஷசப்படைகளெல்லா மில்லாமலொழிந்தன; மேகங்கணீங்கிய சரற்காலத்தில் ஆகாயம் நிருமலமாயிருப்பதேபோல அக்களம் நிருமலமாயிருந்தது; பின் சிந்துமன்னன் சொலிக்கும்படியான அம்பரத்தோடுகூடிய ஆக்கினேய அஸ்திரத்தை யெடுத்து விடுத்தனன். அதனானே திசைகளெல்லாம் கற்பாந்த அக்கினியினாலே சொலிக்கப்பட்டனபோலச் சொலித்தன; புகைமேகக் கூட்டங்களானே எல்லாத்திசைகளுமே மறைபட்டன ககனத்தில் நீண்டபர்தாள சம்பந்தி திமிரத்தால் ஆகுலமுற்றதுபோலுற்றது; பர்வதங்கள் தங்கங்கள்போல சொலிதவடிவினவாயாயின; மலர்ந்த வனத்தின்கண்ணே யிடையின்றிச் சம்பகக்கூட்டங்கணிறைந்திருந்தனபோலிருந்தது, விண்மலைதிக்குக் குஞ்சங்கள்சுவாலைஜாலங்களால் ஜடைலதைகளோடு கூடினவாயிருந்தன, மிருத்தியுவினுடைய மஞ்சணீராட்ட உற்சவத்தில் குங்குமத்தால் மிகப் பற்றுற்றமாலைகளையுடையன போலிருந்தன. சாகரத்தினின்றும் ஆயிரமாகிருதிகளோடும் ஒடத்தை வேகத்தால் நடத்தவந்த வடவையனலாற்போலும் ஜனசமுதாயங்களை யொரேவழியாயெரித்துக் கொண்டுவரும் வன்னி ஆகாயத்தையளாவிக் கொண்டுலகத்தையெல்லா மொரேயத்வைதமாக்கவெண்ணியதுபோலச் சொலித்தது. பின்வருணசம்பந்தமான அஸ்திரத்தைப் பூஜித்து விதூரதன் விடுத்தனன். அவ்வஸ்திர விசேஷமானது தன்பகையாகிய ஆக்கினேய அஸ்திரத்தைச் செயித்ததுமன்றிப் பகைவனாகிய சிந்துமன்னனையும் அளவின்றியடித்தது. நான்குபக்கமும் பேரிருணிறைந்ததேபோல நீர்ப்பிரவாகம் நிறைந்துவந்தது; மேலுங்கீழும் திக்குகளினும் மலைகளே நெகிழ்ந்துவந்ததுபோலிருந்தது. சரமார்க்க அவகாசத்தின்கண்ணே அதனது அவயவங்கள்போலும் மேகங்கள் மார்க்கங்களை மறைத்துக்கொண்டிருப்பனபோலும்; பெரும்புறக்கடல் திரண்டுவந்ததேபோலும், மேற்றேயத்திருந் துருட்டிவிட்ட குலபர்வதங்களின் பெரும்பாறைகள்போலும் இருந்தது. தமாலக்கூட்டங்கள் எழுந்தனபோலும், இராத்திரிகளின் சந்தித்தன்மைபோலும், லோகாலோக பர்வதத்தின்றட அந்தகார மைக்கூட்டம் போலுமிருந்தது. இராசதலகுகை விஸ்தாரங்கள் மேலாகாசத்தைக்காணும் வேட்கையோடு வந்தனபோலும், பெருத்த குரகுரவென்னும் அரவத்தோடும் பெருவேகத்தோடும் பெருத்தபெருத்த மூர்த்தங்களாகவும் இருந்தது. புவனத்தைவியாபித்திராநின்ற சந்தியை விரைவில் இரவிருளானது விழுங்குவதேபோல மதோன்மத்தமாகக் கிளம்பிய அவ்வக்கினிப் பிரவாகத்தை அந்நீர்ப்பிரவாகமானது குடித்தது. அவ்வக்கினிச் சந்ததையெல்லாம் குடித்துவிட்டுப் பூதல

முழுதையும் வியாபித்துநிறைந்தது; ஜலப்பிரவாகத்தால் மூழ்கியதேகம் நித்திரைசெய்வது போல விரைத்துக்கிடந்தது. இவ்வண்ணமாய அஸ்திரமேகங்களை, முன்னஸ்திரஞ்செய்த மலினங்களைத் தெளிவிக்கும் அதற்கு வேறாய் அதன்பகையாய அன்னிய அஸ்திரத்தை யுணர்ந்தவரும் எதில் பொய்யுருவங்களுள்ள அஸ்திரமோகங்கட்கும் அர்த்தக்கிரியா சாமர்த்தியம் பரஸ்பரம் மாயாமயமாயிருத்தல் கண்டும் அநுபவித்தனர். சத்துரு வித்தொம்சாதி பலவாயிலாகவும் யாவருமனுபவித்தனர். பின்னர் சிந்துமன்னவனுடைய சேனைகளை ரக்ஷிக்கும் ஆயுதசிரேஷ்டங்களும் போர்வீரர்களும் அவனது தேர்களும் அந்நீரினாலே திருணங்கட்குச் சமானமாக இழுக்கப்பட்டும் மிதக்கப்பட்டும்போயின. இவ்வாறாயதைக்கண்ட சிந்துமன்னன் அப்போது ஆபத்திற்காப்பாற்றுவதும் தெய்வசம்பந்தமுள்ளதும் சரரூபமாயிருப்பதும் ஆகிய சோஷணாஸ்திரத்தை நினைந்துதொடுத்தனன், தொடுத்ததும் சூரியனொளியினாலே பேரிருள்கெடுவதேபோல அச்சரத்தால் பிரளயமயநீர் காய்ந்தது; செத்தவர் செத்தவரேயாயினர் பூமிமுழுதும் வரண்டது ; பின் மூர்க்கரது கோபத்திற்குச் சமானமான தீவிரதாபமானது பிரஜைகளையெல்லாம் தபிக்கச்செய்தது; ஜர்ஜரமாகிக்காய்ந்துலர்ந்த சருகுகள் எங்கும் விரிந்து திரிந்து வனமுழுதும் கஷ்டம் அதிகரித்தோங்கியது பொற்பாலொப்பாம் சுந்தரஅங்கப் பிரகாசமானது திசைகட்குத் திகழ்ந்தது இராஜவரமங்கையரின் அங்கசங்கத்தினாலேபோல அங்கராகம் நிகழ்ந்தது. வெய்யில்வேளையிற் காடாக்கினியால் மிகவும் வெந்த இளந்தளிர்கட்குச் சமானமாசப் பகைவரெல்லாம் வெப்பமயமான பெருமூர்ச்சையையடைந்து அச்சரத்தால் வாடினர். அப்போது விதூரதன் போர்க்கோலாகலமுற்று நாணோசையின் அழகைட்பெருக்கி விரித்துக் கோதண்டத்தை வளைத்துப் பர்ஜன்ய அஸ்திரத்தை விடுத்தனன்; விடுத்ததும் தமாலவனமானது ஆகாயத்தின்கண்ணே வந்துழவுகின்றதோ என்னுமதிசயமுண்டாமாறு நீர்நிறைந்து படுத்துப் பேரிருளிரவுகள் ஒன்றுகூடினபோல மேகவரிசைகள் கிளம்பின ; நீர்நிறைந்திருத்தலான வணங்கினவாப் வாமனங்களாய்த் தாழ்ந்துசென்றன ; செல்லுங்காற் பெருங்கர்ச்சனையைப் பயங்கரமாய்ச் செய்துகொண்டுபோயின ; திரியக்குவிஸ்தாரத்தானே அமந்தரங்களாய் இயற்கையாய விஸ்தாரத்தில் அடங்கிய கதியுடையனபோன்று சுருங்கினவாகி எல்லாத் திக்குமண்டலங்களையும் குண்டலங்களாயடைவுற்றுலவின. வேகவிருஷ்டியோடு கூடினவாயும் மேகாடம்பரங்களைப் போதிப்பனவாயும் துளிகளைத் தெளித்துக்கொண்டு பனிநிறைந்திருந்தாற்போலச் சீதளமேன்மையினாலே சுகந்தருவனவாயும் காற்றுகள் கிளம்பின. நல்லதங்கச் சர்ப்பங்கள் முற்கூறிய சந்தாப ஆபத்துச்சகியாதனவாகிப் பர்வதாதிகளினின்றும் வெளிக்கிளம்பினவோ வென்றுரைக்குமாறு தெய்வலோகத்தில் திவ்யஸ்திரீகளின் கடாக்ஷஞ்சுழல்வனபோல மின்னல்கள் சுழன்று விளங்கிக்கொண்டிருந்தன. அம்மேகங்களினது கர்ச்சனையினாலே மிகவும்விருத்தியடைந்த பிரதித்தொனி

களினாலே கிரிகந்தரங்களெல்லாம் நிறைந்திருந்தன, ரோஷத்தினாலேசென்று எதிர்முகமாகநின்ற மதம்பிடித்தமாதங்கசிங்ககரடியாதிகள் எதிர்த்துக்கர்ச்சனை செய்யும் கர்க்கரசப்தங்கள் திசைகளெல்லாம்நிறைந்துநின்றன ; பேரொலக்கைபோன்ற தாரைகளினாலே நீர்மழையானது கனமாகப்பெய்ததது, கிருதாந்தனது திருஷ்டிகள் போன்ற கஷ்டமானடங்காரங்களினாலும் கரகம் வீழுந்தொனிகளினாலும் மர்மங்களும்சிரங்களும் பிளவுபடுந்தொனிகளினாலும் மிகக்கடினமாகவிருந்தது முதலில் அனற்குச்சமானமாகப்பூமியாயது உஷ்ணபாஷ்பமானது பெருகிக்கிளம்பியது, மேகக்கூட்டங்களின் சம்பந்தியுத்தத்தின் பொட்டுச் சௌரியவிலாசம் பாதாளத்தினின்றும் அங்கீகரிக்கப்பட்டதுபோலருந்தது. அதன்பின்நிமிடமாத்திரத்திரத்தில் கானனீருண்டாகக் காரணமாயிருந்த ஆதபங்களெல்லாம், சமுசாரவாசனைகள் யாவும்பரமான்மசாக்ஷாத்காரத்தாலாம நிரதிசயானந்த ரசப்பிரவாகத்தாற் சாந்தியாவனபோலச் சாந்தியடைந்தன. எங்கும்சேறேநிறைந்திருந்தது பூமண்டலமுழுதும் சஞ்சரிக்க யோக்கியமில்லாமலாய் விட்டது, சிந்துமன்னன் சிந்துவைப்போலப் பூரணமானதாரைகளாலுண்டான நீர்ப்பெருக்கால் நிறைந்து நின்றனன், பின்னவன் வாயுசம்பந்தியஸ்திரத்தையபிமந்திரித்து விடுத்தனன், அதுஆகாச அவகாசமுழுவதையுமே மூடியது, கற்பாந்தத்தில்நடனஞ்செய்யும் மிருந்தமதத்தோடு கூடிரடத்சப்தஞ்செய்யும் பைரவபயங்கரமுண்டாயது இடிவீழ்ச்சிபோலும் பிராணிகளின்தேகங்களையெல்லாம் பிடித்தது அக்காற்று, அதனாற்பாறைகளெல்லாம் துண்டுதுண்டாய்வெடித்தன, படர்கட்குப்பிரளயசமயத்தைக் குறிப்பிப்பதாய் எதிர்ப்போர்வீரர்களாற்போல உண்டாக்கப்பட்ட அதிகடினமானடாங்காரத்தால் பாறைமுதலியவற்றைப்பிளக்கச் சாதகமாய ஆயுதவிசேஷமென்னும் சிலமுதலியவற்றின் அடிமுதலியதொனிகளினாலேடங்கமுடையதுவானாற்போல அவ்வாயு அடித்தது எத்திசைமுகங்களினுமே.

48—வது ஆயுதவர்ணனம் முற்றிற்று.

---

## 49-வது திருதிய அஸ்திரயுத்த வருணனம்.

இப்போதுபர்வதாஸ்திரத்தையும் வஜ்ஜிராஸ்திரத்தையும் பிரஹ்மாஸ்திரத்தையும் விஸ்தாரமாகப்பிசாசுகளின் சரிதங்களோடுகூடிய பிசாசாஸ்திரத்தையும் வருணிப்பாம் பனிச்சீதலம் எங்கும் பரவியது, வனத்திலைகளெல்லாம் எங்குஞ்சுழன்றது, அவ்வாயுக்கள் விருக்ஷங்களைத்தாங்கிக்கொண்டு மூர்த்திமான்களைப்போல் விளையாடிக்கொண்டு தூளிகளையெல்லாம் சிரோபூஷணமாக்கிக் கொண்டுதிரிந்தன. விருக்ஷக் கூட்டங்களெல்லாம் பக்ஷிகளைப்போலப் பறந்தன, படர்களெல்லாம் விழுந்தும் எழுந்துமழுந்தினர், மேற்கண்டங்கள்யாவும் பொடிப்பொடியாயின, மேகச்சுவர்களெல்லாம் பிளந்துவிழுந்தன ; அதிபயங்கரமான பெரியஅக்காற்றினாலே காய்ந்து பீற்றலாய சருகுபோல விதூரதன் ரதம் நதியாலடித்துக்கொண்டுபோகப்பட்டது. பின்

மகாஸ்திரவித்வானுகிய விதூரதன் பர்வதாஸ்திரத்தை விடுத்தனன், அதனுல் விண்ணும் திண்ணெனக்கனமுறத்தொடங்கியது, மேகநீரோடு வியோமமும் விழுங்கப்படுவதுபோலவாயது. அச்சைலாஸ்திர அடியினுலே தத்துவத்தை யுணர்ந்ததும் சைதன்யத்திற்கு மாயாஇலக்கண காரணசாந்தியினுலே அதன் காரியபூதமாய விராட்டின்பிராணக்காற்ருகிய சூத்திராத்மாவைப்போல அதி விஸ்தாரமான அந்த வாயுவானது சாந்தியையடைந்தது. அந்தரிக்ஷத்திற் சென்ற தருக்களியாவும் கீழே பூமியில் விழுந்தன ; நானுஜனசவக்கூட்டத்திற் காக கோடிகள்வீழ்வனபோலுமிலங்கின. நிசுவாச சப்தங்களாகிய சூத்காரங் களும் கொள்ளேயடித்தலால் டாத்காரங்களும் பயத்தினுலேபாத்காரங்களும் மேற்படர்களால் உத்காரங்களும் ஒய்ந்தன திசைகளில், கிராமங்களின் வனங் களின் கொடிகளின் நிரர்த்தகவர்ணனவாக்கியங்கள்போல வித்வஸ்தமாயின. சிந்துமன்னன் சிந்துவின்கண்ணே வீழ்ந்தபறக்குந்தகைமைவாய்ந்த மைநா காதிமலேகளேப்போல இங்குமங்குமாய்த் தத்தளித்தான், பத்ரபர்ணம்போலும் ஆகாயத்தினின்றும் விழும்கிரிகளேக் கண்டு மயங்கினன். பின் ஒளிவீசாநின்ற வஜ்ஜிர அஸ்திரத்தை விடுத்தனன் அதினின்றும் வஜ்ஜிரகணங்களுண்டாயின. அவை, அக்கினிகள் விறகுகளே விழுங்குவதொப்பப் பர்வதேந்திர திமிரத் தைச் குடித்தன. அவை அக்கிரபாக வடிவமூக்குகளினுனே சேதித்துக் கலக் கிப் பர்வதங்களின் தலேகளாகிய சிகரங்களேச் சூறைக்காற்ருனவை பலங்களே வீழ்த்துமாறு வீழ்த்தின. விதூரதன் பின் வஜ்ஜிராஸ்திரசாந்தியின்பொருட்டு யாவற்றையுந் தொம்சமாக்குமாறு பிரஹ்மாஸ்திரத்தை விடுத்தனன். பின் பிரஹ்மாஸ்திரமும் வஜ்ஜிராஸ்திரமும் ஒரேகாலத்தில் சாந்தியையடைந்தன. அதன்பின் சிந்துமன்னன் தாமிசிரம்போலக் கறுப்பாயிராநின்ற பிசாசாஸ்தி ரத்தைச் செலுத்தினன், அதனுன் மிகவும் பயத்தைத் தரத்தக்கப் பேய்வரி சைகள் கிளம்பிவந்தன. சந்தியையிற்போலப் பயத்தாற்போலத் தினங்கறுப் பாயது, அந்தகாரக்கூட்டங்கள்போலப் பிசாசுகள்புவனம்வந்தன. பஸ்மசம் பந்திபாய் வெந்தஸ்தம்பம்போன்றன, தாலஉத்தால விலாசம்வாய்ந்தன, பார் ப்பதற்குப் பருத்த ஆகாரமுடையனபோற் ருேற்றிடினும் கையிற்பிடிப்ப தற்கு யாதொன்றுமேயில்லாமலிருந்தது, சுவற்றிற்சிலமேனேக்கியகேசமுடை யன வற்றியதனுவையுடையன, மயிர்நிறைந்தன, கிருஷ்ணுங்கமுடையன, மலி னுங்கமுடையன கிராமிய தரித்திரஜனம்போன்றன, ஆகாசசஞ்சாரமுடையன சிலவுமாயிருந்தன. பயத்தோடுகூடினவாயும், அசுசியஞசாரங்களோடு காணப் பட்டனவாயும், எலும்புமண்டையோடுமுதலியவற்றைக் கரத்திலேந்தினவாயும், தீனத்தோடு கூடினவாயும் வஜ்ஜிரத்தையும் வாளேயும் உடையனவாயும், அதனு னே நிஷ்டூரத்தையுடையனவாயும், கிராமியஜனங்கள்போலத் தீனமுடையனவா யுமிருந்தன. தருவிலும் குப்பையிலும் மார்க்கத்துள்ளும் பாழ்வீட்டிலும் வீட்டி லும்சஞ்சரிப்பனசில, கன்னங்களே நக்குவனசில, பிரேதரூபங்களாயிருந்தனசில, கிருஷ்ணுங்கத்தோடு கூடியிருந்தனசில, பின்னலேப்போலக் கண்டுங்காணுமலுமி

ருந்தனசில. அக்கால் இறந்ததுபோக எஞ்சியபகைவர் சேனையைக் கவர அம்
மதப்பேய்கள் தொடங்கின. ஆண்டு விதூரதசைனிகர் பின்ன அஸ்திரமுடைய
வராயும் கலங்கிய கருத்துடையவராயுமிருந்தனர். சிலர் ஆயுதங்களை யெறிந்து
விட்டுத் தேகத்தைக் காப்பவராய்ப் பயந்து பிராணனைக் காப்பாற்ற விரைந்
தோடினார்கள். நேத்திரங்களானும் அங்கங்களானும் முகங்களானும் பாதங்க
ளானும் பூதாவிஷ்டசேஷ்டையுடையவர்போலக் காணப்பட்டார்கள். எவ்
வாறு காணப்பட்டார்களெனின்? கௌபீன வஸ்திரங்களை யெறிந்தவர்களா
யும் சுருங்கிய அங்கமுடையவர்களாயும் முன்னங்கம் பின்னங்கம் மேலங்கம்
கீழங்கங்களில் வஸ்திரம் அகன்றவர்களாயும் மலமூத்திர விசர்ஜனர்களாயும்
நீங்காமற்றொடங்கிய கூத்தர்களாயும் காணப்பட்டார்கள். அப்பேய்க்கூட்ட
மானவை விதூரதமன்னவனை யடைவதற்குமுன்னர் பேய்ச்சங்கிராமஞ் செய்
மாயையை அம்மன்னவன் உணர்ந்தவனாதலால் அதனை நினைந்து பகைவராலே
வப்பட்ட பேய்களைத்தான்வயஞ்செய்து பகைவர்சேனையோடு சங்கிராமஞ்
செய்யும் மாயையைப் பகைவர்பாலேவினன்; ஏவியதும் தன் சேனைகள்
சொஸ்தமடைந்தன, பகைவர் சேனைகள் பேய்பிடித்தவர்களாயினார்கள், பின்
விரைவிற் கோபத்துடன் போய்ச் சேனைக்குச் சகாயபூதமாயிராநின்ற மற்
றொரு பூதனைவிசேஷ அஸ்திரத்தை விடுத்தனன் விதூரதன். பூதலத்தினின்
றும் ஆகாயத்தினின்றும் மேனோக்கிய கேசங்களோடுற்ற பூதனைகள் கிளம்
பின அவை குழிந்துசுழலும் பயக்கண்ணுடையன, கடித்தலமும் கனதனங்க
ளும் அசையும் நடையின, மேம்பட்ட யவ்வனமுடையவையும் கிழங்களும்
பருத்ததேகாங்கமுடையவையும் ஜர்ஜரங்களும் சொரூப அரூப ஜகனமுடைய
வையும் கெட்டநாபியுடையவையும் விளங்கும்பகஸ்தானமுடையவையும் ஆயி
ருந்தன. நரரக்தம்நிறைந்த கபாலங்களையும் சிரங்களையும் கரத்திலுடைத்தா
யிருந்தன. சந்தியாகாலமேகம்போன்ற சந்தேகங்களையுடைத்தாயிருந்தன,
பாதிமென்றுங் குடித்தும் உதட்டில் ஒழுகும் மாம்ச ரக்தமுதிர்ந்தகன்
னங்களை யதுக்கிக்கொண்டிருக்கும் வதனங்களைச் சுழிப்பன, நானாவிதமான
அங்கசேஷ்டைகளையுடையன, நானாவிதமாக நிமிர்ந்து நிற்பவையேயாயினும்
குனிவதிற் சமர்த்துடையன, சிலையைப்போற் கடினமாகவும் பாம்பைப்போ
லவக்கிரமாகவும் வதனம் தொடை கடி பக்கம் கரமுதலியவையுடையன, குழந்
தைச்சவங்களைப் பொறுக்கி நரமாலையாக்கித் தரிப்பன, நரம்புகயறுகளைக்
கையில்வைத்துக் கொண்டுதிரிவன, நாய் காக ஆந்தைமுன்முகமுடையன,
திறந்தவாயும் வாயின்கீழ்பாகம் வயிற்றிற் பதிந்தனவுமாயிருந்தன; துர்ப்பல
மாயிராநின்ற கெடுதலைச்செய்யும் குழந்தைகளைப்போல அப்பேய்க்கூட்டங்
களை அப்பூதனைகள் பதித்தன்மையானே யங்கீகரித்தன (உபயோக்ய தாங்கிசத்
தில் ஒத்திருத்தலின் திருஷ்டாந்தமாம்) பேய்ச்சேனையும் பூதனைச்சேனையை
யும் இங்ஙனமொன்றாகக்கலந்துகொண்டன, வதனம், அங்கம், விழி முதலிய
வற்றை எழுப்பியும் கோணியும் கூத்தில் மூழ்கிக்கிடந்தன, இவ்வண்ணம்

ஒன்ருகச் சேர்ந்துகொண்டு கிரீடையின் ரச ஆவேசத்தாற் பரஸ்பரம் தழுவியும் ஓலமிட்டும் பரஸ்பரம் ஓடியும் விளையாடியுந் திரிந்தன. நீண்டபெரிய நாவினை இங்குமங்குமாய் சுழற்றி நக்கிக்கொடும் நானுவிதமாக முகங்களைக் கோணிக்கொண்டும், உதிரச்சேற்றை வாரித்தூக்கிக்கொண்டும் பரஸ்பரப் பிரீதியின் பொருட்டுப் பிணத்தின் அவயவங்களை யிழுத்துக்கொண்டும் திரிந்தன இரக்தநீரில் மூழ்கியுமெழுந்தும் மீளமீள மூழ்கியுமெழுந்தும் அவ்விரக்தத்தினுலே விளங்குந்தேகமுடையனவாயும், நீண்ட உதரமுடையனவாயும், நீண்டபுஜமுடையனவாயும், நீண்ட காதுதடுநாசியுடையனவாயுமிருந்தன. இரக்தமாம்சப் பேருஞ்சேற்றின்கண்ணே பரஸ்பரம் ஆலிங்கனம் மாறிமாறிச் செய்து கொண்டன, மந்தரபர்வதத்தான் மதனஞ்செய்யப்பட்ட பாற்கடற் கொப்பாகவிளங்கும் கலகலவென்னுங் கோலாகலத்தாலாகுலமிகுத்தது அக்களம். விதூரதனுல் மாயையினதுமாருகத்திருப்பியேவுதல் சிந்துமன்னனுக்கு முன்னர் செய்யப்பட்டதையுணர்ந்து அவனும் அம்மாயாசஞ்சாரத்தை விதூரதனுக்கு எளிதாக விரைவில் ஏவிவிட்டுப் பின் வேதாளாஸ்திரத்தையெடுத்துப் பிரயோகித்தனன், அதனுனே சவக்கூட்டங்கள்கிளம்பின அவையெல்லாம் திரும்பினவற்றிற்குச் சாதகமாயின, மூர்த்தானங்களோடு கூடினவும் கூடாதனவும் ஆகிய அவ்வேதாளங்கள் பகைவரைவதைப்பதில் ஆவேசமுடையனவாகிச் சுற்றின. பின்னுக்கிரகபந்தமுடையனவாய் பேய்களும் வேதாளங்களும் பூதனைகளும் ஒருங்குகூடிப் பூமண்டலத்தையெல்லாம் விழுங்கும் ஆற்றலுற்ற அதிகோரமானபலத்தையடைந்தன. பின்விதூரதனும் அம்மாயையை, பூர்வப்பிரயோகத்தானே உபதேசிப்பவனைப்போன்ற சிந்துமன்னன்பால் திருப்பிவிட்டு மூன்றுலோகங்களையும் கவருமுயல்வோடுற்ற இராக்கதாஸ்திரத்தைவிடுத்தனன்; விடுத்ததும் பர்வதாகாரமான பருத்தஇராக்கதர் எங்கும் கிளம்பிவந்தார்கள், அவர்கள் பாதாளத்தினின்றும் நரகங்கள் தேகமெடுத்துக்கொண்டு வந்தன போன்றிருந்தார்கள் : சுரர்கட்கும் அசுரர்கட்கும் மகாபயத்தைத் தரத்தக்க அதிகொரேமாலபலமுண்டாயது ; அரக்கர்கர்ச்சனை அதிகரித்துப் பெருஞ்சப்தங்கிளம்பியது, வாத்தியகோஷங்கிளம்பியது, கபந்தங்கள் கூத்தாடின. மேதையும் மாம்சமும் கட்குடிக்கவியஞ்சனங்களாயின, ஆகவே உதிரமாகியகள்ளை இனிமையாகக்குடித்தன, மதம்பிடித்தகூஸ்மாண்டவேதாள யக்ஷர்முதலவர்தங்கூத்து மிகவும் அழகாகநடந்தேறியது. கூஸ்மாண்டங்கள் வெறித்தாடும் நடனபாத கதிகளாற்கலக்கமுற்றுக்கிளம்பிய இரக்ததரங்கங்களோடுற்று சந்தியாகால மேகராக அதிசயகோடி காந்திபூதங்களால் இரக்தநதியணைகட்டப்படுங் கோலாகலத்துடன் அக்கடத்தின் பலமிகவுமதிதரித்தது.

49-வது திருதீய அஸ்திரயுத்தவர்ணனம் முற்றிற்று.

---

## 50—வது விதூரதமரண வர்ணனம்.

இப்போது வைஷ்ணவ அஸ்திரங்களினது போரும் இருவரும்தேரிழந்
தமையும் இல்லத்திற்திற்குக்கொணர்ந்த விதூரதனதுமரணமும் வருணிக்கப்
பெறும் அங்கப்போது அதிகோரமான போரினுடம்பரம் நிகழ்ந்தது, எல்
லாப்பகைவர்தம் சைனியமும் நாசமாம்பொருட்டும் தன்னுடையசைனியப்
பேய்ப் பீடைச்சாந்தியின்பொருட்டும் மறவாத்தன்மையனுகிய மன்னன்
அசாதாரணஅஸ்திரமொன்றைநினைந்தனன், அச்சிந்துமன்னன்காலத்துக்குத்
தக்க விவேகஞ்செய்பவருள் முக்கியனுய்த்தேர்ந்தவன் மகாவுதாரனுய் அ்திக
தைரியவான் ஆதலின்மகாகாலருத்ரனைப்போன்று சங்காரஞ்செய்வதாய
அஸ்திரேசுரமாம் ஸ்ரீமத்வைஷ்ணவாஸ்திரத்தை விடுத்தனன். அபிமந்திரித்து
விடுத்த அம்மகாஅஸ்திரமானது தானிருக்குமிடத்தினின்றும் மேலுலகத்திற்கு
அநேகம்கொள்ளிகளையனுப்பியது.கேவலங்கொள்ளிகள்மாத்திரமன்று வரிசை
வரிசையாக ஒளிவீசுஞ்சக்கரங்கள் கிளம்பின, திசைகளெல்லாம் அநேகஞ்சூரி
யர்கள் உதயமாயினுர்கள், அநேகந்தண்டாயுதங்களும் தண்டம்போன்ற அநே
கம்வம்சாங்குரங்களும் சுயமேகிளம்பி யாகாயத்தைவியாபித்தன, அநேகந்
தாரைகளோடுற்ற வஜ்ஜிரங்களாம்திருணக்கூட்டங்களும் செல்லும் சிருங்கங்
களும் ஆகாயவீதியைமறைத்தன, பதுமதளமுகுளாகார அநேகசாகைகளோ
டுற்ற ஆயுதவிசேடவரிசைகள் விருக்ஷங்களைத் தொம்சஞ்செய்துகொண்டு
ஆகாயவீதியைமறைத்தன முறிந்தவிருக்ஷங்களும் நிறைந்தன, சியாமள அங்
கங்களோடுகூடிய கட்கக்கூட்டங்கள் ஆகாயத்தில் இலைகளைப்பரப்பின, அதி
கூர்மையானதாரைகளோடுகூடியசரங்கள் ஆகாயத்திற் புஷ்பங்களைப்பூர்ணித்
தன. இதைக்கண்டவிதூரதன் வைஷ்ணவாஸ்திரசாந்தியின் பொருட்டுச் சத்
துருவினுடைய பராக்கிரமஸ்திதியின் பூர்த்திகரமானவைஷ்ணவாஸ்திரத்
தையேஅவன்போல் விடுத்தனன். அதனினின்றும் கட்கங்களின் நதிகள் கிளம்
பின அவைபூர்வாஸ்திரமேவிய கட்கங்களையெல்லாந் துண்டித்துத்தள்ளின,
அம்புவேல் குந்தம் அருங்கதை பட்டிசம் முதலிய ஆயுதநீரேநிறைந்த சஸ்திர
அஸ்திர நதிகளின் வெம்போர் விண்ணின்கண்ணே மிகமிகநண்ணின. மேலு
லக கீழுலகாந்திரக்ஷயம்செய்வதும், குலசைலேந்திரர்களைத் தூட்படுத்துவதும்,
ஆகச் சஸ்திர அஸ்திரநதியின் போரே விஸ்தாரமாகப்பரவியது, சரங்களினின்
றும் வெளிக்கிளம்பிய சூலம் வாள் கட்கம் முதலியவற்றுனே பட்டிச ஆயுத
விசேஷங்கள் பொடிப்பொடியாய்ப் போயின,(வாளும் கட்கமும் சிறிது வேற்
றுமையுறுவன) உலக்கைகளின் விஸ்தாரத்தாலும் குந்தசூலாதிகளாலும்
வேலாயுதங்கள் துண்டிக்கப்பட்டன. சரங்களாகிய சமுத்திரத்தைக்கடைவ
தில் ஆற்றன்மிகுந்து தடிகளேமந்தரபர்வதங்களாயின ; கதைகளினுடைய
முகங்கட்கொப்பாய அக்ரபாகங்கள் ஒன்றோடொன்று மோதிக்கொண்டிருந்
தன, தடுக்க முடியாத அஸ்திரம் வல்லவீரர்களாக ஒவ்வொருவருமிருந்தனர்,
அவர்கட்கொப்பான பிரமாணப்பிரபாவ கட்கஜாதிபேதங்கள் நிறைந்திருந்

தன. தஞ்சைனிய ஹிம்சைவடிவ அசுப இருளைக்கெடுக்கும்பொருட்டுக் குந்த வடிவ இந்துமண்டலங்கள் குலாவித்திரிந்தன, பிராசங்களின் பிரசரத்தாற் சினத்தலினுனே ஜனங்களையெல்லாம் விநாசஞ்செய்யத் தொடங்கியதுபோல யமனுலவினன. சர்வாயுத க்ஷயகரமான மேலான அஸ்திரங்கள் எல்லாம் சக்கரத்தாற்றூளாயின, பிரஹ்மாண்ட முழுதும் சப்தத்தாலதிர்ந்தது, அடிபட்டுக் குலாசலங்களெல்லாந் தூளாயின. எம்மாற்செய்யப்பட்ட விசுவாமித்திர அஸ்திரநிவாரணத்தாற்போலப் பரஸ்பரம் பிரதிபத்தகாரியங்களோடு போர்புரியும் நாராயண அஸ்திரங்களின் சம்பந்திகளாய வஜ்ஜிரங்களானே கெடுக்கமுடியாத பர்வதங்களெல்லாம் கெட்டுத் தூளாயின சஸ்திரக்கூட்டங்களெல்லாம் தாரையாற்கேடுண்டன. சுவாலைகளைப்போலக் காரியத்தாற் சம்பவித்தனவும் சூத்காரசப்தமாத்திரப் பிரகாசக சூலங்கள் நூற்றுக்கணக்கான சிலைகளும் நிறைந்தன, புசுண்டி ஜபிக்கமுடியாத உத்தண்ட பிந்திபாலா முதலியவற்றின் உக்கிரமண்டலம் நிறைந்திருந்தது. மேன்மைபொருந்திய சர்வசங்காரசமர்த்தசூலகரனுகிய வுருத்திரமூர்த்திக்குச் சமானமான ஒவ்வோராயுதமும், சிரேஷ்டமான ருத்திரசூலத்திற்குச் சமானமான ஒவ்வொன்றுனே கெட்டுப்போய்விட்டது, சென்றுகொண்டிருக்கும்போதே கண்டிக்கப்பட்ட ஆயுதங்களின் குடிலவிஷமகதிபலன்கள் பிரவிருத்தித்துக்கொண்டிருந்தன, சத்துருக்களைத் தடுத்துக்கொண்டுமிருந்தன. திரிபதகையின் வேகத்தைத் தடுக்கும் சடசடவென்னும் ஸ்போடமானது மிகமிகப்பொரிந்தது. கட்கங்களின் கூட்டமாம் பெண்டேட்சங்கமகாதூமம் மேற்கட்டிபோலிருந்தது, அன்னியோன்னியஞ் சஸ்திரங்கள் மோதிக்கொள்ளுதலால் மின்னலானது வலைவீசிக்கொண்டு விளையாடுதல்போல விளங்கியது, சப்தகுல பர்வதங்களெல்லாம் அடியுண்டு பொடிப்பொடியாகிப் பிரஹ்மாண்டமுழுதும் ஒரே பெருஞ்சப்தமாகக் கிடந்தது. சஸ்திரக்கூட்டங்களெல்லாம் தாரையாற்றடுக்கப்பெற்றன, போர்புரியும் அஸ்திரங்களெல்லாம் ஒன்றேடொன்று பட்டுப்பொடிந்தன, போரில் அசலம்போலும் ஜடபூதமான விதூரதனுக்கு எனது சம்பந்தமாய அஸ்திர நிவாரணமாத்திரத்தால் அவஸ்திதியிது காலக்ஷேபமாத்திரத்தின் உபாயமாம். இதுவென்னுடைய முன்னிலையில் எத்தகைய பலத்தது என்று மதியாமதியோடு சிந்துமன்னனிருக்குங்கால் விதூரதன் ஆக்கினேய அஸ்திரத்தை இடிமுழக்கம்போலும் விடுத்தனன், அது சிந்துவின்றேரைக் காய்ந்தகுப்பைக் கூட்டத்தைப்போலச் சுவாலைக்கு இரையாக்கியது, இவ்வாறும்போது ஆகாயத்தில் கட்கமுதலிய ஆயுதங்கள் நெருங்கிநிறைந்தன, அம்மன்னன் மழைமேகம்போலச் சந்நாகத்தையடைந்திருந்தனன், மற்றையமன்னன் மேகமேம்பட்ட நதியைப்போலச் சரங்களைப்பொழிந்தனன்; அவ்வரசரின்முன் னேவியநாராயண அஸ்திரங்களிரண்டும் கணகாலம் அதிகோரமான பெரும்போரைக் கணமாற்றி வீரியத்தோடுகூடிய நல்வீரர்களைப்போலப் பரஸ்பரம்சாந்தியையடைந்தன. இது இங்ஙனுகியபோது அவ்வாக்கினேய அஸ்திரசம்பந்தியக்கினியானது

தேரைச் சாம்பலாக்கிவிட்டு வனத்தைச்சுட்டுப் பின் வனப்புதரினின்றும் கிளம்பிய சிங்கத்தைப்போலச் சிந்துமன்னனையடைந்தது, அம்மன்னன் பயிற்சியின் முதிர்ச்சியால் அக்கினியஸ்திரத்தை வருணஸ்திரத்தாற் சாந்திப்படுத்தினன். தேரைவிட்டுப் பூமியையடைந்து கட்கச்சருமமுடையவனானன், இமைக்கொட்டும்மாத்திரத்தில் பகைவனது தேர்க்குதிரைகளின் குளம்புகளைக் கைவாளினாலே எளிதாகத் தாமரையைப்போல வெட்டிவிட்டனன்; விதூரதனும் தேரற்றவனாகி வாளுந்தோலுமுடையவனாயினன். சம ஆயுதங்கள் உடையவர்களாய் சம உற்சாகமுடையவர்களாய் மண்டலங்களைச் சுற்றினார்கள், அவர்களுடைய கட்கங்கள் பரஸ்பரம் வெட்டிக்கொள்வதால் இரம்பமென்னுங் கருவிபோல அதிகடினமான சருமாதிகளையும் பிளக்குமாற்றலையடைந்தன. யமனுடைய தந்தமாலைகள்போல அக்கட்கங்கள் இருசேனைகளிலும் பிரஜைகளை மென்றுதின்றன. விதூரதன் கட்கத்தைவிட்டு வேலாயுதத்தையெடுத்துக் கடிது விடுத்தனன், சிந்து நீர்போலப் பிரளயாதி சூசக கர்க்கர அரவத்தோடும் கோற்பாதமாக இடிபோன்று கர்ச்சித்துத் தடைபடாது வந்த அந்தவேல் அவன் மார்பில் விழுந்தது. அப்பிரயமாய பர்த்தாவினுடைய அநிச்சையையுடைய தன்காமினிபோல அவ்வேலாயுதப் பிரயோகத்தால் அவன் மரிக்கவில்லை கேவலம் யானையானது தனது மதஜலத்தைவிடுதல்போல ருதிரப்பிரவாகமாத்திரம் பெருகியது. அத்தேசலீலை யதைப்பார்த்து இந்துவினாலே தமங்கெட்டதுபோல மலந்து கன ஆனந்தமுடையவளாய்ப் பூர்வலீலையைப் பார்த்துக் கூறுவதாவது, தேவியேகாண்டி நமது நாயகராகிய நரசிங்கத்தால் வேற்கோடிநகங்களாற் சிந்துவாகிய தைத்தியனு மிரணியகசிபு நிமிர்ந்தகந்தரனாகி மாண்டனன், தடாகத்தலத்திருக்கும் நாகேந்திரத்தின் றுதிக்கையினின்றும் பூத்காரத்தோடு நீர்வருவதேபோலத் தூள்தூளாய அவன் மார்பினின்றும் சுளுசுளுவென்னும் சப்தத்தோடும் ரக்தம் பெருகிவழிகின்றது. ஐயோ கஷ்டம் சிந்துவிற்குத் தேர்வந்துவிட்டது இதோ தேர் ஏறப்போகின்றான், பொற்சொருபமேரு சம்பந்தியான சிருங்கத்தின்மீது புஷ்கராவர்த்தகமென்னும் மேகராஜா ஏறியதுபோல ஏறிவிட்டான். இவனுடைய தேரைப்பார்த்தாயோ தேவீ தடியடியால் தூளாகிவிட்டது. பார்த்தனது சரவீழ்ச்சியினானே சுழலாநின்ற நிவாதகவசர்கள் தம்பொன்னகரம்போலச் சுழலாநின்ற தேரைப் பார் எமதுபதியதிலேற முயல்கின்றார், அதன்பொருட்டே யதுவந்துளது. (இங்கியம்பிய உவமானம் அந்தப்பிரஹ்மாண்டத்திலும் பார்த்தாதிஜன்மசம்பவமாதலின் அப்ரசித்த உவமானமாகாதென்றறிக) ஆ! கஷ்டம்! இந்திரனாலே வஜ்ஜிராயுத மேவப்பட்டதேபோலச் சிந்துவினாலே முசலம் தூளாக்கும்படி யேவப்பட்டது. படினும் எமது பதிவிரைவில் சிந்துசம்பந்திமுசலாயுதத்தை வஞ்சித்து ;எளிதாக விலாசத்துடன் தேரேறியகன்றனர். கொடிகுறிப்பிட்டிருத்தலின் பக்ஷிவிசேஷத்தால் உபலக்ஷிதமும், பாசிமுதலியவற்றானே பச்சைவர்ணமுள்ள சிறுகுழிபோன்றதும் அவ்விதமான மேலோங்கிய தருவை

யொத்ததும், ஆகியிராநின்ற தேரின்கண்ணேறியிருந்த ஆரியபுத்திரராகிய எனது நாயக விதூரதரை அதிவிரைவில் அச்சிந்து சரமழைகளால் விளையாடி- ஆ ஆ அந்தோ கஷ்டம்! துன்புறுத்துகின்றனன். கொடியற்றனர் தேரற்றனர் குதிரையற்றனர் கொள்சாரதியுமற்றனர், வில்லற்றனர், கவசமற்றனர் அங்கமுழுவதும் அழிவுற்றனர் ஆகுலமுற்றனரிதயத்தில்; உடைக்கமுடியாத கற்பாறையைப்போல் அதிவலுமையான அதிஸ்தூலமாயமூர்த்தன்யத்தை வஜ்ரசமமான பாணங்களால் பிளந்து பூதலத்தில் வீழ்த்தினன். அதோ இன்னமொருதேர் கொண்டுவரப்பட்டது, பிரஞ்ஞை தெளிந்து கஷ்டத்துடன் தேரிலேறிய எனது நாயகருடைய சிந்துவால் வாளால் வெட்டப்பட்டஸ்கந்த தேசத்தைப் பார்த்தாயா! பின்னப்பட்ட பதுமராக பர்வதத்தினின்றும் வெளிப்பட்ட இரக்தவர்ணமிலங்குவதே போல இரக்தப்பிரவாகங் கிளம்புவதைக்காணுதி! ஆ ஆ! அந்தோ கஷ்டம் இச்சிந்துவினாற் கட்கதாரையினால் இரம்பத்தினால் மரமறுந்துவீழ்ந்ததேபோல எனது நாயகரின் இருகுதிகளும் அறுந்து வீழ்ந்தன, ஆ ஆ ஆ கெட்டேன்! தகிக்கப்பட்டேன் கொல்லப்பட்டேன் கொல்லப்பட்டேன் அந்தோ!' எனது நாயகருடைய முழந்தாள்களும் தாமரைத்தண்டுகள்போல வெட்டப்பட்டுவீழ்ந்தன; எனக்கூறி அதை நோக்கி நாயகரிடத்துள்ள நேய அதிசயமிகுதியால் பயத்தால்மிகத்துயருடையளாகிப் பரசுவினாலே வெட்டப்பட்டகொடிபோல மூர்ச்சித்துப்பூமியில்வீழ்ந்தனள்; விதூரதனும் முழந்தாள்களற்றவனாயினும் பகைவனோடுசண்டையிட்டுக்கொண்டே வேரற்றமரமேபோலத் தேரின்கீழ்வீழப்போனான், வீழப்போமவனைச் சாரதியானவன் றாங்கிமீண்டுந்தேரிலேயே வைத்து அரண்மனையைநோக்கிக் கொண்டேகினன்; "இவ்விருபுருடரேபாகத்திற் சூரிய அவ்வெழின்மண்டல மகழுமாற்றலர், செவ்வியயோகமேசெயுஞ் சந்நாசியும், வெவ்வமரெதிர்முகம் வீழும் வீரனும்" என்னும்மிருதியினான், போரிலெதிர்த்து மரணமாகச் சூரியமண்டலம் பிளந்தானுக்கு பிரஹ்மலோகப்பிராப்தியில் விரக்தனுக்கு, "அவரெலாம் பிரளயமணுகிய அக்காற், பவவயனோடும் பரவந்தத்திற், சிவவடிவுணர்ந்த சீர்த்தியராகி, நவபரபதத்தினை நண்ணுகிற்பாரே" என்னும் வசனத்தானே முறைமுத்தியடைவில் அவிரக்தனுக்கு, "இம்மானவன் சுழல் கைதிரும்புவதின்றும்" என்னுஞ்சுருதியிருத்தலினான் கற்பாந்தரத்திலாதல் மீண்டுந் திரும்புகையினாதல் பழைய பதும சரீரத்தால் நுகர்வினைச்சேட போகமசித்தமாதலின் அதற்கனுகுணமாக ஸ்ரீசரசுவதிதேவியின் சங்கற்பவரதான வலுவினானே சூதனுக்கு ராஜகீர்த்திமேன்மை பழிவுறும்போழ்து கொண்டுசெல்லும் பிரவிருத்தியுண்டாயதென்றுணர்க அவ்வாறு கொண்டு செல்லும்போது உத்ததனாகிய சிந்துகண்டத்திற் கட்கத்தால் ஓங்கியடித்தனன், கொண்டுசெல்லும்போது எதிர்த்துநில்லாதிருந்தும் சத்துருவையடித்தல் சூரதிந்தையேயாகும், அத்தகைய உத்ததனாகிய சிந்துபாதியறுபட்ட கண்டத்தோடுசெல்லும் மன்னவன்பின்னாகவே சென்றனன். சூரியகிரணமானது

பதுமத்திற் செல்வதேபோலத் தேரோடும் அரண்மனைக்குச் சென்றனன். ஸ்ரீ
சரசுவதிதேவியின் பிரபாவத்தோடுகூடிய அவ்வரண்மனையிற்புக இச்சிந்து
விற்கு ஓங்கியெரியாகின்ற பெருஞ்சுவாலையினிடையிற் கொதுகுபுகுவது முடி
யாதகாரியமேபோல முடியாமற்போய்விட்டது. வாளினாலே வெட்டப்பட்ட
கழுத்தின் துவாரத்தினின்றும் பெருகாநின்ற பெருமூச்சுகளால் உதிரத்தின்
நுரைகளானே வஸ்திரங்களெல்லாம் நனைந்திருந்தன, இத்தகை விதூரதனைச்
சூதன் அரண்மனைக்குக் கொண்டுசென்று உள்வீட்டி லெழுந்தருளியிருந்த பக
வதியாகிய ஸ்ரீசரசுவதிதேவியின் சந்நிதியில் சுகமரணயோக்கிய மிருதுவான
படுக்கையின்மீது படுக்கவைத்தனன்; சத்துருவாகிய சிந்துவோ அரண்மனை
யிற் புகுமாற்றலற்றவனாகித் திரும்பிப்போயினன்.

50-வது விதூரதன் மரணவருணனம் முற்றிற்று.

---

## 51-வது சிந்துராஷ்டிர வருணனம்.

இப்போது மன்னவன் இறந்த விருத்தாந்தத்தைக் கேட்டு ராஜ்ஜியத்தில்
ஜனங்கள் துயர்வதும், சிந்து பிரதிஷ்டைசெய்தபின் தேயம் சொஸ்தமாயதும்
விஸ்தாரமாகவர்ணிக்கப்படும். விதூரதமன்னவன் மாண்டனன் விதூரதமன்
னவன் மாண்டனன் வேற்றரசனாஞ்சிந்துவாற் போரில்வீழ்ந்தனன் என்னும்
சப்தமானது மிகமிகக்கிளம்பிய அளவில் தேசமெல்லாம் அதிபயமடைந்தது;
கூட்டங்கூட்டமாக வண்டிகள் பாண்டங்களும் பிறவுமேற்றப்பட்டனவாய்ச்
செல்லத்தொடங்கின, கூவிக்கொண்டு திரியும் மனைவிமக்களை யழைத்துக்
கொண்டு அதிதூரநகரங்கட்கு செல்லத்தொடங்கினர்; வழிப்பறிசெய்யப்பட்ட
மங்கையர்கணங்கள் ஓலமிட்டுக்கொண்டு ஓடித்தவித்தனர், பரஸ்பரம் கொள்
ளையடிப்பதைப்பார்த்துப் பிரஜைகள் மிகுந்த பயத்தையடைந்தனர். அயற்
றேயத்து மாற்றார்களும் சிந்துமன்னன் சேனைகளும் வெற்றித்தாண்டவ
உற்சாகத்தால் உல்லாசசப்தங்கள் செய்தார்கள் ஆள்வாரில்லாத யானைகளும்
குதிரைகளும் வீரர்களும் ஜனங்களை வீழ்த்திச் சென்றனர். கதவுகளையுடைத்த
லால் மேற்கிளம்பியது போல வெளியாகாயத்தில், செல்லும்கோசக் கிரகவிநா
சத்தாலாமோசை கர்க்கரென வொலித்துக்கொண்டிருந்தது, மறைத்துவைத்
திருந்த கோசக்காவலாளர்கள் அளவற்றதிரவியங்களைக் கொள்ளையடித்தார்
கள். கள்வர்கள் கத்தியினாலே கழுத்து நரம்பை யுதிரமொழுக அறுத்துக்
கொள்ளையிட்ட அரண்மனைமங்கையர் அநேகர் பிணமாயினர். அரண்மனை
யந்தப்புரமண்டபத்திற் சண்டாளரும் நாய்க்கறிப்போரும் இளைப்பாறி யுற்
சாகமாயிருந்தார்கள். அரண்மனையிற் கொள்ளைகொண்ட இராஜபோஜன
யோக்கிய அன்னங்களைப் புசிப்பதிற் பாமரர்மிகமுறுக்காயிருந்தனர், ஹேம
ஹாரங்கள் பூண்டவீரர்குழுப் பாதங்களால் மிதிபட்டழுகும் குழவிகள் தவித்
தன; அபூர்வதாருண்யம் வாய்ந்த அநேக அரண்மனைமடந்தையர் கூந்தற்பிடித்
திழுக்கப்பட்டுத் துயரடைந்தனர்; கள்வர் கையினின்றுந் தவறிய விலைமதியாத

மாணிக்கங்களால் உன்னத தந்தங்களைப்போலத் தவளிதமாயினர் நெறிச்செல்வோர். குதிரைகளையும் யானைகளையும் தேர்களையும் ஒருங்குசேர்ப்பதிற் கவலையுடையவராய்ச் சிற்றரசர் மண்டலந் திரிந்தது. சிந்து மைந்தனுக்கு பட்டாபிடேகிக்க முயல்வதில் உத்திரவிடுந் தற்பரராக அமைச்சர் முதலவரிருந்தனர். ஸ்தபதிகளில் உயர்ந்த வேலைக்காரர்கள் இராஜதானியைப் புதுக்கமுயன்றுகொண்டிருந்தனர், கம்மியரியற்றிய சாளரவழியாய் அபூர்வநகர சௌந்தரியத்தைக் காணும்பொருட்டு நெருங்கிவந்து சிந்துமன்னன் மகிஷியர் பார்த்துக்கொண்டிருந்தனர். நூற்றுக்கணக்கான ஜயசப்த உத்கோஷங்களோடும் புகுந்தசிந்துமன்னன்மைந்தன் அபிஷேகித்துக்கொண்ட பிரபாவ அதிசயம் நடந்துகொண்டிருந்தது, எண்ணில்லாத தன்பக்கத்தரசக் கூட்டங்கள் சிந்துமன்னனாற் செய்யப்பட்ட இராஜ்ஜியமரியாதையைச் சிரத்தில் வகித்தார்கள். கிராமாந்தரங்களில் மறைந்திருந்து பகைவர்தெரிந்துகொள்ளவே பூர்வராஜமகிஷிகளும் சேடியரும் அங்கிருந்து வேறிடத்திற்கோடிக்கொண் டிருந்தார்கள்; மண்டலாந்தரங்களிலுள்ள நகரங்களிலும் கிராமங்களிலும் கொள்ளைகள் நடந்தன. அநேகங் கள்வரானே வழிப்பறிசெய்தற் பொருட்டு மார்க்கங்களில் போக்குவரவுகள் தடுக்கப்பட்டன. மகானுபாவனை விதூரதனது நீக்கத்தினாலே தினங்களிற் சூரியனது ஆதபமானது பனியிலொளிந்துகொண்டது; இறந்தவரதுபந்துஜனங்களின் அழுகையாலும் மணப்பறைகளின் ஓசையாலும் பரிகரிரதசப்தங்களாலும் பிண்டம்போலுங்கரத்திற் பிடிக்கத் தக்கபடியாக கனத்தொனிகிளம்பின.ஒரு குடைப்பூமண்டலாதிபனாகிய சிந்துதேவின்வெற்றிபெறுகவென உத்கோஷம் செய்துகொண்டு புரந்தோறும் பேரிகளை ஜனங்கள் முழக்கத்தொடங்கினார்கள். மைந்தனது இராஜ்ய அபிஷேகமானபின் மிகுந்த புஜபலத்தோடுகூடிய சிந்துமன்னன் சொந்த ராஜதானியை யடைந்தனன், அடைந்தது மற்றொருமனுயுகமுடிவில் பிரஜைகளைச் சிருஷ்டிக்கச் சென்றதுபோலிருந்தது; பின் தச திசைகளினின்றும் சைந்தபுரத்திற் பிரவேசிக்கக் கரங்கள்கரி ஹயாகாரங்களால் இரத்தினபுரங்களம்புதியிற்போலப் பிரவிருத்தித்தன. மரியாதைகளையும் முத்திரைமுதலியவற்றிற் சிந்துநாமக்குறிகளையும் சாசனங்களையும் திசைகளிலுள்ள மண்டலங்களுக்கு மந்திரிகள் கனத்திற்சேருமாறு செய்தார்கள். மிகவிரைவிலேயே தேசந்தோறும் புரங்கடோறும் வாழ்விலும் சாவிலும் மானத்திலும் இந்நியமமானது ஏற்பட்டது. ஓங்கியெழுந்த காற்றொடுங்கவே அக்காற்றுலாக்கப்பட்ட துரும்பிலை தூளி முதலியபதார்த்தங்களின் சுழற்சிகள் சாந்தியடைவதேபோலத் தேசத்திற்கிளம்பிய குழப்ப மயக்கங்களெல்லாம் நிமிடத்திற் சாந்தியடைந்தன. கலக்கத்தோடுஞ் சுழியோடுங்கூடிய பாற்கடல் மந்தரகிரியையெடுத்த மாத்திரத்தில் தெளிந்தழகுற்றதுபோலப் பத்துதிசைகளிலுமுள்ள தேசங்களில் சௌமியத்தன்மையான துண்டாயது. கணத்தில் வாயுக்கள் சிந்துவின் மங்கையர்முககமலங்களில் வண்டின் கூட்டங்களையும் அளகபாரத்தின்கட்டுகளையும் விலோலப்படுத்திக்கொண்டும்

அதன்மதுப் பிராயங்களாயிராநின்ற அவ்வேர்வை நீர்பருகி மதத்தனபோன்று
மந்தகதி யுடையனவாயா குலத்துடன் அச்சைத்திய நன்மணமுதலிய மங்கள
குணங்களானே சர்வதேசங்களினின்றும் சந்தாப துர்க்கந்தமுதலிய அமங்கள
குணங்களை விரட்டிக்கொண்டும் வருவனபோல வீசிக்கொண்டிருந்தன.

51-வது சிந்துராஷ்டிர வருணனம் முற்றிற்று.

---

## 52-வது தேகவுணர்வு வருணனம்.

இப்போது அரசனதுமரணமும் அவனது சமுசாரத்தினதுமித்தியாத்தன்மை
யும் அவ்வாறே அப்புர லீலைக்கு வாசனைவடிவத்தன்மையும் வருணிக்கப்படும்.
ஹே இராகவ! இப்படியாயவேளையில் ஸ்ரீசரசுவதிதேவியைநோக்கி லீலை ஹே
மாத! இங்கு எனதுநாயகர் இத்தேகத்தை விடமுயலுகின்ருரென்று முன்னி
ருக்கும் மூர்ச்சித்தநாயகரது முடிவுமூச்சைநோக்கிக் கூறலும் ஸ்ரீஞானதேவி
கூறுவதாவது:—ஹேகுழந்தாய்! இத்தகையபெரிய தொடக்கமாய்ப் பெரும்
போரும் இராஜ்ஜிய சம்பிரமும் உண்டானபோதினும் இருந்தபோதினும் ஒடுங்
கியபோதினும் இவ்வளவுபெரிய விஸ்தாரவிசித்திரத் தொடக்கத்தில் யாதும்
எங்கும் உண்டாகவேயில்லை இவ்விராஜ்ஜியமாவது இம்மகீதலமாவது ஒருசிறி
துங் கிடையவே கிடையாது கனமயமே யிவ்வுலகமாகுமெனக் காண்டி, அவ
னது அம்மண்டபத்தினதுள் முன்னேகண்ட அற்பமாய அவ்விடத்தினுள்
பதுமசவ சமீப ஆகாயத்தில் நின்றுதனது இப்பூராஜ்ஜியம் யாவுமிலங்குகின்
கிறது. அந்தப்புர கிருகத்துள்ளன்ரே இத்தகைய பெரிய இராஜ்ஜியத்தின்
யாவுமிலங்குகின்றன. விந்தியமலைக்கிராமத்துள்ள வசிஷ்டப் பிராஹ்மணர்
கிருகத்தினுள்ளே யாவுமிருக்கும் வசிஷ்ட விப்பிரர் வீட்டினுள்ளே சவவீட்
டுலகமிருக்கின்றது, சவவீட்டுச்சகத்துதரத்துள்ளே இவ்வீடு முலகமுமிருக்கின்
றது, இவ்வண்ணம் இப்பெருந்தொடக்கமாகிய இடம் மூவுலகமய மயக்கம்
உலவுகின்றது. எம்மோடும் உன்னேடும் இரண்டாவது லீலையோடும் உன்னு
யகனேடும் கூடியகடல் சூழ்ந்தபூமியும் கிரிக்கிராமத்திலிருக்கும் மனையுண்மத்
திய ஆகாசகோசத்தே நிகழ்கின்றன. ஒவ்வொன்றனுள் மற்றவையுளவாயிற்
றென்பதுங் கற்பனையேயாம், உண்மையாகச் சைதன்யத்தின்கண்ணேயாம்
ஆகாயத்தின்கண்ணன்றும், ஆகாசாதிசகிதமூன்றும் அத்தியாசந்தானே, தன்
வடிவமே வீணுகப்பொலிகின்றது, விடயம் பொய்யாகவே சித்தின் கண்ணே
அதுகொண்ட ரூபமும் இல்லாததேயாகும், எங்கும்பொலிவதுகூடக் கிடை
யவேகிடையாது, ஆகவே நிர்விடய சின்மாத்திரமே எஞ்சாநிற்கும் அதுவே
முக்கிய ஞேயமாம், நாசஉற்பத்தியற்றதாய அது பரமபதமெனவுணர்த்தி
சாந்தமாயும் பரமாயும் நோயற்றதாயுமிருக்கும் வஸ்துவே சுயம்பொலிந்து
தோற்றுகின்றது அறிஞரேயறிவர் தானேபொலியும் ,சொப்பிரகாசமாமதுவே
மண்டபவீட்டினுள்ளே தனது சின்மாத்திர வியற்கையானே உதிதமாய
தன் வடிவில் இலங்குகின்றது வேறு வஸ்துக்கிடையாதாம். மண்டபத்

துள்ளிருக்கும் பூதாகாயத்தின்கண்ணும் உலகமிலாததே யாகுமென்றுள். சுத்த சிதாகாசத்திலில்லையெனச் சொல்லவும் வேண்டுமோ: இவ்வண்ணம் அம்மண்டபங்களிற் கனமான ஆரம்பங்களிருந்தபோதினும், அவற்றின கட்டிற்கேவலம் சூனியமாய ஆகாசமேயுளதன்றி யுலகமயக்கமில்லை. அற்பத் துள்ளே பெரிதுபுகுதல் கூடாமையின் அவ்வுணர்வு மயக்கமாயின் பெரிதுக்கும் பெரிதான பிரஹ்மம் மண்டப இருதயாதியாதியா காசங்களில் புகுதலேலாமையின் ஆண்டுச் சாஸ்திர ஆசாரியவுபதேசத்தால் அவ்வுணர் வும் மயலேயாமென ஏனைமாட்டாதெனின்? உபஜீவியவிரோதம் வருதலின் அங்ஙனாகாதாம், மயற்காண்போனில்லைகவே மயலின்கண் மயலாந்தன்மை எத்தகையதாகும்? மயலிருப்பு இல்லாததேயாம் ஆகலின் யாதுளதோ அது அஜமானபதமாம். ஆயின் மயலே மயலைக்காண்குகவே அயல்வேண்டா மேயெனின்? மயற்றிருசியம் அசத்தாம் அதற்கு திருஷ்டா திருசிய தசை யெங்ஙனமாகும், திருஷ்டாவின் வியாபார பலாதாரமே திருசியமாகும், தன் பால்யாராலும் தொழிற்படுத்தமுடியாதாம் முடியுமேல் ஓரிடத்திற்கர்த்திரு கருமத்தன்மை முரண்பாடுண்டாதலின், திருஷ்டா இல்லாமல் திருசியத்திற் குச் சத்தையும் விளக்கமும் சித்தியாவாம் இந்தத்திருஷ்டா திருசியக்கிரம அபாவம் துவைதத்திற்கே தூஷணமாம், அத்வைதத்திற்கோ இயல்பாகவே பூஷணமாம், திருஷ்டா திரிசியக்கிரம அபாவத்தால் அத்வயம் சகஜமேயாகு மென்றுணர்க. இறப்பும் பிறப்பும் அற்றதாய அது பரமபதமென்றுணர்தி சாந்தமும் முதன்மையதும் நோயற்றதும் தானே கசிந்துதோற்றுவதும் ஆமென்றறிக. இங்ஙனம் அதியற்பமானதில் மிகப் பெரிதானது புகமுடியா விடினும் திருசியத்திற்கே தூஷணமாம் அன்றிச் சர்வாதிஷ்டானசைனியத் திற்கு இன்றாம்; ஆச்சரியமன்றோ இது! மண்ட வீட்டினுள் தம்மியற்கையுதித வான்மாவின்கண் தத்தமது விவகார அநுகூலதேச விஸ்தாரவிவஸ்தையோ டும் ஆண்டுத் தத்தமதுவீட்டில் ஜனங்கள் விவகரித்துக்கொண்டிருக்கின்றார்கள். ஆண்டுலகமுமில்லை சிருஷ்டியுமில்லை யாதொன்றுமே தத்துவமுணர்ந்தவரால் அநுபவிக்கப்படுவதேயில்லை, அநுபவவடிவமான காட்சியளவையால் அகங் காரசாக்ஷி பூதஅஜ எச்சிதாகாசமுளதோ அதுவே அஞ்ஞதிருஷ்டியினானே உலகமென்னும் உருவத்தோடுமிலகும் எனத்துணிக. இங்ஙனம் அநுமானஞ் செய்து நோக்கினும் அங்கிச்சயமுண்டாம், மேருமுதலிய கிரிக்கூட்டங்களானே குறிப்பிக்கப்பட்ட எல்லா இத்திரிசியங்களும் சூனியாத்மசோரூபஞானமாத்தி ரமேயாம் குட்டியமயமன்றும் இப்போது பார்ப்பதுபோன்ற தூல இயற்கை யதுமன்றும், அவை புக அயோக்கியமான அற்பப்பிரதேசத்திற் பிரதீதியா தலின், உடம்பினுள்ளே கனவிற்கண்ட மகாபுரம்போலும். கனவின்கண்ணே எல்லாராலும் அநுபவிக்கப்பட்ட சித்தவியாப்தியைக் காணலாமே; “கண்டத் திற் கனவு கதுவும்” என்னுஞ் சுருதியினானே கண்டாதி இருதயமீருக விருக்கு மிடத்தில் அந்தப் பிரதேசாவச்சின்ன ஆத்மசைதன்யங்களே (உபாதியாலாயது

பன்மை) பர்வதக்கூட்டமயங்களாக வஜ்ஜிரசாரங்கள் போன்றுலகையாவருங்
காண்கின்றனர் கனவில், அங்ஙனந் தாட்டாந்தத்திலும் சம்பவிக்குமுபாயத்
தைக்கேட்டி! அணுவின்கண்ணும் அநேகங்கோடியுலகங்கள் வாழைப்பட்டைக
ளைப்போன்று புகுந்துபுகுந்து மிகுதியாய்க் கிடக்கின்றன. சாதித்ததை நிக
மனத்தாற்றிடஞ்செய்யப்புகின் கனுப்புரம்போல அறிவாமணுவின்கண்ணே
மூவுலகமிருக்கின்றது, அதனுள்ளும் அறிவணுக்கள் அவற்றுள் ஒவ்வொன்ற
னுள்ளும் உலகமிருக்கின்றது. கேட்டதற்கு விடையளித்தேம் இனியந்தப்புர
லீலையின் றத்துவத்தைக் கூறக்கேட்குதி, அவர்கட்கு எவ்வுலகத்தில் இப்பதும
அரசன் சவமாயிருக்கின்றானோ, இந்த லீலை நினது சபத்நியாகப் பூர்வராஜ கம
னுபேக்ஷையாற் பூர்வதாரத்தளாயுற்றனள். இந்த லீலையானவள் நினது முன்
னிலையில் எக்கால் மூர்ச்சையையடைந்தனளோ அக்காலே நாயகனாகிய பதும
ராஜ: சவசமீபத்தில் அடைவுற்றனள். ஹே பரமேசுரீ! ஆண்டு இவள் முன்னர்
தேகமுடையவளெங்ஙனமாயினள்? அச்சபத்நீக பாவத்தைத்தான் எங்ஙன
மடைந்தனள்? அப்பதுமமன்னரது மேன்மையான வீட்டில் வாஸ்தவ்யமான
அச்சனங்கள் இவளுக்கெவ்வடிவத்தைக் காண்கின்றார்கள் என்ன பேசிக்கொள்
கின்றார்கள் என்பதைக் கருணையினாலே சுருக்கமாகக் கூறியருளவேண்டுமெ
னக் கேட்ப அதற்கு அம்பிகையருளுவதாவது:—ஹே குழந்தாய்! நீ கேட்
டது முழுவதையும் சுருக்கிக் கூறச் சாவதானமாகக் கேட்டி! நிர்ணயத்தைத்
தருவதாயும் மரணபரலோக கமனாதி துர்த்தசை நன்றாகக் காணக்கூடியதும்
வேறுலீலைவடிவுற்ற வுனதுவிருத்தாந்தமேயதுவாகும். இந்நகராதிபாவமாகக்
காணப்பட்ட உலகமய விஸ்தாரமயக்கத்தை இவ்விதூரதவடிவ நினது நாயக
அப்பதுமமன்னவன் அதே சவமிருக்கும் வீட்டிற்காண்கின்றனன். உன்னாற்
பார்க்கப்பட்ட இப்போர் கனுப்போர்போல மயக்கப்போரேயாகும், உன்னால்
வினவப்பட்ட இந்தலீலையும், மயக்கமாத்திரத்தினளே, இச்சனங்களும் சனன
விகாரமற்றவர்களே, என்றுணர்தி, இங்குமரணம் மயக்கமாத்திரமேயாம்,,இச்
சமுசாரம் இவ்வண்ணம் மயக்கவடிவமேயாம். இம்மயக்கமுறையானே லீலை
யிம்மன்னனுக்குத் தயிதையாயிருந்தனள், நீயுமிவளும் கனுமாத்திரமே, நீங்கள்
இவனது கனுமாத்திரமாயிருப்பதுபோலவேதான் உங்களுடைய இப்பர்த்தா
வும் சுயம் யானுமென்றுணர்தி. உலகச்சோபையே யித்திகையதாம் இதுதான்
திருசியமென்றியம்பப்படும், இதுவே நண்குணர்ந்த பின்னர் திருசிய சப்தார்த்த
த்தை விடுகின்றது அதாவது திருக்கிற்குச் செய்யப்படு பொருளாதலையொழிக்
கின்றது. இவ்வண்ணம் நீயும் இந்தலீலையும் இச்சமுசாரத்திதியும் இம்மன்ன
னும் யானும் ஆன்மாவின்கண்ணே மயக்கவடிவமேயாம், ஆன்மா எங்கும்
நிறைந்திருத்தலின் சத்தியத்தன்மையையடைந்திருக்கின்றது. இந்நாமிங்கு
அன்னியோன்னியம்சேர்ந்ததும் உதிதமாயதும் என்றிவ்வண்ணம் சர்வாண்மக
மாக மகத்தான அவ்வுணர்வுதானே நிற்கின்றது; இங்ஙனமே இப்பட்டமகிஷி
மனோகரமாகிய புன்சிரிப்போடுகூடிய விலாசினி லீலைவிலோலவதனத்தினள்

நவ யவ்வனம்வாய்ந்தவள், சாமர்த்தியசாலி ஆசாரத்தாலே மனோகாரி மதுர உதார சம்பாஷணையுடையவள் குயிற்போன்ற குரலுடையவள் மத மன்மதமந் தரை நிலோற்பலபத்ராக்ஷி மிகக்கனத்தழகிய தனத்தினள், காந்தை காஞ்சன கௌராங்கி கனிந்தகோவைக்கனிபோன்ற அதரத்தினள், நின்சங்கற்பவடிவ மாய நினதுநாயகனது இம்மனவிருத்தி வாசனை எக்காற் கிளம்பியதோ அக் கால் நினக்கொப்பாய வடிவோடும் அறிவுருவின்கண்ணே யிருந்தனள். நினது நாயகன் மரணமானவுடனே அதிவிரைவில் நினதுநாயகனால் இவள் நினது சங் கற்பத்தோடு கூடியிருந்ததனால் முன்னூற்பார்க்கப்பட்டனள். இது வாசனை மயமாயிருக்கும் பக்ஷத்தில் சத்தியமாக மன்னவனாலனுபவிக்கப் பட்டதெங்ஙனமெனின்? ஆதிபௌதிகபாவத்தைச் சுயம் சித்தமான தநுபவிக்ககின்றது, ஆண்டு அப்யாச திடவாசனையினாலே வியாவகாரிகபாவத்தை யனுபவிக்கின் றபோது அவ்வனுபவத்தால் திருசியம் பாரமார்த்திக சத்திய பாவத்தையே யடைகின்றது, உண்மையாக ஆதிவாகிக கற்பனை பிராதிபாசிகமே. ஆதிபௌ திகபாவத்தைச் சித்தஞ்சுயம் விவேகஞானப்யாசத்தானே சத்தாகப் பாராமற் பொய்யாகப் பார்க்கின்றபோது திடமான அவ்வாதனையினாலே பிரபஞ்சத்தில் ஆதிவாகிகசங்கற்பம் பிராதிபாசிக நிர்ணயமுண்டாகின்றது. பின் மரணவுணர்ச் சியினானே மீண்டுஞ் சன்மமய மயக்கத்தில் இவனால் நீயே யுணரப்பெற்றவளா யினை வாசனைமய லீலாந்தரரூபத்தோடுகூடிய உன்னால் அடையவேபெற்றான். இவ்வண்ணம் உன்னையிவன் கண்டனன் இவன் உன்னாலுங் காணப்பட்டான், உன்னாலுமிவன் தன்வாசனைமயத்திலே காணப்பட்டனன் என்பதனான் முன் கண்ட பிரஹ்மாண்டமும் மைவடிவமாகப் பரிணதமாம், நீயுமான்மாவின் கண்ணே யடைவுற்றவளே, ஆன்மாவானது சர்வகதமாயிருத்தலின் சர்வ வாசனையனுகதமாதலின் சர்வாகார விவர்த்தங்கூடும். மேலும் வெளிப்படை யாகக்கூறின், பிரஹ்மமானது சர்வகதமாயிருத்தலின் எவ்வாறு எங்கு எக் கால்யாதுதிதமாமோ அவ்வாறேயங்கு அது அப்போதுண்டாம் சொப்பன சக்தியாகிய விக்ஷேபசக்தியினானே காண்பன், எல்லாவிடங்களிலும் எல்லாவற் றிலுமிருத்தலின் எவ்வாறு எவ்வாறு எவ்வெவ்வடிவமாகப் போக்தாவின் அதிர்ஷ்டவனுவில் எவ்வாற்றல் ஆவிர்ப்பவிக்கச் செய்யுமோ ஆண்டு அவ் வாறே திடஅபிநிவேச வாசனையாமேதுவினால் இருந்திலங்கும். தத்தமது மரண அனுகூல மூர்ச்சைக்கண உபலக்ஷிதமாயித்தம்பதிகளிருந்த அளவில் அப்போதேயவர்கட்கு இக்கூறப் புகுமியாவுமே தங்கற்பனையினாலே யனுபவிக் கப்பட்டன, உற்புத்தவாசனையின் வயத்தானே இருதயத்திலிலங்கின. இவர் கள் நமது தந்தையர்கள் இவர்கள் நமது தாயர்கள் இது நமதுதேயம் இத்தனம் நமது முன்னர் நாமித்தகைய கருமத்தைச் செய்தோம்; நாம் விவாகஞ் செய்து கொண்டோம், இவ்வண்ணமே நாமொருமையையடைந்தோம், என்றிருந்த னர்; இவர்களுடைய கற்பனை வடிவமாக இருந்தபோதினும் ஜனங்கள் ஆண்டே போஜக அதிர்ஷ்டபலத்தால் அர்த்தக்கிரியாசமர்த்த சத்தியத்தன்மை

யையடைந்தன. ஆண்டடைந்ததெங்ஙனமென முன் வினவியதற்குக் கூறுவாம்,
ஈண்டு அவ்வாறேயுளது திருஷ்டாந்தம் பிரத்தியக்ஷம் கனவேதனம் இனி
இயம்பப்படும் வகையாக அபிப்பிராயமுடைய லீலையினாலேயானர்ச்சிக்கப்பட்
டேன், அவள் நான்விதவையாகக் கூடாதெனவேண்டினள் அவ்வாறே
யானும் வரந்தந்தேன், இக்காரணத்தினாற்றானே அத்தருணி யீண்டு முன்
னரேயிறந்தனள். எனக்கும் இவளுக்கும் நினது ஆராதனத்திலும் நினதுபிர
சாதத்திலும் காரணமியாதோவெனிற் கேட்டி வியஷ்டி சேதனங்களாகிய உங்
கட்கு ஹிரண்யகர்ப்ப சம்பந்திசேதனமாகிய யான் நுஞ்சமஷ்டிசேதனமே
யாம், குலதேவி சந்ததம்பூஜிக்கத்தக்கவள், சுயமாகவே யான்செய்கின்றேன்,
முன்னமடைந்ததெங்ஙனமென்னும் வினாவிற்குத்தரங்கூறினேம் இனி சரீரியெங்
ஙனமாயினள் என்பதற்குக்கூறுதும், உடம்பினின்றும் கிளம்பவேண்டுமென்னு
மாசையையுடைய இவளுக்கு அங்குஷ்ட பரிமிதலிங்கதேக மாத்திரத்தன்மை
யுண்மையின் அற்பஜீவன் பிராணதேஜசோடுகூடி ஆத்மாவோடு மெண்ணிய
லோகத்தையடையும் எனச்சுருதியிருத்தலின் கிளம்புகைக்குப் பிராணாதீனத்
தன்மையுண்மையின் பிராணனில் வாக்குப்பிராப்தமாகும் என்னுஞ்சுருதிக
ளால் எல்லாக்கரணங்கட்கும் பிராணனிற் பிராப்தமுண்மையானும் பிராண
மாருதரூபந்தரித்தாயிற்று,எண்ணியலோகமெய்துறும் என்னும்மறையினானும்
எதைஎதையெண்ணியிடுவனோவென்னும் மிருதியினானும் வரும்பொருட்சங்கற்
பப்பிரதானத்தால் மனத்தினானே அவ்வப்பொருட் பிராப்தியுற்சுகத்தன்மை
யை அதனிருதயத்தின் அக்கிரத்தையிலக்குகின்றது, அவ்விலக்கலினால் இவ்
வான்மாவிழியினின்றேனும் உச்சியினின்றேனும் அன்னிய அவயவங்களினின்
றேனும் சரீரதேசத்தைவிட்டுக் கிளம்புகின்றது எனமறையறைமுறையானே.
நாடிமார்க்கத்தால் தேகத்தைவிட்டதாயது; அதன்பின் மரண மூர்ச்சைமுடி
வில் ஜீவாத்மாவாய அதனால் அவ்வீட்டிலேயே பிரஹ்மாகாசத்திலாவது பூதா
காசத்திலாவது புத்தியிற்சங்கற்பித்த கூறப்புகும்சரீர கமனகுமாரியடைவு முத
லிய ரூப அர்த்தங்கண்டதாம்; அதன்பின்னர் பாவனையின் வயத்தினாலே பூர்
வதேகமிருதியால் சொப்பனத்திடையிற்போலச் சூரியகிரணங்களினானே பிரே
ரிக்கப்பட்ட பகுதிவிபவப்பதுமினிபோல விரிந்தவாசனைமுகுளத்தினளும்
மான்விழியளும் சந்திரபிம்பானன அழகியும், மானமிகுந்தவளும், பிரியத்தின்
சுயம் உபயோகயோக்கியையும், தானேமனோகரமான நாயகனையனுபவிக்க
விழைந்தவளும், லாவண்யகாந்திவேக சகிதவதனத்தினளும் ஆகிய இந்த லீலை
பதுமப் பிரஹ்மாண்டமண்டலத்துள்ளேசென்றுபர்த்தாவோடுற்றடைந்தனள்.

52-வது தேகவுணர்வு வருணனம் முற்றிற்று.

---

## 53-வது சப்சிருதிவிதிதவேத்திய வருணனம்.

இப்போது லீலையின் கதிமார்க்கமும் நாயக அடைவும், அஞ்ஞானயோக
சித்தர்கட்கு விண்மார்க்கம் அகதியாவதும் வர்ணிக்கப்படும், புதியலீலாதேவி

யானவள் கிடைத்தவரத்தினளாகி முன்வர்ணிக்கப்பட்ட வாசனுமயமாகவே தேகமுடையவளாகி மகிபதியாகிய பதியையடையும்பொருட்டு விண்ணெறி யானே லோகங்களைக் கடந்துசெல்வாளாயினள். கூறியபடி சிந்தித்து ஸ்மர ணத்தோடும் தேகாதிபாவத்தையடைவுற்றுப் பதியடைவி னுற்சாகத்தால் மிகுந்த ஆனந்தமுடையவளாய் மகத்தானமகரத்வஜமாய் ஆகாயத்தலத்திற் பக்ஷியைப்போல இலகுவான சரீரமுடைத்தாய்ப் பறந்தனள். தேவியினது சங்கற்பமாகிய பெருங்கண்ணுடியின்முன்னிலையில் வெளிப்பட்டதேபோலவும், ஹிதஞ்செய்வதற்காகவே ஞானதேவியினுலேயே ஏவப்பெற்றவளாயும் இரா நின்ற தன்கன்னியாங் குமாரியை ஆண்டவள் கண்டனள். (அவள்):—ஹே ஞானதேவியின்சகியே மகளாகின்றேன் ஹே சுந்தரி! நினதுவரவு நல்வரவா குக, நின்னையே எதிர்பார்ப்பவளாய் இவ்வெண்ணெறியிற் காத்திருக்கின் றேன்; எனக்குமாரிகூறவே, ஹே தேவதையே தாமரைவிழியாய் நின்றந்தை யர் யெனது நாயகரது சம்பத்தை நானடையுமாறுசெய்தி! பெரியோரது தரி சனம் ஒருகாலத்திலும் நிஷ்பலமாகாதன்றேவென லீலை முன்வந்ததனுனே நெறியுணர்ச்சி யிவளுக்கு நன்குதெரியக்கூடுமெனத் துணிந்து கூறினள், நின் னைப்போலக் காந்த அர்த்தினியாகிய எனக்குத்தந்தையை யடைவதால் என்ன பயனென்பையேல், என்பிரியப்பொருட்டு யான் கூறுவதைச் சம்பாதித்துக் கொடுக்கலாமே. ஸ்ரீ வசிஷ்டபகவான்கூறல்:—வேண்டுவதுறலாம் ஆண்டே செல்வோம் வருதியென அக்குமாரிகூறி அவள் முன்பாகாயத்தில் நெறிகாட்டு வதில் மூழ்கினவளாகிச்சென்றனள். பின்சென்றவவள் பிரஹ்மாண்டசித்திரக் ககனத்தையடைவுற்றனள், நிருமலமாய் பிராணி ஹஸ்த சமூகங்களின் அக்கிர தலம், வரும்சுபாசுபலக்ஷண பூதவிதாதாவாக்கிய ரேகைக்கொப்பாக இருந்தது. மேகமார்க்கத்தைக் கடந்து வாதஸ்கந்தத்தினுட்சென்றனர், சூரியமார்க்கத் தைத்தாண்டி நக்ஷத்திரமார்க்கத்தையும் கடந்துசென்றனர். வாயு இந்திர சுரசித் தர்களின் லோகங்களை யெளிதிற்றுண்டி பிரஹ்மவிஷ்ணு மகேசர்களின் லோ கங்களையுந் தாண்டிப் பிரஹ்மாண்ட கபாலத்தையடைந்தனர். இமநீர்ச்சீத ளத்தகைமையானது உள்ளிருப்பதாயினும் கும்பத்திலபின்னமாகத் துவார மொன்று மிராதிருந்தும் வெளியில் வெளிக்கிளம்புவதேபோலச் சங்கற்பசித்த மான அவள் பிரஹ்மாண்டத்தினின்றும் வெளியேகிளம்பினள். இந்தகமன மும் சித்தத்தின்கற்பனைமாத்திரமேயாகும், தன்சித்தமாத்திரத்தினின்றும் தன்சங்கற்பவியற்கையாலாம் இம்மயக்கம் ஈண்டு இவ்வண்ணம் வெட்டவெளி யாக உள்ளேயேயனுபவிக்கப்படுகின்றது. இவ்வண்ணம் பிரஹ்மாதிஸ்தா னங்களைக் கடந்து பிரஹ்மாண்டகபாலத்தை யடைந்தபின்னர் பிரஹ்மாண் டத்திற்கு வெளியிலிருக்கும் ஜலாதியாவரணங்களைக் கடந்து பெரிதுக்கும்பெரி தாய மாயையோடுகூடிய சிதாகாசத்தை பின்படைவுற்றனர்; அதிவேகத் தோடுசெல்லும் பெருங்கருடனுலும் கற்பகோடிசதகாலஞ் செல்லினும் எல்லா வற்றையுங் கரைகாண இவ்வளவென வியையவே யியையாதாம். ஆண்டதே

கங்கோடி பிரஹ்மாண்டங்கள் கணக்கிடமுடியாதனவாய் அளவற்று நிறைந் திருந்தன. அவைகள் மகாவனங்களில் பழங்கள்போல அன்னியொன்னியம் காணமுடியாதனவாயிருந்தன. ஆண்டொருபுரத்தில் விஸ்தாரமான ஆவர ணங்களோடு கூடியதாயினிது முன்னிருந்த அண்டத்தில் வாஸ்தவமாய்த் துவாரஅபேக்ஷையில்லாத படியினாலே இலந்தைக்கனியிற் புழுநுழைவதே போலத் துவாரஞ்செய்தே புகுந்ததுபோற் புகுந்தனருள்ளில். மீண்டு அதிக வொளியோடொளிரும் பிரஹ்மேந்திர விஷ்ணுவாதி லோகங்களைக் கடந்து நக்ஷத்திரமார்க்க ககனத்தினின்றுங் கீழேயிருக்கும் அந்தப் பதுமமன்னனு டைய ஸ்ரீமன்மகிமண்டலத்தை யடைந்தனர். ஆண்டமண்டலத்தை யடைந்து அப்புரத்திலுள்ள அம்மண்டலத்திற் பிரவேசித்துப் புஷ்பத்தான் மறைபட் டிருந்த சவசமீபத்திலிருந்தனள் இவ்வாறிருந்தபோது அம்மதிவதனி, மாயை யிற்றோற்றி மறைந்தவள்போன்றுதோற்றிய அக்குமாரி யெங்குமறைந்து போயினளோ கண்டிலள். அந்நாயகராகிய சவரூபத்தை அவளினிதாகநோக்கி யுண்மையாகவே இதனைத்தானே தர்க்கித்து எண்ணுவாளாயினள், அவ்வி வெனது நாயகர் சிந்துவாற்போரிற்கொல்லப்பட்டு வீரலோகமர்கிய விதை யடைந்து கணம் இஷ்டப்படி துயில்கின்றார் போலும். யான் ஸ்ரீ தேவியினது திவ்வியமான திருவருளானே சரீரத்தோடு கூடினவளாகவே இவ்வண்ணம் இங்ஙன் ஈண்டு எனது நாயகரை யடைந்தேனாதலின் யானே தன்னியை எனக் குச் சமமாக எவளையுமே யியம்பமுடியாது; எனவெண்ணி அவள் தாம ரைக்கரத்திற் கவின்சாமரந்தாங்கிச்சந்திரனல் விண்போல் அவனிமண்டலம் வீசிக்கொண்டிருந்தனள். உணந்தலீலைமுன் வினச்சேடத்தோடும் மீண் டும்வினாதல் :—அச்சேவகரும் அச்சேடியரும் அவ்வுணர்ந்தமன்னனும் எம் மதியால் என்னபேசிக்கொள்ளுவார்கள் அதுவும் எங்ஙனே பொருந்தும் அக்கதையையெல்லாம் அம்மேயருள்வாயாக; அரசனுக்குப் பூர்வவிருத் தாந்தத்தின் மறதியுண்மையின் இஃதென்னெனவும் இஃதெவரதெனவும் உண்டாஞ்சங்கையால் ஸ்மரணமுறினும் சிஷ்டலோகநிந்தையினானே அதைக் கவர்தல் கூடாதன்றோ வென்றுசங்கிப்ப அதற்கு ஸ்ரீ பரமேசுரி யருளுவ தாவது :—ஹே குழந்தாய் இது அபூர்வமான யாதோவொன்றென்று யாவருக் கும் பிரதீதியாயினன்றோ கூறியதோடமாம், சத்தியசங்கற்ப எம்மனோரது பிரபாவத்தால் அதேயுண்டாகவில்லை பின்னென்னே கூடாதது, அவ்வரசனும் அவ்வேலையாட்களும் ஆகியயாவருமே அன்னியோன்னியம் ஒருமைமதியால் பரஸ்பரம் கூறும்வகையாற் பார்க்கின்றனர், ஒருமைமதியாற் பார்ப்பதற்கு ஹேதுயாதோவெனின், பரஸ்பரம் தந்தம்புத்திகளில் பிரதிபிம்பம்போலும் உள்ளேபுகுந்திருத்தலின், சாக்ஷிசிதாகாசமானது ஒருமைமதியனுகுணமாகப் புரித்துக்கொண்டிருத்தலின்,பிரஹ்மசைதன்யமானது போக்தாவின் அதிர்ஷ்ட அனுகுணமாக விவர்த்தப்படுதலின், இதனாலிவ்வாறே யாகுக வென்னும்பர மேசுரருடைய மகாநியதியைப்பற்றி யவர்சங்கற்ப அதீனமாதலின் நமது பிர

பாவத்தினுற் பார்த்தற்குத் தடையென்னே இவளெனது சகஜமான பாரியென வும் இவளெனது சகஜமான சகியெனவும், இவளெனது சகஜமான ராணியென வும் இவனெனது சகஜமான தாசனெனவும் தோற்றும், கேவலம் நீயும் நானும் விதூரதலீலையும் அகண்டிதமாய் நடைபெற்ற சரிதப்படி யுணர்கின்றேம், இஃதாச்சரியம் மற்றெருவரு முணரவேயில்லை. பதியையடைந்தனள் எனவரு ணிக்கப்பட்ட கோமளவசனியாமிந்த லீலை நின்வரபலத்தானே இத்தூலதேகத் தோடும் ஏன்போகவில்லை? வுணர்ந்தலீலைகேட்ப அதற்கு ஸ்ரீதேவி கூறுவதா வது:—ஹேகுழந்தாய் அஸ்தூலாத்மப்பிரபோதஹீனர்கள் புண்ணியவசத்தா லுண்டாகியிருக்கும் சித்தலோகங்களை ஆதபத்தைச்சாயைபோலும் தத்தேகத் தோடுமடைவதற்கு ஆற்றலுடையவர்கள் ஆகார்கள், சத்தியசங்கற்பத் தோடுகூடிய ஈசுர ஹிரண்யகர்ப்பாதியரானே சர்க்காரம்பத்திலேயே இம் மரியாதைஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது, மெய்யானது பொய்யுடன் எதுவுங் கலந்துநிற்பதில்லை. (யாண்டு தான்யாதின் அத்தியாசமுளதாமோ, அஃ தாக்குங்குணத்தானல் தோடத்தானுதல் அணுமாத்திரையானுமே அது பற்றுருதாம். எனப்பாடிய வசனங்காண்க) இவளுக்கு நினது திருவருளால் அஸ்தூலான்மநிச்சயமே னுண்டாகவில்லை. யெனின் கேட்டி! பாலகனுக்கு வேதாளசங்கற்பமானது இருக்கும்வரைக்கும், வேதாளமில்லையென்னும் மதியானது அவனுக்குண்டாவதெங்ஙனம்? அவிவேகமாகிய சுர உஷ்ணத் தன்மை ஆன்மாவின்கண்ணே யிருக்கும்வரைக்கும் விவேகமாகிய சந்திர சீதளத்தகைமை எவ்வாறுதிக்கும்? யான் பிருதிவியாதி தேகமுடையவன் ஆகாயத்தின் எனக்குத் தமனகதியில்லை யென உள்ளேமதித்திருக்கப் பட்டவன் யாவனே அவன்வேறுமதியுடைத்தா யிருத்தலெப்படி முடி யும்? ஆகையால் ஞானவிவேகத்தாலும் புண்ணியத்தாலும் வரத்தாலும் நினது தேகத்திற்குச் சமானமான புண்ணியதேகத்தாலும் பரலோகத் திற்குச்செல்வர்கள். ஆதிவாகிகதேகப் பிராப்தியின்கட்டான் எங்ஙனந்தூல அகம்பாவ நீக்கமெனின்? சொலியாநின்ற தீயின்கண்ணே காய்ந்தசரு கானது விழுந்தவுடனே சாம்பலாய்விடுகின்றது இத்திருட்டாந்தம் போல இதுதூலதேகம் யானித்தேகம் என்னுமிது அகங்காரவாசனைமாத்திரமயமான ஆதிவாகிகதேகத்தையடைந்த மாத்திரத்தானே கெட்டுவிடும். வரசாபங்களும் முன்வாசனைகருமானுசாரிகளேயாம் அவற்றைவெளிக்கிளப்புவதானேபிராணி களடைவர்கள், வரசாபவிலாசங்களாலும் இத்துணையேயுண்டாம், முன்னர்ப் பயின்றிருந்தபோதினும் வேகமாகச் சமஸ்காரம் வெளிக்கிளம்பாமையின் நீள்சிந்தனையோக்கிய அனுவாகாதியர்த்தத்தில் யாதாவதொருபிரதீக உதா ரணத்தால் நினைப்பூட்ட, உன்னலெப்படி நினைப்பூட்டப்பட்டேனே யான் அப்படி ஸ்மரித்தேனென ஸ்மிருதியுண்டாகாதேபோலும். அர்த்தக்கிரியாகாரி தூலதேகம் எங்ஙனந் தத்துவபோதத்தால் வாதிக்கப்படும் எனின் தத்துவ திருஷ்டியானே பார்க்கும்போது அர்த்தக்கிரியைகிடையாதன்றே; இரஜ்ஜு

வின்கண்ணே யாதொரு சர்ப்பவுணர்வுண்டாகின்றதோ அது எங்ஙனஞ் சர்ப்ப காரியத்தைச் செய்யும், தன்வடிவத்திலேயே யில்லாததாய அதற்கு காரியஞ் செய்யுந்தகமை எங்ஙனம்? அசத்தேதேகமாயின் இத்தேகம்மரித்ததெனயாங்ஙனம் சர்வ அனுபவத்தாதல் எனின், இதுமிருதமாயதென யாதுதான்றோற்றமுண்டாகின்றதோ அம்மயல் பொய்ப்பொருளாகவே நன்கனுபவிக்கப்படுகின்றது, இவ்வனுபவம் விருத்திசெய்யப்பட்ட முன்பயிற்சியினது சமஸ்காரத்தானே பொலிந்துலவுகின்றது. ஜகத்தின்ஜாலத்தை யுள்ளத்தனுபவித்து நோக்கின் சமுஸ்சாரப்பிரமங்கள் சுகமங்களே யாகும், வரசாபாதிகளைக்கொடுக்கும்படியான அன்னியஹிரண்யகர்ப்பராதல் ஈசுரராதல் நம்மனோரது வாசனைமுதலியவற்றை யபேக்ஷியாமலே இத்தகையதாகச் சமுசாரமுதலிய பயல்வு இனிது கற்பிக்கப்பட்டதாக விலையாம், சமுசாரமானது உள்வாசனுமயமாக விருந்தால் வெளியிலிருப்பதாக வுணர்வுண்டாதல் யாங்ஙனம் எனின், திருஷ்டாந்தத்துடன் கூறக்கேட்டி, தத்துவதிருஷ்டியையறியாத அஞ்ஞர்கட்கும் உன்னிலேயே பாகியபூதஜால சமுசாரங்களுளவாமன்றி வெளியிற்கிடையாவாம், அத்தியஸ்தமான இரண்டாவதுசந்திரபிம்பம் தூரத்திற்றோற்றியபோதினும் புருடர் உண்மயற் கற்பனையாதலின் உள்ளேயே யிலங்குகின்றதன்றோ.

53-வது சமுசாரவிதிதறேத்ய வருணனம் முற்றிற்று.

---

## 54-வது மரணவிசார வருணனம்.

இப்போது சர்வபாவங்களின்நியதியும் அவ்வாறே மரணமுறையும் போகமும் கருமகுணஆசாரத்தால் ஆயுளளவும் வருணிக்கப்படும். பிரகிருதத்துற்ற வினவிடை கூறிய அனுவாதத்தானே ஸ்ரீ தேவி முடித்துக் கூறுவதாவது:— ஆகையால் அறியவேண்டியதை யறிந்த தத்துவஞானிகளும், யோகாப்யாசஜன்னியமான தருமத்தைப்பற்றியவர்களும் ஆதிவாகிகலோகங்களை அடைவர்கள் ஈண்டுமற்றையரோ அடையார், அதிவாகிகப்பிரஹ்மாதிலோகங்களிலும் இங்குபோல நீண்டபயிற்சியால் ஆதிபௌதிகதேகத்வ உதயம் ஏனுகமாட்டாதெனின்? ஆதிபௌதிகதேகத்தன்மை பொய்மயல்மயவடிவமாம், மூவுருவங்களேயுண்மையென்னுஞ் சாங்தோக்கியத்தில் தூலமானது சூக்குமத்தினுடைய திரிவித்கரணதியில் அத்தியாசமெனக் கூறப்பட்டிருத்தலின் தூலஅபேக்ஷையாற் சத்தியமான ஆதிவாகித்தன்மையானது புண்ணியமிகுதியாலடைவுற்றபோது,எவ்வாறுதிதியையடையும் ஆதபத்திற்சாயையெவ்வாறுதங்கும். ஆயின் லீலைக்குப் பதுமமன்னனையடைந்தபின்னர் எங்ஙனம் ஆதிபௌதிக தேகத்தகைமை யுண்டாயது எனின்? லீலை அறியவேண்டியதையறிந்தவளும் யோகஜதருமத்தைப்பற்றியவளுமல்லள் அதனுற்கேவலம் அவள் பர்த்தாவினலே கற்பிக்கப்பட்ட நகரத்திற்குச்சென்றனள். இவ்வாறுதேவி கூறியதை யங்கீகரித்து அரசமரணதரிசனத்தாற்குறிப்பிக்கப்பட்ட ஜீவனநியதிய நியதிப்பொருத்த

மின்மையையெண்ணிய லீலை கூறுவதாவது:—ஹேதாயே ! இவள் சென்றனள்
என்றுயாது கூறப்பட்டதோ அதுதாங்கள் கூறியமுறையாகவே பொருந்துக,
எனதுநாயகர் பிராணசந்தியாகத்தில் முயல்கின்றார் இதோபிரத்தியக்ஷமாய்ப்
பார்த்தருள், இதுவிடயத்தில் இப்பொழுதுசெய்யத்தக்கதுயாது, யாதீண்டு
பொருத்தம்? (என்னுலிப்போது யாது செய்யத்தக்கது என்பது வினக்கருத்
தன்றாம், வேறுவினக்களோடுபொருந்தாமையின் விடையிற்செய்யத்தக்க
காரியமொன்று முபதேசியாமையின். பாவங்களாகிய தேகாதிகட்குச் சீவன்
சௌக்கியாதிபாவங்களிலும் துக்கதுர்ப்பாக்கியாதிய பாவங்களிலும் முன்னர்
எங்ஙனம் நியதிவந்தது மீண்டும் மரணஜன்மாதியைக்குறிப்பிக்கும் அநியதி
யெங்ஙனம்வந்தது. நியதியுளதாகாதொழிக அநியமேயுள தாகுகவெனின்,
நீர்க்குச் சீதளமேயியற்கை நெருப்புக்குவெம்மையேயியற்கையாதி யெங்ங
னஞ்சித்திக்கும், குடமுதலியவற்றிலுள்ளசத்தை பாவரூபத்தகைமை நியமம்
எங்ஙனம் அக்கினியாதிகளில் வெம்மை யெங்ஙனம், மண்முதலியவற்றிற்றிரத்
தன்மையெங்ஙனம், பனிமுதலியவற்றே சைத்தியமெங்ஙனம், கால ஆகாசாதி
களில் என்னசத்தை? மெய்வெள்ளியாதிகளின் கொள்ளுதலும், சுக்தி வெள்
ளியாதிகளின் றள்ளுதலும் பூமியாதிகளின் றாலத்தகைமையும் மன இந்
திரியாதிகளின் சூக்குமத்தகைமையும் என்பனவேயாதியாய நியமத்தின்
றரிசனங்கள் எங்ஙனம்? சாலதாலாதிபோலும் அத்தியந்தம் மேல் நீட்சி
யெங்ஙனந் திருணகுல்மநராதிகள், தம்மேல் நீட்சிகாரண மிருந்தபோதினும்
இஷ்டத்திலும் அநிஷ்டத்திலும் யாண்டும் அநியமமாதலின் சர்வவஸ்துக்
களிலும் அவிசுவாசமே எனுண்டாகமாட்டாது. ஜகத்தானது சத்திய ஏக
சுபாவத்தோடு கூடியிருப்பதேயாயின் யாண்டும் இவ்வண்ணரூபமாகவே
நியதியுண்டாகலாம், பொய்யாய் மாயாமாத்திரப் பிரகிருதியையுடைத்தாயிருக்
குமாயின் அத்தியந்தம் அநியதியேனுமுண்டாகலாம் மெய்பொய் கலந்த
அவ்வியக்தப்பிரகிருதியை யுடைத்தாயிருத்தலினனே மெய்பொய் யியற்
கைத்தாய்ப் போஜக அதிர்ஷ்ட அனுகுணமான சித்விவர்த்த விவஸ்தை
யதாகவே இருந்தொளிருமென விடைபகருவான் ஸ்ரீதேவிய தன்பொருட்டுச்
சுத்தசித்விவர்த்தமுறையையறையத்தொடங்கல்:—ஹே குழந்தாய்! மகாப்பிர
ளயமானது வந்துற்றபோழ்து எல்லாப்பொருள்களும் லயமாகியொழியவே
அநந்த ஆகாசமாய்ப் பரமசாந்தமாயுள்ள சத்பிரஹ்மமே இருக்கின்றது. அது
சித்ரூபமாகவே, சுத்தசித்வியாப்தத்தன்மையால் பிரகாசமயங்களாகிய சூக்
குமபூதங்கள் என்னும் தேயுக்கணமியான் எனவனுபவிக்கின்றது, கனவில்
உணர்வேபோலும் நீயாகாசகமனுதிசெய்ததேபோலு முணர்ந் தேயுக்கணபூத
மான இவ்வான்மா ஆன்மபின்னத்தன்மையானே கற்பிக்கப்பட்ட ஜலாதியாவ
ரணத்தினுள் தூலத்தன்மையைக் கற்பனையாலேயடைகின்றது அவ்வெத்தால
முளதோ அதுவேயித்தோற்றப்படும்அசத்தியமேயாயினும் சத்தியம்போன்ற
பிரஹ்மாண்டமெனப்படும். ஆண்டுப்பிரஹ்மாண்டத்தினுள்ளே யிருக்கும்

ஹிரணியகர்ப்பப்பெயரிய அந்தப் பிரஹ்மத்தோடு சித்தம் சதுஷ்டய மென முன்மொழிந்த ஸ்ருமிதியினுல் அந்தர்முக அங்கிசத்தால் பிரஹ் மாயா னெனவுணர்கின்றது பாகியவாசனுதூஷித அங்கிசத்தால் இவ்வண்ணம் பிராணி கருமானுகுணசிருஷ்டி சங்கற்பரூபத்தால் மனோராஜ்யத்தையும் செய் கின்றது, அச்சத்தியசங்கற்ப மனோராஜ்யமே இவ்வுலகமாம், இங்ஙனந் தன் வடிவமாம்; அச்சர்க்கத்தின்முதலிற் சங்கற்பவிருத்திகள் யாவை எத்தகைய நியமத்தவடிவினவாமோ யாண்டு எழுந்தனவாமோ அவை இன்றும் அத்தகை யனவாகவே ஆண்டுவிலகாதனவாயிருந்து வருகின்றன. மனமானது விசித் திரவடிவவாசனைமயமாகவிருத்தலின் அவ்வாறுசங்கற்ப முதயமாயினும் ஆத்ம சைதன்யத்திற்கு அதனனுசாரியாய விவர்த்தம் யாங்ஙனங்கூடுமெனின்? ஆன்மசித்தானது சொச்ச உபாதியயற்றுமாறேயியற்றுமியல் பிற்றுதலின் சித் தமானதுயாதாய் எவ்வகையாயிலங்கமுயனுமோ, அதாய் அவ்வகையாய் ஆன்மசித்தேயாகும், சுயமாகவே நியமமாக அதுவதுவாயாம் ஈண்டய லொன்றுமில்லையாம், ஆகலின் ஒரு சிறிதும் அநியதவியற்கைத்தாயுதிப்பதின் றும். மாயையோடு கூடிய பிரஹ்மத்தின் கண்ணே அநாதி நியதரூபத்தால் ஸ்திதமாயிருக்கப்பட்ட விசுவத்திற்கு ஆவிர்ப்பாவத்தானும் நியதிசித்தியாம், விசுவரூபிக்குச் சிறுமை பொருந்தாதென்பதின்றுமன்றே! கங்கணகேயூராதி பிண்டத்தன்மைமுதலிய சமஸ்தநிலைமைகளையும் விட்டுப் பொன் எங்ஙனமிருக் கும் எல்லா வடிவங்களும் ஆண்டடங்கியிருத்தலானே எதையும் விடுவதற்கு முடியாதேயாம் சர்க்கத்தினது ஆதியில் தானே யுள்ளறிவு தன்பால் எவ்வாறு தண்மை வெம்மைமுதலிய வியற்கைத்தாக ஆவிர்ப்பூதமாமோ அவ்வறிவு அவ்வியற்கையதாகத் தன்சத்தையாலின்றும் நியதமாயிருக்கின்றது; மேலும் மாயையோடுகூடிய பிரஹ்மம் தன்னதிஷ்டானசத்தையை விடுமாயின் அக் கான் மாயைக்குள்ளடங்கிய நியதிகட்கு அசத்துவமாம், அதுமுடியாததே யாகுமெனக் காட்டுதும்; ஆகையால் தன்சத்தைச் சந்தியாகமானது மாயை யோடுகூடிய பிரஹ்மத்திற்குச் செய்யமுடியாத காரியமே யாகும், சித்திருக் கும்போது அதனுல் இந்நியதியை விலக்கமுடியாதாம். நியதிவிபரீதப்படாத தில் பிருதிவியாதிஸ்திதியே கண்கூடாம், பிருதிவியாதி வியோமரூபியாயினும் யாண்டு எவ்வாறுபொலிவுறுமோ சர்க்காதியில் அதைமாற்ற இப்போது எவ் வாற்றானும் முடியாததேயாம். ஜீவனநியதிக்கு மரணநியதியினுலே மாறுபாடு காணப்படுதலின், எவ்வாறுளதுவாகச் சித்தானது நிகழ்ந்ததோபிரதிபக்ஷ வுணர்வில்லாமல் அது அதனினின்றும் உணர்வின்பயில்வால் தானே சலிக்க மாட்டாதாம். இவ்வியாவும் மாயிகதிருஷ்டியினுனே கூறியதாம் பரமார்த்த திருஷ்டியினுனே உலகமே யிலதாகுமாகலின் நியதியின் ஆக்ஷேபம் யாண் டையதாம்; யாது ஏதோ சிறிது அனுபவிக்கப்படுகின்றதோ இங்கிவ்வுலகம் முதலிலுற்பன்னமேயற்றதாம், இது உணர்வுவிண்ணின் கசிவேயாகும் சொப் பனஸ்திர் சுரதம் போலும். இது அசத்தியமாகவே யிருந்தபோதினும் சத்தி

யம் போலவே தோற்றிக் கொண்டிருக்கின்றது என்னும் நிச்சயமே சொரூப அடைவாம், உள்ளபடியாயிருக்கும் உணர்வுகளாம்: முன்மொழிந்தமுறை யானேநியதி இதற்கையடைவுபூத அநுபூதிகள் ஜீவனமரணாதி பதார்த்த அநு பவங்களுமாம், நியதிசப்தார்த்தபரியாலோசனை செய்தபோதினும் இப்பொரு ளேசித்திக்கும், சர்க்காதியின் கண்ணே உணர்வின்பெருக்கப் பரம்பரையாது எவ்வண்ணம் நிலைபெறுமோ அது இன்றும் அன்னியவிரோதியால் மாறுபடுத் தப்படாமல் அவ்வண்மே நிலைபெற்றுநிற்றல் நியதி யெனப்படும், வேறு பதார்த்தத்தோடு சேர்க்கையுறவே நியதியாம், ஜன்மஜீவனங்கள், மரணத் தோடு மருவியபோதுதான் நியதியாம். சுதந்திரமாக இன்றும் தட்பவெப் பங்கள் பகைமையானே சேரில் நியதியாம், கிரியையும் காரகமும் சாத்திய சாதனபாவத்தானே சேரில் நியதியாம் கூறியபொருளில் உதாரணங்கூறக் கேட்பாயாக, விண்ணுகாரமாகப் பொலிதலைச்சர்க்காதியில் ஞானவிண்ணாற் கவரப்பெற்றது கொண்டு விண் தன்மையை யடைந்தது, காலவுணர்வைக் கவர்ந்தசிதாகாசம் காலத்தன்மையை யடைந்தது. காண்போனும் வடிவத் திற்காண்பொருட் கற்பனைதன்பாலே பிரசித்தமாம், ஜலவுணர்வைக்கவர்ந்த ஞானவிண் ஜலம்போல நின்றது, கனவின் கண்ணே புருடன் தன்பாலே நீர்த் தகைமையைக்காண்பன். சொப்பன சித்துணர்வேயிலங்குகின்றது அவ்வாறு யினும் சொரூபத்தினின்றும் நழுவாமலேயிருக்குமிது, யாதுகாரணமெனின், அசங்க இயற்கைத்தாம் வடிவசாதுரியத்தால், மாயையின் சாதுரியத்தால் அசத்தேயாயினும் சத்தேபோற்றோற்றுநிற்கும், இக்கனத்தகைமை நீர்மை மண்மை தீமைகாண்மை யென்பனவும் அசத்தேயாம், சொப்பனசங்கர் பத்தியானங்களிற்போலச் சித்தானது சுயமாகவே யுள்ளே யுணர்கின்றது. இவ்வண்ணம் வேறுநியதிகளை விவஸ்தாபனஞ்செய்து ஜீவனநியதியையும் கரு மானுசாரமாகவும் யுகபேதத்தானும் காலவிசேஷபரிச் சின்னமாகவே ஈசுர சங்கற்பத்தாற்சித்தமாமெனமரணத் தாலதனது பங்கம் ஆகாதெனக்கூறக் கருமபலாநுபவக்கிரம நிரூபணஞ்செய்வாம், மரணத்தின்பின்னர்க்கருமபல அநுபவக்கிரமத்தை மிருதிசிரேயசுகரத்தைச் சர்வ சந்தேக சாந்தியின் பொருட்டுக் கேட்பாயாக, பிராரப்தபலங்களாற் றடைப்பட்டு மரண முண்டாகாதவரை அத்தேகசஞ்சிதகருமங்கள் பலராம்பப்பொருட்டுச்சமர்த் துடையனவாம் மரணமுண்டாகவே தடையொழிந்து விட்டவுடன்றக்கபடி பலாரம்பப்பொருட்டுத் தொடங்குகின்றனவெனக் குறிப்பிக்கும் பொருட்டுத் தான் மரணானந்தரமென்றது, இதைக்கேட்பது நினது சகலசந்தேகசாந்தியின் பொருட்டு நின்வாயிலாக உலகத்திற்றெரியுமாறு விரிந்து அன்னியர்களுக்கும் ஆஸ்திக்யபுத்தி யுண்டுபண்ணுகின்றமையின் மிருதியின் கண்ணே சிரேயசுகர முமாகும். கிருதயுகமுதலிய நான்கு யுகங்களினும் கலியில் நூறும், துவாப ரத்தில் இருநூறும் திரேதாவில் முந்நூறும் கிருதத்தில் நானூறும் எனப் புருடர்களின் ஆயுள் எண்ணிக்கை நியதி ஆதிசர்க்கத்தில் ரூடமாம்; அதனது

முறைவு அதிகபாவத்திலும் அவாந்தரநியதியைக் கேட்பாயாக, ஆயுள் நிமித்த பூதங்களாய் தங்கள் கருமங்களின் தேசகாலகிரியை தொழில்திரவிய அசுத்தியினலே வைகுண்யமுறவே பலத்திற்குக் குறைவாந்தன்மையாம், சுத்தியதிசயத்தாலோ மிகுந்தபலமாம், ஆகவே தூய்மையும் அஃதின்மையுமே நரர்தம் மாயுளிற் காரணமாம். இவ்வண்ணம் விகிதகரும அனுஷ்டானமில்லாமையும் ஆயுக்ஷயஹேதுவாம், தங்கருமதருமம் குறையவேயீண்டு நரர்தம்மாயுளும் குறையும், மிகுதியாகவே ஆயுளும் விருத்தியாகும், சமமாயினே அந்த அந்த யுகத்தில் நியத எண்ணிக்கையான ஆயுளேகிடைக்கும். விகிதத்தைச் செய்யாததாற்போல நிஷித்த ஆசரணமும் ஆயுக்ஷயஹேதுவாம், பாலமிருத்தியுகொடுக்கப்பட்டவற்றால் பாலன் மரிப்பன், யௌவனமிருத்தியுகொடுக்கப் பட்டவற்றால் யௌவனன் மரிப்பன், விருத்தமிருத்தியுகொடுக்கப் பட்டவற்றால் விருத்தன் மரிப்பன், இங்ஙனங்கருமங்களானே மரணமுண்டாம்; யாவன் நூற்படி தொடங்கப்பட்டதன்றரும அனுஷ்டானத்தில் நிலைத்து நிற்பனே அவன் திருவுடையவனாகி நூற்படியாயுளையடைந்து வாழ்ந்திருப்பன். இவ்வண்ணங் கருமானுசாரமாக ஜந்துக்கள் இதினின்றும் அந்தியதசையையடைவர், ஆயுள் முடிவை யடைந்த புருடனுக்குப் பிரத்தியக்ஷமாயனுபவிக்கும்படியாக மருமச்சேதவேதனை யுண்டாம், சர்வசரீரநாடிகளினின்றும் பிராணன்கட்கு இருதயத்தில் உபசங்காரகாலத்தில் ஆயிரக்கணக்கான தேள்கள் கொட்டிய துயர் போன்ற துயர் உண்டாமென்பது புராணவெளியாம், ஹேபரமேசுரி! சுருக்கமாக மரணத்தைப்பற்றிச் சொல்வாயாக, மரணமென்சுகமா? மரணமென் றுக்கமா? மரித்துத்தான் என்னும்? வர்ணிக்கப்பட்டமரண துக்கம் யாவருக்குஞ்சமமா? அல்லது சிலவருக்குச் சுகமும் ஆமா? மரணத்தின் பின்னர் யாவருக்குஞ் சமமானகதியா? அல்லது யோகிகட்கு விசேஷகதியா? என் றுணர்ந்த லீலை கேட்ப அகிலேசுரி வினாக்கருத்துக்கிசையவே விடை பகரப் புகுந்தனள்:—தேகாந்தத்தில் பிராணன் விடுபவர் முத்திறப் புருடராவர், மூர்க்கன், தாரணாப்யாசி யுக்திமானாயபுருடன் எனப்படுவர், பிராணனையும் மனத்தினையும் நாபி இருதயம் கண்டம் புருவத்திடை பிரஹ்மரந்தராந்தங்களில் நியதகாலந்தடைப்படுத்தலே தாரணையாம் அதனப்யாசி, யுத்திமானானவன் தன்னிஷ்டப்படி கிளம்புவதினும் பரகாயப்பிரவேசத்தினும், தனக்கிஷ்டப்பட்ட லோகப்பிராப்திமார்க்க பூதநாடி வாயிலாக விசேஷ நிர்க்கமனப்பிரவேசாதிகளிலும் பயிற்சிக்குசலனேயாய யோகியாவன்; அவருள் தாரணா நிஷ்டன் மத்தியமன் முறையாகயுத்தியையப்பியசித்துத் தேகத்தை விடுத்து இஷ்டப்படி செல்லாநிற்பன், தாரணைபயின்று முடிந்த யுக்தியுக்தன் அவ்வாறேயிருந்து இஷ்டப்படி செல்வன், இதுவே யிருவர்க்குஞ் சிறப்பாம்; மூர்க்கனைக்குறித்து மொழியினே துயரமேயாம், எவனுக்குத் தாரணையினப்யாசம் அடையப்படவில்லையோ, யுக்தி மானும் அல்லனே அம் மூர்க்கன்றனது மரணகாலத்தில் மனுதிமருண்டுதுயரையே மருவுவன்.

வாசனையினு வேசத்தினால் சுவாதீனமின்றிய சித்தத்தகைமையை யடைந்து, அதனானே பாவிக்கப்பட்ட விடய ஆசைகள் பரமார்த்த ஆசைகளல்லனவாகி அறுத்தெறிந்த அம்புயங்கள்போலப் பரமதீனத்தன்மையை யடைகின்றன; அதிலும் விகிதத்தைச் செய்யாவிடினோ மிகுந்த துயரமுண்டாம், சாஸ்திர நிஷித்தமானவற்றுற் சமஸ்கரிக்கப்பட்ட மதியை யுடையவனும் துஷ்டர் சேர்க்கையையேமிகவுமுடையவனுமாமூடன் மரித்தபோது சுவாலைவிட்டெரியும் அக்கினியின்கண்ணேவிழுந்து தபிப்பதுபோலத்தபிப்பன் அத்தகைய துக்ககாலத்தைக்காட்டுங் குறிகளாவன:—கண்டம் கர்க்கர் எனக்கரைதல் விருபத்தன்மை திருஷ்டிவர்ணவுதயம் உண்டாம்போது இவ்விவேகாத்மாதீன மதியுடையவனுயலறுவன்; பேரிருளையடைவுற்றுப் பகலினும் நக்ஷத்திரங்களுதிக்கப் பெற்றுறும் வகையில் நிட்பிரகாசமாயிருத்தலினானே கனமான விருண்மூடிய ஆகாயந்தோற்றும், திக்குமண்டலங்களெல்லாம் மேகத்தோடுகூடினவாகித் தோற்றும்; இத்தோற்றங்களைக் காணுமவன் மர்மவேதனையால் வியாபிக்கப்பெறுவன், திருஷ்டிமண்டலம் மிகவும் சுழன்றுகொண்டேயிருக்கும் ஆகாயம் பூமியைப்போலவும் பூமியாகாயத்தைப்போலவும் தோற்றிக்கொண்ட யிருக்கும், திக்கு மண்டலங்களெல்லாம், சுழன்றுகொண்டே யிருக்கும், கடலின் மிதக்குவதுபோலவுந்தோற்றும் ஆகாயத்திலெழுத்துக்கொண்டுபோவது போலவுந் தோற்றும், இங்ஙன் காணுமிவனுக்குக் கனநித்திரையை நாடுங்கருத்துண்டாம்; அந்த கூபத்தில் விழுந்ததுபோலிருக்கும், பாறையினுள்ளே நுழைவித்ததுபோலிருக்கும், தன்னுடைய துயரத்தைச் சாற்றவேண்டுமென்னும் விழைவிருப்பினும் வாக்கானது தம்பிக்கப்பட்டிருத்தலின் ஜடங்களாய்ப் பேசக்கூடாதனவாய் வர்ணங்களிருக்கும், இருதயமோ பிளப்பதுபோலிருக்கும்; ஆகாயமார்க்கத்தினின்றும் வீழ்வதுபோலவும், குப்பைகளையடித்துக்கொண்டு வருங்காற்றிலகப்பட்டுக்கொண்டு துன்புறுவது போலவும், வேகமாகவோடுந் தேரிலோடியேறுவது போலவும், பனிச்சிலை போலும் கரையத் தொடங்கியது போலவுங் காண்பன்; தான் படுஞ் சமுசார துக்கத்தை விஸ்தாரமாகச் சொல்லிக்கொண்டிருப்பன், பந்துக்களைத் தீண்டாதவன்போலவும், கவண்கல்லினாலே யடிபட்டுச் சுழல்பவன்போலவும், காற்று யந்திரத்திலகப்பட் டவதிப்படுபவன்போலவும் துன்புறுவன். சுழலும்யந்திரத்திற் சுழல்வதேபோலவும், கயற்றிற்கட்டியிழுப்பதேபோலவும்,நீர்ச்சுழற்சியிற் சுழல்வதேபோலவும், சஸ்திரயந்திரத்திற் சமைவதேபோலவும் காண்பன். சஞ்சரிக்கும் மேகமாருதங்களிலேறிவாரிப் பிரவாகத்தோடு கடலில் வீழ்வதேபோலவும், துரும்புக்குச் சமானமாய்த் தத்தளிப்பதேபோலவும் அனந்தககனத்திலும் குழிகளிலும் சக்கிர ஆவர்த்தத்திலும் வீழ்வதேபோலவும், பூமிவிபரீததசையை யனுபவித்துக் கடற்போலனவரதம் வீழ்ந்துகொண்டிருப்பதாகவும் காண்பன். எப்பக்கங்களிலும் எழுவதுபோலவும் எப்பொழுதும் மாறிவிழுவதுபோலவும், பெருமூச்சின் றொனியைக்கேட்டுச் சுழன்றும், சர்வேந்திரியங்களும் நிறையப் புண்பட்டிருப்பது

போலவும் உழல்வன். அவனுக்கு மூர்ச்சையானது உண்டானபோது விழி முதலனயாவும் உபரதியையடைந்துவிடும், இவ்வண்ண மரிப்பவனுக்குச் சர்வ இந்திரியவுணர்வுகளும் முறையாக இருண்டுமலினத் தன்மையை யடையா நிற்கும், அது சூரியன் அஸ்தமனமானவுடன் மசமசவெனத் திசைகளிருப்பன போன்றிருக்கும்; முன்னும் பின்னுமியாதொன்று மறியான் நினைவுயாவுங் குறுகிவரும் அப்போது பின்வருவதாய சந்தியினந்தத்தில் அஷ்டதிக்கிலும் திருஷ்டி நஷ்டமாவதுபோன்றிருக்கும்; மிகுந்த மோகத்தினுலே மனக்கற்பனைச் சாமர்த்தியமெல்லாங் கெட்டொழியும், ஒழியவே அவிவேகத்தினுலே பெருமோகத்தில் மூழ்கிக்கிடப்பன்; சிறிது மூர்ச்சையை யடைகின்றபோது பிராணன் அங்கங்களைத் தாங்கமாட்டாது, பிராணனை யசைக்கமுடியாத போது பெருமூர்ச்சையை மிகவுமடைவன். அன்னியோன்னியம் புஷ்டியை யடைந்த சொரூபந்தெரியாமை விடயவாதனைகள் வேறுவிதமாகத் தோற்றப்பட்டவைகள் என்பவற்ருற் சந்துக்கள் கற்றகைமையை யடைந்திடும், சர்க்கத்தின் முதலிலிருந்தே இவ்வண்ணம் நியதமாக யாவுமிருக்கின்றன. துயர், விமோகம், மூர்ச்சாந்தம், மயக்கம், வியாதி, யறிவின்மை, முதலவற்றைத் தேகம், தலை கைகால் குகியம் நாபி யிருதயமுதலிய அஷ்டாங்கங்களை யுடைத்தாயிருந்தும் யாதின்பொருட் டடைகின்றதென்றுதெளிந்த லீலைகேட்ப அதற்கு ஸ்ரீதேவி யருளுவதாவது:— ஹேகுமாரியே ! கிரியாசக்திப் பிரதானமாகிய ஈசுரரால் கூறப்படும் வடிவச்சங்கற்ப லக்ஷணகருமம் இனிது விதிக்கப்பட்டுளது சர்க்காதியில், யாது எச்சமயத்தில் பாலியத்திலாதல் யவ்வனத்திலாதல் விருத்த அவஸ்தையிலாதல் இதுகாலம் வரைபோக்கியமித் தகையதுக்கம் எனதபின்ன ஜீவனுக்குண்டாகுக என்பதாகவே தனது சங்கற்பசுபாவஜமே யாயசித்த பரிகற்பிததருக்கொடிகள் போலும் சித்தவிலாசத்தினின்று முண்டாயதுயரத்தைச் சுயமாகவே ஜீவபாவத்தால் உபாதியின்கண்ணே இனிது புகுந்துபுசிக்கும் வேறுகாரணம் கிடையாது. கேட்டதைக்கூறினும்.பிரகிருதத்தைக் கேட்டி! நாடிகள் மிகத் தப்தபித்தாதிரச பூரிதத்தன்மையாணே சஞ்சலன வயத்தால் தனது சங்கோச விகாசங்களால் அயின்ற அன்னபானரசத்தைவிடமமாகக் கவர்கின்றன, கவரும்போது சமானவாயுவானது தனது அயின்ற அன்னபானுதி சமீகரண ஸ்திதியை விடுகின்றது. நாடித்துவாரங்களில் நுழைந்த வாயுவானவை வெளியேருமல் வெளிப்போந்தன புகாதபோது நாடி வியாபாரவுபரமமாகவே ஜடாடித்தன்மை யுண்மையின் விழிமுதலியவை யசையாமையின் ஸ்மிருதியே யுள்ளேபவிக்கும், இந்திரிய சம்பந்த ஞானம்பவியாதாம். அந்நாடி விதுரத்தகைமையும் பிராணசஞ்சாரத்தடையால் மரணத்திலேதுவாம்,அபானன்தேகத்திற்புகாதேயாம்,பிராணனும் முகநாசிகைகளினின்றும் வெளிப்போகாதாம், அக்கால் அவசியம் லிங்கமானது வெளிக்கிளம்பலின் மரித்தவன் என்றே சொல்லப்படுவன், சரீரநாடிவிதுரத்தகைமையு முண்டாம். அதன் கண்ணும் பழையசிற் சங்கற்ப ரூபநியதியே காரணமாம், இத்துணைக்

கால அளவில் என்னுல் நாசமுறத்தக்கது என்னும் பழைய சங்கற்பவதி சம்வித் அத்தகைய நியதியாற் பிரேதிக்கப்பட்டதாகி மிருதியை யடையும். அந்த நியதியினது நாசமாகவே ஜகத்விவஸ்தையானது போய்விடுமாலோ வெனின்? போகாதாம், இத்தகைய என்னுல் இங்கு இவ்வாறு எய்தத்தக்கது என்பது முதலிய சர்க்கஜன்னிய உணர்வு விரைக்கலேயழிவை யொருகாலத்தும் அடையாதாம், சத்தியசங்கற்ப சம்வித்தாகிய பீஜகலே அச்சமஸ்காரவதி மாயையானது ஒருகாலத்திலேயும் மடிவதில்லே மோக்ஷத்தின் காலத்தோடு கூடவே நீங்கிவிடும். அவித்தியாசம் பந்தஜீவசம் வித்தின் சொருப பரியாலோசனே செய்தபோதினும் மோக்ஷபரியந்தம் ஜன்மமரணுதி நீங்காவாம், சம்வித்துவேதனம் என்னுஞ் சுபாவம் கெடாததேயாகும், ஆகவே இயற்கையுணர்விற்கு அன்னிய மரணஜன்மங்களின்றும். சமுசாரத்திலிருக்குஞ் சீவசம்வித்தின் பிரவாகம் பேசக்கேட்டி, நதியின் கண்ணே நீர் சிலபாற்களங்கத்தோடுகூடி யிருக்கும், சில பாலோ அதிநிர்மலமாயிருக்கும் அஃதொப்ப இச்சேதனமும் சில பாற் சௌமியமாயும் சிலபாலோஜீவதருமராகத் துவேஷாதிகளங்கத்தோடு கூடியும் இருக்கும். தீர்க்கமாயதூர்வை முதலிய கொடிகளின் முடிச்சுகள் இடையிடையில் இலங்குவனபோலச் சேதனசத்தைக்குச் சனனமரணங்களிலங்கும்; இவ்வியாவுமே அவித்தியாதிருஷ்டியினுலே யாமன்றிப் பாரமார்த்திகதிருஷ்டியினுலாகாவாம், "இறப்பது மறிவுதானிலதே பிறப்பதும்" என்பதாதி சுருதியினுனே, சேதனபுருடன் எங்கும் பிறப்பது மின்றும், இறப்பதுமின்றும் சொப்பன சம்பிரமம்போலக் கேவலம் மயலாலாயவிதனேக்காணும் மரணமற்ற தருமத்தன்மை யதற்கு ஊகத்தாலும் கூடும். புருடன் அறிவுமாத்திரம் அவன் எக்கால் எங்கே நசிப்பன், நசியான், அறிவினும் வேறேபுருடன் என்னும் பக்ஷத்தில், வேறு என்றேகமே புருடனு, அல்லது பிராணனு, அல்லது இந்திரியங்களா, அல்லது மனமா அல்லது புத்தியா, அல்லது அகங்கார சித்தங்களா, அல்லது அந்த அந்த அதிஷ்டாத்ருதேவதைகளா, அல்லது அவித்தையா? எல்லாப் பக்கங்களிலுமே ஜடங்களால் புருடகாரியப் பிரகாச அதீன சர்வவிவகாரநிர்வாகங்கூடாமையின் எஞ்சியதாகச் சேதனமாத்திரமே புருடன் என்னும் பக்கமே திரமாம். சேதனத்தின் மரணம் சித்திக்கமாட்டாதாம், சாக்ஷியில்லாத மரணம் சித்தியாதன்றே, இவ்வனுதி சமுசாரத்தில் இதுகாறும் அறிவிறந்ததெனக் கண்டது யாவர்? இவ்வாறே அம்மரணம் என்றே விநாசமா தேகாந்தர அடைவா? முதலதினும் சேதனத்திற்கு நாசமெங்ஙன்? தானு அன்னியத்தானு ஆதியதாகாதாம், தன்னுன் மாவின்கண்ணே விரோதமின்மையின், அசங்கத்திற்கு அன்னியத்தால் அஃதடைவிலாமையின், இரண்டாவதே லோலக்ஷந்தேகங்களழிந்தபோதினும் சேதனம் க்ஷயமில்லாமலே திதிபெறும், அதிஷ்டத்தின் அடைவினுனும் சேதனமரணமாகாதாம், தேகந்தோறும் அறிவுபிறிவதில் அளவை யிலாமையின் "ஒரே தேவன் சர்வபூதங்களிலுங் கூடன்" என்பதாதி சுருதியினுனே ஒரே அச்சேதனமானது மரிக்குமாயின் அதனதீனமா யிருப்

பையும் விளக்கத்தையும் பெறும் சமஷ்டி வியஷ்டிசித்தம் மரியாததாகுமா வென்? அது மரித்துப்போமாயின் நிருபாதானமானவுலகம் இருப்பதியையா மையின் ஒன்றன் இறவாகவே எல்லாப்பாவ விறவுதோஷ முண்டாகாதா வென்? ஆயின்றேற்றப்படுஞ் சீவன மரணங்கள் யாவையோவெனின்? வாசனை மாத்திரவைச் சித்திரியமாகச் சீவன் சுயம் அனுபவிக்கும் யாதோ அதற்கே ஜீவனமரணங்கள் என்னும் நாமங்கள் கற்பிக்கப்படும். இங்ஙனமாகவே யாதொன்றுமே மரிப்பதில்லை யாதொன்றுமே பிறப்பதில்லை வாசனைச் சுழிக் குழிகளில் ஜீவன் கேவலம் புரளுகின்றனன். அத்தியந்தமில்லா மையினுனே திருசியத்தின் வாசனை இல்லாததே யாமென்னும் விசாரத்தினுலே அபிமானங் கொண்டு திடதரமாய ஞாதாவாம் அந்தக்கரணுத்மா நசிக்கவே செய்யும். பவ பயத்தினுலே வைராக்கியாதி சாதனசம்பன்ன அதிகாரி ஜீவன் குருபூர்வகசிர வணுதி அப்பியாசங்களினுலே பிராந்தியினுலுதிதமாய ஜகத்பிரபந்தம் பரமார்த் தமாக உதிதமாகாததே யாகுமென நற்றத்துவதரிசனத்தாற் பார்த்து மூலங் கெடுதலின் அத்தியந்தம் உதிதமாகாத இருமை வாசனையோடுகூடி விமுத்த னுவன் என விமுக்த ஆத்மசொரூபமே மீண்டுண்மைப் பொருளாம் அய லொன்றுமன்றும்.

54-வது மரணவிசாரம் முற்றிற்று.

---

## 55-வது சம்சார மரணுவஸ்தை வருணனம்.

இப்போது ஜீவனுக்குச் சமுசாரகதி விசித்திரத் தகைமையும் சர்க்காதியி லிருந்து அவ்வாறே ஈசுரருக்கு அக்கரும அனுகுணஸ்திதியும் வருணிக்கபபடும். ஜந்துக்கள் மரிப்பதையும் பிறப்பதையும் முறையாக முன்னுரைத்த போதி னும் மீண்டும் விஸ்தாரமாக எனக்கு வைராக்கிய அதிசயத்தால் ஞானமானது வளருரும்பொருட்டு அனுக்கிரகஞ் செய்யவேண்டுமென்றுணர்ந்த லீலைகேட்ப அதற்கு ஸ்ரீதேவி யருளுவதாவது:— பிராணவாயுக்களின் சலனவியற்கை விருத்தமாய நிலைமையை யடைந்து பிரசாந்தியைப் பெற்று நாடிகளின் பிரவா கங்களற்றபோது ஜந்துக்களின் உணர்வுகள் அடங்கிவிடும்; வியஞ்சகமாய அந் தக்கரண வுபாதிவிலய மாதலின் சாமியமாமென்றறிதி; "இப் பூதங்களினின்று மெழுந்தே யிவற்றையே பின்னரொழியு மாறியற்றும், என்னும் சுருதியு மித னையே கூறுகின்றது. உண்மையாயோ எங்குமே சாந்தியுறுவதின்றும், "அவி நாசியாய அரேயிவ்வான்மா அழிவிலாத் தருமமமைந்ததேயாகும்'' என்னுஞ் சுருதியினுனே தூயதேயாயசேதனம் நித்தியம் உதிப்பதுமில்லை யொடுங்குவது மில்லை ஸ்தாவரத்திற் சங்கமத்தில் ஆகாயத்தில் சைலத்தில் அக்கினியில் காற்றி லிருக்கும் இவ்வாறுகவே தேகதருமமே மரணம் ஆன்மதருமமாகாதாம், கேவ லம் காற்றினற்றடையால் அசைவானது அற்றபோது தேகமிறந்ததென்று கூறப்படும் அக்காலிது ஜடப்பிணமென்று கூறப்படும். தேகமானது சவத் தன்மையை யடைந்தபோது, சரீரவாயுவானது தன்னுடைய பிரகிருதியாகிய

மகாவாயுத்தன்மையை யடைந்தபோது, பிராணனே தேஜசோடுகூடப் பிரஞ்ஞான்மாவின் கண்ணே லயமடைந்தபோது, உபாதியானது விலயமானபோது ஜீவனும் வாசனைகளோடு கூடவே பரமாத்ம பாவத்தில் நிலைபெறுவன், "செல் வாக்கிவனது மனத்திற்சேரும், செல்மனம் பிராணனிற் பிராணனும் தேயுவில் வல்லருந்தேயுவும் பரதேவதையிலாம்'' என்னுஞ் சுருதியினுனே, வாதனை விடுபட்ட சேதனமானது தனது ஆன்மதத்துவத்தில் நிலைபெறும். சுவாத்ம தத்துவத்தில் நிலைபெறுமாயின் முக்தன் பிரஹ்மமே யாவன் அன்றியிவன் ஜீவனுகானே யெனின்? மீள்பிறப்புவிரை வாசனையுடையவனுக்கு அதையுபாதியாயுடைமையின் சூக்குமமாய்ப் பரிச்சின்னமாயிருத்தலின் ஜீவனென்னும் பெயராம், வாஸ்தவமாகவோ ஜீவன் பிரஹ்மத்திற்கு அன்னியமாகக் கிடையாதாம், அதனுனே யதற்கு வாசனையின் வயத்தினுனே தன்னிடத்திலேயே பரலோக கமனுதியத்தியாசமாம், வாஸ்தவகமனுதியோ இன்ரும், இதுவிஷயத்தில் மண்டப ஆகாசத்தையே காணலாம், சவாகாரககனத்தின்கண் இத்துணை விசித்திரமும் உளதன்ரே. தேக மரணத்தானே விவகாரிகளினுலே பிரேதமென வழங்கப்படும், அசங்கத்தில் எங்ஙனம் வாசனையின்றிதியாதல் எனின்? சேதனமானது வாசனையோடு கலந்ததாய் சூக்குமதரபுஷ்ப ரேணுவிலேயே யிருக்கும் சுகந்தம், காற்ரே அதன்ருதாத்மியசம்சர்க்க அத்தியாசத்தால் நறுமணம் விரவி யிருக்குமாறிருக்கும். இப்பழைய தேகாதிதிருசியம் விட்டுத் தேகாந்தராதி தரிசனுந்தரத்தி லிருக்கும்போது அச்சீவன் கனுப் போலும் சங்கற்பம் போலும் சுயமாகவே தன் வாசனைமய கமனபரலோக அவ்விடத்திய போக்கியாதி நானாகிருதியாவன். அவ்வத்தியாசத்தையே முறையாகக் கூறுவாம், அதே பிரதேசத்தில் உள்ளே முற்பிறப்புப்போலும் நினைவுடையவனுவன் அக்காலத்திலேயே மிருதிமூர்ச்சையி னந்தத்தில் அன்னிய சரீரமுடையவனுகக் காண்பன். அவ்வற்பதரமரணப் பிரதேசத்தில் தேகாந்தர கற்பனை செய்வது பொருந்துமாயினும் அதிதூரஞ் செல்லுதலும் விஸ்தாரமான பரலோகாதிகளி லினிது புகுதலும் எங்ஙனங் கூடுமெனின்? விஸ்தாரமான கேவலம் ஆகாசமேகமாதல் ஆகாச பூதலங்களிரண்டாதல், சூரிய சந்திரர்களேடுகூடிய ஆகாயமாதல், பிரஹ்மாண்டகோடி லக்ஷமாதல் ஒன்ருகவே ஒரேகாலத்தில் உள்ளே புகுதுக வாயினும் ஆன்மாவின் கண்ணே அன்னிய சர்வப் பிரபஞ்சத்தினுடைய பொருத்த முளதேயாம், ஆன்மாவோ அனந்த மாதலினுலும் மாயையுமோ செய்யக்கூடாததைச் செய்விக்கும் ஆற்றலுடைய தாதலினுனும் என்றறிதி, இவ்வாருகவே ஆன்ம சொரூப பரியாலோசனையால் அற்பப் பிரதேசத்திலும் அயனுலகின் புகுதல் கூறப்பெற்றதே யல்லாமல் அந்தப் பிரதேசமாத்திரத்தை யபேக்ஷித்தன்ரும். அந்தப் பிரதேசத்தில் மார்க்க பரலோகாதிகளிருக்குமாயின் அன்னியர்கட்கு மேன் புலப்படக்கூடாதெனின் ? ஆகாச பூதலங்களிரண்டு ஆகாச சூரிய சந்திரர் முதலிய வற்ரேடுற்ற சர்வஜகத்துமே இறந்த புருடனது ஆன்மாவின் கண்ணே மேககடம்போலப் புஷ்டமாம், அன்னிய

ரது திருஷ்டியினுனே கேவலம் வீட்டாகாசமே யுளதாம், தரிசன அடைவின்
ரும், கதிபேதங்களைக் கூறும் பொருட்டுப் பிரேத விபாகங்களைக் கேட்டி !
பிரேதங்கள் ஆறுவகை யினவாகும் அவற்றின் வேற்றுமை யிதுவாம், சாமா
னிய பாபிகளெனவும், மத்திய பாபிகளெனவும், தூலபாபிக ளெனவுமாவர்
கள், சமானிய தருமர்களெனவும் மத்தியமதருமர்க ளெனவும் உத்தமதருமர்க
ளெனவு மாவர்கள், இவர்களுக்குள்ளே சிலது விசேடமாம், அஃதென்னெ
னின், சில இருபேதங்களாம், சிறிதுகாலம் சாமானிய பாபி அதன் பின்பு
மத்யமபாபியா யேனும் அதிபாபியாயேனும் ஆம் கூறியமுறையானே சில்
மூவிதமாகவும் முறை யாகவேனும் முறை மாறியேனும் வேற்றுமைகளாம்.
அவற்றுள் முதலில் மூன்ருவதன் கதிகேட்டி ! சிலமகாபாதக முடையன, சம்
வற்சரமாத்திரம் ஸ்மிருதி மூர்ச்சையினவாய்ச் சில மூடங்கள் உள்ளே
பாஷாண இருதய வுவமையதாக அனுபவிக்கும், வாசனைவயிற்றினின்று
முண்டாய நரக சம்பந்தமான அக்ஷய துயரத்தைப்பின் அதிககாலம் அனுப
வித்து யாதோ ஒருகாலத்திலுணரும். அநேக ஜன்மங்கள் பெரும்பெரும் துய
ரங்கள் வேறுவேறு வகையி லனுபவித்தனுபவித்து இச்சமுசார சொப்பன சம்
பிரமத்தில்யாதோ ஒருகாலத்தில் மகாபாபபல உபரமமெய்தா நிற்கும். "பாவ
நெறியிற்படர்ந்து பயின்றவ, ராவகீழா மிங்கழி பிறப்படைவர், நீவுநாய்சூக
ரசீசரென்பவாய்" எனச் சுருதியு மிதனையறைகின்றது. அன்னிய திருஷ்டியி
னுனே ஒருகணத்தில் இருதயத்தின் கண்ணிருக்கும் விருக்ஷாதித் தன்மை
யையே அவரனுபவிப்பர், மீண்டும் நரகத்தில் தங்கள் வாதனையை யனுசரித்து
அநேகந் துயரங்களை யனுபவிப்பர் பின் நீள்காலம் பூதலத்தில் அநேகயோ
நிகளிற் ருேற்றுவர். இரண்டாவதன் கதியைக்கேட்டி ! மத்தியம பாவமுடை
யது மிருதிமோகத்தின் பின்னர்ச் சிலைச் சடரம்போல மூர்ச்சையைச் சிறிது
காலங்காணும். பின்னர்ச் சிறிது காலத்திலேனும் பிறர் திருஷ்டிகொண்டு
அக்காலத்திலேனும் உணர்ந்து திர்யக்காதி முறையால் யோநிகளை யனுபவித்
துச் சமுசாரத்தை யடையும். முதலிதன் கதியைக்கேட்டி ! ஒவ்வொரு சாமா
னிய பாதகமுடையது தன் வாசனையை யனுசரித்துக் கெடுதலில்லாத மனு
டாதி சரீரங்களை யடைந்து இறந்தவுடனே யனுபவிக்கும். அதேகணத்தில்
கனுப்போலவும் சங்கற்பம் போலவும் அத்தகைமைத்தாயனுபவிக்கும் அத
னது ஸ்மிருதி முன்மொழிந்த முறையே யுண்டாம். ஆருவதடையுங் கதியைக்
கேட்டி ! உத்தமமான மகாபுண்ணிய முடைய வரமிருதி மோகத்தின் பின்
னர்ச் சுவர்க்க வித்யாதர புரங்களைப் புண்ணிய வாசனைகளைக்கிளப்பும் ஸ்மிரு
தியினுனே யனுபவிக்கும், மகாபுண்ணிய போகத்தின் பின்னர் அற்பமான
பாவஞ் சம்பவித் திருக்குமாளுல் அதற்குத்தக்கபலத்தை யனுபவிக்கும், இலா
விருத கிம்புருடாதி வருடங்களில் அநேகமானதன் பயன்களை யனுபவித்து
மானுடலோகத்தில் சற்சனர்கள் வாழுமிடத்தில் ஐசுவரியத்தோடு கூடிய வீட்
டில் ஜனிக்கும், ஐந்தாவதன் கதியைக்கேட்டி! மத்யமதருமமுடையவர் மிருதி

மோகத்தின் பின்னர் விண்வாயுவினாலே சூழப்பெற்றவர்களாய் ஓடதிகளும் இலைகளும் நிறைந்திராநின்ற நந்தன சைத்ரரதாதி வனத்தை கிந்நர கிம்புருட யக்ஷாதி சரீரத்தினாலே சென்றடைவர். அழகியதனது கருமபலத்தைப் புசித்து முடிவில் வாயுவிருஷ்டியாதி வாயிலாகப் பூமியின் கண்ணே நெற்கோதுமை முதலியவற்றிற் புகுந்து அன்னவடிவமாகிப் பிராஹ்மணாதி மனுடரின் இருதயம் புகுந்து வீரியஞ்சிந்த அவ்வாயிலாகப் பெண்களின் கருப்பத்தில் நிலைபெறும்; ஜாதிமுறைக்குத் தக்கபடியாம், "யாவரிங் கறம்புரிய பிற்சியராவர், ஆவவர் அறத்தினர் தம்வயினடைவர், மேவுவர் மறையவர் மரபினையேனும், மேவுவர் மன்னவர் மரபினையேனும், மேவுவர் வணிகர் தம்மரபினையேனும்," எனமறையு மறைகின்றது. இதனானே நான்காவதற்கும்கதிகூறிய வகையேயென எண்ணத் தக்கதாம், தம்வாசனையினனுசாரமாக ஏவப்பெற்று இந்த விவஸ்திதியை மூர்ச்சையின் அந்தத்தில் உள்ளே முறையினாதல் முறையின்றியாதல் அநுபவிக்கும். இப்போது மரணந்தொடங்கி அவற்றின் ஆரோபக்கிரமத்தைச் சிறப்பாகக் கேட்டி! ஆதியில் இறந்தேம் யாமெனவுணர்வர் அதன் பின்றகனஞ்செய்து மற்றைய கிருத்தியங்களைச் செய்முறையே அடைவுற்ற சரீரமென நினைவர் பந்து பிண்டாதி தானங்களை யுடையேமெனவறிவர் பின் இவர்கள் யமபடர்கள், காலபாசத்தோடு கூடியவர்கள், இந்த யமபடர்களானே முறையே மார்க்கசம்பந்தமான சிராத்தங்களாற்றர்ப் பிக்கப்பட்டு ஒருவருடத்தில் கொண்டு செலுத்தப்பட்டு யமபுரத்தை யடைவன். உத்தம புண்ணியவான் யான் ஆதலின் மிகவுமழகிய உத்யானங்களும் மீண்டு மீண்டுஞ் சோபனவிமானங்களும் திவ்வியங்களாக என்னுடைய பெரும் புண்ணியத்தாற் கிடைத் திருக்கின்றன. மிக்க பாவமுடையவன் யானாதலின், பனிகளும் முட்கணிறைந்தகுழிகளும் அசிபத்திரவனங்களும் என்னுடைய பாவமிகுதியால் வந்தடைந்தன மத்தியம புண்ணியவான், சீதளமானபச்சைப் புற்கணிறைந்து கால்கள் நடப்பதற்கு மிகவும் சுகமாயுள்ள மார்க்கங்களிவை யென்னுடையன நெருங்கிய நிழலோடு கூடியசோலைக்குள் வாபிகள் எதிரில் அழகாக நமக்கிருக்கின்றன என்பன். இதோயான் இந்த யமபுரத்தை யடைந்துளேன் சருவலோகப் பிரசித்தமாய பூதரக்ஷக யமதருமர் இதோ இருக்கின்றார் இத்தருமாது சபையில் சித்திரகுப்தாதிகளானே என்னுடைய கருமவிசாரம் செய்யப்படுகின்ற தென்றனுபவிப்பன். இவ்விசார உபக்கிரமம் ஒவ்வொருவனுக்குங் கனவைப்போல வேறுவேறாதம், இச்சமுசாரமகாவனம் பெரிதாதலின் இவ்வண்ணந் தனித்தனியே யாகிக்கொண்டிருக்கும், எவ்வாறு பிரதீதயாகின்றனவோ அவ்வாறே நிலைபெற்றுள்ளன எல்லாப் பொருள்களும் உண்மையாகவே யிலங்குகின்றன அவற்றினாசாரங்களானும் அருத்தக் கிரியைகளானும் விளங்கிக் கொண்டிருக்கின்றன. சொருபதிருஷ்டியினானே நோக்கினோ தன்னை ப்பார்க்கினும் ஒருசிறிதும் வேறாக இல்லவேயில்லை. ஆகாயத்திற்போல நிர்ச்சொருபத்தில் இருக்கப்பட்ட பிரபஞ்சமானது தேசகாலாதி தீர்க்கத்தோடும் விளங்

கிக்கொண் டிருந்தபோதினும் ஒரு சிறிதுங்கிடையாது, மற்றுசர்வாரோப
சூனிய ஆத்மாவேயாம் எனவுணரலாம் யான்றருமரால் தற்கருமபயன் புசிப்
பதில் இத்திசையில் ஆணையிடப்பெற்று விரைவிற் சுபமபசுவர்க்கத்தை யடை
யாநிற்பன், இவ்வியமசபையின் நின்றும் நரகமே செல்லாநிற்பன் யமதரும
ரால் குறிப்பிக்கப்பட்ட இச்சொர்க்கம் என்னாலனுபவிக்கப்பட்டது, அல்லது
நரகம் என்னாலிது அனுபவிக்கப் பட்டது, யமதருமராற் குறிப்பிக்கப்பட்ட
பசுவாதி யோனிகளிவை பிரத்தியக்ஷமா யென்னாற் புசிக்கப்பட்டன, யான்
மனுட சமுசாரத்தின் கண்ணே மீண்டு மிப்போது ஜனிப்பேன். அம்முறை
யாவது, இது நென்முளை, இதாகமயினுண்டானேன், சாண்டம் பத்திரம் கர்ப்
பம் மஞ்சரி முறையாற் பலமாகியானிருக்கின்றேன், சுவர்க்கநரக நானாயோனி
போகம்போல நென் முதலிய பாவமும் இவனுக்கனுபவ சித்தமாவெனின்?
அன்றும், பிற்காலத்தில் வரும் மனுடசரீரத்தில் சுருதிபுராணாதிஜன்னிய நல்லு
ணர்வால் உணரப் பெற்றவனாவன். அக்காலிவன் ஏன்நென் முதலவற்றின்றன்
மையை யனுபவிக்க வில்லையெனின், சரீரமில்லாமையின் உட்கரணமும்வெளிக்
கரணமும் மிகமூர்ச்சையடைந் திருந்தும் இவ்வண்ணமே யிவன்றந்தையினது
தேகத்தில் உண்ட வுணவுவாயிலாகப் புகுந்து வீரியத்தன்மையை யடைகின்
றது, அவ்வீரியமானது யோனிவயிலாக வுள்ளேபுகுந்து தாயினிடத்திற் கருப்
பத்தை யடையும் அக்கருப்பம் உலகத்தி லுண்டாம் முற்கரும அனுசாரத்
தின்படி சுகசௌபாக்கிய ஆரோக்கிய நல்லொழுக்கங்களோடு கூடியபவித்திர
னாக வேனும் இவற்றிற்கு மாறான அபவித்திரனாகவேனும் லளித ஆகிருதி
யோடு கூடிய பாலகனாக ஆவன்; அதன் பின்னர்ச் சந்திரனைப்போல வளர்தல்
குறைதலாம் தருமத்தை யுடையவனாகவும் சஞ்சலனாகவும் காந்தனாகவும் அனு
பவிப்பன், மன்மத உன்முகமாய் யவ்வனத்தை யடைவன் பதுமமுகத்திற்
பனியிடி வீழ்ந்ததேபோல அதன்பின் ஜரையையடைவன். அதன் பின்னே
வியாதிமரணம் மீண்டும் மரணமூர்ச்சையாம், மீண்டும் உறவினராற் கொடுக்
கப்பட்ட மேலுற்றதேகி சம்பந்த பிண்டங்களினாலே தேகபரிக்கிரகம் கன
வைப்போலவரும், மீண்டும் யமவுலகையடைவன் மீண்டுமே சுழலும்முறையே
அநேக மநேகமாய் நானாயோனிகளுள்ளே புகுத்து உதித்து உதித்து அநேகத்
தை யனுபவிப்பன், இவ்வண்ணம் மேலுங் கீழுமாய் மிகவேகமாய்ச் சுழன்று
சுழன்று மோக்ஷபரியந்தம் மீண்டும் மீண்டும் விண்ணுருவானவன் விண்ணின்
கண்ணே யனுபவிப்பன். துவம்பதார்த்தமாகிய ஜீவனிடத்தில் மயலானது
சம்பவித்தலின் இவ்வத்தியாரோபக் கிரமம் உளதாகுக, தற்பதார்த்தமாகிய
ஈசுரரிடத்திலோ மயக்கமானது கூடாமையின் எங்ஙனம் உலகின் அத்தியா
ரோபக்கிரமம் என வதன் பரிசுத்தி ஞானப்பொருட்டு லீலைகேட்பதாவது:—
ஹேதேவியே ! ஆதிசர்க்கத்தில் இம்மயக்கம் பிரவிருத்திக்கும் விதத்தையு
ணர்வுவளர்தற் பொருட்டுத் தயையினாலே மீண்டும் அருள்செய்தல்வேண்டும்
எனக்கேட்ட ஸ்ரீதேவி கூறுவதாவது:—ஈசுரருக்குப் பிராந்தியானாலே ஜகத்

தின் அத்தியாரோபமின்றும், மற்றே, சுயம்பரமார்த்த கனரூபதத்திற்கே! சுயம்மாயா அத்தியாரோபித ரூபத்தால் விவர்த்தமேயாகும், மூடப்படாத தன்னறிவில் அத்தியஸ்தத் தோற்றமுமில்லை மயக்கமுமில்லை, மற்றே, சத்தியத் தன்மையானே அசத்தியத் தோற்றமாம், ஈசுரருக்கு, எக்காலத்திலுமே முற்றறிவுண்மையான் எல்லாப் பொருள்களும் தோற்றுமெனினும், வடிவநழுவாமை யுணர்வுபாதித மாதலின் ஜகத்தின்கண்ணே, மெய்ம்மைத் தோற்றமின்றுமென யாதொரு தோடமுமில்லையா மெனக்கருதித் தற்பதார்த்ததில் அத்தியாரோபங் கூறத்தொடங்கல்:—பர்வதங்க ளெல்லாம் பரமார்த்த கனவடிவம், தருக்களும் பரமார்த்த கனவடிவம், பிருதிவியும் பரமார்த்த கனவடிவம், ஆகாயமும் பரமார்த்தகனவடிவம். சர்வான்மகமா யிருத்தலினாலே அவ்வறிவீசர் எதனாலவ்வாறு விவர்த்தமாவரோ பரமாகாச சுத்தாத்மா ஆண்டாண்டு அவ்வாறு நம்மனோரது திருஷ்டியினானேயாம் தன் திருஷ்டியினானேயின்றும் அவ்வீசுரரே சொப்பனத்தைக் கற்பிக்கும் புருஷரியாயத்தானே ஜீவசமஷ்டி யாத்மாவாய ஆதிப் பிரஜாபதியாகிச் சிருஷ்டி சங்கற்பவடிவமாய் சர்க்காதியில் பூமுதலியலோகவடிவமாய் விவர்த்தமாய் வெளியாக விளங்குதல் போலவே இன்றும் அத்தகையசங்கற்பசத்தையினாலே ஸ்திதியாம் விவஸ்தை ஸ்திதமாம். சங்கற்பத்தாலுளதாய ஜகத்சத்தையினும் இச்சகத்சத்தைவேறும் என்னும்பக்ஷத்திலும் அதன்பிரதிபிம்ப துல்லியத்தன்மை யுண்மையின் மித்தையேயாகும், முதலிற் சங்கற்பத்தாலுண்டாய் வெளிப்பட்டரூபமாகிய விவர்த்தம் பதார்த்தங்களின் பிம்பத்தையுடையதேயாம், இதினின்றும் பிரதி பிம்பிதமியாதோ அது இன்றும் நன்னிலை பெற்றுளது. ஆண்டுதாவரஜங்கமவிபாகத்தில் நிமித்தத்தைக்கேட்டி ! தேகங்களின்று வாரமுடைய விடங்களில் வாயுவானது புகுமாயின் தேகத்தை யசைத்துக்கொண் டிருக்கும் அதனாற் சீவிக்கின்றனன் எனப்படுவன் ; சர்க்கத்தின் ஆதியில் இவ்வண்ணமே ஜங்கமங்களினிந்தஸ்திதியானது நிலைபெற்றுளது, சேதனமாயினும் அதனால் இவ்விருக்ஷாதிகள் சேஷ்டையற்றனவேயாம். இவ்வண்ணம் சேதன சேதன விபாகிக கற்பனையிலும் நிமித்தத்தைக் கேட்டி ! இச்சிதம்பரமாய ஈசுரரே புத்தியுபாதிருத்திராவச் சேதத்தாலாதல் பிரதிபிம்பிப்பதாலாதல் ஆவிர்ப்பூதமாய அங்கிசம் போன்ற உபாதியாலாம் ஜீவவிபாகத்தைச் செய்கின்றனர், அவ்வங்கிசமே சேதனமாகும், சேஷமோ அத்தியாரோபிதமாம் அவைசேதனமாகாவாம்மற்றே அசேதனமேயாம், அதற்குப்புத்தி வாயிலாகவே ஸ்தூல அணுப்பிரவேசமும் ஆண்டுக்கண் முதலிய அடைவால் வெளிவிவகாரத் தகுதியுமாம், அம்மதியிற் புகுந்தசிதாகாசம், அப்புத்தியினது நிமித்தத்தால் நரசரீராதிரூபமாகிய இரண்டாவது சோபாதி வடிவநகரம் புகுந்துதானேறி யிராகின்ற மதியை விழி முதலிய கோளகஸ்தானம் அடையுமாறு செய்வித்து விழி முதலியவற்றூற் சனித்தமதி விருத்தி வாயிலாக வெளிப்பொருள்களை விளக்கும் ; விழி முதலியவையே நேரேசித்தில் அத்தியஸ்தமாதலின் அறிவுண்மையின் ஜீவ

பூதமாய்ச்சரீரத்தை யதிஷ்டித்து விவகரிக்கலாமே புத்தியுபாதியாகவுடைய
ஜீவகற்பனை யேன் எனின்? இந்திரியக்கூட்டம் சுயமாகவே ஜீவசேதன
வடிவாகாதாம் என்னை, சித்தின் கண்ணே அத்தியாரோபமாத்திரத்தினாலேயே
சிறிதுஞ்சீவியாதாம், அவ்வாருகுமாயின் குடமுதலியவற்றிற்கும் ஜீவனப்பிர
சங்கம் வருமன்றோ! மதிக்கே ஜீவ உபாதித்தகைமை அன்னியத்தித்திற்கின்
ளும் என நியமமாயினோ சர்வவஸ்து சக்தியையும் விவஸ்தை செய்யும் சிற்சங்
கற்பமேயேதுவாம், அவ்வாறே ஆகாசம் சூனியத்தன்மைச் சக்தியுடையதாம்,
பூமி பூமித்தன்மையானே சருவதாரணவாற்றலினாலே நிலையாம், நீரோ யாவற்
றையும் தூய்மை செய்யுஞ் சக்தியோடிருக்கும், யாது எவ்வாறு சங்கற்பிக்
கின்றதோ இஷ்டப்படி அது அவ்வாறேயாயவடிவத்தை யுணர்கின்றதேயாம்,
இவ்வண்ணம் சர்வசரீரத்தோடு மிருக்கும், ஜங்கமத்தன்மையானே ஜங்கமமாக
வும், ஸ்தாவரத்தன்மையானே ஸ்தாவரமாயும், சர்வான்மா சற்கற்பித்துக்
கொண்டு அக்காலத்திலேயே அவ்வாறே நிவிருத்தமா யிருக்கும். எவ்வாறு
யாவனசித்தமோ அதுவும் பின் றொடர்ந்தே யிருக்கும், ஆதலால் எச்சங்கம
முளதோ அதுதன்னுணர்வு வடிவத்ததாம், அதனாலுணரப் பெறும், ஆகலின்
அஃதுடையதாம், அதுவே இன்றும் நன்னிலை பெற்றுளது; இனிஸ்தாவரத்
தன்மையானே எவ்விருக்ஷாதி நாமங்களானே அறியப் பெறுகின்றனவோ
அவை யிப்போதும் ஜடங்களாகவே நிலை பெற்றுள்ளனவாம், சிலை தருதிரு
ணாதிகளெனயாவும் பிரசித்தமாம். இவ்வண்ணம் தத்துவம் பதார்த்தங்க
ளிடத்தில் அத்தியாரோ பிதபேதக்கூட்டத்தை யபவாதித்துக் கூறக்கேட்டி!
ஜாட்டியமாயவை தனித்ததொரு சிறிது மிலவாம், சித்விசிஷ்டமாய ஜடமுமில
தாம், உற்பத்தியாதியிற் பதார்த்தக்கூட்டங்களுள் வேற்றுமை கிடையாதாம்,
திதிநாசங்களிலும் அவ்வாறேயாம், அவற்றில் வேற்றுமை யெங்ஙனும், அசத்
தானது வேற்றுமைக் கிடமாகாதன்றோ; ஆயினது அநுகதமாயசத்துவத்து
வின் கண்ணேயாகுகவே யெனின், ஆகாதாம். சத்தாசாமானிய மாத்திரந்
தானே யுளது அதிலெங்ஙன் வேற்றுமை யாதல். சிதேகர சமேயாவுமாயின்
ஆண்டே அதற்கு விருத்த ஜாட்டிய ரூபநாமபேதானுபவம் யாவருக்கும் எங்
ஙனமாம் எனின்? அவ்வவ்வாந்தரப்பிரத்தியக் குணர்வின் கண்ணே அவித்தை
யினாலே அத்தியசிக்கப்பட்ட புத்தியாலுண்டாய கற்பனை வயத்தினானேயா
மென்பது இரகசியம், முதலில் ஸ்தாவரங்களிலேயே காட்டுவாம், தருக்களின்
சைலங்களின் உள்ளே யுள்ளதன்னுணர்வோடு கூடியபுத்தியாதிகளானே அத்
தரு முதலியவற்றிற்கு ஜாட்டியபேத நாமரூபங்கள் கற்பிக்கப்பட்டனவேயாம்,
உண்மையாகவோ இன்றும், இதுபரமார்த்த நிலைமையாம். கூறிய பொருளையே
மேலும் வெளிப்படையாகக் கூறுவோமாயின் தாவரத்துள்ளிருக்கும் உபாதி
யாலாகிய பேதங்களோடு கூடிய பிரத்தியக்குச்சைதன்யங்கள் அந்தஸ்தாவ
ராதி புத்திக்கும். ஸ்தாவரம் யான் என்பதாதி விவஸ்தை பண்ணப்பட்ட ரூபத்
தானே நிலைபெற்றிருத்தலின் சரங்களினின்றும் அன்னியங்கள் என்னும்

பெயர் தனக்கும், அபிமானத்திற்கும் விடயபூதங்களாக விருந்து கொண்டு அன்னியங்களான விருக்ஷங்கள் பர்வதங்கள் என்பனவாதி சப்தசங்கேதங்களா யிருந்து வாழும், இவ்வண்ணம் ஜங்கமங்களிலும் கூறப்படு மிரகசியமிது வாம், கிருமிகீடபதங்களினுடைய உள்ளே எத்தன்சேதனங்களுள்ளனவோ அவையே அவற்றின் புத்தியாதிகளாகச் சப்தார்த்த பூதங்களாகி யவ்வவ் வன்னியங்களாய்த் தோற்றுகின்றன. சித்தின் கண்ணே கூறப்படும் ஜாட்டிய கற்பனையையும் கூறிய பொருளையும் கொள்ளுந் திருஷ்டாந்ததங்கேட்டி! வட்கடற்றீரத்திலிருக்கும் ஜனசமுதாயம் தென்கடற்றீரத்திலிருக்கும் ஜனங் களைத் தம் முணர்வினுமயலாக ஒரு சிறிதும் அறியாது. இத்திருஷ்டாந் தத்தை யனுசரித்து எல்லாத்தாவரஜங்கமங்களும் தமது பிரத்தியக்குச் சாக்ஷியினுடைய அனுபவத்தில் முடிவுற்றவைகளாய் அன்னியபுத்தி கற்பிதத்தை யறியாவாம், அதனுனே சமுதித விவகாரத்தின் கண்ணே பரஸ் பரசங்கேதத்தை யபேக்ஷிக்கின்றனவாம், யாவருமே தமது சங்கேத பரா யணர்களாய்ப் பரஸ்பரம் விவகரிப்பர். அதனுனே சத்துச்சித்துருபப் பிரஹ் மத்தின் கண்ணே அசத்துவ ஜாட்டிய வாயுவாகாசாதி கற்பனையும் பொருந் தும் என்பதையும் திருஷ்டாந்தத்தாற் காட்டுவாம், சிலையுள்ளிருப்பன வற் றின் வெளியிலிருப்பனவற்றின் வேதனம் இருப்பது போலவே பரஸ்பரம் உள்ளிருப்பனவாய மண்டூகங்களின் அசச்சடமுமிருக்கும். இத்திருஷ்டாந்தம் போலவே பிரளயகாலத்தில் மாயையினுள்ளே லயப்பட்ட சர்வான்மகமும் சர்வகதமுமாய சமஷ்டிசித்தமென்னும் ஜகத்தின்சூக்கும அவஸ்தைவடிவம், சர்வபிரத்தியக்கு வடிவமாய் ஞானவிண்ணேடு சேர்ந்து சர்க்க ஆதியில் யாது யாது எவ்வாறு எவ்வாறு நியமிக்கப்பெற்றதோ அது அது அவ்வாறு அவ் வாறே இன்றளவும் நிலைபெற்றுளதாம், அஃதென்னெனின்? வாயுவில் வைத்த சலனம் இன்றும் ஈண்டு நிலைபெற்றுளதன்றே. யாது அவகாசமாக நிலை பெறுத்தப்பட்டதோ அது ஆகாசமாம், அதன் கண்ணே அசைவுவடிவமான சர்வக்கிரியாசக்திருபக் காற்றுனதுளதாம், இங்ஙன் கூறிய இலக்கணம் வாய்ந்த வாயுவால் எல்லாவஸ்துக்களின் அசைவுகளாம், காய்ந்ததுரும்பு சருகுமுத லிய பதார்த்தங்களில் வாயுவினல் அசைவாதல் போலவாம். அதனுனே ஸ்தா வரஜங்கமங்களில் உண்மையாகச் சித்தசமத்தகைமை யிருந்தபோதினும் வாயு வாலாகப்பட்ட அசைவு அசைவின்மைகளால் விசேஷமாம், சித்தமோபர மார்த்தமாக ஸ்தாவரத்திலும் ஜங்கமத்திலுமிருக்கும், அசைவுகள் காற்றுக ளாலே ஜங்கமத்திலுண்டாம் ஸ்தாவரத்திலுண்டாகாவாம் இங்கியமத்திலும் பழையநியதியே காரணமாம், இங்ஙனம் பிராந்திமயமாய விசுவத்தில் உணர் வின் கிரணங்களாய பதார்த்தங்கள் ஆதிசர்க்கங்களில் எவ்வாறிருந்தனவோ அவ்வாறே இன்றும் இருக்கின்றன; இங்ஙனம் தொழிலுற்றதன்மையானுதல் தொழிலற்றதன்மையானுதல் அறிவின்கிரணங்கள் போல இலங்கின இன்றும் அவ்வாறே யிருந்திலங்குகின்றனவாம். பிரகிருதத்தில் வந்ததைப் பேசும்

பொருட்டுக்கேட்ட பிரசங்கத்தால் வந்த தத்துவவுணர்வை முடிவாகக்கூறின், சர்வபதார்த்தங்களும் இயற்கையாக அசத்தியமாகவே யிருந்தும் சத்தியமாக விரிந்தபடியாவற்றையும் உனக்குக் கூறினேம். மாண்டு, புஷ்பமாலைகளாலே மூடப்பட்டுச் சவபூதமாயிருக்கும் பதுமனும் நினது, நாயகனுடைய இருதயத் திருக்கும் பதுமகோசத்தை காணும் காதலுடன் விதூரதமன்னவன் செல் வதைக்கண்டாயோ! ஹேபரமேசுரியே! எம்மார்க்கத்தால் இது சவமண்ட பத்தை யடையும்? இதனையே நாம் பார்த்துக்கொண்டு விரைவிற் செல்வே மாக எனவுணர்ந்த லீலை கூறியதைக் கேட்ட ஸ்ரீதேவி கூறுவதாவது:—மனுட வாசனையில்லாவிடின் அதன் அடைவு கூடாமையின் பதுமசரீரம் யான் என் னும் வாசனையுடன் நெறியைப் பற்றிச்செல்லும், இவ்வியான் தூரமாய வேறு லோகத்தை யடையச் செல்கிறேன் சின்மயன் என எண்ணும்; இவ்வண்ணம் இம்மார்க்கத்தானேயே செல்வோம் நினக்கு மிதுவே சம்மதமன்றோ! பரஸ் பர இச்சையின் விச்சித்திர சிநேகத்தன்மையானே சம்பந்தவேதுவாகாதாம், நரபதியின் வரசுதையாம் லீலையின் உதார நிருமலமனத்தில் பரமார்த்ததிருக் குருவம் தனதுதத்துவமென்னும் வகையிற் பன்னிய கதையிற் சர்வசந்தாபங் களுந் தீர்ந்தொழியவே, விசேஷ போதவடிவச் சூரியன் உதயமானபோது விதூரதன் சிதைவுற்ற காரணத்தால் பிரஞ்ஞாத்மாவின் கண்ணே விலீனமான சித்தத்தாற் சடனுய்ப் பிரதிசந்தானசூனியனுகி மரணத்தின் பொருட்டு மூர்ச்சி தனுனன்.

55-வது சமுசாரமரண அவஸ்தை வர்ணனம் முற்றிற்று.

---

## 56-வது மரணசயன அனந்தவிவஸ்தை வர்ணனம்.

இப்போது அந்நரபதியின் ஜீவன்றன்வாசனை யமபுரகதியும் அவர் தம் பின்றொடர்தலும், பூர்வபுர அடைவும் வருணிக்கப்படும். இச்சமயத்தில் மன்னவன் கண்களின் விழிகள் சுழலப்பெற்றவனும் எல்லாக்கரணங்களும் மூர்ச்சிதனாகவே அதிசூக்குமமான பிராணன் மாத்திரம் எஞ்சியதேகமுடை யவனும் காய்ந்து வெளுத்த உதட்டினனும் ஜீர்ணபர்ணவர்ண வொளியினனும் முககாந்தியிழந்து வெளுத்தவனும் வண்டின் இரைச்சலொத்த பிராணனிரைச் சலிரைந்து கொண்டிருக்கப்பட்டவனும் ஆயினன். மகத்தான மரணமூர்ச்சை வடிவ அந்த கூபத்தின் கண்ணே வீழ்ந்தவன்போல மூழ்கியமனமுடையவனும்; நேத்திராதி யிந்திரியங்களியாவையும் உள்ளே அத்தியந்தம் லீனப்பட்டவனும் ஆயினன், அதன்பின்னென்னுனெனின்? சித்திரத்தெழுதிய ஆகாரமே போல ஆகாரமாத்திரங்காணப்பட்டதே யன்றிச் சேதனமற்றிருந்தனன், எல்லா அவயவங்களும் அசைவற்று ஸ்தம்பத்தில் வகுத்த பிரதிமைபோலிருந் தனன். ஈண்டு மிகையாகக்கூறுவதாலென்னே அற்பமேயாய பிராதேசமாத் திரம் வெளிக்கிளம்பும் பொருட்டுப் பற்றித்தனது ஆலயபூதமாய விருக்ஷத்தை அந்தரிக்ஷத்திற்செல்லும் பக்ஷியைப்போலப் பிராணன் வெளியே செல்லு

பிச்சையுடையதாய்ந்த இராஜதேகத்தை விட்டது. கிராணஜன்னிய விருத்தி யுபகிதவுணர்வானது காற்றிலிருக்கும் கந்தலேசத்தைச் சூக்குமமாயினும் கவர்வதேபோல ஆகாயத்திற்செல்லும் அச்சீவனை த்திவ்யதிருஷ்டிகளோடு கூடிய அத்தேவிமார் இருவரும் கண்டனர். அந்தஜீவசித்தானது ஆகாயத் தில் ஆதிவாகிகப்பிராணனோடு சேர்ந்துகொண்டு வாசனையின் வாயிலாக ஆகா யத்தில் அதிதூரம்போக ஆரம்பித்தது; காற்றிற்குறிக்கப்பட்ட கந்தகலையை இருவண்டுகள் இனிது தொடர்வதேபோல அந்த ஜீவசித்தை இருதேவிமார் களும் அநுசரித்தே தொடர்ந்தனர். பின்னர் முகூர்த்தமாத்திரத்தில் மரண மூர்ச்சனஞ்சாந்தியானதும் ஆகாயத்தில் ஜீவசித்தானது கந்தரேகையோடு கூடிய காற்றினாற்போல வாசனா மயத்தேகத்தால் கனாப்போலுமுணர்ந்தது; அது யமசம்பந்தமான புருடர்களைக் கண்டது, அவர்களானே வாசனா மயத்தேகமானது கொண்டு போகப்படுவதாகவும் கண்டது, மேலுற்ற தேகி யுடைத்தானாற்போலப் பந்துபிண்டப்பிரதானத்தாற் றாலதேகமுண்டா னாற்போலத் தனக்குக்கண்டது. அதிதூரதரமாய்ச் சம்வத்சரபரியந்தஞ் செல்லக்கூடியதாய்த் தக்ஷிணமார்க்கத்திலிருக்கும், பிராணிகளின் கருமபலன் களை வெளிப்படுத்தாநின்றதும் அநேக ஜந்துக்களாற் சூழப்பெற்றதும் ஆம் யமபுரம் அடைந்தது; வைவசுவதபுரத்தை யடைந்தபின்னர் யமதருமர் கரு மங்களை யாராய்ந்துபார்த்து வருமாறு ஆணையிட்டனர், இவனுக்கொருகாலும் மலினமான பாவகருமங்களின்றும், நித்தியமுமே லோபாதிதோஷகளங்கம் யாதொன்று மில்லாத சுபகருமங்களையே இவன் செய்துளான், பகவதியாகிய ஸ்ரீ சரசுவதி தேவியாரின் றிருவருளானே யிவன் விருத்தியடைந்துளான் பழமையான இவனது தேகம் குசமாம்பரத்துள் சவவடிவமாயிருக்கின்றது அதனை யடைந்து இவனை யதிற் புகுத்துக, யாமியம்பியவகையனுசரிக்குஞ் சித்தத்தோடு கூடிய யடர்களோடு இவனைப் போகவிடலாம்; என்னுமிவ் விடத்தில் லீலையும் சரசுவதிதேவியும் மறைவாக யமபுரம் புகுந்தாதல் வெளியி லிருந்தாதல் அவன் வருகையை யெதிர்பார்த்திருந்ததாக வுணரலாம். கவணி னின்றும் விடுபட்ட கற்போல ஆகாயமார்க்கத்தில் பின்விடப்பெற்றனன். அப்போது ஜீவகலையும் லீலையும் ஞானதேவியும் ஆகமூவரும் ஆகாயத்தே சென்றனர், மன்னவனுடைய ஜீவரேகையானது இருதேவிமார்களும் உருவ முடையவர்களாக இருந்தபோதினும் அவர்களைப் பார்க்கவில்லை அவர்கள் அதனைப் பார்த்துக்கொண்டே சென்றனர், அக்கலையை யனுசரித்தே அவர்கள் ஆகாயமார்க்கங்கடந்தனர், அதிவிரைவில் லோகாந்தரங்களைக் கடந்து இந்தப் பிரஹ்மாண்டத்தினின்றும் வெளிப்போந்து வேறு பிரஹ்மாண்டத்தை யடை ந்து பூமண்டலத்திற்சேர்ந்து சங்கற்பமாத்திரத்தா லுருவம்பெற்ற அவ்விரு வரும் ஜீவரேகையோடு சேர்ந்து பதுமராஜபுரத்தை யடைந்து லீலையின் அந் தப் புரமண்டப முற்றனர். காற்றின் ரேகை தாமரையிற் புகுந்ததுபோலும்

சூரியப்பிரபை கமலத்திற் புகுந்ததுபோலும் சுகந்தம் காற்றிற் புகுந்ததே போலும் இஷ்டப்படி யிருவரும் கணத்திற் புகுந்தனர். விதூரதலீலைச் சீவ னுக்குப் புத்திரியார் மார்க்கங் காணல் முன்மொழியப் பெற்றது மன்னவ னுயிர்க்கோ மொழியப் பெறவில்லையே யென மன்னவனுடைய மார்க்கவுணர் வில் ஐயமுற்று ஸ்ரீ இராகவர், ஹே பிரஹ்மரூபமாய சுவாமீ! இம்மன்னவன் சவமண்டபசமீப மடைந்த வகையென்னே! மரித்த சரீரத்தையுடைய அவ னால் மார்க்கந்தான் உணரப்பட்ட விதமெங்ஙன் எனவினவ; அதற்கு ஸ்ரீ வசி ஷ்டபகவான்; பூர்வசரீரவாசனை கெடாமலே யிருப்பவனுவான நுகர்வினையால் இடையில் ஜன்மாந்தரமுண்டாகிய வதிபோகத்தாலது கெட்டொழியவே பூர்வ வாசனையுற்பவமாக முன் சென்றமார்க்க விளக்கங்கூடுமென விடை பகருகின் றார்:—ஹே இராகவ! தனது வாசனையினுள்ளிருக்கும் பதுமசரீர அகம்பா வத்தையுடைய அச்சீவனுக்கு அவசியம் அம்மார்க்காதியாவும் இருதயத்தின் கண்ணே யிலங்கும் ஆகலின் எங்ஙனம் அச்சீவன் அக்கிருகத்தை யடையாம லிருத்தல்கூடும்? ஜீவேயாதியாகிய சூக்கும அந்தக்கரணவுதரத்தில் ஆவிர்ப் பூதவாசனை வடிவமாக மயன்மாத்திரமாயிருக்கும் எண்ணிக்கை யற்றவையாய வுலகங்களை ஜீவனேடுகூடிய ஆலம்விரை பூஜலாதியங்குர வுதயசாமக்கிரிகளை யடைந்த மாத்திரத்தில்தானே அங்குரவடிவமாக வுண்டாம் வடதருவைத் தன் னுள்ளேயே யனுபவிப்பதேபோல யாவர்தா மனுபவிக்கவில்லை. கூறியதிருஷ் டாந்தத்தையே விவரணித்து வெளிப்படையாக விளம்பக்கேட்டி! ஜீவிக்குந் தேகம் விரையையும் முளையையும் இருதயத்திற் பார்ப்பதேபோல அறிவனு சுபாவ பூதமாய் மூவுலக சமுதாயத்தைக்காணும், ஞான அஞ்ஞான அன்பதர விவதானத்தால் எல்லாவுலகமுமே சாக்ஷிபாசியம் என்பது சித்தாந்த ரகசிய மன்றோ! ஏகதேசத்திலிருக்கும் நரன் றார தேசத்திலிருக்குந் தனது புதையலை யெப்போதும் மனத்திலிடைவிடாமற் பாவித்து இனிது காண்பன், விடனல் நன்கு பாவிக்கப்பட்ட காமினியின் பிரத்தியக்ஷமேபோலப் பாவனைமிகுதி வலுவினனும் அக்காக்ஷியின் சித்தியாம்; அதுபோலச்சீவன் சாதிசதத்தை யுடையவனுயினும் மயலிற்பட்டுச் சுழலுவனுயினும் தனது வாசனையினுள்ளிருக் கும் அபீஷ்டத்தை நன்குகாண்பன், பந்துபிண்டப் பிரதானத்தாற் சரீரம் ஆன்மாவிற் குண்டாயதாகக்கண்டது என முன்மொழியப் பெற்றதே அதை யெவ்விடத்துங்காணேமே யென ஸ்ரீ இராகவர், ஹே பகவன்! யார் பொருட் டுப் பிண்டம் கொடுக்கப்படவில்லையோ அவனுக்கு பிண்டதானுதி அவ்வாசனை யேதுவின்மையின் அவ்வாசனை யின்றிய ஆகிருதி ஜீவன் எங்ஙனம் சரீரத்தோடு கூடியவனுவன் எனக்கேட்ப அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் அருளுவதாவது:— ஹே குழந்தாய்! பிண்டம் நமக்குக்கொடுப்பார்களா? கொடுக்கார்களா? பிண்ட மெனக்குக் கொடுத்தார்கள் என இருதயத்தின்கண்ணே வாசனை நன்கேறின் அந்தப் பிண்டத்தின் பயனுகிய சரீரசித்தியையவனடைவன் பிண்டதானுதி விதியோ பந்துகிருத்திய போதகம் உண்மையாகப் பந்துபல ஹேதுவும்மிருத

வாதனைப் பல சம்வாதத்தால் உபயகாமிபலம் பிரசித்தமாம். சித்தமே சமு
சாரமாம் அதனையும் முயற்சியோடுஞ் சோதனைசெய்க, எச்சித்தமோ அம்
மயம் ஜந்துவாம் என்னுமிதுகுகியம் சநாதனம் என்பதாதி பிரத்தியக்ஷ சுருதி
களும் அறிஞர் அனுபவங்களும் உள்ளனவாம்; சதேக விதேக யோகிகளிடத்
திற் பிரசித்தமாம்; தேகத்தோடுகூடிய ஜீவர்களிடத்திலும் தேகமற்ற மிருத
ஜீவர்களிடத்திலும் யாண்டும் இந்நியமமானது மாறாக ஆகமாட்டாதாம்.
பிண்டமுடையவனியானென்னும் உணர்வினாலே பிண்டமில்லாதவனும் பிண்ட
முடையவனாவன், பிண்டமில்லாதவனியானென்னும் உணர்வினாலே பிண்ட
முடையவனும் பிண்டமில்லாதவனாவன். பாவனைப்படியே இப்பதார்த்தங்
கட்குச் சத்தியத்தன்மையாம், இவ்வளவே சாஸ்திரக்காரரது விசேஷமாம்,
பந்துக்களால் பிண்டங்கள் கொடுத்தபோது அவசியம் மரித்தவனுக்குப் பிண்ட
தான வாசனை யுண்டாகின்றதேயாகும், பதார்த்தங்களிற் பாவனையும் கார
ணங்களாலுண்டாகின்றது. வாசனையினாலே ஜந்துகட்கு விடமும் அமிருதமே
யாம், சர்ப்பாதிவிடமும் கருட உபாசகனுக்குக் கருடனியானென்னும் பாவ
னையினாலே அமிருதமாம், ஜீரணமாம்; இதுபோலவே பாவனையினாலே அசத்
தியப் பொருளும் சத்தியப்பொருளாம், முள் முதலியவை குத்திவிட்டால்
அரவு கடித்துவிட்டதென்னும் மயலுண்டாக அஃதசத்தியமாயினும் உண்
மையே யாமென்னும் அப்பாவனையால் சத்தியமாய மரணாதி அர்த்தக்கிரியாகா
ரித்தன்மை யுண்டாம். எங்கும் எப்பொருளும் எப்போதும் காரணமில்லா
மல் உதிப்பதே கிடையாது, பாவனை யெதுவும் இன்றென்னும் நிச்சயமுடைய
வன் ஆவாய்; காரணசத்தியத் தகைமையுளதாய வழியே காரியசத்தியத்தகை
மையாம், பாவனையோ வஸ்துசத்தாயின்றுமெனச் சத்திய காரணமில்லாமல்
உண்டாய காரியம் இல்லவேயில்லையாமெனச் சுத்தப்பிரஹ்மமே உண்மையாக
வுளதாமென்னும் துணிவுடையவனாவாய்; காரணம் அசத்வமாயினும் காரிய
உற்பவம் ஏன் ஆகமாட்டாதெனின்? காரணமில்லாமற் காரியம் மகாப்பிரள
யம் யாண்டும் கண்டதுமில்லை கேட்டதுமில்லை, ஒரு சிறிதும் எல்லாவற்றுனும்
காரியசத்தைக்குக் காரணசத்தை யதீனத்தன்மை யுண்மையே பிரமாணங்க
ளிற் சித்தமாம், ஆயின், பிரஹ்மசத்தையும் காரணாதீனமா எனின்? அன்றாம்,
என்னை, சுயமாயேக உதயமாயிருக்கும் நித்தியசுவப்பிரகாச பிரஹ்மத்தைத்
தவிர யாதொன்று மின்றும், அநித்திய சத்தையுளதாய வழியே காரணத்தை
யவாவப்படும்; இவ்வண்ணமாகவே தூயசின்மாத்திரமே மயலால் வாசனாதி
ஜகத்தின்வடிவமாகத் தோற்றுகின்றது என்னும் சித்தார்தம் நிலைபெற்றதே
யாகும் சித்தேவாசனையாகும் அதுவே கனப்போல அர்த்தத்தன்மையையடை
கின்றது காரியகாரணத்தன்மையை யடைகின்றது அதுவே அகதியதேயாக
வுறையும் பிண்டமுடையவன் யான் என்னும் உணர்வினாலேயெனப் பிரேதவா
சனையை யனுசரித்தே பிரேதத்திற்குச் சரீர ஆரம்பாதிபலம் என யாதுமுன்

னேதப்பெற்றதோ அதன்கண்ணே செய்யப்படும் ஆக்ஷேப உபயோகியாக ஸ்ரீ இராகவர், கேட்பதாவது:—எனக்குத் தருமமில்லையென்பதாக்வே எப்பிரேதம் வாசனை யுடைத்தாமோ அதற்கு மிகுதியான தருமஞ்செய்து மிகத்திடமாக நன்கு சமர்ப்பிக்கப்படின், அது அக்கால்அங்கு அத்தருமம் நஷ்டமாயதா? அல்லதில்லையா? சத்தியார்த்தபாவனை அதிகபலமுடையதா? அசத்தியார்த்த பாவனை அதிகபலமுடையதா? பிரேதவாசனையின் பகையானே பயனற்ற தாமா? சுகிருத்வாசனையின் பிரபலத்தாலே பயனற்றதன்றுமா? அவற்றுள் சுகிருத்வாசனைத்தரும இருப்பாற் சத்தியார்த்தமாம், பிரேதவாசனையோ அசத்தியார்த்தமாம்; ஆண்டு வாசனையின் பிரபலவிஷயத்தில் உபயோகமாதல் போக்தாவின்கண்ணிருப்புண்மையா? அல்லது உண்மைப்பொருளுண்மையா? முதலதேல் இயற்றியதற்கின்றென்னுந் தோடமாம்; இரண்டாவதேலோ பொருள் உண்மையாம் எனமுன்மொழிந்த வியாகாதமாம் என்பதாக இரு பாலுமிழுக்குங் கயறெக்கும் எனவினவ ஸ்ரீவசிஷ்டபகவான், சாஸ்திரங்களிற் சாற்றியதே சத்திற்காலத்திற் கூறியபடியாய அனுஷ்டானத்தால் நூலைத் தொடர்ந்து வந்தநல்வாசனையானது நாலளவை மிகுத்ததாதலால் பிரபலமாம் பிரேதவாசனையோ கேவலம் இலௌகிகமாதலிற் றுர்ப்பலமாம் எனச்சாஸ்திரமே பிரபலத்தன்மையிற் சாதகமாம் அர்த்தசத்தியத்தகைமை யன்றும் என்னும் அதிரகசியத்தைக் கொண்டு விடைபகருவதாவது.—தேசகால கிரியை திரவிய அடைவினனே பாவனை யுதிக்கும், யாண்டு தான்பலரூப விடயத்தில் அஃதினிதுதயமாமோ அவ்விடயமேஜயமாம் இரண்டனுள் அதுவே யதிகமதாகவிருக்கும். தருமதானசாஸ்திரபலத்தால் பிரேத அந்தக்கரணத்திலாதல் அக்காலத்தில் அத்தகையதருமவான் யான் என்னும் வாசனை யுற்பத்தி கற்பிக்கப்படும், தருமதாதாவிற்குவாசனை பிரவிருத்தமாமேல் அது அதனல்முறையே பிரேதமதிபூரிக்கப்பெறுகின்றது, அவசியமாகச் சாஸ்திர பலத்தானே பிரேதத்திற்குப் பலலாபமாம் எனவியம்பவேண்டும்; பாஷண்டனுமவனுக்கு வேதமிகுதுவேடம் நாஸ்திகத்தகைமைமுதலிய அசுபவாசன துடிதமதியிருத்தலின் உறவினரால் தருமதானங்கள் செய்யப்பட்டபோதினும் அப்பயனடைய முடியாதாம்; அவ்வறில்லாவிடின் பிரேதமதியால் அசுபமாம், அர்த்தசத்தியத்தகைமை பிரபலத்தகைமைக்குக் காரணமாயின் அதற்கும் தருமபலஅடைவாம், இதனற்றான் முன்னர்யாம் புருடப்பிரயத்ன பிரபலத்தகைமையை யினிதுசாதித்துச் சுப அப்யாசத்தையே எப்போதுஞ் செய்யத் தக்கதாம் எனக்கூறினேம்; இவ்வண்ணம் பரஸ்பரஜயத்தை யுத்தேசித்தபோது அதிவீரியவானுயிருப்பது ஜயத்தையடையும் ஆகலின் சுபமுயல்வினனே சுப அப்யாசம் பெரிதுசெய்தல்வேண்டும் தேசகாலாதி காரணசககாரிசம் பத்தியானலே தருமமதன்வாசனை யுதயமங்கீகரிக்கப்படுமாயின் "இவையாவுந் தோற்றற்கு முன்னர் சத்தேயிருந்தது சௌமியனே ஏகமேயத்துவிதீயம்" எனமறையறைதலின் ஆதிசர்க்கத்தில் தேசகாலதி சககாரியபாவத்தால்

வாசனையுற்பத்தி கூடாமையின் அம்மயஜகதுற்பத்தியே யாகாதாம்; அவ்வாறாகவே "ஏலவேயெல்லாமாவோமென்று கொண்டிசைந்து பார்த்த" தென்னும் உத்தரசுருதி விரோதமாம் எனஸ்ரீஇராகவர்வினுதல்:—ஹேபிரஹ்மசொருபரே! தேசகாலாதிகளானே வாசனை நன்குதிக்குமெனின்? அம்மகாகற்பசர்க்காதியின்கண்ணே தேசகாலாதிகள் எங்கே? காரணமிருந்தாலன்றோ அச்சககாரிகாரணங்களானே வானுதிகாரியம் நலமாகவுதிக்கும், சககாரிகாரணங்களிலவாகவே அக்கால் வாசனையெங்ஙனமுண்டாம்? எனவினவ ஸ்ரீ வசிஷ்டபகவான்கூறுவதாவது:—ஹேஇராகவ! நீயென்பாற் கூறிய குறையிஷ்டமுடையதேயாகும், "விரோதமுமில்லை யுற்பத்தியுமில்லை, அவ்விப்பிரஹ்மம் அபூர்வம் அபரமற்றது தூலமற்றது அணுவற்றது குறுகலற்றது, இனியதனால் ஆதேசம்நேதிநேதி, யாததுஅத்ரேசியம் அக்கிராகியம், யாண்டயலொன்றும் காண்பதில்லையோ அயலொன்றும் கேட்பதில்லையோ" என்பதாதி சுருதிசதங்கட்கு ஆண்டேதாற்பரியங்காணப்படுதலினுனும் பெரும்முயற்சியானுனே இப்பொருளையேபோதிக்கும் வேட்கையுண்மையினுனும், "அஃதவாவியது" என்பதாதி சிருஷ்டிசுருதிசட்கும் பிரதீதியாகாநின்ற துவைதப்பொய்மை யுபபாதனத்தால் உபக்கிரமித்த முக்திபலத்தை யுடையநிஷ்பிரபஞ்சாத்மவிற்பாதனத்தின்கண்ணே தாற்பரியமிருத்தலின் சிருஷ்டியாதியின் கண்ணே கருத்தில்லாமையின் நிச்சயித்துக்கொள்ளலாம், இவ்வண்ணமிவை மெய்ம்மையாகவொருகாலுமிலை, மகாப்பிரளயருபசர்க்கத்தினுதியில் அனுதியாய பரமார்த்தசத்திய ஆன்மாவின்கண்ணே தேசகாலமுதலியயாவுமில்லவேயில்லை, சககாரிகாரணங்களின் அபாவமுளதாகவே திருசியமதியாகிய இதுஇலவேயில்லை உண்டாகவேயில்லை விளங்குவதேயில்லை யெங்கும், திருசியமானது முற்றினுமில்லாமையானே யாதிது சிறிது காணப்படுகின்றதோ அது அநாமயமான பிரஹ்மமேயாம் தனதுசித்துருவமே இவ்வாறுதோற்றுகிற்கும், இது விடயத்தை இனிநூற்றுக்கணக்கான யுக்திகளால் நினக்குக்கூறவே போகின்றேம் இம்முயற்சியுமிதன்பொருட்டேயாகும் இப்போது நடந்துவந்தகதையைக் கேட்பாயாக; முன்வருணித்தமுறையே பதுமநகரத்தை யடைந்தஞானதேவியும் லீலாதேவியும் அதிசுந்தரமாய பதுமமந்திரத்தைக் கண்டனர், அம்மந்திரம்வசந்தகாலத்தைநிகர்த்து அங்கு அதிசீதளமாகப் புஷ்பங்களெங்கும் பரப்பப்பெற்றிருந்தன, இராஜகாரிய ஆசாணுதிவிவகாரங்கள் சாந்தமாய் ராஜதானி ஜனங்களோடு அதுகூடியிருந்தது அவ்வில்லத்தில் அந்தஜனங்களோடுற்ற மந்தாரகுந்தமாலைகளாற் சூழப்பெற்று மூடப்பட்டிருந்த சவத்தைக்கண்டனர். அப்பெரியசவம் அநேகவித புஷ்பமாலைகளாலும் ஆடையாபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது, பூர்ணகும்பாதிமங்களங்களெல்லாம் சவசய்யையின் சிரமுன்னிலையில் வைக்கப்பட்டிருந்தன, மேலும்மவ்வில்லம் கெடுக்கமுடியாததான பெருந்துவாரங்களோடு கூடியபெருஞ் சாளரங்களில் அதிதிடமான

கம்பிகள் அமைக்கப் பெற்றதாயிருந்தது, மலினமடைந்ததீபங்களின் மங்கிய ஒளியால் உண்மையில் நிருமலமான சுவர்களும் மலினமாகத் தோற்றியலங் கரிக்கப்பட்டிருந்தது. கிருகஏகதேசத்தில் இனிது நித்திரை செய்துகொண் டிருந்தவர்தம் முகசுவாசஞ் சமமாகவிருந்தது. வெளிச்சம் பூர்ணசந்திரன் றன்கலாசகித உதயத்தாலுண்டாய காந்தியால் ஒளிர்விக்கப்பட்டுக் காந்த மாயும், சௌந்தரியத்தாலிந்திரரது திவ்யமந்திரஜசுவரியத்தை வெற்றிகொண்ட தாயும், உள்ளே, விரிஞ்சனது ஆலயமாகிய பகவத்துந்திக்கமல முகுளத்தின் கர்ப்பம்போல மனோரம்மியமான கவின்மிகுத்ததாயும், சப்தம்யாதொன்றுமில் லாமையினாலே மூகம்போலிருப்பதாயும் நிருமலமான இந்துவைபோல அதிரம் மியமாயுமிலங்கும் அரண்மனையைக்கண்டனர்.

56-வது மரணசயன அனந்த விவத்தை வருணனம் முற்றிற்று.

---

## 57-வது சொப்பனார்த்தத்தின் விசாரவருணனம்.

இப்போது லீலாந்தரதரிசனமும் லீலையின்தேகப்பொய்ம்மையும் யோகி களினது தேகத்திற்கும் ஆதிவாகிகத்தகைமையினுதயமும் வருணிக்கப்படும். அதன்பின் னுண்டுச் சவசய்யையின் ஒருபக்கத்திலிருந்த முன்மரித்த விதூரத லீலையாகிய முன்வந்தவளை ஞானதேவியும் லீலாதேவியும் கண்டார்கள். அவள்முன்வேடத்தினளாய், முன்னல்லாசாரத்தினளாய், முன்னகத்தினளாய், முற்றன் வாதனையை யுடையவளாய், பழைமையான ஆகாரத்தொப்புடைய ளாய், சர்வரூபாங்கசுந்தரியாயிருந்தனள்; முன்னுருவ அவயவ அசைவினளாய், முன்னுடையே தரித்தவளாய்; முன்பூடணாதிகளையே யலங்கரித்தவளாய், கேவ லம் பதுமக்கிரகத்திலிருப்பவளாய் ஆண்டுஸ்திதிமாத்திரம் அபூர்வமாகி மற் றெல்லாம் முன்போன்றவலேயாய் விளங்கினள். மிக அழகாகச் சாமரத்தைக் கரந்தாங்கிப் பூபதிக்கு விசிக்கொண்டிருந்தனள், ஆகாயத்தின்கண்ணே யெழு ந்து பிரகாசுக்கும் பூர்ணசந்திரன்போல மகீதலத்தைப் பிரகாசித்துக்கொண் டிருந்தனள். மவுனமுற்றவளாய் வாமஹஸ்தத்தில் வைத்தவதனமதியை யுடை த்தாய்க் குனிந்தவளாய் பூஷணங்களின் கிரணங்களினாலே * பத்ரலதைகளினு லும் புஷ்பங்களினுலும் மலர்ந்த வனஸ்தலம் போன்றவளாயு மிருந்தனள், மாலதியுற்பலவருஷத்தைத் திசைகளிற் பார்வைகளாற் செய்பவளாயும், ஆகா யத்தில் க்ஷயத்தாற் கண்டிக்கப்பட்ட சர்வ இந்துக்களையும் தனதுலாவண்யத் தாற் சிருஷ்டிப்பவள் போன்றவளாயு மிருந்தனள். நரபாலவடிவமாய விஷ்ணு விற்குதவியாக வந்த இலக்குமிதேவியாயும், புஷ்பமாலைகள் மிகுதியுமணிந்த தன்மையினனே புஷ்பாகர காந்தியையுடைத்தானவள் போன்றளாயு மிருந் தனள். பர்த்தாவின் வதனத்தில் வைத்திருக்குந் திருஷ்டியை யிஷ்டப்படி சேஷ்ட்டிப்பவளா யும், இரவில் மலின நிலவுபோலச்சிறிது மலினமான முகக் காந்தியுடைய வளாயுமிருந்தனள், அத்தேவிமார்களால் அந்தலீலை காணப்பட் டனள் அவளாலவர்கள் காணப்பெறவில்லை, அத்தேவிமார்கள் சத்தியசங்கற்ப

முடையவர்கள் ஆகலிற்காணலாம், அவள் அவ்வாறு சத்தியசங்கற்பத்தினனே அலங்கரிக்கப்பட்டவளாகவில்லை. லீலைக்கு ஆவசியகமாய முன்விடுத்த தன்சரீரத்தேடுகையில்லாமல் விதூரதலீலை தரிசனத்தையே முதலில் வருணித்ததென்னையோ ஹேபகவன்! அவ்விடத்தில் அப்பூர்வலீலை தேகத்தை யினிதுகிறுத்தித் தியானத்தால் ஞானதேவியோடுஞ் சென்றனளென்று கூறப்பெற்றதே இப்போது லீலையானது அத்தேகம் ஆண்டுவருணிக்கப் பெறவில்லையே, ஹே பிரபுவே அதற்கென்னுற்றது எங்குதானது சென்றது அவ்விடயத்தை யடியேற்கருளல்வேண்டும் என ஸ்ரீ இராகவர் கேட்ப ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுவதாவது:— ஆதிவாகிகத்தன்மை புத்தியுதயத்தானும் தத்துவ அவபோதத்தானும் பாதித்தன்மை யுண்மையானே லீலைக்குத் தன்றேகதரிசனம் வருணிக்கப்பெறவில்லை, எவர்கட்கு அஞ்ஞர்களது, திருஷ்டியை யனுசரித்துப் பாதிக்கப்படவில்லையோ அத்திருஷ்டி யுத்தர சர்க்கத்தில் அத்தேகமரணதர்காதி கூறப்பெறும்! இப்போது தத்துவ அவபோதன முண்டாததற்பொருட்டு அதன் மித்தியாத்தன்மையையே விஸ்தாரமாக விளம்புவாம், லீலையின் றேகம் எங்கிருந்தது அஃதெத்தகையது அதற்கு மெய்ம்மைதானெங்கே மருப்பூமியின் கண்ணே ஜலபுத்தி யுண்டாவதே போலக் கேவலம் மயக்கமேயாகும், இவ்வுலகம் யாவும் ஆத்மாவேயாகும் தேகாதி கற்பனை யெங்கே, பிரஹ்மமேயானந்தரூபமாயிருக்கிறது யாது காண்கின்றனையோ அதுவேசித்தாம், எம்முறையானே போதத்தில் இந்தலீலை பரியாக இலக்கணத்தை யடையந்தனளோ! அம்முறையானே அப்போதத்தினின்றும் பரப்பிரஹ்மத்தில் அத்தேகம் பனிப்போலப்பாதிக்கப்பட்டது, இரச்சுசர்ப்பம் போல ஆதிவாகிக தேகத்திற்குக் காலத்தால் ஆதிபௌதிகதேகமியான் என்னும் மயக்கமுண்டாகின்றது. கேவலந் தன்றேகத்திற்கு ஆதிபௌதிகத்தகைமை கழிந்ததென்றுமாத்திரமின்றும், மற்றூ பூமியாதி யெல்லாவஸ்துக்கட்குமாம், "உருவமூன் றெண்பதே யுண்மையா மன்றே" என்னும் மறையானே, அவைகட்கும் தூலத்தகைமையின் பாதத்தால் ஆதிவாகிகத்தகைமை யெஞ்சாநிற்கும் ஆதிவாகிகத்தகைமை மதியானே அதாவது சூக்குமதம்சமஷ்டி மனோமாத்திரத்தகைமைமதியானே தத்துவதிருஷ்டி யானே எத்திருசியம் பார்க்கப்பட்டதோ அதற்கே முன்மயக்கால் பூமியாதிநாமம் வைக்கப்பட்டிருக்கிறது அதுவேயாதி பௌதிகமாம்; ஆகலின் உண்மையாக ஆதிபௌதிகம் என வொன்றின்றும். உண்மையான ரூபமாகவோ பூமியாதிவடிவ ஆதிபௌதிகம் முயற்கோடுபோல சப்தத்தானும் மெய்ம்மையன்றும் அர்த்தத்தானும் மெய்ம்மையன்றும்; ஆகவே பாதிதத்திற்குத் தேடுமடைவேயின்றும், யான் மானுகவிருக்கின்றேன் எனக்கனவில் எவனுக்குணர்வுண்டாயதோ அவன் தன் மிருகத்தன்மைப் பரீக்ஷையின் பொருட்டு மிருகத்தைத் தேடிக்கொண்டாதிரிகின்றுன்? மயக்கத்தினல்

வேகமாக அசத்தியமே உதயமாகின்றது லீனமாகின்றது அதுபோல மயக்கந்
தீர்ந்தபோதினுமா இரஜ்ஜுவின் கண்ணே சர்ப்பமயல் தீர்ந்தபோதேபோல
மயக்கமுடையவனுக்கு மயலுதயமாகின்றது? இவ்வாறுகவே அஞ்ஞமனச்
சமஷ்டிகற்பிதமாதி பௌதிகப்பிர பஞ்சம் என்பதே பலிதமாம், இப்பிரஹ்
மாண்டத்திருக்குந் தூலமயக்கம் பிரஹ்மாண்டந்தோறும் வேறுன அனந்த
அஞ்ஞான மனச்சமூகமத்தியில் ஏதாவதொரு மனச்சமூகம் சமஸ்தமா யுணர்
வற்றதாய்ப் பீஜமின்றி வீண்வெளிபாட்டைப் பொய்யாகவேயடையும், அஞ்
ஞானிகள் நீள்காலம் வரவுபோக்கோடு கூடிச்சுழலுந் தேகங்களையே ஆன்மாக்
களாக வுடைத்தாகிப் பாலர்கள் தாங்களே தங்களைச்சுற்றிப் பூமிசுழல்வதை
மயக்காற்காண்பதே போலக் கணத்தோற்றமாகிய சிருஷ்டியாதியைக் காண்
பர்களினிது பூண்பர்கள், ஹே மறையுணர்ந்த இறைவரே! யோகிதேகத்திற்கு
ஆதிபௌதிகத்தன்மை யில்லையாயின் அந்தப்புரத்திலிருந்துதனது ஆத்மரூப
மடைந்தோ இம்லாமன் மரித்தோ வாழ் உயிர்க்கு ஆதிவாகிகத் தகைமை
யுற்ற தேகத்தை ஜனங்கள் காண்பார்களே அது எத்தகையது? ஆதிவாகிக்
மானது ஜனங்களாற் காணக்கூடியதல்லவே, முக்திகாலத்திலது எஞ்சிநிற்
குமா? என ஸ்ரீ இராகவர் கேட்பயோகிகளினது மரணம் இருவிதமாம், ஒன்று
பிராரப்தபோகப்பொருட்டு இச்சையாலாய நாஞதேககற்பனையாம், மற்
றென்று சர்வ பிராரப்தக்ஷயமாகவே விதேககைவல்லியமாம், அவற்றுள் ஆதி
யதிலோ பூர்வசேஷமில்லையாம் என ஸ்ரீவசிஷ்டபகவான் உத்தரமருளுகின்ருர்:—
கணுக்களில் இந்த ஆதிவாகிகதேகத்தில் மிருகாதிபாவமொன்றை விட்டு மற்
றென்ரும் மனுடாதிபாவத்தைக் கற்பித்தல் முன்னுக பரிசேடமில்லாமலே
அநித்தியமாம் அதுபோல எப்போதும் பூர்வதேகமின்றித் தேகத்தை விட்டுத்
தேகாந்தர அடைவாம். இரண்டாவதன் கண்ணும் அஃதின்ரும் என்பதற்
குத் திருஷ்டாந்தமென்னெனின், ஆதபத்தில் இமகணமும் சரற்ககனத்தில்
வெண்மேகமும் தோற்றியபோதினும் தோற்றுதசேயாம் இதுபோலவே
யோகிதேகமுமாம், ஆகவே சரற்காலமேகாதிபோல மந்தமாக க்ஷீணமான
அதன்கண்ணே சிறிதுகாலம் பரிசேட மயக்கமாம். மந்தமாக க்ஷீணமாகின்
றது அன்னியரால் பார்க்கப்படுகின்றது என்பதாகவும் நியமமின்ரும், சிற்சில
வோ உடனே விநாசசங்கற்பத்தால் அவ்வாறே நாசமாய்விடுகின்றனவாம்,
வேகமாகவும் க்ஷீணமாம், அல்லது சில யோகிகளின் றேகங்களோ யோகிக
ளானும் முன்காணப்பெருவாம், ஆகாயத்தில் வேகமாகப்பறந்து செல்லும்
பறவை காணப்பெருதசேபோலும், அன்னிய யோகிகளானும் காணமுடியா
விடின் மற்றெவ்வாறு முடியும் மற்றையர்களால், இவ்வாறுகவே. ஜீவிக்குந்
தசையிலும் ஜனங்கள் அத்தேகத்தைக் காண்பதும் இவர்கள் என்னை யிவ்வாறு
காண்குகவென்னும் அவரது சத்திய சங்கற்பவயத்தானே ஆமலாது தேகத்தி
னது ஆதிபௌதிகத்தன்மை வயத்தானல்லவாம். யோகிகட்குத் தந்திருஷ்டி
யானே தந்தேகத்தின் ஆதிவாகிகத்தகைமையனுபவ மிருப்பினும் அதனைப்




புசிப்பவனது அதிருஷ்டசகாயம் பெற்ற அஞ்ஞஜனவாசனையால் அதற்கு பௌதிகத்தன்மை மரணுதிகற்பன சம்பவத்தால் யாதொரு விரோதமுமின்றும், தமது வாசனை மபக்கானே சில அக்ரகாமியர் சிலபால் இவர் இறந்தனர் எனக் காண்பர் ஒவ்வோர்போது சிலபாலோ சிலர் யோகியரை ஜீவிப்பதாகக் காண்பர், அதனுற்றுன் முன்னர் விதேகமுக்தியடைந்த சுகருக்கும் பரிக்ஷித் சபையின் கண்ணே மீண்டு தரிசனமும் பர்கவத உபதேசாதிகளும் விரோதமில்லாமலே பொருந்தும். மேலும் யோகிகட்கு ஞான உதயகாலத்திலேயே தேகாதிகளின் பாதமாதலின் ஜீவனதசையின் கண்ணும் அவர் திருஷ்டியானே தேகமில்லையாம், ஆன்மாவின்கண்ணே தேகவடிவம் மயன்மாத்திரமேயாகி அவர்கட்குச் சத்தியபோதத்தால் இரச்சுக்களின் சர்ப்பபுத்தியேபோல அஃதுபசாந்தியையடையும். யாதுதேகம் எதற்குத்தான்சத்தை எதற்குத்தான் நாசம் எங்கே எங்ஙனம், யாதுதான் பரமார்த்தமாகத்திதமாமோ அதுவே ஞானத்தாலுண்டாம் அபோதங்கேவலம்போம். யோகிகளின்றேகம் பாதிக்கப்படுமாயின் பாதிதத்திற்குப் பரிணுமங் கூடாமையின் நாகர்வினைப் போகப்பொருட்டு ஆதிவாகிகதேகம் அன்னியமே யுண்டாகின்றது எனவாம், ஆகவே அதற்குச் சன்மாந்தரத்தன்மை யுண்மையின் ஜீவன் முக்தத்தன்மை செறியாதாம் "அது மறித்தும் பிறவாது" என்பதாதி சாஸ்திரவிரோதமாம் எனவெண்ணிய ஸ்ரீ இராகவர் ஹே பிரபுவே! யோகிகட்கு ஆதிபௌதிக தேகமே ஆதிவாகிகத் தன்மையை யடைகின்றதா? அல்லது ஆதிவாகிகதேகம் அயலொன்றே யுண்டாகின்றதா? முதல தேற்பாதிதத்திற்குப் பரிணுமாந்தரம் சர்வப்பிரமாண விருத்தமாம், இரண்டாவதேலோ ஞானத்திற்கு முத்திபலத் தன்மையானியென இருவகையானும் பொருந்தாமையின் சமுசயப் பிரவாகத்தில் யான் மிதக்குகின்றேன் அலைவுற்ற யான் நிலைபேறடைகிலேன் சமாதானிக்கவேண்டுமென வினவ அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் விடையருளுவதாவது:— ஹே இராமசந்திர! இதுபரிணுமன்றும், மற்றேr, தூலம் பாதமாகவே முற்சித்த அதன்திஷ்டான சூக்கும பரிசேடமே திரிவிருத்கரண சுருதியினுனே சூக்குமதேக உபகித பிரஹ்மத்தின்கண்ணே தூல அத்தியாச போதனத்தால் மூன்று ரூபங்களே சத்தியம் எனத் தூலபாதத்தாற் சூக்குமப்பரிசேடக்கூற்றினுனும் கூறியதோஷ அவகாசமில்லையாகும் இது விடயத்தில் முற்கூறியதை நினைக்கலாம், ஹே உத்தம! இது விடயத்தைப்பற்றி வெகுவிதமாக முன்னர் மொழிந்தேம் நீகேவராதகாரணமென்னே? ஆதிவாகிகமே யுளதாம் ஈண்டு ஆதிபௌதிகம் கிடையவே கிடையாதாம்; அதற்கே ஆதிபௌதிகத்தன்மை மதியானது பயிற்சியால் வளர்கின்றது, எக்காற் பழையது உபசாந்தியடைகின்றதோ அக்கால் அதற்கு ஆதிவாகிகத்தன்மையே பிரவிருத்திக்கும் பரிணுமம் வேறில்லாமல் தேகத்திற்குக் குருத்வகாடின்யம் முதலியவை யெங்ஙனம் நீங்கும் எனின்? அக்காற் குருத்வம் காடின்யம் எனயாவை வீணுகக்

கவ்ரப்பெற்றனவோ அவையாவும் சொப்பன நரகுருத்வ காடின்ய முதலி யன்வபோல நிராமயமாய போத்தாவின் போதத்தால் வாதிக்கப்பட்டுச் சாந் தியையே யடையும். லகுதால நல்லடைவு அதினின்றும் நன்குண்டாம், சொப் பனபரிஞானத்தாற் சொப்பனத்திற்போல யோகியின் றேகத்திற்காம். சொப் பனத்திற் சொப்பனபரிஞானத்தால் தேகம் லகுவாவதேபோலப் போதத் தாற் றேகமிது பஞ்சுபோல ஆகாசகமனுதி யோக்கியமுடையதாம். திட தரஸ்தூல வாசனைகளை யுடைய அஞ்ஞர்களது ஸ்தூலதேகத்திற்குச் சவீபாவ தாகாதியால் காரணந் திரோபாவ வடிவநாசமுறினும் பழையசூக்குமதேகப் பிராப்தியாமாயின் நிர்வாசனையையுடைய ஞானிகட்கு மூலோச் சேதனவடிவ அதனது பாதமுண்டாக இயற்கைத்தாய சூக்குமத்தகைமை யடைவுண்டா மெனக் கூறவும் வேண்டுமோ! அனேகதின சங்கற்பதேகத்தில் பரிணமித்த வடிவினவாய், இத்தேகமானது சவமாய்ச் சாம்பலாக ஆண்டே திடஅபிதான வடிவ நிலைபேறடைந்தனவாயுள்ள வாசனையுடையவர்க்கு லகுதேக அநுபவம் அவசியம்பவிக்கும் அதுபோலப் பிரபோத அதிசயத்தால் வாழும் யோகிகட்கு முண்டாம். கனவில் யான் சங்கற்பவடிவினனே தூலவடிவினனன்று என்று நினைவுண்டாயின் (இத்தகைய நினைவும் கனவில் தியானிகட்கு அநுபவ சித்த மாம் பாமரர்கட்குண்டாகாதாம்) தன்னிச்சைப்படி ஆகாசகமனுதியாற் றலுற்று எத்தகைத்தாக அத்தேகம் பவிக்குமோ அத்தகைத்தாக இது பிர போதத்தாலாம். சர்வஜநங்கட்கும் பிரிய மாகிய தேகத்திற்குப் பாதகமாக வுண்டாம் ஞானம் அநர்த்தமே யாமெனின் ஆகாதாம், இரஜ்ஜுவின்கண்ணே புஜங்கம்போல மயக்கமாத்திரமாகவே யிது தோற்றுகின்றது, இதுநஷ்ட மானுல் என்னநஷ்டமாய்விடும் இது உண்டானுல் என்னவுண்டாய்விடும்; இப்பி வெள்ளி யிரிந்தபோது எவரேனும் சோகித்ததுண்டோ! ஹேபகவன் இந்த நிர்ணயம் இவ்வாறுக நடந்தகதை விஷயத்தைக் கூறவேண்டும்; பூர்வலீலை யும் அபிநவலீலையும் பதுமகிரகத்தில் வந்து கலந்தபின் பதுமக்கிரகத்திலிருந்த வாஸ்தவ்யமான ஜனங்கள் அந்தலீலையை ஆதிவாகிகதேகத்தோடு கூடியிருத்த லின் காணமுடியாதிருப்பினும், இந்த ஜனங்கள் என்னைக்காணவேண்டும் என் பதான அவளுடைய சத்தியசங்கற்பகாரணத்தானே பார்ப்பார்களாயின் என் னென்றுணர்வார்கள் அவளேயிவள் இங்கே யிருக்கின்றுளெனவுணர்வார் களா? அல்லது அபூர்வதேவதையிவள் எவளோ வந்துளாள் என ஜேஷ்டசகு மாதிகள்போல விஸ்மயத்துடனிருப்பார்களா? எனஸ்ரீ இராகவர்கேட்ப முதற் கற்பத்தைப்பற்றியே ஸ்ரீவசிஷ்டபகவான் உத்தரமருளுகின்றுர்:—ஹேஇரா கவா! இவ்விடத்திற்றுனே துக்கித்துக்கொண்டு இராணியானவளிருக்கின்றுள் என்றவர்கள் எண்ணியிருக்கின்றுர்கள், இரண்டாவது லீலையைப்பற்றியோ சகிமார்கள்யாரோ இவள்வேறே எங்கிருந்தோ வந்திருக்கின்றனள் என் றெண்ணுகின்றுர்கள். இரண்டாவது லீலையபூர்வமாதலின் இவள்யார் எங் கிருந்து வந்தனள் இவள் நன்னடக்கையுடையவளா? புன்னடக்கையுடைய

வள்ா? உண்மையளா? இன்மையளா? என்பதாதிசந்தேகமேன் அவர்கட்குண்டாகவில்லையெனின்? இதன்கண்ணே சந்தேகம்யாது கிடக்கின்றது இவர்கட்கு, அவிவேகத்தோடுகூடிய பசுக்கள் கண்டதைத்தாண்டாமல் முன் கண்டபதார்த்த அனுசாரமாகவே விவகரிக்கின்றன விசாரமற்ற இவர்களைப் பற்றி யியம்புவானேன். இவர்கட்கிதுவிடயத்தில் விசாரமுண்டாகாமைக்கு யாது ஏதுவெனின்? தூலஅபிநிவிஷ்டத்தன்மையும் சாரதார்ப்ய சூக்குமத் தன்மையாதி யின்மையுமே ஏதுவாம் இதனைத்திருஷ்டாந்தத்தாற் காட்டுதும், பாலகனால் விருக்ஷத்தைத் துளைக்கும்பொருட்டு எறிந்த காய்ந்தமட்பிண்டம் சென்று தன்னைக்கெடுக்கும்விருக்ஷத்தை வஞ்சித்துற்று அம்புபோல உள்ளேபுகவுமில்லை, சேற்றுப்பிண்டம்போலப் பற்றுறவுமில்லை, கல்லைப் போலச்சிறிது காயப்படுத்திச்சுயமாக மீண்டுகாயப்படுத்தும் ஆற்றலுடையதாயிருக்கவுமில்லை, மற்றேசீககிரமாகத்தானே சென்றுதுளாம், அதுபோல அச்சனங்களும் ஞானமில்லாதவர்களாகலின் அஞ்ஞானிகளே தற்பாவமுள்ளதாகவே உண்மையாக அஜங்களாயினும் பசுக்களைப் போன்மையின் அஜபசுக்களேயாவர்கள் கோமளப்பான்மையால் உள்ளே புகுந்துவிசாரிக்கும் ஆற்றலற்றவர்களாவர்கள் "இது அன்னியமெனவும் அன்னியன்யானெனவும் யாவர் அன்னியமாகத்தேவதையை யுபாசிக்கின்றார்களோ அவர்கள் அறிவதில்லை பசுவொப்பர்" என்றுமறையுமறைகின்றது; அவர்கட்கு விசாரம் உண்டாகாததற்குக் கேவலம் அஞ்ஞானமே காரணமன்றாம், மற்றோ, அவ்வாறே சரீரங்களும் காமகரும வாசனைமுதலியவையும் ஒத்தனவாகப் பசுகட்கேபோல உளவாமென விசாரமுண்டாகாமை பொருத்தமுடையதேயாம். (அஞ்ஞபசுக்களெனப் பாடமாயின் தாமஞ்ஞர் அஞ்ஞதேவதைகட்குப் பசுக்கள்எனப்பொருள்கொள்க.) யாவர்கள் விசாரிக்கின்றார்களோ அவர்கட்கு முறையாகத்தத்துவபோத உதயத்தால் அவற்றிற் பாதிதத்தன்மையுண்மையின் ஆதிபௌதிகத்தன்மைப் பிரத்யயமேயின்றாம், சந்தேகாதியவைவும் வெகுதூர்த்தகலும்; சொப்பனதேகமானது ஜாக்கிரவுதயத்தில் எவ்விடத்திற்றான் ஓடிப்போமோ தெரியவில்லை, அதனாலது அசத்தியமேயாகும், அது போலவே யீண்டாதிபௌதிகமுமாம், திருஷ்டாந்தப்பிரசங்கத்தானே, சொப்பனவிடயங்கட்கு மூலாஞ்ஞானயாதமில்லாமல் முற்றினும்பாதமானது சம்பவியாமையானே சிலவிடத்தில் மறைந்துள்ளதற்கு நிலைபேறுண்டாம் அஃதெங்ஙே? ஹேபகவன்! சொப்பனசிகரி பிரபோதகாலத்தில் எங்கேதான் செல்கின்றதோ, இது விஷயமான சமுசயத்தைச் சரற்காலமேகத்தைக் காற்றேபோலஅகற்றவேண்டும்; என்று ஸ்ரீஇராகவர்கேட்ப, சொப்பன பதார்த்தங்களும் மனோரத பதார்த்தங்களும், ஜாக்கிரத் வாசனையைத் தாங்கிய அவித்தையுபகிதஜீவசித்தின் காரியங்களாகலின் ஆண்டேமறையுமென ஸ்ரீவசிஷ்டபகவான் கூறுகின்றார்:—ஹேஇராகவ! சொப்பனமயக்கினும் மனோராச்சி

யத்திலும் உள்ளபர்வதாதி பதார்த்தங்கள் அறிவினுள்ளே அசைவுகள் அநிலத்தேபோல அடங்காநிற்கும். அசைவற்ற வாயுவினுள்ளே அசைவுற்ற தடங்குவதேபோலத் தத்துவமான சொருபாந்தர சூனியங்களான கனப்பொருள்கள் சித்தைமலத்தைப்போன் மறைக்கும் அஞ்ஞானமாகிய தமது பாதானத்தின்கண்ணே புகுகின்றன. இவ்வண்ணமாகவே அறிவே அறியப்பெருததாகிக் கருமவசத்தால் ஒவ்வொருபோது கனுப்பொருள் வடிவமாயிலங்குகின்றது; சொப்பனுதியர்த்தப்போலியாக வுணர்வேமுற்றினும் பொலியும் பொலியாததோ அதனுனே ஒருமையை யதன்வடிவமாயடையும். விவேகித்துநோக்கின் சொப்பனப்பொருள்கள் உணர்விற்கயலாகவின்ரும்; நீரும் நெகிழ்வும் வேறுபடாததேபோலவும் அசைவும் அநிலனும் அயலாகத்தேபோலும் ஒருகாலத்திலும் உணர்வும் சொப்பனப்பொருளும் வேருகாதாம். ஆண்டு அன்னியம்போலப் பொலிதல் கேவலம் அவித்தையினுலேயாம் அதுவே சமுசாரமாம், யாதுஆண்டு இருப்பதுபோலத் தோற்றுகின்றதோ அதுவேமிகுந்த அஞ்ஞானமாம், அதுவே பொய்யுணர்வு வடிவமாகவுதித்த இச்சமுசாரமென்றியம்பப்படும், உலகப்பிரசித்த தண்டசக்கிராதி சககாரிகாரணங்களானே யுண்டாகாமையானும் கனுப்பொருள்கள் பொய்ம்மைமேவும்; சககாரிகாரணங்களிலவாகவே கனவில் உணர்வு கனுப்பொருள்கட்குப் பயனற்றவேற்றுமை யெத்தகையதோ. சககாரிகாரணத்தோடுகூடிய நனுப்பிரபஞ்சத்திற்குண்மையடைவுறுமாலோ வெனின்? உருதாம், சொப்பன மெப்படியோ அப்படியே இச்சாக்கிரமுமாம் இதன் கண்ணே ஐயமுறவேண்டிய அவசியமில்லையாம், சொப்பனத்திற்புரம் அசத்தாக விளங்குகின்றது சர்க்காதியால் அசத்தாக ஜகத்திலங்குகின்றது, இப்போது சககாரியாதிகளிருந்தபோதினும் ஆதிசர்க்கத்தில் அஞ்ஞானவுபகித ஹிரணிய கருப்ப சம்பந்தியறிவுக்கு வேருக இல்லாதபடியினுலே சொப்பனத்திற் கொப்பேயாம். பிரபஞ்சமானது சத்தியமாகவிருக்கும் பக்ஷத்தில் உணர்வேபோலச் சித்துத்தன்மையை யடையுமாகலின் சித்துவிடயத்துவ வியாகாதமுமாமன்ருே! சத்தியமாகவிருக்குமாயின், சொப்பனத்தன்மையின் சொருபஅவபோதத்தால் உதிதமாயபிரபஞ்சம் உணர்வாலுணரப் பெறுகின்றது. இவ்வாறுணரம்பெறமுடியாமலன்ருே போய்விடும்; மேலும் உணர்வு உண்மையை விட்டுப் பிறழாது, பொருள்களோ பிறழுகின்றனவென வுண்மைகளல்லவாம், சித்தானது நித்தியசத்தியமாயிருப்பது சொப்பனுர்த்தங்கள் அசத்தியமாகவே, யிருக்கும் தத்துவஞானத்தினுலே பாதிக்கப்படுவதனுலும் சத்தியமாகாவாம் சொப்பனபர்வதமானது சடிதியிலேயே சூனியமாகிப் போகின்றது அணுமாத்திரமும் மிஞ்சுவதில்லை, விழிப்பும் தத்துவவுணர்வும் உளதாகியவழி ஞானுப்யாசமுறையானுதல் ஈசுராதியனுக்கிரகத்தாற் சகசமாயாதல் ஆதிபௌதிகம் அசத்தாய்ப்போய்விடும், ஆயின் எங்ஙனம் கிளியின் ஞிமிபிச் சூரியமண்டலஞ்செல்லுந்தரிசனமும், ததீசி முதலானவர்களின்

மிருததேகதரிசனமும் எங்ஙனமுங்கூடும்? இதுபறந்ததே இறந்ததோ வெனப் பார்ப்பார்பக்கத்திலிருப்போர், பாதிக்கப்பட்ட ஆதிபௌதிகதேகத்தோடு கூடியதத்துவஞானியைத்தத்தமது வரவற்ற அஞ்ஞானத்தினாலே இம்மையை யடைந்தஜனங்கள் இஷ்டப்படி காண்பர்கள் தத்தமது அஞ்ஞானகற்பிததே கமே அவர்களாற்காணப்படும் ஞானிதேகமன்றாமது. கூறியபொருளை யனு மானத்தினானும் திடஞ்செய்து ;காட்டுவாம், இந்தசிருஷ்டிகளாகியதுவைத் திருஷ்டிகள் பொய்த்திருஷ்டிகளேயாம். மோகதிருஷ்டிகளாகலின், இந்திர ஜாலமயமான மாயாமாத்திர திருஷ்டிமயக்கமாத்திரமேயாகுமென்பதுபிரசித் தம், சொப்பன அனுபூதிகள் அர்த்தசூனியங்கள் என்பதுகண்கூடாம், பூர்வ பூர்வ பேதப்பிரமதரிசியாய புருடனுக்குத் திடதரபேதசமஸ்கார உதயத்தால் மரணாந்தபோதத்தில் அதாவது பிராணன் கிளம்பும் முற்கணத்துண்டாம் வரும் போகானுகூல அர்த்தப்பிரதிபாசத்தில், சமஸ்தமான சொப்பன அனு பூதி சதிருசமாகிய இப்புடசர்க்கத்தோற்றங்கள் ஆதிவாகிகசரீரத்துள்ளனவாகி மனோமாத்திரத்திருப்பனவாயினும் பிராந்தியினாலே கானலாற்றின் யிரவாக முறையானே பொய்யாக வெளியிற் போலத்தோற்றுகின்றன உண்மையாக மனதிற்கு வெளியே கிடையவே கிடையாவாம்.

57-வது சொப்பனார்த்தத்தின் விசாரவருணனம் முற்றிற்று.

---

## 58-வது பதுமஜீவன வருணனம்.

இப்போது காலமும் சமாதியிலிருந்தலீலையின்றேகவிநாசனமும் லீலை யின் சம்பாஷணமும் மன்னவன் ஜீவனமும் வருணிக்கப்படும். இந்தப்பிர காரம் ஸ்ரீ இராகவரது வினாக்கட்கு விடைகூறிக்கூறிவந்தகதையின் சேடத்தை வருணிக்கும் வாஞ்சையுற்ற ஸ்ரீ வசிஷ்டபகவான் சர்க்கமுடிபுவரை கூறத் தக்க பொருட்பொருட்டுப் பூமிகை கூறுவதாவது :—இதற்கிடையில் ஞான தேவியார் விதூரதசம்பந்த ஜீவனைமீண்டும் சங்கற்பத்தினாலே விரைவிற்றடுத் தனர், அமூர்த்தமானது சங்கற்பமாத்திரத்தாலே எவ்வாறு தடுக்கப்படு மெனின்? மனத்தினசைவை நிறுத்துவது போலாம். ஹேபரமேசுரியே! இந்தமாத்திரத்தில் யான் சமாதியில் லயமடைந்தபின்னர் மகிபாலன் சவமாக விருந்தபின்னர் இப்பதும சம்பந்தசிருஷ்டியின் கண்ணே எவ்வளவு காலஞ் சென்றுளதெனக்கூறவேண்டும் என லீலைபிரார்த்திப்ப அதற்கு ஸ்ரீ தேவி யருளுவதாவது ஹே வரவர்ணினீ, இச்சிருஷ்டியின் கண்ணே மாசமோ சென் றது நினதுவாசக்கிருகத்தில் நினது தேகத்தினுடைய காப்பின் பொருட்டு இருந்தவிந்த இப்போது துயிலும்சேடியரைக்காண்டி! முன்னர் லீலையின் தன தஞ்ஞானகற்பிதமாய்த் தனதனுபவ சித்தமாய தேகத்திற்குத் தத்துவஞானத் தானே பாதிதத்தன்மையிருந்தபோதினும் பிராரப்தசேடபோகப்பொருட் டுத்தோற்றுகின்ற ஆதிவாகிகத்தகைமை வருணிக்கப்பட்டது. இப்போது அன் னியரது அஞ்ஞானகற்பிதமாய் அன்னியரது அனுபவசித்தமாய தேகத்தின்

விருத்தாந்தத்தைக்கேட்டி ! ஈண்டிருந்த நினது தேகமானது என்னஸ்திதியை யடைந்ததென்றால் அந்தத்தேகம் பதினைந்து நாளாகவும் வேர்த்துநனைந்து பிராணத்தடையா லோங்கியெரிசாடராககினியால் தகிக்கப்பட்டு நீரோவியாகப போய்விட்டது ; விட்டபின் முறையாகக்காய்ந்து ஜீவனற்றதாகி நன்றாகக் காய்ந்த சருகுபோலப் பூமியின் கண்ணே விழுந்தது, காட்டகுட்டியம் ஒப் பதாகிப் பனிபோற் சீதளித்துச் சவமாகிக்கிடந்தது , கிடந்தபின் மந்திரிமார் களெல்லாம் கூடிவந்து தேகமிருந்து மிகவுங்கெட்டுக்கிடக்கும் நிலைமையைக் கண்டு இறந்தனளிந்த இராணியெனத் துணிந்து தாமேகிருகத்தைவிட்டு வெளிப்படுத்தினர்கள், இதுவிஷயத்தில் அதிகமாகச்சொல்லிப் பயன் என்னே கொண்டு சென்று சந்தனக்கட்டைகளாற் சிதை சமைத்து நெய்வார்த்துத் தீமூட்டுவிரைவிற்சாம்பன் மயமாயது. பின்னர் இராணியானவள் இறந்தனள் எனப் பெரிதும் ஆகுலத்தோடும் அழுதுக்கொண்டிருந்தநினது பரிவாரங்கள் எல்லாம் மேலுலகிற்குச் சென்றனளென்று எண்ணிக்கொண் டிருக்கின்றார்கள் (இராஜ சரீரமானது விகாரப்படாமலிருந்தது ஞானதேவி சங்கற்பத்தினாலும் அம்மன்னவனது அதிஷ்டவசத்தானு மென்றுணர்க) இப்போது தேகத்தோடு வந்திருக்கும் உன்னை யிங்கேகண்டு பரலோகத்திலிருந்து வந்துவிட்டனள் என்று பேராச்சரியத்தை யாவருமடைவார்கள் ; நினது திவ்ய சரீரதரிசனத் தானும் பரம ஆச்சரியத்தை யடைவார்கள்; ஹேகுழந்தாய்!நீயோ அத்தேகத் தோடும் சத்திய சங்கற்பத்துடன் அதிநிருமலமாகி மனுடராற் காண முடியாத படித்தாயும் காணப்படுவாயாகலின் அதன்பேரில் நினது தரிசன விடயத்தில் மனம்ரமித்து ஆண்டுச் சித்திரமாகத் தோற்றும் திவ்யசரீரத்திற்குப் பூர்வ தேகாகாரத்தன்மை யிலதாகவே அவர்கட்குப் பிரத்தியபிஞ்ஞை கூடாமை யின் அதனுகாரம் அவசியம் வேண்டும் அதன்கண்ணேயாது ஏதோ அதனைக் கேட்டி, எத்தகைய ஆகாரவாசனையைத் தேகப்பொருட்டு நீ யடைந்திருந் தாயோ அதுவே நினக்குருவமாகத் தோற்றுகின்றது அதனால் நினக்கு வடிவம் முற்போன்றதேயாகும்; தங்களுடைய வாசனையின் அனுசாரமாகவே யாவரும் யாவற்றையுமே காண்கின்றார்கள், திருஷ்டாந்த மீண்டவிசம் வாதி யாம் பாலவேதாளதரிசனம்யோது முணரலாம். அத்தேக வாசனைத் தன்மை யேல் என்னால் அதே தேகம் மன்னவனுக்கே போல ஏன் அடையப்படவில்லை யெனின்? தத்துவஞானப் பெரும்பேறுற்ற சுந்தரீ நீ ஆதிவாகிக தேகத்தை யடைந்துவிட்டாய் இத்தேகம் மறந்ததேயாகும் பழையவாசனையில்லையென்று சொல்ல முடியாது, எல்லாவாற்றானுமே மறந்திருக்கும் பக்ஷத்தில் ஆதிவாகிக தேகத்தில் அதனுகாரத்தன்மையே யசித்தியாகுமாகலின் அபவாசனையின் றென்றே கூறவேண்டும், அவ்வாசனை யத்தியந்தமகன்றுவிட்ட தென்று கூற முடியாதாம். ஆயினிதற்கு ஆதிபௌதிகத்தன்மையும் ஏனுண்டாகமாட்டாது எனின்? ஆதிவாகிகதிருஷ்டிரூடமானவர்கட்கு ஆதிபௌதிகம் மிகவுஞ் சாந்தி யையடையும், ஞானிக்கு ஆதிபௌதிகமிருப்பதாக அன்னியர்கள் பார்த்த

போதினும் ஆகாயத்திற் சரற்காலமேகம் போலவாம்; ஆதிவாகிகத்தகைமை ரூடமான யாவருமே தேகமுடையவர்தாம், ஜலமிலாத அம்போதசமானமும், கந்தமற்ற புஷ்பசமானமும் ஆவர். வாசனையானது அத்தியந்தம் கெட்டுப் போயின் ஆதிவாகிக தேககற்பனையுமின்றாம், சத்வாசனையுடையவனுக்கு ஆதி வாகிக வுணர்வானது ரூடமாயின் ஆதிபௌதிக தேகமானது, கருப்பநற்பேறு யவ்வனத்திற்போல மறக்கப்படும். இவ்வாகாயத்தில் நமக்கு இன்று முப்பத் தொருநாள்கள் ஆயின இத்தாசிகள் எம்மால் நித்திரையாலிப்போது மோகிக் கப்பட்டுளார், சத்தியசங்கற்ப விலாசத்தால் லீலையின் பொருட்டு நாம் தரிசனுந் தருவோம் வருதி விவகாரங்களையும் ஒழுங்குபடுத்தி நடத்துவாம். என்றிந்தப் பிரகாரம் ஹே இராகவ! இந் நம்மை விதூரதலீலை காணுகவென ஞானதேவி நினைத்தமாத்திரத்தில் பிரகாசித்துக்கொண்டிராநின்ற ஞானதேவியும் லீலா தேவியும் காணப்பெற்றனர். பின் அவ்விதூரத லீலையானவன் நல்லாகுலவிலோ சனமுடையவளாய் அத்தேஜசின் பெருக்கால் விளக்கமுற்றிருக்கும் வீட்டை இனிது பார்த்தனள், அவ்வீடானது நெகிழ்ந்த சீதளச்சுவாலையின் பிரகாச வசத்தாற் சந்திரபிம்பத்தினின்றும் மிக வெளுத்த கிளம்பிய வொளி பரவியது போலிருந்தது, அவர்களுடைய அங்கத்தொளி நெகிழ்வு நிறைந்த சுவர் களோடு கூடி யிருத்தலின் பொற்பால் பூசியதுபோல இருந்தது. வீட்டை யிவ்வாறு நோக்கியபின் முன்னர் லீலாதேவியையும் ஞானதேவியையும் கண்டு எழுந்து மிக மகிழ்வுற்றவளாகி அவர்களுடைய பாதங்களில்வீழ்ந்து நமஸ்கரித் தனள், ஹே வாழ்க்கையை வழங்குந் தேவிமார்களே! எனது மங்களம் பெருக்க வந்தமங்களங்களே நீங்கள் நீடூழிவாழக்கடவீர்களாக! ஈண்டு முன்னர் யான் நங் களுடைய பரிசாரிகைபோலவந்துற்றேன் என்றவள் கூறியபோது மதோன்மத் தயவ்வனத்தோடு கூடிய அம்மானினிகள் கொடிகள் மேருவின் சிகரத்திலுட் கார்ந்தனபோலப் பொற்பீடத்திற் பொலிய வீற்றிருந்தார்கள். ஹே குழந் தாய்! நீ யெங்ஙனம் இத்தேசத்தைமுதலிலடைந்தாய்? அதுமுதலாக யாவற் றையும் கூறுதி! நீ யெம்மார்க்கத்தில் என்ன ஆச்சரியத்தைக் கண்டாய் அவ் விருத்தாந்தம் எங்கேநடந்தது? கூறுவாயாகவென்று ஞானதேவி கேட்ட தும் விதூரதலீலை கூறுவதாவது:— ஹே பரமேசுரியே! அந்த விதூரதகிருகப் பிரதேசத்தில் அவ்வியான் இரண்டாவது அதிதியின் சம்பந்தியாகிய விந்து வின் கலைகற்பாந்த சுவாலையினாலே ஹதமானதே போல அப்போது மூர்ச்சை யையடைந்தேன், அதன் பின்னர்ச் சஞ்சலமான இமைகளை மூடிக்கொண்ட விழிகளையுடைத்தானவளாயம்மூர்ச்சையின் கண்ணே சமமேனும் விடம மேனும் யாதென்றுமே தெரியவில்லை; (அனுபவித்ததை யகற்றலாகாமையின் சாக்ஷிபாவத்தானே யஞ்ஞானம் அறியப்பட்டதே யாகும் ஆகவேசிதான்ம லோபசங்கையின் அவசரமில்லையாம்.) பின்மரண மூர்ச்சையினந்தத்தில் வாசனை யாலினிது கற்பிக்கப்பட்ட பூர்வதேகத்திற்கொப்பான தேகரூபமாக அத்தி யாசத்தால் ஆவிர்ப்பூதமான வுடனே விரைவிற் சிற்ககனவுதரபூதாகாசத்தில்

பறந்ததாகக்கண்டேன். அதன்பின்பூதாகாசத்தில் காற்றும் தேரேறியயான் அதனல் மணரேகைபோல இவ்வாலயத்திற்குக் கொண்டுவரப்பட்டேன், எனது நாயகராலலங்கரிக்கப்பட்ட இவ்வீட்டை விளங்கியவிளக்கோடு கூடிய தாயும் அநேகம் பொருள்களாற் பகுக்கப்பட்டதாயும், மகா யோக்கியமாய் சயனத்தோடு கூடியதாயும் கண்டேன். இந்த விதூரதமன்னவன் புஷ்பத்தான் மூடப்பட்ட மேனியுடையவனுய்ப் புஷ்பவனத்தில் வசந்தம் போலத் தூங்குவதைக் கண்டுக்கொண்டிருக்கின்றேன். இம் மன்னவன் பெரும்போரில் மலேந்து மிகச்சிரமத்துடன் மிகத்தூங்குகின்ருர் என்னுங் கருதினுலே ஹே தேவேசுவரியான் இவரது நித்திரையைக்கலேக்கவில்லே, எனக்கனுக்கிரகஞ் செய்யவே கருதாநின்ற ஹேதேவியே! பின்னர் இவ்விடத்தில் தாங்களிருதேவிமார்களும் வந்தீர்கள் இவ்வாறு அனுபவித்ததைக் கூறினேன். என்று கூற அதற்குஞானதேவி இருவரையும் பார்த்துக்கூறுவதாவது:—மான்போன்ற அழகியநோக்கத்தையும் அன்னத்தைப் பழிக்கும் நடையையும் உடைய லீலேகளே! சவசயனத்தானத்தினின்றும் இந்நரபதியை யெழுப்புவோமாகவெனவுரைத்துப் பதுமினிவாசனேயை விடுவதேபோல முன் சங்கற்பத்தாற்றடைப்பட்ட அரசனது உயிரைவிடுத்ததும் அவ்வுயிர்காற்றைப் போலக் காணப்படாததாயினும் இராகாதிவாசனே யிலேகளோடு கூடியிருத்தலின் கொடியாகாரமுற்று மன்னவனது நாசியின் சமீபத்தை யடைந்து, மூங்கிலின் றுவாரத்தில் வாயுநுழைவதேபோலக் கிராணகோசத்தினுள் நுழைந்தது, கடல் மணிகளே வைத்திருப்பதேபோல நூற்றுக்கணக்கானதன் வாசனேகளே யுள்ளே யுடைத்தாயிருந்தது, ஜீவன் உள்ளேசென்றதும் அப்பதுமனுடைய முககாந்தி முன்போலவே வந்துவிட்டது மழையில்லாமல் வாடியபதுமம் மழைபெய்த வுடனே மலர்வதேபோலுமிருந்தது, முறையாக எல்லா அங்கங்களுமே ரசத்தோடு கூடியதாய்ப் பிரகாசித்தன. கொடிக் கூட்டங்கள் வசந்தகாலத்தில் மலர்வதேபோல அம்மன்னவனுடைய அவயவங்கள் விளங்கின. சரற்காலககனத்தின் கண்ணே கலேகள்முழுவதும் நிறைந்து சந்திரன்விளங்குவதேபோல வதனஇந்துவின் கிரணங்களினுலே மிகமிகவும் புவனம் பொலிந்தது. மகரந்தத்தை யுடையதுபொன் போன்றொளிரும் காந்தியையுடைய இரசமுறுமிருது பல்லவங்களே யசைப்பதேபோல அம்மன்னவன் தன்னுடைய இரசமுற்றனவாய் மிருதுவாயினவாயிருக்கும் அங்கங்களே யசைக்கத்தொடங்கினன். நிருமலமாயுருளும் விழிகளேயும், மனேகரத்தையும், சௌபாக்ய லக்ஷசாலிநன்னிலேமையையும் உடைத்தான கண்களேச் சர்வயுவனவடிவ விராட்டுத் தன்னேத்திரவடிவமான சந்திரசூரியர்களேத் திறந்துபார்த்ததே போலத்திறந்துபார்த்தான். விந்தமலே விருத்தியா யெழுந்ததேபோல மிகமலர்ந்த காயத்தோடும் எழுந்து யாவர் அங்கே யிருக்கிறவர் எனக்கனகம்பீரத்தொனியொடும் கேட்டனன். கேட்டதும் இரண்டுலீலேகளும் முன்னின்று மகாராஜா என்னுத்தரவோ அதுசெய்யக் கடமைப்பட்டிருக்

கின்றோ மென்றார்கள், அப்போதவ்வரசன் எதிரில் மிக வணக்கத்துடன் இரண்டு மனைவியரு மிருக்கக்கண்டனன். அவ்விருவரும் சமமான ஆசார முடையவராயும், சமமான ஆகாரமுடையவராயும், சமமான ரூபமுடைய வராயும், சமமான ஸ்திதியுடையவராயும், சமமான வாக்கியமுடையவரா யும், சமானமான முயற்சியுடையவராயும், சமானமான ஆனந்தமுடையவ ராயும், சமானமானஉதயமுடையவராயும் இருந்தனர். மன்னவன் நோக்கி நீயார் இவள்யார் இவள் எங்கிருந்துவந்தனள் எனக்கேட்டனன், கேட்கவே பூர்வலீலை அம்மன்னவனைநோக்கி ஹேதேவ! அடியாள் கூறுவதைக்கேட்பீர் களாகவெனக் கூறத்தொடங்கினள், தங்களுடைய பழையபட்டமகிஷியாகிய சகதர்மிணிலீலை யான் ஆவேன்,வாக்கானது அர்த்தத்திற்கு வாசகமாகச்சேர்ந் திருப்பதேபோலத் தங்களோடு சேர்ந்திருந்தேன்,இந்தலீலையோ இரண்டாவது பட்டமகிஷியாக விளையாட்டாய்த் தங்களுடைய உபயோகப் பொருட்டுப் பிரதிபிம்பமயமாய்ச் சுபமாய் என்னாற் சம்பாதிக்கப்பட்டவளாவள். மூன்று லகங்களையும் உண்டாக்குபவளாய்ச் சிவையாய்த் தங்கள் சிரோபாகத்திலிருக் கும் பொன்மகாசனத்தில் வீற்றிருந்தருளும் நமைக்காக்கு மிவ்வம்மை ஸ்ரீசரசு வதிதேவியாவள், நம்மளுடைய புண்ணியமுதிர்ச்சியினாலே யீண்டு நேரேஎழுந் தருளியிருக்கின்றனள், இவளுடையபெருந்தயையினாற்றான் அயலண்டமாம் பரலோகத்தினின்றும் மகிபதியாகிய தாங்களும்யானும் கொண்டுவரப்பட் டோம். என்பதைக்கேட்டுத் தாமரைக்கண்ணனாகிய அம்மன்னன் நன்கெழு ந்து தனது நீண்டமாலைகளும் ஆடையாதிகளும் தாழும்படி ஸ்ரீஞானதேவி யாரது பாதபதுமங்களில் வீழ்ந்து நமஸ்காரஞ் செய்தனன். சர்வஹிதத்தை யும் கொடுக்கும்படியான ஹேசரசுவதிதேவியே! உம்பொருட்டு நமஸ்காரம் வரங்களைக் கொடுக்கப்பட்டதாயே! கேட்டபரமார்த்த தாரணையையுடைய மதியையும் தீர்க்கமான ஆயுளையும் தனங்களையும் கொடுப்பாயாக; என இங் ஙன் வேண்டிக்கொண்ட மன்னவனை ஸ்ரீ ஞானதேவியார் திருக்கரத்தாற்றீண் டிக் கூறியருளுவதாவது:—ஹேமைந்த நீ இகலோகத்திலுண்டாவதாய நீண்ட ஆயுள் தனாதிஇஷ்டப்பட்ட அர்த்தங்கள் மிகமிகவுமுடையவனாகியிருத்தி, தத் துவமேதை யபிவியக்த பவனத்தானும் பாரமார்த்திகாத்ம தன்வடிவத்திதி யினாலும் அலங்கரிக்கப்பட்டிருத்தி, ஹேகுழந்தாய்! சர்வஆபத்துக்களும் சகலகெட்டகாரியங்களும் பாபபுத்திகளும் விநாசமெய்துக, உனக்கு நன்றாக அனந்தமான பெரும்பெரும் ஆனந்தங்கள் உண்டாகுக, உன்னுடைய ராஜ்ஜி யத்தில் ஜனசமூகங்கள் நித்தியம் மகிழ்வுடையவர் ஆகுக, உனது பிரஜைகளி டத்தில் எப்போதுமே சம்பத்துகள் வளர்ந்தோங்குக நிலைபெற்றும் நிலவுக,

58-வது பதுமஜீவன வருணனம் முற்றிற்று.

---

## 59-வது பதுமநிர்வாண வருணனம்.

இப்போது அரசனுடைய நல்லுயிர் பிழைத்தெழுந்த மகிழ்வின் முதிர் வால் அந்தப் புரத்திலும் அந்தநகரத்திலும் பெருமுற்சவமானது நடைபெற்ற தும், இராஜ்ஜியமும், ஜீவன்முக்தர்களின் நீண்ட முக்தியும் வருணிக்கப்படும். ஸ்ரீ சரசுவதிதேவி கூறிய வண்ணம் முன்னர் அரசன்யாது வேண்டிக்கொண் டானோ அதுஅவ்வாறே உளதாகுகவெனக் கூறிஅவ்வரண்மனையிற்றானே மறைந்தருளினள். விடிந்ததும் பங்கஜங்களோடும் சகலஜனமுகபங்கஜங்களும் மலர்ந்தன, அந்த லீலாதேவியை ஆலிங்கனஞ் செய்துகொண்டனன், லீலா தேவியும் முன்னரிறந்து பின்னர் மீண்டுமுயர்த்தெழுந்த நாயகனை மீண்டு மீண்டும் மகாநந்தத்தால் ஆலிங்கனஞ் செய்துகொண்டனள். அப்போது அவ்வரண்மனையானது மதமன்மதமந்தரமாக விருந்தது, ஆனந்தத்தாலே மதோன்மத்தராய்ப் பரவசசித்தராய் ஜனங்களெல்லாம் உலவுமிடமாயது, வாத் தியங்களின் வாய்ப்பாட்டுகளின் இன்னிசை மிகுத்திருந்தது, ஜயஜயவென்றும் மங்களம் மங்களமென்றும் புண்ணியதினம் புண்ணியதினம் என்றும் உண்டான கோஷமானது கும்கும்மெனவும் கர்கர்எனவும் மிகவியாபிக்கப் பட்டிருந்தது, சந்தோஷத்தினாலே புஷ்டியையடைந்த ஜனசமுதாயம் நிறைந்ததாயிருந்தது, அரசசேவக ஜனங்கள் அரசனைக்காணும்பொருட்டு நகரங்களினின்றும் கிரா மங்களினின்றும் வந்துகூடிய மண்டபங்களை யுடையதாயது. சித்தர் வித்தி யாதரர் விடுத்த ஆயிரக்கணக்கான புஷ்பவிருஷ்டிகளை யுடைத்தாயிருந்தது, மிருதங்கமுரஜகாகள (கார்ஹலமெனப் பெயரியவாத்தியவிசேடம்) சங்கு துந் துபித்தொனிக ணிறைவுற்றிருந்தது, மேலேயுயர்த்திய பெருங்கரங்களோடு யானைகள்செய்யுந் கர்ச்சனைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது, கவின்மிகுந்த நடனஞ்செய்யுங் காரிகையார்நிறைந்த மண்டபங்களில் புல்லாங்குழல் முதலிய தொனிகளாலும் பாடல்களாலும் கவின்வாய்ந்திருந்தது, பரஸ்பரம் இடித்துக் கொள்ளுதலானே விழுந்தஜனங்கள் எழுமுபாயவோசை மிகுத்திருந்தது, உற் சவங்கொண்டாடுபவர்கள் சூடிக்கொண்டும் தூவிக்கொண்டு மிகுமிகு புஷ்பா லங்காரங்களுடன் உலவிக்கொண்டிருந்த அலங்காரம் மிகுத்திருந்தது, மந்திரி களாலும் சாமந்தர்களாலும் நகரத்தவர்களாலும் தூவப்பட்ட பூப்பொறி முத் துக்கள் எல்லாப்பக்கங்களிலும் மூடிக்கொண்டிருத்தலின் சோமஅம்பரங்களை யுடையதாயிருந்தது, ஆகாயத்தில் இரக்தமயமான நர்த்தகிகளின் கரங்களால் நீண்டதாமரைநிறைந்த தடாகம்போல இலங்கியது, மகிழ்வினாலே மதோன் மத்த மங்கையரின் கழுத்தசைவிலாசத்தினாலே ஆடாநின்ற குண்டலங்கணிறை யப்பெற்றிருந்தது. பாதங்களிற் போட்டுக்கொண்டிருந்த புஷ்பக்குப்பைகள் நிறைக்கப்பெற்றிருந்தது, பட்டுவஸ்திரங்களாற் சரற்காலமேகவிதான சதிருச விதானங்களின் அலங்காரஞ்செய்யப்பட்டிருந்தது, வாராங்கனைகளின் வதனங் களால் நடனம்புரியும் சந்திரலக்ஷ அலங்காரம் அரண்மனைமுற்றத்தே யாற்றப் பட்டிருந்தது, இவ்வாறிருப்பத் தேசதேசாந்தரங்களில் இரண்டாவது லீலை

யாகிய இராணியும்பதியாகிய இராஜாவும் பரலோகத்திலிருந்து புராதன லீலா தேவியினலே கொண்டுவரப்பட்டார்கள் என்றுண்டாக்கப்பட்ட கதைப்பிரபந் தங்களை ஜனங்களெல்லாரும் கொண்டாடிக்கொண்டிருந்தார்கள். பதுமபூபதி தன்மரணாதி கதையைச் சுருக்கமாகக் கூறியதைக்கேட்டு இனிதுகொணர்ந்த நாற்கடனீரில் ஸ்நாநஞ்செய்தனன். பின்னர் விப்பிரரும் மந்திரிகளும் மன்ன வர்களும் அம்மகாராஜனை அபிஷேகித்தார்கள் (சிரப்பிரவாசத்தினின்றும் வந்தவனுக்கே போலும் பரலோகத்தினின்றும் வந்தவனுக்கு மீண்டும் பதாபி ஷேகம் மங்களப்பொருட்டாம்) அமரேந்திரர்த் தமது ராஜ்ஜியலாபப் பிரயத் தினங்கள் உண்டானததனுலேயே நகுஷன்தள்ளப்பட்டு மீண்டும் தமது இராஜ் ஜியவுதயத்தை யடைந்தபோது அமரர்செய்து கொண்டாடியதேபோல இம் மன்னவனையும் கொண்டாடினார்கள். பழையலீலையும் புதியலீலையும் இராஜா வும் ஜீவன்முக்த மகாபுத்தியுடையவர்களாய்ச் சுரதங்களாற்போலப் பூர்வ விருத்தாந்தங்களைப் பேசுவதால் ரமித்துக்கொண்டிருந்தார்கள். (ஈண்டுச்சரூப ஏகசேஷவிவாதம் மூலசுலோக முளதாயவழியே பயனன்றிப் பயனுகாமையின் விடுத்தனம்) ஸ்ரீசரசுவதிதேவியின் றிருவருளாலே அரசனுக்கு மீண்டுமுயிர் பெற்றமையும் இராஜ்ஜியப்பிராப்தியும் அணுகுமாயின் அவ்வடைவு தெய்வத் தாலே யன்றோ ஆயது தன்முயற்சியானே அன்றன்றோவெனின்? தன் முயற்சி யாற்சம்பாதிக்கப்பட்ட ஸ்ரீஞான தேவியாரின் றிருவருளானே அஃதாயது, ஸ்ரீ சரசுவதி யாராதனமுதலிய தன்முயற்சியா லாக்கப்பட்டதேயன்றோ அத் திருவருள் நிர்நிமித்தமாயுண்டானதன்றாம், பதுமமகீபதியின்கூறியமுறையே யாய மூன்றுலகமும் புகழும்படியான மகத்தான கீர்த்தியும் மீண்டுமுயிர்பெற்ற பெற்றியும், இராஜ்ஜிய அடைவும்; ஞானமுற்றின்மையும் முயற்சியானே யாம். அம்மன்னவன் ஸ்ரீஞானதேவியா ருபதேசித்ததாலுளதாய ஞானத் தால் தன்வடிவுணர்ந்தவனுகி இருலீலாதேவிமார்களோடுகூடி யெண்பதினாயி ரம்வருடம்வரை யங்குமிகுந்தபுகழோடு கூட அரசுபுரிந்தனன். ஜீவன்முக்தர் கள் இவர்கள் என்று சொல்லும்படியாக எண்பதினாயிரம் வருடம் அரசுபுரிந்து பின்னர் விதேகமுக்தியையடைந்து ஆநந்த அறிவுமயமே யாயினர். அந்த இராஜ்ஜியமானது பிரஜைகளினது நித்தியஅப்யுதயங்களால் நிர்த்தோஷமா யிருந்தது, அறிஞர்கட்குச் சாஸ்திர அனுசாரியாய் நடந்துவந்தமை கொண்டு மனோகரமாயிருந்தது, குலபரம்பரைக்கு நன்கு தக்கதாயிருந்தது, தனக்குப் போகங் கீர்த்தி அறமுதலியவற்றின் காரணமாகலின் இதமாயிருந்தது, ஜனங் களின் அனுரஞ்ஜனத்தாற் கோமளமாயும் சாமர்த்தியமுடையதாயு மிருந்தது, அதனானேயே அகிலஜனங்கட்குத் தண்மகிழ்வைத் தருவதாயிருந்தது, இத் தகைய தனது இராஜ்ஜியத்தை நீள்காலம் அரசுபுரிந்து இனியதம்பதிகளாகிய லீலாதேவியும் பதுமமன்னனும் நுகர்வினைப் பலபோக ஈற்றில் விதேககைவல் லியத்தை யடைந்தார்கள். முன்னர் மூவர் ஜீவன்முக்தர்என மொழியப்பெற்ற னர் ஈண்டிருவரே முக்தர்என வுபசங்கரிக்கப்பட்டதெங்ஙன் கூடுமெனின்?

மன்னவன் வாதனைமயமான இரண்டாவது லீலைக்குப் பூர்வலீலையின் பிரதி பிம்பமயமாயிருக்குந் தன்மையே யுண்மையின் அவளுள்ளடங்கிவிடுவள் என்றுணர்க.

59-வது பதுமநிர்வாண வருணனம் முற்றுப்பெற்றது.

---

## 60-வது பிரயோஜன வருணனம்.

இப்போது முதலில் விஸ்தாரமாக லீலையுபாக்கியானப் பிரயோஜனம் வருணிக்கப்படும், பின்னர்க்காலாதி சாமியவைஷம்மிய காரணமும் வருணிக்கப்படும் திருசியம் இல்லையென்னும் உணர்வினுனே மனத்திலுள்ள திருசிய வாசனை கழியுமாயின் அக்கால்மேலானமோக்ஷம் அடையப்பெற்றதாகும் என்பதாகநூற்றொடக்கத்தில் பிரதிஞ்ஞைசெய்யப்பட்ட தன்சித்தியே இதனதுமுக்கியப்பிரயோஜனம் என்றுணர்தி இராகவனே இதற்காகத்தானிப்பாவமற்ற லீலைகதையுனக்குக் கூறப்பட்டதாகும்,ஆகலின்ஜகத்தின்சத்தியத்தகைமையை விட்டொழிப்பாயாக சத்தியத்தன்மையைத் தியாகித்தமாத்திரையானே எங்ஙனந்திருசியநீக்கமாகுமெனின்? திருசியசத்தை சாந்தமாகவேயிருக்கின்றது அதனைக்கெடுக்கவேண்டுமென்பது பொருந்தாதாம், இருந்தாலன்றோ கெடுப்பதிற்கிலேசமாகும் இல்லாததற்காகக்கிலேசம் ஒருகாலத்திலும் உண்டாவதே யில்லை, சத்தியத்தகைமைப்புத்தி யிருக்கும்வரையிற்றான் இதுவும் அன்று இதுவும் அன்று எனவபவாதஞ் செய்வதிற் கிலேசமாகும்,நியாயங்களால் மித்தியாத்தன்மை நிர்ணயஞ்செய்வதிலே யாதொருகிலேசமுமில்லையாம். சிதாகாச ஞானத்தினுனே ஞேயவடிவமாகவிருக்கும் திருசியம் கூறியமுறையே அபவாதஞ் செய்தலால் அகண்ட ஏகரசத்தன்மையையடைவுறும் உற்றதை நோக்கித் தத்துவஞானி ஆகாசசமமாக விளங்கிக்கொண்டிருப்பன். ஜடமாயிருக்குந்திருசியத்திற்கு எங்ஙனம் உணர்வொடேகரசமாயிருத்தல் கூடும் என வினவின்? ஆதிசர்க்கத்தில் அறிவுமாத்திரரூபமாகவே சுயம்புவினுல், தன்னிடத்திலேயே திருசியவிவர்த்த கற்பனை செய்யப்படுதலின் ஆலங்கட்டிதடித்திருந்தபோதினும் நெகிழ்ச்சிப்பான்மைக்கு யாதொருவிரோதமுமில்லாததே போலப்பொருந்துமென்றுணர்க; பிருதிவியாதிரகிதமாக இது சுயம்புவினுலே சிற்பிரகாசத்தினுற் சாதிக்கப்பெற்றதாம் தன்னிடத்திலேயே, சத்தியமாயிருக்கும் பக்ஷத்திலெங்ஙனிது தன்பாலிருக்கும் ஆகலின் விவர்த்தமேயாம் அங்ஙனமாயிற் பிரயத்தினமில்லாமலே ஆலங்கட்டியின் கடினதைபோலத்திருசிய விலயம் ஏன் ஆகமாட்டாதெனின்? சிருஷ்டியையுணர்ந்த சுயம்புசைதன்ய வடிவமான நதியின்கண்ணே அதனேகதேசபூதமானயாதொரு ஜீவவுணர்வுளதோஅது எத்தகைபிரவிருத்திப்பிரவாகத்தால் எத்தகையகாரியகரணபலபாவப்பொருட்டு முயலுமோ அத்தகைய காரியகரணபலபாவமாக விரிந்து விரிந்து தன்முயல்வின்படியே அவ்வாறேவியவஸ்திதமாம் அது எதுவரை விரோதமான நிவிருத்தி முயல்வினுலே தடைப்படவில்லையோ அதுவரையும்

நிவிருத்தியையடையமாட்டாது. பிரஹ்மாவினுலே சிருஷ்டிக்கப்பட்ட இவ்வுலகம் எங்ஙனம்ஜீவமுயற்சினல் தடைப்படுத்தமுடியும், மகாராஜவின் ஆணையினுலே சித்தமானது தனிச்சனமுயல்வினுலே தவிர்க்கமுடியாதன்றோ வெனின்? நிருமலமாகவிருக்கும் சிதாகாயமாகிய பிரஹ்மவடிவத்திலேயே சிதாகாயத்தின் மாயிகத்தோற்றமாமிவ்வுலகம் எனவுணரப்படுகின்றபடியினுலே பிரமசிருஷ்டமாயினுமிது துயரிச்சின்னப்பிரஹ்மபாவபொருட்டு அவ்வாறுணரப்படுவதில்லையாம் மற்றே, மதியாதிபரிச்சின்ன உபாதிவசத்தால் அத்தியந்தபரிச்சின்ன ஜீவப்பொருட்டாம், ஆகவே அதனதுபிரயத்தின ஜன்னிய கருமபோகப்பொருட்டே பிரஹ்மத்தின் கண்ணே யதன் ஆரோபமாம், அங்ஙனமாகவே அதனதுபிரயத்தினஜன்னிய போதத்தால் திருசியத்துடைப்புச்சம்பவித்தலேகூடும். இவ்வாறுற்றபோது சத்தைநியதிவாசனை முதலியவற்றுனும் திருசியபய அடைவுஇல்லையாம், இவ்வண்ணம்இவையாவும் வாளாமயலே யாகலின் சத்தைதானென்னேவாசனைதான் என்னே, ஆஸ்தைதானென்னே, நியதிதானென்னே, அவசியம் பவிக்கத்தக்கதுதானென்னே, கூறுதி. மாயாதிருஷ்டியில் இவையாவுங்கண்டபடியே இருப்பதாயினும் பரமார்த்ததிருஷ்டியில் யாதொன்றுமே அகண்டசிவத்தைத்தவிர இன்றும், அளவில்லாத இவையாவுமே மாயையினது காரியமாகலின் மாயையேயாகும் மிச்சிருஷ்டி, உண்மையாகவோ மாயையேயில்லையாம். ஹேபகவன்! அகோ அகோமேலாயதிருஷ்டியானது தேவரீராற்காட்டப்பட்டது, காட்டக்கினியினுலே தகிக்கப்பட்ட திருணக்கூட்டங்கட்குத் தாகசாந்தியாகும்போது மீண்டும் பசிய அங்குரமுண்டாம் பொருட்டுச் சந்திரகலையெப்படியோ அப்படியே சமுசாரதாபத்தானே தப்தர்கட்குச்சாந்திவிவேகமுண்டாகும் பொருட்டு இத்திருஷ்டி மிக அழகியதாயுதவும். அகோ அகோ! நீள்நாட்பின்னின்று அறிய வேண்டியதாய அக்ஷதவஸ்துவையறிந்தேன் எவ்வாறு இது யாதிது, எத்தகையதிருஷ்டாந்தங்களாலுணரத்தக்கதிது, எத்தகைய அதிகாரிகளாலுணரத்தக்கதிது, எப்பிரமாணத்தாலுணரத்தக்கதிது, எக்காலத்திலறியலாமிது என்பதையு முணர்ந்தேன், ஹே மறைமுனிவரே! ஜகத்தத்துவத்தை விகற்பித்து விசாரித்து உபாதிசாந்தியினுனே சாந்தியடைந்தவன் போலாயினேன், நித்தியநிர்வாணசொரூப அடைவினுனே விடுபட்டவன் போலுமாயினேன், இக்கதை மிகவும் ஆச்சரியத்தை யுடையதாக இருக்கின்றது, சுருதிகள் காண்பித்தஞானங்களிற் பேருரையுமாகும், யாவற்றையு முணர்ந்த வேத பகவானே! இவ்வையந் தீருமாறு அடியேனுக்கு கருளல்வேண்டும், தங்களுடைய வாக்கியாமிருதத்தைச் சுரோத்திர பாத்திரங்களால் எவ்வளவு அருந்தியபோதினும் திருப்தியேயாவதில்லை. முன்னர்மொழிந்த வசிட்டாண்ட பதுமாண்ட விதூரதாண்ட சர்க்கங்களில் எக்காலஞ்சென்றதோ அதுகிரிக்கிராமத்தில் அகோராத்திரம் எட்டன்வடிவமாமென மொழியப்பெற்றதே, பதுமசர்க்கத்திலோ மாசமாத்திரமன்றே, விதூரதசர்க்கத்திலோ பகுவருடவடிவ

மன்றே ஆகியிருக்கிறது, இவ்வண்ணம் ஒவ்வொரு பிரஹ்மாண்டத்திற் கொவ்வொரு மாதிரியாகக்காலபேதம் லீலைநாயகற்கு ஆகவேண்டியகாரணமென்னை, ஒரே பிரஹ்மாண்டத்தில் மனுடர்களுடைய வருடம் தேவதைகட்குத் தினமென இளக்கமும், சிலதுச்சஜெந்துகட்கு அதேமகாதீர்க்கமும், சுயம்புவிற் கோகணமும், என ஒரேகாலமானது தேசகாலாதிபேதத்தால் விருத்தரூபமாக விருப்பதென்னை. அர்த்தசத்தை யேகரூபமாகியும் பிரதீதி விஷமத்தன்மை யெங்ஙனமாம்? என்னும் இவ்வையத்தைத் தேவரீர் தீர்த்தருளல்வேண்டும். தேயநீடியதில்லாததே போலக் காலதீர்க்கமுமில்லையாமென முன்னமேயிதற்கு விடை கூறிவிட்டோமே மீண்டும் வினவியதென்னையெனின்? ஓட்டிற்சலத் துளிபோல ஒருக்காற் கேட்டது இளைப்பாறுதலை யுண்டாக்கவில்லையென ஸ்ரீ இராகவர் வினவ, அர்த்தசத்தையை யனுசரித்துப் பிரதீதியாகும்பக்ஷத்தி லிவ் விரோதமாகும், பிரதீதியை யனுசரித்து அநிர்வசனீய அர்த்தசத்தையா மேலோகாண்பான்றேறும் பொருட் பேதமுண்மையின் காலவிஷமத்தன்மை தோஷமுடையதாகாதாம் என ஸ்ரீ வசிஷ்டபகவான் விடை பகருகின்றார்:— ஹே இராகவ! எவ்வெதனல் எவ்வாறெவ்வாறு எக்காலுணரப்படுமோ அவ்வதனால் அவ்வாறவ்வாறு அவ்வதனை அக்கால் இனிதனுபவிக்கும். விடமானது அமிருதம்போலும்வாழ ஹேதுவாகும் எப்போதுமே ஜீவனசாதன வேதனத்தால் இங்ஙனமிருப்பதாலல்லவா அத்தகைய திடவுணர்வோடு கூடிய விடக்கிருமிகள் விடத்தினாலே ஜீவிக்கின்றன, ஆயினெங்ஙனம் பிரமாதத்தினாலே புசிக்கத் தக்கதென்னும் புத்திகொண்டு விடத்தைப் புசித்தவர்கட்கு மரணங்காண்பது கூடுமெனின்? புழுப்போல அவர்கட்கு நெடுநாளப்யசித்த ஜீவனசாதனத்வதிட வுணர்ச்சியின்மையினானும் விடத்தில் மரணசாதனத்தன்மை நிச்சய சமஸ்காரமிருப்பதனானும் என்க; சத்துருவானவன் மித்திரனென்னு முணர்வு முதிர்ந்தபோது மித்துருவேயாய் விடுகின்றான். இப்பதார்த்தங்களுடைய சொந்தமேனி பாவித்தபடியே அதேதானே நீண்ட பயிற்சினால் நியதியினது வசம் வந்துவிடுகிறது; விடவே நியதிவசிகார பரியந்த நெடுநாளப்யசித்த வுணர்வின் அனுசாரமாகவே பதார்த்தங்களிலர்த்தக்கிரியா நியதியாம். மேலும், சம்வித்திற்கு விளக்கமே இயற்கையாம், அர்த்த விசேஷ ஆகாரத்தன்மையோ அதற்குக் காண் போனது சமஸ்காரத்தை யனுசரித்தாம், ஆகவே ஒரே யுணர்வினிடத்தில் சில சமஸ்கார அனுசாரமாக நிமிஷ ஆரோபமாம், மற்றுஞ்சில மருவி கற்பாதியாரோபமாம் இதன்கண் யாதொருமுரணுமின்றாம். கசிதவேகவடிவமாயுள்ள இச்சித்தானது எவ்வாறு எத்தகையதாகக்கசியுமோ அவ்வாறவ்வாறே அச் சுபாவஏககாரணத்தானே சுபவதியாம். நிமிடத்திற் கற்பக்கூட்ட வுணர்வுண்டாகுமாயின் நிமிடமே அக்கற்பமாம் இதன் கண்ணே யாதொரு ஐயமுமின்றாம். கற்பத்தின் கண்ணே நிமிடத்தன்மையுணர்வுண்டாமேலாயிற் பின்கற்பமிதுவும் வேகமாய் நிமிடமேயாகும், என்னை, அத்தகைய ரூபவடிவமன்றோ அறிவடைகின்றது. உலகினும் இவ்வகை வெட்டவெளியேயன்றோ, தூக்கிக்

கிரவுகற்பகாலம் போலத் தோற்றுகின்றது அதுவே சுகியாயிருப்பவனுக்கோ கணகாலமாய் விடுகின்றது, கனவில், கணங்கற்பமாய்விடும் கற்பமுங்கணமாய் விடும்; கனவில்யானிறந்து பிறந்திருக்கின்றேன் தருணனாயிருந்தேன் யவ்வனனா யிருந்தேன், யோஜனை நூறு கடந்து விட்டேன் என்பதாகச் சிலவர் அனுபவிக் கின்றனர். இரவைப்பன்னிருவருடங்களாக அரிச்சந்திரன் அனுபவித்தனன். இதுமார்க்கண்டேயபுராணத்திற் பிரசித்தமாம், இலவணராஜன் ஏகராத்திரி யால் நூறுவருட ஆயுளைப்புசித்தனன் இனிக்கூறப்படுமிது. மனுவின்வாழ் நாளாமாயுளானது ஆத்மமனனசீலராகிய பிரஜேசருக்கு முகூர்த்தமாம், அவ் விரிஞ்சராகிய முனிவரதுவாழ்வானது சக்கிரிக்குத் தினமாத்திரமாம், விஷ்ணு வினுடைய வாழ்வானது விடைக்கொடியற்குத்தினமாத்திரமாம், நிருவிகற்ப சமாதியின் கண்ணோ தினராத்திரி பேதமேயில்லையாம். தியானத்தினாலே லய மடைந்தசித்தனுக்கு இரவுகளேது பகல்களேது. யோகிகட்கு ஆன்மா வின் கண்ணே பதார்த்தங்களேனும் ஜகத்தேனும் சத்தியமாகவில்லையாம். பிரியமாயிருக்கும் விடயங்களெல்லாம் வைராக்கியவாசனையினாலே சிந்திக்கச் சிந்திக்க அப்பிரியமாய்ப்போம். முதலிலப்பிரியம், இந்திரியமனப் பிராண நிரோதாதிமாதுரியம், ஆத்மசுகங்கிடைத்தலானே மிகமிகவும் பிரியம், ஆய் விடும் அனுகூலமான சிந்தனைமுதிர்ந்தபோது, விடயலம்படத்தன்மையை வெறுக்கும் குருசாஸ்திராதி ஆப்ததமத்தன்மை மதியாற் சேவிக்கச்சேவிக் கப்பரம ஆப்ததமமாய்விடும்,இங்ஙனம் பழைய விஷயபோகசகாய சுகிருத்மூட தன்சனம் புருடார்த்தத்தைக் கெடுக்கும் என்னும் மதியால் எண்ண எண்ண அவ்வாறே பகையாய்விடும் ஆகலின் இராகவ எண்ணப்படியே யுலகமாமென் றுணர்தி; கூறிய நியாயத்தை ஜபஉபாசனை சிரவணாதிகளிலும் காணலாம், பயிலாதனவாய பதார்த்தங்களாம் சாஸ்திரபாடஜபாதிகளின் உணர்வின்பயிற் சியால் சமத்தகைமையையடைந்து சுவாதீனமாய் விடுகிறது, ஓடத்திலோடிபவ ராய மயலுற்றவர்கட்கு அவ்வுணர்வினாலே பூமியோடுவதுபோலுந் தோற்றுகிற் கும்,அவ்வுணர்வும் மயற்பீடையுமில்லாத தீரத்திலிருப்பவர் தம்திருஷ்டியாலோ அதுசலிப்பதின்றாம், சூனியம் அதிவிசித்திரவிசாலத்தை அவ்வுணர்வின் முதிர்ச்சியானே கனாத்திருஷ்டிகளிற்போல அடைந்து விடுகின்றது, உணர்ச்சி யின் முதிர்ச்சியானே மஞ்சளாகவேனும் நீலமாகவேனும் வெள்ளையாகவேனும் ஆகாயம் அனுபவிக்கப்படும்,மிகுதியானமோகத்தை யடைந்துவிட்டால் ஆபத் தைப்போல உற்சவமும் கேதத்தையேயீயும் என்பதைக் கண்டோமல்லவா, பாலர்கள் தங்களுற்சவத்திலும் சிலபாலழுவதாகக்காணப்படுகின்றார்கள் குட்டி யத்தின்கண்ணும் ஆகாயத்திற்போலாசாரம் அறிவிலாற்யாற் கண்டாமன்றோ, மித்தியாபூத அர்த்தங்கட்கு அர்த்தக்கிரியா சாமார்த்தியமும் பிரசித்தமே யாமுலகில், அசத்தாகியயக்ஷன் விசேடமூடர்தம் பிராணன்களையும் அபகரிக் கின்றான் உணர்வின் முதிர்வால்கனாவனிதை நனாவனிதையொப்ப போகம் நல் குவள், யாது எவ்வாறு இலங்குவதாக வருமோஅது அவ்வாறே ஸ்திரத்தன்

மையை யடைந்துவிடுகின்றது. காரியமானது இல்லாததேயாம், காரியத்திற்குக் காரணமாத்திரமா யிருக்குந்தன்மை யுண்மையின் அவ்வியாகிருத ஆகாய மாத்திரமாகவே யிருக்கும். அதனுற்றுச்சமன்றும், அன்றுகவே அவ்வா காசமே தனததிஷ்டான சிதாத்மாவின்கண்ணே நூறுகையம்புதநிழல் கற்பித்த மித்தியாநடனது அபிநயவிசேடம்போல ஜகத்வைசித்திரிய பாவத்தால் விரிந்ததாகும், சர்வமன சமஷ்டிவியஷ்டி காரியத்தன்மையானும் அதற்கசத்தியத்தகைமையே யடைவுறும், ஆகாயத்தின்கண்ணே மனோசம்பந்தமான அசைவே யுலகமென்றறிதி வாஸ்தவமாகவோ இல்லையாம், பாலகன்றன் மித்தியாதிஞானத்தினலே கற்பிக்கப்பட்டபேயானது அசையுங்காட்சிபோலும் மனோமாத்திர ஆகிருதியையே இவ்வுலகமுடையதாகும், இவையெல்லாம் மாயாமாத்திரமேயாகும் வாஸ்தவ மூர்த்தத்தன்மையின்மையின் சுயம் அன்னியத்தைத் தடைப்படுத்தாதாம், தன்னைத்தடுக்கும் வேறுவத்துவுடையது மல்லவாம், வெட்டவெளியாக விளங்காநின்ற இவ்வுலகத்தை நித்திரையின்ரேடமுற்றவனுக்கு அபூர்வமாகவே தோற்றுங்கனவிற்கொப்பாகத் தத்துவவித்துக்கள் எண்ணுவார்கள். தன்விளக்க அனுகூலமான தன்வியாபாரமற்ற ஸ்தம்பமானது தன்னிடத்திற் பிரதிமைவடிவத்தைத் தோற்றுமாறு காண்பிக்கின்றதேபோலச் சுயம் எத்தகையதாக, எத்தகையவடிவ சிருஷ்டியைச் சர்க்ககாலத்திற் காணுமோ பரமார்த்த மகாஸ்தம்பமானது சர்வா திருஷ்டான சிதாத்மாவாயினும் அத்தகையதாயாகி அத்தகைய சிருஷ்டியைச் சர்க்ககாலத்திற்காணும், கனவில் என்னுடைய பக்கத்தில் மகாபடர்களானே கலக்கமுற்றநரன் உணர்ந்தானுயினும் துயின்றுனைப் போல அஞ்ஞானமாத்திர இயற்கையன் அன்றி வாஸ்தவமாக அன்றும், பிரஹ்மத்திற்குச் சர்க்கமும் அத்தகைமைத்தேயாகும். சிசிரஇருதுவின் ஈற்றில் விருக்ஷாதிகளின் பத்திரசாதனகாலத்தில், அக்கிரவசந்தத்தில் இலைபூமுதலனவடிவமாக ஆவிர்ப்பவித்து திருணகுல்மலதையோடுற்ற ரசம்பூமியின்கண்ணே யுபாதானத்தில் நன்கிருப்பதேபோலும் பரபதத்திற் சர்க்கமாம்; பொன்னிருக்கும் நெகிழ்ச்சியானது வெளிப்படாமல் உள்ளேயிருப்பதுபோலச் சீவக்கூட்ட நிமித்தப்பொருட்டு அணுவில் அணுவினும் அதன்போக்கிய சர்க்கம் பரத்தின்கண்ணே யிருந்தது இருக்கின்றது உண்டாம், அங்கங்களின் சம்ஸ்தானபேதமானது அங்கியாகிய தன்னினின்றும் தனிச்சத்தை யற்றதாய பேதமாயிருக்குமாறு ஜகத்தானது தன்வடிவினும் அபின்னமான அநங்கப் பிரஹ்மத்திலபேதமாகவே யிருக்கும், (ஜகத்திற்குச் சமசத்தை யின்மையைக் காண்பிக்கும்பொருட்டு அநங்கப் பிரஹ்மமென்றதாம்) ஒருமனுடனுடைய சொப்பனத்தில் அன்னியமனுடனேடு போர்புரிதலேபோலும், இப்போரானது அவன்பொருட்டுச் சத்துருவம் அன்னியன் பொருட்டு அசத்துருவமாயினும் காண்போனுக்குத் தன்வடிவமே யாதல்போலும் மாயாகாசத்திருக்கும் இவ்வுலகமானது மாயிகதிருஷ்டியானே சத்தாயினும் அதற்கயலாய தூய

திருஷ்டியானே அசத்தேயாகும் கேவலந் தன்வடிவமாகவே யிலங்கும். முத
லிலும் ஈற்றிலும் சத்பிரஹ்மமாத்திரமாக எஞ்சி யில்லாமற்போவதாலும் பிர
ஹ்மமாத்திரமே யிவையாவும், மகாகற்பாந்த சர்க்காதிகளில் சித்தியற்கையதே
யிவ்வுலகமென்றுணர்தி. காரணத்தன்மையானது காரியவிபாகமாம்போது
பரஸ்பரம் அதன் சபேக்ஷகாரணத்தன்மைக் கற்பனமாம், அதன் பின்னர்
அசத்தேயாகும் வாஸ்தவமல்லவாம்; சர்வஜகதாகாரமாகப் பரிணமித் தபூர்வ
பூர்வ இரணியகருப்ப அகம்பாவ கற்பனை வடிவ உபாசனைச் சம்ஸ்காரத்தாற்
சனித்த ஸ்மிருதியினாலே கற்பிக்கப்படுதலினாலும் ஜகத்தானது அதிஷ்டான
சன்மாத்திரத்தினும் அயலாகாதாம், இந்தப்பிரஹ்மா முக்தியடைந்துவிட்ட
போதிலும் அன்னியப்பிரஹ்மாவின் ஸ்மிருதி ஜன்னியமாமிவ்வுலகம், அவரது
ஸ்மிருதிஞான ஜன்னியசர்க்கங் கேவலம் அறிவுமாத்திரமாகத்தானே யிலங்கா
நிற்கும். பிரஹ்மாண்டாந்தரத்திலிருப்பவர்கட்கேபோலும் ஒருநகரத்திலிருப்ப
வர்கட்கும் தனித்தனி வாசனைகருமாதி வைசித்திரியத்தால் கனவிற்போல நன
விலும் கிரமவைசித்திரியாதியாரோபம் ஏனைகமாட்டாது, அப்புரத்திலுள்ள
யாவர்கட்கும் முக்கிய மந்திரிகட்கும் விதூரத குலக்கிரமமானது ஏகரூபமா
கவே ஒத்தபடி அங்குத் தோற்றிய காரணமென்னை, என்ற ஸ்ரீ இரகுநாயக
ருக்கு, சிருஷ்டிப்பவர் சங்கற்பித்த நியதியானது இதரஜீவர்களின் உணர்வுகள்
பிரதான ஜீவனது உணர்வைத்தொடர்ந்தே நிற்றலாம், ஆண்டதுவே யேதுவா
மென ஸ்ரீவசிஷ்டபகவான் உத்தரமருளுகின்றார் :—எல்லா வுணர்வுகளும் முக்
கியமாகிய சேதனத்தையே பெருங்காற்றைச் சிறுகாற்றுகளெல்லாம் அனுசரிப்
பதேபோல இனிதனுசரித்திருக்கும் அதனனுரூப பலோன்முகபோக்தாவின்
அதிருஷ்ட மௌனமும் அதன் கண்ணே யேதுவாம், அவ்வாறேக ரூபமாகச்
சம்பாதிக்கப்பட்ட அதிட்டக்கூட்டத்தால் பிரஜாபாலனும் பிரஜைகளும் புர
வாசிகளும் மந்திரிகளும்பரஸ்பரம் அனுசாரமாகவுணர்வுற்றவர்களாகி விவகரித்
துள்ளார்கள். விவகரிப்பதில் விசித்திரமுமுளது அதுமுழுமித்தையுமாம்,
விதூரதசம்பந்த புரத்திலுள்ள இல்லங்களிலிருக்கும் பதார்த்தங்களை யனுபவிக்
கும் ஜனங்கள் நமது அரசர் இத்தகைய வடிவமான குலத்திற் பிறந்தவரிவர் என்
பதாக விவகரித்தனர். உதாசீனமாயவுணர்விற்கு அத்தியஸ்த விடயப்பிரசித்த
வடிவமாகத்தோற்றுவதிற் காரண மியாதோ வெனின்? தோற்றுவது ஆகந்து
கமல்லாததாயிருத்தலின் இதன் கண்ணே ஹேது சிந்தைவேண்டியதில்லை ஆக
லின் ஆகந்துவிஷயங்களாகிய பிறவிடங்களிலேயே அது பொருத்தமுடைய
தாம், உதாசீனமாயசிந்தாமணியின் ஒளியைப்பரப்புவதில் வேறே யேதுவின்
அபேக்ஷையில்லையாம், மற்றோ, விசித்திர அர்த்தமுண்டாக்குவதிற் சிந்திக்குஞ்
சனமனோரதவைசித்திர அபேக்ஷையே உண்டு அதுபோல சிற்சுபாவத்தின்
கசிவிற் காரணநெறி வேண்டுவதில்லையாம். முன்னரதனனுகூலசங்கற்ப வைச்
சித்திரிய உற்பத்தியும் உரைத்தமுறையேயாம், விதூரதனது ஜீவசைதன்ய
நிமித்தத்தானே யானிவ்வண்ணமான குலாசாரத்தில் அரசனாகஆவேன் என்ப

தாகவுந் தோற்றும், தோற்றவே சிந்தாமணியைப் போலச்சின்மணியும் மனோ ரதமேயாய அர்த்தங்களைப் பயக்குமென்றுணரலாம். அநேக ஜீவசைதன்யங் களில் சமவிடய ஆரோபமுறையானே கண்ணாடிகளின் பரஸ்பர முள்ளடங்கிய பிரதிபிம்பக்கவர்ச்சியைப்போலப் பொருந்தும் எவ்வளவு ஜந்துக்கள் எங்கு எவ்வெச்சருக்கத்தில் எக்காலெக்கால் ஒருங்காமோ அங்கு ஒரே சருக்கத்துற் றமையின் அவர்தஞ் சித்நாதுவானவை கண்ணாடிபோலப் பரஸ்பரம்பத்தி யாய்ந்திலகும் இங்ஙனமாயின் பிம்பமிருக்கும்போது பிரதிபிம்ப உதயமானது தடுக்க முடியாமையின் எங்ஙனம் நிர்விடயத்தன்மை யிலக்கணமோக்ஷம் அடைதல் கூடுமெனின்? அச்சீவசம்வித்துக்களினிடையே எச்சீவசம்வித்பிரஹ் மாகாரவிருத்தி தீவிரவேகவதியாய் விடயதோடங்களாலே அசைக்கமுடியா மல்மோக்ஷபரியந்தம் ஏகரூபமாயிலகுமோ அச்சீவசம்வித்தே சர்வஉற்கிருஷ் டமான பிரஹ்மபாவமா யிருக்கும் பெருநிலைமையாகிய மோக்ஷத்தையடையா நிற்கும், மற்றவையடையா. இவ்வாறாகவே ஜகதாகாரமாகவேனும் பிரஹ்மா காரமாகவேனும் ஜீவசித்துப்பிரதி பிம்பிப்பதில் தீவிரவேகமுடைமை வடிவ வலியுறு அவ்வவ்வாகாரசித்து விலாசமே நியாமகமாம் அவ்வாறே நியதியியற் கையாகவாம், வலுவுறுசித்து விலாசங்களின் அனுவிருத்தியானே பரஸ்பரம் இயற்கைகள் சிற்கண்ணாடியில் இயற்கையாகவே பிரதிபிம்பிக்கின்றன இங்ஙன மாகவே உலகு முன்னிலைக்கு வருதல் நீள்பயிற்சியானாகலின் ஆண்டே தீவிர வேக முதயமாயவழி முத்தியின் பொருட்டு ஆசையுண்டாகவே யிடமில்லையா மெனின்? இயற்கையான வேகத்தைக்குறித்து முயற்சியாலாகியவேகம் முந்து றுதலின் மிகுமுயற்சியானேதேடிய பிரஹ்மாகாரவேகமே வெற்றிகொள்ளும் ஜகதாகார சித்விலாசவேகம் தோல்வியுறும் மேலும், சத்தியஅசத்திய கோச ரசம்வித்துகளுக்குள் சத்தியகோசரங்கட்கே பிரபலமாயிருக்குந்தன்மையுண்மை யின், சத்தியமாய பிரஹ்மாகாரவுணர்வுகளே அசத்திய விவற்றை தமததீன மாக்கிக்கொள்ளுகின்றன, கடலைநோக்கிச் செல்லும் ஸ்ரீகங்கை முதலிய பெரு நதிகள் தம்மோடுஞ்சேர்ந்த சிறியயாறுகளை தமததீனவிருத்திகளாய்ச் செய்து கொள்வதைக் கண்டோமல்லவா! பிரஹ்மாகாரமாதல் தீவிரவேகமாயின் வெற்றிபெறுக மந்தமத்யம அதிகாரத்தால் மனமானது நிலைபெறுமலிருத்த லின் ஒய்ந்தொய்ந்து பிரஹ்மாகாரமாதலுதயமாயின் பாகியஆகாரமாதலும் உதயமாயின் அப்போது ஒத்துநிற்றலின் இரண்டினொன்றற்கு வெற்றியுண் டாகுமாசையெங்ஙனமெனின் எவ்வதிகாரிகள் கூறியஉபய ஆகாரத்திற்சமமாக இருப்பார்களோ சமவேகமுடைய அவர்கள் அவ்வாறாகவே யிருப்பார்கள் என்பதாக இல்லை, மற்றோ, ஈண்டியம்பிய ஆகாரமிரண்டனுள் ஏகப்பிரஹ்மா காரம் நிலைபெற்று வெற்றிபெறமேலான நிலைமையையடைய மற்றைய பாகியா காரம் மூழ்கவேண்டிச் சிரவணாதி யாவிருத்திவடிவ முயற்சியைச் செய்பவர்க ளும் பயிற்சியின் முறைமையைபற்றித் தீவிரவேகஉதயத்தால் இதரஜயசித்தியாம். இவ்வண்ணம் பிரசங்கத்தைப்பற்றிக் கூறியமோக்ஷமில்லை யென்பதன்கண்ட

னம் சாலும் இனிக்கூறிவந்த வுயிர்தோறும் சமவிடமசிருஷ்டிவிசித்திரத் தகை மையையே கூறுவாம். உபாதியினலேற்பட்ட பரிச்சேத ஆரோபத்தாற்பர மாணுகண ஜீவக்கூட்டத்தை யுத்தேசித்துக் கூறியவகைகள் வாய்ந்த சமவிடம சர்க்கசகஸ்ரங்களாக மயக்கத்தால் பெருக்காக உண்டாமவற்றுள்ளும் இருப் பனவுள்ளும் நசித்தவற்றுள்ளும் பரமார்த்தமாய்ச் சிறிதும் எச்சீவகணத்தா லும் ஓடோடியும் அடையமுடியாதாம், எவ்வுதாசீனமுடையதாலும் அடைய முடியாதாம், அடைவதற்சேனும் அடையாமலிருப்பதற்கேனும் அயோக்கிய மன்றோ! சிதாகாசமாகிய இதுவே சாந்தமாகவிருக்கின்றது. ஆகலின் யாவும் சுவரில்லாச் சித்திரமேயாம். நித்திரையுமில்லாமல் விவேகதிருஷ்டியுமில்லாமல் இக்கனவானது தோற்றுகிற்கும், அதிஷ்டான ஆத்மசாக்ஷாத்காரமுடையவ னுக்கு முன்னர் அனுபவித்ததேயாயினும் அத்தியந்த மிதுதுச்சமேயாகும். தூயதிருஷ்டியானே பிரபஞ்சத்திற்குத் தனிமையில்லாச் சத்துவங்கூறப்பட் டது, மாயாசபல திருஷ்டியானேக்கியபோதினும் பத்ரபுஷ்பபலாம்சவடிவ தருவானது ஒன்றுகத்தான் மாத்திரமாக இருப்பதேபோல அநந்த சர்வசக்தி வடிவவிபுவானது ஒன்றுகவே யிருக்கிறது. ஜீவதிருஷ்டியானும் போதபரியந் தம் பின்னரூபமாயினும் போதத்தில் மீண்டும் மறதிக்கேதுவான அஞ்ஞான மின்மையின் ஒன்றே நிலைபெற்றிருக்கும், ஞாதாஞானம் ஞேயம் முதலியவை மாயான்மகமெனவும், பிறப்பற்றபதம் நமது வடிவமெனவும், உணரப்படின் ஒருகாலத்திலும் ஒருவருக்குமே மறதியேற்படமாட்டாது. மாயையானே தோற்றுவது பன்மையாகவிருந்தபோதினும் சுத்தத்திற்கு வாஸ்தவ ஏகரூபமா யிருக்கும் நிலைமை விரோதமில்லையாம், சாக்ஷிபாவத்தாற்றமத்தை யொளிர்விப் பதும், திக்குக்காலரூபியாயினும் பரமார்த்தமாக எப்போதும் சுத்தமானதும் சர்வவிகாரஉதய அஸ்தமயங்களற்றதும் ஆகிய ஆன்மாமுதலிடை கடையற்ற தாகிச் சத்தாகி ஒன்றேயாகி யிருக்கும் நிருமலமாகிய நீரானது சௌமியத் தகைமையோடுறினும் தரங்கங்களாகத்தாவினும் நீர்வடிவமான ஏகரூபமா கவே யிருத்தலின் ஒன்றேயாகி யிருப்பதைக்கண்டோமல்லவா! விசுத்தபோத ஏகரூபமாகவிருக்கும் பிரஹ்மத்தின் சொரூபபூதப் பிரகாசமேதுவைதஜக்கிய கோசரசங்கற்ப விகற்பரூபமனே நிமித்தத்தாலும், அதன்மூலபூதமாய அவித் தைகாமகரும வாசனுதி வசத்தாலும், நான் நீஎனது என்பதாதியா யத்தியஸ்த மாய ஜகத்வடிவமாக விளங்குகின்றது, ஆகாசவடிவ கோசத்தில் உண்மையி லொன்றுமில்லாவிடினும், தலமும் நீலமும் முத்துமாலையும் மயிர்ச்சுருளும் தடாகமும் பிறவும் ஆகத்தோற்றல் யாவருங் கண்டதேயாம்.

60-வது பிரயோஜன வருணனம் முற்றிற்று.

---

## 61-வது ஜகத்சொரூப வருணனம்.

இப்போது பிரயோஜனப் பிரசித்தியின் பொருட்டும் வைராக்கியப் பொருட்டும் சமுசாரத்தின்அசாரத்தன்மையும் அசத்தன்மையும் வெவ்வேறு

யுக்திகளாலே வருணிக்கப்படும் நானென்று சொல்லத்தகாததேகாதிகளிடத்தில் அகம்பாவகாரணமில்லாமலும் நானென்னுமயலும் பரமாணு கணஉதரங்களில் விசாலமிகுகாலவடிவ சகம்புகுங்காரணமில்லாமலும் உலகமென்னும் மயலும் எத்தகையகற்பனைமுறையால் எத்தகையயுக்திகளால் உதயமாகும்விதத்தைமீண்டும் தேசிகோத்தமரே! அருளிச்செய்யவேண்டுமென்று ஸ்ரீஇராகவர் கேட்ப அதற்கு ஸ்ரீவசிஷ்டபகவான், "மகாகற்பாந்தசர்க்காதிகளில் இவ்வபுவானது சித்தியற்கையதாகவேயிருக்கும்" என்பதாதியானே முன்னர்க்கூறப்பட்டதே யிதுமீண்டுங்கேட்கப்பட்டதென்னையென, எவ்வாறுய யூகங்களானே யனுபவமுண்டாமோ அவ்வாறுயயூகங்களானே பரிஷ்காரமாகமீண்டும் அனுக்கிரகம்செய்யவேண்டுமென வேண்ட ஆண்டுச்சருவப்பிராந்திகட்கும், சம்வித்துள்ளே பிரசித்தமாயிருத்தலே முக்கியயுக்தியாம் எனக்கூறுகின்றார்:— இப்போத்தாவானவன்சர்வப்பிரகாரமான சர்வபிராந்திகளையும் சொரூபசைதன்யத்தின்உள்ளே யிருப்பனவாகவே எப்போதும்உணர்வன். எக்காலத்திலும்எதனையும் அதற்குவெளியேயுணர்வதேயில்லை. யாகலின் சருவமும் சருவான் மகமாம் அதுவும்சமத்தன்மையேயாம், சருவத்திற்குச் சருவான்மகத்தன்மையில் விடமத்தன்மைபரிசேடிக்கின்றதென்பதாகவில்லை. அஃதில்லாதவழி ஜன்மாதிவிக்கிரியைகள் அடைகின்றன வென்பதாகவுமில்லையாம், ஆகவே ஜன்மமற்ற பரமான்மாவே உண்மையாகவுளதாம் எனஜகத்பிராந்தி காரணமில்லாமலேயுளதாமெனக் கூறப்பட்டது பொருத்தமுடையதேயாகும். சைதன்யத்துள்ளே அறியப்பட்ட தாந்தன்மைமாத்திரத்தானே எங்ஙனம் சர்வத்திற்கும் சர்வாத்மதன்மைச் சித்தியாம், ஒருசித்தாதாத்மியஸ்புரணத்தாலெனின், ஆகாதாம், வேறுவேறுவிடயதாதாத்மியத்தால் கடஞானம் படஞானம் என்பதாகச்சித்திற்கும் பேதம்அனுபவமாதலின் பின்னத்தன்மையேயன்றோ விருக்கின்றதெனின்? சித்திற்குப்பேதமில்லையாம், சர்வசப்தங்களின் அர்த்தங்களின் உணர்வு பிரஹ்மமேயாமன்றோ, பிரஹ்மத்திற்கு வேறுயசித்தாது இல்லையாம், விடயபேதசம்பந்தத்தினாலேயே சித்தினுடையபேதமும் போற்றப்படுகின்றது விடயத்தைநிர்ணயஞ்செய்துபார்க்கின் அச்சித்துருவத்தினும் வேறுகாதாம்; விடயாகாரத்தன்மை யனுபவத்தால் விடயம்போலப் பேதம் ஆகுமோ என்றால், யாவராலும்விரும்பப்பட்டனவாகிச் சப்தார்த்தங்களாய் வயிறுபெருத்து வாய்குவிந்துள்ள ஆகிருதிகளையுடைத்தானவைகளாயிருப்பனயாவும் எம்மனோரது திருஷ்டியிற் கிடையா, என்னை, சித்தின்பால் ஜடாகாரமிருப்பதில் ஊகமொன்றுமின்மையின் அனுபவிக்கப்பட்ட ஆகாரம் விருத்திக்கேயாம். இவ்வண்ணம்சித்தின்வேற்றுமை சென்றொழியவே ஜடவேற்றுமையும் அதன்அனன்னியசத்தையினாலேயே இலங்குகின்றமையின் நீக்கக்கூடியதேயாம். கூடுமாறுதிருட்டாந்தங்கேட்டி! தங்கத்தை விடுத்துக் கடகத்தன்மையில்லாததேபோலும் நீரைக்குறித்துத் தரங்கத்தன்மை வேறுகாததேபோலும் ஈசுவரரைப்பார்க்கினும் உலகம் ஒருசிறிதும் வேறுக

இல்லவேயில்லையாம். ஆயினும் எங்ஙனங்காரணமில்லாமல் உண்டாகுமென்னுங்கூற்றிற்குப பத்திஅறிவேகனகம் போலும் காரணமெனின் இதுதானேயுலகுருவமாகஇலங்குகின்றது, உலகமானது அதனினும்வேறாக இருந்தாலல்லவோ அதன்பொருட்டுக்காரணத் தன்மையைமருவும் அத்தியந்தம் அபேதமாகஇருப்பினே அறிவிற்குக் காரணத்தன்மையின்றாம், ஆயினென் ஜகத்துருவமே பிரஹ்மமோ எனின் ? அல்லவாம், ஜகத்துருவம் ஈசுரனிடத்தில் இல்லையாகும், விவர்த்தமானது தனிச்சத்துடையதாகாதாம், இவ்வாறாகவே கடககுண்டலாதிகளும் பொன்வடிவப்பிரஹ்ம விவர்த்தங்களேயாகும், ஹேமமே கடகாதிகளாகவிருக்கும் கடகாதிகள் ஹேமத்திலின்றாம். ஏகத்திற்கு அநேக ஆத்மத்தன்மை விரோதமாமேயெனின் ? சமசத்தையையுடைய அநேக அவயவங்களோடும் ஏகஅவயவிக்குச் சமசத்தையையுடைய தாதாத்மியம் உலகத்தில் விரோதம் மருவாதாயின், கற்பித அநேகங்களோடு வாஸ்தவப்பிரஹ்மைக்கியம் அவிருத்தமாமென்பதன்கண்ணே யாது ஓதவேண்டியதாகும் ; அவயவியின்ரூபம் அநேகஅவயவவடிவமாக இருப்பதேபோல நிரவயவமாகஇருக்கும் சித்தானது சர்வான்மகமாகவிருக்கும் மேலும் ஏகாத்மியமாகியவழி சர்வத்திற்கும் சர்வான்மகத்தன்மைலாபத்தால் அநேகத்தன்மையகலுதலானும் அவிரோதமாம். ஆயின் சர்வாநுபவசித்தமாய்ச் சகத்தெனவும் யானெனவும் நாநாத்தன்மை யிருப்பதென்னேயெனின் பரப்பிரஹ்மத்தின்கண்ணே சர்வப்பிராணிகளின் உள்ளேயிருக்குந் தூல்லியகாலம் எப்பிரஹ்மமாத்திரசொரூபத்தின் அஞ்ஞானம் உளதோ அதுவேஜகத்தெனவும் யானெனவும் நாநாத் தன்மையதாக விளங்காநிற்கும். ரேகைக்கூட்டங்கள் ஸ்படிக சிலையுதரத்தில் அபேதமாகஇருப்பினும் வனலேகைக்கூட்டப் பிரதிபிம்பங்களின் சந்நிவேசம் அவிருத்தமாகவிருத்தல்போலவேயாம், சிலையுதரத்தில் ரேகைக்கூட்டங்களின் பேதசந்நிவேசமாமாறு சிற்கனசொரூபத்தில் அனன்னியமாக இருந்தபோதினும் சகமெனவும் அகமெனவும் அத்தியந்தங்கனமாகத்தோற்றும், அலையில்லாதநீரின்கண்ணே அலைகளிருப்பனபோலப் பரமான்மாவினுள்ளே சிருஷ்டிசப்தார்த்தரகிதங்களாகிய சிருஷ்டிகள்இருக்கும். லீனமான தரங்கங்கள் பெருநீரின்கண்ணே அவயவபாவத்தால் இருக்கின்றன, அவயவியாயினும்சமவாயமாக அவயவங்களிலிருக்கும் அவ்வாறு அந்தப் பிரஹ்மத்தின்கண்ணே ஜகத்தின்றிதியாமோவெனின், ஆகாதாம் சர்க்கத்திற் பரமிருப்பதுமில்லை பரத்திற்சர்க்கமிருப்பதுமில்லை அவயவ அவயவிபோலுமென்க, உண்மையாக அவயவ அவயவிகட்கும் அன்னியோன்னியம் ஆதாரத்தன்மை ஊகமுடையதாகாதாம், அவைகட்கு அநவயவங்களானேசத்தையாம், அங்ஙனமன்றே :—அவயவங்களில் இருந்துகொண்டு அவயவியானது அவயவந்தோறும் முழுவதுமாக இருக்கின்றதா ? அல்லது அவயவங்களானே இருக்கின்றதா ? முதலதேல் அவயவந்தோறும் அவயவி நாநாத்தன்மையாம், கோவின் கர்ணாதிப் பிரதேசங்களினும் முழுக்கோவிருக்குமாயின் கறத்தல்

முதலிய காரியங் காணவேண்டும், அவயவவிஸ்லேஷத்திலும் அவயவி ஜாதி போல நாசமடையாதாம் இரண்டாவதேலோ அநவஸ்தையால் அநந்தஅவ யவத்தன்மையுளதாக மேருகடுகுகட்குத் துல்லியபரிமாண அடைவாம் இவ் வண்ணம் அவயவங்களும் அவயவியில் ஏகதேசத்திலிருக்கின்றனவா? முழுது மிருக்கின்றனவா? ஆதியதேல் அநவஸ்தையாம், மற்றதேலோ, வேற வய்வம் புகமுடியாமையின் அத்வயத்திற்கு அவயவத்தன்மைகூடாமையின் சர்வதிரவியங்கட்குமே நிரவயவத்தன்மையினடைவாம் என்பதனுனே அவயவ அவயவிகட்கு அநவயவங்களானே சத்தைசேடித்துநிற்குமென்றுணர்க. திருஷ்டசிருஷ்டியுபபாதனமுறையானும் ஜகத்திற்குச் சித்தனன்னியத் தன்மை யையனுபவிப் பித்துக்கொண்டு நிஷ்கிரியமாயிருக்கும் சைதன்யத்திற்கும் அவித்தையினுள்ளே பிரதிபலித்தலின் மாருக தனதுவிபாவனமாம், பரமார்த் தசித்ருபமாய பிரஹ்மம் முதலில் அவித்தைப்பிரதிபலிதமாய கண்ணுடியைக் கண்டதும் தோற்றியமுகம்போலத் தன்னுணர்வினுலே தன்சின்மாத்திரரூப வடிவப் பிரபஞ்சத்தின்இருதயமாகிய இகசியபூதஅஞ்ஞானத்தான் மறைக்கப் பட்ட தன்னையேபகுத்துக் கற்பித்துக் காணும், காற்றினுலே யசைவுண்டாதல் போலுமாம். அக்காலத்திலேயே காரணத்தில்லீனமான சத்ததன்மாத்திரை ஆகாசவடிவமாகப் பரிணமிக்கும், பிரஹ்மத்தின்கண்ணே அசைவுண்டான போதே சப்தாணுவென்னுந்தன் மாத்திரை சித்தின்சர்வசக்தியையுடைய மாயா சம்வலனரூபத்தைத்தரித்தபிரஹ்மாகாசமானது சித்ருபம் போலப் பிரதீதியாகின்றது. உள்ளேயே அந்தக் கரணத்திலிருந்து சங்கற்பமுண்டா வதேபோலப் பொலியும் அப்பொலிவே ஆகாசஉற்பத்தி யென்று சொல்லப் படும், அவ்வாகாசபூதப்பிரஹ்மமே தன்னுள்ளே யிலங்கும் ஸ்பரிசதன்மாத் திர சமஸ்காரத்தை சுயமாகத்தன்னிடத்தில் நிஜசத்தாவடிவமான அநிலத்தகை மையைத் திரமானவாயுகாலத்தில் அசைவையனுபவிப்பதேபோலும் அனு பவிக்கும். அந்தவாயுவடிவத்தன்மையையடைந்த பிரஹ்மமேசுயம் நிஜசத்தை வடிவமான தேஜஸ்தகைமையைக் கருப்பத்திலிருக்கும் பிரகாசலேசமான ரூப தன்மாத்திரவகையைத்தேயு வெளிப்படுத்தலேபோல வெளிப்படுத்தும். அத்தேயுவடிவப்பிரஹ்மமேசுயம் நிஜசத்தைவடிவமான ஜலத்தகைமையைச் சலிலமானது உள்ளேயிருக்கும் ரசதன்மாத்திரத்தைநெகிழ்வித்தலேபோலும் வெளிப்படுத்தும். அந்நீர் வடிவப்பிரஹ்மமே தன்சித்தஏகாத்மத்தன்மைமய மான அவனித்தகைமையைப் பூமியானதுள்ளேயிருக்குங் கந்ததன்மாத்திரை யைத்திரத்தகைமைக் கலியாக வெளிப்படுத்தலேபோலும் அனுபவிக்கும். விழியைவிழிக்குங்கனத்தில் விரைவிலேயே யுலகந்தோற்றலால் ஈண்டிவ்வாரே யக்கிரமம் எண்ணத்தக்கதாகாதாம். தகாதபோது எங்ஙனந்திருஷ்ட சிருஷ்டி பொருந்துவதெனின்? இத்தகையதாம் இச்சித்தின் சமஸ்காரம் அதிதுர்லக்ஷிய காலநி மேஷாம்சத்தின்லக்ஷிதமபாகத்தில் பிரதீதியையுடையதாயினும் நிஜஜக தாகாரப்பிரகசனம் அக்கற்பகோடிவிஸ்தார காலங்களின் சர்க்கக்கூட்டங்

களின் பரம்பரையாகவாம், ஆகவே, சிற்கசனத்தில் காலத்தாற்பரிச் சேதப் படாத அவ்வந்நிமேஷாம் சலக்ஷதமபாக ஆரோபமேனும் கற்பகோடி யாரோபமேனும் மாயிகமே வாஸ்தவமாக விரோதப்படாதாம் எனக்கிரமகற் பனைபொருந்துமென்றுணர்தி. யாது அசுத்தமாய்ச் சடமாய்த் தேசகாலத் தினலேபரிச்சின்னமாய்த் தோஷத்தோடுகூடியதாய் ஆதியந்தமுடையதாய்க் காலத்திற்குட் பட்டிருக்குமோ அதுகாலத்தாலேயளவறுக்கப் பெறும் பிரஹ்மமோ அவ்வாறல்லாததாம், மற்றோ, சுத்தமும் மீண்டும் மீண்டும் இடை விட்டொளிராததாய் நித்திய சொப்பிரகாசமும், சிருஷ்டிகளேயும் திதிகளேயும் பிரளயங்களேயும் உள்ளேயடக்கிக் கொண்டிருப்பதும் நோயற்றதும் உதய அஸ்தமயமற்றதும் ஆதாரமற்றதும் ஆகப்பிரஹ்மமிலங்குகின்றது. உள்ளே திருசிய மத்தியமதாகுமாயின் அது சர்க்கமுடையதாகவேனும் பிரளயமுடைய தாகவேனுமிருக்கும், இருக்கலே ஏகரூப அபவர்க்க முண்டாகத்தகாதா மெனின்? புத்தமாயின் அபவர்க்கம் சரக்கத்தோடு கூடியிருந்தபோதினும் பரமார்த்த சத்தியமாய் விடமமற்றதாயிருக்கும், அபுத்தமாயின் சர்க்க ரூபாத்மாவாய் உண்மையாகச் சர்க்கமற்றதாயினும் விக்ஷேபிக்கும். எவ் வாறெவ்வாறுணர்பவர்களால் உணரப்படுமோ அவ்வாறவ்வாறு அவ்வவ்வகை விசிஷ்டமான அவ்வப்பிரஹ்மசித்துத் தன்பாற் றன்னுலுண்டாம் அவ்வவ் வாகாரத்தை மாயையினுலேதரிக்கும், யாவற்றையு மனுபவிக்கும், சர்வா னுகுண மாயாசக்தியையுடையதன்றோ அது ஜகத்தும் சாஸ்திர சம்பந்த மான சித்விலாசதிருஷ்டியானேகாணின் பரமார்த்தசத்யப் பிரஹ்மமாகவே யிருக்கின்றது, பிரஹ்மமும் பகிர்முகமான விழியே முதல்மன மீறன ஆறி னுலே ஜன்னியதிருஷ்டியானேகாணின் பொய்யான ஜகமாகவே யிருக்கும், சித்விலாசத்தன்மையானும் நித்திய அனுபவரூபத்தானும் அது சத்திய மாம், சத்தியமாயிருப்பதற்கு அசத்தியத்தன்மை யெங்ஙனமாமெனின்? மன முதலிய ஆறால் அஃதசத்தியமுமாம் எல்லாநாமங்களேயும் எப்போதும் அடைந்திருத்தலினுலும், எல்லாரூபங்களேயும் மிகமிகவும் அடைந்திருத்தலி னுலும், அசத்தியமாம் வாக்கினுக்ககோசரமாக விருக்கும் அதற்கு வாக்குக் கோசரரூபம் சத்தியமாதல் எங்ஙன்கூடும்? வாயுவின்கண்ணே சரித்தல்முன் சரித்தலின் அசத்துக்கற்பமாயினும் ஆவிர்ப்பாவத்தாற் சத்துக்கற்பமாம், சரிக்குங்காலத்தில் வாயுவிற்குச்சத்துவமுணரப்படுதலின் சத்தியத்திற்பிரம் பெறுதன்மாத்திரையானே அசத்தியம்போலும் அவ்வாறேசர்க்கமும் அசத் துக்கற்பமாயினும் மூலாஞ்ஞானத்தில் அதிஷ்டானசத்தையாற்சற்கற்பமாம், சத்தியமாயினும் அதிஷ்டானத்தில் அசத்தியமாயாவடிவமுடைமையின் அசத் தியம்போன்றதேயாம். ஆகவே திருஷ்டிபேதத்தானே சத்திய அசத்திய வடி வத்தகைமை விசுவத்திற்காம், தேயுவினுதரத்தில் ஒளிர்வதாந்தன்மை அன் னியரூபமூாகக்காணின் அசத்தியமாகவும் அனன்னியரூபமாகக்காணின் சத்திய மாகவும் இருப்பதேபோலச் சித்ருவப்பிரஹ்மத்திலும் விசுவஐசுவரியம் சத்

தியவடிவமாகவும் அசத்தியவடிவமாகவுமிருக்கும். களிமண்ணிற் கட்டையிற் கைகாலின்றிப் பதுமைகளிருத்தல்போலவும் மைக்கற்கத்தில் வர்ணங்களிருத்தல்போலவும் பரமான்மாவின்கண்ணே சர்க்கங்களிருக்கின்றன ; பிரஹ்மதத்துவ மருத்தலத்தில் அனன்னியங்களாகவே மூவுலகக்கானனீரானது அசத்தியமாகவிருந்தபோதினும் சத்தியம்போலவே பொலிகின்றது. (சொப்பன ஜாக்கிரத்து பாதானசுழுத்தி சம்பந்த ஆத்மதிருஷ்டாந்தங்கள் முதலிரண்டுகள், விசுவசர்க்க உபாதான பிரஹ்மதிருஷ்டாந்தம் மூன்றாவது ஆம்) மயலினாலே சிதாபாசவடிவ ஜீவப்பிரஹ்மத்தால் ஆன்மா சர்க்கவடிவமாகவே யெண்ணப் படுகின்றது, தத்துவதிருஷ்டியால் பரப்பிரஹ்ம அனன்னியத்தகைமையானேயோ பீஜத்துள்ளே மரமெண்ணத்தகாததேபோல எண்ணத்தகாதாம். பாற்கு இனிமையும் மிளகுக்குக்காரமும் நீர்க்குநெகிழ்ச்சியும் காற்றிற்கசைவும் அனன்னியமாகவிருந்து அன்னியமாக ஆண்டு எவ்வாறு இருப்பதில்லையோ அவ்வாறே சர்க்கம் பிரவிலீனமாத்திர சித்துருவமாய்ப் பரமாத்மமாத்திரமாக வெஞ்சிய சொரூபத்தை யுடையதாம். அகாரணமாக உற்பன்னமாயதெனக் கூறியதின் முடிபென்னெனின், பிரஹ்மரத்தினத்தின் ஒளிவீச்சே ஜகத்தென்பதாக யாதுதிதமாமோ அதுகாரணமற்றதேயாம் பிரஹ்மத்தைப் பார்க்கினும் அயலாகச் சகத்து இல்லாதபடியினாலென்றபடி காரணமில்லாமலுண்டாகின்றதெனின் ? உண்டாகவே யில்லையாகும், ஆகவே எங்ஙனம் அவ்வுணர்வனுபவமாம் என்றால் ? வாசனைசித்த ஜீவாதியனுபவம் மனத்தானே யுதித்ததாம், உதியாமலிருப்பதற் குபாயமென்னையோவெனின், மனோநாசத்தானேயே யுதியாமற்போம், அதுதானெவ்வாறுண்டாமெனின், ஞானயோக திட அப்பியாச வடிவ புருடப்பிரயத்தனத்தினாலே யுண்டாமென்றுணர்க, எத்தகையது அந்த ஞானயோகம் எனின் ? அதையனுசந்திக்கு முறையிவ்வாறாம், அஸ்தமிப்பதுமில்லை யுதிப்பதுமில்லை எவ்விடத்தினும் ஒருசிறிதும் எக்காலத்தினும், சர்வம்சாந்த அஜசிற்கன நற்சிலைக்கனப் பிரஹ்மமாம். சித்தமானது இருக்குமாயின் பரமாணுவினுதரத்திலும் சர்க்கபரம்பரை நீக்கமுடியாதாம், பரமாணுதோறும் சித்தித்தினின்றுண்டாம் ஆயிரக்கணக்கான மயலால் சர்க்கக்கூட்ட முண்டாகிக்கொண்டே யிருக்கும், அவற்றிலும் அணுவினும் அணுவினுள்ளே சர்க்கக்கூட்டங்களுண்டு என்றாலுமுள்ளே யுள்ளபடிபுகுந்து இருப்பதென்றால் எதுபோற்றானும் எங்ஙனந்தானும், எதுவும் எங்ஙனமும் பொருத்தமின்றாமாதலின் முற்றினும் பொய்யேயாம். அநிர்வசனீய மாயா சக்தி ரூபத்தானே இருக்குந்தன்மையோ ஊர்மியாதிதிருஷ்டாந்தத்திலும் சமமாக காணலாமே, ஜலத்தினுள்ளே ஊர்மியாதிகளும் குப்தாகுப்த சக்திகளும் இருப்பனபோலச் சீவனுள்ளே நனுக்கனுச்சுழுப்தியாதிகள் இருக்கின்றன. அத்தகையபுருட முயற்சியிலும் வைராக்கியம் ஹேதுவாம், பிராணிகட்குப் போகங்களில் ஒருசிறிதும் அரதியானதுண்டாகும்பக்ஷத்தில் அது அவர்கட்கு அவ்வளவினாலேயே உயர்ந்தபதத்தைக் கொடுத்துவிடும் என்று சுருதியுங்கூறு

கின்றது பிறவிடத்தும், காமங்களையாவர் விழைந்தெனும் காதலாலேதாமங்க வனே பிறந்தே யுழறன்மையோராம், காமங்கழிந்தே யறிவை யறிகாதலற் றூர், காமங்களெவையு மிங்கே கழிந்தோடுமென்றே, என்றுங் கூறப்பட்டுளது. மிருதியிலும் யாதினின்யாதினின் விழைவிலான் வீடல் அதனின் அதனின் உறும், யாவினும் வீடலுறவே துயரம் சாவினுமணுவுமறிவனோ வறியான் எனக் கூறப்பட்டுளது, ஆகலின் ஞானவைராக்கிய தாட்டியத்தினலே யானெனத் தேகாதிகளையுணராமல் உழலாமலிருப்பின் ஜனனமரணுதிமயலே யாவன் றுனடைவன் ஒருவனுமடையான். தத்துவம் பதார்த்த அகண்டைக்கிய கோசர அந்தஞானமானது இவ்வண்ணமாம், ஈசுரசைதன்ய வடிவமாயும் ஜீவசைதன்யம் வடிவமாயும் இருந்து முறையே நாமரூபாத்மக ஜகத்கற்பனோபாதி சூனியமாயும் சராசரதேகாதிலக்ஷண தாழ்ந்த வுபாதிகண்மயத்தன்மை யற்றதாயும் அஜையாயுமிருக்குஞ் சித்துருவை யுணர்பவர் யாவரோ அவர் துயரறுவர், (ஈண்டு நஞ்சமாசவிவாதம் சுலோகத்திற்கேபயன்) சோதிக்கப்பட்ட தத்துவம்பத லக்ஷியார்த்த பூதமாயும் அஜையாயும் ஜன்மாதிவிகார சூனியமாயுமிருக்கும் அகண்டவுணர்வையாவர் குருசாஸ்திரசுவானுபவங்களானுணர்வரோ அவர் சமுசாரதுயரத்தைத் தாண்டுவர், சராசரவடிவக் கீழானதனுக்கண் மயமாய ஜீவபூதமாயும் நாமமற்றதாயும் ரூபமற்றதாயும் அஜையாயுமிருக்கு மறிவையறிந்தவர் பிறவார் துயரறுவார். சுழலாநின்ற நீரினுள்ளே சுழற்சியானது தன் சுற்றுலேயே யுண்டாவதேபோலப் பரத்தினிடத்திற் சித்தானது தன் பிரகடத்தாலே யிரண்டாவது ஜீவவடிவமடைந்து அகந்தையினலே உள்ளதாயுமில்லாமல் இல்லதாயுமில்லாமலிருக்கும் பரமான்மவடிவ இவ்வுலகங்களைத் தாங்கும் வியஷ்டியிற்போலச் சமஷ்டியிலும் அகங்காரசங்கற்ப வுபயவசத் தானே தன்னுட் சமுசாரகற்பனையாம் அகங்காரமயமாய பதுமஜபாவனையாகிய சித்துச் சங்கற்பவேற்றுமையினலே விசுவத்தை விஸ்தரிக்கச் செய்கின்றது, ஆனல் வியஷ்டியபேக்ஷையாற் சமஷ்டியின்கண்ணே விசேடமென்னேயெனின், யாவற்றையும் உண்முகமாகவே யனுபவிக்கின்றது, நம்மனோரைப்போல வெளிமுகமாக அனுபவிப்பதில்லை; ஸ்ரீமகாவிஷ்ணுவின் நிமிஷகோடியங்கிசத்தொன்றுங் காலமே பிரஹ்மாவின்காலமாய், அக்காலத்தில் எழுபத்திரண்டாயிர ஆயிர எண்ணிக்கை வாய்ந்ததிவ்ய யுகாந்தம்தம்மாயுளென அனுபவிப்பர் அந்தோ மாயையின் அற்புதமேயற்புதம்!!!

61-வது ஜகத்சொரூப வருணனம் முற்றிற்று.

---

## 62-வது தெய்வசப்தார்த்த நிரூபணம்.

இப்போது முதலில் விசுவமானது மயன்மாத்திரத்தினலே யுண்டானதென்றும் மகாநியதியும் சக்தியும் ஜீவன்முக்தியாதி சித்தியின்பொருட்டு விஸ்தாரமாக வருணிக்கப்படும் பரமாணுவின் லக்ஷதமாங்கிச கற்பனையில் ஆண்டுச் சகமென்னும் பிரஹ்மாண்டகோடிகளும், நிமிடத்தின் லக்ஷதமாங்கிச கற்பனை

யில் ஆண்டுக் கற்பகோடிகளும் அத்தியந்தம் காணப்படும் பிரஹ்மாண்டம் போலவே சத்தியங்கள்போல இலங்காநிற்கும். அவற்றினுள்ளும் தனித்தனி இவ்வகையாய கற்பனை சம்பவிக்கின்றதென நிலையற்ற இயற்கைத்தாதலின் மயலேயாமிது, அவற்றினுள்ளுள்ளும் அவற்றினுள்ளுள்ளும் பரமாணுகணந் தோறும் இதுவெனத்தோற்றுவ தனந்தமாம் இவ்வண்ணந்தோற்றும் இம்மயற் களவுண்டோ அந்தோ ஆச்சரியம்! நிகழ்காலத்திருப்பனவும் வருவனவும் சென்றனவும் ஆகிய சர்க்கபரம்பரைகள், உள்ளே புடமாக இராநின்ற சுழல்களின் சுழற்சிகளையுடையநீரின் நெகிழ்ச்சியேபோலப் பிராதிபாசிக சத்தைகளைத்தாங் கிப்பிரவகிக்கின்றன. கரைத்துருமங்களாலும் கவின்கொடிகளாலும் விடுக்கப் பட்ட புஷ்பமாலைகளையுடையதாகக் கற்பிக்கப்பட்ட கானனீராறுபோல ஈண்டு மகத்தானமருவில் சருக்கத்திருக்கள் பொய்வடிவமாகவே பொருந்திப்பொலி யும். சொப்பன இந்திரசாலபுரம்போலவும், இன்கதை யிச்சைகளிற்றோற்றும் புரகிரிகள்போலவும், சங்கற்பத்திற்றோற்றும் பொருள்கள்போலவும், சருக் கர்னுபவப் பொருள்கள் அசத்தியமாகவே தோற்றும். தத்துவஞானமுதயமா கவே எல்லாமயல்களும் ஒழிந்தவழி ஞானிகட்கும்பின் நிலைபேறும் சம்பவியா தன்றோ கூறியவண்ண நன்காராய்ந்து நோக்கின் அத்விதீயப் பிரஹ்மாபேதமாக மேலான நிருவிகற்பான்ம விஞ்ஞானமுண்டாம், உண்டாகவே உணர்வுடைய வரின் மிக்க தேசிகோத்தமரே! தத்துவவித்துக்களாக இருந்தும் அவர் தந் தேகங்கள் யாதின்பொருட்டுத்தா னிங்கிருந்துவாழும், தெய்வத்தாலே இனி தாக்கிராந்தர்களாய பலிமுதலியவர்கள்போலத் தத்துவஞானிகள் விஷயத்தில் தெய்வம் என்னதான் பலிக்கப்போகிறது; "அவரைத்தேவரும் அணுவும் ஆட் டிலர், அவருருவாயே அவரவிர்தலினே" என்னுஞ் சுருதியினுனே தத்துவவித் தினிடத்தில் தெய்வத்தின் ஆற்றல் பலியாதெனத் தெரிதலின் அதைப் பார்க்கி னும் பிரபலதரமாக என்னதான் சம்பவிக்கப்போகின்றதென ஸ்ரீஇராகவர் வினவப் பிராணியதிர்ஷ்டமோ சக்தியோடுகூடிய ஈசுரசங்கற்பவடிவ மகாநியதி வயத்தானே சருவவிவகார விவஸ்தைசெய்வதேபோல ஞானிகளின் றேகதார ணத்தையுஞ் செய்யும் என்பதாக ஸ்ரீவசிஷ்டபகவான் விடையருளுகின்ற தாவது:—ஈண்டு நியதியென்னும் பிரஹ்மசம்பந்தி சிற்சத்தியானது சருவசகத் துவிவத்தையில் நடக்கும் விவகாரரூபமாயிருக்கின்றது, இன்றியமையாதுபவிக் கத்தக்க ஏகசத்தையாய்ச் சகலத்தையுங்கற்பித்து விளையாடும். எக்காலந் தொடங்கி அது என்னவடிவமாக இருக்கின்றதெனின்? ஆதிசர்க்கத்தில் நியதி யானது விசித்திரத்தன்மையதாய் அகலியமாய்ப் பாவிக்கப்பட்டுளது, வன்னி முதலன உஷ்ணத்தோடும் மேனோக்கி யெரியுந்தன்மை முதலவற்றோடும் கூடிய இயற்கைத்தாயிருக்குக எப்போதுமெனப் பரப்பிரஹ்மம் சுபம் சங்கற்பவடிவ விருத்திரூபத்தைத் தடையற்றடைகின்றது; சர்வஜகத்துகட்கும் ஸ்திதி பிர சித்தி சாமர்த்தியம் விவேகம் நிர்மாணம் ஜன்மம் அர்த்தக்கிரியாதி ஹேதுத் தன்மையானே முறையாக மகாசத்தையென்றும் மகாசித்தென்றும் மகாசக்தி

யென்றும் மகாதிருஷ்டியென்றும் மகாகிரியையென்றும் மகாஉற்பவமென்றும் மகாஸ்பந்தமென்றும் பெயர்பெற்ற மகாத்மா ஒருதன்மையதாகவே யொளிரும் உலகங்கள் காணப்பட்டவகையாக துரும்புகளைப்போலச் சுழன்றுகொண்டே யிருக்கின்றன, தைத்தியர்களென்று குரூராதிப் பிரகாரமாகவும், சுரர்களென்று சௌமியாதிப்பிரகாரமாகவும் நாகர்களெனவும் நகங்களென்றும் பல பலவாய் கற்பாந்தபரியந்தம் விவஸ்தையானது செய்யப்பட்டுளது; பரமார்த்த திருஷ்டியின்கண்ணே பிரஹ்மசத்தையைப்போல விவகாரத்தில் அதுவும் பிறழ்வற்றதேயாம், ஒருகால் பிரஹ்மசத்தையின் பிறழ்ச்சியும் ஆகாசகோசத்திற் சித்திரலேகனமும் அத்தியந்தம் அசம்பாவிதமாயிருந்தபோதினும் அனுமித்த போதினும், நியதியினுடைய நிலைபேறானது வேறொருவகையாக ஆயிற்றென அனுமிக்க முடியாதாம். இதுவும் வியாவகாரிக திருஷ்டியானே கூறப்பட்டது, தத்துவஞானி திருஷ்டியானே பிரஹ்மநியதிசர்க்க சப்தார்த்தங்கள் வேறுபடுவதில்லை, பிரஹ்மாமுதலிய தத்துவமுணர்ந்த மகான்களால் அறியாதவர்கட்குணர்த்தும் பொருட்டுப் பிரஹ்மவடிவமாகவே யிருக்கும் அந்நியதியானது சர்க்கமென்று சொல்லப்படுகின்றது. அசலமான பிரஹ்மத்திற்கும் சலமான சர்க்கத்திற்கும் எங்ஙனம் ஐக்கியங்கூடுமெனின்? அசலமே சலம்போலக் காணப்படும், அநாதிமத்யபர்யந்தம் பிரஹ்மம் நிறைந்து நிகழ்கின்றது அஞ்ஞ திருஷ்டியால் ஆகாயத்திற்றருப்போல நிறைந்திருப்பதுபோன்று சர்க்கம் வியவஸ்தையடைந்திருக்கும். இந்நியதியானது ஹிரணியகருப்பருக் கெங்ஙனம் தெரிந்தது, தெரிந்ததுபோல அதனனுரூபமாகவே யாவற்றையும் சிருஷ்டிக்கின்றாரே யெனின் படிகக்கல்லுதரத்திற் பிரதிபிம்பித்தவணரேகைக் கூட்ட நியாயமாக மாயாசபலப் பிரஹ்மத்தின்கண்ணே இருக்கப்பட்ட இரணியகருப்பரால், பிரசுப்தபுருடனால் தன்னிடத்தில் சொப்பன கற்பனையாசிரயமாம்கம் மொக்க நியதியேயாய பாவிசர்க்கம் உணரப்பட்டது தேகத்தில் அங்கிக்கர்காதி சித்தியற்கையதாகக் காணப்படுவதேபோலப் பிரஹ்மாவின்லே பதுமஜத்தன்மையதாக நியதியாதி சர்க்கசாதம் தம்மவயவ யூதமாய்க் காணப்பெற்றது. இது தெய்வமெனப்படும் சர்வ சகலகாலத்துலவும் பதார்த்தங்களை முற்றினும் ஆக்கிரமித்து மோகமடையாத ஈசுரசங்கற்ப சைதன்யம் ஜகத்விவத்தைரூபமாக நிலைபெறும், பதார்த்தமாக அசைவுறுகவெனவும் போக்த்ருத்தகைமைப் பதமாகப் பவிக்குகவெனவும் இதனுவிவ்வாறுகுக வெனவும் இதனுவிவ்வாறவசியம் ஆகுகவெனவும் உண்டாகும் தெய்வமதி; இதுவே புருடஅசைவும் திருணகுல்மாதி யகிலமும் ஆம் இதுவே சருவபூதாதி ஜகத்கால கிரியாதியும் ஆம். பிராணியதிர்ஷ்டநியதிகட்குப் பரஸ்பரசகாயத்தகைமை யிருக்கிறது, இதனற் புருட அதிர்ஷ்டசம்பந்தி சத்தையாம், பலம வசியம் ஆதல்வடிவஸ்திதியாம், இதற்குநியதிசத்தை பௌருஷத்தாலாம், எவ்வளவுகால மிவ்வண்ணம் விவத்தையெனின்? முப்புவனமும் எதுவரையிருக்குமோ அதுவரைப்போதுமென்க, ஆயின் எங்ஙனம் பிரளயத்திலெனின்? இவ்

விரண்டுசெத்தைகளும் ஒருவடிவதாகவே அக்காலிருக்கும். இரண்டிற்கும் புருடயத்ன அனுசாரித்தகைமை அவ்வாறே நியதித்திதியிருத்தலின், நன்றால் முயல்வினால் சத்தான்மகமாயிருக்கும் நியதிபௌருஷமிரண்டும் நிர்வகிக்கத் தக்கவைகளாம், இவ்வண்ணம் நியதிபௌருஷங்களிரண்டுமே பிராணியதிர்ஷ்டத்தினாலே நிர்வகிக்கத்தக்கவைகளாம்; இம்முறையானே இத்தகையநியதியிருக்கின்றது. அதிகமாகக்கூறுவதானே ஆவதென்! நீ சிஷ்யத்தன்மையானே கேட்பதும் யானுபதேசித்தபொருளை யனுஷ்டிப்பதும் நியதியாலாக்கப்பெற்றதேயாம், ஹே இராகவ! தெய்வபௌருஷநிர்ணயம் உன்னால்யான் வினவப்படவேண்டுமென்றும் யானுபதேசித்த பௌருஷம் உன்னாற் காப்பாற்றப்படவேண்டுமென்றும் நியதியிருந்தவாறு காண்டி. (ஈண்டுக் காத்யாயன வசனங்கொண்டு வாதித்த இலக்கணம் சுலோகத்திற்கேபயனும்) எவனேனுமொருவன் தெய்வத்தையே பின்பற்றிப் பௌருஷப்பிரயத்தனஞ் செய்யாமல் அஜகரவிரத மனுஷ்டிப்பானேலாயின் அதுவும் அதற்கனுகுணமான பழைய கருமங்களைப்பிய நியதிநிச்சயத்தானேயாம், என்னைத் தெய்வம்புசிப்பிக்கும் என்று தெய்வபராயணனாகி யாதொருகிரியையும் செய்யாமல் மௌனமாகி யிருப்பானாயி னிந்நிச்சயம் நியதியானேயாம். முன்னரும்புருடன் கேவலம் அக்கிரியனேயாயின் புத்தியும் அதனாலாங்கருமமும் அதனாலாம் பூதபௌதிகவிகாரங்களும், விகிருதிகளின் கோமுதலிய சம்ஸ்தான ஆகிருதிகளும் இலவே இலையாம்; "எதனையுமியற்றுறையாவுமேயழியும்" எனமறையுமறைகின்றது, இவ்வண்ணம் புருடக்கிரியைமூலமாகவே தான்கற்பம்வரை விவகாரத்தியினானே பவிக்கத்தக்கது என்னும் நியதிவயத்தினாலே சர்வபாவங்களும் அவ்வாறே நிலைபெற்று நிலவும், இந்நியதியானது ஈசுரரானுமே தாண்டமுடியாதாம், இஃதிவ்வாறுமென்றுமித்திதி அவசியமாவதேயாம், ருத்ராதி மதிமான்களானுமே தாண்டுவதற்கும் முடியாதாம்; பௌருடமானது பரித்தியாகஞ்செய்ய இத்துணிவைப்பின்பற்றித்திலமானால் தக்கதன்றும் பௌருஷரூபத்தானே நியதிநியாமகத்தைச் செய்யாநிற்கும் இப்போது நியதிபௌருஷரப்தார்த்தஐக்கியமே உமாதிபேதத்தானே விவகாரபேதமாம் என்பதைக் கேட்டி! புருடப்பிரயத்தின வடிவமாக விருப்பமுறுத ஈசுரசங்கற்பமாத்திரத்திரத்தால் நியதியாகும், அவ்வடிவமாகவே சிருஷ்டி பல உபகிதமாயது பௌருஷமென்று சொல்லப்படும், புருடயத்தினாகாரமாகப் பரிணமியாத நியதிநிட்பலமாம், பௌருஷவடிவமாயது சபலமாம் எனபௌருஷத்தினானே புருடார்த்தலாபமாம், ஆயின் பௌருஷமில்லாதவனும் அஜகரவிருத்தியினானே திருப்தியாதி பலலாபமடைதலைக் கண்டோமேயெனின்? கண்டதுண்மையேயாயினும் விழுங்குதன் முதலியவை பௌருஷத்தானேயாம்; எப்புருடன் நியதியானே திருப்தியடையப்படுமென வாக்குமுதலியகிரியை முயற்சியின்மையையடைந்து யாதொரு முயற்சியுமில்லாமல் விழுங்குதன் முதலிய தொழிலுமில்லாமல் எப்படியோ அப்படியிருக்கின்றானோ அவன்

திருப்தியை யடையான், அவன் பசியுளனாயினும் சிறிதுகாலஞ் சீவிப்பன் அதுவும் பிராணசலனனுகூலப் புருடமுயற்சியினனேயாம், பிராணவாயுவினசைவு அவனது யாண்டுதான் செல்லும்? நிர்விகற்பசமாதியின்கண்ணே சித்தவிசிராந்தியைத் தரத்தக்க பிராணநிரோதத்தை யனுட்டித்து அவனிருப்பானாயின், அம்முயற்சியானே தத்துவவித்தாயின் சர்வபௌருஷபல அவஸ்தைவடிவ மோக்ஷமடைந்தவனேயாவன்; அதுவும் பிராணநிரோதாதி புருடமுயற்சியின் பலனேயாகும்; ஆகவே அபௌஷபலமென எவ்வாறுகூறமுடியும் ஒருசிறிது முடியாதாம். ஆகலின் சாஸ்திரீய பௌருஷ ஏகபரத்தன்மை சிரேயசின் ஹேதுவாக விருத்தலின் சாதனத்தினலே சிரேயசாம், அத்தியந்தங்கர்த்ருத்தகைமை கர்மத்தகைமை யில்லாதவடிவமோக்ஷமோ பவத்தினலே சிரேயசாம், சாத்தியசாதன சிரேயசுகளினலோ மகான்மாக்களாய ஞானிகளினுடைய யக்ஷவனுவுடையதாய்க் காரியசகித அவித்தையை யழிப்பதில் ஆற்றலுற்றதாம், ஆகவே அவர்கள்நியதி துயரமற்றதேயாம். எவ்விங்கிர்த்துக்கமான நியதியுளதோ அதுவே பிரஹ்மசத்தையின் விளக்கமாம் அதன்கண்ணே முயற்சியினலே நிலைபேறுறுமாயின் அதுவே பரமசுத்தமானபதமாம், "அது காஷ்டை அது பரமகதி" என்னுஞ் சுருதிப்பிரசித்த பரமகதியும் அதனலடையப்பட்டதேயாம். கூறியப்பிரகாரம் யாதொருதடையுமில்லாமல் நியதியாதி விரிந்த விலாசங்களானே எங்கும் நிறைந்து எல்லாமாகியொளிரும் பிரஹ்மமே, தரையினுள்ளேயிருக்கும் தோயத்தினுடைய சத்தையாகிய நெகிழ்ச்சியானது திருணகுசகாசாதி பேதங்களாகவும் கொடிதரு குல்மஜாலாதிகளாகவும் பொலியா நிற்பதேபோலப் பொலியா நிற்கும்.

62-வது தெய்வசப்தார்த்த வருணனம் முற்றிற்று.

---

## 63-வது சித்தவிகார வருணனம்.

இப்போது பிரஹ்மமானது எல்லாவிடங்களிலும் எல்லாவகையானும் எல்லாரூபமாகவும் மாயாசக்திவிலாசத்தேனே எங்ஙனம் விரிந்துதோற்றுமோ அங்ஙனம் அறையப்பெறும். என்ன காரணத்தினலே நியதியாதி விலாசங்களாகப் பிரஹ்மம் நிகழ்ந்து நிலவுமெனின்? யாதொரு இந்தப் பிரஹ்மதத்துவமிருக்கின்றதோ அவ்விது மாயையோடு கூடிக்குலாவி எல்லா வகையானவஸ்துக்களிலும் எல்லாககாலத்திலும் எல்லாத்தேசத்திலுமே யாவற்றையுமே யுண்டுபண்ணும் சர்வசமர்த்துடையதாகும், ஆகலினனே சர்வாகாரத்தை யுடையதாயும், சர்வஞ்ஞத்தன்மையானே சர்வத்தையும் நியமிக்கும் சமர்த்துடைய சர்வேசுரத்தன்மையையுடையதாயும், விப்பிரகர்ஷதாடத்தியங்கள் வாராதபடி எல்லாவிடத்திலுமிருப்பதாயும் எல்லாமாயும் இலங்கும். விப்பிரகர்ஷதாடத்தியங்கள் இல்லாதகாரண மென்னேகொலோவெனின்? இவ்வான்மாவானது சர்வசத்தியையு முடைத்தாயிருக்கின்றது. ஆயினது யாவற்றையும் எவ்விடத்திலும் வெளிப்படுத்தலாமேயெனின்? சிலபாலந்தக்கரணவுபாதி

களில் ஜீவபாவமாகப் புகுந்திருத்தலாற் சிற்சத்தியை வெளிப்படுத்துகின்றது, சிலவிடத்தே சாத்துவிகவுபாதியின்கண்ணே சாந்தியையும் சிலவிடத்தேதாமச வுபாதியின்கண்ணே ஜடசக்தியையும், சிலபால் இராஜசவுபாதியின்கண்ணே இராகலோபப்பிரவிருத்தியாதி யுல்லாசத்தையும், சிலபாலோ மிசிரிதமாய்க் குணகாரியத்தன்மையானே விசேஷமாக விளம்பக்கூடியதல்லாததையும் வெளிப்படுத்துகின்றது. சுழுப்திபிரளயங்களிலோ ஒருசிறிதையும் வெளிப் படுத்துவதில்லை; அதன்கண்ணும் இதனது சத்தியசங்கற்பமே ஏதுவாம், யாண்டு எக்கால் எதைத்தானிது எவ்வாறுபாவிக்கின்றதோ ஆண்டு அக்கால் அதைத்தானிது இனிது காணும். சக்திகளின் ஆவிர்ப்பாவ அனுகுணமாகவே ஸ்திதியும் விசித்திரத்தகைமையுமாம், சர்வசக்தியினானே யாது யாது தான் எவ்வாறுதியாகிற்குமோ அவ்வாறே அது அது ஆம். சத்திசக்தியுடையதென் னும் பேதகற்பனையாகிய இதுவிவகார திருஷ்டியினானேயாமன்றிப் பரமார்த்த மாகவின்றும். அக்காலுளதாம் இயற்கையானே நானாவடிவமாயச்சக்தி, தோற்றுமிச்சக்திகள் யாவும் இவ்வான்மாவேயாம்; இவ்வண்ணம் விகற்ப ஜாலங்கள் விவகாரப்பொருட்டு மதிமான்களாலே உலகத்திற்பரிகற்பிதமாம், ஆன்மாவின்கண்ணே பேதம்இருப்பதேயில்லை என்னுமிவ்விடயத்தில் மூன்று திருஷ்டாந்தங்களைக் காண்பிப்பாம், ஆணைபெண்ணைகட்கும் கடலுக்கும். கடக அங்கத கேயூரங்கட்கும் பொன்னுக்கும், அவயவஅவயவிகட்கும் வியுற் பாதகபுத்தியினாலே யினிது கற்பிக்கப்பட்டதாம் வேற்றுமை வாஸ்தவ மாகவோ இல்லையாம்; எக்காரணத்தினாலே எந்தஇரஜ்ஜுவாதி சர்ப்பாதி வகையினானே அறியப்பெறுகின்றதோ அக்காரணத்தாலவ்வாறே விவர்த்த மாகப்பவிக்கும் உண்மையாகவோ இல்லையாம், ஏனெனின்? இச்சர்ப்பாதி இரஜ்ஜுவாதிகளினின்றும் வெளியினுந் தோற்றுவதில்லை உள்ளினுந்தோற்றுவ தில்லை; சர்வான்மகத்தன்மையானே சர்வசாதாரணப் பிரசித்தம்வாய்ந்த சாக்ஷிசைதன்யம் புஜிப்பவனது அதிர்ஷ்ட உற்புத்தமாய்ச் சிலபாற்சிறிதே மயலாற் காணப்பெறும், எல்லாவிடங்களினுமில்லையாம் சொரூபமும் தோற்று தாம். பரமார்த்தமாகப்பார்க்கினோ விஸ்தாரமாயஇது சர்வாகாரமயமாய பிரஹ்மமேயாம்; அஃதென்னே சக்திவிசிஷ்டமாய் ஜகத்தையவயவமாக வுடைத்தாய்ப் பரமார்த்தமாகப்பிரஹ்மமேயுளதோவெனின் இன்றும் மற்றோ பொய்யுணர்வுடையவரால், சக்திசக்தியுடையனவாகவும், அவயவ அவயவிரூபங் களாகவும் கற்பிக்கப்பட்டனவாம் உண்மையாகவோ இல்லையாம். இவ்வாறு கவே பொய்யுணர்வுபகிதமாய சித்தானது சாஸ்திரத்திற்கொத்தபடியாதல், சாஸ்திரத்திற்கொவ்வாதபடியாதல் யாதைத்தான் செய்யவேண்டுமென வெண்ணுகின்றதோ அதாகவே யபிநிவேசஞ்செய்கின்றது, அவ்விடயத்தில் மிகமுயற்சியையும் எடுத்துக்கொள்ளுகின்றது; அபிநிவேசஞ்செய்வதானே அதன்அதன் அனுரூபமாக விதித்ததையேனும் நிடேதித்ததையேனுஞ் செய்து பலபோககாலத்திலும் அவ்வதனைக்காண்கின்றது என்பதாக ஆதிசர்க்கசங்கற்

பந்தொடங்கிப் பூதபௌதிகதேகபோக்கியாதி சர்க்கத்தோடு புருடபோகாந்த சகலப்பிரபஞ்சரூபங்களாகவும் பிரஹ்மசித்தே பிறங்குகின்றது அன்னிய மொன்றுமின்றாம். சித்துத்தன்மையினவிகாரம் சர்க்கார்த்தமாம்.

63-வது சித்தவிகார நிருபணம் முற்றிற்று.

---

## 64-வது உற்பத்திவிரையங்குர நிர்ணயம்.

முன் போக்கியத்திற்கு ஆற்றலின் விசித்திரத்தன்மை முதலவற்றின் ஆவிர்ப்பாவம் நிருபிக்கப்பட்டது, இப்போது யோக்தாவிற்குச் சீவத்தன்மையி னடைவுமுறை வருணிக்கப்படும். சர்வகதனுகியும் தேவனுகியும் பரமான்மாவா கியும் சொச்சனுகியும் சுவானுபவ ஆனந்தசொரூபனுகியும் அந்தம் ஆதியற்றவ னுகியும் மகேசுரனிருக்கின்றான்; பரமானந்தனுயிருக்கும் இவனிடத்தினின்றும் சுத்தசின்மாத்திர வடிவமாகவிருக்கும் ஜீவன் முன்னர் உண்டாகின்றான், "இச் சீவவடிவமாய் அனுப்பிரவேசஞ்செய்து நாமரூபங்களை வெளிப்படுத்துவேம்" என்னுஞ் சுருதியினுனே நாமரூபவியாகரணவடிவ உலக சிருஷ்டியின் முன்னர் ஜீவோபாதிலிங்க சமஷ்டியுற்பத்தியினுனே ஜீவனுண்டாகின்றான், அவனே யுபாதிப்பிரதானத்தாற் சித்தமெனச் செப்பப்படுகின்றான், அச்சித்தத்தினின் றுஞ் ஜகத்தானதுண்டாகின்றது. ஹே பகவன்! அகண்ட அத்விதீய சொப் பிரகாசப் பிரஹ்மத்தின்கண்ணே சகண்ட சத்விதீய ஜீவசத்தை யெப்படிக் கூடும்! சுவானுபூதியாகிய பிரமாணத்தாற்றெரிந்து கொள்ளத்தக்கதும், பெரி துக்கெல்லாம் பெரிதாயிருப்பதனுனே நிரதிசய அபரிச்சேதவடிவ விருத்தியற் றதும், துவைதங்கள் சிறிதுமில்லாததும் ஆகிய இப்பிரஹ்மத்தின்கண்ணே அற்பஜீவன் பூர்வசித்த பிரஹ்மத்தன்மைக்கு முரண்பாடான தனிச்சத்தையை எங்ஙனமடையா நிற்பன் என்று ஸ்ரீஇராகவர் வினவ, சத்தியமாய் அவித்தை யற்றதாயிருக்கும் பிரஹ்மத்தின்கண்ணே பரமார்த்ததிருஷ்டியானே ஜீவசத் தையானது சம்பவியாதாம், அவித்தையோடுகூடியதன்மாட்டோ அதன் சம்ப வமானது விரோதப்படமாட்டாது எனப்பகுத்துப்பகரும் வேட்கைவாய்ந்த ஸ்ரீவசிஷ்டபகவான் முதலில் சாதாரணமாக அதன் சொருபத்தைக் கூறுகின் றார், துவைதப்பிரத்யயங்கள் அத்தியந்தம் இல்லாததாகி அதிநிருமலமாகி பெரி திற்கெல்லாம் பெரிதாகி, மிகப்பெரிதான சிற்பைரவகாயமுடைத்தாகி, பரமா னந்தநாமமுடைத்தாகி, நாசமற்றதாகி யந்தப் பிரஹ்மமிருக்கும், அநாத்ம யோகிகளைப் பயப்படுத்துதலால் பைரவ ஆகிருதியுடையதாகும்; "பூணுறுத தாய்ப் பொலிந்திடுமிந்தமாயோகம், காணுறுதது யோகியரெவர்க்குமே கருத்தில், தாணுவாகிய விதனினுமஞ்சுவர்தவத்தோர், வீணதாகவே வெருவு வர் வெருவவ்வில்லிதினே" எனவிது வோதவும் பெற்றுளது. ஆதியதெங்ஙன மெனின் அதற்கு சமமாயும் எங்கும் நிறைந்ததாயும தூய்தாயும் சத்துவமா யும் குறிக்கப்படாததாயும், அதை யுணர்ந்தவராலும் கூறொணுததாயும் இருக்குமெத்தகைமையுளதோ அத்தகைமை சாந்தமாயும் பரமபதமாயுமிருக்

கும் இரண்டாவதன்றன்மையோ! அதற்கோ, மோக்ஷபரியந்தம் உற்பவபீஜ மிருத்தலின் கிளம்புகைபோன்ற எவ்வடிவமுளதோ, அதற்கு பாதியியற்கையி னுனே சலனசக்திவடிவப் பிராணதாரணஅசைவு யாதுளதோ அதுவே ஜீவ் சப்தத்தாற் கூறப்படும் அதுசாந்தமற்ற வுணர்வுவடிவமாக இருக்கும். ஆண்டே யெல்லாநாமரூபவிவகாரம் விரியும், அந்தச் சிதம்பரமாகிய பெருந்தர்ப்பணத் தில் அனுபவ ஆகாரமாகவிளங்கும் எண்ணில்லாத இந்தஜகஜ்ஜால பரம்பரை கள் பிரதிபிம்பித்திலங்கும். ஜகத்வைசித்திரியகற்பனைக் கனுகூலமாகிய கிரியா சக்திப்பிரதான பிராணபாவமே ஜீவயாவசித்தாம், இதன்கட் டிருட்டாந்த மிதுவாம், காற்றற்றலைவிலாக்கடலே போலும், காற்றற்றசைவிலாத் தீபமே போலும் இருக்கும் பிரஹ்மத்தினுடைய இயக்கஞ்சிறிதுயாதோ அதுவே ஜீவ னென ஹேஇராகவ! நீயறிதி. அதிநிர்மலமாயிராநின்ற பிரஹ்மத்திற்குப் பிராணுதீன சலனுத்தியாச மாங்கால், சாந்தத்தன்மையென்னும் நிஷ்கிரியத் தன்மை தேய்ந்தபோது அற்பமான வுணர்வின்வடிவ இயற்கையான இயக் கஞ்சிதாகாயத்திற்கு யாதோ அது ஜீவனென் றியம்பப்படும். அச்சீவத்தன் மையும் மோக்ஷபரியந்தம் ஜீவனுக்கியற்கையதேயாகும், காற்றிற்கசைவே போலும், கனலுக்குஷ்ணமேபோலும் பனிக்குத்தண்மையேபோலும் ஆன்மா விற்குச் சீவத்தன்மையாம். சித்துருவமாய ஆன்மதத்துவத்திற்குத் தன்னை மறந்ததன்மை வயத்தால் தானே அற்பவுணர்வுபோலாய நிலையாதோ அதுவே ஜீவனென்று செய்யப்படும். அதற்கு அகங்காரவடிவ ருத்ரபாவுமுண்டு, அக் கினிகணமானது தன்னை விருத்திக்குங் காஷ்டதைல ஆதிக்கத்தால் அதிகரித்து மிகவொளி யுடையதாவதேபோல அச்சீவனே திடவாசனையாற் கனமான வுணர்வினலே முறைமுறையாக பேரகந்தையதாகும். காண்போனுடைய விழி நெறி எட்டா விடப்பாக விண்ணிற் சென்றவிழியானது எவ்வளவுதூரம் செல்ல முடியுமோ அவ்வளவுதூரம் அவ்வளவுதூரம் கருமையைப் பாராதாம், யாண்டு தான் சென்று முன்னிலையிற் குண்டிதமாமோ அதிலிருந்து அதனது நெறியில் நீலமிலதேனும் நீலந்தோற்றும், அதுபோல அகந்தையற்ற இச்சீவனுக்கும் தான் விடயமாகாதபோதுதன் பாலகம்பாவ பாவனையாம் பூர்வசங்கற்ப சமஸ் காரத்தினலே வெளிப்பட்டுத் தன்னிடத்திலத்தியஸ்த இப்பிரத்தியக்ஷ கன மான நெருங்கிய இந்திரநீல சிலையை யொத்த நிபிடமான நீலம் ஆகாயத்திற் ரோற்றுவதேபோல ஜீவன் அகங்காரத்தைத் தாங்குகின்ருன். அகம்பாவமோ ஆன்மாவைத்தேசத்தாலுங் காலத்தாலும் பரிச்சின்னப்படுத்துவதாகித் தானே சங்கற்பவயத்தால் தேகாதியாகிருதியெடுத்துக் காற்றினசைவுபோல விளங்கும். சங்கற்பத்தின் முன்னிலைப்பட்ட மாத்திரத்திலேயே அகங்காரமெனப் பெயர் பெற்று நிற்கும் அகம்பாவ அத்தியாசமூலமாகச் சித்தாதிபேதங்களாம், அவ் வகங்காரம் ருத்திரனும், சித்தம்விஷ்ணுவாம், ஜீவன் பிரஹ்மாவாம் அவை கட்கே முறையாக மனம் மாயை பிரகிருதியென்பன கிரியைநாமங்களாம் ஆண் டுச் சங்கற்பவடிவமான சித்தப்பிரஹ்மாசங்கற்பத்தாற் பூததன்மாத்திரைக்

கற்பனையைப்புரிந்து அதனானே சேதனன்மகபூர்வ அவஸ்தையினின்றும் நழு
வியதேயாகி ஜடப்பிரபஞ்சத்தகைமையையும் அடைகின்றது. அதனது பஞ்சீ
கரணத்தால் ஹேமசம்பந்தி யண்டப்பிரகிருதி தேஜஸ்த்தன்மையையுறும் தன்
மாத்திரையைந்தினது ஆகாரம் சித்தம்பிரஹ்மபாவ திருஷ்டியினானே அற்பத்
தன்மையதெனப்பட்டு வெளிப்படா வொளியதாயதாரகை உலகமுண்டாகாத
வியோமத்திற் றோற்றுவதேபோலத் தேயுக்கணமாகத் தோற்றும். மேலும்
வெளிப்படையாக விளம்பினோ, தன்மாத்திர கற்பனையினின்றும் சித்தம் தேயுக்
கணத்தகைமையை யடையாநிற்கும், மெதுவாகத்தனது அசைவினானே விரை
முளைத்தகைமையை யடைதல் போலவாமென்றறிதி. ஆண்டுப் பூர்வகற்பத்
தில் விராட்டுவடிவ உபாசனைச் சமஸ்காரமுடையவனுக்குத் தூலசமஷ்டி
விராட்டுப் பாவமாம், மற்றையனுக்கோ வியஷ்டிதூலதேக அகம்பாவசமஸ்
காரத்தால் அப்பாவமாம், அண்டமெனப் பெயரிய இத்தேயுக்கணம் பழைய
உபாசனைவடிவ அண்டாத்ம அகம்பாவகற்பனையினாலே யாதாமொன்றண்டத்
தன்மையையடையும், அதனதுடன் சித்தம்நான்கு மென்னும் மிருதிசித்தம்
ஆத்மஞானம் ஆம், ஜலமானது கரகாதி கனத்தகைமை யுறுவதேபோல
உள்ளே பிரஹ்மா விளங்கும், கர்ப்பபூபத்மகரணிகையின்கண் விளங்கும் நான்
முகன்யுடையதாகும், ஒவ்வொரு அநுபாசகனோ புண்ணியம் புரிந்தவன் எனக்
கூறும் வகையானே திவ்யதேகாதியின் கலனத்தால் விரைவிற்றானே தேவாதி
தேகத்தன்மையையடையும், ஆண்டுயானல்லாத தேகத்தின்கண்ணே யானென்
னுந்தன்மைப் பிராந்தியையடையும், கந்தர்வர்களாலும் அன்னிய தேவதைக
ளாலுங் வசித்துக்காக்கும் அமராவதிமுதலிய புரங்களாம். ஒவ்வொரு பாவம்
பயின்றதோ ஸ்தாவரத்தகைமையையடைவன், ஒவ்வொன்று ஜங்கமத்தகை
மையையடையும், ஒவ்வொன்று பறவையாகவாம், சில அரக்கபிசாசாதியாம்,
சிலஜலசரங்களாம், இவ்வளவுஞ்சுயம் சங்கற்பத்தானேயாம். சர்க்காதியின்
கண்ணே முதலிற்சனித்த சூக்குமதேகசமஷ்டி யுபாதியையுடையதேயாய ஆன்
மாவிரிஞ்சி சீவனெனப்பட்டுச் சங்கற்பசம்பவனாய் முறையே வைரிஞ்சப
தத்தையடைந்து தன் சங்கற்பத்தாலே அண்டத்துள்ளுலகைச் சிருஷ்டிப்பன்.
அவனது சத்திய சங்கற்பத்தின்கண்ணே பழைய சத்தியசங்கற்பான்மபூதத்
தான் ஆன்மோபாசனை யேதுவாம், ஆன்மபூகலனாத்மாவாகிய இது யாதைக்
கணத்திற் சங்கற்பிக்குமோ அதை இயற்கையின் வயத்தானே உண்டானதையே
பார்க்கும். பிரசித்தசலன உபயதர்மமுற்ற ஜகத்திற்குச்சிதாத்மா முதலிற் பிர
சித்தியின்கண்ணே ஹேதுவாம் சலனவிகாராதியிலோ பின்னர்த்தாய் வருவது
கருமமாம், சிற்சுபாவத்தினாலே பிரஹ்மத்தன்மையும் சர்வகாரணத்தன்மையும்
வந்ததாகும், சமுசாரத்தின்கண்ணே காரணம் பின்னர்கருமமாம், அது நிர்மா
ணஞ்செய்துநிற்கும் கூறியதையே மேலும் வெளிப்படையாய்க் கூறுமிடத்து,
சித்தினின்றும் சித்தம் இயற்கையாகவே யிலங்கும், நீரினின்றும் நுரையான
திலங்கலேபோலும், நுரைக்கட்டியானது ஓடமுதலியவற்றைக் கட்டுங்கயறாக

ளானே தடைப்படுத்தலாகும் ஜலமவ்வாருகாதாம், அதுபோலச் சித்தமே தேகநிபந்தனகருமங்களானே பந்தப்படும் சிதாத்மா அவ்வாருகாதாம். உலகத்திலும் சங்கற்பபூர்வகமாகக் கருமத்தாற்குடமுதலியவை செய்தல் காணப்படுதலின் மொழிந்த கிரமத்தின்சித்தியாகும், சங்கற்பம் தொழிலின் விரையாம் அவ்வடிவமேதான் ஜீவனுமாம், பின்னர்மேலெழுந்து கருமம் விரியும், பின் அகருமத்தினின்றும் முறையேயாம், நிஷ்கிரியைவடிவ சந்நிதானத்தினின்றும் முறையேயாம் என்றபடியாம். பின்னர்வருவனவாய கருமங்களானும் முன்சீவனிடத்தில் விரையினுள்ளே முளையிருப்பதேபோல வாசனைவடிவமாக இருப்பதுதானே வெளிப்படா நிற்குமேயல்லாமல் அபூர்வமாகயாதொன்றும் வருவதில்லையாம். விரைவின்கண்ணே யிருக்குஞ் சீவன் முன்னர்ச் சூக்குமமாக உள்ளடக்கிய அங்குரமுடையவனுகித் தன் ஜீவிதத்தைத்தரிப்பன், பின்னரோ அங்குரம்பத்திரம் காண்டம் சாகை பல்லவம்புஷ்பம் பலம் என்னும் முறைப்படியே நானுத்தன்மையை யடையும், இங்ஙனமே இரணியகருப்ப ஜீவனுமாம். வியஷ்டிஜீவர்களும் இவ்வாறே தம்மிடத்தில் வாசனை வடிவமாக இருக்கப்பெற்ற ஆகிருதியையே தேகாதியாகாரமாக அடையப்பெறுவர்கள், இத்துணைதான் விசேடம், ஹிரணியகருப்ப ஜீவசங்கற்பத்தானே முன்னருண்டாய பிரஹ்மாண்டத்தில் தாய்தந்தையாதி வடிவபூதாசிரயபிராணி நிமித்த தேகலாயஸ்திதியையடைவர். கர்மசப்தத்தின் பொருள்யாதாமெனின்? ஜன்மத்திற்கும்மரணத்திற்குங் காரணமாயிராநின்ற தங்கருமங்களினுல் பின்மேலுங் கீழுஞ்சென்றுகொண்டே யிருப்பர், சித்தின்இயக்கமே கருமமென்று சொல்லப்படும். கருமசப்தார்த்தத்தையே விவரித்துச்சர்க்கமிரண்டில் வருணித்த போக்துருபோக்கியசர்க்கத்தை யுபசங்கரிப்பாம், சித்தின் அசைவே கருமமாம் அதுவேதைவமாம் அதுவே சித்தமுமாம், தருவினுடைய அங்கங்களாகிய சாகாதிகளும் புஷ்பாதிகளும் முன்னரிருந்து மீண்டும் உண்டாகின்றனபோலவே முதற்காரணமாகிய பிரஹ்மத்தின் சம்பந்தத்தினலே சித்தின் அசைவு வடிவமாகவும் சுபஅசுபவடிமாகவும் இருக்கும் கருமநிமித்தத்தானே போக்தாக்களாகிய பிராணிகளின்றேகங்களும் போகங்களும் ஆதாரங்களும் போக்கியங்களும் புவனங்களும் முன்னரிருந்தே மீண்டுமுண்டாகின்றனவாம்.

64-வது உற்பத்தி பீஜாங்குர நிர்ணயம் முற்றிற்று.

---

## 65-வது ஜீவவிசார வருணனம்.

இப்போது போக்கியவருக்கத்திற்கும் போக்தாவிற்கும் மூலமாகிய மனத்தினது தத்துவத்தை விசாரித்துச் சின்மாத்திர பரிசேடங்காட்டப்படும். ஆண்டாதியில் எல்லாக் கற்பனைகளும் சித்திற்குவேறன்றென்று கூறும்பொருட்டு மூலபூதமாய மனத்தினது உற்பத்திஸ்திதிகளில் காரணசத்தையைக் காட்டினும் அன்னியசத்தை பெருமையின் அதுமாத்திரமாக இருக்குந்தன்மை யுண்டாம்; பரம்பொருளாகிய காரணத்திலிருந்தே மனம்முதலிலெழுந்தது, மன

ஆன்மகமாயதிவிஸ்தாரத்தையடைந்து அதன் கண்ணிருப்பதாகவே ஸ்திதி படைந்தலவும். துவைத ஆபாசம்மனத்தின் அதீனமேயாகும், இஃதின்னனுருக இஃதின்னகாதொழிகவென்பதாகப்பாவ அபாவவிடயங்களில் ஊஞ்சற்போல உலேந்துகொண்டே யிருக்கும், அச்சித்தத்தினலே சதசதாபாசசர்க்கம், பூரவம் அனுபவித்தகந்தமானது நினைக்கப்பெற்றதாய் இச்சையினல் மனேரதங் கொண்டு அசத்தாயினும் அனுபவிக்கப்பெறுமாறு அனுபவிக்கப்பெறும்.பெறுவதாகவே மனத்தாற் கற்பிக்கப்பட்டபேதமானது மனத்தை யகற்றினல் அகன்றுபோம், பிரஹ்மஜீவமனமாயை கர்த்தாகருமஜகத் திருஷ்டிகளின் துவைதைக்கியகலனே வடிவபேதமியாதொன்று மில்லவேயிலேயாம். பேதமானது நீங்கியவுடன் சேடிப்பது ஆன்மசொரூபமேயாகும், கரையற்று விஸ்தாரமாயிராநின்ற அறிவுவடிவநீரின் பரிச்சின்னப்படாதபரவுதலால் அறிவு ஏக சமுத்திரமே ஆய இவ்வான்மாச் சுயம்விளங்காநிற்கும். சித்தஜகத்துக்களின் பாதமாகவே சத்தானது எஞ்சுவதெங்ஙனமெனின்? திரம் அத்திரம் உபயம் என்னும் வகையுடனிருத்தலின் உலகிற்குச் சத்தசத் வடிவமுடைமையுண்மயின் அத்திராங்கிசத்தை யழியுமாசெய்யவே திரமெஞ்சுதல் பொருத்தமேயாம், அசத்தியத்தின் ஸ்திரமின்மை வசத்தால் உண்மையின் ஒளியானது சத்யமேயாம், சொப்பனத்தில் அஸ்திரவிடயாங்கிசம் பாதமாயினும் திரமாகிய அதைக் காண்போனது பரிசேட தரிசனமாதலின் இங்ஙனம் சித்தம்ஜகத்சத்த சத்தான்மகமாம். அத்தியந்த அசத்திற்கும் பாதங்கண்டதில்லேயேயெனின்? அவற்றின்கண்ணே பாதயோக்கியமாய அநிர்வசனீயத்தன்மையைக் கேட்டி ! உண்டாய்த்தோற்றும் சித்தமும் ஜகத்தின் மயக்கமும் சத்துமாகாதாம் அசத்துமாகாதாம், அற்றேல் பொய்யாயின் அநேகருக்கு ஏகாகாரத்தன்மை யெங்ஙனமாம்? மேற்கூறியவாறுயினும் சமாஜமடைந்த தீசமுதாயங்கள் இந்திரஜால மாயையாற் கலங்கினவாகி ஏகாகாரமடைதல் மயல்போல விழுந்ததாம். ஆயினெங்ஙனம் நீள்காலமிருப்பதாகத் தோற்றுதல்கூடுமெனின்? மனமியற்றிய ஆசக்திபலத்தினலிச் சமுசாரமானது நீண்ட கனஸ்திதியை யடையாநிற்கும், எங்ஙனம் வீணுகவே நன்னேக்கமிலாமையின் கட்டையின்கண்ணே கள்ளன்றேற்றுவதுபோலவாமென்க. ஆன்மா தன்பூர்ணனந்தபாவம் நழுவுங் காரணமாய்ச் சர்வதுக்ககாரணமாயிருக்கும் தனது மனேபாவத்தையே கண்டு ஏன் சோகப்படவில்லே, ஆன்மவிஷயக அஞ்ஞானம் அநாத்மாக்களின்றரிசனம் என்பவற்றுனே சித்தமாம், சித்தபாவத்தை யடைந்தபோதினும் ஆத்மாசித்துத்தத்துவம் சித்தத்தன்மைசெய்த அனர்த்தத்தைக் குறித்துச் சோகிக்க மாட்டாது, பாலன்வேதாளகற்பனையினலே மிகுந்த பயத்தை யடைந்தபோது அதன்கண்ணே யபிநிவேச சித்தத்துவத்தால் அவ்வேதுவாகிய வேதாளகற்பனையைக்குறித்துச் சோகியாததேபோலு மென்றுணர்தி. இங்ஙனமாகவே சித்திற்குத் திருசிய முன்னிலேப்படுமியற்கையே அனர்த்தபரம்பரை மூலமாகும்,பெயரற்று உருவற்றுச் சருவஆசைகளுமற்ற சிதான்மகவத்துவிற்குத் திரு

சிய முன்னிலைப்படுந்தன்மையானே சித்தமாம், சித்தத்தாற் சீவத்தன்மைக் கற்பனையாம், ஜீவத்தன்மையானே அகம்பாவமாம், அகம்பாவத்தான் சித்தத் தன்மையாம், சித்தத்தன்மையால் இந்திரியாதித்தன்மையாம், அதனாற்றேகாதி விரிந்தமயலாம்; தேகாதிமோகத்தினாலே சொர்க்க நரகங்கள் யானெனதென் னும் அபிமானத்தாலுண்டாம் மோக்ஷபந்தனங்களுமாம் விரையு முளையும் போல எப்போதுமே தேகமுங்கருமமும் ஓயாமல் மாறி மாறி வந்து கொண்டே யிருக்கும்; இவ்வெல்லா அநர்த்தபரம்பரையும் ஜீவப்பிரஹ்ம பேத மயன்மூலத்தாலாதலின் அதனைக்கியபோதத்தால் அம்மயல் பாதிக்கப் படும்போது பாதிக்கப்படுமாதலின் பேதத்தையே தள்ளவேண்டும் பிரஹ்ம கூடஸ்தர்கட்குப் பேதமில்லாததேபோல ஜீவசித்தங்கட்கும் பேதமில்லையாம், ஜீவசித்தங்கட்கும் பேதமில்லாததேபோலத் தேககருமங்கட்கும் பேதமில்லை யாம். சகலசாஸ்திர விசாரரகசியத்தை ஒருகூற்றினானே சுருக்கி வெளியாகக் கூறுவாம், துணிபாகக் கருமமேதேகமாம், தேகமேசித்தமாம், அதுவே யானென இங்குஜீவனாகும், அச்சீவனே ஈசுரசித்தாம், அது ஆன்மாவாம், யாவுஞ்சிவமாம் இஃதேகபதத் தியம்பப் பெற்றதாம்.

65-வது ஜீவவிசார வருணனம் முற்றிற்று.

---

## 66-வது சம்சார பரமபோக வருணனம்.

இப்போது துவைதமானது மனோமாத்திர விலாசமெனவும் இஷ்டத்தி யாகத்தாலும் பிரபோதத்தாலும் அஞ்ஞான சகிதமனது க்ஷயமாமெனவும் விஸ்தரிக்கப்படும். இங்ஙனந்திருசிய முன்னிலையை யடைதலினானே சித்தமா மென்பதாதியாக வருணித்த முறையானே ஹே இராகவ! ஒன்றாயிருக்கும் பரமவஸ்துவானது நானாத்தன்மையை யடைந்ததுபோலவாகும், அதற்குயாது திருஷ்டாந்தமெனின்? தீபத்தினின்றும் நூற்றுக்கணக்கான தீபங்கள் உண்டா வதேபோல நானாத்தன்மையைப்போல வுண்டாம். கேவலந் திருசியத்திற்கே பன்மையானது பற்றுவதென்பதாகவில்லையாம், மற்றோ, இங்ஙனங்கூறிய நெறியே சித்திற்கும் உபாதிகளின் பேதங்களையனுசத்துப் பன்மைவந்தது போலப்பற்றுறும், ஆண்டு "பொங்கழலெங்ஙனோர் புவனம்புகுந்தே, மங்குரு வுருவினின் மறுவுருவாமே," என்பதாகச்சுருதியும் இத்திருஷ்டாந்தத்தை யியம்பியிருக்கின்றது. இவனுக்குச் சித்தஅதீன ஜீவத்தன்மைக் கற்பனையானே பந்தம்வந்ததேபோலச் சித்தாதீனங்களேயாய விசாரதத்துவ போதங்களினால் மோக்ஷமுமாமென்பது இரகசியமாம், முதலில் உள்ளே ஆராயுங்கால் துவைத அபிநிவேசஹீனமாய் அதனானே இருந்தபடியே ரூபமற்றதும் நாமமற்றது மாம், ஆகிய அத்தகைய ஆன்மாவைப் பார்க்கினோ சோகிப்பதே யில்லையாம், "ஆன்மாவையறிந்தவ னருஞ்சோகங்கடப்பன்" எனச்சுருதியுமறைகின்றது. விசாரத்தினாலே சித்தம் உபசாந்தியடைந்தபோதினும் சர்வதுவைதங்களினுப சாந்தி யெங்ஙனங்கூடுமெனின்? சித்தமாத்திரமேஜீவனும் அஃதொழிந்தால்

அகிலமே யொழிந்ததாகும், மனநினையாவிடின் இருமைக்கிருப்பின்மையின் மனமொழிந்தவுடன் இருமையும் ஒழிந்துபோதல் கூடுமெனலாம், பாதரக்ஷை யைக் காலில் மாட்டிக்கொண்டிருப்பவனுக்கு உலகமுழுவதுமே தோல்பரப்பி யது போலவேயாமன்றோ. சித்தமயக்கத்தை யுபாதானமாகவுடையஜகத் திற்கு அதனினும் அன்னியசொரூபம் இராமையினாலும் உபரமம் சித்தியாகும், வாழையானது இலைதோல் காண்டம் மூலம் இவையொழிந்து வேறுசொரூபம் உடையதாகாததேபோல மயன்மாத்திரத்தை விடுத்து வேறுஜகத்தொன்றில்லை யாகும். உண்டாகின்றது பால்யத்தையடைகின்றது பின் யவ்வனத்தை யடைகின்றது கிழத்தன்மையையடைந்து மரிக்கின்றது சுவர்க்கத்தை யடை கின்றது நரகத்தையுறுகின்றது, என்பதாக விங்ஙனம் மயக்கத்தாற் சித்தந் தானே நடனஞ்செய்கின்றது. விசித்திரபுற்புத வுல்லாச ஆகாயத்தில் அநேக மாயிரம் புற்புதாகாரமயனுண்டாக்குவதில் வெண்ணறைக்குச் சாமார்த்திய மிருப்பதேபோலச் சித்தத்திற்கு இப்பிரஹ்மாண்டக்குமிழி கோடிகளை ஆன் மாவிற்கயலின்றியே யுண்டாக்குவதில் மிகவும் வல்லமையுண்டு. திமிரத்தாற் களங்கப்பட்டகண்ணானது சந்திரன்முதலியவற்றில் இருமையைக் காண்கின் றதேபோலப் பரமான்மாவின்கண்ணே ஜீவசித்தானது சித்தத்தினுடைய மயலை யுண்டாக்கும் சத்தியினாலே பரவசஞ் செய்யப்பட்டதாகும். கட்குடியால் உன் மத்தனானவன் மதவசத்தினாலே விருக்ஷங்களைச் சுழலுவனவாகக் காண்கின்ற றனன், அதுபோல மனத்தாற்கலக்கப்பட்ட சமுசாரங்களைச் சித்தானது காண் கின்றது சுழன்றுவிளையாடும் பாலகனானவன் சுழற்சியினாலே குலாலனுடைய சக்கிரஞ்சுழலுவதேபோல உலகத்தைச்சுழலுவதாகக் காண்கின்றனன் அங்ங னம் சித்தானது சித்தத்தினாலே திருசியத்தைக் காண்கின்றதென்றுணர்தி. துவைதசத்தையானது சித்த அதீனப்பிரதீதிகாலத்தை யுடையதேயாகும் சித்தம் உபரமத்தையடைந்தால் உபரமத்தையடையும், சித்தானது இருமையை யெண்ணும்போது துவைதைக்கிய விப்பிரமமாம், இருமையை யெண்ணாது போதுதுவைதைக்கியங்களின் க்ஷயமாம். யாது சிந்திக்கப்படுகின்றதோ அது ஜடவடிவமாம் அறிவது அறிவாம் அறிவினும் அச்சடம் அயலாகாதாம், ஆகை யால் தோற்றுங்காலத்திலும் அது தனியாக அமையாதாம், ஆயின் சித்தத்திற் குச் சாந்திவருவது எங்ஙனமெனின் யாதொன்று மில்லவேயில்லை யென்னும் பரம உபசாந்தியினாலே சித்தினதுசித்தம் பரமசாந்தியையடையும், விடயங்கள் ஒழிந்தபோதே விறகில்லாத நெருப்பேபோல சித்தமானது தானாகவே சாந்தி யையடையும். ஜீவன்முக்தன் ஆயினெப்போதாகலாமெனின், சிற்கனத்தால் ஏகத்தன்மையையடைந்து நிச்சலமாயிருக்கும்போது சமாதியில் விலீனப்பட் டாலும் விவகரித்தாலும் பரமசாந்தனெனப்படுகின்றான். அற்ப அறிவினை யுடைய சித்தானது சிற்கனஐக்கியத்தையடையும்போது முற்றறிவுடைமையே யுண்டாம், நிர்விடயத்தன்மைவடிவ பரமசாந்தியானதுண்டாகாதாம் எனின், ஹேகுழந்தாய்! அற்பஅறிவினன் றிருசியத்தையெண்ணிக்கொண்டேயிருப்பன்

பூரண அறிவினன்றிருசியத்தையெண்ணான், சிறிது கட்குடித்தவன் கலங்கித்திரிவன் மிகக்கட்குடித்துன்மத்தனானவன் யாதொருவியாபாரமுமில்லாமற் சும்மா கிடப்பன், சித்திற்கு விடயத்தோடு கூடுந்தன்மை கேவலம் சித்துத்தன்மையாலாக்கப்பட்டதன்றாம், மற்றோ, அவித்தையினா லாக்ஷேபிக்கப்பட்ட சித்துத்தன்மையாற் றாண்டப்பெற்றதாம், அதுவும் ஞானசமாதியின்றிடத்தன்மையினானே விளக்கப்பட்ட சிற்கனஐக்கியத்தானே அவித்தையாகிய விக்ஷேபம் அகன்றவழியகன்றேபோம் ஈசுராதிகளின் சர்வஞ்ஞத்தன்மையும் மாயிகமேயாகும் வாஸ்தவமாகாதாம் ஆகையால் யாதொரு தோடமுமின்றாம். இதனையே கருதியின்னுங் கூறக்கேட்குதி, சிற்கனவஸ்துவோடு அனன்யவிடயத்தன்மையை நிரந்தரம் அடைந்து, அவ்வகையினானே அந்தப் பரமபதத்தில் மிகவும் அழுந்திநிருவிகற்பசமாதி சாக்ஷாத்காரமடைந்து விளங்குஞ் சித்தத்திற்குச் சொரூபசூனியத்தன்மை நிர்விஷயத்தன்மை முதலியபலபரியாயங்கள் உளவாம். சித்தின்கண்ணே திருசிய ஜடவிவகாரக்கிரம ரூபத்தன்மைக் கற்பனையும் சித்த நிமித்தத்தானேயாம், சித்தம் நீங்கவே திருசியமும் நீங்குதல்கூடும், சித்தானது சிந்தித்தலினாலே திருசியத்தகைமையை யடைகின்றது, உண்டாயிருக்கின்றேன் ஜீவிக்கின்றேன் காண்கின்றேன் சமுசாரஞ்செய்கின்றேன் என்பதாக அசத்துமயமாய மயலையேகாணுகிற்றும். சித்த வியாபாரமானது சமாதிஞானப்பியாசத்தினால் இளைப்பாறுக, சித்தமோ உபாதியடைய முடியாதே யெனின்? சித்தத்தினியற்கையைப் பார்க்கினும் சித்தவியாபாரம் வேறாக இல்லையாம், வாயுவைப்பார்க்கிலும் அசைவுவேறன்றன்றோ, உஷ்ணமானது உபராமத்தையடையவே வன்னி மிஞ்சுவதேபோல வியாபாரம் உபாயமடையவே சித்தம் எஞ்சும், அதிலுட்பட்டிருக்குஞ் சொரூபம் வேறொன்று யாவரேனும் அனுபவிக்கின்றார்கள் என்பதாகக் கிடையாதாம்; உள்ளே யாது தான் விவகரிக்கும். இங்ஙனஞ்சித்தம் நீங்கவே சித்தின்கண்ணே திருசியம் அப்பிரசித்தமாம் அப்பிரசித்தமானவதற்கோ சாதகம்வேறிலாமையின் அசித்தமாதலினாலும் அதுவும் அகன்றுபோனதேயாகும், யாதுசித்தினாலே வியாபாரிக்கப்படுகின்றதோ சிறிது அதற்கிவ்வண்ணம் திருசியத்தன்மையானது உண்டாகவே செய்யும், ஆயின்முன்றிருசியத்தோற்றம் எத்தகைமைத்தா யுண்டாமெனின்? இரஜ்ஜுசர்ப்ப மயக்கந்தோற்றுவதேபோல அவித்தையின் மயக்கமாம் அத்தோற்றமென்றுணர்தி. இவ்வாறாகவே இரஜ்ஜுசர்ப்ப அசைவுபோலவே சித்த அசைவுவடிவ சமுசாரம் ஞானமாத்திரத்தினாலே சிகிச்சை செய்யமுடியக்கூடியதாம், சித்தம் அசைந்த மாத்திரத்தினாலே உண்டாகாநின்ற சமுசாரம்என்னும் பெயர்வாய்ந்த இப்பெரியவியாதியானது ஞானமாத்திரத்தினாலே சொஸ்தப்படுத்தலாம், எவருக்குமே யிதில்யாதொரு ஆயாசயமுமில்லையாம். வாசனைமயச்சித்தமற்றவனாய் எல்லாவற்றையும் பரித்தியாகஞ்செய்துவிட்டுச் சும்மாயிருக்கும் பக்ஷத்தில் இங்கிமிடத்திற்றானே அவன்முக்தனாகிவிட்டான் என்பதிலையமே கிடையாது. இரஜ்ஜுவின்கண்ணே புஜங்கத்தோற்ற

மானதுபார்த்தமாத்திரத்தானே யழிந்துபோவதேபோல வுண்முகமாகத்திரும் பித்தனதுண்மையைத் தரிசித்தலானே இச்சமுசாரமானது நசித்தேபோய் விடும். உணர்வை உள்நாடுவதற்குப் பொறிகளினடக்கம் காரணமாம், அதன் கண்ணே விடய ஆசையை யகற்றல்காரணமாம், எதன்கண்ணே யபேஷை வளர்கின்றதோ அதையத்தியந்தம் பரித்தியாகஞ்செய்து சொஸ்தியாயிருக்கும் பக்ஷத்தில் அம்மோக்ஷம் கிடைத்துவிட்டதாகவே கருதவேண்டும் இதன் கண் ணும் இவ்வளவுகூடச் செய்யமுடியாததென்னே. விடயத்தியாகம் அவசியம் செய்யவேண்டும், பெரியோர்கள் பிராணனையும் திருணத்திற்கொப்பாக இங்கு வெற்றிகொள்ளுகின்றனர், எதன்கண்ணே யாசையிருக்கின்றதோ அதைமாத் திரம் விடுவதில் எவ்வாறுமுடியாதென்று சொல்லலாம். யாண்டாசையானது மிகுகின்றதோ அதனைமனதால் விடுத்து யாதொருபற்றுமற்றிருப்பாயாக, இவ்வாறிருப்பனுயின் எவ்வாறு ஜீவிக்கமுடியுமெனின், கிடைத்தவற்றைக் கரு மேந்திரியங்களாற் கவர்ந்துகொண்டு நட்டமானதை விட்டுச்சோகத்தையடை யாமற் கம்பீரமாய் வாழ்தி! கரதலத்தில் வைத்த வில்வக்கனிபோலவும் எதிரே யிருக்கும் பர்வதம்போலவும் மேற்கூறிய இலக்கணம்வாய்ந்த தத்துவவித்திற்கு ஜன்மாதி விக்கிரியையில்லாத பரமான்மாவின் பிரஹ்மத்தன்மையானது அத்தி யந்தம் பிரத்தியக்ஷமேயாம், சிறிதும் மறைப்பின்றும். கூறியபொருட்டிரயத் தைத் தொகுத்துக்கூறுவாம், கற்பாந்தப்பெருங்கடல் ஒன்றுதானே அலே களின் வேற்றுமையினுலே விளங்குவதேபோல ஒரே அப்பிரமேய ஆன்மாவே அஞ்ஞானதிருஷ்டியுடையவர்கட்கு உலகமென்னும் வேடத்தோடும் தோற்றி விளங்கும், அதுவே அறிவினுல் வெளியானபின் மோக்ஷவடிவமான புருடார்த் தத்தைக்கொடுக்கின்றது, முன்னறியாமலிருந்தபோது தான்சர்வ அநர்த்த காரண மனோபாவபொருட்டும் அதனுலுண்டாக்கப்பட்ட நீண்ட பந்தனப் பொருட்டுமே யாமென்றுணர்தி.

66-வது சமுசார பரமயோக வருணனம் முற்றிற்று.

---

## 67-வது சத்திய வுபதேச வருணனம்.

இப்போது யாதொரு போக்தாவானது கூறப்பட்டதோ அந்தஜீவ னுடைய சொருபம்வருணிப்பதுடன், வியஷ்டிப்பிரதானத்தன்மையானே அவனுக்குக்கரணுதிகள் சம்பவிப்பதும் வருணிப்பாம். சமஷ்டிப் பிரதானத் தன்மையானே கூறியஜீவனே வியஷ்டிப்பிரதானத்தன்மையானே வெளியாக அறிய இச்சித்த ஸ்ரீ இராகவர் மீண்டும் வினவுவதாவது:—ஹேபகவன்! மனத் தைச்சிருஷ்டித்து அதன்ருதான்மியத்தை யடைந்ததன்பால் அத்தியாசத்தால் மனத்தன்மை யோக்கியனுய்ப் பரமான்மாவின் சம்பந்தியாய் ஆமவனியாவன்? அங்குசனு? காரியனு? அல்லது அவனேயா? அவனேதானுயின் எங்ஙனந் தான் இதன்கண்ணினிதுண்டானன்? பரிணமித்தானு அல்லது விவர்த்த மாய் விளேந்தானு? முதலதேலோ அநித்தியத்தன்மையாம், மற்றதேலோ

பாத்தியத்தன்மையைப்பற்றும். உண்டாகவேயில்லையென்னினே போக்தாவே சித்தியாமற்போம், பிரஹ்மத்திற் குண்கைமுதலிய சுருதியோ காணப்பெறுகின்றது, அன்னியனென்னின் அவன் முனியாவன்? அவற்குச்சமான சாதியுடையவனே? வேறு சாதியுடைவனே? என விகற்பஞ்செய்யின் ஒருபக்ஷங்கூடப் பொருந்தாதாம் என இவ்வண்ணம் வருமையத்தை யகற்றியருளவேண்டு மீண்டுமெனப் பிரார்த்திப்ப, சிந்திக்க முடியாமல் அளவில்லாத சக்திகளோடு கூடியிருக்கும் மாயாசக்தியோடு கலந்த பிரஹ்மமானது பரமார்த்தமாக அபின்னமாக விளங்கிக்கொண்டிருந்தபோதிலும் தன்னிடத்திலேயே மாயையினல் இருமையை யடைந்ததுபோலாகி உபாதியாலாய விகாரங்களையாரோபித்து அளவில்லாத ஜீவர்கள் வேடத்தோடும் முற்றுணர்வுற்ற பரமேசுர பாவத்தோடும் விளையாடுவதற்குச் சமர்த்தமுடையதேயாம் என யாதொரு தோடமும் மருவாதாம் எனவினைதியென ஸ்ரீவசிஷ்டபகவான் விடையளிப்பதாவது :— ஹேஇராகவ ! சமஸ்தசக்தியின லலங்கரிக்கப்பட்ட சர்வசாமர்த்தியத்தோடு கூடிய பிரஹ்மமானது எந்தசக்தியோடுகூடி விளங்குகின்றதோ அடைந்த அதனையே காண்கின்றது. அநாதிகாலமாகச் சித்தசமஸ்கார உபகிதசித்துருவமாக விளங்கும் எதனைச் சர்வான்மா சுயம் உணருமோ அதுதான் ஜீவசப்தத்தானே கூறப்பெற்றதாகும், அதுவே சங்கற்பத்தைச் சமைப்பதுமாகும். ஆன்மாவின் கண்ணே இயற்கையதான இருமைப்பான்மையே வருஞ்சமுசாரப் பிரவிருத்திக்கு முக்கியகாரணமாகும், பூர்வபூர்வ சங்கற்ப வாசனையினலே வாசனையேற்றப்பட்ட ஜீவசை தன்யமே பின்வரும் விசித்திரத்தன்மைமாத்திரத்திற் கேதுவாகும் ; இயற்கையா யிருமையே காரணமாகும், பூர்வசங்கற்ப சித்தானது தானே பின்னர் ஜன்மமரண ஸ்திதிக்கு நானுகாரணத்தன்மையை யடைகின்றது. இவ்வளவு மட்டிலேயே மற்றைய வினக்கட்கும் விடை விளம்பியாய்விட்டதுபோலிருக்கின்றது என்றெண்ணிய ஸ்ரீ இராமபிரான் இயம்பிய ஜீவனுடைய ஜன்மாதி நிமித்த தெய்வகரும காரணங்களை யுண்மையாயுணரவேண்டுமென்றிச்சித்தவராய், கூறியவகையாகச் சீவசொரூபமானது புத்தியின் கண்ணே நிலைபெற்று நிற்கத் தெய்வமென்பது என்னென்று சொல்லப்படும் அங்ஙன்கருமமென்பது தான் என்னெனப்படும் காரணமென்பதுதான் என்னென்றியம்பப்படும் எனவினவ அதற்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுவதாவது :—ஹே குமர ! இராஜப்பிரதான மாயோபகிதமாகவும் சுத்தமாகவும் சின்மாத்திரமானது ஈண்டுளதாம், ஆகாயத்திற்காற்றேபோல அம்முதற்றன்மையின் சிருஷ்டிமுன்னிலையை யடையும் அவ்வசையுந்தன்மையில்லாவிடினே சாந்தமாகவேயிருக்கும். அவற்றுண் முதலதை விரித்துக்கூறின், தன்னுடைய இயற்கையாய சித்தன்மையே திருசிய ஆகாரமாய்த் தன்னவித்தையினலே கற்பிக்கப்படுமாயின் அவ்வாகாரமாய்க் கொண்டு அசைவுஎன்று அறிஞராற் புகலப்படும் ; மற்றதோ திருசியத்தன்மையபாவமேல் அவ்விதுவே அசைவின்மையாய தூய்தாயுரைப்பர். அசைவு அசை

வின்மைகளினனே சித்திற்குப்பிரபஞ்ச அப்பிரபஞ்ச வடிவத்தகைமையாம் எனத்துணியப்பெறவே அசைவிற்கே ஜீவகாரண கருமதெய்வாதி நாமங்களால் உபதேசமாம் என்பது பலிதம்; அசைவினலே சித்தானது சர்க்கமாக இலங்கும் அசைவின்மையினலே பிரஹ்மம் சாசுவதமாக இருக்கும், ஜீவகாரண கருமாதிகள் சித்தசைவிற்குப் பெயர்களாய்ப் பேசப்படும். ஆண்டுப் பிராண அசைவைக்குறித்துச் சீவன் தன்னுள்ளிருக்கும் காரியங்களின் ஆவிர்ப்பாவ வடிவ அசைவைக்குறித்துக் காரணமாம், சரீராதி அசைவைக்குறித்துக் கருமம் அதுவே சூக்கும அவஸ்தை யுடையதென்றும் நிலைபெற்றதென்றும் பலந்தொடங்க முன்னின்றதென்றும், தெய்வமென்றும் பேதமாம். அவைகட்கும் அனுபவசத்தையைப்பற்றியே சத்தையாம் தன்காரியப்பொறுப்புமாம், இச் சித்தசைவாகிய எவ்வனுபவ வடிவமிருக்கின்றதோ அதுவே ஜீவகாரண கரும பெயரதாம் இதுவே சமுசாரத்தின் பீஜமாம். எங்ஙனந்தானிதன் கண்ணே யினிதுதயமாம் எனயாது வினவப்பட்டதோ அதற்கு விடையிதுவாம், இயற்றப்பெற்ற இருமைச் சிதாபாசவசத்தாற் றேகம்வந்தடையும் சங்கற்பத்தால் நானுவகைப் பொருட்டன்மையைச் சித்தசைவு சிருஷ்டிகளில் அடைவுறும், அவ்வக்கரும அனுசாரமாக முன்மரணகாலத்தில் மதியின் கண்ணே நிலைபெற்ற தேவ நர திரியக்காதி தேகத்தையும், பூர்வசங்கற்பானுசாரியாய் நானுவிதயோக்கிய பதார்த்தபாவத்தையும் அடையும். நானுவகையான ஆயிரக்கணக்காம் யோனிகளை ஜன்மஹேதுக்களாக நீள அடைவுற்றுச் சிலமந்தசாஸ்திரீயப் பிரவிருத்தியையுடைய சித்தசைவு நெடுநாட்கழித்து விடுபடும், அநேகமாயிரஞ் சன்மங்கழித்துச் சிலவிடுபடும், ஞானதிகாரத்தையடைந்த மற்றென்றோ ஒரேஜன்மத்தில் விடுபடும், நானுகாரணத்தன்மையை யடைந்துளதெனயாது ஓதப்பட்டதோ அதன்வகையிதுவாம், சித்திற்கியற்கை எவ்வுபாதியோடு சம்பந்திக்கின்றதோ அவ்வடிவமாகவே ஸ்புரணமாதலாம், ஒளியானது நீலபடத்தில் நீலரூபமாகவும் இரக்தபடத்தில் இரக்தரூபமாகவும் மஞ்சட்படத்தில் மஞ்சள் ரூபமாகவும் தோற்றுவதுபோலவாம்; அத்தகைய இயற்கையின் வயத்தானே தேகஜன்மகாரணங்களாகிய அன்னரசங்களாலும் அவற்றின் மிகவும் செழிப்புற்றதாய் தந்தையரது சரீரங்களாலும் ஐக்கியத்தை யினிதடைந்து முறையாகச் சுக்கிரசோணிதாதி ரூபமாய்ப் பரிணதமானது பையப்பையச் சொர்க்கமோக்ஷ நரகவதபந்தாதிகாரண தேகத்தன்மையை யடைகின்றது; சுவர்க்காதி காரணதேகபாவத்தையடையச் சுக்கிராதி ரூபத்தால் பிதுர்தேகத்தினின்றும் வெளிப்படுகின்றது. இவ்வாறுகவே உபாதிகளினுடைய சேர்க்கையினலே ஐக்கியமாகப் பிதாபுத்திரஜீவர்கட்குப் பேதமோத முடியாதாம் உபாதிதனிப்படவே பேதமானது தோற்றும் எனச் சீவர்கட்குப் பரஸ்பரம் பேதமாதல் உபாதிகட்கே தருமமாமன்றிச் சைதன்யத்திற்காகாதாம், கடகாதித்தன்மையானது பொன்னிலிருப்பதேபோலக் காஷ்டலோஷ்ட சமஸ்திதியையுடைய ஜடதேகத்தில் ஜன்மாதி அறுவகைப்பாவ விகாரங்களாலுண்டாய

நானுத்தகைமையாய வேற்றுமை தோற்றிக்கொண்டிருக்கும், உபாதிகட்கும் பூதவிகாரத்தன்மை யுண்மையின் பூதங்கட்கும் உத்தரோத்தரம் பூர்வபூர்வ பூத விகாரத்தன்மை யுண்மையின் அகண்டாகாசமாத்திரத்தன்மையானே சத்திய பேத அவகாசமாம் என்பதனுற்றுன் பொற்பூடண திருஷ்டாந்தங்கொடுத்தது. இவ்வண்ணம் பேதம் பொய்யாயினும் ஜன்மாதிபேதப் பிரதீதி மனோமயக்கமே யாகும், உண்டாகாவிடினும் இம்மனோமயக்கம் அசத்துருவத்தைக் காண்கின் றது, மயக்கத்தாற் பட்டணந்தோற்றுவதேபோல உண்டானேன் இருக்கின் றேன் இறந்தேன் என்பதாகக்காணும். எல்லாப் பேதவுணர்வுகட்கும் யான் என்தென்னும் பேத கற்பனை மூலமாம் அதற்கும் பூர்ணாத்மசொரூப அஞ்ஞா னமும் போகாசைச் சமஸ்காரங்களும் முறையே மூலமாம், யான் எனது என்ப தான அசத்துருவத்தையே சித்தம் இனிது காணுநிற்கும் அதிருஷ்ட பரமார்த் தத்தன்மையானே ஆசைப்பரவசப் பெறுநிலைமையாம். கூறிய பொருளில் இனியியம்பப்படும் லவண உபாக்கியானமே திருஷ்டாந்தமாகுமன்றோ, அதா வது, மதுராதிபதியாகிய இராஜாவிற்கு நீசத்தன்மையானது வந்துற்றதே போல இந்த ஜகத்தின்றிதியானது சித்தத்திற்கு மயலால் வந்துற்றதாகும் ; யாவுமே மனோமாத்திர மயக்க வுல்லாசத்தானே விரிந்து விளங்குவதாகும், இது, அம்பு பங்கமாவதேபோல ஜகத்வடிவமாக விரிந்து தோன்றுகின்ற தென்று ஹே இராமச்சந்திர நீ ஐயமில்லாதுணர்தி! அறைவுற்ற ஆரோபமுறை யையே மீண்டுந் தனித்தனியாகத் திருஷ்டாந்தங்களானே காட்டுவாம், முதற் காரணமாகிய சிவத்தினின்றும் சித்தானது திருசியத்தொழின் முன்னிலைய தாக சௌமியமான கடலினின்றும் நீரசைவு சிறிதாய் நிகழ்வதேபோலத் தோற்றுநிற்கும். அசைவினாலே ஜீவசொரூபமான சுழலை யுடைத்தாய் மன மாகிய அலையைத்தரித்து அறிவாகிய நீர்நிறைந்துள்ள பிரஹ்ம சமுத்திரத்தின் கண்ணே சிருஷ்டிகளாகிய குமிழிகள் உண்டாம். ஹேசௌமிய ! தன்னுணர்வு மாத்திரத்தினாலே மாயாபந்தனத்தைக் கொல்கின்றபடியினாலே சிங்கமாய், சிங் கம்போலச் சிந்திக்கமுடியாத சக்தியுடையதா யிலங்கும் சமமாய பிரஹ்மத் திற்கு மாயையினாலே யாதொரு காத்திரத்தடங்கி யிருக்குந்தன்மை யிருக்கின் றதோ அதுவே தன் வடிவிலிருப்பதாய உணர்வின் போலியாய ஜீவனைப்போல இருக்கும் அதுவே சுயம்விடயரூபம்போல இருக்கும் தனித்திராதாம். ஆயின் எவ்வுபாதிகளினாலே ஜீவன் மனம் புந்தி சித்தம் அகங்காரம் முதலிய சப்த பேதங்களாம் எனின்? கேட்டி ! சித்துணர்வினாலே சித்துப் போலிவடிவி னாலே ஜீவனெனப்படும், நிச்சயஞ்செய்வதாலே புத்தியாம் ஸ்மரணத்தினாலே சித்தமாம், சங்கற்பத்தினாலே மனமாம் அபிமானத்தினாலே யகங்காரமாம், விக்ஷேபசக்தித்தன்மையானே மாயையாம், அன்றி உயிர்த்தலா லுயிர்ப்பாம் வசனித்தலால் வாக்காம் காண்டலாற் கண்ணும் என்னும் சுருதியானும் கூறிய பலநாமங்களையடையும். ஆண்டுச் சங்கற்பப் பிரதானத்திற்குச் சப்தாதி சூக் குமபூத கற்பனைவாயிலாக ஜகத்கற்பகத்தன்மையாம், இம்மனமானது தன்

மாத்திர கற்பனையை வாயிலாகக்கொண்டு இவ்வுலகங்கள் யாவற்றையும் அசத்தியமாயினும் சத்தியம்போற் றோற்றுமாறு கந்தர்வநகரம்போல விஸ்தரிக்கும். மனத்தானே கற்பிக்கப்பட்டதற்கும் மனோரதிக வஸ்துவைப்போலப் பொய்ம்மையே யுண்டாம், சூனியமாய ஆகாயத்தின்கண்ணே திருஷ்டிக்கு விஸ்தாரமாக முக்தாவலி முதலியதரிசனம் ஆவதேபோலவும், கனவில் மயக்கத்தினாலே பலபல தோற்றுதல் போலவும் சித்தத்தின்கண்ணே சமுசாரமானது தோற்றும். அதன் சாக்ஷியானது நித்தியசுத்தமாயிருக்கும், சுத்த ஆன்மாவானது அயிலன்முதலியவை யணுகாமையானே நித்தியதிருப்தி யடைந்ததேபோலச் சாந்தமாயினிதுவீற்றிருக்கும், சித்தமெனப் பெயரியகனமயக்கங்களைக் கண்டபோதினும் காண்பதே யில்லையாம் அதற்கே இந்திரியத் துவாரங்களினாலே வெளிச்சமுசாரம் ஜாக்கிரமாம், உள்ளே அகம்பாவவாசனை பொருந்தியதற்கு இருதயத்திலிருந்து கண்டபரியந்தம் உண்டாஞ்சமுசாரம் சொப்பனமாம், ஸ்மிருதிக்குப் பீஜமாய வாசனைமாத்திர சேடத்தினால் இருதயத்தின்கண்ணே ஸ்திதி சுழுப்தியாம், இவற்றைக் கடந்ததே துரியமாம்; சமுசாரஞ் சாக்கரமென்று சாற்றப்படும், அகங்கிருதியே சொப்பனமாம், சித்தம் சுழுப்தத்தன்மையாம், சின்மாத்திரமே துரியமெனப்படும். இவ்வண்ணம் சோதிக்கப்பட்ட பிரத்தியக்குத் தத்துவத்திற்குப் பிரஹ்மாத்மாவின்கண்ணே பரிணதியால் நிராமயமாய் நிலைபெறுதலே துரியாதீதமாம், அத்தியந்தம் சுத்தமாய சன்மாத்திரத்தில் பரிணும நிராமயமே துரியாதீதபதமாம், அதன்கண்ணே நிலைபெற்றுவிட்டால் பின்னொருகாலும் சோகத்தை யடையான். சோதிக்கப்படாத தற்பதார்த்தத்தில் இனிது நிலைபெறுதற் சங்கையை நீக்கும்பொருட்டு அதன் சோதனத்தைச் சாந்தமந்திரந் தெரிவிக்கின்றது அதுபற்றியே, அதன்கண்ணே யாவுமுண்டாகின்றன, அதன் கண்ணேயிருக்கு மிவையாவையுமே பிரளயத்தை யடைகின்றன, பிரஹ்மத்தின்கண்ணே தாதாத்மியமாக இவையாவுமே யில்லையாம் திருஷ்டியின்கண்ணே முக்தாவலி யில்லாததேபோல அங்கு சம்பாதித்து எவையுமே யில்லையாம். ஜகத்சம்பந்த சூனியமாயின் ஜகத்தேதுவெனச் சுருதி யெங்ஙனங் கூறியதெனின், தடைசெய்யாமையினானே தருக்களின் மிகவளர்ச்சிக்கு ஆகாயம் ஏதுவாதலேபோல அகர்த்தாவாக இருந்தபோதினும் மாயையாலாக்கப்பட்ட சர்க்கத்தில் நிவாரகஞ் செய்யாமை மாத்திரையானே சேதனப்தியின்கண்ணே ஜகமிருத்தற்குக் கர்த்தாவாம். லோகவிகாரக் கண்ணாடியானது சந்நிதிமாத்திரையானே பிரதிபிம்பத்திற்கு ஹேதுவாக இருக்கின்றதேபோல இச்சின்மயவத்துவும் அர்த்தவேதனத்திலாம். ஆயின் எங்ஙனம் யாவும் ஏககாலத்தி லுண்டாவதில்லையெனின், விரை முளை இலைமுதலிய முறையானே பழம் உண்டாவதேபோலச் சின்மாத்திரம் சித்தஜீவாதி முறையானே மனமாகும், அவ்வாறே அதுதி நியதியிருத்தலின். அநசாயி ஜீவசம்யுக்தமான விருஷ்டிஜலபிந்துவானது விருக்ஷம் பயிர்முதலியவற்றுள் அனுப்பிரவேசஞ்செய்து மீண்டும் பீஜமேயாகுமன்றி

யுதாசீனமாயிராததேபோலச் சீவவாசனையினாலே வாசிக்கப்பட்ட சித்தும் சேத்தியம் சித்தம் முதலிய சர்க்கவடிவமாய் மீண்டுமுண்டாகவே செய்யும் அதனைவிடுத்துச் சொஸ்தமாக இருக்கமுடியாதாம். விரையின்கண்ணே சூக்குமமாக இராநின்றதருவையும் அவ்விரையையு யறியாதபோதினும் அறிந்தபோதினும் தருவையுண்டாக்குஞ் சக்தியை விலகுவதின்றும் அதுபோலச் சித்தவடிவமடைந்த ஜகத்பிரஹ்மங்களையும் உண்மையாக அறிந்தபோதினும் அறியாதபோதினும் விசேஷம் யாதொன்றையும் காணோமே, ஆகையால் உணர்ச்சியினால் ஒருபயனுமில்லையெனின்? உண்மையே அறியினும் அறியாவிடினும் பீஜத்துள்ளேயிருக்கும்தருபீஜங்களை யாதொரு கேடுமில்லை, கண்காண்பதாய தருஜனன சக்திபேதம் உளதாம், எனினும் சித்தபூத ஜகத்பிரஹ்மங்கட்கு அஃதில்லவேயில்லை, பீஜதருபோதமாத்திரத்தினாலே சத்தியான் மகதத்துவமான அகண்டிதரூபம் விளங்குவதின்றும்; பிரஹ்ம போதத்தினாலோ தீபத்தினாலே ரூபஸ்ரீபோலச் சத்தியான்மக அகண்டித சின்மாத்திர ஆலோகரூபியானது விளங்காநிற்கும் என்னும் இத்துணை விலக்ஷணத் தன்மை யுண்டாம். போதத்திற்கு இத்தகைய சாமர்த்தியம் எங்ஙனுண்டாயிற்றெனின், விசாரத்தினாலே யுண்டாகித் தத்துவத்தையுணர்த்துதலின், பூமியை எங்கெங்கு தோண்டுகின்றோமோ அங்கங்கு ஆகாசமானது தோற்றுவதே போல எவ்வெவ்வவித்யா சம்பந்தமான படாதிகளை விசாரிக்கின்றோமோ அவையாவும் அதிஷ்டான சத்தைமாத்திரமாய் மிஞ்சாநிற்கும். ஸ்படிகத்தினுள்ளே வனாதிசந்நிவேசம் கூடத்தத்தன்மை அஃதை யறியாமையால் எங்ஙனமாமோ அங்ஙனமேசுத்தப்பிரஹ்ம உதரத்தின்கண்ணே நானாவாக ஜகத்தில்லாதிருந்தபோதினும் நானாவாகத்தோற்றுகின்றது. சர்வஜகத்வஸ்துக்களும் ஸ்படிககனமா யேகமா யகண்டிதமா யிருக்கும் பிரஹ்மமேயாம், ஸ்படிகமானது தன்னிடத்திற் பிரதிபிம்பித்த வனபலபத்திர லதைமுதலியவற்றின் ஆதாரபூமியாயிருப்பது போலவும் இவை யாவற்றையுமடக்கிக் கொண்டு பீஜமிருப்பதேபோலவும் இவ்வெல்லா வுலகமுமடங்கப்பெற்றுப் பிரஹ்மமிருக்குமென்றுணர்தி. இவ்வண்ணம் வருணிக்கப்பட்ட ஜீவ மனோ புத்தி சித்த அகங்காரவடிவமாகவும் தன்மாத்திரை கற்பனாந்தமாகவும் உள்ள பிரசங்கத்தால் வந்தஜகமானது மாயமாத்திரமெனக்கேட்டு விஸ்மிதத்தையடைந்து குருவசன விசுவாசத்தால் ஜகத்திற்கு மாயமாத்திரத்தன்மையின் அனுவாதத்தால் மகிழ்ச்சியை யடைந்துள்ள ஸ்ரீ இராகவர், தன்மாத்திரைகளின் இந்திரிய சகித சமஷ்டி வியஷ்டி தூலசரீரபாவ உற்பாதக் கிரமத்தை யறிய அவாவினராய் வினவுவதாவது:—ஹேபகவன்! அந்தோ அற்புதம்! இவ்வுலகமானது அசத்தாக இருந்தும் சத்துப்போலத் தோற்றுகின்றது, அந்தோ பெரிது! அந்தோ சொஸ்தம்! அந்தோ ஸ்புடம்! அந்தோ சிறிது!; பிரஹ்மத்தின் கண்ணே தோற்றுமாத்திர வடிவமாய் தன்மாத்திர குணகோலகமாய் பனிக்கணத் தோற்றமாய் எவ்வாறு ஸ்புரிக்கின்றதோ அவ்வாறு கேட்கப்பட்டது,

இஃதெங்ஙனம் சமஷ்டிவியஷ்டி தூலதேகபாவத்தை யடைகின்றதோ, யதார்த்தமாய்ச் சுபாவசித்தமாயுள்ள அர்த்தமாகிய ஆன்மவஸ்துவின் சம்பந்தத்தினலே இஃதெங்ஙனம் வியஷ்டி சமஷ்டித் தூலம்புசிக்கும் விசுவவைசுவானராத்மாவாமோ அங்ஙனந் தெரிந்துகொள்ளத் திருவருள் செய்யவேண்டும் என்று விண்ணப்பித்த இரகுநந்தனரை நோக்கி வினவியதை யுரைத்தருளுவான் முதலில் அத்தியந்தம் அசம்பாவிதமாய் அநிர்வசனீயமா யிருக்குந் தூலத்தன்மையீருக எல்லாவாதனைகளும் வெளிப்படுத்திய ஜீவபாவ ஆவிர்ப்பாவத்தைத் திருஷ்டாந்தத்தோடும் காண்பிக்க ஸ்ரீ வசிஷ்டபகவான் ருெடங்கல்.—ஹே குழந்தாய்! சிவலக்ஷணம் அத்தியந்த அசம்பவரூபம் தன்னியற்கையினும் அன்னியமில்லாதது அத்தியந்தம் அனுபவியாதது ஆகஇருந்தும் அனுபவித்ததேபோல முன்னிற்கும், உண்மையாகப் பருத்தவடிவ மில்லாவிடினும் பருத்தவடிவத்தோடுகூடிய வேதாளம் பாலகனுடைய இருதயத்தில் வெளியாகத் தோன்றுவதேபோலப் பரப்பிரஹ்மத்தின்கண்ணே ஜீவத்தன்மையானது தோற்றுகின்றது. அனுபவிக்காத தன்மனனம் கூடாமையின் அனுபவிப்பதும் மானமேய அதீனமாயிருத்தலின் மனோபாவ நிமித்தமானமேய வாசனேற்பவமாம், மானமேய வடிவமான தூயது சத்தியமே அசத்தியமாக இருக்கின்றது, பிரஹ்மத்தினின்றும் பின்னமல்லாமலிருந்தும் பின்னம்போற் ருேற்றுகின்றது பெரிய வடிவமாயினும் சிறிய வடிவமாகத் தோற்றுகின்றது. ஜீவிக்கின்றேனென்னுங் கற்பனையினலே பிரஹ்மமானது ஜீவனுவதேபோல மனனவாசனேற்பவத்தால் விரைவில் ஜீவன்மனமாம்; மனனிப்பதான்மனமாம் என மறையுமறைகின்றது. அம்மனமானது விரைவில் தன்மாத்திரைவிஷய மனனமுற்றதாய்த் தன்னுடைய சொரூபம் போலத் தன் மாத்திரை வடிவமாய் விளங்குவதுபோலக் காணப்படுகின்றது, இடையீடில்லாததிருக்குருவமாய் அதிசூக்குமமாய் இத்தன்மாத்திராத்மா அப்போதே சிதாகாயத்தின்கண்ணே விளங்குகின்றது, தானே விளங்கிக்கொண்டு அதன்விளக்கத்தினலே உணர்வுவடிவமாய்ச் சிருஷ்டிகால வசத்தால் பஞ்சீகரணவாயிலா யுண்டாக்கப்பட்ட பொன்மயமாதலின் சூரியனைப்போலப் பிரகாசிப்பதாய் அபரிச்சின்ன சித்துத்திருஷ்டியால் பனிக்கணம்போன்றதாயிருக்கும் பிரஹ்மாண்டரூபமும் மனுஷ்யாதிதேகரூபமும் காலத்தோடு கூடியதாகப் பார்த்தனுபவிக்குந் தன்பால். அதன்கண்ணே முதலில் சப்தார்த்த விபாக விளக்கமின்மையினலே மிகமூடமாக அகந்தை பத்தியாசமான துண்டாம் அதனலே சமுசாரதத்துவ ஸ்மரணமும் ஆம், யான்யாரென உண்மையாகவேனும் மனுடாதி யாகாரமாகவேனும் பகுத்துச் சப்தார்த்தத்தை அனுபவியாத வுணர்வை முதலிற் காணும், பின்னர் புருடார்த்த விசார சகித பழைய ஆயிரம்பிறப்பின் நினைப்பினல் கர்ப்பத்தில் ஜகத்தத்துவ சப்தார்த்தவுணர்வைச் சீவன்காணும். அதற்கு இந்திரிய கற்பனையை முறையே கேட்டி! பிண்டத்தில் வெளியாக அகம்பாவ வுணர்ச்சியால் இரசசப்தார்த்த

வுணர்ச்சியை வரும்சிங்நுவையர்த்த நாமத்தால் முகத்துவாரமுதலிய பிரதேசங்களில் கணத்திலனுபவிக்கும். சிங்நுவையை ரசனேந்திரிய பரமாக்குக அதன் பொருளாய ரசம் நாமத்தாலுபலக்ஷிதமாம். பிண்டத்தில் வெளியாக அகம்பாவ வுணர்ச்சியால் தேயுசப்தார்த்த முன்னிலைத் தன்மையை யடைந்துவரும் நேத்திரநாமத்தால் கருவிழி நுனிப்பிரதேசத்தில் ஒளிராநிற்கும். பிண்டத்தில் வெளியாக அகம்பாவவுணர்ச்சியால் அது கிராணதிருஷ்டி யுணர்ச்சியானே கிரணமாம். இம்முறைமையாக, சுரோத்திராதிபாவத்திலும் எத்துணைப் போது இருக்குமோ அத்துணைப்போது சப்தாதிதிருசியங்களை யனுபவிக்கும் என்னும் அத்தகைமையதற்கிருக்கின்றது. அதற்குச்சங்காத அபிமானத்தைக்கேட்டி! இவ்வண்ணம் பெரும்பாலும் அச்சீவான்மா காகதாலீயம்போல மெதுவாய்முன்வாசனையினுற் கற்பிக்கப்பட்ட விசிஷ்ட சந்நிவேசத்தன்மையைச் சுயமாகவேகாணும். அதற்குச்சுரோத்திராதிகளினுலே சப்தாதிபோகமாகவே அவ்வவ்விந்திரிய தாதாத்மிய அத்தியாசமாம், அசத்தாயிருந்தபோதினும் சத்துப்போற்றோற்றும் சந்நிவேசமான அதற்குச்சிரவணார்த்தத்தால் அது சப்தபாவ ஏகதேசத்தன்மையை யுணர்கின்றது, அதாவது, சிரவணக்கிரியை வடிவப் பிரயோஜனத்தால் ஓசைகளைக்கவரும் பொருட்டுச்செவியைத்தேக ஏகதேசத்திலடைகின்றது, தொடுங்கிரியைவடிவப்பிரயோஜனத்தால் பரிசங்களைக் கவரும் பொருட்டுத் துவக்கைத்தேகமுழுதும் அடைகின்றது, காணுங்கிரியை வடிவப்பிரயோஜனத்தால் ரூபங்களைக்கவரும்பொருட்டு விழியைத்தேக ஏகதேசத்தில் அடைகின்றது, சுவைக்குங்கிரியைவடிவப்பிரயோஜனத்தால் சுவைகளைக் கவரும்பொருட்டு நாவைத்தேக ஏகதேசத்தில் அடைகின்றது, முகருங்கிரியை வடிவப் பிரயோஜனத்தால் மணங்களைக்கவரும்பொருட்டு நாசியைத்தேகஏகதேசத்தில் அடைகின்றது. இவ்வண்ணம் கூறப்பட்ட கூறப்படாத இந்திரியமயங்களால் வெளிப்பொருட் சத்தையைவெளிப்படுத்துவதிற் சாமர்த்தியமுள்ள, இந்திரனுகிய பரமான்மாவிற்கு லிங்கத்தன்மையானே பவிஷ்யத்திந்திரியமெனப்பெயரிய ரந்திரத்தைத்தேகத்தின் சார்பிலதுகாணும். இந்த வண்ணமேமுதலாகச் சமஷ்டிரூபத்திற்கும் வியஷ்டிரூபத்திற்கும் தோற்றும் வடிவினதாய ஆதிவாகிகதேகமே யுதயமாகாநிற்கும். பிரஹ்மத்திற்கே அஞ்ஞானத்தினுல் இருவகையாய ஆதிவாகிகதேகபாவமுஞ் ஞானத்தால் அதன் நீக்கமும் ஆம், பெயரற்ற இப்பராசத்தையானது இதனது ஆதிவாகத்தன்மையதேபோல அத்தகைய சத்தியாத்மபாவனையினுலே சென்றபோதிலும் செல்வதில்லையாம்; ஆதிவாகிகதேகாதி வாயிலாக அத்தியாரோப அபவாத கற்பனையும் ஆன்மாவை யறிவிக்கும் விவகாரதிருஷ்டியினுனேயாம், பரமார்த்ததிருஷ்டியினுலாகாதாம், பிரமாதாபிரமேயம் பிரமாணமுதலியயாவுமே பிரஹ்மமென்னும் உணர்வினுலே பிரஹ்மமேயாம் என்ருல் ஆதிவாகிகக்கூற்றுகட்குச் சொல்லத்தக்கதென்னுளது அதுவும் பிரஹ்மமேயாம். அன்னியத்தன்மையுணர்ச்சியினுல் அன்னியமாம் பரத்தினின்றும் ஆதிவாகிகம், பிரஹ்

மத்தன்மையுணர்வினாலே அதுபிரஹ்மமேயாம், உணர்வுக்குத்தக்கபடியே வஸ்துவாயின் யாதுவிசேஷமாயதெனின்? அந்தப்பிரஹ்மத்தன்மையுணர் வென்னும் ஞானமானதுமயலாற் சனித்ததன்றாம். இவ்வண்ணமாயின் ஏகதேக ரசப்பிரஹ்மத்தின் கண்ணே அஞ்ஞானமேகூடாமையின் அஃதில்லாமை யினாலே ஜீவபேதகற்பக மின்மையின் பிரஹ்மான்ம ஏகத்துவத்திற்குத்தானே சித்தியாந்தகைமையுண்மையின் தன்னயலாய மோக்ஷபலத்திற்கும் அதை யடைவிக்கும் விசாராதிகட்கும் சம்பவமேயில்லையாமாகலின் எங்ஙனமதன் பிர விருத்தியாதல்? அறியாமையானது அசம்பவமாதலின் பிரஹ்மாத்ம ஒருமை மெப்போதுமிருத்தலின், மோக்ஷந்தானெங்கே விசாரந்தானெங்கே பேத விகற்பங்களாற் பெற்றதுயேதுமாலென ஸ்ரீஇராகவர்வினவ அதற்குஸ்ரீவசிஷ்ட பகவான் கூறுவதாவது:—ஹேஇராமச்சந்திர! தத்துவத்தை யுணர்ந்து இச் சங்கைசெய்தலா அல்லதுணராமலா? முதலதேல் விசாரம்பயனின்றென்ப துடன் பாடேயாம், இரண்டாவதேலோ இதற்கிடமேயின்றாம். சித்தாந்த காலத்திலேயே இவ்வினாமிகவிளங்காநிற்கும், அகாலபுஷ்ப மாலையானதுதான் சோபனமாயினும் உற்பாதசம்பந்தமான அனர்த்தமுண்டாமென்னும் பய வேதுவாகலின் சோபியாதாம். பொருளயற்பொலிகூற்றாற் கூறியபொருளை யுவமையிற் காட்டுவாம், அழகோடு கூடியிலதங்கினும் அகாலபுட்பமாலை அக் காலத்தியஉபயோகங்கொண்டு பயனோடுகூடியதேயாயினும் உற்பாதசம்பந்த அனர்த்தஹேதுவாதலின் ஜனசந்தோஷவேதுவாகாமையின் பயனற்றதே யாகும், அங்ஙனமே, பரிபாகமல்லாததசையிலடைந்த ஜந்துவிடத்தில் அகாலத் துண்டாய அளவளாவுங்கூற்றும் பயனற்றதேயாம்; எல்லாம் உரியகாலத்தி லேயே அழகுடையனவாம். அஃதெங்ஙனமென்றால், ஹேமந்தாதிகாலம் சாலி முதலிய அங்குரவுதயப்பிரதிபந்தத்திற்கும், யவைமுதலிய அங்குரவுதய அனு ஞானத்திற்கும், அனுகூலத்தகைமைக்கும் தாதாவாம் என உடன்பாடெதிர் மறைகளானே உலகத்திற்காணப்படுகின்றது, எல்லாப்பொருள்கட்கும் காலத் தினாலேட்லசம்பந்தம் அவசியமேற்படும். இவ்வண்ணம் ஸ்ரீஇராகவரது சங்கை விளையாட்டாகச் சமாதானிக்கப்பட்டது, இப்போது பெயரற்ற இப்பரம் பிரஹ்மம் இதற்காதிவாகிகத்தகைமையைப் போன்று என்பதீறாக யாதுகூறப் பட்டது அதையனுசரித்தே ஆதிவாகிகதேககசமஷ்டியை யுபாதியாக வுடைய தன்கண்ணே பிதாமகத்தன்மை கூறப்படுகின்றது, இவ்வண்ணமே அச் சீவான்மா சொப்பனசமஷ்டியான்மாவாய் உபாசனைப்பரிபாகத்தால் உபா சிடத்தன்மையோடும் பலபூதமாக இனிது வீற்றிருக்கும், பிதாமகத் தன்மை தன்னிடத்தில் அத்தன்மைக்குரியகாலங்கொண்டு பொருமுதல்கண்டு கொண் டிருக்கும். அதற்குப்பிரணவ உச்சாரணத்தால் அதனர்த்தவுணர்ச்சியால் எல்லாப்பிரபஞ்சசிருஷ்டிக்குந்தன்மையாம், ஓமுச்சாரணசம்வித்திவேதனத் தானும் கண்டுகொண்டிருக்கும், மனோராச்சியம்யாது செய்கின்றதோ அதன் மயமாகவே அதுவிரைவில்ஆம். இவ்வாறாகவே வியஷ்டி மனோராஜ்ஜியம்

போலச் சமஷ்டி மனோராஜ்ஜிய பூதமாயஇச்சகத்திற்கு அசத்துத்தன்மையேயா மென்பது பலீதமாம்; ஆகாயத்தின்கண்ணே தலமலினதிகற்பிக்கப்பட்டதே போல விஸ்தாரமாகிய ஆன்மாவின்கண்ணே இவ்விசத்தாகியயாவுமே தோற்றும்; உயர்ந்த ஆகிருதி வாய்ந்தபர்வதம் வியோமவடிவமாம் உலக மெல்லாம் விண்ணின்கண்ணே விரியாநிற்கும், பெரியபெரியமேரு முதலிய பர்வதங்களெல்லாம் உன்னத ஆகாரத்தோடு கூடியிருப்பினும் வியோ மமேயாயின் மற்றன்னியமெல்லாம் என்னே அற்பம்; வாயுவாதிமுறையாக ஜகத்து ஆகாயத்தின்கண்ணேயாரோபமாய் விரிந்திலங்கும் ஆகையால தற்குத்தலமலினதிசாமியம் சால்புடைத்தேயாம். இவ்வாறாகவே சிருஷ்டி யைவிரித்து பிரபஞ்சப்பொய்ம்மையுணர்த்தும் பொருட்டேயாம், உண்மை சிருஷ்டியைக் காண்பிக்கும் பொருருட்டன்றாம், இதனாலேதான்மறையும் "நீரோதமுமில்லையுற்பத்தியுமில்லை" யென்றறைகின்றது; ஈண்டெதுவுமுண் டாவதே கிடையாது. ஈண்டெதுவும் அழிவதே கிடையாது, ஜகத் தாகியகந்தர்வநகரவடிவமாகப் பிரஹ்மமே விரிந்திலங்கும். ஜீவத்தன்மை யும் ஜகத்கோடியின்கண்ணேயாம் எனக்காட்டஜகத்திற்கு ஜீவசமசத்தை யுடைமையைக் காட்டுவாம், யுத்தியோடுகூடிய திருஷ்டியினாலே விசாரத்தைச் சகியாதசதசத்மயசத்தை பிரஹ்மாமுதலிய ஜிவர்கட்காம் அங்ஙனமேகீழே ஆதிசேடனேமுதலாக மேலேதேவரீறாகயாவருக்குமாம், பரமார்த்ததிருஷ்டி யானே சம்வித்தின் சம்பிரமமேயிதுவாகும், இங்ஙனந்தோன்றியபோதினும் பிரஹ்மகீடபரியந்தம் பிரத்தியக்ஷமென்றனுபவித்தபோதினும் அசத்தேயாம், ஏனெனில், திடஞானம் வந்தவுடனே இவையாவுமேபாதமாய்விடும். பிரஹ் மாதிகீடபரியந்தம் பிரத்தியக்ஷமாயனுபவிப்பினும் என்றதன் விவரமென்னே யெனின், பிரஹ்மாஎங்ஙனமடைந்தனுபவிக்கின்றாரோ அங்ஙனமே புழுவு மடைந்தனுபவிக்கின்றது, ஆயின்எங்ஙனங்கீடத்திற்குத் துச்சகருமம் செய்தல் கூடுமெனின், கீடமானது சித்தத்தில்பூதசம்பந்தமான மலினத்தகைமையை மிகவுமடைந்திருத்தலின் கீழானதொழிலைச் செய்யாநிற்கும், திருசியமுன்னி லைப்பட்ட அறிவுமயமானஜீவனம்யாதோ உபாதியையனுசரித்த ஜீவத்தன்மை யாதோ, அதையனுசரித்தே புருடமுயற்சியாம் அதுவேபலபரியந்தமான கரு மமாம் அதுவும் புருடமுயற்சியேயாம். அவற்றுள்புண்ணியரூபசார மேன்மை யின் மேலாய முடிபின்பலமே பிரஹ்மாவின்றன்மையாம், பாபரூபசாரமேன் மையின் மேலாயமுடிபின்பலமே புழத்தகைமையாம், வைசித்திரியநிமித்த பேதமிருப்பினும் அறியப் பெறாத சின்மாத்திரத்தாலாயது இருமைமயக்கம், அதன்ஞானமாத்திரத்தாலாயது அதன்நீக்கம், என்னுமிது இருபாலும்சமமே யாம்; பிரஹ்மாபுண்ணியத்தாற்றோற்றியும் கீடம்பாவத்தாற்றோற்றியும் இருப் பினும், அறியாதசித்தானது தன்மாத்திரை வடிவுறின்மயலாம் அது சித்தைத் தானாய்க்கண்ட மாத்திரத்தில் நசிக்கும். எத்துணைபிரமாதாபிரமாணத்தினாலே பிரமேயமாகிய விடயத்தைத்திவைத்ததை யுணருமோ அத்துணையுந்திவைத

மாம், அது போனுல் ஐக்கியமேயாம். எனமுறையான துவைத ஐக்கியசுபாவத் தன்மையேவஸ்துவிற்கு வாஸ்தவம் ஏன் ஆகமாட்டாதெனின், மாதாமான மேயங்கள் சின்மாத்திரத்தைப்பார்க்கினும் வேறுகக்கிடையாதாம், துவைதம் மாதாமானமேயமாகாதாம், என்னே, மாதாமானமேய துவைதத்திற்கும் வேறு மாதாமான அபேக்ஷபிருத்தலின வரம்பின்னியோடுங் தோடமாம், ஆகையினுலே அவைகள்யாவும் சின்மாத்திரமாகவே துவைதஐக்கியசாதகாந்தரமில்லாமையின் துவைதஐக்கியவாதார்த்தம் முயற்கோடு போலும் ஆகாயதாமரை போலுமேயாம். துவைதம்மானமேயமன்றேலாயின் குந்தாலங்கோடிகூடியும் பிளக்கமுடியாதபுவனுதிபாவதார்ட்டிய வடிவமாக எங்ஙனமிலங்குமெனின்? பிரஹ்மானந்தான்மகமான ஆன்மாவே பந்தகபுவனுதிபாவதாரட்டியவடிமாயது வைதமெனமயக்கத்தாலனுபவிக்கின்றது, கோசகாரகிடம் தன்னூற்ருர்ட்டிய வடிவறந்தனமனுவிக்கின்றதேபோலுமென்க. ஆன்மகற்பிதமேபந்தமாயின் புருடன்றேறும் இப்படிப்பட்டபடியேகற்பனையாம் அநிஷ்டகற்பனை சிறுது முண்டாகாதேயெனின்? சர்வமனசமஷ்டிவடிவமாய பிரஹ்மாவால் போக்தாக்களின் கருமப்படி எவ்வெவ்வஸ்து எவ்வாறு சிருஷ்டிக்கவேண்டுவதாகக்காணப்பட்டதோ எத்தகையகாரியப்பொருட்டு நன்குபாவிக்கப்பட்டதோ அவ்வவ்வஸ்து அன்னியராய அஃதுணர்ஜீவரானும் அவ்வாறே காணப்படும், இயற்கையாய நியதிக்கு இந்நிசயவிவஸ்தை யுண்டாம். ஆலம்விரையிலிருந்தே ஆல அங்குரமானதுண்டாமன்றி மல்லிகை விரையி லிருந்துண்டாகாதாம், குமிழிசிலநிமிடங்கள் நிற்கும் பிரஹ்மாண்டமோ மகாகற்பம் வரையிருக்கும் என்பதாகஹேதுபலாதி நியதிபலத்தானும் இஷ்டப்படி கற்பனையடைவுண்டாகாதாம், எவ்வாறுஎப்பொருகளினின்றும் எப்வெப்பொருள் உண்டாகின்றதோ அவ்வாறு அவ்வப்பொருளில்லாமல் அவ்வப்பொருள் உண்டாகமாட்டாதாம், சிலநிமேஷமாத்திரம நிகழ்வதும் சிலகற்பம்வரை கமழ்வதும் இவையாவும், இயற்கையாயநியதியின் இனியவிவஸ்தையிலடங்கும். நம்மனோரது சுதந்திரமற்றதன்வனுவாலும் நியதிசெய்தசக்திகாலாதி விவஸ்தைதரிசனத்தாலும் சத்தியமே இவ்வுலகம் என்றுமயங்கலாகாது, பொய்யாகவே யிவையாவு முண்டாகின்றன, பொய்யாகவே யிவையாவும் வளர்கின்றன, பொய்யாகவே இவையாவுமபோக்தாக்கட்குப் போககாலத்தில் ருசிக்கின்றன,பொய்யாகவே யிவை யாவும் இலயமாகின்றனவாம். மூன்று சர்க்கங்களில் விஸ்தாரமாகக்கூறிய அர்த்தங்களைச் சுருக்கிக் கூறுவாம், சுத்தமாயும் எங்கு மிருப்பதாயும் அழிவற்றதாயும் இருமையற்றதாயும் இலங்கும் பிரஹ்மமானது பிராந்திவசத்தால் அசுத்தம் போலவும் அசத்தைப்போலவும் அநேகம் போலவும் எங்கு மில்லாததுபோலவும் அறியப்படுகின்றது, நீர்வேறெனவும் திரைவேறெனவும் கூறும் மூர்க்கர்களின் கெட்டகற்பனையினுலேயே பொய்யாயவேற்றுமை கற்பிக்கப்படுவதே போலப் பரமான்மாவின்கண்ணே எந்த எந்தப் பேதங்கற்பிக்கப்படுகின்றதோ அந்த அந்தஜகத் வேற்றுமையாவுமே கேவலம்

தத்துவத்தையறியாதவர்களானே நன்குகற்பிக்கப்படுகின்றனவாம்; நீரில் திரையின்வேற்றுமை பரிணமம் என்னுந்திருஷ்டியில் விவர்த்தமாகவில்லை வெளியாகவெனின்? உண்மையே, இரஜ்ஜுவின்கண்ணே சர்ப்பம்போலக் கற்பிதமென்றுணர்தி, இங்ஙனமேபேத அபேதசக்தினின்றிதியாம் சத்துரு மித்துருக்களின் சம்பவமும்பிரஹ்மத்தின்கண்ணேயாம், சத்துருமித்துருக்க ளாய விருத்தஅவிருத்தங்கட்கே ஒருகாலத்திலும் இயற்கைவிடுதலில்லையாம். அந்தப்பிரஹ்மபூதமாயத்வைதமாயிருக்கும்பிரத்தியக்கான்மாவினாலே இருமை போலவிஸ்தாரப்படுத்தப்பட்டிருக்கிறது, நீரால் அலைக்கற்பனையும் பொன்னால் அணிக்கற்பனையும் ஆவதேபோலவாம், இவ்வாறாகவே அவ்வான்மாவானது தானாகவே தன்னாற்றன்னினின்றும் அன்னியம் போலத் திருசியமுன்னிலைப் பட்டுத்திகழ்கின்றது; அதனால் விகற்பமில்லாதஜகத் விளக்கமானதுண்டாம், அதுவேவிகற்பத்தோடு கூடியதன்மையையடைந்து மனமெனமன்னியது, அத னுலகம்பாவங்கற்பிதமாம், நிருவிகற்பப்பிரத்தியக்ஷரூப மிது முதலிலாம், அதுமனம் அதுஅகமாம், வேகமாய் அகம்சப்தார்த்தபாவனையால் அவ்வுபய கோசர சமஸ்காரமுதித்தலால் ஆம். பின்மனஅகங்காரங்களினின்றும் ஸ்மிருதி யனுபவத்திற்குத்தக்கபடியுண்டாம், அந்தஸ்மிருதியினாலே அனுபவிக்கப்பட் டவை அனுபவித்திற்குத்தக்கபடி ஸ்மரிக்கப்பட்டனவாம், அம்மூன்றாலும் அனுபவிக்கப்பட்ட தன்மாத்திரைகள் திருஷ்டிக்கப் பட்டனவாம், அத்தன் மாத்திரைகளில் சித்தரூபமாயஜீவனால் சுயமாகவே காகதாலியம் போலப் பிரஹ்மவடிவ உபாதானகாரணத்தின்றும் இந்தப் பிரஹ்மாண்டவிஸ்தாரஜகத் சந்நிவேசங் கற்பிக்கப்பட்டதாகக் காணப்படுகின்றது, இக்கரசரணாதியா யுல வுவை யாவுமேகற்பிதமேயாம். வருணிக்கப்பட்ட சிருஷ்டியின்முறைமை உல கத்தின்கண்ணும் மிவ்வண்ணமேயாம் கனவில் வெளியாகக்கண்டோமல்லவா! இவ்வண்ணம் எதைமனங்கற்பிக்கின்றதோ அதையே தற்சம்பிரமாதிபின் கண்ணே காண்கின்றது. சொப்பனத்திற் றோற்றுபவை பிரதீதிமாத்திரமே யாகியசத்தாம் அதுசத்தாய வியாவகாரிகத்திற்குத் திருஷ்டாந்தமாவதெங்ஙன மெனின்? சத்தாகத்தானாகுக அசத்தாகத்தானாகுக, மனமானது அபினி வேசத்துடன் நீள்போது அதைப் பாவித்துப்பாவித்து எதைத்தான் கற்பனை செய்கின்றதோ அதையவசியங்காணும், காட்சியினாலே சத்தியம் போலத் தோற்றமுடையதா யுற்று அப்போதே விவகார உபயோகமாய் அடைந்து லாவும்.

67-வது சத்திய உபதேசம் முற்றிற்று.

---

## 68-வது இராக்ஷசி வருணனம்.

இப்போது கற்கடியென்னும் இராக்கதியின்வர்ணனை விஸ்தாரமாகச் செய்து, சர்வஜந்துக்கூட்டங்களையும் உண்ணவேண்டுமென்னும் வேட்கையால் அவளுடைய உக்கிரமானதவம் வர்ணனை செய்யப்படும். விரிவாயும் சுருக்க

மாயும் வருணித்தபொருளில் திடமுண்டாகும்பொருட்டுக் கற்கடியுபாக்கி யானமெனப் பெயரிய இதிகாசவாயிலாக இராக்கதியோடுவேடராஜ மந்திரிசம் வாதத்தை விஸ்தாரமாக விளம்பவேண்டுமென வேட்கையுற்றஸ்ரீவசிஷ்டபக வான் அதனைக்கூறத்தொடங்குகின்றார்:—ஹேஇராகவ! கூறியவிடயத்தின கண்ணே புராதனமான இக்கதையை யுதாகரணமாகக்கூறுகின்றனர், இராக்ஷசி யினாலே கேட்கப்பட்ட மகாவினக்கூட்டம் உண்மையாக ஆராயுங்கால் உலக மெல்லாம் வியாபியாநிற்கும். மைக்குளம்புமலைபோலும் உக்கிரமானஆகிரு தியையுடையதா யாக்கப்பட்டபதுமைபோன்ற கொடுந்தொழிற்கற்கடியென் னும் அரக்கி ஹிமகிரியின் வடக்கின்சார்பிலிருந்தனள். அவளுக்கு விஷூ சிகையென்றும் அநியாயபாதிகையென்றும் வேறிரண்டு நாமங்களுண்டு, விந் திய அடவிபோலத் தேகத்தாற்சுஷ்கமாயிளைத்திருந்தனள். மகாபலத்தோடு கூடிய அக்கினியைப்போல மிகவுஞ்சொலித்துக்கொண்டிருக்கும் விழிகளை யுடையவள், பூமிக்குஞ் சொர்க்கத்திற்கும் அந்தராளமான இடைவெளியில் பாதிபாகத்தை மறைத்துக்கொண்டிருக்கும் பருத்து விரிந்த ஆகிருதியுடைய வள், நீலவஸ்திரத்தைத்தரித்த நீலநிறமேனியள், இரவிருள் ஆகமெடுத்து வந் ததுபோன்ற இலக்கத்தினள், பனிகளினாலே வத்திரத்தாற்போல மூடப்பட்ட வள், கறுத்திருண்டமேகங்களையே சிரவத்திரவுத்தரீயமாகவுடையவள், நீண்டு தொங்கும் மேகபிம்பம்போன்ற வல்லாசத்தையுடையவள், நித்தியவுதிததிமிரம் போன்ற கேசத்தையுடையவள், ஓடாதமின்னற்கொடிபோலும் கண்ணுடைய வள், தமாலதருவொத்த ஜானுவையுடையவள், வைடூர்யவர்ணச்சுளகின் அக்ர ஆகார நகத்தையுடையவள், பஸ்மப்பனி நகைப்பை யுடையவள், மாம்சமற்ற நரதேகக்கூட்டப்புஷ்ப ரக்தமாலையையுடையவள், அங்கமுழுவதிலும் மேனேக் கிக்குறுக்கிட்ட சவமாலைகளை யலங்கரித்துக்கொண்டிருப்பவள், வேதாளங் களோடு நடனஅபினிவேசத்தால் ஆடாநின்ற கறுப்புநிறமான கங்காளகுண்ட லங்களையுடையவள், சூரியனைக்கவர்வதில் உற்சாகமடைந்ததுபோன்ற தீர்க்க அக்கிரபீம உக்கிரபுஜமண்டலத்தை யுடையவள், இத்தகைய அவளுடைய காயம் பெரியதானதால் தன்னுடைய ஜாதிக்குரிய ஆகாரம் கிடைப்பது அரி தாய்விட்டபடியால் திருப்தியற்றவளாகிக் கடலிலிருக்கும் வடவாநலம் போல வும் கடற்றிரைபோலவும் பசியைத்தரும் ஜாடராக்கினியானது மிகவும் அலைத் துத் துயர்தந்தது. பெரியவயற்றையுடைய அவள் ஒருகாலத்திலும் திருப் தியை யடையவேயில்லை, வடவாநலநாவானது எக்காலத்தேனும் திருப்தியை யடைந்ததுண்டோ அத்தகையள் ஒரு காலத்தில் இங்ஙனஞ் சிந்தை செய்வா ளாயினள் :—இடைவிடாமல் சுவாசந்தோறும் ஜலராசிகள் சமுத்திரத்திற் சேருங் கணக்கேபோல ஜம்புத்தீவிலுள்ள சர்வஜனங்களையும் விழுங்குவேனே யாயின் மேகத்தினாலே மிருகதிருஷ்ணையானது தன்னேதுவாய ஆதபநிவாரண மானபோது அடங்குவதேபோல அது எனதுபசியைத் சிறிது தணிக்கும்; எந்த யுக்தியினாலே ஆபத்திற்சீவிக்கலாமோ அந்த யுக்தியே அவிருத்தமாய்ச்

சம்மதமாம். ஒரேகாலத்தில் எல்லாஜனங்களையும் விழுங்கும் யுக்தியோ கூடாதாகலின் விருத்தமேயாம், ஆனல் மந்திர ஔஷத தப தான தேவபூஜாதிகளால் இரக்ஷிக்கப்பட்ட சர்வஜனத்தையும் பாதமற்றிருக்கும்போது ஒரே போதில் எவரானே பாதிப்பதுகூடும். ஆயினெங்ஙனம் சர்வஜனங்களையும் விழுங்கும் மனோரதம் சித்திக்குமெனின், துயர்ப்படாத மனங்கொண்டு பெருந்தவத்தைச் செய்வேனாகவும், மகாஉக்கிரமாகிய தவத்தினாலேயே கிடையாத வத்துவுங்கூடக் கிடைத்து விடுகின்றது; எனஇவ்வண்ணம் சிந்தனைசெய்து, அவள் அகிலப்பிராணிக்கூட்டங்களையும் உண்ணவேண்டுமென்னும் ஆசையினாலே: தவஞ் செய்யும்பொருட்டுப் பிராணிகள் செல்லமுடியாததான ஹிமவான்பர்வதத்தை நினைந்தனள். ஓடாமின்போலுழல் கண்ணுளாகிய அவள் கைகான்முதலிய அவயவங்களோடு கூடிய சொரூபத்தோடுற்ற கறுத்த மேகமண்டலமானது பனிமலையின் கொடுமுடியின்கண்ணே யேறியதேபோல ஏறினள். சந்திரசூரியர்கள்போலத் தேஜோமயமாய் அசையாத நேத்திரங்களையுடைய அவள் ஆண்டுச்சென்று ஸ்நாநஞ்செய்து தவஞ் செய்யும் பொருட்டு ஒரே நிலைமையை யடைந்து ஒருகாலால் நின்று தவம்புரிந்தனள். அவளுக்கு முறையே தினங்களும் பக்கங்களும் மாதங்களும் ருதுக்களும் நடந்தேறின, சைலத்தினாலே செய்யப்பட்டதேபோலச் சீதஆதபங்களில் மூழ்கினள், தவக்கிலேசங்களை யெல்லாஞ் சகித்தனள். அவள் நீலத் தன்மையினாலே மேகமாலைகள் ஒருங்குகூடியதுபோல ஸ்தம்பித ஆகிருதியையுடையவாய் நின்றனள், ஆகாயத்தை விழுங்கவேண்டுமென்று முயன்றெழுந்து கறுப்பாக மேலேசெல்லும் மேனோக்கிய கேசமுடையவளாகி விளங்கினள். சீத உஷ்ண தூளிமுதலியவற்றோடு கூடிய காற்றுமுதலியவற்றானே சிதிலம்பண்ணப்பட்ட இளைத்த அங்கங்களின் நெருங்குந்தோலே வற்கலையென்னும்படி யுடையவளும், சேனைகளைப்போன்றுகிருதியுடைத்தாய்த் தொனிக்கும் காற்றினாலே யசையாநின்ற மேற்றிக்கிலிருக்கும் கேசவடிவ தமப்படலங்களினாலே நக்ஷத்திரக்கூட்டங்களாகிய முத்துக்களைத் தரித்தவளும், ஆகிய அவளை நோக்கி வரந்தரும் பொருட்டுப் பிரஹ்மாவானவர் எழுந்தருளி வந்தனர்.

68-வது இராக்ஷசி வருணனம் முற்றிற்று.

---

## 69-வது விஷூசிகை மந்திரங் கூறல்.

இப்போது, வாஞ்சித்தவரத்தைக் கற்கடிக்குக் கொடுத்துத் தாதாவானவர் நல்லவர்களின் ரக்ஷணையின் பொருட்டு மந்திரத்தை உபதேசித்துத் தமதுலகத்திற்குச் செல்லுதல் சொல்லப்படும். ஆயிரம்வருடங்கள் சென்றதன்பின்னர் அவளுக்கருளப் பிதாமகன் வந்தார் கெட்ட நடத்தையோடுகூடிய அவளுக்கு மிகமிகத்துர்லபமான பிதாமகன் பிரசாதம் எங்ஙனம் கூடுமெனின், கொரேமான தபமானது சித்தியின் பொருட்டாகுமின்றோ, தபமானது சித்திக்கின் விஷசகிததுக்கினியும் சீதளமாய்விடுகின்றது, தவத்தினாலாகாதது ஒன்றுமேயின்றாம், அவள் அவ்வாறே யிருந்துகொண்டு தாதாவை மனத்தினா

லேயே நமஸ்கரித்து என்னவரம் வேண்டினுல் பசிநீங்குவதற்குப் போதுமான தென்று சிந்தைசெய்வாளாயினள்; ஆ! நினைவுவந்தது இவ்விபுவைப் பிரார்த்தித்து ஒருவரம் வாங்குவேன்; ரோகரூபமாகவும் இரும்பின்விகாரமாகவும் இருக்கும் ஜீவனோடுகூடிய ஊசியாக யானிருப்பேன், வேதாவின் வரத்தினுலே இருவகையான ஊசியாகவுற்று எல்லாப்பிராணிகளினுடைய இருதயத்தின் கண்ணே ஒரேபோதில் கிராணத்தாற் கவரப்படும் மணம்போலத் தெரியாமற் புகுந்து காரியத்தைமுடிப்பேன், இம்முறையுபாயத்தாற் பசிநீங்கும் பொருட்டுக் கிரமமாகச் சகலஜகத்தையும் இஷ்டப்படி விழுங்குவேன், பசிநீங்குதலே பரமசுகமாம். இங்ஙனஞ் சிந்தித்துக்கொண்டிருக்கும் குமுறும் மேக அரவுபமத்தினளாகிய அவளைக் கமலாலயன், சாந்தி தாந்தி தயாதி தபஸ்விதரும விருத்த லோகஹிம்சா அலாஷிணியாயிருத்தலின் அன்னியவகையினுனே அவ்வாறு அபிலாஷையுற்றிருப்பதைக் கண்டு ஹே அரக்கர்குலாசல மேகமாலையாகிய கற்கடியென்னும் அருமைக்குமரியே! (புகழ்ந்தது வரும் மங்களத்தை விளக்குதற் பொருட்டாம்) எழுந்திருப்பாயாக நீயான் மிகமகிழ்ந்தேன் வேண்டிய வரத்தைக் கேட்குதி! யெனக்கூற ஹேகமலப்பிரபுவாகிய திரிகாலமுணர்ந்த தேவதேவரே! ரோகரூபியாயும் இரும்பு ரூபியாயுமிருக்கும் ஜீவ ஊசியானு கும்படியான வரத்தைக் கொடுத்தருளவேண்டும், என்று கற்கடி விண்ணப்பிக்கவும், அவ்வாறே யுண்டாகுகவென அவளை நோக்கிக் கூறிப் பிரஹ்மா மீண்டுங்கூறுவதாவது நீ உபசர்க்கத்தோடுகூடிய சூசிகையென்னும் விஷூசிகையாக ஆகக்கடவாய்! ஜனங்களாற் பார்க்கமுடியாதபடியான மாயையால் எல்லாலோக ஹிம்சையைச்செய்தி, ஆனுல், நிஷேதித்த அபக்குவ அகால போஜனமும் அதிபோஜனமும் செய்யப்பட்டவர், அந்நியருக்கு அநிஷ்டம் செய்யப்பட்டவர், அசாஸ்திரீய மார்க்கத்தினிற்பவர், கெட்ட தேசத்தில் வாசம்பண்ணப்பட்டவர் துஷ்டர் என்னுமிவர்தமை ஹிம்சை செய்வாயாக, பிராணவாயிலாக அபானந்தொடங்கி ஹிருதயபரியந்தம் புகுந்து இருதயபதுமம் குக்ஷியில் வாமபக்கத்திருக்கும் மாம்சபிண்டம் பஸ்திசிரமுதலியவற்றைப் பீடைசெய்து வாதரேகை வடிவமான விஷூசிகை வியாதியாய் ஆகக்கடவாய்! சாஸ்திர சதாசார நிஷ்டர்களையும் வேறு இயல்புடையவர்களையும் நீபற்றிப் பீடைசெய்வாய், ஆனுல் குணங்களோடு கூடியவர்களின் பீடையானது நீங்கும்பொருட்டு இம்மந்திரத்தையுங் கூறுகின்றேன்:—ஹிமகிரியின் வடபாகத்தில் கற்கடி யென்னும் இராக்ஷசி இருக்கின்றனள் அநியாய பாதிகையெனவும் விஷூசிகையெனவும் அவளுக்கு இரண்டுநாமங்களுண்டு, (அநியாயபாதிகை = நியாயமார்க்கங் கடந்து நடப்பவர்களைப் பாதிப்பவள்) அவளது யந்திரம் "ஓம் ஹ்ரீம் ஹ்ரூம் ஶ்ரீம் விஷூசிகாயை நம:, ஓம் நமோ பகவதி விஷூசிகே ஶ்ரீம் ஓம் ஹாஹா நயநய வவவவ யயயய உத்தாவய க்ஷரெகாணா ஸ்வாஹா ஹிமவந்தம் கச்சஜீவ: ஸ:ஸ:ஸ: சந்த்ரமண்டலகதாஸி ஸ்வாஹா" விஷ்ணு சக்திகளிருவகையாம் முதலதுமாயையாம் அதனததினங்க

ளேயாம் அன்னிய சர்வசக்திகளும், மற்றதோ அதனததீனமாகி ஒவ்வொரு வஸ்துவையும் நியதஞ் செய்வதாய்ச் சாத்விகாதி பேதத்தாள் பின்னமுமாம், அதனுள் தாமசமான சங்காரசக்தியின் அங்கிசங்கள் பிராணிகளின் கெட்டகர்ம பலஜனன சக்திவிசேடங்கள் ரோகங்களாம், அதனுல் அவற்றின் நீக்கப்பொருட்டு முதன் மாயாசக்தி பிரணவமாயாதி ரகசிய பீஜமைந்தால் விளிக்கப்பட்டு நமஸ்கரிக்கப்பட்டுப் பிரார்த்திக்கப்படுகின்றது, ஓம் முதலாக நான்காம் வேற்றுமைமீருக நமஃ சப்தயோகத்தால், பரப்பிரஹ்ம வடிவமா யிருக்கப்பட்டவள் பொருட்டு நமஸ்காரம் என்பதுபொருளாம்; பகமகான்மியம் சர்வநியமன வீரியமாம், அதனையுடைய ஆதியாய விஷ்ணுசக்திக்கு நமஸ்காரம், நீ இரண்டாவதாயிருக்கும் இங்கினது அங்கிச வடிவமான ரோகமய விஷ்ணுசக்தியைக் கெடுத்தி, ஓங்காரவாச்சிய காரணசொரூபத்தில் அத்தியந்தம் உப சங்கரிப்பாயாக ஹர ஹர என்றது அத்தியந்தமென்பதைக் காட்டற்கு நய=சொந்தஸ்தானத்தை யடைவாயாக, பச=பாகத்தினுற்போல இப்போதே மிருதுவாக்கு, மத=தயிரைப்போலக் கடைதி, உத்சாதய=இந்த ஸ்தானத்திலிருந்து வேறிடத்திற்குப் போதி, கூறிய அல்லது அயலாய வகைகளானே தூரஞ்செய்தி, ஸ்வாஹா என்பது ஹவிதானுதிகளால் பூஜ்ஜியத்தன்மையை விளக்குதற்பொருட்டாம். இங்ஙனம் ஆதிசக்தியை இனிது பிரார்த்தித்து அதனதீனமான ரோகசக்தி பிரார்த்திக்கப்படுகின்றது, ஹிமவான்பர்வதமாகிய சொந்தஸ்தானத்தை யடைதி, பின்ரோகியின் பொருட்டுக் கூறப்படுகின்றது, ஸ:=பழைய கெட்ட கருமத்தால் மறைபட்டவனுய், ஸ=ரோகத்தால் மறைபட்டவனுய், ஸ=மிருத்யுவால் பீடிக்கப்பட்டவனுய் நீமந்திர சாமர்த்தியத்தினுலே ஜீவன சமர்த்தமாய அமிருதத்தால் சம்பூர்ணம் சந்திரமண்டலம் எனது பாவனையினுலே அடைந்தவனுகின்ருய், அந்தத்தில் ஸ்வாஹா என்றது தீப்தமாய அக்கினியின்கண்ணே ஹவிஷ் விடுவதேபோலப் பூர்ண சந்திரமண்டலத்தில் ரோகியைப் பாவனையால் வைப்பதை விளக்குதற்காம்; இம்மகா மந்திரத்தை மந்திரிப்பவன் எழுதிவாமகரத்தின் உதரத்தலத்தில் வைத்து, அக்கரத்தோடுகூடியவனுய்ப் பிணியாளனைத் தீண்டுக, மந்திரமாகிய முத்கரத்தாலடிபட்டுக் கஷ்டப்பட்டு ஹிமசலத்தை நோக்கி ஓடாநின்ற அந்தவிடூசிகையாகிய கற்கடிகையை விசேடமாகச் சிந்தனஞ்செய்க, சந்திரனுகிய அமிருத கருப்பமாம் மடுவின் கண்ணே நோயாளி யிருப்பதாகச் சிந்திக்குக, சமாகித சித்தமுடையவனுகி சர்வஆதிவியாதி மயல்களும் விடுபட்டவனுய் ஜரைமரணமற்றவனு யிருப்பதாக எண்ணுக ஆனுலிம்மந்திரத்தைச் சாதகஞ் செய்யப்பட்டவன் மிவும் சுசியாகி நிருமல மனமுடையவனுய் விக்ஷேபமற் றேகாக்கிர மனமுடையவனுகிச் சௌச ஆசமனுதிகளை முன்னரே செய்து கொள்ளவேண்டும், வேண்டவே இம்முறையாகச் சகலவிடூசிகையும் அத்தியந்தமில்லாமற் கழிந்துபோய்விடும் இவ்வாறருளி விண்ணிற்சென்ற மூன்றுலகத்திற்கும் நாதனுக இருக்கும் பிரஹ்மாவானவர் ககனத்திற் கமனஞ்செய்யும் சித்தர்களானே கவரப்பட்டகொடாத

தான மந்திரத்தை யுடையவராய், காரியாந்தர சித்தியின் பொருட்டு அடைந்த இந்திரனால் வந்திக்கப்பெற்றவராய், மற்றவராற் கெடுத்தற்குமுடியாத சத்திய சங்கற்ப சித்தமாய்ப் பரசித்த சங்கற்பத்தாலுண்டாய பிதாமாதா சகோதரன் சந்தனம் மாலைமுதலிய லோகவடிவங்களாம் விசித்திர யோக்கிய மாயைகளை யுடைத்தாகியிருந்து மிகப் பிரகாசத்தோடுகூடி விளங்கும் தமது சத்தியலோகத்தை யடைந்தனர்.

69-வது விஷூசிகை மந்திரங்கூறல் முற்றிற்று.

---

## 70-வது ஊசிவிவகார வருணனம்.

இப்போது முறையே இளைக்கும் வாயிலாய் இரண்டு ஊசிவடிவமாக ஆதலும், ஊசியானது பிராணிசரீரங்களிற் புகுதலும் வர்ணிக்கப்படும். பூதரசிருங்கம்போற் பிரபையுள்ளவளாகிப் பேரிருண்மயமான இராக்ஷசியானவள் மைம்மேகரேகைபோலச் சூக்குமத்தன்மையை யடையத் தொடங்கினள். எவ்வாறென்றால், மேகம்போல ஆயினள் பின்விருக்ஷசாகை வடிவமாயினள், ஒரு புருடப் பிரமாணமாயினள், பின்னே அஸ்தமாத்திரமாயினள்; அதன் பின்னெட்டை ரூபமாத்திரமாகி, அங்குலிரூபியாகி, உளுந்துப்பருப்பெனவாகி, தூலஊசிபோலாயினள்; பின்னரோ பட்டுத்தைக்கத் தகுதியான சூக்குமதம ஊசியாகப் பதுமகேசர சுந்தரியாகிய அவளடைந்தனள், சிகராகாரமாகிய அவளிப்போது சங்கற்பமலைபோல அணுத்தன்மையை யடைந்தனள், கூறியது தூலசரீரத்திற்கு முறையாகச் சூக்குமத்தகைமை அவளது சங்கற்பகற்பிதமாம் பராவித்தை கற்பிதத்திற்கோ மேலாண்டே கரையுந்தன்மை கழறப்பெறும்; அவள் சூக்குமமான இரும்பின் விகாரமாகிக் கறுப்பூசியாய், ரோகவடிவமான சீவசூசிகையாய் விளங்கினள், மகாபூத கருமேந்திரிய ஜானந்திரிய பிராண அந்தக்கரண அவித்தை காமகருமங்களின் கூட்டவடிவப் புரியஷ்டகத்தால் விண்ணிற்செல்பவளாய் விண்ணில் வசிப்பவளாய்ச் சலித்தனள். அவளுக்கிந்த வூசித்தகைமை யுண்டானதும் திருசியப்பிராந்தி கற்பிதமேயாமன்றி வாஸ்தவமல்லவாம், ஆயிரக்கணக்கான வரசாபங்களாலும் வஸ்துவானது வேறொருவகையாயாகமாட்டாதாம், சூசியெனக்காணப்பட்டாளே யல்லாமல் அயமென அறியப்பட்டாளில்லை, உணர்வுமயல்களின் கூட்டத்திடையில் இவளும் ஒரு மயலாகியற்ப ஊசிபோலாயினள். சூரிய கிரணங்களின் உள்ளே புகுதலாற் சுந்தரி இரத்தின ஊசிபோலவும் வைடூர்ய ரஸ்மிரேகைபோலவும் காணப்பட்டாள், மனனஞ்செய்யும் மனதோடுற்ற அதிசூக்கும தானியம்போன்றுங் காணப்பட்டாள். சூரியகிரணத்தோடு சேராதகாலத்திலோ, மைம்மய மேகவடிவ பிண்டத்தின் அதிலேசம்போலக் காற்றினாலே கொண்டு செலுத்தப்பட்டவளாயினள், சூக்குமமாகிய யாதொரு ரந்திரமுளதோ அதன்கண்ணே விசிஷ்டமான திருஷ்டி தெளிவாகத் திருஷ்டஜோதிபோலக் கிருஷ்ணதாரைகளை யுடையவளாகவிருந்தாள். சூக்குமமான வாலினுனியாகிய பரமவணுவினாலே பிரசன்ன

வதனத்தோடுகூடி வரதானத்தினாலே தனக்கதிக இஷ்டமாகவிருந்த ஊசி ரூபங்கிடைத்த நிமித்தங்கொண்டு பழையதேக விபுலத்தகைமையின் சாந்தியின் பொருட்டு முற்போதில் முனிசம்பந்தியான தபவிரதத்தை அத்தியந்தம் அடைந்தது போலிருந்தனள், இவளுடைய தபவிரதமானது தனது விபுலத்தன்மையின் சாந்தியிலேயே முடிவை யடைந்து வியர்த்தம்போலாயது. எத்தகையதா யெங்ஙனம் அவ்வூசிரூபத்தை யவளடைந்தனள் எனின், தூரத்திலிருந்து பார்க்கும்போது பிரகாசித்துக்கொண்டு கண்களுக்குச் சந்தியதர்சனத்தால் ஏகதீபம்போற் காணப்பட்டது, ஊசிச்சரீரமானது தெரியாமையினாலே ஆகாச தன் மாத்திரையைபோன்றாயது, தேகத்திலந்தர்க்கதமாய் ஆகாயத்திற்கு சூக்குமத்தன்மைப் பிராப்தியின் வெளியே யிருத்தலால் மனோரம்மியமான வரமடைந்த மகிழ்ச்சியான முகத்தினால் ஆகாயத்தை வாந்தியெடுப்பது போற்காணப்பட்டது அதிதூரத்திலேயே. மீண்டுமவள் எவ்வாறிருந்தாளெனில், தூரத்தில் விரிந்ததீபகிரணம்போலச் சூக்குமமாயிருத்தலினானே ஏகாக்கிரப்பொருட்டுக் குஞ்சித ஈக்கணதிருஷ்டாக்களின் திருஷ்டிகளாலே யினிதுகாணப்பட்டது, அப்போதுதான் ஸ்நானஞ்செய்யப்பட்டதனாலே கிளர்ந்தாடும் பாலகரது மெல்லியகேசம்போல விலாசத்துடன் காணப்பட்டது பாகியசஞ்சார குதூகுலத்தினாலே தாமரையினின்றும் நூற்கிளம்பியதுபோலக் கிளம்பிக்கொண்டிருந்தாள், தாமரையினின்று மேலே செல்லும் பிரஹ்மநாடியாகிய சுழும்நை பிரஹ்மரந்திரத்தினின்றும் வெளியே போந்து மேலே சூரியமண்டலத்தை நோக்கிச் சென்றனள். இனியசுந்தரி. சக்ஷுராதி யிந்திரிய சக்திகளை இன்னஇன்ன ஸ்தானத்திலிருக்கவேண்டுமென்று நியமித்தபடி வாய்ந்தவளாய் லிங்கதேகத்தோடுற்றே ஊசியாகாரமாகி வெளியேயுறைந்தனள், பௌத்தர்களினது ஆலயவிஞ்ஞானதாரையானது தன் மாத்திரத்திற் கோசரமாயினும் அன்னியராற் காணமுடியாததே போலும், தார்க்கிகர்தம் தாராவாகிகஞானசந்தானமானது சாக்ஷியங்கீகரியாமையின் காணமுடியாததே போலும் அன்னியராற் காணமுடியாமலிருந்தனள். (ஆலயவிஞ்ஞானதாரை=அகம் அகம் என்பதாம், தாராவாகிகஞானம்=இதுகடம் இதுகடம் என்பதாம்) அத்தியந்தம் அலக்ஷியமாக இருக்கின்றபடியினாலே சூனியவாதி சித்தார்த்தங்களை யுண்டுபண்ணுபவளாயும் ஆகாயத்தின் எங்நீலத்தகைமையுளதோ அம்மயமாய் சப்தமற்றிருந்தனள், (மயட்விவகாரம் சுலோகத்தை யனுசரித்தது) இவ்வண்ணம் அயவிகாரமாய ஊசிவருணிக்கப்பட்டது இனிரோகரூபியாய ஜீவசூசி அதையனுசரித்ததைக் கூறுவாம், காணப்படாததாய ஜீவசூசியினாலே சந்ததம் அனுசரிக்கப்பட்டே அயசம்பந்தி யிருந்தனள். அவ்வவ்விருத்திகளின் பிரதிபலித சிதாபாசர் தம் வியாபார தர்மமுடையவளாயும், வாசனமாத்திரசாரமாகவுடையவளாயும், விநாசஅவஸ்தையோடு கூடிய தீபத்தினுடைய கிரணவடிவஊசியானது விழிக்குப்புலப்படாவிடினும் தீக்ஷணமாய்த் தீண்டிற்ருபப்படுத்துவதேபோலத்

தீக்ஷணமானவளாயும், தெரியாதவளாயும் இருந்தனள். அவளுடைய ஊசி பாவவடிவதவத்தின்பயன் இஷ்டஉபயோக மின்மையின் பரிகசிக்கத்தக்கதே யாம், விழுங்கும்பொருட்டன்றோ ஊசித்தகைமையையுற்றனள், விழுங்குதல் ஆசைமாத்திரமாகவேயிருந்தது என்னை, உதரமற்றவூசிக்கு ஒவ்வாதன்றோ அது, இதையவள்நன்றாக ஆராயவில்லை, அந்தோ இம்மூர்க்கத்தன்மையானது என்னவென்னதான் செய்கிறது, விழுங்குதல் ஒன்றைமாத்திரம் அவள் சிந்தித் தாளேதவிர ஊசிவடிவ துச்சத்தன்மையை நினைக்கவேயில்லை, பயனற்றகாரிய மாக விருந்தாலும் மனமானது இச்சித்ததையே நோக்கிக்கொண்டிருக்கும். மூடமதியோடு கூடிய அவள் ஆராயாமலே ஊசிததன்மையை யிச்சித் தடைந்து விட்டனள், பயனின்றிச் செல்லும் அநர்த்தமதியையுடைய ஜந்து விற்கு முன்பின்னாராய்ச்சி தோன்றாதாம். ஆராயயோக்கியமாய சித்தத்தின் கண்ணே என் விளங்கவில்லையெனின், ஆசைப்பட்டவிடயத்தின் கண்ணே மிக வும் விரும்பியரும்பும் சித்தபதார்த்தம் இஷ்டப்பட்டபொருளில் உண்டாந் திடமுயற்சியினது மிகுந்த சாமர்த்தியத்தினாலே ஆசையோடு மழுத்தமாக மகிழ்தலாலே முன்னிருந்தநிருமலத்தன்மையினும் மாறானபெருங்களங் கத்தைப் பெருமூச்சுவிடுதலாலே பேரழுக்கடைந்த கண்ணாடியேபோல அடை யும். தான் விரும்பியபொருளில் அதிதிடமான ஆசையினாலே இவளுக்குப் பெருந்துயரும் இன்பத்தைக்கொடுப்பதேயாயது, பெரியசரீரத்தைவிட்டு ஊசித்தன்மையையடைந்த அவளுக்குமகாமரணமும் பேரானந்தத்தைப் பயப்பதேயாயதன்றோ! ஒருவஸ்துவின்கண்ணே மிகுந்த ஆசையுடையவர் கட்கு அவர்தம்நடையும் விடமமாகவே யிருக்கிறது. என்னை, இராக்ஷசியான வள் தன்னுடைய ஆசையினாலே தேகத்தையும் துரும்புபோலத்தியாகித்து விட்டாளல்லவா! ஒருவஸ்துவின்கண்ணே மனமானது ஊன்றிவிட்டால் அதேயெண்ணமாகி மற்ற எண்ணங்களெல்லாம் மரித்தேபோய் விடுகின்றன, என்னை, இராக்ஷசியின் விழுங்குமெண்ணம் மிகுந்தபோது தேகநாசமும் நோக் கப்படவில்லை யல்லவா! ஒருவஸ்துவின் கண்ணே மிகுதியாய ஆசையுடைய வர்கட்கு அறியாமையினாலே நாசமும் சுகமாகவேயிருக்கிறது, என்னை, ஊசி யாகத்தேகமில்லாதிருந்தபோதினும் அரக்கியானவள் மிகுந்தசந்தோடத் தையே யடைந்துள்ளாளன்றோ! பிரசங்கத்தால் நீதியைக்காட்டினோம், இப்போது பிரகிருதத்தை யனுசரித்து ஜீவசூசியெனப் பெயரியவியாதி சொரூபத்தைக் கேட்பாயாக், இலக்கினமாய அவள் அன்னியமாயினள் அவ் வாறே வியோமவடிவமாய் ஆகாரமற்று ஆகாசம்போலச்சூக்கும இயற்கை யோடு கூடிய இலிங்கசரீரமாய் ஜீவவிடுசிகையென நின்றனள். தேஜசின்குறு கியபிரவாகம் போன்றுபொலிபவளும், பிராணதந்துமயவடிவினளும், குண்ட லினீசக்தியின் ஆகாரத்தினளும், சந்திரசூரியர்களின் அற்பமாய அம்சரேகை கள் போன்றவளும் ஆகஅச்சுந்தரியிருந்தனள். அந்தக்கற்கடிக்குப்பாவ வடிவமாயிருத்தலினானே வாணுனியொளியொப்பக்குரூரமாமனோ விருத்தி

யிருந்தது, இரும்பூசியினும் தனித்தேயாம், அவ்வாறே சீவ ஊசிரூபமா யிருந்தனள், புஷ்பசம்பந்தமானகந்தரேகை போலப்பரம சூக்குமமாய்ப் பிராணிதேகங்களில் உள்ளேபுகுந்து மகாசாமர்த்தியத்தோடு ஹிம்சாதிகலை களைச்சம்பாதிப்பதேவடிவமாகப்பிரசித்தமாக இருந்தனள், அன்னியப்பிராணி களின் பிராணனை யனுசரித்துத் தானேதன் மனோரதசித்தியில் மிகவும் தற் பரையா யிருந்தனள், இந்தப்பிரகாரம் இரண்டுஊசிமயமாய் சரீரங்கள் அவளுக் குண்டாயின, அவள் பனியினம்சம்போலக் குறுகியவளாயிருந்தனள், பனியின் அம்சம்போலமிருதானவளாயிருந்தனள். அவளுடையசுருங்கிய சரித்திரத் தைக் கேட்டி! இரண்டுசரீரங்களோடுகூடிய அவள்நரர்தம் இருதயத்தில் நுழைந்து மிகவுங்குரூரமாத் துன்புறுத்திக்கொண்டு பின்பத்துத் திசைகளிலும் இங்ஙனமே மிகமிகவும் சுழன்று திரிந்தாள். சங்கற்பத்தின் செய்யமுடியாத தைச் செய்விக்கும் ஆற்றல்விடயத்தில் இதுவேதிருஷ்டாந்தமாமன்றோ யாவ ருமே தங்கள் சங்கற்பவசத்தினாலே சிறுமையையேனும் பெருமையையேனும் அடைவர்கள், கர்க்கடியானவள் உக்கிரமான தேகத்தைவிடுத்து ஊசித்தகை மையையங்கீகரித்ததைக்கண்டாமன்றே! துச்சமாகியபொருளையும் அற்பமன முடையவர்கள் வேண்டிக்கொள்ளுகின்றார்கள், ஊசியின்சீலம்போன்ற சீல த்தையுடைய பிசாசியாயிருத்தல் அரக்கிக்குத் தவத்தாலேற்பட்டதன்றோ! அவள் தவத்தினாலேபவித்திரமாய புண்ணியசரீரத்தையடைந்தனள், அவ்வித மாயஅவளுக்குப் பரபீடையின்காரணமாய ஊசிசரீரப்பிரார்த்தனை யெங்ஙனங் கூடுமெனின்? புண்ணிய சரீரமுடையவர்கட்கும் ஜாதியனுசாரிவாசனை நிபந் தம் போகமாட்டாதாம், தனுரூசி பிசாசித்தன்மையானது அரக்கியால் தவத் தாற் சம்பாதிக்கப்பட்டதன்றோ! அவள் திகந்தங்களிற் சுழன்று திரிந்து கொண்டிருந்தபோது பெருங்காற்றினாலே ஆண்டே சர்வசாதாரணமாய் அவித்தையினாலே கற்பிக்கப்பட்ட அந்தத்தூலமாகிய கர்க்கடியின் சரீரம் சரற் கால மேகம்போலக் கெடுக்கப்பட்டது. விடூசிகையின் சரித்திரத்தை இனி விஸ்தாரமாகக் கூறுவாம், முன் வேறுநோயினாற் பரவசமான சில அங்கத் தினும் சில இளைத்த தேகத்தினும் சிலபருத்த தேகத்தினும் உள்ளேபுகுந்து வாயுலீனமாய் இரும்புருவஊசியாய் அதிசயமான விடூசிகைப்பிரவிருத்தி ரோக மாய் ஆயினள், சிலசிறிய தேகத்திலும் ஸ்வஸ்ததேகத்திலும் நல்லபுத்தியை யுடைய தேகத்திலும் புகுந்து ஜீவசூசியாய் துர்புத்திரூபமான அந்தர் விடூசிகை யாம். இவ்வண்ணம் அத் துர்ப்புத்தி இருதயத்தின் கண்ணேயிருந்து சிலவரிட த்தில் திருப்தியையடைகின்றது, சில்புருடரிடத்தில் புண்ணியகாரியங்களாலும் மந்திர ஔஷத தபக்கிரமங்களாலும் இடர்செயாமல் நீங்குகின்றது. இங் ஙனம் அநேகவருடங்கள் சுழலுவதிலே மிகவுந் தற்பரையாயிருந்தனள், விண் ணின்கண்ணும் மண்ணின்கண்ணும் இருதேகத்தோடுஞ் சென்றுகொண்டிருந் தனள். அவள் மறைவிடவிசேடம் யாதாமெனின், பூமியின்கண்ணே மறை விடம் தூளியாம், கையின்கண்ணே மறைவிடம் விரலாம், ஆகாயத்தின்கண்ணே

மறைவிடம் பிரகாசமாம், வஸ்திரத்தில் மறைவிடம் நூலாம். தேகமத்தியிலும் அவையிருக்கின்றனவாம், வியபிசாராதி தோஷத்தால் துஷ்டமாய உபஸ்த இந்திரியத்திலும், உள்ளேயிருக்கும் நாடிநதியிலும், ஊஷரப்புழுதியடைந்த அவயவத்திலும், காய்ந்திருக்கும் ஹஸ்தபாதாதி ரேகைவடிவ காய்ந்தநதிப் பள்ளத்திலும் சூக்குமமான ரோமாதி ரேகைவடிவ பட்டதிருணத்திலும், சௌபாக்கிய இலக்கண ஹீன அங்கத்திலும், காந்திகழிந்த விடத்திலும் மறைந்திருப்பள், உள்ளேசற்பாவசூனியமாயிருப்பள், தன்னாற் பீடிக்கப்பட்டவர்களை மேன்மூச்சு விடும்படி செய்துகொண்டிருப்பள், தேகத்தினும் வெளிப்பிரதேசத்திலும் ஈக்களோடும் காய்ந்த துர்க்கந்தக்காற்றுகளோடுங் கலந்துதிற்பள், பச்சைப்புன் முதலியவை நிறைந்திருக்கும் பூமிகளிலும், புண்ணிய விருக்ஷங்களாகிய வில்வமரமுதலிய தருக்களில்லாத சோலைகளிலும் மறைந்திருப்பள். தூலங்களாகிய பசுநராதி என்புமுடிச்சுகள் சூழ்ந்தவிடத்திலும், காற்றுமுதலியவற்றானே நித்தியம் நடுக்கத்தாலதிக சஞ்சலப்படுமிடங்களிலும், ஆன்ம நிஷ்டையேயாகிய நிருமலப்பனிபோலப் பரசந்தாப நிவாரணஞ்செய்யும் பொருளில்லாத விடத்திலும், அசுத்தவஸ்திரங்களோடு கூடியிலங்கும் சிஷ்டாசாரமில்லாத ஜனங்கள் சஞ்சரிக்குமிடங்களிலும் மறைந்திருப்பள். பொந்துகளிலும் ஸ்தாணுவின் அவயவங்களிலும் வெட்டுப்பட்ட நுனிவிருக்ஷங்களிலும் முறையே யிளைப்பாறிக் கொண்டிருக்கும் தேனீக்களும் குயில்களும் காகங்களும் காணப்படின் அங்கும், சீதஅதிசயத்தானே மிகவுந் துன்புறுத்திக்கொண்டுண்டான சப்தத்தை மிகச்செய்யும் வாடைமுதலிய காற்றிருக்குமிடத்தும் இருந்தனன், அதனானேயே நடுங்காநின்ற விலோல விரற்சாகினியாம்; மாலைவடிவமாக இருக்கும் மேகரேகைகளென்று சொல்லப்பட்ட பனிப்படலங்கள் சஞ்சரிக்கும் இடத்திலும் சிதைந்த தமது விரலின் புண்களையுடைய ஜனங்களின் படுகுழிகளாகிய வசிக்குந்தேசத்தினும், அசைந்துகொண்டிருக்கிற பனித்துளிகள் பெய்துகொண்டிருக்கிற விடத்திலும், புருடபதாங்கித தேசத்திலும் புற்றிடங்களிலும் மலைகளிலும் இருப்பள்: விரைவாக நீர்மயக்கமுண்டாகி விளங்கும் மருப்பூமியின் கண்ணும் நசங்களை முக்கியமாகவுடைய புலி கரடி முதலியவற்றானேயும் மலைப்பாம்பு முதலியவற்றானேயும் பீடிக்கப்பட்ட கடினதமப் பெருங்காட்டிலும், சிலபாலுண்டாகி யோடிக்கொண்டிருப்பவர்களும் பயந்தவர்களினின்றும் பயந்தவர்களும் பேன் முதலியவற்றானே பீடிக்கப்பட்டு அசுத்தமானவர்களும் வழிநடப்பவர்களும் உள்ளஇடங்களிலும் இருப்பள். விகாரரூபத்தோடுகூடி மிகக்காய்ந்திருக்கும் பேய்முதலியவற்றானே மென்று துப்பியிருக்கும் தாம்பூலவீடிகை யென்னச் சிரணித்த பர்ணங்கணிறைந்து அவ்வகையால் மிகத்துர்க்கந்தம் நாறும் நீர்க்குட்டைகளிலும், மத்தியஸ்தரேகைகளென்னும் வாய்க்கால்முதலிய பள்ளங்களுள்ளனவாய மார்க்கக் கூட்டங்களின் குளிர்காற்றிற்குவிடயமாய வழிப்போக்கரிளைப்பாறுமிடங்களிலும் இருப்பள். மென்றுகொண்டிருக்கும் பேன்களின் வயிற்றிலிருக்கும்

நரக்கூட்ட இரத்தங்களாலே பூரிக்கப்பட்ட கடைவாயுடைத்தான பாமர நர வானராதிகளின் நகங்களையே முகங்களாக வுடைத்தாயத்தன்மையைத்தரிக்கும் பெருவிரற் பரிவாரமென விளங்கும் விரற் கூட்டத்தால் பீடிக்கப்பட்ட எல்லாத்தேகப்பிரதேசத்திலும் பூமியாதிப் பிரதேசத்திலும் முற்கூறிய இடங்களிலும் செல்பவளாக அவளிருந்தனள். அவ்வாறே நானாவிதங்களாய கஜதுரகாதிகள் எழுதியிருத்தலினனே சித்திர வத்திரங்கள் நிறைந்திருக்கும் பட்டணங்களில் போய்க்கொண் டிருப்பள், ஆண்டுப் போதல் வருதல் முதலிய சஞ்சாரங்களினலே நெடுங்காலம் நீண்ட மார்க்கத்தில் அலைந்து அலைந்து அத்தியந்தம் விசிராந்தியை யடைந்திருப்பள். ஊசியியற்கையினனே நகரங்களிலும் கிராமங்களிலும் வீதிகளில் தனித் தனியே யெறிந்து கிடக்கும் பஞ்சு முதலியவற்றுனேயாகிய நூற்களையும், அவற்றிற் கோர்த்திருக்கும் காசமணியாதிகள் பாண்டங்கள் முதலிய அலங்காரங்கள் என்னு மிவற்று ளொன்றைப் பிரியமாகத் தரித்துக்கொண் டிருப்பள். சூக்குமமாக இருத்தலின் அன்னியங்களைக்கவரமுடியாதன்றோ, மேலும் சுராதிகளானே தபிக்கப்பட்ட பிராணிகளின் காய ஆரண்யத்தில், கொழுத்திருக்கும் காளையானது கொம்புகளினலே புற்று முதலியவற்றைக் குத்திக் குத்திக் கெடுப்பதேபோல இவ்வூசியும் அவ்வாறே விவகரித்துக்கொண் டிருந்தது; எவனாலேனும் தைக்கும்பொருட்டுக் கவரப்பட்டு நீள்காலந்தைக்க நூற் கோர்த்த முகத்தை யுடையதாய்த் துக்கியா யிளைப்பாற வேண்டுமென்று சிறிதுபோது தைப்பவன் கரத்தினின்றும் நழுவிக்கொண்டு இளைப்பாறுதற் காகவே எங்கேனும் ஒளிந்து லயமா யிருக்கும். அவள் தைப்பவனுடையகரத்தை என்றுளைக்க வில்லையெனின்? குரூரையாக அவளிருந்தாலும் தனக்கு யோக்கியமாய தைக்குங் கருமத்தில் ஊசித்தன்மையினனே குதூகலத்துடன் பற்றி நின்று துளைக்கவில்லை, அவ்வூசி தன்னியற்கையாய தைத்தலைவிடும் பிரகடஞ் செய்யாதாயின் அத்துல்லிய யோகத்தன்மையால் தன்னுடைய தீக்ஷணமாகிய குரூர இயற்கையையும் வெளியே பிரகடஞ் செய்யமுடியாதாம், என்னை, அதற்குந் தன்னுடையதாந் தகைமை சமமாகவன்றோ இருக்கின்றது, அவ்விரும் பூசியானது ஜீவசூசியோடுங் கூடியே கனமான சில நாவாயிற்போலவும், அங்கம் வெளுத்து விருத்தையாகி யிருப்பவள் ஆசைபோலவும் திசைகளிற் சுற்றிக்கொண் டிருந்தது, திக்கந்தங்களில் சுழற்றுங் காற்றின் ஆற்றலால் உமித்தூள் போல அந்தக்கரண சத்தையோடு கூடினவளாய்ச் சுழன்று சுழன்று வருவதனுனே விசேஷமா யெங்கும் சுற்றிக்கொண்டே வந்தனள். அன்னியர்களாலே கும்பிதம் பண்ணப்பட்ட சூக்ஷ்ம சூத்திராந்ததை முகத்தாற் பக்ஷிப்பவளே போலவும், அதனுனேயே அயலாராலே ஏவப்பட்டதாகவே உதரபூரண முயல்வால் விரைவிற் சொஸ்தசித்த மடைந்தவன் போலவும் ஆக இருந்தனள். இவ்வண்ணம் உற்பிரேக்ஷை செய்தது தக்கதேயாகும், ஊசியால் முன்னரும் பரபூரரசத்தினலே பரவதத்தா லாக்கப்பட்டவுதரபூரண

இச்சையினாலேயே தவத்தாற்கிலேசப்பட்ட தன்மனம் அதிவிலாசமாக உல்லா சத்தை யடைந்தது ஆகலின் அவள் நிரந்தரம் முகத்தில் விழுந்த சூக்ஷ்ம சூத்திருந்தத்தாற்றான் வாஞ்சித்த முக்கியத்திற் றம்பித்துத் தடைபட்டவள் போலாயினள். இப்போது ஊசியினாலே மூடத்தனத்தாற் செய்யப்பட்ட தவ மானது வீணேயாம், நூல்களினாலே கிழிந்த கந்தையின் வயிறு நிரப்பப்படு வதே பிரயோஜன மல்லாமல் தம்முதர பூரணப்பொருட்டுப் பயனில்லையாம் எனவுற்பிரேக்ஷை செய்யப்பட்ட பொருள் லோகப் பிரசித்த சாமானிக்கூற் றுந் திருஷ்டாந்தமாகப் பொருந்தும், பெரிது க்ஷீணித்துத் தரித்திரமிளைப்பு முதலியவற்றானே பீடிக்கப்பட்டகுலமானது குரூரர்களாலும் தயையாற் காப் பாற்றப்படுகின்றது, இது விஷயத்தில் விசாரிக்க வேண்டிய தொன்றுங்கா ணோம், இப்பொருளின் கண்ணே கணத்தில் ஊசியாற் பூரிக்கப்பட்ட கந்தைத் துணி பிரத்தியக்ஷ திருஷ்டாந்தமே யாகுமன்றோ! ஊசியினாலே தனதுதர பூரணம் ஏன் செய்யப்படவில்லை யெனின், ஊசியினாலே நூலின் நுனிப்பாகத் தின் உட்பிரவேசா யோக்கியத்துவார மின்மையேயாய இருதயம் தவத்தாற் சம்பாதிக்கப் பட்டது, அவ்வாறே மதியொளியும் தத்துவத்தையுணரும் பாக் கியசாலியா யிருந்தபடியால் உணருந் தன்மைக்குச் சூரியகாந்திபோல விருந்த பிரகாச இயற்கையும் பரபூரணத்தின் பொருட்டே வஸ்திர முதலியவற்றைத் தைத்தலானே விரைவில் வியாப்த மாயதாம், தனதுபோக வுபயோகமாகச் சம்பாதிக்கப் படவில்லையாம். அதனாலேயே அவளுக்குப் பின்வருத்தந்தோற் றியது, க்ஷீண உதரமாக்கிய அத்தவக் கிரியையால் அகஸ்மாத்தா யினிதுண் டாக்கப்பட்ட அவ்வூசித் தகைமை உருவத்தை யடைந்த அந்த இராக்ஷசியா கிய ஊசியானவள் இருதயத்தின்மாட்டுப் பெருந்தாப முற்றனள். அவள் பச்சாத்தாபப் பட்டனளேயாயின் ஏன் பிராணிகளைத் துளைத்தலினின்றும் உபரதியையடைந்திலள், அவ்வாறாயினு மவள் நதிப்பிரவாகவேகத்திற் கொப் பாய தன்னரக்க இயற்கையினானும் கூரிய ஊசியியற்கையினானும் பிராணிகளைத் துளைக்கும் அபிநிவேசத்தோடும் துளைக்கும் பொருட்டே தன் னனுரூபம் முதலில், முயல்வை அடைவித்துப் பின் விவகரித்தனளாய்த் துளைத்தலையே செய்கின்றனள், ஆகையாலேயே கேவல ஊசி யியற்கையாலாம் காரியத்தை யும் செய்கின்றதென முன்னுரைத்த அருத்தத்தைத் திருஷ்டாந்தத்துடன் கூறுவாம், புத்திர களத்திராதி விஷயங்களில் மிக நீண்ட வாசனைவடிவ நூல் மரணகாலத்தில் வெளிப்பட்ட அவ்வவ் வாசனைக்குத் தக்கபடி ஸ்திரியாதி சரீ ரங்களில் ஜீவசேதனத்தைச் சஞ்சாரஞ் செய்விப்பதே போல வஸ்திரங்களில் சூத்திரத்தைச் சாமர்த்தியமாய்த் துளைத்துச்செலுத்துகின்றது, அதனானேயே தையற் காரர்களால் ஆடைகளில் துளைத்தலாற் சஞ்சாரஞ் செய்விக்கப்பட்ட அவர்களுடைய விழிச்சம்பந்தத்தில் முகத்தைப் படத்தில் நுழைத்து ஓடுபவள் போல ஆயினள், அவளாற் செய்யப்பட்ட இது பொருத்த மில்வாததேயாம் என அர்த்தாந்தரத்தைக் கூறும் வாயிலாய்த் திடப்படுத்திக் காட்டுவாம்,

பிசுன சோராதி துர்ஜனர்கள் தங்கள் முகங்களைக் காட்டாதவர்களாகியே அயலார். இரகசியத்தைப் பிளப்பவர்களாவர்கள், என்பது வெட்டவெளியேயன்றோ; ஒவ்வொருகால் கண்டத்தைப் பற்றிய உத்தரீய வஸ்திரத்தினுடைய நூலிற் கோர்க்கப்பட்டதாய்க் குத்துங் குறிப்போடும் தன்னுடைய துவாரவடிவ நேத்திரத்தால் நாரிகளின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருப்பள் என்ன அபிப்பிராயத்தாலெனின், இவளை எவ்வாறு யான் பிளப்பேன் என்னும் கருத்தாலாம், என்னை குரூரமானவர்களின் வாஞ்சையே யிங்ஙனந்தானிருக்குமென்க, மெதுவாய்ப் பசையுற்றதாக இருக்கும் குணமுடைய பட்டுவஸ்திரத்திலும், கடினமாய்க் காய்ந்ததாக இருக்கும் தோஷமுடைய மரவுரியாலும் சமவிருத்தியினாலே புகுந்தவளாவள், என்னை, மூர்க்கர் எங்கேதான் குணதோஷங்களை ஆராய்கின்றார்கள், தைக்குங்காலத்தில் ஊசித்துளையினின்றும் நூல் வெளிப்போதல் தைப்பவனது பெருவிரலாற் றள்ளப்பட்ட வூசியுதரத்துள் ளிருக்கும் நாடிதந்து வெளிப்படுவது போலாகின்றது, அங்குஷ்டஅங்குலியினாலே பிடிக்கப்பட்ட அவள் விஸ்தாரமான சூத்திரத்தைத் தாங்குபவளாய் நாடி தந்துவைப்போல அவகாசமில்லாமையின் உண்ணிலை கிடையாமல் வெளியில் விடுவதுபோலக் காணப்படுகின்றது. சூத்திரத்துட் புகுந்த அவள் தீக்ஷணமுடையவளாயினும் இரசமுடைய இரசமில்லாத பதார்த்தங்களில் உள்ளே இருதயமில்லாமையாலே விசேட அறிவின்றியதானே இரச ஆஸ்வாதமற்று ஊசி யியற்கையினனே புகாதிற்பள். அபராதமில்லாத தண்டப் பிராப்தியால் அந்தோ இவளுடைய துர்த்தசை யிங்கனுயதாம், நிட்டுரமான வார்த்தை யொன்றும் வசனிக்க முடியாதவளாயினும் முகத்திற் கோர்த்த சூத்திரத்தால் அயலார்க்குச் சந்தாபஞ் செய்யவளாய்த்தானேயும் சந்தாபத்தையுடைய மதியுடையவளாய் நன்முகத் துளையுடையதா யிருந்தாலும் உதரமின்றிய துளை யுடையவளாவள், சிலர் இராஜபுத்திரிசளாக விருந்தும் பாக்கியமற் றிருப்பதேபோல இவளுமாயினள் இவளுக்கு இந்தத் துர்த்தசை பொருத்த முடையதேயாம், அவள் அன்னியர்களுக்குத் தான் செய்யுமபகாரத்தால் மரணமில்லாமலே வதஞ்செய்ய் இச்சித்தனள் ஆகலின் அப்பாவவசத்தால் தன்புத்திவயத்தானே சூத்திரத்திற் றடைப்பட்டவவாய்த் தன் கருமபாசத்திலேயே தொங்கிக்கொன் டிருந்தனள்; தெய்வவசத்தால் தையற்காரனுடைய கையினின்றும் நழுவியதாகி அவனுடைய அல்லது அயலாருடைய மடியில் அத்தத்தாற் கவர அயோக்கிய ஸ்தானத்தில் நிந்திக்கத் தக்க கறுப்புவர்ண கேழ்ரோமங்களோடு மித்திரத்தன்மை வசத்தாற்போல அவற்றிற்றாங்கும், இவளுக்கு அந்தச் சமாகமம் எங்ஙனம் ருசித்ததெனின், தனக்குச் சமானமான மித்திரனிடத்தில் யாருக்குத்தான் ருசியுண்டாகாது; அதனானே மூர்க்கசித்த விருத்தியோடும் சேர்ந்திருத்தலே அவளுக்கு மிகவும் ருசிகரமாம், மூடசித்தங்களின் விருத்திகளோடு கலந்து பிராகிருத ஜனங்களிடத்திலிருப்பள், தனக்குச் சமானமான சேர்க்கையை யாவர்தாம் விட்டுவிட

எண்ணுவார்கள். இவ்வண்ணம் அவளுககு இரும்பூசிய யல்கேளோடும் ஒப்பி ருத்தலின் அச்சிநேகத்தோடு ஒருகால் அவற்றோடும் தெய்வவயத்தால் இரும் படிப்போன் பக்கற்செல்லில் என்னசெய்வ ளெனின், லோககாரரை அவளை டைந்தபோது அவர்களாற் சந்தாயப்படுத்தும் பொருட்டு அக்கினியிற் போடப்பட்டபோது அவர்களது தோற்றுருத்தி வாயிலாக வருங்காற்றால் விசேடமாகச் சவிக்கப்பட்டு அவர்களை விடுத்து மறைந்துகொண்டு ஆகாயத் திற் பறந்து ஓடிப் போபவளாவள். அவளுக்குப் பிராணிகளின் பிராணாதி வரயிலாகத் தேகத்துட் சஞ்சாரமுண்டு, பிராண அபானப் பிரவாகத்தி லிருக் கும் இருதய பதுமாந்தரத்திற் சஞ்சரிப்பள் மகாகோர துக்கத்தைக் கொடுக் கும் கருமசக்தியே ஜீவசத்தியாம் ஆகவே ஜீவனோடுகூட ஆவிர்ப் பூதமான வள் போலாயினள். சமானவிபரீதத் தகைமையானே சமானசம நடையினள் உதான விபரீதத் தகைமையானே உதானசம் நடையினள், வியானஸ்தி தவி யாதி ஜனனியாய்ச் சர்வாங்கரச சஞ்சாரியாய் இருதயகண்டத்திவ் சூலரோ கான்ம வாயுவிற்புகுந்து வைவர்ண்ய உன்மாதங்களைச் செய்துகொண்டிருப் பள். பெரும்பாலும் கம்பளாதி தைக்குங்காலத்தில் ஆடுமேய்ப்பவர் தம் கரத்திருப்பவளாயும், ஒவ்வொருகால் அதனுடைய மயிர்களின்லேச இடத் திலுறங்கிக்கொண்டும், ஒவ்வொரு காலோபாலகர்தம் கர அங்குலியாதி வடிவ தனது படுக்கையைக் குத்திவிலாசஞ் செய்வதில் முக்கிய குதுகல முடை ய்வளாயு மிருந்தனள். பாதத்திற் புகுபவளாய் ருதிரபான சம்பாதனத்தால் விஸ்மிதமுடையவளாயு மிருந்தனள், புஷ்பகுச்சமாலை தொடுக்குங்காலத்தில் குச்சபோஜனமுடையவளாய் அற்பபோஜனங்களால் மிகவுந்திருப்தியை யடைந்திருப்பள். மலமயமான மூலாதாரகோசத்தில் நெடுங்காலம் தலை கீழாய்த் தொங்கிக்கொண்டிருப்பள், தன்னுடைய இஷ்டப்படி இடமானது கிடைத்துவிட்டதேயானால் யார்தான் அதைவிட எண்ணுவார்கள். குரூரத் தன்மையினாலே கெடுதலே செய்யும் தன்னை துளைத்துபத்திரவஞ்செய்து அய லாருயிரைக் கொல்வதனானே காண்பிப்பள், தனக்கொரு பயனுமாகாமலே அன்னியர்களைக் கொல்வதில் அவளுக்கு எங்ஙனம் பிரவிருத்தியாம் எனின், எவர்கட்குப் பரபீடை செய்வதிற் சமர்த்தில்லாவிடினும், பரர்களோடு கலகஞ் செய்வது சுகமாகத்தோற்றுகின்றதோ அவர்கட்கு அயலாரைக்கொல்வது சுக மாக இருக்கும் என்பதைப்பற்றி யென்ன சொல்லவேண்டியதிருக்கிறது, நீசர் கட்குக் கலகமானது உற்சவத்தைக்காட்டிலும் சுகமாக இருக்கின்றது. அற் பத்தினும் அற்பமான இரக்தபிந்துவைச் சுவைக்கும் ஆசையாலும் அயலா ரைக் கொல்வதிலிவளுக்குப் பிரவிருத்திபொருந்துகின்றது, பலகறையாதி கிடைத்தபோதினும் லோபியானவன் தன்னைமிகமதிக்கின்றான், அரக்கர்குலத் திற்குத் தக்கபடியாய பரஹிம்சைவிகார அபிமானத்தாற்றானுகல் அதுபொரு ந்துவதாகும், பிராணிகட்கு அகங்காரசமற்காரமானது கெடுக்கமுடியாததே யாகும். அவள்மோகமடைந்து மூடத்தனத்தினாலே செய்ததவத்தால் ஜீவ

ஊசியும் லோகவூசியும் ஆயினள் தன்னுடைய இரண்டுசேவடிவ அடைவைக் கொண்டு எல்லாரையும் குத்திக்கொல்ல எண்ணினள், மூடர்கட்கு ஆவசியக மாய தங்கள்காரியத்தில் மூடத்தன்மையானதுண்டாவதில்லை அது ஆச்சரிய மாகத்தானிருக்கிறது. இப்போதுயான் அன்னியரைக் கொலை செய்தல் முன் னர்த் தைக்குங் காலத்தில் ஆடை நூல்விபேதத்தால் இனிதுபயிற்சி செய்யப் பட்டது, அக்காரணத்தினாலே விரைவிற் கிடைக்கின்றது என்று தனது குசலத் தன்மையின் அனுசந்தானத்தால் உள்ளே அத்தியந்தம் சந்தோஷமாக இருந் தனள். உலகத்திற்பிரசித்த ஊசியானது தைத்தலாலே தேய்தலில்லாவிடின் சும்மாவைக்கப்பட்டுத் துருப்பிடித்துப்போம் அதுபோல அவளுக்கும் பரத் துரோகஞ்செய்யாதிருந்தால் துயரமேயுண்டாயது, அவ்வூசியானவள் உற்பாத த்தை யுண்டுபண்ணுகிற தெய்வச்செயலேபோலச், சூக்குமமாகி அதிருசிய மாசி கண்டதுண்டமா யிம்சிப்பவளாகித் தீக்ஷணபேதஞ் செய்பவளாகி, குரூர முடையவளாகிக் கணத்தில் விஸ்மிருதியையும் விஸ்தாரத்தையும் அடைவள், மருமஸ்தானத்தை மறைக்கும் முத்தரீயத் தந்துவைத் துளைத் தன்மாத்திர கௌசலத்தானே அன்னியன் இறந்தானென்று சந்தோஷத்தையடைவள், எவனேனும் எவ்வகையினாலேனும் நாசமடைவானாயின் துர்ஜனர் சந்தோஷ மடைவது இயல்பேயாமன்றோ! விஸ்தாரமாகக்கூறிய ஊசியின்சரிதத்தை யினிச்சுருக்கிக் கூறுவாம், மணிமந்திராதிதிரவியவடிவ சக்தியினாலே மாயாவி யைப்போலேனும் மகாயோகியைப்போலேனும் எல்லாவிடங்களிலுஞ் சுற் றும் படியானதன்மையை இஷ்டப்படியடைந்து, குட்டையின்கண்ணே யிருக் குஞ்சேற்றில் மூழ்குவள், ஆகாயத்தில் பறப்பள் ஆகாய அநிலங்களோடு திக்த டங்களில் விளையாடித்திரிவள், அந்தப் புரத்திலும் வீட்டிலும் பட்டிலும் கட்டி லிற்பட்டுமெத்தையிலும் சயனிப்பதேபோலப் பூதலித்திலும் வனத்திலும் புழுதிகளிலும் உறங்குவள், மனுடர்களுடையகையிலும் சுரோகத்திரவடிவ அல்லது சுரோத்திரத்திற்கும் தாமரையிலும் தன்னிஷ்டப்படி ஆட்டுரோமங் களுடைய மிருதுவானகூட்டத்திலும்தூங்குவள், காஷ்டகுட்டியாதிகளின் அற் பதரத்துளையிலும் பிராணிகளினுடைய இருதயத்திலும் அளவிட்டுறைவள். ஸ்ரீ வான்மீகி முனிவரானவர் மேற்கூறியபிரகாரமாக ஸ்ரீ வசிஷ்டமகாமுனிவர் கூறியதைப் பரத்துவாஜர்பொருட்டுக் கூறியபோது பகற்சென்றது, சூரியனும் அஸ்தத்தையடைந்தான் பரத்துவாஜர் முதலியமுனிவர் சபையும் ஸ்ரீவான்மீகி பகவானுக்கு நமஸ்காரத்தைச்செய்து விட்டுச் சாயங்காலஞ் செய்யவேண்டிய தாய சந்தியுபாசனை அக்கினிஹோத்திராதிகளைச் செய்யும் பொருட்டு ஸ்நானஞ் செய்வான் சென்றது, பின்னிரவுகழிந்தபோது காலையில் சூரியகிரணங்களோ டும் மீண்டும் ஸ்ரீவான்மீகி சந்நிதியை நோக்கி வந்தது.

70-வது ஊசிவிவகாரப் வருணனம் முற்றிற்று.

---

## 71-வது ஊசி புலம்பல் வருணனம்.

இப்போது, ஊசிவடிவமாக இருக்குங் கற்கடியானவள் தன்னுடைய பழையதேகத்தையெண்ணியெண்ணி விஸ்தாரமாகப் புலம்பிப் பரிதாபப்படல் வருணிக்கப்படும். ஹேஇராகவ! இவ்வண்ணம் அந்தக்கற்கடியெனப் பெயரிய இராக்ஷசியானவள் அநேக காலமாகச்சர்வஜாதி நரமாமிசங்களையு மருந்தியும் சிறிதும் போதுமென்று திருப்தியை யடையவேயில்லை. பூர்வபகலிலேயே அவள் ருதிரபிந்துவினாலே பசிநீங்கித் திருப்தியையடைந்திடுவள், ஊசியி னுள்ளே எவ்வளவுதான் கொள்ளக்கூடும், ஆசையூசியோ அடங்கவேயில்லை. அவள் சிந்திப்பதாவது, அந்தோ கஷ்டம்! யான் ஏனூசியாகவானேனோ! மிகச்சூக்குமமாக விருக்கின்றேனே, தின்னும் ஆற்றலெல்லாம் குறுகிப்போய் விட்டதே, என்வயிற்றில் ஒரு கவளம்கூடக்கொள்ளவில்லையே! துன்மதியை யுடைய என்னுடைய விசாலம்பொருந்திய அந்தப்பழைய ஹஸ்தபாதாதிக ளெல்லாம் எங்கே சென்றுவிட்டனவோ! காளமேகம்போல விசாலமாகிய அங் கங்களெல்லாம் வனத்திற்சருகுகள்போலக் காய்ந்துபோயினவே! இத்தசையை யடைந்திருக்கப்பட்ட மந்தபாக்கியத்தையுடைய என்னிடத்தில் ஒருசிறிதுங் கொள்ளவில்லையே, வசையினாலே வாசனைகட்டப்பட்டதாய் மாதுரியமாயிருக் கும் மாங்கிசரசக் கவளங்கூட விழுங்க இடத்தைக்காணேமே! குட்டைச்சேற் றில் விழுந்து மூழ்கிக் கிடக்கின்றேன், தரணிதலத்தில் விழுகின்றேன், ஜனங்க ளுடைய பாதக்குழுக்களால் கொல்லப்பட்டேன், சுக்கிலமாகிய கடைத்தாதுவி னாலே மலினமடைந்திருக்கின்றேன். அந்தோ கெட்டேன், நாதனில்லாதவ ளானேன், தேறுதல் சொல்லத் தோழியேனும் பந்துக்களேனு மில்லாதவ ளானேன், யாதொருபற்றையுங் காணேனே, துயரத்தினின்றுந் துயரத்தையே யடைகின்றேன் பிராணசங்கடத்தினின்றும் பிராணசங்கடத்திலேயே மூழ்கு கின்றேன்; ஏனெனின், எனக்கோ சகியுமில்லை தாசியுமில்லை, தாயுமில்லை தந் தையுமில்லை பந்துவுமில்லை வேலைக்காரனுமில்லை சகோதரனுமில்லை மைந்தனு மில்லை, தேகமுமில்லை ஸ்தானமுமில்லை எனக்கு யாதொரு உபஜீவியமுமில்லை. ஒரு இடத்திலிருந்து வசிப்பதென்பதே யில்லாமல் வனச்சருகுபோல எங்குஞ் சுழலுகின்றேன்; ஆபத்துக்கட்கெல்லாம் முதன்மையாக இருக்கின்றேன் கோரமாய பெருந்துயரத்தில் புகுந்து புலம்புகின்றேன், மரணமாவது அடை யலாமென் றெண்ணுகின்றேன் அதுவுமெனக்குக் கிடைக்கமாட்டேனென்கின் றது. வளையலோடென்னும் புத்தியினாலே மிகவும் மூடனானவன் கையிலிருந்த சிந்தாமணியைக் கடிதுவிட்டதேபோல என்னுடைய அரும்பெருந்தேகத்தை மூடமதியையுடையயான் அநியாயமாக விட்டுவிட்டேனே! இத்துயரமும் மோகஞ்சூழ்ந்த மனத்தினாலே யுண்டானதாம், மனமானது பெருமோகத்தை யடைந்து முன்னர் ஆயிரந்துயர்களையாக்கும் துர்ப்புத்தியை யடைகின்றது, முதலில் இங்ஙனம் விபரீதப்பட்டுப் பின்னர் அனர்த்தவிஸ்தார வடிவமாகத் தலைவிரித்தாடா நிற்கும். மேலும் ஒவ்வொருகால் யான் ஒவ்வொரு நாளிற்

கோர்க்கப்பட்டுப் புகையிருக்குமிடத்திற் கட்டப்பட்டுப் புகைகளின்மேல் உட்கார்ந்திருக்கின்றேன், ஒவ்வொரு கான் மார்க்கத்தில் வீழ்ந்தவளாகிக் கழுதை யொட்டகை முதலியவற்ருனே மிதித்துத் துன்புறுகின்றேன், ஒவ்வொருகால் சிலநலிகாதிதிருணங்களில் விதானத்தின்பொருட்டு; உள்ளே பிரவேசிக்கப்பட்டவளாகின்றேன் அந்தோ உள்ளே எனக்கிருக்குந் துக்கபரம்பரையை யளவிட முடியாதாம். நித்தியம் அயலாராலே ஏவப்பட்டவளாயும், அயலார் சஞ்சரித்தபடி சஞ்சரிப்பவளாயும் அத்தியந்தங் கிருபணத்தன்மையுடையவளாயு மிருப்பதுடன் அத்தியந்தம் பரவசமாகவே யிருக்கின்றேன். துச்சமாக உள்ளேயிருக்கும் இரக்தாதி ரசிக்கும் விடயங்களில் மயலாசையையே செய்கின்றேன் அந்தப் பிராந்திவிவகாரமும் குத்துதன்மாத்திரம் பலத்தை யுடையதே யாகின்றதல்லாமல் இரசிக்கும் பலனென்றையுங்காணேம் எனக்கு நாக்குமில்லை வயிறுமில்லையல்லவா!! அந்தோ! அற்பபாக்கியமுடைய என்னுடைய துர்ப்பாக்கியமும் மிகவுங் கஷ்டைத்தையே கொடுக்கின்றதே! வேதாள சாந்திகருமத்தில் வேதாளஉதயமாயதென்னும் உலகப்பிரசித்த அந்தப்பழமொழி என்னிடத்திலேயே சம்பவித்தது, இன்று சாந்தி செய்யப்பட்ட எனக்குப் பெரிய வேதாளமானது உதயமாயது, தவத்தான்முயன்ற எனக்கு சர்வநாசமானதுண்டாயது; மந்தமதியினளாகிய யான் ஏன் பழைய அத்தகைய மகாகாயத்தை விட்டுவிட்டேன் என்னதான் செய்வது எவ்வகையாய புத்தியிருந்தால் நாசமானது அவசியமுண்டாமோ அவ்வகையாய அசுபமதியல்லவோ அப்போதுண்டாயது. "ஊசியைப் பிரமனுஞற்றிடும்போது, நேசமாய்க் கணேசனை நேர்ந்தனனில்லை, ஊசிடா்நூல் விடுமூசியை யதனுல் நாசமாமெனவே நவிலுவரன்றே" என்னும் பழமொழிபோல, அவாந்தரமார்க்கத்தில் தெய்வவயமாய்த் தூளிகளில் மூழ்கி கீடசரீரத்தைக் காட்டினும் அதிக சிறிய சரீரத்தையுடையவளாய்ப் புழுதி மிகுதியினுலே மறைக்கப்பட்டவளாயிருக்கும் என்னை யார்தான் உத்தாரணஞ் செய்யப்போகின்றூர்கள், காணமுடியாத வடிவானேயிருத்தலின் ஒருவருமே உத்தாரணஞ் செய்யமாட்டார்கள். சூக்குமதிருஷ்டியில்லாதவர்கள் உத்தாரணஞ் செய்வதற்கு முடியாதாயினும் விவேகம் நிறைந்தமனமுடைய சூக்குமதரிசிகளாகிய யோகிகள் உன்னை யுத்தாரணஞ் செய்வார்களேயெனின், சூக்குமதரிசிகளுடைய புத்தியின்கண்ணே எம்போலிய ஆசையாற் கெடுக்கப்பட்டவர்கள் எங்கே தோற்றப்போகின்றூர்கள், மலையினுச்சியில் வசிப்பவர்கட்குக் கிராமமார்க்கத் துரும்புகள் தோற்றுமா? நீயே உன்னை உத்தாரணம் பண்ணிக்கொள்ளலாமேயெனின், அஞ்ஞான சமுத்திரத்தின் கண்ணே மூழ்கி யிருக்கப்பட்ட எனக்கு அப்புதயமானது எங்கே யுண்டாகப்போகின்றது? மின்மினியைச் சகாயமாகக்கொண்டிருக்கும் குருடனுக்குப் பதார்த்தங்கள் எங்ஙனந்தெரியும்? ஆகலின் எத்துணைக்காலம் ஆபத்துக்களாலே சூழப்பட்டு ஆபத்துக்களாகிய படுகுழியிற் சுழலவேண்டுமோ ஆசையாற்கெட்ட யான் யாதொரு காரியமும்முடியாதவளாய்த் தெரியவில்லை. நீல

மகாசைலப்பதுமைபோன்ற எனது ரூபத்தையென்றுதான் யானடைவேனோ! ஆகாச பூமிகளின் பிராணிசம்ஹாரத்தினாலும் பற்றுதலாலும் பாரவுத்தாரணத்தில் ஸ்தம்பத்தன்மையை என்று தானடைந்திருப்பேன்? மேகமாலைகட்குச் சமானமான புயங்கள் எப்போதாமோ, ஓடா மின்னற்றானத்தையடைந்த விழிகளையுடையவளாய் எக்காலாகப்போகின்றேனோ, பனிக்கூட்ட ஆடையை எப்போதணிவேனோ, உயர்ந்த கேசத்தாலே ஆகாயத்தையு மளப்பதென்றோ நீண்டு விசாலமான எனதுவயிறாகிய மேகங்கண்டு மயில்கள் கூத்தாடும்படியென்றாவேன். கறுத்துத்தொங்கியசைவனவாய ஸ்தன்னியங்களையுடையவளாயும், தேகசுவாசத்தினாலே கம்பனத்தையுடைய ஸ்தனங்களை யுடையவளாயும் என்றாவேன். அட்டகாச விலாசத்தால் எரிக்கப்பட்ட ஆரண்யதூளிபடலங்களால் மறைக்கப்பட்ட சூரியமண்டலத்தைத் தடுப்பவளாக என்றாவேன், கிருதாந்தனைப்போலச் சர்வப்பிராணிகளையும் விழுங்கவே முயன்ற கிருத்தியத்தைச்செய்யும் பயங்கர ஏக ஆகிருதியைத்தரித்தவளாக என்றாவேன். அக்கினியைப்போல ஒளிர்வதும் உரலைப்போல ஆழ்ந்ததும், ஆகியகண்ணையுடையவள் என்றாவேன். முறங்களின் மாலைபோன்ற ஹாரங்களை யுடையவளாகவும், முறங்களையே மாலைகளாகவுடையவளாகவும், சூரியனுடைய மாலைகளையும் கவர்பவளாகவும், என்றாவேன். ஒரு மலையினுச்சியிலிருந்து மற்றொரு மலையின் உச்சியிற் பாதங்களை வைத்து விளையாடுந் தன்மையுடையவளென்றாவேன். மிகவும் பள்ளமாகிப் பெரிதாய் விளங்கிக்கொண்டிருந்த அந்தப் பெருவயிறானது எனக்கெப்போதுண்டாகும்! சரற்காலத்துமேகம்போல வெளுத்திருக்கும் பெரிய நகவரிசைகள் எனக்கெப்போதுண்டாகும்! மகாராக்ஷசர்களும் பயந்தோடும்படியான புன்சிரிப்பையென்றடைவேன்! என்னுடைய பிருட்டபாகத்திற் றட்டிக்கொண்டு பெரிய ஆரண்யத்தில் உன்மத்தம் பிடித்தவளைப்போல என்று கூத்தாடுவேன்! வசை இரத்தம் கள்முதலிய பதார்த்தங்கணிறைந்த பெருங்குடங்களாலும் பிணங்களின் மாங்கிச எலும்புக் கூட்டங்களாலும் எப்போது எனது பெரிய வயிற்றை நிரப்பிக்கொண்டேயிருப்பேன். மகாலோகருதிரங்களைப் பானம் பண்ணி மதத்தையும் மகிழ்ச்சியையும் கொழுப்பையும் நித்திரையையும் என்றடைவேன். கனகத்தினாலே தனது கனகத்தன்மையை நாசஞ்செய்யும் பஸ்மத்தன்மையையேனும் இரும்பூசித்தன்மையையேனும் அங்கீகரித்துக்கொண்டதற்குச் சமானமாக முடிவிற்றுக்கபலனே வருதலின் நிந்திக்கத்தகுதியாய தவத்தியின்கண்ணே அப்பழைய பருத்து முதன்மையாக விளங்கிய தேகமானது என்னாலேயே சாம்பலாக்கப்பட்டது. அந்தோ! அஞ்சன சைலசமமாயுந் திக்தடங்களையும் மறைப்பதாயுமிருந்த அந்தப்பெரிய காத்திரமெங்கே! திருணத்தைப்போலற்பமாயும் நீண்ட பாதலூதா ஜாதிப்பூச்சி (எட்டுக்காற்பூச்சி)யின் நுனிப்பாதம்போன்றதுமாயுமிருக்கும் ஊசித்தன்மை யெங்கே! புழுதியினாலே மறைபட்ட கனகாங்கதத்தைக் கண்டெடுத்தபோதினும் மூடன் ஆராய்ச்சியின்மையினாலே மண்ணென்னும் மயக்கத்தானே விரைவில் விட்

டெறிகின்றதேபோல என்னல் ஊசித்தன்மை லோபத்தாலே பெரிதாக விளங்கிக்கொண்டிருந்த காயம் விடவேபட்டது. இப்போது தராதியங்கங்களைத் தனித்தனியே சம்போதித்து வருந்துதலைக்கேட்டி. ஐயோ! விந்தியமலையின் பனியோடுகூடிய குகைக்கொப்பான ஒ பெரியவயிறே! நீ சிங்கத்திற்குச் சமமாக உக்கிரமாய்க் கர்ச்சித்து வெளிக்கிளம்பி யானைகட்குச் சமானங்களாய நினது பிரிவாலுண்டாந் துயரங்களை நாசஞ்செய்யாமல் இன்று ஏன் வாளாவிருக்கின்றுயோ தெரியவில்லை. அந்தோ! கிரிசிகரங்களை யாவரு மதிசயிக்கும்படியாகப் பிளந்தெறியும் புஜங்களே! சந்திரனுக்குச் சமானமான நகங்களானே தேவபோக்கியத் தன்மை யுண்மையின் புரோடசம்போல விருக்கும் சந்திரனை யெங்ஙனம் தோசையென்னும் மதியினலே யின்றுகிள்ளிவாயிற்போடாமலிருக்கின்றீர்கள்! இது நீட்சி யதிசயத்தைக் காண்பிக்குங் கூற்றும். ஆ கஷ்டம்! காசமணிமாலைகள் இல்லாவிட்டாலும் சுயமாகவே கிரீந்திரதடம்போல அதிசுந்தரமாகிய ஹே மார்பே! சிங்கங்கள்போன்ற சிங்கங்களேயாய சிங்கங்களைக்கொல்லும் சீலத்தையுடைய யூகங்களின் சமூகங்களையுடைய ரோமவனம் முன் நீ தரித்திருந்ததேபோல இன்று ஏன் றரித்துக்கொள்ளாம விருக்கின்றுய்! ஆ! ஆ!! கிருஷ்ணபக்ஷ ராத்திரியில் நிறைந்திருக்கும் இருட்டின் வடிவமாய காய்ந்த இந்தனத்தைப் பிரதீபனஞ்செய்யும் ஹே என்னருமை விழிகளே! பார்வைவடிவ சுவாலைமாலையில் திசைகளை ஏன் நீங்களலங்கரிக்கவில்லை. ஹாஸ்கந்தமாகிய பந்துவே! நஷ்டமடைந்தனை, மகிதலத்தில் விடவும்பட்டனை, பட்டனை யரைக்க மிகமிகவுந்தூளாய்க் காலவசத்தால், சிலாதலத்திற் றேய்க்கப்பட்டந்தோ போனுயோ! ஹே எனது முகஇந்துவே! அந்தோ! நீ கற்பாந்தத்தில் தவாக்கினியாலினிது தகிக்கப்பட்ட சந்திரபிம்பம்போல சியாமளத்தன்மையானே மனேகரமாக இருந்தனை யல்லவா. இப்போது கிரணங்கள் கொண்டு நீயேன் பிரகாசியாமலிருக்கின்றுய்! ஹாஹா! பெரிய ஆகாரங்களோடு கூடியிருந்த எனது கரங்களே! இன்று எங்கேயோடிப்போய் விட்டீர்கள், யானே பெருஞ்சிறு ஊசியாகி ஈக்களின் கானுனிகளானும் நீக்கித்தள்ளும்படி அதிதுச்சமாய தன்மையை யடைந்துவிட்டேன். அந்தோ ! உக்கிரமான கரஞ்சவிருக்ஷக்கூட்டங்க ணிறைந்து தூலதருமூலங்களும் நிறைந்து மிகப்பள்ளமாக விருந்து கவின்காலும் எனது இரகசியஸ்தானமே ! விந்தியமலையினுமுயர்ந்து விஸ்தரித்திருக்கும் நிதம்ப அம்லபிம்பகமே ! எங்கே காணேம். ஆகாயத்தை வியாபிக்கும்படியான என்னுடைய ஆகாரமெங்கே! நவமான துச்சவடிவ ஊசித்தேகமெங்கே ! பூமிக்கும் விண்ணுக்கும் மத்தியபாகம் போன்ற அகன்றவாயெங்கே! இந்துஊசி முகமெங்கே! மிகுமாம்சபாரங்களாலாம் விபுலமானகவள ஆகாரமெங்கே! அப்புப்பிந்துவாற் போஜனமெங்கே! அதிசூக்கமமன்றேயாய்விட்டேன். அந்தோ! பரிதாபம்!! இந்த நாடகத்தை யானே என்னைக் கெடுக்கும்பொருட்டு ஆடிக்கொண்டேன் !

71-வது ஊசிபுலம்பல் வருணனம் முற்றிற்று.

---

## 72-வது ஊசியின் றவமகிமை வருணனம்.

இப்போது, மீண்டும் ஊசியானது ஹிமாசலத்தில் உக்கிரமான தவத்தைச் செய்வதும் அதைக்கண்டாச்சரியத்தையடைந்த இந்திரன் ஸ்ரீ நாரதர் கூற்றால் விசேஷ நிச்சயஞ் செய்வதும் வருணிக்கப்படும். அந்தச் சோக பராயணத்தோடு கூடியிருந்த ஊசியானது மௌனமுற்று வாக்கில்லாதவளாய் ஏகாக்கிரத்தோடும் நிச்சலபாவத்தையடைந்து மேற்கூறிய பிரகாரமாகவும் தன்றேகாதிகளைப்பற்றி இனிக் கூறும்வகையாகவும் சிந்தித்து, மீண்டும் அவ்வகையாய தேகங்கிடைக்கும்பொருட்டு விரைவில் தவஞ்செய்யு முயற்சியுடையவளாவேன் என்றெண்ணிச் சித்தத்தின்கண்ணே ஜனங்களைக் கொல்லுமாசையை யுபசம்மாரஞ் செய்துகொண்டு, முன்னேயிருந்து தவஞ்செய்துகொண்டிருந்த அதே ஹிமாசல சிருங்கத்தை நோக்கிச் சென்றனள். எங்ஙனஞ் சென்றுளென்றால், அவள் முதலில் தன்னிடத்தில் மனத்தினாலே கற்பிக்கப்பட்ட அவ்வூசித்தன்மையையே கண்டனள்; கிரியாசக்தி சூனியமாய ஆத்மாவின்கண்ணே ஊசித்தன்மையைக் கண்டபோதிலும் எங்ஙனங் கமனஞ் சித்திக்குமெனின், பிராணவாயு வடிவமான ஜீவவூசியானது தனதுபாதி பூத பிராணன்களால் மனோகற்பிதமான லோகசூசியிற் புகுந்து மனுடர்களைக் கொன்றுகொண்டிருந்த இரும்பூசியிற் புகுந்து ஜீவசூசியாகிய தன்னிடத்திலேயே மனோமயமான லோகசூசிபாவத்தைப் பார்க்கவே செய்யும். செய்யவே லோக ஜீவசூசிகளின் அன்னியோன்னியதாதாத்மிய அத்தியாசத்தால் இக்கற்கடி பிராணவாத அபின்ன சரீரமுடையவளாய்க் கிரியாசக்தியையுற்று ஹிமகிரி சிகரமடைந்தனள்; இனிக் கூறப்படும் வகையானே கழுகுக்காயத்தை யடைந்தென்றுணர்க. திடமாகிய காடாக்கினி யெரித்துக்கொண்டும், ஒரு பிராணிகளுமில்லாமலும், அதி விசாலமான குணோற்கிருட்ட இந்திர நீலசிலைக் காந்தியோடுகூடியும் ஆதபங்களாற் காய்ந்தும் இருந்த அந்தத் திருணமற்ற விசாலமான தலத்தில், மருப்பூமியில் அகஸ்மாத்தாக வுண்டாகிய காய்ந்த திருண சிகையைப்போல அங்குறித்ததேபோல இருந்தனள். அதிசூக்குமமாயிராநின்ற சூசியின் நுனி வடிவமான ஏகபாதத்தின் லேசத்தினாலேயே பூமியையாசிரயித்திருந்தனள்; அதனாலேயே இருபதமுடையதேபோல ஏகபாத பரிகாரத்தால் ஏகபாதவடிவுண்மைய சம்பவமாயினும் தனது கற்பனையினாலேயே கற்பித பாகத்வயமத்தியில் அக்கிர அர்த்தபரிகாரத்தால் ஒரு பாதமூன்றிச் செய்யுந் தவத்தைத் தொடங்கினள். அதி சூக்குமமான பாததலத்தின் அதி கூர்மையான நுனிப்பாகத்தால் பூமியின் ரேணுவையுந் துளைத்துச் சங்கடப்படும்படி செய்தனள். முன் இருபக்கமென்னும் மூன்று பாகங்களில் விரிந்த திருஷ்டியைச் சர்வவிடயங்களினின்றும் மீட்டுப் பெரு முயற்சியினாலே மேனோக்கிய முகமுடையவளாயினள். இந்தவூசி மேன்முகமாகி எல்லாவற்றினின்றும் திருஷ்டியுமெடுபட்டுப்போயின் ரேணுவணுக்கற் சங்கடமாமாறு எங்ஙன மதன் காற்றிரமாதல் கூடுமெனின், திடத்தன்மையினானே திரமாயிருத்தல் சித்தமாம்.

இதற்குத் திடத்தன்மையும், கறுப்பூசித்தன்மையானும், இம்சிக்குமியற்கை யுண்மையானும், தீக்ஷண்யமாயிருத்தலினாலும், தீக்ஷணமான நுனியையுடைமையானும், சர்வாங்கவியாப்தியினாலும், முகத்தினாலே காற்றை யுட்கொள்ளுதலினாலும், விசேஷமாக ஸ்தம்பித்திருக்கவேண்டுமென்னும் பிரயத்தனத்தினாலும், ரேணுவணுகற்சங்கடத்தில் பாதம்பதித்தசையாமலிருந்தது. அவ்வூசியானது அரண்யத்தில் பசியினாலே பீடிக்கப்பட்டு அதனானே சமீபத்தில் யார் வருகிறார்களென்று அரண்யமார்க்கத்தே செல்பவர்களைத் தூரத்திலிருந்தே பார்க்கும்பொருட்டு மேலேதூக்கிய தலையையுடைத்தாய், வாலால் திருணபர்ணாதியக்ரபாகத்தில் திதியுடைத்தாய், மார்க்கத்தினர் வியாமோகப்பொருட்டுக் காற்றினாலும் அசையாததன்மையதாய், அதாவது திருணஜலூகமென்னும் புற்பூச்சியேபோல விடம்பிதமுடையதாய், தூரத்திலிருப்பவற்றைப்பார்க்கும் பொருட்டு மிக நீட்சியோடுற்ற பர்வதாயெழுச்சியுடையதாய் இருந்தது. ஊசியின் றுவாரத்திற்புகுந்துவந்த காந்தியும் ஊசியைப்போலவே யிருந்ததால் அதற்கு சகிபோலிருந்தது, எங்ஙனமெனின், அவ்வூசியினுடைய முகரந்திரத்திற் பிரவேசித்தேகிய பாஸ்கரப்பிரகாசமானது ஊசியைப்போ லொளியுடைத்தாய்ப் பிற்பாகத்தை ரக்ஷிப்பதில் மிகவுங் கருத்துடையதாய்ச் சகிபோலாயது. சுவஜனமாயிருக்கப்பட்ட பிராணியானது துச்சமானதாகவிருப்பினும் ஜனங்கள் மிகவும் வாத்சல்லியத்தையே யடைகின்றார்கள். அதனாலன்றே பிரகாசத்தினாலும் ஊசியினிடத்தில் தோழிநடக்கை அதிபுனிதமாகத்தரித்துக் காட்டப்பட்டது. ஊசியினுடைய சாயையும் அவ்வூசியின் வேறொரு சகியாக ஆயிற்று; எவ்வாறெனின், அதனது சாயையானது இரண்டாவது தவமுடையதற்குச் சகியாக ஆனபோது பிரகாசம்போலவே ஊசியைப்போல மலினமாய அச்சாயாசூசியினது அவ்வூசியினானே பிற்பாகக்காப்பாக ஆக்கப்பட்டது. அம்மூன்று ஊசிகளின்பரஸ்பர சிரமூலமுடியாங்கால் பரஸ்பரம்தாங்குதலால் பரஸ்பர அனுகூல ஆசரணம்போன்ற நடத்தை காணப்பெற்றது, பிற்சகியாகிய சூரியப்பிரபையும் துவாரமுற்ற இரும்பூசியும், அதன் றுவாரத்தினின்றும் இனிதாக வெளிப்போந்துள்ள சூரியகிரணக் கண்ணையுடைய சாயையூசியும் முடிப்புண்ணலாலே பரஸ்பரம் ஆசரணஞ் செய்துகொண்டு திரத்தன்மைக்குச் சகாயமாய்ப் பலம் மிகவுங் கொடுத்துக்கொண்டிருந்தன. ஆகையாலவ்வாசாரம் அழகாக இருந்தது. சாயையூசிமூல முடிப்போடுகூட எண்ணலாற்பன்மையாயிற்று. இவ்வண்ணம் தவஞ்செய்துகொண்டிருக்கப்பட்ட ஊசியினுடைய முன் காட்சி விடயமான மரம் கொடிமுதலனவும் நன்மதியை யடைந்தனவாம், மகாதபசைச் செய்யும் ஊசியைநோக்கி யாவர்தாம் நன்னடக்கையை யடையமாட்டார்கள். தவவிடயத்தில் திரமாகித் தன் மனோவிருத்தியைப்போல எழுச்சியையடைந்திருக்கிற இவ்வூசியை மரங்கொடிமுதலியவை தமது புஷ்பலாதிகளினாலே மணஞ்செய்யப்பட்ட காற்றையுண்ணும்படி யூட்டினவாம். அவ்வூசிக்கு அப்போஜனங் கிடைத்ததென்பதை முகத்திலிருந்து வெளிப்பட்ட பாங்காரத்

தொனியினாலே காட்டியது; தொனியோடுகூடிப் போஜனஞ்செய்வது பாமர ஜனங்கட்குற்ற பழக்கமன்றோ? தெய்வாதீனமாய் மரங்கொடிகளால் பூமகரந்தங்களால் ஊசியின் றுவாரம் மூடப்பட்டது, முன்பூத்தவைகள் இனிப்பூப்பவைகள் தேவதைகளின் பொருட்டல்லாதவைகள் என்னும் எல்லாப் புஷ்பங்களின் மகரந்தங்களும் இவ்வூசிக்கே யர்ப்பணமாகுகவென வுற்சாகத்தால் நீள்போது அதன்முகத்தை நிறைத்தன. பின்னர்த் தைவயோகத்தால் மகேந்திரனாலே யேவப்பட்டவாயுவினாலே அதன் றுவாரம்போன்றவாயில் மாமிசமுதலிய பவித்திரமற்ற தூளிகள் விக்கினப்பொருட்டுப் புகுத்தப்படினும் அவற்றையெல்லாம் விழுங்காமல் வெளியே தள்ளிவிட்டது. தவஞ்செய்யுந்திட நிச்சயத்தினாலே அத்தூளிகளை யதுவிழுங்கவில்லை, அற்பப்பிராணிகளாக இருந்தபோதினும் உள்ளே திடநிச்சயமிருந்தால் அவசியம் பிரயோஜனத்தை யடைகின்றன என்பதால் அது தவத்தடைவெடிக்கும் வடிவப்பிரயோஜனத்தை யடைந்தது. வாயில்வந்துவிழுந்த புஷ்பமகரந்த முதலவற்றையும் புசியாமை கண்டு வாயுபகவான் மேருவை வேரோடு பெயர்ப்பதினும் அதிக ஆச்சரியத்தை யடைந்தனர். வேறுவிக்கினங்கள் அநேகம் இவ்வாறேவந்தும் அந்த ஊசியானது கலங்கவேயில்லை, எவ்வாறெனின், அது சேற்றினாலே சிரபரியந்தம் மறைக்கப்பட்டபோதினும், பெருநீரால் பூரிக்கப்பட்டபோதினும், பெருங்காற்றினாலே அலைக்கப்பட்டபோதினும், வனவன்னிகளானே தகிக்கப்பட்டபோதினும், ஆலங்கட்டிகள் வீழ்ந்து பின்னப்படுத்தியபோதினும், மின்னற்சுழற்சிகளால் சுழற்றப்பட்டபோதினும், மேகங்களாலே நடுக்கப்பட்டபோதினும், பெருங்கர்ச்சனைகளாலே கலக்கப்பட்டபோதினும், விஷமூர்ச்சை முதலியவற்றானேபோல ஊசியின் நுனியின் அணுமாத்திரங்கூட அசையாமல் நிலைத்துச் சித்தத்திலுள்ள திடநிச்சயத்தோடுகூட ஆயிரவருடங்கள் பெருந்தவத்தைச்செய்தது. அருந்தவத்தைச் செய்துகொண்டிருக்கும் அவ்வூசியின் பாவங்களெல்லாம் கழிந்துபோய் நீண்டகாலம் சித்தமானது ஒருமைப்பட்டதனாலே விசாரபூர்வகமாக ஞானமானது உதயமாயிற்று. வெளியசைவுகளியாவுமே யடியோடற்று தேசகாலங்கள் அநேகம் சென்றபின்னர், சத்தியமாயும் நல்ல அறிவுருவாயுமிருக்கும் தன்னை விசாரிக்கப்பட்ட அதற்குச் சுயமாகவே ஞானப்பிரகாசமென்னும் ஆன்மசாக்ஷாத்காரவிருத்தி சம்பந்தபோதாத்மாவானது இனிதாக உதயமாயது. அதுபரத்தையும் அவரத்தையுங்கண்டது. அவ்விடுசிகையான ஊசியானது அதிநிர்மலமனமுடைமையானே பரமபவித்திரத்தை யடைந்தது, தான்றானே தவத்தானே, அதிசூக்குமமதியினாலே அறியவேண்டியதை யறிந்தது, அருந்தவத்தினாலே பெரும்பாவங்கள் யாவும் தொலையவே ஊசியானது தனது சொரூபசுகத்தை யறிந்தமர்ந்தது. இங்ஙனம் ஏழாயிரம்வருடம் மகத்தாயிராநின்ற பூமிமுதலிய கீழேழு மேலேழு உலகத்திலுள்ளவர்களும் மிகுந்த சந்தாபத்தை யடையுமாறு அதிகோரமான பெருந்தவத்தை அவ்வூசிமேனோக்கிய முகமுடையதாயிருந்து செய்தது. கற்பாந்த பிரசண்டாக்

கினிபோலும் பெருங்கொடூர பயங்கர தவாக்கினியினாலே பெரு மீமபர்வத மெல்லாம் பெருஞ்சுவாலைபோல மிகவுஞ் சொலித்துக்கொண்டிருந்தது, பின் ஜகத்தும் அவ்வாறே யாயது ; யாருடைய தவத்தினாலே இவ்வுலகமானது பீடிக்கப்பட்டு இவ்வாறு சொலிக்கின்றதென்று தேவேந்திரர் ஸ்ரீ நாரதரைப் பார்த்து வணக்கமாகக் கேட்ப ஸ்ரீநாரதர் ஊசியினது தவத்தைப்பற்றி யெடுத்துக் கூறுவதாவது:—ஒரு ஊசியானது ஏழாயிரம்வருடம் பெருந்தவத் தைச்செய்ய அது மகாவிஞ்ஞானதேகத்தோடு கூடியதாயது அதனாலே இவ் வுலகமெல்லாம் இவ்வண்ணம் சொலிக்கின்றது. நாகங்களெல்லாம் பெருமூச்சு விடுகின்றன, அசலங்களெல்லாம் சலிக்கின்றன விமானத்திற் செல்பவர் விழு ந்து மாய்கின்றனர், கடல்களும் கார்களும் நீரற்றனவாயின, அருக்கனோடு அட் டதிசைகளும் அழுக்கடைந்துபோயின, ஊசியினுடைய தவத்தினாலே க்ஷயப் பிரதானமான மாயையினாலே அதாவது ருத்திரபகவானுடைய ஜகதுபசங்கார சக்தியினாலேபோல யாவுமே நாசமாகின்றன.

72-வது ஊசியினது தவமகிமை வருணனம் முற்றியது.

---

## 73-வது ஊசியினது தவவருணனம்.

இப்போது, ஜீவஊசியினுடைய போக விஸ்தாரமானது மீண்டும் வரு ணிக்கப்படுவதுடன் இந்திரனுடைய ஆக்ஞையினாலே வாயுபகவான் எங்கெங் கும் அதைத் தேடுதலும் வருணிக்கப்படும். கற்கடியினுடைய அப்பிரியமான தவவிருத்தாந்தமெல்லாங் கேட்டதே தேவேந்திரர் ஜீவசூசியின் யோகப்பிர காரத்தைக் கேட்கவேண்டுமென்று மிகுந்த குதூகலத்தை யடைந்து மீண்டும் ஸ்ரீ நாரதரை இனிது வினவுவாராயினர். ஹே நாரத முனிவரே ! ஊசியைப் போன்ற நடக்கையையும், பேய்த்தன்மையைப்போல அதிருசியமான சீவ ஊசித்தன்மையையும் தவத்தினாலே சம்பாதித்துக்கொண்டும் பனியினுடைய சம்பந்தத்தினாலேபோல அடைந்துள்ள ஜாட்டியமதியினாலே குரங்குபோலத் துச்சபோகங்களில் மிகவும் சஞ்சலமுடைத்தாயிருந்த அக்கற்கடியினாலே எப்போக்கியங்கள் போகிக்கப்பெற்றன ? என இவ்வண்ணம் தேவேந்திர ராலே வினவப்பட்ட ஸ்ரீநாரதர் கூறுவதாவது:—ஹே தேவேந்திரரே ! மிகக் கோமளமான பேய்த்தன்மையை யடைந்துள்ள ஜீவஊசிக்குக் கறுப்பாகிய இரும்புவிகார ஊசியானது ஆசிரயமாகவிருக்கின்றது. ஒருகாலத்தில் அவ் விரும்பூசியினுடைய ஆசிரயத்தைவிட்டு ஆகாயத்திலுலவும் வாயுவையே தேராகக்கொண்டு பிராணமாருத மார்க்கமாகத் தேகங்களிலே புகுந்து அந்த ஜீவ ஊசியானது மலினவடிவமான பாவிகளினுடைய தேகத்துள்ளிருக்கும் இரத்தம் மாம்சம் சகல நரம்புகள் என்புகள் மூளை கொழுப்பு வீரியம் முத லிய தாதுக்களின் ரந்திரங்களிலே சென்று, பக்ஷியானது கூண்டுக்குள்ளே பதுங்கிக் கிடப்பதே போலத் தேகத்துக்குள்ளேயே நீள்காலம் ஒளிந்து கொண்டிருக்கும். எந்த நாடியின்கண்ணே ரோக ஆசிரயமாய வெளிவாயுக்

கலக்கின்றதோ அத்தகையதாகவே கூடிச் சென்று அந்நாடியின்கண்ணே அவ்
வூசியானது சூலவேதனையை மிகவுஞ் செய்கின்றது, அது ஸ்தூலமாக விருக்
கும் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியெழுந்தருளியுள்ள ஆலமரத்தின் கீழேயிருக்கும் நாடி
களின் அக்கிரபாகத்தில் சிவபெருமானுடைய உக்கிரமான சூலம் ஸ்தாபிக்கப்
பட்டதுபோலிருந்தது. அவ்வூசியானது அந்தப்பிராணிகளின் சரீர இந்திரி
யங்களால் அவைகளையும் அவற்றிற் கன்னியமாய அநேகங்களையும் நரமாம்சங்
களையும் அவ்வப்பிராணிகட்குத் தக்கவாய போஜனங்களையும் புசித்தனவாம்.
நாயகனை யாலிங்கனஞ்செய்து கொள்வதாலே நைந்துபோன அளவற்ற மாலை
களை யுடைத்தாயும், காந்தனுடைய வக்ஷஸ்தலத்தில் சாய்ந்துகொண்டிருத்த
லினாலே யுண்டாக்கப்பட்ட ஆபரணாதிகளின் குறிகளையுடைய கன்னங்களோடு
கூடியும் இருக்கும் மதோன்மத்தருணியின் றன்மையை யடைந்து தூங்கிக்
கொண்டிருந்தது. இதனானே மதோன்மத்தமங்கையின் சுகத்தையும் அனுப
வித்துக்கொண்டிருந்தது என்று தெரிந்துகொள்ளலாம்; மேலும் பறவைத்
தேகத்திலே புகுந்து, கற்பகவிருக்ஷ சமுதாயங்களின் புஷ்பங்களிலிருக்கும்
மேன்மையினும் இருமடங்கதிகமான மணம் மிருது அழகு முதலியவை யுற்றுச்
சர்வசோகங்களையும் போக்கும்பதுமவன பந்திகளிலும், வனமார்க்கங்களிலும்
விளையாடிக்கொண்டிருந்தது. வண்டினுடம்பிற் புகுந்து அமரசைலங்களின்
வனங்களில் ரீங்காரம்பாடி விளையாடிக்கொண்டு மணம்பொருந்திய மந்தார
புஷ்பமகரந்தங்களோடுற்ற தேன்களைக்குடித்துக் கொண்டிருந்தது. விருத்
தக்கழுகுச் சரீரத்திற் புகுந்து சவசரீரங்களைப் பள்ளம்விழும்படியாகக் கத்தி
யின் றுரைபோன்ற மூக்குகளாலே கொத்தித்தின்றது; அது வீரர்கள் கட்கதா
ரையினாலே போர்க்களத்தில் வீரர்கள் அங்கங்களை அதிவேகத்துடன் வெட்டு
வதேபோலிருந்தது. அவ்வூசி சர்வாங்ககோச நாடிகளிலும் திக்குகளிலும்
காசமணிக்கூட்டம்போல நீலவியோம வீதிகளில் காற்றின் ரேகையோடுகூடி
எழுந்தும் விழுந்தும் விளையாடிக்கொண்டிருந்தது. விராட்டாத்மாவின் ஹிரு
தயத்தில் சமஷ்டிப் பிராணவாயுவினது அசைவுகள் இஷ்டப்படி இலங்குவன
போல ஒவ்வொரு தேகவீட்டிலும் விளங்கிக்கொண்டிருந்தது. ஒவ்வொரு
தேக கிருகத்திலும் அது எந்தப் பிரகாசங்கொண்டு விவகரித்தது எனின், சர்வப்
பிராணி சரீரங்களிலும் பிராணவாயுக்கள் அசைவனபோலச் சிற்சக்திகளும்
இயங்குகின்றன, அவை அந்தக்கரணவுபாதி பேதத்தாலளவிறந்தனவாம், அத்
தகைய சிற்சக்திப் பிரபையினாலே பிரகாசித்துக்கொண்டிருக்கு மவ்வூசி தீபப்
பிரபையினாலே பிரகாசித்துக்கொண்டிருக்கும் வீட்டுக்குடைய தருமபத்தினி
தன்னுடைய வீட்டிற்போல விவகரித்துக்கொண்டிருந்தது. இரத்தங்களிலே
யுள்ளே வாரிகளிற் றிரவசக்தியாற்போலச் சுழன்றது, சமுத்திரங்களில் சுழல்
கைவிருத்தியாற்போல வுதரங்களிற் சுழன்றது. ஆதிசேடனுடைய அங்கங்
களில் ஸ்ரீமந்நாராயணர் துயில்வதேபோல அதிவெண்மையாயிராநின்ற மேதை
களிற் றூங்கியது; பானசக்தியமிருதத்தை மாந்தியதேபோல உள்ளே அங்கங்

தத்தை உறிஞ்சியது. மேலுமது காற்றுருபமாகி இருதயத்தின்கண்ணே பல ஆரோக்கியாதிகளை யுண்டுசெய்யும் தருக்கொடி யௌஷத முதலியவற்றின் வெண்மையல்லாதனவாய வர்ணங்களையுடைய புஷ்பமுதலவற்றைப் புசித்துப் பிராணிகளை ஹிம்சைசெய்ய மிகவும் பலத்தைத் தேடிக்கொண்டிருந்தது. அத்தகைய இது தவத்தைச் செய்யவேண்டுமென்று தன் மனதிலுத்தேசித்து அதிதிரமாகத் தவத்தைச் செய்து பரம பவித்திரத்தையடைந்தது, ஸ்தாவரம் போல நின்ற நிச்சல அந்த ஜீவஊசியானது தன்னெண்ணம்போலவே தவத்தைச்செய்து ஞானமுடையதாயும் பவித்திரமாயும் கல்மஷமற்றதாயும் ஆயிற்று. அதிருசியமாகிய அது காற்றுகிய கடுகதிப்பரியேறித்திக்குகளிலே வாயுவேகமாகச்சஞ்சரித்து இரும்பூசியாகிய கரணத்தினாலே குடித்தது புசித்தது அநந்தம் பிராணி தேகங்களில் விலாசமாக இருந்தது கொடுத்தது கொடுக்கும்படி செய்தது கொண்டுவந்தது நடனஞ்செய்தது பாடியது சும்மா இருந்தது. ஜீவஊசியினுடைய பாரமார்த்திக ரூபத்தை மனத்தில் நினைந்து கூறுமிடத்து, அதிருசியமாய சரீரத்தை யுடையதாயும் சமஷ்டி மனக்காற்றுத் தேகமுடையதாயும், ஆகாசரூபமுடையதாயும் இருக்கும் அவ்வூசியினாலே யாதுசெய்யப் படவில்லையோ அத்தகையதே யொன்று கிடையாதாம்; என்னை, சமஷ்டி வியஷ்டிமனப்பவன தேகத்தோடு கூடியிருத்தலின் எல்லாவுலகமுமே செய்யப்பட்டதாயது. இத்தகைய மகிமையுடையதாக அஃதாமாயின் ஊசிபாவத்தையஃதடைந்தபோது எல்லாப் பிராணிகளையும் ஏன் அது ஹிம்சை செய்யவில்லையெனின், மிகவுஞ் சாமர்த்தியமிருந்தபோதினும் சில பிராணிகளின் இரத்தாதிகளைக் குடிக்கும் இரசத்தினாலேயே மதமிகக்கொண்டு பிராணிகளின் ஆயுள் நியதிவடிவ யானைகட்டும் காலஸ்தம்பத்தை யாசிரயஞ் செய்து யானையைப் போல அற்ப இடத்திலேயே அசைந்து சுழன்றுகொண்டிருக்கும் விரிந்த கல்லோலமிகுதியினாலே யலைக்கப்பட்ட பிரத்தியக்ஷமான தேகநதிகளில் மிகுவேகமாக முற்றினும் உயிர்களினுடைய உடல்களை யொழித்தொழித்துக்கொண்டு அதிமதத்தோடுந் திரிதலாலே இராஜமகரம்போலிருந்தது. மேதை மாம்சம் முதலியவற்றை அருந்துவதின்கண்ணே சக்தியில்லாமையினாலே, பெரியதனுட்டியர்களாய்க் கிழவர்களாயிருந்து ஆசைமிகுத்திருப்பின் போஜன ஆசக்தியோடு கூடியபுத்தியினாலே புசிக்கமுடியாமல் அழுதுகொண்டிருப்பதேபோல அத்தியந்தம் அழுதுகொண்டிருந்தது. நடனஸ்தலத்தில் தன்னங்கத்திற் பூண்டிருக்கும் கங்கணந் தோள்வளையல் முதலியவற்றை யாட்டிக் காண்பிக்கும் நர்த்தகியைப்போல ஆடு, ஒட்டகை, மான், யானை, குதிரை, சிங்கம், புலி முதலியவற்றையும் ஹிம்சித்து ஆடும்படிசெய்துகொண்டிருந்தது. வெளியில் வீசும் காற்றுகளினும் உள்ளேயுள்ள பிராணன்களினும் ஒன்றுகச் சேர்ந்துகொண்டு வாயுகதிபரவசத்துடன் அபேதமாகவிருக்கும் கந்தமேபோல உள்ளேயேயிருந்தது. மந்திரம் ஔஷதம் தவம் தானம் தேவபூஜை முதலியவற்றுனே தாக்கப்பட்டுக் கிரிநதியின் துங்கதரங்கம்போல வெளியிற் சமீபதேசத்தில் ஓடிக்

கொண்டிருந்தது. தீபப்பிரபையைப்போல அந்தர்தான சத்தியினலே அறிய முடியாத நடையையுடையதாய்த் தாயினிடத்திற்போல தனது வேககதியை விரைவாக ஒழித்து இரும்பூசியினிடத்தில் இளைப்பாறிக்கொண்டிருக்கும். தமது வாசனையை யனுசரித்தே யாவரும் இடத்தை யிவ்வுலகிற்றேடுகின்றனர் ஆகையினலன்றோ இராக்ஷசி ஊசித்தன்மை யடைந்ததினலே ஊசியையே தனக்கு இடமாகக்கொண்டது. ஜடஜனம் எல்லாத்திசைகளிற் சுற்றிக்கொண்டிருந்த போதினும் ஆபத்தில் தமது இடத்தையே வந்தடையும் அதுபோல இவ்வுயிரூசியும் இருப்பூசியை வந்தடைந்தது. இவ்வண்ணம் பெரும் பிரயத்தினஞ் செய்துகொண்டிருந்த அது பத்துத்திசையிலும் சுற்றிக்கொண்டிருந்தது. இருந்தபோதினும் மனேசம்பந்தமாய திருப்தியை யடைந்ததேயன்றிச் சரீர சம்பந்த திருப்தியை யடையவேயில்லை. தருமியிருந்தாலல்லவோ தருமம் அதைப்பற்றி நிற்கும், இல்லாவிட்டா லெப்படியஃதிருக்கும் இங்ஙனம் சரீரம் இருந்தாலல்லவோ திருப்தியை யடையலாம் அஃதில்லாவிட்டா லெங்ஙனம் திருப்தியை யடைதல் கூடும்? அவ்வூசியானது முன்றிருப்தி யடையத்தக்கதாக விருந்த பழையதேகத்தை நினைந்து உதரம் நிறையும்படியான பூரண திருப்தி சுகத்தை வாஞ்சித்து தன்னந்தக்கரணத்திற் றுன்பத்தை யடைந்தது. பின்னர் பழையதேகத்தை யடையவேண்டி விசாலமான தவத்தைச் செய்யவேண்டுமென்று நன்ருகச் சிந்தனைசெய்து ஒருதேசத்தை உள்ளே நிச்சயஞ் செய்தது. ஆகாயத்திலே சஞ்சரிக்கும் தாருண்யமான கழுகினிருதயத்திற் பிரவேசித்தது, எம்மார்க்கத்தா லச்சீவஊசி புகுந்தது எனின், பிராணமாருத மார்க்கத்தினலே கூண்டுபிலத்திற் சயனஞ் செய்யும் பக்ஷியானது கூண்டின் சித்திரத்தை யடைவதுபோல அடைந்தது. தன்னுடைய உள்ளேயிருக்கிற ரோக ஊசித்தனைமையைப் பற்றிய முன்மொழிந்த அக்கழுகானது தன்னுட் புகுந்திருக்கும் ஊசியாசைப்பட்ட கருமத்தைச் செய்யும்பொருட்டு மனத்திலெண்ணியது, இது ஈசனது பிரேரணையாம். இக்கழுவானது உட்பிரவேசித்துள்ள ஊசிப்பிசாசுக்கு நிவிருத்திகாலமானது நெருங்கிவந்தபோது இரும்பூசியைக் கொண்டு அது சிந்தித்த பர்வதத்தைநோக்கி வாயுவினலே தள்ளப்பட்ட மேகமே போலச் சென்றது. சர்வசங்கற்பமுங் கடந்தபதத்தில் யோகியானவன் சித்த விருத்தியை வைப்பதேபோல நிர்ஜனப்பிரதேசமாயிருக்கும் மகாரண்யத்தில் அவ்வூசியை இக்கழுகுஸ்தாபனஞ் செய்தது. விரைவில் ஒரே கால்நுனியை ஊன்றி அம்மலையிற்றனே அதிதிரமாக நிலைபெற்று நின்றது, கழுகினலே மலையினுச்சியில் நன்ருக ஸ்தாபிக்கப்பட்ட தேவதைப் பிரதிமைபோல மிக நிலைபெற்று லோகசூசி நின்றுகொண்டிருந்தது. தூளிக்கணங்களேயாய வீட்டிலிருக்கும் பரமாணுவின் சிரத்தில் ஒரு சூக்குமதம பாதநுனிகொண்டு அம்மலையுச்சியில் கழுத்தை யுயர்த்தி யக்கினியைப்போல நின்றுகொண்டிருந்தது. கழுகினலே ஸ்தாபிக்கப்பட்டு நிற்கும் ஊசியை அவ்வுயிரூசியைக் கண்டு அப்பக்ஷியினது தேகத்தினின்றும் வெளியேவர முயன்றது. வெளியே வருவதிஹற்சாக

மும் முயற்சியுமுடைய அவ்வூசியானது காற்றிலிருந்து கந்தரேகை வெளிவந்ததேபோல கிராணவாதலேசவாயிலாகப் பக்ஷிதேகத்தினின்றும் வெளியே வந்தது. சுமைசுமப்பவன் சுமையைப்போட்டுவிட்டுத் தன்னுடைய தேசத்திற்குச் செல்வதேபோலச் சென்று வியாதிவிடுபட்ட புருடனைப்போல உள்ளே சொஸ்தமாக இருந்தது. இனிக் கூறப்படும் ஏதுவினாலே இரும்பூசியானது அவ்வுயிரூசியின் தபஆதாரப்பொருட்டு இனிது கற்பிக்கப்பட்டதாயது, அர்த்தங்கட்குத் திடமாயும் நன்கு சதிருசமாயும் உள்ள விநியோகமானது மிகவும் அழகாக இலங்குகின்றது. அமூர்த்தமாயிருப்பதற்கு ஆதாரமில்லாமல் யாதொரு கிரியையுமே சித்திக்கிறதில்லை யென்பதனாற்றான் ஆதாரத்தின் கண்ணே யிருக்கும்படியான பெரிய நிலைமையை அவ்வுயிரூசியானதுபற்றித் தவத்தின்கண்ணே நிலைபெற்றது. அசோக விருக்ஷத்தைப் பேய்போலவும், கந்தரேகையைக் காற்றேபோலவும் இரும்பூசியைச் சீவஊசியானது எல்லாப் பக்கத்திலும் வளைந்துகொண்டிருந்தது. ஹே தேவேந்திரரே! அதுமுதற்கொண்டு இவ்வூசியானது பெருந்தவத்தைச் செய்துகொண்டிருக்கின்றது, அநேகமாயிரம் வருடம் அப்பெருங்காட்டிலேயே தவத்தில் அது நிலைபெற்றிருக்கின்றது. யாவற்றையும் செய்யும்வகை தெரிந்த நீர் அவளை வஞ்சிக்கும் பொருட்டு ஏதாவது துச்சவரத்தைக் கொடுக்க முயல்வீராக, அந்தத்தவமானது நெடுங்காலமாக இரக்ஷித்துக்கொண்டு வராநின்ற இவ்வுலகத்தை யத்தியந்தம் சாம்பராக்கத்தக்கதாக ஆய்விட்டது. ஹே இராமச்சந்திர! இவ்வண்ணம் ஸ்ரீநாரதரானே கேள்விப்பட்ட இந்திரர் ஊசிதவம்புரியுமிடத்தைக்கண்டு கொள்ளும்பொருட்டு எட்டுத்திக்கு மண்டலங்களிலும் சென்றுதேட வாயுவை யனுப்பினர். பின்னர் வாயுவினுடைய திவ்யதிருஷ்டிவடிவ ஞானமானது அவ்வூசியைக் காண்பதற்குத் திசைகளிற் சென்றன, அதாவது தான் செல்லும் பொருட்டுத் திவ்யதிருஷ்டியினாலே திசையின் பரியாலோசனை செய்ததாம், பின்னர் விண்மார்க்கத்தை விடுத்து விரைவாகப் பூமியின்கண்ணே சஞ்சாரஞ் செய்தது. வாயுவினுடைய ஞான திருஷ்டியானது அதிவேகத்துடன் பாதியாகிய ஓரம்சத்தாலே சர்வதிக்குப் பரியாலோசன பரமாகிச் சர்வ உற்கிருஷ்டமான பிரஹ்மஜோதியானது யாவற்றையுங் காண்பதேபோல யாதொரு தடையுமின்றிச் சகசமாகவே கண்டது. சர்வத்தையும் கண்டவிதத்தையே விஸ்தரிப்பாம், பூமியினுடைய ஏழுகடலினந்தத்தில் ஸ்திதிபெற்றிருக்கும் பிராணிசூனிய காஞ்சன பூமியையும், லோகாலோக பர்வதரசனையையும் அதற்கப்புறம் மணிமயமான இடத்தையும் கண்டது. ஈண்டுத் தீப சமுத்திரக்கிரமம் முற்கூறிய முறையாகவேனும் பிரஹ்மாண்டமானது வேறாக விருத்தலின் இவ்விடத்திய முறையை யனுசரித்தேனும் உணர்ந்துகொள்ளவேண்டியது. நல்ல தண்ணீர்க்கடல் வளையத்தையும், பர்வதசந்திகளிலிருக்கும் தேசங்களோடு கூடிய திசைக்கூட்டங்களையும், புஷ்கரத்தீப வளையத்தையும், அதனுள்ளேயிருக்கும் கிரிமண்டலத்தையும், கட்கடல்வளையத்தையும், அதன்ஜலசரங்களால் அலைந்தி

திரியும் தேசங்களையும் கண்டது. இதனுனே அங்கிருக்கும் பிராணிகட்கு நீரி லும் நிலத்திலும் சஞ்சாரசாமர்த்தியம் காணப்படுகின்றது. பின் கோமேதத் தீப கடகத்தையும், அதன்மத்தியினுள்ள விடயக்கூட்டத்தையும், கரும்புச்சாற் றின் கடல் விஸ்தாரத்தையும் உபத்திரவமில்லாத மலைக்கூட்டங்களின் விஸ்தா ரத்தையும், கிரவுஞ்சத்தீப பூபீடத்தையும் சாந்தமான கதகிரிக்கிரமத்தையும், பாற்கடலேயாய முத்துப்பதித்த வளையத்தையும், அதன்மத்தியிலே யெழுந் தருளியிருக்கும் மூன்று லோகநாயகராகிய ஸ்ரீமகாவிஷ்ணுவையும், அவாந்தர கண்டபேதங்களோடுகூடி யநேகம் பிராணிகணிறைந்த சுவேதமெனப் பெயரிய தீபவளையத்தையும், அதன்பின் நெய்நிறைந்த கடலையும் அதன்கண்ணே யிருக் கும் புரமந்திரங்களையும், மகாசைல கோடரங்கணிறைந்து வியாபகமாயிரா நின்ற குசத்தீபத்தையும் கண்டது. தயிர்க்கடல் ராசிரசனையால் ஆகாயம் அளாவியிருக்குந்தன்மையையும், அதன்கண்ணே புரங்களநேக மிருப்பதையும், சாகத்தீபத்தின் பூமியாகாரத்தையும் அங்கே சாந்தஸ்திதியிலிருக்கும் விடயங் களை மனுடர்களையும், உப்புநீர்நிறைந்த உததிதன்னையும், உபத்திரவமற்ற சாந்த நீர்மைவாய்ந்த ஜனங்களையும், குலபர்வதங்கள் கூடிக்குலவும் ஜம்புத்தீவி னுள்ள மகாமேருவையும் கண்டது. காற்றினுடைய மேற்கூறிய திருஷ்டியா னது காற்றின் கழுத்தினின்றும் கீழே குதித்தது முதலிதுவரை யாவற்றையுமே முறைமுறையாக நன்ருய்ப் பார்த்தது. தன்னுடைய திருஷ்டியானது காட் டிய மார்க்கத்தே வாயுவானதுவந்து முடிபாக ஜம்புத்தீபத்தை நோக்கி, எவ் விடத்தில் அத்தவம்பொருந்திய ஊசியானது நிலைபெற்றிருக்கின்றதோ அவ் விடமாகிய ஹிமவான் சிருங்கத்தையது நோக்கி, சிருங்கத்தினுச்சியில் மகத்தா யுக்கிரமாகத் தவம்புரியும் பான்மையால் அத்தகைமைவாய்ந்த இடத்தில் இருக் கும் பிராணிசஞ்சாரங்கள் சிறிதும் இல்லாததும் இரண்டாவது ஆகாசவிஸ்தா ரத்தையுடையதும் ஆகியபெரிய ஆரண்யத்தை நோக்கியது. அவ்வாரண்ய மானது, சூரியமண்டல சமீபஸ்தலமா யிருந்தமையின் புன்முதலியவை யொன்று முதியாததாயும், தூள்மயமாயே யிருப்பதாயும், அதிவிஸ்தாரமாயும், இரஜோகுணவிகார பூதமாயும், சமுசாரரசனையைப் போலுற்றதாயும் இருந் தது; மேலும் கானலாறநேகங்கூடி நிறைவித்த கடலுக்கொப்பாயும், இந்திர னது தனுசுக்குச் சமானமான பேய்த்தேர் நதிகள் நூற்றுக்கணக்கா யுடைத் தானதாயு மிருந்தது. லோகபாலர்களாகிய இந்திராதிகளின் திருஷ்டிகளி னலே இவ்வளவுதானென்று அளவிடமுடியாத அநந்தபரியந்தமாம் அவாந் தரப்பிரதேச பேதங்களையுடைத்தாயும், கேவலம் இருபக்கங்களிலும் காற்றின் அசைவினலே சுழலாநின்ற தூளிபடலங்களே குண்டலங்களென விளங்குவ தாயும், இருந்தது, இதுமுதலிய விசேஷணங்களானே அப்பெரிய ஆரண்ய மானது விண்விலாசினிபோன் றலங்கரிக்கப்பட்டதாம், சூரிய கிரணங்களாகிற குங்குமப் பூச்சுடையதாயும், சந்திரகிரணங்களாகிய சந்தனப்பூச்சுடையதாயும், காந்தனுலாலிங்கனம் செய்யப்படுதலா லுதயமாய சுகத்தை விளக்கும் தொனி

யாகிய வாதசூத்காரத்தைக் கேட்பிப்பதாயும், இருந்து விண்விலாசினியே போன்றிலங்கியது. அனந்த திக்கந்தங்களையும் வியாபித்துப் பூரித்த பெருத்த காத்திரத்தோடுகூடிய அக்காற்றானது, சப்ததீபங்களாலும் சப்தசமுத்திரங்களாலும் லாஞ்சனத்தால் நன்கு மேற்பாகத்தில் வியாப்தமான ஏகதேச ஆசிரய பூவடிவ பீடத்தை நாற்பக்கங்களினும் சுற்றி நீள்வழிகடந்தமையானே யிளைப்பையடைந்து அளிக்கொப்பான வடிவமுடைய விண்ணின் அங்கத்திற்றுக்கியதேபோல நிலைபெற்றிருக்கும் அவ்வுக்கிரமான கிரிஸ்தலத்தையடைந்து இளைப்பாறுதலை யெய்தியது.

73-வது ஊசியின் தவவருணனம் முற்றிற்று.

---

## 74-வது ஊசியின்றவ பரிபாக வருணனம்.

இப்போது, வாயுவானது அப்பெருந்தவஞ்செய்யும் ஊசியைப் பார்த்துவிட்டு இந்திரரிடத்திற் செல்லுதலும், வரப்பொருட்டுத் தாதாவைப் பிரார்த்தித்தலும், ஊசியினுடைய ஞானமும் வருணிக்கப்படும். அம்மலையினது உச்சியிலிருக்கும் பெரிய ஆரண்யத்தோடு கூடியிருக்கும் பூமியின்கண்ணே மத்திய பாகத்தில் சிகையோடுகூடி விளங்குவதேபோல எழுந்துநின்று தவம்புரியும் ஊசியைக் கண்டது. அது அப்போது ஒருகாலில் நின்று தவம்புரிந்துகொண்டும், சிரத்தை வெய்யிலிற் காயவைத்துக்கொண்டும், சந்ததம் உண்டியொன்றுமின்மையினானே உதரமுந்தோலும் காய்ந்தபிண்டம்போலாம்படி செய்துகொண்டும் இருந்தது. ஊசிக்குதரமுந்தோலும் அசம்பவமன்றோ. மேலும் ஒருகால் வாயைத்திறந்து கதிரையுங் காற்றையும் கவர்ந்துகொண்டிருப்பதேபோலவும், நிரந்தரங் கொள்ளவில்லையென்று இருதயத்திலிருந்து பின்னர் விட்டுக்கொண்டிருப்பதுபோலவுங் காணப்பட்டது. சண்டாம்சு கிரணங்களினாலே காய்ந்தும், வனவாயுக்களாலே ஜர்ஜரமாகியும், எவ்வாறுற்றும் தனது ஸ்தானத்திலிருந்து அசையாமலும், இந்துவினுடைய ஈர்ங்கிரணங்களினாலே அபிஷேகிக்கப்பட்டுமிருந்தது. மேலும் அவ்வூசியினுடைய மஸ்தகத்தில் வேறு ரஜசானது வந்தணுக முடியாமையின் அன்னிய ரஜசாதி சம்பந்தமான ரஜோகுணத்திற்கும் அதன் சககாரியான தமசிற்கும் இடங்கொடாமல் ஒருரஜ அணுவினாலே மறைக்கப்பட்ட மஸ்தகத்தையுடையதாக இருந்தது, அதுரஜோ அணுலிங்கத்தினாலே கிருதகிருத்தியத்தகைமையைக் கருதத்தக்கதாக இருந்தது. இன்னும் முன்மொழிந்த அப்பெரிய ஆரண்யமானது தன்னுடையனவாய தருக்கொடி மிருகாதி ரூபமான தனைசுவர்யத்தை வேறு ஆரண்யங்கட்குக் கொடுத்துவிட்டு நெடுநாட் டவத்தால் ஊசிவடிவமாயுண்டான உச்சிக்கொண்டையைச் சம்பாதித்துக் கொண்டதுபோல நின்றுகொண்டிருந்தது, அதனினும் யோகபரிபாகத்தினாலே மூர்த்தன்யத்தில் நிலை பெறுத்தப்பட்ட பிராணன்கள் தங்கள் ஜடாஜூடத்தின் சுற்றல்போலத் திதிபெற்றிருந்தது; ஊசியானது, தவந்தொடங்குங்கால் சூக்குமத்தன்மையானே பேராரண்யத்தின் சிகையென

வருணிக்கப்பட்டது, நெடுங்காலஞ் செய்ததவத் தேஜசின்மிகுதிப்பாட்டால் கூட்டமுடைமையைக் கூறும்வேட்கையாலோ அதன் ஜடாஜூடச் சுற்றுத லாகச் சொல்லப்பட்டது என்றுணரலாம். இவ்வாறிருந்த அத்தவவூசியைப் பவனம்பார்த்து விஸ்மய ஆகுல சித்தமுடையதாகி நமஸ்காரஞ்செய்து நெடு நேரம் நோக்கி மிகமிகவும் பயந்துன்னியதேபோல வந்தது; எனவே தேவதை களானும் பிரஹ்மவித்தானவர் பணியத்தக்கவர் என்று இலக்கியதாயிற்று என்க. அவ்வூசியின் தேசுராசியைச் சகிக்கக் காற்று ஆற்றலற்றதாகி ஹே மகாதவத்தையுடைய வூசியே! யாதின்பொருட்டு இப்பெருந்தவத்தை மேற்கொண்டொழுகுகின்றாயென்று கேட்பதற்கு முடியாமற் போய்விட்டது, பகவதியாகிய மகாஊசியினுடைய பெருந்தவத்தை யென்னென்று சொல்வது! அகோ சித்திரம் யென்பதாகக் கேவலம் தியானித்துக்கொண்டு காற்றானது ககனத்திற்சென்றது. மேகமண்டலங்கடந்து வாயுமண்டலந்தாண்டி சித்தர்கூட் டத்தைக்கீழேசெலுத்தி சூரியமண்டலத்தையுங்கடந்து வைமானிக்கப் பிரதா னான நக்ஷத்திரலோகத்தைக் கீழ்ப்படுத்தித் தேவேந்திரருடைய புராந்தரத் திற்புக்கது. புரந்திரர் ஊசியைத்தரிசித்த புண்ணியரூபமான காற்றைக்கண்டு பவித்திரமாயிருக்கும் மேனியைத் தழுவிக்கொண்டார். அவ்வாயுவை நோக்கி இந்திரர் ஊசிவிருத்தாந்தைக்கேட்டபோது கண்டனவனைத்தையும் கழறிற்று. மேலும் சர்வ தேவர்களோடுங் கூடிச் சபாமண்டபத்தில் எழுந்தருளியிருக்கும் இந்திரரைநோக்கிக் கூறுவதாவது:—ஹே இந்திரரே! ஜம்புத்தீபத்தில் பகவ னாகிய சாக்ஷாத் ஸ்ரீசசிகலாதரரை மருமகனாக உடைத்தான தன்மையினாலே யே மிகவும் உன்னதமாகவிளங்கும் ஹிமவான் என்றுசொல்லப்பட்ட சைலேந் திரம் ஒன்று உளது. அதனுடைய உத்தரபாகத்திலிருக்கும் மகாசிருங்கத்து உச்சியில் மகாதேஜசோடுகூடிய பெருந்தவத்தைச் செய்யும் ஊசியானது இரு ந்துகொண்டு உக்கிரமான தவத்தை வளர்க்கின்றது. இதுவிஷயத்தில் அதிக மாகச் சொல்லுவதினாலே யென்னபிரயோஜனம்? காற்றுமுதலியவற்றைப் புசிப் பதையுங்கூட விடுதற்பொருட்டுத்தன்னுடைய உதரப்பொந்தைப்பிண்டமாக்கி இரும்பின் கனத்தன்மையையடைந்ததனை நீக்கிவிட்டது. அவ்வூசியானது தன்வாயிலே புகுந்த சீதக்காற்றும் உள்ளேபோகாமல் விலக்கச்சங்கோசமற்ற தாய் மிகவும் அற்பத்துவாரத்தோடுகூடிய முகத்தைத்திறந்து தூளியணுவின லே மறைத்துக்கொண்டிருந்தது. ஹிமயகிரியானது அவ்வூசியினுடைய தீவிர மான தவத்தினாலே பனிக்கட்டியாகாரத்தை அத்தியந்தம் சபதத்தோடும் விட்டுவிட்டு உக்கிரமானதவத்தினாலே உண்டாகிய அக்கினியினால் தன்பாறைக ளெல்லாம் உருகி இருப்புக்கட்டி வடிவமாயுற்றது. அக்கினியாகாரத்தை யடைந்த அவ்விரும்புமலை ஒருவரும் தன்னிடத்தில் வந்தணுகாதபடி செய்து கொண்டிருக்கின்றது. ஆகையினாலே விரைவில் எழுந்திருங்கள், நாம்யாவருமே அவ்வூசிக்கு வரங்கொடுக்கும் நிமித்தம் பிரஹ்மாவினிடத்திற் போவோம், உபேக்ஷிப்பின் அந்தஉக்கிரமான தவமானது பெரிய அனர்த்தத்தைச் செய்யு

மென்று தெரிந்துகொள்ளுங்கள். இந்தப்பிரகாரம் காற்றினலே பிரார்த்திக்கப்பட்ட அவ்விந்திரர் சகலதேவகணங்களோடுகூட பிரஹ்மாவினுடைய லோகத்தையடைந்து விபுவாகிய அவரை வேண்டிக்கொண்டார். ஊசிக்கு வரங்கொடுக்க ஹிமாசல சிகரத்திற்கு நான்போகின்றேனென்று பிரஹ்மாவானவர் பிரதிக்ஞை செய்தவுடனே இந்திரர் சொர்க்கத்தை நோக்கிச் சென்றனர்.

ஏழாயிரம் வருஷமாகிய இத்துணைக்காலத்தினலே அக்கற்கடியானவள் மிகவும் பவித்திரத்தை யடைந்தனள். தன்னுடைய தவத்தால் உண்டாகிய தாபத்தினலே அமரமந்திரங்களையும் தபித்தனள். ஒருவருமில்லாத விடத்தில் அவள்செய்த தவசிற்கு அவளுடைய நிழலே சாக்ஷியாகும். பெரிதுவிரிந்திருக்கப்பட்ட தவத்தின்கண்ணே யிருக்கின்ற அவ்வூசியை அதனுடைய சங்கற்பவிகித காலமரியாதை பரியந்தம் அதனுடைய நிழலே பார்த்துக்கொண்டிருந்தது. எக்காரணத்தாலென்றால் விரிந்திருக்கப்பட்ட முகரந்தரத்திலிருக்கும் சூரியனுடைய ஆதபவடிவ திருஷ்டியினலே யென்றுணர்க. ஆயின் அந்நிழல் சந்திகளிலும் இரவிலும் யாதின்பொருட்டு அதை தரிசித்துக்கொண்டிருந்தது யெனின், பட்டுநூல்போல துச்சரூபமாய் லகுவாயிருக்கும் ஊசியினுடைய நிலைபெற்ற தன்மையாகிய குணத்தால் தோற்கடிக்கப்பட்ட மேருகிரியானது லஜ்ஜையினலே சமுத்திரத்தின்கண்ணே மூழ்குதலை அடையவில்லையாவென்று பார்த்துக்கொண்டிருந்தது. இவ்வண்ணம் இக்கருத்தினலே அதனைக்காணும் பொருட்டேபோல தினத்தில் ஆதியந்தபாகங்களில் நீட்சியைப்பெற்று அத்தரிசனத்தினின்றும் உபரதியை யடைந்தது. ஆனல் மத்தியானத்தில் யென்ன செய்துகொண்டிருந்தது யெனின் மூலத்தில் விலீனத்தையடைந்த தென்றுணர்தி. மத்தியானத்தில் தாபபயத்தினலேபோல அவ்வூசியினுடைய பிராணன்களின் அவகாச பூதமாய உதரத்தையடைந்து உபரதியுற்றது, மற்றைய காலத்திலோ சன்மான ஹேதுவினலே தூரத்திலிருந்து பார்த்துக்கொண்டிருந்தது. அச்சாயையானது அவ்வூசியை தீக்ஷணமான ஆதபத்தாற் பார்க்கும்போது அங்கத்தில் மூழ்கிவிடுகின்றது, ஆயின் எங்ஙனம் மத்தியானத்தில் கௌரவத்தியாகம் செய்தல் கூடுமெனின், சங்கடமேற்பட்டபோது ஜனங்கள் கௌரவசற்கிரியையை மறந்தேவிடுகின்றார்களென்பது கண்டதேயாம். சாயாசூசி தாபசூசி லோகசூசி யென்னும் மூன்றும் பரஸ்பரம் சேர்ந்தபோது இடைவெளிவடிவத் திரிகோணம், அசி, வரணை, கங்கை, என்னும் மூன்று நதிகளும் சேர்ந்தபோது இடையிலிருக்கும் வாராணசி யென்னுங் காசிப்பட்டணம் போலத் தபசினலே அதி பவித்திரம் செய்யப்பட்டிருந்தது. காய்ந்த தன்மையானே அமூர்த்தமாய் கறுப்பாய் வெளுப்பாயிருப்பதான மூன்றுவர்ண ஊசி நதிகள்வடிவ எல்லைகட்குட்பட்ட இடமாகிய திரிகோணத்தினலே, அவ்விடத்திற்சென்ற வாயுக்களும் தூளிகளும் சர்வதோஷங்களும் விடுபட்டுப் பவித்திரங்களாகிப் பரமமுக்தியையடைந்தன; எனவே, அத்திரிகோணம் தன்சம்பந்தி ஜனங்கட்கு முக்திகொடுக்கும் பிரயோஜனத்தன்மையை யடையப்பெற்றிருந்

தது. அவ்வூசியானது உள்ளே யிருக்கும் சைதன்யசொரூப மாகியதன்னை நன்றாக விசாரித்துப் பரம காரணமாகிய பிரஹ்மத்தைச் சாக்ஷாத் கரித்து, அவ்வடிவமேயாயது, அதுக்கு யார் குருவெனின்? தன்னுடைய சயுக்திகளோடு கூடிய விசாரத்தினாலே தனது வடிவத்தைத் தியானிக்கும் பழக்கமிகுத்துத் தாரையாகச் செல்லுதலே ஒப்பற்ற ஆசிரியரா மென்றறிதி, ஹே இராகவ! அன்னிய ஆசிரியர்களெல்லாம் முக்கியர்கள் அல்லர்கள் "ஆசிரயவானுப புருடனே யறிவான்" எனச் சுருதிகூறினும், "சூக்கும தரிசிகள் சூக்குமமாக, வாக்கிய முக்கியமதியினா லறிவர்" என்று கூறும் வேறு சுருதியை யனுசரித்து, சிஷ்யப் பிரஞ்ஞையையே முக்கியமாக அனுசரிப்பது நலம்.

74-வது. ஊசியின்றவ பரிபாக வருணனம் முற்றிற்று.

---

## 75-வது ஊசி சரீரலாப வருணனம்.

இப்போது, பிரஹ்மா பிரசன்னமாகியும் ஊசிக்கு ஞானமுண்டாகிவிட்டபடியினாலே யாதொருவரமுங் கேளாமல் மௌனமுற் றிருந்ததென்றும், இருந்தபோதினும் பிரஹ்மா அதற்கு வரங்கொடுத்து தேகத்தை யுண்டாக்கினாரென்றும் வருணிக்கப்படும், ஹே இராகவ! அக்கற்கடிக்குப் பரபோத முண்டாகி யாயிரவருடங் கழித்து பிரஹ்மாவானவர் எழுந்தருளியாகி ஆகாயத்திலிருந்துகொண்டு ஹே புத்திரியே! வரம்வாங்கிக் கொள்ளுதி யென்றுகூறினார். ஜீவமாத்திர கலையையுடைய அவ்வூசியானது ஊசித் தகைமையை யுடைமையானும் பிரபோத பாதிதத்தன்மை யுடைமையானும் கருமேந்திரிய மின்மையின் வாக்கிந்திரிய மானதும் இல்லாமையினாலே பிதாமகர் பொருட்டு யாதொன்றும் உத்தரம் கொடாமல் கேவலம் வருமாறு சிந்திக்கத் தொடங்கியது; சிந்தித்த பிரகாரமிதுவாம்:—யான் எல்லா ஐயங்களும் அற்றுப் பூர்ணமாக இருக்கின்றபடியினாலே வரத்தினாலே எனக் காகவேண்டிய தென்னே! பரம சாந்தியை யடைந்திருக்கின்றேன், பரம நிர்வாணத்தை யடைந்துள்ளேன், கேவலம் பிரஹ்மானந்த மயமாக விருக்கின்றேன். அறியவேண்டிய தனைத்தையுமே யறிந்துள்ளேன், ஒன்றையறிந்தா லெல்லாமறியும் பொருள்யானன்றோ, சகல சந்தேகங்களும் சாந்தமாய் விட்டன, எனது விவேகமானது மிகவும் விளங்கிக்கொண் டிருக்கின்றது, மற்றொன்று லெனக் காகவேண்டிய தென்னே! இருந்தபடியே யென் சொரூபமாகவே யிருக்கின்றேன், பரமார்த்தரூபமாய சத்தியகலையையே விட்டு மற்றைய மித்தியார்த் தத்தினாலே என்னபயன்? யாதொன்றுமே யின்றும், பாலப் பெண்ணானவள் தன் சங்கற்பத்தித்த வேதாளத்தினாலே துன்புறுதலே போல இத்துணைக்காலமும் யான் அவிவேகத்தினாலே யவதிப்பட்டேன். அவ் வவிவேகமானது தன் விசாரணையினாலே தானே இப்போதுபசாந்தியை யடைந்தது, இஷ்ட அநிஷ்டவாயிலாகப்பிரர்ப்தமா மவற்றால் எனக்குண்டாகும் பிரயோஜனம் என்னதானிருக்

கிறது. இத்தகைய நிச்சயத்தோடு கூடியதாய்க் கருமேந்திரியங்க ளற்றதாய் அதனுனே சும்மா இருப்பதாய் அவ்வூசியைக் கருமபலம் அவசியமாக்கும்படி நியமிக்கும் ஈசுர சங்கற்பத்தோடு கூடிய பிதாமகர் பார்த்துக்கொண் டிருந்தார்; மீண்டும்பிரஹ்மாவானவர் மீண்டும் கூறுவதாவது:—ஹே குழந்தாய்! நீ யாசையற்றவளாக இருந்த போதினும் யாம் நின்பாற் பிரசன்ன மானேம், நீ வரத்தை வாங்கிக் கொள்ளுவாயாக சிறிதுகாலம் இப் பூமண்டலத்தில் போகங்களை யனுபவித்து அதன் பின்பு பரமபதத்தை யடையலாம், எம்மனேரானும் நீக்குவதற்கு முடியாததான முற்கூறிய நியதியின் நிச்சயமிதுவாம். இத்தவத்தின் பலமாக நினது சங்கற்பம் சபலமாகுக, ஹே உத்தமியே! மீண்டும் சைலத்தில் இமகானன இராக்ஷசியாய் மிகவும் விருத்தியுடைய சரீரமுடைய வளாயாகுதி. மேகம்போற் பெரிதான எத்தேகத்தை முன்னர் விடுத்தாயோ அதனையே, பீஜத்தினுள்ளேலீனமான விருக்ஷத்தன்மைச் சாதியானது பெரிய விருக்ஷமாக வியக்தியா யில்லாமல் இருந்துவருவதேபோல மீண்டும் அடைதி. ஆனல் நஷ்டமானது மீண்டு மெங்ஙனம் வருதல் கூடுமெனின்? விரைக்குள்ளே சூக்குமமாயடங்கி யிருந்த கொடி முதலியவை, விரையின்மேனீர் தெளித்தலாதியாலங் குரித்து வெளியே வருவதொப்ப அப்பருத்ததேகமும் நஷ்டமாகாமல் ஊசியினுள்ளே யடங்கியிருந்து எம்முடைய ஆணையினுலே வெளியே வருதல் கூடுமென்க. லோகத்தைப் பாதிப்பதற் கேதுவாயுள்ள அத்தேகத்தாலெனக்கென்ன பிரயோஜன மெனின், நீ யறியவெண்டியதை யறிந்துகொண்டபடியாலுலே யுலகத்தில் யாதொரு பாதமும் செய்யமாட்டாய், சரற்காலத்திலிருக்கும் மேகமண்டலமானது உள்ளே தூயதா யசைந்துகொண் டிருப்பதேபோல விவகரிப்பாயாக. நிரந்தரம் நீ தியானமே செய்துகொண் டிருப்பாய் ஒவ்வொருகால் விளையாட்டாகச் சர்வான்மத் தியான ரூபியாகிய நீ வெளி விருத்தியை யடைதியானல் அதாவது நிருவிகற்ப சமாதியினின்றும் வெளியே வருதியேல் நியாயமாகப் பூதபாதையைச் செய்வாய், தியானதாரணுதிகளைச் சத்தியமாகவே செய்வதோ வெனின், அன்றும், விவகாரவடிவமான தியான தாரணையை யுடையவளாக ஆவாய், இவ்வண்ணமே ஸ்பந்தாதி விவகாரமும் வாஸ்தவமாகாதாம், வெளிக்காற்றேனும் உட்காற்றேனும் இயல்பாகவே சஞ்சரிப்பதேபோலத் தேகாதிகள் அசைவதானே நீ விலாசமாக இருக்கலாம், உனக்குப் பசிவந்தபோது இராக்ஷசர்கட் குசிதமாய் அசாஸ்திரீயமாய ஹிம்சாதிதொழிலை யனுசரித்து அது அவிரோத மானதாலே பசியைப் போக்கும் பொருட்டு நியாயமாக பூதபாதையை நீ செய்யலாம்; நீ ஜீவன்முக்தி ஸ்திதியிலிருந்துகொண்டு தேகத்தில் நின் விவேகமிகுதியால் நினது ஞானரக்ஷையைச் செய்துகொண்டு உலகத்தில் நியாயமான நடக்கை யுடையவளாய் அநியாயஞ் செய்பவர்களை யாகாரஞ்செய்து கொண்டு வாழலாம். இவ்வண்ணம் இயம்பி விட்டுக் ககனதலத்தினின்றும் பிரஹ்மதேவர் போய்விட்டார், பின் ஊசியெண்ணுவதாவது, பிரஹ்மாவினுலே கூறப்பட்டது எனக்குண்டாகுகதான் அத

னாலே என்னதான் விரோத மிருக்கிறது யாதொன்று மில்லையே, தாமரை போன்றந்த திருமொழிகளின் அர்த்தரூபமான வரத்தை வாரணஞ்செய்வதிற் றான் ஆசை யெனக் கெதன்பொருட் டுண்டாக வேண்டும் என்பதாகச் சிந் தித்து, உள்ளத்தின் கண்ணே சிறிதாகப் பழைய தனதுசரீர ஆகாரத்தை யடைந்தது. மானச கற்பனைக் கிரமத்தினாலேயே தூலதேகம் ஆவிர்ப்பவித் தது, முதலில் ஒரு ஒட்டைப் பிரமாணமாயது, பின்னர் ஹஸ்தப் பிரமாணமா யது, பின் னிருகைப் பிரமாணமாயது, பின் விருக்ஷசாகை யக்கிரப்பிரமாண மாயது, பின் விஸ்தாரத்தை யடைந்தது, மேகமாலைப் பிரமாணம் பின்னாயது, இவ்வண்ணம் முறையாக அவ்வூசிக்கு நிமிஷத்தில் விரையினின்றும் முறை யாக முளை முதலாகத் தருக்கொடி யீறாகப் பையப்பையப் பருத்துவளர்வதே போலத் தன்னுடைய சங்கற்பத்தினின்றும் சரீரமாகியதருவும் கைகால் முத லிய கொடிகளும் கிரமமாக வளர்ந்தன. அவளுடைய தேகத்தினின்றும் அங் கங்களும் கரணங்களும் இந்திரிய ஸ்தானங்களும் இந்திரியங்களும் பெரும் ஆற்றலோடு கூடினவாகி யுண்டாயின, இவைமுன்னர் மறைந்தனவாய் பிஜக் கூட்டபூதங்கள்போ லிருந்து அக்காற் பூர்த்தியையடைந்து மீண்டும் சங்கற்ப தருவனப் புஷ்பம்போல எல்லாப் பக்கங்களிலும் ஆவிர்ப்பவித்தன; ஆன லிவை மனோகற்பனையை மூலமாக வுடையனவா யுண்டாகி யிருத்தலின் மித் தியா பூதங்களேயாம் என்றறிதி.

75-வது ஊசிசரீரலாப வருணனம் முற்றிற்று.

---

## 76 - வது அதியாய பாதிகை வருணனம்.

இப்போது பழைய தேகத்தையடைந்து சமாதியிலிருந்து ஆறுமாதங் கழித்துப் பசியினால் வெளிக்கிளம்பிய கற்கடியானவள் வாயுவசனத்தினாலே வேடர்தேசத்தை அடைந்தாளென்று வர்ணிக்கப்படும் ஹே ராகவ! சகல அவயவங்களும் நன்றாக உண்டான பின்னர் சூக்ஷுமமா யிருந்த அந்த ஊசியே மழைக்காலத்து மேகரேகைபோல ஸ்தூலத்தன்மை யடைந்து மீண் டும் கற்கடியென்னும் பெரிய ராக்ஷசியாகி விட்டது. அந்த ராக்ஷசியானவள் தன் வடிவமாயிராநின்ற பிரஹ்மாகாசத்தை மீண்டும் அடைந்து நன்றாகத் தியானஞ்செய்து சிறிது மகிழ்ச்சியுற்று அதனது சாக்ஷாத்காரத்தினாலேபெரிய ராக்ஷசத் தன்மையை அங்கியைக் கழற்றிவைப்பதே போலத் திட ஆரூடங் கொண்டு கழற்றிவைத்தனள். மீண்டுமவள் நிஷ்பிரபஞ்சமா யிருக்கின்ற அறிவு ரூபமான ஆத்மாவை அகண்ட விருத்திதாரையினாலே ஆசிரயித்துத் தியானித் துக் கிரிகூடம்போலச் சலனமின்றிப் பதுமாசனத்திருந்து ஆங்கே உறைந்த னள். பின்னர் அவள் ஆறுமாசங் கழித்து மழைக்காலத்தில் மகாமேகத்தினு டைய நாதத்தால் மயிலானது காம உத்போதத்தை யடைவதேபோல போத முற்றுச் சமாதியைவிட்டு எழுந்திருந்தனள். சமாதியினின்றும் விழித்துப் பாகிய விருத்தியை யடைந்து மிருந்த பசியுடையவளானாள். இந்தத் தேகத்

திற்கு தான் உள்ளவரைக்கும் பசி முதலிய இயற்கைகள் நிவர்த்தியாவதில்லை யன்றோ? பின்னர் அவள் யாதை விழுங்கலாமென்று சித்தத்தாற் சிந்தித்த னள். அன்னிய ஜீவர்கள் நியாயமில்லாமல் என்னுற் புசிக்கத்தக்கவர்க ளல்லர் கள். தேகிகளுக்கு மகத்துக்களாலே நிந்திக்கப்பட்ட பொருளையும் நியாயத்தி னுலே சம்பாதிக்கப்படாத பொருளையும் அனுபவிப்பதைப் பார்க்கினும் மர ணத்தை யடைவதே மேலானதாம். நியாயமாகச் சம்பாதிக்கப்பட்ட ஆகார மின்றித் தேகத்தை விடுவனே யாயின் அப்போது அநியாயம் சிறிது மின்றும். அநியாயத்தினுலே சம்பாதிக்கப் பட்டதாய அர்தத்தைப் புசிக்கினே அது விஷத்தைப்போல அனர்த்தத்தையே கொடுக்கும். எவ்வாகாரம் லோகசம் மதமான முறைப்படிப் பிராப்தமாக வில்லையோ அவ்வாகாரத்தை உண்ப தாலே என்ன பிரயோசன முண்டாம்? வாழ்வதாலே இஷ்டமேனும் சாவ தாலே அநிஷ்டமேனும் எனக் கென்ன வுண்டாகப் போகின்றது? தேகாதிப் பிரமங்களைப் பூஷணமாகவுடைய மனோமாத்திரமாக யானிருக்கின்றேன். அம் மனது தனது ஆத்மதத்துவத்தை யறிந்து சாந்தியடைந் திருக்கின்றது. அவ் வாறிருக்க ஜீவனமரண மயக்கங்கள் எங்ஙனமாம்? ஹே ராகவ! இங்ஙனம் ஆலோசனைசெய்து மௌனவதியா யிருக்கும் அந்த ராக்ஷசி ராக்ஷச தேகாபி மானத்தை நன்றாகத் தியாகஞ்செய்திருக்கும் ஹேதுவினுலே சந்தோஷத்தை யடைந்த வாயுவினுலே ஆகாயத்தினின்றும் சொல்லப்பட்ட வாணியைக் கேட்டனள். என்ன கேட்டாளென்றுல்:—ஹே கற்கடியே! நீ ஆன்மாவை யறியாத மூடர்களை யடைந்து விரைவில் அவர்களுக்கு ஞானத்தினுலே உண் மையை யறிவிப்பாயாக. இவ்வுலகத்தில் தத்துவ வித்துக்களா யிருக்கும் பெரி யோர்களுக்கு மூடர்களை உத்தாரணஞ் செய்வதே இயற்கையாக விருக்கின்ற தன்றோ? எம்மூடன் உன்னுல் போதிக்கப்பட்ட போதிலும் போதத்தை யடைவதில்லையோ அம்மூடன் தன்னுசப் பொருட்டே உண்டாயிருக்கின்றுன். அவன் உனக்குக் கவளமாவது நியாயமேயாகும். இவ்வண்ணம் வாயுவின் வார்த்தையைக் கேட்டு கற்கடியானவள் வாயுபகவானுகிய உம்மால் யான் அனுக்கிரகிக்கப் பட்டேனென்று பரமார்த்த திருஷ்டியினுலே அனுக்கிரகமின் மையின் அவ்வாறு கூறுதல் வெட்கமாக யிருப்பதுபோல மெதுவாகக் கூறி விட்டுச் சைலசிகரத்தி னின்றும் எழுந்து கிரமமாக கீழே இறங்கினள். அப் பர்வதத்தினுடைய மேல்பாகத்தை விரைவிற் கடந்து மற்றப்பருவத பூமியை யுங்கடந்து ஹிமாசலத்தின் பாதபர்வதங்களி லிராநின்ற கிராதஜன மண்டலத் திற் புகுந்தனள். அவ்விடத்தில் வெகு அன்னங்களும் பசுக்களும் லோகக் கூட்டங்களும் திரவியங்களும் இளம் பசும்புற்களும் ஔஷதங்களும் மாமிசங்க ளும் அநந்த மூலங்களும் விருக்ஷங்களும் விசேஷ அன்னங்களும் பல்லில்லாப் பிராணி விசேஷங்களும் மிருகங்களும் கீடங்களும் பறவைகளும் மற்றும் பிற வும் நிறைந்திருந்தன. அக்கற்கடியானவள் மைமலையுருவை மன்னி, அசைந் தசைந்து கம்பீரமாய் நடந்து ஹிமயபர்வதத்தி னுடைய தாழ்வரையி லிருத்

கும் கிராததேசத்தைக்குறித்து நிசாசரியான படியினாலே அதற்குத்தக்கவாறு பேரிரவிருளில் மகாகனமான காடாந்த காரமார்க்க பூமியில் நடந்து சென்றனள்.

76-வது அநியாய பார்திகை வருணனம் முற்றிற்று.

---

## 77-வது இராக்ஷசி விசார வருணனம்.

இப்போது இருளான இரவும் மன்னமந்திரிகளின் தரிசனமும் கற்கடி அவர்களைப் பரீக்ஷிக்கு நிமித்தம் வினவவேண்டுமென்னும் வேட்கையும் விஸ்தாரமாக வர்ணிக்கப்படும். ஹே இராமச்சந்திர! இவ்வாறிருக்கப்பட்டகாலத்தில் அந்தக் கிராதஜன மண்டலத்தில் கரத்தினாலே கவரத்தக்கதான பிண்டம் போலிருக்குங் காரிருளிரவானது உண்டாயிற்று. அவ்விரவானது கற்கடிக்குத் தோழிவடிவான மற்றொரு ராக்ஷசியைப்போலிருந்தது; நீலமேக வஸ்திரத்தைத் தரித்தும், அமிர்தத்தைக் கொள்ளையடித்துவிடு மென்னும் பயத்தால் பறந்தோடிப்போன இந்துவோடு கூடிய ககனாந்தரத்தை யுற்றும், தமாலவிருக்ஷவனங்களை ஒரு பிண்டமாகச் செய்வதே போன்றும் எல்லா விடங்களிலும் உயரக்கிளம்பி யாவற்றையும் நீலமாகச் செய்யும் நேத்திராஞ்சன முற்றும், மிகப்புஷ்டிமேவியும் இருந்தது; கிரிக்கிராமங்களில் நெருங்கிக் கொடிகள் படர்ந்திருக்கிறதினாலே நக்ஷத்திர ஜோதியுங்கூட பரவாமல் அத்தியந்தங் கண் தெரியாமையால் கிழவிபோலச் சஞ்சார மின்றியும், வீடுகள் நாற்சந்தி வீதிகள் நெருங்கிய நகரத்தில் நவயவ்வன முற்றதுபோலத் தீபாதிகளாலே சஞ்சரித்துக்கொண்டு மிருந்தது, வெளியிலிருக்கும் நாற்சந்திகளிற் காற்றினாலே வக்கிரமாக ஆக்கப்பட்டதீபங்களோடு கூடியும் அதனானே தமங்களைப் பிண்டமாய்ச் செய்துகொண்டும் குடிலமான சாளரங்களின் துவாரங்களி னின்றும் வெளிப்போந்த சிறிது தீபப்பிரகாசங்களினாலே சோபையுற்று மிருந்தது; கற்கடிக்குக் கவின்வாய்ந்த சகிபோன்றும் நடனஞ்செய்யும் பேய்களோடு கூடியும் மதம்பிடித்த வேதாளங்கள் எறும்புக் கூண்டுகளைக் கவரும்போது நீக்காம லிருக்கின்றபடியால் காஷ்ட மௌனவிரத முற்றதுபோன்று மிருந்தது. நித்திரையுற் றிராநின்ற மிருகாதி பூதக்கூட்டங்களாலும் கனமான பனியினாலும் அலங்கரிக்கப்பட்டும் மந்தம் மந்தமாக வீசாநின்ற மாருத சம்பந்தத்தினாலே இலங்காநின்ற ஹிமசிகரங்களையுற்றும் விளங்கியது. இனி ராக்ஷசி ரூபத்தைவிட்டுச் சொரூபமாகவே வர்ணிப்பாம். தடாகங்களிலும் பள்ளங்களிலும் பெரிதான ஆலவிருக்ஷங்களிலும் காகங்களையும் மண்டூகங்களையும் வியாபிக்கும்படி செய்தும் அந்தப்புரங்களில் லீலையாலே சப்தித்துக் கொண்டிருக்கும் நாரிநர ஆனனங்களோடு கூடியுமிருந்தது. பாலைவனங்களில் பிரளயாக்னிபோல ஜொலித்துக் கொண்டிருக்கின்ற ஜ்வாலையோடு கூடியும் நீர் தெளித்தலால் நனைதலைப் பெற்றுள்ள முட்பன்றி முதுகில் பரிபக்குவ தசையினாலே அடியோடும் கேதாரங்களில் கலந்துகிடக்

கும் பன்றிமுட்களோடு கூடியு மிருந்தது, ஆகாயத்தில் கண்கள்போல இருந் தும் தனித்தனியே யிருந்தும் அசைந்து விளங்கும் நக்ஷத்திரக் கூட்டங்களை யுடையதாயும் வனங்களிற் சஞ்சரிக்கும் வாயுவினாலே உதிராநின்ற புஷ்பங்க ளும் பழங்களும் பொருந்திய தருக்களை யுடையதாயு மிருந்தது. விருக்ஷங்க ளின் கோடரங்களில் வசிக்கும் கோட்டான்களின் சப்தத்தைக் கேட்டுக் காகங்கள் கூவும் அரவத்தை யுடையதாயும், கள்வர்கள் கையில் அகப்பட்ட சமீபகிராமத்து ஜனங்கள் கதறுதலாலே கொரேமுடையதாயு மிருந்தது. வனத்தில் வனம்போல சிறிதும் சப்தமில்லாமலும் நகரத்தில் நித்திரைசெய் யும் நகரமாயும் வனங்களில் வீசுங்காற்றை யுடையதாயும் கூண்டுகளில் அசை வற்றிருக்கும் பக்ஷிகளை யுடையதாயு மிருந்தது. குகைகளில் தூங்குகின்ற சிங் கத்தையுடையதாயும் குஞ்சங்களில் தூங்குகின்ற மான்களை யுடையதாயும் ஆகாயத்தில் பனிக்கூட்டங்களோடு கூடியதாயும் விபினத்தில் மௌனவிரதத் தோடு கூடியதாயு மிருந்தது. நீலமயமான மேகத்தின்மத்திய அழகையுடைய தாயும் காசசைல உதர உபமானத்தை யுடையதாயும், மட்பிண்டத்தின் மத் தியபாகம்போல நெருங்கியதாயு மிருந்தது. கட்கத்தினாலே வெட்டக்கூடிய தன்மையதாக இருளை மிகவும் புஷ்டியாக வுடைத்தா யிருந்தது, பிரளயகாலக் காற்றினாலே பொடியாகப் பண்ணப்பட்ட அல்லது சலிப்பிக்கப்பட்ட நீலகிரி போலச் சஞ்சலமாயும் பிரளயகாலப் பெருங்கடலினுடைய பெரிதான சேறு போலவும் பர்வத உதரம்போலவும் மிக நெருக்கமாயு மிருந்தது; தகிக்கப் பட்ட கட்டையினுடைய மத்தியபாகம் போலக் கறுத்தும், கனத்தும் சுழுப் தியிலிருக்கும் காடஞ்ஞானம்போல அழகுவாய்ந்தும் மூலாஞ்ஞானம் போல மிகக்கனமாயும் வண்டுகளின் பிற்பாகம்போலவும் சிறகுகள்போலவும் கறுத்து மிருந்தது. இவ்வாறுண்டா யிருக்கப்பட்ட பேரிருண்மயமாய பயங்கரமான அந்த இரவின்கண்ணே கற்கடி சஞ்சரித்துக்கொண் டிருக்கும்போது அந்தக் கிராதஜன மண்டலத்தையாளும் பூபாலன் மந்திரியோடும் வந்தான். மிகவும் தீரவடிவமா யிராநின்ற அந்த விக்கிரமனென்னும் மன்னவன் ஜனங்களெல் லாம் நித்திரைசெய்யும் நகரத்தைத்தாண்டிக்கள்வர்களைக்கொல்வதின்பொருட் டாக விஷமமான அக்காட்டை யடைந்தனன். அக்காட்டின்கண்ணே கற்கடி யானவள் தைரியசாலிகளாயும் அஸ்திரங்களை ஹஸ்தத்திற் றரித்தவர்களாயும் கிராமத்துக்கு வெளியிலிருக்கும் கிராமதேவதையாகியவேதாளத்தைப்பார்க்க வேண்டுமென்னும் முயற்சியோடும் சஞ்சரித்துக்கொண்டு வருகிற அந்த ராஜ மந்திரிகளைக்கண்டாள். கண்டபின் னக்கற்கடி சிந்திப்பதாவது எனக்கு ஆகா ரங் கிடைத்தது. அந்தோ! இவ்விருவரும் மகாமூடர். ஆத்மதத்துவத்தை யறி யாதவர். இவருடைய தேகம் இங்கே யிருப்பது பாரமாம். மூடர் இகலோ கத்திலும் பரலோகத்திலும் ஆன்மாவை யறியாமலிருப்பதால் அழிவின் பொருட்டும் துயரத்தின்பொருட்டும் ஜீவிப்பவராவர். முயற்சியினாலே கொல் லத்தக்கவரிவர். அனர்த்தத்தை வைத்திருத்தல் தகாது. தன்னுடைய யதார்

த்த சொரூபத்தையறியாத மூடருக்கு மரணமே ஜீவிப்பதைக் காட்டிலும் உயர்ந்ததாம். எவ்வாறென்றால், மரணமடைந்திடின் பாவமுண்டாதற்குக் காரணமில்லாமையினாலே உயர்வானது உளதாம். சிருஷ்டியின் ஆதியில் பதுமத்து உதித்த பகவான் ஆத்மாவை யறியாதமூடர் இம்சைசெய்யும் பிராணிகளுக்குப் போஜனம் ஆகுகவென நியமஞ்செய்துளார். ஆகையால் இன்று இவ்விருவரும் என்னாலேயே புசிக்கத்தக்கவராவர். இப்போதே புசிப்பேன். நிர்த்தோஷமாக அடைவுற்றபொருளை உபேக்ஷிப்பவர்கள் அமங்கலமுடையவர்களே. ஒருகால் இவ்விருவரும் ஆத்மஞானவடிவகுணத்தோடு கூடியவராயும் பெரிய ஹிருதயமுடையவராயு மிருக்கவுங்கூடும், அவ்வாறிருக்கின் அத்தகைய நரரைவிநாசஞ் செய்வதில் இயற்கையாகவே எனக்குப் பிரியமில்லை. ஆகையால் இவ்விருவரையும் யான் பரீக்ஷிப்பேனாக; மேற்கூறிய குணங்களோடு கூடியே யிருப்பார்களானால் அக்காலிவர்களை நான்பக்ஷியேன். குணமுடையவர்கள் எங்கும் என்னால் இம்சிக்கப்படமாட்டார்கள். வஞ்சனை செய்யப்படாத பேரானந்தத்தையும் கீர்த்தியையும் ஆயுளையும் மிகவும் விரும்பப்பட்டவன் குணங்களோடு கூடியவர்களை விரும்பப்பட்ட யாவற்றையுங் கொடுத்துப் பூஜிக்கவேண்டும். ஆத்மாவானது அவிநாசியாயிருத்தலால் எனதுதேகம் நாசத்தை யடையினும் குணத்தோடு கூடியவரை யான்புசிக்கவேமாட்டேன். சாதுக்கள் ஜீவிதத்தைப் பார்க்கிலும் சித்தங்களைச் சுகப்படுத்துகின்றார்கள். பிராணனைக் கொடுத்தேனும் குணமுள்ள சாதுக்களை இரக்ஷிக்கவேண்டும் குணவான்கள் சங்கமென்னும் வசீகரண ஔஷதத்தினாலே மிருத்தியுவும் மித்திரத்தன்மையை யடையும். இராக்ஷசியா யிருக்கப்பட்டயானும் குணசாலிகளை ரக்ஷிப்பேனென்றால் அக்குணசாலிகளை அன்னியனெவன்றான் ஹிருதயத்தில் நிர்மல முத்தாரம்போல ரக்ஷிக்கமாட்டான்.

இவ்வுலகத்தில் சிறந்தகுணங்களோடு கூடியவர்களாக யாவர்கள் சஞ்சரிக்கின்றார்களோ அத்தராதல சந்திரர்கள் சங்கத்தினாலே அத்தியந்தம் அன்பர்களைச் சீதளப்படுத்துகின்றார்கள். குணவான்களின் திரஸ்காரமே மரணமாம், குணவான்களைச் சேர்தலே ஜீவிதமாம், குணவான்களைச் சேர்ந்து ஜீவித்ததினாலே சொர்க்க அபவர்க்காதி பலமுண்டாம். ஆகையால் இவ்விருவரையும் ஏதாவது வினாவிளையாட்டால் யான்பரீக்ஷிப்பேன், இத்தாமரை யிதழ்போன்ற நேத்திரமுடைய இவர்கள் எத்துணைமாத்திர ஞானமுடையவர்களென்பதையும் யான் பரீக்ஷிப்பேன். ஆதியில் இவன் குணமுடையவனா அல்லது குணமில்லாதவனா குணலேசத்தோடேனுங் கூடியுள்ளவனா என்பதை விசாரித்துப்பின்னர் தன்னைப்பார்க்கிலும் அதிகதரகுணமுடையவனாவென விசாரித்துக் குணமில்லாதவனாயிருப்பின் அதன்பின்னர் நன்றாகச்சாஸ்திரத்திற் கூறப்பட்ட திருஷ்டியாலும் உபபத்திவசத்தாலும் யுக்திக்கிப்பொருத்தமானபடி தண்டிக்க யோக்கியனைத் தண்டனைசெய்க. தன்னைப்பார்க்கிலும் குணங்களால் அதிசயமுற்றவனாயினோ தண்டனை செய்யாதொழிக.

77-வது இராக்ஷசி விசார வருணனம் முற்றிற்று.

---

## 78-வது இராக்ஷசி வருணனம்.

இப்போது கற்கடியினுடைய பயங்கரமான சப்தத்தினாலும் பயத்தை யடையாத மன்னவன் கற்கடியைக் காண்பதும் மந்திரிவாக்கியத்தினாலே சாந்தி யடைந்த கற்கடியின் வினாத்தொடக்கமும் வர்ணிக்கப்படும். ஹேராகவ! பின்னர் அரக்கர்குலமாகிய ஆரண்யத்தில் போதசுகந்த மகரந்த மதுரத்தன்மை யாற் பூங்கொத்துப்போல் விளங்கும் அந்த ராக்ஷசியானவள் அவ்விருளிற்றானே மேகம்போலக் கம்பீரமாய்க் கர்ச்சனை செய்தனள். கர்ச்சித்த பின்னர் உண்டாகாநின்ற ஆலங்கட்டி இடிச்சப்தம்போலத் தன் கர்ச்சனையின் ஈற்றில் சப்தத்தினாலே ஹூங்கார பீஷணத்தன்மையை யுடையதேனும் அர்த்தத்தினாலே நிஷ்டூரமில்லாததான இவ்வசனத்தைக் கூறத்தொடங்கினாள்— போ! போ!! அதிகோரமான அடவி வடிவவியோம பதவிக்குப் பிரகாசத்தன்மை யானே சந்திரசூரியர்கள்போன்றும், மகா மாயாதமவடிவசர்வபூத ஆதார பீடபூதமான பாறையின் கீழிருக்குங்கோடரத்துள்ள கீடம்போன்றீர்! (இதனானே தான் ஆன்மாவை யறிந்திருக்குந்தன்மையையும் குறிப்பித்தனள்) நீவிர்யார்! புத்திக்குச் சாபல்யமான ஆன்மஞானத்தை யடைந்து பூஜ்யபுத்தியுடையீரா, அஃதில்லாமல் புத்திக்கு வியர்த்தத்தன்மையைச் சம்பாதித்துத் துர்ப்புத்தி யுடையீரா! நீர்இந்து என்வந்தீர் எனக்குணவாகுந்தன்மையை யடைந்தீர், இதோ கணத்தில் மரணமா யுபத்திரவப்படத்தக்கவராயினீர் எனக்கேட்ட அரசன் கூறுவதாவது:—போ! போ!! அற்பபூதமே! நீயார் சொல், நீ யெங்கே நிற்கின்றாய், நினது அற்பதேகத்தைக் காட்டுவாயாக, ஈவண்டின் இரைச்சல்போன்ற நினது கூச்சலுக்கு யார் அச்சமுறுவர், ஒருவருமஞ்சார். ஒன்றிலாசைப்பட்டவர்கள் சிங்கத்தைப்போலச் சர்வவேகத்துடனும் அர்த்தத்தில் மிகவும் வீழ்கின்றனர். ஆகையால் அதிபயங்கர முயற்சியோடுற்ற ஆத்திரகோபத்தைவிட்டு உன்னுடைய சாமர்த்தியத்தைக் காண்பி பார்ப்போம், ஹே நல்லவிரதத்தை யுடைய பூதமே! உனக்கு யாதுவேண்டும் கூறுதி யான் கொடுக்கின்றேன். நல்லவிரத விசேஷணம் நீ குறிப்பிட்ட ஆன்மஞான மடைந்திருக்குந் தன்மையை யானறிந்துகொண்டேனென்பதை விளக்குவதற்காம், கோபத்தோடுற்ற பயங்கரசப்தங்களினாலே எங்களைப் பயப்படுத்துகின்றாயா? அல்லது நீதான் பயப்படுகிறாயா? மாயையினாலே யாவருங் காணக்கூடிய சரீரகற்பனைச் சக்தியினாலே ஆகாரத்தோடும் சப்தத்தோடும் விரைவில் எதிரேவா பார்ப்போம்! உடனே தங்காரியத்தைச் செய்யாத சோம்பேறி கட்கு ஒரு சிறிதுமே தங்கள் நாசத்தைத்தவிரச் சித்திப்பதேகிடையாது என்று அரசன் அறைந்தபோது இவன் இரம்மியமாகக் கூறினானென்று நன்கு சிந்தித்து கற்கடியானவள் அவ்விருவருக்கும் விளக்கமாய்த் தான் தெரிவதற்காகவும் அவர்களுக்கு அதைரிய முண்டாக்குவதற்காகவும் பெருங்கர்ச்சனை செய்து பெரிது நகைத்தனள். அதன்பின்னர் அவளை அவர்கள் கண்டார்கள். அவள் செய்த சப்தமானது எட்டுத்திக்குகளையும் கிடுகிடாய்த்து விட்டது. அட்டகா

சஞ்செய்ததினாலே தோற்றிய தந்தங்களின் காந்தி மிகுதியாற் பெரிய ஆகிருதி யுடையவளாகக் காணப்பட்டனள். அப்போதவள் பிரளயகாலத்து மேகத்தி லிருந்து வீழாநின்ற இடியினுடைய உறைதலாலே பொடிபண்ணப்பட்ட பரு வதத்தின் தாழ்வரைபோலவும் தன்னுடைய கண்களென்னும் மின்னற்களா லேயும் சங்குவளையல்வடிவக் கொக்குகளாலேயும் ஆகாயத்தை விளக்கிக் கொண்டு மிருந்தனள். பேரிருளாகிய பிரளயகாலக் கடலின் வடவாக்கினிச் சுவாலையின் சுற்றுவளையம்போலக் கூறிய பிரகாசமிருந்தது. கர்ச்சனைசெய் யும் மேகமண்டலத்தின் ஆடம்பரத்தை யொத்துப் பெருத்துக்கறுத்து அவள் கழுத்திருந்தது. கடகடகடவென அவள் பற்களினின்று மூண்டான பயங்கர சப்த விசேஷத்தால் ஹாஹாஹா அதம் செய்யப்பட்டோம் என நிசாசரர், சோரர், புலி, நரி முதலிய பிராணிகள் இறந்தொழிந்தன. விண்மண்களைத் தன் நீலவர்ணத்தால் ஸ்தம்பம்போல் தாங்கிக்கொண்டு நின்றாள். லீலையினாலே உல்லாசந்தோடும் அசைந்துகொண்டு நின்றனள். மேலும் அவள் மேல்நோக் கிய கேசத்தை யுடையவளாயும் நரம்புநிறைந்த மேனியுடையவளாயும் கபில நிறத்தையுடைய கண்களை யுடையவளாயும் இருள் மயமான மேனியையுடைய வளாயும் இயக்கர்கள், அரக்கர்கள், பேய்கள் முதலிய துஷ்ட ஜந்துக்களும் துன்பும் வருமென்று பயமடையும்படியான நடையுடையவளாயும் தேகத் துவாரங்களிலே பிரவேசியாநின்ற சுவாசவாயுவின் பாங்காரத் தொனியால் பயங்கரஞ் செய்பவளாயும், உலக்கை, உரல், கொள்ளிக்கட்டை, பழையமுறம் என்பவற்றைச் சேகரித்தவளாயும் கற்பாந்தத்தில் பிளக்கப்பட்டிராநின்ற வைடூரிய சிகரஸ்தலம்போல் விளங்குபவளாயும் நகைப்புகளாலே தானவர்களை இம்சிப்பவளான காளராத்திரி யென்னும் சிவதூதி போன்றவளாயும் சர்ற்கா லத்திலே நீல ஆகாச அடவிமேகங்களோடுந் தேகத்தைத் தரித்துக்கொண்டு வந்ததுபோல யிருப்பவளாயும் பெரிதான மேகங்களாலே பூரிக்கப்பட்ட இருளிரவானது பெருந்தேகத்தை யெடுத்து வந்ததேபோல மிகுந்த புஷ்டி யுடையவளாயும், சேறு நிறைந்த பூமியானது சரீரத்தைத் தரித்துக்கொண்டு எழுந்து வந்ததே போன்ற ஆகிருதி யுடையவளாயும், சந்திர சூரியர்களோடு போர்புரிவதற்காக இருளாகிய ராகுவானது தனுவடைந்துவந்ததே போன்ற வளாயுங் காணப்பட்டனள். இந்திர நீலக்கற்போல மிகவும் சுத்தமாய்க் கறுத் துத் தொங்கிக் கொண் டிராநின்ற இரண்டு மேகங்களுக்குச் சமானமாயும் உரல் முதலிய மாலைக்கூட்டங்களால் அலங்கரிக்கப்பட்டும் மிகக்கறுத்து மிரா நின்ற இரண்டு ஸ்தன்னியங்களை யுடைத்தானவளாகக் கண்டனர். கரிக்கட் டையால் லாஞ்சிதம் பண்ணப்பட்டும் எரிக்கட்டைக்குச் சமானமாயும் கறுத் துப்பெருத்த காத்திரத்துடனும் அசையாத விருக்ஷங்கள்போன்றும் நரம்புகள் நிறைந்து விளங்காநின்ற புஜலதைகளை யுற்றும் பெரிதினும் பெரிதாயிராநின்ற அவளை அவ்விருவரும் கண்டனர். அவளைக் கண்டபின் அம்மகா வீரர்களிரு வரும் சிறிதும் கலங்காதவர்களாகி நின்றவண்ணமே யிருந்தார்கள். சத்தியத்

தையும் அசத்தியத்தையும் பகுத்துணர்ந்த விவேகிகளினுடைய சித்தத்தை மிக மயக்குதற் குரியவஸ்து ஒன்றுமில்லையன்றே ! நீ பெரியவளாக இருப்பின் அற்பகாரியத்தில் இவ்வளவு படபடப்பு வேண்டியதில்லை யென்பதாகப் பரமசாந்தத்தோடும் சாமத்தால் சமாதானப்படுத்த வேட்கையுற்ற மந்திரி கூறுவதாவது ஹே மஹாராக்ஷசியே ! நினக்கு நீவிரும்பியது சித்திப்பதில் நிரதிசய சொரூபமான இக்கோபம் யாதின்பொருட்டோ ? வாக்குமாத்திரத் தானே லபிக்கும்படியான ஆகாரலாபவடிவ காரியத்தில் குரோத சாகசாதி கட்குயாதொரு பிரயோஜனத்தையுங் காணேமே, நீ சின்னவளாக இருப்பின் நாங்கள் பயப்படவும் மாட்டோமே, அற்பர்கள் அற்பமான காரியத்திலும் தங்கள் அற்பத்தன்மை தோன்ற அதி சம்பிரமத்தோடும் ஆரம்பிக்கின்றனர். என்று மந்திரிகூறி சாமத்தால் மீண்டும் முதற்கற்பத்தையே பின்பற்றிக்கூறுவதாவது—கோபத்தோடு கூடிய இந்த ஆடம்பரத்தை விடுதி, இந்த ஆடம்பரமானது நினக்கு அழகாக இல்லை, தங்களுடைய காரியத்தைச் சாதிக்க முயலும் புத்திமான்கள் விஷயங்களில் சாந்தமாக முயலுகின்றார்கள்; அதாவது மதிமான்கள் சாமத்தாற் சாதிக்கக்கூடிய பொருளில் தண்டத்தை யனுசரிக்க மாட்டார்க ளென்பதாம். மீண்டும் இரண்டாவது கற்பத்தைப் பின்பற்றி நினது தண்டமுயற்சி வீணாகுமென மந்திரிகூறுகின்றார். ஹே அபலே! கொசு போன்ற நின்னையொத்த ஆயிரக்கணக் கானவர்கள், எங்களுடைய தீரத்தன்மையாகிய காற்றினாலே துரும்பு சருகுகள்போலப் பறந்தோடிப் போவர்கள். ஆயின் எங்ஙனம் தான் விரும்பியபொருள் சித்திக்குமெனின், கோபாதிகளை வாயிலாக வைப்பதை விடுத்துச் சமத்தோடுந் தெளிவோடுங் கூடியபுத்தியினாலும் யுக்தியினாலும் அறிஞர்கள் விவகரிப்பதே போல தக்கபடி அறிவுடையோர் விவகரித்துத் தங்காரியத்தை முடிப்பர். காரிய சித்தியின் சம்சயமிருப்பினும் அநாதி நியதிசித்தமான சாம உபாயத்தை விடக்கூடாதென்றால், அது நிச்சயமாகி யிருந்தவழி யென்ன சொல்லவேண்டிய துளது, தானாகவே விவகாரத்தினாலே காரியம் சித்திக்குக அலது சித்தியாதொழிக, மகாநியதி யிவ்வாறே யிருக்கும், மயங்கியவனுக்குத் தக்கதா யிராநின்ற கோபத்திற்கு உன்பாலிடமேது கூறுதி, ஆயின் எங்ஙனம் சாமத்தாற்சித்திக்குமெனின், கேட்டி, நினது அபிப்பிராயமென்ன கூறுதி, விரும்பிய நினக்கு என்னவேண்டுங் கூறுதி, யாசித்தவன் கனவினும் எங்கள் முன்பு விரும்பியபொருளை யடையாமற்போனதே கிடையாது. இவ்வண்ணம் அமைச்சன் அறைந்ததைக்கேட்ட ராக்ஷசி சிந்திப்பதாவது:—அகோ ! அற்புதம், சிங்கம் போன்ற இவர்தம், தைரியமும் புத்திபலமும் நிருமலமான ஆசாரத்தோடு கூடியிருக்கின்றது. இவ்விருவரையும் யான் சாமானியமாக எண்ணமுடியாது, என்னை இவர் தஞ் சமத் திருதியானது விசித்திரமாக இருக்கிறது. வாக்கினாலும் வதனத்திற் காணப்பட்ட தெளிவு முதலிய குறிகளாலுமே உள்ளே யிருக்கும் தத்துவ நிச்சயமானது குறிப்பிக்கப் படுகின்றது. வசனவக்த்ர ஈக்ஷணவாயிலால் மதி

மான்களுடைய கருத்துகள் நதிகளின் நீர்கள் சங்கமத்தா லொன்று சேர்வதே
போல பரஸ்பரம் ஒன்றாக இருக்கின்றன. என்னுடைய அபிப்பிராயமானது
இவர்களாற் பெரும்பாலும் நன்றாக அறியப்பட்டது. இவர்களுடைய கருத்
தும் என்னால் இனிதுணரப் பெற்றது. என்னுலிவர்கள் கொல்லத்தகாதவர்கள்
தாமாகவே அவிநாசியாக இருப்பவர்கள், இவர்கள் ஆத்மஞானிகளாக இருப்
பார்களென் றெண்ணுகின்றேன். பொய்ம்மைத் துணிவானே ஜீவனமனமரண
ங்களைத் துணிந்து தள்ளும்படியான ஆத்மஞானமானது இல்லாதிருக்கும் பக்ஷத்
தில், மரணத்தின் கண்ணே இவ்வாறு பயமற்றிருக்கும்படியான புத்தியுண்டாக
மாட்டாதன்றோ ? ஆகையால் இவ்விருவர்களையும் சிறிது எழுந்த சந்தேகங்
களைப்பற்றி இனிதாக வினவுவேன். அறிஞரையடையப் பெற்று எம்மூடர்கள்
வினவி ஐயம் தெளிந்து கொள்ள வில்லையோ அம்மூடர்கள் நராதமர்க ளாவர்
கள்.—என இவ்வண்ணஞ் சிந்தித்துக் கேட்பதற்கு அவசரத்தைப் பெற்றுப்
பின் அகாலத்திலுண்டான பிரளயகால மேகம்போலக் கர்ஜிக்கும் பரிகாச
முதலியவற்றை யடக்கிக்கொண்டு இவ்வாறு கூறினாள்,—ஹே பாபமற்ற தீரர்
களாகிய ! புருஷோத்தமர்களே ! நீங்களிருவரும் எத்தகையர்க ளென்பதை
எனக்குக் கூறுவீர்களாக, தெளிந்த சித்த முடையவர்களுக்கு தரிசனத்தினு
லேயே மைத்திரியான துண்டாகின்ற.தன்றோ ?—எனக்கேட்ட மந்திரிகூறுவ
தாவது.—ஹே ராக்ஷசியே ! வேடர்களுக் கெல்லாம் இவன் அரசனுவன் இவ
னுக்குயான் மந்திரியா யிருக்கின்றேன். நின்னைப்போன்ற இம்சைசெய்யும்
ஜந்துக்களை இரவிற் பரிசோதனை செய்து நன்றாக நிக்கிரகிக்கும் பொருட்டு
முயன்றுவந் திருக்கின்றோம். இரவும்பகலும் மன்னவனுக்கு துஷ்டப்பிராணி
களை நிக்கிரகஞ்செய்வதே தர்மமாம். சுதர்மத்தை எவர்கள் தியாகஞ்செய்கின்
றார்களோ அவர்கள் விநாச அக்கினிக்கு விறகாவர்கள்:—என்று கூறியதைக்
கேட்ட கற்கடியானவள். இனிச் செய்யப்படும் வினவிற்கு உபோத்காதம்
வரைந்துகொண்டு கூறுவதாவது—ஹே மன்னவனே ! துஷ்ட மந்திரியை
யுடையவன் நல்ல அரசனுகான், நல்ல அரசனுக்கே நல்ல மந்திரி கிட்டுவன்.
நல்ல மந்திரிக்கே நல்ல அரசன் கிடைப்பன். அரசன் முதலில் நல்ல மந்திரி
யால் மிகுந்த விவேகத்தை யடைவன். அதனுல் மிகவும் சிறப்பையுஞ் செறி
வன், எவ்வாறரசனுளனே அவ்வாறே பிரஜைகளும் ஆம். சமஸ்தகுண ஜாலங்
களுக்குள்ளும் அத்யாத்ம ஞானமே உத்தமோத்தமமாம். அந்த பிரஹ்ம
ஞானத்தையடைந்த ராஜாவே ராஜாவாவன், ஞானத்தையடைந்த மந்திரியே
விசாரரகசியங்களை உணர்ந்தவ னுனவன். "எந்தக் கருமமானது பந்தத்தை
யுண்டாக்காதோ அதுவே நல்லகருமமாம், எதுமோக்ஷத்தைக் கொடுக்குமோ
அதுவே வித்தையாம், அந்நிய கருமங்களெல்லாம் ஆயாசத்தின் பொருட்டா
வனவாம். அந்நிய வித்தைகள் சிற்பசாமர்த்தியம் போன்றனவாம்" என்று
கூறியிருக்கின்றார்கள். பிரபுத் தன்மையானது சமதிருஷ்டித் தன்மையின்
அதீனமா யிருத்தலின் ஆயுள் நெய்யென்பது போல அவ்வுருவதாக ஆரோ

பித்தலால் சமதிருஷ்டித் தன்மையாம். வித்தைகளுக்குள் ராஜாவா யிருக்கும் ராஜவித்தை யென்னும் ஆத்மவித்தையினுலே அச்சமதிருஷ்டியு முண்டாம். அதனையே யாவனறிய வில்லையோ அவன் மந்திரியுமாகான், ராஜாவுமாகான்; நாயின்பாலும் நாய்க்கறிப் போர்பாலும். அறிஞர்கள் சமதிருஷ்டியை உடைத்தா யிருப்பர்கள்—என ஸ்ரீ பகவானுங் கூறியுள்ளார். நீங்கள் அந்தஞானத்தையடைந்து சாதுக்களாக இருப்பீர்களே யானுல் அதற்குத்தக்க மேன்மையையே யடைவீர்கள். அவ்வாறின்றேல் எவ்வாறு அரசனே அவ்வாறு பிரஜைகளும் ஆம், என்று முற்கூறி யிருத்தலின் அரசன் மூர்க்கனுயின் பிரஜைகளும் மூர்க்கராதல் விலக்கக் கூடாமையின் அவர்களுக்கும் அனர்த்தத்தையே கொடுத்துக்கொண்டிருக்கும் உங்களை யான் பக்ஷித்தே விடுவேன், துஷ்டர்களைப் பக்ஷிப்பது எனதியற்கையாகும். பெற்றோர்களுக்குப் பிரீதிவிஷயங்களாய ஹே பாலகர்களே! ஒருபாயத்தினுலே என் பக்கத்தினின்றும் நீங்கள் தப்பித்துக் கொள்ளுதல் கூடும், மிகவும் சாரமான என்னுடைய வினுப்பஞ்சரத்தை விசாரம் மிகுந்த புத்தியினுல் சேதிப்பீர்களாயின் தப்பலாம். ஹே பார்த்திபனே! நீ நான் கேட்கப்போகும் அர்த்தங்களைக் கூறுவாயாக அல்லது ஹே மந்திரியே! நீயாவது கூறுவாயாக. அது விஷயத்தில் அத்தியந்தம் யான் வேண்டிக்கொள்பவளாக இருக்கின்றேன். யான் விரும்பிய அர்த்தத்தைப் பரிபூரணஞ் செய்யவேண்டும். கொடுக்கின்றேனென்று பிரதிக்ஞை செய்த அர்த்தத்தைக் கொடாமலிருக்கின்ற எவன்தான் மிகவும் க்ஷயஞ்செய்யும் தோஷத்தால் பாதிக்கப்படான், எத்தகையவன்தான் இத்தோஷத்திற்குத் தப்பமுடியும்? ஒருவனுமே தப்பமுடியாது. ஆகையால் கொடுக்கின்றேனென்று முன்னர் அங்கீகரித்ததை நீங்களிருவரும் நிறைவேற்றவேண்டும்.

78-வது இராக்ஷசி வருணனம் முற்றிற்று.

---

## 79-வது இராக்ஷசி வினு வருணனம்.

இப்போது கர்க்கடியானவள் ஆத்மஞானமில்லாதவர்களுக்கு வஜ்ஜிரம் போன்றனவும் ஆத்மஞானிகளுக்கு மனோரம்மியங்களும் ஆகிய எழுபத்திரண்டு வினுக்களை முறையாக வினவுதல் வர்ணிக்கப்படும். ஹே ராகவ! ராக்ஷசி இவ்வண்ணம் இயம்ப அதைக்கேட்ட மன்னவன் கேள்விகளைக் கேட்கலாமென்று ஆக்ஞைசெய்தவுடனே கேள்விகளைக்கேட்க ஆரம்பித்தனள். அக்கேள்விகளை நீ கேட்பாயாக. (கேள்விகளின் அபிப்பிராயங்கள் மேல்வெளியாகுமென்பதாய் இங்கு இதை மிக விஸ்தரிக்கவில்லை) உபாதிபேதத்தால் அநேக சங்கியையுடைய ஏகமான கடல்போன்ற துர்லக்ஷிய அணுவினுள்ளே அபரிச்சேதத்தால் கடலின்கண்ணே புற்புதங்கள்போலப் பிரஹ்மாண்டலக்ஷங்கள் எழுந்தழியும். ஆகாசமாயும் அசூன்ய அனுகாசமாயிருப்பது யாது? லௌகிகப்பிரசித்தம் சிறிதுமில்லாமலிருந்தும் தத்துவவித்துப் பிரசித்தம் சிறிதேயாவது யாது? நானேயாயும் நீயா யிருப்பது யாது? நீயேயாயும் நானுயிருப்பதுயாது? நடர்

தும் நடவாதது எது? கதிநிவர்த்தியைச் செய்யாதிருந்தும் நிற்பதெது? சேதன மாயினும் யாது கற்போலச் சைதன்னியப் பற்றுக்கோடாகாது? சிதம்பரத் தில் விசித்திரகாரியத்தைச் செய்ததெது? வன்னித்தன்மையை விடாமலிருந்தே எவ்வன்னி சுடாமலிருக்கின்றது? வன்னியல்லாத எதனிடத்தினின்றும் நிரந் தரம், மன்னனே! வன்னியுண்டாகின்றது? சந்திரன் அருக்கன் அக்கினி நக்ஷத் திரம் இவைகளாக ஆகாமலிருந்தும் அவினாசமாகயாது பிரகாசிப்பிக்கின்றது? நேந்திரத்திற்கு விஷயமாகாத எதிலிருந்து பிரகாசமானது இனிதுண்டாகின் றது? லதை குன்மம் அங்குரம் முதலியவற்றிற்கும் பிறவிக்குருடுகளுக்கும் மற் றைய இந்திரியங்கள் வெளிப்படாமலிருக்கப்பட்டவைகளுக்கும் உத்தமமான பிரகாசம்யாது? அம்பராதிகளை ஜனிப்பிப்பதுயாது? சத்தைக்குச் சத்தையைக் கொடுப்பது யாது? உலகமாகிய ரத்தினத்தின் கோசமாயிருப்பது யாது? எம் மணிக்கு உலகம் கோசமாயிருக்கின்றது? எவ்வணு இருட்டை பொளிர்விக் கின்றது? எவ்வணு இருந்தும் இல்லாமலும் ஆம்? எவ்வணு அதூரத்திலும் தூரத்திலும் ஆம்? யாது அணுவேயாயிருந்தும் மகாகிரியாம்? நிமிஷமாயிருந் தும் யாது கல்பமாயிருக்கின்றது? கற்பமாயிருந்தும் யாது அற்பநிமிஷமா யிருக்கின்றது? பிரத்தியக்ஷமாக விளங்கிக்கொண்டிருந்தும் மூடதிருஷ்டியினாலே அசத்து ரூபமாயிருப்பது யாது? இவ்வாயுவாயும் யாது வாயுவல்ல? சத்தமா யும் யாது சத்தமே யாகாது? சர்வமாயும் யாது சிறிதுமாகாது? யானும் யானாகாதது யாதாம்? முன்னர் அனேக ஜன்மங்களிற்றனது ஆத்மாவாகவே லப்தமாயிருந்தும் அஞ்ஞானத்தினாலே மறைபட்டு அகப்படாதது போன் றிருந்து பிரயத்தினசதங்களால் பிராப்தமாவது யாது? எங்கும் நிறைந்திருந் தும் லபியாதது யாது? சொஸ்தமாக ஜீவித்துக்கொண்டிருக்கும் யாது தன் னைத்தானே நாசஞ்செய்ததுபோல ஆக்கிவிடுகின்றதோ அதுயாது? எந்த அணுவினாலே மேருகிரியானது தன்னுட்படுத்தப்படுகின்றது? எவ்வணுவி னாலே திரிபுவனம் திருணம்போலாக்கப்படுகின்றது? எப்பரமாணுமாத்திரத்தி னாலே சதயோஜனை விஸ்தாரம் பூரிக்கப்படுகின்றது? யாது அணுவாகவே யிருந்துகொண்டே சதயோஜனை விஸ்தீர்ண இடத்திலுமடங்கவில்லை? எதனது பார்வை மாத்திரத்தானே உலகபாலகன் கூத்தாடப்பண்ணுகின்றான்? எவ் வணுவினுதரத்தில் ஆச்சரியப்படும்படி பர்வதக்கூட்டங்களிருக்கின்றன? தன் னணுத்தன்மையைவிடாமலே எவ்வணுவானது மேருவினும் தூலதர ஆகிருதி யையுடைத்தா யிருக்கின்றது? மயிர்நுனியில் நூற்றிலொருபங்கு வடிவமான எவ்வணுபர்வதத்திற்குச் சமானமாக உன்னதமாயிருக்கின்றது? எவ்வணுவா னது பிரகாசதமங்களும் பிரகடனப்படும்படியான தீபமாயிருக்கின்றது? எவ்வ ணுவின் உதரத்தில் விருத்தியவச்சின்ன ஞானலவங்கள் யாவும் நிறைந்திருக்கின் றன? எவ்வணு அத்தியந்தம் மதுராதி ரசசூன்யமாயிருப்பினும் இரவும்பகலும் பிகரசமுடையதாக விருக்கின்றது? எவ்வணுவினாலே யாவும் நன்றாகவிடப்பட் டபோதினும் யாவற்றையுமங்கீகரித்திருக்கின்றது? தன்னை ஆச்சாதனம்செய்ய

அசத்தமாயிருக்கும் எவ்வணுவினாலே ஜகத்தானது மறைக்கப்படும்? லயமாவ தாலே மறைந்திருந்தபோதினும் இவ்வுலகமானது எவ்வணுவினுடைய சத்தை யினாலே சத்தையைப்பெற்றும் மீண்டும் சர்க்கத்தில் ஜீவித்தலும் ஆம்? எந்த அணுவிற்கு அவயவம் ஒன்றும் உண்டாகாதிருப்பினும் ஆயிரக்கணக்கான கை, கால், கண் முதலன உளவாம்? யாது நிமிஷமாயினும் மகா கல்பமாயும் கற்ப கோடி சதங்களாயும் இருக்கின்றது? ஜகங்கள் அனுற்பன்னங்களாயினும் பிரள யத்தில் பீஜத்தில் விருக்ஷங்கள்போல எவ்வணுவின்கண்ணே யிருக்கின்றன? சிருஷ்டிகாலத்திலே நிரவயமாய் அவ்வியக்தமாய் பீஜபரம்பரைகட் கவதியா யிராநின்ற சர்வபீஜங்களும் ஜகத்வடிவமாக வெளிப்பட்டு விளங்கியபோதினும் எதன்கண்ணே எப்போதுமே எழுகின்றனவேயில்லை? இவ்வண்ணம் பிரளய மும் எந்த நிமிஷத்திலே பீஜத்தினுள்ளே அங்குரம்போல உள்ளே யிருக்கின் றது? பிரயோஜனமாம் அவ்வக்காரகப் பிரவர்த்தனத்தையும் ஆண்டுக் கர்த் தாத்தன்மையாம் தொழிலற்றிருக்குந்தன்மையாலே காரகவியாபாரத்தை நடத்துதலையும் பற்றாதிருப்பினும் யாது கர்த்தாவாம்? (பிரயோஜன கர்த்திருத் தன்மை கிரியாபல நிஷ்பாதகத்தன்மை யெனினும் ஆம்.) போக்கிய சித்தி யின்பொருட்டுத் திருஷ்டாவான தான் தன்னைத்தானே திருசியமாக்கி அந்தத் திருசியத்தை வெளிப்பார்வையானே பார்ப்பதாய் நேத்திரமில்லாததாயும் தன் வடிவத்தை யாது பார்க்கின்றது? அகண்டிதமாயிராநின்ற தன்னிடத்தில் திரு சியம் வந்தணுகாமலிருத்தற்பொருட்டு ஞானத்தினாலே உட்கழியுந் திருசிய முடைத்தாய்ப்பார்த்து முன்பாக திருசியத்தை யாது பார்ப்பதில்லை? திருஷ் டாவாகிய தன்னையும் தரிசனமாகிய விருத்தியையும் திருசியத்தையும் கண்ணுக் குக் கடம்போலப் பிரத்தியக்ஷமாக யாது விளக்குகின்றது? அந்த திருஷ்டா தரிசனம் திருசியம் என்னும் மூன்றும் பொன்னின்கண்ணே கங்கணாதிகள் போல எதனால் விக்ஷிப்தங்களாய் விக்ஷேப சக்தியினாலே வெளிப்படுத்தப்படு கின்றன? பெரிய நீர் நிலயத்தினின்றும் அலைமுதலானவை சிறிதுந் தனித்திலா தனபோல எதனினின்றும் ஒருசிறிதும் வேறாகவில்லை? பெருங்கடலில் சிறு தரங்கமொப்ப எதனதிச்சையினாலே தனித்தும் இவை உளவாம்? தேசகாலாதி யினால் வரைவுபெறாது ஏகமாய் அஸ்தூலத்தன்மையால் அசத்துல்லியமாய்ச் சத்தாயிருக்கும் எதனினின்றும் மகாஜலத்தின் நிகழ்ச்சியேபோல துவைதமும் பிருதக்காக இராது? திருஷ்டா தரிசனம் திருசியம் என்னும் வடிவமாய் முறை யற்றுத் தோற்றிமறையுந் தன்மையதாயிருக்கும் மூன்றுலகத்தையும் உள்ளே பீஜம்போல இருக்கும்படியாக வைத்துக்கொண்டு யாது முக்காலங்களையுங் கடந்து எக்காலும் நிற்கும்? சென்றனவும் இருப்பனவும் ஆகிய உலகவிருந்தங் களின் இலகும் பெருமயல், பீஜத்தினுள்ளே மரம்போலச் சமமாயிருக்கும், எதனுள்ளே நித்தியமிருக்கின்றது? திருஷ்டாந்தம் இரண்டால் தார்ஷ்டாந்தி கத்தில் விசேஷங் கூறப்படுகின்றது. விரைவில் விரை மரமாவதேபோலவும் மரம் விரையாவதேபோலவும் யாது தானாய் ஏகமாய்த் தள்ளத்தகாத்தாய் நிர்

விகாரமாயிருப்பினும் ஜகத்விகாரவடிவமாய் உதயமாம்? ஹே இராஜன்! எதனது திடத்தன்மையையபேக்ஷித்து மகாமேருவானது தாமரைத்தண்டின் நூலைப்போல அத்தியந்தம் அதிடதமமாம்; அல்லது எதனது சங்கற்பத்தாலே தாமரைநூலும் மகாமேருவிற்கொப்பாம்? அத்தகைய எவ்வஸ்துவினுதரத்தில் மேருமந்தரகோடிகள் உளவாம்? அநேக சேதனங்களோடு கூடியிராநின்ற இந்த விசுவமானது எதனுற் சிருஷ்டிக்கப்பட்டு விஸ்தாரமாயிருக்கின்றது? நீயும் வாஸ்தவமான எவ்வுருவத்தை யடைந்து சகலவிவகாரங்களிலும் அதிசயமாக விவகரிக்கின்ருய், பிரஜைகளை ரக்ஷிக்கின்ருய், கொல்லவேண்டியவர்களைக் கொல்லுகின்ருய்? ஆகவே சிருஷ்டியாதி நிர்வாகங்கள் யாவருக்கும் எந்நிமித்தகமாயாம்? எதனைத் தரிசித்தலாலே நீ நின்மலஞானரூபனுயிருந்து அவ்வஸ்துவினும் வேறுபடாமலிருக்கின்ருய், அல்லது அவ்வஸ்து ரூபமாகவே எப்போதும் துணிவுடனுகின்ருய்? அவ்வஸ்துவை எனக்கு நின் மரணம் விடுபடுதற்பொருட்டுக் கூறுவாயாக. சந்திரனைப் பனிக்கூட்டமாகிய மலினம் மறைப்பதேபோல இருள்வடிவாய எனது சமுசயம் மேற்கூறிய வடிவமாயிருந்துகொண்டு மனத்திலுள்ள ஆத்மஞானப் பிரகாசத்தைப் பெரிதும் மறைக்கின்றது. இதனை மூலாஞ்ஞானத்தோடுகூட நன்ருக நாசஞ்செய்யவேண்டும். எவரது முன்னிலையில் மூலாஞ்ஞானசகிதமாய்ச் சர்வ சம்சயங்களும் போக்கடிக்கப்படவில்லையோ அவர் எவ்விடத்திலும் பண்டித சப்தயோக்கியதையையடையவேமாட்டார். இவ்வண்ணம் கிரமமாகக் கூறப்பட்ட பரமசாந்தியைக்கொடுக்கும் அதி லகுதரமான எனது இவ்வையத்தை நன்மதியுடைய நீங்கள் நீக்காமற்போவீர்களாயின் அக்கால் ராக்ஷசஜாதியையுடைய என் தேகத்தின் ஜாடராக்கினிக்கு எரிதரும்பென்னும் பக்ஷணமாக ஒருகணத்தில் ஒரு தடையுமில்லாமலாகி விடுவீர்கள். ஆத்மாவை யுணராமல் தேகமாத்திரத்தில் ஆத்மபுத்தியை வைத்துக்கொண்டிருக்கப்பட்டவர்கள் அரக்கர்கட்கு அன்னமாந்தன்மையை நீக்கிக்கொள்ளமாட்டார்கள். கேவலம் உங்களுக்கே அனர்த்தம் வருமென்று எண்ணவேண்டாம்; மற்ருே உங்களுடைய தேசமுழுவதற்குமே கேடுண்டாம். உங்களை விழுங்கிய பின்னர் பெரிய உதரத்தோடுகூடிய யான் ஒரு கணத்திலுங்களுடைய ஜனபதமண்டல முழுவதையும் விழுங்கிவிடுவேன். மேற்கூறியவண்ணமாய வினுக்களுக்கு விடைகூறின் நீங்கள் உயிர்தப்பிச் சர்வப் பிரஜைகளையும் ரக்ஷித்து நல்ல ராஜத்தன்மையையும் மந்திரித்தன்மையையும் அடைவீர்களென் றெண்ணுகின்றேன், மூர்க்கர்களாய் ஆத்மாவையுணராதவர்களானவர்கள் ராஜமந்திரிகளாயிருந்து மிகுரசத்தோடும் மிகவும் அதிசயமாகப் போகங்களில் மூழ்குதல் மிக்கக்கெடுதலின்பொருட்டே ஆம். யானுங்களைப் பக்ஷியாவிடினும் இவ்விராஜ்ஜியபோகத்தினீற்றில் அவசியம் நரகமேயுண்டாம். அதி விஸ்தாரமாயும் அதி கெம்பீரமாயும் மேகனுத கர்ச்சனையைப்போல் மிகவும் விளக்கமாயும் உச்சமாயுமிருக்கும் வாக்கினுலே அந்த ராக்ஷசி மேற்கூறியபடி கூறிவிட்டு வெளிப்பார்வைக்கு அதிவிகட ஆகி

ருதியை யுடையவள்போற் றேன்றினும் உள்ளே சுத்தமாய்ச் சரற்காலத்து நிர்மல மேகமண்டலம்போல மௌனமுற்றிருந்தனள்.

79-வது இராக்ஷசி வினவருணனம் முற்றிற்று.

---

## 80-வது வினவைப் பேதித்தல் வர்ணனம்.

இப்போது முதலில் மந்திரியானவர் வினக்கூட்டங்கட்கு முறையாயும் முறைமாறியும் நியாயமாக அதி சூக்ஷ்மமான யுக்திகளோடும் சமாதானித்தல் வர்ணிக்கப்படும். ஹே ராகவ! பேரிருளிரவின்கண்ணே பெரியகாட்டில் பெரிய ராக்ஷச கன்னிகையால் மேலேசொல்லிய பிரகாரமாகப் பெரிய வினக்களை வினவியபோது பெரிய மந்திரியானவர் விடைகூறத் தொடங்கினர். மேகம்போலும் காந்தியையுடைய ஹே ராக்ஷசியே! கேட்பாயாக. உன்னுடைய வினக்களை நல்ல யுக்திகளினுலே சிங்கமானது மதம்பிடித்த கஜேந்திரனைப் பிளப்பதேபோல முறைமுறையாகப் பிளக்கின்றேன் கேள். எல்லா வினக்களையும் சிதிலஞ்செய்தற்பொருட்டு எல்லா வினக்களின் அபிப்பிராயத்தை முதலிற் கூறக்கேட்பாயாக. ஹே சுவர்ண கமலம்போலப் பிங்கல ஈக்ஷண முடையவளே! வினக்களை யுணர்பவர்க்கு ஞானத்தைக் கொடுக்கத் தக்கதான நீகூறிய இவ்வாக்குமுறையால் உன்னுல் பரபான்மாவே சொல்லப்பட்டது. எவ்வணுவில் கடலிற்போல என்னும் முதல்வினவிசேடியத்தில் அனு சப்தப் பிரயோகத்தின் அபிப்பிராயத்தைக் கூறக்கேட்பாயாக. வாக்கினுல் வசனிக்க முடியாமலும் மனமுதலிய ஆறிந்திரியங்களா லறியமுடியாமலும் இருத்தலின் அணுவாம். இவ்வண்ணம் சின்மாத்திரமே வடிவமான அணுவானது ஆகாயத்தினும் அதிசூக்ஷ்மமாக விருக்கின்றது, இங்ஙனமே "அணு, பந்தா, விததம், புராணம், என்பதாதி சுருதிகளிற் பிரசித்தமாம். உள்ளே பிரஹ்மாண்ட லக்ஷங்கள் எனவினவிய அங்கிசத்திற் கூறக்கேட்டி, பரமமாய் அறிவாயிலங்கும் அணுவினுள்ளே விரையினுள்ளே தருவிருப்பதே போலச் சத்தைப்போலாதல் அசத்தைப்போலாதல் இந்த உலகஸ்திதியானது இலங்குகின்றது. இதனுல் எவ்வணுவின்கண்ணே விரையில் மரம்போல ஜகங்களிருக்கின்றன என்னும் வினவிற்கும் விடையிறுத்தியதாயிற்று. சத்துப்போலாதல் அசத்துப்போலாதல் என்னுங் கூற்றுனே குறிப்பிக்கப்பட்ட சத்தைக்குச் சத்தையைக் கொடுப்பதியாது என்னும் வினவிற்கு விடையைக் கேட்பாயாக. சத்து கிஞ்சித்து யாவற்றையு மறிந்து எல்லாவடிவமாயும் சுயமாக விருக்கின்றயடியாற் சத்தாம். அதன் வடிவமாக விருத்தலினுலே அதன் வாயிலாய்ச் சர்வ பதார்த்தங்களும் சத்தையைப் பெறுகின்றன. எல்லாவஸ்து சத்தைகளும் அனுபவசத்தையின் அதீனங்களாதலின் அச்சத்தையை அந்நிய அதீனமுடையதெனின் வரம்பின்றியோடல் வந்துசேர்தலினுல் தானே சித்தித்த சத்தையை யுடையதென்னும் அனுபவத்தானே எல்லாப்பொருள்களும் சத்தையைப் பெற்றிலங்குகின்றன. விண்ணும் விண்ணன்றேதுவென்னும்

வினாவின் றாற்பரியத்தை விளம்பக்கேட்டி, பாகிய சூனியத்தன்மை யுண்மை யின் ஆகாசமாம். சித்துத் தன்மையோடு கூடியிருத்தலின் அனாகாசமாம். சிறிதில்லா திருந்தும் சிறிதேயாவது யாது — என்னும் வினாவினுத்தரத்தை வினவுதி. இந்திரியங்களா லறியப்படாததால் சிறிதன்றாம்; அதாவது இந் திரியங்களா லறியப்படும் அற்ப திருசியமே யல்லவாம், அவ்வணுவே முடிவற் றதாம். சிறிதாயிருந்தும் சிறிதல்லாதது யாது ஆத்மபாவத்தில் அது என வினாப்பொருள் செய்யினும் பாதகமில்லை, என்னை, தானே சர்வான்மகமா யிருத்தலின் தன்னையே சாக்ஷாத்கரித்ததால் யாவற்றையும் விழுங்கியபோது அதுவே சிறிதாம். ஆன்மாவுக் கயலாக யாதொன்றுமே எஞ்சுவதில்லை. ஆன்மாமாத்திரமிருக்கும். அதனால் கிஞ்சித்தாகியும் கிஞ்சித்தன்றாம். பல வாயும் ஒன்றாம் என்னும் வினாத் தொடங்கிய அபிப்பிராயத்தைக் கூறு வேன் ஏகமேயாய சித்தணுவிற்கு நீ கூறிய அநேகத்தன்மை தோற்ற மாத்திரமேயாம், வாஸ்தவமன்றாம், பொய்யேயாம். இதனாலே கங்கணாதிகள் பொன்னிற்போலவென்னும் வினாவிற்கும் விடைவிடுத்ததேயாம். எங்ஙனம் பொன்னிற் கடகாதி இல்லாமலே யிருந்து வாளாதோற்றுகின்றனவோ அங் ஙனம் பரத்தின் கண்ணுமிதுவாம். எவ்வணுதமப்பிரகாசமாம் என்பதாதி வினாக்களில் மீண்டும் மீண்டும் அணுசப்தப் பிரயோகத்திற்கும் மேற்கூறிய அபிப்பிராயமேயாம். சூக்ஷ்மமாயிருப்பதாலும் இவ்வணுவானது குறிக்கப் படாததாய்ப் பரமாகாசமாயிருக்கும். இது சர்வான்மகமாயிருப்பதாயினும் மனம் முதலிய ஆறிந்திரியங்கட்கும் அதீதமா யிருக்கின்றது. எவ்வணு இருக்கின்றதாயினும் இல்லாததாம் என்னும் வினாவில் இல்லாததாமென்னு மங்கிசம் பாதிதமேயாம் எனத் தூஷிக்கப்படும். சர்வான்மகத் தன்மை யுண்மையின் இது எக்காலும் எங்கும் சூனியமாவதேயில்லை. எங்ஙனம் பாதிதமாமெனின், எக்காரணத்தால் இருக்கின்றதென்றும் இல்லையென்றும் கூறுபவனும் நினைப்பவனும் அவ்வான்மாவே யாமோ அக்காரணத்தால் வக்தாமந்தாதி வடிவமாய் அது பிரசித்தமாம். ஆகவே தன் வடிவத்தைத் தள் ளத்தகாமையின் இல்லையென்னுந் தன்மை அதற்குப் பொருந்துவதே யில்லை. சத்திற்கு அசத்து விரோதமிருத்தலினாலும் இது பொருந்துவதின்றாம், எந்த யுக்தியினாலும் சத்திற்கு அசத்துத்தன்மை பொருந்தாதாம். இருப்பதே யாயின் ஏன் காணப்படவில்லை யென்றாசங்கித்து, வெட்டவெளியாகக் காணப் படாவிடினும் எல்லாவற்றினுந் தொடர்ந்து நிற்கும் சத்துரூபத்தால் கற்பூரமா னது மூடி மறைத்துவைத்திருப்பினும் தன் கந்தவடிவத்தாற் காணப்படுதலே போலக் காணப்படவே செய்யும். பிரத்தியக்குருவத்தால் மறைபட்டிருந்த போதினும் எல்லாவற்றினுந் தொடர்ந்திருப்பதாய்க் கொண்டு கற்பூரம்போற் காணப்படுமல்லவா? யாது யாவுமாயினும் யாதுமன்றாம்—என்னும் வினா விற்கு உத்தர மென்னவென்றால் சின்மாத்திரமாய அணுவே ஈண்டுச் சர்வ மாம். அற்றேல் அபரிச்சின்னமானது எங்ஙனம் பரிச்சின்ன சர்வரூபம்

ஆம் எனின், மன இந்திரிய விருத்திகளினாலே நானுவடிவமாக விடயப்படுத்த லின் சிறிது உளப்பரிச்சின்ன உருவத்தானே சர்வமாம். அதனானே மன இந் திரியாதி அபரிச்சின்ன இயற்கையாய உருவத்தால் ஒருசிறிது மாகாதாம், என்னும் கருத்தால் நின்னாலங்ஙனங் கூறப்பட்டது. இந்திரிய அதீதரூபத் தன்மையால் நின்மலமாக விருந்துகொண்டு ஒருசிறிதுமாவதேயில்லை. இவ் வபிப்பிராயத்தினாற்றானுதல் நினது பலவாயும் ஒன்றுமென்னும் தொடக்கங் கூடும். சர்வசத்துவ ஆத்துமவேதனத்தால் அதுவே ஏகமாயும் அநேகமாயு மிருக்கும். சமமாய எதனதுள்ளே நித்தியமென்னுஞ் சங்கைக்கும் யாது உலக ரத்தினகோசமாம்—என்னும் சங்கைக்கும் விடை யளிக்கப்படும்; அதுவே இவ்வுலகத்தைத் தரிக்கின்றது. அவ்வாறே உலக கோசமா யிருக்கின்றது என்பதாம்; பெரு நீரினின்றும் சிறுதரங்கம் சிறிதும் தனித்திராததேபோல் எதனினின்றும் ஒருசிறிதும் வேறாகவில்லை—என்ப தற்குத்தரத்தைக் கேட்டி! சித்தவடிவமா யிருத்தலாற் பெருங்கடல்போல விகாரப்பட்டிருக்கும் அணுவினிடத்தில் நீரின்கண்ணே நெகிழ்ச்சியால் சுழற்சி தோற்றுதல்போலச் சித்தவிகற்பமாத்திர ரூபங்களான மூவுலகச் சிறு தரங்கங்களாகிய இவைகள் கசிந்துகொண் டிருக்கும். இதனாலே எதனதிச்சை யாற் றனித்தும் இவையுளவாம்—என்பதும் சமாதானிக்கப் பட்டதேயாம். தேசகாலாதியினால் வரைவுபெறாமல் ஏகமாய் அசத்தாய், சத்தாய்—என்னுஞ் சூனிய அசூனிய உபயாத்மத்தன்மைக் கூற்றின் றாற்பரியத்தைக் கேட்டி! சித்த இந்திரியாதிகட் கெட்டாமையின் அவ்வணு சூனிய சொரூபமுடையது போலாம். வியோமரூப முடையதாயினும் தன்னுணர்வாற் கிடைத்தலின் அசூன்யமாம். யாது நீயேயாயினும்—என்னும் வினாவிற்கு உத்தரங் கூறக் கேட்டி! நான் அத்துவைத ஞானத்தால் அந்த ஆத்மாவேயாகி நின்வடிவமா கவே யிருக்கின்றேன். நீயும் அந்த ஆத்மாவேயாகி ஞானத்தினாலே நானாகவே யாகின்றாய். இதுவும் நான் நீ என்று எண்ணும் விவகார திருஷ்டியாலேயாம். அவ்விவகார திருஷ்டியினாலோ அந்த ஆத்மா நீயுமல்ல நானுமல்ல; மற்றோ, பெரிய ஞானமேனியை யுடையதாகவே இலங்குகின்றது. இன்னும் வெளி யாகக்கேட்டி! நீஎன்னுந்தன்மை நான்என்னுந்தன்மை மற்றும் பிறயாவும் பிரஹ்மத்தையுணரின் பிரஹ்மத்தி லியமாகி நீயுமில்லை நானுமில்லை மற்றப் பிறவுமில்லை; மற்றோ, பிரஹ்மமாத்திரமாகவே இலங்கும். பிரஹ்மத்தை எல் லாமாகவுமுணர்ந்தால் அது யாவுமேயாம். நடந்தும் நடவாதது எது—என் பதற்குத்தரத்தைக் கேட்டி! எவ்வணுவானது ஆகாயம்போல அநேக யோ ஜனைதூரம் வியாபித்திருந்தபோதினும் இருந்த விடத்திலேயே யிருக்கின்றது. அவ்வணுவிற்குள்ளே அநேக யோஜனை தூரதேசமானது சொற்பனம்போலக் கற்பனையால் ஆம். நில்லாதேயும் நிற்பதெது—என்ற கேள்விக்குத்தரமும் முன்போலவே யாம். இவ்வணுவானது தனது சத்தாரூபமான ஆகாசகோசத் துள்ளே தேசகாலங்க ளிருத்தலினால் ஒருதேசத்திற் சென்றபோதினும் செல்ல

வில்லை. ஒரு தேசத்திற்கு வந்தபோதிலும் வருவதில்லை. கூறிய இரண்டையுந்
திருஷ்டாந்தத்தால் விளக்கக் கேட்பாயாக. கமனத்தா லடையத்தக்க தேசாந்
திரம் இவ்வணுவினுடைய சரீரத்திலேயே யிருக்கும்போது இவ்வணுவானது
வேறெங்கே போகவேண்டும். ஸ்தன்னியங்களிடையே தூங்கும் குழந்தை
யைத் தாயானவள் வேறு இடத்திற்றேடி அடையவும் வேண்டுமா? எவ்வளவு
தூரம் செல்லவேண்டுமோ அவ்வளவுதூரஞ் சென்றடையத்தக்கதான அக்ஷய
மகாதேசமானது சர்வகர்த்தாவாயிருக்கும் எவ்வணுவினுள்ளே யிருக்கின்
றதோ அவ்வணுவானது எங்கேபோய் எங்ஙன மடையவேண்டும்? மேலும்
வெளியான வேறு திருஷ்டாந்தத்தைக் கேட்டி! கும்பத்தின் முகத்தை முத்
திரைசெய்து ஒரு தேசத்திலிருந்து மற்றொரு தேசத்திற்குக் கொண்டுபோய்
வந்தால் அதிலிருக்கும் ஆகாசத்திற்கு கமனாகமனங்க ளில்லாததேபோல
ஆன்மாவிற்கும் இல்லையென்றறிதி! சேதனமாயினும் யாது கற்போலாம்—
என்னும் வினாவிற்குச் சித்துருவமும், ஜகவடிவமும் என விருத்த உபயவடிவம்
உடையது என்பதாகப் பொருள்கொள்ளின் உத்தரத்தைக் கேட்டி! ஜடமா
கவேயிருக்குந் தேகாதிகள் ஆத்மதாதாத்மிய அத்தியாசத்தினாலே சேதனத்
திற்குப் பிரகாச சுபாவத்தன்மையும் ஜடத்தன்மையும் தன தனுபவத்திற்குத்
தெரியவருதலின் ஆராய்ச்சி யின்மையினாலே ஜடம் போதம் என்னு முபயரூப
மும் உண்டாகவே செய்யும். சேதனமாயினும் கற்போலக் கனரூபம் யாது
என வினாவின் பொருளேல், பாரமார்த்திகமான ஆத்மரூபமேயாய சிற்கனம்
அதுவாம். ஹே ராக்ஷசியே! சேதனபாஷாணம் இருப்பதேபோல ஆத்மா
சிற்கனவடிவமே யுடையது என, நினது வினாப்பொருள் ஆமாயின் அக்கால்
சேதனமேயாய இவ்வான்மா, பாஷாணம் போலக் கனமாம். சிதம்பரத்தில்
விசித்திர காரியத்தைச் செய்வதெது—என்னுங் கேள்விக்கு உத்தரத்தைக்
கேட்டி! அனாதியாய் அனந்தமாய் இருக்கப்பட்ட பரம ஆகாசத்தில் சின்மாத்
திரமாய பரமாத்மாவால் மூன்றுலக சித்திரமானது சித்திரிக்கப்பட்டுளது.
அதனால் இது மித்தையாதலின் செய்யாமலே செய்யப்பட்டுளது. வன்னித்
தன்மையை விடாமலே எவ்வன்னி சுடாமலிருக்கின்றது—என்னும் வினா
விற்கு விடைகூறுகின்றேன். அதன் உணர்வினாலே வன்னி சத்தையாம்; அத
னாலே அனல ஆகிருதியானது விடப்படவில்லை. ஆத்மசத்தைக்கே வன்னி
சத்தாத்தன்மையேல் அதற்குச் சர்வகதத்தன்மை யுண்மையின் சர்வகதமா
யினும் அது தகிக்கவே மாட்டாதாம்; சர்வதிரவியங்களையும் அக்கினியைப்
போல ஒளிர்வித்தலின் மேற்கூறிய மாத்திரையானே அது சர்வகதம் அன்று
என்பதாகவன்று என்று எண்ணுதி! வன்னியல்லாத எதனிடத்தி னின்றும்
வன்னி யுண்டாகின்றது—என்னும் வினாவிற்கு உத்தரத்தைக் கேட்டி! பிரகாச
மயமான சூரியனைப்போன்று பிரகாசித்துக்கொண்டிருக்கும் ஆகாரமுடைய
தாயும் ஆகாயத்தைப் பார்க்கிலும் அதி நிர்மலமாயும் இருக்கும் சைதன்னிய
மயமாய ஆத்மாவினின்றும் ஜொலித்துக் கொண்டிருக்கும் ஞானமய அக்கினி

யானது உண்டாகின்றது. சந்திரன் அருக்கன் அக்கினி நக்ஷத்திரம் இவைக ளாக ஆகாமலிருந்தும் அவிஞசமாக யாது பிரகாசிப்பிக்கின்ற தென்னுங் கேள்விக்கு விடைபகரக் கேட்குதி! ஆன்மாவானது ஞானத்தினுலே அருக்கா திப் பிரகாசத்திற்கும் பிரகாசகமாம் பிரகாசசொரூபமான அது மகாகல்ப மேகங்களாலும் நசிப்பதில்லை. நேத்திரத்திற்குத் தெரியாத எதனினின்றும் பிர காசம் பிரவிருத்திக்கின்ற தென்னும் வினவுக்கு உத்தரத்தைக் கேட்டி! நேத் திரத்திற்குத் தெரியாமலும் அனுபவரூபமாயும் ஹிருதயகிருகதீபமாயும் சகல பதார்த்தங்களுக்கும் சத்தையைக் கொடுப்பதாயும், அநந்தமாயும் பிரகாச மாயும் பரமமாயும் இருப்பதாம் பிரசித்தமாய் அந்த ஆத்மா. அதனது சுயஞ் சோதித்தன்மையை அனுபவத்திற் காண்பிக்கின்றேன். ஆலோக தீபாதிப் பிரகாச மில்லாமலும் தனது தேக இந்திரிய முதலியவற்றின் விஷயத்தில் அபரோக்ஷத் தோற்றமானது சர்வானுபவப் பிரசித்தமாம். ஆகலின் அகங் காராதித் தோற்றமானது மனம் முதலிய ஆறிந்திரியங்களாலே அறியமுடி யாத ஆத்மாவினின்றும் பிரவிருத்திக்கின்றது. காடாந்தகாரத்தி லிருந்தபோ திலும் நீ எங்கேயிருக்கின்ருயெனின், நான் இங்கே யிருக்கின்றேன் என்று கூறுகின்ருனன்ருே? கொடி செடி என்பதாதி—வினவின் உத்தரத்தைக் கூறு கின்றேன். அவ்வான்மா கண் முதலியவை இல்லாதனவாய கொடி, செடி, மூளை, முதலியவற்றைத் தன் சந்நிதி மாத்திரத்தினுலே விருத்திசெய்துவளரும்; அதன் பலத்தை அறிவதே ஆகாரமாய்ச் சாக்ஷிப் பிரகாசமாய் அனுபவான மகமாய் இருக்கின்றது. அம்பராதிகளின் ஜனகன் யார் — என்னும் வின விற்கு விடையைக் கேட்டி! ;கால ஆகாச கிரியை, இருப்பு, ஜகத்து ஞான சொரூப அவ்வான்மாவின்கண்ணே இருக்கின்றது. விவகார திருஷ்டியினுலே இது கூறினேன்; பரமார்த்த திருஷ்டியாலோ ஞானவடிவ ஆத்மாமாத்திர மிருத்தலின் யாதொன்றுமே இல்லை. பிராந்தியினுலே சுவாமியென்றுங் கர்த் தாவென்றும், போக்தாவென்றும் பிதாவென்றும் தோற்றுகின்றது. உலகரத் தினகோசம் யாதாம் என்னும் வினுவிற்கு உத்தரத்தை மீண்டுங்கூறுகின்றேன். அணுத்தன்மையை விடாமல் அவ்வணு உலகரத்தினத்திற்குச் சம்புடமாம். எம்மணிக்குக் கோசம் உலகம் என்னும் வினவின் உத்தரத்தைக் கேட்டி! மாதா, மான, மேய வடிவமான உலகம் கேவலமான அணுவின்கண் இல்லாத படியினுலே அதுவே சர்வஜகத்தின்கண்ணும் எல்லாவிடங்களிலும் ஸ்புடமாக விளங்கிக்கொண்டிருக்கின்றது. எக்கால் இந்த உலகசம்புடத்தில் இருக்கின் றதோ அக்காலது பரமமான மணியாம். எவ்வணு தமப்பிரகாசமாம் என் னும் வினுவிற்கு உத்தரம் கூறப்படுகின்றது. அவ்வணு அறிய முடியாமை யின் தமமாம். சின்மாத்திரத் தன்மையால் ஞானப்பிரகாசமாம். எவ்வணு இருந்தும் இல்லாததுமாம் என்பதற்கு விடை இதுவாம். உணர்வு வடிவமா யிருத்தலினுலே அவ்வணு இருக்கின்றது; இந்திரியங்களுக்கு அதீதமாயிருத்த லினல் இல்லாததாம். எவ்வணு தூரத்திலும் அதிதூரத்திலும் என்னும் வின

விற்கு உத்தரத்தைக் கேட்டி! இந்திரியத்திற்கு விடயமாகாமையின் தூரத்த தாம்; சித்துருவமா யிருத்தலின் தூரமுடைய தன்றும். எவ்வணுவே மகாகிரி என்றதற்கு விடை இதுவாம். இவ்வான்மாவே அணுவேயாயினும் காரண மின்றியே எல்லாராலும் நான் நான் என்று முன்னிருக்கும் பர்வதம்போல அபரோக்ஷமாய் உணரப்படுதலின் மகாகிரியென நீ கூறினை. அதன்கண் அணுவேயாயும்—என்னும் அங்கிசத்திற்குத் தாற்பரியத்தைக் கேட்டி! அறிவு வடிவ மாத்திரமா யிராநின்ற எவ்வணுவுளதோ அவ்வணுவே இவ்வுலகமாக இலங்குகின்றபடியினலே சைலாதிகள் சத்தியமாகா. அதனல் அணுவின் கண்ணே மேருத்தன்மையாம். நிமிஷமேயாயினும் யாது கற்பமாம்— என்னும் சங்கைக்கு உத்தரத்தைக் கேட்டி! நிமிஷத்தோற்றமே நிமிஷமென்று நிகழ்த்தப்படுகின்றது; கல்பமென்னுந் தோற்றமே கற்பசத்தத்தாற் கழறப் பெறுகின்றது. கூறியபொருளை விவரிப்பாம். நிமிஷமே கல்பத்தில் நடக் கும் எல்லாக்கிரியைகளாலும் விலாசஞ் செய்வதாகப் பிரதீதியாகின்றது. அற் பத்தினுள்ளே விஸ்தாரத்தினுடைய தோற்றத்திற்குத் திருஷ்டாந்தமென்ன வென்ருற் கேட்டி! வெகுகோடி யோசனையிலிருக்கும் மகாபுரமானது மனத் தின்கண்ணேயே தோற்றுவதுபோலவாம்; அதன் அசம்பாவனையை அகற் றும்பொருட்டு அயதுபமானத்தை அறைகின்றேன். நிர்மலமான தர்ப்பணத் தின்கண்ணே மகாநகர நிர்மாணம் தோற்றுவதேபோல நிமிஷத்தினுள்ளே கல்ப சம்பவம் இனிதாகத்தோற்றும். நிமிஷங்கள் கல்பங்கள் சைலாதிக்கூட் டங்கள் யோஜனைகோடிகள் தம் சத்தியத்துவத்தில் விரோத ஆசிரய பேதகங் களாயினும் அதிசூக்ஷ்மமான அணுவின்கண்ணும் மித்தியாத்தன்மையைப் பற்றி நன்ருக இருக்கும், என்ருல் ஆண்டு இரண்டொன்றென்பதெங்கே? ஆண்டு இரண்டொன்றுகளும் அவ்வாறே மித்தியாத்தன்மையையே பற்றிப் புகுந்திருத்தலின் என்றறிதி! முன்னர் இதை யான் செய்தேன் என்று புத்தி யின்கண் க்ஷணகாலத்தில் வியாவகாரிகமும் பிராதிபாசிகமும் தோற்றுகின் றது; இதில் திருஷ்டாந்தம் கனமயக்கமாம். கூறியபொருளில் உலக, அனு பவ, ஆக்கியாயிகையை உதாகரிக்கின்றேன். துக்கத்தில் காலமானது மிகவும் நீளும்; சுகத்தில் மிகவும் குறுகும் எப்போதும். ஓர் இரவானது அரிச்சந்திர னுக்குப் பன்னிரண்டு வருடமாகத் தோற்றியதன்ருே? சித்தவிருத்தி அனுசார மாகவே சித்தின் தோற்றமாம்; வஸ்துவிருத்த அனுசாரமாக அன்றும். அசத் தியமேயாயும் சத்திய வடிவமாகச் சித்தத்தினுள்ளே எத்துணிவுண்டாகின்ற தோ அத்துணிவே சித்தினிடத்தில், பொன்னினிடத்திற் கங்கணத் தன்மை யேபோலப் பொலியாநிற்கும். ஆயின் வஸ்துவிருத்தந்தான் என்னேயெனின் கேட்டி! நிமிஷமுமில்லை, கல்பமுமில்லை, அண்மையுமில்லை, சேய்மையுமில்லை; சித்தணுவின் பிரதீதியே இவ்வண்ணம் வேறுவேறு வஸ்துக்களாக இருக்கின் றன. இவ்வண்ணம் வேருய விருத்தங்களினும் அதிஷ்டான சித்தின் அபேதத் தாலேயே பேதமின்றும். எங்ஙனமென்ருல், ஒரேசித்தின் வடிவமாயிராநின்ற

இருட்பிரகாசங்களும் தூராதூரங்களும் க்ஷணகற்பங்களும் சிறிதும் வேற்றுமையுடையனவாகாவாம். பிரத்தியக்ஷமாகவிருந்தும் அசத்து ரூபமாகவிருப்பது யாது என்னும் சங்கைக்குச் சமாதானத்தைக் கூறுவாம். வெளியுட்கரணங்கட்குத் தத்தம் விஷயாபரோக்ஷப் பிரசித்த நிர்வாககத்தன்மையால் பிரத்தியக்ஷமாம்; அவற்றிற் கவிஷயமாதலின் அப்பிரத்தியக்ஷமாம். பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்கட்கு விஷயமாய திருசிய ஆரோபத்தால் உதயமாதலினுலும் பிரத்தியக்ஷமாம். இவ்வணுவே சிந்திப்பதாயும் காண்பதாயுமேயிருந்து இவ்வெல்லாமாய்த் தோற்றுகின்றது. அதுவே திருசியவடிவமாக இருக்குமேயாயின் எற்றினுக்காய்த் திருசியத்தைத் தள்ளவேண்டும் எனின், கங்கணஞானம் இருக்கும்வரை கனகஞான முண்டாகாததேபோலத் திருசியஞானமிருக்கும்வரை அவ்வுண்மையாய சிதேகரசத்தன்மையானது தோற்றமாட்டாதாம். ஆகையால் திருசியரூபத்தாற் பரமபுருஷார்த்தத்தன்மை உண்டாகமாட்டாது என்று தள்ளவேண்டியதாம். அதனுனே திருசியவடிவமாகக் கல்பனைசெய்யாமலிருப்பினும் கற்பிதத்லை தக்காணுமலிருப்பினும் அதுபிரஹ்மரூபமாகவே யிருப்பதாற் புருஷார்த்தத்தன்மையுண்டாம். கங்கணத்தன்மையைச் செய்யாமலிருப்பினுங் காணுதிருப்பினும் சுவர்ணத்தன்மை தோற்றுவதேபோல திருசியதிருஷ்டி இன்றேல் அதிவிஸ்தாரமாயும் கேவலமாயும் நிர்மலமாயும் சுத்தமாயுமிருக்கும் பிரஹ்மமே இனிது காணப்பெறுகின்றது. அசத்ரூபமென்னும் வினு அங்கிசத்தின் அபிப்பிராயத்தைக் கேட்டி! எல்லாவற்றினும் தொடர்ந்த சத்துருவத்தாற் பிரசித்தமாயிருத்தலின் சத்ரூபமாம். அதிசூக்ஷ்மமாயிருத்தலின் குறிப்பிடமுடியாமையானே அசத்ரூபமாம். "அசத்தாதல் இவை யுண்டாதற்குமுன் இருந்தது; அதனினின்றுமே சத்தானதுண்டாகின்றது" என்னுஞ் சுருதியின்கண் அவ்வாறு விவகாரங்காணுதலின் அங்ஙனம் கூறப்பட்டது. யாது சேதனம் அசேதனம் என்னும் வினுவிற்கு விடைபகரக் கேட்பாயாக. அறிவுவடிவமாயிருத்தலின் சேதனமாம்; திருசிய அசம்பவத்தால் அசேதனமாம். திருசியமின்மை எங்ஙனமாமெனின், சித்தின் சமத்காரமாத்திர சொரூபமாயும், சித்தின் பிரகாச சொரூபமாயும், வாயுவினுலசைக்கப்பட்ட மரம்போன் றஸ்திரமாயும், வாயுமயவிருக்ஷம்போல அத்தியந்தம் அசத்தாகியும் இருக்குமிவ்வுலகின்கண்ணே சைதன்னிய ஆசிரய விடயத்தன்மைக் கற்பனைகள் எங்கே யிருக்கின்றன? சித்தின் சமத்காரமாத்திரத்திற் றிருஷ்டாந்தத்தைக்கேட்டி! ஆதபத்தின் மிகுதிப்பாடே கானனீராகத் தோற்றுவதேபோலக் கூறியபடி பருத்து நிறைந்து அத்வைதமாயிருக்கும் சித்தேஜஸே ஜகத்தாம். சூரியனுடைய கிரணங்களினுலே இனிக் கூறப்படும் சொர்ணம் முதலியவற்றின் சூக்குமதரஅணுமய கற்பனையின் இருப்பின்மைகள் பிரஹ்மகல்பாதிரூபமான உலகத்தைப்போல அசத்துத்தன்மையையடைகின்றன. உவமைவடிவத்திற்கு அசத்துத்தன்மை வெளியானதேயாம். ஆகவே அறிவென்றும் அறிபடுபொருளென்றும் உண்டாம் பேதபுத்தி

யானது எங்ஙனந்தானும்? விஷயமற்றதென்றே அறிதி! அவித்தையாற் சூரிய
கிரண லேசத்தோடுகூடிய ஆகாயத்தில் காஞ்சனமானது தோற்றுவதேபோல
இவ்வுலகமானது பொய்யாகவே தோற்றுகின்றது என்றால் திருக்கென்றும்
திருசியமென்றும் உண்டாம் கற்பனைகள் எத்துணைத்தூரத்தனவாம்? கனாப்
பட்டணத்திலும் கந்தர்வநகரத்திலும் சங்கற்பபுரத்திலும் குட்டியமிருப்பதாகத்
தெரிதல் சத்துமன்று அசத்துமன்று. அதுபோல் இவ்வுலகத்தை நீண்ட மயக்க
மென்றறிதி! இவ்வண்ணம் உலகம் மயலாய் ஆயதேயாகுக; ஆயின் அத
னால் வந்ததென்னே எனின், இவ்வாறாகவே கூறியவகையான பொய்ம்
மையைச் சாதிக்கும் நியாயங்களை மீண்டும் மீண்டும் பாவித்தலான பயிற்
சியால் மனம் நிர்மலமானவழி, பாரமார்த்திகப் பிரஹ்மத்தைக்கண்ட
ஜீவன்முக்தனுக்கேபோல அவித்தையானது நாசமாக சிதாகாசத்தின்
கண்ணே மீண்டும் புனராவிருத்தியான சமுசாரம் உண்டாகாதாம்; அல்லது
நியாயத்தாற் பரிஸ்கரிக்கப்பட்ட தத்துவ திருஷ்டியினாலே சிருஷ்டியே
யுண்டாகாதாம். விஷயரூபத்தை வேற்றுமைப் படுத்தும் ஞானபேதத்தானே
பின்னம்போற்றோற்றும் உண்மையாயில்லையாம். அவ்வாறே பிரஹ்மா
முதல் தம்பப்பூச்சி பரியந்தம் உள்ள எல்லாப்பிராணிகளின் அனுபவ
மிருக்கின்றது. திருசிய சம்வேதனத்தாலன்றிக் குட்டியாகாசங்கட்குப் பேத
மின்றாம். பிரஹ்மா முதலிய சர்வஜீவர்களும் எவ்வெப்பாவனையில் ரூடமாகின்
றார்களோ அவ்வவ்வாறே காண்கின்றார்கள். பேதமின்றேலாயின் குட்டியாதி
பேதவிவகாரம் எங்ஙன முண்டாமெனின் சிதாகாசத்தில் அவ்வவ்வகையாகத்
தோற்றுதலாலே அவ்வவ் விவகாரங்கள் சத்துவ சூனியங்களாய்த் தோற்று
கின்றன; அத்தியந்தம் அசத்துவங்களாயின் ஆகாச தாமரையைப்போலத்
தோற்றமாட்டாவாம். பிரபையின் பிண்டம் பிரபைகளாகத் தோற்றுவதே
போல யுக்தியினாலே பார்க்குங்கால் இவையாவும் அநிர்வசனீயங்களாகத்
தோற்றாநிற்கும், இவ்வண்ணம் யூகத்தோடும் பிரசங்கத்தில்வந்த யாது சேத
னம் அசேதனம் என்னும் வினாவிற்கு விடைபகர்ந்து எஞ்சிய வினாக்களின்
உத்தரத்தை அரசன் பொருட்டு நிறுத்திவைத்து அதனஞ்ஞான சங்கையை
நீக்கும் பொருட்டு அவற்றுள் இரண்டொன் றெடுத்து உத்தரங்கூற விழைந்து
துவைத மித்தியாத்துவ உபவர்ணனம் விரிந்த துவைதமாயினும் அப்பிருத்தக்
கெதனால் என்பதன் உத்தரத்தைக் கூறுகின்றார் பிருதக்தன்மைச் சம்ஸ்கா
ரத்தினாலே சமஸ்கரிக்கக்பட்ட புத்திவிருத்தியினுள்ளே யிருக்கும் ஆத்மப் பிர
காசத்தின் வேற்றுமையை வெளிப்படுத்தும் ஆற்றல்வடிவ சமத்காரயோகத்
தால் துவைதம் தோற்றின போதிலும் வேற்றுமையே யின்றாம். அதன்கண்
ஹேது வென்னவெனின், பரமான ஆத்மப்பிரகாசமானது விருக்ஷவடிவப்
பீஜம்போல எல்லாவடிவமாகவு மிருக்கின்றது. விருக்ஷவடிவப் பீஜம்போல
வென்னும் திருஷ்டாந்தத்தை விரித்து மூன்றுலகத்தையும் உள்ளே பீஜம்
போல இருக்கும்படியாக வைத்துக்கொண்டு யாது முக்காலங்களையும் கடந்து

நிற்கும்—என்பதன் உத்தரத்தையும் விரிக்கின்றேன். ஏகரூபமான விதையானது வேறுபட்டும் வேறுபடாமலும் உள்ளேயிருக்கும் விருக்ஷாகாரத்தைச் செய்துகொண் டிருப்பதேபோல ஆகாசகோசம்போலச் சாந்தமாக விருக்கும் பிரஹ்மமானது அளவில்லாததேகங்களைத் தோற்றிவைத்துக்கொண்டிருக்கும். ஆகாசகோசம்போல என்று கூறியதின்றாற்பரிபத்தை வெளியாகக் கேட்பாயாக பீஜத்தினுள்ளேயிருக்கும் விருக்ஷமானது அதி சூக்குமமாக விருத்தலின் ஸ்திதியானது ஆகாச சமமாவதேபோலப் பிரஹ்மத்தினுள்ளேயிருக்கும் ஜகத்திற்கும் ஆன்மா சாக்ஷியாக விருத்தலின் அச்சாக்ஷியினும் தனியாகவிருத்தல் கூடாமையின் சித்துருவமாகவே ஸ்திதியாம் எனச்சித்தில் வேற்றுமைப் படுத்துவதின்மையின், ஆகாசகோச சாமியமாம். இத்துணையானே எல்லாப் பிரஸ்நங்களின் உத்தரம் கூறியேயாய்விட்டது. எனக் குறிப்பித்துக்கொண்டு சர்வப் பிரஸ்நங்களின் பரமதாற்பரிய விஷய அத்விதீயச்சின் மாத்திர பரமார்த்த ஸ்திதியைக் காண்பிக்கும் வாயிலாய் உபசம்மாரஞ் செய்கின்றார். சாந்தமாயும் சமஸ்தமாயும் அஜமாயும் ஏகமாயும் ஆதிமத்தியங்களற்றதாயும் திவந்துவங்க ளில்லாமையினாலே சாந்த மதிமான்களானே மாயை அதன்காரிய மலநீக்க வாயிலாய்ப் பரிசோதிக்கப் படுவதாயும் ஒருமையென்னும் குணங்கூட இல்லாததாயும் நிர்மலமாயும் பெரிதுக்கெல்லாம் பெரிதாயிருத்தலின் ஒன்றேயாய் எங்கும் தடையற்று விளங்குவதாயும் ஜென்மாதி விகாரங்களும் அவற்றை யுடையனவும் இன்றியதாயும் இலங்காநின்ற சின்மாத்திர சிவமே பரமார்த்தமாய் உளது. இதைத்தவிர ஈண்டு எக்கலையேனும் வேறெச்சலனமேனும் ஒரு சிறிதும் ஒருகாலத்தும் ஓரிடத்து மில்லவேயில்லை.

80-வது வினைவைப் பேதித்தல் வருணனம் முற்றிற்று.

---

## 81-வது பரமார்த்த பிண்டீகரண வருணனம்.

இப்போது விசேடமாகவுணர்ந்த அரசனனவன் மந்திரிவிடைபகர்ந்த வினுக்கள் நிற்ப மற்றைய வினுக்கட்கு முறையே விடைபகர்தலும் பகர்ந்தசிலவற்றிலும் சில விசேஷயுக்தி கூறுதலும் வருணிக்கப்படும். மந்திரிவசன சமத்கார தரிசனத்தானே அரசனுக்கும் தத்துவஞான மிருப்பதாக நன்றாய்த் தெரிந்தபோதினும் அரசனறைவதிற் சமத்கார அதிசயம் சம்பவிக்குமெனக் கருதி அதனைக் கேட்கவேண்டு மென்றிச்சித்து இராக்ஷசி கூறுவதாவது:—அகோ ஆச்சரியம்! ஹே மந்திரியே! நினது பரமார்த்த பாஷாணமானது அதிபவித்திரமாக இருக்கின்றது; தாமரையிதழ்போலும், நேத்திரமுடைய இவ்வரசன் இனி மற்றவற்றிற்குத்தரம் தருகவெனக் கற்கடிகூறுதலும், அரசன் கூறத்தொடங்கி அவ்வபிப்பிராயத்தைக் குறித்து எல்லாவினுக்களின் முக்கிய தாற்பரிய விஷயமான பிரஹ்மத்தை விரோத ஆபாச யுக்திமுக சமத்கார அதிசயத்தால் தரிசிப்பிக்கின்றார்:—

அவஸ்தாத்திரய தரிசனஇலக்ஷண ஜகத்சம்பந்தப் பிரத்தியயத்தின் அபாவ
மாகிய போத இலக்ஷணையின் நிவிருத்தியே சுபமாக விளங்கும் அதிஷ்டானரூப
துரீயலக்ஷண எதனது தரிசனம் ஆமென்று புகல்வரோ அந்தப் பிரஹ்மத்
தையே ஹே கல்யாணி! நீ கூறினாய். அதுவும் அதன்கண்ணேயே நிஷ்டையடை
யும் வடிவமான அதன் பரிக்கிரகத்தால் ஆம் எனப் பரிக்கிரகத்தை லக்ஷணத்
தோடுங்கேட்டி! அதனது பரிக்கிரகம் சித்தத்தால் சர்வசங்கல்பசந்நியாச
மாம். எதனது மாயிக சங்கோசவிகாசங்களால் ஜகத்தின் பிரளய சிருஷ்டிக
ளாமோ, வேதாந்தவாக்கியங்கட்கு நிரந்தரஸ்திதி எஃதாமோ, எது வாசாம
கோசரமாமோ, அதுவே அந்தப் பிரஹ்மமென்றுணர்தி! சத்துவ அசத்துவ,
பான அபானமென்னும் இரண்டுகோடிகளின் அந்தராளத் திருப்பதாம்: வசு
னிக்கமுடியாததாம் அது. அதனானே ஆதி அந்தங்கள் அசத்துக்கோடியினாலே
பீடிக்கப்படினும் மத்தியில் தேசிகபரிச்சேத சம்பந்தமாகச் சிலபால் உளது
சிலபால் இலது எனக் கோடித்துவயீமயமாம். இவ்வண்ணம் ஆதியந்தங்கள்
அபானத்தாற் பீடிக்கப்படினும் மத்தியில் அவ்வவ்விந்திரிய யோக்கியரூபமாக
விளங்குகின்றது. வேறுவடிவமாய்த் தத்துவமாயும் விளங்குகின்றதில்லை
என மத்தியில் கோடித்துவயீமயமாம். அதனானே சத்து அசத்துச் சந்தி
ரூபமாயும் சித்து அசித்துச் சந்திரூபமாயும் இராநின்ற ஹிரண்யகர்ப்பவடிவ
அதனது சித்தத்தின் விகாரமாதலின் சராசரமான இவ்வுலகம் லீலை வடிவமாம்.
அது விஸ்வவடிவமாயிருந்தபோதினும் அதன் அகண்ட வஸ்துத்தன்மை கண்
டிக்கப்படுவதின்றாம். அத்தகைய சன்மாத்திர சாசுவதப்பிரஹ்மமே உன்னால்
வினவப்பட்டது. மந்திரி கூறிய மற்றவற்றுள் முதலில் யாது வாயுவும் அவா
யுவும் என்னும் வினாவிற்குச் சமாதானத்தைக் கேட்டி! இந்த பிரஹ்மாணு
தன்னிடத்திலேயே வாயுத்தன்மையை எண்ணுதலால் விபரீதக்கவர்ச்சியை
யடைந்து வாயுவாகப்பார்க்கும்; உண்மையாயோ அவாயுவேயாம். ஆதலின்
வாயுவாதி ஒருசிறிதுங் கிடையாதாம். கேவலம் சுத்தசேதனமாத்திரமிருக்கின்
றது. யாது அசப்தமேயாயும் சப்தமாம் என்னும் வினாவிற்கும் இவ்வண்ணமே
விடையாம்; இவ்வணு தன்னிடத்திலேயே சப்த எண்ணத்தால் விபரீதமதியுற்
றுச் சப்தத்தைக்காண்டலின் சப்தமாம். ஆதலின் இதன்கண் சப்தசப்தார்த்த
திருஷ்டி வெகுதூரமாம். யாது யாவுமாயினும் ஒருசிறிதுமன்றாம் என்பதன்
விடையைக்கேட்டி! அவ்வணு யாவுமாம்; ஒருசிறிதுமாகாதாம். யாது
சோகமும் நாகமும் ஆம் என்றதைக்கேட்குதி! அகங்காரம் நிஷ்கரிஷமாகச்
சோகமாம், அவ்வுருவத்தானே நாகமாம் அல்லது அகங்காரதத்தைகளானே
உபலக்ஷிக்கப்படச்சோகமாம்; அவற்றால் உபலக்ஷிக்கப்படாதோ, நாகமாம்.
அதுவும் இலாததே. இவ்வண்ணம் வாஸ்தவ அவாஸ்தவ விசித்திரத்தன்மை
யிற் காரணம் யாதெனில் கேட்டி! சர்வசக்தி வடிவமாயிராநின்ற இதனது ஒரு
ணர்வே ஈண்டுக் காரணமாம். பிராந்திப்பிரதிபையாற்றல், அவாஸ்தவரூப
தோற்றத்தின்கண்ணே காரணமாம்; வாஸ்தவப் பிரதிபையாற்றல், வாஸ்தவ

ரூப வியக்தியின்கண்ணே காரணமாம். யாது பிரயத்னசதங்களால் பிராப்பிய மாம், லப்தம் கிஞ்சித்தாகாதாம் — இவற்றின் உத்தரம் என்னெனில், ஆத்ம யத்தினசதங்களால் அடையப்படுதலாம்; அடையப்பட்ட அதன்கண்ணே சிறிதுமின்றும். அடையப்பெற்ற அதன்கண்ணே சிறிதுமின்றுமென்பதாவது: அவ்விது ஆத்மரூபமாயிருத்தலினுலே முன்னரே அடையப்பட்டதாமென்ப தாக முயற்சியானது அதனுல் சபலமென்றும். அதனினும் பரம உத்கிருஷ்ட மாய் வேறென்றேனும் யத்தனபலம் ஒருசிறிதுமின்றும் என்னுங்கருத்தால் உன்னுல் அவ்வாறு கேட்கப்பட்டதாம். ஆயின் ஞானப்பிரயத்தினம், வீணே யாமோ என்னுஞ் சங்கையைப் பரிகரிப்பதோடு, யாதைச் சர்வமும் அடைவ தில்லை என்பதற்கும் தாத்பர்யம் கூறுதும்: மூலாஞ்ஞானத்தைக் கெடுக்கும்படி யான போதமானது எதுவரை உண்டாகவில்லையோ அதுவரையும் ஜன்மவசந் தங்களில் சமுசாரக்கொடியானது நீள்போழ்து விரிந்துவிளங்காநிற்கும். ஆகவே எத்துணை சம்சார மூலாஞ்ஞானநாசம் ஆகவில்லையோ அத்துணை ஆன்மதத்து வம் அடையப்பெறினும் பூர்ணரூபமாக அடையப்பெறுதாம், போதத்தாலோ பூர்ணம் அடையப்பெறும், ஆதலின் அதைக்குறித்து யத்தினஞ்செய்தல் வியர்த்த மாகாதாம். சொஸ்தமாய் ஜீவித்துக்கொண்டிருக்கும் உச்சமான எதனுல் ஆத் மாவே அபரிகாரிதமாம் என்பதற்குத்தாத்தைக் கேட்டி! அணுமானத்தால் ஆகாரமுடைய தன்மையை யுடைமையால் திருசியத்தன்மையை அடைந்ததே போன்று மருப்பூமி ஆதபத்தால் நீர்மதியுண்டாதலேபோல வாஸ்தவ ஆத்ம ரூபம் சொஸ்தமாயிருக்குந் தன்னுலேயே அபகரிக்கப்பட்டது. எவ்வணுவி னுலே உள்ளே மேரு முப்புவனம் ஆகியதிருணம் உட்படுத்தப்படும் என்பவற் றிற்கு விடைபகருதும், இவ்வறிவுரூப அணுவினுலே மேருவானது உட்படுத் தப்படும் முப்புவனமும் துரும்புபோலச் செய்யப்படும், உட்படுத்தப்படுமாயின் வெளியிலெங்ஙனங் காணப்படுகின்றதெனின் உள்ளேயே வெளிபோலக் கற் பித்து உள்ளேயிருக்கும் மாயான்மகத்தைக் காணுநிற்கும். சித்தணுவினுள்ளே யாதுயாதுளதோ அவ்வெல்லாம் வெளியே காணப்படும், உள்ளே யிருப்ப தாயினும் சங்கற்பத்தாலுண்டாய அங்கனையையும் அவள் ஆலிங்கனத்தையும் பாகியசமஸ்காரபீஜத்தினுலே வெளியிலிருப்பதுபோலக் காண்கின்றேனென்று காமிகட்கு அனுபவமிருத்தல் ஈண்டுத் திருஷ்டாந்தமாம். இத்தகைய நியமத் தில் யாது ஏது எனின், உரைப்பாம், ஆதிசர்க்கத்திற் பிரவிருத்தமாய நியதியே ஏதுவாம், ஆதிசர்க்கத்தில் சர்வசக்தியையுடைய சித்தானது எவ்வாறு தோற்ற முடையதாயாமோ, அதாவது, கரும்பேனும் மூங்கிலேனும் முதற்பருவத்தில் எத்தகைய சாகை பத்திரம் அங்குரம் முதலிய முறையாயுண்டாமோ, அவ் வாறே இரண்டாவதுமுதலிய பருவங்களிலும் ஆமெனத்தானுகவே நியமமாம். ஆதிசர்க்க சங்கற்பத்தில் பருவத்தானும் இப்போதுள்ள சங்கற்பத்தில் தானே நியமமாம். இவ்வண்ணம் விரைவில் யாவற்றையும் காணும். எவ்வாவிர்பூத சித்தினுள்ளே யாது எவ்வாறு தோற்றுநிற்குமோ, அது அவ்வாறே இருப்பது

போலப்பார்க்கும், இதன்கண்ணே திருஷ்டாந்தம் சிசுவின்மனமாம். எவ்வ்ற்ப அணுமாத்திரையானே சதயோஜனை பூரிதமாமென்னும் சங்கைக்குத்தரங் கேட்குதி! தேசத்தினாலே பரம அணுவாகவும், வஸ்துவாற் சின்மாத்திர அணுவாகவும், காலத்தினாலே பரிசூக்ஷ்மதமமாகவும் எனமூன்றுவித பரிச்சேதகற்பனைக்கும் அவதிபூதமாகவுமிருக்கும் இவ்வணுவானது விசுவம் எங்கும் பூரித்து நிற்கும். யாது அணுவேயாயும் யோஜனசதங்களிலும் அளக்கப்பட முடியாததாம், என்னும் வினவிற்கு விடைகேட்டி! இது அணுவேயாகி யிருந்தும் யோஜனையின் சதங்களிலும் அளவிடப் படாதாம், சர்வகதமாகி யிருத்தலினாலும் அநாதியாகி யிருத்தலினாலும், அரூபமாகி யிருத்தலினாலும், ஆகிருதியற்றதேயாம். எங்ஙனம் தூர்த்தனாகிய விடபுருடனால் மூடையாகிய தருணியானவள் அழகிய புருவவிகாரங்களானும், நயனப்பார்வைகளானும், விகாரமாய சேஷ்டைகளானும், வசீகரிக்கப்பட்டு இழுக்கப்படுகின்றாளோ அங்ஙனம், சுத்தமாய சித்தாலோகத்தாலும், மலை துரும்புகளோடு கூடிய ஜகமானது நிரந்தரம் எக்காலத்தும் குறிப்புச் சேட்டையாற் கவரப்பட்டு விரிந்து விரிந்து கூத்தாடாநிற்கும். எவ்வணுவினுதரத்தில் மலைக்கூட்டங்க ளிருக்கின்றனவென்னும் சங்கைக்குத்தரம் கூறப்படுகின்றது, வஸ்திரமானது தன்பாலடங்கிய மேரு முதலிய விசித்திரங்களை வெளியிற்செய்து வேஷ்டித மாவதேபோல அணுவாயிருக்கும் அச்சிதாத்மாவே அநந்தரூபத்தோடு கூடியிருத்தலின் தன்பாலிருக்கும் மேருமுதலிய பொருள்களை வெளிப்படுத்தி விளையாடி வேஷ்டிதமாம். எவ்வணுவானது தன தணுத்தன்மையை விடாமலே மேருவினும் தூலதர ஆகிருதியை யுடையதாக இருக்கின்றது என்னுங் கேள்விக் குத்தரத்தைக் கேட்டி! தேசங்கால முதலியவற்றானே அளவு பெறுத்தப்படாமை யுற்றவடிவமுடைமையின் மேருவினும் பெரியதாம், ஆயினும் மயிர்நுனியினும் நூறு கோடிமடங்குள் ளொருகூறொத்த வடிவதாய ஆத்மாவும் அதிசூக்குமமாய்ப் பரமவணுகமாம். ஒவ்வொரு வினவிலும் ஆன்மாவின்கண்ணே அணுசப்தப் பிரயோகத்திற்கு மந்திரியாலே எவ்வபிப்பிராயமானது "பெயரின்மையானும் மனமுதலிய பொறியாறன் நிலைமைக்கு மன்னிவிடயமாகா மையானும், சின்மாத்திரமேயாய ஆத்மாணுவானது இங்ஙனம் ஆகாயத்தைப் பார்க்கினும் அதிசூக்ஷ்மகமாம்" என்று இவ்வண்ணங் கூறப்பட்டதோ அதுவே கற்கடியானும் கருதப்பட்டது, அங்கீகரிக்கவும் பட்டது; என்பதாகத்தானே யரசன் துணிந்து தனக்கிருக்கும் விசேட ஞானத்தன்மையைக் காண்பிப்பான் அதனைத் தூடிக்கின்றார்:—சுத்த சம்வேதன ஆகாசரூபத்திற்குப் பரம அணுவோடு மேருவிற்கும் கடுகுக்குமேபோல ஒப்பிட்டுக் கூறியது அழகாகவில்லை; சூக்குமத்தன்மை மாத்திரத்தானே பரிச்சின்ன மாகாதாம் பரிச்சேதவுற்கர்ஷ அவதி பரமாணு சாதிருசியம்பற்றிக் கௌணீவிருத்தியினாலே அணுவென விளம்புதற்குக் கூடுமென்றுணர்க. ஆயினெங்ஙனம் "அணுவுக்கணுவு மகத்துக்குமகத்து, இவ்வணு வாத்மாசித்தத்தா லுணரத்தக்கதாம்" என்பதாதி

சுருதிகளில் அவ்வாறுபதேசம் கூடுமெனின்? சர்வசக்தியோடு கூடியிருத்தலின் மகத்தன்மையைப்போல அணுத் தன்மையும் ஆன்மாவின்கண்ணே மாயையால் உண்டாக்கப்பட்டு நிற்குந்தகைமைத்த தாதலின் முக்கிய விருத்தியேயாமீண்டணுச் சப்தம், ஈண்டுச் சமத்தன்மை நிமித்தமாகாதாம்; மாயையாற் பூஷிதமாய்ச் சபளமாயதனுல் அணுத்தன்மை பரமாத்மாவின்கண்ணே நிர்மிக்கப்பட்டுளது, அதன்பால் கனகத்திற் றன்னிர்மித கடகாதித் தன்மையாற் போல் அணுத்தன்மைச் சமத்துவமாக மாட்டாதாம்; இன்னணமாதலினன்றே "மயிர்நுனியின் நூற்றிலொருபாகத்தை நூற்றிலொன்றுய்க் கற்பிப்பின் அப்பாகம் ஜீவனென வறிந்துகொள்க." என்பதாதி சுருதிகளும், மயிர்நுனியின் சதபாக மாத்மாவென்னும் நினது வசனமும் மணம்பெறுவதாகும். எவ்வணு பிரகாசதமங்கட்குத் தீபமாம் என்பதனுத்தரத்தைக் கேட்டி! அனுபவாத்மாவாக விருக்கின்ற இத்தீபத்தால் பிரகாசம் பிரகடமாம், இவ்வாத்மதீபத்தா லன்றியே பிரகாசமேனும் அன்னியமேனும் பவிக்குமாயின் தன் சத்தை காணப்பெறுமைவாயிலாக அசத்தேயாய்விடும்; இருட்டுமொளியுமிஃதன்றியிலங்கா. மேலும் இவ்வாறுனவழி உலகிற்குக் குருட்டுத்தன்மையுமுண்டாகும். சூரியாதிகள் யாவும் நிறைந்த உலகுமுழுவதும் ஜடமேயாக ஆய்விடின் பிரகாசமென்பது எத்தகைய வடிவமுடையது எவ்விடத்துளது அஃதென்னே, எங்குதானுண்டாம். அறிவணுவினுலே தன்னுள்ளேயே தேஜஸ்தமாதிகட்குக் கற்பிதத்தன்மை யுண்மையானும் அதற்கு அதனதீனப் பிரகாசமாம், சுத்தசன்மாத்திர சித்துத்தன்மையாகிய யாது சுயம் தன்னுன்மாவில் நன்கு நிலைபெற்றுளதோ அவ்விவ்வணுவினுனே வெளியிலிருக்கப்பட்ட தேஜசானது காணப்பெறுவதாகும். அருக்க இந்துவாதிகளினுனேயே பிரகாசம் சித்தியாதலின் அணுவினுலே யாகவேண்டிய தென்னேயெனின், அருக்க இந்துவன்னிகளின் தேயுக்கள், தங்காரண அஞ்ஞானத்தி னின்றும் வேறு ஆகாவாம், வர்ணத்தில் வெள்ளையாயிருப்பதும் கறுப்பாயிருப்பதும் ஆகிய இத்துணையே பேதமாம். ஜாட்டிய அங்கிசத்தினுலோ பேதமாகாவாம். கறுப்புவர்ணத்தோடு பனியானது ஆம்போது மேகமெனக் கூறப்படுதலின், மேகபனிகட்கு எத்தகையவேற்றுமையாமோ இருளொளிகட்கும் அத்தகைய வேற்றுமையேயாம் என அவைகட்குச் சுயமே பேதமின்றும் என நிலைபேறும். சித்ததீனப்பிரகாச சத்தையுடைமையானும் அவற்றிற்குப் பேதமின்றும், இச்சடங்க ளிலங்குவதன் பொருட்டே சித்தாதித்தன் விளங்கித்தபிக்கின்றுன், அதனுனே பிரகாசமுமிருளும் சத்தைகளைப் பெற்றிருக்கும், ஆகலின் இவ்விரண்டும் சடாம்சத்திற் சமமேயாம். சைதன்யத்திற்கோ எங்குமே அப்பிரகாச அடைவின்றும். ஒரு ஞானசூரியன் இரவும் பகலும் ஆலஸ்யமில்லாமல் உள்ளிலும் வெளியிலும் சிலாதியுள்ளிலும் அஸ்தமய உதயமில்லாமல், எப்போழ்தும் பிரகாசித்துக்கொண் டிருக்கின்றுன். ஞானவடிவமாய அவ்விரவியாலே நானுவிதமாகத் தோற்றிக்கொண் டிருக்கும் போகங்களானும் அவற்

றினுபகரணங்களாலும் பூரிக்கப்பட்டு இல்லம்போலக் கடினகோடரங்களோடு
கூடிய மூவுலகங்கள் பிரசித்த வடிவத்தையுடைய ஜீவனுக்கு விளக்கப்பட்டுக்
கொண்டிருக்கின்றன. ஆன்மாவினலே தமம் பிரகாசிக்கப் படுமாயின் அத
னது தமத்தன்மையே நசிக்கும் அப்பிரசித்த சுபாவம் அது, அது நாசமாகா
தாயின் பிரசித்தஞ்செய்ய முடியாதாம்; என்ருசங்கிப்பின் கூறுவாம். தன்னு
டைய தத்துவத்தை அறியாமலிருக்கும் சைதன்னியத்தால், தமத்தின்சொரூப
பூதமாய தமத்தன்மை விநாசமாக்கப்படாமல், தமம் காரியபாவப் பொருட்
டுங் கலக்கப் பெறுகின்றதாம். அதனல் எல்லா உலகவடிவதமம் விளங்கா நிற்
கும், அதன் சத்தை பிரகடனஞ்செய்யும் ஏதுவாயிருத்தலினாலும் இது அதன்
நிவர்த்தகமாகாதாம். பதுமமும் உத்பலமும் பிரகாசித்துக் கொண்டிருக்கும்
சூரியனலே வெளிப்படுத்தப் படுகின்றன; அதுபோல பிரகாச தமசுகளின்
சத்தைகள் இவ்வறிவுருவினலே பிரகாசிப்பிக்கப்படுகின்றன அருக்கன் அகோ
ராத்திரிகளை ஆற்றிக்கொண்டு தனது ஆகிருதியைக் காண்பிப்பதேபோலச்
சிற்சொரூபமும் சதசத்துக்களால் ஆவிர்ப்பாவ திரோபாவவடிவ பிரகாச
தமங்களைச் செய்துகொண்டு தன்னகிருதியைக் காட்டாநிற்கும் எவ்வணுவினு
டைய உதரத்தில் எல்லா அனுபவ அணுக்களும் இராநின்றன என்னும் வின
விற்கு விடையளிப்பாம், சித்தணுவினுடைய அந்தரத்தில் விருத்திஞானரூப
மான எல்லா அணுக்களும் மதுரசத்தினுள்ளே புஷ்ப பத்திர பலரசங்கள்
அடங்கி யிருப்பனபோல அடங்கியிருக்கும். வண்டுகள் பத்திரபலாதி ரசங்
களை எல்லாங் கவர்ந்துவந்து மதுவுண்டாக்குதல் சம்பவமேயாம் அல்லது
வசந்த சோலைக்குள்ளேனும் அக்காலத்திய விருக்ஷாதி ரசத்திற்குள்ளேனும்
புஷ்பபத்திர பலச்சோலைகள் இருப்பன போன்றும். சித்தணுவினுள்ளே
இவ்வெல்லாவனுபவ அணுக்களும், வசந்தமாசமாகிய சித்திரையின் ரசத்தால்
வனச்சோலைச் சௌந்தர்யக்கிரமங்கள் விசித்திரமாக உண்டாவனபோல,
உண்டாம். எவ்வணு முற்றினும் சுவாதற்றதாயினும் இரவும்பகலும் சுவாத
தோடுகூடியிருக்கும் என்பதற்கு விடைபகர்வாம், பரமாத்ம அணுவானது
அதிசூக்ஷ்மமா யிருத்தலினலே அத்தியந்தம் சுவாதற்றதாயினும் எல்லாச்
சுவாது சத்தைகளையும் உண்டாக்கும் முக்கியத் தன்மையால் சுயம் சுவாதா
கவே யிருக்கின்றது. சர்வஜலத்தி னுள்ளிருக்கும் ரசங்களை வெளிப்படுத்துவ
தற்குத் தான் நிமித்தமாயிருத்தலினலும் அது சுவாதாகவிருக்கின்றது என்று
சொல்லுதல் பொருத்த முடையதேயாம். சமஸ்த ஜலங்களிலும் எவ்வெவ்விர
தம் ஒவ்வொன்றிலும் இருக்கின்றதோ அவையாவும் கண்ணடியிற் பிரதிபிம்
பம்போலப் பிம்பமாகிய அஃதின்றிச் சுயமாக இராவாம். (அவை = ரசங்கள்)
எவ்வணுவினல் யாவும் நன்கு தள்ளப்படும், நன்கு கொள்ளப்படும், என்னும்
வினவிற்கு உத்தரமுரைப்பாம், சின்மாத்திர பரமாணுவினலே யாவும் விடப்
பட்டிருக்கும். அசம்வித்தியினலே ஜகத்து விடப்பட்டது சம்வித்தியினலே
எல்லாம் கொள்ளப்பட்டது. (அசம்வித்தி = விளங்காமை) தன்னை மறைக்க

முடியாததான எவ்வணுவினலே இவ்வுலகம் மறைக்கப்பட்டுளதென்னும் சங்கைக் குத்தரத்தைக் கேட்டி! தன்னை அளவிட்டு மறைப்பதில் அசமர்த்தமான அணுவினலே சர்வசகத்தும் மறைக்கப்பட்டுளது. சித்தாணுத்தன்மையையே மிகவும் மேலாக விரித்து மேற்கட்டிபோலும் மறைக்கின்றது. கூறியதின் அபிப்பிராயத்தை வெளியாய்க் கேட்பாயாக. பரமாத்மா தன்னை மறைப்பதில் அம்பரம்போல் வியாபகமாதலின் ஆமையானது அறுகம்புற்காட்டில் ஒருசிறிதும் ஒரு கணமேனும் மறைபடாததேபோல, சமர்த்தமுடைய தாகாதாம்; அவ்வாருயினும் உலகமுழுதும் நிறைந்திருக்கும் பரமாத்மா, பாலகன் விழித்துக்கொண்டு தூங்காமல் பொறிக்கணத்தைக் காப்பாற்றுவதேபோல உலகத்துள்ளிருக்கும் ஜீவக்கூட்டங்களைத் தெரிந்தே சுவாத்மலாபத்தால் ரக்ஷிக்கின்றது. இத்தகைய ஸ்வப்பிரகாசப் பூரணாத்மாவிற்கு எங்ஙனம் பாலகனைப் போல தன்வடிவத்தை மறத்தல் கூடுமெனின் அகோ ஆச்சரியம்! கனமான மாயையினுடைய சாமர்த்தியத்தை என்னென்றுதான் சொல்வது! உலகம் லயத்தால் மறைபட்ட போதினும் எவ்வணுவின் சத்தையால் சத்தாயிருந்து மீண்டும் சர்க்கத்தில் ஜீவிக்கின்றது என்னும் சங்கைக்கு உத்தரத்தைக் கேட்டி! ஜகமானது பிரளயத்தில் லயமானபோதினும் சின்மாத்திர வஸ்துவைப் பற்றிக்கொண்டே வசந்தகாலத்தில் இலை முதலியவற்றின் காரணமான இரதம்விழித்திருக்கும் நிமித்தத்தினலே விசித்திரமான வனமாலைகள்போல ஜீவிக்கின்றது. பிரளயத்திலும் சிற்சத்தையாகவே ஜகத்தின் சமஸ்காரசேஷம் இருக்கின்றது. பிரளயத்திலும் சர்க்கத்திலும் பிரஹ்ம சத்தையினனேயே ஜகத்தானது ஜீவிக்கின்றதாயின் சர்க்கத்தில் யாது விசேஷம்? எதனல் ஆவிர்ப்பவிக்கின்றதோ என்றுசங்கிப்ப உத்தரங்கூறுகின்றுர். சிருஷ்டிகாலத்தில் இவ்வண்ணம் எல்லா உலகமாகவும் சித்தசத்தையே, வசந்தகாலத்திய ரசஉல்லாசத்தால் சித்திரமான வனச்சோலை யுண்டாவதேபோல, சுயம் உதிதமாகும். பிரளயத்திலோ சித்தசத்தையானது தனித்திராதென்பதே விசேஷமாம். இவ்வண்ணமாகச் சித்திற்கும் ஜகத்திற்கும், தத்துவமாய் பேதமின்றும். ஆகலின் இச்சகத்தைச் சின்மயமாகவே யிருக்கின்றதென்று உண்மையாகவே நன்றுகத் தெரிந்துகொள்க. வசந்தரசந்தானே தளிர் கொடி முதலியவையாக இருக்கின்றதென்று நீ திருஷ்டாந்தம் தெரிந்துகொள்ளுதி! எப்போதும் பரமாணு ரசத்திலேயே அவயவமில்லாமல் உதயமாயுள்ள அணுவானது சர்வ அவயவிகளின் சாரமாயிருத்தலினலே சகஸ்ரகரலோசனங்களை யுடையதாகும், என்னுமிதனை அவயவங்களைப் பெறுவதன்றுயினும் எவ்வணுவானது சகஸ்ரகரலோசன முடையதென்னுஞ் சங்கைக்குத்தரமாக எண்ணுதி! சர்வ அவயவிகளாகிய சதுர்வித பூதக்கிராமங்கள் அதன் சாரமாயிருத்தலினலே அதன் வடிவமேயாகும். எங்கிமிஷம் மகாகல்பமும் கற்பகோடி சதங்களும் ஆம் என்பதற்கு உத்தரம் கூறுவாம். நிமிஷத்தில் ஒரு அம்சத்தை அறியாநின்ற அறிவணுவினுடைய போதமே சொப்பனத்தில் யவ்வன விருத்தாவஸ்தைகள் தோற்றுவனபோல ஆயிரங் கற்

பக்கூட்டங்களாகத் தோற்றுகிற்கும். அந்த நிமிஷ அணுத்தானே கல்பகோடி
சத்ங்களாகவுந் தோற்றும். சர்வ சத்தைவிலாசமாக ஒரு சித்தின்ஒளியே
விஸ்தாரத்தை யடைகின்றது. உண்ணும லிருக்கவுந்தானே யான் உண்டாய்
விட்டது என்று தோற்றுவதேபோல ஒரு நிமிஷத்தில் கற்பத்தினுடைய நிச்
சயமானது தோற்றுகிற்கும். வாசனையோடுகூடிய சிலவர், உண்ணுமலே உண்டு
விட்டேம் யாம், என்னும் சொப்பனத்தில் தன்மரணம்போல எண்ணமுடைய
வர்களாகக் காணப்படுகின்றார்கள். விரையிற் றருவிருப்பதேபோல எவ்வணு
வின்கண்ணே உலகங்க ளிருக்கின்றன என்னுஞ் சங்கைக்கு உத்தரங்கூறுவாம்,
சிதாத்மாவாகிய பரமாணுவின் கண்ணே உலகங்களெல்லாம் இருக்கின்றன
அதனானேயே ஜகத் சம்பந்தமான தோற்றங்கள் தோற்றுகின்றன. யாது
எதன்கண் உளதாமோ அது அதனினின்றும் உண்டாகின்றது; அது அதுவே
யாகின்றது. ஸ்தம்பத்தினின்றும் தோற்றுகின்ற பதுமை ஸ்தம்பமாத்திர
மாகவே யிருக்கின்ற தன்றோ? நிருமலமாக நிஷ்கிரியமாகவிருக்கும் ஆகாயத்
தில் விகாராதிகள் யாதொன்றும் காணப்படுவதில்லை யன்றோ? அவ்வண்ணம்
ஜகதாதிகள் யாதொன்றும் நிர்மலமாகிய தன்னிடத்தில் இல்லையாம். நிஷ்கள
த்தை அந்தமாகவுடைய பீஜங்கள் என வினவியதற்கு விடையளிப்பாம்,
சென்ற பிராணிகளும் இப்போதிருக்கும் பிராணிகளும் இனியுண்டாகப்போ
கும் பிராணிகளும் சித்தினிடத்தில் எப்போதும் விரையிற் றருமமிருப்பதே
போல இருக்கின்றன. கல்பம் பீஜத்திற்போல எந்நிமிஷத்தினுள்ளே யிருக்கின்
றது என்னுங் கடாவிற்கு விடைநூதலுவாம், இவ்வணுவினாலே நிமிடமுங்கற்ப
மும், தண்டுலமும் அதனவயவங்களும் உமியினாலே மூடப்பட்டிருப்பதே
போல, வியாபிக்கப் பட்டிருக்கின்றன. இவ்வணுவோ கல்பநிமிஷங்
களைத் தன் ஏகதேசத்தில் வைத்திருக்கின்றது. "யான் இம்முழுதையும்,
ஈனுலகிருக்கும்" என ஸ்ரீ பகவத்
தானேரங்கிசத்தால், வானெனவளைதலின், 
வசனமுமுளது, யாது பிரயோஜன கர்த்துருத்துவங்களைப் பற்றுமலே காரக
மாம் என்பதற்குத்தரம் கூறுவாம். இவ்வாத்மா சர்வஜகத்திலும் அதனதன்
வடிவமாக விருந்தும் உதாசீனம்போலிருத்தலால் போக்துருத்தன்மை கர்த்
துருத் தன்மைகளால் ஒருசிறிதும் பற்றுவதில்லை. சுத்தமான சித்பரமாணு
வினிடத்தினின்றும் இச்சகத்தினுடைய சத்தையானது உண்டாயிருக்கின்றது.
இந்தச் சித்பரமாணுவிற்குப் போக்துருத்துவகர்த்துவங்கள், கிரியை, போக
சம்பந்தமில்லாமலே கேவலம் உண்டாகி யிருக்கின்றன. கிரியாபோக சம்பந்த
மில்லாத காரணமென்னே யெனின் ஜகமானது எக்காலத்திலுமே சிறிதும் ஒரு
வரானும் செய்யப்படவேயில்லை கிரியாவிஷயமானது அத்தியந்தம் அசத்து
வமாயிருத்தலின் ஒருவராலும் ஒருசிறிதும் லயத்தையடைவதுமில்லை. ஆயின்
அசத்தாகிய திருசியத்தை வேதாந்தங்களில் கண்டனஞ்செய்வது எற்றினுக்கா
யெனின் கேட்டி! வியாவகாரிக யௌக்திக திருஷ்டிவசத்தால் திருசிய கண்ட
னஞ் செய்வதே யல்லாமல் பரமார்த்த திருஷ்டிபலத்தாலன்றாம். ஆயின் பர

மார்த்ததிருஷ்டி எத்தகையதெனின் அதைக்காண்பிக்கின்றார். ஹேநிசாசரியே! அநாதியாயும் விண்ணையும் வியாபித்ததாயும், ஏகரசமாயும், சமப்பிரகாசமாயும், சமமாயும், சர்வமாயும், இராநின்ற சிதாகாசத்தையே ஜகமெனச் சப்தமாத்திரமாக விவகரித்ததாம் என்றறிதி. "விகாரமானது வாக்கினாற்றொடங்கிய நாமதேயமாத்திரத்தது" என மறையுமறைகின்றது. போக்கியசித்தியின் பொருட்டுத் திருஷ்டாவான தான் தன்னைத்தானே திருசியமாக்கி அந்தத் திருசியத்தை வெளிப்பார்வையானே பார்ப்பதாய் நேத்திரமில்லாததாயும் தன் வடிவத்தை யாதுபார்க்கின்றது என்னும் வினாவின் விடைவருமாறு: சித்தணுவானது திருசியசித்தியின்பொருட்டுத் தன்னுள்ளிருக்கும் சித்வியாப்த மாயாசத்தியைப் பாகியப்பிரபஞ்சவடிவமாகத் தன்னிடத்திற்றானே இனிதிருக்குமாறு தரிக்கும். "அவ்விப்பிரமம் அபூர்வம், அநபரம், அநந்தரம், அபாகியம்" என்னுஞ் சுருதியினாலே உள்வெளிவேற்றுமை இன்மையதாக அறியப்பெற்ற பிரஹ்மத்தில் உள்ளேயிருக்கும் சித்சமக்கிருதியை வெளிரூபமாகத் தரிக்கும் என எங்ஙன் கூறலாகுமெனின் கேட்டி! இவ்வுலகமானது சித்துருவமாயிருத்தலினாலே வெளியிலிருப்பதாகவும் உள்ளிலிருப்பதாகவும் மூவுலகினுமுள்ள அதிகாரிப் பிராணிகட்கு உபதேசிக்கும் பொருட்டுக் கற்பிக்கப்பட்டது, சப்தத்திலேயேயுளது, வஸ்துவின்கணின்றும், வஸ்துவானது ஒரே சித்துவடிவமாயிருக்கின்றது. திருசியமாக்கி என்பதுவரை தாத்பரியமுரைத்துச் சேஷவினாவின் விடைதருகின்றார்: ஆத்மாவானது நித்தியாபரோக்ஷமா யிருந்தபோதினும், அவித்தையினாலே மறைக்கப்பட்டிருத்தலின், அந்தக்கரண வரைவால் எப்போதுமே விளங்கிக்கொண்டு, அதனபிமானத்தினாலே திருஷ்டாவாய்ப்பாகிய விஷயவரைவானே மறைபட்டிருத்தலின், அதிருஷ்டபதமான விஷயதேசம் வரை நேத்திரதிருசியமாக வீழ்ந்ததுபோலாகி நேத்திரவாயிலாய் வெளிப்போந்த அந்தக்கரண விருத்தியால் வெளியே சென்று, சத்தேயாய ஆன்மரூபமாயினும் அசத்துக்கடாதி ரூபம்போல விராநின்ற தன்னை நன்றாய்க்காணும், தன்வடிவசித்தினாலே விளக்கிவைக்கும், நேத்திரத்தாலன்றாம், அதுவாயின் மாத்திரமாயிருத்தலின் நேத்திரமில்லாததா யென்று கூறப்பட்டது. சத்தேயாயும் அசத்துப்போலிராநின்றது என்பதை விரிப்பாம். திருஷ்டாவான ஆத்மாவானது அசத்தாயும் அவாஸ்தவமாயு மிராநின்ற திருசியத்தன்மையை அடைவதில்லை, ஏன் அடைவதில்லை யென்றால், சத்தானது அசத்துருவமாக ஆவதற்கு முடியாமையின் ஆத்மாவின்கண்ணே யாது சிறிதுமில்லையோ அதுவாந்தன்மையைப் பரம்பொருள் எங்ஙனமடையும்? இங்ஙனம் காண்போனுந் தன்மையும் பொய்யாகிய திருசிய அபேக்ஷையோடு கூடியதாதலின் பொய்யேயாம். அபரோக்ஷமாய ஆத்மசைதன்னியமே கண்கள். அந்தக்கண்களே பரமான்மா ஆவிர்ப்பாவந்தொடங்கி மீண்டும் திரோபாவத்தால் வாசனையின் அபாவம்வரை திருசியம்செய்து அதைக்காண்பதாய்ச் சுயம் உதிதமாய்த் தன்னைக் கற்பிக்கின்றது. சக்ஷுவிற்குச் சக்ஷுவெனச் சுருதியுமுளது, சக்ஷுக்கள்